# திருவருட்பா




ஆசிரியர்

**வள்ளலார்**

வள்ளலார் பாடிய 5818 பாடல்கள்

தொகுப்பு

**வள்ளுவர் வள்ளலார் வட்டம்**

1.

திருஓங்கு புண்ணியச் செயல்ஓங்கி அன்பருள்

திறலோங்கு செல்வம்ஓங்கச்

செறிவோங்க அறிவோங்கி நிறைவான இன்பம்

திகழ்ந்தோங்க அருள்கொடுத்து

மருஓங்கு செங்கமல மலர்ஓங்கு வணம்ஓங்க

வளர்கருணை மயம்ஓங்கிஓர்

வரம்ஓங்கு தெள்அமுத வயம்ஓங்கி ஆனந்த

வடிவாகி ஓங்கிஞான

உருஓங்கும் உணர்வின்நிறை ஒளிஓங்கி ஓங்கும்மயில்

ஊர்ந்தோங்கி எவ்வுயிர்க்கும்

உறவோங்கும் நின்பதம்என் உளம்ஓங்கி வளம்ஓங்க

உய்கின்ற நாள்எந்தநாள்

தருஓங்கு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

2.

பரம்ஏது வினைசெயும் பயன்ஏது பதிஏது

பசுஏது பாசம்ஏது

பத்திஏ தடைகின்ற முத்தியே தருள்ஏது

பாவபுண் யங்கள்ஏது

வரம்ஏது தவம்ஏது விரதம்ஏ தொன்றும்இலை

மனம்விரும் புணவுண்டுநல்

வத்திரம் அணிந்துமட மாதர்தமை நாடிநறு

மலர்சூடி விளையாடிமேல்

கரமேவ விட்டுமுலை தொட்டுவாழ்ந் தவரொடு

கலந்துமகிழ் கின்றசுகமே

கண்கண்ட சுகம்இதே கைகண்ட பலன்எனும்

கயவரைக் கூடாதருள்

தரமேவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

3.

துடிஎன்னும் இடைஅனம் பிடிஎன்னும் நடைமுகில்

துணைஎனும் பிணையல்அளகம்

சூதென்னும் முலைசெழுந் தாதென்னும் அலைபுனல்

சுழிஎன்ன மொழிசெய்உந்தி

வடிஎன்னும் விழிநிறையும் மதிஎன்னும் வதனம்என

மங்கையர்தம் அங்கம்உற்றே

மனம்என்னும் ஒருபாவி மயல்என்னும் அதுமேவி

மாள்கநான் வாழ்கஇந்தப்

படிஎன்னும் ஆசையைக் கடிஎன்ன என்சொல்இப்

படிஎன்ன அறியாதுநின்

படிஎன்ன என்மொழிப் படிஇன்ன வித்தைநீ

படிஎன்னும் என்செய்குவேன்

தடிதுன்னும் மதில்சென்னை கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

௪.

வள்ளல்உனை உள்ளபடி வாழ்த்துகின் றோர்தமை

மதித்திடுவ தன்றிமற்றை

வானவரை மதிஎன்னில் நான்அவரை ஒருகனவின்

மாட்டினும் மறந்தும்மதியேன்

கள்ளம்அறும் உள்ளம்உறும் நின்பதம்அ லால்வேறு

கடவுளர் பதத்தைஅவர்என்

கண்எதிர் அடுத்தைய நண்என அளிப்பினும்

கடுஎன வெறுத்துநிற்பேன்

எள்ளளவும் இம்மொழியி லேசுமொழி அன்றுண்மை

என்னை ஆண் டருள்புரிகுவாய்

என்தந்தை யேஎனது தாயேஎன் இன்பமே

என்றன்அறி வேஎன்அன்பே

தள்ளரிய சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

5.

பதிபூசை முதலநற் கிரியையால் மனம்எனும்

பசுகரணம் ஈங்கசுத்த

பாவனை அறச்சுத்த பாவனையில் நிற்கும்மெய்ப்

பதியோக நிலைமைஅதனான்

மதிபாசம் அற்றதின் அடங்கிடும் அடங்கவே

மலைவில்மெய்ஞ் ஞானமயமாய்

வரவுபோக் கற்றநிலை கூடும்என எனதுளே

வந்துணர்வு தந்தகுருவே

துதிவாய்மை பெறுசாந்த பதம்மேவு மதியமே

துரிசறு சுயஞ்சோதியே

தோகைவா கனமீ திலங்கவரு தோன்றலே

சொல்லரிய நல்லதுணையே

ததிபெறும் சென்னையிலக கந்தகோட் டத்துள்வளர்

தலமோங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

6.

காமஉட் பகைவனும் கோபவெங் கொடியனும்

கனலோப முழுமுடனும்

கடுமோக வீணனும் கொடுமதம் எனுந்துட்ட

கண்கெட்ட ஆங்காரியும்

ஏமம்அறு மாச்சரிய விழலனும் கொலைஎன்

றியம்புபா தகனுமாம்இவ்

வெழுவரும் இவர்க்குற்ற உறவான பேர்களும்

எனைப்பற்றி டாமல்அருள்வாய்

சேமமிகு மாமறையின் ஓம்எனும் அருட்பதத்

திறன்அருளி மலயமுனிவன்

சிந்தனையின் வந்தனைஉ வந்தமெய்ஞ் ஞானசிவ

தேசிக சிகாரத்னமே

தாமம்ஒளிர் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

7.

நிலைஉறும் நிராசையாம் உயர்குலப் பெண்டிரொடு

நிகழ்சாந்த மாம்புதல்வனும்

நெறிபெறும் உதாரகுணம் என்னும்நற் பொருளும்மருள்

நீக்கும்அறி வாம்துணைவனும்

மலைவறு நிராங்கார நண்பனும் சுத்தமுறு

மனம்என்னும் நல்ஏவலும்

வருசகல கேவலம்இ லாதஇட மும்பெற்று

வாழ்கின்ற வாழ்வருளுவாய்

அலைஇலாச் சிவஞான வாரியே ஆனந்த

அமுதமே குமுதமலர்வாய்

அணிகொள்பொற் கொடிபசுங் கொடிஇரு புறம்படர்ந்

தழகுபெற வருபொன்மலையே

தலைவர்புகழ் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

8.

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற

உத்தமர்தம் உறவுவேண்டும்

உள்ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்

உறவுகல வாமைவேண்டும்

பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்மை

பேசா திருக்கவேண்டும்

பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மத மானபேய்

பிடியா திருக்கவேண்டும்

மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும்உனை

மறவா திருக்கவேண்டும்

மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற

வாழ்வில்நான் வாழவேண்டும்

தருமமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

9.

ஈஎன்று நான்ஒருவர் இடம்நின்று கேளாத

இயல்பும்என் னிடம்ஒருவர்ஈ

திடுஎன்ற போதவர்க் கிலைஎன்று சொல்லாமல்

இடுகின்ற திறமும்இறையாம்

நீஎன்றும் எனைவிடா நிலையும்நான் என்றும்உள

நினைவிடா நெறியும்அயலார்

நிதிஒன்றும் நயவாத மனமும்மெய்ந் நிலைநின்று

நெகிழாத திடமும்உலகில்

சீஎன்று பேய்என்று நாய்என்று பிறர்தமைத்

தீங்குசொல் லாததெளிவும்

திரம்ஒன்று வாய்மையும் தூய்மையும் தந்துநின்

திருவடிக் காளாக்குவாய்

தாய்ஒன்று சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

19.

கரையில்வீண் கதைஎலாம் உதிர்கருங் காக்கைபோல்

கதறுவார் கள்ளுண்டதீக்

கந்தம்நா றிடஊத்தை காதம்நா றிடஉறு

கடும்பொய்இரு காதம்நாற

வரையில்வாய் கொடுதர்க்க வாதம்இடு வார்சிவ

மணங்கமழ் மலர்ப்பொன்வாய்க்கு

மவுனம்இடு வார்இவரை முடர்என ஓதுறு

வழக்குநல் வழக்கெனினும்நான்

உரையிலவர் தமையுறா துனதுபுகழ் பேசும்அவ

ரோடுறவு பெறஅருளுவாய்

உயர்தெய்வ யானையொடு குறவர்மட மானும்உள்

உவப்புறு குணக்குன்றமே

தரையில்உயர் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

11.

நாம்பிரமம் நமைஅன்றி ஆம்பிரமம் வேறில்லை

நன்மைதீ மைகளும் இல்லை

நவில்கின்ற வாகிஆந் தரம்இரண்டினும்ஒன்ற

நடுநின்ற தென்றுவீணாள்

போம்பிரம நீதிகேட் போர்பிரமை யாகவே

போதிப்பர் சாதிப்பர்தாம்

புன்மைநெறி கைவிடார் தம்பிரமம் வினைஒன்று

போந்திடில் போகவிடுவார்

சாம்பிரம மாம்இவர்கள் தாம்பிரமம் எனும்அறிவு

தாம்புபாம் பெனும்அறிவுகாண்

சத்துவ அகண்டபரிபூரண காரஉப

சாந்தசிவ சிற்பிரம நீ

தாம்பிரிவில் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

12.

பார்கொண்ட நடையில்வன் பசிகொண்டு வந்திரப்

பார்முகம் பார்த்திரங்கும்

பண்பும்நின் திருவடிக் கன்பும்நிறை ஆயுளும்

பதியும்நல் நிதியும்உணர்வும்

சீர்கொண்ட நிறையும்உட் பொறையும்மெய்ப் புகழும்நோய்த்

தீமைஒரு சற்றும்அணுகாத்

திறமும்மெய்த் திடமும்நல் இடமும்நின் அடியர்புகழ்

செப்புகின் றோர்அடைவர்காண்

கூர்கொண்ட நெட்டிலைக் கதிர்வேலும் மயிலும்ஒரு

இக் ழியங் கொடியும்விண்ணோர்

கோமான்தன் மகளும்ஒரு மாமான்தன் மகளும்மால்

கொண்டநின் கோலமறவேன்

தார்கொண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

13.

வன்பெரு நெருப்பினைப் புன்புழுப் பற்றுமோ

வானைஒரு மான்தாவுமோ

வலியுள்ள புலியைஓர் எலிசீறு மோபெரிய

மலையைஓர் ஈச்சிறகினால்

துன்புற அசைக்குமோ வச்சிரத் தூண்ஒரு

துரும்பினால் துண்டமாமோ

சூரியனை இருள்வந்து சூழுமோ காற்றில்மழை

தோயுமோ இல்லைஅதுபோல்

அன்புடைய நின்அடியர் பொன்அடியை உன்னும்அவர்

அடிமலர் முடிக்கணிந்தோர்க்

கவலமுறு மோகாமம் வெகுளிஉறு மோமனத்

தற்பமும்வி கற்பம்உறுமோ

தன்புகழ்செய் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தன்முகத் துய்யமணி உன்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

14.

காணலிடை நீரும்ஒரு கட்டையில் கள்வனும்

காண்உறு கயிற்றில் அறவும்

கழிதரு கிளிஞ்சிலிடை வெள்ளியும் பொன்னைக்

கதித்தபித் தளையின்இடையும்

மானலில் கண்டுள மயங்கல்போல் கற்பனையை

மாயையில் கண்டுவிணே

மனைஎன்றும் மகவென்றும் உறவென்றும் நிதிஎன்றும்

வாள்வென்றும் மாணம்என்றும்

ஊனலின் உடம்பென்றும் உயிரென்றும் உளம்என்றும்

உள்என்றும் வெளிஎன்றும்வான்

உலகென்றும் அளவுறுவி காரம்உற நின்றஎனை

உண்மைஅறி வித்தகுருவே

தானமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தன்முகத் துய்யமணி உன்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

15.

கற்றொளிகொள் உணர்வினோர் வேண்டாத இப்பெருங்

கன்மவுட லில்பருவம்நேர்

கண்டழியும் இளமைதான் பகல்வேட மோபுரைக்

கடல்நீர்கொ லோகபடமோ

உற்றொளியின் வெயில்இட்ட மஞ்சளோ வான்இட்ட

ஒருவிலோ நீர்க்குமிழியோ

உரைஅனல் பெறக்காற்றுள் ஊதும் துரத்தியோ

ஒன்றும்அறி யேன் இதனைநான்

பற்றுறுதி யாக்கொண்டு வனிதையர்கண் வலையினில்

பட்டுமதி கெட்டுழன்றே

பாவமே பயில்கின்ற தல்லாது நின்அடிப்

பற்றணுவும் உற்றறிகிலேன்

சற்றைஅகல் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்லூங்கு கந்தவேளே

தன்முகத் துய்யமணி உன்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

16.

சடமாகி இன்பம் தராதாகி மிகுபெருஞ்

சஞ்சலா காரமாகிச்

சற்றாகி வெளிமயல் பற்றாகி ஓடும்இத்

தன்மைபெறு செல்வமந்தோ

விடமாகி ஒருகபட நடமாகி யாற்றிடை

விரைந்துசெலும் வெள்ளம்ஆகி

வேலைஅலை யாகிஆங் காரவலை யாகிமுதிர்

வேனில்உறு மேகம்ஆகிக்

கடமாய சகடமுறு காலாகி நீடுவாய்க்

காலோடும் நீராகியே

கற்விலா மகளிர்போல் பொற்பிலா துழலும்இது

கருதாத வகைஅருளுவாய்

தடமேவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்லூங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

17.

உப்புற்ற பாண்டம்என ஒன்பது துவாரத்துள்
ஊற்றசும் பொழுகும்உடலை
உயர்கின்ற வானிடை எறிந்தகல் என்றும்மலை
ஊற்றிழியும் அருவிஎன்றும்
வெப்புற்ற காற்றிடை விளக்கென்றும் மேகம்உறு
மின்என்றும் வீசுகாற்றின்
மேற்பட்ட பஞ்சென்றும் மஞ்சென்றும் வினைதந்த
வெறுமாய வேடம்என்றும்
கப்புற்ற பறவைக் குடம்பைஎன் றும்பொய்த்த
கனவென்றும் நீரில்எழுதும்
கைஎழுத் தென்றும்உட் கண்டுகொண் டதிலாசை
கைவிடேன் என்செய்குவேன்
தப்பற்ற சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

18.

எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய் கூழுக்கும்
ஏக்கற் றிருக்கும்வெறுவாய்
எங்கள்பெரு மான்உனை வணங்காத மூடர்தலை
இகழ்விற கெடுக்கும்தலை

கந்தமிகு நின்மேனி காணாத கயவர்கண்

கலநீர் சொரிந்தஅழுகண்

கடவுள்நின் புகழ்தனைக் கேளாத வீணர்செவி

கைத்திழவு கேட்கும்செவி

பந்தம்அற நினைஎணாப் பாவிகள் தம்நெஞ்சம்

பகீர்என நடுங்கும்நெஞ்சம்

பரமநின் திருமுன்னர் குவியாத வஞ்சர்கை

பலிஏற்க நீள்கொடுங்கை

சந்தமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

19.

ஐயநின் சீர்பேசு செல்வர்வாய் நல்லதெள்

அமுதுண் டுவந்ததிருவாய்

அப்பநின் திருவடி வணங்கினோர் தலைமுடி

அணிந்தோங்கி வாழுந்தலை

மெய்யநின் திருமேனி கண்டபுண் ணியர்கண்கள்

மிக்கஒளி மேவுகண்கள்

வேலநின் புகழ்கேட்ட வித்தகர் திருச்செவி

விழாச்சுபம் கேட்கும்செவி

துய்யநின் பதம்எண்ணும் மேலோர்கள் நெஞ்சம்மெய்ச்
சுகருப மானநெஞ்சம்
தோன்றல்உன் திருமுன் குவித்தபெரி யோர்கைகள்
சுவர்ன்னமிடு கின்றகைகள்
சையம்உயர் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

௨௯.

உழல்உற்ற உழவுமுதல் உறுதொழில் இயற்றிமலம்
ஒத்தபல பொருள்ஈட்டிவீண்
உறுவயிறு நிறையவெண் சோறடைத் திவ்வுடலை
ஓதிபோல் வளர்த்துநாளும்
விழல்உற்ற வாழ்க்கையை விரும்பினேன் ஐயஇவ்
வெய்யஉடல் பொய்என்கிலேன்
வெளிமயக் கோமாய விடமயக் கோஎனது
விதிமயக் கோஅறிகிலேன்
கழல்உற்ற நின்துணைக் கால்மலர் வணங்கிநின்
கருணையை விழைந்துகொண்டெம்
களைகணே ஈராறு கண்கொண்ட என்றன்இரு
கண்ணேஎ னப்புகழ்கிலேன்

தழைவுற்ற சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

21.

வானம்எங் கேஅமுத பானம்எங்கே அமரர்

வாழ்க்கைஅபி மானம்எங்கே

மாட்சிஎங் கேஅவர்கள் சூழ்ச்சிஎங் கேதேவ

மன்னன்அர சாட்சிஎங்கே

ஞானம்எங் கேமுனிவர் மோனம்எங் கேஅந்த

நான்முகன் செய்கைஎங்கே

நாரணன் காத்தலை நடத்தல்எங் கேமறை

நவின்றிடும் ஒழுக்கம்எங்கே

ஈனம்அங் கேசெய்த தாருகனை ஆயிர

இலக்கம்உறு சிங்கமுகனை

எண்அரிய திறல்பெற்ற சூரனை மறக்கருணை

ஈந்துபணி கொண்டிலைஎனில்

தானமிங் கேர்சென்னை கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

22.

மனமான ஒருசிறுவன் மதியான குருவையும்

மதித்திடான் நின் அடிச்சீர்

மகிழ்கல்வி கற்றிடான் சும்மாஇ ரான்காம

மடுவினிடை வீழ்ந்துசுழல்வான்

சிவமான வெஞ்சுரத் துழலுவன் உலோபமாம்

சிறுகுகையி னுட்புகுவான்

செறுமோக இருளிடைச் செல்குவான் மதம்எனும்

செய்குன்றில் ஏறிவிழுவான்

இனமான மாச்சரிய வெங்குழியின் உள்ளே

இறங்குவான் சிறிதும்அந்தோ

என்சொல்கே ளான்எனது கைப்படான் மற்றிதற்

கேழையேன் என்செய்குவேன்

தனநீடு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

23.

வாய்கொண் டுரைத்தல்அரி தென்செய்கேன் என்செய்கேன்

வள்ளல்உன் சேவடிக்கண்

மன்னாது பொன்னாசை மண்ணாசை பெண்ணாசை

பேய்கொண்டு கள்உண்டு கோலினால் மொத்துண்டு

பித்துண்ட வன்குரங்கோ

பேசுறு குலாலனாற் சுழல்கின்ற திகிரியோ

பேதைவிளை யாடுபந்தோ

காய்கொண்டு பாய்கின்ற வெவ்விலங் கோபெருங்

காற்றினாற் சுழல்கறங்கோ

காலவடி வோஇந்திர ஜாலவடி வோஎனது

கர்மவடி வோஅறிகிலேன்

தாய்கொண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

௨௪.

கற்றமே லவரொடும் கூடிநில் லேன்கல்வி

கற்கும்நெறி தேர்ந்துகல்லேன்

கனிவுகொண் டுனதுதிரு அடியைஒரு கனவினும்

கருதிலேன் நல்லன்அல்லேன்

குற்றமே செய்வதென் குணமாகும் அப்பெருங்

குற்றம்எல் லாம்குணம்எனக்

கொள்ளுவது நின்அருட் குணமாகும் என்னில்என்

குறைதவிர்த் தருள்புரிகுவாய்

பெற்றமேல் வரும்ஒரு பெருந்தகையின் அருள்உருப்

பெற்றெழுந் தோங்குசுடரே

பிரணவா காராரின் மயவிமல சொருபமே

பேதமில் பரப்பிரமமே

தற்றகைய சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

25.

பாய்ப்பட்ட புலிஅன்ன நாய்ப்பட்ட கயவர்தம்

பாழ்பட்ட மனையில்நெடுநாள்

பண்பட்ட கழுநீரும் விண்பட்ட இன்னமுது

பட்டபா டாகும்அன்றிப்

போய்ப்பட்ட புல்லுமணி புப்பட்ட பாடும்நற்

புண்பட்ட பாடுதவிடும்

புன்பட்ட உமியும்உயர் பொன்பட்ட பாடவர்கள்

போகம்ஒரு போகமாமோ

ஆய்ப்பட்ட மறைமுடிச் சேய்ப்பட்ட நின்அடிக்

காட்பட்ட பெருவாழ்விலே

அருள்பட்ட நெறியும்மெய்ப் பொருள்பட்ட நிலையும்உற

அமர்போக மேபோகமாம்

தாய்ப்பட்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

26.

சேவலம் கொடிகொண்ட நினைஅன்றி வேறுசிறு
தேவரைச் சிந்தைசெய்வோர்
செங்கனியை விட்டுவேப் பங்கனியை உண்ணும்ஒரு
சிறுகருங் காக்கைநிகர்வார்
நாவலங் காரம்அற வேறுபுகழ் பேசிநின்
நற்புகழ் வழுத்தாதபேர்
நாய்ப்பால் விரும்பிஆன் துய்ப்பாலை நயவாத
நவையுடைப் பேயர் ஆவார்
நீவலந் தரநினது குற்றேவல் புரியாது
நின்றுமற் றேவல்புரிவோர்
நெல்லுக் கிறைக்காது புல்லுக் கிறைக்கின்ற
நெடியவெறு வீணராவார்
தாவலம் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

27.

பிரமன்இனி என்னைப் பிறப்பிக்க வல்லனோ

பெய்சிறையில் இன்னும்ஒருகால்

பின்பட்டு நிற்குமோ முன்பட்ட சூட்டில்

பெறுந்துயர் மறந்துவிடுமோ

இரவுநிறம் உடைஅயமன் இனிஎனைக் கனவினும்

இறப்பிக்க எண்ணம்உறுமோ

எண்ணுறான் உதைஉண்டு சிதைஉண்ட தன்உடல்

இருந்தவடு எண்ணுறானோ

கரவுபெறு வினைவந்து நலியுமோ அதனைஒரு

காசுக்கும் மதியேன்எலாம்

கற்றவர்கள் பற்றும்நின் திருஅருளை யானும்

கலந்திடப் பெற்றுநின்றேன்

தரமருவு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

28.

நீர்உண்டு பொழிகின்ற கார்உண்டு விளைகின்ற

நிலன்உண்டு பலனும்உண்டு

நிதிஉண்டு துதிஉண்டு மதிஉண்டு கதிகொண்ட

நெறிஉண்டு நிலையும் உண்டு

ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு பணிஉண்டு

உடைஉண்டு கொடையும்உண்டு

உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தம்உறும்

உளம்உண்டு வளமும்உண்டு

தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு மற்றுள்ள

செல்வங்கள் யாவும்உண்டு

தேன்உண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்

தியானமுண் டாயில்அரசே

தார்உண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

29.

உளம்எனது வசம்நின்ற தில்லைஎன் தொல்லைவினை

ஒல்லைவிட் டிடவுமில்லை

உன்பதத் தன்பில்லை என்றனக் குற்றதுணை

உனைஅன்றி வேறும்இல்லை

இளையன்அவ னுக்கருள வேண்டும்என் றுன்பால்

இசைக்கின்ற பேரும்இல்லை

ஏழையவ னுக்கருள்வ தேன்என்றுன் எதிர்நின்

றியம்புகின் றோரும்இல்லை
வளமருவும் உனதுதிரு அருள்குறைவ தில்லைமேல்
மற்றொரு வழக்கும்இல்லை
வந்திரப் போர்களுக் கிலைஎன்ப தில்லைநீ
வன்மனத் தவனும்அல்லை
தளர்விலாச் சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

39.

எத்திக்கும் என்உளம் தித்திக்கும் இன்பமே
என்உயிர்க் குயிராகும்ஓர்
ஏகமே ஆனந்த போகமே யோகமே
என்பெருஞ் செல்வமேநன்
முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே முடிவிலாத
முருகனே நெடியமால் மருகனே சிவபிரான்
முத்தாடும் அருமைமகனே
பத்திக் குவந்தருள் பரிந்தருளும் நின்அடிப்
பற்றருளி என்னைஇந்தப்
படியிலே உழல்கின்ற குடியிலே ஒருவனாப்

பண்ணாமல் ஆண்டருளுவாய்

சத்திக்கும் நீர்ச்சென்னை கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

31.

நான்கொண்ட விரதம்நின் அடிஅலால் பிறர்தம்மை

நாடாமை ஆகும்இந்த

நல்விரத மாம்கனியை இன்மைஎனும் ஒருதுட்ட

நாய்வந்து கவ்விஅந்தோ

தான்கொண்டு போவதினி என்செய்வேன் என்செய்வேன்

தளராமை என்னும்ஒருகைத்

தடிகொண் டடிக்கவோ வலியிலேன் சிறியனேன்

தன்முகம் பார்த்தருளுவாய்

வான்கொண்ட தெள்அமுத வாரியே மிகுகருணை

மழையே மழைக்கொண்டலே

வள்ளலே என்இருகண் மணியேஎன் இன்பமே

மயில்ஏறு மாணிக்கமே

தான்கொண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்

தலம்ஓங்கு கந்தவேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

திருச்சிற்றம்பலம்.

சென்னைக் கந்தகோட்டம்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

32.

அருளார் அமுதே சரணம் சரணம்

அழகா அமலா சரணம் சரணம்

பொருளா எனைஆள் புனிதா சரணம்

பொன்னே மணியே சரணம் சரணம்

மருள்வார்க் கரியாய் சரணம் சரணம்

மயில்வா கனனே சரணம் சரணம்

கருணா லயனே சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

33.

எண்ணேர் மறையின் பயனே சரணம்

பதியே பரமே சரணம் சரணம்

விண்ணோர் ஒளியே வெளியே சரணம்

வெளியின் விளைவே சரணம் சரணம்

உண்ணேர் உயிரே உணர்வே சரணம்

உருவே அருவே உறவே சரணம்

கண்ணே மணியே சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

34.

முடியா முதலே சரணம் சரணம்

முருகா குமரா சரணம் சரணம்

வடிவேல் அரசே சரணம் சரணம்

மயிலூர் மணியே சரணம் சரணம்

அடியார்க் கெளியாய் சரணம் சரணம்

அரியாய் பெரியாய் சரணம் சரணம்

கடியாக் கதியே சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

35.

பூவே மணமே சரணம் சரணம்

பொருளே அருளே சரணம் சரணம்

கோவே குகனே சரணம் சரணம்

குருவே திருவே சரணம் சரணம்

தேவே தெளிவே சரணம் சரணம்

சிவசண் முகனே சரணம் சரணம்

காவேர் தருவே சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

36.

நடவும் தனிமா மயிலோய் சரணம்

நல்லார் புகழும் வல்லோய் சரணம்

திடமும் திருவும் தருவோய் சரணம்

தேவர்க் கரியாய் சரணம் சரணம்

தடவண் புயனே சரணம் சரணம்

தனிமா முதலே சரணம் சரணம்

கடவுள் மணியே சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

37.

கோலக் குறமான் கணவா சரணம்

குலமா மணியே சரணம் சரணம்

சீலத் தவருக் கருள்வோய்சரணம்

சிவனார் புதல்வா சரணம் சரணம்

ஞாலத் துயர்தீர் நலனே சரணம்

நடுவா கியநல் ஒளியே சரணம்

காலன் தெறுவோய் சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

38.

நங்கட் கிளியாய் சரணம் சரணம்

நந்தா உயர்சம் பந்தா சரணம்

திங்கட் சடையான் மகனே சரணம்

சிவைதந் தருளும் புதல்வா சரணம்

துங்கச் சுகம்நன் றருள்வோய் சரணம்

சுரர்வாழ்த் திடுநம் துரையே சரணம்

கங்கைக் கொருமா மதலாய் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

39.

ஒளியுள் ஒளியே சரணம் சரணம்

ஒன்றே பலவே சரணம் சரணம்

தெளியும் தெருளே சரணம் சரணம்

சிவமே தவமே சரணம் சரணம்

அளியும் கனியே சரணம் சரணம்

அமுதே அறிவே சரணம் சரணம்

களியொன் றருள்வோய் சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

40.

மன்னே எனைஆள் வரதா சரணம்

மதியே அடியேன் வாழ்வே சரணம்

பொன்னே புனிதா சரணம் சரணம்

புகழ்வார் இதயம் புகுவாய் சரணம்

அன்னே வடிவேல் அரசே சரணம்

அறுமா முகனே சரணம் சரணம்

கன்னேர் புயனே சரணம் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

41.

வேதப் பொருளே சரணம் சரணம்

விண்ணோர் பெருமாள் சரணம் சரணம்

போதத் திறனே சரணம் சரணம்

புனைமா மயிலோய் சரணம் சரணம்

நாதத் தொலியே சரணம் சரணம்

நவைஇல் லவனே சரணம் சரணம்

காதுக் கினிதாம் புகழோய் சரணம்

கந்தா சரணம் சரணம் சரணம்

திருச்சிற்றம்பலம்.

3. பிரார்த்தனை மாலை

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

42.

சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் திகழ்கடப்பந்

தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும்ஓர்

கூர்கொண்ட வேலும் மயிலும்நற் கோழிக் கொடியும்அருட்

கார்கொண்ட வண்மைத் தணிகா சலமும்என் கண்ணுற்றதே1.

43.

கண்முன் றுறுசெங் கரும்பின்முத் தேபதம் கண்டிடுவான்

மண்முன் றுலகும் வழுத்தும் பவள மணிக்குன்றமே

திண்முன்று நான்கு புயங்கொண் டொளிர்வச் சிரமணியே

வண்முன் றலர்மலை வாழ்மயில் ஏறிய மாணிக்கமே.

44.

மாணித்த ஞான மருந்தேஎன் கண்ணின்உள் மாமணியே

ஆணிப்பொன் னேஎன தாருயி ரேதணி காசலனே

தாணிற்கி லேன்நினைத் தாழாத வஞ்சர் தமதிடம்போய்ப்

பேணித் திரிந்தனன் அந்தோஎன் செய்வன்இப் பேதையனே.

45.

அன்னே எனைத்தந்த அப்பாஎன் றேங்கி அலறுகின்றேன்

என்னேஇவ் வேழைக் கிரங்காது நீட்டித் திருத்தல்எந்தாய்

பொன்னே சுகுணப் பொருப்பே தணிகைப் பொருப்பமர்ந்த

மன்னே கலப மயில்மேல் அழகிய மாமணியே.

46.

மணியே தினைப்புன வல்லியை வேண்டி வளர்மறைவான்

கணியே எனநின்ற கண்ணே என்உள்ளக் களிநறவே

பணியேன் எனினும் எனைவலிந் தாண்டுன் பதந்தரவே

நணியே தணிகைக்கு வாஎன ஓர்மொழி நல்குவையே.

47.

நல்காத ஈனர்தம் பாற்சென் றிரந்து நவைப்படுதல்

மல்காத வண்ணம் அருள்செய்கண் டாய்மயில் வாகனனே

பல்காதல் நீக்கிய நல்லோர்க் கருளும் பரஞ்சுடரே

அல்காத வண்மைத் தணிகா சலத்தில் அமர்ந்தவனே.

48.

அமரா வதிஇறைக் காருயிர் ஈந்த அருட்குன்றமே

சமரா புரிக்கர சேதணி காசலத் தற்பரனே

குமரா பரம குருவே குகாஎனக் கூவிநிற்பேன்

எமராஜன் வந்திடுங் கால்ஐய னேஎனை ஏன்றுகொள்ளே.

49.

கொள்உண்ட வஞ்சர்தம் கூட்டுண்டு வாழ்க்கையில் குட்டுண்டுமேல்

துள்உண்ட நோயினில் சூடுண்டு மங்கையர் தோய்வெனும்லூர்

கள்உண்ட நாய்க்குன் கருணைஉண் டோ நற் கடல்அமுதத்

தெள்உண்ட தேவர் புகழ்தணி காசலச் சிற்பரனே.

50.

சிற்பகல் மேவும்இத் தேகத்தை ஓம்பித் திருஅனையார்

தற்பக2 மேவிலைந் தாழ்ந்தேன் தணிகை தனில்அமர்ந்த

கற்பக மேநின் கழல்கரு தேன்இக் கடைப்படும்என்

பொற்பகம் மேவிய நின்அருள் என்என்று போற்றுவதே.

51.

போற்றேன் எனினும் பொறுத்திடல் வேண்டும் புவிநடையாம்

சேற்றே விழுந்து தியங்குகின் றேனைச் சிறிதும்இனி
ஆற்றேன் எனதர சேஅமு தேஎன் அருட்செல்வமே
மேற்றேன் பெருகு பொழில்தணி காசல வேலவனே.

52.

வேல்கொண்ட கையும் விறல்கொண்ட தோளும் விளங்குமயில்
மேல்கொண்ட வீறும் மலர்முகம் ஆறும் விரைக்கமலக்
கால்கொண்ட வீரக் கழலும்கண் டால்அன்றிக் காமன்எய்யும்
கோல்கொண்ட வன்மை அறுமோ தணிகைக் குருபரனே.

53.

குருவே அயன்அரி ஆதியர் போற்றக் குறைதவிர்ப்பான்
வருவேல் பிடித்து மகிழ்வள்ள லேகுண மாமலையே
தருவே தணிகைத் தயாநிதி யேதுன்பச் சாகரமாம்
கருவேர் அறுத்திக் கடையனைக் காக்கக் கடன்உனக்கே.

54.

உனக்கே விழைவுகொண் டோ லமிட் டோ ங்கி உலறுகின்றேன்
எனக்கே அருள்இத் தமியேன் பிழைஉளத் தெண்ணியிடேல்
புனக்கேழ் மணிவல்லி யைப்புணர்ந் தாண்டருள் புண்ணியனே
மனக்கேத மாற்றும் தணிகா சலத்தமர் வானவனே.

55.

வானோர் குடிகளை வாழ்வித்த தெய்வ மணிச்சுடரே
நானோர்எளியன்என் துன்பறுத் தாள்என நண்ணிநின்றேன்

ஏனோநின் நெஞ்சம் இரங்காத வண்ணம் இருங்கணிப்பூந்

தேனோ டருவி பயிலும் தணிகைச் சிவகுருவே.

56.

கையாத துன்பக் கடல்முழ்கி நெஞ்சம் கலங்கிஎன்றன்

ஐயாநின் பொன்அடிக் கோலமிட் டேன்என்னை ஆண்டுகொளாய்

மையார் தடங்கண் மலைமகள் கண்டு மகிழ்செல்வமே.

செய்யார் தணிகை மலைஅர சேஅயிற் செங்கையனே.

57.

செங்கைஅம் காந்தன் அனையமின் னார்தம் திறத்துழன்றே

வெங்கயம் உண்ட விளவாயி னேன்விறல் வேலினைஓர்

அங்கையில் ஏந்திய ஐயா குறவர் அரிதில்பெற்ற

மங்கை மகிழும் தணிகேச னேஅருள் வந்தெனக்கே.

58.

கேளாது போல்இருக் கின்றனை ஏழைஇக் கீழ்நடையில்

வாளா இடர்கொண் டலறிடும் ஓலத்தை மாமருந்தே

தோளா மணிச்சுட ரேதணி காசலத் து'ய்ப்பொருளே

நாளாயின் என்செய்கு வேன்இறப் பாய நவைவருமே.

59.

நவையே தருவஞ்ச நெஞ்சகம் மாயவும் நான்உன்அன்பர்

அவையே அணுகவும் ஆனந்த வாரியில் ஆடிடவும்

சுவையே அமுதன்ன நின்திரு நாமம் துதிக்கவும்ஆம்

இவையேஎன் எண்ணம் தணிகா சலத்துள் இருப்பவனே.

60.

இருப்பாய மாய மனத்தால் வருந்தி இளைத்துநின்றேன்
பொருப்பாய கன்மப் புதுவாழ்வில் ஆழ்ந்தது போதும்இன்றே
கருப்பாழ் செயும்உன் சுழல்அடிக் கேஇக் கடையவனைத்
திருப்பாய் எனில்என்செய் கேன்தணி காசலத் தெள்ளமுதே.

61.

தெள்அகத் தோங்கிய செஞ்சுட ரேசிவ தேசிகனே
கள்அகத் தேமலர்க் காஆர் தணிகைஎங் கண்மணியே
என்அகத் தேஉழன் றென்நின் றலைத்தெழுந் திங்கும்அங்கும்
துள்அகத் தேன்சிரம் சேரும்கொ லோநின் துணைஅடியே.

62.

அடியேன் எனச்சொல்வ தல்லாமல் தாள்அடைந் தாரைக்கண்டே
துடியேன் அருண கிரிபாடும் நின்அருள் தோய்புகழைப்
படியேன் பதைத்துரு கேன்பணி யேன்மனப் பந்தம்எலாம்
கடியேன் தணிகையைக் காணேன்என் செய்வேன்எம் காதலனே.

63.

தலனே அடியர் தனிமன மாம்புகழ் சார்தணிகா
சலனே அயன்அரி ஆதியர் வாழ்ந்திடத் தாங்கயில்வேல்
வலனேநின் பொன்அருள் வாரியின் முழ்க மனோலயம்வாய்ந்
திலனேல் சனன மரணம்என் னும்கடற் கென்செய்வனே.

64.

என்செய்கை என்செய்கை எந்தாய்நின் பொன்அடிக் கேஅலங்கல்

வன்செய்கை நீங்க மகிழ்ந்தணி யேன்துதி வாய்உரைக்க

மென்செய்கை கூப்ப விழிநீர் துளித்திட மெய்சிலிர்க்கத்

தன்செய்கை என்பதற் றேதணி காசலம் சார்ந்திலனே.

65.

சாரும் தணிகையில் சார்ந்தோய்நின் தாமரைத் தாள்துணையைச்

சேரும் தொழும்பா திருப்பதம் அன்றிஇச் சிற்றடியேன்

ஊரும் தனமும் உறவும் புகழும் உரைமடவார்

வாருந் தணிமுலைப் போகமும் வேண்டிலன் மண்விண்ணிலே.

66.

மண்நீர் அனல்வளி வான்ஆகி நின்றருள் வத்துஎன்றே

தெண்நீர்மை யால்புகழ் மால்அய னேமுதல் தேவர்கள்தம்

கண்நீர் துடைத்தருள் கற்பக மேஉனைக் கண்டுகொண்டேன்

தண்நீர் பொழிற்கண் மதிவந் துலாவும் தணிகையிலே.

67.

தணியாத துன்பத் தடங்கடல் நீங்கநின் தன்மலர்த்தாள்

பணியாத பாவிக் கருளும்உண் டோ பசு பாசம்அற்றோர்க்

கணியாக நின்ற அருட்செல்வ மேதணி காசலனே

அணிஆ தவன்முத லாம்அட்ட மூர்த்தம் அடைந்தவனே.

68.

அடையாத வஞ்சகர் பால்சென் றிரந்திங் கலைந்தலைந்தே

கடையான நாய்க்குள் கருணைஉண் டோ தணி கைக்குள்நின்றே

உடையாத நல்நெஞ்சர்க் குண்மையைக் காண்பிக்கும் உத்தமனே

படையாத தேவர் சிறைமீட் டளித்தருள் பண்ணவனே.

69.

பண்ணவ னேநின் பதமலர் ஏத்தும் பயன்உடையோர்

கண்ணவ னேதணி காசல னேஅயில் கையவனே

விண்ணவர் ஏத்திய மேலவ னேமயல் மேவுமனம்

புண்ணவ னேனையும் சேர்ந்தாய்என் னேஉன்றன் பொன்அருளே.

70.

பொன்ஆர் புயத்தனும் பூஉடை யோனும் புகழ்மணியே

என்ஆவி யின்துணை யேதணி காசலத் தேஅமர்ந்த

மன்னாநின் பொன்அடி வாழ்த்தாது வீணில் வருந்துறுவேன்

இன்னா இயற்றும் இயமன்வந் தால்அவற் கென்சொல்வனே.

71.

சொல்லார் மலர்புனை அன்பகத் தோர்க்கருள் சொல்லும்எல்லாம்

வல்லாய்என் றேத்த அறிந்தேன் இனிஎன்றன் வல்வினைகள்

எல்லாம் விடைகொண் டிரியும்என் மேல்இய மன்சினமும்

செல்லாது காண்ஐய னேதணி காசலச் சீர்அரைசே.

திருச்சிற்றம்பலம்.

4. எண்ணப் பத்து

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

72.

அணிகொள் வேல்உடை அண்ணலே நின்திரு அடிகளை அன்போடும்
பணிகி லேன்அகம் உருகிநின் றாடிலேன் பாடிலேன் மனமாயைத்
தணிகி லேன்திருத் தணிகையை நினைகிலேன் சாமிநின் வழிபோகத்
துணிகி லேன்இருந் தென்செய்தேன் பாவியேன் துன்பமும் எஞ்சேனே.

73.

சேல்பி டித்தவன் தந்தைஆ தியர்தொழும் தெய்வமே சிவப்பேறே
மால்பி டித்தவர் அறியொணாத் தணிகைமா மலைஅமர்ந் திடுவாழ்வே
வேல்பி டித்தருள் வள்ளலே யான்சதுர் வேதமும் காணாநின்
கால்பி டிக்கவும் கருணைநீ செய்யவும் கண்டுகண் களிப்பேனோ.

74.

களித்து நின்திருக் கழலிணை ஏழையேன் காண்பனோ அலதன்பை
ஒளித்து வன்துயர் உழப்பனோ இன்னதென் றுணர்ந்திலேன் அருட்போதம்
தெளித்து நின்றிடும் தேசிக வடிவமே தேவர்கள் பணிதேவே

தளிர்த்த தண்பொழில் தணிகையில் வளர்சிவ தாருவே மயிலோனே.

75.

மயிலின் மீதுவந் தருள்தரும் நின்றிரு வரவினுக் கெதிர்பார்க்கும்

செயலி னேன்கருத் தெவ்வணம் முடியுமோ தெரிகிலேன் என்செய்கேன்

அயிலின் மாமுதல் தடிந்திடும் ஐயனே ஆறுமா முகத்தேவே

கயிலை நேர்திருத் தணிகைஅம் பதிதனில் கந்தன்என் றிருப்போனே.

76.

இருப்பு நெஞ்சகக் கொடியனேன் பிழைதனை எண்ணுறேல் இனிவஞ்சக்

கருப்பு காவணம் காத்தருள் ஐயனே கருணைஅம் கடலேஎன்

விருப்புள் ஊறிநின் றோங்கிய அமுதமே வேல்உடை எம்மானே

தருப்பு காஇனன் விலகுறும் தணிகைவாழ் சாந்தசற் குணக்குன்றே.

77.

குன்று நேர்பிணித் துயரினால் வருந்திநின் சூரைகழல் கருதாத

துன்று வஞ்சகக் கள்ளனேன் நெஞ்சகத் துயர்அறுத் தருள்செய்வான்

இன்று மாமயில் மீதினில் ஏறிஇவ் வேழைமுன் வருவாயேல்

நன்று நன்றதற் கென்சொல்வார் தணிகைவாழ் நாதநின் அடியாரே.

78.

யாரை யுந்துணை கொண்டிலேன் நின்அடி இணைதுணை அல்லால்நின்

பேரை உன்னிவாழ்ந் திடும்படி செய்வையோ பேதுறச் செய்வாயோ

பாரை யும்உயிர்ப் பரப்பையும் படைத்தருள் பகவனே உலகேத்தும்

சீரை உற்றிடும் தணிகைஅம் கடவுள்நின் திருவுளம் அறியேனே.

79.

உளங்கொள் வஞ்சக நெஞ்சர்தம் இடம்இர் உழந்தகம் உலைவுற்றேன்

வளங்கொள் நின்பத மலர்களை நாள்தொறும் வாழ்த்திலேன் என்செய்கேன்

குளங்கொள் கண்ணனும் கண்ணனும் பிரமனும் குறிக்கரும் பெருவாழ்வே

தளங்கொள் பொய்கைசூழ் தணிகைஅம் பதியில்வாழ் தனிப்பெரும் புகழ்த்தேவே.

80.

தேவர் நாயகன் ஆகியே என்மனச் சிலைதனில் அமர்ந்தோனே

மூவர் நாயகன் எனமறை வாழ்த்திடும் முத்தியின் வித்தேஇங்

கேவ ராயினும் நின்திருத் தணிகைசென் றிறைஞ்சிடில் அவரேஎன்

பாவ நாசம்செய் தென்றனை ஆட்கொள்ளும் பரஞ்சுடர் கண்டாயே.

81.

கண்ட னேகவா னவர்தொழும் நின்திருக் கழல்இணை தனக்காசை

கொண்ட னேகமாய்த் தெண்டன்இட் டானந்தக் கூத்தினை உகந்தாடித்

தொண்ட னேனும்நின் அடியரில் செறிவனோ துயர்உழந் தலைவேனோ

அண்ட னேதிருத் தணிகைவாழ் அண்ணலே அணிகொள்வேல் கரத்தோனே

திருச்சிற்றம்பலம்.

5. செழுஞ்சுடர் மாலை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

82.

ஊணே உடையே பொருளேஎன் றுருகி மனது தடுமாறி

வீணே துயரத் தழுந்துகின்றேன் வேறோர் துணைநின் அடிஅன்றிக்

காணேன் அமுதே பெருங்கருணைக் கடலே கனியே கரும்பேநல்

சேணேர் தணிகை மலைமருந்தே தேனே ஞானச் செழுஞ்சுடரே

83.

பாரும் விசும்பும் அறியஎனைப் பயந்த தாயும் தந்தையும்நீ

ஒரும் போதிங் கெனில்எளியேன் ஓயாத் துயருற் றிடல்நன்றோ

யாரும் காண உனைவாதுக் கிழுப்பேன் அன்றி என்செய்கேன்

சேரும் தணிகை மலைமருந்தே தேனே ஞானச் செழுஞ்சுடரே.

84.

கஞ்சன் துதிக்கும் பொருளேஎன் கண்ணே நின்னைக் கருதாத

வஞ்சர் கொடிய முகம்பார்க்க மாட்டேன் இனிஎன் வருத்தம்அறுத்

தஞ்சல் எனவந் தருளாயேல் ஆற்றேன் கண்டாய் அடியேனே

செஞ்சந் தனம்சேர் தணிகைமலைத் தேனே ஞானச் செழுஞ்சுடரே.

85.

மின்நேர் உலக நடைஅதனால் மேவும் துயருக் காளாகிக்

கல்நேர் மனத்தேன் நினைமறந்தென் கண்டேன் கண்டாய் கற்பகமே

பொன்னே கடவுள் மாமணியே போதப் பொருளே பூரணமே

தென்னேர் தணிகை மலைஅரசே தேவே ஞானச் செழுஞ்சுடரே

86.

வளைத்தே வருத்தும் பெருந்துயரால் வாடிச் சவலை மகவாகி

இளைத்தேன் தேற்றும் துணைகாணேன் என்செய் துய்கேன் எந்தாயே

விளைத்தேன் ஒழுகும் மலர்த்தருவே விண்ணே விழிக்கு விருந்தேசீர்

திளைத்தோர் பரவும் திருத்தணிகைத் தேவே ஞானச் செழுஞ்சுடரே.

87.

அடுத்தே வருத்தும் துயர்க்கடலில் அறியா தந்தோ விழுந்திட்டேன்

எடுத்தே விடுவார் தமைக்காணேன் எந்தாய் எளியேன்
என்செய்கேன்

கடுத்தேர் கண்டத் தெம்மான்தன் கண்ணே தருமக் கடலேஎன்

செடித்தீர் தணிகை மலைப்பொருளே தேனே ஞானச் செழுஞ்சுடரே.

88.

உண்டால் குறையும் எனப்பசிக்கும் உலுத்தர் அசுத்த
முகத்தைஎதிர்

கண்டால் நடுங்கி ஒதுங்காது கடைகாத் திரந்து கழிக்கின்றேன்

கொண்டார் அடியர் நின்அருளை யானோ ஒருவன் குறைபட்டேன்

திண்டார் அணிவேல் தணிகைமலைத் தேவே ஞானச்
செழுஞ்சுடரே.

89.

வேட்டேன் நினது திருஅருளை வினையேன் இனிஇத்
துயர்பொறுக்க

மாட்டேன் மணியே அன்னேஎன் மன்னே வாழ்க்கை மாட்டுமனம்

நாட்டேன் அயன்மால் எதிர்வரினும் நயக்கேன் எனக்கு நல்காயோ

சேட்டேன் அலரும் பொழில்தணிகைத் தேவே ஞானச்
செழுஞ்சுடரே.

90.

கல்லா நாயேன் எனினும்எனைக் காக்கும் தாய்நீ என்றுலகம்

எல்லாம் அறியும் ஆதலினால் எந்தாய் அருளா திருத்திஎனில்

பொல்லாப் பழிவந் தடையும்உனக் கரசே இனியான்
புகல்வதென்னே

செல்லார் பொழில்சூழ் திருத்தணிகைத் தேவே ஞானச்
செழுஞ்சுடரே.

91.

அன்னே அப்பா எனநின்தாட்3 கார்வம் கூர்ந்திங் கலைகின்றேன்

என்னே சற்றும் இரங்கிலைநீ என்நெஞ் சோநின் நல்நெஞ்சம்

மன்னே ஒளிகொள் மாணிக்க மணியே குணப்பொன் மலையேநல்

தென்னேர் பொழில்சூழ் திருத்தணிகைத் தேவே ஞானச்
செழுஞ்சுடரே

92.

நடைஏய் துயரால் மெலிந்து நினை நாடா துழலும் நான்நாயில்

கடையேன் எனினும் காத்தல்என்றன் கண்ணே நினது
கடன்அன்றோ

தடையேன் வருவாய் வந்துன்அருள் தருவாய் இதுவே
சமயம்காண்

செடிதீர்த் தருளும் திருத்தணிகைத் தேவே ஞானச் செழுஞ்சுடரே.

திருச்சிற்றம்பலம்

3. நின் அருட்கார்வம்.

6. குறைஇரந்த பத்து

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

93.

சீர்பூத்த அருட்கடலே கரும்பே தேனே

செம்பாகே எனதுகுலத் தெய்வ மேநல்

கூர்பூத்த வேல்மலர்க்கை அரசே சாந்த

குணக்குன்றே தணிகைமலைக் கோவே ஞானப்

பேர்பூத்த நின்புகழைக் கருதி ஏழை

பிழைக்கஅருள் செய்வாயோ பிழையை நோக்கிப்

பார்பூத்த பவத்தில்ஊற விடில்என் செய்கேன்

பாவியேன் அந்தோவன் பயம்தீ ரேனே.

௯௪.

தீராத துயர்க்கடலில் அழுந்தி நாளும்

தியங்கிஅழு தேங்கும்இந்தச் சேய்க்கு நீகண்

பாராத செயல்என்னே எந்தாய் எந்தாய்

பாவிஎன விட்டனையோ பன்னா ளாக

ஏராய அருள்தருவாய் என்றே ஏமாந்

திருந்தேனே என்செய்கேன் யாரும் இல்லேன்

சீராருந் தணிகைவரை அமுதே ஆதி

தெய்வமே நின்கருத்தைத் தெளிந்தி லேனே.

௯5.

தெளிக்குமறைப் பொருளேஎன் அன்பே என்றன்

செல்வமே திருத்தணிகைத் தேவே அன்பர்

களிக்கும்மறைக் கருத்தேமெய்ஞ் ஞான நீதிக்

கடவுளே நின்அருளைக் காணேன் இன்னும்

சுளிக்கும்மிடித் துயரும்யமன் கயிறும் ஈனத்

தொடர்பும்மலத் தடர்பும்மனச் சோர்வும் அந்தோ

அளிக்கும்எனை என்செயுமோ அறியேன் நின்றன்

அடித்துணையே உறுதுணைமற் றன்றி உண்டோ .

96.

உண்டாய உலகுயிர்கள் தம்மைக் காக்க

ஒளித்திருந்தவ் வுயிர்வினைகள் ஒருங்கே நாளும்

கண்டாயே இவ்வேழை கலங்கும் தன்மை

காணாயோ பன்னிரண்டு கண்கள் கொண்டோய்

தண்டாத நின்அருட்குத் தகுமோ விட்டால்

தருமமோ தணிகைவரைத் தலத்தின் வாழ்வே

விண்டாதி தேவர்தொழும் முதலே முத்தி

வித்தேசொற் பதம்கடந்த வேற்கை யானே.

97.

கையாத அன்புடையார் அங்கைமேவும்

கனியேஎன் உயிரேஎன் கண்ணே என்றும்

பொய்யாத பூரணமே தணிகை ஞானப்

பொருளேநின் பொன்அருள்இப் போதியான் பெற்றால்

உய்யாத குறைஉண்டே துயர்சொல் லாமல்

ஓடுமே யமன்பாசம் ஓய்ந்து போம்என்

ஐயாநின் அடியரொடு வாழ்கு வேன்இங்

கார்உனைஅல் லால்எனக்கின் றருள்செய் வாயே.

98.

வாய்க்கும்உன தருள்என்றே அந்தோ நாளும்

வழிபார்த்திங் கிளைக்கின்றேன் வருத்தும் பொல்லா

நோய்க்கும்உறு துயர்க்கும்இலக் கானேன் மாழ்கி

நொந்தேன்நின் அருள்காணேன் நுவலும் பாசத்

தேய்க்கும்அவன் வரில்அவனுக் கியாது சொல்வேன்

என்செய்கேன் துணைஅறியா ஏழை யேனே

தூய்க்குமர குருவேதென் தணிகை மேவும்

சோதியே இரங்காயோ தொழும்பா ளர்க்கே.

99.

ஆளாயோ துயர்அளக்கர் வீழ்ந்து மாழ்கி

ஐயாவோ எனும்முறையை அந்தோ சற்றும்

கேளாயோ என்செய்கேன் எந்தாய் அன்பர்

கிளத்தும்உன தருள்எனக்குக் கிடையா தாகில்

நாளாய்ஓர் நடுவன்வரில் என்செய் வானோ

நாயினேன் என்சொல்வேன் நாணு வேனோ

தோளாஓர் மணியேதென் தணிகை மேவும்

சுடரேஎன் அறிவேசிற் சுகங்கொள் வாழ்வே.

100.

வாழ்வேநற் பொருளேநல் மருந்தே ஞான

வாரிதியே தணிமைமலை வள்ள லேயான்

பாழ்வேலை எனுங்கொடிய துயருள் மாழ்கிப்

பதைத்தையா முறையோநின் பதத்துக் கென்றே

தாழ்வேன்ஈ தறிந்திலையே நாயேன் மட்டும்

தயவிலையோ நான்பாவி தானோ பார்க்குள்

ஆழ்வேன்என் றயல்விட்டால் நீதி யேயோ

அச்சோஇங் கென்செய்கேன் அண்ணால் அண்ணால்

101.

அண்ணாவே நின்அடியை அன்றி வேறோர்

ஆதரவிங் கறியேன்நெஞ் சழிந்து துன்பால்

புண்ணாவேன் தன்னைஇன்னும் வஞ்சர் பாற்போய்ப்

புலந்துமுக வாட்டம்உடன் புலம்பி நிற்கப்

பண்ணாதே யாவன்இவன் பாவிக் குள்ளும்

படுபாவி என்றென்னைப் பரிந்து தள்ள

எண்ணாதே யான்மிகவும் ஏழை கண்டாய்

இசைக்கரிய தணிகையில்வீற் றிருக்கும் கோவே.

102.

கோவேநல் தணிகைவரை அமர்ந்த ஞான

குலமணியே குகனேசற் குருவே யார்க்கும்

தேவேஎன் விண்ணப்பம் ஒன்று கேண்மோ

சிந்தைதனில் நினைக்கஅருள் செய்வாய் நாளும்

பூவேயும் அயன்திருமால் புலவர் முற்றும்

போற்றும்எழில் புரந்தரன்எப் புவியும் ஓங்கச்

சேவேறும் பெருமான்இங் கிவர்கள் வாழ்த்தல்

செய்துவக்கும் நின்இரண்டு திருத்தாள் சீரே.

திருச்சிற்றம்பலம்

## 7. ஜீவசாட்சி மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

103.

பண்ஏறும் மொழிஅடியர் பரவி வாழ்த்தும்

பாதமலர் அழகினைஇப் பாவி பார்க்கில்

கண்ஏறு படும்என்றோ கனவி லேனும்

காட்டென்றால் காட்டுகிலாய் கருணை ஈதோ

விண்ஏறும் அரிமுதலோர்க் கரிய ஞான

விளக்கேஎன் கண்ணேமெய் வீட்டின் வித்தே

தண்ஏறு பொழிதணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

104.

பண்டுமன துவந்துகுணம் சிறிதும் இல்லாப்

பாவியேன் தனைஆண்டாய் பரிவால் இன்று

கொண்டுகுலம் பேசுதல்போல் எளியேன் குற்றம்

குறித்துவிடில் என்செய்கேன் கொடிய னேனைக்
கண்டுதிருத் தொண்டர்நகை செய்வார் எந்நாய்
கைவிடேல் உன்ஆணை காண்முக் காலும்
தண்துளவன் புகழ்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

195.

புன்புலைய வஞ்சகர்பால் சென்று வீணே
புகழ்ந்துமனம் அயர்ந்துறுகண் பொருந்திப் பொய்யாம்
வன்புலைய வயிறோம்பிப் பிறவி நோய்க்கு
மருந்தாய நின்அடியை மறந்தேன் அந்தோ
இன்புலைய உயிர்கொள்வான் வரில்என் பால்அவ்
வியமனுக்கிங் கென்சொல்கேன் என்செய் கேனே
தன்புகழ்காண் அருந்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

196.

பெருங்களப முலைமடவார் என்னும் பொல்லாப்
பேய்க்கோட்பட் டாடுகின்ற பித்த னேனுக்
கிரும்புலவர்க் கரியதிரு அருள்ஈ வாயேல்
என்சொலார்ҷ அடியர்அதற் கெந்தாய் எந்நாய்
கரும்பின்இழிந் தொழுகும்அருள் சுவையே முக்கண்
கனிகனிந்த தேனேஎன் கண்ணே ஞானம்

தரும்புனிதர் புகழ்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

ч. சொல்வர். தொ.வே. முதற்பதிப்பு.

107.

கல்அளவாம் நெஞ்சம்என வஞ்ச மாதர்

கண்மாயம் எனும்கயிற்றால் கட்டு வித்துச்

சொல்அளவாத் துன்பம்எனும் கடலில் வீழ்த்தச்

சோர்கின்றேன் அந்தோநல் துணைஒன் றில்லேன்

மல்அளவாய்ப் பவம்மாய்க்கும் மருந்தாம் உன்றன்

மலர்ப்பாதப் புணைதந்தால் மயங்கேன் எந்நாய்

சல்லம்5உலாத் தரும்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

108.

அன்னைமது லாம்பந்தத் தழுங்கி நாளும்

அலைந்துவயி றோம்பிமனம் அயர்ந்து நாயேன்

முன்னைவினை யாற்படும்பா டெல்லாம் சொல்லி

முடியேன்செய் பிழைகருதி முனியேல் ஐயா

பொன்னைநிகர் அருட்குன்றே ஒன்றே முக்கட்

பசுந்தஇமணமே நறவேநற் புலவர் போற்றத்

தன்னைநிகர் தரும்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

109.

பன்னரும்வன் துயரால்நெஞ் சழிந்து நாளும்

பதைத்துருகி நின்அருட்பால் பருகக் கிட்டா

துன்னரும்பொய் வாழ்க்கைஎனும் கானத் திந்த

ஊர்நகைக்கப் பாவிமழல் உணர்ந்தி லாயோ

என்னருமை அப்பாஎன் ஐயா என்றன்

இன்னுயிர்க்குத் தலைவாஇங் கெவர்க்கும் தேவா

தன்னியல்சீர் வளர்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

110.

கோவேநின் பதம்பதுதியா வஞ்ச நெஞ்சக்

கொடியோர்பால் மனவருத்தம் கொண்டாழ் கின்றேன்

சாவேனும் அல்லன்நின்பொன் அருளைக் காணேன்

தமியேனை உய்யும்வண்ணம் தருவ தென்றோ

சேவேறும் சிவபெருமான் அரிதின் ஈன்ற

செல்வமே அருள்ஞானத் தேனே அன்பர்

தாவேதம் தெறும்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

111.

ஓயாது வரும்மிடியான் வஞ்சர் பால்சென்

றுளங்கலங்கி நாணிஇரந் துழன்றெந் நாளும்

மாயாத துயரடைந்து வருந்தித் தெய்வ

மருந்தாய நின்அடியை மறந்திட் டேனே

தாயாகித் தந்தையார்த் தமராய் ஞான

சற்குருவாய்த் தேவாகித் தழைத்த ஒன்றே

சாயாத புகழ்த்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

112.

மின்னாளும் இடைமடவார் அல்கு லாய

வெங்குழியில் வீழ்ந்தாழ்ந்து மெலிந்தேன் அல்லால்

எந்நாளும் உனைப்போற்றி அறியேன் என்னே

ஏழைமதி கொண்டேன்இங் கென்செய் கேனே

அன்னாய்என அப்பாஎன் றரற்றும் அன்பர்க்

காரமுதே அருட்கடலே அமரர் கோவே

தன்னார்வத் தமர்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

113.

வன்சொலினார் இடைஅடைந்து மாழ்கும் இந்த

மாபாவி யேன்குறையை வகுத்து நாளும்

என்சொலினும் இரங்காமல் அந்தோ வாளா

இருக்கின்றாய் என்னேநின் இரக்கம் எந்தாய்

இருள்அகற்றும் செழுஞ்சுடரே எவர்க்கும் கோவே

தன்சொல்வளர் தரும்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

114.

மீளாத வன்துயர்கொண் டனர் தம்மால்

மெலிந்துநினை அழைத்தலறி விம்மா நின்றேன்

கேளாத கேள்விஎலாம் கேட்பிப் பாய்நீ

கேட்கிலையோ என்அளவில் கேள்வி இன்றோ

மதியேசிற் சுகஞான மழைபெய் விண்ணே

தாளாளர் புகழ்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

115.

மண்ணினால் மங்கையரால் பொருளால் அந்தோ

வருந்திமனம் மயங்கிமிக வாடி நின்றேன்

புண்ணியா நின்அருளை இன்னும் காணேன்

பொறுத்துமுடி யேன்துயரம் புகல்வ தென்னே

எண்ணினால் அளப்பரிய பெரிய மோன

இன்பமே அன்பர்தம திதயத் தோங்கும்

தண்ணினால் பொழில்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

116.

வஞ்சகராம் கானின்இடை அடைந்தே நெஞ்சம்

வருந்திஉறு கணவெயிலால் மாழாந் தந்தோ

தஞ்சம்என்பார் இன்றிஒரு பாவி நானே

தனித்தருள்நீர்த் தாகம்உற்றேன் தயைசெய் வாயோ

செஞ்சொல்மறை முடிவிளக்கே உண்மை ஞானத்

தேறலே முத்தொழில்செய் தேவர் தேவே

சஞ்சலம்நீத் தருள்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

117.

வாழாத வண்ணம்எனைக் கெடுக்கும் பொல்லா

வஞ்சகநெஞ் சால்உலகில் மாழாந் தந்தோ

பாழான மந்தையர்பால் சிந்தை வைக்கும்

பாவியேன் முகம்பார்க்கப் படுவ தேயோ

ஏழாய வன்பவத்தை நீக்கும் ஞான

இன்பமே என்அரசே இறையே சற்றும்

தாழாத புகழ்த்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

118.

உளந்தளர விழிசுருக்கும் வஞ்சர் பால்சென்

றுத்தமநின் அடியைமறந் தோயா வெய்யில்

இளந்தளிர்போல் நலிந்திரந்திங் கூழலும் இந்த

ஏழைமுகம் பார்த்திரங்காய் என்னே என்னே

வளந்தருசற் குணமலையே முக்கட் சோதி
மணியின்இருந் தொளிர்ஒளியே மயிலூ'ர் மன்னே
தளந்தரும்பசேநதஇம் பொழில்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

119.

கல்லாத வஞ்சகர்பால் சென்று வீணாள்
கழித்து நிற்கும் கடையன்இவன் கருணை இல்லாப்
பொல்லாத பாவிஎன எண்ணி என்னைப்
புறம்போக்கில் ஐயாயான் புரிவ தென்னே
எல்லாம்செய் வல்லவனே தேவர் யார்க்கும்
இறைவனே மயில்ஏறும் எம்பி ரானே
சல்லாப வளத்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

120. கன்னேய நெஞ்சகர்மாட் டணுகி ஐயோ
கரைந்துருகி எந்தாய்நின் கருணை காணா
தென்னேஎன் றேங்கிஅழும் பாவி யேனுக்
கிருக்கஇடம் இலையோநின் இதயங் கல்லோ
பொன்னேஎன் உயிர்க்குயிராய்ப் பொருந்து ஞான
பூரணமே புண்ணியமே புனித வைப்பே
தன்னேரில் தென்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

121. பாவவினைக் கோர்இடமாம் மடவார் தங்கள்
பாழ்ங்குழிக்கண் வீழமனம் பற்றி அந்தோ
மாவல்வினை யுடன்மெலிந்திங் சூழல்கின் றேன்நின்
மலர்அடியைப் பேற்றேன்என் மதிதான் என்னே
தேவர்தொழும் பொருளேஎன் குலத்துக் கெல்லாம்
தெய்வமே அடியர்உளம் செழிக்கும் தேனே
தாவகன்றோர் புகழ்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

122. கன்னியர்தம் மார்பிடங்கொண் டலைக்கும் புன்சீழ்க்
கட்டிகளைக் கருதிமனம் கலங்கி வீணே
அன்னியனாய் அலைகின்றேன் மயக்கம் நீக்கி
அடிமைகொளல் ஆகாதோ அருட்பொற் குன்றே
சென்னிமிசைக் கங்கைவைத்தோன் அரிதில் பெற்ற
செல்வமே என்புருக்கும் தேனே எங்கும்
தன்னியல்கொண் டுறும்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

123. உள்ளமனக் குரங்காட்டித் திரியும் என்றன்
உளவறிந்தோ ஐயாநீ உன்னைப் போற்றார்
கள்ளமனக் குரங்குகளை ஆட்ட வைத்தாய்
கடையனேன் பொறுத்துமுடி கில்லேன் கண்டாய்
தெள்ளமுதப் பெருங்கடலே தேனே ஞானத்

தெளிவேஎன் தெய்வமே தேவர் கோவே
தள்ளரிய புகழ்த்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

124. வந்தாள்வாய் ஐயாவோ வஞ்சர் தம்பால்
வருந்துகின்றேன் என்றலறும் மாற்றம் கேட்டும்
எந்தாய்நீ இரங்காமல் இருக்கின் றாயால்
என்மனம்போல் நின்மனமும் இருந்த தேயோ
கந்தாஎன் றுரைப்பவர்தம் கருத்துள் ஊறும்
கனிரசமே கரும்பேகற் கண்டே நற்சீர்
தந்தாளும் திருத்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

125. ஊர்ஆதி இகழ்மாயக் கயிற்றால் கட்டுண்
டோ ய்ந்தலறி மனம்குழைந்திங் குழலு கின்றேன்
பார்ஆதி அண்டம்எலாம் கணக்கில் காண்போய்
பாவியேன் முகவாட்டம் பார்த்தி லாயோ
சீர்ஆதி பகவன்அருட் செல்வ மேஎன்
சிந்தைமலர்ந் திடஊறுந் தேனே இன்பம்
சார்ஆதி மலைத்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

126. வாஎன்பார் இன்றிஉன தன்பர் என்னை
வஞ்சகன்என் றேமறுத்து வன்கணாநீ

போஎன்பார் ஆகில்எங்குப் போவேன் அந்தோ
பொய்யனேன் துணைஇன்றிப் புலம்பு வேனே
கோஎன்பார்க் கருள்தருமக் குன்றே ஒன்றே
குணங்குறிஅற் றிடஅருளும் குருவே வாழ்க்கைத்
தாஎன்பார் புகழ்த்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

127. மாயைநெறி யாம்உலக வாழ்க்கை தன்னில்
வருந்திநினை அழைத்தலறி மாழ்கா நின்றேன்
தாயைஅறி யாதுவரும் சூல்உண் டோ என்
சாமிநீ அறியாயோ தயைஇல் லாயோ
பேயைநிகர் பாவிஎன நினைந்து விட்டால்
பேதையேன் என்செய்கேன் பெருஞ்சீர்க் குன்றே
சாயைகடல் செறிதணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

128. மின்னைநிகர்ந் தழிவாழ்க்கைத் துயரால் நெஞ்சம்
மெலிந்துநின தருள்பருக வேட்டுநின்றேன்
என்னைஇவன் பெரும்பாவி என்றே தள்ளில்
என்செய்கேன் தான்பெறும்சேய் இயற்றும் குற்ற
அன்னைபொறுத் திடல்நீதி அல்ல வோஎன்
ஐயாவே நீபொறுக்கல் ஆகா தோதான்
தன்னைநிகர் தரும்தணிகை மணியே ஜீவ

சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

129. முந்தைவினை யால்நினது வழியில் செல்லா
முடனேன் தனைஅன்பர் முனிந்து பெற்ற
தந்தைவழி நில்லாத பாவி என்றே
தள்ளிவிடில் தலைசாய்த்துத் தயங்கு வேனே
எந்தைநின தருள்சற்றே அளித்தால் வேறோர்
எண்ணமிலேன் ஏகாந்தத் திருந்து வாழ்வேன்
சந்தனவான் பொழில்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

130. பன்னகநொந் துறுவஞ்ச உலகில் நின்று
பரதவித்துன் அருட்கெதிர்போய்ப் பார்க்கின் றேன்நின்
பொன்னருளைப் புணர்ந்துமன மகிழ்ந்து வாழப்
புண்ணியனே நாயேற்குப் பொருத்தம் இன்றோ
பின்னைஒரு துணைஅறியேன் தனியே விட்டால்
பெருமநினக் கழகேயோ பேதை யாம்என்
தன்னைஅளித் தருள்தணிகை மணியே ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே.

திருச்சிற்றம்பலம்.

## 8. ஆற்றா முறை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

131. விண்அ றாதுவாழ் வேந்தன் ஆதியர்
வேண்டி ஏங்கவும் விட்டென் நெஞ்சகக்
கண்அ றாதுநீ கலந்து நிற்பதைக்
கள்ள நாயினேன் கண்டு கொண்டிலேன்
எண்அ றாத்துயர்க் கடலுள் முழ்கியே
இயங்கி மாழ்குவேன் குலவும் போரி6 வாழ்
சாமி யேதிருத் தணிகை நாதனே.

6. போரி - திருப்போரூர்

132. வாட்கண் ஏழையர் மயலில் பட்டகம்
மயங்கி மால்அயன் வழுத்தும் நின்திருத்
தாட்கண் நேயம்அற் றுலக வாழ்க்கையில்
சஞ்ச ரித்துழல் வஞ்ச னேன்இடம்
ஆட்க ணேசுழல் அந்த கன்வரில்
அஞ்சு வேன்அலால் யாது செய்குவேன்
நாட்க ணேர்மலர்ப் பொழில்கொள் போரிவாழ்
நாய காதிருத் தணிகை நாதனே.

133. எண்ணில் புன்தொழில் எய்தி ஐயவோ
இயல்பின் வாழ்க்கையில் இயங்கி மாழ்கியே
கண்ணின் உண்மணி யாய நின்தனைக்
கருதி டாதுழல் கபட னேற்கருள்
நண்ணி வந்திவன் ஏழை யாம்என

நல்கி ஆண்டிடல் நியாய மேசொலாய்
தண்இ ரும்பொழில் சூழும் போரிவாழ்
சாமி யேதிருத் தணிகை நாதனே.

134. கூவி ஏழையர் குறைகள் தீரஆட்
கொள்ளும் வள்ளலே குறுகும் வாழ்க்கையில்
பாவி யேன்படும் பாட னைத்தையும்
பார்த்தி ருந்தும்நீ பரிந்து வந்திலாய்
சேவி யேன் எனில் தள்ளல் நீதியோ
திருவ ருட்கொரு சிந்து வல்லையோ
தாவி ஏர்வளைப் பயில்செய் போரிவாழ்
சாமி யேதிருத் தணிகை நாதனே.

135. சந்தை நேர்நடை தன்னில் ஏங்குவேன்
சாமி நின்திருத் தாளுக் கன்பிலேன்
எந்தை நீமகிழ்ந் தென்னை ஆள்வையேல்
என்னை அன்பர்கள் என்சொல் வார்களோ
நிந்தை ஏற்பினும் கருணை செய்திடல்
நித்த நின்அருள் நீதி ஆகுமால்
தந்தை தாய்என வந்து சீர்தரும்
தலைவ னேதிருத் தணிகை நாதனே.

136. செல்லும் வாழ்க்கையில் தியங்க விட்டுநின்
செய்ய தாள்துதி செய்தி டாதுழல்

கல்லும் வெந்நிடக் கண்டு மிண்டுசெய்

கள்ள நெஞ்சினேன் கவலை தீர்ப்பையோ

சொல்லும் இன்பவான் சோதி யேஅருள்

தோற்ற மேசுக சொரூப வள்ளலே

சல்லி யங்கெட அருள்செய் போரிவாழ்

சாமி யேதிருத் தணிகை நாதனே.

137. ஏது செய்குவ னேனும் என்றனை

ஈன்ற நீபொறுத் திடுதல் அல்லதை

ஈது செய்தவன் என்றிவ் வேழையை

எந்த வண்ணம்நீ எண்ணி நீக்குவாய்

வாது செய்வன்இப் போது வள்ளலே

வறிய னேன்என மதித்து நின்றிடேல்

தாது செய்மலர்ப் பொழில்கொள் போரிவாழ்

சாமி யேதிருத் தணிகை நாதனே.

138. பேயும் அஞ்சுறும் பேதை யார்களைப்

பேணும் இப்பெரும் பேய னேற்கொரு

தாயும் அப்பனும் தமரும் நட்பும்ஆய்த்

தண்அ ருட்கடல் தந்த வள்ளலே

நீயும் நானும்ஓர் பாலும் நீருமாய்

நிற்க வேண்டினேன் நீதி ஆகுமோ

சாயும் வன்பவம் தன்னை நீக்கிடும்

சாமி யேதிருத் தணிகை நாதனே.

139. பொய்யர் தம்மனம் புகுதல் இன்றெனப்

புனித நு'லெலாம் புகழ்வ தாதலால்

ஐய நின்திரு அருட்கி ரப்பஇங்

கஞ்சி நின்றென்இவ் விஞ்சு வஞ்சனேன்

மெய்யர் உள்ளுளே விளங்கும் சோதியே

வித்தி லாதவான் விளைந்த இன்பமே

தைய லார்இரு வோரும் மேவுதோள்

சாமி யேதிருத் தணிகை நாதனே.

140. மாலின் வாழ்க்கையின் மயங்கி நின்பதம்

மறந்து ழன்றிடும் வஞ்ச நெஞ்சினேன்

பாலின் நீர்என நின்அ டிக்கணே

பற்றி வாழ்ந்திடப் பண்ணு வாய்கொலோ

சேலின் வாட்கணார் தீய மாயையில்

தியங்கி நின்றிடச் செய்கு வாய்கொலோ

சால நின்உளம் தான்எவ் வண்ணமோ

சாற்றி டாய்திருத் தணிகை நாதனே.

திருச்சிற்றம்பலம்.

## 9. இரந்த விண்ணப்பம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

141. நாளை ஏகியே வணங்குதும் எனத்தினம் நாளையே கழிக்கின்றோம்

ஊளை நெஞ்சமே என்னையோ என்னையோ உயர்திருத் தணிகேசன்

தாளை உன்னியே வாழ்ந்திலம் உயிர்உடல் தணந்திடல் தனைஇந்த

வேளை என்றறி வுற்றிலம் என்செய்வோம் விளம்பரும் விடையோமே.

142. விடைய வாழ்க்கையை விரும்பினன் நின்திரு விரை மலர்ப் பதம்போற்றேன்

கடைய நாயினேன் எவ்வணம் நின்திருக் கருணைபெற் றுய்வேனே

விடையில் ஏறிய சிவபரஞ் சுடர்உளே விளங்கிய ஒளிக்குன்றே

தடையி லாதபேர் ஆனந்த வெள்ளமே தணிகைஎம் பெருமானே.

143. பெருமை வேண்டிய பேதையில் பேதையேன் பெருந்துயர் உழக்கின்றேன்

ஒருமை ஈயும்நின் திருப்பதம் இறைஞ்சிலேன் உய்வதெப் படியேயோ

அருமை யாம்தவத் தம்மையும் அப்பனும் அளித்திடும் பெருவாழ்வே

தரும வள்ளலே குணப்பெருங் குன்றமே தணிகைமா மலையானே.

144. மலையும் வேற்கணார் மையலில் அழுந்தியே வள்ளல்நின் பதம்போற்றோ

தலையும் இப்பெருங் குறையினை ஐயகோ யாவரோ டுரைசெய்கேன்

நிலைகொள் ஆனந்த நிருத்தனுக் கொருபொருள் நிகழ்த்திய பெருவாழ்வே

தலைமை மேவிய சற்குரு நாதனே தணிகையம் பதியானே.

145. பதியும் அப்பனும் அன்னையும் குருவும்நற் பயன்தரு பொருளாய

கதியும் நின்திருக் கழல்அடி அல்லது கண்டிலன் எளியேனே

விதியும் மாலும்நின் றேத்திடும் தெய்வமே விண்ணவர் பெருமானே

வதியும் சின்மய வடிவமே தணிகைமா மலைஅமர்ந் திடுவாழ்வே.

146. வாழும் நின்திருத் தொண்டர்கள் திருப்பதம் வழுத்திடா துலகத்தே

தாழும் வஞ்சர்பால் தாழும்என் தன்மைஎன் தன்மைவன் பிறப்பாய

ஏழும் என்னதே ஆகிய தையனே எவர்எனைப் பொருகின்றோர்

ஊழும் நீக்குறும் தணிகைஎம் அண்ணலே உயர்திரு வருள்தேனே.

147. தேனும் தெள்ளிய அமுதமும் கைக்கும்நின் திருவருள் தேன்உண்டே

யானும் நீயுமாய்க் கலந்துற வாடும்நாள் எந்தநாள் அறியேனே

வானும் பூமியும் வழுத்திடும் தணிகைமா மலைஅமர்ந் திடுதேவே

கோனும் தற்பர குருவுமாய் விளங்கிய குமாரசற் குணக்குன்றே.

148. குன்று பொய்உடல் வாழ்வினை மெய்எனக் குறித்திவண் அலைகின்றேன்

இன்று நின்திரு வருள்அடைந் துய்வனோ இல்லைஇவ் வுலகத்தே

என்றும் இப்படிப் பிறந்திறந் துழல்வனோ யாதும்இங் கறிகில்லேன்

நன்று நின்திருச் சித்தம்என் பாக்கியம் நல்தணி கையில்தேவே.

149. தேவ ரும்தவ முனிவரும் சித்தரும் சிவன்அரி அயன்ஆகும்

மூவ ரும்பணி முதல்வநின் அடியில்என் முடிஉற வைப்பாயேல்

ஏவ ரும்எனக் கெதிர்இலை முத்திவீ டென்னுடை யதுகண்டாய்

தாவ ரும்பொழில் தணிகையம் கடவுளே சரவண பவகோவே.

150. வேயை வென்றதோள் பாவையர் படுகுழி விழுந்தலைந் திடும்இந்த

நாயை எப்படி ஆட்கொளல் ஆயினும் நாதநின் செயல்அன்றே

தாயை அப்பனைத் தமரினை விட்டுனைச் சார்ந்தவர்க் கருள்கின்றோய்

மாயை நீக்குநல் அருள்புரி தணிகைய வந்தருள் இந்நாளே.

திருச்சிற்றம்பலம்.

## 10. கருணை மாலை

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

151. சங்க பாணியைச் சதுமு கத்தனைச்

செங்கண் ஆயிரத் தேவர் நாதனை

மங்க லம்பெற வைத்த வள்ளலே

தங்க ருள்திருத் தணிகை ஐயனே.

152. ஐய னேநினை அன்றி எங்கணும்
பொய்ய னேற்கொரு புகல்இ லாமையால்
வெய்ய னேன்என வெறுத்து விட்டிடேல்
மெய்ய னேதிருத் தணிகை வேலனே.

153. வேலன் மாதவன் வேதன் ஏத்திடும்
மேலன் மாமயில் மேலன் அன்பர்உள்
சால நின்றவன் தணிகை நாயகன்
வால நற்பதம் வைப்பென் நெஞ்சமே.

154. நெஞ்ச மேஇஃ தென்னை நின்மதி
வஞ்ச வாழ்வினில் மயங்கு கின்றனை
தஞ்சம் என்றருள் தணிகை சார்த்தியேல்
கஞ்ச மாமலர்க் கழல்கி டைக்குமே.

155. கிடைக்குள் மாழ்கியே கிலம்செய் அந்தகன்
படைக்குள் பட்டிடும் பான்மை எய்திடேன்
தடைக்குள் பட்டிடாத் தணிகை யான்பதத்
தடைக்க லம்புகுந் தருள்செ ழிப்பனே.

156. செழிக்கும் சீர்திருத் தணிகைத் தேவநின்
கொழிக்கும் நல்லருள் கொள்ளை கொள்ளவே
தழிக்கொண் டன்பரைச் சார்ந்தி லேன்இவண்
பழிக்குள் ஆகும்என் பான்மை என்னையோ.

157. என்னை என்னைஈ தென்றன் மாதவம்

முன்னை நன்னெறி முயன்றி லேனைநின்

பொன்னை அன்னதாள் போற்ற வைத்தனை

அன்னை என்னும்நல் தணிகை அண்ணலே.

158. அண்ணி லேன்நினை ஐய நின்அடி

எண்ணி லேன்இதற் கியாது செய்குவேன்

புண்ணி னேன்பிழை பொறுத்துக் கோடியால்

தண்ணின் நீள்பொழில் தணிகை அப்பனே.

159. அப்பன் என்னுடை அன்னை தேசிகன்

செப்பன் என்குலத் தெய்வம் ஆனவன்

துப்பன் என்உயிர்த் துணைவன் யாதும்லூர்

தப்பில் அன்பர்சேர் தணிகை வள்ளலே.

160. வள்ளல் உன்அடி வணங்கிப் போற்றஎன்

உள்ளம் என்வசத் துற்ற தில்லையால்

எள்ளல் ஐயவோ ஏழைஎன் செய்கேன்

தள்ள ரும்பொழில் தணிகை வெற்பனே.

161. வெற்ப னேதிருத் தணிகை வேலவனே

பொற்ப னேதிருப் போரி நாதனே

கற்ப மேல்பல காலம் செல்லுமால்

அற்ப னேன்துயர்க் களவு சாற்றவே.

162. சாறு சேர்திருத் தணிகை எந்தைநின்

ஆறு மாமுகத் தழகை மொண்டுகொண்

டுறில் கண்களால் உண்ண எண்ணினேன்

ஈறில் என்னுடை எண்ணம் முற்றுமோ.

163. முற்று மோமனம் முன்னி நின்பதம்

பற்று மோவினைப் பகுதி என்பவை

வற்று மோசுக வாழ்வு வாய்க்குமோ

சற்றும் ஓர்கிலேன் தணிகை அத்தனே.

164. அத்த னேதணி காச லத்தருள்

வித்த னேமயில் மேற்கொள் வேலனே

பித்த னேன்பெரும் பிழைபொ றுத்திடல்

சுத்த அன்பர்கள் சொல்வர் ஏதமே.

165. ஏதி லார்என எண்ணிக் கைவிடல்

நீதி யோஎனை நிலைக்க வைத்தவா

சாதி வான்பொழில் தணிகை நாதனே

ஈதி நின்அருள் என்னும் பிச்சையே.

166. பிச்சை ஏற்றவன் பிள்ளை நீஎனில்

இச்சை ஏற்றவர்க் கியாது செய்குவாய்

பச்சை மாமயில் பரம நாதனே

கச்சி நேர்தணி கைக்க டம்பனே.

167. கடப்ப மாமலர்க் கண்ணி மார்பனே

தடப்பெ ரும்பொழில் தணிகைத் தேவனே

இடப்ப டாச்சிறி யேனை அன்பர்கள்
தொடப்ப டாதெனில் சொல்வ தென்கொலோ.

168. என்சொல் கேன்இதை எண்ணில் அற்புதம்
வன்சொ லேன்பிழை மதித்தி டாதுவந்
தின்சொ லால்இவண் இருத்தி என்றனன்
தன்சொல் செப்பரும் தணிகைத் தேவனே.

169. தேவ நேசனே சிறக்கும் ஈசனே
பாவ நாசனே பரம தேசனே
சாவ காசனே தணிகை வாசனே
கோவ பாசனே குறிக்கொள் என்னையே.

170. குறிக்கொள் அன்பரைக் கூடு றாதஇவ்
வெறிக்கொள் நாயினை வேண்டி ஐயநீ
முறிக்கொள் வாய்கொலோ முனிகொள் வாய்கொலோ
நெறிக்கொள் வோர்புகழ் தணிகை நித்தனே.

171. தணிகை மேவிய சாமி யேநினை
எணிகை விட்டிடேல் என்று தோத்திரம்
அணிகை நின்அடிக் கயர்ந்து நின்றுவீண்
கணிகை போல்எனைக் கலக்கிற் றுள்ளமே.

172. உள்ளம் நெக்குவிட் டுருகும் அன்பர்தம்
நள்அ கத்தினில் நடிக்கும் சோதியே
தள்அ ருந்திறல் தணிகை ஆனந்த

வெள்ள மேமனம் விள்ளச் செய்வையே.

173. செய்வ தன்றவன் சிறிய னேன்றனை
வைவர் அன்பர்கள் என்னில் மத்தனேன்
உய்வ தெவ்வணம் உரைசெய் அத்தனே
சைவ நாதனே தணிகை மன்னனே.

174. மன்னும் நின்அருள் வாய்ப்ப தின்றியே
இன்னும் இத்துயர் ஏய்க்கில் என்செய்கேன்
பொன்னின் அம்புயன் போற்றும் பாதனே
தன்னில் நின்றிடும் தணிகை மேலனே.

175. மேலை வானவர் வேண்டும் நின்திருக்
காலை என்சிரம் களிக்க வைப்பையோ
சாலை ஓங்கிய தணிகை வெற்பனே
வேலை ஏந்துகை விமல் நாதனே.

176. வேத மாமுடி விளங்கும் நின்திருப்
பாதம் ஏத்திடாப் பாவி யேன்தனக்
கீதல் இன்றுபோ என்னில் என்செய்கேன்
சாதல் போக்கும்நல் தணிகை நேயனே.

177. நேயம் நின்புடை நின்றி டாதஎன்
மாய நெஞ்சினுள் வந்தி ருப்பையோ
பேய னேன்பெரும் பிழைபொ றுத்திடத்
தாய நின்கடன் தணிகை வாணனே.

178. வாணு தல்பெரு மாட்டி மாரொடு
காணு தற்குனைக் காதல் கொண்டனன்
ஏணு தற்கென தெண்ணம் முற்றுமோ
மாணு தற்புகழ்த் தணிகை வண்ணனே.

179. வண்ண னேஅருள் வழங்கும் பன்னிரு
கண்ண னேஅயில் கரங்கொள் ஐயனே
தண்ண னேர்திருத் தணிகை வேலனே
திண்ணம் ஈதருள் செய்யும் காலமே.

180. கால்கு றித்தஎன் கருத்து முற்றியே
சால்வ ளத்திருத் தணிகை சார்வன்என்
மால்ப கைப்பிணி மாறி ஓடவே
மேல்கு றிப்பனால் வெற்றிச் சங்கமே.

திருச்சிற்றம்பலம்

11. மருண்மாலை விண்ணப்பம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

181. சொல்லும் பொருளு மாய்நிறைந்த சுகமே அன்பர் துதிதுணையே
புல்லும் புகழ்சேர் நல்தணிகைப் பொருப்பின் மருந்தே பூரணமே
அல்லும் பகலும் நின்நாமம் அந்தோ நினைந்துன் ஆளாகேன்
கல்லும் பொருவா வன்மனத்தால் கலங்கா நின்றேன் கடையேனே.

182. கடையேன் வஞ்ச நெஞ்சகத்தால் கலுழ்கின் றேன்நின் திருக்கருணை

அடையேன் அவமே திரிகின்றேன் அந்தோ சிறிதும் அறிவில்லேன்

விடையே றீசன் புயம்படும்உன் விரைத்தாள் கமலம் பெறுவேனோ

கொடைஏர் அருளைத் தருமுகிலே கோவே தணிகைக் குலமணியே.

183. மணியே அடியேன் கண்மணியே மருந்தே அன்பர் மகிழ்ந்தணியும்

அணியே தணிகை அரசேதெள் அமுதே என்றன் ஆருயிரே

பிணிஏய் துயரால் வருந்திமனப் பேயால் அலைந்து பிறழ்கின்றேன்

தணியேன் தாகம் நின்அருளைத் தருதல் இலையேல் தாழ்வேனே.

184. தாழ்வேன் வஞ்ச நெஞ்சகர்பால் சார்வேன் தனக்குள் அருள்தந்தால்

வாழ்வேன் இலையேல் என்செய்கேன் வருத்தம் பொறுக்க மாட்டேனே

ஏழ்வே தனையும் கடந்தவர்தம் இன்பப் பெருக்கே என்உயிரே

போழ்வேல் கரங்கொள் புண்ணியனே புகழ்சேர் தணிகைப் பொருப்பரசே.

185. அரைசே அடியர்க் கருள்குகனே அண்ணா தணிகை ஐயாவே

விரைசேர் கடம்பமலர்ப்புயனே வேலா யுதக்கை மேலோனே

புரைசேர் மனத்தால் வருந்திஉன்றன் பூம்பொற் பதத்தைப் புகழ்கில்லேன்

தரைசேர் வாழ்வில் தயங்குகின்றேன் அந்தோ நின்று தனியேனே.

186. தனியே துயரில் வருந்திமனம் சாம்பி வாழ்க்கைத் தளைப்பட்டிங்

கினிஏ துறுமோ என்செய்கேன் என்றே நின்றேற் கிரங்காயோ

கனியே பாகே கரும்பேஎன் கண்ணே தணிகைக் கற்பகமே

துனிஏய் பிறவி தனைஅகற்றும் துணையே சோதிச் சுகக்குன்றே.

187. குன்றே மகிழ்ந்த குணக்குன்றே கோவே தணிகைக் குருபரனே

நன்றே தெய்வ நாயகமே நவிலற் கரிய நல்உறவே

என்றே வருவாய் அருள்தருவாய் என்றே புலம்பி ஏங்குற்றேன்

இன்றே காணப் பெறில்எந்தாய் இறவேன் பிறவேன் இருப்பேனே.

188. இருப்பேன் துயர்வாழ் வினில்எனினும் எந்தாய் நினது பதங்காணும்

விருப்பேன் அயன்மால் முதலோரை வேண்டேன் அருள வேண்டாயோ

திருப்பேர் ஒளியே அருட்கடலே தெள்ளார் அமுதே திருத்தணிகைப்

பொருப்பே மகிழ்ந்த புண்ணியமே புனித ஞான போதகமே.

189. போதா நத் அருட்கனியே புகலற் கரிய பொருளேஎன்

நாதா தணிகை மலைஅரசே நல்லோர் புகழும் நாயகனே

ஓதா தவமே வருந்துயரால் உழன்றே பிணியில் உலைகின்றேன்

ஏதாம் உனதின் அருள்ஈயா திருந்தால் அந்தோ எளியேற்கே.

190. எளியேன் நினது திருவருளுக் கெதிர்நோக் குற்றே இரங்குகின்ற

களியேன் எனைநீ கைவிட்டால் கருணைக் கியல்போ கற்பகமே
அளியே தணிகை அருட்சுடரே அடியர் உறவே அருள்ஞானத்
துளியே அமையும் எனக்கெந்தாய் வாஎன் றொருசொல் சொல்லாயே.

திருச்சிற்றம்பலம்

12. பொறுக்காப் பத்து

எழுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

191. மெய்யர்உள் ளகத்தின் விளங்கும்நின் பதமாம்
விரைமலர்த் துணைதமை விரும்பாப்
பொய்யர் தம் இடத்திவ் வடியனேன் புகுதல்
பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்
ஐயரும் இடப்பால் அம்மையும் வருந்தி
அளித்திடும் தெள்ளிய அமுதே
தையலர் மயக்கற் றவர்க்கருள் பொருளே
தணிகைவாழ் சரவண பவனே.

192. நன்மைய எல்லாம் அளித்திடும் உனது
நளினமா மலர்அடி வழுத்தாப்
புன்மையர் இடத்திவ் வடியனேன் புகுதல்
பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்
சின்மயப் பொருள்நின் தொண்டர்பால் நாயேன்
சேர்ந்திடத் திருவருள் புரியாய்

தன்மயக் கற்றோர்க் கருள்தரும் பொருளே
தணிகைவாழ் சரவண பவனே.

193. மருள்இலா தவர்கள் வழுத்தும்நின் அடியை
மனமுற நினைந்தகத் தன்பாம்
பொருள்இலா தவர்பால் ஏழையேன் புகுதல்
பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்
அன்பர்பால் இருந்திட அருளாய்
தரளவான் மழைபெய் திடும்திருப் பொழில்சூழ்
தணிகைவாழ் சரவண பவனே.

194. நிலைஅருள் நினது மலர்அடிக் கன்பு
நிகழ்ந்திட நாள்தொறும் நினையாப்
புலையர்தம் இடம்இப் புன்மையேன் புகுதல்
பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்
மலைஅர சளித்த மரகதக் கொம்பர்
வருந்திஈன் றெடுத்தமா மணியே
தலைஅர சளிக்க இந்திரன் புகழும்
தணிகைவாழ் சரவண பவனே.

195. வல்இருள் பவம்தீர் மருந்தெனும் நினது
மலர்அடி மனம்உற வழுத்தாப்
புல்லர்தம் இடம்இப் பொய்யனேன் புகுதல்
பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்

ஒல்லையின் எனைமீட் டுன்அடி யவர்பால்
உற்றுவாழ்ந் திடச்செயின் உய்வேன்
சல்லமற் றவர்கட் கருள்தரும் பொருளே
தணிகைவாழ் சரவண பவனே.

196. கற்பிலார் எனினும் நினைந்திடில் அருள்நின்
கருணைஅம் கழல்அடிக் கன்பாம்
பொற்பிலா தவர்பால் ஏழையேன் புகுதல்
பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்
அற்பிலேன்7 எனினும் என்பிழை பொறுத்துன்
அடியர்பால் சேத்திடில் உய்வேன்
தற்பரா பரமே சற்குண மலையே
தணிகைவாழ் சரவண பவனே.

197. பத்திகொண் டவருள் பரவிய ஒளியாம்
பரஞ்சுடர் நின்அடி பணியும்
புத்திகொள் ளலர்பால் எளியனேன் புகுதல்
பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்
நித்திய அடியர் தம்முடன் கூட்ட
நினைந்திடில் உய்குவன் அரசே
சத்திசெங் கரத்தில் தரித்திடும் அமுதே
தணிகைவாழ் சரவண பவனே.

198. நீற்றணி விளங்கும் அவர்க்கருள் புரியும்

நின்அடிக் கமலங்கள் நினைந்தே

போற்றிடா தவர்பால் பெய்யனேன் புகுதல்

பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்

ஆற்றல்கொள் நின்பொன் அடியருக் கடியன்

ஆச்செயில் உய்குவன் அமுதே

சாற்றிடும் பெருமைக் களவிலா தோங்கும்

தணிகைவாழ் சரவண பவனே.

199. பரிந்திடும் மனத்தோர்க் கருள்செயும் நினது

பாததா மரைகளுக் கன்பு

புரிந்திடா தவர்பால் எளியனேன் புகுதல்

பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்

தெரிந்திடும் அன்பர் இடம்உறில் உய்வேன்

திருவுளம் அறிகிலன் தேனே

சரிந்திடும் கருத்தோர்க் கரியநற் புகழ்கொள்

தணிகைவாழ் சரவண பவனே.

200. எண்உறும் அவர்கட் கருளும்நின் அடியை

ஏத்திடா தழிதரும் செல்வப்

புண்உறும் அவர்பால் எளியனேன் புகுதல்

பொறுக்கிலன் பொறுக்கிலன் கண்டாய்

கண்உறு மணியாம் நின்அடி யவர்பால்

கலந்திடில் உய்குவன் கரும்பே

தண்உறும் கருணைத் தனிப்பெருங் கடலே

தணிகைவாழ் சரவண பவனே.

திருச்சிற்றம்பலம்

## 13. வேட்கை விண்ணப்பம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

281. மன்னே என்றன் உயிர்க்குயிரே மணியே தணிகை மலைமருந்தே

அன்னே என்னை ஆட்கொண்ட அரசே தணிகை ஐயாவே

பொன்னே ஞானப் பொங்கொளியே புனித அருளே பூரணமே

என்னே எளியேன் துயர்உழத்தல் எண்ணி இரங்கா திருப்பதுவே.

282. இரங்கா நின்றிங் கலைதரும்இவ் வெளியேன் கனவின் இடத்தேனும்

அரங்கா அரவின் நடித்தோனும் அயனும் காண்டற் கரிதாய

உரங்கா முறும்மா மயில்மேல்நின் உருவம் தரிசித் துவப்படையும்

வரங்கா தலித்தேன் தணிகைமலை வாழ்வே இன்று வருவாயோ.

283. வருவாய் என்று நாள்தோறும் வழிபார்த் திரங்கி மனந்தளர்ந்தேன்

கருவாய் பவன்என் றெனைத்தள்ளக் கருதுவாயே அன்றிஅருள்

உருவாய் வந்து தருவாயே தணிகா சலத்துள் உற்றமர்ந்த

ஒருவர் உன்றன் திருவுளத்தை உணரேன் என்செய் துய்கேனே.

204. உய்யும் பொருட்டுன் திருப்புகழை உரையேன் அந்தோ உரைக்கடங்காப்

பொய்யும் களவும் அழுக்காறும் பொருளாக் கொண்டேன் புலையேனை

எய்யும் பழிவந் தடர்ந்தியமன் இழுத்துப் பறிக்கில் என்னேயான்

செய்யும் வகைஒன் றறியேனே தென்பால் தணிகைச் செஞ்சுடரே.

205. செஞ்சொல் சுவையே மெய்ஞ்ஞானச் செல்வப் பெருக்கே தெள்ளமுதே

விஞ்சைப் புலவர் புகழ்தணிகை விளக்கே துளக்கில் வேலோனே

வெஞ்சொல் புகலும் வஞ்சகர்பால் மேவி நின்தாள் மலர்மறந்தே

பஞ்சில் தமியேன் படும்பாட்டைப் பார்த்தும் அருட்கண் பார்த்திலையே.

206. பார்க்கின் றிலையே பன்னிருகண் படைத்ததும் எளியேன் பாடனைத்தும்

தீர்க்கின் றிலையே என்னேயான் செய்வேன் சிறியேன் சீமானே
போர்க்குன் றொடுசூர் புயக்குன்றும் பொடிசெய் வேற்கைப் புண்ணியனே

சீர்க்குன் றெனும்நல் வளத்தணிகைத் தேவே மயில்ஊர் சேவகனே.

207. சேவற் கொடிகொள் குணக்குன்றே சிந்தா மணியே யாவர்கட்கும்

காவற் பதியே தணிகைவளர் கரும்பே கனியே கற்பகமே

மூவாக் கிறையே வேய்ஈன்ற முத்தன் அளித்த முத்தேநல்

தேவர்க் கருள்நின் சேவடிக்கே விழைந்தேன் யாதும்தெரியனே.

208. தெரியேன் உனது திருப்புகழைத் தேவே உன்றன் சேவடிக்கே

பரியேன் பணியேன் கூத்தாடேன் பாடேன் புகழைப் பரவசமாய்த்

தரியேன் தணிகை தனைக்காணேன் சாகேன் நோகேன் கும்பிக்கே

உரியேன் அந்தோ எதுகொண்டிங் குய்கேன் யாதுசெய்கேனே.

209. செய்வ துனது திருவடிக்காம் திறனே சிந்தை நின்பாலே

வைவ துனைகனை நினையாத வஞ்ச கரையே வழுத்திநிதம்

உய்வ தனது திருநாமம் ஒன்றைப் பிடித்தே மற்றொன்றால்

எய்வ தறியேன் திருத்தணிகை எந்தாய் எந்தாய் எளியேனே.

210. எளியேன் நினது சேவடியாம் இன்ப நறவை எண்ணிஎண்ணி

அளியேன் நெஞ்சம் சற்றேனும் அன்பொன் றில்லேன் அதுசிறிதும்

ஒளியேன் எந்தாய் என்உள்ளத் தொளித்தே எவையும் உணர்கின்றாய்

வளியே முதலாய் நின்றருளும் மணியே தணிகை வாழ்மன்னே.

## 14. ஆறெழுத் துண்மை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

211. பெருமை நிதியே மால்விடைகொள் பெம்மான் வருந்திப் பெறும்பேறே

அருமை மணியே தணிகைமலை அமுதே உன்றன் ஆறெழுத்தை

ஒருமை மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

இருமை வளனும் எய்தும்இடர் என்ப தொன்றும் எய்தாதே.

212. எய்தற் கரிய அருட்சுடரே எல்லாம் வல்ல இறையோனே

செய்தற் கரிய வளத்தணிகைத் தேவே உன்றன் ஆறெழுத்தை

உய்தற் பொருட்டிங் குச்சரித்தே உயர்ந்த திருவெண் ணீறிட்டால்

வைதற் கில்லாப் புகழ்ச்சிவரும் வன்கண் ஒன்றும் வாராதே.

213. வாரா இருந்த அடியவர்தம் மனத்தில் ஒளிரும் மாமணியே

ஆரா அமுதே தணிகைமலை அரசே உன்றன் ஆறெழுத்தை

ஓரா மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

ஏரார் செல்வப் பெருக்கிகவா இடும்பை ஒன்றும் இகந்திடுமே.

214. இகவா அடியர் மனத்தூறும் இன்பச் சுவையே எம்மானே

அகவா மயில்ஊர் திருத்தணிகை அரசே உன்றன் ஆறெழுத்தை

உகவா மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

சுகவாழ் வின்பம் அதுதுன்னும் துன்பம் ஒன்றும் துன்னாதே.

215. துன்னும் மறையின் முடிவில்ஒளிர் தூய விளக்கே சுகப்பெருக்கே

அன்னை அனையாய் தணிகைமலை அண்ணா உன்றென் ஆறெழுத்தை

உன்னி மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

சென்னி அணியாய் அடிசேரும் தீமை ஒன்றும் சேராதே.

216. சேரும் முக்கண் கனிகனிந்த தேனே ஞானச் செழுமணியே

யாரும் புகழும் தணிகைஎம தன்பே உன்றன் ஆறெழுத்தை

ஓரும் மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

பாரும் விசும்பும் பதஞ்சாரும் பழங்கண் ஒன்றும் சாராதே.

217. சார்ந்த அடியார்க் கருள்அளிக்கும் தருமக் கடலே தற்பரமே

வார்ந்த பொழில்சூழ் திருத்தணிகை மணியே உன்றன் ஆறெழுத்தை

ஓர்ந்து மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

ஆர்ந்த ஞானம் உறும்அழியா அலக்கண் ஒன்றும் அழிந்திடுமே.

218. அழியாப் பொருளே என்உயிரே அயில்செங் கரங்கொள் ஐயாவே

கழியாப் புகழ்சேர் தணிகைஅமர் கந்தா உன்றன் ஆறெழுத்தை

ஒழியா மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

பழியா இன்பம் அதுபதியும் பனிமை ஒன்றும் பதியாதே.

219. பதியே எங்கும் நிறைந்தருளும் பரம சுகமே பரஞ்சுடரே

கதியே அளிக்கும் தணிகைஅமர் கடம்பா உன்றன் ஆறெழுத்தை

உதியோர் மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

துதிஏர் நினது பதந்தோஎன்றும் துன்பம் ஒன்றும் தோன்றாதே.

220. தோன்ற ஞானச் சின்மயமே தூய சுகமே சுயஞ்சுடரே

ஆன்றார் புகழும் தணிகைமலை அரசே உன்றன் ஆறெழுத்தை

ஊன்றா மனத்தின் உச்சரித்திங் குயர்ந்த திருவெண் ணீறிட்டால்

ஈன்றான் நிகரும் அருள்அடையும் இடுக்கண் ஒன்றும் அடையாதே.

திருச்சிற்றம்பலம்

15. போக் குரையீடு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

221. கற்கி லேன்உன தருட்பெயர் ஆம்குக கந்தஎன் பவைநாளும்

நிற்கி லேன்உன தாகம நெறிதனில் நீசனேன் உய்வேனோ

சொற்கி லேசமில் அடியவர் அன்பினுள் தோய்தரு பசுந்தேனே

அற்கி லேர்தரும் தணிகைஆர் அமுதமே ஆனந்த அருட்குன்றே.

222. பாவ வாழ்க்கையில் பாவியேன் செய்திடும் பண்பிலாப் பிழைநோக்கித்

தேவ ரீர்மன திரக்கமுற் றேஅருள் செய்திடா திருப்பீரேல்

காவ லாகிய கடும்பிணித் துயரம்இக் கடையனேன் தனக்கின்னும்

யாவ தாகுமோ என்செய்கோ என்செய்கோ இயலும்வேல் கரத்தீரே.

223. சேவி யாதஎன் பிழைகளை என்னுறே சிறிதறி தரும்போதோ

பாவி யேன்மனம் பகீலென வெதும்பியுள் பதைத்திடக் காண்கின்றேன்

ஆவி யேஅருள் அமுதமே நின்திரு வருள்தனக் கென்னாமோ

பூவில் நாயகன் போற்றிடும் தணிகையம் பொருப்பமர்ந் திடுவாழ்வே.

224. துன்பி னால்அகம் வெதும்பிநைந் தயர்ந்துநின் துணைஅடி மலர்ஏத்தும்

அன்பி லாதஇப் பாவியேன் செய்பிழை அனைத்தையும் பொறுப்பாயேல்

வன்பி லாதநின் அடியவர் தம்திரு மனத்தினுக் கென்னாமோ

இன்பி னால்சுரர் போற்றிடும் தணிகைவாழ் இறைவனே எம்மானே.

225. என்செய் கேன்இனும் திருவருள் காண்கிலேன் எடுக்கும் துயர்உண்டேன்

கன்செய் பேன்மனக் கடையனேன் என்னினும் காப்பதுன் கடன்அன்றோ

பொன்செய் குன்றமே பூரண ஞானமே புராதனப் பொருள்வைப்பே

மன்செய் மாணிக்க விளக்கமே தணிகைவாழ் வள்ளலே மயிலோனே.

226. மண்ணில் நண்ணிய வஞ்சகர் பால்கொடு வயிற்றினால் அலைப்பட்டேன்

கண்ணில் நண்ணரும் காட்சியே நின்திருக் கடைக்கண்ணோக் கருள்நோக்கி

எண்ணி எண்ணிநெஞ் சழிந்துகண் ணீர்கொளும் ஏழையேன் தனக்கின்னும்

புண்ணில் நண்ணிய வேல்எனத் துயர்உறில் புலையன்என் செய்கேனே.

227. மலங்கி வஞ்சகர் மாட்டிரந் தையகோ வருந்திநெஞ் சயர்வுற்றே

கலங்கி நின்திருக் கருணையை விழையும்என் கண்அருள் செய்யாயோ

இலங்கி எங்கணும் நிறைந்தருள் இன்பமே எந்தையே எந்தாயே

நலங்கி ளர்ந்திடும் தணிகையம் பதியமர் நாயக மணிக்குன்றே.

228. சைவ நாயக சம்பந்தன் ஆகிய தமிழ்அருட் குன்றேஎன்

தெய்வ மேநினை அன்றிலூர் துணையிலேன் திருவருள் அறியாதோ

வைவ தேகொளும் வஞ்சகர் தம்இடை வருந்திநெஞ் சழிகின்றேன்

செய்வ தோர்கிலேன் கைவிடில் என்செய்கேன் தெளிவிலாச்
சிறியேனே.

229. வாழ்வில் ஆம்சிறு களிப்பினால் உன்றனை மறந்திறு
மாக்கின்றேன்

தாழ்வி லேசிறி தெண்ணிநொந் தயர்வன்என் தன்மைநன்
றருள்ஆளா

கேழ்வி மேவிய அடியவர் மகிழ்வுறக் கிடைத்தருள் பெருவாழ்வே

வேழ்வி8 ஓங்கிய தணிகைமா மலைதனில் விளங்கிவீற்
றிருப்போனே.

8. கேழ்வி வேழ்வி என்பன எதுகை நோக்கித் திரித்தவாறு.
தொ.வே.

230. என்றும் மாதர்மேல் இச்சைவைத் துன்றனை எண்ணுவேன்
துயருற்றால்

கன்று நெஞ்சகக் கள்வனேன் அன்பினைக் கருத்திடை
எணில்சால

நன்று நன்றெனக் கெவ்வணம் பொன்அருள் நல்குவை
அறிகில்லேன்

துன்று மாதவர் போற்றிடும் தணிகைவாழ் சோதியே சுகவாழ்வே.

16. பணித்திறம் வேட்டல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

231. நண்ணேனோ மகிழ்வினொடும் திருத்தணிகை மலைஅதனை நண்ணி என்றன்

கண்ணேநீ அமர்ந்தஎழில் கண்குளிரக் காணேனோ கண்டு வாரி

உண்ணேனோ ஆனந்தக் கண்ணீர்கொண் டாடிஉனக் குகப்பாத் தொண்டு

பண்ணேனோ நின்புகழைப் பாடேனோ வாயாரப் பாவி யேனே.

232. பாவியேன் படுந்துயருக் கிரங்கிஅருள் தணிகையில்என் பால்வா என்று

கூவிநீ ஆட்கொளஓர் கனவேனும் காணேனோ குணப்பொற் குன்றே

ஆவியே அறிவேஎன் அன்பேஎன் அரசேநின் அடியைச் சற்றும்

சேவியேன் எனினும்எனைக் கைவிடேல் அன்பர்பழி செப்பு வாரே.

233. வாரேனோ திருத்தணிகை வழிநோக்கி வந்தென்கண் மணியே நின்று

பாரேனோ நின்அழகைப் பார்த்துலக வாழ்க்கைதனில் படும்இச் சோபம்

தீரேனோ நின்அடியைச் சேவித்தா னந்தவெள்ளம் திளைத்தா டேனோ

சாரேனோ நின்அடியர் சமுகம்அதைச் சார்ந்தவர்தாள் தலைக்கொள் ளேனோ.

234. கொள்ளேனோ நீஅமர்ந்த தணிகைமலைக் குறஎண்ணம் கோவே வந்தே

அள்ளேனோ நின்அருளை அள்ளிஉண்டே ஆனந்தத் தழுந்தி ஆடித்

துள்ளேனோ நின்தாளைத் துதியேனோ துதித்துலகத் தொடர்பை எல்லாம்

தள்ளேனோ நின்அடிக்கீழ்ச் சாரேனோ துணைஇல்லாத் தனிய னேனே.

235. தனியேஇங் குழல்கின்ற பாவியேன் திருத்தணிகா சலம்வாழ் ஞானக்

கனியேநின் வேடியைக் கண்ஆரக் கண்டுமனம் களிப்பு றேனோ

துனியேசெய் வாழ்வில்அலைந் தென்எண்ணம் முடியாது சுழல்வேன் ஆகில்

இனிஏது செய்வேன்மற் றொருதுணையும் காணேன்இவ் வேழை யேனே.

236. இவ்வேளை அருள்தணிகை அமர்ந்தருளும் தேவைஎன திருகண் ஆய

செவ்வேளை மனங்களிப்பச் சென்றுபுகழ்ந் தானந்தத் தெளிதேன்உண்டே

எவ்வேளை யும்பரவி ஏத்தேனோ அவன்எணிகள் இயற்றி டேனோ

தெவ்வேளை அடர்க்கவகை தெரியாமல் உழல்தருமிச் சிறிய னேனே.

237. சிறியேன்இப் போதெகித் திருத்தணிகை மலைஅமர்ந்த தேவின் பாதம்

குறியேனோ ஆனந்தக் கூத்தாடி அன்பர்கள்தம் குழாத்துள் சென்றே

அறியேனோ பொருள்நிலையை அறிந்தெனதென் பதைவிடுத்திவ் வகில மாயை

முறியேனோ உடல்புளகம் முடேனோ நன்னெறியை முன்னி
இன்றே.

238. முன்னேனோ திருத்தணிகை அடைந்திடநின் சந்நிதியின்
முன்னே நின்று

மன்னேனோ அடியருடன் வாழேனோ நின்அடியை வாழ்த்தி
டேனோ

உன்னேனோ நன்னிலையை உலகத்தோர் எல்லீரும் உங்கே
வாரும்

என்னேனோ நின்பெயரை யார்கூறி னாலும் அவர்க் கிதங்கூ
றேனோ.

239. கூறேனோ திருத்தணிகைக் குற்றுன்அடிப் புகழதனைக் கூறி
நெஞ்சம்

தேறேனோ நின்அடியர் திருச்சமுகம் சேரேனோ தீராத் துன்பம்

ஆறேனோ நின்அடியன் ஆகேனோ பவக்கடல்விட் டகன்றே
அப்பால்

ஏறேனோ அருட்கடலில் இழியேனோ ஒழியாத இன்பம் ஆர்ந்தே.

240. தேடேனோ என்நாதன் எங்குற்றான் எனஓடித் தேடிச்
சென்றே

நாடேனோ தணிகைதனில் நாயகனே நின்அழகை நாடி நாடிக்

கூடேனோ அடியருடன் கோவேஎம் குகனேஎம் குருவே என்று

பாடேனோ ஆனந்தப் பரவசம்உற் றுன்கமலப் பதம்நண்
ணேனோ.

திருச்சிற்றம்பலம்

17. நெஞ்சொடு புலத்தல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

241. வாவா என்ன அருள்தணிகை வருந்தை என்கண் மாமணியைப்

பூவாய் நறவை மறந்தவநாள் போக்கின் றதுவும் போதாமல்

மூவா முதலின் அருட்கேலா மூட நினைவும் இன்றெண்ணி

ஆவா நெஞ்சே எனைக்கெடுத்தாய் அந்தோ நீதான் ஆவாயோ.

242. வாயாத் துரிசற் றிடும்புலவோர் வழுத்தும் தணிகை மலைஅமுதைக்

காயாக் கனியை மறந்தவநாள் கழிக்கின் றதுவும் போதாமல்

ஈயாக் கொடியர் தமக்கின்றி ஏலா நினைவும் இன்றெண்ணி

மாயா என்றன் வாழ்வழித்தாய் மனமே நீதான் வாழ்வாயோ.

243. வாழும் படிநல் அருள்புரியும் மருவுந் தணிகை மலைத்தேனைச்

சூழும் கலப மயில்அரசைத் துதியாப் பவமும் போதாமல்

வீழும் கொடியர் தமக்கன்றி மேவா நினைவும் மேவிஇன்று

தாழும் படிஎன் தனைஅலைத்தாய் சவலை மனம்நீ சாகாயோ.

244. காயோம் எனநின் றவர்க்கினிய கனியாம் தணிகைக் கற்பகத்தைப்

போய்ஓர் கணமும் போற்றுகிலாய் புன்மை புரிந்தாய் புலங்கெட்டாய்

பேயோ எங்கும் திரிந்தோடிப் பேணா என்பைப் பேணுகின்ற

நாயோ மனமே நீஉனைநான் நம்பி வாளா நலிந்தேனே.

245. தேனும் கடமும் திகழ்தணிகைத் தேவை நினையாய் தீநரகம்

மானும் நடையில் உழல்கின்றாய் மனமே உன்றன் வஞ்சகத்தால்

நானும் இழந்தேன் பெருவாழ்வை நாய்போல் அலைந்திங் கவமே9நீ

தானும் இழந்தாய் என்னேஉன் தன்மை இழிவாம் தன்மையதே.

9. நலித்திங்கவமே. தொ.வே.முதற்பதிப்பு, ச.மு.க.பதிப்பு

246. தன்னால் உலகை நடத்தும்அருட் சாமி தணிகை சாராமல்

பொன்னால் மண்ணால் பூவையரால் புலம்பி வருந்தும் புல்நெஞ்சே

உன்னால் என்றன் உயர்விழந்தேன் உற்றார் இழந்தேன் உன்செயலைச்

சொன்னால் நகைப்பர் எனைவிட்டுந் தொலையாய் இங்கு நிலையாயே.

247. நிலைக்கும் தணிகை என்அரசை நீயும் நினையாய் நினைப்பதையும்

கலைக்கும் தொழில்கொண் டெனைக்கலக்கம் கண்டாய் பலன்என் கண்டாயே

முலைக்கும் கலைக்கும் விழைந்தவமே முயங்கும் முட முழுநெஞ்சே

அலைக்கும் கொடிய விடம்நீஎன் றறிந்தேன் முன்னர் அறிந்திலனே.

248. இலதை நினைப்பாய் பித்தர்கள்போல் ஏங்கா நிற்பாய் தணிகையில்என்

குலதெய் வமுமாய்க் கோவாய்சற் குருவாய் நின்ற குகன்அருளே

நலதென் றறியாய் யான்செய்த நன்றி மறந்தாய் நாணாதென்

வலதை அழித்தாய் வலதொடுநீ வாழ்வாய் கொல்லோ வல்நெஞ்சே.

249. நெஞ்சே உகந்த துணைஎனக்கு நீஎன் றறிந்தே நேசித்தோன்

மஞ்சேர் தணிகை மலைஅமுதை வாரிக் கொளும்போ தென்னுள்ளே

நஞ்சே கலந்தாய் உன்உறவு நன்றே இனிஉன் நட்பகன்றால்

உய்ஞ்சேன் இலையேல் வன்னரகத் துள்ளேன் கொள்ளேன் ஒன்றையுமே.

250. கொள்ளும் பொழில்சூழ் தணிகைமலைக் கோவை நினையா தெனைநரகில்

தள்ளும் படிக்கோ தலைப்பட்டாய் கசத்தின் மடவார் தம்மயலாம்

கள்ளுண் டந்தோ வெறிகொண்டாய் கலைத்தாய் என்னைக் கடந்தோர்கள்

எள்ளும் படிவத் தலைக்கின்றாய் எனக்கென் றெங்கே இருந்தாயோ.

251. இருந்தாய் இங்கு கண்டவிடத் தேகா நின்றாய் அவ்விடத்தும்

பொருந்தாய் மீண்டும் புகுவாய்பின் போவாய் வருவாய் புகழ்த்தணிகை

மருந்தாய் நின்ற குகன்அடியை வழுத்தாய் எனையும் வலிக்கின்றாய்

திருந்தாய் நெஞ்சே நின்செயலைச் செப்ப எனக்குத் திடுக்கிடுமே.

திருச்சிற்றம்பலம்

## 18. புன்மை நினைந் திரங்கல்

கட்டளைக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

252. மஞ்சட் பூச்சின் மினுக்கில்இ ளைஞர்கள்

மயங்க வேசெயும் வாள்விழி மாதர்பால்

கெஞ்சிக் கொஞ்சி நிறைஅழிந் துன்அருட்

கிச்சை நீத்துக் கிடந்தனன் ஆயினேன்

மஞ்சுற் றோங்கும் பொழில்தணி காசல

வள்ளல் என்வினை மாற்றுதல் நீதியே

தஞ்சத் தால்வந் தடைந்திடும் அன்பர்கள்

தம்மைக் காக்கும் தனிஅருட் குன்றமே.

253. முலையைக் காட்டி மயக்கிஎன் ஆருயிர்

முற்றும் வாங்குறும் முண்டைகள் நன்மதி

குலையக் காட்டும் கலவிக்கி சைந்துநின்

கோலங் காணக் குறிப்பிலன் ஆயினேன்

நிலையைக் காட்டும்நல் ஆனந்த வெள்ளமே

நேச நெஞ்சகம் நின்றொளிர் தீபமே

கலையைக் காட்டும் மதிதவழ் நற்றணி

காச லத்தமர்ந் தோங்கதி காரனே.

254. வஞ்ச மேகுழ கொண்டு விளங்கிய

மங்கை யர்க்கு மயல்உழந் தேஅவர்

நஞ்சம் மேவு நயனத்தில் சிக்கிய

நாயி னேன்உனை நாடுவ தென்றுகாண்

கஞ்சம் மேவும் அயன்புகழ் சோதியே

கடப்ப மாமலர்க் கந்தசு கந்தனே

தஞ்ச மேஎன வந்தவர் தம்மைஆள்

தணிகை மாமலைச் சற்குரு நாதனே.

255. பாவம் ஓர்உரு வாகிய பாவையர்

பன்னு கண்வலைப் பட்டும யங்கியே

கோவை வாய்இதழ்க் கிச்சைய தாகிநின்

குரைக ழற்கன்பு கொண்டில‌ன் ஆயினேன்

மேவு வார்வினை நீக்கிஅ ளித்திடும்

வேல னேதணி காசல மேலனே

தேவர் தேடரும் சீர்அருட் செல்வனே

தெய்வ யானை திருமண வாளனே.

256. கரத்தைக் காட்டியே கண்களை நீட்டியே

கடைய னேன்உயிர் வாட்டிய கன்னியர்

உரத்தைக் காட்டி மயக்கம யங்கினேன்

உன்றன் பாத உபயத்தைப் போற்றிலேன்

புரத்தைக் காட்டு நகையின்எ ரித்தோர்

புண்ணி யற்குப் புகல்குரு நாதனே

வரத்தைக் காட்டும் மலைத்தணி கேசனே

வஞ்ச னேற்கருள் வாழ்வுகி டைக்குமோ.

257. காசம் மேகம் கடும்பிணி சூலைமோ

காதி யால்தந்து கண்கலக் கம்செயும்

மோச மேநிசம் என்றுபெண் பேய்களை

முன்னி னேன்நினை முன்னிலன் ஆயினேன்

பாசம் நீக்கிடும் அன்பர்கள் போல்எனைப்

பாது காக்கும் பரம்உனக் கையனே

தேசம் யாவும் புகழ்தணி காசலச்

செல்வ மேஅருட் சிற்சுக வாரியே.

258. ஐயம் ஏற்றுத் திரிபவர் ஆயினும்

ஆசை ஆம்பொருள் ஈந்திட வல்லரேல்

குய்யம் காட்டும்ம டந்தையர் வாய்ப்பட்டுன்

கோல மாமலர்ப் பாதம்கு றித்திலேன்

மைஉ லாம்பொழில் சூழும்த ணிகைவாழ்

வள்ள லேவள்ளி நாயக னேபுவிச்

சைய றும்பர ஞானிகள் போற்றிடும்

சாமி யேஎனைக் காப்பதுன் தன்மையே.

259. கண்ணைக் காட்டி இருமுலை காட்டியோ

கத்தைக் காட்டி அகத்தைக்கொண் டேஅழி

மண்ணைக் காட்டிடும் மாய வனிதைமார்

மாலைப் போக்கிநின் காலைப் பணிவனோ

பண்ணைக் காட்டி உருகும்அ டியர்தம்

பத்திக் காட்டிமுத் திப்பொருள் ஈதென

விண்ணைக் காட்டும் திருத்தணி காசல

வேல னேஉமை யாள்அருள் பாலனே.

260. படியின் மாக்களை வீழ்த்தும் படுகுழி

பாவம் யாவும் பழகுறும் பாழ்ங்குழி

குடிகொள் நாற்றக் குழிசிறு நீர்தரும்

கொடிய ஊற்றுக் குழிபுழுக் கொள்குழி

கடிம லக்குழி ஆகும் கருக்குழிக்

கள்ள மாதரைக் கண்டும யங்கினேன்

ஒடிவில் சீர்த்தணி காசல நின்புகழ்

ஓதி லேன்எனக் குண்டுகொல் உண்மையே.

261. கச்சுக் கட்டி மணங்கட்டிக் காமுகர்

கண்ணைக் கட்டி மனங்கட்டி வஞ்சகம்

வச்சுக் கட்டிய வன்கழற் கட்டியும்

மண்ணின் கட்டியும் மானும்மு லைக்கட்டிக்

கிச்சைக் கட்டிஇ டும்பைஎ னும்சுமை

ஏறக் கட்டிய எற்கருள் வாய்கொலோ

பிச்சைக் கட்டிய பித்தன் புதல்வனே

பெருமை கட்டும் பெருந்தணி கேசனே.

திருச்சிற்றம்பலம்

## 19. திருவடி சூட விழைதல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

262. தேனார் அலங்கல் குழல்மடவார் திறத்தின் மயங்காத் திறல்அடைதற்

கானார் கொடிஎன் பெருமான்தன் அருட்கண் மணியே அற்புதமே

கானார் பொழில்சூழ் திருத்தணிகைக் கரும்பே கருணைப் பெருங்கடலே

வானார் அமுதே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

263. தாழும் கொடிய மடவியர்தம் சழக்கால் உழலாத் தகைஅடைந்தே

ஆழும் பரமா னந்தவெள்ளத் தழுந்திக் களிக்கும் படிவாய்ப்ப

ஊழ்உந் தியசீர் அன்பர்மனத் தொளிரும் சுடரே உயர்தணிகை

வாழும் பொருளே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

264. மின்னுண் மருங்குல் பேதையர்தம் வெளிற்று மயக்குள் மேவாமே

உன்னும் பரம யோகியர்தம் உடனே மருவி உனைப்புகழ்வான்

பின்னும் சடைஎம் பெருமாற்கோர் பேறே தணிகைப் பிறங்கலின்மேல்

மன்னும் சுடரே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

265. ஆறத் துயரம் தருங்கொடியார்க் காளாய் உழன்றிங் கலையாதே

கூறாப் பெருமை நின்அடியார் கூட்டத் துடன்போய்க் குலாவும்வண்ணம்

தேறாப் பொருளாம் சிவத்தொழுகும் தேனே தணிகைத் திருமலைவாழ்

மாறாச் சுகமே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

266. விரதம் அழிக்கும் கொடியார்தம் விழியால் மெலியா துணைப்புகழும்

சரதர் அவையில் சென்றுநின்சீர் தனையே வழுத்தும் தகைஅடைவான்

பரதம் மயில்மேல் செயும்தணிகைப் பரனே வெள்ளிப் பருப்பதம்வாழ்

வரதன் மகனே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே

267. வெயில்மேல் கீடம் எனமடவார் வெய்ய மயற்கண் வீழாமே.

அயில்மேல் கரங்கொள் நினைப்புகழும் அடியார்சவையின் அடையும்வகைக்

குயில்மேல் குலவும் திருத்தணிகைக் குணப்பொற் குன்றே கொள்கலப

மயில்மேல் மணியே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

268. தனமும் கடந்தே நாரியர்மால் தனையும் கடந்தே தவம்அழிக்கும்

சினமும் கடந்தே நினைச்சேர்ந்தோர் தெய்வச் சபையில் சேர்ந்திடவே

வளமும் கடமும் திகழ்தணிகை மலையின் மருந்தே வாக்கினொடு

மனமும் கடந்தோய் நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

269. கல்லாக் கொடிய மடவார்தம் காமக் குழிக்கண் வீழாமே

நல்லார்க் கெல்லாம் நல்லவநின் நாமம் துதிக்கும் நலம்பெறவே

சொல்லாற் புனைந்த மாலையொடும் தொழுது தணிகை தனைத்துதிக்க

வல்லார்க் கருளும் நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

270. கள்ளக் கயற்கண் மடவார்தம் காமத் துழலா துனைநினைக்கும்

உள்ளத் தவர்பால் சேர்ந்துமகிழ்ந் துண்மை உணர்ந்தங் குற்றிடுவான்

அள்ளற் பழனத் திருத்தணிகை அரசே ஞான அமுதளிக்கும்

வள்ளற் பெருமான் நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பாயே.

271. பாகைப் பொருவும் மொழியுடையீர் என்று மடவார்ப் பழிச்சாமல்

ஓகைப் பெறும்நின் திருத்தொண்டர் உடன்சேர்ந் துண்மை யுணர்ந்திடுவான்

தோகைப் பரிமேல் வருந்தெய்வ சூளா மணியே திருத்தணிகை

வாகைப் புயனே நின்திருத்தாள் அடியேன் முடிமேல் வைப்பபாயே.

திருச்சிற்றம்பலம்

## 29. ஆற்றா விரகம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

272. தணிகை மலையைச் சாரேனோ சாமி அழகைப் பாரேனோ

பிணிகை யறையைப் பேரேனோ பேரா அன்பு கூரேனோ

அணிசெய் அருள்நீர் ஆரேனோ ஆறாத் தாகம் தீரேனோ

பணிசெய் தொழும்பில் சேரேனோ பார்மீ திரங்கும் நீரேனே.

273. எளியேன் என்ன இருப்பாரோ ஏழைக் கிரங்கும் விருப்பாரோ

அளியேன் பேர்நெஞ் சிருப்பாரோ அழியாக் காமம் திருப்பாரோ

களியேன் என்ன உருப்பாரோ கருதும் அருட்குக் கருப்பாரோ

தெளியேன் யான்என் செய்கேனே தென்பால் தணிகைப் பொருப்பாரே.

274. செய்கொள் தணிகை நாடேனோ செவ்வேள் புகழைப் பாடேனோ

கைகள் கூப்பி ஆடேனோ கருணைக் கடலில் நீடேனோ

மெய்கொள் புளகம் மூடேனோ மெய்அன் பர்கள்பால் கூடேனோ

பொய்கொள் உலகோ டுடேனோ புவிமீ திருகால் மாடேனே.

275. வந்தென் எதிரில் நில்லாரோ மகிழ ஒருசொல் சொல்லாரோ

முந்தும் மதனை வெல்லாரோ மோகம் தீரப் புல்லாரோ

கந்தன் எனும்பேர் அல்லாரோ கருணை நெஞ்சம் கல்லாரோ

சந்தத் தணிகை இல்லாரோ சகத்தில் எல்லாம் வல்லாரே.

276. நாட்டும் தணிகை நண்ணேனோ நாதன் புகழை எண்ணேனோ

கூட்டும் தொழும்பு பண்ணேனோ குறையா அருள்நீர் உண்ணேனோ

சூட்டும் மயக்கை மண்ணேனோ தொழும்பர் இடத்தை அண்ணேனோ

காட்டும் அவர்த்ளள் கண்ணோனோ கழியா வாழ்க்கைப் புண்ணேனே.

277. காமப் பயலைத் தடுப்பாரோ கடப்ப மலர்த்தார் கொடுப்பாரோ

ஏமத் தனத்தைக் கடுப்பாரோ என்மேல் அன்பை விடுப்பாரோ

மாமற் றொருவீ டடுப்பாரோ மன்ததில் கோபம் தொடுப்பாரோ

தாமத் தாழ்வைக் கெடுப்பாரோ தணிகை தனில்வேல் எடுப்பாரே.

278. காவி மலைக்கண் வதியேனோ கண்ணுள் மணியைத் துதியேனோ

பாவி மயலை மிதியேனோ பரமானந்தத் துதியயேனோ

ஓவில் அருளைப் பதியேனோ உயர்ந்த தொழும்பில் கதியேனோ

தாவில் சுகத்தை மதியேனோ சற்றும் பயனில் ஓதியேனே.

279. வருந்தும் தனிமுன் மன்னாரோ வருத்தம் உனக்கேன் என்னரோ

இருந்தென் இடத்தே துன்னாரோ இணைத்தாள் ஈய உன்னாரோ

பொருந்திங் கயலார் அன்னாரோ பொருள்ஈ தென்று பன்னாரோ

செருந்தி மலரும் திருத்தணிகைத் தேவர் எவர்க்கும் முன்னாரே.

280. தணிகா சலம்போய்த் தழையேனோ சாமி திருத்தாள் விழையேனோ

பணிகா தலித்துப் பிழையேனோ பாடி மனது குழையேனோ

திணிகாண் உலகை அழையேனோ சேர்ந்தவ் வீட்டுள் நுழையேனோ

பிணிகாண் உலகில் பிறந்துழன்றே பேதுற் றலையும் பழையேனே.

281. மன்னும் குவளை ஈயாரோ மதவேள் மதத்தைக் காயாரோ

இன்னும் கோபம் ஓயாரோ என்தாய் தனக்குத் தாயாரோ

துன்னும் இரக்கம் தோயாரோ துகளேன் துயரை ஆயாரோ

பன்னும் வளங்கள் செறிந்தோங்கும் பணைகொள் தணிகைத் தூயாரே.

21. ஏழைமையின் இரங்கல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

282. தேனே உளங்கொள் தெளிவே அகண்ட சிதம்மேவி நின்ற சிவமே

கோனே கனிந்த சிவபோத ஞான குருவே விளங்கு குகனே

தானே தனக்கு நிகராய் விளங்கு தணிகா சலத்தெம் அரசே

நானே ழைஇங்கு மனம்நொந்து நொந்து தலிகின்ற செய்கை நலமோ.

283. தலமேவு தொண்டர் அயன்ஆதி தேவர் நவைஏக நல்கு தணிகா

சலமேவி உன்றன் இருதாள் புகழ்ந்து தரிசிப்ப தென்று புகலாய்

நிலமேவு கின்ற சிவயோகர் உள்ளம் நிகழ்கின்ற ஞான நிறைவே

வலமேவு வேல்கை ஒளிர்சேர் கலாப மயில்ஏறி நின்ற மணியே.

284. மணியே கலாப மலைமேல் அமர்ந்த மதியே நினைச்சொல் மலரால்

அணியேன் நல்அன்பும் அமையேன் மனத்தில் அடியார் அடிக்கண் மகிழ்வாய்ப்

பணியேன் நினைந்து கதையேன் இருந்து பருகேன் உவந்த
படியே

எணியே நினைக்கில் அவமாம்இவ் வேலைழ எதுபற்றி உய்வ
தரசே.

285. உய்வண்ணம் இன்றி உலகா தரத்தில் உழல்கின்ற மாய
மடவார்

பொய்வண்ணம் ஒன்றின் மனமாழ்கி அண்மை புரிதந்து நின்ற
புலையேன்

மெய்வண்ணம் ஒன்று தணிகா சலத்து மிளிர்கின்ற தேவ
விறல்வேல்

கைவண்ண உன்றன் அருள்வண்ணம் ஆன கழல்வண்ணம்
நண்ணல் உளதோ.

286. நண்ணாத வஞ்சர் இடம்நாடி நெஞ்சம் நனிநொந்து நைந்து
நவையாம்

புண்ணாகி நின்ற எளியேனை அஞ்சல் புரியாது நம்பொன்
அடியை

எண்ணாத பாவி இவன்என்று தள்ளின் என்செய்வ துய்வ
தறியேன்

தண்ணார் பொழிற்கண் மதிவந் துலாவு தணிகா சலத்தி றைவனே.

287. இறையேனும் உன்றன் அடிஎண்ணி அங்கிஇழுதென்ன
நெஞ்சம் இளகேன்

மறைஓதும் உன்றன் அருள்பெற்ற தொண்டர் வழிபட்டலங்கல்
அணியேன்

குறையோடும் இங்கு மயல்கொண்டு நின்ற கொடியேனை ஆளல்
உளதோ

நிறையோர் வணங்கு தணிகா சலத்தில் நிலைபெற் றிருக்கும்
அவனே.

288. அவம்நாள் கழிக்க அறிவேன் அலாதுன் அடிபேணி நிற்க
அறியேன்

தவம்நாடும் அன்ப ரோடுசேர வந்து தணிகா சலத்தை அடையேன்

எவன்நான் எனக்கும் அவண்நீ இருக்கும் இடம்ஈயில் உன்றன்
அடியார்

இவன்ஆர் அவன்றன் இயல்பென்ன என்னில் எவன்என்
றுரைப்பை எனையே.

289. எனையான் அறிந்துன் அடிசேர உன்னை இறையேனும்
நெஞ்சி னிதமாய்

நினையேன் அயர்ந்து நிலையற்ற தேகம் நிசம்என் றுழன்று
துயர்வேன்

தனையே நின்அன்பன் எனவோதி லியாவர் தரும்என் றுரைப்பர்
அரசே

வனைஏர் கொளுஞ்செய் தணிகா சலத்து மகிழ்வோ டமர்த்த
அமுதே.

290. முதுவோர் வணங்கு தணிகா சலத்து முதலேஇவ் வேழை
முறியேன்

மதுவால் மயங்கும் அளிபோல் மயங்கி மதியாது நின்ற பிழையால்

விதுவாகி அன்பர் உளம்மேவும் நீகை விடில்ஏழை எங்கு
மெலிவேன்

இதுநீதி அல்ல எனஉன் றனக்கும் எவர்சொல்ல வல்லர் அரசே.

திருச்சிற்றம்பலம்

22.பணித்திறஞ் சாலாப் பாடழிவு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

291. அடுத்திலேன் நின்அடியர் அவைக்குட் சற்றும்

அன்பிலேன் நின்தொழும்பன் ஆகேன் வஞ்சம்

தடுத்திலேன் தணிகைதனில் சென்று நின்னைத்

தரிசனம்செய் தேதுரத் தமிழ்ச்சொல் மாலை

தொடுத்திலேன் அழுதுநின் தருளை வேண்டித்

தொழுதுதொழு தானந்தத் தூய்நீர் ஆடேன்

எடுத்திலேன் நல்லன்எனும் பெயரை அந்தோ

ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

292. திரப்படுவேன் மைல்புரி மாய வாழ்வில்

தியங்குவேன் சிறிதேனும் தெளிபொன் றில்லேன்

மரப்படுவேன் சிதடருடன் திரிவேன் வீணே

மங்கையர்தம் கண்கள்எனும் வலைக்குள் வீழ்வேன்

கரப்பவர்க்கு முற்படுவேன் கருணை இல்லேன்

கண்அனையாய் நின்தணிகை மலையைக் காணேன்

இரப்பவர்க்கோர் அணுவளவும் ஈயேன் பேயேன்

ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

293. செய்திலேன் நின்தொண்டர் அடிக்குற் றேவல்

திருத்தணிகை மலையைவலஞ் செய்து கண்ணீர்ப்

பெய்திலேன் புலன்ஐந்தும் ஒடுக்கி வீதல்

பிறத்தல்எனும் கடல்நீந்தேன் பெண்கள் தம்மை

வைதிலேன் மலர்கொய்யேன் மாலை சூட்டேன்

மணியேநின் திருப்புகழை வழுத்தேன் நின்பால்

எய்திலேன் இவ்வுடல்கொண் டேழை யேன்யான்

ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

294. சீர்கொண்டார் புகழ்தணிகை மலையிற் சேரேன்

சிவபொருமான் பெற்றபெருஞ் செல்வ மேநின்

பேர்கொண்டார் தமைவணங்கி மகிழேன் பித்தேன்

பெற்றதே அமையும்எனப் பிறங்கேன் மாதர்

வார்கொண்டார் முலைமலைவீழ்ந் துருள்வேன் நாளும்

வஞ்சமே செய்திடுவேன் மதிஒன் றில்லேன்

ஏர்கொண்டார் இகழ்ந்திடஇங் கேழை யேன்யான்

ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

295. காமாந்த காரியாய் மாதர் அல்குல்

கடல்வீழ்ந்தேன் மதிதாழ்ந்தேன் கவலை சூழ்ந்தேன்

நாமாந்த கனைஉதைத்த நாதன் ஈன்ற

நாயகமா மணியேநல் நலமே உன்றன்

பூமாந்தண் சேவடியைப் போற்றேன் ஓங்கும்

பொழில்கொள்தணி காசலத்தைப் புகழ்ந்து பாடேன்

ஏமாந்த பாவியேன் அந்தோ அந்தோ

ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

296. நன்றறியேன் தீங்கனைத்தும் பறியேன் பொல்லா
நங்கையர்தம் கண்மாய நவையைச் சற்றும்
வென்றறியேன் கொன்றறிவார் தம்மைக் கூடும்
வேடனேன் திருத்தணிகை வெற்பின் நின்பால்
சென்றறியேன் இலையென்ப தறிவேன் ஒன்றும்
செய்தறியேன் சிவதருமம் செய்வோர் நல்லோர்
என்றறியேன் வெறியேன்இங் கந்தோ அந்தோ
ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

297. அல்லார்க்கும் சூழலார்மேல் ஆசை வைப்பேன்
ஐயாநின் திருத்தாள்மேல் அன்பு வையேன்
செல்லார்க்கும் பொழில்தணிகை எங்கே என்று
தேடிடேன் நின்புகழைச் சிந்தை செய்யேன்
கல்லார்க்கும் கடுமனத்தேன் வன்க ணேன்புன்
கண்ணினேன் உதவாத கையேன் பொய்யேன்
எல்லார்க்கும் பொல்லாத பாவி யேன்யான்
ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

298. அரும்பாய நகைமடவார்க் காளாய் வாயா
அலைக்கின்றேன் அறிவென்ப தறியேன் நின்பால்
திருப்பாத பாதகனேன் திருவொன் றில்லேன்
திருத்தணிகை மலைக்கேகச் சிந்தை செய்யேன்

கரும்பாய வெறுத்துவேம் பருந்தும் பொல்லாக்
காக்கைஒத்தேன் சற்றேனும் கனிதல் இல்லா
இடும்பாய வன்நெஞ்சக் கள்வ னேன்யான்
ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

299. அம்பாதல் நெடுங்கண்ணார்க் கிச்சை கொள்வேன்
அகமலர முகமலர்வோ டருள்செய் உன்றன்
செம்பாத மலர்ஏத்தேன் இலவு காத்தேன்
திருத்தணிகை யேநமது செல்வம் என்றே
நம்பாத கொடியேன்நல் லோரைக் கண்டால்
நாணிலேன் நடுங்கிலேன் நாயிற் பொல்லேன்
ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

300. பண்ணேன்நின் புகழ்சொல்வோர் தமக்குப் பூசை
பாடேன்நின் திருச்சீரைப் பரமன் ஈன்ற
கண்ணேநின் தணிகைதனைக் கண்டு போற்றேன்
கைகுவியேன் மெய்குளிரேன் கண்ணீர் பாயேன்
உண்ணேன்நல் ஆனந்த அமுதை அன்பர்
உடன்ஆகேன் ஏகாந்தத் துறலூர் எண்ணம்
எண்ணேன்வன் துயர்மண்ணேன் மனஞ்செம் புண்ணேன்
ஏன்பிறந்தேன் புவிச்சுமையா இருக்கின் றேனே.

திருச்சிற்றம்பலம்

## 23.பணித்திறஞ் சாலாப் பாடழிவு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

301. வரங்கொள் அடியர் மனமலரில் மகிழ்வுற் றமர்ந்த மாமணியே

திரைங்கொள் தணிகை மலைவாழும் செல்வப் பெருக்கே சிற்பரமே

தரங்கொள் உலக மயல்அகலத் தாழ்ந்துன் உருக அழுதழுது

கரங்கொள் சிரத்தோ டியாஉன்னைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

302. வல்லி ஒருபால் வானவர்தம் மகளாண் டொருபால் வரமயில்மேல்

எல்லின் இலங்கு நெட்டிலைவேல் ஏந்தி வரும்என் இறையவனே

சொல்லி அடங்காத் துயர்இயற்றும் துகள்சேர் சனனப் பெருவேரைக்

கல்லி எறிந்து நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே

303. உருத்துள் இகலும் சூர்முதலை ஒழித்து வானத் தொண்பதியைத்

திருத்தும் அரைசே தென்தணிகைத் தெய்வ மணியே சிவஞானம்

அருத்தும் நினது திருவருள்கொண் டாடிப் பாடி அன்பதனால்

கருத்துள் உருகி நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

304. போதல் இருத்தல் எனநினையாய்ப புனிதர் சனனப் போரோடு

சாதல் அகற்றும் திருத்தணிகைச் சைவக் கனியே தற்பரமே

ஓதல் அறியா வஞ்சகர்பால் உழன்றே மாதர்க் குள்ளுருகும்

காதல் அகற்றி நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

305. வீட்டைப் பெறுவோர் உள்அகத்து விளங்கும் விளக்கே விண்ணோர்தம்

நாட்டை நலஞ்செய் திருத்தணிகை நகத்தில் அமர்ந்த நாயகமே

கேட்டைத் தருவஞ் சகஉலகில் கிடைத்த மாய வாழ்க்கைஎனும்

காட்டைக் கடந்து நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

306. மட்டித் தளறு படக்கடலை மலைக்கும் கொடிய மாஉருவைச்

சட்டித் தருளும் தணிகையில்எந் தாயே தமரே சற்குருவே

எட்டிக் கனியாம் இவ்வுலகத் திடர்விட் டகல நின்பதத்தைக்

கட்டித் தழுவிநின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

307. இலக்கம் அறியா இருவினையால் இம்மா னிடம்ஒன் றெடுத்தடியேன்

விலக்கம் அடையா வஞ்சகர்பால் வீணாட் போக்கி மேவிமனத்

தலக்கண் இயற்றும் பொய்வாழ்வில் அலைந்தேன் தணிகை அரசேஅக்

கலக்கம் அகன்று நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

308. விரைவாய் கடப்பந் தார்அணிந்து விளங்கும் புயனே வேலோனே

தரைவாய் தவத்தால் தணிகைஅமர் தருமக் கடலே தனிஅடியேன்

திரைவாய் சனனக் கடற்படிந்தே தியங்கி அலைந்தேன் சிவஞானக்

கரைவாய் ஏறி நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

309. பள்ள உலகப் படுகுழியில் பரிந்திங் குழலா தானந்த

வெள்ளத் தழுந்தும் அன்பர்விழி விருந்தே தணிகை வெற்பரசே

உள்ளம் அகல அங்கும்இங்கும் ஓடி அலையும் வஞ்சநெஞ்சக்

கள்ளம் அகற்றி நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

310. அடலை அணிந்தோர் புறங்காட்டில் ஆடும் பெருமான் அளித்தருளும்

விடலை எனமு வரும்புகழும் வேலோய் தணிகை மேலோயே

நடலை உலக நடைஅளவற்றை நண்ணா தோங்கும் ஆனந்தக்

கடலை அடுத்து நின்உருவைக் கண்கள் ஆரக் கண்டிலனே.

திருச்சிற்றம்பலம்

24.பணித்திறஞ் சாலாமை

கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

311. வஞ்சகப் பேதையர் மயக்கில் ஆழ்ந்துழல்

நெஞ்சகப் பாவியேன் நினைந்தி லேன்ஐயோ

வெஞ்சகப் போரினை விட்டு ளோர்புகழ்

தஞ்சகத் தணிகைவாழ் தரும வானையே.

312. வான்நிகர் கூந்தலார் வன்க ணால்மிக

மால்நிகழ் பேதையேன் மதித்தி லேனையோ

தான்இரும் புகழ்கொளும் தணிகை மேல்அருள்

தேன்இருந் தொழுகிய செங்க ரும்பையே.

313. கருங்கடு நிகர்நெடுங் கண்ணி னார்மயல்

ஒருங்குறு மனத்தினேன் உன்னி லேன்ஐயோ
தரும்புகழ் மிகுந்திடுந் தணிகை மாமலை
மருங்கமர்ந் தனப்ருள் மன்னும் வாழ்வையே.

314. வைவளர் வாட்கணார் மயக்கில் வீழ்ந்தறாப்
பொய்வளர் நெஞ்சினேன் போற்றி லேன்ஐயோ
மெய்வளர் அன்பர்கள் மேவி ஏத்துறும்
செய்வளர் தணிகையில் செழிக்கும் தேனையே.

315. செழிப்படும் மங்கையர் தீய மாயையில்
பழிப்படும் நெஞ்சினேன் பரவி லேன்ஐயோ
வழிப்படும் அன்பர்கள் வறுமை நீக்கியே
பொழிற்படும் தணிகையில் பொதிந்த பொன்னையே.

316. பொதித்தரும் மங்கையர் புளகக் கொங்கைமேல்
வதிதரும் நெஞ்சினேன் மதித்தி லேன்ஐயோ
மதிதரும் அன்பர்தம் மனத்தில் எண்ணிய
கதிதரும் தணிகைவாழ் கற்ப கத்தையே.

திருச்சிற்றம்பலம்

## 25. குறை நேர்ந்த பத்து

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

317. வான்பிறந்தார் புகழ்தணிகை மலையைக் கண்டு
வள்ளலே நின்புகழை மகிழ்ந்து கூறேன்

தேன்பிறந்த மலர்க்குழலார்க் காளா வாளா
திரிகின்றேன் புரிகின்றேன் தீமை நாளும்
ஊன்பிறந்த உடல்லூம்பி அவமே வாழ்நாள்
ஒழிக்கின்றேன் பழிக்காளாய் உற்றேன் அந்தோ
ஏன்பிறந்தேன் ஏன்பிறந்தேன் பாவி யேன்யான்
என்குறையை எவர்க்கெடுத்திங் கியம்பு கேனே.

318. மெய்யாவோ நற்றணிகை மலையைச் சார்ந்து
மேன்மையுறும் நின்புகழை விரும்பி ஏத்தேன்
உய்யாவோ வல்நெறியேன் பயன்ப டாத
ஓதிஅனையேன் எட்டிதனை ஒத்தேன் அன்பர்
பொய்யாலூ டெனமடவார் போகம் வேட்டேன்
புலையனேன் சற்றேனும் புனிதம் இல்லேன்
ஐயாவோ நாணாமல் பாவி யேன்யான்
யார்க்கெடுத்தென் குறைதன்னை அறைகு வேனே.

319. வாட்செல்லா நெடுங்கண்ணார் மயலில் வீழ்ந்து
மனம்போன வழிசென்று வருந்தா நின்றேன்
சேட்செல்லார் வரைத்தணிகைத் தேவ தேவே
சிவபொருமான் பெற்றபெருஞ் செல்வ மேதான்
நாட்செல்லா நின்றதினி என்செய் கேனோ
நாயினேன் பிழைதன்னை நாடி நின்பால்
கோட்சொல்லா நிற்பர்எனில் என்னா மோஎன்

குறையைஎடுத் தெவர்க்கெளியேன் கூறு கேனே.

320. பொல்லாத மங்கையர்தம் மயற்குள் ஆகும்

புலையமனத் தால்வாடிப் புலம்பு கின்றேன்

கல்லாத பாவிஎன்று கைவிட் டாயோ

கருணைஉரு வாகியசெங் கரும்மே மேரு

வில்லான்தன் செல்வமே தணிகை மேவும்

மெய்ஞ்ஞான ஒளியேஇவ் வினையேன் துன்பம்

எல்லாம்நீ அறிவாயே அறிந்தும் வாரா

திருந்தால்என் குறையைஎவர்க் கியம்பு கேனே.

321. முன்அறியேன் பின்அறியேன் மாதர் பால்என்

முடமனம் இழுத்தோடப் பின்சென் றெய்த்தேன்

புன்னெறியேன் பொய்யரொடும் பயின்றேன் நின்றன்

புனிதஅருட் கடலாடேன் புளகம் மூடேன்

பொன்அரையன் தொழும்சடிலப் புனிதன் ஈன்ற

புண்ணியமே தணிகைவளர் போத வாழ்வே

என்அரைசே என்அமுதே நின்பால் அன்றி

எவர்க்கெடுத்தென் குறைதன்னை இயம்பு கேனே.

322. விடுமாட்டில் திரிந்துமட மாத ரார்தம்

வெய்யநீர்க் குழிவீழ்ந்து மீளா நெஞ்சத்

தடுமாற்றத் தொடும்புலைய உடலை ஓம்பிச்

சார்ந்தவர்க்கோர் அணுஅளவும் தான்ஈ யாது

படுகாட்டில் பலன்உதவாப் பனைபோல் நின்றேன்
பாவியேன் உடற்சுமையைப் பலரும் கூடி
இடுகாட்டில் வைக்குங்கால் என்செய் வேனோ
என்குறையை எவர்க்கெடுத்திங் கியம்பு கேனே.

323. மின்னைநேர் இடைமடவார் மயல்செய் கின்ற
வெங்குழியில் வீழ்ந்தழுந்தி வெறுத்தேன் போலப்
பின்னையே எழுந்தெழுந்து மீட்டும் மீட்டும்
பேய்போல வீழ்ந்தாடி மயற்குள் முழ்கிப்
பொன்னையே ஒத்தஉன தருளை வேண்டிப்
போற்றாது வீணேநாள் போக்கு கின்ற
என்னையே யான்சிரிப்பேன் ஆகில் அந்தோ
என்குறையை எவர்க்கெடுத்திங் கியம்பு கேனே.

324. முலைஒருபால் முகம்ஒருபால் காட்டும் பொல்லா
முடமட வார்கள்தமை முயங்கி நின்றேன்
இலைஒருபால் அனம்ஒருபால் மலஞ்சேர்த் துண்ணும்
ஏழைமதி யேன்தணிகை ஏந்த லேபொன்
மலைஒருபால் வாங்கியசெக வண்ண மேனி
வள்ளல்தரு மருந்தேநின் மலர்த்தாள் ஏத்தேன்
புலைஒருவா வஞ்சகநெஞ் சுடையேன் என்றன்
புன்மைதனை எவர்க்கெடுத்துப் புகலு வேனே.

325. வேய்ப்பால்மென் தோள்மடவார் மறைக்கும் மாய

வெம்புழுச்சேர் வெடிப்பினிடை வீழ்ந்து நின்றேன்

தாய்ப்பாலை உண்ணாது நாய்ப்பால் உண்ணும்

தகையனேன் திருத்தணிகை தன்னைச் சார்ந்து

ஆய்ப்பாலை ஒருமருங்கான் ஈன்ற செல்வத்

தாரமுதே நின்அருளை அடையேன் கண்டாய்

ஏய்ப்பாலை நடுங்கருங்கல் போல்நின் றெய்த்தேன்

என்குறையை எவர்க்கெடுத்திங் கியம்பு கேனே.

326. வஞ்சமட மாதரார் போகம் என்னும்

மலத்தினிடைக் கிருமிஎன வாளா வீழ்ந்தேன்

கஞ்சமலர் மனையானும் மாலும் தேடக்

காணாத செங்கனியில் கனிந்த தேனே

தஞ்சம் என்போர்க் கருள்புரியும் வள்ளலேநல்

தணிகைஅரை சேஉனது தாளைப் போற்றேன்

எஞ்சல்இலா வினைச்சேம இடமாய் உற்றேன்

என்குறையை எவர்க்கெடுத்திங் கியம்பு கேனே.

திருச்சிற்றம்பலம்

## 26. முறையிட்ட பத்து

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

327. பொன்னைப் பொருளா நினைப்போர்பால் போந்து மிடியால் இரந்தலுத்தேன்

நின்னைப் பொருள்என் றுணராத நீசன் இனிஓர் நிலைகாணேன்

மின்னைப் பொருவும் சடைப்பவள வெற்பில் விளைந்த வியன்கரும்பே

முன்னைப் பொருளே தணிகையனே முறையோ முறையோ முறையேயோ.

328. மக்கட் பிறவி எடுத்தும்உனை வழுந்தாக் கொடிய மரம்அனையேன்

துக்கக் கடலில் வீழ்ந்துமனம் சோர்கின் றேன்ஓர் துணைகாணேன்

செங்கர்ப் பொருவு வடிவேற்கைத் தேவே தெவிட்டாத் தெள்ளமுதே

முக்கட் கரும்பின் முழுமுத்தே முறையோ முறையோ ஆறையேயோ.

329. அன்பின் உனது திருஅடிக்கே ஆளாய்த் தொண்டொன் றாற்றாதே

துன்பின் உடையோர் பால்அணுகிச் சோர்ந்தேன் இனிஓர் துணைகாணேன்

என்பில் மலிந்த மாலைபுனை எம்மான் தந்த பெம்மானே

முன்பின் நடுவாய் முளைத்தோனே முறையோ முறையோ முறையேயோ.

330. அருகா மலத்தில் அலைந்திரக்கம் அறியா வஞ்ச நெஞ்சகர்பால்

உருகா வருந்தி உழன்றலைந்தேன் உன்தாள் அன்றித் துணைகாணேன்

பெருகா தரவில் சிவன்பெறும்நற் பேறே தணிகைப் பெருவாழ்வே

முருகா முகம்மு விரண்டுடையாய் முறையோ முறையோ முறையேயோ.

331. பொன்னின் றொளிரும் மார்பன்அயன் போற்றும் உன்தாள் புகழ்மறந்தே

கன்னின் றணங்கும் மனத்தார்பால் கனிந்தேன் இனிஓர் துணைகாணேன்

மின்னின் றிலங்கு சடைக்கனியுள் விளைந்த நறவே மெய்அடியார்

முன்னின் றருளும் தணிகையனே முறையோ முறையோ முறையேயோ.

332. வெதிர்உள் ளவரின் மொழிகேளா வீண ரிடம்போய் மிகமெலிந்தே

அதிரும் கழற்சே வடிமறந்தேன் அந்தோ இனிஓர் துணைகாணேன்

எதிரும் குயில்மேல் தவழ்தணிகை இறையே முக்கண் இயற்கனியின்

முதிரும் சுவையே முதற்பொருளே முறையோ முறையோ முறையேயோ.

333. ஈனத் திவறும் மனக்கொடியோர் இடம்போய் மெலிந்து நாள்தோறும்

ஞானத் திருத்தாள் துணைசிறிதும் நாடேன் இனிஓர் துணைகாணேன்

தானத் தறுகண் மலைஉரியின் சட்டை புனைந்தோன் தரும்பேறே

மோனத் தவர்த்ம் அகவிளக்கே முறையோ முறையோ முறையேயோ.

334. தேவே எனநிற் போற்றாத சிறிய ரிடம்போய்த் தியங்கிஎன்றன்

கோவே நின்றன் திருத்தாளைக் குறிக்க மறந்தேன் துணைகாணேன்

மாவே ழத்தின் உரிபுனைந்த வள்ளற் கினிய மகப்பேறே

மூவே தனையை அறுத்தருள்வோய் முறையோ முறையோ முறையேயோ.

335. வேதா நந்த னொடுபோற்றி மேவப் படும்நின் பதம்மறந்தே

ஈதா னம்தந் திடுவீர்என் றீன ரிடம்போய் இரந்தலைந்தேன்

போதா னந்தப் பரசிவத்தில் போந்த பொருளே பூரணமே.

336. வடியாக் கருணை வாரிதியாம் வள்ளல் உன்தாள் மலர்மறந்தே

கொடியா ரிடம்போய்க்குறையிரந்தேன் கொடியேன் இனிஓர் துணைகாணேன்

அடியார்க் கெளிய முக்கணுடை அம்மான் அளித்த அருமருந்தே

முடியா முதன்மைப் பெரும்பொருளே முறையோ முறையோ முறையேயோ.

திருச்சிற்றம்பலம்

## 27. நெஞ்சவலங் கூறல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

337. இழுதை நெஞ்சினேன் என்செய்வான் பிறந்தேன்

ஏழை மார்முலைக் கேவிழைந் துழன்றேன்

பழுதை பாம்பென மயங்கினன் கொடியேன்

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

அழுது கண்கள்நீர் ஆர்ந்திடும் அடியர்

அகத்துள் ஊறிய ஆனந்த அமுதே

தொழுது மால்புகழ் தணிகைஎன் அரசே

தோன்ற லேபரஞ் சுடர்தரும் ஒளியே.

338. வஞ்ச நெஞ்சினேன் வல்விலங் கனையேன்

மங்கை மார்முலை மலைதனில் உருள்வேன்

பஞ்ச பாதகம் ஓர்உரு எடுத்தேன்

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

கஞ்சன் மால்புகழ் கருணைஅங் கடலே

கண்கள் மூன்றுடைக் கரும்பொளிர் முத்தே

அஞ்சல் அஞ்சல்என் றன்பரைக் காக்கும்

அண்ண லேதணி காசலத் தரசே

339. மையல் நெஞ்சினேன் மதிஇயிலேன் கொடிய

வாட்க ணார்முலை மலைக்குப சரித்தேன்

பைய பாம்பினை நிகர்த்தவெங் கொடிய

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

மெய்யர் உள்ளகம் விளங்கொளி விளக்கே

மேலை யோர்களும் விளம்பரும் பொருளே

செய்ய மேனிஎன் சிவபிரான் அளித்த

செல்வ மேதிருத் தணிகையந் தேவே.

340. மதியில் நெஞ்சினேன் ஓதியினை அனையேன்

மாதர் கண்எனும் வலையிடைப் பட்டேன்

பதியில் ஏழையேன் பழற்றுவஞ் சகனேன்

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

பொதியில் ஆடிய சிவபிரான் அளித்த

புண்ணி யாஅருட் போதக நாதா

துதிஇ ராமனுக் கருள்செயும் தணிகைத்

துஎய னேபசுந் தோகைவா கனனே.

341. துட்ட நெஞ்சினேன் எட்டியை அனையேன்

துயர்செய் மாதர்கள் சூழலுன் தினமும்

பட்ட வஞ்சனேன் என்செய உதித்தேன்

பாவியேன் எந்தப் பரிசுகொண் டடைவேன்

நட்டம் ஆடிய நாயகன் அளித்த

நல்ல மாணிக்க நாயக மணியே

மட்ட றாப்பொழில் சூழ்திருத் தணிகை

வள்ள லேமயில் வாகனத் தேவே

342. காயும் நெஞ்சினேன் பேயினை அனையேன்

கழிகொள் கோதையர் கண்வலைப் பட்டேன்

பாயும் வெம்புலி நிகர்த்தவெஞ் சினத்தேன்

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

தாயும் தந்தையும் சாமியும் எனது

சார்பும் ஆகிய தணிகையங் குகனே

ஆயும் கொன்றைசெஞ் சடைக்கணிந் தாடும்

ஐயர் தந்தருள் ஆனந்தப் பேறே.

343. தீங்கு நெஞ்சினேன் வேங்கையை அனையேன்

தீய மாதர்தம் திறத்துழல் கின்றேன்

பாங்கி லாரொடும் பழகிய வெறியேன்

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

தெங்கு கங்கையைச் செஞ்சடை இருத்தும்

சிவபி ரான்செல்வத் திருஅருட் பேறே

ஓங்கு நல்தணி காசலத் தமர்ந்த

உண்மை யேஎனக் குற்றிடும் துணையே.

344. கள்ள நெஞ்சினேன் நஞ்சினை அனையேன்

கடிய மாதர்தங் கருக்குழி எனும்ஓர்

பள்ளம் ஆழ்ந்திடு புலையனேன் கொலையேன்

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

வெள்ள வார்சடை வித்தகப் பெருமான்

வேண்ட நற்பொருள் விரித்துரைத் தோனே

புள்அ லம்புதண் வாவிசூழ் தணிகைப்

பொருப்ப மர்ந்திடும் புனிதபூ ரணனே.

345. மத்த நெஞ்சினேன் பித்தரில் திரிவேன்

மாதர் கண்களின் மயங்கிநின் றலைந்தேன்

பத்தி என்பதோர் அணுவும்உற் றில்லேன்

பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்

பித்த நாயகன் அருள்திருப் பேறே
பிரமன் மாலுக்கும் பேசரும் பொருளே
தத்தை பாடுறும் பொழிற்செறி தணிகா
சலத்தின் மேவிய தற்பர ஒளியே.

346. அழுக்கு நெஞ்சினேன் பொய்யல தறியேன்
அணங்க னார்மயல் ஆழத்தில் விழுந்தேன்
பழுக்கும் முடருள் சேர்ந்திடுங் கொடியேன்
பாவி யேன்எந்தப் பரிசுகொண் டடைவேன்
மழுக்கை ஏந்திய மாசிலா மணிக்குள்
மன்னி ஓங்கிய வளர்ஒளிப் பிழம்பே
வழுக்கி லார்புகழ் தணிகைஎன் அரசே
வள்ள லேஎன்னை வாழ்விக்கும் பொருளே.

திருச்சிற்றம்பலம்

## 28. ஆற்றாப் புலம்பல்

கொச்சகக் கவிப்பா

திருச்சிற்றம்பலம்

347. அண்ணாவோ என் அருமை ஐயாவோ பன்னிரண்டு
கண்ணாவோ வேல்பிடித்த கையாவோ செம்பவன
வண்ணாவோ துன்பத் திருங்கடற்குள் மன்னின்னே

348. மன்னப்பார் போற்று மணியேநின் பொன்னருளைத்
துன்னப்பா ராது சுழன்றேன் அருணைகிரி

தன்னப்பா நற்றணிகை தன்னில் அமர்ந்தருளும்
என்னப்பா இன்னும் இந்த ஏழைக் கிரங்காயோ

349. காய்நின்ற நெஞ்சக் கடையேன் திருத்தணிகை
வாய்நின் றுனதுபுகழ் வாய்பாடக் கைகுவித்துத்
தூய்நின்றே நாளைத்தொழுதாடித் துன்பம்எலாம்
போய்நின் நடைவேனோ புண்ணியநின் பொன்னருளே

350. பொன்பிணிக்கும் நெஞ்சப் புலையேனை இவ்வுலகில்
வன்பிணிக்கோ பெற்று வளர்த்தாய் அறியேனே
என்பிணைத்தார் வள்ளற் கினிமை பெறும்மணியே
அன்பிணைத்தோர் போற்றும் அருட்டணிகை மன்னவனே.

351. வன்நோயும் வஞ்சகர்தம் வன்சார்பும் வன்துயரும்
என்னோயுங் கொண்டதனை எண்ணி இடிவேனோ
அன்னோ முறைபோகி ஐயா முறையேயோ
மன்னோ முறைதணிகை வாழ்வே முறையேயோ.

திருச்சிற்றம்பலம்.

## 29. திருவருள் விழைதல்.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

352. தாணு ஈன்றருள் செல்வமே தணிகையில் சாமியே
நினைஏத்திக்

காணு வேன்இலை அருள்இவண் புன்மையில் காலங்கள் கழிக்கின்றேன்

மாணும் அன்பர்கள் என்சொலார் ஐயநீ வந்தெனக் கருள்வாயேல்

நாணு வேன்அலன் நடுங்கலன் ஒடுங்கலன் நாயினும் கடையேனே.

353. கடைப்பட் டேங்கும்இந் நாயினும் கருள்தரக் கடவுள்நீ வருவாயேல்

மடைப்பட் டோ ங்கிய அன்பகத் தொண்டர்கள் வந்துனைத் தடுப்பாரேல்

தடைப்பட் டாய்எனில் என்செய்வேன் என்செய்வேன் தளர்வது தவிரேனே

அடைப்பட் டோ ங்கிய வயல்திருத் தணிகையம் பதிஅமர்ந் திடுதேவே.

354. தேவ ரேமுதல் உலகங்கள் யாவையும் சிருட்டிஆ தியசெய்யும்

மூவ ரேஎதிர் வருகினும் மதித்திடேன் முருகநின் பெயர்சொல்வோர்

யாவ ரேனும்என் குடிமுழு தாண்டெனை அளித்தவர் அவரேகாண்

தாவ நாடொணாத் தணிகையம் பதியில்வாழ் சண்முகப் பெருமானே.

திருச்சிற்றம்பலம்.

30. புண்ணியநீற்று மான்மியம்

லண்ணக் கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

355 திவசங்கள் தொறும்கொண்டிடு தீமைப்பிணி தீரும்

பவசங்கடம் அறும்இவ்விக பரமும்புகழ் பரவும்

கவசங்கள்எ னச்சூழ்ந்துறு கண்ணேறது தவிரும்

சிவசண்முக எனவேஅருள் திருநீறணிந் திடிலே.

356. மால்ஏந்திய சூழலார்தரு மயல்போம்இடர் அயல்போம்

கோல்ஏந்திய அரசாட்சியும் கூடும்புகழ் நீடும்

மேல்ஏந்திய வானாடர்கள் மெலியாவிதம் ஒருசெவ்

வேல்ஏந்திய முருகாஎன வெண்ணீறணித் திடிலே.

357. தவம்உண்மையொ டுறும்வஞ்சகர் தம்சார்வது தவிரும்

நவம்அண்மிய அடியாரிடம் நல்கும்திறன் மல்கும்

பவனன்புனல் கனல்மண்வெளி பலவாகிய பொருளாம்

சிவசண்முக எனவேஅருள் திருநீறணிந் திடிலே.

358. துயில்ஏறிய சோர்வும்கெடும் துயரம்கெடும் நடுவன்

கையில்ஏறிய பாசம்துணி கண்டேமுறித் திடுமால்

குயில்ஏறிய பொழில்சூழ்திருக் குன்றேறி நடக்கும்

மயில்ஏறிய மணியேஎன வளர்நீறணிந் திடிலே.

359. தேறாப்பெரு மனமானது தேறுந்துயர் மாறும்

மாறாப்பிணி மாயும்திரு மருவும்கரு ஒருவும்

வீறாப்பொடு வருசூர்முடி வேறாக்கிட வரும்ஓர்

ஆறாக்கரப் 9 பொருளேஎன அருள்நீறணிந் திடிலே.

360. அமராவதி இறையோடுநல் அயனுந்திரு மாலும்

தமராகுவர் சிவஞானமுந் தழைக்குங்கதி சாரும்

எமராஜனை வெல்லுந்திறல் எய்தும்புகழ் எய்தும்

குமராசிவ குருவேஎனக் குளிர்நீறணிந் திடுலே.

361. மேலாகிய உலகத்தவர் மேவித்தொழும் வண்ணம்

மாலாகிய இருள்நீங்கிநல் வாழ்வைப்பெறு வார்காண்

சீலாசிவ லீலாபர தேவாஉமை யவள்தன்

பாலாகதிர் வேலாஎனப் பதிநீறணிந் திடுலே.

362. அகமாறிய நெறிசார்குவர் அறிவாம்உரு அடைவார்

மிகமாறிய பொறியின்வழி மேவாநல மிகுவார்

சகமாறினும் உயர்வானிலை தாமாறினும் அழியார்

முகமாறுடை முதல்வாஎன முதிர்நீறணிந் திடுலே.

363. சிந்தாமணி நிதிஐந்தரு செழிக்கும்புவே னமும்லூர்

நந்தாஎழில் உருவும்பெரு நலனும்கதி நலனும்

இந்தாஎனத் தருவார்தமை இரந்தார்களுக் கெல்லாம்

கந்தாசிவன் மைந்தாஎனக் கனநீறணிந் திடுலே.

364. எண்ணார்புரம் எரித்தார்அருள் எய்தும்திரு நெடுமால்

நண்ணாததோர் அடிநீழலில் நண்ணும்படி பண்ணும்

பண்ணார்மொழி மலையாள்அருள் பாலாபனி ரண்டு

கண்ணாஎம தண்ணஎனக் கனநீறணிந் திடுலே.

திருச்சிற்றம்பலம்

9. ஆறக்கரம் என்பது ஆறாக்கரம் என நீட்டும் வழி நீட்டல்.தொ.வே.

## 31. உறுதி உணர்த்தல்

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

365. மஞ்சேர் பிணிமடி யாதியை நோக்கி வருந்துறும்என்
நெஞ்சே தணிகையன் ஆறெழுத் துண்டுவெண் ணீறுண்டுநீ
எஞ்சேல் இரவும் பகலும் துதிசெய் திடுதிகண்டாய்
அஞ்சேல் இதுசத் தியம்ஆம்என் சொல்லை அறிந்துகொண்டே.

366. அறியாத நம்பிணி ஆதியை நீக்கும் அருள்மருந்தின்
நெறியாம் தணிகையன் ஆறெழுத் துண்டுவெண் ணீறுண்டுநீ
எறியா திரவும் பகலும் துதிசெய் திடுதிகண்டாய்
குறியா திருக்கலை என்ஆணை என்றன் குணநெஞ்சமே.

367. என்றே பிணிகள் ஒழியும்என் றேதுயர் எய்தியிடேல்
நின்றே தணிகையன் ஆறெழுத் துண்டுவெண் ணீறுண்டுநீ
நன்றேஎக் காலமும் வாழிய நன்னெஞ்சமே.

திருச்சிற்றம்பலம்

## 32. எண்ணத் தேங்கல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

368. போதுகொண் டவனும் மாலும்நின் றேத்தும்
புண்ணிய நின்திரு அடிக்கே
யாதுகொண் டடைகேன் யாதுமேற் செய்கேன்

யாதுநின் திருஉளம் அறியேன்

தீதுகொண் டவன்என் றெனக்கருள் சிறிதும்

செய்திடா திருப்பையோ சிறியோன்

ஏதிவன் செயல்ஒன் றிலைஎனக் கருதி

ஈவையோ துணிகைவாழ் இறையே.

369. வாழ்வனோ நின்பொன் அடிநிழல் கிடைத்தே

வயங்கும்ஆ னந்தவெள் ளத்துள்

ஆழ்வனோ எளியேன் அல்லதிவ் வுலகில்

அறஞ்செயாக் கொடியர்பாற் சென்றே

தாழ்வனோ தாழ்ந்த பணிபுரிந் தவமே

சஞ்சரித் துழன்றுவெங் நரகில்

வீழ்வனோ இஃதென் றறிகிலேன் தணிகை

வெள்பினுள் ஒளிர்அருள் விளக்கே.

திருச்சிற்றம்பலம்

33. கையடை முட்டற் கிரங்கல்

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

370. கார்பூத்த கண்டத் தொடுமேவு முக்கட் கனிகனிந்து

சீர்பூத் தொழுகுசெந் தேனே தணிகையில் தெள்அமுதே

பேர்பூத்த ஒற்றியில் நின்முன்னர் ஏற்றிடப் பேதையனேன்

ஏர்பூத்த ஒண்பளி தம்10 காண் கிலன்அதற் கென்செய்வனே.

371. கருமருந் தாய மணிகண்ட நாகன் கண்மணியாம்

அருமருந் தேதணி காசலம் மேவுன்என் ஆருயிரே

திருமருங் கார்ஒற்றி யூர்மே வியநின் திருமுன்னராய்

ஒருமருங் கேற்றஎன் செய்கேன் கற்பூர ஒளியினுக்கே.

372. பால்எடுத் தேத்தும்நற் பாம்பொடு வேங்கையும் பார்த்திடஓர்

கால்எடுத் தம்பலத் தாடும் பிரான்திருக் கண்மணியே

வேல்எடுத் தோய்தென் தணிகா சலத்தமர் வித்தகநின்

பால்எடுத் தேற்றக் கிடைக்குங் கொலோவெண் பளிதம்எதற்கே.

373. கண்ணப்பன் என்னும் திருப்பெய ரால்உல கம்புகழும்

திண்ணப்பன் ஏத்தும் சிவனார் மகனுக்குத் தெண்டன்இட்ட

விண்ணப்பம் ஒன்றிந்த மேதினி மாயையில் வீழ்வதறுத்

தெண்ணப் படும்நின் திருவருள் ஈகஇவ் வேழையற்கே.

திருச்சிற்றம்பலம்

10. பளிதம் = கர்ப்பூரம்

34. அடியார்பணி அருளவேண்டல்

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

374. எப்பா லவரும் இறைஞ்சும் தணிகை இருந்தருள்என்

அப்பாஎன் பொன்னடிக் கென்நெஞ் சகம்இட மாக்கிமிக்க

வெப்பான நஞ்சன வஞ்சகர் பாற்செலும் வெந்துயர்நீத்

திப்பாரில் நின்அடி யார்க்கேவல் செய்ய எனக்கருளே.

375. எய்யா தருள்தணி காசலம் மேவிய என்அருமை
ஐயா நினது திருவடி ஏத்திஅன் றோஅயனும்
செய்யாள் மருவூம் பூயனுடைத் தேவனும் சேணவனும்
நையாத ஆயூளும் செல்வமும் வண்மையூம் நண்ணினரே.

376. வாளாருங் கண்ணியர் மாயையை நீக்கி மலிகரணக்
கோளாகும் வாதனை நீத்துமெய்ஞ் ஞானக் குறிகொடுநின்
தாளாகும் நீழல் அதுசார்ந்து நிற்கத் தகுந்ததிரு
நாளாகும் நாள்எந்த நாள்அறி யேன்தணி காசலனே.

377. ஊன்பார்க்கும் இவ்வூடற் பொய்மையைத் தேர்தல் ஒழிந்தவமே
மான்பார்க்கும் கண்ணியர் மையலில் வீழும் மயக்கம்அற்றே
தேன்பார்க்கும் சோலைத் தணிகா சலத்துன் திருஅழகை
நான்பார்க்கும் நாள்எந்த நாள்மயில் ஏறிய நாயகனே.

378. என்னே குறைநமக் கேழைநெஞ் சேமயில் ஏறிவரும்
மன்னே எனநெடு மாலும் பிரமனும் வாழ்த்திநிற்கும்
தன்னேர் தணிகைத் தடமலை வாழும்நற் றந்தைஅருள்
பொன்னேர் திருவடிப் போதுகண் டாய்நம் பூகலிடமே.

379. பேதைநெஞ் சேஎன்றன் பின்போந் திடுதிஇப் பேயூலக
வாதைஅஞ் சேல்பொறி வாய்க்கலங் கேல்இறை யூம்மயங்கேல்
போதையெஞ் சேல்தணி காசலம் போய்அப் பொருப்பமர்ந்த
தாதைஅஞ் சேவடிக் கீழ்க்குடி யாகத் தயங்குவமே.

திருச்சிற்றம்பலம்

35. நாள் அவம்படாமை வேண்டல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

380. குன்றமொத் திலங்கு பணைமுலை நெடுங்கண்

கோதையர் பால்விரைந் தோடிச்

சென்றஇப் பூலையேன் மனத்தினை மீட்டுன்

திருவடிக் காக்கும்நாள் உளதோ

என்தனி உயிரே என்னுடைப் பொருளே

என்உளத் திணிதெழும் இன்பே

மன்றலம் பொழில்குழி தணிகையம் பொருப்பில்

வந்தமர்ந் தருள்செயூம் மணியே.

381. மணிக்குழை அடர்ந்து மதர்த்தவேற் கண்ணார்

வஞ்சக மயக்கினில் ஆழ்ந்து

கணிக்கரும் துயர்கொள் மனத்தினை மீட்டுன்

கழலடிக் காக்கநாள் உளதோ

குணிக்கரும் பொருளே குணப்பெருங்குன்றே

குறிகுணங் கடந்ததோர் நெறியே

எணிக்கரும் மாலும் அயனும்நின் றேத்தும்

எந்தையே தணிகைஎம் இறையே.

382. இறைக்குளே உலகம் அடங்கலும் மருட்டும்

இலைநெடு வேற்கணார் அளகச்

சிறைக்குளே வருந்தும் மனத்தினை மீட்டுன்

திருவடிக் காக்குநாள் உளதோ

மறைக்குளே மறைந்தம் மறைக்கரி தாய

வள்ளலே உள்ளகப் பொருளே

மறைக்குளே மடவார்க் கனநடை பயிற்றும்

அணிதிருத் தணிகைவாழ் அரைசே.

383. அரைமதிக் குறழும் ஒண்ணுதல் வாட்கண்

அலர்முலை அணங்கனார் அல்குல்

பூரைமதித் துழலும் மனத்தினை மீட்டுன்

பொள்ளாடிக் காக்குநாள் உளதோ

பரைமதித் திடஞ்சேர் பராபரற் கருமைப்

பாலனே வேலுடை யவனே

விரைமதித் தோங்கும் மலர்ப்பொழில் தணிகை

வெற்பினில் ஒளிரும்மெய் விளக்கே.

384. விளக்குறழ் அணிப்பூண் மேல்அணிந் தோங்கி

விம்முறும் இளமுலை மடவார்

களக்கினில் ஆழ்ந்த மனத்தினை மீட்டுன்

கழல்அடிக் காக்கும்நாள் உளதோ

அளக்கருங் கருணை வாரியே ஞான

அமுதமே ஆனந்தப் பெருக்கே

கிளக்கரும் புகழ்கொள் தணிகையம் பொருப்பில்

கிளர்ந்தருள் புரியும்என் கிளையே.

385. கிளைக்குறும் பிணிக்கோர் உறையுளாம் மடவார்

கீழுறும் அல்குல்என் குழிவீழ்ந்

திளைக்கும்வன் கொடிய மனத்தினை மீட்டுன்

இணைஅடிக் காக்கும்நாள் உளதோ

விளைக்கும்ஆ னந்த வியன்தனி வித்தே

மெய்அடி யவர்உள விருப்பே

திளைக்கும்மா தவத்தோர்க் கருள்செயுந் தணிகைத்

தெய்வமே அருட்செழுந் தேனே.

386. தேன்வழி மலர்ப்பூங் குழல்துடி இடைவேல்

திறல்விழி மாதரார் புணர்ப்பாம்

கான்வழி நடக்கும் மனத்தினை மீட்டுன்

கழல்வழி நடத்தும்நாள் உளதோ

மான்வழி வரும்என் அம்மையை வேண்டி

வண்புனத் தடைந்திட்ட மணியே

வான்வழி அடைக்கும் சிகரிசூழ் தணிகை

மாமலை அமர்ந்தருள் மருந்தே

387. மருந்தென மயக்கும் குதலைஅந் தீஞ்சொல்

வாணுதல் மங்கையர் இடத்தில்

பொருந்தென வலிக்கும் மனத்தினை மீட்டுன்

பொன்னடிக் காக்கும்நாள் உளதோ

அருந்திட தருந்த அடியருள் ஓங்கும்

ஆனந்தத் தேறலே அமுதே

இருந்தரு முனிவர் புகழ்செயும் தணிகை

இனிதமர்ந் தருளிய இன்பமே.

388. இன்பமற் றுறுகண் வினைவழி நிலமாம்

ஏந்திழை யவர்புழுக் குழியில்

துன்பமுற் றுழலும் மனத்தினை மீட்டுன்

துணையடிக் காக்கும்நாள் உளதோ

அன்பர்முற் றுணர அருள்செயும் தேவே

அரிஅயன் பணிபெரி யவனே

வன்பதை அகற்றி மன்பதைக் கருள்வான்

மகிழ்ந்துறும் தணிகையின் வாழ்வே.

389. வாழும்இவ் வுலக வாழ்க்கையை மிகவும்

வலித்திடும் மங்கையர் தம்பால்

தாழும்என் கொடிய மனத்தினை மீட்டுன்

தாள்மலர்க் காக்கும்நாள் உளதோ

சூழும்நெஞ் சிருளைப் போழும்மெய் ஒளியே

தோற்றம்ஈ றற்றசிற் சுகமே

ஊழும்உற் பவம்ஓர் ஏழும்விட் டகல

உதவுசீர் அருட்பெருங் குன்றே.

திருச்சிற்றம்பலம்

## 36. அன்பிற் பேதுறல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

390. முடர்கள் தமக்குள் முற்படுங் கொடிய

முறியனேன் தனக்குநின் அடியாம்

ஏடவிழ் கமலத் திருநற வருந்த

என்றுகொல் அருள்புரிந் திடுவாய்

ஆடர வணிந்தே அம்பலத் தாடும்

ஐயருக் கொருதவப் பேறே

கோடணி தருக்கள் குலவும்நற் றணிகைக்

குற்றமர்ந் திடுகுணக் குன்றே

391. கற்றவர் புகழ்நின் திருவடி மலரைக்

கடையனேன் முடிமிசை அமர்த்தி

உற்றஇவ் வுலக மயக்கற மெய்மை

உணர்த்தும்நாள் எந்தநாள் அறியேன்

நற்றவர் உணரும் பரசிவத் தெழுந்த

நல்அருட் சோதியே நவைதீர்

கொற்றவேல் உகந்த குமரனே தணிகைக்

குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

392. ஞாலவாழ் வெனும்புன் மலமிசைந் துழலும்

நாயினும் கடையஇந் நாய்க்குன்

சீலவாழ் வளிக்கும் திருவடிக் கமலத்

தேன்தரு நாளும்ஒன் றுண்டோ

ஆலவாய் உகந்த ஒருசிவ தருவில்

அருள்பழுத் தளிந்தசெங் கனியே

கோலவா னவர்கள் புகழ்திருத் தணிகைக்

குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

393. பவம்எனுங் கடற்குள் வீழ்ந்துழன் றேங்கும்

பாவியேன் தன்முகம் பார்த்திங்

கெவையும்நா டாமல் என்னடி நிழற்கீழ்

இருந்திடென் றுரைப்பதெந் நாளோ

சிவம்எனும் தருமக் கடல்அகத் தெழுந்த

தெள்ளிய அமுதமே தேனே

குவிமுலை வல்லிக் கொடியொடுந் தணிகைக்

குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

394. முலைமுகங் காட்டி மயக்கிடும் கொடியார்

முன்புழன் றேங்கும்இவ் எளியேன்

நிலைமுகங் காட்டும் நின்திருப் பாத

நீழல்வத் தடையும்நாள் என்றோ

மலைமுகம் குழைய வளைத்திடும் தெய்வ

மணிமகிழ் கண்ணினுள் மணியே

கொலைமுகம் செல்லார்க் கருள்தருந் தணிகைக்
குன்றமர்ந் திடுகுணக் குன்றே,

395. வருபயன் அறியா துழன்றிடும் ஏழை
மதியினேன் உய்ந்திடும் வண்ணம்
ஒருவரும் நினது திருவடிப் புகழை
உன்னும்நாள் எந்தநாள் அறியேன்
அருவுரு ஆகும் சிவபிரான் அளித்த
அரும்பெறல் செல்வமே அமுதே
குருவுரு ஆகி அருள்தரும் தணிகைக்
குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

396. அழிதரும் உலக வாழ்வினை மெய்யென்
றலைந்திடும் பாவியேன் இயற்றும்
பழிதரும் பிழையை எண்ணுறேல் இன்று
பாதுகாத் தளிப்பதுன் பரமே
மொழிதரும் முக்கட் செங்கரும் பீன்ற
முத்தமே முக்தியின் முதலே
கொழிதரும் அருவி பொழிதருந் தணிகைக்
குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

397. நின்நிலை அறியா வஞ்சகர் இடத்தில்
நின்றுநின் றலைதரும் எளியேன்
தன்நிலை அறிந்தும் ஐயகோ இன்னும்

தயைஇலா திருந்தனை என்னே

பொன்நிலைப் பொதுவில் நடஞ்செயும் பவளப்

பொருப்பினுள் மலர்ந்திடும் பூவே

கொல்நிலை வேங்கைக் கொளும்திருத் தணிகைக்

குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

398. பாடிநின் திருச்சீர் புகழ்ந்திடாக் கொடிய

பதகர்பால் நாள்தொறும் சென்றே

வாடிநின் றேங்கும் ஏழையேன் நெஞ்ச

வாட்டம்இங் கறிந்திலை என்னே

ஆடிநீ றாடி அருள்செயும் பரமன்

அகம்மகிழ் அரும்பெறல் மருந்தே

கோடிலங் குயர்வான் அணிதிருத் தணிகைக்

குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

399. வன்பொடு செருக்கும் வஞ்சர்பால் அலையா

வண்ணம்இன் றருள்செயாய் என்னில்

துன்பொடு மெலிவேன் நின்திரு மலர்ந்தாள்

துணைஅன்றித் துணைஒன்றும் காணேன்

அன்பொடும் பரமன் உமைகையில் கொடுக்க

அகமகிழ்ந் தணைக்கும்ஆர் அமுதே

கொன்பெறும் இலைவேல் கரத்தொடும் தணிகைக்

குன்றமர்ந் திடுகுணக் குன்றே.

திருச்சிற்றம்பலம்

37. கூடல் விழைதல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

400. சகம்ஆ றுடையார் அடையா நெறியார்

சடையார் விடையார் தனிஆனார்

உகமா ருடையார் உமைஓர் புடையார்

உதவும் உரிமைத் திருமகனார்

முகம்ஆ றுடையார் முகம்மா றுடையார்

எனவே எனது முன்வந்தார்

அகமா ருடையேன் பதியா தென்றேன்

அலைவாய் என்றார் அஃதென்னே.

401. விதுவாழ் சடையார் விடைமேல் வருவார்

விதிமால் அறியா விமலனார்

மதுவாழ் குழலாள் புடைவாழ் உடையார்

மகனார் குகனார் மயில்ஊர்வார்

முதுவாழ் வடையா தவமே அலைவேன்

முன்வந்த திடயான் அறியாதே

புதுவாழ் வுடையார் எனவே மதிபோய்

நின்றேன் அந்தோ பொல்லேனே.

402. காயோ டுடனாய் கனல்கை ஏந்திக்

காடே இடமாக் கணங்கொண்ட
பேயோ டாடிப் பலிதேர் தரும்லூர்
பித்தப் பெருமான் திருமகனார்
தாயோ டுறழும் தணிகா சலனார்
தகைசேர் மயிலார் தனிவேலார்
வேயோ டுறழ்தோள் பாவையர் முன்என்
வெள்வளை கொண்டார் வினவாமே.

403. பொன்னார் புயனார் புகழும் புகழார்
புலியின் அதளார் புயம்நாலார்
தென்னார் சடையார் கொடிமேல் விடையார்
சிவனார் அருமைத் திருமகனார்
என்நா யகனார் என்னுயிர் போல்வார்
எழின்மா மயிலார் இடையோர்கள்
தந்நா யகனார் தணிகா சலனார்
தனிவந் திவண்மால் தந்தாரே.

404. கல்லால் அடியார் கல்லடி உண்டார்
கண்டார் உலகங் களைவேதம்
செல்லா நெறியார் செல்லுறும் முடியார்
சிவனார் அருமைத் திருமகனார்
எல்லாம் உடையார் தணிகா சலனார்
என்னா யகனார் இயல்வேலார்

நல்லார் இடைன் வெள்வளை கொடுபின்

நண்ணார் மயில்மேல் நடந்தாரே.

405. காரூர் சடையார் கனலார் மழுவார்

கலவார் புரமுன் றெரிசெய்தார்

ஆரூர் உடையார் பலிதேர்ந் திடும்எம்

அரனார் அருமைத் திருமகனார்

போரூர் உறைவார் தணிகா சலனார்

புதியார் எனஎன் முனம்வந்தார்

ஏரூர் எமதுஎ ரினில்வா என்றார்

எளியேன் ஏமாந் திருந்தேனே.

406. கண்ணார் நுதலார் விடமார் களனார்

கரமார் மழுவார் களைகண்ணார்

பெண்ணார் புயனார் அயன்மாற் கரியார்

பெரியார் கைலைப் பெருமானார்

தணிகா சலனார் தணிவேலார்

எண்ணார் எளியாள் இவள்என் றெனையான்

என்செய் கேனோ இடர்கொண்டே.

407. மழுவார் தருகைப் பெருமான் மகனார்

மயில்வா கனனார் அயில்வேலார்

தழுவார் வினையைத் தணியார் அணியார்

தணிகா சலனார் தம்பாதம்

தொழுவார் அழுவார் விழுவார் எழுவார்

துதியா நிற்பார் அவர்நிற்கப்

புழுவார் உடலோம் பிடும்என் முனர்வந்

தருள்தந் தருளிப் போனாரே.

408. திருத்தம் பயின்றார் கடல்நஞ் சயின்றார்

நினைவார் தங்கள் நெறிக்கேற்க

அருத்தம் பகர்வார் அருமைப் புதல்வர்

அறுமா முகனார் அயில்வேலார்

திருத்தம் பெறுவார் புகழும் தணிகைத்

திருமா மலையார் ஒருமாதின்

வருத்தம் பாரார் வளையும் தாரார்

வாரார் அவர்தம் மனம்என்னே.

409. பிரமன் தலையில் பலிகொண் டெருதில்

பெயரும் பிச்சைப் பெருமானார்

திரமன் றினிலே நடனம் புரிவார்

சிவனார் மகனார் திறல்வேலார்

தரமன் றலைவான் பொழில்சார் எழில்சேர்

தணிகா சலனார் தமியேன்முன்

வரமன் றவும்மால் கொளநின் றன்னால்

மடவார் அலரால் மனநொந்தே.

திருச்சிற்றம்பலம்

## 38. தரிசனை வேட்கை

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

410. வேல்கொளும் கமலக் கையனை எனையாள்
மெய்யனை ஐயனை உலக
மால்கொளும் மனத்தர் அறிவரும் மருந்தை
மாணிக்க மணியினை மயில்மேல்
கால்கொளும் குகனை எந்தையை எனது
கருத்தனை அயன்அரி அறியாச்
சால்கொளும் கடவுள் தனிஅருள் மகனைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

411. கண்ணனை அயனை விண்ணவர் கோனைக்
காக்கவைத் திட்டவேற் கரனைப்
பண்ணனை அடியர் பாடலுக் கருளும்
பதியினை மதிகொள்தண் அருளாம்
வண்ணனை எல்லா வண்ணமும் உடைய
வரதன்ஈன் றெடுத்தருள் மகனைத்
தண்ணனை எனது கண்ணனை அவனைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

412. என்னுடை உயிரை யான்பெறும் பேற்றை
என்னுடைப் பொருளினை எளியேன்

மன்னுடைக் குருவின் வடிவினை என்கண்
மணியினை அணியினை வரத்தை
மின்னுடைப் பவள வெற்பினில் உதித்த
மிளிர்அருள் தருவினை அடியேன்
தன்னுடைத் தேவைத் தந்தையைத் தாயைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

413. பரங்கிரி அமருங் கற்பகத் தருவைப்
பராபரஞ் சுடரினை எளியேற்
கிரங்கிவந் தருளும் ஏரகத் திறையை
எண்ணுதற் கரியபேர் இன்பை
உரங்கினர் வானோர்க் கொருதனி முதலை
ஒப்பிலா தோங்கிய ஒன்றைத்
தாங்கினார் அருண கிரிக்கருள் பவனைத்
தணியையில் கண்டிறைஞ் சுவனே.

414. அரும்பெறல் மணியை அமுதினை அன்பர்
அன்பினுக் கெளிவரும் அரசை
விரும்புமா தவத்தோர் உள்ளகத் தொளிரும்
விளக்கினை அளக்கரும் பொருளைக்
கரும்பினை என்னுட் கனிந்திடும் கனியை
முனிந்திடா தருள்அருட் கடலைத்
தரும்பர சிவத்துள் கிளர்ந்தொளிர் ஒளியைத்

தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

415. மாரனை எரித்தோன் மகிழ்தரு மகனை
வாகையம் புயத்தனை வடிவேல்
தீரனை அழியாச் சீரனை ஞானச்
செல்வனை வல்வினை நெஞ்சச்
சூரனைத் தடிந்த வீரனை அழியாச்
சுகத்தனைத் தேன்துளி கடப்பந்
தாரனைக் குகன்என் பேருடை யவனைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

416. வேதனைச் சிறைக்குள் வேதனை படச்செய்
விமலனை அமலனை அற்பர்
போதனைக் கடங்காப் போதனை ஐந்தாம்
பூதனை மாதவர் புகழும்
பாதனை உமையாள் பாலனை எங்கள்
பரமனை மகிழ்விக்கும் பரனைத்
தரதனை உயிர்க்குள் உயிரனை யவனைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

417. குழகனை அழியாக் குமரனை அட்ட
குணத்தனைக் குறித்திடல் அறிதாம்
அழகனைச் செந்தில் அப்பனை மலைதோ
றாடல்வாழ் அண்ணலைத் தேவர்

கழகனைத் தண்டைக் காலனைப் பிணிக்கோர்
காலனை வேலனை மனதில்
சழகிலார்க் கருளும் சாமிநா தனைத்தென்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

418. முத்தனை முத்திக் கொருதனி வித்தை
முதல்வனை முருகனை முக்கண்
பித்தனை அத்தன் எனக்கொளும் செல்வப்
பிள்ளையைப் பெரியவர் உளஞ்சேர்
சுத்தனைப் பத்தி வலைப்படும் அவனைத்
துரியனைத் துரியமும் கடந்த
சத்தனை நித்த நின்மலச் சுடரைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

419. வள்அயில் கரங்கொள் வள்ளலை இரவில்
வள்ளிநா யகிதனைக் கவர்ந்த
கள்ளனை அடியர் உள்ளகத் தவனைக்
கருத்தனைக் கருதும்ஆ னந்த
வெள்ளம்நின் றாட அருள்குரு பரனை
விருப்புறு பொருப்பனை வினையைத்
தள்ளவந் தருள்செய் திடுந்தயா நிதியைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே.

திருச்சிற்றம்பலம்

## 39. நாள் எண்ணி வருந்தல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

420. இன்னும் எத்தனை நாள்செலும் ஏழையேன் இடர்க்கடல் விடுத்தேற

மின்னும் வேற்படை மிளிர்தரும் கைத்தல வித்தகப் பெருமானே

துன்னும் நற்றணி காசலத் தமர்ந்தருள் தோன்றலே மயில்ஏறி

மன்னும் உத்தம வள்ளலே நின்திரு மனக்கருத் தறியேனே.

421. ஈறி லாதநின் அருள்பெற எனக்கினும் எத்தனை நாட்செல்லும்

மாறி லாதவர் மனத்தொளிர் சோதியே மயில்மிசை வரும்வாழ்வே

தூறி லாவளச் சோலைசூழ் தணிகைவாழ் சுத்தசின் மயத்தேவே

ஊறி லாப்பெரு நிலையஆ னந்தமே ஒப்பிலான் அருட்பேறே.

422. கூழை மாமுகில் அனையவர் முலைத்தலைக் குளித்துழன் றலைகின்ற

ஏழை நெஞ்சினேன் எத்தனை நாள்செல்லும் இடர்க்கடல் விடுத்தேற

மாழை மேனியன் வழுத்துமா ணிக்கமே வாழ்த்துவா ரவர்பொல்லா

ஊழை நீக்கிநல் அருள்தருந் தெய்வமே உத்தமச் சுகவாழ்வே.

423. ஐய இன்னும்நான் எத்தனை நாள்செலும் அல்லல்விட் டருள்மேவத்

துய்ய நன்னெறி மன்னிய அடியர்தம் துயர்தவிர்த் தருள்வோனே

வெய்ய நெஞ்சினர் எட்டொனா மெய்யனே வேல்கொளும் கரத்தோனே

செய்ய மேனிஎஞ் சிவபிரான் பெற்றநற் செல்வனே திறலோனே.

424. பாவி யேன் இன்னும் எத்தனை நாள்செலும் பருவரால் விடுத்துய்யக்

கூவி யேஅன்பர்க் கருள்தரும் வள்ளலே குணப்பெருங் குன்றேஎன்

ஆவி யேஎனை ஆள்குரு வடிவமே ஆனந்தப் பெருவாழ்வே

வாவி ஏர்தரும் தணிகைமா மலைமிசை மன்னிய அருள்தேனே.

425. எளிய னேன்இன்னும் எத்தனை நாள்செலும் இடர்க்கடல் விடுத்தேற

ஒளிஅ னேகமாய்த் திரண்டிடும் சிற்பர உருவமே உருவில்லா

வெளிய தாகிய வத்துவே முத்தியின் மெய்ப்பயன் தருவித்தே

அளிய தாகிய நெஞ்சினார்க் கருள்தரும் ஆறுமா முகத்தேவே.

426. தொண்ட னேன்இன்னும் எத்தனை நாள்செலும் துயர்க்கடல் விடுத்தேற

அண்ட னேஅண்டர்க் கருள்தரும் பரசிவன் அருளிய பொருவாழ்வே

கண்ட னேகர்வந் தனைசெய அசுரனைக் களைந்தருள் களைகண்ணே

விண்ட னேர்புகுஞ் சிகரிசூழ் தணிகையில் விளங்கிய வேலோனே.

427. வீண னேன்இன்னும் எத்தனை நாள்செல்லும் வெந்துயர்க் கடல்நீத்தக்

காண வானவர்க் கரும்பெருந் தலைவனே கருணையங் கண்ணானே

துணை நேர்புயச் சுந்தர வடிவனே துளக்கிலார்க் கருள்ஈயும்

ஏண னேஎனை ஏன்றுகொள் தேசிக இறைவனே இயலோனே.

428. கடைய னேன்இன்னும் எத்தனை நாள்செலும் கடுந்துயர்க் கடல்நீந்த

விடையின் ஏறிய சிவபிரான் பெற்றருள் வியன்திரு மகப்பேறே

உடைய நாயகிக் கொருபெருஞ் செல்வமே உலகமெலாம் அளிப்போனே

அடைய நின்றவர்க் கருள்செயுந் தணிகைவாழ் ஆனந்தத் தெளிதேனே.

429. பேய னேன்இன்னும் எத்தனை நாள்செலும் பெருந்துயர்க் கடல்நீந்த

மாய னேமுதல் வானவர் தமக்கருள் மணிமிடற் றிறையோர்க்குச்

சேய னேஅகந் தெளிந்தவர்க் கினியனே செல்வனே எனைக்காக்குந்

தாய னேஎன்றன் சற்குரு நாதனே தணிகைமா மலையானே.

திருச்சிற்றம்பலம்

## 49. ஏத்தாப் பிறவி இழிவு

எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

430. கல்லை ஒத்தஎன் நெஞ்சினை உருக்கேன்

கடவுள் நின்அடி கண்டிட விழையேன்

அல்லை உத்தகோ தையர்க்குளங் குழைவேன்
அன்பி லாரொடும் அமர்ந்தவம் உழல்வேன்
தில்லை அப்பன்என் றுலகெடுத் தேத்தும்
சிவபி ரான்தருஞ் செல்வநின் தணிகை
எல்லை உற்றுனை ஏத்தின் றாடேன்
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

431. மையல் நெஞ்சினேன் மதிசிறி தில்லேன்
மாத ரார்முலை மலைஇவர்ந் துருள்வேன்
ஐய நின்திரு அடித்துணை மறவா
அன்பர் தங்களை அடுத்துளம் மகிழேன்
உய்ய நின்திருத் தணிகையை அடையேன்
உடைய நாயகன் உதவிய பேறே
எய்ய இவ்வெறும் வாழ்க்கையில் உழல்வேன்
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

432. புலைய மாதர்தம் போகத்தை விழைந்தேன்
புன்மை யாவைக்கும் புகலிடம் ஆனேன்
நிலைய மாம்திருத் தணிகையை அடையேன்
நிருத்தன் ஈன்றருள் நின்மலக் கொழுந்தே
விலையி லாதநின் திருவருள் விழையேன்
வீணர் தங்களை விரும்பிநின் றலைந்தேன்
இலைஎ னாதணு வளவும் ஒன்றீயேன்

என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

433. மருட்டு மங்கையர் புழுக்குழி ஆழ்ந்து
வருந்தி நாள்தொறும் மனம்இளைக் கின்றேன்
தெருட்டும் நின்திருத் தணிகையை அடையேன்
சிவபி ரான்பெற்ற செல்வமே நினது
அருட்டி றத்தினை நினைந்துநெக் குருகி
அழுது கண்கள்நீர் ஆர்ந்திட நில்லேன்
இருட்டு வாழ்க்கையில் இடறிவீழ் கின்றேன்
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

434. நச்சி லேபழ கியகருங் கண்ணால்
நலத்தை வேட்டுநற் புலத்தினை இழந்தேன்
பிச்சி லேமிக மயங்கிய மனத்தேன்
பேதை யேன்கொடும் பேயனேன் பொய்யேன்
சச்சி 11லேசிவன் அளித்திடும் மணியே
தங்கமே உன்றன் தணிகையை விழையேன்
எச்சி லேவிழைந் திடர்உறு கின்றேன்
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

435. மின்னை அன்னநுண் இடைஇள மடவார்
வெய்ய நீர்க்குழி விழுந்திளைத் துழன்றேன்
புன்னை யஞ்சடை முன்னவன் அளித்த
பொன்னை அன்னநின் பூங்கழல் புகழேன்

அன்னை என்னநல் அருள்தரும் தணிகை
அடைந்து நின்றுநெஞ் சகம்மகிழ்ந் தாடேன்
என்னை என்னைஇங் கென்செயல் அந்தோ
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

436. பட்டி மாடெனத் திரிதரும் மடவார்
பாழ்ங்கு ழிக்குள்வீழ்ந் தாழ்ந்திளைக் கின்றேன்
தட்டி லார்புகழ் தணிகையை அடையேன்
சம்பு என்னும்ஓர் தருஒளிர் கனியே
ஒட்டி லேன்நினை உளத்திடை நினையேன்
உதவு றாதுநச் சுமரம் ஆனேன்
எட்டி என்முனம் இனிப்புறும் அந்தோ
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

437. ஓங்கி நீண்டவாள் உறழ்கருங் கண்ணார்
உவர்ப்புக் கேணியில் உழைத்தகம் இளைத்தேன்
வீங்கி நீண்டதோர் ஓதிஎன நின்றேன்
விழலுக் கேஇறைத் தலைந்தனன் வீணே
தாங்கி னேன்உடற் சுமைதனைச் சிவனார்
தனய நின்திருத் தணிகையை அடையேன்
ஏங்கி னேன்சுழற் படுதுரும் பெனவே
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

438. பண்அ ளாவிய மொழியினால் மயக்கும்

படிற்று மங்கையர் பால்விழை வுற்றேன்
தன்அ ளாவிய சோலைசூழ் தணிகைத்
தடத்த ளாவிய தருமநல் தேவே
பெண்அ ளாவிய புடையுடைப் பெருமான்
பெற்ற செல்வமே அற்றவர்க் கமுதே
என்அ ளாவிய வஞ்சக நெஞ்சோ
டென்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

439. கான்அ றாஅள கத்தியர் அளக்கர்
காமத் தாழ்ந்தகங் கலங்குற நின்றேன்
வான மேவுறும் பொழில்திருத் தணிகை
மலையை நாடிநின் மலர்ப்பதம் புகழேன்
ஞான நாயகி ஒருபுடை அமர்ந்த
நம்ப னார்க்கொரு நல்தவப் பேறே
ஈனன் ஆகிஇங் கிடர்ப்படு கின்றேன்
என்செய் வான்பிறந் தேன்எளி யேனே.

திருச்சிற்றம்பலம்

11. வித்து = விச்சு, என்றாற்போல, சத்து = சச்சு எனப் போலியாயிற்று.

தொ.வே.

41. பவனிச் செருக்கு

கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

௪௪௦. பூவுண்டவெள் விடைஏறிய புனிதன் மகனார்

பாவுண்ணதோர் அமுதன்னவர் பசுமாமயில் மேல்வத்

தாவுண்டனர் எனதின்னலம் அறியார்என இருந்தால்

நாவுண்டவர் திருமுன்பிது நலம் அன்றுமக் கெனவே.

௪௪௧. ஒன்றார்புரம் எரிசெய்தவர் ஒற்றித்திரு நகரார்

மன்றார்நடம் உடையார்தரு மகனார்பசு மயில்மேல்

நின்றார்அது கண்டேன்கலை நில்லாது கழன்றே

தென்றாரொடு சொல்வேன்எனை யானேமறந் தேனே.

௪௪௨. வாரார்முலை உமையாள்திரு மணவாளர்தம் மகனார்

ஆராஅமு தனையார்உயிர் அனையார்அயில் அவனார்

நேரார்பணி மயிலின்மிசை நின்றார்அது கண்டேன்

நீரார்விழி இமைநீங்கின நிறைநீங்கிய தன்றே.

௪௪௩. ஒன்றோடிரண் டெனுங்கண்ணினர் உதவுந்திரு மகனார்

என்றோடிகல் எழிலார்மயில் ஏறிஅங் குற்றார்

நன்றோடினன் மகிழ்கூர்ந்தவர் நகைமாமுகங் கண்டேன்

கன்றோடின பசுவாடின கலைஊடின அன்றே.

௪௪௪. மலைவாங்குவில் அரனார்திரு மகனார்பசு மயிலின்

நிலைதாங்குற நின்றார்அவர் நிற்கும்நிலை கண்டேன்

அலைநீங்கின குழல்து ங்கின அகம்ஏங்கின அரைமேல்

கலைநீங்கின முலைவீங்கின களிஓங்கின அன்றே.

445. மான்கண்டகை உடையார்தரு மகனார்தமை மயில்மேல்
நான்கண்டனன் அவர்கண்டனர் நகைகொண்டனம் உடனே
மீன்கண்டன விழியார்அது பழியாக விளைத்தார்
ஏன்கண்டனை என்றாள்அனை என்என்றுரைக் கேனே.

446. செங்கன்விடை தனில்ஏறிய சிவனார்திரு மகனார்
எங்கண்மணி அனையார்மயி லின்மீதுவந் திட்டார்
அங்கண்மிக மகிழ்வோடுசென் றவர்நின்றது கண்டேன்
இங்கண்வளை இழந்தேன்மயல் உழந்தேன்கலை எனவே.

447. தண்தேன்பொழி இதழிப்பொலி சடையார்தரு மகனார்
பண்தேன்புரி தொடையார்தமைப் பசுமாயில் மீதில்
கண்டேன்வளை காணேன்கலை காணேன்மிகு காமம்
கொண்டேன்துயில் விண்டேன்ஒன்றும் கூறேன்வரு மாறே.

448. மாவீழ்ந்திடு விடையார்திரு மகனார்பசு மயில்மேல்
நீவீழ்ந்திட நின்றார்அது கண்டேன்என்றன் நெஞ்சே
பூவிழ்ந்தது வண்டேமதி போய்வீழ்ந்தது வண்டே
நாவீழ்ந்தது மலரேகழை நாண்வீழ்ந்தது மலரே.

449. வெற்றார்புரம் எரித்தார்தரும் மேலார்மயில் மேலே
உற்றார்அவர் எழில்மாமுகத் துள்ளேநகை கண்டேன்
பொற்றார்புயங் கண்டேன்துயர் விண்டேன்எனைப் போல
மற்றார்பெறு வாரோஇனி வாழ்வேன்மனம் மகிழ்ந்தே.

திருச்சிற்றம்பலம்

42. திருவருள் விலாசப் பத்து

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

450. ஆறுமுகப் பெருங்கருணைக் கடலே தெய்வ

யானைமகிழ் மணிக்குன்றே அரசே முக்கட்

பேறுமுகப் பெருஞ்சுடர்க்குட் சுடரே செவ்வேல்

பிடித்தருளும் பெருந்தகையே பிரம ஞானம்

வீறுமுகப் பெருங்குணத்தோர் இதயத் தோங்கும்

விளக்கமே ஆனந்த வெள்ள மேமுன்

தேறுமுகப் பெரியஅருட் குருவாய் என்னைச்

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே.

451. கண்ணணிமதி புனைந்தசடைக் கனியே முக்கட்

கரும்பேஎன் கண்ணேமெய்க் கருணை வாழ்வே

புண்ணியநல் நிலைஉடையோர் உளத்தில் வாய்க்கும்

புத்தமுதே ஆனந்த போக மேஉள்

எண்ணியமெய்த் தவர்க்கெல்லாம் எளிதில் ஈந்த

என்அரசே ஆறுமுகத் திறையாம் வித்தே

திண்ணியஎன் மனம்உருக்கிக் குருவாய் என்னைச்

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவ.

452. நின்னிருநாள் துணைபிடித்தே வாழ்கின் றேன்நான்

நின்னைஅலால் பின்னைஒரு நேயம் காணேன்

என்னைஇனித் திருவுளத்தில் நினைதி யோநான்

ஏழையினும் ஏழைகண்டாய் எந்தாய் எந்தாய்

பொன்னைஅன்றி விரும்பாத புல்லர் தம்மால்

போகல்ஒழிந் துன்பதமே போற்றும் வண்ணம்

சின்னம்அளித் தருட்குருவாய் என்னை முன்னே

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவ.

453. கல்விஎலாம் கற்பித்தாய் நின்பால் நேயம்

காணவைத்தாய் இவ்வுலகம் கானல் என்றே

ஒல்லும்வகை அறிவித்தாய் உள்ளே நின்றென்

உடையானே நின்அருளும் உதவு கின்றாய்

இல்லைஎனப் பிறர்பால்சென் றிரவா வண்ணம்

ஏற்றம்அளித் தாய்இரக்கம் என்னே என்னே

செல்வஅருட் குருவாகி நாயி னேனைச்

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவ.

454. எந்தைபிரான் என்இறைவன் இருக்க இங்கே

என்னகுறை நமக்கென்றே இறுமாப் புற்றே

மந்தஉல கினில்பிறரை ஒருகா சுக்கும்

மதியாமல் நின்அடியே மதிக்கின் றேன்யான்

இந்தஅடி யேனிடத்துன் திருவு ளந்தான்

எவ்வாறோ அறிகிலேன் ஏழை யேனால்

சிந்தைமகிழ்ந் தருட்குருவாய் என்னை முன்னே

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவ.

455. மாறாத பெருஞ்செல்வ யோகர் போற்றும்
மாமணியே ஆறுமுக மணியே நின்சீர்
கூறாத புலைவாய்மை உடையார் தம்மைக்
கூடாத வண்ணம்அருட் குருவாய் வந்து
தேறாத நிலைஎல்லாம் தேற்றி ஓங்கும்
சிவஞானச் சிறப்படைந்து திகைப்பு நீங்கிச்
சீறாத வாழ்விடைநான் வாழ என்னைச்
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே.

456. கற்றறிந்த மெய்உணர்ச்சி உடையோர் உள்ளக்
கமலத்தே ஓங்குபெருங் கடவு ளேநின்
பொற்றகைமா மலரடிச்சீர் வழுத்து கின்ற
புண்ணியர்தங் குழுவில்எனைப் புகுத்தி என்றும்
உற்றவருள் சிந்தனைதந் தின்ப மேவி
உடையாய்உன் அடியவன்என் றோங்கும் வண்ணம்
சிற்றறிவை அகற்றிஅருட் குருவாய் என்னைச்
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே.

457. ஞாலம்எலாம் படைத்தவனைப் படைத்த முக்கண்
நாயகனே வடிவேற்கை நாத னேநான்
கோலம்எலாம் கொயேன்நற் குணம்ஒன் றில்லேன்
குற்றமே விழைந்தேன்இக் கோது ளேனைச்

சாலம்எலாம் செயும்மடவார் மயக்கின் நீக்கிச்

சன்மார்க்கம் அடையஅருள் தருவாய் ஞானச்

சீலம்எலாம் உடையஅருட் குருவாய் வந்து

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே.

458. கற்பனையே எனும்உலகச் சழக்கில் அந்தோ

கால்ஊன்றி மயங்குகின்ற கடையே னேனைச்

சொற்பனம்இவ் வுலகியற்கை என்று நெஞ்சம்

துணவுகொளச் செய்வித்துன் துணைப்பொற் றாளை

அற்பகலும் நினைந்துகனிந் துருகி ஞான

ஆனந்த போகம்உற அருளல் வேண்டும்

சிற்பரசற் குருவாய்வத் தென்னை முன்னே

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே.

459. பன்னிருகண் மலர்மலர்ந்த கடலே ஞானப்

பரஞ்சுடரே ஆறுமுகம் படைத்த கோவே

என்னிருகண் மணியேஎந் தாயே என்னை

ஈன்றானே என்அரசே என்றன் வாழ்வே

மின்னிருவர் புடைவிளங்க மயில்மீ தேறி

விரும்பும்அடி யார்காண மேவுந் தேவே

சென்னியில்நின் அடிமலர்வைத் தென்னை முன்னே

சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே.

திருச்சிற்றம்பலம்

43. திருவருட் பேற்று விழைவு

அறுசீர்க்12 கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

460. உலகம் பரவும் பரஞ்சோதி உருவாம் குருவே உம்பரிடைக்

கலகம் தருசூர்க் கிளைகளைந்த கதிர்வேல் அரசே கவின்தருசீர்த்

திலகம் திகழ்வாள் நுதற்பரையின் செல்வப் புதல்வா திறல்அதனால்

இலகும் கலப மயிற்பரிமேல் ஏறும் பரிசென் இயம்புகவே.

461. புகுவா னவர்தம் இடர்முழுதும் போக்கும் கதிர்வேல் புண்ணியனே

மிகுவான் முதலாம் பூதம்எலம் விதித்தே நடத்தும் விளைவனைத்தும்

தகுவான் பொருளாம் உனதருளே என்றால் அடியேன் தனைஇங்கே

நகுவான் வருவித் திருள்நெறிக்கே நடத்தல் அழகோ நவிலாயே.

462. அழகா அமலா அருளாளா அறிவா அறிவார் அகம்மேவும்

குழகா குமரா எனைஆண்ட கோவே நின்சீர் குறியாரைப்

பழகா வண்ணம் எனக்கருளிப் பரனே நின்னைப் பணிகின்றோர்க்

கழகா தரவாம் பணிபுரிவார் அடியார்க் கடிமை ஆக்குகவே.

463. ஆக்கும் தொழிலால் களித்தானை அடக்குந் தொழிலால் அடக்கிப்பின்

காக்கும் தொழிலால் அருள்புரிந்த கருணைக் கடலே கடைநோக்கால்

நோக்கும் தொழில்லூர் சிறிதுன்பால் உளதேல் மாயாநொடிப்பெல்லாம்

போக்கும் தொழில்என் பால்உண்டாம் இதற்கென் புரிவேன் புண்ணியனே.

464. புரிவேன் விரதம் தவந்தானம் புரியா தொழிவேன் புண்ணியமே

பரிவேன் பாவம் பரிவேன்இப் பரிசால் ஒன்றும் பயன்காணேன்

திரிவேன் நினது புகழ்பாடிச் சிறியேன் இதனைத் தீர்வேனேல்

எரிவேன் எரிவாய் நரகத்தே இருப்பேன் இளைப்பேன் விளைப்பேனே.

465. விளைப்பேன் பவமே அடிச்சிறியேன் வினையால் விளையும் வினைப்போகம்

திளைப்பேன் எனினும் கதிர்வடிவேல் தேவே என்னும் திருமொழியால்

இளைப்பேன் அலன்இங் கியம்புகிற்பேன் எனக்கென் குறையுண் டெமதூதன்

வளைப்பேன் எனவந் திடில்அவனை மடிப்பேன் கருணை வலத்தாலே.

466. வலத்தால் வடிவேல் கரத்தேந்தும் மணியே நின்னை வழுத்துகின்ற

நலத்தால் உயர்ந்த பெருந்தவர்பால் நண்ணும் பரிசு நல்கினையேல்

தலத்தால் உயர்ந்த வானவரும் தமியேற் கிணையோ சடமான

மலத்தால் வருந்தாப் பெருவாழ்வால் மகிழ்வேன் இன்பம் வளர்வேனே.

467. இன்பப் பெருக்கே அருட்கடலே இறையே அழியா இரும்பொருளே

அன்பர்க் கருளும் பெருங்கருணை அரசே உணர்வால் ஆம்பயனே

வன்பர்க் கரிதாம் பரஞ்சோதி வடிவேல் மணியே அணியேஎன்

துன்பத் திடரைப் பொடியாக்கிச் சுகந்தந் தருளத் துணியாயே.

468. சுகமே அடியர் உளத்தோங்கும் சுடரே அழியாத் துணையேஎன்

அகமே புகுந்த அருள்தேவே அருமா மணியே ஆரமுதே

இகமே பரத்தும் உனக்கின்றி எத்தே வருக்கும் எமக்கருள

முகமே திலைஎம் பெருமானே நினக்குண் டாறு முகமலரே.

469. ஆறு முகமும் திணிதோள்ஈ ராறும் கருணை அடித்துணையும்

வீறு மயிலும் தனிக்கடவுள் வேலும் துணைஉண் டெமக்கிங்கே

சீறும் பிணியும் கொடுங்கோளும் தீய வினையும் செறியாவே

நாறும் பகட்டான் அதிகாரம் நடவா துலகம் பரவுறுமே.

திருச்சிற்றம்பலம்

12. எழுசீர்.தொ.வே. அறுசீர் ச.மு.க. ஆ.பா.

44. செல்வச் சீர்த்தி மாலை

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

470. அடியார்க் கெளியர் எனும்முக்கன் ஐயர் தமக்கும் உலகீன்ற

அம்மை தனக்கும் திருவாய்முத் தளித்துக் களிக்கும் அருமருந்தே

கடியார் கடப்ப மலர்மலர்ந்த கருணைப் பொருப்பே கற்பகமே

கண்ணுள் மணியே அன்பர்மனக் கமலம் விரிக்கும் கதிரொளியே

படியார் வளிவான் தீமுதல்ஐம் பகுதி யாய பரம்பொருளே

பகர்தற் கரிய மெய்ஞ்ஞானப் பகே அசுரப் படைமுழுதும்

தடிவாய் என்னச் சுரர்வேண்டத் தடிந்த வேற்கைத் தனிமுதலே

தணிகா சலமாம் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

471. காயா தளியக் கனிந்தன்பால் கல்லால் அடிநின்
றருள்ஒழுகும்

கனியுட் சுவையே அடியர்மனக் கவலை அகற்றும் கற்பகமே

ஓயா துயிர்க்குள் ஒளித்தெவையும் உணர்த்தி அருளும்
ஒன்றேஎன்

உள்ளக் களிப்பே ஐம்பொறியும் ஒடுக்கும் பெரியோர்க் கோர்உறவே

தேயாக் கருணைப் பாற்கடலே தெளியா அசுரப் போர்க்கடலே

தெய்வப் பதியே முதற்கதியே திருச்செந் துரில் திகழ்மதியே

தாயாய் என்னைக் காக்கவரும் தனியே பரம சற்குருவே

தணிகா சலமாம் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

472. நாணும் அயன்மால் இந்திரன்பொன் நாட்டுப் புலவர்
மணம்வேட்ட

நங்கை மார்கள் மங்கலப்பொன் நாண்காத் தளித்த நாயகமே

சேணும் புவியும் பாதலமும் தித்தித் தொழுகும் செந்தேனே

செஞ்சாற் சுவையே பொருட்சுவையே சிவன்கைப் பொருளே செங்கழுநீர்ப்

பூணும் தடந்தோட்பெருந் தகையே பொய்யர் அறியாப் புண்ணியமே

போகங் கடந்த யோகியர்முப் போகம் விளைக்கும் பொற்புலமே

தாணு என்ன உலகமெலாம் தாங்கும் தலைமைத் தயாநிதியே

தணிகா சலமாம் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

473. முன்னைப் பொருட்கு முதற்பொருளே முடியா தோங்கும் முதுமறையே

முக்கட் கரும்பீன் றெடுத்தமுழு முத்தே முதிர்ந்த முக்கனியே

பொன்னைப் புயங்கொண் டவன்போற்றும் பொன்னே புனித பூரணமே

போத மணக்கும் புதுமலரே புலவர் எவரும் புகும்பதியே

மின்னைப் பொருவும் உலகமயல் வெறுத்தோர் உள்ள விளக்கொளியே

மேலும் கீழும் நடுவும்என விளங்கி நிறைந்த மெய்த்தேவே

தன்னைப் பொருவும் சிவயோகம் தன்னை உடையோர் தம்பயனே

தணிகா சலமாம் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

474. பித்தப் பெருமாள் சிவபெருமாள் பெரிய பெருமான் தனக்கருமைப்

பிள்ளைப் பெருமான் எனப்புலவர் பேசிக் களிக்கும் பெருவாழ்வே

மத்தப் பெருமால் நீக்கும்ஒரு மருந்தே எல்லாம் வல்லோனே

வஞ்சச் சமண வல்இருளை மாய்க்கும் ஞான மணிச்சுடரே

அத்தக் கமலத் தயிற்படைகொள் அரசே மூவர்க் கருள்செய்தே

ஆக்கல் அளித்தல் அழித்தல்எனும் அம்முத் தொழிலும் தருவோனே

சத்த உலக சராசரமும் தாளில் ஒடுக்கும் தனிப்பொருளே

தணிகா சலமாம் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

475. ஏதம் அகற்றும் என்அரசே என்ஆ ருயிரே என்அறிவே

என்கண் ஒளியே என்பொருளே என்சற் குருவே என்தாயே

காத மணக்கும் மலர்கடப்பங் கண்ணிப் புயனே காங்கெயனே

கருணைக் கடலே பன்னிருகண் கரும்பே இருவர் காதலனே

சீத மதியை முடித்தசடைச் சிவனார் செல்வத் திருமகனே

திரமா லுடன்நான் முகன்மகவான் தேடிப் பணியும் சீமானே

சாதல் பிறத்தல் தவிர்த்தரளும் சரணாம் புயனே சத்தியனே

தணிகா சலமாம் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

476. வன்பில் பொதிந்த மனத்தினர்பால் வருந்தி உழல்வேன் அல்லால்உன்

மலர்த்தாள் நினையேன் என்னேஇம் மதியி லேனும் உய்வேனோ

அன்பிற் கிரங்கி விடமண்டோ ன் அருமை மகனே ஆரமுதே

அகிலம் படைத்தோன் காத்தோன்றின் றிழித்தோன் ஏத்த அளித்தோனே

துன்பிற் கிடனாம் வன்பிறப்பைத் தொலைக்கும் துணையே சுகோதயமே

தோகை மயில்மேல் தோன்றுபெருஞ்சுடரே இடராற் சோர்வுற்றே

தன்பிற் படும்அச் சுரர்ஆவி தரிக்க வேலைத் தரித்தோனே

தணிகா சலமாந் தலைத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

477. மாலும் அயனும் உருத்திரனும் வானத் தவரும் மானிடரும்

மாவும் புள்ளும் ஊர்வனவும் மலையும் கடலும் மற்றவையும்

ஆலும் கதியும் சதகோடி அண்டப் பரப்புந் தானாக

அன்றோர் வடிவம் மேருவிற்கொண் டருளுந் தூய அற்புதமே

வேலும் மயிலும் கொண்டுருவாய் விளையாட் டியற்றும் வித்தகமே

வேதப் பொருளே மதிச்சடைகேல் விமலன் தனக்கோர் மெய்ப்பொருளே

சாலும் சுகுணத் திருமலையே தவத்தோர் புகழும் தற்பரனே

தணிகா சலமாம் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

478. ஏதம் நிறுத்தம் இவ்வுலகத் தியல்பின் வாழ்க்கை யிடத்தெளியேன்

எண்ணி அடங்காப் பெருந்துயர்கொண் டெந்தாய் அந்தோ இளைக்கின்றேன்

வேதம் நிறுத்தும் நின்கமல மென்றாள் துணையே துணைஅல்லால்

வேறொன் றறியேன் அஃதறிந்திவ் வினையேற் கருள வேண்டாவோ

போத நிறுத்தும் சற்குருவே புனித ஞானத் தறிவுருவே

பொய்யர் அறியாப் பரவெளியே புரம்முன் றெரித்தோன் தரும்ஒளியே

சாதல் நிறுத்தும் அவருள்ளளத் தலம்தாள் நிறுத்தும் தயாநிதியே

தணிகா சலமாந் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

479. முருகா எனநின் றேத்தாத முடரிடம்போய் மதிமயங்கி

முன்னும் மடவார் முலைமுகட்டின் முயங்கி அலைந்தே நினைமறந்தேன்

உருகா வஞ்ச மனத்தேனை உருத்தீர்த் தியமன் ஒருபாசத்

துடலும் நடுங்க விசிக்கல்அவர்க் குரைப்ப தறியேன் உத்தமனே

பருகா துள்ளத் தினித்திருக்கும் பாலே தேனே பகர்அருட்செம்

பாகே தோகை மயில்நடத்தும் பரமே யாவும் படைத்தோனே

தருகா தலித்தோன் முடிகொடுத்த தரும துரையே தறப்ரனே

தணிகா சலமாந் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

45. செவி அறிவுறுத்தல்

கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

480. உலகியற் கடுஞ்சுரத் துழன்று நாள்தொறும்

அலகில்வெந் துயர்கிளைத் தழுங்கு நெஞ்சமே

இலகுசிற் பரகுக என்று நீறிடில்

கலகமில் இன்பமாம் கதிகி டைக்குமே.

481. மருளுறும் உலகிலாம் வாழ்க்கை வேண்டியே

இருளூறு துயர்க்கடல் இழியும் நெஞ்சமே
தெருளூறு நீற்கனைச் சிவஎன் றுட்கொளில்
அருளூறு வாழ்க்கையில் அமர்தல் உண்மையே.

482. வல்வினைப் பகுதியால் மயங்கி வஞ்சர்தம்
கொல்வினைக் குழியிடைக் குதிக்கும் நெஞ்சமே
இல்வினைச் சண்முக என்று நீறிடில்
நல்வினை பழுக்கும்லூர் நாடு வாய்க்குமே.

483. கடும்புலைக் கருத்தர்தம் கருத்தின் வண்ணமே
விடும்புனல் எனத்துயர் விளைக்கும் நெஞ்சமே
இடும்புகழ்ச் சண்முக என்று நீறிடில்
நடுங்கும்அச் சம்நினை நண்ணற் கென்றுமே.

484. அன்பிலா வஞ்சர்தம் அவலச் சூழலில்
என்பிலாப் புழுஎன இரங்கு நெஞ்சமே
இன்பறாச் சண்முக என்று நீறிடில்
துன்புறாத் தணிக்கதிச் சூழல் வாய்க்குமே.

485. செறிவிலா வஞ்சகச் செல்வர் வாயிலில்
அறிவிலா துழலும்என் அவல நெஞ்சமே
எறிவிலாச் சண்முக என்று நீறிடில்
மதிவிலாச் சிவகதி வாயில் வாய்க்குமே.

486. மறிதரு கண்ணினார் மயக்கத் தாழ்ந்துவீண்
வறியொடு மலைந்திடர் விளைக்கும் நெஞ்சமே

நெறிசிவ சண்முக என்று நீறிடில்
முறிகொளீஇ நின்றஉன் முடம் தீருமே.

487. காயமாம் கானலைக் கருதி நாள்தொறும்
மாயமாம் கானிடை வருந்தும் நெஞ்சமே
நேயமாம் சண்முக என்று நீறிடில்
தோயமாம் பெரும்பிணித் துன்பம் நீங்குமே.

488. சதிசெயும் மங்கையர் தமது கண்வலை
மதிகெட அழுந்தியே வணங்கும் நெஞ்சமே
நிதிசிவ சண்முக என்று நீறிடில்
வதிதரும் உலகில்உன் வருத்தம் தீருமே.

489. பசையறு வஞ்சகர் பாற்சென் றேங்கியே
வசைபெற நாள்தொறும் வருந்து நெஞ்சமே
இசைசிவ சண்ம என்று நீறிடில்
திசைபெற மதிப்பர்உன் சிறுமை நீங்குமே.

திருச்சிற்றம்பலம்

## 46. தேவ ஆசிரியம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

490. யாரை யுங்கடு விழியினால் மயக்குறும் ஏந்திழை அவர்வெந்நீர்த்

தாரை தன்னையும் விரும்பிவீழ்த் தாழ்ந்தஎன் தனக்கருள் உண்டேயோ

காரை முட்டிஅப் புறம்செலும் செஞ்சுடர்க் கதிரவன் இவர்ஆழித்

தேரை எட்டுறும் பொழில்செறி தணிகையில் தேவர்கள் தொழுந்தேவே.

491. மறிக்கும் வேற்கணார் மலக்குழி ஆழ்ந்துழல் வந்த அறும்என்பைக்

கறிக்கும் நாயினும் கடைநாய்க் குன்திருக் கருணையும் உண்டேயோ

குறிக்கும் வேய்மணி களைக்கதிர் இரதவான் குதிரையைப் புடைத்தெங்கும்

தெறிக்கும் நல்வளம் செறிதிருத் தணிகையில் தேவர்கள் தொழுந்தேவே.

492. பிரியம் மேயவன் மடந்தையர் தங்களைப் பிடித்தலைத் திடுவஞ்சக்

கரிய பேயினும் பெரியபேய்க் குன்திருக் கருணையும் உண்டேயோ

அரிய மால்அயன் இந்திரன் முதலினோர் அமர்உல கறிந்தப்பால்

தெரிய ஓங்கிய சிகரிசூழ் தணிகையில் தேவர்கள் தொழுந்தேவே.

48. போற்றித் திருவிருத்தம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

505. கங்கையஞ் சடைசேர் முக்கட் கரும்பருள் மணியே போற்றி

அங்கையங் கனியே போற்றி அருட்பெருங் கடலே போற்றி

பங்கையன் முதலோர் போற்றும் பரம்பரஞ் சுடரே போற்றி
சங்கைதீர்த் தருளும் தெய்வச் சரவண பவனே போற்றி.

506. பனிப்புற அருளும் முக்கட் பரஞ்சுடர் ஒளியே போற்றி
இனிப்புறு கருணை வான்தேன் எனக்கருள் புரிந்தாய் போற்றி
துனிப்பெரும் பவந்தீர்த் தென்னைச் சுகம்பெற வைத்தோய் போற்றி
தனிப்பெருந் தவமே போற்றி சண்முகத் தரசே போற்றி.

507. மணப்புது மலரே தெய்வ வான்சுவைக் கனியே போற்றி
தணப்பற அடியர்க் கின்பம் தரும்ஒரு தருவே போற்றி
கணப்பெருந் தலைவர் ஏத்தும் கழற்பதத் தரசே போற்றி
குணப்பெருங் குன்றே போற்றி குமரசற் குருவே போற்றி.

508. தவம்பெறு முனிவருள்ளத் தாமரை அமர்ந்தோய் போற்றி
பவம்பெறுஞ் சிறியேன் தன்னைப் பாதுகாத் தளித்தோய் போற்றி
நவம்பெறு நிலைக்கும் மேலாம் நண்ணிய நலமே போற்றி
சிவம்பெறும் பயனே போற்றி செங்கதிர் வேலோய் போற்றி.

509. மூவடி வாகி நின்ற முழுமுதற் பரமே போற்றி
மாவடி அமர்ந்த முக்கண் மலைதரு மணியே போற்றி
சேவடி வழுத்தும் தொண்டர் சிறுமைதீர்த் தருள்வோய் போற்றி
துவடி வேல்கைக் கொண்ட சுந்தர வடிவே போற்றி

510. விண்ணுறு சுடரே என்னுள் விளங்கிய விளக்கே போற்றி
கண்ணுறு மணியே என்னைக் கலந்தநற் களிப்பே போற்றி
பண்ணுறு பயனே என்னைப் பணிவித்த மணியே போற்றி

எண்ணுறும் அடியார் தங்கட் கினியதெள் அமுதே போற்றி.

511. மறைஎலாம் பரவ நின்ற மாணிக்க மலையே போற்றி
சிறைஎலாம் தவிர்ந்து வானோர் திருவுறச் செய்தோய் போற்றி
குறைஎலாம் அறுத்தே இன்பம் கொடுத்தஎன் குருவே போற்றி
துறைஎலாம் விளங்கு ஞானச் சோதியே போற்றி போற்றி.

512. தாருகப் பதகன் தன்னைத் தடிந்தருள் செய்தோய் போற்றி
வேருகச் சூர மாவை வீட்டிய வேலோய் போற்றி
ஆருகச் சமயக் காட்டை அழித்தவெங் கனலே போற்றி
பொருகத் தகரை ஊர்ந்த புண்ணிய மூர்த்தி போற்றி.

513. சிங்கமா முகனைக் கொன்ற திறலுடைச் சிம்புள் போற்றி
துங்கவா ரணத்தோன் கொண்ட துயர்தவிர்த் தளித்தோய் போற்றி
செங்கண்மால் மருக போற்றி சிவபிரான் செல்வ போற்றி
எங்கள்ஆர் அமுதே போற்றி யாவர்க்கும் இறைவ போற்றி

514. முத்தியின் முதல்வ போற்றி மூவிரு முகத்த போற்றி
சத்திவேற் கரத்த போற்றி சங்கரி புதல்வ போற்றி
சித்திதந் தருளும் தேவர் சிகாமணி போற்றி போற்றி
பத்தியின் விளைந்த இன்பப் பரம்பர போற்றி போற்றி.

515. தெருளுடை யோர்க்கு வாய்த்த சிவானந்தத் தேனே போற்றி
பொருளுடை மறையோர் உள்ளம் புகுந்தபுண் ணியமே போற்றி
மருளுடை மனத்தி னேனை வாழ்வித்த வாழ்வே போற்றி
அருளுடை அரசே எங்கள் அறுமுகத் தமுதே போற்றி.

516. பொய்யனேன் பிழைகள் எல்லாம் பொறுத்திடல் வேண்டும் போற்றி

கையனேன் தன்னை இன்னும் காத்திடல் வேண்டும் போற்றி

மெய்யனே மெய்யர் உள்ளம் மேவிய விளைவே போற்றி

ஐயனே அப்ப னேஎம் அரசனே போற்றி போற்றி

517. முருகநின் பாதம் போற்றி முளரியங் கண்ணற் கன்பாம்

மருகநின் கழல்கள் போற்றி வானவர் முதல்வ போற்றி

பெருகருள் வாரி போற்றி பெருங்குணப் பொருப்பே போற்றி

தருகநின் கருணை போற்றி சாமிநின் அடிகள் போற்றி.

518. கோதிலாக் குணத்தோய் போற்றி குகேசநின் பாதம் போற்றி

தீதிலாச் சிந்தை மேவும் சிவபரஞ் சோதி போற்றி

போதில்நான் முகனும் காணாப் பூரண வடிவ போற்றி

ஆதிநின் தாள்கள் போற்றி அநாதிநின் அடிகள் போற்றி.

519. வேதமும் கலைகள் யாவும் விளம்பிய புலவ போற்றி

நாதமும் கடந்து நின்ற நாதநின் கருணை போற்றி

போதமும் பொருளும் ஆகும் புனிதநின் பாதம் போற்றி

ஆதரம் ஆகி என்னுள் அமர்ந்தஎன் அரசே போற்றி

திருச்சிற்றம்பலம்

## 59. சண்முகர் கொம்மி

தாழிசை

திருச்சிற்றம்பலம்

523. குறவர் குடிசை நுழைந்தாண்டி - அந்தக்

கோமாட்டி எச்சில் விழைந்தாண்டி

துறவர் வணங்கும் புகழாண்டி - அவன்

தோற்றத்தைப் பாடி அடியுங்கடி.

524. மாமயில் ஏறி வருவாண்டி - அன்பர்

வாழ்த்த வரங்கள் தருவாண்டி

தீமையி லாத புகழாண்டி - அவன்

சீர்த்தியைப் பாடி அடியுங்கடி.

525. பன்னிரு தோள்கள் உடையாண்டி - கொடும்

பாவிகள் தம்மை அடையாண்டி

என்னிரு கண்கள் அனையாண்டி - அவன்

ஏற்றத்தைப் பாடி அடியுங்கடி

526. வேங்கை மரமாகி நின்றாண்டி - வந்த

வேடர் தனைஎலாம் வென்றாண்டி

தீங்குசெய் சூரனைக் கொன்றாண்டி - அந்தத்

தீரனைப் பாடி அடியுங்கடி.

527. சீர்திகழ் தோகை மயில்மேலே - இளஞ்

செஞ்சுடர் தோன்றுந் திறம்போலே

கூர்வடி வேல்கொண்டு நம்பெருமான் - வருங்

கோலத்தைப் பாருங்கள் கோதையர்காள்.

528. ஆறு முகங்களில் புன்சிரிப்பும் - இரண்

டாறு புயந்திகழ் அற்புதமும்

வீறு பரஞ்சுடர் வண்ணமும்லூர் - திரு

மேனியும் பாருங்கள் வெள்வளைகாள்.

529. ஆனந்த மான அமுதனடி - பர

மானந்த நாட்டுக் கரசனடி

தானந்த மில்லாச் சதுரனடி - சிவ

சண்முகன் நங்குரு சாமியடி.

530. வேதமுடி சொல்லும் நாதனடி - சதுர்

வேதமு டிதிகழ் பாதனடி

நாத வடிவுகொள் நீதனடி - பர

நாதங் கடந்த நலத்தனடி.

531. தத்துவத் துள்ளே அடங்காண்டி - பர

தத்துவம் அன்றித் துடங்காண்டி

சத்துவ ஞான வடிவாண்டி - சிவ

சண்முக நாதனைப் பாடுங்கடி.

532. சச்சிதா னந்த உருவாண்டி - பர

தற்பர போகந் தருவாண்டி

உச்சிதாழ் அன்பர்க் குறவாண்டி - அந்த

உத்தம தேவனைப் பாடுங்கடி.

533. அற்புத மான அழகனடி - துதி

அன்பர்க் கருள்செய் குழகனடி

534. சைவந் தழைக்க தழைத்தாண்டி -
ஞான சம்பந்தப் பேர்கொண் டழைத்தாண்டி
பொய்வந்த உள்ளத்தில் போகாண்டி - அந்தப்
புண்ணியன் பொன்னடி போற்றுங்கடி.

535. வாசி நடத்தித் தருவாண்டி - ஒரு
வாசியில் இங்கே வருவாண்டி
ஆசில் கருணை உருவாண்டி - அவன்
அற்புதத் தாள்மலர் ஏத்துங்கடி.

536. இராப்பகல் இல்லா இடத்தாண்டி - அன்பர்
இன்ப உளங்கொள் நடத்தாண்டி
அராப்பளி ஈந்த திடத்தாண்டி - அந்த
அண்ணலைப் பாடி அடியுங்கடி.

537. ஒன்றிரண் டான உளவாண்டி - அந்த
ஒன்றிரண் டாகா அளவாண்டி
மின்திரண் டன்ன வடிவாண்டி - அந்த
மேலவன் சீர்த்தியைப் பாடுங்கடி.

571. நல்லார்க் கெல்லாம் நல்லவன்நீ ஒருவன் யாண்டும் நாயடியேன்
பொல்லார்க் கெல்லாம் பொல்லவன்நான் ஒருவன் இந்தப் புணர்ப்பதனால்
எல்லாம் உடையாய் நினக்கெதிரென் றெண்ணேல் உறவென் றெண்ணுக ஈ

தல்லால் வழக்கென் இருமைக்கும் பொதுமை அன்றோ அருளிடமே.

572. இடமே பொருளே ஏவலே என்றென் றெண்ணி இடர்ப்படுமோர்

மடமே உடையேன் தனக்கருள்நீ வழங்கல் அழகோ ஆநந்த

நடமே உடையோய் நினைஅன்றி வேற்றுத் தெய்வம் நயவேற்குத்

திடமே அருள்தான் வழங்காது தீர்த்தல் அழகோ தெரிப்பாயே.

573. தெரித்தால் அன்றிச் சிறிதேனும் தெரிவொன் றில்லாச் சிறியேனைப்

பிரித்தாய் கூடும் வகைஅறியும் பெற்றி என்னே பிறைமுடிமேல்

தரித்தாய் அடியேன் பிழைபொறுக்கத் தகுங்காண் துன்பம் தமியேனை

அரித்தால் கண்டிங் கிரங்காமை அந்தோ அருளுக் கழகேயோ.

574. அருள்ஓர் சிறிதும் உதவுகிலாய் அதனைப் பெறுதற் கடியேன்பால்

தெருள்ஓர் சிறிதும் இலையேஎன் செய்கேன் எங்கள் சிவனேயோ

மருளோர் எனினும் தமைநோக்கி வந்தார்க் களித்தல் வழக்கன்றோ

பொருளோர் இடத்தே மிடிகொண்டோ ர் புகுதல் இன்ற புதிதன்றே.

575. புதியேன் அல்லேன் நின்அடிமைப் பொருத்தம் இல்லேன் அல்லேன்யான்

மதியேன் வேற்றுத் தேவர்தமை வந்தங் கவர்தாம் எதிர்படினும்

துதியேன் நின்னை விடுவேனோ தொண்ட னேனை விடல்அழகோ

நதியேர் சடையோய் இன்னருள்நீ நல்கல் வேண்டும் நாயேற்கே.

576. நாயேன் துன்பக் கடல்வீழ்ந்து நலிதல் அழகோ நல்லோர்க்கிங்

கீயேன் ஒன்றும் இல்லேன்நான் என்செய் கேனோ என்னுடைய

தாயே அனையாய் சிறிதென்மேல் தயவு புரிந்தால் ஆகாதோ

சேயேன் தன்னை விடுப்பாயோ விடுத்தால் உலகஞ் சிரியாதோ.

577. சிரிப்பார் நின்பேர் அருள்பெற்றோர் சிவனே சிவனே சிவனேயோ

விரிப்பார் பழிச்சொல் அன்றிஎனை விட்டால் வெள்ளை விடையோனே

தரிப்பாய் இவனை அருளிடத்தே என்று நின்று தகும்வண்ணம்

தெரிப்பார் நினக்கும் எவர்கண்டாய் தேவர் தேடற் கரியானே.

578. அரிய பெருமான் எளியோமை ஆளும் பெருமான் யாவர்கட்கும்

பெரிய பெருமாள் சிவபெருமான் பித்தப் பெருமான் என்றுன்னை

உரிய பெருமா தவர்பழிச்சல் உண்மை எனில்என் உடையானே

கரிய பெருமால் உடையற்கும் அருளல் உன்றன் கடன்அன்றே.

579. அன்றும் சிறியேன் அறிவறியேன் அதுநீ அறிந்தும் அருள்செய்தாய்

இன்றும் சிறியேன் அறிவறியேன் இதுநீ அறிந்தும் அருளாயேல்

என்றும் ஒருதன் மையன்எங்கள் இறைவன் எனமா மறைகள்எலாம்

தொன்று மொழிந்த து மொழிதான் சூது மொழியோ சொல்லாயே.

580. சொல்லற் கரிய பெரியபரஞ் சுடரே முக்கட் சுடர்க்கொழுந்தே

மல்லற் கருமால் அயன்முதலோர் வழுத்தும் பெருஞ்சீர் மணிக்குன்றே

புல்லற் கரிதாம் எளியேன்றன் பிழைகள் யாவும் பொறுத்திந்த

அல்லற் கடல்நின் றெனைஎடுத்தே அருள்வாய் உன்றன் அருள்நலமே.

திருச்சிற்றம்பலம்

## 2. பிரார்த்தனைப் பதிகம்

திருவொற்றியூரும் திருத்தில்லையும்

கட்டளைத் கலித்துறை

திருச்சிற்றம்பலம்

561. அப்பார் மலர்ச்சடை ஆரமு தேஎன் அருட்டுணையே

துப்பார் பவள மணிக்குன்ற மேசிற் சுகக்கடலே

வெப்பார் தருதுய ரால்மெலி கின்றனன் வெற்றடியேன்

இப்பார் தனில்என்னை அப்பாஅஞ் சேல்என ஏன்றுகொள்ளே.

582. ஏன்றுகொள் வான்நம தின்னுயிர் போல்முக்கண் எந்தைஎன்றே

சான்றுகொள் வாய்நினை நம்பிநின் றேன்இத் தமிஅடியேன்

மான்றுகொள் வான்வரும் துன்பங்கள் நீக்க மதித்திலையேல்

ஞான்றுகொள் வேன்அன்றி யாதுசெய் வேன்இந்த நானிலத்தே.

583. நிலத்தே சிறுவர்செய் குற்றங்கள் யாவும் நினைத்தறவோர்

சலத்தே உளத்தை விடார்என்பர் ஆதலின் தாதையென்றே

குலத்தேவர் போற்றும் குணக்குன்றே மேஎங் குலதெய்வமே

புலத்தே இழிதகை யேன்பிழை யாவும் பொறுத்தருளே.

584. அருளார் அமுதப் பெருங்கட லேதில்லை அம்பலத்தில்

பொருளார் நடம்புரி புண்ணிய னேநினைப் போற்றுகிலேன்

இருளார் மனத்தின் இடர்உழந் தேன்இனி யாதுசெய்கேன்

மருளார் மலக்குழல் மாய்ந்திடில் உன்அருள் வாய்ப்பதற்கே.

585. வாயார நின்பொன் மலர்த்தாள் துணையே வழுத்துகிலேன்

ஓயா இடர்உழந் துள்நலி கின்றனன் ஓகெடுவேன்

பேயாய்ப் பிறந்திலன் பேயும்ஓவ் வேன்புலைப் பேறுவக்கும்

நாயாய்ப் பிறந்திலன் நாய்க்கும் கடைப்பட்ட நான்இங்ஙனே.

586. நான்செய்த குற்றங்கள் எல்லாம் பொறுத்துநின் நல்லருள்நீ

தான்செய் தனைஎனில் ஐயாமுக் கட்பெருஞ் சாமிஅவற்

கேன்செய் தனைஎன நிற்றடுப் பார்இலை என்அரசே

வான்செய்த நன்றியை யார்தடுத் தார்இந்த வையகத்தே.

587. வையகத் தேஇடர் மாக்கடல் மூழ்கி வருந்துகின்ற

பொய்யகத் தேனைப் புரந்தரு ளாமல் புறம்பொழித்தால்

நையகத் தேன்எது செய்வேன்அந் தோஉள் நலிகுவன்காண்

மெய்யகத் தேநின் றொளிர்தரும் ஞான விரிசுடரே.

588. விரிதுய ரால்தடு மாறுகின் றேன்இந்த வெவ்வினையேன்

பெரிதுய ராநின்ற நல்லோர் அடையும்நின் பேரருள்தான்

அரிதுகண் டாய்அடை வேன்எனல் ஆயினும் ஐயமணிப்

புரிதுவர் வார்சடை யாய்நீ உவப்பில் புரியில்உண்டே.

589. உண்டோர்என போல்துய ரால்அலை கின்றவர் உத்தமநீ
கண்டோர் சிறிதும் இரங்குகி லாய்இக் கடையவனேன்
பண்டோர் துணைஅறி யேன்நின்னை யன்றிநிற் பற்றிநின்றேன்
எண்டோள் மணிமிடற் றெந்தாய் கருணை இருங்கடலே.

590. கடலே அனைய துயர்மிகை யால்உட் கலங்கும்என்னை
விடலே அருளன் றெடுத்தாளல் வேண்டும்என் விண்ணப்பமீ
தடல்ஏ றுவந்த அருட்கட லேஅணி அம்பலத்துள்
உடலே மருவும் உயிர்போல் நிறைஒற்றி யூரப்பனே.

திருச்சிற்றம்பலம்

3. பெரு விண்ணப்பம்

பொது

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

591. இருள்ஆர் மனத்தேன் இழுக்குடையேன் எளியேன்
நின்னை ஏத்தாத
மருள்ஆர் நெஞ்சப் புலையரிடம் வாய்ந்து வருந்தி மாழ்கின்றேன்
அருள்ஆர் அமுதப் பெருக்கேஎன் அரசே அதுநீ அறிந்தன்றோ
தெருள்ஆர் அன்பர் திருச்சபையில் சேர்க்கா தலைக்கும்
திறம்அந்தோ.

592. உண்மை அறியேன் எனினும்எனை உடையாய் உனையே
ஒவ்வொருகால்

எண்மை உடையேன் நினைக்கின்றேன் என்னே உன்னை ஏத்தாத

வெண்மை உடையார் சார்பாக விட்டாய் அந்தோ வினையேனை

வண்மை உடையாய் என்செய்கேன் மற்றோர் துணைஇங் கறியேனே.

593. எளியேன் இழைத்த பெரும்பிழைகள் எல்லாம் பொறுத்திங் கின்பளித்தாய்

களியேன் தனைநீ இனிஅந்தோ கைவிட் டிடில்என் கடவேனே

ஒளியே முக்கட் செழுங்கரும்பே ஒன்றே அன்பர் உறவேநல்

அளியே பரம வெளியேஎன் ஐயா அரசே ஆரமுதே.

594. காமக் கடலில் படிந்தஞராம் கடலில் விழுந்தேன் கரைகாணேன்

ஏமக் கொடுங்கற் றெனும்கரம் யாது செயுமோ என்செய்கேன்

நாமக் கவலை ஒழித்துன்றாள் நண்ணும் அவர்பால் நண்ணுவித்தே

தாமக் கடிப்பூஞ் சடையாய்உன் தன்சீர் பாடத் தருவாயே.

595. எண்ணா தெளியேன் செயும்பிழைகள் எல்லாம் பொறுத்திங் கெனையாள்வ

தண்ணா நினது கடன்கண்டாய் அடியேன் பலகால் அறைவதென்னே

கண்ணார் நுதற்செங் கரும்பேமுக் கனியே கருணைக் கடலேசெவ்

வண்ணா வெள்ளை மால்விடையாய் மன்றா டியமா மணிச்சுடரே.

596. பாலே அமுதே பழமேசெம் பாகே எனும்நின் பதப்புகழை

மாலே அயனே இந்திரனே மற்றைத் தேவ ரேமறைகள்

தாலே அறியா தெனில்சிறியேன் நானோ அறிவேன் நாயகஎன்

மேலே அருள்கூர்ந் தெனைநின்தான் மேவு வோர்பால் சேர்த்தருளே.

597. கண்ணார் நுதலோய் பெருங்கருணைக் கடலோய் கங்கை மதிச்சடையோய்

பெண்ணார் இடத்தோய் யாவர்கட்கும் பெரியோய் கரியோன் பிரமனொடும்

அண்ணா எனநின் றேத்தெடுப்ப அமர்ந்தோய் நின்றன் அடிமலரை

எண்ணா துழல்வோர் சார்பாக இருக்கத் தரியேன் எளியேனே.

598. பொய்யோர் அணியா அணிந்துழலும் புலையேன் எனினும் புகல்இடந்தான்

ஐயோ நினது பதம்அன்றி அறியேன் இதுநீ அறியாயோ

கைஓர் அனல்வைத் தாடுகின்ற கருணா நிதியே கண்ணுதலே

மெய்யோர் விரும்பும் அருமருந்தே வேத முடிவின் விழுப்பொருளே.

599. இன்னே எளியேன் பொய்யுடையேன் எனினும் அடியன் அலவோநான்

என்னே நின்னைத் துதியாதார் இடத்தில் என்னை இருத்தினையே

அன்னே என்றன் அப்பாஎன் ஐயா என்றன் அரசேசெம்

பொன்னே முக்கட் பொருளேநின் புணர்ப்பை அறியேன் புலையேனே.

600. வஞ்ச மடவார் மயலொருபால் மணியே நின்னை வழுத்தாத

நஞ்சம் அனையார் சார்பொருபால் நலியும் வாழ்க்கைத் துயர்ஒருபால்

விஞ்சும் நினது திருவருளை மேவா துழலும் மிடிஒருபால்

எஞ்சல் இலவாய் அலைக்கின்ற தென்செய் கேன்இவ் எளியேனே.

திருச்சிற்றம்பலம்

4. சிறு விண்ணப்பம்

பொது

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

681. பண்ணால்உன் அருட்புகழைப் பாடு கின்றார்

பணிகின்றார் நின்அழகைப் பார்த்துப் பார்த்துக்

கண்ணார உளங்குளிரக் களித்தா னந்தக்

கண்ணீர்கொண் டாடுகின்றார் கருணை வாழ்வை

எண்ணாநின் றுனைஎந்தாய் எந்தாய் எந்தாய்

என்கின்றார் நின்அன்பர் எல்லாம் என்றன்

அண்ணாநான் ஒருபாவி வஞ்ச நெஞ்சத்தால்

அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

682. எப்பாலும் நின்அன்பர் எல்லாம் கூடி

ஏத்துகின்றார் நின்பதத்தை ஏழை யேன்நான்

வெப்பாய மடவியர்தம் கலவி வேட்டு

விழுகின்றேன் கண்கெட்ட விலங்கே போல

இப்பாரில் மயங்குகின்றேன் நன்மை ஒன்றும்
எண்ணுகிலேன் முக்கணுடை இறைவா என்றன்
அப்பாஎன் ஆருயிர்க்கோர் துணைவா வீணில்
அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

603. இன்புடையார் நின்அன்பர் எல்லாம் நின்சீர்
இசைக்கின்றார் நான்ஒருவன் ஏழை இங்கே
வன்புடையார் தமைக்கூடி அவமே நச்சு
மாமரம்போல் நிற்கின்றேன் வஞ்ச வாழ்க்கைத்
துன்புடையார் அனைவர்க்கும் தலைமை பூண்டேன்
தூய்மைஎன்ப தறிந்திலேன் சூழ்ந்தோர்க் கெல்லாம்
அன்புடையாய் எனைஉடையாய் விடையாய் வீணே
அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

604. விஞ்சுடையாய் நின்அன்பர் எல்லாம் நின்சீர்
மெய்ப்புளகம் எழத்துதித்து விளங்கு கின்றார்
நஞ்சுடையார் வஞ்சகர்தம் சார்பில் இங்கே
நான்ஒருவன் பெரும்பாவி நண்ணி முட
நெஞ்சுடையார் தமக்கெல்லாம் தலைமை பூண்டு
நிற்கின்றேன் கருணைமுக நிமலக் கஞ்சம்
அஞ்சுடையாய் ஆறுடைய சடையாய் வீணில்
அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

605. பொய்யாத நின்அடியார் எல்லாம் நல்ல

புண்ணியமே செய்துநினைப் போற்று கின்றார்

நையாநின் றுலைகின்ற மனத்தால் இங்கே

நான்ஒருவன் பெரும்பாவி நாயேன் தீமை

செய்யாநின் றுழைக்கின்றேன் சிறிதும் நின்னைச்

சிந்தியேன் வந்திக்கும் திறமும் நாடேன்

ஐயாஎன் அப்பாஎன் அரசே வீணில்

அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

696. தெருளுடையார் நின்அன்பர் எல்லாம் நின்றான்

சிந்தையில்வைத் தானந்தம் தேக்கு கின்றார்

மருளுடையேன் நான்ஒருவன் பாவி வஞ்ச

மனத்தாலே இளைத்திளைத்து மயங்கு கின்றேன்

இருளுடையேன் ஏர்பூட்டும் பகடு போல்இங்

கில்உழப்பில் உழைக்கின்றேன் எல்லாம் வல்ல

அருளுடையாய் ஆளுடையாய் உடையாய் வீணில்

அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

697. வாரமுளார் நின்அடியார் எல்லாம் நின்னை

வாழ்த்துகின்றார் தலைகுளிர வணங்கு கின்றார்

தீரமிலேன் நானொருவன் பாவி வஞ்சச்

செயல்விளக்கும் மனத்தாலே திகைத்தேன் சைவ

சாரமிலேன் ஆசார மில்லேன் சித்த

சாந்தமிலேன் இரக்கமிலேன் தகவும் இல்லேன்

ஆரமுதே முக்கனுடை அரசே வீணில்
அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

608. வண்மைபெறு நின்அன்பர் எல்லாம் நின்னை
வந்தனைசெய் தாநந்த வயத்தே நின்றார்
பெண்மையுறும் மனத்தாலே திகைத்தேன் நின்சீர்
பேசுகிலேன் கூசுகிலேன் பேதை நானோர்
ஒண்மையிலேன் ஒழுக்கமிலேன் நன்மை என்ப
தொன்றுமிலேன் ஓதியேபோல் உற்றேன் மிக்க
அண்மையில்வந் தருள்புரிவோய் என்னே வீணில்
அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

609. உம்பர்தமக் கரிதாம்உன் பதத்தை அன்றி
ஒன்றுமறி யார்உன்னை உற்றோர் எல்லாம்
இம்பர்வினை யுடையேன்நான் ஒருவன் பாவி
எட்டுணையும் நினைந்தறியேன் என்றும் எங்கும்
வம்பவிழ்பூங் குழல்மடவார் மையல் ஒன்றே
மனம்உடையேன் உழைத்திளைத்த மாடு போல்வேன்
அம்பலத்தெம் அரசேஇவ் வாழ்க்கைத் துன்பில்
அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

610. கொலைஅறியாக் குணத்தோர்நின் அன்பர் எல்லாம்
குணமேசெய் துன்னருள்தான் கூடு கின்றார்
புலைஅறிவேன் நான்ஒருவன் பிழையே செய்து

புலங்கெட்ட விலங்கேபோல் கலங்கு கின்றேன்

நிலைஅறியேன் நெறியொன்றும் அறியேன் எங்கும்

நினைஅன்றித் துணையொன்றும் அறியேன் சற்றும்

அலைஅறியா அருட்கடல்நீ ஆள்க வீணில்

அலைகின்றேன் என்செய்கேன் அந்தோ அந்தோ.

திருச்சிற்றம்பலம்

5. கலி முறையீடு

கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

611. பொய்விடு கின்றிலன் என்றெம் புண்ணியா

கைவிடு கின்றியோ கடைய னேன்தனைப்

பைவிடம் உடையவெம் பாம்பும் ஏற்றநீ பெய்விடம்

அனையஎன் பிழைபொ றுக்கவே.

612. பொறுக்கினும் அன்றிஎன் பொய்மை நோக்கியே

வெறுக்கினும் நின்அலால் வேறு காண்கிலேன்

மறுக்கினும் தொண்டரை வலிய ஆண்டுபின்

சிறுக்கினும் பெருக்கமே செய்யும் செல்வமே.

613. செல்லலும் சிறுமையும் சினமும் புல்லரைப்

புல்லலும் கொண்டஎன் பொய்மை கண்டுநீ

கொல்லலும் தகும்எனைக் கொன்றி டர்தருள்

மல்லலும் தகும்சடா மகுட வள்ளலே.

614. வள்ளலே நின்அடி மலரை நண்ணிய

உள்ளலேன் பொய்மையை உன்னி என்னையாட்

கொள்ளலே இன்றெனில் கொடிய என்தனை

எள்ளலே அன்றிமற் றென்செய் கிற்பனே.

615. செய்யநன் றறிகிலாச் சிறிய னேன்தனைப்

பொய்யன்என் றெண்ணிநீ புறம்பொ ழிப்பையேல்

வையநின் றையவோ மயங்கல் அன்றியான்

உய்யநின் றுணர்குவ தொன்றும் இல்லையே.

மேற்படி வேறு

616. இல்லை என்ப திலாஅருள் வெள்ளமே

தில்லை மன்றில் சிவபரம் சோதியே

வல்லை யான்செயும் வஞ்சமே லாம்பொறுத்

தொல்லை இன்பம் உதவுதல் வேண்டுமே.

மேற்படி வேறு

617. இல்லையே என்திங் கில்லை என்றருள்

நல்லையே நீஅருள் நயந்து நல்கினால்

கல்லையே அனையஎன் கன்ம நெஞ்சகம்

ஒல்லையே வஞ்சம்விட் டுவக்கும் உண்மையே

618. உண்மையே அறிகிலா ஓதிய னேன்படும்

எண்மையே கண்டும்உள் இரக்கம் வைத்திலை

அண்மையே அம்பலத் தாடும் ஐயநீ

வண்மையே அருட்பெரு வாரி அல்லையோ

619. அல்லலங் கடலிடை ஆழ்ந்த நாயினேன்

சொல்லலங் கடல்விடைத் தோன்றல் நின்அருள்

மல்லலங் கடலிடை மகிழ்ந்து முழ்கினால்

கல்அலங் கடல்மனம் கனிதல் மெய்மையே.

620. மெய்மையே அறிகிலா வீண னேன்இவன்

உய்மையே பெறஉனை உன்னி ஏத்திடாக்

கைமையே அனையர்தம் கடையில் செல்லவும்

பொய்மையே உரைக்கவும் புணர்த்த தென்கொலோ.

621. என்னுடை வஞ்சக இயற்கை யாவையும்

பொன்னுடை விடையினோய் பொறுத்துக் கொண்டுநின்

தன்னுடை அன்பர்தம் சங்கம் சார்ந்துநான்

நின்னுடைப் புகழ்தனை நிகழ்த்தச் செய்கவே.

622. நிகழும்நின் திருவருள் நிலையைக் கொண்டவர்

திகழும்நல் திருச்சபை அதனுட் சேர்க்கமுன்

அகழுமால் ஏனமாய் அளவும் செம்மலர்ப்

புகழுமா றருளுக பொறுக்க பொய்மையே.

திருச்சிற்றம்பலம்

## 6. அச்சத் திரங்கல்

கோயில்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

623. துறையிடும் கங்கைச் செழுஞ்சடைக் கனியே

சுயம்பிர காசமே அமுதில்

கறையிடும் கண்டத் தொருபெருங் கருணைக்

கடவுளே கண்ணுதற் கரும்பே

குறையிடும் குணத்தால் கொடியனேன் எனினும்

கொடுந்துய ரால்அலைந் தையா

முறையிடு கின்றேன் அருள்தரா தென்னை

முடன்என் றிகழ்வது முறையோ.

624. இகழ்ந்திடேல் எளியேன் தன்னைநீ அன்றி

ஏன்றுகொள் பவரிலை அந்தோ

அகழ்ந்தென துளத்தைச் சூறைகொண் டலைக்கும்

அஞரெலாம் அறுத்தருள் புரிவாய்

புகழ்ந்திடுந் தொண்டர் உளத்தினும் வெள்ளிப்

பொருப்பினும் பொதுவினும் நிறைந்து

திகழ்ந்தருள் பழுக்கும் தெய்வதத் தருவே

செல்வமே சிவபரம் பொருளே.

625. பொருள்எலாம் புணர்க்கும் புண்ணியப் பொருளே

புத்தமு தேகுணப் பொருப்பே

இருள்எலாம் அறுக்கும் பேரொளிப் பிழம்பே

இன்பமே என்பெருந் துணையே

அருள்எலாம் திரண்ட ஒருசிவ முர்த்தி

அண்ணலே நின்அடிக் கபயம்

மருள்எலாம் கொண்ட மனத்தினேன் துன்ப

மயக்கெலாம் மாற்றிஆண் டருளே.

626. ஆண்டநின் கருணைக் கடலிடை ஒருசிற்

றணுத்துணைத் திவலையே எனினும்

ஈண்டஎன் றன்மேல் தெறித்தியேல் உய்வேன்

இல்லையேல் என்செய்கேன் எளியேன்

நீண்டவன் அயன்மற் றேனைவா னவர்கள்

நினைப்பரும் நிலைமையை அன்பர்

வேண்டினும் வேண்டா விடினும்ஆங் களிக்கும்

விமலனே விடைப்பெரு மானே.

627. பெருமையில் பிறங்கும் பெரியநற் குணத்தோர்

பெற்றதோர் பெருந்தனிப் பொருளே

அருமையில் பிரமன் ஆகிய தேவர்

அடைந்தநற் செல்வமே அமுதே

இருமையிற் பயனும் நின்திரு அருளே

என்றுநின் அடைக்கலம் ஆனேன்

கருமையிற் பொலியும் விடநிகர் துன்பக்

களைகளைந் தெனைவிளைத் தருளே.

628. விளைத்தனன் பவநோய்க் கேதுவாம் விடய

விருப்பினை நெருப்புறழ் துன்பின்
இளைத்தனன் அந்தோ ஏழைமை அதனால்
என்செய்கேன் என்பிழை பொறுத்துத்
தளைத்தவன் துயர்நீத் தாளவல் லவர்நின்
தனைஅன்றி அறிந்திலன் தமியேன்
கிளைத்தவான் கங்கை நதிச்சடை யவனே
கிளர்தரும் சிற்பர சிவனே.

629. சிற்பர சிவனே தேவர்தம் தலைமைத்
தேவனே தில்லைஅம் பலத்தே
தற்பர நடஞ்செய் தாணுவே அகில
சராசர காரணப் பொருளே
அற்பர்தம் இடஞ்செல் பற்பல துயரால்
அலைதரு கின்றனன் எளியேன்
கற்பகம் அனையநின் திருவருட் கடலில்
களிப்புடன் ஆடுவ தென்றோ.

630. என்றுநின் அருள்நீர் உண்டுவந் திடும்நாள்
என்றுநின் உருவுகண் டிடும்நாள்
என்றுநின் அடியர்க் கேவல்செய் திடும்நாள்
என்றென தகத்துயர் அறும்நாள்
மன்றுள்நின் றாடும் பரஞ்சுடர்க் குன்றே
வானவர் கனவினும் தோன்றா

தோன்றறும் ஒன்றே அருண்மய மான

உத்தம வித்தக மணியே.

631. வித்தகம் அறியேன் வினையினேன் துன்ப

விரிகடல் ஆழ்ந்தனன் அந்தோ

அத்தக வேனை எடுப்பவர் நின்னை

அன்றிஎங் கணும்இலை ஐயா

மத்தகக் கரியின் உரிபுனை பவள

வண்ணனே விண்ணவர் அரசே

புத்தக நிறைவின் அடியவர் வேண்டும்

பொருள்எலாம் புரிந்தருள் பவனே.

632. அருள்பவன் நின்னை அல்லதை இங்கும்

அங்கும்மற் றெங்கும்இன் றதுபோல்

மருள்பவன் என்னை அல்லதை மண்ணும்

வானமும் தேடினும் இன்றே

இருள்பவம் உடையேன் என்செய்கேன் நின்தாள்

இணைதுணை எனநினைந் துற்றேன்

மருள்பவத் தொடும்என் துயர்அறுத் தாள்வாய்

வாழிய அருட்பெருந் துறையே.

திருச்சிற்றம்பலம்

7. அபராதத் தாற்றாமை

திருவொற்றியூர்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

633. துச்சிலை விரும்பித் துயர்கொளும் கொடியேன்

துட்டனேன் தூய்மைஒன் றில்லா

எச்சிலை அனையேன் பாவியேன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

பச்சிலை இடுவார் பக்கமே மருவும்

பரமனே எம்பசு பதியே

அச்சிலை விரும்பும் அவருளத் தமுதே

ஐயனே ஒற்றியூர் அரைசே.

634. தூங்கினேன் சோம்பற் குறைவிட மானேன்

தோகையர் மயக்கிடை அழுந்தி

ஏங்கினேன் அவமே இருந்தனன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

வாங்கிமே ருவினை வளைத்திடும் பவள

மாமணிக் குன்றமே மருந்தே

ஓங்கிவான் அளவும் பொழில்செறி ஒற்றி

யூர்வரும் என்னுடை உயிரே.

635. கரப்பவர்க் கெல்லாம் முற்படும் கொடிய

கடையனேன் விடையமே உடையேன்

இரப்பவர்க் கணுவும் ஈந்திலேன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

திரப்படும் கருணைச் செல்வமே சிவமே

தெய்வமே தெய்வநா யாகமே

உரப்படும் அன்பர் உள்ஒளி விளக்கே

ஒற்றியூர் வாழும்என் உவப்பே.

636. இல்லைஎன் பதனுக் கஞ்சிடேன் நாய்க்கும்

இணையிலேன் இழிவினேன் துயர்க்கோர்

எல்லைமற் றறியேன் ஏதியனேன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

கல்லைவில் ஆக்கும் கருணைவா ரிதியே

கண்ணுதல் உடையசெங் கனியே

தில்லைவாழ் அரசே தெய்வமா மணியே

திருவொற்றி யூர்வரும் தேவே.

637. மண்ணிலே மயங்கும் மனத்தினை மீட்டுன்

மலரடி வழுத்திடச் சிறிதும்

எண்ணிலேன் கொடிய ஏழையேன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

விண்ணிலே விளங்கும் ஒளியினுள் ஒளியே

விடையில்வந் தருள்விழி விருந்தே

கண்ணிலே விளங்கும் அரும்பெறல் மணியே

காட்சியே ஒற்றியங் கரும்பே.

638. முட்டியே மடவார் முலைத்தலை உழக்கும்

முடனேன் முழுப்புலை முறியேன்

எட்டியே அனையேன் பாவியேன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

ஒட்டியே அன்பர் உனத்தெழும் களிப்பே

ஒளிக்குளாம் சோதியே கரும்பின்

கட்டியே தேனே சடையுடைக் கனியே

காலமும் கடந்தவர் கருத்தே.

639. கருதென அடியார் காட்டியும் தேறாக்

கன்மனக் குரங்கனேன் உதவா

எருதென நின்றேன் பாவியேன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

மருதிடை நின்ற மாணிக்க மணியே

வன்பவம் தீர்ந்திடும் மருந்தே

ஒருதிறம் உடையோர் உள்ளத்துள் ஒளியே

ஒற்றியூர் மேவும்என் உறவே.

640. வைதிலேன் வணங்கா திகழ்பவர் தம்மை

வஞ்சனேன் நின்னடி யவர்பால்

எய்திலேன் பேயேன் ஏழையேன் என்னை

என்செய்தால் தீருமோ அறியேன்

கொய்துமா மலரிட் டருச்சனை புரிவோர்

கோலநெஞ் சொளிர்குணக் குன்றே
உய்திறம் உடையோர் பரவுநல் ஒற்றி
யூர்அகத் தமர்ந்தருள் ஒன்றே.
641. தெவ்வண மடவார் சீக்குழி விழுந்தேன்
தீயனேன் பேயனேன் சிறியேன்
எவ்வணம் உய்வேன் என்செய்வேன் என்னை
என்செய்தால் தீருமோ அறியேன்
எவ்வணப் பொருப்பே என்னிரு கண்ணே
இடையிடர்ப் பசியசெம் பொன்னே
செவ்வண மணியே திகழ்குணக் கடலே
திருவொற்றி யூர்ச்செழுந் தேனே.
642. வாதமே புரிவேன் கொடும்புலி அனையேன்
வஞ்சக மனத்தினேன் பொல்லா
ஏதமே உடையேன் என்செய்வேன் என்னை
என்செய்தால் தீருமோ அறியேன்
போதமே ஐந்தாம் பூதமே ஒழியாப்
புனிதமே புதுமணப் பூவே
பாதமே சரணம் சரணம்என் தன்னைப்
பாதுகாத் தளிப்பதுன் பரமே.
திருச்சிற்றம்பலம்
8. காட்சிப் பெருமிதம்

திருவலிதாயம்

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

643. திரைப டாதசெ ழுங்கட லேசற்றும்

உரைப டாமல்ஒ ளிசெய்பொன் னேபுகழ்

வரைப டாதுவ ளர்வல்லி கேசநீ

தரைப டாக்கந்தை சாத்திய தென்கொலோ.

644. சிந்தை நின்றசி வாநந்தச் செல்வமே

எந்தை யேஎமை ஆட்கொண்ட தெய்வமே

தந்தை யேவலி தாயத்த லைவநீ

கந்தை சுற்றும்க ணக்கது என்கொலோ.

645. வேலை கொண்ட விடம்உண்ட கண்டனே

மாலை கொண்ட வளர்வல்லி கேசனே

பாலை கொண்ட பராபர நீபழஞ்

சேலை கொண்ட திறம்இது என்கொலோ

646. பன்னு வார்க்கு ளும்பர மேட்டியே

மன்னும் மாமணி யேவல்லி கேசனே

உள்ள நீஇங்கு டுத்திய கந்தையைத்

துன்னு வார்இல்லை யோபரஞ் சோதியே

647. கடுத்த தும்பிய கண்டஅ கண்டனே

மடுத்த நற்புகழ் வாழ்வல்லி கேசநீ

நித்தம் உற்றநெ டும்பிணி நீங்குமோ.

9

1273.

சைவ சிற்குணர் தம்முளம் மன்னிய

தெய்வ தற்பர னேசிவ னேஇங்கு

உய்வ தற்குன்அ ருள்ஒன்றும் இல்லையேல்

நைவ தற்குந ணுகுவ நோய்களே.

10

Back

65. நெஞ்சுறுத்த திருநேரிசை

திருவொற்றியூர்

நேரிசை வெண்பா

1274.

பொன்னார் விடைக்கொடிஎம் புண்ணியனைப் புங்கவனை

ஒன்னார் புரம்எரித்த உத்தமனை - மன்னாய

அத்தனைநம் ஒற்றியூர் அப்பனைஎல் லாம்வல்ல

சித்தனைநீ வாழ்த்துதிநெஞ் சே.

1

1275.

நெஞ்சே உலக நெறிநின்று நீமயலால்

அஞ்சேல்என் பின்வந் தருள்கண்டாய் - எஞ்சாத்

தவக்கொழுந்தாம் சற்குணவர் தாழ்ந்தேத்தும் ஒற்றிச்

சிவக்கொழுந்தை வாழ்த்துதும்நாம் சென்று. 2

1276.

சென்றுசென்று நல்காத செல்வர்தலை வாயிலிலே

நின்று நின்று வாடுகின்ற நெஞ்சமே - இன்றுதிரு

ஒற்றியப்பன் தாண்மலரை உன்னுதியேல் காதலித்து

மற்றிசைப்ப தெல்லாம் வரும்.

3

1277.

வருநாள் உயிர்வாழும் மாண்பறியோம் நெஞ்சே

ஒருநாளும் நீவேறொன் றுன்னேல் - திருநாளைப்

போவான் தொழுமன்றில் புண்ணியனை ஒற்றியில்தாய்

ஆவான் திருவடிஅல் லால்.

4

1278.

அல்லாலம் உண்டமிடற் றாரமுதை அற்புதத்தைக்

கல்லால நீழல்அமர் கற்பகத்தைச் - சொல்ஆர்ந்த

விண்மணியை என்உயிரை மெய்ப்பொருளை ஒற்றியில்என்

கண்மணியை நெஞ்சே கருது.

5

1279.

கருதாயோ நெஞ்சே கதிகிடைக்க எங்கள்

மருதா எழில்தில்லை மன்னா - எருதேறும்

என்அருமைத் தெய்வதமே என்அருமைச் சற்குருவே

என்அருமை அப்பாவே என்று.

6

1280.

என்றும்உனக் காளாவேன் என்நெஞ்சே வன்நெஞ்சர்

ஒன்றும் இடம் சென்றங் குழலாதே - நன்றுதரும்

ஒற்றியப்பன் பொன்அடியை உன்னுகின்றோர் தம்பதத்தைப்

பற்றிநிற்பை யாகில் பரிந்து.

7

1281.

பரிந்துனக்குச் சொல்கின்றேன் பாவங்கள் எல்லாம்

எரிந்துவிழ நாம்கதியில் ஏறத் - தெரிந்து

விடையானை ஒற்றியூர் வித்தகனை மாதோர்

புடையானை நெஞ்சமே போற்று.

8

1282.

போற்றுதிஎன் நெஞ்சே புரம்நகையால் சுட்டவனை

ஏற்றுகந்த பெம்மானை எம்மவனை - நீற்றொளிசேர்

அவ்வண்ணத் தானை அணிபொழில்சூழ் ஒற்றியூர்ச்

செவ்வண்ணத் தானைத் தெரிந்து.

9

1283.

தெரிந்து நினக்கனந்தம் தெண்டன்இடு கின்றேன்

விரிந்தநெஞ்சே ஒற்றியிடை மேவும் -பரிந்தநெற்றிக்

கண்ணானை மாலயனும் காணப் படாதானை

எண்ணாரை எண்ணாதே என்று.

10

1284.

என்றென் றழுதாய் இலையேஎன் நெஞ்சமே

ஒன்றென்று நின்ற உயர்வுடையான் - நன்றென்ற

செம்மைத் தொழும்பர்தொழும் சீர்ஒற்றி யூர்அண்ணல்

நம்மைத் தொழும்புகொள்ளும் நாள்.

11

1285.

நாளாகு முன்எனது நன்நெஞ்சே ஒற்றியப்பன்

தாளாகும் தாமரைப்பொன் தண்மலர்க்கே - ஆளாகும்

தீர்த்தர் தமக்கடிமை செய்தவர்தம் சீர்ச்சமுகம்

பார்த்துமகிழ் வாய்அதுவே பாங்கு.

12

1286.

பாங்குடையார் மெய்யில் பலித்ததிரு நீறணியாத்

தீங்குடையார் தீமனையில் செல்லாதே - ஓங்குடையாள்

உற்றமர்ந்த பாகத்தெம் ஒற்றியப்பன் பொன்அருளைப்

பெற்றமர்தி நெஞ்சே பெரிது.

13

1287.

பெரியானை மாதர்ப் பிறைக்கண்ணி யானை

அரியானை அங்கணனை ஆர்க்கும் - கரியானைத்

தோலானைச் சீர்ஒற்றிச் சுண்ணவெண் நீற்றானை

மேலானை நெஞ்சே விரும்பு.

14

1288.

விரும்பித் திருமால் விலங்காய் நெடுநாள்

அரும்பித் தளைந்துள் அயர்ந்தே - திரும்பிவிழி

நீர்கொண்டும் காணாத நித்தன்ஒற்றி யூரன்அடிச்

சீர்கொண்டு நெஞ்சே திகழ்.

15

1289.

திகழ்கின்ற ஞானச் செழுஞ்சுடரை வானோர்

புகழ்கின்ற தெய்வத்தைப் போதம் - நிகழ்கின்ற

ஒற்றிக் கனியை உலகுடைய நாயகத்தை

வெற்றித் துணையைநெஞ்சே வேண்டு.

16

1290.

வேண்டாமை வேண்டுவது மேவாத் தவமுடையோர்

தீண்டாமை யாததுநீ தீண்டாதே - ஈண்டாமை

ஒன்றுவபோல் நெஞ்சேநீ ஒன்றிஒற்றி யூரன்பால்

சென்றுதொழு கண்டாய் தினம்.

17

1291.

தினந்தோறும் உள்ளுருகிச் சீர்பாடும் அன்பர்

மனந்தோறும் ஓங்கும் மணியை - இனந்தோறும்

வேதமலர் கின்ற வியன்பொழில்சூழ் ஒற்றிநகர்ப்

போத மலரைநெஞ்சே போற்று.

18

1292.

போற்றார் புரம்பொடித்த புண்ணியனை விண்ணவர்கள்

ஆற்றாத நஞ்சமுண்ட ஆண்தகையைக் - கூற்றாவி

கொள்ளும் கழற்கால் குருமணியை ஒற்றியிடம்

கொள்ளும் பொருளைநெஞ்சே கூறு.

19

1293.

கூறுமையாட் கீந்தருளும் கோமானைச் செஞ்சடையில்

ஆறுமலர்க் கொன்றை அணிவோனைத் - தேறுமனம்

உள்ளவர்கட் குள்ளபடி உள்ளவனை ஒற்றிஅமர்

நள்ளவனை நெஞ்சமே நாடு.

20

1294.

நாடும் சிவாய நமஎன்று நாடுகின்றோர்

கூடும் தவநெறியில் கூடியே - நீடும்அன்பர்

சித்தமனைத் தீபகமாம் சிற்பரனை ஒற்றியூர்

உத்தமனை நெஞ்சமே ஓது.

21

1295.

ஓதுநெறி ஒன்றுளதென் உள்ளமே ஓர்திஅது

தீதுநெறி சேராச் சிவநெறியில் - போதுநெறி

ஓதம் பிடிக்கும்வயல் ஒற்றியப்பன் தொண்டர்திருப்

பாதம் பிடிக்கும் பயன்.

22

1296.

பயன்அறியாய் நெஞ்சே பவஞ்சார்தி மாலோ

டயன்அறியாச் சீருடைய அம்மான் - நயனறியார்

உள்ளத் தடையான் உயர்ஒற்றி யூரவன்வாழ்

உள்ளத் தவரை உறும்.

23

1297.

தவராயி னும்தேவர் தாமாயி னும்மற்

றெவரா யினும்நமக்கிங் கென்னாம் - கவராத

நிந்தை அகன்றிடஎன் நெஞ்சமே ஒற்றியில்வாழ்

எந்தை அடிவணங்கா ரேல்.

24

1298.

ஏலக் குழலார் இடைக்கீழ்ப் படுங்கொடிய

ஞாலக் கிடங்கரினை நம்பாதே - நீல

மணிகண்டா என்றுவந்து வாழ்த்திநெஞ்சே நாளும்

பணிகண்டாய் அன்னோன் பதம்.

25

1299.

பதந்தருவான் செல்வப் பயன்தருவான் மன்னும்

சதந்தருவான் யாவும் தருவான் - இதம்தரும்என்

நெஞ்சம்என்கொல் வாடுகின்றாய் நின்மலா நின்அடியே

தஞ்சமென்றால் ஒற்றியப்பன் தான்.

26

Back

## 66. தனிமைக் கிரங்கல்

### திருவொற்றியூர்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1390.

ஆக்கல் ஆதிய ஐந்தொழில் நடத்த

அயன்முன் ஆகிய ஐவரை அளித்து

நீக்கம் இன்றிஎவ் விடத்தினும் நிறைந்த

நித்த நீஎனும் நிச்சயம் அதனைத்

தாக்க எண்ணியே தாமதப் பாவி

தலைப்பட் டான்அவன் தனைஅகற் றுதற்கே

ஊக்கம் உற்றநின் திருவருள் வேண்டும்

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

1

1391.

கணத்தில் என்னைவிட் டேகுகின் றவன்போல்

காட்டு கின்றனன் மீட்டும்வந் தடுத்துப்

பணத்தும் மண்ணினும் பாவைய ரிடத்தும்

பரவ நெஞ்சினை விரவுகின் றனன்காண்

குணத்தி னில்கொடுந் தாமதன் எனும்இக்

கொடிய வஞ்சகன் ஓடியமெய்ப் போதம்

உணர்த்து வார்இலை என்செய்கேன் எளியேன்

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

2

1302.

இமைக்கும் அவ்வள வேனும்நெஞ் சொடுங்கி

இருக்கக் கண்டிலேன் இழிவுகொள் மலத்தின்

சுமைக்கு நொந்துநொந் தையவோ நாளும்

துயர்கின் றேன்அயர் கின்றஎன் துயரைக்

குமைக்கும் வண்ணம்நின் திருவருள் இன்னும்

கூடப் பெற்றிலேன் கூறுவ தென்னே

உமைக்கு நல்வரம் உதவிய தேவே

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

3

1303.

சென்ற நாளில்ஓர் இறைப்பொழு தேனும்

சிந்தை ஓர்வகை தெளிந்ததன் றதுபோய்

நின்ற நாளினும் நிற்கின்ற நிலைகாண்

நெடிய பாவியேன் நிகழ்த்துவ தென்னே

என்றன் ஆருயிர்க் கொருபெருந் துணையாம்

எந்தை யேஎனை எழுமையும் காத்த

உன்ற னால்இன்னும் உவகைகொள் கின்றேன்

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

4

1304.

கோடி நாவினும் கூறிட அடங்காக்

கொடிய மாயையின் நெடியவாழ்க் கையினை

நாடி நெஞ்சகம் நலிகின்றேன் உனையோர்

நாளும் எண்ணிலேன் நன்கடை வேனே

வாடி னேன்பிழை மனங்கொளல் அழியா

வாழ்வை ஏழையேன் வசஞ்செயல் வேண்டும்

ஊடி னாலும்மெய் அடியரை இகவா

ஒற்றி மேவிய உத்தமப் பொருளே.

5

1305.

அன்ப தென்பதைக் கனவினும் காணேன்

ஆடு கின்றனன் அன்பரைப் போல

வன்ப வத்தையும் மாய்த்திட நினைத்தேன்

வஞ்ச நெஞ்சினை வசப்படுக் கில்லேன்

துன்ப வாழ்க்கையில் சுழல்கின்றேன் நின்னைத்

தொழுது வாழ்த்திநல் சுகம்பெறு வேனே

ஒன்ப தாகிய உருவுடைப் பெரியோய்

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

6

1396.

முன்னை நான்செய்த வல்வினை இரண்டின்

முடிவு தேர்ந்திலன் வழிவெடுத் துலகில்

என்னை நான்கண்ட தந்தநாள் தொடங்கி

இந்த நாள்மட்டும் இருள் என்ப தல்லால்

பின்னை யாதொன்றும் பெற்றிலேன் இதனைப்

பேச என்னுளம் கூசுகின் றதுகாண்

உன்னை நம்பினேன் நின்குறிப் புணரேன்

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

7

1397.

கண்ணி லான்சுடர் காணிய விழைந்த

கருத்தை ஒத்தஎன் கருத்தினை முடிப்பத்

தெண்ணி லாமுடிச் சிவபரம் பொருள்நின்

சித்தம் எப்படி தெரிந்திலன் எளியேன்

பண்ணி லாவிய பாடலந் தொடைநின்

பாத பங்கயம் பதிவுறப் புனைவோர்

உண்ணி லாவிய ஆனந்தப் பெருக்கே

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

8

1398.

உண்மை நின்அருட் சுகம்பிற எல்லாம்

உண்மை அன்றென உணர்த்தியும் எனது

பெண்மை நெஞ்சகம் வெண்மைகொண் டுலகப்

பித்தி லேஇன்னும் தொத்துகின் றதுகாண்

வண்மை ஒன்றிலேன் எண்மையின் அந்தோ

வருந்து கின்றனன் வாழ்வடை வேனோ

ஒண்மை அம்பலத் தொளிசெயும் சுடரே

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

9

1309.

நையு மாறெனைக் காமமா திகள்தாம்

நணுகி வஞ்சகம் நாட்டுகின் றதுநான்

செய்யு மாறிதற் கறிந்திலன் எந்தாய்

திகைக்கின் றேன் அருள் திறம்பெறு வேனோ

வையு மாறிலா வண்கையர் உளத்தின்

மன்னி வாழ்கின்ற மாமணிக் குன்றே

உய்யு மாறருள் அம்பலத் தமுதே

ஒற்றி ஓங்கிய உத்தமப் பொருளே.

10

Back

67. கருணை பெறா திரங்கல்

பொது

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1310.

நன்றி ஒன்றிய நின்னடி யவர்க்கே

நானும் இங்கொரு நாயடி யவன்காண்

குன்றின் ஒன்றிய இடர்மிக உடையேன்

குற்றம் நீக்கும்நல் குணமிலேன் எனினும்

என்றின் ஒன்றிய சிவபரஞ் சுடரே

இன்ப வாரியே என்னுயிர்த் துணையே

ஒன்றின் ஒன்றிய உத்தமப் பொருளே

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

1

1311.

தீது செய்தனன் செய்கின்றேன் செய்வேன்

தீய னேன்கொடுந் தீக்குண இயல்பே

ஏது செய்தன னேனும்என் தன்னை

ஏன்று கொள்வதெம் இறைவநின் இயல்பே

ஈது செய்தனை என்னைவிட் டுலகில்

இடர்கொண் டேங்கென இயம்பிடல் அடியேன்

ஓது செய்வதொன் றென்னுயிர்த் துணையே

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

2

1312.

சென்ற நாளினும் செல்கின்ற நாளில்

சிறிய னேன்மிகத் தியங்குறு கின்றேன்

மன்ற நான்இவண் இவ்வகை ஆனால்

வள்ள லேநினை வழுத்துமா றெதுவோ

என்ற னால்இனி ஆவதொன் றிலைஉன்

எண்ணம் எப்படி அப்படி இசைக

உன்ற னால்களித் துவகைகொள் கின்றேன்

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

3

1313.

மையல் வாழ்க்கையில் நாள்தொறும் அடியேன்

வருந்தி நெஞ்சகம் மாழ்குவ தெல்லாம்

ஐய ஐயவோ கண்டிடா தவர்போல்

அடம்பி டிப்பதுன் அருளினுக் கழகோ

செய்ய மேல்ஒன்றும் அறிந்திலன் சிவனே

தில்லை மன்றிடைத் தென்முக நோக்கி

உய்ய வைத்ததாள் நம்பிநிற் கின்றேன்

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

4

1314.

மண்ண கச்சிறு வாழ்க்கையின் பொருட்டால்

வருந்தி மற்றதன் வன்மைகள் எல்லாம்

எண்ண எண்ணஎன் நெஞ்சகம் பதைப்புற்

றேங்கி ஏங்கிநான் இளைப்புறு கின்றேன்

அண்ணல் நின்திரு அருட்டுணை அடைந்தால்

அமைந்து வாழ்குவன் அடைவகை அறியேன்

உண்ண நல்அமு தனையஎம் பெருமான்

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

5

1315.

அன்னை அப்பனும் நீஎன மகிழ்ந்தே

அகங்கு ளிர்ந்துநான் ஆதரித் திருந்தேன்

என்னை இப்படி இடர்கொள விடுத்தால்

என்செய் கேன்இதை யாரொடு புகல்கேன்

பொன்னை ஒத்தநின் அடித்துணை மலரைப்

போற்று வார்க்குநீ புரிகுவ திதுவோ

உன்னை எப்படி ஆயினும் மறவேன்

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

6

1316.

நீலம் இட்டகண் மடவியர் மயக்கால்

நெஞ்சம் ஓர்வழி நான்ஒரு வழியாய்

ஞாலம் இட்ட இவ் வாழ்க்கையில் அடியேன்

நடுங்கி உள்ளகம் நலியும்என் தன்மை

ஆலம் இட்டருள் களத்தநீ அறிந்தும்

அருள்அ ளித்திலை ஆகமற் றிதனை

ஓலம் இட்டழு தரற்றிஎங் குரைப்பேன்

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

7

1317.

கொடிய பாவியேன் படும்பரி தாபம்

குறித்துக் கண்டும்என் குறைஅகற் றாது

நெடிய காலமும் தாழ்த்தனை நினது

நெஞ்சும் வஞ்சகம் நேர்ந்ததுண் டேயோ

அடியர் தந்துயர் கண்டிடில் தரியார்

ஐயர் என்பர்என் அளவஃ திலையோ

ஒடிய மாதுயர் நீக்கிடாய் என்னில்

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

8

1318.

என்என் றேழையேன் நாணம்விட் டுரைப்பேன்

இறைவ நின்றனை இறைப்பொழு தேனும்

உன்னென் றால்என துரைமறுத் தெதிராய்

உலக மாயையில் திலகமென் றுரைக்கும்

மின்னென் றால்இடை மடவியர் மயக்கில்

வீழ்ந்தென் நெஞ்சகம் ஆழ்ந்துவிட் டதனால்

உன்அன் பென்பதென் னிடத்திலை யேனும்

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

9

1319.

அடிய னேன்மிசை ஆண்டவ நினக்கோர்

அன்பி ருந்ததென் றகங்கரித் திருந்தேன்

கொடிய னேன்படும் இடர்முழு தறிந்தும்

கூலி யாளனைப் போல்எனை நினைத்தே

நெடிய இத்துணைப் போதும்ஓர் சிறிதும்

நெஞ்சி ரங்கிலை சஞ்சலத் தறிவும்

ஒடிய நின்றனன் என்செய்கேன் சிவனே

உனைஅ லால்எனை உடையவர் எவரே.

10

Back

68. அர்ப்பித் திரங்கல்

பொது

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1320.

தம்பி ரான்தய விருக்கஇங் கெனக்கோர்
தாழ்வுண் டோ எனத் தருக்கொடும் இருந்தேன்
எம்பி ரான்நினக் கேழையேன் அளவில்
இரக்கம் ஒன்றிலை என்என்ப தின்னும்
நம்பி ரான்என நம்பிநிற் கின்றேன்
நம்பும் என்றனை வெம்பிடச் செயினும்
செம்பி ரான்அருள் அளிக்கினும் உனது
சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

1

1321

துட்ட நெஞ்சக வஞ்சகக் கொடியேன்
சொல்வ தென்னைஎன் தொல்வினை வசத்தால்
இட்ட நல்வழி அல்வழி எனவே
எண்ணும் இவ்வழி இரண்டிடை எனைநீ
விட்ட தெவ்வழி அவ்வழி அகன்றே
வேறும் ஓர்வழி மேவிடப் படுமோ
சிட்டர் உள்ளுறும் சிவபெரு மான்நின்
சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

2

1322.

ஊட்டு கின்றனை உண்ணுகின் றனன்மேல்

உறக்கு கின்றனை உறங்குகின் றனன்பின்

காட்டு கின்றனை காணுகின் றனன்நீ

களிப்பிக் கின்றனை களிப்புறு கின்றேன்

ஆட்டு கின்றனை ஆடுகின் றனன்இவ்

அகில கோடியும் அவ்வகை யானால்

தீட்டும் அன்பருக் கன்பநின் தனது

சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

3

1323.

கண்ணி லான்சுடர் காணஉன் னுதல்போல்

கருத்தி லேனும்நின் கருணையை விழைந்தேன்

எண்ணி லாஇடை யூறடுத் ததனால்

இளைக்கின் றேன்எனை ஏன்றுகொள் வதற்கென்

உண்ணி லாவிய உயிர்க்குயிர் அனையாய்

உன்னை ஒத்ததோர் முன்னவர் இலைகாண்

தெண்ணி லாமுடிச் சிவபரம் பொருள்நின்

சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

4

1324.

மெச்சு கின்றவர் வேண்டிய எல்லாம்

விழிஇ மைக்குமுன் மேவல்கண் டுனைநான்

நச்சு கின்றனன் நச்சினும் கொடியேன்

நன்மை எய்தவோ வன்மையுற் றிடவோ

இச்சை நன்றறி வாய்அருள் செய்யா

திருக்கின் றாய் உனக் கியான்செய்த தென்னே

செச்சை மேனிஎம் சிவபரஞ் சுடர்நின்

சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

5

1325.

நாடுந் தாயினும் நல்லவன் நமது

நாதன் என்றுனை நாடும்அப் பொழுதே

வாடு நெஞ்சம் தளிர்க்கின்றேன் மற்றை

வைகற் போதெலாம் வாடுகின் றனன்காண்

பாடுந் தொண்டர்கள் இடர்ப்படில் தரியாப்

பண்பென் மட்டும்நின் பால்இலை போலும்

தேடும் பத்தர்தம் உளத்தமர் வோய்நின்

சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

6

1326.

மருள்அ ளித்தெனை மயக்கிஇவ் உலகில்

வருத்து கின்றனை மற்றெனக் குன்றன்

அருள்அ ளிக்கிலை ஆயினும் நினக்கே

அடிமை யாக்கிலை ஆயினும் வேற்றுப்

பொருள்அ ளிக்கிலை ஆயினும் ஒருநின்

பொன்மு கத்தைஓர் போது கண் டிடவே

தெருள்அ ளித்திடில் போதும் இங் குனது

சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

7

1327.

மாறு கின்றனன் நெஞ்சகம் அஞ்சி

வள்ளல் இத்துணை வந்திலன் இனிமேல்

கூறு கின்றதென் என்றயர் கின்றேன்

குலவித் தேற்றும்அக் கொள்கையர் இன்றி

ஏறு கின்றனன் இரக்கமுள் ளவன்நம்

இறைவன் இன்றருள் ஈகுவன் என்றே

தேறு கின்றனன் என்செய்கேன் நினது

சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

8

1328.

தாயி னும்பெருந் தயவுடை யவன்நந்

தலைவன் என்றுநான் தருக்கொடும் திரிந்தேன்

நாயி னும்கடை யேன்படும் இடரை
நாளும் கண்டனை நல்அருள் செய்யாய்
ஆயி னும்திரு முகங்கண்டு மகிழும்
அன்பர் தம்பணி ஆற்றிமற் றுடலம்
தேயி னும்மிக நன்றெனக் கருள்உன்
சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

9

1329.

வானும் வையமும் அளிக்கினும் உன்பால்
மனம்வைத் தோங்குவர் வள்ளல்நின் அடியார்
நானும் அவ்வகை உலகியல் ஒழுக்கில்
நாடி நின்னருள் நலம்பெற விழைதல்
கூனும் ஓர்முடக் கண்ணிலி வானில்
குலவும் ஒண்சுடர் குறித்திடல் போலும்
தேனும் கைக்கும்நின் அருளுண்டேல் உண்டுன்
சித்தம் அன்றியான் செய்வதொன் றிலையே.

10

Back

69. கழிபகற் கிரங்கல்

பொது

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1330.

ஆண்ட துண்டுநீ என்றனை அடியேன்

ஆக்கை ஒன்றுமே அசைமடற் பனைபோல்

நீண்ட துண்டுமற் றுன்னடிக் கன்பே

நீண்ட தில்லைவல் நெறிசெலும் ஒழுக்கம்

பூண்ட துண்டுநின் புனிதநல் ஒழுக்கே

பூண்ட தில்லைஎன் புன்மையை நோக்கி

ஈண்ட வந்தருள் ளாய்எனில் அந்தோ

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

1

1331.

ஊழை யேமிக நொந்திடு வேனோ

உளத்தை நோவனோ உலகிடை மயக்கும்

பாழை யேபலன் தருவதென் றெண்ணிப்

பாவி யேன்பெரும் படர்உழக் கின்றேன்

மாழை யேர்திரு மேனிஎம் பெருமான்

மனம்இ ரங்கிஎன் வல்வினை கெடவந்

தேழை யேற்கருள் ளாய்எனில் அந்தோ

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

2

1332.

ஈன்று கொண்டஎன் தந்தையும் தாயும்

யாவும் நீஎன எண்ணிய நாயேன்

மான்று கொண்டஇவ் வஞ்சக வாழ்வின்

மயக்கி னால்மிக வன்மைகள் செய்தேன்

சான்று கொண்டது கண்டனை யேனும்

தமிய னேன்மிசைத் தயவுகொண் டென்னை

ஏன்று கொண்டரு ளாய்எனில் அந்தோ

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

3

1333.

அம்மை அப்பன்என் ஆருயிர்த் துணைவன்

அரசன் தேசிகன் அன்புடைத் தேவன்

இம்மை யிற்பயன் அம்மையிற் பயன்மற்

றியாவு நீஎன எண்ணிநிற் கின்றேன்

செம்மை யிற்பெறும் அன்பருள் ளகஞ்சேர்

செல்வ மேஎனைச் சேர்த்தரு ளாயேல்

எம்மை யிற்பெறு வேன்சிறு நாயேன்

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

4

1334.

தாய ராதியர் சலிப்புறு கிற்பார்

தமரும் என்றனைத் தழுவுதல் ஒழிவார்

நேய ராதியர் நேயம்விட் டகல்வார்

நின்னை நம்பிஎன் நெஞ்சுவக் கின்றேன்

தீய ராதியில் தீயன்என் றெனைநின்

திருவு ளத்திடைச் சேர்த்திடா தொழித்தால்

ஏயர் கோனுக்கன் றருளும்எம் பெருமான்

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

5

1335.

முன்னை நான்செய்த வல்வினைச் சிமிழ்ப்பான்

மோக வாரியின் மூழ்கின னேனும்

அன்னை போலும்என் ஆருயிர்த் துணையாம்

அப்ப நின்அருள் அம்பியை நம்பி

தன்னை நேர்சிவ ஞானமென் கரையைச்

சார்கு வேம்எனும் தருக்குடன் உழன்றேன்

இன்னும் நின்அருள் ஈந்திலை அந்தோ

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

6

1336.

உண்ணு கின்றதும் உறங்குகின் றதும்மேல்

உடுத்து கின்றதும் உலவுகின் றதும்மால்

நண்ணு கின்றதும் நங்கையர் வாழ்க்கை

நாடு கின்றதும் நவையுடைத் தொழில்கள்

பண்ணு கின்றதும் ஆனபின் உடலைப்

பாடை மேலுறப் படுத்துகின் றதும்என்

றெண்ணு கின்றதோ றுளம்பதைக் கின்றேன்

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

7

1337.

கல்லை வெல்லவும் வல்லஎன் மனந்தான்

கடவுள் நின்அடிக் கமலங்கள் நினைத்தல்

இல்லை நல்லைநின் அருள்எனக் கதனால்

இல்லை இல்லைநீ இரக்கம்இல் லாதான்

அல்லை இல்லையால் அருள்தரா திருத்தல்

அடிய னேன்அள வாயின்இங் கிடர்க்கே

எல்லை இல்லைஎன் றுளம்பதைக் கின்றேன்

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

8

1338.

பொங்கு மாயையின் புணர்ப்பினுக் குள்ளம்

போக்கி நின்றதும் புலப்பகை வர்களால்

இங்கு மால்அரி ஏற்றின்முன் கரிபோல்

ஏங்கு கின்றதும் இடர்ப்பெருங் கடலில்

தங்கும் ஆசையங் கராப்பிடித் தீர்க்கத்

தவிப்பில் நின்றதும் தமியனேன் தனையும்

எங்கும் ஆகிநின் றாய்அறிந் திலையோ

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

9

1339.

அரக்கன் அல்லன்யான் அரக்கனே எனினும்

அரக்க னுக்கும்முன் அருள்அளித் தனையே

புரக்க என்னைநின் அருட்கடன் என்றே

போற்று கின்றனன் புலையரிற் புலையேன்

உரக்க இங்கிழைத் திடும்பிழை எல்லாம்

உன்னல் ஐயநீ உன்னிஎன் அளவில்

இரக்கம் நின்திரு உளத்திலை யானால்

என்செய் கேன்நர கிடைஇடும் போதே.

10

Back

## 70. தரிசனப் பதிகம்

### கோயில்

அறுசீர்க்(33) கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

(33). எழுசீர் - தொ.வே 1,2. அறுசீர் - ச. மு. க., ஆ. பா.

1340.

திருவார் பொன்னம் பலநடுவே தெள்ளார் அமுதத் திரள்அனைய

உருவார் அறிவா னந்தநடம் உடையார் அடியார்க் குவகைநிலை

தருவார் அவர்தம் திருமுகத்தே ததும்பும் இளவெண்
ணகைகண்டேன்

இருவா தனைஅற் றந்தோநான் இன்னும் ஒருகால் காண்பேனோ.

1

1341.

பொன்நா யகனும் புரந்தரனும் பூவாழ் பவனும் புகழ்ந்தேத்த

மின்னார் பொன்னம் பலநடுவே விளங்கும் கருணை விழிவழங்கும்

அன்னார் அறிவா னந்தநடம் ஆடும் கழல்கண் டகங்குளிர்ந்தேன்

என்நா யகனார் அவர்கழலை இன்னும் ஒருகால் காண்பேனோ.

2

1342.

தாயிற் பெரிய கருணையினார் தலைமா லையினார் தாழ்சடையார்

வாயிற் கினிய புகழுடைய வள்ளல் அவர்தந் திருஅழகைக்

கோயிற் கருகே சென்றுமனம் குளிரக் கண்டேன் பிரிவுற்றேன்

ஈயில் சிறியேன் அவர்அழகை இன்னும் ஒருகால் காண்பேனோ.

3

1343.

புன்கண் அகற்றும் மெய்யடியார் போற்றும் பொன்னம் பலநடுவே

வன்கண் அறியார் திருநடஞ்செய் வரதர் அமுதத் திருமுகத்தை

முன்கண் உலகில் சிறியேன்செய் முழுமா தவத்தால் கண்டேன்நான்

என்கண் அனையார் அவர்முகத்தை இன்னும் ஒருகால் காண்பேனோ. 4

1344.

அன்புற் றடியார் தொழுதேத்த அணியார் மணிப்பொன் அம்பலத்தே

வன்புற் றழியாப் பெருங்கருணை மலையார் தலையார் மாலையினார்

மன்புற் றரவார் கச்சிடையின் வயங்க நடஞ்செய் வதுகண்டேன்

இன்புற் றடியேன் அவர்நடத்தை இன்னும் ஒருகால் காண்பேனோ. 5

1345.

இம்மா நிலத்தில் சிவபதமீ தென்னும் பொன்னம் பலநடுவே

அம்மால் அறியா அடிகள்அடி அசைய நடஞ்செய் வதுகண்டேன்

எம்மால் அறியப் படுவதல என்என் றுரைப்பேன் ஏழையன்யான்

எம்மான் அவர்தந் திருநடத்தை இன்னும் ஒருகால் காண்பேனோ. 6

1346.

சிறியேன் தவமோ எனைஈன்றாள் செய்த தவமோ யான்அறியேன்

மறியேர் கரத்தார் அம்பலத்தே வாழும் சிவனார் தமைக்கண்டேன்

பிறியேன் எனினும் பிரிந்தேன்நான் பேயேன் அந்தப்
பிரிவினைக்கீழ்

எறியேன் அந்தோ அவர்தம்மை இன்னும் ஒருகால் காண்பேனோ.
7

1347.

அருளே வடிவாய் அம்பலத்தே ஆடும் பெருமான் அடிகள்தமைத்

தெருளே வடிவாம் அடியவர்போல் சிறியேன் கண்டேன்
சீர்உற்றேன்

மருளே வடிவேன் ஆதலினால் மறந்தே பிரிந்தே மதிகெட்டேன்

இருளேர் மனத்தேன் அவர்தமைநான் இன்னும் ஒருகால்
காண்பேனோ. 8

1348.

அன்னோ திருஅம் பலத்தேஎம் ஐயர் உருக்கண் டேன்அதுதான்

பொன்னோ பவளப் பொருப்பதுவோ புதுமா ணிக்க மணித்திரளோ

மின்னோ விளக்கோ விரிசுடரோ மேலை ஒளியோ என்
உரைப்பேன்

என்னோ அவர்தந் திருஉருவை இன்னும் ஒருகால்
காண்பேனோ. 9

1349.

பொன்என் றுரைக்கும் அம்பலத்தே புனித னார்தம் அழகியலை

உன்என் றுரைப்பேன் என்னேஎன் உள்ளம் சிறிதும்
உணர்ந்ததிலை

மின்என் றுரைக்கும் படிமூன்று விளக்கும் மழுங்கும் எனில்அடியேன்

என்என் றுரைப்பேன் அவர்அழகை இன்னும் ஒருகால் காண்பேனோ. 10

Back

71. முத்தி உபாயம்

திருவொற்றியூர்

வஞ்சித்துறை

1350.

ஒற்றி ஊரனைப்

பற்றி நெஞ்சமே

நிற்றி நீஅருள்

பெற்றி சேரவே.

1

1351.

சேர நெஞ்சமே

தூரம் அன்றுகாண்

வாரம் வைத்தியேல்

சாரும் முத்தியே.

2

1352.

முத்தி வேண்டுமேல்

பத்தி வேண்டுமால்

சத்தி யம்இது

புத்தி நெஞ்சமே.

3

1353.

நெஞ்ச மேஇது

வஞ்ச மேஅல

பிஞ்ச கன்பதம்

தஞ்சம் என்பதே.

4

1354.

என்ப தேற்றவன்

அன்ப தேற்றுநீ

வன்பு மாற்றுதி

இன்பம் ஊற்றவே.

5

1355.

ஊற்றம் உற்றுவெண்

நீற்றன் ஒற்றியூர்

போற்ற நீங்குமால்

ஆற்ற நோய்களே.

6

1356.

நோய்கள் கொண்டிடும்

பேய்கள் பற்பலர்

தூய்தன் ஒற்றியூர்க்

கேய்தல் இல்லையே.

7

1357.

இல்லை இல்லைகாண்

ஒல்லை ஒற்றியூர்

எல்லை சேரவே

அல்லல் என்பதே.

8

1358.

அல்லல் என்பதேன்

தொல்லை நெஞ்சமே

மல்லல் ஒற்றியூர்

எல்லை சென்றுமே.

9

1359.

சென்று வாழ்த்துதி

நன்று நெஞ்சமே

என்றும் நல்வளம்

ஒன்றும் ஒற்றியே.

10

Back

72. தவத்திறம் போற்றல்

திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1360.

வில்வத் தொடும்பொன் கொன்றைஅணி வேணிப் பெருமான் ஒற்றிநகர்

செல்வப் பெருமான் சிவபெருமான் தியாகப் பெருமான் திருஅழகைக்

கல்வைப் புடைய மனம்களிக்கக் கண்கள் களிக்கக் கண்டுநின்றேன்

இல்வைப் புடையேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

1

1361.

கூடும் படிமுன் திருமாலும் கோல மாகிப் புவி இடந்து

தேடும் திருத்தாள் சிவபெருமான் தியாகப் பெருமான் திருப்பவனி

நாடும் புகழ்சேர் ஒற்றிநகர் நாடிப் புகுந்து கண்டேனால்

ஈடும் அகன்றேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

2

1362.

ஆர்க்கும் கடற்கண் அன்றெழுந்த ஆல காலம் அத்தனையும்

சேர்க்கும் களத்தான் சிவபெருமான் தியாகப் பெருமான் திருநடத்தைக்

கார்க்கண் பொழில்சூழ் ஒற்றியில்போய்க் கண்டேன் பிறவி கண்டிலனே

யார்க்கென் றுரைப்பேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

3

1363.

உள்ளும் புறமும் நிறைந்தடியார் உள்ளம் மதுரித் தூறுகின்ற

தெள்ளும் அமுதாம் சிவபெருமான் தியாகப் பெருமான் திருமுகத்தைக்

கள்ளம் தவிர்க்கும் ஒற்றியில்போய்க் கண்டேன் பசியைக் கண்டிலனே

எள்ளல் இகந்தேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

4

1364.

ஆவல் உடையார் உள்ளுடையார் அயன்மால் மகவான் ஆதியராம்

தேவர் பெருமான் சிவபெருமான் தியாகப் பெருமான் திருவடிவைக்

காவம் பொழில்சூழ் ஒற்றியில்போய்க் கண்டேன் கண்ட காட்சிதனை

யாவர் பெறுவார் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

5

1365.

மறப்பை அகன்ற மனத்துரவோர் வாழ்த்த அவர்க்கு வான்கதியின்

சிறப்பை அளிக்கும் சிவபெருமான் தியாகப் பெருமான் திருநடத்தைப்

பிறப்பை அகற்றும் ஒற்றியில்போய்ப் பேரா னந்தம் பெறக்கண்டேன்

இறப்பைத் தவிர்த்தேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

6

1366.

வில்லாம் படிப்பொன் மேருவினை விரைய வாங்கும் வெற்றியினான்

செல்லாம் கருணைச் சிவபெருமான் தியாகப் பெருமான் திருகூத்தைக்

கல்லாம் கொடிய மனம்கரையக் கண்டேன் பண்டு காணாத

எல்லாம் கண்டேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

7

1367.

ஒல்லை எயில்மூன் றெரிகொளுவ உற்று நகைத்தோன் ஒற்றியுளான்

தில்லை நகரான் சிவபெருமான் தியாகப் பெருமான் திருப்பவனி

கல்லை அளியும் கனியாக்கக் கண்டேன் கொண்ட களிப்பினுக்கோர்

எல்லை அறியேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

8

1368.

துன்னும் சோம சுந்தரனார் தூய மதுரை நகர்அளித்த

தென்னர் பெருமான் சிவபெருமான் தியாகப் பெருமான் திருஅழகைப்

பன்னும் ஒற்றி நகர்தன்னில் பார்த்தேன் வினைபோம் வழிபார்த்த

என்னை மறந்தேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

9

1369.

முன்னம் காழி வள்ளலுக்கு முத்துச் சிவிகை குடையொடுபொன்

சின்னம் அளித்தோன் சிவபெருமான் தியாகப் பெருமான் திருவடியைக்

கன்னின் றுருகா நெஞ்சுருகக் கண்டேன் கண்ட காட்சிதனை

என்என் றுரைப்பேன் அம்மாநான் என்ன தவந்தான் செய்தேனோ.

10

Back

73. திருச்சாதனத் தெய்வத் திறம்

பொது

எண்சீர்க்(34)கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

( 34). எழுசீர்- தொ.வே. 1,2. எண்சீர்- ச.மு.க., ஆ.பா.

1370.

உடையாய்உன் அடியவர்க்கும் அவர்மேல் பூண்ட

ஒண்மணியாம் கண்மணிக்கும் ஓங்கு சைவ

அடையாளம் என்னஒளிர் வெண்ணீற் றுக்கும்

அன்பிலேன் அஞ்சாமல் அந்தோ அந்தோ

நடையாய உடல் முழுதும் நாவாய் நின்று

நவில்கின்றேன் என்பாவி நாவைச் சற்றும்

இடையாத கொடுந்தீயால் சுடினும் அன்றி

என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

1

1371.

கண்ணுதலே நின்அடியார் தமையும் நோக்கேன்

கண்மணிமா லைக்கெனினும் கனிந்து நில்லேன்

பண்ணுதல்சேர் திருநீற்றுக் கோலம் தன்னைப்

பார்த்தேனும் அஞ்சுகிலேன் பயனி லாமே

நண்ணுதல்சேர் உடம்பெல்லாம் நாவாய் நின்று

நவில்கின்றேன் என்கொடிய நாவை அந்தோ

எண்ணுதல்சேர் கொடுந்தீயால் சுடினும் அன்றி

என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

2

1372.

வஞ்சமிலார் நெஞ்சகத்தே மருவும் முக்கண்

மாமணியே உனைநினையேன் வாளா நாளைக்

கஞ்சமலர் முகத்தியர்க்கும் வாதில் தோன்றும்

களிப்பினுக்கும் கழிக்கின்றேன் கடைய னேனை

நஞ்சமுணக் கொடுத்துமடித் திடினும் வாளால்

நசிப்புறவே துணித்திடினும் நலியத் தீயால்

எஞ்சலுறச் சுடினும்அன்றி அந்தோ இன்னும்

என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

3

1373.

அருள்பழுக்கும் கற்பகமே அரசே முக்கண்

ஆரமுதே நினைப்புகழேன் அந்தோ வஞ்ச

மருள்பழுக்கும் நெஞ்சகத்தேன் வாளா நாளை

வாதமிட்டுக் கழிக்கின்றேன் மதியி லேனை

வெருள்பழுக்கும் கடுங்காட்டில் விடினும் ஆற்று

வெள்ளத்தில் அடித்தேக விடினும் பொல்லா

இருள்பழுக்கும் பிலஞ்சேர விடினும் அன்றி

என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

4

1374.

பெருங்கருணைக் கடலேஎன் குருவே முக்கண்

பெருமானே நினைப்புகழேன் பேயேன் அந்தோ

கருங்கல்மனக் குரங்காட்டி வாளா நாளைக்

கழிக்கின்றேன் பயன்அறியாக் கடைய னேனை

ஒருங்குருள உடல்பதைப்ப உறுங்குன் றேற்றி

உருட்டுகினும் உயிர்நடுங்க உள்ளம் ஏங்க

இருங்கழுவில் ஏற்றுகினும் அன்றி இன்னும்

என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

5

1375.

தொழுகின்றோர் உளத்தமர்ந்த சுடரே முக்கண்

சுடர்க்கொழுந்தே நின்பதத்தைத் துதியேன் வாதில்

விழுகின்றேன் நல்லோர்கள் வெறுப்பப் பேசி

வெறித்துழலும் நாயனையேன் விழல னேனை

உழுகின்ற நுகப்படைகொண் டுலையத் தள்ளி

உழக்கினும்நெட் டுடல்நடுங்க உறுக்கி மேன்மேல்

எழுகின்ற கடலிடைவீழ்த் திடினும் அன்றி

என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

6

1376.

விருப்பாகும் மதிச்சடையாய் விடையாய் என்றே
மெய்யன்போ டுனைத்துதியேன் விரைந்து வஞ்சக்
கருப்பாயும் விலங்கெனவே வளர்ந்தே நாளைக்
கழிக்கின்றேன் கருநெஞ்சக் கள்வ னேனைப்
பொருப்பாய யானையின் கால் இடினும் பொல்லாப்
புழுத்தலையில் சோரிபுறம் பொழிய நீண்ட
இருப்பாணி ஏற்றுகினும் அன்றி இன்னும்
என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

7

1377.

அக்கநுதல் பிறைச்சடையாய் நின்தாள் ஏத்தேன்
ஆண்பனைபோல் மிகநீண்டேன் அறிவொன் றில்லேன்
மிக்கவுதி போல்பருத்தேன் கருங்க டாப்போல்
வீண்கருமத் துழல்கின்றேன் விழல னேனைச்
செக்கிடைவைத் துடல்குழம்பிச் சிதைய அந்தோ
திருப்பிடினும் இருப்பறைமுட் சேரச் சேர்த்து
எக்கரிடை உருட்டுகினும் அன்றி இன்னும்
என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

8

1378.

அன்புடன்நின் பதம்புகழாப் பாவி நாவை
அறத்துணியேன் நின்அழகை அமர்ந்து காணாத்
துன்புறுகண் இரண்டினையும் சூன்றேன் நின்னைத்
தொழாக்கையை வாளதனால் துண்ட மாக்கேன்
வன்பறநின் தனைவணங்காத் தலையை அந்தோ
மடித்திலேன் ஓதியேபோல் வளர்ந்தேன் என்னை
இன்பறுவல் எரியிடைவீழ்த் திடினும் அன்றி
என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

9

1379.

தேவேநின் அடிநினையா வஞ்ச நெஞ்சைத்
தீமூட்டிச் சிதைக்கறியேன் செதுக்கு கில்லேன்
கோவேநின் அடியர்தமைக் கூடாப் பொய்மைக்
குடிகொண்டேன் புலைகொண்ட கொடியேன் அந்தோ
நாவேற நினைத்துதியேன் நலமொன் றில்லேன்
நாய்க்கடைக்கும் கடைப்பட்டேன் நண்ணு கின்றோர்க்
கீவேதும் அறியேன்இங் கென்னை யந்தோ
என்செயினும் போதாதே எந்தாய் எந்தாய்.

10

Back

74. உள்ளப் பஞ்சகம்

பொது

கட்டளைக் கலித்துறை

1380.

நீரார் சடையது நீண்மால் விடையது நேர்கொள்கொன்றைத்

தாரார் முடியது சீரார் அடியது தாழ்வகற்றும்

பேரா யிரத்தது பேரா வரத்தது பேருலகம்

ஓரா வளத்ததொன் றுண்டேமுக் கண்ணொடென் உள்ளகத்தே.

1

1381.

மட்டுப் படாதது மாமறை யாலும் மலப்பகையால்

கட்டுப் படாதது மாலா தியர்தம் கருத்தினுக்கும்

தட்டுப் படாதது பார்முதல் பூதத் தடைகளினால்

ஒட்டுப் படாததொன் றுண்டேமுக் கண்ணொடென் உள்ளகத்தே.

2

1382.

பேதப் படாதது பற்பல கற்பங்கள் பேர்ந்திடினும்

சேதப் படாதது நன்றிது தீதெனச் செய்கைகளால்

ஏதப் படாததுள் எட்டப் படாததிங் கியாவர்கட்கும்

ஓதப் படாததொன் றுண்டேமுக் கண்ணொடென் உள்ளகத்தே.

3

1383.

தண்ணார் அளியது விண்ணோர் ஒளியது சாற்றுமறைப்

பண்ணார் முடிவது பெண்ணார் வடிவது பண்புயர்தீக்

கண்ணார் நுதலது கண்ணார் மணியது கண்டுகொள்ள

ஒண்ணா நிலையதொன் றுண்டேமுக் கண்ணொடென் உள்ளகத்தே.

4

1384.

பிறவா நெறியது பேசா நிலையது பேசில்என்றும்

இறவா உருவதுள் ஏற்றால் வருவ திருள்அகன்றோர்

மறவா துடையது மாதோர் புடையது வாழ்த்துகின்றோர்

உறவாய் இருப்பதொன் றுண்டேமுக் கண்ணொடென் உள்ளகத்தே.

5

Back

75. வடிவுடை மாணிக்க மாலை

காப்பு

கட்டளைக் கலித்துறை

1385.

சீர்கொண்ட ஒற்றிப் பதியுடை யானிடம் சேர்ந்தமணி

வார்கொண்ட கொங்கை வடிவாம் பிகைதன் மலரடிக்குத்

தார்கொண்ட செந்தமிழ்ப் பாமாலை சாத்தத் தமியனுக்கே

ஏர்கொண்ட நல்லருள் ஈயும் குணாலய ஏரம்பனே.

1

கட்டளைக் கலித்துறை

1386.

கடலமு தேசெங் கரும்பே அருட்கற்ப கக்கனியே

உடல்உயி ரேஉயிர்க் குள்உணர் வேஉணர் வுள்ஒளியே

அடல்விடை யார்ஒற்றி யார்இடங் கொண்ட அருமருந்தே

மடலவிழ் ஞான மலரே வடிவுடை மாணிக்கமே.

1

1387.

அணியே அணிபெறும் ஒற்றித் தியாகர்தம் அன்புறுசற்

குணியேஎம் வாழ்க்கைக் குலதெய்வ மேமலைக் கோன்தவமே

பணியேன் பிழைபொறுத் தாட்கொண்ட தெய்வப் பதிகொள்சிந்தா

மணியேஎன் கண்ணுண் மணியே வடிவுடை மாணிக்கமே.

2

1388.

மானேர் விழிமலை மானேஎம் மானிடம் வாழ்மயிலே

கானேர் அளகப் பசுங்குயி லேஅருட் கட்கரும்பே

தேனே திருவொற்றி மாநகர் வாழும் சிவசத்தியே

வானே கருணை வடிவே வடிவுடை மாணிக்கமே.

3

1389.

பொருளே அடியர் புகலிட மேஓற்றிப் பூரணன்தண்

அருளேஎம் ஆருயிர்க் காந்துணை யேவிண் ணவர்புகழும்

தெருளேமெய்ஞ் ஞானத் தெளிவே மறைமுடிச் செம்பொருளே

மருளேத நீக்கும் ஒளியே வடிவுடை மாணிக்கமே.

4

1390.

திருமாலும் நான்முகத் தேவுமுன் னாள்மிகத் தேடிமனத்

தருமா லுழக்க அனலுரு வாகி அமர்ந்தருளும்

பெருமான்எம் மான்ஒற்றிப் பெம்மான்கைம் மான்கொளும் பித்தன்மலை

மருமான் இடங்கொள்பெண் மானே வடிவுடை மாணிக்கமே.

5

1391.

உன்னேர் அருள்தெய்வம் காணேன் மனத்தும் உரைக்கப்படாப்

பொன்னேஅப் பொன்னற் புதஒளி யேமலர்ப் பொன்வணங்கும்

அன்னே எம்ஆருயிர்க் கோர்உயி ரேஒற்றி யம்பதிவாழ்

மன்னே ரிடம்வளர் மின்னே வடிவுடை மாணிக்கமே.

6

1392.

கண்ணேஅக் கண்ணின் மணியே மணியில் கலந்தொளிசெய்

விண்ணே வியன்ஒற்றி யூர்அண்ணல் வாமத்தில் வீற்றிருக்கும்

பெண்ணே மலைபெறும் பெண்மணி யேதெய்வப் பெண்ணமுதே

மண்நேயம் நீத்தவர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

7

1393.

மலையான் தவஞ்செய்து பெற்றமுத் தேஒற்றி வாழ்கனகச்

சிலையான் மணக்க மணக்குந்தெய் வீகத் திருமலரே

அலையான் மலிகடல் பள்ளிகொண் டான்தொழும் ஆரமுதே

வலையான் அருமை மகளே வடிவுடை மாணிக்கமே.

8

1394.

காமம் படர்நெஞ் சுடையோர் கனவினும் காணப்படாச்

சேமம் படர்செல்வப் பொன்னே மதுரச் செழுங்கனியே

தாமம் படர்ஒற்றி யூர்வாழ் பவளத் தனிமலையின்

வாமம் படர்பைங் கொடியே வடிவுடை மாணிக்கமே.

9

1395.

கோடா அருட்குணக் குன்றே சிவத்தில் குறிப்பிலரை

நாடாத ஆனந்த நட்பேமெய் யன்பர் நயக்கும் இன்பே

பீடார் திருவொற்றிப் பெம்மான் இடஞ்செய் பெருந்தவமே

வாடா மணிமலர்க் கொம்பே வடிவுடை மாணிக்கமே.

10

1396.

நாலே எனுமறை அந்தங்கள் இன்னமும் நாடியெனைப்

போலே வருந்த வெளிஒளி யாய்ஒற்றிப் புண்ணியர்தம்

பாலே இருந்த நினைத்தங்கை யாகப் பகரப்பெற்ற

மாலே தவத்தில் பெரியோன் வடிவுடை மாணிக்கமே.

11

1397.

கங்கைகொண் டோன்ஒற்றி யூர்அண்ணல் வாமம் கலந்தருள்செய்

நங்கைஎல் லாஉல குந்தந்த நின்னைஅந் நாரணற்குத்

தங்கைஎன் கோஅன்றித் தாயர்என் கோசொல் தழைக்குமலை

மங்கையங் கோமள மானே வடிவுடை மாணிக்கமே.

12

1398.

சோலையிட் டார்வயல் ஊரொற்றி வைத்துத்தன் தொண்டரன்பின்

வேலையிட் டால்செயும் பித்தனை மெய்யிடை மேவுகரித்

தோலையிட் டாடும் தொழிலுடை யோனைத் துணிந்துமுன்னாள்

மாலையிட் டாய்இஃதென்னே வடிவுடை மாணிக்கமே.

13

1399.

தனையாள் பவரின்றி நிற்கும் பரமன் தனிஅருளாய்

வினையாள் உயிர்மல நீக்கிமெய் வீட்டின் விடுத்திடுநீ

எனையாள் அருளொற்றி யூர்வா ழவன்றன் னிடத்துமொரு

மனையாள் எனநின்ற தென்னே வடிவுடை மாணிக்கமே.

14

1400.

பின்னீன்ற பிள்ளையின் மேலார்வம் தாய்க்கெனப் பேசுவர்நீ

முன்னீன்ற பிள்ளையின் மேலாசை யுள்ளவா மொய்யசுரர்

கொன்னீன்ற போர்க்கிளம் பிள்ளையை ஏவக் கொடுத்ததென்னே

மன்னீன்ற ஒற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே.

15

1401.

பையாளும் அல்குல் சுரர்மட வார்கள் பலருளும்இச்

செய்யாளும் வெண்ணிற மெய்யாளும் எத்தவம் செய்தனரோ

கையாளும் நின்னடிக் குற்றேவல் செய்யக் கடைக்கணித்தாய்

மையாளும் கண்ணொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

16

1402.

இலையாற்று நீமலர்க் காலால் பணிக்குங்குற் றேவலெலாம்

தலையால் செயும்பெண்கள் பல்லோரில் பூமகள் தன்னைத்தள்ளாய்

நிலையால் பெரியநின் தொண்டர்தம் பக்க நிலாமையினான்

மலையாற் கருளொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

17

1403.

கலைமக ளோநின் பணியைஅன் போடும் கடைப்பிடித்தாள்

அலைமக ளோஅன் பொடுபிடித் தாள்எற் கறைதிகண்டாய்

தலைமக ளேஅருட் டாயேசெவ் வாய்க்கருந் தாழ்குழற்பொன்

மலைமக ளேஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

18

1404.

பொன்னோடு வாணிஎன் போரிரு வோரும் பொருணற்கல்வி

தன்னோ டருளுந் திறநின்குற் றேவலைத் தாங்கிநின்ற

பின்னோ அலததன் முன்னோ தெளிந்திடப் பேசுகநீ

மன்னோ டெழிலொற்றி யூர்வாழ் வடிவுடை மாணிக்கமே.

19

1405.

காமட் டலர்திரு வொற்றிநின் னாயகன் கந்தைசுற்றி

யேமட் டரையொடு நிற்பது கண்டும் இரங்கலர்போல்

நீமட்டு மேபட் டுடுக்கின் றனைஉன்றன் நேயம்என்னோ

மாமட் டலர்குழல் மானே வடிவுடை மாணிக்கமே.

20

1406.

வீற்றார்நின் றன்மணத் தம்மியின் மேல்சிறு மெல்லனிச்சம்
ஆற்றாநின் சிற்றடிப் போதினைத் தூக்கிவைத் தாரெனின்மால்
ஏற்றார் திருவொற்றி யூரார் களக்கறுப் பேற்றவரே
மாற்றா இயல்கொண் மயிலே வடிவுடை மாணிக்கமே.

21

1497.

பொருப்புறு நீலியென் பார்நின்னை மெய்அது போலும்ஒற்றி
விருப்புறு நாயகன் பாம்பா பரணமும் வெண்தலையும்
நெருப்புறு கையும் கனல்மேனி யும்கண்டு நெஞ்சம்அஞ்சாய்
மருப்புறு கொங்கை மயிலே வடிவுடை மாணிக்கமே.

22

1498.

அனம்பொறுத் தான்புகழ் ஒற்றிநின் நாயகன் அங்குமிழித்
தனம்பொறுத் தாள்ஒரு மாற்றாளைத் தன்முடி தன்னில்வைத்தே
தினம்பொறுத் தான்அது கண்டும் சினமின்றிச் சேர்ந்தநின்போல்
மனம்பொறுத் தார்எவர் கண்டாய் வடிவுடை மாணிக்கமே.

23

1499.

ஓருரு வாய்ஒற்றி யூர்அமர்ந் தார்நின் னுடையவர்பெண்
சீருரு வாகுநின் மாற்றாளை நீதெளி யாத்திறத்தில்
நீருரு வாக்கிச் சுமந்தார் அதனை நினைந்திலையே

வாருரு வார்கொங்கை நங்காய் வடிவுடை மாணிக்கமே.

24

1410.

சார்ந்தேநின் பால்ஒற்றி யூர்வாழும் நாயகர் தாமகிழ்வு

கூர்ந்தே குலாவும்அக் கொள்கையைக் காணில் கொதிப்பளென்று

தேர்ந்தேஅக் கங்கையைச் செஞ்சடை மேல்சிறை செய்தனர்ஒண்

வார்ந்தே குழைகொள் விழியாய் வடிவுடை மாணிக்கமே.

25

1411.

நீயே எனது பிழைகுறிப் பாயெனில் நின்னடிமைப்

பேயேன் செயும்வண்ணம் எவ்வண்ண மோஎனைப் பெற்றளிக்கும்

தாயே கருணைத் தடங்கட லேஒற்றிச் சார்குமுத

வாயேர் சவுந்தர(35) மானே வடிவுடை மாணிக்கமே.

26

( 35). சௌந்தரம் என்பது சவுந்தரம் எனப் போலியாயிற்று. தொ.வே.

1412.

முப்போதும் அன்பர்கள் வாழ்த்தொற்றி யூர்எம் முதல்வர்மகிழ்

ஒப்போ தருமலைப் பெண்ணமு தேஎன்று வந்துநினை

எப்போதும் சிந்தித் திடர்நீங்கி வாழ எனக்கருள்வாய்

மைப்போ தனையகண் மானே வடிவுடை மாணிக்கமே.

27

1413.

மீதலத் தோர்களுள் யார்வணங் காதவர் மேவுநடுப்
பூதலத் தோர்களுள் யார்புக ழாதவர் போற்றிநிதம்
பாதலத் தோர்களுள் யார்பணி யாதவர் பற்றிநின்றாள்
மாதலத் தோங்கொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

28

1414.

சேய்க்குற்றம் தாய்பொறுத் தேடா வருகெனச் செப்புவள்இந்
நாய்க்குற்றம் நீபொறுத் தாளுதல் வேண்டும் நவின்மதியின்
தேய்க்குற்ற மாற்றும் திருவொற்றி நாதர்தந் தேவிஅன்பர்
வாய்க்குற்றம் நீக்கும் மயிலே வடிவுடை மாணிக்கமே.

29

1415.

செங்கம லாசனன் தேவிபொன் நாணும் திருமுதலோர்
சங்கம தாமிடற் றோங்குபொன் நாணும் தலைகுனித்துத்
துங்கமு றாதுளம் நாணத் திருவொற்றித் தோன்றல்புனை
மங்கல நாணுடை யாளே வடிவுடை மாணிக்கமே.

30

1416.

சேடா ரியன்மணம் வீசச் செயன்மணம் சேர்ந்துபொங்க

ஏடார் பொழிலொற்றி யூரண்ணல் நெஞ்சம் இருந்துவக்க

வீடா இருளும் முகிலும்பின் னிட்டு வெருவவைத்த

வாடா மலர்க்குழ லாளே வடிவுடை மாணிக்கமே.

31

1417.

புரநோக்கி னால்பொடி தேக்கிய ஒற்றிப் புனிதர்களக்

கரநோக்கி(36) நல்லமு தாக்கிநிற் போற்றுங் கருத்தினர்ஆ

தரநோக்கி உள்ளிருள் நீக்கிமெய்ஞ் ஞானத் தனிச்சுகந்தான்

வரநோக்கி ஆள்விழி மானே வடிவுடை மாணிக்கமே.

32

(36). கரம் - விடம். தொ.வே.

1418.

உன்னும் திருவொற்றி யூருடை யார்நெஞ் சுவப்பஎழில்

துன்னும் உயிர்ப்பயிர் எல்லாந் தழைக்கச் சுகக்கருணை

என்னும் திருவமு தோயாமல் ஊற்றி எமதுளத்தின்

மன்னும் கடைக்கண் மயிலே வடிவுடை மாணிக்கமே.

33

1419.

வெள்ளம் குளிரும் சடைமுடி யோன்ஒற்றி வித்தகன்தன்

உள்ளம் குளிரமெய் பூரிப்ப ஆனந்தம் ஊற்றெடுப்பத்

தெள்ளம் குளிர்இன் அமுதே அளிக்கும்செவ் வாய்க்குமுத

வள்ளம் குளிர்முத்த மானே வடிவுடை மாணிக்கமே.

34

1420.

மாநந்த மார்வயல் காழிக் கவுணியர் மாமணிக்கன்

றாநந்த இன்னமு தூற்றும் திருமுலை ஆரணங்கே

காநந்த வோங்கும் எழிலொற்றி யார்உட் களித்தியலும்

வாநந் தருமிடை மானே வடிவுடை மாணிக்கமே.

35

1421.

வான்தேட நான்கு மறைதேட மாலுடன் வாரிசமே

லான்தேட மற்றை அருந்தவர் தேடஎன் அன்பின்மையால்

யான்தேட என்னுளம் சேர்ஒற்றி யூர்எம் இருநிதியே

மான்தேடும் வாட்கண் மயிலே வடிவுடை மாணிக்கமே.

36

1422.

முத்தேவர் விண்ணன்(37) முதல்தேவர் சித்தர் முனிவர்மற்றை

எத்தே வருநின் அடிநினை வார்நினைக் கின்றிலர்தாம்

செத்தே பிறக்கும் சிறியர்அன் றோஒற்றித் தேவர்நற்றா

மத்தேவர் வாம மயிலே வடிவுடை மாணிக்கமே.

37

(37). விண்ணன் - இந்திரன். தொ.வே.

1423.

திருநாள் நினைத்தொழும் நன்னாள் தொழாமல் செலுத்தியநாள்

கருநாள் எனமறை எல்லாம் புகலும் கருத்தறிந்தே

ஒருநா ளினுநின் றனைமற வார்அன்பர் ஒற்றியில்வாழ்

மருநாண் மலர்க்குழல் மானே வடிவுடை மாணிக்கமே.

38

1424.

வாணாள் அடைவர் வறுமை யுறார்நன் மனைமக்கள்பொன்

பூணாள் இடம்புகழ் போதம் பெறுவர்பின் புன்மைஒன்றும்

காணார்நின் நாமம் கருதுகின் றோர்ஒற்றிக் கண்ணுதல்பால்

மாணார்வம் உற்ற மயிலே வடிவுடை மாணிக்கமே.

39

1425.

சீரறி வாய்த்திரு வொற்றிப் பரம சிவத்தைநினைப்

போரறி வாய்அவ் அறிவாம் வெளிக்கப் புறத்துநின்றாய்

யாரறி வார்நின்னை நாயேன்அறிவ தழகுடைத்தே

வாரெறி பூண்முலை மானே வடிவுடை மாணிக்கமே.

40

1426.

போற்றிடு வோர்தம் பிழைஆ யிரமும் பொறுத்தருள்செய்

வீற்றொளிர் ஞான விளக்கே மரகத மென்கரும்பே

ஏற்றொளிர் ஒற்றி யிடத்தார்இடத்தில் இலங்கும்உயர்

மாற்றொளி ரும்பசும் பொன்னே வடிவுடை மாணிக்கமே

. 41

1427.

ஆசைஉள் ளார்அயன் மால்ஆதி தேவர்கள் யாரும்நின் தாள்

பூசையுள் ளார்எனில் எங்கே உலகர்செய் பூசைகொள்வார்

தேசையுள் ளார்ஒற்றி யூருடை யார்இடஞ் சேர்மயிலே

மாசையுள்(38) ளார்புகழ் மானே வடிவுடை மாணிக்கமே.

42

(38). மாசை -பொன் தொ.வே.

1428.

அண்டாரை வென்றுல காண்டுமெய்ஞ் ஞானம் அடைந்துவிண்ணில்

பண்டாரை சூழ்மதி போலிருப் போர்கள்நின் பத்தர்பதம்

கண்டாரைக் கண்டவர் அன்றோ திருவொற்றிக் கண்ணுதல்சேர்

வண்டாரை வேலன்ன மானே வடிவுடை மாணிக்கமே.

43

1429.

அடியார் தொழுநின் அடிப்பொடி தான்சற் றணியப்பெற்ற

முடியால் அடிக்குப் பெருமைபெற் றார்அம் முகுந்தன்சந்தக்

கடியார் மலர்அயன் முன்னோர்தென் ஒற்றிக் கடவுட்செம்பால்

வடியாக் கருணைக் கடலே வடிவுடை மாணிக்கமே.

44

1430.

ஓவா தயன்முத லோர்முடி கோடி உறழ்ந்துபடில்

ஆவா அனிச்சம் பொறாமலர்ச் சிற்றடி ஆற்றுங்கொலோ

காவாய் இமயப்பொற் பாவாய் அருளொற்றிக் காமர்வல்லி

வாவா எனும்அன்பர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

45

1431.

இட்டார் மறைக்கும் உபநிட தத்திற்கும் இன்னுஞ்சற்றும்

எட்டாநின் பொன்னடிப் போதெளி யேன்தலைக் கெட்டுங்கொலோ

கட்டார் சடைமுடி ஒற்றிஎம் மான்நெஞ்ச கத்தமர்ந்த

மட்டார் குழன்மட மானே வடிவுடை மாணிக்கமே.

46

1432.

வெளியாய் வெளிக்குள் வெறுவெளி யாய்ச்சிவ மேநிறைந்த

ஒளியாய் ஒளிக்குள் ஒளியாம் பரைநினை ஒப்பவரார்

எளியார்க் கெளியர் திருவொற்றி யார்மெய் இனிதுபரி

மளியாநின் றோங்கு மருவே வடிவுடை மாணிக்கமே.

47

1433.

விணங்காத லன்பர்தம் அன்பிற்கும் நின்புல விக்கும்அன்றி
வணங்கா மதிமுடி எங்கள் பிரான்ஒற்றி வாணனும்நின்
குணங்கா தலித்துமெய்க் கூறுதந் தான்எனக் கூறுவர்உன்
மணங்கா தலித்த தறியார் வடிவுடை மாணிக்கமே.

48

1434.

பன்னும்பல் வேறண்டம் எல்லாம்அவ் அண்டப் பரப்பினின்று
துன்னும் சராசரம் யாவையும் ஈன்றது சூழ்ந்தும்உன்னை
இன்னும் இளந்தை அழியாத கன்னிகை என்பதென்னே
மன்னும் சுகாநந்த வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

49

1435.

சினங்கடந் தோர்உள்ளச் செந்தா மரையில் செழித்துமற்றை
மனங்கடந் தோதும்அவ் வாக்கும் கடந்த மறைஅன்னமே
தினங்கடந் தோர்புகழ் ஒற்றிஎம் மானிடம் சேரமுதே
வனங்கடந் தோன்புகழ் மானே வடிவுடை மாணிக்கமே.

50

1436.

வல்லாரும் வல்லவர் அல்லாரும் மற்றை மனிதர்முதல்
எல்லாரும் நின்செயல் அல்லா தணுவும் இயக்கிலரேல்
இல்லாமை யால்உழல் புல்லேன்செய் குற்றங்கள் ஏதுகண்டாய்

மல்லார் வயல்ஒற்றி நல்லாய் வடிவுடை மாணிக்கமே.

51

1437.

எழுதா எழில்உயிர்ச் சித்திர மேஇன் இசைப்பயனே

தொழுதாடும் அன்பர்தம் உட்களிப் பேசிற் சுகக்கடலே

செழுவார் மலர்ப்பொழில் ஒற்றிஎம் மான்தன் திருத்துணையே

வழுவா மறையின் பொருளே வடிவுடை மாணிக்கமே.

52

1438.

தெருட்பா லுறும்ஐங்கைச் செல்வர்க்கும் நல்லிளஞ் சேய்க்குமகிழ்ந்

தருட்பால் அளிக்கும் தனத்தன மேஎம் அகங்கலந்த

இருட்பால் அகற்றும் இருஞ்சுட ரேஒற்றி எந்தைஉள்ளம்

மருட்பால் பயிலு மயிலே வடிவுடை மாணிக்கமே.

53

1439.

அயிலேந்தும் பிள்ளைநற் றாயே திருவொற்றி ஐயர்மலர்க்

கயிலேந்(39) தரும்பெறல் முத்தே இசையில் கனிந்தகுரல்

குயிலே குயின்மென் குழற்பிடி யேமலைக் கோன்பயந்த

மயிலே மதிமுக மானே வடிவுடை மாணிக்கமே.

54

(39). கையிலேந்து எனற்பாலது கயிலேந்து எனப் போலியாயிற்று. தொ.வே.

1440.

செய்யகம் ஓங்கும் திருவொற்றி யூரில் சிவபெருமான்

மெய்யகம் ஓங்குநல் அன்பேநின் பால்அன்பு மேவுகின்றோர்

கையகம் ஓங்கும் கனியே தனிமெய்க் கதிநெறியே

வையகம் ஓங்கு மருந்தே வடிவுடை மாணிக்கமே.

55

1441.

தரும்பேர் அருளொற்றி யூருடை யான்இடஞ் சார்ந்தபசுங்

கரும்பே இனியகற் கண்டே மதுரக் கனிநறவே

இரும்பேய் மனத்தினர் பால்இசை யாத இளங்கிளியே

வரும்பேர் ஒளிச்செஞ் சுடரே வடிவுடை மாணிக்கமே.

56

1442.

சேலேர் விழியருள் தேனே அடியருள் தித்திக்கும்செம்

பாலே மதுரச்செம் பாகேசொல் வேதப் பனுவல்முடி

மேலே விளங்கும் விளக்கே அருளொற்றி வித்தகனார்

மாலே கொளும்எழில் மானே வடிவுடை மாணிக்கமே.

57

1443.

எம்பால் அருள்வைத் தெழிலொற்றி யூர்கொண் டிருக்கும் இறைச்

செம்பால் கலந்தபைந் தேனே கதலிச் செழுங்கனியே

வெம்பாலை நெஞ்சருள் மேவா மலர்ப்பத மென்கொடியே

வம்பால் அணிமுலை மானே வடிவுடை மாணிக்கமே.

58

1444.

ஏமமுய்ப் போர்எமக் கென்றே இளைக்கில் எடுக்கவைத்த

சேமவைப் பேஅன்பர் தேடுமெய்ஞ் ஞானத் திரவியமே

தாமமைக் கார்மலர்க் கூந்தல் பிடிமென் தனிநடையாய்

வாமநற் சீர்ஒற்றி மானே வடிவுடை மாணிக்கமே.

59

1445.

மன்னோர் மலையன் மனையும்நற் காஞ்சன மாலையும்நீ

அன்னே எனத்திரு வாயால் அழைக்கப்பெற் றார்அவர்தாம்

முன்னே அருந்தவம் என்னே முயன்றனர் முன்னும் ஒற்றி

வன்னேர் இளமுலை மின்னே வடிவுடை மாணிக்கமே.

60

1446.

கணமொன்றி லேனும்என் உள்ளக் கவலைக் கடல்கடந்தே

குணமொன்றி லேன்எது செய்கேன்நின் உள்ளக் குறிப்பறியேன்

பணமொன்று பாம்பணி ஒற்றிஎம் மானிடப் பாலில்தெய்வ

மணமொன்று பச்சைக் கொடியே வடிவுடை மாணிக்கமே.

61

1447.

கருவே தனையற என்னெஞ் சகத்தில் களிப்பொடொற்றிக்

குருவே எனும்நின் கணவனும் நீயும் குலவும்அந்தத்

திருவே அருள்செந் திருவே முதற்பணி செய்யத் தந்த

மருவே மருவு மலரே வடிவுடை மாணிக்கமே.

62

1448.

எண்ணிய எண்ணங்கள் எல்லாம் பலிக்க எனக்குன்அருள்

பண்ணிய உள்ளங்கொள் உள்ளும் புறம்பும் பரிமளிக்கும்

புண்ணிய மல்லிகைப் போதே எழில்ஒற்றிப் பூரணர்பால்

மண்ணிய பச்சை மணியே வடிவுடை மாணிக்கமே.

63

1449.

தீதுசெய் தாலும்நின் அன்பர்கள் தம்முன் செருக்கிநின்று

வாதுசெய் தாலும்நின் தாள்மறந் தாலும் மதியிலியேன்

ஏதுசெய் தாலும் பொறுத்தருள் வாய்ஒற்றி யின்னிடைப்பூ

மாதுசெய் தாழ்குழல் மானே வடிவுடை மாணிக்கமே.

64

1450.

மருந்தினின் றான்ஒற்றி யூர்வாழும் நின்றன் மகிழ்நன்முன்னும்
திருந்திநின் றார்புகழ் நின்முன்னும் நல்லருள் தேன்விழைந்தே
விருந்தினின் றேன்சற்றும் உள்ளிரங் காத விதத்தைக்கண்டு
வருந்திநின் றேன்இது நன்றோ வடிவுடை மாணிக்கமே.

65

1451.

என்போல் குணத்தில் இழிந்தவர் இல்லைஎப் போதும்எங்கும்
நின்போல் அருளில் சிறந்தவர் இல்லைஇந் நீர்மையினால்
பொன்போலும் நின்னருள் அன்னே எனக்கும் புரிதிகண்டாய்
மன்போல் உயர்ஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

66

1452.

துன்பே மிகும்இவ் அடியேன் மனத்தில்நின் துய்யஅருள்
இன்பே மிகுவதெந் நாளோ எழிலொற்றி எந்தைஉயிர்க்
கன்பேமெய்த் தொண்டர் அறிவே சிவநெறிக் கன்பிலர்பால்
வன்பேமெய்ப் போத வடிவே வடிவுடை மாணிக்கமே.

67

1453.

சற்றே யெனினும்என் நெஞ்சத் துயரம் தவிரவும்நின்
பொற்றே மலர்ப்பதம் போற்றவும் உள்ளம் புரிதிகண்டாய்
சொற்றேர் அறிஞர் புகழ்ஒற்றி மேவும் துணைவர்தஞ்செம்

மற்றோர் புயத்தணை மானே வடிவுடை மாணிக்கமே.

68

1454.

சந்தோட மாப்பிறர் எல்லாம் இருக்கவும் சஞ்சலத்தால்

அந்தோ ஒருதமி யேன்மட்டும் வாடல் அருட்கழகோ

நந்தோட நீக்கிய நங்காய் எனத்திரு நான்முகன்மால்

வந்தோதும் ஒற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே.

69

1455.

அடியேன் மிசைஎப் பிழையிருந் தாலும் அவைபொறுத்துச்

செடியேதம் நீக்கிநற் சீரருள் வாய்திகழ் தெய்வமறைக்

கொடியே மரகதக் கொம்பே எழில்ஒற்றிக் கோமளமே

வடியேர் அயில்விழி மானே வடிவுடை மாணிக்கமே.

70

1456.

கண்ணப்பன் ஏத்துநற் காளத்தி யார்மங் கலங்கொள்ஒற்றி

நண்ணப்பர் வேண்டும் நலமே பரானந்த நன்னறவே

எண்ணப் படாஎழில் ஓவிய மேஎமை ஏன்றுகொண்ட

வண்ணப் பசும்பொன் வடிவே வடிவுடை மாணிக்கமே.

71

1457.

கற்பே விகற்பம் கடியும்ஒன் றேஎங்கள் கண்நிறைந்த

பொற்பேமெய்த் தொண்டர்தம் புண்ணிய மேஅருட் போதஇன்பே

சொற்பேர் அறிவுட் சுகப்பொரு ளேமெய்ச் சுயஞ்சுடரே

மற்பேர் பெறும்ஒற்றி மானே வடிவுடை மாணிக்கமே.

72

1458.

மிகவே துயர்க்கடல் வீழ்ந்தேனை நீகை விடுதலருள்

தகவே எனக்குநற் றாயே அகில சராசரமும்

சுகவேலை மூழ்கத் திருவொற்றி யூரிடந் துன்னிப்பெற்ற

மகவே எனப்புரக் கின்றோய் வடிவுடை மாணிக்கமே.

73

1459.

வேதங்க ளாய்ஒற்றி மேவும் சிவத்தின் விளைவருளாய்ப்

பூதங்க ளாய்ப்பொறி யாய்ப்புல னாகிப் புகல்கரண

பேதங்க ளாய்உயிர் ஆகிய நின்னைஇப் பேதைஎன்வாய்

வாதங்க ளால்அறி வேனோ வடிவுடை மாணிக்கமே.

74

1460.

மதியே மதிமுக மானே அடியர் மனத்துவைத்த

நிதியே கருணை நிறைவே சுகாநந்த நீள்நிலையே

கதியே கதிவழி காட்டுங்கண் ணேஒற்றிக் காவலர்பால்

வதியேர் இளமட மானே வடிவுடை மாணிக்கமே.

75

1461.

ஆறாத் துயரத் தழுந்துகின் றேனைஇங் கஞ்சல்என்றே

கூறாக் குறைஎன் குறையே இனிநின் குறிப்பறியேன்

தேறாச் சிறியர்க் கரிதாம் திருவொற்றித் தேவர்மகிழ்

மாறாக் கருணை மழையே வடிவுடை மாணிக்கமே.

76

1462.

எற்றே நிலைஒன்றும் இல்லா துயங்கும் எனக்கருளச்

சற்றேநின் உள்ளம் திரும்பிலை யான்செயத் தக்கதென்னே

சொற்றேன் நிறைமறைக் கொம்பேமெய்ஞ் ஞானச் சுடர்க்கொழுந்தே

மற்றேர் அணியொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

77

1463.

செவ்வேலை வென்றகண் மின்னேநின் சித்தம் திரும்பிஎனக்

கெவ்வேலை செய்என் றிடினும்அவ் வேலை இயற்றுவல்காண்

தெவ்வேலை வற்றச்செய் அவ்வேலை யீன்றொற்றித் தேவர்நெஞ்சை

வவ்வேல வார்குழல் மானே வடிவுடை மாணிக்கமே.

78

1464.

தாயே மிகவும் தயவுடை யாள்எனச் சாற்றுவர்இச்

சேயேன் படுந்துயர் நீக்கஎன் னேஉளம் செய்திலையே

நாயேன் பிழைஇனி நாடாது நல்லருள் நல்கவரு

வாயேஎம் ஒற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே.

79

1465.

நானே நினைக்கடி யேன்என் பிழைகளை நாடியநீ

தானே எனைவிடில் அந்தோ இனிஎவர் தாங்குகின்றோர்

தேனேநல் வேதத் தெளிவே கதிக்குச் செலுநெறியே

வானேர் பொழில்ஒற்றி மானே வடிவுடை மாணிக்கமே.

80

1466.

கல்லா ரிடத்தில்என் இல்லாமை சொல்லிக் கலங்கிஇடர்

நல்லாண்மை உண்டருள் வல்லாண்மை உண்டெனின் நல்குவையோ

வல்லார் எவர்கட்கும் வல்லார் திருவொற்றி வாணரொடு

மல்லார் பொழில்ஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

81

1467.

சுந்தர வாண்முகத் தோகாய் மறைகள் சொலும்பைங்கிள்ளாய்

கந்தர வார்குழற் பூவாய் கருணைக் கடைக்கண்நங்காய்

அந்தர நேரிடைப் பாவாய் அருள்ஒற்றி அண்ணல்மகிழ்

மந்தர நேர்கொங்கை மங்காய் வடிவுடை மாணிக்கமே.

82

1468.

பத்தர்தம் உள்ளத் திருக்கோயில் மேவும் பரம்பரையே

சுத்தமெய்ஞ் ஞான ஒளிப்பிழம் பேசிற் சுகாநந்தமே

நித்தநின் சீர்சொல எற்கருள் வாய்ஒற்றி நின்மலர்உன்

மத்தர்தம் வாம மயிலே வடிவுடை மாணிக்கமே.

83

1469.

பூவாய் மலர்க்குழல் பூவாய்மெய் அன்பர் புனைந்ததமிழ்ப்

பாவாய் நிறைந்தபொற் பாவாய்செந் தேனிற் பகர்மொழியாய்

காவாய் எனஅயன் காவாய் பவனும் கருதுமலர்

மாவாய் எழில்ஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

84

1470.

தாதா உணவுடை தாதா எனப்புல்லர் தம்மிடைப்போய்

மாதாகம் உற்றவர் வன்நெஞ்சில் நின்அடி வைகுங்கொலோ

காதார் நெடுங்கட் கரும்பேநல் ஒற்றிக் கருத்தர்நட

வாதா ரிடம்வளர் மாதே வடிவுடை மாணிக்கமே.

85

1471.

களந்திரும் பாஇக் கடையேனை ஆளக் கருணைகொண்டுன்

உளந்திரும் பாமைக்கென் செய்கேன் துயர்க்கட லூடலைந்தேன்

குளந்திரும் பாவிழிக் கோமா னொடுந்தொண்டர் கூட்டமுற

வளந்திரும் பாஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

86

1472.

ஆரணம் பூத்த அருட்கோ மளக்கொடி அந்தரிபூந்

தோரணம் பூத்த எழில்ஒற்றி யூர்மகிழ் சுந்தரிசற்

காரணம் பூத்த சிவைபார்ப் பதிநங் கவுரிஎன்னும்

வாரணம் பூத்த தனத்தாய் வடிவுடை மாணிக்கமே.

87

1473.

திருவல்லி ஏத்தும் அபிடேக வல்லிஎஞ் சென்னியிடை

வருவல்லி கற்பக வல்லிஒண் பச்சை மணிவல்லிஎம்

கருவல்லி நீக்கும் கருணாம் பகவல்லி கண்கொள்ஒற்றி

மருவல்லி என்று மறைதேர் வடிவுடை மாணிக்கமே.

88

1474.

உடையென்ன ஒண்புலித் தோல்உடை யார்கண் டுவக்குமிள

நடையன்ன மேமலர்ப் பொன்முத லாம்பெண்கள் நாயகமே

படையன்ன நீள்விழி மின்னேர் இடைப்பொற் பசுங்கிளியே
மடைமன்னு நீர்ஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

89

1475.

கற்பதும் கேட்பதும் எல்லாம்நின் அற்புதக் கஞ்சமலர்ப்
பொற்பதம் காணும் பொருட்டென எண்ணுவர் புண்ணியரே
சொற்பத மாய்அவைக் கப்புற மாய்நின்ற தூய்ச்சுடரே
மற்பதம் சேரொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

90

1476.

நின்னால் எனக்குள எல்லா நலனும் நினைஅடைந்த
என்னால் உனக்குள தென்னைகண் டாய்எமை ஈன்றவளே
முன்னால் வருக்கருள் ஒற்றிஎம் மான்கண் முழுமணியே
மன்னான் மறையின் முடிவே வடிவுடை மாணிக்கமே.

91

1477.

நன்றே சிவநெறி நாடுமெய்த் தொண்டர்க்கு நன்மைசெய்து
நின்றேநின் சேவடிக் குற்றேவல் செய்ய நினைத்தனன் ஈ
தென்றே முடிகுவ தின்றே முடியில் இனிதுகண்டாய்
மன்றேர் எழில்ஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

92

1478.

அத்தனை ஒற்றிக் கிறைவனை அம்பலத் தாடுகின்ற

முத்தனைச் சேர்ந்தலுண் முத்தே மதிய முகவமுதே

இத்தனை என்றள வேலாத குற்றம் இழைத்திடும்இம்

மத்தனை ஆளல் வழக்கோ வடிவுடை மாணிக்கமே.

93

1479.

கூறாத வாழ்க்கைச் சிறுமையை நோக்கிக் குறித்திடும்என்

தேறாத விண்ணப்பம் சற்றேனும் நின்றன் திருச்செவியில்

ஏறாத வண்ணம்என் ஒற்றித் தியாகர் இடப்புறத்தின்

மாறா தமர்ந்த மயிலே வடிவுடை மாணிக்கமே.

94

1480.

ஓயா இடர்கொண் டுலைவேனுக் கன்பர்க் குதவுதல்போல்

ஈயா விடினும்ஓர் எள்ளள வேனும் இரங்குகண்டாய்

சாயா அருள்தரும் தாயே எழில்ஒற்றித் தற்பரையே

மாயா நலம்அருள் வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

95

1481.

பெரும்பேதை யேன்சிறு வாழ்க்கைத் துயர்எனும் பேரலையில்

துரும்பே எனஅலை கின்றேன் புணைநின் துணைப்பதமே

கரும்பே கருணைக் கடலே அருண்முக் கனிநறவே

வரும்பேர் அருள்ஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

96

1482.

காதர வால்உட் கலங்கிநின் றேன்நின் கடைக்கண்அருள்

ஆதர வால்மகிழ் கின்றேன் இனிஉன் அடைக்கலமே

சீதரன் ஏத்தும் திருவொற்றி நாதர்தம் தேவிஎழில்

மாதர சேஒற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

97

1483.

பொன்னுடை யார்அன்றிப் போற்றுநற் கல்விப் பொருளுடையார்

என்னுடை யார்என ஏசுகின் றார்இஃ தென்னைஅன்னே

மின்னுடை யாய்மின்னில் துன்னிடை யாய்ஒற்றி மேவுமுக்கண்

மன்னுடை யாய்என் னுடையாய் வடிவுடை மாணிக்கமே.

98

1484.

பொய்விட்டி டாதவன் நெஞ்சகத் தேனைப் புலம்பும்வண்ணம்

கைவிட்டி டாதின்னும் காப்பாய் அதுநின் கடன்கரும்பே

மெய்விட்டி டாருள் விளைஇன்ப மேஒற்றி வித்தகமே

மைவிட்டி டாவிழி மானே வடிவுடை மாணிக்கமே.

99

1485.

நேயானு கூல மனமுடை யாய்இனி நீயும்என்றன்

தாயாகில் யான்உன் தனையனும் ஆகில்என் தன்உளத்தில்

ஓயா துறுந்துயர் எல்லாம் தவிர்த்தருள் ஒற்றியில்செவ்

வாயார் அமுத வடிவே வடிவுடை மாணிக்கமே.

100

1486.

வாழிநின் சேவடி போற்றிநின் பூம்பத வாரிசங்கள்

வாழிநின் தாண்மலர் போற்றிநின் தண்ணளி வாழிநின்சீர்

வாழிஎன் உள்ளத்தில் நீயுநின் ஒற்றி மகிழ்நரும்நீ

வாழிஎன் ஆருயிர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே.

101

Back

76. தனித் திருமாலை

கட்டளைக் கலித்துறை

1487.

வன்மூட்டைப் பூச்சியும் புன்சீலைப் பேனும்தம் வாய்க்கொள்ளியால்

என்மூட்டைத் தேகம் சுறுக்கிட வேசுட் டிராமுழுதும்

தொன்மூட் டையினும் துணியினும் பாயினும் சூழ்கின்றதோர்

பொன்மூட்டை வேண்டிஎன் செய்கேன் அருள்முக்கட் புண்ணியனே.

1

நேரிசை வெண்பா

1488.

மான்முடிமே லும்கமலத் தான்முடிமே லும்தேவர்

கோன்முடிமே லும்போய்க் குலாவுமே - வான்முடிநீர்

ஊர்ந்துவலம் செய்தொழுகும் ஒற்றியூர்த் தியாகரைநாம்

சார்ந்துவலம் செய்கால்கள் தாம்.

2

குறள் வெண் செந்துறை(48)

1489.

சத்திமான் என்பர்நின் தன்னை ஐயனே

பத்திமான் தனக்கலால் பகர்வ தெங்ஙனே.

3

(48). வஞ்சி விருத்தம்- ஆ.பா.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1490.

படியே அளந்த மாலவனும்

பழைய மறைசொற் பண்ணவனும்

முடியீ றறியா முதற்பொருளே

மொழியும் ஒற்றி நகர்க்கிறையே

அடியார் களுக்கே இரங்கிமுனம்

அடுத்த சுரநோய் தடுத்ததுபோல்

படிமீ தடியேற் குறுபிணிபோம்

படிநீ கடைக்கண் பார்த்தருளே.

4

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1491.

மன்றாடும் மாமணியே நின்பொற் பாத

மலர்த்துணையே துணையாக வாழ்கின் றோர்க்கு

ஒன்றாலும் குறைவில்லை ஏழை யேன்யான்

ஒன்றுமிலேன் இவ்வுலகில் உழலா நின்றேன்

இன்றாக நாட்கழியில் என்னே செய்கேன்

இணைமுலையார் மையலினால் இளைத்து நின்றேன்

என்றாலும் சிறிதெளியேற் கிரங்கல் வேண்டும்

எழில்ஆரும் ஒற்றியூர் இன்ப வாழ்வே.

5

1492.

சோறு வேண்டினும் துகிலணி முதலாம்

சுகங்கள் வேண்டினும் சுகமலாச் சுகமாம்

வேறு வேண்டினும் நினைஅடைந் தன்றி

மேவொ ணாதெனும் மேலவர் உரைக்கோர்

மாறு வேண்டிலேன் வந்துநிற் கின்றேன்

வள்ளலே உன்றன் மனக்குறிப் பறியேன்

சேறு வேண்டிய கயப்பணைக் கடற்சார்

திகழும் ஒற்றியூர்ச் சிவபரஞ் சுடரே.

6

Back

77. திரு உலாப் பேறு

தலைவி பாங்கியொடு கிளத்தல் திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1493.

சீரார் வளஞ்சேர் ஒற்றிநகர்த்

தியாகப் பெருமான் பவனிதனை

ஊரா ருடன்சென் றெனதுநெஞ்சம்

உவகை ஓங்கப் பார்த்தனன்காண்

வாரார் முலைகண் மலைகளென

வளர்ந்த வளைகள் தளர்ந்தனவால்

ஏரார் குழலாய் என்னடிநான்

இச்சை மயமாய் நின்றதுவே.

1

1494.

சீர்த்தேன் பொழிலார் ஒற்றிநகர்த்

தியாகப் பெருமான் பவனிவரப்

பார்த்தேன் கண்கள் இமைத்திலகாண்

பைம்பொன் வளைகள் அமைத்திலகாண்

தார்த்தேன் குழலும் சரிந்தனகாண்

தானை இடையிற் பிரிந்தனகாண்

ஈர்த்தேன் குழலாய் என்னடிநான்

இச்சை மயமாய் நின்றதுவே.

2

1495.

சீதப் புனல்சூழ் வயல்ஒற்றித்

தியாகப் பெருமான் திருமாட

வீதிப் பவனி வரக்கண்டேன்

மென்பூந் துகில்வீழ்ந் ததுகாணேன்

போதிற் றெனவும் உணர்ந்திலேன்

பொன்ன னார்பின் போதுகிலேன்

ஈதற் புதமே என்னடிநான்

இச்சை மயமாய் நின்றதுவே.

3

1496.

தென்னார் சோலைத் திருஒற்றித்

தியாகப் பெருமான் பவனிவரப்

பொன்னார் வீதி தனிற்பார்த்தேன்

புளகம் போர்த்தேன் மயல்பூத்தேன்

மின்னார் பலர்க்கும் முன்னாக

மேவி அவன்றன் எழில்வேட்டு

என்னார் அணங்கே என்னடிநான்

இச்சை மயமாய் நின்றதுவே.

4

1497.

சீலக் குணத்தோர் புகழ்ஒற்றித்

தியாகப் பெருமான் பவனிஇராக்

காலத் தடைந்து கண்டேன்என்

கண்கள் இரண்டோ ஆயிரமோ

ஞாலத் தவர்கள் அலர்தூற்ற

நற்றா சிடையில் நழுவிவிழ

ஏலக் குழலாய் என்னடிநான்

இச்சை மயமாய் நின்றதுவே.

5

1498.

சேயை அருளுந் திருஒற்றித்

தியாகப் பெருமான் வீதிதனில்

தூய பவனி வரக்கண்டேன்

சூழ்ந்த மகளிர் தமைக்காணேன்

தாயை மறந்தேன் அன்றியும்என்

தனையும் மறந்தேன் தனிப்பட்டேன்

ஏயென் தோழி என்னடிநான்

இச்சை மயமாய் நின்றதுவே.

7

1499.

திங்கள் உலவும் பொழில்ஒற்றித்

தியாகப் பெருமான் திருவீதி

அங்கண் களிக்கப் பவனிவந்தான்

அதுபோய்க் கண்டேன் தாயரெலாம்

தங்கள் குலத்துக் கடாதென்றார்

தம்மை விடுத்தேன் தனியாகி

எங்கண் அனையாய் என்னடிநான்

இச்சை மயமாய் நின்றதுவே.

8

1500.

தேசார் மணிசூழ் ஒற்றிநகர்த்

தியாகப் பெருமான் பவனிவரக்

கூசா தோடிக் கண்டரையில்

வீர்என் றவர்முன் பலர்அறிய வெட்கம் விடுத்துக் கேட்டாலும்

சேர்என் றுரைத்தால் அன்றிஅவர் சிரித்துத் திருவாய் மலர்ந்தெனைநீ

யார்என் றுரைத்தால் என்செய்வேன் என்னை மடவார் இகழாரோ.

4

1712.

சோமன் நிலவுந் தூய்ச்சடையார் சொல்லிற் கலந்த சுவையானார்

சேமம் நிலவுந் திருஒற்றித் தேவர் இன்னும் சேர்ந்திலர்நான்

தாமம் அருள்வீர் என்கினும்இத் தருணத் திசையா தென்பாரேல்

ஏம முலையாய் என்செய்வேன் என்னை மடவார் இகழாரோ.

5

1713.

வில்லை மலையாய்க் கைக்கொண்டார் விடஞ்சூழ் கண்டர் விரிபொழில்சூழ்

தில்லை நகரார் ஒற்றியுளார் சேர்ந்தார் அல்லர் நான்அவர்பால்

ஒல்லை அடைந்து நின்றாலும் உன்னை அணைதல் ஒருபோதும்

இல்லை எனிலோ என்செய்கேன் என்னை மடவார் இகழாரோ.

6

1714.

திருந்தால் அமர்ந்தார் திருப்புலியூர்ச் சிற்றம் பலத்தில் திருநடம்செய்

மருந்தார் ஒற்றி வாணர்இன்னும் வந்தார் அல்லர் நான்போய்என்

அருந்தாழ் வகல அருள்வீரென் றாலும் ஒன்றும் அறியார்போல்

இருந்தால் அம்மா என்செய்வேன் என்னை மடவார் இகழாரோ.

7

1715.

அசையா தமர்ந்தும் அண்டமெலாம் அசையப் புலியூர் அம்பலத்தே

நசையா நடிக்கும் நாதர்ஒற்றி நாட்டார் இன்னும் நண்ணிலர்நான்

இசையால் சென்றிங் கென்னைஅணை வீர்என் றுரைப்பேன் எனில்அதற்கும்

இசையார் ஆகில் என்செய்கேன் என்னை மடவார் இகழாரோ.

8

1716.

மாற்கா தலிக்கும் மலர்அடியார் மாசற் றிலங்கும் மணிஅனையார்

சேற்கா தலிக்கும் வயல்வளஞ்சூழ் திருவாழ் ஒற்றித் தேவர்அவர்

பாற்கா தலித்துச் சென்றாலும் பாவி அடிநீ யான்அணைதற்

கேற்காய் என்றால் என்செய்வேன் என்னை மடவார் இகழாரோ.

9

1717.

மாழை மலையைச் சிலையாக வளைத்தார் அன்பர் தமைவருத்தும்

ஊழை அழிப்பார் திருஒற்றி ஊரார் இன்னும் உற்றிலர்என்

பாழை அகற்ற நான்செலினும் பாரா திருந்தால் பைங்கொடியே

ஏழை அடிநான் என்செய்வேன் என்னை மடவார் இகழாரோ.

95. காதல் மாட்சி

திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1718.

திடனான் மறையார் திருஒற்றித் தியாகர் அவர்தம் பவனிதனை

மடனா மகன்று காணவந்தால் மலர்க்கை வளைக
ளினைக்கவர்ந்து

படனா கணியர் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

உடனா ஓடி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

1

1719.

தக்க வளஞ்சேர் ஒற்றியில்வாழ் தம்பி ரானார் பவனிதனைத்

துக்கம் அகன்று காணவந்தால் துகிலைக் கவர்ந்து
துணிவுகொண்டே

பக்க மருவும் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

ஒக்க ஓடி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

2

1720.

தாயாய் அளிக்குந் திருஒற்றித் தலத்தார் தமது பவனிதனை

மாயா நலத்தில் காணவந்தால் மருவும் நமது மனங்கவர்ந்து

பாயா விரைவில் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

ஓயா தோடி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

3

1721.

நிலவார் சடையார் திருஒற்றி நிருத்தர் பவனி தனைக்காண

நலவா தரவின் வந்துநின்றால் நங்காய் எனது நாண்கவர்ந்து

பலவா தரவால் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

உலவா தோடி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

4

1722.

நாடார் வளங்கொள் ஒற்றிநகர் நாதர் பவனி தனைக்காண

நீடா சையினால் வந்துவந்து நின்றால் நமது நிறைகவர்ந்து

பாடார் வலராம் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

ஓடா தோடி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

5

1723

அழியா வளத்தார் திருஒற்றி ஐயர் பவனி தனைக்காண

இழியா மகிழ்வி னொடும்வந்தால் என்னே பெண்ணே எழில்கவர்ந்து

பழியா எழிலின் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

ஒழியா தோழி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

6

1724.

திரையார் ஓதை ஒற்றியில்வாழ் தியாக ரவர்தம் பவனிதனைக்

கரையா மகிழ்விற் காணவந்தால் கற்பின் நலத்தைக் கவர்ந்துகொண்டு

பரையா தரிக்க நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

உரையா தோழி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

7

1725.

கடுக்கா தலித்தார் திருஒற்றிக் காளை அவர்தம் பவனிதனை

விடுக்கா மகிழ்விற் காணவந்தால் விரியும் நமது வினைகவர்ந்து

படுக்கா மதிப்பின் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

உடுக்கா தோழி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

8

1726.

தில்லை உடையார் திருஒற்றித் தியாகர் அவர் பவனிதனைக்

கல்லை உருக்கிக் காணவந்தால் கரணம் நமது கரந்திரவி

பல்லை இறுத்தார் நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்

ஒல்லை ஓழி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

9

1727.

மடையார் வாளை வயல்ஓற்றி வள்ளல் பவனி தனைக்காண
அடையா மகிழ்வி னொடும்வந்தால்அம்மா நமது விடயமெலாம்
படையாற் கவர்ந்து நமைத்திரும்பிப் பாரா தோடு கின்றார்நாம்
உடையா தோடி னாலும்அவர் ஓட்டம் பிடிக்க ஒண்ணாதே.

10

Back

96. அருண்மொழி மாலை

திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1728.

பொதுநின் றருள்வீ ரொற்றியுளீர்
பூவுந் தியதென் முலையென்றேன்
இதுவென் றறிநா மேறுகின்ற
தென்றா ரேறு கின்றதுதான்
எதுவென் றுரைத்தே னெதுநடுவோ
ரெழுத்திட் டறிநீ யென்றுரைத்தார்
அதுவின் றணங்கே யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

1

1729.

மருகா வொற்றி வாணர்பலி
வாங்க வகையுண் டேயென்றேன்
ஒருகா லெடுத்தேன் காணென்றா
ரொருகா லெடுத்துக் காட்டுமென்றேன்
வருகா விரிப்பொன் னம்பலத்துள்
வந்தாற் காட்டு வேமென்றார்
அருகா வியப்பா மென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

௨

1730.

விட்டொற் றியில்வாழ் வீரெவனிவ்
வேளை யருள நின்றதென்றேன்
சுட்டுஞ் சுதனே யென்றார்நான்
சுட்டி யறியச் சொல்லுமென்றேன்
பட்டுண் மருங்கே நீகுழந்தைப்
பருவ மதனின் முடித்ததென்றார்
அட்டுண் டறியா ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

3

1731.

வேலை ஞாலம் புகழொற்றி

விளங்குந் தேவர் நீரணியும்

மாலை யாதென் றேனயன்மால்

மாலை யகற்று மாலையென்றார்

சோலை மலரன் றேயென்றேன்

சோலை யேநாந் தொடுத்ததென்றார்

ஆலு மிடையா யென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

4

1732.

உயிரு ளுறைவீர் திருவொற்றி

யுள்ளீர் நீரென் மேற்பிடித்த

வயிர மதனை விடுமென்றேன்

மாற்றா ளலநீ மாதேயாஞ்

செயிர தகற்றுன் முலைப்பதிவாழ்

தேவ னலவே டௌியென்றார்

அயிர மொழியா யென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

5

1733.

தண்கா வளஞ்சூழ் திருவொற்றித்

தலத்தி லமர்ந்த சாமிநுங்கை

யெண்கார் முகமாப் பொன்னென்றே

னிடையிட் டறித லரிதென்றார்

மண்கா தலிக்கு மாடென்றேன்

மதிக்குங் கணைவில் லன்றென்றார்

அண்கார்க் குழலா யென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

6

1734.

அலங்கும் புனற்செய் யொற்றியுளீ

ரயன்மா லாதி யாவர்கட்கும்

இலங்கு மைகா ணீரென்றே

னிதன்முன் னேழ்நீ கொண்டதென்றார்

துலங்கு மதுதா னென்னென்றேன்

சுட்டென் றுரைத்தா ராகெட்டேன்

அலங்கற் குழலா யென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

7

1735.

விண்டு வணங்கு மொற்றியுளீர்

மென்பூ விருந்தும் வன்பூவில்

வண்டு விழுந்த தென்றேனெம்

மலர்க்கை வண்டும் விழுந்ததென்றார்
தொண்டர்க் கருள்வீர் நீரென்றேன்
றோகாய் நாமே தொண்டரென்றார்
அண்டர்க் கரியா ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

8

1736.

மட்டார் மலர்க்கா வொற்றியுளீர்
மதிக்குங் கலைமேல் விழுமென்றேன்
எட்டா மெழுத்தை யெடுக்குமென்றா
ரெட்டா மெழுத்திங் கேதுவென்றேன்
உட்டா வகற்று மந்தணர்க
ளுறையூர் மாதே யுணரென்றார்
அட்டார் புரங்க ளென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

9

1737.

ஒற்றி நகரீர் மனவாசி
யுடையார்க் கருள்வீர் நீரென்றேன்
பற்றி யிறுதி தொடங்கியது
பயிலு மவர்க்கே யருள்வதென்றார்

மற்றி துணர்கி லேனென்றேன்
வருந்தே லுணரும் வகைநான்கும்
அற்றி டென்றா ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

10

1738.

வான்றோய் பொழிற்சூ ழொற்றியுளீர்
வருந்தா தணைவே னோவென்றேன்
ஊன்றோ யுடற்கென் றார்தெரிய
வுரைப்பீ ரென்றே னோவிதுதான்
சான்றோ ருங்கண் மரபோர்ந்து
தரித்த பெயர்க்குத் தகாதென்றார்
ஆன்றோய் விடங்க ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

11

1739.

தீது தவிர்க்கு மொற்றியுளீர்
செல்ல லறுப்ப தென்றென்றேன்
ஈது நமக்குந் தெரியுமென்றா
ரிறையா மோவிங் கிதுவென்றேன்
ஓது மடியர் மனக்கங்கு

லோட்டு மியாமே யுணரென்றார்
ஆது தெரியே னென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

12

1740.

ஒண்கை மழுவோ டனலுடையீ
ரொற்றி நகர்வா ழுத்தமர்நீர்
வண்கை யொருமை நாதரென்றேன்
வண்கைப் பன்மை நாதரென்றார்
எண்க ணடங்கா வதிசயங்கா
ணென்றேன் பொருளன் றிதற்கென்றார்
அண்கொ ளணங்கே யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

13

1741.

ஒருவ ரெனவா ழொற்றியுளீ
ருமக்கம் மனையுண் டேயென்றேன்
இருவ ரொருபே ருடையவர்காண்
என்றா ரென்னென் றேனென்பேர்
மருவு மீறற் றயலகரம்
வயங்கு மிகர மானதென்றார்

அருவு மிடையா யென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

14

1742.

பேரா ரொற்றி யீரும்மைப்

பெற்றா ரெவரென் றேனவர்தம்

ஏரார் பெயரின் முன்பினிரண்

டிரண்ட கத்தா ரென்றாரென்

நேரா வுரைப்பீ ரென்றேனீ

நெஞ்ச நெகிழ்ந்தா லாமென்றார்

ஆரார் சடைய ரென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

15

1743.

தளிநான் மறையீ ரொற்றிநகர்

தழைத்து வாழ்வீர் தனிஞான

வொளிநா வரைசை யைந்தெழுத்தா

லுவரி கடத்தி னீரென்றேன்

களிநா வலனை யீரெழுத்தாற்

கடலில் வீழ்த்தி னேமென்றார்

அளிநாண் குழலா யென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

16

1744.

ஓமூன் றெழிலீ ரொற்றியுளீ
ருற்றோர்க் களிப்பீ ரோவென்றேன்
தாமூன் றென்பார்க் கயன்மூன்றுந்
தருவே மென்றா ரம்மமிகத்
தேமூன் றினநும் மொழியென்றேன்
செவ்வா யுறுமுன் முறுவலென்றார்
ஆமூன் றறுப்பா ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

17

1745.

மன்னி வளரு மொற்றியுளீர்
மடவா ரிரக்கும் வகையதுதான்
முன்னி லொருதா வாமென்றேன்
முத்தா வெனலே முறையென்றார்
என்னி லிதுதா னையமென்றே
னெவர்க்குந் தெரியு மென்றுரைத்தார்
அன்னி லோதி யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

18

1746.

வளஞ்சே ரொற்றி யீருமது
மாலை கொடுப்பீ ரோவென்றேன்
குளஞ்சேர் மொழியா யுனக்கதுமுன்
கொடுத்தே மென்றா ரிலையென்றேன்
உளஞ்சேர்ந் ததுகா ணிலையன்றோ
ருருவு மன்றங் கருவென்றார்
அளஞ்சேர் வடிவா யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

19

1747.

வீற்றா ரொற்றி யூரமர்ந்தீர்
விளங்கு மதனன் மென்மலரே
மாற்றா ரென்றே னிலைகாணெம்
மாலை முடிமேற் காணென்றார்
சாற்றாச் சலமே யீதென்றேன்
சடையின் முடிமே லன்றென்றார்
ஆற்றா விடையா யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

20

1748.

புயப்பா லொற்றி யீரச்சம்
போமோ வென்றே னாமென்றார்
வயப்பா வலருக் கிறையானீர்
வஞ்சிப் பாவிங் குரைப்பதென்றேன்
வியப்பா நகையப் பாவெனும்பா
வெண்பா கலிப்பா வுடனென்றார்
அயப்பா லிடையா யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

21

1749.

தண்ணம் பொழிற்சூ ழொற்றியுளீர்
சங்கங் கையிற்சேர்த் திடுமென்றேன்
திண்ணம் பலமேல் வருங்கையிற்
சேர்த்தோ முன்னர் தெரியென்றார்
வண்ணம் பலவிம் மொழிக்கென்றேன்
வாய்ந்தொன் றெனக்குக் காட்டென்றார்
அண்ணஞ் சுகமே யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

22

1750.

உகஞ்சே ரொற்றி யூருடையீ

ரொருமா தவரோ நீரென்றேன்

முகஞ்சேர் வடிவே லிரண்டுடையாய்

மும்மா தவர்நா மென்றுரைத்தார்

சுகஞ்சேர்ந் தனவும் மொழிக்கென்றேன்

றோகா யுனது மொழிக்கென்றார்

அகஞ்சேர் விழியா யென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

23

1751.

ஊரா மொற்றி யீராசை

யுடையே னென்றே னெமக்கலது

நேரா வழக்குத் தொடுக்கின்றாய்

நினக்கே தென்றார் நீரெனக்குச்

சேரா வணமீ தென்றேன்முன்

சேர்த்தீ தெழுதித் தந்தவர்தாம்

ஆரா ரென்றா ரென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

24

1752.

வருத்தந் தவரீ ரொற்றியுளீர்

மனத்த காத முண்டென்றேன்
நிருத்தந் தருநம் மடியாரை
நினைக்கின் றோரைக் கண்டதுதன்
றிருத்தந் தருமுன் னெழுத்திலக்கஞ்
சேருந் தூர மோடுமென்றார்
அருத்தந் தெரியே னென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

உ௫

1753.

மைய லகற்றீ ரொற்றியுளீர்
வாவென் றுரைப்பீ ரோவென்றேன்
துய்ய வதன்மேற் றலைவைத்துச்
சொன்னாற் சொல்வே மிரண்டென்றார்
உய்ய வுரைத்தீ ரெனக்கென்றே
னுலகி லெவர்க்கு மாமென்றார்
ஐய விடையா யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

உ௬

1754.

தாவென் றருளு மொற்றியுளீர்
தமியேன் மோக தாகமற

வாவென் றுரைப்பீ ரென்றேன்பின்
வருமவ் வெழுத்திங் கிலையென்றார்
ஓவென் றுயர்தீர்த் தருளுவதீ
தோவென் றேன்பொய் யுரைக்கின்றாய்
ஆவென் றுரைத்தா ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

27

1755.

வயலா ரொற்றி மேவுபிடி
வாதர் நும்பே ரியாதென்றேன்
இயலா யிட்ட நாமமதற்
கிளைய நாம மேயென்றார்
செயலார் கால மறிந்தென்னைச்
சேர்வீ ரென்றேன் சிரித்துனக்கிங்
கயலா ரென்றா ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

28

1756.

என்மே லருள்கூர்ந் தொற்றியுளீ
ரென்னை யணைய நினைவீரேற்
பொன்மேல் வெள்ளி யாமென்றேன்

பொன்மேற் பச்சை யறியென்றார்
மின்மேற் சடையீ ரீதெல்லாம்
விளையாட் டென்றே னன்றென்றார்
அன்மேற் குழலா யென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

29

1757.

நாலா ரணஞ்சூ ழொற்றியுளீர்
நாகம் வாங்கி யென்னென்றேன்
காலாங் கிரண்டிற் கட்டவென்றார்
கலைத்தோல் வல்லீர் நீரென்றேன்
வேலார் விழிமாத் தோலோடு
வியாளத் தோலு முண்டென்றார்
ஆலார் களத்த ரென்னடியவ்
வையர் மொழிந்த வருண்மொழியே.

30

1758.

முடியா வளஞ்சூ ழொற்றியுளீர்
முடிமே லிருந்த தென்னென்றேன்
கடியா வுள்ளங் கையின்முதலைக்
கடிந்த தென்றார் கமலமென

வடிவார் கரத்தி லென்னென்றேன்

வரைந்த வதனீ றற்றதென்றார்

அடியார்க் கெளியா ரென்னடியவ்

வையர் மொழிந்த வருண்மொழியே.

31

Back

97. இன்ப மாலை

திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1759.

ஒன்றும் பெருஞ்சீ ரொற்றிநக

ருள்ளா ருவந்தின் றுற்றனர்யான்

என்றும் பெரியீர் நீர்வருதற்

கென்ன நிமித்த மென்றுரைத்தேன்

துன்றும் விசும்பே யென்றனர்நான்

சூதா முமது சொல்லென்றேன்

குன்றுங் குடமு மிடையுனது

கொங்கை யெனவே கூறினரே.

1

1760.

கானார் சடையீ ரென்னிருக்கைக்

கன்றும் பசுப்போற் கற்றதென்றேன்
மானார் விழியாய் கற்றதுநின்
மருங்குற் கலையு மென்றார் நீர்
தானா ரென்றே னனிப்பள்ளித்
தலைவ ரெனவே சாற்றினர்நான்
ஆனா லொற்றி யிருமென்றே
னங்கு மிருந்தே னென்றாரே.

௨

1761.

வானங் கொடுப்பீர் திருவொற்றி
வாழ்வீ ரன்று வந்தீரென்
மானங் கெடுத்தீ ரென்றேன்முன்
வனத்தார் விடுத்தா ரென்றார்நீர்
ஊனந் தடுக்கு மிறையென்றே
னுலவா தடுக்கு மென்றார்மால்
ஏனம் புடைத்தீ ரணையென்பீ
ரென்றே னகலா ரென்றாரே.

3

1762.

இருமை யளவும் பொழிலொற்றி
யிடத்தீர் முனிவ ரிடரறநீர்

பெருமை நடத்தீ ரென்றேனென்

பிள்ளை நடத்தி னானென்றார்

தரும மலவிவ் விடையென்றேன்

றரும விடையு முண்டென்றார்

கரும மெவன்யான் செயவென்றேன்

கருதாண் பாலன் றென்றாரே.

4

1763.

ஓசிய விடுகு மிடையாரை

யொற்றி யிருந்தே வுருக்குகின்ற

வசியர் மிகநீ ரென்றேனென்

மகனே யென்றார் வளர்காமப்

பசிய துடையே னென்றேனுட்

பணியல் குலுமப் படியென்றார்

நிசிய மிடற்றீ ராமென்றேன்

நீகண் டதுவே யென்றாரே.

5

1764.

கலையா ளுடையீ ரொற்றிநின்றீர்

காம மளித்தீர் களித்தணையீர்

மலையா ளுமது மனைவியென்றேன்

மலைவா ளுனைநான் மருவினென்றார்
அலையாண் மற்றை யவளென்றே
னலைவா ளவளு மறியென்றார்
நிலையாண் மையினீ ராவென்றே
னீயா வென்று நின்றாரே.

6

1765.

சீலம் படைத்தீர் திருவொற்றித்
தியாக ரேநீர் திண்மைமிகுஞ்
சூலம் படைத்தீ ரென்னென்றேன்
றொல்லை யுலக முணவென்றார்
ஆலம் படுத்த களத்தீரென்
றறைந்தே னவளிவ் வானென்றார்
சாலம் பெடுத்தீ ருமையென்றேன்
றார மிரண்டா மென்றாரே.

7

1766.

ஞால ராதி வணங்குமொற்றி
நாதர் நீரே நாட்டமுறும்
பால ராமென் றுரைத்தேனாம்
பால ரலநீ பாரென்றார்

மேல ராவந் திடுமென்றேன்

விளம்பேல் மகவு மறியுமென்றார்

கோல ராமென் றுரைத்தேன்யாங்

கொண்டோ முக்க ணென்றாரே.

8

1767.

வண்மை தருவீ ரொற்றிநின்று

வருவீ ரென்னை மருவீர்நீர்

உண்மை யுடையீ ரென்றேனா

முடைப்பேம் வணங்கி னோர்க்கென்றார்

கண்மை யுடையீ ரென்றேனீ

களமை யுடையேம் யாமென்றார்

தண்மை யருளீ ரென்றேனாந்

தகையே யருள்வ தென்றாரே.

9

1768.

ஒன்னார் புரமூன் றெரிசெய்தீ

ரொற்றி யுடையீ ருவப்புடனே

யென்னா குலத்தை யோட்டுமென்றே

னிடைய ரலநா மென்றுரைத்தார்

பொன்னாற் சடையீ ரென்றேனென்

புதிய தேவி மனைவியென்றார்
சொன்னாற் கேள்வி வியப்பென்றேன்
சுத்த வியப்பொன் றென்றாரே.

10

1769.

கனிமா னிதழி முலைச்சுவடு
களித்தீ ரொற்றிக் கழுநகரீர்
தனிமா னேந்தி யென்றேனென்
றலைமே லொருமா னேந்தியென்றார்
துனிமாற் றுகிலீ ரென்றேனற்
றுகில்கோ வணங்கா ணென்றாரென்
பனிமால் வரையீ ரென்றேனென்
பனிமால் வரைகா ணென்றாரே.

11

Back

98. இங்கித மாலை

கலைமகள் வாழ்த்து

நேரிசை வெண்பா

1770.

அன்பர்பால் நீங்காஎன் அம்மையே தாமரைமேற்
பொன்பொருவு மேனி அயன்பூவின் - மன்பெரிய

வாக்கிறைவி நின்தாள் மலர்ச்சரணம் போந்தேனைக்

காக்கக் கடனுனக்கே காண்.

1

காப்பு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1771.

ஒருமா முகனை யொருமாவை

யூர்வா கனமா யுறநோக்கித்

திருமான் முதலோர் சிறுமையெலாந்

தீர்த்தெம் மிருகண் மணியாகிக்

கருமா லகற்றுங் கணபதியாங்

கடவு ளடியுங் களித்தவர்பின்

வருமா கருணைக் கடற்குமர

வள்ள லடியும் வணங்குவாம்.

1

பாடாண் திணை

கடவுண்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்

(வினா உத்தரம்)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1772.

திருவார் கமலத் தடம்பணைசூழ்

செல்வப் பெருஞ்சீ ரொற்றியில்வாழ்
மருவார் கொன்றைச் சடைமுடிகொள்
வள்ள லிவர்க்குப் பலிகொடுநா
ளொருவா தடைந்தே னினிநமக்கிங்
குதவ வருந்தோ றுன்முலைமே
லிருவா ரிடுநீ யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

1

1773.

தண்ணார் மலரை மதிநதியைத்
தாங்குஞ் சடையா ரிவர்தமைநா
னண்ணா லொற்றி யிருந்தவரே
யைய ரேநீர் யாரென்றே
னண்ணா ரிடத்து மம்பலத்து
நடவா தவர்நா மென்றுசொலி
யெண்ணா தருகே வருகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

2

1774.

பிட்டி னதிமண் சுமந்தவொற்றிப்
பிச்சைத் தேவ ரிவர்தமைநான்

றட்டின் மலர்க்கை யிடத்தெதுவோ

தனத்தைப் பிடியு மென்றுரைத்தேன்

மட்டி னொருமூன் றுடனேழு

மத்தர் தலையீ தென்றுசொலி

யெட்டி முலையைப் பிடிக்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

3

1775.

மடையிற் கயல்பா யொற்றிநகர்

வள்ள லாகு மிவர்தமைநா

னடையிற் கனிவாற் பணியென்றே

யருளீ ருரியீ ருடையென்றேன்

கடையிற் படுமோர் பணியென்றே

கருதி யுரைத்தே மென்றுரைத்தென்

னிடையிற் கலையை யுரிகின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

4

1776.

மன்றன் மணக்கு மொற்றிநகர்

வாண ராகு மிவர்தமைநா

னின்றன் பொடுங்கை யேந்தனத்தை

யேற்றோர் கலத்திற் கொளுமென்றே
னன்றன் புடையா யெண்கலத்தி
னாங்கொண் டிடுவே மென்றுசொலி
யென்றன் முலையைத் தொடுகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

5

1777.

கோமாற் கருளுந் திருவொற்றிக்
கோயி லுடையா ரிவரைமத
மாமாற் றியநீ ரேகலவி
மகிழ்ந்தின் றடியேன் மனையினிடைத்
தாமாற் றிடக்கொண் டேகுமென்றேன்
றாவென் றார்தந் தாலென்னை
யேமாற் றினையே யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

6

1778.

அம்மா லயனுங் காண்பரியீர்க்
கமரும் பதிதான் யாதென்றே
னிம்மா லுடையா யொற்றுதற்கோ
ரெச்ச மதுகண் டறியென்றார்

செம்மா லிஃதொன் றென்னென்றேன்

றிருவே புரிமேற் சேர்கின்ற

வெம்மான் மற்றொன் றென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

7

1779.

கண்கள் களிப்ப வீண்டுநிற்குங்

கள்வ ரிவரூ ரொற்றியதாம்

பண்க ளியன்ற திருவாயாற்

பலிதா வென்றார் கொடுவந்தேன்

பெண்க டரலீ தன்றென்றார்

பேசப் பலியா தென்றேனின்

னெண்கண் பலித்த தென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

8

1780.

ஆரா மகிழ்வு தருமொருபே

ரழக ரிவரூ ரொற்றியதா

நேராய் விருந்துண் டோ வென்றார்

நீர்தான் வேறிங் கிலையென்றேன்

வாரார் முலையாய் வாயமுது

மலர்க்கை யமுது மனையமுது
மேரா யுளவே யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

9

1781.

அடுத்தார்க் கருளு மொற்றிநக
ரைய ரிவர்தா மிகத்தாகங்
கடுத்தா மென்றார் கழிதடநீர்
கண்டீ ரையங் கொளுமென்றேன்
கொடுத்தாய் கண்ட திலையையங்
கொள்ளு மிடஞ்சூழ்ந் திடுங்கலையை
யெடுத்தாற் காண்பே மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

10

1782.

இந்தா ரிதழி யிலங்குசடை
யேந்த லிவரூ ரொற்றியதாம்
வந்தார் பெண்ணே யமுதென்றார்
வரையின் சுதையிங் குண்டென்றே
னந்தார் குழலாய் பசிக்கினும்பெண்
ணாசை விடுமோ வமுதின்றே

லெந்தா ரந்தா வென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

11

1783.

தன்னந் தனியா யிங்குநிற்குஞ்
சாமி யிவரூ ரொற்றியதா
மன்னந் தருவீ ரென்றார்நா
னழைத்தே னின்னை யன்னமிட
முன்னம் பசிபோ யிற்றென்றார்
முன்னின் றகன்றே னிவ்வன்ன
மின்னந் தருவா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

12

1784.

மாறா வழகோ டிங்குநிற்கும்
வள்ள லிவரூ ரொற்றியதாம்
வீறா முணவீ யென்றார்நீர்
மேவா வுணவிங் குண்டென்றேன்
கூறா மகிழ்வே கொடுவென்றார்
கொடுத்தா லிதுதா னன்றென்றே
யேறா வழக்குத் தொடுக்கின்றா

ரிதுதான் சேடி யென்னோடே.

13

1785.

வண்மை யுடையார் திருவொற்றி
வாண ரிவர்தாம் பலியென்றா
ருண்மை யறிவீர் பலியெண்மை
யுணர்கி லீரென் னுழையென்றேன்
பெண்மை சிறந்தாய் நின்மனையிற்
பேசும் பலிக்கென் றடைந்ததுநா
மெண்மை யுணர்ந்தே யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடே.

14

1786.

திருவை யளிக்குந் திருவொற்றித்
தேவ ரீர்க்கென் விழைவென்றேன்
வெருவ லுனது பெயரிடையோர்
மெய்நீக் கியநின் முகமென்றார்
தருவ லதனை வெளிப்படையாற்
சாற்று மென்றேன் சாற்றுவனே
லிருவை மடவா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடே.

15

1787.

முந்தை மறையோன் புகழொற்றி

முதல்வ ரிவர்தம் முகநோக்கிக்

கந்தை யுடையீ ரென்னென்றேன்

கழியா வுன்றன் மொழியாலே

யிந்து முகத்தா யெமக்கொன்றே

யிருநான் குணக்குக் கந்தையுள

திந்த வியப்பென் னென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

16

1788.

துன்ன லுடையா ரிவர்தமைநீர்

துன்னும் பதிதான் யாதென்றே

னென்ன லிரவி லெமைத்தெளிவா

னின்ற நினது பெயரென்றா

ருன்ன லுறுவீர் வெளிப்படவீ

துரைப்பீ ரென்றே னுரைப்பேனே

லின்ன லடைவா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

17

1789

சிமைக்கொள் சூலத் திருமலர்க்கைத்

தேவர் நீரெங் கிருந்ததென்றே

னெமைக்கண் டளவின் மாதேநீ

யிருந்த தெனயா மிருந்ததென்றா

ரமைக்கு மொழியிங் கிதமென்றே

னாமுன் மொழியிங் கிதமன்றோ

விமைக்கு மிழையா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

18

1790.

நடங்கொள் பதத்தீர் திருவொற்றி

நங்கள் பெருமா னீரன்றோ

திடங்கொள் புகழ்க்கச் சூரிடஞ்சேர்ந்

தீரென் றேனின் னடுநோக்காக்

குடஞ்சேர்ந் ததுமாங் கஃதென்றார்

குடம்யா தென்றே னஃதறிதற்

கிடங்கர் நடுநீக் கென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

19

1791.

சங்க மருவு மொற்றியுளீர்
சடைமே லிருந்த தென்னென்றேன்
மங்கை நினது முன்பருவ
மருவு முதனீத் திருந்ததென்றார்
கங்கை யிருந்த தேயென்றேன்
கமலை யனையாய் கழுக்கடையு
மெங்கை யிருந்த தென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

௨0

1792.

துதிசே ரொற்றி வளர்தரும
துரையே நீர்முன் னாடலுறும்
பதியா தென்றே னம்பெயர்முற்
பகரீ ரெழுத்தைப் பறித்ததென்றார்
நிதிசேர்ந் திடுமப் பெயர்யாது
நிகழ்த்து மென்றே னீயிட்ட
தெதுவோ வதுகா ணென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

௨௧

1793.

உடற்கச் சுயிரா மொற்றியுளீ

ருமது திருப்பேர் யாதென்றேன்

குடக்குச் சிவந்த பொழுதினைமுன்

கொண்ட வண்ண ராமென்றார்

விடைக்குக் கருத்தா வாநீர்தாம்

விளம்பன் மிகக்கற் றவரென்றே

னிடக்குப் புகன்றா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

௨௨

1794.

மணங்கே தகைவான் செயுமொற்றி

வள்ளலிவரை வல்விரைவேன்

பிணங்கேஞ் சிறிது நில்லுமென்றேன்

பிணங்கா விடினு நென்னலென

வணங்கே நினக்கொன் றினிற்பாதி

யதிலோர் பாதி யாகுமிதற்

கிணங்கேஞ் சிறிது மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

௨௩

1795.

ஒற்றி நகரா ரிவர்தமைநீ

ருவந்தே றுவதிங்கி யாதென்றேன்

மற்றுன் பருவத் தொருபங்கே
மடவா யென்றார் மறைவிடையீ
திற்றென் றறிதற் கரிதென்றே
னெம்மை யறிவா ரன்றியஃ
தெற்றென் றறிவா ரென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

௨௪

1796.

கண்ணின் மணிபோ லிங்குநிற்குங்
கள்வ ரிவரூ ரொற்றியதாம்
பண்ணின் மொழியாய் நின்பாலோர்
பறவைப் பெயர்வேண் டினம்படைத்தான்
மண்ணின் மிசையோர் பறவையதா
வாழ்வாயென்றா ரென்னென்றே
னெண்ணி யறிநீ யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

௨௫

1797.

சேடார் வளஞ்சூ ழொற்றிநகர்
செல்வப் பெருமா னிவர்தமைநா
னோடார் கரத்தீ ரெண்டோ ள்க

ளுடையீ ரென்னென் றுரைத்தேனீ
கோடா கோடி முகநூறு
கோடா கோடிக் களமென்னே
யீடா யுடையா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

26

1798.

துருமஞ் செழிக்கும் பொழிலொற்றித்
தோன்றா லிங்கு நீர்வந்த
கருமஞ் சொலுமென் றேனிவண்யாங்
கடாதற் குன்பா லெம்முடைமைத்
தருமம் பெறக்கண் டாமென்றார்
தருவ லிருந்தா லென்றேனில்
லிருமந் தரமோ வென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

27

1799.

ஒருகை முகத்தோர்க் கையரெனு
மொற்றித் தேவ ரிவர்தமைநான்
வருகை யுவந்தீ ரென்றனைநீர்
மருவி யணைதல் வேண்டுமென்றேன்

றருகை யுடனே யகங்காரந்
தனையெம் மழியார் தமைமயக்கை
யிருகை வளைசிந் தென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

௨௮

1௮௯௯.

திருத்த மிகுஞ்சீ ரொற்றியில்வாழ்
தேவ ரேயிங் கெதுவேண்டி
வருத்த மலர்க்கா லுறநடந்து
வந்தீ ரென்றேன் மாதேநீ
யருத்தந் தெளிந்தே நிருவாண
மாகவுன்ற னகத்தருட்க
ணிருத்த வடைந்தே மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

௨௯

1௮௯1.

வளஞ்சே ரொற்றி மாணிக்க
வண்ண ராகு மிவர்தமைநான்
குளஞ்சேர்ந் திருந்த துமக்கொருகண்
கோலச் சடையீ ரழகிதென்றேன்
களஞ்சேர் குளத்தி னெழின்முலைக்கண்

காண வோரைந் துனக்கழகீ
திளஞ்சேல் விழியா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

30

1892.

பலஞ்சே ரொற்றிப் பதியுடையீர்
பதிவே றுண்டோ நுமக்கென்றே
னுலஞ்சேர் வெண்பொன் மலையென்றா
ருண்டோ நீண்டமலையென்றேன்
வலஞ்சே ரிடைத்தவ் வருவித்த
மலைகா ணதனின் மம்முதல்சென்
றிலஞ்சேர்ந் ததுவு மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

31

1893

வயலா ரொற்றி வாணரிவர்
வந்தார் நின்றார் வாய்திறவார்
செயலார் விரல்கண் முடக்கியடி
சேர்த்தீ ரிதழ்கள் விரிவித்தார்
மயலா ருளத்தோ டென்னென்றேன்
மறித்தோர் விரலா லென்னுடைய

வியலார் வடிவிற் சுட்டுகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

32

1894.

பேர்வா ழொற்றி வாணரிவர்
பேசா மௌன யோகியராய்ச்
சீர்வாழ் நமது மனையினிடைச்
சேர்ந்தார் விழைவென் செப்புமென்றே
னோர்வா ழடியுங் குழலணியு
மொருநல் விரலாற் சுட்டியுந்தம்
மேர்வா ழொருகை பார்க்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

33

1895.

பெருஞ்சீ ரொற்றி வாணரிவர்
பேசா மௌனம் பிடித்திங்கே
விரிஞ்சீர் தரநின் றுடன்கீழு
மேலு நோக்கி விரைந்தார்யான்
வருஞ்சீ ருடையீர் மணிவார்த்தை
வதுக்க வென்றேன் மார்பிடைக்கா
ழிருஞ்சீர் மணியைக் காட்டுகின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

34

1806

வலந்தங் கியசீ ரொற்றிநகர்
வள்ள லிவர்தாம் மௌனமொடு
கலந்திங் கிருந்த வண்டசத்தைக்
காட்டி மூன்று விரனீட்டி
நலந்தங் குறப்பின் னடுமுடக்கி
நண்ணு மிந்த நகத்தொடுவா
யிலந்தங் கரத்தாற் குறிக்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

35

1807.

தேனார் பொழிலா ரொற்றியில்வாழ்
தேவ ரிவர்வாய் திறவாராய்
மானார் கரத்தோர் நகந்தெரித்து
வாளா நின்றார் நீளார்வந்
தானா ருளத்தோ டியாதென்றேன்
றங்கைத் தலத்திற் றலையையடி
யேனா டுறவே காட்டுகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

36

1898.

செச்சை யழகர் திருவொற்றித்
தேவ ரிவர்வாய் திறவாராய்
மெச்சு மொருகாற் கரந்தொட்டு
மீண்டு மிடற்றக் கரம்வைத்தார்
பிச்ச ரடிகேள் வேண்டுவது
பேசீ ரென்றேன் றமைக்காட்டி
யிச்சை யெனையுங் குறிக்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

37

1899.

மன்றார் நிலையார் திருவொற்றி
வாண ரிவர்தா மௌனமொடு
நின்றா ரிருகை யொலியிசைத்தார்
நிமிர்ந்தார் தவிசி னிலைகுறைத்தார்
நன்றா ரமுது சிறிதுமிழ்ந்தார்
நடித்தா ரியாவு மையமென்றே
னின்றா மரைக்கை யேந்துகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

38

1810.

வாரா விருந்தாய் வள்ளலிவர்
வந்தார் மௌன மொடுநின்றார்
நீரா ரெங்கே யிருப்பதென்றே
னீண்ட சடையைக் குறிப்பித்தா
ரூரா வைத்த தெதுவென்றே
னொண்கை யோடென் னிடத்தினில்வைத்
தேரார் கரத்தாற் சுட்டுகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

39

1811.

செங்கேழ் கங்கைச் சடையார்வாய்
திறவா ராக வீண்டடைந்தா
ரெங்கே யிருந்தெங் கணைந்ததுகா
ணெங்கள் பெருமா னென்றேனென்
னங்கே ழருகி னகன்றுபோ
யங்கே யிறைப்போ தமர்ந்தெழுந்தே
யிங்கே நடந்து வருகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

40

1812.

கொடையா ரொற்றி வாணரிவர்

கூறா மௌன ராகிநின்றார்

தொடையா ரிதழி மதிச்சடையென்

துரையே விழைவே துமக்கென்றே

னுடையார் துன்னற் கந்தைதனை

யுற்று நோக்கி நகைசெய்தே

யிடையாக் கழுமுட் காட்டுகின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

41

1813

பொன்னைக் கொடுத்தும் புணர்வரிய

புனித ரிவரூ ரொற்றியதா

முன்னைத் தவத்தா லியாங்காண

முன்னே நின்றார் முகமலர்ந்து

மின்னிற் பொலியுஞ் சடையீரென்

வேண்டு மென்றே னுணச்செய்யா

ளின்னச் சினங்கா ணென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

42

1814

வயலார் சோலை யெழிலொற்றி

வாண ராகு மிவர்தமைநான்

செயலா ரடியர்க் கருள்வீர்நுஞ்

சிரத்து முரத்துந் திகழ்கரத்தும்

வியலாய்க் கொண்ட தென்னென்றேன்

விளங்கும் பிநாக மவைமூன்று

மியலாற் காண்டி யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

43

1815.

பொதுநின் றருள்வீ ரொற்றியுளீர்

பூவுந் தியதென் விழியென்றே

னிதுவென் றறிநா மேறுகின்ற

தென்றா ரேறு கின்றதுதா

னெதுவென் றுரைத்தே னெதுநடுவோ

ரெழுத்திட் டறிநீ யென்றுசொலி

யெதிர்நின் றுவந்து நகைக்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

44

1816.

இட்டங் களித்த தொற்றியுளீ

ரீண்டிவ் வேளை யெவனென்றேன்

சுட்டுஞ் சுதனே யென்றார்நான்
சுட்டி யறியச் சொலுமென்றேன்
பட்டுண் மருங்குற் பாவாய்நீ
பரித்த தன்றே பாரென்றே
யெட்டுங் களிப்பா லுரைக்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

45

1817.

பாற்றக் கணத்தா ரிவர்காட்டுப்
பள்ளித் தலைவ ரொற்றியினின்
றாற்றப் பசித்து வந்தாரா
மன்ன மிடுமி னென்றுரைத்தேன்
சோற்றுக் கிளைத்தோ மாயினும்யாஞ்
சொல்லுக் கிளையேங் கீழ்ப்பள்ளி
யேற்றுக் கிடந்தா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

46

1818.

குருகா ரொற்றி வாணர்பலி
கொள்ள வகையுண் டோ வென்றே
னொருகா லெடுத்தீண் டுரையென்றா

ரொருகா லெடுத்துக்காட்டுமென்றேன்
வருகா விரிப்பொன் னம்பலத்தே
வந்தாற் காட்டு கின்றாம்வீ
ழிருகா லுடையா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

47

1819.

வேலை ஞாலம் புகழொற்றி
விளங்குந் தேவ ரணிகின்ற
மாலை யாதென் றேனயன்மான்
மாலை யகற்று மாலையென்றார்
சோலை மலரன் றேயென்றேன்
சோலை யேநாந் தொடுப்பதென
வேல முறுவல் புரிகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

48

1820.

உயிரு ளுறைவீர் திருவொற்றி
யுடையீர் நீரென் மேற்பிடித்த
வயிர மதனை விடுமென்றேன்
வயிரி யலநீ மாதேயாஞ்

செயிர தகற்றுன் முலையிடங்கொள்

செல்வ னலகாண் டெளியென்றே

யியல்கொண் முறுவல் புரிகின்றா

ரிதுதான் சேழ யென்னேடீ.

௪௯

1821.

தண்கா வளஞ்சூழ் திருவொற்றித்

தலத்தி லமர்ந்த சாமிநுங்கை

யெண்கார் முகமாப் பொன்னென்றே

னிடையிட் டறித லரிதென்றார்

மண்கா தலிக்கு மாடென்றேன்

மதிக்குங் கணைவி லன்றென்றே

யெண்கா ணகைசெய் தருள்கின்றா

ரிதுதான் சேழ யென்னேடீ.

௫௦

1822.

செய்காண் வளஞ்சூ ழொற்றியுளீர்

திருமான் முதன்முத் தேவர்கட்கு

மைகா ணீரென் றேனிதன்மே

லணங்கே நீயே ழடைதி யென்றார்

மெய்கா ணதுதா னென்னென்றேன்

விளங்குஞ் சுட்டுப் பெயரென்றே

யெய்கா ணுறவே நகைக்கின்றா

ரிதுதான் சேழி யென்னேடீ.

51

1823.

விண்டு வணங்கு மொற்றியுளீர்

மென்பூ விருந்தும் வன்பூவில்

வண்டு விழுந்த தென்றேனெம்

மலர்க்கை வண்டும் விழுந்ததென்றார்

தொண்டர்க் கருள்வீர் மிகவென்றேன்

றோகாய் நாமே தொண்டனென

வெண்டங் குறவே நகைக்கின்றா

ரிதுதான் சேழி யென்னேடீ.

52

1824.

மட்டார் மலர்கா வொற்றியுளீர்

மதிக்குங் கலைமேல் விழுமென்றே

னெட்டா மெழுத்தை யெடுத்தநா

மிசைத்தே மென்றா ரெட்டாக

வுட்டா வுறுமவ் வெழுத்தறிய

வுரைப்பீ ரென்றே னந்தணரூர்க்

கிட்டார் நாம மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

53

1825.

ஒற்றி நகரீர் மனவசிதா
னுடையார்க் கருள்வீர் நீரென்றேன்
பற்றி யிறுதி தொடங்கியது
பயிலு மவர்க்கே யருள்வதென்றார்
மற்றி துணர்கி லேனென்றேன்
வருந்தே லுள்ள வன்மையெலா
மெற்றி லுணர்தி யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

54

1826.

வான்றோய் பொழில்சூ ழொற்றியுளீர்
வருந்தா தணைவே னோவென்றே
னூன்றோ யுடற்கென் றார்தெரிய
வுரைப்பீ ரென்றே னோவிதுதான்
சான்றோ ருமது மரபோர்ந்து
தரித்த பெயர்க்குத் தகாதென்றே
யேன்றோர் மொழிதந் தருள்கின்றா

ரிதுதான் சேடி யென்னோடீ.

55

1827.

தீது தவிர்க்கு மொற்றியுளீர்
செல்ல லறுப்ப தென்றென்றே
னீது நமக்குத் தெரிந்ததென்றா
ரிறையா மோவிங் கிதுவென்றே
னோது மடியார் மனக்கங்கு
லோட்டு நாமே யுணரன்றி
யேது மிறையன் றென்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடீ.

56

1828.

ஒண்கை மழுவோ டனலுடையீ
ரொற்றி நகர்வா ழுத்தமர்நீர்
வண்கை யொருமை நாதரென்றேன்
வண்கைப் பன்மை நாதரென்றா
ரெண்க ணடங்கா வதிசயங்கா
ணென்றேன் பொருளன் றிவையதற்கென்
றெண்சொன் மணிதந் தருள்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடீ.

57

1829.

ஒருவ ரெனவா ழொற்றியுளீ
ருமக்கம் மனையுண் டோ வென்றே
னிருவ ரொருபே ருடையவர்கா
ணென்றா ரென்னென் றேனெம்பேர்
மருவு மீறற் றயலகரம்
வயங்கு மிகர மானதென்றே
யிருவு மொழிதந் தருள்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

58

1830.

பேரா ரொற்றி யீருமைப்
பெற்றா ரெவரென் றேனவர்தம்
மேரார் பெயரின் முன்பினிரண்
டிரண்டா மெழுத்தா ரென்றாரென்
னேரா யுரைப்பீ ரென்றேனீ
நெஞ்ச நெகிழ்ந்தா லுரைப்பாமென்
றேரா யுரைசெய் தருள்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

59

1831.

தளிநான் மறையீ ரொற்றிநகர்
தழைக்க வாழ்வீர் தனிஞான
வொளிநா வரசை யைந்தெழுத்தா
லுவரி கடத்தி னீரென்றேன்
களிநா வலனை யீரெழுத்தாற்
கடலின் வீழ்த்தி னேமென்றே
யெளியேற் குவப்பின் மொழிகின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

60

1832.

ஓமூன் றுளத்தீ ரொற்றியுளீ
ருற்றோர்க் களிப்பீ ரோவென்றேன்
றாமூன் றென்பார்க் கயன்மூன்றுந்
தருவே மென்றா ரம்மமிகத்
தேமூன் றினநும் மொழியென்றேன்
செவ்வா யுறுமுன் னகையென்றே
யேமூன் றுறவே நகைக்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

61

1833.

மன்னி விளங்கு மொற்றியுளீர்
மடவா ரிரக்கும் வகையதுதான்
முன்னி லொருதா வாமென்றேன்
முத்தா வெனலே முறையென்றா
ரென்னி லிதுதா னையமென்றே
னெமக்குந் தெரியு மெனத்திருவா
யின்ன லமுத முகுக்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

62

1834.

வளஞ்சே ரொற்றி யீரெனக்கு
மாலை யணிவீ ரோவென்றேன்
குளஞ்சேர் மொழிப்பெண் பாவாய்நின்
கோல மனைக்க ணாமகிழ்வா
லுளஞ்சேர்ந் தடைந்த போதேநின்
னுளத்தி லணிந்தே முணரென்றே
யிளஞ்சீர் நகைசெய் தருள்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

63

1835.

வீற்றா ரொற்றி நகரமர்ந்தீர்

விளங்கு மலரே விளம்புநெடு மாற்றா ரென்றே னிலைகாணெம்

மாலை முடிமேற் பாரென்றார்

சாற்றாச் சலமே யீதென்றேன்

சடையின் முடிமே லன்றென்றே

யேற்றா தரவான் மொழிகின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

64

1836.

புயப்பா லொற்றி யீரச்சம்

போமோ வென்றே னாமென்றார்

வயப்பா வலருக் கிறையானீர்

வஞ்சிப் பாவிங் குரைத்ததென்றேன்

வியப்பா நகையப் பாவெனும்பா

வெண்பா கலிப்பா வுரைத்துமென்றே

யியற்பான் மொழிதந் தருள்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

65

1837.

1837. தண்ணம் பொழில்சூ ழொற்றியுளீர்

சங்கங் கையிற்சேர்த் திடுமென்றேன்

றிண்ணம் பலமேல் வருங்கையிற்

சேர்த்தோ முன்னர் தெரியென்றார்
வண்ணம் பலவிம் மொழிக்கென்றேன்
மடவா யுனது மொழிக்கென்றே
யெண்ணங் கொளநின் றுரைக்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

66

1838.

உகஞ்சே ரொற்றி யூருடையீ
ரொருமா தவரோ நீரென்றேன்
முகஞ்சேர் வடிவே லிரண்டுடையாய்
மும்மா தவர்நா மென்றுரைத்தார்
சுகஞ்சேர்ந் திடுநும் மொழிக்கென்றேன்
றோகா யுனது மொழிக்கென்றே
யிகஞ்சேர் நயப்பா லுரைக்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

67

1839.

ஊரா மொற்றி யீராசை
யுடையே னென்றே னெமக்கலது
நேரா வழக்குத் தொடுக்கின்றாய்
நினக்கே தென்றார் நீரெனக்குச்

சேரா வணமீ தென்றேன்முன்
சேர்த்தீ தெழுதித் தந்தவர்தாம்
யாரார் மடவா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

68

1840.

வருத்தந் தவிரீ ரொற்றியுளீர்
மனத்தி லகாத முண்டென்றே
னிருத்தந் தொழுநம் மடியவரை
நினைக்கின் றோரைக் காணினது
வுருத்தன் பெயர்முன் னெழுத்திலக்க
முற்றே மற்ற வெல்லையகன்
றிருத்த லறியா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

69

1841.

மைய லகற்றீ ரொற்றியுளீர்
வாவென் றுரைப்பீ ரோவென்றேன்
செய்ய வதன்மேற் சிகரம்வைத்துச்
செவ்வ னுரைத்தா லிருவாவென்
றுய்ய வுரைப்பே மென்றார்நும்

முரையென் னுரையென் றேனிங்கே
யெய்யுன் னுரையை யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

70

1842.

தாவென் றருளு மொற்றியுளீர்
தமியேன் மோக தாகமற
வாவென் றருள்வீ ரென்றேனவ்
வாவின் பின்னர் வருமெழுத்தை
மேவென் றதனிற் சேர்த்திங்கே
மேவி னன்றோ வாவென்பே
னேவென் றிடுகண் ணென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

71

1843.

என்மே லருள்கூர்ந் தொற்றியுளீ
ரென்னை யணைவா னினைவீரேற்
பொன்மேல் வெள்ளி யாமென்றேன்
பொன்மேற் பச்சை யாங்கதன்மே
லன்மேற் குழலாய் சேயதன்மே
லலவ னதன்மேன் ஞாயிறஃ

தின்மே லொன்றின் றென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

72

1844.

வயலா ரொற்றி மேவுபிடி
வாதர் நாம மியாதென்றேன்
மயலா யிடுமிப் பெயர்ப்பின்னர்
வந்த விளைய நாமமென்றார்
செயலார் கால மறிந்தென்னைச்
சேர்வீ ரென்றேன் சிரித்துனக்கிங்
கியலா ரயலா ரென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

73

1845.

நாலா ரணஞ்சூ ழொற்றியுளீர்
நாகம் வாங்க லென்னென்றேன்
காலாங் கிரண்டிற் கட்டவென்றார்
கலைத்தோல் வல்லீர் நீரென்றேன்
வேலார் விழிமாப் புலித்தோலும்
வேழத் தோலும் வல்லேமென்
றேலா வமுத முகுக்கின்றா

ரிதுதான் சேடி யென்னோடீ.

74

1846.

முடியா வளஞ்சூ ழொற்றியுளீர்
முடிமே லிருந்த தென்னென்றேன்
கடியா வுள்ளங் கையின்முதலைக்
கடிந்த தென்றார் கமலமென
வடிவார் கரத்தி லென்னென்றேன்
வரைந்த வதனீ றகன்றதென்றே
யிடியா நயத்தி னகைக்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடீ.

75

1847.

ஒன்றும் பெருஞ்சீ ரொற்றிநக
ருடையீர் யார்க்கு முணர்வரியீ
ரென்றும் பெரியீர் நீர்வருதற்
கென்ன நிமித்த மென்றேன்யான்
றுன்றும் விசும்பே காணென்றார்
சூதா முமது சொல்லென்றே
னின்றுன் முலைதா னென்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடீ.

76

1848.

வானார் வணங்கு மொற்றியுளீர்
மதிவாழ் சடையீர் மரபிடைநீர்
தானா ரென்றே னனிப்பள்ளித்
தலைவ ரெனவே சாற்றினர்கா
ணானா லொற்றி யிருமென்றே
னாண்டே யிருந்து வந்தனஞ்சே
யீனா தவணீ யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

77

1849.

பற்று முடித்தோர் புகழொற்றிப்
பதியீர் நுமது பசுவினிடைக்
கற்று முடித்த தென்னிருகைக்
கன்று முழுதுங் காணென்றேன்
மற்று முடித்த மாலையொடுன்
மருங்குற் கலையுங் கற்றுமுடிந்
திற்று முடித்த தென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

78

1850.

வானங் கொடுப்பீர் திருவொற்றி
வாழ்வீ ரன்று வந்தெனது
மானங் கெடுத்தீ ரென்றுரைத்தேன்
மாநன் றிஃதுன் மானன்றே
யூனங் கலிக்குந் தவர்விட்டா
ருலக மறியுங் கேட்டறிந்தே
யீனந் தவிர்ப்பா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

79

1851.

ஞானம் படைத்த யோகியர்வாழ்
நகரா மொற்றி நலத்தீர்மா
லேனம் புடைத்தீ ரணையென்பீ
ரென்னை யுவந்திப் பொழுதென்றே
னூனந் தவிர்த்த மலர்வாயி
னுள்ளே நகைசெய் திஃதுரைக்கே
மீனம் புகன்றா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

80

1852.

கருமை யளவும் பொழிலொற்றிக்
கணத்தீர் முனிவர் கலக்கமறப்
பெருமை நடத்தி னீரென்றேன்
பிள்ளை நடத்தி னானென்றார்
தரும மலவிவ் விடையென்றேன்
றரும விடையு முண்டென்பா
லிருமை விழியா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

81

1853.

ஓசிய விடுகு மிடையாரை
யொற்றி யிருந்தே மயக்குகின்ற
வசியர் மிகநீ ரென்றேனெம்
மகன்கா ணென்றார் வளர்காமப்
பசிய தொடையுற் றேனென்றேன்
பட்ட மவிழ்த்துக் காட்டுதியே
லிசையக் காண்பே மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

82

1854.

கலையா ளுடையீ ரொற்றிநின்றீர்

காம மளித்தீர் களித்தணைவீர்

மலையா ளுமது மனையென்றேன்

மருவின் மலையா ளல்லளென்றா

ரலையாண் மற்றை யவளென்றே

னறியி னலையா ளல்லளுனை

யிலையா மணைவ தென்கின்றா

ரிதுதான் சேழி யென்னேடீ.

83

1855.

சீலம் படைத்தீர் திருவொற்றித்

தியாக ரேநீர் திண்மையிலோர்

சூலம் படைத்தீ ரென்னென்றேன்

றோன்று முலகுய்ந் திடவென்றா

ராலங் களத்தீ ரென்றேனீ

யாலம் வயிற்றா யன்றோநல்

லேலங் குழலா யென்கின்றா

ரிதுதான் சேழி யென்னேடீ.

84

1856.

ஞால நிகழும் புகழொற்றி

நடத்தீர் நீர்தா ணாட்டமுறும்

பால ரலவோ வென்றேனைம்

பாலர் பாலைப் பருவத்திற்

சால மயல்கொண் டிடவருமோர்

தனிமைப் பால ரியாமென்றே

யேல முறுவல் புரிகின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

85

1857.

வண்மை தருவீ ரொற்றிநகர்

வாழ்வீ ரென்னை மருவீரென்

னுண்மை யறியீ ரென்றேன்யா

முணர்ந்தே யகல நின்றதென்றார்

கண்மை யிலரோ நீரென்றேன்

களமை யுடையேங் கண்மையுற

லெண்மை நீயே யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

86

1858.

தவந்தங் கியசீ ரொற்றிநகர்

தனைப்போ னினைத்தென் மனையடைந்தீ

ருவந்தென் மீதிற் றேவர்திரு

வுள்ளந் திரும்பிற் றோவென்றேன்

சிவந்தங் கிடநின் னுள்ளமெம்மேற்

றிரும்பிற் றதனைத் தேர்ந்தன்றே

யிவர்ந்திங் கணைந்தா மென்கின்றா

ரிதுதான் சேழு யென்னேடீ.

87

1859.

ஒன்னார் புரமூன் றெரிசெய்தீ

ரொற்றி யுடையீ ரும்முடைய

பொன்னார் சடைமேல் வெள்ளெருக்கம்

பூவை மிலைந்தீ ரென்னென்றே

னின்னா ரளகத் தணங்கேநீ

நெட்டி மிலைந்தா யிதிலதுகீ

ழென்னா ருலக ரென்கின்றா

ரிதுதான் சேழு யென்னேடீ.

88

1860

கனிமா னிதழி முலைச்சுவடு

களித்தீ ரொற்றிக் காதலர்நீர்

தனிமா னேந்தி யாமென்றேன்

றடங்கண் மடந்தாய் நின்முகமும்

பனிமா னேந்தி யாமென்றார்

பரைமான் மருவி னீரென்றே

னினிமான் மருவி யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

89

1861

சிறியேன் றவமோ வெனைப்பெற்றார்

செய்த தவமோ வீண்டடைந்தீ

ரறியே னொற்றி யடிகேளிங்

கடைந்த வாறென் னினைத்தென்றேன்

பொறிநே ருனது பொற்கலையைப்

பூவார் கலையாக் குறநினைத்தே

யெறிவேல் விழியா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

90

1862

அளிக்குங் குணத்தீர் திருவொற்றி

யழக ரேநீ ரணிவேணி

வெளிக்கொண் முடிமே லணிந்ததுதான்

விளியா விளம்பத் திரமென்றேன்

விளிக்கு மிளம்பத் திரமுமுடி

மேலே மிலைந்தாம் விளங்கிழைநீ
யெளிக்கொண் டுரையே லென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

91

1863

வாசங் கமழு மலர்ப்பூங்கா
வனஞ்சூ ழொற்றி மாநகரீர்
நேசங் குறிப்ப தென்னென்றே
னீயோ நாமோ வுரையென்றார்
தேசம் புகழ்வீர் யானென்றேன்
றிகழ்தைத் திரிதித் திரியேயா
மேசங் குறிப்ப தென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

92

1864

பேசுங் கமலப் பெண்புகழும்
பெண்மை யுடைய பெண்களெலாங்
கூசும் படியிப் படியொற்றிக்
கோவே வந்த தென்னென்றேன்
மாசுந் தரிநீ யிப்படிக்கு
மயங்கும் படிக்கு மாதருனை

யேசும் படிக்கு மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னோடே.

93

1865

கொடியா லெயில்சூ ழொற்றியிடங்

கொண்டீ ரடிகள் குருவுருவாம்

படியா லடியி லிருந்தமறைப்

பண்பை யுரைப்பீ ரென்றேனின்

மடியா லடியி லிருந்தமறை

மாண்பை வகுத்தா யெனிலதுநா

மிடியா துரைப்பே மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னோடே.

94

1866

என்னே ருளத்தி னமர்ந்தீர்நல்

லெழிலா ரொற்றி யிடையிருந்தீ

ரென்னே யடிகள் பலியேற்ற

லேழ்மை யுடையீர் போலுமென்றே

னின்னே கடலி னிடைநீபத்

தேழ்மை யுடையாய் போலுமென

வின்னே யங்கொண் டுரைக்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

95

1867

நல்லார் மதிக்கு மொற்றியுளீர்

நண்ணு முயிர்க டொறுநின்றீ

ரெல்லா மறிவீ ரென்னுடைய

விச்சை யறியீர் போலுமென்றேன்

வல்லா யறிவின் மட்டொன்று

மனமட் டொன்று வாய்மட்டொன்

றெல்லா மறிந்தே மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

96

1868

மறிநீர்ச் சடையீர் சித்தெல்லாம்

வல்லீ ரொற்றி மாநகரீர்

பொறிசே ருமது புகழ்பலவிற்

பொருந்துங் குணமே வேண்டுமென்றேன்

குறிநே ரமது விற்குணத்தின்

குணத்தா யதனால் வேண்டுற்றா

யெறிவேல் விழியா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

97

1869

ஊரூ ரிருப்பீ ரொற்றிவைத்தீ

ரூர்தான் வேறுண் டோ வென்றே

னோரூர் வழக்கிற் கரியையிறை

யுன்னி வினவு மூரொன்றோ

பேரூர் தினையூர் பெரும்புலியூர்

பிடவூர் கடவூர் முதலாக

வேரூ ரனந்த மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

98

1870

விழியொண் ணுதலீ ரொற்றியுளீர்

வேதம் பிறவி யிலரென்றே

மொழியு நுமைத்தான் வேயீன்ற

முத்த ரெனலிங் கென்னென்றேன்

பழியன் றணங்கே யவ்வேய்க்குப்

படுமுத் தொருவித் தன்றதனா

லிழியும் பிறப்போ வென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

99

1871

விண்ணார் பொழில்சூ ழொற்றியுளீர்

விளங்குந் தாம மிகுவாசத்

தண்ணார் மலர்வே தனையொழிக்கத்

தருதல் வேண்டு மெனக்கென்றேன்

பண்ணார் மொழியா யுபகாரம்

பண்ணாப் பகைவ ரேனுமிதை

யெண்ணா ரெண்ணா ரென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

190

1872

செம்பான் மொழியார் முன்னரெனைச்

சேர்வீரென்கோ திருவொற்றி

யம்பார் சடையீ ருமதாட

லறியே னருளல் வேண்டுமென்றேன்

வம்பார் முலையாய் காட்டுகின்றா

மன்னும் பொன்னா ரம்பலத்தே

யெம்பால் வாவென் றுரைக்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

191

1873

மைக்கொண் மிடற்றீ ரூரொற்றி

வைத்தீ ருண்டோ மனையென்றேன்

கைக்க ணிறைந்த தனத்தினுந்தங்

கண்ணி னிறைந்த கணவனையே

துய்க்கு மடவார் விழைவரெனச்

சொல்லும் வழக்கீ தறிந்திலையோ

வெய்க்கு மிடையா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

102

1874

ஆறு முகத்தார் தமையீன்ற

வைந்து முகத்தா ரிவர்தமைநான்

மாறு முகத்தார் போலொற்றி

வைத்தீர் பதியை யென்னென்றே

னாறு மலர்ப்பூங் குழனீயோ

நாமோ வைத்த துன்மொழிமன்

றேறு மொழியன் றென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

103

1875

வள்ளன் மதியோர் புகழொற்றி

வள்ளா லுமது மணிச்சடையின்
வெள்ள மகண்மேற் பிள்ளைமதி
விளங்க லழகீ தென்றேனின்
னுள்ள முகத்தும் பிள்ளைமதி
யொளிகொண் முகத்தும் பிள்ளைமதி
யெள்ள லுடையா யென்கின்றா
ரிதுதான் சேழி யென்னேடீ.

104

1876

உள்ளத் தனையே போலன்ப
ருவக்குந் திருவா மொற்றியுளீர்
கள்ளத் தவர்போ லிவணிற்குங்
கரும மென்னீ ரின்றென்றேன்
மெள்ளக் கரவு செயவோநாம்
வேட மெடுத்தோ நின்சொனினை
யெள்ளப் புரிந்த தென்கின்றா
ரிதுதான் சேழி யென்னேடீ.

105

1877

அச்சை யடுக்குந் திருவொற்றி
யவர்க்கோர் பிச்சை கொடுமென்றேன்

விச்சை யடுக்கும் படிநம்பான்

மேவினோர்க்கிவ் வகில நடைப்

பிச்சை யெடுப்பே மலதுன்போற்

பிச்சை கொடுப்பே மலவென்றே

யிச்சை யெடுப்பா யுரைக்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

106

1878

அள்ளற் பழனத் திருவொற்றி

யழக ரிவர்தம் முகநோக்கி

வெள்ளச் சடையீ ருள்ளத்தே

விருப்பே துரைத்தாற் றருவலென்றேன்

கொள்ளக் கிடையா வலர்குமுதங்

கொண்ட வமுதங் கொணர்ந்தின்னு

மெள்ளத் தனைதா வென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

107

1879

விஞ்சு நெறியீ ரொற்றியுளீர்

வியந்தீர் வியப்பென் னிவணென்றேன்

கஞ்ச மிரண்டு நமையங்கே

கண்டு குவிந்த விரிந்திங்கே

வஞ்ச விருதா மரைமுகையை

மறைக்கின் றனநின் பால்வியந்தா

மெஞ்ச லறநா மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

108

1880

அளியா ரொற்றி யுடையாருக்

கன்ன நிரம்ப விடுமென்றே

னளியார் குழலாய் பிடியன்ன

மளித்தாற் போது மாங்கதுநின்

னொளியார் சிலம்பு சூழ்கமலத்

துளதாற் கடகஞ் சூழ்கமலத்

தெளியார்க் கிடுநீ யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

109

1881

விச்சைப் பெருமா னெனுமொற்றி

விடங்கப் பெருமா னீர்முன்னம்

பிச்சைப் பெருமா னின்றுமணப்

பிள்ளைப் பெருமா னாமென்றே

னச்சைப் பெறுநீ யம்மணப்பெண்
ணாகி யிடையி லையங்கொள்
ளிச்சைப் பெரும்பெண் ணென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

110

1882.

படையம் புயத்தோன் புகழொற்றிப்
பதியீ ரரவப் பணிசுமந்தீர்
புடையம் புயத்தி லென்றேன்செம்
பொன்னே கொடையம் புயத்தினுநன்
னடையம் புயத்துஞ் சுமந்தனைநீ
நானா வரவப் பணிமற்று
மிடையம் பகத்து மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

111

1883

கூம்பா வொற்றி யூருடையீர்
கொடும்பாம் பணிந்தீ ரென்னென்றே
னோம்பா துரைக்கிற் பார்த்திடினுள்
ளுன்னில் விடமேற் றுன்னிடைக்கீழ்ப்
பாம்பா வதுவே கொடும்பாம்பெம்

பணிப்பாம் பதுபோற் பாம்பலவென்

றேம்பா நிற்ப விசைக்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

112

1884.

புயல்சூ ழொற்றி யுடையீரென்

புடையென் குறித்தோ போந்ததென்றேன்

கயல்சூழ் விழியாய் தனத்தவரைக்

காண லிரப்போ ரெதற்கென்றார்

மயல்சூழ் தனமிங் கிலையென்றேன்

மறையா தெதிர்வைத் திலையென்ற

லியல்சூ ழறமன் றென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

113

1885.

நடவாழ் வொற்றி யுடையீர்நீர்

நாக மணிந்த தழகென்றேன்

மடவா யதுநீர் நாகமென

மதியே லயன்மான் மனனடுங்க

விடவா யுமிழும் படநாகம்

வேண்டிற்காண்டி யென்றேயென்

னிடவா யருகே வருகின்றா
ரிதுதான் சேழி யென்னேடீ.

114

1886.

கோடா வொற்றி யுடையீர்நுங்
குலந்தான் யாதோ கூறுமென்றேன்
வீடார் பிரம குலந்தேவர்
வேந்தர் குலநல் வினைவசியப்
பாடார் குலமோர் சக்கரத்தான்
பள்ளிக் குலமெல் லாமுடையே
மேடார் குழலா யென்கின்றா
ரிதுதான் சேழி யென்னேடீ.

115

1887.

நலமா மொற்றி யுடையீர்நீர்
நல்ல வழக ரானாலுங்
குலமே துமக்கு மாலையிடக்
கூடா தென்றே னின்குலம்போ
லுலகோ துறுநங் குலமொன்றோ
வோரா யிரத்தெட் டுயர்குலமிங்
கிலகா நின்ற தென்கின்றா

ரிதுதான் சேடி யென்னோடீ.

116

1888.

> மதிலொற் றியினீர் நும்மனையாண்
மலையின் குலநும் மைந்தருளோர்
புதல்வர்க் கானைப் பெருங்குலமோர்
புதல்வர்க் கிசையம் புலிக்குலமா
மெதிரற் றருள்வீர் நுங்குலமிங்
கெதுவோ வென்றேன் மனைவியருள்
ளிதுமற் றொருத்திக் கென்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடீ.

117

1889.

தேமாம் பொழில்சூ ழொற்றியுளீர்
திகழுந் தகரக் காற்குலத்தைப்
பூமா னிலத்தில் விழைந்துற்றீர்
புதுமை யிஃதும் புகழென்றே
னாமா குலத்தி லரைக்குலத்துள்
ளணைந்தே புறமற் றரைக்குலங்கொண்
டேமாந் தனைநீ யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னோடீ.

118

1890.

அனஞ்சூ ழொற்றிப் பதியுடையீ

ரகில மறிய மன்றகத்தே

மனஞ்சூழ் தகரக் கால்கொண்டீர்

வனப்பா மென்றே னுலகறியத்

தனஞ்சூ ழகத்தே யணங்கேநீ

தானுந் தகரத் தலைகொண்டா

யினஞ்சூ ழழகா மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

119

1891.

பங்கே ருகப்பூம் பணையொற்றிப்

பதியீர் நடுவம் பரமென்னு

மங்கே யாட்டுக் காலெடுத்தீ

ரழகென் றேனவ் வம்பரமே

லிங்கே யாட்டுத் தோலெடுத்தா

யாமொன் றிரண்டு நீயென்றா

லெங்கே நின்சொல் லென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

120

1892.

மாணப் புகழ்சே ரொற்றியுளீர்
மன்றார் தகர வித்தைதனைக்
காணற் கினிநான் செயலென்னே
கருதி யுரைத்தல் வேண்டுமென்றேன்
வேணச் சுறுமெல் லியலேயாம்
விளம்பு மொழியவ் வித்தையுனக்
கேணப் புகலு மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

121

1893.

நல்லா ரொற்றி யுடையீர்யா
னடக்கோ வெறும்பூ வணையணைய
வல்லா லவணும் முடன்வருகோ
வணையா தவலத் துயர்துய்க்கோ
செல்லா வென்சொன் நடவாதோ
திருக்கூத் தெதுவோ வெனவிடைக
ளெல்லா நடவா தென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

122

1894.

ஆட்டுத் தலைவர் நீரொற்றி
யழகீ ரதனாற் சிறுவிதிக்கோ
ராட்டுத் தலைதந் தீரென்றே
னன்றா லறவோ ரறம்புகல
வாட்டுத் தலைமுன் கொண்டதனா
லஃதே பின்ன ரளித்தாமென்
றீட்டுத் தரமீந் தருள்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

123

1895.

ஒற்றிப் பெருமா னுமைவிழைந்தா
ரூரில் வியப்பொன் றுண்டிரவிற்
கொற்றக் கமலம் விரிந்தொருகீழ்க்
குளத்தே குமுதங் குவிந்ததென்றேன்
பொற்றைத் தனத்தீர் நுமைவிழைந்தார்
புரத்தே மதியந் தேய்கின்ற
தெற்றைத் தினத்து மென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

124

1896.

இடஞ்சே ரொற்றி யுடையீர்நீ

ரென்ன சாதி யினரென்றேன்

தடஞ்சேர் முலையாய் நாந்திறலாண்

சாதி நீபெண் சாதியென்றார்

விடஞ்சேர் களத்தீர் நும்மொழிதான்

வியப்பா மென்றே னயப்பானின்

னிடஞ்சேர் மொழிதா னென்கின்றா

ரிதுதான் சேடீ யென்னேடீ.

125

1897.

உடையா ரென்பா ருமையொற்றி

யுடையீர் பணந்தா னுடையீரோ

நடையா யேற்கின் றீரென்றே

னங்காய் நின்போ லொருபணத்தைக்

கடையா ரெனக்கீழ் வைத்தருமை

காட்டேம் பணிகொள் பணங்கோடி

யிடையா துடையே மென்கின்றா

ரிதுதான் சேடீ யென்னேடீ.

126

1898.

என்னா ருயிர்க்குப் பெருந்துணையா

மெங்கள் பெருமா னீரிருக்கு

நன்னா டொற்றி யன்றோதா

னவில வேண்டு மென்றுரைத்தேன்

முன்னா ளொற்றி யெனினுமது

மொழித லழகோ தாழ்தலுயர்

விந்நா னிலத்துண் டென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

127

1899.

பெருந்தா ரணியோர் புகழொற்றிப்

பெருமா னிவர்தம் முகநோக்கி

யருந்தா வமுத மனையீரிங்

கடுத்த பரிசே தறையுமென்றேன்

வருந்தா திங்கே யருந்தமுத

மனையா ளாக வாழ்வினொடு

மிருந்தா யடைந்தே மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

128

1900.

செம்மை வளஞ்சூ ழொற்றியுளீர்

திகழாக் கரித்தோ லுடுத்தீரே

யும்மை விழைந்த மடவார்க

ளுடுக்கக் கலையுண் டோ வென்றே

னெம்மை யறியா யொருகலையோ

விரண்டோ வனந்தங் கலைமெய்யி

லிம்மை யுடையே மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

129

1981.

கற்றைச் சடையீர் திருவொற்றிக்

காவ லுடையீ ரீங்கடைந்தீ

ரிற்றைப் பகலே நன்றென்றே

னிற்றை யிரவே நன்றெமக்குப்

பொற்றைத் தனத்தாய் கையமுதம்

பொழியா தலர்வாய்ப் புத்தமுத

மிற்றைக் களித்தா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

130

1982.

கற்றீ ரொற்றீர் முன்பொருவான்

காட்டிற் கவர்ந்தோர் நாட்டில்வளை

விற்றீ ரின்றென் வளைகொண்டீர்

விற்கத் துணிந்தீ ரோவென்றேன்

மற்றீர்ங் குழலாய் நீயெம்மோர்

மனையின் வளையைக் கவர்ந்துகளத்

திற்றீ தணிந்தா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

131

1993.

உடுக்கும் புகழா ரொற்றியுளா

ருடைதா வென்றார் திகையெட்டு

முடுக்கும் பெரியீ ரெதுகண்டோ

வுரைத்தீ ரென்றேன் றிகைமுழுது

முடுக்கும் பெரிய வரைச்சிறிய

வொருமுன் றானை யான்மூடி

யெடுக்குந் திறங்கண் டென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

132

1994.

காவா யொற்றிப் பதியுடையீர்

கல்லா னைக்குக் கரும்பன்று

தேவாய் மதுரை யிடத்தளித்த

சித்த ரலவோ நீரென்றேன்

பாவா யிருகல் லானைக்குப்

பரிவிற் கரும்பிங் கிரண்டொருநீ
யீவா யிதுசித் தென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

133

1985.

ஊட்டுந் திருவா ழொற்றியுளீ
ருயிரை யுடலாஞ் செப்பிடைவைத்
தாட்டுந் திறத்தீர் நீரென்றே
னணங்கே யிருசெப் பிடையாட்டுந்
தீட்டும் புகழன் றியுமுலகைச்
சிறிதோர் செப்பி லாட்டுகின்றா
யீட்டுந் திறத்தா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

134

1986.

கந்த வனஞ்சூ ழொற்றியுளீர்
கண்மூன் றுடையீர் வியப்பென்றேன்
வந்த வெமைத்தான் பிரிபோது
மற்றை யவரைக் காண்போதுஞ்
சந்த மிகுங்கண் ணிருமூன்றுந்
தகுநான் கொன்றுந் தானடைந்தா

யிந்த வியப்பென் னென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

135

19070.

ஆழி விடையீர் திருவொற்றி
யமர்ந்தீ ரிருவர்க் ககமகிழ்வான்
வீழி யதனிற் படிக்காசு
வேண்டி யளித்தீ ராமென்றேன்
வீழி யதனிற் படிக்காசு
வேண்டா தளித்தா யளவொன்றை
யேழி லகற்றி யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

136

1908.

உற்ற விடத்தே பெருந்துணையா
மொற்றிப் பெருமா னும்புகழைக்
கற்ற விடத்தே முக்கனியுங்
கரும்பு மமுதுங் கயவாவோ
மற்ற விடச்சீ ரென்னென்றேன்
மற்றை யுபய விடமுமுத
லெற்ற விடமே யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

137

1909.

யான்செய் தவத்தின் பெரும்பயனே

யென்னா ரமுதே யென்றுணையே

வான்செ யரசே திருவொற்றி

வள்ளால் வந்த தென்னென்றேன்

மான்செய் விழிப்பெண் ணேநீயாண்

வடிவா னதுகேட் டுள்ளம்வியந்

தேன்கண் டிடவே யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

138

1910.

கருணைக் கடலே யென்னிரண்டு

கண்ணே முக்கட் கரும்பேசெவ்

வருணப் பொருப்பே வளரொற்றி

வள்ளன் மணியே மகிழ்ந்தணையத்

தருணப் பருவ மிஃதென்றேன்

றவிரன் றெனக்காட் டியதுன்ற

னிருணச் சளக மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

139

1911

காவிக் களங்கொள் கனியேயென்

கண்ணுண் மணியே யணியேயென்

னாவித் துணையே திருவொற்றி

யரசே யடைந்த தென்னென்றேன்

பூவிற் பொலியுங் குழலாய்நீ

பொன்னி னுயர்ந்தா யெனக்கேட்டுன்

னீவைக் கருதி யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

140

1912.

கண்ணும் மனமுங் களிக்குமெழிற்

கண்மூன் றுடையீர் கலையுடையீர்

நண்ணுந் திருவா ழொற்றியுளீர்

நடஞ்செய் வல்லீர் நீரென்றேன்

வண்ண முடையாய் நின்றனைப்போன்

மலர்வாய் நடஞ்செய் வல்லோமோ

வெண்ண வியப்பா மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

141

1913.

தாங்கும் விடைமே லழகீரென்
றன்னைக் கலந்துந் திருவொற்றி
யோங்குந் தளியி லொளித்தீர்நீ
ரொளிப்பில் வல்ல ராமென்றேன்
வாங்கு நுதலாய் நீயுமெனை
மருவிக் கலந்து மலர்த்தளியி
லீங்கின் றொளித்தா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

142

1914.

அம்மை யடுத்த திருமேனி
யழகீ ரொற்றி யணிநகரீ
ரும்மை யடுத்தோர் மிகவாட்ட
முறுத லழகோ வென்றுரைத்தேன்
நம்மை யடுத்தாய் நமையடுத்தோர்
நம்போ லுறுவ ரன்றெனிலே
தெம்மை யடுத்த தென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

143

1915.

உண்கண் மகிழ்வா லளிமிழற்று

மொற்றி நகரீ ரொருமூன்று

கண்க ளுடையீ ரென்காதல்

கண்டு மிரங்கீ ரென்னென்றேன்

பண்கொண் மொழியாய் நின்காதல்

பன்னாண் சுவைசெய் பழம்போலு

மெண்கொண் டிருந்த தென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

144

1916.

வணங்கே ழிலங்குஞ் செஞ்சடையீர்

வளஞ்சே ரொற்றி மாநகரீர்

குணங்கேழ் மிடற்றோர் பாலிருளைக்

கொண்டீர் கொள்கை யென்னென்றே

னணங்கே யொருபா லன்றிநின்போ

லைம்பா லிருள்கொண் டிடச்சற்று

மிணங்கே மிணங்கே மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

145

1917.

கரும்பி லினியீ ரென்னிரண்டு

கண்க ளனையீர் கறைமிடற்றீர்

பெரும்பை யணியீர் திருவொற்றிப்

பெரியீ ரெதுநும் பெயரென்றே

னரும்பண் முலையாய் பிறர்கேட்க

வறைந்தா லளிப்பீ ரெனச்சூழ்வ

ரிரும்பொ னிலையே யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

146

1918.

நிலையைத் தவறார் தொழுமொற்றி

நிமலப் பெருமானீர்முன்ன

மலையைச் சிலையாக் கொண்டீர்நும்

மாவல் லபமற் புதமென்றேன்

வலையத் தறியாச் சிறுவர்களு

மலையைச் சிலையாக் கொள்வர்களீ

திலையற் புதந்தா னென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

147

1919.

உதயச் சுடரே யனையீர்நல்

லொற்றி யுடையீ ரென்னுடைய

விதயத் தமர்ந்தீ ரென்னேயென்

னெண்ண மறியீ ரோவென்றேன்

சுதையிற் றிகழ்வா யறிந்தன்றோ

துறந்து வெளிப்பட் டெதிரடைந்தா

மிதையுற் றறிநீ யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

148

1920.

புரக்குங் குணத்தீர் திருவொற்றிப்

புனித ரேநீர் போர்க்களிற்றை

யுரக்குங் கலக்கம் பெறவுரித்தீ

ருள்ளத் திரக்க மென்னென்றேன்

கரக்கு மிடையாய் நீகளிற்றின்

கன்றைக் கலக்கம் புரிந்தனைநின்

னிரக்க மிதுவோ வென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

149

1921.

பதங்கூ றொற்றிப் பதியீர்நீர்

பசுவி லேறும் பரிசதுதான்

விதங்கூ றறத்தின் விதிதானோ

விலக்கோ விளம்பல் வேண்டுமென்றே

னிதங்கூ றிடுநற் பசுங்கன்றை

நீயு மேறி யிடுகின்றா

யிதங்கூ றிடுக வென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

150

1922.

யோக முடையார் புகழொற்றி

யூரிற் பரம யோகியராந்

தாக முடையா ரிவர்தமக்குத்

தண்ணீர் தரநின் றனையழைத்தேன்

போக முடையாய் புறத்தண்ணீர்

புரிந்து விரும்பா மகத்தண்ணீ

ரீக மகிழ்வி னென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

151

1923.

வளநீ ரொற்றி வாணரிவர்

வந்தார் நின்றார் மாதேநா

முளநீர்த் தாக மாற்றுறுநீ

ருதவ வேண்டு மென்றார்நான்

குளநீ ரொன்றே யுளதென்றேன்
கொள்ளே மிடைமேற் கொளுமிந்த
விளநீர் தருக வென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

152

1924.

மெய்ந்நீ ரொற்றி வாணரிவர்
வெம்மை யுளநீர் வேண்டுமென்றா
ரந்நீ ரிலைநீர் தண்ணீர்தா
னருந்தி லாகா தோவென்றேன்
முந்நீர் தனையை யனையீரிம்
முதுநீ ருண்டு தலைக்கேறிற்
றிந்நீர் காண்டி யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

153

1925

சீலஞ் சேர்ந்த வொற்றியுளீர்
சிறிதாம் பஞ்ச காலத்துங்
கோலஞ் சார்ந்து பிச்சைகொளக்
குறித்து வருவீ ரென்னென்றேன்
காலம் போகும் வார்த்தைநிற்குங்

கண்டா யிதுசொற் கடனாமோ
வேலங் குழலா யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

154

1926

ஊற்றார் சடையீ ரொற்றியுளீ
ரூரூ ரிரக்கத் துணிவுற்றீர்
நீற்றால் விளங்குந் திருமேனி
நேர்ந்திங் கிளைத்தீர் நீரென்றேன்
சோற்றா லிளைத்தே மன்றுமது
சொல்லா லிளைத்தே மின்றினிநா
மேற்றா லிகழ்வே யென்கின்றா
ரிதுதான் சேடி யென்னேடீ.

155

1927.

நீரை விழுங்குஞ் சடையுடையீ
ருளது நுமக்கு நீரூருந்
தேரை விழுங்கும் பசுவென்றேன்
செறிநின் கலைக்கு ளொன்றுளது
காரை விழுங்கு மெமதுபசுக்
கன்றின் றேரை நீர்த்தேரை

யீர விழுங்கு மென்கின்றா
ரிதுதான் சேழி யென்னேடீ.

156

1928.

பொன்னேர் மணிமன் றுடையீர்நீர்
புரிந்த தெதுவெம் புடையென்றே
னின்னே யுரைத்தற் கஞ்சுதுமென்
றாரென் னென்றே னியம்புதுமேன்
மின்னே நினது நடைப்பகையா
மிருகம் பறவை தமைக்குறிக்கு
மென்னே யுரைப்ப தென்கின்றா
ரிதுதான் சேழி யென்னேடீ.

157

1929.

அடையார் புரஞ்செற் றம்பலத்தே
யாடு மழகீ ரெண்பதிற்றுக்
கடையா முடலின் றலைகொண்டீர்
கரமொன் றினிலற் புதமென்றே
னுடையாத் தலைமேற் றலையாக
வுன்கை யீரைஞ் ஞூறுகொண்ட
திடையா வளைக்கே யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

158

1930.

தேவர்க் கரிய வானந்தத்

திருத்தாண் டவஞ்செய் பெருமானீர்

மேவக் குகுகு குகுகுவணி

வேணி யுடையீ ராமென்றேன்

தாவக் குகுகு குகுகுகுகுத்

தாமே யைந்து விளங்கவணி

யேவற் குணத்தா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

159

1931.

கொன்றைச் சடையீர் கொடுங்கோளூர்

குறித்தீர் வருதற் கஞ்சுவல்யா

னொன்றப் பெருங்கோ ளென்மீது

முரைப்பா ருண்டென் றுணர்ந்தென்றேன்

நன்றப் படியேற் கோளிலையா

நகரு முடையே நங்காய்நீ

யின்றச் சுறலென் னென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

160

1932.

புரியுஞ் சடையீ ரமர்ந்திடுமூர்

புலியூ ரெனிலெம் போல்வார்க்கு

முரியும் புலித்தோ லுடையீர்போ

லுறுதற் கியலு மோவென்றேன்

றிரியும் புலியூ ரன்றுநின் போற்

றெரிவை யரைக்கண் டிடிற்பயந்தே

யிரியும் புலியூ ரென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

161

1933.

தெவ்வூர் பொடிக்குஞ் சிறுநகையித்

தேவர் தமைநா னீரிருத்த

லெவ்வூ ரென்றே னகைத்தணங்கே

யேழூர் நாலூ ரென்றார்பின்

னவ்வூர்த் தொகையி னிருத்தலரி

தாமென் றேன்மற் றதிலொவ்வூ

ரிவ்வூ ரெடுத்தா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

162

1934.

மணங்கொ ளிதழிச் சடையீர்நீர்

வாழும் பதியா தென்றேனின்

குணங்கொண் மொழிகேட் டோ ரளவு

குறைந்த குயிலாம் பதியென்றா

ரணங்கின் மறையூ ராமென்றே

னஃதன் றருளோத் தூரிஃது

மிணங்க வுடையே மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

163

1935.

ஆற்றுச் சடையா ரிவர்பலியென்

றடைந்தார் நுமதூ ரியாதென்றேன்

சோற்றுத் துறையென் றார்நுமக்குச்

சோற்றுக் கருப்பேன் சொலுமென்றேன்

றோற்றுத் திரிவே மன்றுநின்போற்

சொல்லுங் கருப்பென் றுலகியம்ப

வேற்றுத் திரியே மென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

164

1936.

ஓங்குஞ் சடையீர் நெல்வாயி

லுடையே மென்றீ ருடையீரேற்

றாங்கும் புகழ்நும் மிடைச்சிறுமை

சார்ந்த தெவனீர் சாற்றுமென்றே

னேங்கும் பழிநும் மிடைச்சிறுமை

யெய்திற் றலதீண் டெமக்கின்றா

லீங்குங் காண்டி ரென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடீ.

165

Back

99. கண் நிறைந்த கணவன்

திருவொற்றியூர்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1937.

மைய லழகீ ரொற்றி

வைத்தீ ருளவோ மனையென்றேன்

கையி னிறைந்த தனத்தினுந்தங்

கண்ணி னிறைந்த கணவனையே

மெய்யின் விழைவா ரொருமனையோ

விளம்பின் மனையும் மிகப்பலவாம்

எய்யி லிடையா யென்கின்றா

ரிதுதான் சேடி யென்னேடி.(43)

1

(43). ஆ.பா. இதனைத் தனிப்பாசுரப் பகுதியில் சேர்த்திருக்கிறார். 'இது ஒற்றியூர்ப் பதிகங்கள் சிற்சில கொண்ட ஒரு சுவடியில்

2-ஆம் திருமுறை உள்ளப் பஞ்சகத்தில் ''பிறவாநெறியது'' என்ற பாடலை அடுத்து ஓர் தனிப்பாசுரமாகச் சுவாமிகளால் எழுதப்

பட்டிருக்கிறது' என்பது ஆ. பா. குறிப்பு. பொன்னேரி சுந்தரம் பிள்ளை திரட்டிய ஆறு திருமுறைகளும் சேர்ந்த முதற்பதிப்பில்

(1892) ஆறாந் திருமுறையில் பல்வகைய தனிப்பாடல்கள் என்ற தொகுப்பில் இங்கிதமாலையின் தொடர்ச்சி என்ற தலைப்புடன்

இது முதன்முதலாக அச்சிடப்பெற்றிருக்கிற்து. ச.மு.க. பதிப்பில் இது இங்கிதமாலை யுடனேயே 166ஆம் பாவாகச் சேர்க்கப்

பெற்றுள்ளது.

Back

## 100. இராமநாம சங்கீர்த்தனம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1938.

காராய வண்ண மணிவண்ண கண்ண கனசங்கு சக்ர தரநீள்

சீராய தூய மலர்வாய நேய ஸ்ரீராம ராம வெனவே

தாராய வாழ்வு தருநெஞ்சு சூழ்க தாமோத ராய நமவோம்

நாராய ணாய நமவாம னாய நமகேச வாய நமவே.

1

Back

101. இராமநாமப் பதிகம் (44)

(44). கொந்தமூர் ஸ்ரீநிவாச வரதாசாரிய சுவாமிகள் கேட்டுக் கொண்டதற்கிணங்க அருளிச் செய்தது.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1939.

திருமகள்எம் பெருமாட்டி மகிழும் வண்ணச்

செழுங்கனியே கொழும்பாகே தேனே தெய்வத்

தருமகனைக் காத்தருளக் கரத்தே வென்றித்

தனுஎடுத்த ஒருமுதலே தருமப் பேறே

இருமையும்என் னுளத்தமர்ந்த ராம நாமத்

தென்அரசே என்அமுதே என்தா யேநின்

மருமலர்ப்பொன் அடிவழுத்தும் சிறியேன் அந்தோ

மனந்தளர்ந்தேன் அறிந்தும்அருள் வழங்கி லாயே.

1

1940.

கலைக்கடலே கருணைநெடுங் கடலே கானங்

கடத்ததடங் கடலேஎன் கருத்தே ஞான

மலைக்கண்எழுஞ் சுடரேவான் சுடரே அன்பர்

மனத்தொளிரும் சுயஞ்சுடரே மணியே வானோர்

தலைக்கண்உறு மகுடசிகா மணியே வாய்மைத்

தசரதன்தன் குலமணியே தமியேன் உள்ள
நிலைக்கண்உறும் ஸ்ரீராம வள்ள லேஎன்
நிலைஅறிந்தும் அருளஇன்னும் நினைந்தி லாயே.

2

1941.

மண்ணாளா நின்றவர்தம் வாழ்வு வேண்டேன்
மற்றவர்போல் பற்றடைந்து மாள வேண்டேன்
விண்ணாளா நின்றஒரு மேன்மை வேண்டேன்
வித்தகநின் திருவருளே வேண்டி நின்றேன்
புண்ணாளா நின்றமன முடையேன் செய்த
பொய்அனைத்தும் திருவுளத்தே பொறுப்பாய் அன்றிக்
கண்ணாளா சுடர்க்கமலக் கண்ணா என்னைக்
கைவிடில்என் செய்வேனே கடைய னேனே.

3

1942.

தெவ்வினையார் அரக்கர்குலம் செற்ற வெற்றிச்
சிங்கமே எங்கள்குல தெய்வ மேயோ
வெவ்வினைதீர்த் தருள்கின்ற ராம நாம
வியன்சுடரே இவ்வுலக விடயக் காட்டில்
இவ்வினையேன் அகப்பட்டேன் புலனாம் கள்வர்க்
கிலக்கானேன் துணைஒன்றும் இல்லேன் அந்தோ

செய்வினைஒன் றறியேன்இங் கென்னை எந்தாய்

திருவுளத்தில் சேர்த்திலையேல் செய்வ தென்னே.

4

1943.

வான்வண்ணக் கருமுகிலே மழையே நீல

மணிவண்ணக் கொழுஞ்சுடரே மருந்தே வானத்

தேன்வண்ணச் செழுஞ்சுவையே ராம நாமத்

தெய்வமே நின்புகழைத் தெளிந்தே ஓதா

ஊன்வண்ணப் புலைவாயார் இடத்தே சென்றாங்

குழைக்கின்றேன் செய்வகைஒன் றுணரேன் அந்தோ

கான்வண்ணக் குடும்பத்திற் கிலக்கா என்னைக்

காட்டினையே என்னேநின் கருணை ஈதோ.

5

1944.

பொன்னுடையார் வாயிலில்போய் வீணே காலம்

போக்குகின்றேன் இவ்வுலகப் புணர்ப்பை வேண்டி

என்னுடையாய் நின்னடியை மறந்தேன் அந்தோ

என்செய்கேன் என்செய்கேன் ஏழை யேன்நான்

பின்னுடையேன் பிழைஉடையேன் அல்லால் உன்றன்

பேரருளும் உடையேனோ பிறந்தேன் வாளா

உன்னுடைய திருவுளத்தென் நினைதி யோஎன்

ஒருமுதல்வா ஸ்ரீராமா உணர்கி லேனே.

6

1945.

அறம்பழுக்கும் தருவேஎன் குருவே என்றன்

ஆருயிருக் கொருதுணையே அரசே பூவை

நிறம்பழுக்க அழகொழுகும் வடிவக் குன்றே

நெடுங்கடலுக் கணையளித்த நிலையே வெய்ய

மறம்பழுக்கும் இலங்கைஇரா வணனைப் பண்டோர்

வாளினாற் பணிகொண்ட மணியே வாய்மைத்

திறம்பழுக்கும் ஸ்ரீராம வள்ள லேநின்

திருவருளே அன்றிமற்றோர் செயலி லேனே.

7

1946.

கல்லாய வன்மனத்தர் தம்பால் சென்றே

கண்கலக்கங் கொள்கின்றேன் கவலை வாழ்வை

எல்லாம்உள் இருந்தறிந்தாய் அன்றோ சற்றும்

இரங்கிலைஎம் பெருமானே என்னே என்னே

பொல்லாத வெவ்வினையேன் எனினும் என்னைப்

புண்ணியனே புரப்பதருட் புகழ்ச்சி அன்றோ

அல்ஆர்ந்த துயர்க்கடல்நின் றெடுத்தி டாயேல்

ஆற்றேன்நான் பழிநின்பால் ஆக்கு வேனே.

8

1947.

மையான நெஞ்சகத்தோர் வாயில் சார்ந்தே
மனம்தளர்ந்தேன் வருந்துகின்ற வருத்தம் எல்லாம்
ஐயாஎன் உளத்தமர்ந்தாய் நீதான் சற்றும்
அறியாயோ அறியாயேல் அறிவா ர்யாரே
பொய்யான தன்மையினேன் எனினும் என்னைப்
புறம்விடுத்தல் அழகேயோ பொருளா எண்ணி
மெய்யாஎன் றனைஅந்நாள் ஆண்டாய் இந்நாள்
வெறுத்தனையேல் எங்கேயான் மேவு வேனே.

9

1948.

கூறுவதோர் குணமில்லாக் கொடிதாம் செல்வக்
குருட்டறிவோர் இடைப்படும்என் குறைகள் எல்லாம்
ஆறுவதோர் வழிகாணேன் அந்தோ அந்தோ
அவலமெனும் கருங்கடலில் அழுந்து கின்றேன்
ஏறுவதோர் வகைஅறியேன் எந்தாய் எந்தாய்
ஏற்றுகின்றோர் நின்னைஅன்றி இல்லேன் என்னைச்
சீறுவதோ இரங்குவதோ யாதோ உன்றன்
திருவுளத்தைத் தெரியேனே சிறிய னேனே.

10

Back

## 102. வீரராகவர் போற்றிப் பஞ்சகம்

### திருஎவ்வுளூர்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1949.

தண்ணமர் மதிபோல் சாந்தந் தழைத்தசத் துவனே போற்றி
வண்ணமா மணியே போற்றி மணிவண்ணத் தேவா போற்றி
அண்ணலே எவ்வு ளூரில் அமர்ந்தருள் ஆதி போற்றி
விண்ணவர் முதல்வா போற்றி வீரரா கவனே போற்றி.

1

1950.

பாண்டவர் தூத னாகப் பலித்தருள் பரனே போற்றி
நீண்டவன் என்ன வேதம் நிகழ்த்துமா நிதியே போற்றி
தூண்டலில் லாமல் ஓங்குஞ் ஜோதிநல் விளக்கே போற்றி
வேண்டவர் எவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி.

2

1951.

மேதினி புரக்கும் வேந்தர் வீறெலாம் நினதே போற்றி
கோதிலா மனத்தே நின்று குலாவிய கோவே போற்றி
ஓதிய எவ்வு ளூரில் உறைந்தருள் புரிவாய் போற்றி
வேதியன் தன்னை ஈன்ற வீரரா கவனே போற்றி.

3

1952.

இளங்கொடி தனைக்கொண் டேகும் இராவணன் தனைய ழித்தே
களங்கமில் விபீட ணர்க்குக் கனவர சளித்தாய் போற்றி
துளங்குமா தவத்தோர் உற்ற துயரெலாம் தவிர்த்தாய் போற்றி
விளங்குநல் எவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி.

4

1953.

அற்புதத் திருவை மார்பில் அணைத்தபே ரழகா போற்றி
பொற்புறு திகிரி சங்கு பொருந்துகைப் புனிதா போற்றி
வற்புறு பிணிதீர்த் தென்னை மகிழ்வித்த வரதா போற்றி
வெற்புயர் எவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி.

5

Back

103. இரேணுகை தோத்திரம்

சென்னை ஏழுகிணறு(45)

(45). அன்பர் ஒருவரின் வேண்டுகோளுக் கிணங்க அருளிச் செய்தது.

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1954.

சீர்வளர் மதியும் திருவளர் வாழ்க்கைச்

செல்வமும் கல்வியும் பொறையும்

பார்வளர் திறனும் பயன்வளர் பரிசும்

பத்தியும் எனக்கருள் பரிந்தே

வார்வளர் தனத்தாய் மருவளர் குழலாய்

மணிவளர் அணிமலர் முகத்தாய்

ஏர்வளர் குணத்தாய் இசைதுலுக் காணத்

திரேணுகை எனும்ஒரு திருவே.

1

1955.

உவந்தொரு காசும் உதவிடாக் கொடிய

உலுத்தர்தம் கடைதொறும்ஓடி

அவந்தனில் அலையா வகைஎனக் குன்தன்

அகமலர்ந் தருளுதல் வேண்டும்

நவந்தரு மதிய நிவந்தபூங் கொடியே

நலந்தரு நசைமணிக் கோவை

இவந்தொளிர் பசுந்தோள் இசைதுலுக் காணத்

திரேணுகை எனும்ஒரு திருவே.

2

1956.

விருந்தினர் தம்மை உபசரித் திடவும்

விரவுறும் உறவினர் மகிழத்

திருந்திய மனத்தால் நன்றிசெய் திடவும்

சிறியனேற் கருளுதல் வேண்டும்

வருந்திவந் தடைந்தோர்க் கருள்செயும் கருணை

வாரியே வழிவுறு மயிலே

இருந்திசை புகழும் இசைதுலுக் காணத்

திரேணுகை எனும்ஒரு திருவே.

3

1957.

புண்ணியம் புரியும் புனிதர்தம் சார்பும்

புத்திரர் மனைவியே முதலாய்

நண்ணிய குடும்ப நலம்பெறப் புரியும்

நன்கும் எனக்கருள் புரிவாய்

விண்ணிய கதிரின் ஒளிசெயும் இழையாய்

விளங்கருள் ஒழுகிய விழியாய்

எண்ணிய அடியர்க் கிசைதுலுக் காணத்

திரேணுகை எனும்ஒரு திருவே.

4

1957.

மனமெலி யாமல் பிணியடை யாமல்

வஞ்சகர் தமைமரு வாமல்

சினநிலை யாமல் உடல்சலி யாமல்

சிறியனேன் உறமகிழ்ந் தருள்வாய்

அனமகிழ் நடையாய் அணிதுடி இடையாய்

அழகுசெய் காஞ்சன உடையாய்

இனமகிழ் சென்னை இசைதுலுக் காணத்

திரேணுகை எனும்ஒரு திருவே.

1959

இன்றுவரு மோநாளைக் கேவருமோ அல்லதுமற்

றென்றுவரு மோஅறியேன் எங்கோவே - துன்றுமல

வெம்மாயை அற்று வெளிக்குள் வெளிகடந்து

சும்மா இருக்கும் சுகம்.

...1

நூற்றுத்தொண்ணூற்றிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் (46)

1960

பரசிவம்சின்மயம் பூரணம் சிவபோக பாக்கியம் பரமநிதியம்

பரசுகம் தன்மயம் சச்சிதா னந்தமெய்ப் பரமவே காந்தநிலயம்

பரமஞா னம்பரம சத்துவம கத்துவம் பரமகை வல்யநிமலம்

பரமதத் துவநிரதி சயநிட்க ளம்பூத பௌதிகா தாரநிபுணம்

பவபந்த நிக்ரக வினோதச களம்சிற் பரம்பரா னந்தசொருபம்

பரிசயா தீதம்சு யம்சதோ தயம்வரம் பரமார்த்த முக்தமௌனம்

படனவே தாந்தாந்த மாகமாந் தாந்தநிரு பாதிகம் பரமசாந்தம்

பரநாத தத்துவாந் தம்சகச தரிசனம் பகிரங்க மந்தரங்கம்

பரவியோ மம்பரம ஜோதிமயம் விபுலம் பரம்பர மனந்தமசலம்

பரமலோ காதிக்க நித்தியசாம் பிராச்சியம் பரபதம் பரமசூக்ஷமம்

பராபர மநாமய நிராதர மகோசரம் பரமதந் திரம்விசித்ரம்

பராமுத நிராகரம் விகாசனம் விகோடணம் பரசுகோ தயமக்ஷயம்

பரிபவ விமோசனம் குணரகிதம் விசுவம்ப தித்துவ பரோபரீணம்

பஞ்சகிர்த் தியசுத்த கர்த்தத்து வம்தற்ப ரம்சிதம் பரவிலாசம்

பகர்சுபா வம்புனித மதுலமது லிதமம்ப ராம்பர நிராலம்பனம்

பரவுசா க்ஷாத்கார நிரவய வங்கற்ப ணாதீத நிருவிகாரம்

பரதுரிய வநுபவம் குருதுரிய பதமம் பகம்பகா தீதவிமலம்

பரமகரு ணாம்பரம் தற்பதம் கனசொற் பதாதீத மின்பவடிவம்

பரோக்ஷஞா ணாதீதம் அபரோக்ஷ ஞானானு பவவிலாசப் பிரகாசம்

பாவனா தீதம்கு ணாதீதம் உபசாந்த பதமகா மௌனரூபம்

பரமபோ தம்போத ரகிதசகி தம்சம்ப வாதீத மப்பிரமேயம்

பகரனந் தானந்தம் அமலமுசி தம்சிற்ப தம்சதா னந்தசாரம்

பரையாதி கிரணாங்க சாங்கசௌ பாங்கவிம் பாகார நிருவிகற்பம்

பரசுகா ரம்பம்ப ரம்பிரம வித்தம்ப ரானந்த புரணபோகம்

பரிமிதா தீதம்ப ரோதயம் பரகிதம் பரபரீணம் பராந்தம்

பரமாற்பு தம்பரம சேதனம் பசுபாச பாவனம் பரமமோக்ஷம்

பரமானு குணநவா தீதம்சி தாகாச பாஸ்கரம் பரமபோகம்

பரிபாக வேதன வரோதயா னந்தபத பாலனம் பரமயோகம்

பரமசாத் தியவதீ தானந்த போக்கியம் பரிகதம் பரிவேத்தியம்

பரசிவ லாத்விதா னந்தானு பவசுத்த பாதாக்ர சுத்தபலிதம்

பரமசுத் தாத்விதா னந்தவனு பூதிகம் பரிபூத சிற்குணாந்தம்

பரமசித் தாந்தநிக மாந்தசம ரசசுத்த பரமானு பவவிலாசம் .....
(1/4)

தரமிகும் சர்வசா திட்டான சத்தியம் சர்வவா னந்தபோகம்

சார்ந்தசர் வாதார சர்வமங் களசர்வ சத்திதர மென்றளவிலாச்

சகுணநிர்க் குணமுறு சலக்ஷண விலக்ஷணத் தன்மைபல
வாகநாடித்

தம்மைநிகர் மறையெலா மின்னுமள விடநின்ற சங்கர னநாதியதி

சாமகீ தப்பிரியன் மணிகண்ட சீகண்ட சசிகண்ட சாமகண்ட

சயசய வெனுந்தொண்ட ரிதயமலர் மேவிய சடாமகுடன்
மதனதகனன்

சந்திரசே கரனிடப வாகனன் கங்கா தரன்சூல பாணியிறைவன்

தனிமுத லுமாபதி புராந்தகன் பசுபதி சயம்புமா தேவனமலன்

தாண்டவன் தலைமாலை பூண்டவன் தொழுமன்பர்
தங்களுக்கருளாண்டவன்

தன்னிகரில் சித்தெலாம் வல்லவன் வடதிசைச் சைலமெனு
மொருவில்லவன்

தக்ஷிணா மூர்த்தியருண் மூர்த்திபுண் ணியமூர்த்தி தகுமட்ட
மூர்த்தியானோன்

தலைமைபெறு கணநாய கன்குழக னழகன்மெய்ச் சாமிநந்
தேவதேவன்

சம்புவே தண்டன் பிறப்பிலான் முடிவிலான் தாணுமுக்
கண்களுடையான்

சதுரன் கடாசல வுரிப்போர்வை யான்செந் தழற்கரத்
தேந்திநின்றோன்

சர்வகா ரணன்விறற் காலகா லன்சர்வ சம்பிரமன் சர்வேச்சுரன்

தகைகொள்பர மேச்சுரன் சிவபிரா னெம்பிரான் தம்பிரான்
செம்பொற்பதம்

தகவுபெறு நிட்பேத நிட்கம்ப மாம்பரா சத்திவடி வாம்பொற்பதம்

தக்கநிட் காடின்ய சம்வேத நாங்கசிற் சத்திவடி வாம்பொற்பதம்

சாற்றரிய விச்சைஞா னங்கிரியை யென்னுமுச் சத்திவடி
வாம்பொற்பதம்

தடையிலா நிர்விடய சிற்குண சிவாநந்த சத்திவடி வாம்பொற்பதம்

தகுவிந்தை மோகினியை மானையசை விக்குமொரு சத்திவடி
வாம்பொற்பதம்

தாழ்விலீ சானமுதன் மூர்த்திவரை யைஞ்சத்தி தஞ்சத்தி
யாம்பொற்பதம்

சவிகற்ப நிருவிகற் பம்பெறு மனந்தமா சத்திசத் தாம்பொற்பதம்

தடநிருப வவிவர்த்த சாமர்த்திய திருவருட் சத்தியுரு
வாம்பொற்பதம்

தவாதசாந் தப்பதந் துவாதசாந் தப்பதந் தருமிணை மலர்ப்பூம்பதம்

சகலர்விஞ் ஞானகலர் பிரளயா கலரிதய சாக்ஷியா கியபூம்பதம்

தணிவிலா அணுபக்ஷ சம்புப க்ஷங்களிற் சமரச முறும்பூம்பதம்

தருபரஞ் சூக்குமந் தூலமிவை நிலவிய தமக்குளுயி ராம்பூம்பதம்

சரவசர வபரிமித விவிதவான் மப்பகுதி தாங்குந் திருப்பூம்பதம்

தண்டபிண் டாண்டவகி லாண்டபிர மாண்டந் தழிக்கவரு ளூம்பூம்பதம்

தத்வதாத் விகசகசி ருட்டிதிதி சங்கார சகலகர்த் துருபூம்பதம்

சகசமல விருளகல நின்மலசு யம்ப்ரகா சங்குலவு நற்பூம்பதம் .....(1/2)

மரபுறு மதாதீத வெளிநடுவி லானந்த மாநடன மிடுபூம்பதம்

மன்னும்வினை யொப்புமல பரிபாகம் வாய்க்கமா மாயையை மிதிக்கும்பதம்

மலிபிறவி மறலியி னழுந்துமுயிர் தமையருளின் மருவுறவெடுக்கும்பதம்

வளரூர்த்த வீரதாண் டவமுதற் பஞ்சக மகிழ்ந்திட வியற்றும்பதம்

வல்லமுய லகன்மீதி னூன்றிய திருப்பதம் வளந்தரத் தூக்கும்பதம்

வல்வினையெ லாந்தவிர்த் தழியாத சுத்தநிலை வாய்த்திட வழங்கும்பதம்

மறைதுதிக் கும்பதம் மறைச்சிலம் பொளிர்பதம் மறைப்பாது கைச்செம்பதம்

மறைமுடி மணிப்பதம் மறைக்குமெட் டாப்பதம் மறைப்பரி யுகைக்கும்பதம்

மறையவ னுளங்கொண்ட பதமமித கோடியா மறையவர் சிரஞ்சூழ்பதம்

மறையவன் சிரசிகா மணியெனும் பதம்மலர்கொண் மறையவன் வாழ்த்தும்பதம்

மறையவன் செயவுலக மாக்கின்ற வதிகார வாழ்வையீந்
தருளும்பதம்

மறையவன் கனவினுங் காணாத பதமந்த மறையவன் பரவும்பதம்

மால்விடை யிவர்ந்திடு மலர்ப்பதந் தெய்வநெடு மாலருச்
சிக்கும்பதம்

மால்பரவி நாடொறும் வணங்குபத மிக்கதிரு மால்விழியி
லங்கும்பதம்

மால்தேட நின்றபத மோரனந் தங்கோடி மாற்றலை யலங்கற்பதம்

மான்முடிப் பதநெடிய மாலுளப் பதமந்த மாலுமறி வரிதாம்பதம்

மால்கொளவ தாரங்கள் பத்தினும் வழிபட்டு வாய்மைபெற
நிற்கும்பதம்

மாலுலகு காக்கின்ற வண்மைபெற் றடிமையின் வதிந்திட
வளிக்கும்பதம்

வரையுறு முருத்திரர்கள் புகழ்பதம் பலகோடி வயவுருத்
திரர்சூழ்பதம்

வாய்ந்திடு முருத்திரற் கியல்கொண்முத் தொழில்செய்யும்
வண்மைதந் தருளும்பதம்

வானவிந் திரராதி யெண்டிசைக் காவலர்கண் மாதவத்
திறனாம்பதம்

மதியிரவி யாதிசுர ரசுரரந் தரர்வான வாசிகள் வழுத்தும்பதம்

மணியுரகர் கருடர்காந் தருவர்விஞ் சையர்சித்தர் மாமுனிவ
ரேத்தும்பதம்

மாநிருதர் பைசாசர் கிம்புருடர் யக்ஷர்கள் மதித்துவர
மேற்கும்பதம்

மன்னுகின் னரர்பூதர் வித்தியா தரர்போகர் மற்றையர்கள்
பற்றும்பதம்

வண்மைபெறு நந்திமுதல் சிவகணத் தலைவர்கண்
மனக்கோயில்வாழும்பதம்

மாதேவி யெங்கள்மலை மங்கையென் னம்மைமென் மலர்க்கையால்
வருடும்பதம்

மறலியை யுதைத்தருள் கழற்பத மரக்கனை மலைக்கீ
ழடர்க்கும்பதம்

வஞ்சமறு நெஞ்சினிடை யெஞ்சலற விஞ்சுதிறன் மஞ்சுற
விளங்கும்பதம்

வந்தனைசெய் புந்தியவர் தந்துயர் தவிர்ந்திடவுண் மந்தணந
விற்றும்பதம்

மாறிலொரு மாறனுள மீறின்மகிழ் வீறியிட மாறிநட மாடும்பதம்

மறக்கருணை யுந்தனி யறக்கருணை
யுந்தந்துவழ்விக்குமொண்மைப்பதம் ....(3/4)

இரவுறும் பகலழிய ரிருமருங் கினுமுறுவ ரெனவயங்
கியசீர்ப்பதம்

எம்பந்த மறவெமது சம்பந்தவள்ளன்மொழி யியன்மண
மணக்கும்பதம்

ஈவரச ரெம்முடைய நாவரசர்சொற்பதிக விசைபரி மளிக்கும்பதம்

ஏவலார் புகழெமது நாவலாரூரர்புக லிசைதிருப் பாட்டுப்பதம்

ஏதவூர் தங்காத வாதவூரெங்கோவி னின்சொன்மணி யணியும்பதம்

எல்லூரு மணிமாட நல்லூரி னப்பர்முடி யிடைவைகி
யருண்மென்பதம்

எடுமேலெ னத்தொண்டர் முடிமேன் மறுத்திடவு மிடைவலிந்
தேறும்பதம்

எழில்பரவை யிசையவா ரூர்மறுகி னருள்கொண்டி ராமுழுது
முலவும்பதம்

இன்தொண்டர் பசியறக் கச்சூரின் மனைதொறு மிரக்கநடை
கொள்ளும்பதம்

இளைப்புற லறிந்தன்பர் பொதிசோ றருந்தமு னிருந்துபி
னடக்கும்பதம்

எறிவிறகு விற்கவளர் கூடற் றெருத்தொறு மியங்கிய விரக்கப்பதம்

இறுவைகை யங்கரையின் மண்படப் பல்கா லெழுந்துவிளை
யாடும்பதம்

எங்கேமெய் யன்பருள ரங்கே நலந்தர வெழுந்தருளும்
வண்மைப்பதம்

எவ்வண்ணம் வேண்டுகினு மவ்வண்ண மன்றே யிரங்கியீந்
தருளும்பதம்

என்போன்ற வர்க்குமிகு பொன்போன்ற கருணைதந் திதயத்
திருக்கும்பதம்

என்னுயிரை யன்னபத மென்னுயிர்க் குயிரா யிலங்குசெம்
பதுமப்பதம்

என்னறிவெ னும்பதமெ னறிவினுக் கறிவா யிருந்தசெங்
கமலப்பதம்

என்னன்பெ னும்பதமெ னன்பிற்கு வித்தா யிசைந்தகோ
கனகப்பதம்

என்தவ மெனும்பதமென் மெய்த்தவப் பயனா யியைந்தசெஞ்
சலசப்பதம்

என்னிருகண் மணியான பதமென்கண் மணிகளுக் கினியநல்
விருந்தாம்பதம்

என்செல்வ மாம்பதமென் மெய்ச்செல்வ வருவாயெ னுந்தாம
ரைப்பொற்பதம்

என்பெரிய வாழ்வான பதமென்க ளிப்பா மிரும்பதமெ
னிதியாம்பதம்

என்தந்தை தாயெனு மிணைப்பதமெ னுறவா மியற்பதமெ
னட்பாம்பதம்

என்குருவெ னும்பதமெ னிட்டதெய் வப்பத மெனதுகுல
தெய்வப்பதம்

என்பொறிக ளுக்கெலா நல்விடய மாம்பதமெ னெழுமையும்
விடாப்பொற்பதம்

என்குறையெ லாந்தவிர்த் தாட்கொண்ட பதமெனக்
கெய்ப்பில்வைப்பாகும்பதம்

எல்லார்க்கு நல்லபத மெல்லாஞ்செய் வல்லபத மிணையிலாத்
துணையாம்பதம்

எழுமனமு டைந்துடைந் துருகிநெகிழ் பத்தர்கட் கின்னமுத
மாகும்பதம்

எண்ணுறிற் பாலினறு நெய்யொடு சருக்கரை யிசைந்தென
வினிக்கும்பதம்

ஏற்றமுக் கனிபாகு கன்னல்கற் கண்டுதே னென்னமது
ரிக்கும்பதம்

எங்கள்பத மெங்கள்பத மென்றுசம யத்தேவ ரிசைவழக்
கிடுநற்பதம்

ஈறிலாப் பதமெலாந் தருதிருப் பதமழிவி லின்புதவு கின்றபதமே.

திருச்சிற்றம்பலம்

-------

## 2. விண்ணப்பக் கலிவெண்பா ( 1961 - 1962)

### காப்பு

.

### நேரிசை வெண்பா

1961

அவ்வவ் விடைவந் தகற்றி அருள்தரலால்

எவ்வெவ் விடையூறும் எய்தலிலம் தெவ்வர்தமைக்

கன்றுமத மாமுகமுங் கண்மூன்றுங் கொண்டிருந்த

தொன்றதுநம் முள்ள முறைந்து.

... 1

### கலிவெண்பா

1962

சொற்பெறுமெய்ஞ் ஞானச் சுயஞ்சோதி யாந்தில்லைச் (47)

சிற்சபையில் வாழ்தலைமைத் தெய்வமே - நற்சிவையாந் ...1

தாயி னுலகனைத்துந் தாங்குந் திருப்புலியூர்க்

கோயி லமர்ந்தகுணக் குன்றமே - மாயமிகும் ...2

வாட்களமுற் றாங்குவிழி மாதர்மய லற்றவர்சூழ்

வேட்களமுற் றோங்கும் விழுப்பொருளே - வாழ்க்கைமனை ...3

நல்வாயி லெங்கு நவமணிக்குன் றோங்குதிரு

நெல்வாயி னின்றொளிரு நீளொளியே - செல்வாய்த் ...4

தெழிப்பாலை வேலைத் திரையொலிபோ லார்க்குங்

கழிப்பாலை யின்பக் களிப்பே விழிப்பாலன் ...5

கல்லூர்ப் பெருமணத்தைக் கட்டுரைக்கச் சோதிதரு

நல்லூர்ப் பெருமணம்வாழ் நன்னிலையே - சொல்லுந் . ..6

தயேந்திர ருள்ளத் தடம்போ லிலங்கும்

மயேந்திரப் பள்ளியின்ப வாழ்வே - கயேந்திரனைக் ...7

காயலுறா தன்றுவந்து காத்தோன் புகழ்முல்லை

வாயிலி னோங்கு மணிவிளக்கே - மேய ...8

பலிக்காவூர் தோறும் பதஞ்சேப்பச் சென்று

கலிக்காமூர் மேவுங் கரும்பே - வலிக்காலில் ...9

பாய்(48)க்காடு கின்றவொரு பச்சை முகில்பரவுஞ்

சாய்க்காடு மேவுந் தடங்கடலே - வாய்க்கமையச் ... 10

சொல்லவ னீச்சரங்கு தோயவும்ப ராம்பெருமைப்

பல்லவ னீச்சரத்தெம் பாவனமே -நல்லவர்கள் ...11

கண்காட்டு நெற்றிக் கடவுளே யென்றுதொழ

வெண்காட்டின் மேவுகின்ற மெய்ப்பொருளே - தண்காட்டிக் ..12

கார்காட்டித் தையலர்தங் கண்காட்டிச் சோலைகள்சூழ்

சீர்காட்டுப் பள்ளிச் சிவக்கொழுந்தே - பார்காட் ..13

டுருகாவூ ரெல்லா மொளிநயக்க வோங்குங்

குருகாவூர் வெள்ளடையெங் கோவே - அருகாத ...14

கார்(49)காழி னெஞ்சக் கவுணியர்க்குப் போதமருள்

சீர்காழி ஞானத் திரவியமே - ஓர்காழிப் ...15

பாலற்கா வன்று பசும்பொற்றா ளங்கொடுத்த

கோலக்கா மேவுங் கொடையாளா - கோலக்கா ...16

உள்ளிருக்கும் புள்ளிருக்கு மோதும் புகழ்வாய்ந்த

புள்ளிருக்கும் வேளூர்ப் புரிசடையாய் - கள்ளிருக்கும் ...17

காவின் மருவுங் கனமுந் திசைமணக்கும்

கோவின் மருவுகண்ணார் கோயிலாய் - மாவின் ...18

இடைமுடியின் றீங்கனியென் றெல்லின் முசுத்தாவும்

கடைமுடியின் மேவுங் கருத்தா - கொடைமுடியா ...19

நன்றியூ ரென்றிந்த ஞாலமெலாம் வாழ்த்துகின்ற

நின்றியூர் மேவு நிலைமையனே - ஒன்றிக் ...20

கருப்புன்கூ ருள்ளக் கயவர் நயவாத்

திருப்புன்கூர் மேவுஞ் சிவனே - உருப்பொலிந்தே ...21

ஈடூரி லாதுயர்ந்த ஏதுவினா லோங்குதிரு

நீடூ ரிலங்கு நிழற்றருவே - பீடுகொண்டு ...22

மன்னியூ ரெல்லாம் வணங்க வளங்கொண்ட

அன்னியூர் மேவு மதிபதியே - மன்னர்சுக ...23

வாழ்விக் குடிகளடி மண்பூச லாலென்னும்

வேழ்விக் குடியமர்ந்த வித்தகனே - சூழ்வுற்றோர் ...24

விண்ணெதிர்கொண் டிந்திரன்போன் மேவிநெடு நாள்வாழப்
பண்ணெதிர்கொள் பாடிப் பரம்பொருளே - நண்ணும் ...25

வணஞ்சே ரிறைவன் மகிழ்ந்து வணங்கும்
மணஞ்சேரி நீங்கா மகிழ்வே - மணஞ்சேர்ந்துன் ...26

வாரட்ட கொங்கை மலையா ளொடுங்கொறுக்கை
வீரட்ட மேவும் வியனிறைவே - ஓரட்ட ...27

திக்குங் கதிநாட்டிச் சீர்கொள்திருத் தொண்டருளம்
ஒக்குங் கருப்பறிய லூரரசே - மிக்கதிரு ...28

மாவளருஞ் செந்தா மரைவளருஞ் செய்குரக்குக்
காவளரு மின்பக் கனசுகமே - தாவுமயல் ...29

காழ்கொ ளிருமனத்துக் காரிருணீத் தோர்மருவும்
வாழ்கொளி புத்தூர்(59) மணிச்சுடரே - தாழ்வகற்ற ...30

நண்ணிப் படிக்கரையர் நாடோ றும் வாழ்த்துகின்ற
மண்ணிப் படிக்கரைவாழ் மங்கலமே - விண்ணினிடை ...31

வாமாம் புலியூர் மலர்ச்சோலை சூழ்ந்திலங்கும்
ஓமாம் புலியூர்வாழ் உத்தமமே - நேமார்ந்த ...32

வானாட்டு முள்ளூர் மருவுகின்றோர் போற்றுதிருக்
கானாட்டு முள்ளூர்க் கலைக்கடலே - மேனாட்டும் ...33

தேரையூர்ச் செங்கதிர்போற் செம்மணிக ணின்றிலங்கும்
நாரையூர் மேவு நடுநிலையே - பாரில் ...34

உடம்பூர் பவத்தை யொழித்தருளும் மேன்மைக்

கடம்பூர்வாழ் என்னிரண்டு கண்ணே - தடம்பொழிலில் ...35

கொந்தணவுங் கார்க்குழலார் கோலமயிற் போலுலவும்

பந்தண நல்லூர்ப் பசுபதியே - கந்தமலர் ...36

அஞ்சனூர்(51) செய்ததவத் தாலப் பெயர்கொண்ட

கஞ்சனூர் வாழுமென்றன் கண்மணியே - அஞ்சுகங்கள் ...37

நாடிக்கா வுள்ளே நமச்சிவா யம்புகலும்.

கோடிக்கா மேவுங் குளிர்மதியே - ஓடிக் ...38

கருமங்க லக்குடியிற் காண்டுமென வோதும்

திருமங்க லக்குடியில் தேனே - தரும ...39

மனந்தாள் மலரை மருவுவிப்போர் வாழும்

பனந்தாளிற் பாலுகந்த பாகே - தினந்தாளிற் ..40

சூழ்திருவாய்ப் பாடியங்கு சூழ்கினுமா மென்றுலகர்

வாழ்திருவாய்ப் பாடிஇன்ப வாரிதியே - ஏழ்புவிக்குள் ...41

வாய்ஞ்ஞலூ ரீதே மருவவென வானவர்சேர்

சேய்ஞ்ஞலூர் இன்பச் செழுங்கனியே - வாஞ்சையுறும் ...42

சீவன் குடியுறவிச் சீர்நகரொன் றேயெனுஞ்சீர்த்

தேவன் குடிமகிழ்ந்த தெள்ளமுதே - ஓவில் ...43

மயலூர் மனம்போல் வயலிற் கயலூர்

வியலூர் சிவானந்த வெற்பே - அயலாம்பல் ...44

மட்டையூர் வண்டினங்கள் வாய்ந்து விருந்துகொளும்

கொட்டையூ ருட்கிளருங் கோமளமே - இட்டமுடன் ...45

என்னம்ப ரென்னம்ப ரென்றயன்மால் வாதுகொள

இன்னம்பர் மேவிநின்ற என்னுறவே - முன்னம்பு ...46

மாற்கும் புறம்பியலா வாய்மையருள் செய்யவுளம்

ஏற்கும் புறம்பியம்வாழ் என்னுயிரே -மாற்கருவின் ...47

கண்விசைய மங்கைக் கனிபோற் பெறத்தொண்டர்

எண்விசைய மங்கையில்வாழ் என்குருவே - மண்ணுலகில் ...48

வைகாவூர் நம்பொருட்டான் வைகியதென் றன்பர்தொழும்

வைகாவூர் மேவியவென் வாழ்முதலே - உய்யும்வகைக் ...49

காத்தும் படைத்துங் கலைத்துநிற்போர் நாடோறும்

ஏத்துங் குரங்காட்டின்(52) என்னட்பே - மாத்தழைத்த ...50

வண்பழனத் தின்குவிவெண் வாயிற்றேன் வாக்கியிட

உண்பழனத் தென்றன் உயிர்க்குயிரே -பண்பகன்ற ... 51

வெய்யாற்றி னின்றவரை மெய்யாற்றி னேற்றுதிரு

ஐயாற்றின் மேவியஎன் னாதரவே - பொய்யாற்றி ...52

மெய்த்தான நின்றோர் வெளித்தான மேவுதிரு

நெய்த்தானத் துள்ளமர்ந்த நித்தியமே - மைத்த ...53

கரும்புலியூர்க் காளையொடுங் கண்ணோட்டங் கொள்ளும்

பெரும்புலியூர் வாழ்கருணைப் பேறே - விரும்பிநிதம் ...54

பொன்னுங்(53) கௌத்துவமும் பூண்டோ ன் புகழ்ந்தருளை

மன்னு மழபாடி வச்சிரமே - துன்னுகின்ற ...55

நாய்க்குங் கடையேன் நவைதீர நற்கருணை

வாய்க்கும் பழுவூர் மரகதமே - தேய்க்களங்கில்(54) ...56

வானூர் மதிபோன் மணியாற் குமுதமலர்

கானூ ருயர்தங்கக் கட்டியே - நானூறு ...57

கோலந் துறை(55) கொண்ட கோவையருள் கோவைமகிழ்

ஆலந் துறை(56)யின் அணிமுத்தே - நீலங்கொள் ...58

தேந்துறையி லன்னமகிழ் சேக்கை பலநிலவு

மாந்துறைவாழ் மாணிக்க மாமலையே - ஏந்தறிவாம் ...59

நூற்றுறையில் நின்றவர்கள் நோக்கிமகிழ் வெய்துதிருப்

பாற்றுறையில் நின்ற பரஞ்சுடரே - நாற்றிசையுந் ... 60

தேனைக்கா வுள்மலர்கள் தேங்கடலென் றாக்குவிக்கும்

ஆனைக்கா மேவியமர் அற்புதமே - மானைப்போல் ...61

மைஞ்ஞீல வாட்கண் மலராள் மருவுதிருப்

பைஞ்ஞீலி மேவும் பரம்பரமே - எஞ்ஞான்றும் ...62

ஏச்சிரா மங்கலத்தோ டின்பந் தரும்பாச்சி

லாச்சிரா மஞ்சேர் அருள்நிலையே - நீச்சறியா ...63

தாங்கோய் மலைப்பிறவி யார்கலிக்கோர் வார்கலமாம்

ஈங்கோய் மலைவாழ் இலஞ்சியமே - ஓங்காது ...64

நாட்போக்கி நிற்கு நவையுடையார் நாடரிதாம்(57)

வாட்போக்கி மேவுகின்ற வள்ளலே - கோட்போக்கி ...65

நில்லுங் கடம்ப நெறிபோ லெனப்பூவை

சொல்லுங் கடம்பந் துறைநிறைவே - மல்லலொடு ...66

வாழும் பராய்த்துறைவான் மன்னவரு மன்னவருஞ்

சூழும் பராய்த்துறைவாழ் தோன்றலே - கூழும்பல் ...67

நற்குடியு மோங்கி நலம்பெருகு மேன்மைதிருக்

கற்குடியிற் சந்தான கற்பகமே - சிற்சுகத்தார் ...68

பிற்சநந மில்லாப் பெருமை தருமுறையூர்ச்

சற்சனர்சேர் மூக்கீச் சரத்தணியே - மற்செய் ...69

அராப்பள்ளி மேவு மவனின்று வாழ்த்தும்

சிராப்பள்ளி ஞானத் தெளிவே - இராப்பள்ளி ...70

நின்றெழன்மெய் யன்றெனவே நேர்ந்துலகு வாழ்த்துகின்ற

நன்றெறும்பி யூரிலங்கு நன்னெறியே - துன்றுகயற் ...71

கண்ணார் நெடுங்களத்தைக் கட்டழித்த மெய்த்தவர்சூழ்

தண்ணார் நெடுங்களமெய்த் தாரகமே - எண்ணார் ...72

தருக்காட்டுப் பள்ளித் தகைகொண்டோ ர் சூழுந்

திருக்காட்டுப் பள்ளியில்வாழ் தேவே - மருக்காட்டு ...73

நீலம் பொழிற்குள் நிறைதடங்கட் கேர்காட்டும்

ஆலம் பொழிற்சிவயோ கப்பயனே - சீலநிறை ...74

வாந்துருத்தி கொண்டுள் ளனலெழுப்பு வோர்புகழும்

பூந்துருத்தி மேவுசிவ புண்ணியமே - காந்தருவத் ...75

தண்டியூர் போற்றுந் தகைகாசிக் கட்செய்து

கண்டியூர் வாழுங் களைகண்ணே - கொண்டியல்பின் ...76

வேற்றுத் துறையுள் விரவா தவர்புகழும்

சோற்றுத் துறையுட் சுகவளமே - ஆற்றலிலாத் ...77

தீதிக் குடியென்று செப்பப் படார்மருவும்

வேதிக் குடி(58) யின்ப வெள்ளமே - கோதியலும் ...78

வன்குடித் திட்டை மருவார் மருவுதிருத்

தென்குடித் திட்டைச் சிவபதமே - நன்குடைய ...79

உள்ளமங்கை மார்மே லுறுத்தா தவர்புகழும்

புள்ளமங்கை வாழ்பரம போகமே - கள்ளமிலஞ் ...80

சக்கரப் பள்ளிதனிற் றாம்பயின்ற மைந்தர்கள்சூழ்

சக்கரப் பள்ளிதனில் தண்ணளியே-மிக்க ...81

அருகாவூர் சூழ்ந்தே அழகுபெற வோங்கும்

கருகாவூர் இன்பக் கதியே-முருகார்ந்த ...82

சோலைத் துறையிற் சுகஞ்சிவநூல் வாசிக்கும்

பாலைத் துறையிற் பரிமளமே-சீலத்தர் ...83

சொல்நூ ரடியப்பர் தூயமுடி மேல்வைத்த

நல்லூ ரமர்ந்தநடு நாயகமே-மல்லார்ந்த ...84

மாவூ ரிரவியின்பொன் வையமள வுஞ்சிகரி

ஆவூரி லுற்றவெங்கள் ஆண்தகையே-ஓவாது ...85

சித்திமுற்ற யோகஞ் செழும்பொழிலிற் பூவைசெயும்

சத்திமுற்ற மேவுஞ் சதாசிவமே-பத்தியுற்றோர் ...86

முட்டீச் சுரத்தின் முயலா வகையருளும்

பட்டீச் சரத்தெம் பராபரமே-துட்டமயல் ...87

தீங்குவிழை யார்தமைவான் சென்றமரச் செய்விக்க

ஓங்குபழை யாறையிலென் னுள்ளுவப்பே-பாங்குபெற ...88

ஆர்ந்த வடவிலையான் அன்னத்தான் போற்றிநிதம்

சார்ந்த வடதளிவாழ் தற்பரமே-சேர்ந்த ...89

மலஞ்சுழி கின்ற மனத்தர்க் கரிதாம்

வலஞ்சுழி வாழ்பொன் மலையே-நிலஞ்சுழியா ...90

தோணத்தில் வந்தோ னுடன்றுதித்து வாழ்கும்ப

கோணத்தில் தெய்வக் குலக்கொழுந்தே-மாணுற்றோர் ...91

காழ்க்கோட்ட நீங்கக் கருதுங் குடமூக்கிற்

கீழ்க்கோட்ட மேவுமன்பர் கேண்மையே-வாழ்க்கோட்டத் ...92

தேரோண மட்டுந் திகழ்குடந்தை மட்டுமின்றிக்

காரோண மட்டுங் கமழ்மலரே-சீரோங்கும் ...93

யோகீச் சுரர்நின் றுவந்து வணங்குதிரு

நாகீச் சுரமோங்கு நங்கனிவே-ஓகையுளம் ...94

தேக்கும் வரகுணனாந் தென்னவன்கண் சூழ்பழியைப்

போக்கும் இடைமருதிற் பூரணமே-நீக்கமிலா ...95

நன்குரங் காணு நடையோ ரடைகின்ற

தென்குரங் காடுதுறைச் செம்மலே-புன்குரம்பை ...96

ஏலக் குடிபுகுந்த எம்மனோர்க் குண்மைதரு

நீலக் குடியிலங்கு நிட்களமே-ஞாலத்து ...97

நீடக்கோர் நாளும் நினைந்தேத் திடும்வைகல்

மாடக்கோ யிற்குண் மதுரமே-பாடச்சீர் ...98

வல்ல தமிழ்ப்புலவர் மன்னி வணங்குதிரு

நல்லமகிழ் இன்ப நவவடிவே-இல்லமயல் . ...99

ஆழம்பங் கென்ன வறிந்தோர் செறிந்தேத்தும்

கோழம்பம் வாழ்கருணைக் கொண்டலே-வீழும்பொய் ...100

தீரா வடுவுடையார் சேர்தற் கருந்தெய்வச்

சீரா வடுதுறையெஞ் செல்வமே-பேராக் ..101

கருத்திருத்தி யேத்துங் கருத்தர்க் கருள்செய்

திருத்துருத்தி இன்பச் செழிப்பே-வருத்துமயல் ...102

நாளு மெழுந்தூர் நவையறுக்கு மன்பருள்ளம்

நீளும் அழுந்தூர் நிறைதடமே-வேளிமையோர் ...103

வாயூரத் தேமா மலர்(59) சொரிந்து வாழ்த்துகின்ற

மாயூரத் தன்பர் மனோரதமே- தேயா ...104

வளநகரென் றெவ்வுலகும் வாழ்த்தப் படுஞ்சீர்

விளநகர்வா ழெங்கண் விருந்தே- இளமைச் ...105

செறியலூர் கூந்தல் திருவனையா ராடும்

பறியலூர் வாழ்மெய்ப் பரமே- நெறிகொண்டே ...106

அன்பள்ளி யோங்கு மறிவுடையோர் வாழ்த்துஞ்செம்

பொன்பள்ளி வாழ்ஞான போதமே- இன்புள்ளித் ...107

தெள்ளியார் போற்றித் திகழுந் திருநன்னிப்

பள்ளியார்ந் தோங்கும் பரசிவமே - எள்ளுறுநோய் ...108

ஏய வலம்புரத்தை யெண்ணாம லெண்ணுகின்றோர்

மேய வலம்புரத்து மேதகவே - தூயகொடி ...109

அங்காடு கோபுரம்வா ணாற்றாடு கின்றதலைச்

சங்காடு மேவுஞ் சயம்புவே - பொங்குமிருட் ...110

கூறுதிரு வாக்கூர் கொடுப்பனபோற் சூழ்ந்துமதில்

வீறுதிரு வாக்கூர் விளக்கமே - மாறகற்றி ...111

நன்கடையூர் பற்பலவு நன்றிமற வாதேத்தும்

தென்கடையூர்(69) ஆனந்தத் தேறலே - வன்மையிலாச் ...112

சொற்கடவி மேலோர் துதித்தலொழி யாதோங்கு

நற்கடவூர் வீரட்ட நாயகனே - வற்கடத்தும் ...113

வாட்டக் குடிசற்றும் வாய்ப்பதே யில்லையெனும்

வேட்டக் குடிமேவு மேலவனே - நாட்டமுற்ற ...114

வாக்குந் தெளிச்சேரி மாதவத்தர்க் கின்பநலம்

ஆக்குந் தெளிச்சேரி அங்கணனே - நீக்கும் ...115

கரும புரத்திற் கலவா தருள்செய்

தரும புரஞ்செய் தவமே - இருமையினும் ...116

எள்ளாற்றின் மேவாத ஏற்புடையோர் சூழ்ந்திறைஞ்சு

நள்ளாற்றின் மேவியஎன் நற்றுணையே - தெள்ளாற்றின் ...117

நீட்டாறு கொண்டரம்பை நின்று கவின்காட்டும்

கோட்டாறு மேவுங் குளிர்துறையே - கூட்டாக் ...118

கருவம்பர் தம்மைக் கலவாத மேன்மைத்

திருவம்பர் ஞானத் திரட்டே - ஒருவந்தர் ...119

மாகாளங் கொள்ள மதனைத் துரத்துகின்ற

மாகாளாத் தன்பர் மனோலயமே - யோகாளக் ...120

காயச்சூர் விட்டுக் கதிசேர வேட்டவர்சூழ்

மீயச்சூர் தண்ணென்னும் வெண்ணெருப்பே - மாயக் ...121

களங்கோயில் நெஞ்சக் கயவர் மருவா

இளங்கோயின் ஞான இனிப்பே - வளங்கோள ...122

நாடுந் திலத நயப்புலவர் நாடோறும்

பாடுந் திலதைப் பதிநிதியே - ஆடுமயில் ...123

காம்புரங்கொள் தோளியர்பொற் காவிற் பயில்கின்ற

பாம்புரங்கொள் உண்மைப் பரம்பொருளே - ஆம்புவனம் ...124

துன்னும் பெருங்குடிகள் சூழ்ந்துவலஞ் செய்துவகை

மன்னுஞ் சிறுகுடிஆன் மார்த்தமே - முன்னரசும் ...125

காழி மிழலையருங் கண்டுதொழக் காசளித்த

வீழி மிழலை விராட்டுருவே - ஊழிதொறும் ...126

மன்னியூர் மால்விடையாய் வானவா வென்றுதொழ

வன்னியூர் வாழு மணிகண்டா - இந்நிமிடம் ...127

சிந்துங் கருவலியின் திண்மையென்று தேர்ந்தவர்கள்

முந்துங் கருவிலிவாழ் முக்கண்ணா - மந்தணத்தைக் ...128

காணு மருந்துறையிக் காமர்தல மென்றெவரும்

பேணு பெருந்துறையிற் பெம்மானே - ஏணுடன்கா ...129

ஈட்டும் பெருநறையா றென்ன வயலோடி
நாட்டும் பெருநறையூர் நம்பனே - காட்டும் ...130
பரிசிற் கரைப்புற்றோர் பாங்குபெற வோங்கும்
அரிசிற் கரைப்புத்தூ(61) ரானே - தரிசனத்தெக் ...131
காலுஞ் சிவபுரத்தைக் காதலித்தோர் தங்கள்துதி
ஏலுஞ் சிவபுரத்தி லெம்மானே - மாலுங்கொள் ...132
வெப்புங் கலையநல்லோர் மென்மதுரச் சொன்மாலை
செப்புங் கலயநல்லூர்ச் சின்மயனே - செப்பமுடன் ...133
ஓங்குந் திருத்தொண்டர் உள்குளிர நல்லருளால்
தாங்குங் கருக்குடிவாழ் சங்கரனே - ஆங்ககனந் ...134
தாஞ்சியத்தை(62) வேங்கைத் தலையாற் றடுக்கின்ற
வாஞ்சியத்தின் மேவு மறையோனே - ஆஞ்சியிலா ...135
திந்நிலத்தும் வானாதி யெந்நிலத்து மோங்குபெரு
நன்னிலத்து வாழ்ஞான நாடகனே - மன்னுமலர் ...136
வண்டீச் சுரம்பாடி வார்மதுவுண் டுள்களிக்குங்
கொண்டீச் சுரத்தமர்ந்த கோமானே - கண்டீச ...137
நண்பனையூ ரன்புகழும் நம்பவென உம்பர்தொழத்
தண்பனையூர் மேவுஞ் சடாதரனே - பண்புடனே ...138
எற்குடியா னங்கொண் டிருக்க மகிழ்ந்தளித்த
விற்குடியின் வீரட்ட மேயவனே - சொற்கொடிய ...139
வன்புகலா நெஞ்சின் மருவும் ஒருதகைமைத்

தென்புகலூர் வாழ்மகா தேவனே - இன்பமறை ...140

அர்த்தமா நீக்கரிய வாதார மாகிநின்ற

வர்த்தமா நேச்சரத்து வாய்ந்தவனே - மித்தையுற்ற ...141

காமனதீ சங்கெடவே கண்பார்த் தருள்செய்த

ராமனதீ சம்பெறுநி ராமயனே - தோமுண் ...142

மயற்றூர் பறித்த மனத்தில் விளைந்த

பயற்றூர் திசையம் பரனே - இயற்றுஞ்சீர் ...143

ஆச்சிரமே வுஞ்செங்காட் டங்குடியி னங்கணப

தீச்சரம்வா ழுஞ்சந்த்ர சேகரனே - ஏச்சகல ...144

விண்மருவி னோனை விடநீக்க நல்லருள்செய்

வண்மருகல் மாணிக்க வண்ணனே - திண்மைகொண்ட ...145

மாத்தமங்கை யுள்ளம் மருவிப் பிரியாத

சாத்தமங்கைக் கங்கைச் சடாமுடியோய் - தூத்தகைய ...146

பாகைக்கா ரென்னும் பணிமொழியார் வாழ்த்தோவா

நாகைக்கா ரோணம் நயந்தோனே - ஓகையற ...147

விக்கல் வருங்கால் விடாய்தீர்த் துலகிடைநீ

சிக்கலெனுஞ் சிக்கல் திறலோனே - மிக்கமினார் ...148

வாளூர் தடங்கண் வயல்காட்டி யோங்குங்கீழ்

வேளூரிற் செங்கண் விடையோனே - நீளுவகைப் ...149

பாவூ ரிசையிற் பயன்சுவையிற் பாங்குடைய

தேவூர் வளர்தேவ தேவனே - பூவினிடை ...150

இக்கூடன் மைந்த வினிக்கூட லென்றுபள்ளி

முக்கூடன் மேவியமர் முன்னவனே - தக்கநெடுந் ...151

தேரூ ரணிவீதிச் சீரூர் மணிமாட

ஆரூரி லெங்கள் அருமருந்தே - நீரூர்ந்த ...152

காரூர் பொழிலுங் கனியீந் திளைப்பகற்றும்

ஆரூ ரரனெறிவே ளாண்மையே - ஏரார்ந்த ...153

மண்மண் டலிகர் மருவுமா ரூர்ப்பரவை

உண்மண் டலி(63) எம் உடைமையே - திண்மைக் ...154

களமர் மகிழக் கடைசியர் பாடும்

விளமர் கொளுமெம் விருப்பே - வளமை ...155

எருக்கரவீ ரஞ்சே ரெழில்வேணி கொண்டு

திருக்கரவீ ரஞ்சேர் சிறப்பே - உருக்க ...156

வருவேளூர் மாவெல்லா மாவேறுஞ் சோலைப்

பெருவேளூர் இன்பப் பெருக்கே - கருமை ...157

மிலையாலங் காட்டு மிடற்றாயென் றேத்தும்

தலையாலங் காட்டுத் தகவே - நிலைகொள் ...158

தடவாயில் வெண்மணிகள் சங்கங்க ளீனும்

குடவாயில் அன்பர் குறிப்பே - மடவாட்கோர் ...159

கூறை(64) யுவந்தளித்த கோவேயென் றன்பர்தொழச்

சேறை யுவந்திருந்த சிற்பரமே - வேறுபடாப் ...160

பாலூர் நிலவிற் பணிலங்கள் தண்கதிர்செய்

நாலூரில் அன்பர்பெறு நன்னயமே - மேலூரும் ...161

நோய்க்கரையுட் செய்யாத நோன்மையோர் சூழ்ந்தகடு

வாய்க்கரையுண் மேவுகின்ற வண்மையே - வாய்த்த ...162

பெரும்பூகந் தெங்கிற் பிறங்க வளங்கொள்ளும்

இரும்பூளை மேவி யிருந்தோய் - விரும்பும் ...163

விரதப் பெரும்பாழி விண்ணவர்க ளேத்தும்

அரதைப் பெரும்பாழி ஆர்ந்தோய் - சரதத்தால் ...164

ஏதும் அவணிவணென் றெண்ணா தவரிறைஞ்சி

ஓதும் அவளிவணல் லூருடையோய் - கோதகன்ற ...165

நீட்டுஞ் சுருதி நியமத்தோர்க் கின்னருளை

நீட்டும் பரிதி நியமத்தோய் - காட்டியநந் ...166

தேவனூ ரென்று திசைமுகன்மால் வாழ்த்துகின்ற

பூவனூர் மேவும் புகழுடையோய் - பூவலகாம் ...167

ஈங்கும்பா தாளமுத லெவ்வுலகு மெஞ்ஞான்றுந்

தாங்கும்பா தாளேச் சரத்தமர்ந்தோய் - ஓங்குபுத்தி ...168

மான்களரி லோட்டி மகிழ்வோ டிருந்தேத்தும்

வான்களரில் வாழு மறைமுடிபே - மேன்மைதரும் ...169

முற்றேமம் வாய்ந்த முனிவர் தினம்பரவும்

சிற்றேமம் வாய்ந்த செழுங்கதிரே - கற்றவர்கள் ...170

எங்குமுசாத் தான மிருங்கழக மன்றமுதல்

தங்குமுசாத் தானத் தனிமுதலே - பொங்குபவ ...171

வல்லவிடும் பாவநத்த மட்டொளிசெய் கின்றதிரு

மல்லலிடும் பாவனத்து மாட்சிமையே - தொல்லைப் ...172

படிக்குள் நோவாத பண்புடையோர் வாழ்த்தும்

கடிக்குளத் தன்பர் களிப்பே - கடிக்குளத்தின் ...173

வண்டலைக்கத் தேனலரின் வார்ந்தோர் தடமாக்கும்

தண்டலைக்குள் நீணெறிச்சிந் தாமணியே - கொண்டலென ...174

மன்கோட்டூர் சோலை வளர்கோட்டூர் தண்பழனத்

தென்கோட்டூர் தேவ சிகாமணியே - தென்கூட்டிப் ...175

போய்வண் டுறைதடமும் பூம்பொழிலுஞ் சூழ்ந்தமரர்

ஆய்வெண் டுமறைமாசி லாமணியே - தோய்வுண்ட ...176

கள்ளம்பூ தாதிநிலை கண்டுணர்வு கொண்டவர்சூழ்

கொள்ளம்பூ தூர்வான் குலமணியே - வெள்ளிடைவான் ...177

வாம்பே ரெயிற்சூழ்ந்த மாண்பாற் றிருநாமம்

ஆம்பே ரெயிலொப்பி லாமணியே - தாம்பேரா ...178

வீட்டிலன்ப ரானந்தம் மேவச் செயுங்கொள்ளிக்

காட்டி லமர்ந்தஎன்கண் காட்சியே - நீட்டுமொளி ...179

ஆங்கூ ரிலைவே லவனா தியர்சூழத்

தேங்கூரில் வாழ்தேவ சிங்கமே - ஓங்குமலை ...180

வல்லிக்கா தார மணிப்புயவென் றன்பர்தொழ

நெல்லிக்கா வாழ்மெய்ந் நியமமே - எல்அல்கண் ...181

சேட்டியத் தானே தெரிந்துசுரர் வந்தேத்து

நாட்டியத் தான்குடிவாழ் நல்லினமே - நாட்டுமொரு ...182

நூறாயி லன்பர்தமை நோக்கி யருள்செய்திருக்

காறாயின் மேலோர் கடைப்பிடியே - வீறாகும் ...183

இன்றாப்பூர் வந்தொட் டிருந்ததிவ்வூ ரென்னவுயர்

கன்றாப்பூர் பஞ்சாக் கரப்பொருளே - துன்றாசை ...184

வெய்ய வலிவலத்தை வீட்டியன்பர்க் கின்னருள்செய்

துய்ய வலிவலத்துச் சொன்முடிபே - நையுமன ...185

மைச்சினத்தை விட்டோர் மனத்திற் சுவைகொடுத்துக்

கைச்சினத்தி னுட்கரையாக் கற்கண்டே - நெற்சுமக்க ...186

ஆளிலையென் றாரூர ணார்துதிக்கத் தந்தருளும்

கோளிலியின் அன்பர்குலங் கொள்ளுவப்பே - நீளுலகம் ...187

காய்மூர்க்க ரேனுங் கருதிற் கதிகொடுக்கும்

வாய்மூர்க் கமைந்த மறைக்கொழுந்தே - நேயமுணத் ...188

தேடெலியை மூவுலகுந் தேர்ந்துதொழச் செய்தருளும்

ஈடின்மறைக் காட்டிலென்றன் எய்ப்பில்வைப்பே - நாடுமெனை ...189

நின்னகத்தி யான்பள்ளி நேர்ந்தேனென் றாட்கொண்ட

தென்னகத்தி யான்பள்ளிச் செம்பொன்னே - தொன்னெறியோர் ...190

நாடிக் குழக நலமருளென் றேத்துகின்ற

கோடிக் குழகரருட் கோலமே - நீடுலகில் ...191

நாட்டும் புகழீழ நாட்டிற் பவவிருளை(65)

வாட்டுந் திருக்கோண மாமலையாய் - வேட்டுலகின் ...192

மூதீச் சரமென்று முன்னோர் வணங்குதிருக்

கேதீச் சரத்திற் கிளர்கின்றோய் - ஓதுகின்றோர் ...193

பாலவாய் நிற்கும் பரையோடு வாழ்மதுரை(66)

ஆலவாய்ச் சொக்கழகா னந்தமே - சீலர்தமைக் ...194

காப்பனூ ரில்லாக் கருணையா லென்றுபுகும்

ஆப்பநூர் மேவுசதா னந்தமே - மாப்புலவர் ...195

ஞானபரங் குன்றமென நண்ணிமகிழ் கூர்ந்தேத்த

வானபரங் குன்றலின்பா னந்தமே - வானவர்கோன் ...196

தேமே டகத்தனொடு சீதரனும் வாழ்த்துஞ்சீ

ராமே டகத்தறிவா னந்தமே - பூமீதில் ...197

நற்றவருங் கற்ற நவசித்த ரும்வாழ்த்தி

உற்றகொடுங் குன்றத்தெம் ஊதியமே - முற்றுகதிர் ...198

இத்தூர மன்றி யினித்தூர மில்லையெனப்

புத்தூர் வருமடியார் பூரிப்பே - சித்தாய்ந்து ...199

நாமீச ராகும் நலந்தருமென் றும்பர்தொழும்

ராமீசம்(67) வாழ்சீவ ரத்தினமே - பூமீது ...200

நீடானை சூழும் நிலமன்னர் வாழ்த்துதிரு

வாடானை மேவுகரு ணாகரமே - சேடான ...201

வானப்பே ராற்றை மதியை முடிசூடுங்

கானப்பேர் ஆனந்தக் காளையே - மோனருளே ...202

பூவணமும் பூமணமும் போலவ மர்ந்ததிருப்

பூவணத்தில் ஆனந்தப் பொக்கிஷமே - தீவணத்தில் ...203

கண்சுழிய லென்று கருணையளித் தென்னுளஞ்சேர்

தண்சுழியல் வாழ்சீவ சாகூஷியே - பண்செழிப்பக் ...204

கற்றாலங் குண்மைக் கதிதருமென் றற்றவர்சூழ்

குற்றாலத் தன்பர் குதுகலிப்பே - பொற்றாம ...205

நல்வேலி சூழ்ந்து நயன்பெறுமொண் செஞ்சாலி

நெல்வேலி உண்மை நிலயமே - வல்வேலை ...206

நஞ்சைக் களத்துவைத்த நாதவெனத் தொண்டர்தொழ(68)

அஞ்சைக் களஞ்சேர் அருவுருவே - நெஞ்சடக்கி ...207

ஆன்று நிறைந்தோர்க் கருளளிக்கும் புக்கொளியூர்த்(69)

தோன்றுமவி நாசிச் சுயம்புவே - சான்றவர்கள் ...208

தம்முருகன் பூணுட் டலம்போல வாழ்கின்ற

எம்முருகன் பூண்டி இருநிதியே - செம்மையுடன் ...209

அங்குன்றா தோங்கு மணிகொள் கொடிமாடச்

செங்குன்றூர் வாழுஞ்சஞ் சீவியே - தங்குமன ...210

வஞ்சமாக் கூடல் வரையா தவர்சூழும்

வெஞ்சமாக் கூடல் விரிசுடரே - துஞ்சலெனும் ...211

இன்ன லகற்ற இலங்குபவா னிக்கூடல்

என்னு நணாவினிடை இன்னிசையே - துன்னியருள் ...212

வேண்டிக் கொடுமுடியா மேன்மைபெறு மாதவர்சூழ்

பாண்டிக் கொடுமுடியிற் பண்மயமே - தீண்டரிய ...213

வெங்கருவூர் வஞ்ச வினைதீர்த் தவர்சூழ்ந்த

நங்கருவூர்ச் செய்யுள் நவரசமே - தங்களற்றின் ...214

தீங்கார் பிறதெய்வத் தீங்குழியில்(70) வீழ்ந்தவரைத்(71)

தாங்கா வரத்துறையில் தாணுவே - பூங்குழலார் ...215

வீங்கானை மாடஞ்சேர் விண்ணெென் றகல்கடந்தைத்

தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே - நீங்காது ...216

நீடலை யாற்றூர் நிழன்மணிக்குன் றோங்குதிருக்

கூடலை யாற்றூர்க் குணநிதியே - நாடியவான் ...217

அம்புலியூர் சோலை யணிவயல்க ளோங்கெருக்கத்

தம்புலியூர் வேத சமரசமே - நம்புவிடை ...218

ஆங்குந் தினையூர்ந் தருளாயென் றன்பர்தொழு

தோங்குந் தினையூர் உமாபதியே - தீங்குறுமொன் ...219

(72)னார்புரத்தை வெண்ணகைத்தீ யாலழித்தா யென்றுதொழச்

(73)சோபுரத்தின் வாழ்ஞான தீவகமே - வார்கெடிலச் ...220

சென்னதிகை யோங்கித்(74) திலதவதி யார்பரவும்

மன்னதிகை வீரட்ட மாதவமே - பன்னரிதாம் ...221

ஆவலூ ரெங்களுடை ஆரூர ணாரூரா

நாவலூர் ஞானியருண் ஞாபகமே - தேவகமாம் ...222

மன்ற மமர்ந்த வளம்போற் றிகழ்ந்தமுது

குன்ற மமர்ந்தஅருட் கொள்கையே - அன்றகத்தின் ...223

நல்வெண்ணெ யுண்டொளித்த நாரணன்வந் தேத்துகின்ற

நெல்வெண்ணெய் மேவுசிவ நிட்டையே - சொல்வண்ணம் ...224

நாவலர் போற்றி நலம்பெறவே யோங்குதிருக்

கோவலூர் வீரட்டங் கொள்பரிசே - ஆவலர்மா ...225

தேவா இறைவா சிவனே யெனுமுழக்கம்

ஓவா அறையணிநல் லூருயர்வே - தாவாக் ...226

கடையாற்றி னன்பர்தமைக் கல்லாற்றி னீக்கும்

இடையாற்றின் வாழ்நல் இயல்பே - இடையாது ...227

சொல்லூரன் றன்னைத் தொழும்புகொளுஞ் சீர்வெண்ணெய்

நல்லூ ரருட்டுறையின் நற்பயனே - மல்லார்ந்து ...228

மாசுந் துறையூர் மகிபன்முதல் மூவருஞ்சீர்

பேசுந் துறையூர்ப் பிறைசூடீ - நேசமுற ...229

வேற்றா வடுகூ ரிதயத்தி னார்க்கென்றுந்

தோற்றா வடுகூர்ச் சுயஞ்சுடரே - ஆற்றமயல் ...230

காணிக் குழிவீழ் கடையர்க்குக் காண்பரிய

மாணிக் குழிவாழ் மகத்துவமே - மாணுற்ற ...231

பூப்பா திரிகொன்றை புன்னைமுதற் சூழ்ந்திலங்கும்

(75)ஏர்ப்பா திரிப்புலியூர் ஏந்தலே - சீர்ப்பொலியப் ...232

பண்டீச் சுரனிப் பதியே விழைந்ததெனும்

முண்டீச் சுரத்தின் முழுமுதலே - பெண்தகையார் ...233

ஏர்ப்பனங்காட் டூரென் றிருநிலத்தோர் வாழ்த்துகின்ற

சீர்ப்பனங்காட் டூர்மகிழ்நி க்ஷேபமே - சூர்ப்புடைத்த ...234

தாமாத்தூர் வீழத் தடிந்தோன் கணேசனொடும்

ஆமாத்தூர் வாழ்மெய் அருட்பிழம்பே - யாமேத்தும் ...235

உண்ணா முலையாள் உமையோடு மேவுதிரு

அண்ணா மலைவாழ் அருட்சுடரே - கண்ணார்ந்த ...236

நாகம்ப ராந்தொண்ட நாட்டி லுயர்காஞ்சி(76)

ஏகம்ப மேவும்பே ரின்பமே - ஆகுந்தென் ..237

காற்றளிவண் பூமணத்தைக் காட்டும் பொழிற்கச்சி

மேற்றளிவாழ் ஆனந்த வீட்டுறவே - நாற்றமலர்ப் ...238

பூந்தண் டளிவிரித்துப் புக்கிசைக்குஞ் சீரோண

காந்தன் றளிஅருட்ப்ர காசமே - சேர்ந்தவர்க்கே ...239

இங்கா பதஞ்சற்று மில்லா தவனேக

தங்கா பதஞ்சேர் தயாநிதியே - மங்காது ...240

மெச்சி நெறிக்கார்வ மேவிநின்றோர் சூழ்ந்ததிருக்

கச்சி நெறிக்காரைக் காட்டிறையே - முச்சகமும் ...241

ஆயுங் குரங்கணின்முட் டப்பெயர்கொண் டோ ங்குபுகழ்

ஏயுந் தலம்வா ழியன்மொழியே - தோயுமன ...242

(77)யோகறலி லாத்தவத்தோ ருன்ன விளங்குதிரு

மாகறலில் அன்பரபி மானமே - ஓகையிலா ...243

(78)வீத்தூர மாவோட மெய்த்தவர்கள் சூழ்ந்ததிரு

ஓத்தூரில் வேதாந்த உண்மையே - பூத்தவிசின் ...244

ஆர்த்தான் பனகத் தவனிந் திரன்புகழ்வன்
பார்த்தான் பனங்காட்டூர் பாக்கியமே - பார்த்துலகில் ...245

இல்ல மெனச்சென் றிரவா தவர்வாழும்
வல்லமகி ழன்பர் வசித்துவமே - சொல்லரிக்குக் ...246

காற்பேறு கச்சியின்முக் காற்பே றிவணென்னும்
மாற்பேற்றி னன்பர் மனோபலமே - ஏற்புடைவாய் ...247

ஊற லடியா ருறத்தொழுது மேவுதிரு
ஊற லழியா உவகையே - மாறுபடு ...248

தீது மிலம்பயங்கோட் டீரென் றடியர்புகழ்
ஓது மிலம்பயங்கோட் டூர்நலமே - தீதுடைய ...249

பொற்கோலம் ஆமெயிற்குப் போர்க்கோலம் கொண்டதிரு
விற்கோலம் மேவுபர மேட்டிமையே - சொற்போரில் ...250

ஓலங்காட் டும்பழைய னூர்நீலி வாதடக்கும்
ஆலங்காட் டிற்சூழ் அருள்மயமே - ஞாலம்சேர் ...251

மாசூர் அகற்றும் மதியுடையோர் சூழ்ந்ததிருப்
பாசூரில் உண்மைப் பரத்துவமே - தேசூரன் ...252

கண்பார்க்க வேண்டுமெனக் கண்டூன்று கோற்கொடுத்த
வெண்பாக்கத் தன்பர்பெறும் வீறாப்பே - பண்பார்க்கு ...253

நள்ளிப் பதியே நலந்தருமென் றன்பர்புகுங்
கள்ளிற் பதிநங் கடப்பாடே - எள்ளலுறுங் ...254

கோளத்தி நீக்குங் குணத்தோர்க் கருள்செய்திருக்

காளத்தி ஞானக் களஞ்சியமே - ஆள்அத்தா ...255

வெற்றியூ ரென்ன வினையேன் வினைதவிர்த்த

ஒற்றியூர் மேவியஎன் உள்ளன்பே - தெற்றிகளில் ...256

பொங்குமணிக் கால்கள் பொலஞ்செய்திரு வொற்றிநகர்

தங்குஞ் சிவபோக சாரமே - புங்கவர்கள் ...257

சேர்ந்துவலங் கொள்ளுந் திருவொற்றி யூர்க்கோயிற்

சார்ந்து மகிழ்அமுத சாரமே - தேர்ந்துலகர் ...258

போற்றுந் திருவொற்றிப் பூங்கோயிற் குட்பெரியோர்

சாற்றும் புகழ்வேத சாரமே - ஊற்றுறுமெய் ...259

அன்புமிகுந் தொண்டர்குழு ஆயும்வலி தாயத்தில்

இன்பமிகு ஞான இலக்கணமே - துன்பமற ...260

எல்லைவாயற் குள்மட்டும் ஏகில்வினை யேகுமெனும்

முல்லைவாயிற் குள்வைத்த முத்திவித்தே - மல்லல்பெறு ...261

வேற்காட்ட ரேத்துதிரு வேற்காட்டின் மேவியமுன்

நூற்காட் டுயர்வேத நுட்பமே - பாற்காட்டும் ...262

ஆர்த்திபெற்ற மாதுமயி லாய்ப்பூசித் தார்மயிலைக்

கீர்த்திபெற்ற நல்வேத கீதமே - கார்த்திரண்டு ...263

வாவுகின்ற சோலை வளர்வான்மி யூர்த்தலத்தில்

மேவுகின்ற ஞான விதரணமே - தூவிமயில் ...264

ஆடும் பொழிற்கச்சூ ராலக்கோ யிற்குளன்பர்

நீடுங் கனதூய நேயமே - ஈடில்லை ...265

என்னுந் திருத்தொண்ட ரேத்து மிடைச்சுரத்தின்

மன்னுஞ் சிவானந்த வண்ணமே - நன்னெறியோர் ...266

துன்னுநெறிக் கோர்துணையாந் தூயகழுக் குன்றினிடை

முன்னுமறி வானந்த மூர்த்தமே - துன்னுபொழில் ...267

அம்மதுரத் தேன்பொழியும் அச்சிறுபாக் கத்துலகர்

தம்மதநீக் குஞ்ஞான சம்மதமே - எம்மதமும் ...268

சார்ந்தால் வினைநீக்கித் தாங்குதிரு வக்கரையுள்

நேர்ந்தார் உபநிடத நிச்சயமே - தேர்ந்தவர்கள் ...269

தத்த மதுமதியாற் சாரும் அரசிலியூர்

உத்தமமெய்ஞ் ஞான ஒழுக்கமே - பத்தியுள்ளோர் ...270

எண்ணும் புகழ்கொள் இரும்பைமா காளத்து

நண்ணுஞ் சிவயோக நாட்டமே - மண்ணகத்துள் ...271

கோபலத்திற் காண்பரிய கோகரணங் கோயில்கொண்ட(97)

மாபலத்து மாபலமா மாபலமே - தாபமிலாப் ...272

பாகியற்சொல் மங்கையொடும் பாங்கார் பருப்பதத்தில்(80)

யோகியர்க ளேத்திடவாழ் ஒப்புரவே - போகிமுதல் ...273

பாடியுற்ற நீலப் பருப்பதத்தில் நல்லோர்கள்

தேடிவைத்த தெய்வத் திலகமே - நீடுபவம் ...274

தங்கா தவனேக தங்கா பதஞ்சேர்ந்த

நங்கா தலான நயப்புணர்வே - சிங்காது(81) ...275

தண்ணிறைந்து நின்றவர்தாஞ் சார்திருக்கே தாரத்திற்

பண்ணிறைந்த கீதப் பனுவலே - எண்ணிறைந்த ...276

சான்றோர் வணங்குநொடித் தான்மலையில் வாழ்கின்ற

தேன்றோய் அமுதச் செழுஞ்சுவையே - வான்தோய்ந்த ...277

இந்திரரும் நாரணரும் எண்ணில் பிரமர்களும்

வந்திறைஞ்சும் வெள்ளி மலையானே - தந்திடுநல் ...278

தாய்க்குங் கிடையாத தண்ணருள்கொண் டன்பருளம்

வாய்க்குங் கயிலை மலையானே - தூய்க்குமரன் ...279

தந்தையே என்னருமைத் தந்தையே தாயேயென்

சிந்தையே கோயில்கொண்ட தீர்த்தனே - சந்தமிகும் ...280

எண்டோ ளுடையாய் எனையுடையாய் மார்பகத்தில்

வண்டோ லிடுங்கொன்றை மாலையாய் - தொண்டர்விழி ...281

உண்ணற் கெளியாய் உருத்திரன்மா லாதியர்தங்

கண்ணிற் கனவினிலுங் காண்பரியாய் - மண்ணுலகில் ...282

என்போன் றவர்க்கும் இருள்நீக்கி இன்புதவும்

பொன்போன்ற மேனிப் புராதனனே - மின்போன்ற ...283

செஞ்சடையாய் மூவருக்கும் தேவருக்கு மியாவருக்கும்

அஞ்சடையா வண்ணம் அளிப்போனே - விஞ்சுலகில் ...284

எல்லார்க்கு நல்லவனே எல்லாஞ்செய் வல்லவனே

எல்லார்க்கும் ஒன்றா யிருப்போனே - தொல்லூழி ...285

ஆர்ந்த சராசரங்க ளெல்லா மடிநிழலில்

சேர்ந்தொடுங்க மாநடனஞ் செய்வோனே - சார்ந்துலகில் ...286

எத்தேவர் மெய்த்தேவ ரென்றுரைக்கப் பட்டவர்கள்

அத்தேவர்க் கெல்லாமுன் னானோனே - சத்தான ...287

வெண்மைமுதல் ஐவணமு மேவிஐந்து தேவர்களாய்த்

திண்மைபெறும் ஐந்தொழிலுஞ் செய்வோனே - மண்முதலாம் ...288

ஐந்தா யிருசுடரா யான்மாவாய் நாதமுடன்

விந்தா கியெங்கும் விரிந்தோனே - அந்தணவெண் ...289

நீறுடையா யாறுடைய நீண்முடியாய் நேடரிய

வீறுடையாய் நின்றனக்கோர் விண்ணப்பம் - மாறுபட ...290

எள்ள லடியேன் எனக்குள் ஒளியாமல்

உள்ள படியே யுரைக்கின்றேன் - விள்ளுறுமியான் ...291

வன்சொ லுடன்அன்றி வள்ளலுன தன்பர்தமக்

கின்சொ லுடன்பணிந்தொன் றீந்ததிலை - புன்சொலெனும் ...292

பொய்யுரைக்க வென்றாற் புடையெழுவேன் அன்றியொரு

மெய்யுரைக்க வென்றும் விழைந்ததிலை - வையகத்தில் ...293

பொல்லா விரதத்தைப் போற்றியுவந் துண்பதல்லால்

கொல்லா விரதத்தைக் கொண்டதிலை - அல்லாதார் ...294

வன்புகழைக் கேட்க மனங்கொண்ட தல்லாமல்

நின்புகழைக் கேட்க நினைந்ததிலை - வன்புகொண்டே ...295

இன்னடிக்கு நுண்ணிடையார்க் கேவல்புரிந் தேனலதுன்

பொன்னடிக்குத் தொண்டு புரிந்ததிலை - பன்னுகின்ற ...296

செக்குற்ற எள்ளெனவே சிந்தைநசிந் தேனலது

முக்குற்றந் தன்னை முறித்ததிலை - துக்கமிகுந் ...297

தாவில் வலங்கொண்டு சஞ்சரித்தேன் அல்லதுநின்

கோவில்வலங் கொள்ளக் குறித்தநிலை - பூவுலகில் ...298

வன்னிதியோர் முன்கூப்பி வாழ்த்தினேன் அன்றியுன்றன்

சன்னிதியிற் கைகூப்பித் தாழ்ந்ததிலை - புன்னெறிசேர் ...299

மிண்டரொடு கூடி வியந்ததல்லா லையாநின்

தொண்ட ரொடுங்கூடிச் சூழ்ந்ததிலை - கண்டவரைக் ...300

கன்றுமுகங் கொண்டு கடுகடுத்துப் பார்ப்பதல்லால்

என்று முகமலர்ச்சி யேற்றதிலை - நன்றுபெறு ...301

நன்னெஞ்ச ருன்சீர் நவில வதுகேட்டுக்

கன்னெஞ்சைச் சற்றுங் கரைத்ததிலை - பின்னெஞ்சாப் ...302

பண்ணீர்மை கொண்டதமிழ்ப் பாமாலை யாற்றுதித்துக்

கண்ணீர்கொண் டுன்பாற் கனிந்ததிலை - தண்ணீர்போல் ...303

நெஞ்சம் உருகி நினைக்குமன்பர் போலெனைநீ

அஞ்சலென நின்றாள் அடுத்தநிலை - விஞ்சுலகர் ...304

மெய்யடிய னென்றுரைக்க வித்தகநின் பொன்னடிக்குப்

பொய்யடிமை வேடங்கள் பூண்டதுண்டு - நையமிகு ...305

மையல் வினைக்குவந்த மாதர் புணர்ச்சியெனும்

வெய்ய வினைக்குழியில் வீழ்ந்ததுண்டு - துய்யர்தமை ...306

என்னொன்று மில்லா தியல்பாகப் பின்னொன்று

முன்னொன்று மாக மொழிந்ததுண்டு - மன்னுகின்ற ...307

மானஞ் செயாது மனநொந் திரப்போர்க்குத்

தானஞ்செய் வாரைத் தடுத்ததுண்டு - ஈனமிலா ...308

வாரமுறை யாது வழக்கி னிடையோர

வார முரைத்தே மலைந்ததுண்டு - ஈரமிலா ...309

நெஞ்ச ருடன்கூடி நேசஞ்செய் தும்மடியே

தஞ்சமெனத் தாழாது தாழ்ந்ததுண்டு - எஞ்சலிலாத் ...310

தாயனையா யுன்றனது சந்நிதிநேர் வந்துமொரு

நேயமுமில் லாதொதி(82) போல் நின்றதுண்டு - தீயவினை ...311

மாளாக் கொடிய மனச்செல்வர் வாயிலிற்போய்க்

கேளாச் சிவநிந்தை கேட்டதுண்டு - மீளாத ...312

பொல்லாப் புலையரைப்போற் புண்ணியரை வன்மதத்தால்

சொல்லா வசையெல்லாஞ் சொன்னதுண்டு - நல்லோரைப் ...313

போற்றாது பொய்யுடம்பைப் போற்றிச் சிவபூசை

ஆற்றாது சோற்றுக் கலைந்ததுண்டு - தேற்றாமல் ...314

ஈபத்தா என்றிங் கிரப்போர் தமைக்கண்டு

கோபத்தால் நாய்போற் குரைத்ததுண்டு - பாபத்தால் ...315

சிந்தையொன்று வாக்கொன்று செய்கையொன்றாய்ப் போகவிட்டே

எந்தைநினை யேத்தா திருந்ததுண்டு - புந்தியிந்த ...316

சொல்லைக்கல் லென்றுநல்லோர் சொன்னபுத்தி கேளாமல்

எல்லைக்கல் லொத்தே யிருந்ததுண்டு - தொல்லைவினை ...317

ஆழ்த்தா மயவுலகி லற்ப மகிழ்ச்சியினால்

வாழ்த்தாம லுன்னை மறந்ததுண்டு - தாழ்த்தாமற் ...318

பூணா வெலும்பணியாய்ப் பூண்டோ ய்நின் பொன்வடிவங்

காணாது வீழ்நாள் கழித்ததுண்டு - மாணாத ...319

காடுபோன் ஞாலக் கடுநடையி லேயிருகான்

மாடுபோல் நின்றுழைத்து வாழ்ந்ததுண்டு - நாடகன்ற ...320

கள்ளிவா யோங்குபெருங் காமக் கடுங்காட்டிற்

கொள்ளிவாய்ப் பேய்போற் குதித்ததுண்டு - ஒள்ளியரால் ...321

எள்ளுண்ட மாயா இயல்புறுபுன் கல்வியெலாங்

கள்ளுண்ட பித்தனைப்போற் கற்றதுண்டு - நள்ளுலகில் ...322

சீராசை யெங்குஞ்சொற் சென்றிடவே வேண்டுமெனும்

பேராசைப் பேய்தான் பிடித்ததுண்டு - தீராவென் ...323

சாதகமோ தீவினையின் சாதனையோ நானறியேன்

பாதகமென் றாலெனக்குப் பாற்சோறு - தீதகன்ற ...324

தூய்மைநன்றா மென்கின்ற தொன்மையினார் வாய்க்கினிய

வாய்மையென்றால் என்னுடைய வாய்குமட்டுங் - காய்மைதரும்
...325

கற்கு நிகராங் கடுஞ்சொலன்றி நன்மதுரச்

சொற்கும் எனக்கும்வெகு தூரங்காண் - பொற்புமிக ...326

நண்ணியுனைப் போற்றுகின்ற நல்லோர்க் கினியசிவ

புண்ணியமென் றாலெனக்குப் போராட்டம் - அண்ணலுனை ...327

நாளுரையா தேத்துகின்ற நல்லோர்மேல் இல்லாத

கோளுரையென் றாலெனக்குக் கொண்டாட்டம் - நீளநினை ...328

நேசிக்கு நல்ல நெறியாஞ் சிவாகமநூல்

வாசிக்க வென்றாலென் வாய்நோகும் - காசிக்கு ...329

நீடிக்கி லானாலு நேர்ந்தறிவ தல்லதுவீண்

வேடிக்கை யென்றால் விடுவதிலை - நாடயலில் ...330

வீறா முனது விழாச்செயினும் அவ்விடந்தான்

ஆறா யிரங்காத மாங்கண்டாய் - மாறான ...331

போகமென்றா லுள்ளமிகப் பூரிக்கும் அன்றிசிவ

யோகமென்றா லென்னுடைய உண்ணடுங்கும் - சோகமுடன் ...332

துள்ளலொழிந் தென்னெஞ்சஞ் சோர்ந்தழியுங் காலத்திற்

கள்ளமென்றா லுள்ளே களித்தெழும்பும் - அள்ளனெறி ...333

செல்லென்றால் அன்றிச் சிவசிவா வென்றொருகால்

சொல்லென்றால் என்றனக்குத் துக்கம்வரும் - நல்லநெறி ...334

வாம்பலன்கொண் டோர்கள் மறந்தும் பெறாக்கொடிய

சோம்பலென்ப தென்னுடைய சொந்தங்காண் - ஏம்பலுடன் ...335

எற்றோ இரக்கமென்ப தென்றனைக்கண் டஞ்சியெனை

உற்றோ ரையுமுடன்விட் டோடுங்காண் - சற்றேனும் ...336

ஆக்கமே சேரா தறத்துரத்து கின்றவெறுந்

தூக்கமே யென்றனக்குச் சோபனங்காண் - ஊக்கமிகும் ...337

ஏறுடையாய் நீறணியா ஈனர்மனை யாயினும்வெண்

சோறுகிடைத் தாலதுவே சொர்க்கங்காண் - வீறுகின்ற ...338

வாழ்வுரைக்கு நல்ல மனத்தர்தமை யெஞ்ஞான்றுந்

தாழ்வுரைத்தல் என்னுடைய சாதகங்காண் - வேள்விசெயுந் ...339

தொண்டர் தமைத்துதியாத் துட்டரைப்போ லெப்பொழுதுஞ்

சண்டையென்ப தென்றனக்குத் தாய்தந்தை - கொண்டஎழு ...340

தாதாட லூங்கித் தலையாட வஞ்சரொடு

வாதாட என்றாலென் வாய்துடிக்குங் - கோதாடச் ...341

சிந்தை திரிந்துழலுந் தீயரைப்போல் நற்றரும

நிந்தையென்ப தென்பழைய நேசங்காண் - முந்தநினை ...342

எண்ணென்றால் அன்றி யிடர்செய் திடுங்கொடிய

பெண்ணென்றால் தூக்கம் பிடியாது - பெண்களுடன் ...343

புல்லென்றால் தேகம் புளகிக்கும் அன்றிவிட்டு

நில்லென்றால் என்கண்ணி னீரரும்பும் - புல்லரென்ற ...344

பேர்க்கும்விருப் பெய்தாத பெண்பேய்கள் வெய்யசிறு

நீர்க்குழியே யான்குளிக்கு நீர்ப்பொய்கை - சீர்க்கரையின் ...345

ஏறாப்பெண் மாத ரிடைக்கு ளிளிந்தென்றும்

ஆறாப்புண் ணுக்கே யடிமைநான் - தேறாத ...346

வெஞ்சலஞ்செய் மாயா விகாரத்தி னால்வரும்வீண்

சஞ்சலமெல்லா மெனது சம்பந்தம் - அஞ்செழுத்தை ...347

நேர்ந்தார்க் கருள்புரியு நின்னடியர் தாமேயுஞ்

சார்ந்தா லதுபெரிய சங்கட்டம் - ஆர்ந்திடுமான் ...348

காந்தும் விழிப்புலியைக் கண்டதுபோல் நல்லகுண

சாந்த மெனைக் கண்டால் தலைசாய்க்கும் - ஆந்தகையோர் ...349

சேர மனத்திற் செறிவித் திடும்புருட

தீரமெனைக் கண்டாற் சிரிக்குங்காண் - கோரமதைக் ...350

காணி லுலகிற் கருத்துடையோர் கொள்ளுகின்ற

நாண மெனைக்கண்டு நாணுங்காண் - ஏணுலகில் ...351

ஞானங் கொளாவெனது நாமமுரைத் தாலுமபி

மானம் பயங்கொண்டு மாய்ந்துவிடும் - ஆனவுன்றன் ...352

கேண்மைக் குலத்தொண்டர் கீர்த்தி பெறக்கொண்ட

ஆண்மைக்கு நானென்றா லாகாது - வாண்மைபெறும் ...353

ஐயநின்றாட் பூசிக்கு மன்பருள்ளத் தன்பிற்கும்

பொய்ய னெனக்கும் பொருத்தமிலை - வையகத்தோர் ...354

இல்லெனினுஞ் சும்மாநீ யீகின்றே னென்றொருசொல்

சொல்லெனினுஞ் சொல்லத் துணிவுகொளேன் - நல்லையெமக் ...355

கீயென்பா ரன்றியன்னை யென்பயத்தா னின்சோற்றில்

ஈயென்ப தற்கு மிசையாள்காண் - ஈயென்பார்க் ...356

கெண்ணுஞ் சிலர்மண் ணிடுவா ரெனக்கந்த

மண்ணுங் கொடுக்கமனம் வாராது - அண்ணுறுமென் ...357

இல்லை யடைந்தே யிரப்பவருக் கெப்போதும்
இல்லையென்ப தென்வாய்க் கியல்புகாண் - தொல்லுலகை ...358

ஆண்டாலு மன்றி அயலார்புன் கீரைமணிப்
பூண்டாலு மென்கண் பொறுக்காது - நீண்டஎழு ...359

தீப முறுவோர் திசையோர்மற் றியாவர்க்குங்
கோப மதுநான் கொடுக்கிலுண்டு - ஆபத்தில் ...360

வீசங் கொடுத்தெட்டு வீச மெனப்பிறரை
மோசஞ் செயநான் முதற்பாதம் - பாசமுளோர் ...361

கைக்குடைய வேயெழுதிக் கட்டிவைத்த இவ்வுலகப்
பொய்க்கதையே யான்படிக்கும் புத்தகங்கள் - மெய்ப்படுநின் ...362

மந்திரத்தை உச்சரியா வாயுடையேன் என்போலத்
தந்திரத்தில் கைதேர்ந் தவரில்லை - எந்தைஇனி ...363

ஏதென் றுரைப்பே னிருங்கடல்சூழ் வையகத்தில்
சூதென்ப தெல்லாமென் சுற்றங்காண் - ஓதுகின்ற ...364

நஞ்சமெலாங் கூட்டி நவின்றிடினும் ஒவ்வாத
வஞ்சமெலா மென்கை வசங்கண்டாய் - அஞ்சவரும் ...365

வீணவமாம் வஞ்ச வினைக்குமுத லாகிநின்ற
ஆணவமே என்காணி ஆட்சியதாம் - மாணிறைந்த ...366

நல்லறிவே என்னைநெடு நாட்பகைத்த தன்றிமற்றைப்
புல்லறிவே என்னுட் பொருள்கண்டாய் - சொல்லவொணா ...367

வேடருக்குங் கிட்டாத வெங்குணத்தா லிங்குழலும்

மூடருக்குள் யானே முதல்வன்காண் - வீடடுத்த ...368

மேதையர்கள் வேண்டா விலங்காய்த் திரிகின்ற

பேதையென்ப தென்னுரிமைப் பேர்கண்டாய் - பேதமுற ...369

ஓதுவதென் பற்பலவாய் உற்றதவத் தோர்நீத்த

தீதுகளெல் லாமெனது செல்வங்காண் - ஆதலினால் ...370

பேயினையொத் திவ்வுலகில் பித்தாகி நின்றவிந்த

நாயினைநீ ஆண்டிடுதல் நன்கன்றே - ஆயினுமுன் ...371

மண்ணா ருயிர்களுக்கும் வானவர்க்குந் தானிரங்கி

உண்ணாக் கொடுவிடமும் உண்டனையே - எண்ணாமல் ...372

வேய்த்தவள வெற்பெடுத்த வெய்யஅரக் கன்தனக்கும்

வாய்த்தவர மெல்லாம் வழங்கினையே - சாய்த்தமன ...373

வீம்புடைய வன்முனிவர் வேள்விசெய்து விட்டகொடும்

பாம்பையெல் லாந்தோளிற் பரித்தனையே - நாம்பெரியர் ...374

எஞ்சேமென் றாணவத்தா லேற்ற இருவரையும்

அஞ்சேலென் றாட்கொண் டருளினையே - துஞ்சுபன்றித் ...375

தோயாக் குருளைகளின் துன்பம் பொறாதன்று

தாயாய் முலைப்பாலுந் தந்தனையே - வாயிசைக்குப் ...376

பாண்டியன்முன் சொல்லிவந்த பாணன் பொருட்டடிமை

வேண்டி விறகெடுத்து விற்றனையே - ஆண்டொருநாள் ...377

வாய்முடியாத் துன்புகொண்ட வந்திக்கோ ராளாகித்

தூய்முடிமேல் மண்ணுஞ் சுமந்தனையே - ஆய்துயர ...378

மாவகஞ்சேர் மாணிக்க வாசகருக் காய்க்குதிரைச்

சேவகன்போல் வீதிதனில் சென்றனையே - மாவிசயன் ...379

வில்லடிக்கு நெஞ்சம் விரும்பியதல் லால்எறிந்த

கல்லடிக்கும் உள்ளங் களித்தனையே - மல்லலுறும் ...380

வில்வக் கிளையுதிர்த்த வெய்ய முசுக்கலையைச்

செல்வத் துரைமகனாய்ச் செய்தனையே - சொல்லகலின் ...381

நீளுகின்ற நெய்யருந்த நேரெலியை மூவுலகும்

ஆளுகின்ற மன்னவனாய் ஆக்கினையே - கோளகல ...382

வாய்ச்சங்கு நூலிழைத்த வாய்ச்சிலம்பி தன்னைஉயர்

கோச்செங்கட் சோழனெனக் கூட்டினையே - ஏச்சறுநல் ...383

ஆறடுத்த(83) வாகீசர்க் காம்பசியைக் கண்டுகட்டுச்

சோறெடுத்துப் பின்னே சுமந்தனையே - கூறுகின்ற ...384

தொன்மைபெருஞ் சுந்தரர்க்குத் தோழனென்று பெண்பரவை

நன்மனைக்குத் தூது நடந்தனையே - நன்மைபெற ...385

இற்றென்ற இற்றென்னா எத்தனையோ பேர்கள்செய்த

குற்றங் குணமாகக் கொண்டனையே - பற்றுலகில் ...386

அன்புடைய தாயர்களோ ராயிரம்பே ரானாலும்

அன்புடையாய் நின்னைப்போ லாவாரோ - இன்பமுடன் ...387

ஈண்டவரும் தந்தையர்கள் எண்ணிலரே ஆயினுமென்

ஆண்டவனே நின்னைப்போ லாவாரோ - பூண்டகைகொள் ...388

ஏனுடைய நின்னையன்றி எந்தை பிரானேஉன்

ஆணைஎனக் குற்றதுணை யாருமில்லை - நாணமுளன் ...389

ஆனேன் பிழைக ளனைத்தினையு மையாநீ

தானே பொறுக்கத் தகுங்கண்டாய் - மேல்நோற்ற ...390

மாற்றனுக்கு மெட்டா மலர்க்கழலோய் நீயென்னைக்

கூற்றனுக்குக் காட்டிக் கொடுக்கற்க - பாற்றவள ...391

நந்தக் கடற்புவியில் நானின்னும் வன்பிறவிப்

பந்தக் கடலழுந்தப் பண்ணற்க - முந்தைநெறி ...392

நின்றேயுன் பொற்றாள் நினையாதார் பாழ்மனையில்

சென்றே உடலோம்பச் செய்யற்க - நன்றேநின் ...393

றோங்கு நெறியோர் உளத்தமர்ந்தோய் என்றன்னைத்

தீங்கு நெறியில் செலுத்தற்க - வீங்கடங்கி ...394

வாழி யெனத்தான் வழுத்தினுமென் சொற்கடங்கா

ஏழை மனத்தா லிளைக்கின்றேன் - வாழுமரக் ...395

கோடேறும் பொல்லாக் குரங்கெனவே பொய்யுலகக்

காடேறு நெஞ்சாற் கலங்குகின்றேன் - பாடேறும் ...396

உள்ளறியா மாயையெனு முட்பகையார் காமமெனுங்

கள்ளறியா துண்டு கவல்கின்றேன் - தெள்ளுறுமென் ...397

கண்ணனையாய் நின்தாள் கமலங் களைவழுத்தா

மண்ணனையார் பாற்போய் மயங்குகின்றேன் - திண்ணமிலாக் ...398

காதரவாந் துன்பக் கவலைக் கடல்வீழ்ந்தே

ஆதரவொன் றின்றி அலைகின்றேன் - ஓதுமறை ...399

ஆத்த ரெனுமுன் அடியார் தமைக்கண்டு

நாத்திகஞ்சொல் வார்க்கு நடுங்குகின்றேன் - பாத்துண்டே ...400

உய்வ தறியா உளத்தினே னுய்யும்வகை

செய்வ தறியேன் திகைக்கின்றேன் - சைவநெறி ...401

உண்ணிரம்பு நின்கருணை உண்டோ இலையோஎன்

றெண்ணியெண்ணி உள்ளம் இளைக்கின்றேன் - மண்ணினிடைக் ...402

கொன்செய்கை கொண்டகொடுங் கூற்றன் குறுகிலதற்

கென்செய்வோ மென்றெண்ணி எய்க்கின்றேன் - முன்செய்வினை ...403

ஆமறையா நோயா லகமெலிவுற் றையோநான்

தாமரையி னீர்போல் தயங்குகின்றேன் - தாமமுடி ...404

வள்ளல் அருள்கொடுக்க வந்திலனே இன்னுமென

உள்ளமது நீரா யுருகுகின்றேன் - எள்ளலுறு ...405

மாலைபாய்ந் தின்னுமென்ன வந்திடுமோ என்றுநெஞ்சம்

ஆலைபாய்ந் துள்ளம் அழிகின்றேன் - ஞாலமிசைக் ...406

கோட்பார வாழ்க்கைக் கொடுஞ்சிறையி னின்றென்னை

மீட்பா ரிலாது விழிக்கின்றேன் - மீட்பாகும் ...407

ஆற்றி லொருகாலும் அடங்காச் சமுசாரச்

சேற்றிலொரு காலும்வைத்துத் தேய்கின்றேன் - தோற்றுமயற் ...408

பாகமுறு வாழ்க்கையெனும் பாலைவனத் துன்னருள்நீர்த்

தாகமது கொண்டே தவிக்கின்றேன் - மோகமதில் ...409

போய்ப்படுமோர் பஞ்சப் பொறிகளால் வெம்பாம்பின்

வாய்ப்படுமோர் தேரையைப்போல் வாடுகின்றேன் - மாய்ப்பவரு ...410

மீன்போலு மாதர் விழியால் வலைப்பட்ட

மான்போலுஞ் சோர்ந்து மடங்குகின்றேன் - கான்போல ...411

வீற்று முலக விகாரப் பிரளயத்தில்

தோற்றுஞ் சுழியுட் சுழல்கின்றேன் - ஆற்றவுநான் ...412

இப்பாரில் உன்மேலன் பில்லெனினும் அன்பனென

ஒப்பாரி யேனும் உடையேன்காண் - தப்பாய்ந்த ...413

மட்டுவிடேன் உன்தாள் மறக்கினும்வெண் ணீற்றுநெறி

விட்டுவிடேன் என்றனைக்கை விட்டுவிடேல் - துட்டனென ...414

மாலுந் திசைமுகனும் வானவரும் வந்துதடுத்

தாலுஞ் சிறியேனைத் தள்ளிவிடேல் - சாலுலக ...415

வாதனைகொண் டோ னென்று மற்றெவரா னாலும்வந்து

போதனைசெய் தாலுமெனைப் போக்கிவிடேல் - நீதயவு ...416

சூழ்ந்திடுக என்னையுநின் தொண்டருடன் சேர்த்தருள்க

வாழ்ந்திடுக நின்தாள் மலர். ...417

திருச்சிற்றம்பலம்

-----

47. இது முதல் 64 கண்ணிகள் சோழ நாட்டில் காவிரி வடகரைத்தலங்கள்.

48. காலில்பாய் - சேஷசயநம். தொ. வே.

49. காழ் - இல் - நெஞ்சம் என்று பிரித்துப் பொருள்கொள்க. தொ.வே.

50. வானொளிப் புற்றூர், வாழ்கொளி புத்தூரென மருவியது தொ.வே.2.

51. ஹம்சன், அஞ்சன் எனத் திரிந்தது. அன்னத்தை வாகனமாக உடைய பிரமன் எனப் பொருள்.

தொ.வே.

52. குரங்காடு - வடகுரங்காடுதுறை. குரங்காட்டின் என நின்றது. வேற்றுமைச் சந்தியாகலான்.

தொ.வே.

53. பொன் - இலக்குமி. தொ.வே.

54. தே என்பது ஈண்டு விகுதி குன்றிய முதனிலைத் தொழிற்பெயர். தொ.வே.

55. கோலத்துறை என்பது கோலந்துறை என விகாரமாயிற்று. தொ.வே.

56. அன்பிலாந்துறை யென்னுமோர் திருப்பதி. தொ.வே.

57. 65 முதல் 191 வரை 127 கண்ணிகள் சோழநாட்டில் காவிரி தென்கரைத் தலங்கள்.

58. வேதிகுடி என்பது வேதிக்குடியென விரித்தல் விகாரமாயிற்று. தொ.வே.

59. தேமாமலர் - சிறந்த கற்பகமலர். தொ.வே.

60. கடவூர் - கடையூரென மரீஇயது. தொ.வே.

61. அரிசொன்னதிக்கரை, அரிசிற்கரை யென மரீஇயது. தொ.வே.

62. சீயத்தை என்பது செய்யுள் விகாரத்தாற் குறுக்கும் வழி குறுக்கப்பட்டு சியத்தையென நின்றது. தொ.வே.

63. மண்டளி என்பது மண்டலி என ளகர லகர ஒற்றுமைத் திரிபு. தொ.வே.

64. மடவாட் கோர் கூற்றை யெனற்பாலது கூறையென இரண்டாவதன் முடிபேற்று நின்றது.

தொ.வே.

65. 192, 193-ஆம் கண்ணிகள் ஈழநாட்டுத் தலங்கள்இ

66. 194 முதல் 206 வரை 13 கண்ணிகள் பாண்டி நாட்டுத் தலங்கள்.

67. தொழும் ராமீசம் என்பது வடநூன் முடிபு. தொ.வே. 1. வடசொன் முடிபில் வந்தது கூ 2.

68. இஃது மலைநாட்டுத் தலம்.

69. 208 முதல் 214 வரை 7 கண்ணிகள் கொங்கு நாட்டுத் தலங்கள்.

70. தீக்குழி என்பது தீங்குழி யென்றாயது. தொ.வே.

71. 215 முதல் 236 வரை 22 கண்ணிகள் நடு நாட்டுத்தலங்கள்

72. ஆசிடை யெதுகை. தொ.வே.

73. செந்தொடை. தொ.வே.

74. ஓங்கி - பரவெனும் வேறு சினை வினைக் குறைகள் மன்னென்னு முதல் வினையோடு முடிந்தன. தொ.வே.

75. ஆசிடை யெதுகை. தொ.வே.

76. 237 முதல் 271 வரை 35 கண்ணிகள் தொண்டநாட்டுத்தலங்கள்.

77. யோகம் என்பது யோகென விகாரமாயிற்று. தொ.வே.

78. வீ - மரணம். தொ.வே.

79. இது துளுநாட்டுத்தலம்.

80. 273 முதல் 279 வரை 7 கண்ணிகள் வடநாட்டுத்தலங்கள்.

81. சிங்குதல் - குறைதல். தொ.வே.

82. உதி - ஒதியென மரீஇயது. தொ.வே.

83. ஆறு - வழி. தொ.வே.

-----------------------

3. நெஞ்சறிவுறுத்தல் ( 1964 - 1965 )

காப்பு

.

குறள்வெண்பா

1963

சீர்சான்ற முக்கட் சிவகளிற்றைச் சேர்ந்திடிலாம்

பேர்சான்ற இன்பம் பெரிது. ...1

1964

ஆறு முகத்தான் அருளடையின் ஆம்எல்லாப்

பேறு மிகத்தான் பெரிது. ... 2

கலிவெண்பா

1965

பொன்னார் மலைபோல் பொலிவுற் றசையாமல்

எந்நாளும் வாழியநீ என்னெஞ்சே - பின்னான ...1

இப்பிறப்பி னோடிங் கெழுபிறப்பும் அன்றியெனை

எப்பிறப்பும் விட்டகலா என்னெஞ்சே - செப்பமுடன் ...2

செவ்வொருசார் நின்று சிறியேன் கிளக்கின்ற

இவ்வொருசொல் கேட்டிடுக என்னெஞ்சே - எவ்வெவ் ... 3

உலகும் பரவும் ஒருமுதலாய் எங்கும்

இலகும் சிவமாய் இறையாய் - விலகும் ... 4

உருவாய் உருவில் உருவாய் உருவுள்

அருவாய் அருவில் அருவாய் - உருஅருவாய் ...5

நித்தியமாய் நிர்க்குணமாய் நிற்சலமாய் நின்மலமாய்ச்

சத்தியமாய்ச் சத்துவமாய்த் தத்துவமாய் - முத்தியருள் ... 6

ஒன்றாய்ப் பலவாய் உயிராய் உயிர்க்குயிராய்

நன்றாய் நவமாய் நடுநிலையாய் - நின்றோங்கும் ...7

வேதமாய் வேதாந்த வித்தாய் விளங்குபர

நாதமாய் நாதாந்த நாயகமாய் - ஓதும் ...8

செறிவாய்த் திரமாய்ச் சிதாகாச மாய்ச்சொல்

அறிவாய் அறிவுள் அறிவாய் - நெறிமேவு ...9

காலமாய்க் காலம் கடந்த கருத்தாய்நற்

சீலமாய்ச் சிற்பரமாய்ச் சின்மயமாய் - ஞாலம் ...10

பொருந்தாப் பொருளாய்ப் பொருந்தும் பொருளாய்ப்

பெருந்தா ரகம்சூழ்ந்த பேறாய்த் - திருந்தாத ...11

போக்கும் வரத்துமிலாப் பூரணமாய்ப் புண்ணியர்கள்

நோக்கும் திறத்தெழுந்த நுண்ணுணர்வாய் - நீக்கமிலா ...12

ஆதியாய் ஆதிநடு அந்தமாய் ஆங்ககன்ற

சோதியாய்ச் சோதியாச் சொற்பயனாய் - நீதியாய் ...13

ஆங்கார நீக்கும் அகார உகாரமதாய்

ஓங்கார மாய்அவற்றின் உட்பொருளாய்ப் - பாங்கான ...14

சித்தமாய்ச் சித்தாந்த தேசாய்த் திகம்பரமாய்ச்

சத்தமாய்ச் சுத்த சதாநிலையாய் - வித்தமாய் ...15

அண்டமாய் அண்டத் தணுவாய் அருளகண்டா

கண்டமாய் ஆனந்தா காரமதாய் - அண்டத்தின் ...16

அப்பாலாய் இப்பாலாய் அண்மையாய்ச் சேய்மையதாய்

எப்பாலாய் எப்பாலும் இல்லதுமாய்ச் - செப்பாலும் ...17

நெஞ்சாலும் காய நிலையாலும் அந்நிலைக்குள்

அஞ்சாலுங் காண்டற் கரும்பதமாய் - எஞ்சாப் ...18

பரமாய்ப் பகாப்பொருளாய்ப் பாலாய்ச் சுவையின்

தரமாய்ப் பரப்பிரமம் தானாய்வெரமாய ...19

ஒன்பான் வடிவாய் ஒளியெண் குணக்கடலாய்

அன்பாய் அகநிலையாய் அற்புதமாய் - இன்பாய் ...20

அகமாய்ப் புறமாய் அகம்புறமாய் நீங்கும்

சகமாய்ச் சகமாயை தானாய் - சகமாயை ...21

இல்லாதாய் என்றும் இருப்பதாய் யாதொன்றும்

கொல்லாதார்க் கின்பம் கொடுப்பதாய் - எல்லார்க்கும் ...22

நண்ணுவதாய் நண்ணாதாய் நல்வினையாய் அல்வினையாய்

எண்ணுவதாய் எண்ணின் இயலாதாய் - எண்ணுகின்ற ...23

வானாய் நிலனாய் வளியாய் அனலாய்நீர்

தானாய் வழிபடுநான் தான்தானாய் - வானாதி ...24

ஒன்றிடத்தும் ஒன்றாதாய் ஒன்றுவதாய் ஆனந்தம்

மன்றிடத்தில் என்றும் வதிவதாய் - ஒன்றியதோர் ...25

ஐந்நிறமாய் அந்நிறத்தின் ஆமொளியாய் அவ்வொளிக்குள்

எந்நிறமும் வேண்டா இயனிறமாய் - முந்நிறத்தில் ...26

பூப்பதுவாய்க் காப்பதுவாய்ப் போக்குவதாய்த் தேக்குவதாய்

நீப்பதுவாய்த் தன்னுள் நிறுத்துவதாய்ப் - பூப்பதின்றி ...27

வாளா திருப்பதுவாய் வாதனா தீதமாய்

நீளாது நீண்ட நிலையினதாய் - மீளாப் ...28

பெரிதாய்ச் சிறிதாய்ப் பெரிதும் சிறிதும்

அரிதாய் அரிதில் அரிதாய்த் - துரிய ...29

வெளியாய்ப் பரவெளியாய் மேவுபர விந்தின்

ஒளியாய்ச் சிவானந்த ஊற்றாய்த் - தெளியாதி ...30

கற்பகமாய்க் காணுஞ்சங் கற்ப விகற்பமாய்

நிற்பதா கார நிருவிகற்பாய்ப் - பொற்புடைய ...31

முச்சுடராய் முச்சுடர்க்கும் முன்னொளியாய்ப் பின்னொளியாய்

எச்சுடரும் போதா இயற்சுடராய் - அச்சில் ...32

நிறைவாய்க் குறைவாய் நிறைகுறை வில்லாதாய்

மறைவாய் வெளியாய் மனுவாய் - மறையாத ...33

சச்சிதா னந்தமதாய்த் தன்னிகரொன் றில்லாதாய்

விச்சையால் எல்லாம் விரிப்பதுவாய் - மெச்சுகின்ற ...34

யோகமாய் யோகியர் யோகத் தெழுந்தசிவ

போகமாய்ப் போகியாய்ப் போகமருள் - ஏகமாய்க் ...35

கேவலமாய்ச் சுத்த சகலமாய்க் கீழ்ச்சகல

கேவலங்கள் சற்றும் கிடையாதாய் - மாவலத்தில் ...36

காட்சியாய்க் காண்பானாய்க் காணப் படுபொருளாய்ச்

சூட்சியாய்ச் சூட்சியால் தோய்வரிதாய் - மாட்சிபெறச் ...37

செய்பவனாய்ச் செய்தொழிலாய்ச் செய்பொருளாய்ச் செய்தொழிலால்

உய்பவனாய் உய்விக்கும் உத்தமனாய் - மொய்கொள் ...38

அதுவாய் அவளாய் அவனாய் அவையும்

கதுவாது நின்ற கணிப்பாய்க் - கதுவாமல் ...39

ஐயம் திரிபோ டறியாமை விட்டகற்றிப்

பொய்யென்ப தொன்றும் பொருந்தாராய்ச் - செய்யென்ற ...40

ஓர்வினையில் இன்பமுமற் றோர்வினையில் துன்பமுமாம்

சார்வினைவிட் டோ ங்கும் தகையினராய்ப் - பார்வினையில் ...41

ஓர்பால் வெறுப்புமற்றை ஓர்பால் விருப்புமுறும்

சார்பால் மயங்காத் தகையினராய்ச் - சார்பாய ...42

ஓரிடத்தில் தண்மையுமற் றோரிடத்தில் வெஞ்சினமும்

பாரிடத்தில் கொள்ளாப் பரிசினராய் - நீரிடத்தில் ...43

தண்மைநிக ராதென்றும் சாந்தம் பழுத்துயர்ந்த

ஒண்மையுடன் ஒன்றை உணர்ந்தவராய் - வெண்மையிலா ...44

ஒன்றும் அறிவின் உதயாதி ஈறளவும்

என்றும் இரண்டென்ப தில்லவராய் - மன்றவொளிர் ...45

அம்மூன்றி னுள்ளே அடுக்கிவரும் ஒன்றகன்ற

மும்மூன்றின் மூன்றும் முனிந்தவராய்த் - தம்மூன்றி ...46

வீடாது நின்றும் விரிந்தும் விகற்பநடை

நாடாது நான்கும் நசித்தவராய் - ஊடாக ...47

எஞ்சாமல் அஞ்சின் இடமாய் நடமாடும்

அஞ்சாதி அஞ்சும் அறுத்தவராய் - எஞ்சாமல் ...48

ஈண்டாண் டருளும் இறையோர் தமையாறில்

ஆண்டாண்டு கண்டா றகன்றவராய் - ஈண்டாது ...49

வாழியுற்ற வானோரும் வந்து தமக்கிரண்டோ

டேழியற்ற ஏழும் இகந்தவராய் - ஊழியற்றக் ...50

கட்டிநின்றுட் சோதியொன்று காணத் தொடங்குகின்றோர்

எட்டுகின்ற எட்டின்மேல் எய்தினராய்க் கட்டுகின்ற ...51

தேன்தோய் கருணைச் சிவங்கலந்து தேக்குகின்ற

சான்றோர்தம் உள்ளம் தணவாதாய் - மான்றமலத்(84) ...52

தாக்கொழிந்து தத்துவத்தின் சார்பாம் - தனுவொழிந்து

வாக்கொழிந்து மாணா மனமொழிந்து - ஏக்கமுற ...53

வாய்க்கும் சுகமொழிந்து மண்ணொழிந்து விண்ணொழிந்து

சாய்க்கும் இராப்பகலும் தானொழிந்து - நீக்கொழிந்து ...54

நானுமொழி யாதொழிந்து ஞானமொழி யாதொழிந்து

தானும் ஒழியாமற் றானொழிந்து - மோனநிலை ...55

நிற்கும் பிரம நிரதிசயா னந்தமதாய்

நிற்கும் பரம நிருத்தனெவன் - தற்பரமாய் ...56

நின்றான் எவனன்பர் நேயமனத் தேவிரைந்து

சென்றான் எவன்சர்வ தீர்த்தனெவன் - வன்தீமை ...57

இல்லான் எவன்யார்க்கும் ஈசன் எவன்யாவும்

வல்லான் எவனந்தி வண்ணனெவன் - கல்லாலில் ...58

சுட்டகன்ற ஞான சுகாதீதம் காட்டிமுற்றும்

விட்டகன்ற யோக விநோதனெவன் - மட்டகன்ற ...59

அண்டங்கள் எல்லாம் அணுவில் அடைத்தருளித்

திண்டங்கு மாறிருத்தும் சித்தனெவன் - பண்டங்கு ...60

வீயாச் சிறுபெண் விளையாட்டுள் அண்டமெலாம்

தேயாது கூட்டுவிக்கும் சித்தனெவன் - யாயாதும் ...61

வேண்டாமை வேண்டுவது மேவாத சித்தர்தமைத்

தீண்டாது தீண்டுகின்ற சித்தனெவன் - ஈண்டோது ...62

பற்றுருவாய்ப் பற்றாப் பரவணுவின் உள்விளங்கும்

சிற்றுருவாய் உள்ளொளிக்கும் சித்தனெவன் - மற்றுருவின் ...63

வையாது வைத்துலகை மாவிந் திரசாலம்

செய்யாது செய்விக்கும் சித்தனெவன் - நையாமல் ...64

அப்பிடைவைப் பாமுலகில் ஆருயிரை மாயையெனும்

செப்பிடைவைத் தாட்டுகின்ற சித்தனெவன் - ஒப்புறவே ...65

நில்லாத காற்றை நிலையாக் கடத்தடைத்துச்

செல்லாது வைக்கின்ற சித்தனெவன் - பொல்லாத ...66

வெம்பாம்பை மேலணிந்தோர் வெம்புற்றின் உள்ளிருந்தே

செம்பாம்பை ஆட்டுகின்ற சித்தனெவன் - தம்பாங்கர் ...67

ஒண்கயிற்றான் ஒன்றின்றி உண்ணின் றுயிர்களையூழ்த்

திண்கயிற்றான் ஆட்டுகின்ற சித்தனெவன் - வண்கையுடைத் ...68

தானசைந்தால் மற்றைச் சகமசையும் என்றுமறை

தேனசையச் சொல்லுகின்ற சித்தனெவன் - ஊனமின்றிப் ...69

பேர்த்துயிர்க ளெல்லாம்ஓர் பெண்பிள்ளை யின்வசமாய்ச்

சேர்த்து வருவிக்கும் சித்தனெவன் - போர்த்துமிக ...70

அல்விரவுங் காலை அகிலமெலாம் தன்பதத்தோர்

சில்விரலில் சேர்க்கின்ற சித்தனெவன் - பல்வகையாய்க் ...71

கைகலந்த வண்மைக் கருப்பா சயப்பையுள்

செய்கருவுக் கூட்டுவிக்கும் சித்தனெவன் - உய்கருவை ...72

மெய்வைத்த வேர்வையினும் வீழ்நிலத்தும் அண்டத்தும்
செய்வித்தங் கூட்டுவிக்கும் சித்தனெவன் - உய்விக்கும் ...73

வித்தொன்றும் இன்றி விளைவித் தருளளிக்கும்
சித்தென்றும் வல்லவொரு சித்தனெவன் - சத்துடனே ...74

உற்பத்தி யாயுலகில் ஒன்பதுவாய்ப் பாவைகள்செய்
சிற்பத் தொழில்வல்ல சித்தனெவன் - பற்பலவாம் ...75

காரா ழிகளைக் கரையின்றி எல்லையிலாச்
சேரூழி நிற்கவைத்த சித்தனெவன் - பேராத ...76

நீர்மேல் நெருப்பை நிலையுறவைத் தெவ்வுலகும்
சீர்மே வுறச்செய்யும் சித்தனெவன் - பாராதி ...77

ஐந்திலைந்து நான்கொருமூன் றாமிரண்டொன் றாய்முறையே
சிந்தையுற நின்றருளும் சித்தனெவன் - பந்தமுற ...78

ஆண்பெண்ணாய்ப் பெண்ணாணாய் அண்மை தனைவானின்
சேண்பண்ண வல்லவொரு சித்தனெவன் - மாண்பண்ணாப் ...79

பேடாணாய்ப் பெண்ணாயப் பெண்ணாண் பெரும்பேடாய்ச்
சேடாகச் செய்யவல்ல சித்தனெவன் - சேடாய ...80

வெண்மை கிழமாய் விருத்தமந்த வெண்மையதாய்த்
திண்மை பெறச்செய்யும் சித்தனெவன் - ஒண்மையிலா ...81

ஓட்டினைச்செம் பொன்னா யுயர்செம்பொன் ஓடாகச்
சேட்டையறச் செய்கின்ற சித்தனெவன் - காட்டிலுறு ...82

காஞ்சிரத்தைக் கற்பகமாய்க் கற்பகத்தைக் காஞ்சிரமாய்த்

தேஞ்சிவணச் செய்கின்ற சித்தனெவன் - வாஞ்சையுற ...83

நாரணன்சேய் நான்முகனாய் நான்முகன்சேய் நாரணனாய்ச்

சீரணவச் செய்யவல்ல சித்தனெவன் - பேரணவக் ...84

கொம்மை பெறுங்கோடா கோடியண்டம் எல்லாமோர்

செம்மயிர்க்கால் உட்புகுத்தும் சித்தனெவன் - செம்மையிலா ...85

வெம்புலியை வெண்பால் விளைபசுவாய் அப்பசுவைச்

செம்புலியாச் செய்யவல்ல சித்தனெவன் - அம்புலியை ...86

அங்கதிரொண் செங்கதிராய் அம்புலியாய்ப் பம்புகின்ற

செங்கதிரைச் செய்யவல்ல சித்தனெவன் - துங்கமுறா ...87

ஓரணுவோர் மாமலையாய் ஓர்மா மலையதுவோர்

சீரணுவாய்ச் செய்யவல்ல சித்தனெவன் - வீரமுடன் ...88

முன்னகையா நின்றதொரு முப்புரத்தை அன்றொருகால்

சின்னகையால் தீமடுத்த சித்தனெவன் - முன்னயன்மால் ...89

மற்றிருந்த வானவரும் வாய்ந்தசைக்கா வண்ணமொரு

சிற்றுரும்பை(85) நாட்டிநின்ற சித்தனெவன் - மற்றவர்போல்
...90

அல்லா அயனும் அரியும் உருத்திரனும்

செல்லா நெறிநின்ற சித்தனெவன் - ஒல்லாத ...91

கல்லிற் சுவையாய்க் கனியிற் சுவையிலதாய்ச்

செல்லப் பணிக்கவல்ல சித்தனெவன் - அல்லலறப் ...92

பார்க்கின்ற யாவர்கட்கும் பாவனா தீதனெனச்

சீர்க்கின்ற மெய்ஞ்ஞானச் சித்தனெவன் - மார்க்கங்கள் ...93

ஒன்றென்ற மேலவரை ஒன்றென் றுரைத்தவர்பால்

சென்றொன்றி நிற்கின்ற சித்தனெவன் - அன்றொருநாள் ...94

கல்லானை தின்னக் கரும்பளித்துப் பாண்டியன்வீண்

செல்லா தளித்தமகா சித்தனெவன் - சொல்லாத ...95

ஒன்றே இரண்டேமேல் ஒன்றிரண்டே என்பவற்றுள்

சென்றே நடுநின்ற சித்தனெவன் - சென்றேறும் ...96

அத்திரத்தை மென்மலராய் அம்மலரை அத்திரமாய்ச்

சித்திரத்தைப் பேசுவிக்கும் சித்தனெவன் - எத்தலத்தும் ...97

சங்கமதே(86) தாபரமாய்த் தாபரமே சங்கமதாய்ச்

செங்கையிடா தாற்றவல்ல சித்தனெவன் - தங்குகின்ற ...98

சத்தெல்லாம் ஆகிச் சயம்புவாய் ஆனந்தச்

சித்தெல்லாம் வல்லசிவ சித்தனெவன் - தத்தெல்லாம் ...99

நீட்டாது நெஞ்சம் நிலைத்தவர்க்கும் தன்னுண்மை

காட்டாது காட்டிநிற்கும் கள்வனெவன் - பாட்டோடு ...100

வண்டாலுங் கொன்றை மலரோய் எனமறைகள்

கண்டாலும் காணாத கள்வனெவன் - தொண்டாக ...101

அள்ளம் செறியார்க்கே அன்றி அறிவார்க்குக்

கள்ளம் செறியாத கள்வனெவன் - எள்ளலறக் ...102

கொண்டவெலாந் தன்பால் கொடுக்குமவர் தம்மிடத்தில்

கண்டவெலாம் கொள்ளைகொளுங் கள்வனெவன் - கொண்டுளத்தில் ...103

தன்னையொளிக் கின்றோர்கள் தம்முளொளித் துள்ளவெலாம்

கன்னமிடக் கைவந்த கள்வனெவன் - மண்ணுலகைச் ...104

சற்பனைசெய் கின்றதிரோ தானமெனும் சத்தியினால்

கற்பனைசெய் தேமயக்கும் கள்வனெவன் - முற்படுமித் ...105

தொண்டுலகில் உள்ளஉயிர் தோறுமொளித் தாற்றலெலாம்

கண்டுலவு கின்றதொரு கள்வனெவன் - விண்டகலா ...106

மண்மயக்கும் பொன்மயக்கும் மாதர் மயக்குமெனும்

கண்மயக்கம் காட்டிநிற்கும் கள்வனெவன் - உண்மயக்கு ...107

மாசு பறிக்கும் மதியுடையோர் தம்முடைய

காசு பறிக்கின்ற கள்வனெவன் - ஆசகன்ற ...108

பெண்ணால் எவையும் பிறப்பித்து மற்றைநுதற்

கண்ணால் அழிக்கின்ற கள்வனெவன் - எண்ணாது ...109

நானென்று நிற்கின் நடுவேயந் நானாணத்

தானென்று நிற்கும் சதுரனெவன் - மானென்ற ...110

மாயைதனைக் காட்டி மறைப்பித்தம் மாயையிற்றன்

சாயைதனைக் காட்டும் சதுரனெவன் - நேயமுடன் ...111

நான்மறையும் நான்முகனும் நாரணனும் நாடுதொறும்

தான்மறையும் மேன்மைச் சதுரனெவன் - வான்மறையாம் ...112

முன்னை மறைக்கும் முடிப்பொருளென் றாய்பவர்க்கும்

தன்னை மறைக்கும் சதுரனெவன் - உன்னுகின்றோர் ...113

சித்தத்திற் சுத்த சிதாகாசம் என்றொருசிற்

சத்தத்திற் காட்டும் சதுரனெவன் - முத்தரென ...114

யாவர் இருந்தார் அவர்காண வீற்றிருக்கும்

தேவர் புகழ்தலைமைத் தேவனெவன் - யாவர்களும் ...115

இவ்வணத்தன் இவ்விடத்தன் இவ்வியலன் என்றறியாச்

செவ்வணத்தன் ஆம்தலைமைத் தேவனெவன் - மெய்வணத்தோர் ...116

தாம்வாழ அண்ட சராசரங்கள் தாம்வாழ

நாம்வாழத் தன்னுரையாம் நான்மறைகள் - தாம்வாழச் ...117

சாருருவின் நல்லருளே சத்தியாய் மெய்யறிவின்

சீருருவே ஓருருவாம் தேவனெவன் - ஈருருவும் ...118

ஒன்றென் றுணர உணர்த்தி அடியருளம்

சென்றங் கமர்ந்தருளும் தேவனெவன் - என்றென்றும் ...119

தற்சகசம் என்றே சமயம் சமரசமாம்

சிற்சபையில் வாழ்கின்ற தேவனெவன் - பிற்படுமோர் ...120

பொய்விட்டு மெய்ந்நெறியைப் போற்றித்தற் போதத்தைக்

கைவிட் டுணர்வே கடைப்பிடித்து - நெய்விட்ட ...121

தீப்போற் கனலும் செருக்கறவே செங்கமலப்

பூப்போலும் தன்தாள் புணைபற்றிக் - காப்பாய ...122

வெண்ணீ றணிந்து விதிர்விதிர்த்து மெய்பொடிப்பக்

கண்ணீர் அருவி கலந்தாடி - உண்ணீர்மை ...123

என்புருகி உள்ளுருகி இன்பார் உயிருருகி

அன்புருகி அன்புருவம் ஆகிப்பின் - வன்பகன்று ...124

புண்ணியா திங்கட் புரிசடையாய் பொன்னிதழிக்

கண்ணியா எங்கள் களைகண்ணே - எண்ணியாங் ...125

கன்பர்க் கருளும் அரசே அமுதேபே

ரின்பக் கடலே எமதுறவே - மன்பெற்று ...126

மாற்றுரையாப் பொன்னே மணியேஎம் கண்மணியே

ஏற்றுவந்த மெய்ப்பொருளே என்றுநிதம் - போற்றிநின்றால் ...127

உள்ளூறி உள்ளத் துணர்வூறி அவ்வுணர்வின்

அள்ளூறி அண்ணித் தமுதூறித் - தெள்ளூறும் ...128

வான்போல் பரவி மதிபோல் குளிர்ந்துயர்கோல்

தேன்போல் மதுரிக்கும் தேவனெவன் - வான்போனார் ...129

மாண்கொடுக்கும் தெய்வ மடந்தையர்க்கு மங்கலப்பொன்

நாண்கொடுக்க நஞ்சுவந்த நாதனெவன் - நாண்மலர்பெய் ...130

தார்த்தியாய்த் தேவர் அரகரவென் றேத்தஅட்ட

மூர்த்தியாய் நின்ற முதல்வனெவன் - சீர்த்திபெற ...131

ஈண்டற் புதவடிவாய் எத்தேவ ரேனுநின்று

காண்டற் கரிதாம் கணேசனெவன் - வேண்டுற்றுப் ...132

பூமியெங்கும் வாழ்த்திப் புகழ்வார் விரும்புமிட்ட

காமியங்கள் ஈயும் கணேசனெவன் - நாமியங்க ...133

ஏண வருமிடையூ றெல்லாம் அகற்றியருள்

காண எமக்கீயும் கணேசனெவன் - மாணவரு ...134

முந்த மறையின் முழுப்பொருளை நான்முகற்குத்

தந்த அருட்கடலாம் சாமியெவன் - தந்தமக்காம் ...135

வாதகற்றி உண்மை மரபளித்து வஞ்சமலக்

கோதகற்றும் நெஞ்சக் குகேசனெவன் - தீதகற்றித் ...136

தங்கும் உலகங்கள் சாயாமற் செஞ்சடைமேல்

கங்கைதனைச் சேர்த்த கடவுளெவன் - எங்குறினும் ...137

கூம்பா நிலைமைக் குணத்தோர் தொழுகின்ற

பாம்பா பரணப் பரமனெவன் - கூம்பாது ...138

போற்றுரைத்து நிற்கும் புனிதன்மேல் வந்தகொடுங்

கூற்றுதைத்த செந்தாள் குழகனெவன் - ஆற்றலுறு ...139

வையம் துதிக்கும் மகாலிங்க மூர்த்திமுதல்

ஐயைந்து மூர்த்தியெனும் ஐயனெவன் - ஐயந்தீர் ...140

வல்லார்சொல் வண்ணமெந்த வண்ணமந்த வண்ணங்கள்

எல்லாம் உடைய விதத்தனெவன் - எல்லார்க்கும் ...141

தாம்தலைவ ராகத்தம் தாள்தொழுமெத் தேவர்க்கும்

ஆந்தலைமை ஈந்தபர மார்த்தனெவன் - போந்துயிர்கள் ...142

எங்கெங் கிருந்துமனத் தியாது விழைந்தாலும்

அங்கங் கிருந்தளிக்கும் அண்ணலெவன் - புங்கமிகும் ...143

அண்ணல் திருமலர்க்கை ஆழிபெறக் கண்ணிடந்த

கண்ணற் கருளியமுக் கண்ணனெவன் - மண்ணிடத்தில் ...144

ஓயாது சூல்முதிர்ந்த ஓர்பெண் தனக்காகத்

தாயாகி வந்த தயாளனெவன் - சேயாக ...145

வேல்பிடித்த கண்ணப்பன் மேவுமெச்சில் வேண்டுமிதத்

தாற்பொசித்து நேர்ந்த தயாளனெவன் - பாற்குடத்தைத் ...146

தான்தந்தை என்றெறிந்தோன் தாளெறிந்த தண்டிக்குத்

தான்தந்தை ஆன தயாளனெவன் - தான்கொண்டு ...147

சம்பு நறுங்கனியின் தன்விதையைத் தாள்பணிந்த

சம்பு முனிக்கீயும் தயாளனெவன் - அம்புவியில் ...148

ஆண்டவனென் றேத்தப்பொன் னம்பலத்தில் ஆனந்தத்

தாண்டவம்செய் கின்ற தயாளனெவன் - காண்தகைய ...149

முத்துச் சிவிகையின்மேல் முன்காழி ஓங்குமுழு

முத்தைத் தனிவைத்த முத்தனெவன் - பத்திபெறு ...150

நாவொன் றரசர்க்கு நாம்தருவேம் நல்லூரில்

வாஎன்று வாய்மலர்ந்த வள்ளலெவன் - பூவொன்று ...151

நன்றொண்டர் சுந்தரரை நாம்தடுக்க வந்தமையால்

வன்றொண்டன் நீஎன்ற வள்ளலெவன் - நன்றொண்டின் ...152

காணிக்கை யாகக் கருத்தளித்தார் தம்மொழியை

மாணிக்கம் என்றுரைத்த வள்ளலெவன் - தாணிற்கும் ...153

தன்னன்பர் தாம்வருந்தில் சற்றுந் தரியாது

மன்னன் பருளளிக்கும் வள்ளலெவன் - முன்னன்பில் ...154

சால்புடைய நல்லோர்க்குத் தண்ணருள்தந் தாட்கொளவோர்
மால்விடைமேல் வந்தருளும் வள்ளலெவன் - மான்முதலோர் ...155

தாமலையா வண்ணம் தகையருளி ஓங்குவெள்ளி
மாமலைவாழ் கின்றஅருள் வள்ளலெவன் - ஆமவனே ...156

நம்மைப் பணிகொண்டு நாரணனும் நாடரிதாம்
செம்மைக் கதியருள்நம் தெய்வங்காண் - எம்மையினும் ...157

நாடக் கிடைத்தல் நமக்கன்றி நான்முகற்கும்
தேடக் கிடையாநம் தெய்வங்காண் - நீடச்சீர் ...158

நல்வந் தனைசெய்யும் நம்போல்வார்க் கோர்ஞானச்
செல்வந் தருநமது தெய்வம்காண் - சொல்வந்த ...159

எண்மைபெறும் நாமுலகில் என்றும் பிறந்திறவாத்
திண்மை அளித்தருள்நம் தெய்வம்காண் - வண்மையுற ...160

முப்பாழ் கடந்த முழுப்பாழுக் கப்பாலைச்
செப்பாது செப்புநம் தேசிகன்காண் - தப்பாது ...161

தீரா இடும்பைத் திரிபென்பதி யாதொன்றும்
சேரா நெறியருள்நம் தேசிகன்காண் - ஆராது ...162

நித்தம் தெரியா நிலைமே வியநமது
சித்தம் தெளிவிக்கும் தேசிகன்காண் - வித்தரென ...163

யாதொன்றும் தேரா திருந்தநமக் கிவ்வுலகம்
தீதென் றறிவித்த தேசிகன்காண் - கோதின்றி ...164

ஓசை பெறுகடல்சூ ழுற்ற வுலகினம்மை

ஆசை யுடனீன்ற அப்பன்காண் - மாசுறவே ...165

வன்பாய் வளர்க்கின்ற மற்றையர்போ லல்லாமல்

அன்பாய் நமைவளர்க்கும் அப்பன்காண் - இன்பாக ...166

இப்பாரில் சேயார் இதயம் மலர்ந்தம்மை

அப்பா எனும்நங்கள் அப்பன்காண் - செப்பாமல் ...167

எள்ளித் திரிந்தாலும் இந்தா(87)என் றின்னமுதம்

அள்ளிக் கொடுக்குநம தப்பன்காண் - உள்ளிக்கொண் ...168

டின்றே அருள்வாய் எனத்துதிக்கில் ஆங்குநமக்

கன்றே அருளுநம தப்பன்காண் - நன்றேமுன் ...169

காதரவு செய்து(88) நலம் கற்பித்துப் பின்பெரிய

ஆதரவு செய்யுநங்கள் அப்பன்காண் - கோதுறுமா ...170

வஞ்சமலத் தால்வருந்தி வாடுகின்ற நந்தமையே

அஞ்சலஞ்ச லென்றருளும் அப்பன்காண் - துஞ்சலெனும் ...171

நச்சென்ற வாதனையை நாளுமெண்ணி நாமஞ்சும்

அச்சம் கெடுத்தாண்ட அப்பன்காண் - நிச்சலுமிங்(89) ...172

கேயிரவும் எல்லும் எளியேம் பிழைத்தபிழை

ஆயிரமும் தான்பொறுக்கும் அப்பன்காண் - சேயிரங்கா ...173

முன்னம் எடுத்தணைத்து முத்தமிட்டுப் பாலருத்தும்

அன்னையினும் அன்புடைய அப்பன்காண் - மன்னுலகில் ...174

வன்மை யறப்பத்து மாதம் சுமந்துநமை

நன்மை தரப்பெற்ற நற்றாய்காண் - இம்மைதனில் ...175

அன்றொருநாள் நம்பசிகண் டந்தோ தரியாது

நன்றிரவில் சோறளித்த நற்றாய்காண் - என்றுமருட் ...176

செம்மை இலாச்சிறிய தேவர்கள்பால் சேர்க்காது

நம்மை வளர்க்கின்ற நற்றாய்காண் - சும்மையென ...177

மூளும் பெருங்குற்றம் முன்னிமேல் மேற்செயினும்

நாளும் பொறுத்தருளும் நற்றாய்காண் - மூளுகின்ற ...178

வன்னெறியிற் சென்றாலும் வாவென் றழைத்துநமை

நன்னெறியிற் சேர்க்கின்ற நற்றாய்காண் - செந்நெறியின் ...179

நாம்தேடா முன்னம் நமைத்தேடிப் பின்புதனை

நாம்தேடச் செய்கின்ற நற்றாய்காண் - ஆம்தோறும் ...180

காலம் அறிந்தே கனிவோடு நல்லருட்பால்

ஞாலம் மிசையளிக்கும் நற்றாய்காண் - சாலவுறு ...181

வெம்பிணியும் வேதனையும் வேசறிக்கை யும்துயரும்

நம்பசியும் தீர்த்தருளும் நற்றாய்காண் - அம்புவியில் ...182

வெந்நீரில் ஆட்டிடிலெம் மெய்நோகும் என்றருளாம்

நன்னீரில் ஆட்டுகின்ற நற்றாய்காண் - எந்நீரின் ...183

மேலாய் நமக்கு வியனுலகில் அன்புடைய

நாலா யிரம்தாயில் நற்றாய்காண் - ஏலாது ...184

வாடியழு தாலெம் வருத்தம் தரியாது

நாடிஎடுத் தணைக்கும் நற்றாய்காண் - நீடுலகில் ...185

தான்பாடக்கேட்டுத் தமியேன் களிக்குமுன்னம்

நான்பாடக் கேட்டுவக்கும் நற்றாய்காண் - வான்பாடும் ...186

ஞானமணம் செய்யருளாம் நங்கைதனைத் தந்துநமக்

கானமணம் செய்விக்கும் அம்மான்காண் - தேனினொடும் ...187

இன்பால் அமுதாதி ஏக்கமுற இன்னருள்கொண்

டன்பால் விருந்தளிக்கும் அம்மான்காண் - வன்பாவ ...188

ஆழ்கடல்வீழ்ந் துள்ளம் அழுந்தும் நமையெடுத்துச்

சூழ்கரையில் ஏற்றும் துணைவன்காண் - வீழ்குணத்தால் ...189

இன்பம் எனைத்தும் இதுவென் றறியாநம்

துன்பம் துடைக்கும் துணைவன்காண் - வன்பவமாம் ...190

தீநெறியிற் சென்று தியங்குகின்ற நந்தமக்குத்

தூநெறியைக் காட்டும் துணைவன்காண் - மாநிலத்தில் ...191

இன்றுதொட்ட தன்றி யியற்கையாய் நந்தமக்குத்

தொன்றுதொட்டு வந்தவருட் சுற்றங்காண் - தொன்றுதொட்டே ...192

ஆயுமுடற் கன்புடைத்தாம் ஆருயிரிற் றான்சிறந்த

நேயம்வைத்த நம்முடைய நேசன்காண் - பேயரென ...193

வாங்காது நாமே மறந்தாலும் நம்மைவிட்டு

நீங்காத நம்முடைய நேசன்காண் - தீங்காக ...194

ஈட்டுகின்ற ஆபத்தில் இந்தா எனஅருளை

நீட்டுகின்ற நம்முடைய நேசன்காண் - கூட்டுலகில் ...195

புல்லென்ற மாயையிடைப் போந்தோறும் நம்மையிங்கு

நில்லென் றிருத்துகின்ற நேசன்காண் - சில்லென்றென் ...196

உட்டூவும் தன்னைமறந் துண்டாலும் மற்றதற்கு

நிட்டூரம் செய்யாத நேசன்காண் - நட்டூர்ந்து(90) ...197

வஞ்சமது நாமெண்ணி வாழ்ந்தாலும் தான்சிறிதும்

நெஞ்சிலது வையாத நேசன்காண் - எஞ்சலிலாப் ...198

பார்நின்ற நாம்கிடையாப் பண்டமெது வேண்டிடினும்

நேர்நின் றளித்துவரு நேசன்காண் - ஆர்வமுடன் ...199

ஆர்ந்தநமக் கிவ்விடத்தும் அவ்விடத்தும் எவ்விடத்தும்

நேர்ந்தஉயிர் போற்கிடைத்த நேசன்காண் - சேர்ந்துமிகத் ...200

தாபஞ்செய் குற்றம் தரினும் பொறுப்பதன்றிக்

கோபஞ் செயாநமது கோமான்காண் - பாபமற ...201

விள்ளுமிறை நாமன்பு மேவலன்றி வேற்றரசர்

கொள்ளுமிறை வாங்காநம் கோமான்காண் - உள்ளமுற ...202

உண்டளிக்கும் ஊணுடைபூண் ஊரா திகள்தானே

கொண்டுநமக் கிங்களிக்கும் கோமான்காண் - மண்டலத்தில் ...203

ஒன்றாலும் நீங்கா துகங்கள் பலபலவாய்ச்

சென்றாலும் செல்லாநம் செல்வம்காண் - முன்தாவி ...204

நாடிவைக்கும் நல்லறிவோர் நாளும் தவம்புரிந்து

தேடிவைத்த நம்முடைய செல்வம்காண் - மாடிருந்து ...205

நாமெத் தனைநாளும் நல்கிடினும் தானுலவாச்

சேமித்த வைப்பின் திரவியம்காண் - பூமிக்கண் ...206

ஈங்குறினும் வானாதி யாங்குறினும் விட்டகலா

தோங்கருளால் நம்மை உடையவன்காண் - ஆங்கவன்தன் ...207

கங்கைச் சடையழகும் காதன்மிகும் அச்சடைமேல்

திங்கட் கொழுந்தின் திருவழகும் - திங்கள்தன்மேல் ...208

சார்ந்திலங்கும் கொன்றைமலர்த் தாரழகும் அத்தார்மேல்

ஆர்ந்திலங்கும் வண்டின் அணியழகும் - தேர்ந்தவர்க்கும் ...209

நோக்கரிய நோக்கழகும் நோக்கார் நுதலழகும்

போக்கரிய நன்னுதலில் பொட்டழகும் - தேக்குதிரி ...210

புண்டரத்தின் நல்லழகும் பொன்னருள்தான் தன்னெழிலைக்

கண்டவர்பால் ஊற்றுகின்ற கண்ணழகும் - தொண்டர்கள்தம் ...211

நேசித்த நெஞ்சமலர் நீடு மணமுகந்த

நாசித் திருக்குமிழின் நல்லழகும் - தேசுற்ற ...212

முல்லை முகையாம் முறுவலழ கும்பவள

எல்லை வளர்செவ் விதழழகும் - நல்லவரைத் ...213

தேவென்ற தீம்பாலில் தேன்கலந்தாற் போலினிக்க

வாவென் றருளுமலர் வாயழகும் - பூவொன்றும் ...214

கோன்பரவும் சங்கக் குழையழகும் அன்பர்மொழித்

தேன்பரவும் வள்ளைச் செவியழகும் - நான்பரவி ...215

வேட்டவையை நின்றாங்கு விண்ணப்பம் செய்யவது

கேட்டருளும் வார்செவியின் கேழழகும் - நாட்டிலுயர் ...216

சைவம் முதலாய்த் தழைக்க அருள்சுரக்கும்

தெய்வ முகத்தின் திருவழகும் - தெய்வமுகத் ...217

துள்ளம் குளிர உயிர்குளிர மெய்குளிரக்

கொள்ளும் கருணைக் குறிப்பழகும் - உள்ளறிவின் ...218

எள்ளாத மேன்மையுல கெல்லாம் தழைப்பவொளிர்

தெள்ளார் அமுதச் சிரிப்பழகும் - உள்ளோங்கும் ...219

சீல அருளின் திறத்துக் கிலச்சினையாம்

நீல மணிமிடற்றின் நீடழகும் - மாலகற்றி ...220

வாழ்ந்தொளிரும் அன்பர் மனம்போலும் வெண்ணீறு

சூழ்ந்தொளிகொண் டோங்குதிருத் தோளழகும் - தாழ்ந்திலவாய்த் ...221

தானோங்கும் அண்டமெலாம் சத்தமுறக் கூவுமொரு

மானோங்கும் செங்கை மலரழகும் - ஊனோங்கும் ...222

ஆணவத்தின் கூற்றை அழிக்க ஒளிர்மழுவைக்

காணவைத்த செங்கமலக் கையழகும் - நாணமுற்றே ...223

ஏங்கும் பரிசுடைய எம்போல்வார் அச்சமெலாம்

வாங்கும் அபய மலரழகும் - தீங்கடையாச் ..224

சீர்வரவும் எல்லாச் சிறப்பும் பெறவுமருள்

சார்வரத வொண்கைத் தலத்தழகும் - பேரரவப் ...225

பூணிலங்க வெண்பொற் பொடியிலங்க என்பணித்தார்

மாணிலங்க மேவுதிரு மார்பழகும் - சேணிலத்தர் ...226

மேலுடுத்த ஆடையெலாம் வெஃக வியாக்கிரமத்

தோலுடுத்த ஒண்மருங்கில் துன்னழகும் - பாலடுத்த ...227

கேழ்க்கோல மேவுதிருக் கீளழகும் அக்கீளின்

கீழ்க்கோ வணத்தின் கிளரழகும் - கீட்கோலம் ...228

ஒட்டிநின்ற மெய்யன்பர் உள்ள மெலாஞ்சேர்த்துக்

கட்டிநின்ற வீரக் கழலழகும் - எட்டிரண்டும் ...229

சித்திக்கும் யோகியர்தம் சிந்தைதனில் தேன்போன்று

தித்திக்கும் சேவடியின் சீரழகும் - சத்தித்து ...230

மல்வைத்த மாமறையும் மாலயனும் காண்பரிய

செல்வத் திருவடியின் சீரழகும் - சொல்வைத்த ...231

செம்மை மணிமலையைச் சேர்ந்த - மரகதம்போல்

அம்மையொரு பால்வாழ்ந் தருளழகும் - அம்மமிகச் ...232

சீர்த்திநிகழ் செம்பவளச் செம்மே னியினழகும்

பார்த்திருந்தால் நம்முட் பசிபோங்காண் - தீர்த்தருளம் ...233

கொண்டிருந்தான் பொன்மேனிக் கோலமதை நாம்தினமுங்

கண்டிருந்தால் அல்லலெலாம் கட்டறுங்காண் - தொண்டடைந்து ...234

பாட்டால் அவன்புகழைப் பாடுகின்றோர் பக்கநின்று

கேட்டால் வினைகள்விடை கேட்கும்காண் - நீட்டாமல் ...235

ஒன்னார் புரம்பொடித்த உத்தமனே என்றொருகால்

சொன்னா லுலகத் துயரறுங்காண் - எந்நாளும் ...236

பன்னுமுள்ளத் துள்ளாம் பரசிவமே என்றொருகால்

உன்னுமுன்னம் தீமையெலாம் ஓடிடுங்காண் - அன்னவன்றன் ...237

ஆட்டியல்காற் பூமாட் டடையென்றால் அந்தோமுன்

நீட்டியகால் பின்வாங்கி நிற்கின்றாய் - ஊட்டுமவன் ...238

மாற்கடவு ளாமோர் மகவலறக் கண்டுதிருப்

பாற்கடலை யீந்தவருட் பான்மைதனை - நூற்கடலின் ...239

மத்தியில்நீ கேட்டும் வணங்குகிலாய் அன்படையப்

புத்தியுளோர்க் கீதொன்றும் போதாதோ - முத்திநெறி ...240

மாணா அரக்கன் மலைக்கீழ் இருந்தேத்த

வாணாள்(91) வழங்கியதோர் வண்மைதனை - நாணாளும் ...241

நண்ணி உரைத்தும் நயந்திலைநீ அன்புகொளப்

புண்ணியருக் கீதொன்றும் போதாதோ - புண்ணியராம் ...242

சுந்தரர்க்குக் கச்சூரில் தோழமையைத் தான்தெரிக்க

வந்திரப்புச் சோறளித்த வண்மைதனை - முந்தகத்தில் ...243

பேதமறக் கேட்டும் பிறழ்ந்தனையே அன்படையப்

போதமுளோர்க் கீதொன்றும் போதாதோ - போதவும்நெய் ...244

அங்கோர் எலிதான் அருந்தவகல் தூண்டவதைச்

செங்கோலன் ஆக்கியவச் சீர்த்திதனை - இங்கோதச் ...245

சந்ததம்நீ கேட்டுமவன் தாள்நினையாய் அன்படையப்

புந்தியுளோர்க் கீதொன்றும் போதாதோ - முந்தவரும் ...246

நற்றுணையென் றேத்துமந்த நாவரசர்க் கன்றுகடற்

கற்றுணை(92)யோர் தெப்பமெனக் காட்டியதை - இற்றெனநீ ...247

மாவுலகில் கேட்டும் வணங்குகிலாய் அன்படையப்

பூவுலகர்க் கீதொன்றும் போதாதோ - தாவுநுதல் ...248

கண்சுமந்தான் அன்பன் கலங்கா வகைவைகை

மண்சுமந்தான் என்றுரைக்கும் வாய்மைதனைப் - பண்புடையோர் ...249

மாணவுரைப் பக்கேட்டும் வாய்ந்தேத்தாய் மெய்யன்பு

பூணவென்றால் ஈதொன்றும் போதாதோ - நீணரகத் ...250

தீங்குறுமா பாதகத்தைத் தீர்த்தோர் மறையவனைப்

பாங்கடையச் செய்தஅருட் பண்பதனை - ஈங்குலகர் ...251

துங்கம் உறஉரைத்துஞ் சூழ்கின் றிலையன்பு

பொங்கவென்றால் ஈதொன்றும் போதாதோ - தங்கியஇப் ...252

பாரறியாத் தாயாகிப் பன்றிக் குருளைகட்கு

ஊரறிய நன்முலைப்பால் ஊட்டியதைச் - சீரறிவோர் ...253

சொல்லிநின்றார் கேட்டும் துதிக்கின் றிலையன்பு

புல்லஎன்றால் ஈதொன்றும் போதாதோ - நல்லதிருப் ...254

பாத மலர்வருந்தப் பாணன் தனக்காளாய்க்

கோதில்விற கேற்றுவிலை கூறியதை - நீதியுளோர் ...255

சாற்றிநின்றார் கேட்டுமவன் தாள்நினையாய் மெய்யன்பில்

போற்றவென்றால் ஈதொன்றும் போதாதோ - போற்றுகின்ற ...256

ஆடும் கரியும் அணிலும் குரங்குமன்பு

தேடுஞ் சிலம்பியொடு சிற்றெறும்பும் - நீடுகின்ற ...257

பாம்பும் சிவார்ச்சனைதான் பண்ணியதென் றால்பூசை

ஓம்புவதற் கியார்தா முவவாதார் - சோம்புறுநீ ...258

வன்பென்ப தெல்லாம் மறுத்தவன்தாள் பூசிக்கும்

அன்பென்பதி யாதோ அறியாயே - அன்புடனே ...259

செஞ்சடைகொள் நம்பெருமான் சீர்கேட் டிரையருந்தா

தஞ்சடக்கி யோகம் அமர்ந்துலகின் - வஞ்சமற ...260

நாரையே முத்தியின்பம் நாடியதென் றால்மற்றை

யாரையே நாடாதார் என்றுரைப்பேன் - ஈரமிலாய் ...261

நீயோ சிறிதும் நினைந்திலைஅவ் வின்பமென்னை

யேயோநின் தன்மை இருந்தவிதம் - ஓயாத ...262

அன்புடையார் யாரினும்பேர் அன்புடையான் நம்பெருமான்

நின்புடையான் நித்தம் நிகழ்த்துகின்றேன் - உன்புடையோர் ...263

அன்பவன்மேல் கொண்ட தறியேன் புறச்சமயத்

தின்புடையா ரேனும் இணங்குவரே - அன்புடனே ...264

தாவென்றால் நல்லருள்இந் தாவென்பான் நம்பெருமான்

ஆஉன்பால் ஓதி அலுக்கின்றேன் - நீவன்பால் ...265

நின்றாய் அலதவனை நேர்ந்துநினை யாய்பித்தர்

என்றாலும் என்சொற் கிணங்குவரே - குன்றாது ...266

பித்தா எனினும் பிறப்பறுப்பான் நம்முடையான்
அத்தோ(93)உனக்கீ தறைகின்றேன் - சற்றேனும் ...267

கேள்வியிலார் போலதனைக் கேளாய் கெடுகின்றாய்
வேள்வியிலார் கூட்டம் விழைகின்றாய் - வேள்வியென்ற ...268

வேலைவருங் காலொளித்து மேவுகின்றாய் நின்தலைக்கங்
கோலைவருங் காலிங் கொளிப்பாயே - மாலையுறும் ...269

இப்பார் வெறும்பூ இதுநயவேல் என்றுனக்குச்
செப்பா முனம்விரைந்து செல்கின்றாய் - அப்பாழில் ...270

செல்லாதே சைவநெறி செல்லென்றால் என்னுடனும்
சொல்லாது போய்மயக்கம் தோய்கின்றாய் - பொல்லாத ...271

அஞ்ச(94)ருந்தென் றாலமுதி னார்கின்றாய் விட்டிடென்றால்
நஞ்சருந்தென் றாற்போல் நலிகின்றாய் - வஞ்சகத்தில் ...272

ஓடுகின்றாய் மீளாமல் உன்னிச்சை யின்வழியே
ஆடுகின்றாய் மற்றங் கயர்கின்றாய் - நீடுலகைச் ...273

சூழ்கின்றாய் வேறொன்றில் சுற்றுகின்றாய் மற்றொன்றில்
வீழ்கின்றாய் மேலொன்றில் மீள்கின்றாய் - தாழ்வொன்றே ...274

ஈகின்றாய் வன்னெறியில் என்னை வலதழிக்கப்
போகின்றாய் மீட்டும் புகுகின்றாய் - யோகின்றி ...275

ஒன்றைமறைக் கின்றாய்மற் றொன்றைநினைக் கின்றாயென்
நன்றைமறைக் கின்றாய் நலிகின்றாய் - வென்றிபெறும் ...276

சேவிற் பரமன்தாள் சேரென்றால் மற்றொருசார்

மேவிப் பலவாய் விரிகின்றாய் - பாவித்துக் ...277

குன்றும் உனக்கனந்தம் கோடிதெண்ட னிட்டாலும்

ஒன்றும் இரங்காய் உழல்கின்றாய் - நன்றுருகாக் ...278

கல்லென்பேன் உன்னைக் கரணம் கலந்தறியாக்

கல்லென்றால் என்சொல் கடவாதே - புல்லநினை ...279

வல்லிரும்பென் பேன்அந்த வல்லிரும்பேல் கூடத்தில்

கொல்லன்குறிப் பைவிட்டுக் கோணாதே - அல்லலெலாம் ...280

கூட்டுகின்ற வன்மைக் குரங்கென்பேன் அக்குரங்கேல்

ஆட்டுகின்றோன் சொல்வழிவிட் டாடாதே - நீட்டுலகர் ...281

ஏசுகின்ற பேயென்பேன் எப்பேயும் அஞ்செழுத்தைப்

பேசுகின்றோர் தம்மைப் பிடியாதே - கூசுகிற்பக் ...282

கண்டோ ரைக் கவ்வுங் கடுஞ்சுணங்கன் என்பனது

கொண்டோ ரைக் கண்டால் குலையாதே - அண்டார்க்கும் ...283

பூவில் அடங்காப் புலியென்பேன் எப்புலியும்

மேவில் வயப்பட்டால் எதிராதே - நோவியற்றி ...284

வீறுகின்ற மும்மதமால் வெற்பென்பேன் ஆங்கதுவும்

ஏறுகின்றோன்(95) சொல்வழிவிட் டேறாதே - சீறுகின்ற ...285

வென்னடைசேர்(96) மற்றை விலங்கென்பேன் எவ்விலங்கும்

மன்னவன்சேர் நாட்டில் வழங்காதே - நின்னையினி ...286

என்னென்பேன் என்மொழியை ஏற்றனையேல் மாற்றுயர்ந்த

பொன்னென்பேன் என்வழியில் போந்திலையே - கொன்னுறநீ ...287

போம்வழியும் பொய்நீ புரிவதுவும் பொய்அதனால்

ஆம்விளைவும் பொய்நின் னறிவும்பொய் - தோம்விளைக்கும் ...288

நின்னுடலும் பொய்யிங்கு நின்தவமும் பொய்நிலையா

நின்னிலையும் பொய்யன்றி நீயும்பொய் - என்னிலிவண் ...289

ஏதும் உணர்ந்திலையே இம்மாய வாழ்க்கையெனும்

வாதிலிழுத் தென்னை மயக்கினையே - தீதுறுநீ ...290

வன்னேர் விடங்காணின் வன்பெயரின் முன்பொருகீற்(97)

றென்னே அறியாமல் இட்டழைத்தேன் - கொன்னேநீ ...291

நோவ தொழியா நெறிற்(98) காம வெப்பினிடை

ஆவ தறியா தழுந்தினையே - மேவுமதில் ...292

உள்ளெரிய மேலாம் உணர்வும் கருகவுடல்

நள்ளெரிய நட்பின் நலம்வெதும்ப - விள்வதின்றி ...293

வாடிப் பிலஞ்சென்று வான்சென் றொளித்தாலும்

தேடிச் சுடுங்கொடிய தீக்கண்டாய் - ஓடிஅங்கு ...294

பேர்ந்தால் அலது பெருங்காமத் தீநின்னைச்

சேர்ந்தா ரையுஞ்சுடும்செந் தீக்கண்டாய் - சார்ந்தாங்கு ...295

சந்தீ யெனவருவார் தம்மைச் சுடுங்காமஞ்

செந்தீ யையுஞ் சுடுமோர் தீக்கண்டாய் - வந்தீங்கு ...296

மண்ணில் தனைக்காணா வண்ணம் நினைத்தாலும்

நண்ணித் தலைக்கேறு நஞ்சங்காண் - எண்ணற்ற ...297

போருறுமுட் காமப் புதுமயக்கம் நின்னுடைய

பேரறிவைக் கொள்ளைகொளும் பித்தங்காண் - சோரறிவில் ...298

கள்ளடைக்கும் காமக் கடுமயக்கம் மெய்ந்நெறிக்கோர்

முள்ளடைக்கும் பொல்லா முரண்கண்டாய் - அள்ளலுற ...299

ஏதமெலாம் தன்னுள் இடுங்காமம் பாதகத்தின்

பேதமெலாம் ஒன்றிப் பிறப்பிடங்காண் - ஆதலினால் ...300

வெம்மால் மடந்தையரை மேவவொணா தாங்கவர்கள்

தம்மாசை இன்னும் தவிர்ந்திலையே - இம்மாய ...301

மன்ற வணங்கினர்செவ் வாய்மடவார் பேதையர்கள்

என்றகொடுஞ் சொற்பொருளை எண்ணிலையே - தொன்றுலகில் ...302

பெண்ணென் றுரைப்பிற் பிறப்பேழும் ஆந்துயரம்

எண்ணென்ற நல்லோர்சொல் எண்ணிலையே - பெண்ணிங்கு ...303

மாமாத் திரையின் வருத்தனமென் றெண்ணினைஅந்(99)

நாமார்த்தம் ஆசையென நாடிலையே - யாமார்த்தம் ...304

மந்திரத்தும் பூசை மரபினுமற் றெவ்விதமாம்

தந்திரத்தும் சாயாச் சழக்கன்றோ - மந்திரத்தில் ...305

பேய்பிடித்தால் தீர்ந்திடுமிப் பெண்பேய் விடாதேசெந்

நாய்பிடித்தால் போலுமென்று நாடிலையே - ஆய்விலுன்றன் ...306

ஏழைமைஎன் னென்பேன் இவர்மயக்கம் வல்நரகின்

தோழைமையென் றந்தோ துணிந்திலையே - ஊழமைந்த ...307

காரிருளில் செல்லக் கலங்குகின்றாய் மாதர்சூழல்

பேரிருளில் செல்வதனைப் பேர்த்திலையே - பாரிடையோர் ...308

எண்வாள் எனிலஞ்சி ஏகுகின்றாய் ஏந்திழையார்

கண்வாள் அறுப்பக் கனிந்தனையே - மண்வாழும் ...309

ஓரானை யைக்கண்டால் ஓடுகின்றாய் மாதர்முலை

ஈரானை யைக்கண் டிசைந்தனையே - சீரான ...310

வெற்பென்றால் ஏற விரைந்தறியாய் மாதர்முலை

வெற்பென்றால் ஏற விரைந்தனையே - பொற்பொன்றும் ...311

சிங்கமென்றால் வாடித் தியங்குகின்றாய் மாதரிடைச்

சிங்கமெனில் காணத் திரும்பினையே - இங்குசிறு ...312

பாம்பென்றால் ஓடிப் பதுங்குகின்றாய் மாதரல்குல்

பாம்பென்றால் சற்றும் பயந்திலையே - ஆம்பண்டைக் ...313

கீழ்க்கடலில் ஆடென்றால் கேட்கிலைநீ மாதரல்குல்

பாழ்க்கடலில் கேளாது பாய்ந்தனையே - கீழ்க்கதுவும் ...314

கல்லென்றால் பின்னிடுவாய் காரிகையார் காற்சிலம்பு

கல்லென்றால் மேலெழும்பக் கற்றனையே - அல்அளகம் ...315

மையோ கருமென் மணலோஎன் பாய்மாறி

ஐயோ நரைப்ப தறிந்திலையோ - பொய்யோதி ...316

ஒண்பிறையே ஒண்ணுதலென் றுன்னுகின்றாய் உள்ளெலும்பாம்
வெண்பிறையன் றேயதனை விண்டிலையே - கண்புருவம் ...317

வில்லென்றாய் வெண்மயிராய் மேவி உதிர்ந்திடுங்கால்
சொல்லென்றால் சொல்லத் துணியாயே - வல்லம்பில் ...318

கட்கு வளைஎன்றாய்க் கண்ணீர் உலர்ந்துமிக
உட்குழியும் போதில் உரைப்பாயே - கட்குலவு ...319

மெய்க்குமிழே நாசியென வெஃகினையால் வெண்மலத்தால்
உய்க்குமிழுஞ் சீந்த லுளதேயோ - எய்த்தலிலா ...320

வள்ளையென்றாய் வார்காது வள்ளைதனக் குட்புழையோ
டுள்ளுநரம் பின்புனைவும் உண்டேயோ - வெள்ளைநகை ...321

முல்லையென்றாய் முல்லை முறித்தொருகோல் கொண்டுநிதம்
ஒல்லை அழுக்கெடுப்ப துண்டேயோ - நல்லதொரு ...322

கொவ்வை யெனஇதழைக் கொள்கின்றாய் மேல்குழம்பும்
செவ்வை இரத்தமெனத் தேர்ந்திலையே - செவ்வியகண் ...323

ணாடி யெனக்கவுட்கே ஆசைவைத்தாய் மேல்செழுந்தோல்
வாடியக்கால் என்னுரைக்க மாட்டுவையே - கூடியதோர் ...324

அந்த மதிமுகமென் றாடுகின்றாய் ஏழ்துளைகள்
எந்தமதிக் குண்டதனை எண்ணிலையே - நந்தெனவே ...325

கண்டமட்டும் கூறினைஅக் கண்டமட்டும் அன்றியுடல்
கொண்டமட்டும் மற்றதன்மெய்க் கூறன்றோ - விண்டவற்றைத்
...326

தோளென் றுரைத்துத் துடிக்கின்றாய் அவ்வேய்க்கு

மூளொன்று வெள்ளெலும்பின் மூட்டுண்டே - நாளொன்றும் ...327

செங்காந்தள் அங்கையெனச் செப்புகின்றாய் அம்மலர்க்குப்

பொங்காப் பலவிரலின் பூட்டுண்டே - மங்காத ...328

செவ்விளநீர் கொங்கையெனச் செப்பினைவல் ஊன்றழிப்பிங்

கெவ்விளநீர்க் குண்டதனை எண்ணிலையே - செவ்வைபெறும்
...329

செப்பென் றனைமுலையைச் சீசீ சிலந்தி(100)யது

துப்பென் றவர்க்கியாது சொல்லுதியே - வப்பிறுகச்(101) ...330

சூழ்ந்தமுலை மொட்டென்றே துள்ளுகின்றாய் கீழ்த்துவண்டு

வீழ்ந்தமுலைக் கென்ன விளம்புதியே - தாழ்ந்தஅவை ...331

மண்கட்டும் பந்தெனவே வாழ்ந்தாய் முதிர்ந்துடையாப்

புண்கட்டி என்பவர்வாய்ப் பொத்துவையே(102) - திண்கட்டும்
...332

அந்நீர்க் குரும்பை அவையென்றாய் மேலெழும்பும்

செந்நீர்ப் புடைப்பென்பார் தேர்ந்திலையே - அந்நீரார் ...333

கண்ணீர் தரும்பருவாய்க் கட்டுரைப்பார் சான்றாக

வெண்ணீர் வரல்கண்டும் வெட்கிலையே - தண்ணீர்மைச் ...334

சாடியென்பாய் நீஅயலோர் தாதுக் கடத்திடுமேன்

மூடியென்பார் மற்றவர்வாய் மூடுதியோ - மேடதனை(103) ...335

ஆலிலையே என்பாய் அடர்குடரோ டுருளொடும்(104)

தோலிலையே ஆலிலைக்கென் சொல்லுதியே - நூலிடைதான் ...336

உண்டோ இலையோஎன் றுட்புகழ்வாய் கைதொட்டுக்

கண்டோ ர்பூட்(195) டுண்டென்பார் கண்டிலையே - விண்டோ ங்கும் ...337

ஆழ்ங்கடலென் பாய்மடவார் அல்குலினைச் சிற்சிலர்கள்

பாழ்ங்கிணறென் பாரதனைப் பார்த்திலையே - தாழ்ங்கொடிஞ்சித் ...338

தேராழி என்பாயச் சீக்குழியை அன்றுசிறு

நீராழி யென்பவர்க்கென் நேருதியே(196) - ஆராப்புன் ...339

நீர்வீழியை ஆசை நிலையென்றாய் வன்மலம்தான்

சோர்வழியை என்னென்று சொல்லுதியே - சார்முடைதான் ...340

ஆறாச் சிலைநீர்கான் ஆறாய் ஒழுக்கிடவும்

வீறாப்புண் என்று விடுத்திலையே - ஊறாக்கி ...341

மூலை எறும்புடன்ஈ மொய்ப்பதஞ்சி மற்றதன்மேல்

சீலையிடக் கண்டும் தெரிந்திலையே - மேலையுறு ...342

மேநரகம் என்றால் விதிர்ப்புறுநீ மாதரல்குல்

கோநரகம் என்றால் குலைந்திலையே - ஊனமிதைக் ...343

கண்டால் நமதாசை கைவிடுவார் என்றதனைத்

தண்டா தொளித்திடவும் சார்ந்தனையே - அண்டாது ...344

போதவிடா யாகிப் புலம்புகின்றாய் மற்றதன்பால்

மாதவிடாய் உண்டால் மதித்திலையே - மாதரவர் ...345

தங்குறங்கை மெல்லரம்பைத் தண்டென்றாய் தண்டூன்றி
வெங்குரங்கின் மேவுங்கால் விள்ளுதியே - நன்கிலவாய் ...346

ஏய்ந்த முழந்தாளைவரால் என்றாய் புலாற்சிறிதே
வாய்ந்து வராற்றோற்கு மதித்திலையே - சேந்தவடி ...347

தண்டா மரையென்றாய் தன்மை விளர்ப்படைந்தால்
வெண்டா மரையென்று மேவுதியோ - வண்டாரா ...348

மேனாட்டுஞ் சண்பகமே மேனியென்றாய் தீயிடுங்கால்
தீநாற்றம் சண்பகத்தில் தேர்ந்தனையோ - வானாட்டும் ...349

மின்றேர் வடிவென்றாய் மேல்நீ உரைத்தவுளீ
தொன்றே ஒருபுடையாய் ஒத்ததுகாண்(197) - ஒன்றாச்சொல் ...350

வேள்வா கனமென்றாய் வெய்யநமன் விட்டிடுந்தூ
தாள்வா கனமென்றால் ஆகாதோ - வேளானோன் ...351

காகளமாய்(198) இன்குரலைக் கட்டுரைத்தாய் காலனென்போன்
காகளமென் பார்க்கென் கழறுதியே - நாகளவும் ...352

சாயைமயில் என்றே தருக்குகின்றாய் சார்பிரம
சாயை(199)யஃ தென்பார்க்கென் சாற்றுதியே - சேயமலர் ...353

அன்ன நடைஎன்பாய் அஃதன் றருந்துகின்ற
அன்னநடை என்பார்க்கென் ஆற்றுதியே - அன்னவரை ...354

ஓரோ வியமென்பாய் ஓவியமேல் ஆங்கெழுபத்
தீரா யிரநாடி யாண்டுடைத்தே - பாரார்ந்த ...355

முன்னுமலர்க் கொம்பென்பாய் மூன்றொடரைக் கோடியெனத்

துன்னு முரோமத் துவாரமுண்டே - இன்னமுதால் ...356

செய்தவடி வென்பாயச் செய்கைமெய்யேல் நீயவர்கள்

வைதிடினும் மற்றதனை வையாயே - பொய்தவிராய் ...357

ஒள்ளிழையார் தம்முருவோர் உண்கரும்பென் றாய்சிறிது

கிள்ளியெடுத் தால்இரத்தங் கீழ்வருமே - கொள்ளுமவர் ...358

ஈடில்பெயர் நல்லார் எனநயந்தாய் நாய்ப்பெயர்தான்

கேடில்பெருஞ் சூரனென்பர் கேட்டிலையோ - நாடிலவர் ...359

மெல்லியலார் என்பாய் மிகுகருப்ப வேதனையை

வல்லியலார் யார்பொறுக்க வல்லார்காண் - வில்லியல்பூண் ...360

வேய்ந்தால் அவர்மேல் விழுகின்றாய் வெந்தீயில்

பாய்ந்தாலும் அங்கோர் பலனுண்டே - வேய்ந்தாங்கு ...361

சென்றால் அவர்பின்னர்ச் செல்கின்றாய் வெம்புலிப்பின்

சென்றாலும் அங்கோர் திறனுண்டே - சென்றாங்கு ...362

நின்றால் அவர்பின்னர் நிற்கின்றாய் கண்மூடி

நின்றாலும் அங்கோர் நிலையுண்டே - ஒன்றாது ...363

கண்டால் அவருடம்பைக் கட்டுகின்றாய்(110)கல்லணைத்துக்

கொண்டாலும் அங்கோர் குணமுண்டே - பெண்டானார் ...364

வைதாலும் தொண்டு வலித்தாய் பிணத்தொண்டு

செய்தாலும் அங்கோர் சிறப்புளதே - கைதாவி ...365

மெய்த்தாவும் செந்தோல் மினுக்கால் மயங்கினைநீ

செத்தாலும் அங்கோர் சிறப்புளதே - வைத்தாடும் ...366

மஞ்சள் மினுக்கால் மயங்கினைநீ மற்றொழிந்து
துஞ்சுகினும் அங்கோர் சுகமுளதே - வஞ்சியரைப் ...367

பார்த்தாடி ஓடிப் படர்கின்றாய் வெந்நரகைப்
பார்த்தாலும் அங்கோர் பலனுண்டே - சேர்த்தார்கைத் ...368

தொட்டால் களித்துச் சுகிக்கின்றாய் வன்பூதம்
தொட்டாலும் அங்கோர் துணையுண்டே - நட்டாலும் ...369

தெவ்வின்மட வாரைத் திளைக்கின்றாய் தீவிடத்தை
வவ்வுகினும் அங்கோர் மதியுண்டே - செவ்விதழ்நீர் ...370

உண்டால் மகிழ்வாய்நீ ஒண்சிறுவர் தம்சிறுநீர்
உண்டாலும் அங்கோ ருரனுண்டே - கண்டாகக் ...371

கவ்வுகின்றாய் அவ்விதழைக் கார்மதுகம் வேம்பிவற்றைக்
கவ்வுகினும் அங்கோர் கதியுண்டே - அவ்விளையர் ...372

மென்றீயும் மிச்சில் விழைகின்றாய் நீவெறும்வாய்
மென்றாலும் அங்கோர் விளைவுண்டே - முன்றானை ...373

பட்டால் மகிழ்வு பதிந்தாய் பதைக்கவம்பு
பட்டாலும் அங்கோர் பலனுண்டே - கிட்டாமெய்த் ...374

தீண்டிடிலுள் ளோங்கிச் சிரிக்கின்றாய் செந்தேள்முன்
தீண்டிடினும் அங்கோர் திறனுண்டே - வேண்டியவர் ...375

வாய்க்கிடயா தானுமொன்று வாங்குகின்றாய் மற்றதையோர்
நாய்க்கிடினும் அங்கோர் நலனுண்டே - தாக்கவர்க்காய்த் ...376

தேட்டாண்மை செய்வாயத் தேட்டாண்மை யைத்தெருவில்

போட்டாலும் அங்கோர் புகழுண்டே - வாட்டாரைக் ...377

கொண்டா ருடனுணவு கொள்கின்றாய் குக்கலுடன்

உண்டாலும் அங்கோர் உறவுண்டே - மிண்டாகும் ...378

இங்கிவர்வாய்ப் பாகிலையை ஏற்கின்றாய் புன்மலத்தை

நுங்கினுமங் கோர்நல் நொறிலுண்டே(111) - மங்கையர்தம் ...379

ஏத்தா மனைகாத் திருக்கின்றாய் ஈமமது

காத்தாலும் அங்கோர் கனமுண்டே - பூத்தாழ்வோர் ...380

காட்டாக் குரல்கேட்பாய் கர்த்தபத்தின் பாழ்ங்குரலைக்

கேட்டாலும் அங்கோர் கிளருண்டே - கோட்டாவி ...381

ஆழ்ந்தா ருடன்வாழ ஆதரித்தாய் ஆழ்ங்கடலில்

வீழ்ந்தாலும் அங்கோர் விரகுண்டே - வீழ்ந்தாருள் ...382

வீட்டால் முலையுமெதிர் வீட்டால் முகமுமுறக்

காட்டாநின் றார்கண்டும் காய்ந்திலையே - கூட்டாட்குச் ...383

செய்கை யிடும்படிதன் சீமான் தனதுபணப்

பைகையிடல் கண்டும் பயந்திலையே - சைகையது ...384

கையால் ஒருசிலர்க்கும் கண்ணால் ஒருசிலர்க்கும்

செய்யா மயக்குகின்றார் தேர்ந்திலையே - எய்யாமல் ...385

ஈறிகந்த இவ்வகையாய் இம்மடவார் செய்கையெலாம்

கூறுவனேல் அம்ம குடர்குழம்பும் - கூறுமிவர் ...386

வாயொருபால் பேச மனமொருபால் செல்லவுடல்

ஆயொருபால் செய்ய அழிவார்காண் - ஆயஇவர் ...387

நன்றறியார் தீதே நயப்பார் சிவதலத்தில்

சென்றறியார் பேய்க்கே சிறப்பெடுப்பார் - இன்றிவரை ...388

வஞ்சமென்கோ வெவ்வினையாம் வல்லியமென் கோபவத்தின்

புஞ்சமென்கோ மாநரக பூமியென்கோ - அஞ்சுறுமீர் ...389

வாளென்கோ வாய்க்கடங்கா மாயமென்கோ மண்முடிவு

நாளென்கோ வெய்ய நமனென்கோ - கோளென்கோ ...390

சாலமென்கோ வானிந்த்ர சாலமென்கோ வீறால

காலமென்கோ நின்பொல்லாக் காலமென்கோ - ஞாலமதில் ...391

பெண்என்றால் யோகப் பெரியோர் நடுங்குவரேல்

மண்நின்றார் யார்நடுங்க மாட்டார்காண் - பெண்என்றால் ...392

பேயும் இரங்குமென்பார் பேய்லூன்றோ தாம்பயந்த

சேயும் இரங்குமவர் தீமைக்கே - ஆயுஞ்செம் ...393

பொன்னால் துகிலால் புனையா விழலவர்மெய்

என்னாகும் மற்றிதைநீ எண்ணிலையே - இன்னாமைக் ...394

கொத்தென்ற அம்மடவார் கூட்டம் எழுமைக்கும்

வித்தென் றறிந்துமதை விட்டிலையே - தொத்தென்று ...395

பாச வினைக்குட் படுத்துறும்அப் பாவையர்மேல்

ஆசையுனக் கெவ்வா றடைந்ததுவே - நேசமிலாய் ...396

நின்னாசை என்னென்பேன் நெய்வீழ் நெருப்பெனவே

பொன்னாசை மேன்மேலும் பொங்கினையே - பொன்னாசை ...397

வைத்திழந்து வீணே வயிறெரிந்து மண்ணுலகில்

எத்தனைபேர் நின்கண் எதிர்நின்றார் - தத்துகின்ற ...398

பொன்னுடையார் துன்பப் புணரியொன்றே அல்லதுமற்

றென்னுடையார் கண்டிங் கிருந்தனையே - பொன்னிருந்தால் ...399

ஆற்றன்மிகு தாயுமறி யாவகையால் வைத்திடவோர்

ஏற்றவிடம் வேண்டுமதற் கென்செய்வாய் - ஏற்றவிடம் ...400

வாய்த்தாலும் அங்கதனை வைத்தவிடம் காட்டாமல்

ஏய்த்தால் சிவசிவமற் றென்செய்வாய் - ஏய்க்காது ...401

நின்றாலும் பின்னதுதான் நீடும் கரியான

தென்றால் அரகரமற் றென்செய்வாய் - நன்றாக ...402

ஒன்றொருசார் நில்லென்றால் ஓடுகின்ற நீஅதனை

என்றும் புரப்பதனுக் கென்செய்வாய் - வென்றியொடு ...403

பேர்த்துப் புரட்டிப் பெருஞ்சினத்தால் மாற்றலர்கள்

ஈர்த்துப் பறிக்கிலதற் கென்செய்வாய் - பேர்த்தெடுக்கக் ...404

கைபுகுத்தும் காலுட் கருங்குளவி செங்குளவி

எய்புகுத்தக் கொட்டிடின்மற் றென்செய்வாய் - பொய்புகுத்தும் ...405

பொன்காவல் பூதமது போயெடுக்கும் போதுமறித்

தென்காவல் என்றால்மற் றென்செய்வாய் - பொன்காவல் ...406

வீறுங்கால் ஆணவமாம் வெங்கூளி நின்தலைமேல்

ஏறுங்கால் மற்றதனுக் கென்செய்வாய் - மாறும்சீர் ...407

உன்நேயம் வேண்டி உலோபம் எனும்குறும்பன்
இன்னே வருவனதற் கென்செய்வாய் - முன்னேதும் ...408

இல்லா நமக்குண்டோ இல்லையோ என்னுநலம்
எல்லாம் அழியுமதற் கென்செய்வாய் - நில்லாமல் ...409

ஆய்ந்தோர் சிலநாளில் ஆயிரம்பேர் பக்கலது
பாய்ந்தோடிப் போவதுநீ பார்த்திலையே - ஆய்ந்தோர்சொல் ...410

கூத்தாட் டவைசேர் குழாம்விளிந்தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறள்மொழியும் தேர்ந்திலையே112 பேர்த்தோடும் ...411

நாட்கொல்லி என்றால் நடுங்குகின்றாய் நாளறியா
ஆட்கொல்லி என்பரிதை ஆய்ந்திலையே - கீழ்க்கொல்லைப் ...412

பச்சிலையால் பொன்னைப் படைப்பாரேல் மற்றதன்மேல்
இச்சையுனக் கெவ்வா றிருந்ததுவே - இச்சையிலார் ...413

இட்டமலம் பட்டவிடம் எல்லாம்பொன் னாம்என்றால்
இட்டமதை விட்டற்(113) கிசைந்திலையே - முட்டகற்றப் ...414

பொன்னடப்ப தன்றியது போனகமே யாதியவாய்
என்னடுத்த தொன்றுமிஃ தெண்ணிலையே - இந்நிலத்தில் ...415

நீண்மயக்கம் பொன்முன் நிலையாய் உலகியலாம்
வீண்மயக்கம் என்றதனை விட்டிலையே -நீண்வலயத் ...416

திச்செல்வ மின்றி இயலாதேல் சிற்றுயிர்கள்
எச்செல்வம் கொண்டிங் கிருந்தனவே - வெச்சென்ற ...417

மண்ணாசை கொண்டனைநீ மண்ணாளும் மன்னரெலாம்

மண்ணால் அழிதல் மதித்திலையே - எண்ணாது ...418

மண்கொண்டார் மாண்டார்தம் மாய்ந்தவுடல் வைக்கவயல்

மண்கொண்டார் தம்மிருப்பில் வைத்திலரே - திண்கொண்ட ...419

விண்ணேகுங் காலங்கு வேண்டுமென ஈண்டுபிடி

மண்ணேனுங் கொண்டேக வல்லாரோ - மண்நேயம் ...420

என்னதென்றான் முன்னொருவன் என்னதென்றான்
பின்னொருவன்

இன்னதுநீ கேட்டிங் கிருந்திலையோ - மன்னுலகில் ...421

கண்காணி யாய்நீயே காணியல்லாய் நீயிருந்த

மண்காணி என்று மதித்தனையே - கண்காண ...422

மண்காணி வேண்டி வருந்துகின்றாய் நீமேலை

விண்காணி வேண்டல் வியப்பன்றே - எண்காண ...423

அந்தரத்தில் நின்றாய்நீ அந்தோ நினைவிடமண்

அந்தரத்தில் நின்ற தறிந்திலையே - தந்திரத்தில் ...424

மண்கொடுப்பேன் என்றுரைக்கில் வைவார் சிறுவர்களும்

மண்கொடுக்கில் நீதான் மகிழ்ந்தனையே - வண்கொடுக்கும் ...425

வீடென்றேன் மற்றதைமண் வீடென்றே நீநினைந்தாய்

வீடென்ற சொற்பொருளை விண்டிலையே - நாடொன்றும் ...426

மண்ணால் மரத்தால் வனைகின்ற வீடனைத்தும்

கண்ணாரக் கட்டழிதல் கண்டிலையோ - மண்ணான ...427

மேல்வீடும் அங்குடைய வேந்தர்களும் மேல்வீட்டப்

பால்வீடும் பாழாதல் பார்த்திலையோ - மேல்வீட்டில் ...428

ஏறுவனே என்பாய் இயமன் கடாமிசைவந்

தேறுவனேல் உன்னாசை என்னாமோ - கூறிடும்இம் ...429

மண்ணளித்த வேதியனும் மண்விருப்பம் கொள்ளானேல்

எண்ணமுனக் கெவ்வா றிருந்ததுவே - மண்ணிடத்தில் ...430

ஆகாத் துரும்பிடத்தும் ஆசைவைத்தாய் என்னிலுன்றன்

ஏகாப் பெருங்காமம் என்சொல்கேன் - போகாத ...431

பாபக் கடற்கோர் படுகடலாம் பாழ்வெகுளிக்

கோபக் கடலில் குளித்தனையே - தாபமுறச் ...432

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்

இல்லதனில் தீயதென்ற தெண்ணிலையே(114) - மல்லல்பெறத் ...433

தன்னைத்தான் காக்கில் சினங்காக்க என்றதனைப்

பொன்னைப்போல்போற்றிப் புகழ்ந்திலையே(115) - துன்னி ...434

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல என்னுந்

திகழ்வாய் மையும்நீ தெளியாய்(116) - இகழ்வாரை ...435

எவ்வண்ணம் நம்மை இகழ்வார் அறிவோமென்

றிவ்வண்ணம் என்னைவெளி யிட்டனையே - தெவ்வென்ன ...436

ஓரா வெகுளி யுடையான் தவமடையான்

தீராயென் பாரதுவும் தேர்ந்திலையே - பேராநின் ...437

வெவ்வினைக்கீ டாகஅரன் வெம்மைபுரி வானென்றால்

இவ்வெகுளி யார்மாட் டிருத்துவதே - செவ்வையிலாய் ...438

ஏய்ந்தனையன் போரிடத்தில் இன்னாமை செய்தவரைக்

காய்ந்தனைமற் றென்னபலன் கண்டனையே - வாய்ந்தறிவோர் ...439

எல்லா நலமும் இஃதேயென் றேத்துகின்ற

கொல்லா நலம்சிறிதுங் கொண்டிலையே - பொல்லாத ...440

வன்போ டிருக்கு மதியிலிநீ மன்னுயிர்க்கண்

அன்போ டிரக்கம் அடைந்திலையே - இன்போங்கு ...441

தூய்மையென்ப தெல்லாம் துணையாய் அணைவதுதான்

வாய்மையென்ப தொன்றே மதித்திலையே - தூய்மையிலாய் ...442

மானொருகை ஏந்திநின்ற வள்ளலன்பர் தங்களுளே

நானொருவன் என்று நடித்தனையே - ஆனமற்றைப் ...443

பாதகங்க ளெல்லாம் பழகிப் பழகியதில்

சாதகஞ்செய் வோரில் தலைநின்றாய் - பாதகத்தில் ...444

ஓயா விகார உணர்ச்சியினால் இவ்வுலக

மாயா விகாரம் மகிழ்ந்தனையே - சாயாது ...445

நீஇளமை மெய்யாய் நினைந்தாய் நினைப்பெற்ற

தாயிளமை எத்தனைநாள் தங்கியதே - ஆயிளமை ...446

மெய்கொடுத்த தென்பாய் விருத்தர்கட்கு நின்போல்வார்

கைகொடுத்துப் போவதனைக் கண்டிலையோ - மெய்கொடுத்த ...447

கூனொடும்கைக் கோலூன்றிக் குந்தி நடைதளர்ந்து

கானடுங்க நிற்பவரைக் கண்டிலையோ - ஊனொடுங்க ...448

ஐயநட வென்றே அரும்புதல்வர் முன்செலப்பின்

பைய நடப்பவரைப் பார்த்திலையோ - வெய்யநமன் ...449

நாடழைக்கச் சேனநரி நாயழைக்க நாறுசுடு

காடழைக்க மூத்துநின்றார் கண்டிலையோ - பீடடைந்த ...450

மெய்யுலர்ந்து நீரின் விழியுலர்ந்து வாயுலர்ந்து

கையுலர்ந்து நிற்பவரைக் கண்டிலையோ - மெய்யுலர்ந்தும் ...451

சாகான் கிழவன் தளர்கின்றான் என்றிவண்நீ

ஓகாளம் செய்வதனை ஓர்ந்திலையோ - ஆகாத ...452

கண்டமிது பொல்லாக் கடுநோய் எனுங்குமர

கண்டமிஃ தென்பவரைக் கண்டிலையோ - கொண்டவுடல் ...453

குட்டமுறக் கைகால் குறுக்குமிது பொல்லாத

குட்டமென நோவார் குறித்திலையோ - துட்டவினை ..454

மாலையினும் காலையினும் மத்தியினும் குத்துமிது

சூலையென நோவாரைச் சூழ்ந்திலையோ - சாலவுமித் ...455

தேக மதுநலியச் செய்யுங்காண் உய்வரிதாம்

மேகமிஃ தென்பாரை மேவிலையோ - தாகமுறச் ...456

சித்தநோய் செய்கின்ற சீதநோய் வாதமொடு

பித்தநோய் கொண்டவர்பால் பேர்ந்திலையோ - மெத்தரிய ...457

கைப்பிணியும் காற்பிணியும் கட்பிணியோ டெண்ணரிய

மெய்ப்பிணியும் கொண்டவரை விண்டிலையோ - எய்ப்புடைய ...458

முட்டூறும் கைகால் முடங்கூன் முதலாய

எட்டூறுங் கொண்டவரை எண்ணிலையோ - தட்டூறிங் ...459

கெண்ணற்ற துண்டேல் இளமை ஒருபொருளாய்

எண்ணப் படுமோவென் றெண்ணிலையோ - எண்ணத்தில் ...460

பொய்யென் றறவோர் புலம்புறவும் இவ்வுடம்பை

மெய்யென்று பொய்ம்மயக்கம் மேவினையே - கைநின்று ..461

கூகா எனமடவார் கூடி அழல்கண்டும்

நீகாதல் வைத்து நிகழ்ந்தனையே - மாகாதல் ...462

பெண்டிருந்து மாழ்கப் பிணங்கொண்டு செல்வாரைக்

கண்டிருந்தும் அந்தோ கலங்கிலையே - பண்டிருந்த ...463

ஊரார் பிணத்தின் உடன்சென்று நாம்மீண்டு

நீராடல் சற்றும் நினைந்திலையே - சீராக ...464

இன்றிருந்தார் நாளைக் கிருப்பதுபொய் என்றறவோர்

நன்றிருந்த வார்த்தையும்நீ நாடிலையே - ஒன்றி ...465

உறங்குவது போலுமென்ற ஒண்குறளின் வாய்மை

மறங்கருதி அந்தோ மறந்தாய்(117) - கறங்கின் ...466

நெருநல் உளனொருவன் என்னும் நெடுஞ்சொல்

மருவும் குறட்பா மறந்தாய்(118) - தெருவில் ...467

இறந்தார் பிறந்தா ரிறந்தா ரெனுஞ்சொல்

மறந்தாய் மறந்தாய் மறந்தாய் - இறந்தார் ...468

பறையோசை அண்டம் படீரென் றொலிக்க

மறையோசை யன்றே மறந்தாய் - இறையோன் ...469

புலனைந்தும் என்றருளும் பொன்மொழியை மாயா

மலமொன்றி அந்தோ மறந்தாய்(119) - நிலனொன்றி ...470

விக்குள் எழநீர் விடுமி னெனஅயலோர்

நெக்குருகல் அந்தோ நினைந்திலையே - மிக்கனலில் ...471

நெய்விடல்போல் உற்றவர்கண் ணீர்விட் டழவுயிர்பல்

மெய்விடலும் கண்டனைநீ விண்டிலையே - செய்வினையின் ...472

வாள்கழியச் செங்கதிரோன் வான்கழிய நம்முடைய

நாள்கழிதற் கந்தோ நடுங்கிலையே - கோள்கழியும் ...473

நாழிகையோர் நாளாக நாடினையே நாளைஒரு

நாழிகையாய் எண்ணி நலிந்திலையே - நாழிகைமுன் ...474

நின்றார் இருந்தார் நிலைகுலைய வீழ்ந்துயிர்தான்

சென்றார் எனக்கேட்டும் தேர்ந்திலையே - பின்றாது ...475

தொட்டார் உணவுடனே தும்மினார் அம்மஉயிர்

விட்டார் எனக்கேட்டும் வெட்கிலையே - தட்டாமல் ...476

உண்டார் படுத்தார் உறங்கினார் பேருறக்கம்

கொண்டார் எனக்கேட்டும் கூசிலையே - வண்தாரார் ...477

நேற்று மணம்புரிந்தார் நீறானார் இன்றென்று

சாற்றுவது கேட்டும் தணந்திலையே - வீற்றுறுதேர் ...478

ஊர்ந்தார் தெருவில் உலாப்போந்தார் வானுலகம்

சேர்ந்தார் எனக்கேட்டும் தேர்ந்திலையே - சேர்ந்தாங்கு ...479

என்னே இருந்தார் இருமினார் ஈண்டிறந்தார்

அன்னே எனக்கேட்டும் ஆய்ந்திலையே - கொன்னே ...480

மருவும் கருப்பைக்குள் வாய்ந்தே முதிராக்

கருவும் பிதிர்ந்துதிரக் கண்டாய் - கருவொன் ...481

றொடுதிங்கள் ஐயைந்தில்(120) ஒவ்வொன்றில் அந்தோ

கெடுகின்ற தென்றதுவும் கேட்டாய் - படுமிந் ...482

நிலைமுற்ற யோனி நெருக்கில் உயிர்போய்ப்

பலனற்று வீழ்ந்ததுவும் பார்த்தாய் - பலனுற்றே ...483

காவென்று வீழ்ந்தக் கணமே பிணமாகக்

கோவென் றழுவார் குறித்திலையோ - நோவின்றிப் ...484

பாலனென்றே அன்னைமுலைப் பாலருந்தும் காலையிலே

காலன் உயிர்குடிக்கக் கண்டிலையோ - மேலுவந்து ...485

பெற்றார் மகிழ்வெய்தப் பேசிவிளை யாடுங்கால்

அற்றாவி போவ தறிந்திலையோ - கற்றாயப் ...486

பள்ளியிடுங் காலவனைப் பார நமன்வாயில்

அள்ளியிடுந் தீமை அறிந்திலையோ - பள்ளிவிடும் ...487

காளைப் பருவமதில் கண்டார் இரங்கிடஅவ்

ஆளைச் சமன்கொள்வ தாய்ந்திலையோ - வேளைமண ...488

மாப்பிள்ளை ஆகி மணமுடிக்கும் அன்றவனே

சாப்பிள்ளை யாதலெண்ணிச் சார்ந்திலையே - மேற்பிள்ளை ...489

மாடையேர்ப் பெண்டுடனில் வாழுங்கால் பற்பலர்தாம்

பாடைமேல் சேர்தலினைப் பார்த்திலையோ - வீடலிஃ ...490

திக்கணமோ மேல்வந் திடுங்கணமோ அன்றிமற்றை

எக்கணமோ என்றார்நீ எண்ணிலையே - தொக்குறுதோல் ...491

கூடென்கோ இவ்வுடம்பைக் கோள்வினைநீர் ஓட்டில்விட்ட

ஏடென்கோ நீர்மேல் எழுத்தென்கோ - காடென்கோ ...492

பாழென்கோ ஒன்பதுவாய்ப் பாவையென்கோ வன்பிறவி

ஏழென்கோ கன்மமதற் கீடென்கோ - தாழ்மண்ணின் ...493

பாண்டமென்கோ வெஞ்சரக்குப் பையென்கோ பாழ்ங்கரும

காண்டமென்கோ ஆணவத்தின் கட்டென்கோ - கோண்தகையார்
...494

மெய்யென்கோ மாய விளைவென்கோ மின்னென்கோ

பொய்யென்கோ மாயப் பொடியென்கோ - மெய்யென்ற ...495

மங்கலத்தை மங்கலத்தால் வாஞ்சித் தனருலகர்

அங்கவற்றை எண்ணா தலைந்தனையே - தங்குலகில் ...496

மற்றிதனை ஓம்பி வளர்க்க உழன்றனைநீ

கற்றதனை எங்கே கவிழ்த்தனையே - அற்றவரை ...497

இக்கட் டவிழ்த்திங் கெரிமூட் டெனக்கேட்டும்

முக்கட்டும் தேட முயன்றனையே - இக்கட்டு ...498

மண்பட்டு வெந்தீ மரம்பட் டிடக்கண்டும்

வெண்பட் டுடுக்க விரைந்தனையே - பண்ப ட்ட ...499

ஐயா அரைநாண் அவிழுமெனக் கேட்டுநின்றும்

மெய்யா பரணத்தின் மேவினையே - எய்யாமல் ...500

காதிற் கடுக்கன் கழற்றுமெனக் கேட்டுநின்றும்

ஏதிற் பணியினிடத் தெய்தினையே - தாதிற்குத் ...501

துற்கந்த மாகச் சுடுங்கால் முகர்ந்திருந்தும்

நற்கந்தத் தின்பால் நடந்தனையே - புற்கென்ற ...502

வன்சுவைத்தீ நாற்ற மலமாய் வரல்கண்டும்

இன்சுவைப்பால் எய்தி யிருந்தனையே - முன்சுவைத்துப் ...503

பாறுண்ட காட்டில் பலர்வெந் திடக்கண்டும்

சோறுண் டிருக்கத் துணிந்தனையே - மாறுண்டு ...504

கூம்புலகம் பொய்யெனநான் கூவுகின்றேன் கேட்டுமிகு

சோம்பலுடன் தூக்கந் தொடர்ந்தனையே - ஆம்பலனோர் ...505

நல்வாழ்வை எண்ணி நயந்தோர் நயவாத

இல்வாழ்வை மெய்யென் றிருந்தனையே - சொல்லாவி ...506

ஈன்றோன் தனைநாளும் எண்ணாமல் இவ்வுடம்பை

ஈன்றோரை ஈன்றோரென் றெண்ணினையே - ஈன்றோர்கள் ...507

நொந்தால் உடனின்று நோவார் வினைப்பகைதான்

வந்தால் அதுநீக்க வல்லாரோ - வந்தாடல் ...508

உற்றசிறார் நம்மடையா தோட்டுகிற்பார் தென்றிசைவாழ்

மற்றவன்வந் தால்தடுக்க வல்லாரோ - சிற்றுணவை ...509

ஈங்கென்றால் வாங்கி யிடுவார் அருளமுதம்

வாங்கென்றால் வாங்கியிட வல்லாரோ - தீங்ககற்றத் ...510

தூண்டா மனையாதிச் சுற்றமெலாம் சுற்றியிட

நீண்டாய் அவர்நன் னெறித்துணையோ - மாண்டார்பின் ...511

கூடி அழத்துணையாய்க் கூடுவார் வன்னரகில்

வாடியழும் போது வருவாரோ - நீடியநீ ...512

இச்சீவர் தன்துணையோ ஈங்கிவர்கள் நின்துணையோ

சீச்சீ இதென்ன திறங்கண்டாய் - இச்சீவர் ...513

நின்னைவைத்து முன்சென்றால் நீசெய்வ தென்னவர்முன்

இந்நிலத்தில் நீசென்றால் என்செய்வர் - நின்னியல்பின் ...514

எத்தனைதாய் எத்தனைபேர் எத்தனையூர் எத்தனைவாழ்

வெத்தனையோ தேகம் எடுத்தனையே - அத்தனைக்கும் ...515

அவ்வவ் விடங்கடொறும் அவ்வவரை ஆண்டாண்டிங்

கெவ்வெவ் விதத்தால் இழந்தனையோ - அவ்விதத்தில் ...516

ஒன்றேனும் நன்றாய் உணர்ந்திருத்தி யேலிவரை

இன்றே துறத்தற் கிசையாயோ - நின்றோரில் ...517

தாயார் மனையார் தனயரார் தம்மவரார்

நீயார் இதனை நினைந்திலையே - சேயேகில் ...518

ஏங்குவரே என்றாய் இயமன்வரின் நின்னுயிரை

வாங்கிமுடி யிட்டகத்தில் வைப்பாரோ - நீங்கியிவண் ...519

உன்தந்தை தன்றனக்கிங் கோர்தந்தை நாடுவனீ
என்தந்தை என்றுரைப்ப தெவ்வாறே - சென்றுபின்னின் ...520

தன்மனையாள் மற்றொருவன் தன்மனையாள் ஆவளெனில்
என்மனையாள் என்பதுநீ எவ்வணமே - நன்மைபெறும் ...521

நட்பமைந்த நன்னெறிநீ நாடா வகைதடுக்கும்
உட்பகைவர் என்றிவரை ஓர்ந்திலையே - நட்புடையாய் ...522

எம்மான் படைத்தஉயிர் இத்தனைக்குட் சில்லுயிர்பால்
இம்மால் அடைந்ததுநீ என்னினைந்தோ - வம்மாறில் ...523

எம்பந்த மேநினக்கிங் கில்லையென்றால் மற்றையவர்
தம்பந்தம் எவ்வாறு தங்கியதே - சம்பந்தர் ...524

அற்றவருக் கற்றசிவ னாமெனுமப் பொன்மொழியை(121)
மற்றைமொழி போன்று மறந்தனையே - சிற்றுயிர்க்குக் ...525

கற்பனையில் காய்ப்புளதாய்க் காட்டும் பிரபஞ்சக்
கற்பனையை மெய்யென்று கண்டனையே - பற்பலவாம் ...526

தூரியத்தில்(122) தோன்றொலிபோல் தோன்றிக் கெடுமாயா
காரியத்தை மெய்யெனநீ கண்டனையே - சீரியற்றும் ...527

ஆடகத்தில் பித்தளையை ஆலித் திடுங்கபட
நாடகத்தை மெய்யென்று நம்பினையே - நீடகத்தில் ...528

காயவித்தை யாலக் கடவுள் இயற்றுமிந்த
மாயவித்தை மெய்யெனநீ வாழ்ந்தனையே - வாயவித்தை ...529

இப்படக மாயை யிருள்தமமே என்னுமொரு

முப்படகத் துள்ளே முயங்கினையே - ஒப்பிறைவன் ...530

ஆனவொளி யிற்பரையாம் ஆதபத்தி னால்தோன்றும்

கானலினை நீராய்க் களித்தனையே - ஆனகிரி ...531

யாசத்தி யென்றிடுமோர் அம்மைவிளை யாட்டெனுமிப்

பாசத்தி னுள்ளே படர்ந்தனையே - நேசத்தின் ...532

பொய்யொன்றுண் மெய்யிற் புகும்பால லீலைதனை

மெய்யென்று வீணில் விரிந்தனையே - பொய்யென்று ...533

மீட்டுநின்ற லீலா வினோத மெனுங்கதையைக்

கேட்டுநின்றும் அந்தோ கிளர்ந்தனையே - ஈட்டிநின்ற ...534

காலத்தை வீணில் கழிக்கும் படிமேக

சாலத்தை மெய்யாய்த் தருக்கினையே - சாலத்தில் ...535

கண்மையகன் றோங்குமந்த காரத்தில் செம்மாப்புற்

றுண்மையொன்றுங் காணா துழன்றனையே - வண்மையிலாய் ...536

இங்கு நினைப்பெரியோர் என்னினைப்பார் ஏமாப்பில்

கங்கு லினைப்பகலாய்க் கண்டனையே - தங்குறுமித் ...537

தேகாதி பொய்யெனவே தேர்ந்தார் உரைக்கவும்நீ

மோகாதிக் குள்ளே முயல்கின்றாய் - ஓகோநும் ...538

கோமுடிக்கண் தீப்பற்றிக் கொண்டதென்றால் மற்றதற்குப்

பூமுடிக்கத் தேடுகின்றோர் போன்றனையே - மாமுடிக்கும் ...539

வாழ்வுநிலை யன்றிமைப்பில் மாறுகின்ற தென்றுரைத்தும்

வீழ்வுகொடு(123)வாளா விழுகின்றாய் - தாழ்வுறநும் ...540

விண்டுறுங்கை வீடனலால் வேகின்ற தென்னவுட்போய்

உண்டுறங்கு கின்றோரை ஒத்தனையே - தொண்டுலகங் ...541

கானமுயற் கொம்பாய்க் கழிகின்ற தென்கின்றேன்

நீநயமுற் றந்தோ நிகழ்கின்றாய் - ஆனநும்மூர் ...542

வெள்ளத்தி னால்முழுகி விட்டதென்றால் சென்றுகடை

கொள்ளத் திரிபவர்போல் கூடினையே - கொள்ளவிங்கு ...543

கண்டனவெல் லாம்நிலையாக் கைதவமென் கின்றேன்நீ

கொண்டவைமுற் சேரக் குறிக்கின்றாய் - உண்டழிக்க ...544

ஊழிவெள்ளம் வந்ததென்றால் உண்பதற்கும் ஆடுதற்கும்

ஊழிநன்னீ(124)ரோவென்பார் ஒத்தனையே - ஏழியற்றும் ...545

தற்புவனம் போகம் தனுகரணம் என்கின்ற

சொற்பனத்தில் அந்தோ துவன்றினையே - பற்பகலும் ...546

உண்டனவே உண்கின்றாய் ஓர்ந்தனவே ஓர்கின்றாய்

கண்டனவே கண்டு களிக்கின்றாய் - கொண்டனவே ...547

கொண்டியங்கு கின்றாய் குறித்தனவே பிற்குறித்துப்

பண்டறியார் போலப் படர்கின்றாய் - பண்டறிந்து ...548

சொல்லாடி நின்றனவே சொல்கின்றாய் மற்றிதனை

நல்லோர்கள் கண்டால் நகையாரோ - செல்லான ...549

காலம்போல் இங்குநிகழ் காலமுங்காண் கின்றியெதிர்

காலமற்றும் அத்திறம்மேற் காண்குவையேல் - சாலவுமுன் ...550

போதுசெலா முன்னமனு பூதியைநீ நாடாமல்

யாதுபயன் எண்ணி இனைகின்றாய் - தீதுசெயும் ...551

வீணவத்தை யெல்லாம் விளைக்கும் திறல்மூல

ஆணவத்தி னாலே அழிந்தனையே - ஆணவத்தில் ...552

நீயார் எனஅறியாய் நின்னெதிரில் நின்றவரை

நீயார் எனவினவி நீண்டனையே - ஓயாமல் ...553

ஊனின்ற ஒன்றின் உளவறியாய் அந்தோநீ

நானென்று சொல்லி நலிந்தனையே - நானென்று ...554

சொல்லுதியோ சொல்லாயோ துவ்வாமை பெற்றொருநீ

அல்லலுறுங் காலத் தறைகண்டாய் - அல்லவெலாம் ...555

நீஇங்கே நான்அங்கே நிற்கநடு வேகுதித்தால்

நீஎங்கே நான்எங்கே நின்றறிகாண் - நீஇங்கு ...556

ஒன்றெடுக்கச் சென்றுமற்றை ஒன்றெடுக்கக் காண்கின்றேன்

இன்றடுத்த நீஎங் கிருந்தனையே - மன்றடுத்த ...557

தாளா தரித்தேநின் றன்னைமறந் துய்யாது

வாளா மதத்தின் மலிகின்றாய் - கேளாயிச் ...558

சார்பிலொன்று விட்டொழிந்தால் சாலமகிழ் கிற்பேனான்

சோர்புகொண்டு நீதான் துயர்கின்றாய் - சார்புபெருந் ...559

தூவென்று நானிவணஞ் சும்மா இருந்தாலும்

வாவென் றெனையும் வலிக்கின்றாய் - ஓவுன்றன் ...560

சூழ்ச்சியறி யேன்நீ சுழல்கின்ற போதெல்லாம்

சூழ்ச்சியிலே நானும் சுழல்கின்றேன் - நீட்சியில்நீ ...561

காலசைத்தால் யானும் கடிதில் தலையசைப்பேன்

மாலசைத்த நின்புணர்ப்பின் வாறெதுவோ - வாலுமண்டக் ...562

கூவத்தில் யானோர் குடநீ கயிற்றோடும்

ஏவல்கொ ளுமேழை என்கேனோ - பாவத்தில் ...563

சுற்றுண்ட நீகடலில் தோன்றுசுழி யாகஅதில்

எற்றுண்ட நான்திரணம் என்கேனோ - பற்றிடுநீ ...564

சங்கற்ப மாஞ்சூறை தானாக நானாடும்

அங்கட் சருகென் றறைகேனோ - பொங்குற்ற ...565

சேலைவிரா யோர்தறியில் செல்குழைநீ பின்தொடரும்

நூலிழைநான் என்று நுவல்கேனோ - மாலிடுநீ ...566

துள்ளுறுப்பின் மட்பகைஞன் சுற்றாழி யாகவதின்

உள்ளுறுப்பே நானென் றுரைக்கேனோ - எள்ளுறுநீ ...567

பாழலைவா னேகும் பருந்தாக அப்பருந்தின்

நீழலைநான் என்று நினைகேனோ - நீழலுறா ...568

நின்வசம்நான் என்றுலகு நிந்தைமொழி கின்றதலால்

என்வசம்நீ என்ப திலைகண்டாய் - என்வசம்நீ ...569

ஆனால் எளியேனுக் காகாப் பொருளுளவோ

வானாடர் வந்து வணங்காரோ - ஆனாமல்(125) ...570

எண்ணுதற்கும் பேசுதற்கும் எட்டாப் பரஞ்சோதிக்

கண்ணுதலும் அங்கைக் கனியன்றோ - எண்ணுமிடத் ...571

தென்செய்வே னோர்கணமும் என்சொல்வழி நில்லாமல்
கொன்செய்வேன் என்று குதிக்கின்றாய் - வன்செய்யும் ...572

சிந்தோடும்(126) ஓர்வடவைத் தீயும் கரத்தடைப்பர்
அந்தோ உனையார் அடக்குவரே - வந்தோடும் ...573

கச்சோதம்(127) என்னக் கதிரோன் தனையெடுப்பர்
அச்சோ உனையார் அடக்குவரே - வைச்சோங்கு ...574

மூவுலகும் சேர்த்தொருதம் முன்றானை யின்முடிவர்
ஆவுனையும் இங்கார் அடக்குவரே - மேவுபல ...575

தேசமென்றும் காலமென்றும் திக்கென்றும் பற்பலவாம்
வாசமென்றும் அவ்வவ் வழக்கென்றும் - மாசுடைய ...576

போகமென்றும் மற்றைப் புலனென்றும் பொய்அகலா
யோகமென்றும் பற்பலவாம் யூகமென்றும் - மேகமென்றும் ...577

வானென்றும் முந்நீர் மலையென்றும் மண்ணென்றும்
ஊனென்றும் மற்றை உறவென்றும் - மேல்நின்ற ...578

சாதியென்றும் வாழ்வென்றும் தாழ்வென்றும் இவ்வுலக
நீதியென்றும் கன்ம நெறியென்றும் - ஓதரிய ...579

அண்டமென்றும் அண்டத் தசைவும் அசைவுமலாப்
பண்டமென்றும் சொல்பவெலாம் பன்முகங்கள் - கொண்டிருந்த ...580

உன்நினைவி னுள்ளே உதித்திட் டுலவிநிற்ப
எந்நினைவு கொண்டோ மற் றிவ்வுலகர் - எந்நவையும் ...581

தந்தோன் எவனோ சதுமுகனுண் டென்பார்கள்

அந்தோநின் செய்கை அறியாரே - அந்தோநான் ...582

ஆமென்றால் மற்றதனை அல்லவென்பாய் அல்லவென்றால்

ஆமென்பாய் என்னை அலைக்கின்றாய் - நாம்அன்பாய் ...583

என்றும் பிறந்திறவா இன்பம் அடைதுமென்றால்

நன்றென் றொருப்படுவாய் நண்ணுங்கால் - தொன்றெனவே (128) ...584

செல்கிற்பாய் செல்லாச் சிறுநடையில் தீமையெலாம்

நல்கிற்பாய் என்னேநின் நட்புடைமை - சொல்கிற்பில் ...585

ஆவதுவும் நின்னால் அழிவதுவும்நின் னாலெனயான்

நோவதுவும் கண்டயலில் நோக்கினையே - தாவுமெனக் ...586

காணவலம் பெண்ணவலம் ஆகும் பொருளவலம்

ஊணவலம் உற்றாரோ டூரவலம் - பூணவலம் ...587

ஊன்அவலம் அன்றியும்என் உற்றதுணை யாம்நீயும்

தான்அவலம் என்றாலென் சாற்றுவதே - நான்இவணம் ...588

இன்பமெது கண்டேமால் இச்சையெலாம் துன்பமதில்

துன்பம் பிறப்பென்றே சோர்கின்றேன் - வன்புடைய ...589

இப்பிறவித் துன்பத்தி னும்திதியில் துன்பமது

செப்பரிதாம் என்றே திகைக்கின்றேன் - செப்பிறப்பின் ...590

ஓயாத துன்பம் உரைக்க உடம்பெல்லாம்

வாயாகி னும்போத மாட்டாதேல் - ஏஏநாம் ...591

செய்வதென்னோ என்று தியங்குகின்றேன் இவ்வணம்நான்

நைவதெல்லாம் கண்டு நடந்தனையே - கைவருமிவ் ...592

இல்லிக் குடமுடைந்தால் யாதாமென் றுன்னுடன்யான்

சொல்லித் திரிந்துமெனைச் சூழ்ந்திலையே - வல்இயமன் ...593

நாளையோ இன்றோ நடக்கின்ற நாட்களிலெவ்

வேளையோ தூது விடில்அவர்கள் - கேளையோ ...594

நல்லோம் எனினும் நடவார் நடவார்நாம்

செல்லோம் எனினுமது செல்லாதே - வல்லீர்யாம் ...595

இன்சொலினோம் இன்றிங் கிருந்துவரு வோம்எனயாம்

என்சொலினும் அச்சொலெலாம் ஏலாதே - மன்சொலுடைத் ...596

தாமரையோன் மான்முதலோர் தாம்அறையா ராயிலன்று

நாமறைவோம் என்றல் நடவாதே - நாமிவணம் ...597

அந்நாள் வருமுன்னர் ஆதி அருளடையும்

நன்னாள் அடைதற்கு நாடுதுங்காண் - என்னாநின் ...598

றோதுகின்றேன் கேட்டும் உறார்போன் றுலகியலில்

போதுகின்றாய் யாது புரிகிற்பேன் - தீதுநன்றோ ...599

டேற்றவழி நாள்உறவாம் என்னைவிட்டுத் தாமதமா

நேற்றையுற வோடுறவு நேர்ந்தனையே - சாற்றுமந்த ...600

தாமதமே ஓரவித்தை தாமதமே ஆவரணம்

தாமதமே மோக சமுத்திரம்காண் - தாமதமென் ...601

றையோ ஒருநீ அதனோடு கூடினையால்

பொய்யோநாம் என்று புகன்றதுவே - கையாமல் ...602

ஒன்னலர்போல் கூடுவா ரோடொருநீ கூடுங்கால்

என்னைநினை யாயென்சொ லெண்ணுதியோ - பன்னுறுநின் ...603

தீதெல்லாம் நானாதி சேடர்பல ராய்ப்பிரமன்

போதெல்லாம் சொல்லிடினும் போதாதே - ஆதலினால் ...604

வைகின்றேன் வாழ்த்தாய் மதித்தொருநீ செய்வதெல்லாம்

செய்கின்றாய் ஈதோர் திறமன்றே - உய்கிற்பான் ...605

வாடுகின்றேன் நின்னை மதித்தொருநான் நீமலத்தை

நாடுகின்றாய் ஈதோர் நலமன்றே - கூடுகின்ற ...606

ஈண்டோர் அணுவாய் இருந்தநீ எண்டிசைபோல்

நீண்டாய் இஃதோர் நெறியன்றே - வேண்டாநீ ...607

மற்றவர்போல் அன்றே மனனேநின் வண்புகழை

முற்றுமிவண் ஆர்தான் மொழிவாரே - சுற்றிமனம் ...608

தானடங்கின் எல்லாச் சகமும் அடங்குமொரு

மானடங்கொள் பாத மலர்வாய்க்கும் - வானடங்க ...609

எல்லா நலமும் இதனால் எனமறைகள்

எல்லாம் நின்சீரே எடுத்தியம்பும் - எல்லார்க்கும் ...610

மாகமங்கொண் டுற்ற மனோலயமே வான்கதியென்

றாமகங்கள் நின்சீர் அறைந்திடுங்காண் - ஆகுமிந்த ...611

நன்மை பெறுமேன்மை நண்ணியநீ நின்னுடைய

தன்மைவிடல் அந்தோ சதுரலஇப் - புன்மையெலாம் ...612

விட்டொழித்து நான்மொழியும் மெய்ச்சுகத்தை நண்ணுதிநீ

இட்டிழைத்த அச்சுகந்தான் யாதென்னில் - கட்டழித்த ...613

வேடம் சுகமென்றும் மெய்யுணர்வை யின்றிநின்ற

மூடம் சுகமென்றும் முன்பலவாம் - தோடம்செய் ...614

போகம் சுகமென்றும் போகம் தரும்கரும

யோகம் சுகமென்றும் உண்டிலையென் - றாகஞ்செய் ...615

போதம் சுகமென்றும் பொன்றல்சுகம் என்றும்விந்து

நாதம் சுகமென்றும் நாம்பொருளென் - றோதலஃ ...616

தொன்றே சுகமென்றும் உட்கண் டிருக்குமந்த

நன்றே சுகமென்றும் நாம்புறத்தில் - சென்றேகண் ...617

டாற்றல் சுகமென்றும் அன்பறியாச் சூனியமே

ஏற்ற சுகமென்றும் இவ்வண்ணம் - ஏற்றபடி ...618

வெல்லுகின்றோர் போன்று விரிநீர் உலகிடையே

சொல்லுகின்றோர் சொல்லும் சுகமன்று - சொல்லுகின்ற ...619

வானாதி தத்துவங்கள் மாய்த்தாண் டுறுகின்ற

நானாதி மூன்றிலொன்று நாடாமல் - ஆனாமை ...620

எள்ளும் பகலும் இரவுமிலா ஓரிடத்தில்

உள்ளும் புறம்பும் ஒருபடித்தாய் - வள்ளலென ...621

வாழும் பரசிவத்தின் வன்னிவெப்பம் போலமுற்றும்

சூழும் சுகமே சுகம்கண்டாய் - சூழ்வதனுக் ...622

கெவ்வா றிருந்தால் இயலும் எனிலம்ம

இவ்வா றிருந்தால் இயலாதால் - செவ்வாற்றில் ...623

பற்றற்றான் பற்றினையே பற்றியிடல் வேண்டுமது

பற்றற்றால் அன்றிப் பலியாதால் - பற்றற்றல் ...624

வேதனையால் ஈங்கு விரியும் சகப்பழக்க

வாதனைபோய் நீங்கிலன்றி வாராதால் - வாதனையும் ...625

ஈனமந்தோ இவ்வுலகம் என்றருளை நாடுகின்ற

ஞானம்வந்தால் அன்றி நலியாதால் - ஞானமது ...626

போகமுற்றும் பொய்யெனவே போதும் அனித்தியவி

வேகமுற்றால் அன்றி விளங்காதால் - ஆகவஃ ...627

துண்ணவந்தால் போலுமிவண் உற்றுவிசா ரித்திடுமோர்

எண்ணம்வந்தால் அன்றி இசையாதால் - எண்ணமது ...628

பங்கமடைந் தார்அவையைப் பாராது சாதுக்கள்

சங்கமடைந் தாலன்றிச் சாராதால் - இங்கதனால் ...629

வீழ்முகத்த ராகிநிதம் வெண்ணீ றணிந்தறியாப்

பாழ்முகத்தோர் தம்பால் படர்ந்துறையேல் - பாழ்முகத்தில் ...630

பேயாட உள்ளறியாப் பித்தாட நின்னுடனே

வாயாடு வோர்பால் மருவிநில்லேல் - நீயாடிப் ...631

பேதித் திடவும் பிறழ்ந்திடவும் நின்னுடனே

வாதித் திடுவோர்பால் வாய்ந்துறையேல் - சாதித்துச் ...632

சைவமெங்கே வெண்ணீற்றின் சார்பெங்கே மெய்யான

தெய்வமெங்கே என்பவரைச் சேர்ந்துறையேல் - உய்வதெங்கே ...633

தீராச் சிவநிந்தை செய்துசிறு தேவர்களை

நேராய்ப் பிதற்றுவர்பால் நேர்ந்துறையேல் - ஓராமல் ...634

எள்ளென்றும் தெய்வமென்ப தில்லை இதுதெளிந்து

கொள்ளென்றும் துள்ளுகின்றோர் கூட்டமுறேல் - நள்ளொன்று ...635

நாமென்றும் நம்மையன்றி நண்ணும் பிரமமில்லை

ஆமென்றும் சொல்பவர்பால் ஆர்ந்துறையேல் - தாமொன்ற ...636

எல்லா அறிவும் எமதறிவே என்றுரைக்கும்

பொல்லா வலக்காரர் பொய்உகவேல் - புல்லாக ...637

அற்பமே மற்றவெலாம் ஆயிலழி(129) யாக்காய

கற்பமே வத்துவென்பார் கண்ணடையேல் - சிற்சிலவாம் ...638

சித்திகளே வத்துவென்போர்ச் சேர்ந்துறையேல் பன்மாயா

சத்திகளே வத்துவென்போர் சார்படையேல் - பொத்தியஇச் ...639

சன்மமே தோற்றும் தரமாம் திரமனித்த

கன்மமே வத்துவென்போர் கண்ணுறையேல் - கன்மமிகு ...640

மாகம் கதியென்பார் மாட்டுறையேல் பல்போக

யோகம் பொருளென்பா ரூடுறையேல் - ஏகம்கொள் ...641

மண்ணென்பார் வானென்பார் வாய்முச் சுடரென்பார்

பெண்ணென்பார் மற்றவர்தம் பேருரையேல் - மண்ணின்பால் ...642

மன்னுரையாச் சில்லோர் மரந்தெய்வம் என்பார்மற்

றென்னுரையார் ஈண்டவர்பால் எய்தியிடேல் - மன்நலங்கள் . ..643

பூத்தால் சிறுவர்களும் பூசா பலம்என்பார்

தேற்றார் சிவபூசை செய்யாராய்ப் - பூத்தாவி . ..644

வீறுகின்ற பூசையிலென் வீண்என்று வீண்பாழ்வாய்க்

கூறுகின்ற பேயர்கள்பால் கூடியுறேல் - மாறுகின்ற . ..645

நீட்கோல வாழ்க்கையெலாம் நீத்திடுவோன் பொன்அறைக்குத்

தாட்கோல் இடுவாரைச் சார்ந்துறையேல் - நீட்கோல . .. 646

மெய்யொழுக்கத் தார்போல் வெளிநின் றகத்தொழியாப்

பொய்யொழுக்கத் தார்பால் பொருந்தியுறேல் - பொய்யொழுக்கில் ...647

பொய்ந்நூல் பதறிப் புலம்புகின்ற பித்தர்கள்பால்

அந்நூல் விரும்பி அடைந்தலையேல் - கைந்நேர்ந்து ...648

கோடாது கோடி கொடுத்தாலும் சைவநெறி

நாடா தவரவையை நண்ணியிடேல் - கோடாது ... ...649

கொல்லா விரதமது கொள்ளாரைக் காணிலொரு

புல்லாக எண்ணிப் புறம்பொழிக - எல்லாமும் ... ...650

ஆகநவில் கின்றதென்நம் ஐயனுக்கன் பில்லாரை

நீகனவி லேனும் நினையற்க - ஏகனடிக் ... ...651

கன்பே வடிவாய் அருளே உயிராய்ப்பே

ரின்பே உணர்வாய் இசைந்தாரும் - அன்பாகிக் ... ...652

கண்டிகையே பூணிற் கலவையே வெண்ணீறாய்க்

கொண்டிகவாச் சார்பு குறித்தாரும் - தொண்டுடனே ... ...653

வாய்மலரால் மாலை வகுத்தலொடு நம்மிறைக்குத்

தூய்மலரால் மாலை தொடுப்பாரும் - சார்மலரோன் ... ...654

ஏர்நந்த னப்பணிகண் டிச்சையுற நம்மிறைக்குச்

சீர்நந்த னப்பணிகள் செய்வோரும் - நார்நந்தாத் ... ...655

தீயின்மெழு காச்சிந்தை சேர்ந்துருகி நம்மிறைவாழ்

கோயில்மெழு காநின்ற கொள்கையரும் - மேயினரைத் ... ...656

தாயில் வளர்க்கும் தயவுடைய நம்பெருமான்

கோயில் விளக்கும் குணத்தோரும் - தூயஅருள் ... ..657

இன்புடனே தீபமுதல் எல்லாச் சரியைகளும்

அன்புடனே செய்தங் கமர்வாரும் - அன்புடனே ... ..658

அண்ணியமேல் அன்பர்க் கமுதீத லாதிசிவ

புண்ணியமே நாளும் புரிவோரும் - புண்ணியமாம் ... ..659

தேனே அமுதே சிவமே சிவமேஎம்

மானேஎன் றேத்தி மகிழ்வாரும் - வானான ... .. 660

மன்னே அருட்கடலே மாணிக்க மேஎங்கள்

அன்னேஎன் றுன்னி அமர்வோரும் - நன்னேயப் ... ...661

பண்ணீர் மொழியால் பரிந்தேத்தி ஆனந்தக்

கண்ணீர்கொண் டுள்ளம் களிப்போரும் - உண்ணீரில் ... ...662

பண்டுகண்டும் காணாப் பரிசினராய்ப் பொன்மேனி

கண்டுகண்டு நாளும் களிப்போரும் - தொண்டடையும் ... ...663

பொற்பதிகம் என்றெண்ணிப் போற்றிஒரு மூவர்களின்

சொற்பதிகம் கொண்டு துதிப்போரும் - சொற்பனத்தும் ... ...664

மாசகத்தில் சேர்க்காத மாணிக்கம் என்றதிரு

வாசகத்தை வாயால் மலர்வோரும் - வாசகத்தின் ... ...665

மன்னிசைப்பால் மேலோர் வகுத்தேத்தி நின்றதிரு

இன்னிசைப்பா ஆதி இசைப்போரும் - மன்னிசைப்பின் ... ...666

நல்வாழ் வருளுகின்ற நம்பெருமான் மான்மியங்கள்

சொல்வோரும் கேட்டுத் தொழுவோரும் - சொல்வாய்ந்த ... ...667

தாதாவென் றன்புடனே சாமகீ தங்கள்முதல்

வேதாக மங்கள் விரிப்போரும் - வேதாந்தம் ... ....668

சேர்ந்தோர்க் கருளும் சிவமே பொருளென்று

தேர்ந்தே சிவபூசை செய்வோரும் - ஆர்ந்தேத்தி ... ...669

நன்னெஞ்சே கோயிலென நம்பெருமான் தன்னைவைத்து

மன்னும் சிவநேயம் வாய்ந்தோரும் - முன்அயன்றன் ... ...670

அஞ்செழுத்தெல் லாம்கேட்கில் அஞ்செழுத்தாம் எம்பெருமான்

அஞ்செழுத்தால் அர்ச்சித் தமர்வோரும் - அஞ்செனவே ... ..671

விஞ்சும் பொறியின் விடயமெலாம் நம்பெருமான்

செஞ்சுந் தரப்பதத்தில் சேர்த்தோரும் - வஞ்சம்செய் ... ..672

பொய்வே தனைநீக்கும் புண்ணியன்பால் தம்முயிரை

நைவே தனமாக்கும் நல்லோரும் - செய்வேலை ... ..673

நீட நடத்தலொடு நிற்றல்முதல் நம்பெருமான்

ஆடல் அடித்தியானம் ஆர்ந்தோரும் - வாடலறத் ... .. 674

தூய நனவிற் சுழுத்தியொடு நம்பெருமான்

நேயம் நிகழ்த்தும் நெறியோரும் - மாயமுறு ... ...675

மானதுவாய் நின்ற வயம்நீக்கித் தானற்றுத்

தானதுவாய் நிற்கும் தகையோரும் - வானமதில் ... ...676

வானங்கண் டாடும் மயில்போன்று நம்பெருமான்

தானங்கண் டாடும் தவத்தோரும் - மோனமொடு ... ...677

தாழ்சடையும் நீறும் சரிகோவ ணக்கீளும்

வாழ்சிவமும் கொண்டு வதிவோரும் - ஆழ்நிலைய ... ...678

வாரியலை போன்றசுத்த மாயையினால் ஆம்பூத

காரியங்க ளாதியெலாம் கண்டொழித்து - ஊர்இயங்கத் ... ...679

தஞ்சம் தருமலரோன் தத்துவமாம் பூதங்கள்

ஐஞ்சும் பொறியஞ்சும் அஞ்சறிவும் - அஞ்செனுமோர் ... ...680

வாக்குமுதல் ஐஞ்சுமற்று மாலோன்தன் தத்துவமாம்

ஊக்கும் கலைமுதலாம் ஓரேழும் - நீக்கிஅப்பால் ... ...681

மேவி விளங்குசுத்த வித்தைமுதல் நாதமட்டும்

தாவி வயங்குசுத்த தத்துவத்தில் - மேவிஅகன் ... ...682

றப்பால் அருள்கண் டருளால் தமைத்தாம்கண்

டப்பால் பரவெளிகண் டப்பாலுக் - கப்பாலும் ... ...683

தீராச் சுயமாய்ச் சிதானந்த மாம்ஒளியைப்

பாரா இருந்த படியிருந்து - பேராது .....684

கண்டதுவென் றொன்றும் கலவாது தாம்கலந்து

கொண்டசிவ யோகியராம் கொற்றவரும் - அண்டரிய ... ...685

சத்துவத்தில் சத்துவமே தம்முருவாய்க் கொண்டுபர

தத்துவத்தின் நிற்கும் தகவோரும் - அத்துவத்தில் ... ...686

தீதும் சுகமும் சிவன்செயலென் றெண்ணிவந்த

யாதும் சமமா இருப்போரும் - கோதுபடக் ... ...687

கூறும் குறியும் குணமும் குலமுமடி

ஈறும் கடையும் இகந்தோரும் - வீறுகின்ற ... ...688

சேந்தி னடைந்தவெலாஞ் சீரணிக்கச் சேர்சித்த

சாந்தி யுடனே சரிப்போரும் - சாந்திபெறத் ... ...689

தம்மையுறும் சித்தெவையும் தாமுவத்தல் செய்யாமல்

செம்மையுடன் வாழும் திறலோரும் - எம்மையினும் ... ...690

ஆராமை ஓங்கும் அவாக்கடல்நீர் மான்குளம்பின்

நீராக நீந்தி நிலைத்தோரும் - சேராது ... ...691

தம்பொருளைக் கண்டே சதானந்த வீட்டினிடைச்

செம்பொருளைச் சார்ந்த திறத்தோரும் - மண்பொருள்போய்த் ... ...692

தாயர் எனமாதர் தம்மையெண்ணிப் பாலர்பித்தர்

பேயரென நண்ணும் பெரியோரு - மீயதனின் ... ...693

எய்ப்பரிசாம் ஓர்திரணம் எவ்வுலகும் செய்தளிக்க

மெய்ப்பரிசஞ் செய்யவல்ல வித்தகரும் - மெய்ப்படவே ... ...694

யாவும் அறிந்தும் அறியார்போன் றெப்பொழுதும்

சாவும் பிறப்பும் தவிர்ந்தோரும் - ஓவலின்றி ... ...695

வைதிடினும் வாழ்களென வாழ்த்தி உபசாரம்

செய்திடினும் தன்மை திறம்பாரும் - மெய்வகையில் ... ...696

தேறா வுலகம் சிவமயமாய்க் கண்டெங்கும்

ஏறா திழியா திருப்போரும் - மாறாது ...697

மோனந்தான் கொண்டு முடிந்தவிடத் தோங்குபர

மானந்தா தீதத் தமர்ந்தோரும் - தாம்நந்தாச் ... ...698

சாதுக்கள் ஆமவர்தம் சங்க மகத்துவத்தைச்

சாதுக்க ளன்றியெவர் தாமறிவார் - நீதுக்கம் ... ...699

நீங்கிஅன்னோர் சங்கத்தில் நின்றுமகிழ்ந் தேத்திநிதம்

ஆங்கவர்தாட் குற்றேவல் ஆய்ந்தியற்றி - ஓங்குசிவ ... ...700

பஞ்சாட் சரத்தைப் பகரருளே நாவாக

எஞ்சாப் பரிவுடனே எண்ணியருள் - செஞ்சோதித் ... ...701

தாதொன்று தும்பைமுடித் தாணுஅடி யொன்றிமற்றை

யாதொன்றும் நோக்கா தமைந்திடுக - தீதென்ற ... ...702

பாழ்வாழ்வு நீங்கப் பதிவாழ்வில் எஞ்ஞான்றும்

வாழ்வாய்என் னோடும் மகிழ்ந்து. ......703

திருச்சிற்றம்பலம்...

---------

84. மான்ற மலத்தாக்கு என்பது மயக்குதலைச் செய்கின்ற மலத்தினெதிரீடு எனக்கொள்க. தொ.வே.

85. சில் துரும்பு - அற்பமாகிய துரும்பு. தொ.வே...

86. சங்கமம், சங்கமென விகாரமாயிற்று. தொ.வே....

87. இந்தா என்பது மரூஉச் சொல். 'இதனைத் தரப்பெற்றுக்கொள்' என்னும் பொருட்டு. அல்லதூஉம் 'இங்கு வா' என்னும் எளிமை கண்ணிய ஏவலுமாம். தொ.வே.

88. காதரவு செய்தல் - அச்சுறுத்தல். தொ.வே.

89. நிச்சல் - நாடோறும். தொ.வே.

90. நட்டு ஊர்ந்து எனப்பிரித்து நேசித்துச் சென்று எனப் பொருள் கொள்க. தொ.வே.

91. வாழ்நாள், வாணாள் என மரீஇயது. தொ.வே.

92. கற்றூணை, சற்றுணை எனக் குறுகி நின்றது. தொ.வே.

93. அந்தோ, அத்தோ என வலிக்கும் வழி வலித்தது. தொ.வே.

94. ஐந்து, அஞ்சு என மருவிற்று. அஃது ஈண்டு ஆகுபெயராய்ச் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தாசைகளைக் குறித்து நின்றது. தொ.வே.

95. ஏறுதல் என்பது ஈண்டொழுக்கத்தின் மேனின்றது. தொ.வே.

96. வெல் நடை எனப் பிரித்துக் கொள்க. அற்றேல் கொடு நடை எனப் பொருள் கொள்ளின் வெந்நடை எனப் பொது நகரமாக்கிக்கொள்க. தொ.வே.

97. நெஞ்சு எனும் மொழிக்கு முன்னுள்ள கீற்று(-) நீங்கின் நஞ்சு என்றாகும். ச.மு.க.

98. நொறில் - விரைவு. தொ.வே.

99. பெண்ணிங்கு மாமாத்திரையின் வருத்தனமென் றெண்ணினை - என்பதற்குப் பேண் என்று பொருள்கொண்டனை என்பது பொருள். தொ.வே.

100. சிலந்தி - புண்கட்டி. ச.மு.க.

101. வம்பு, வப்பென விகாரமாயிற்று. தொ.வே.

102. பொத்துதல் - மூடுதல். தொ.வே.

103. மேடு - வயிறு. தொ.வே.

104. ஈரல், ஈருள் என மரீஇ வழங்கியது. தொ.வே.

105. பூட்டு - உடற்பொருத்து. தொ.வே.

106. நேர்தல் - விடை கொடுத்தல் என்னும் பொருட்டு. தொ.வே.

107. ஈண் டொருபுடைஒத்தமை தோற்றியாங் கழியு நிலையின்மையான் என்று கொள்க. தொ.வே.

108. வேளாணோன்காகளம் - குயில். தொ.வே.

109. பிரமசாயை - பிரமகத்தி. தொ.வே.

110. கட்டுதல், ஈண்டுத் தழுவுதல் என்னும்பொருட்டு. தொ.வே.

111. நொறில் - அடக்கம். தொ.வே.

112. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம் போக்கும் அதுவிளிந் தற்று. திருக்குறள்332. ( 34 நிலையாமை 2 )

113. விடற்கு, விட்டற்கென விகாரமாயிற்று. தொ.வே.

114. செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும் இல்அதனின் தீய பிற. திருக்குறள் 302 ( 31 வெகுளாமை 2 )

115. தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால் தன்னையே கொல்லும் சினம். திருக்குறள் 305 ( 31 வெகுளாமை 5 )

116.அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை. திருக்குறள் 151 (16 பொறையுடைமை 1 )

117. உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு. திருக்குறள் 339 ( 34 நிலையாமை 9 )

118. நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை உடைத்துஇவ் வுலகு. திருக்குறள் 336 ( 34 நிலையாமை 6 )

119. புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழித்திட்(டு) ஐம்மேலுந்தி அலமந்த போதாக அஞ்சேல்என்(று) அருள் செய்வான் அமரும்கோயில் வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழைஎன் றஞ்சிச் சிலமந்தி அலமந்து மரமேறிமுகில் பார்க்கும் திருவையாறே. ஞானசம்பந்தர் தேவாரம் 1394 ( 1 - 130 - 1 )

120. ஐயைந்து - ஐந்தும் ஐந்தும், உம்மைத்தொகை. தொ.வே.

121. வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியும் கொற்றவன் தனக்கு மந்திரி யாய குலச்சிறை குலாவிநின் றேத்தும் ஒற்றைவெள் விடையன் உம்பரார் தலைவன் உலகினில் இயற்கையை ஒழித்திட்(டு) அற்றவர்க்கு அற்ற சிவன்உறை கின்ற ஆலவாய் ஆவதும் இதுவே. ஞானசம்பந்தர் தேவாரம் - 4091 ( 3 - 120 - 2 )

122. தூரியம் - பறை. தொ.வே.

123. வீழ்வு - விருப்பம். தொ.வே.

124. ஊழி - கடல். தொ.வே.

125. ஆனாமை - விட்டு நீங்காமை. தொ.வே.

126. சிந்து - கடல். தொ.வே.

127. கச்சோதம் - மின்மினிப்பூச்சி. தொ.வே.

128. தொன்று - பழமை. தொ.வே.

129. ஆயில்-ஆராயுங்கால். தொ.வே

------------------------------

4.சிவநேச வெண்பா (1966 - 2069)

காப்பு

.

நேரிசை வெண்பா

1966

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்

சொன்னவனே தூயமெய்ச் சுகத்தவனே - என்னவனே(130)

சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே

தற்பரனே நின்தாள் சரண். ...1

1967

வீறுடையாய் வேலுடையாய் விண்ணுடையாய் வெற்புடையாய்

நீறுடையாய் நேயர்கடந் நெஞ்சுடையாய் - கூறு

முதல்வாஓர் ஆறு முகவா முக்கண்ணன்

புதல்வாநின் தாளென் புகல். ...2

1968

சீர்சான்ற வேதச் செழும்பொருளே சிற்சொருபப்

பேர்சான்ற உண்மைப் பிரமமே - நேர்சான்றோர்

நாடும் பரசிவமே நாயேனுக் கன்புநின்பால்

நீடும் படிநீ நிகழ்த்து. ...1

1969

நினைப்பித்தா நித்தா நிமலா எனநீ

நினைப்பித்தால் ஏழை நினைப்பேன் - நினைப்பின்

மறப்பித்தாலி யானும் மறப்பேன் எவையும்

பிறப்பித்தாய் என்னாலென் பேசு. ...2

1970

உருவாய் உருவில் உருவாகி ஓங்கி

அருவாய் அருவில் அருவாய் - ஒருவாமல்

நின்றாயே நின்ற நினைக்காண்ப தெவ்வாறோ

என்தாயே என்தந்தை யே. ...3

1971

வெஞ்சஞ் சலமா விகாரம் எனும்பேய்க்கு

நெஞ்சம் பறிகொடுத்து நிற்கின்றேன் - அஞ்சலென

எண்தோள் இறையே எனையடிமை கொள்ளமனம்

உண்டோ இலையோ உரை. ...4

1972

அப்பாலுன் சித்தம் அறியேன் எனக்கம்மை

அப்பாநின் தாளன்றி யார்கண்டாய் - இப்பாரில்

சாதிஉரு வாக்குந் தளைஅவிழ்த்துத் தன்மயமாம்

சோதிஉரு வாக்குந் துணை. ...5

1973

பேரறிவால் கண்டும் பெரியோர் அறியாரேல்

யாரறிவார் யானோ அறிகிற்பேன் சீர்கொள்

வெளியாய் வெளிக்குள் வெளியாய் ஒளிக்குள்

ஒளியாகி நின்ற உனை. ...6

1974

வந்தித்தேன்(131) பிட்டுகந்த வள்ளலே நின்னடியான்

சிந்தித்தேன் என்றல் சிரிப்பன்றோ - பந்தத்தாஞ்

சிந்துசிந்திப் பித்தெனது சிந்தையுணின் பொன்னருளே

வந்துசிந்திப் பித்தல் மறந்து. ...7

1975

தேனென்ற இன்சொல் தெரிந்துநினைப் பாடுகின்றேன்

நானென் றுரைத்தல் நகைஅன்றோ - வான்நின்ற

ஒண்பொருணீ உள்ளம் உவந்தருளால் இன்சொல்லும்

வண்பொருளும் ஈதல் மறந்து. ...8

1976

அண்டங்க ளோஅவற்றின் அப்பாலோ இப்பாலோ

பண்டங்க ளோசிற் பரவெளியோ - கண்தங்க
வெம்பெருமால் நீத்தவர்தம் மெய்யுளமோ தையலொடும்
எம்பெருமான் நீவாழ் இடம். ...9

1977

பூதமெங்கே மற்றைப் புலனெங்கே பல்லுயிரின்
பேதமெங்கே அண்டமெனும் பேரெங்கே - நாதமெங்கே
மன்வடிவ மெங்கே மறையெங்கே வான்பொருணீ
பொன்வடிவம் கொள்ளாத போது. ...10

1978

பேருருவோ சோதிப் பிழம்பாகும் சின்மயத்தின்
சீருருவோ தேவர் திருவுருவம் - நேருருவில்
சால்புறச்சேர் அண்ட சராசரங்கள் எல்லாம்நும்
கால்விரற்பால் நின்றொடுங்குங் கால். ...11

1979

இன்றோ பகலோ இரவோ வருநாளில்
என்றோ அறியேன் எளியேனே - மன்றோங்கும்
தாயனையாய் நின்னருளாம் தண்ணமுதம் உண்டுவந்து
நாயனையேன் வாழ்கின்ற நாள். ...12

1980

மண்ணாசை வெற்பே மறிகடலே பொன்னாசை
பெண்ணாசை ஒன்றேஎன் பேராசை - நண்ணாசை

விட்டார் புகழும் விடையாய்நான் பொய்யாசைப்
பட்டால் வருமே பதம். ...13

1981

தந்தையாய் என்னுடைய தாயாய்த் தகைசான்ற
சிந்தையாய் என்னருமைத் தேசிகனாய் - முந்தையாய்
நீடு மறைமுதலாய் நின்றாயென் னேநெஞ்சம்
வாடுமெனை ஆட்கொள்ளா வாறு. ...14

1982

ஊட்டுகின்ற வல்வினையாம் உட்கயிற்றால் உள்ளிருந்தே
ஆட்டுகின்ற நீதான் அறிந்திலையோ - வாட்டுகின்ற
அஞ்சுபுல வேடர்க் கறிவைப் பறிகொடுத்தென்
நெஞ்சுபுலர்ந் தேங்கு நிலை. ...15

1983

ஆமோ அலவோ அறியேன் சிறியேனான்
தாமோ தரனும் சதுமுகனும் - தாமே
அடியா தரிக்கும் அரசேநின் ஏவல்
அடியார்குற் றேவலடி யன். ...16

1984

உன்னால் எனக்காவ துண்டதுநீ கண்டதுவே
என்னால் உனக்காவ தேதுளது - சொன்னால்யான்
தந்தார்வத் தோடும் தலைமேற்கொண் டுய்கிற்பேன்

எந்தாயிங் கொன்றுமறி யேன். ...17

1985

சென்றுரைப்பார் சொல்லில் சிறியான் பயமறியான்

என்றுரைப்பார் ஆங்கதுமற் றென்னளவே - மன்றகத்தோய்

அஞ்சேல் விழியாரை அந்தகனென் பார்மொழியை

அஞ்சேன் சிறிதும் அறிந்து. ...18

1986

எந்தாய்நின் அன்பர்தமக் கின்னமுதம் இட்டேத்திச்

சிந்தா நலமொன்றுஞ் செய்தறியேன் - நந்தாச்

சுவருண்ட மண்போலும் சோறுண்டேன் மண்ணில்

எவருண் டெனைப்போல் இயம்பு. ...19

1987

உப்பிருந்த ஓடோ ஓதியோ உலாப்பிணமோ

வெப்பிருந்த காடோ வினைச்சுமையோ - செப்பறியேன்

கண்ணப்ப ருக்குக் கனியனையாய் நிற்பணியா

துண்ணப் பருக்கும் உடம்பு. ...20

1988

ஏலார் மனைதொறும்போய் ஏற்றெலும்புந் தேயநெடுங்

காலாய்த் திரிந்துழலுங் கால்கண்டாய் - மாலாகித்

தொண்டே வலஞ்செய்கழல் தோன்றலே நின்கோயில்

கண்டே வலம்செய்யாக் கால். . ..21

1989

ஏசும் பிறர்மனையில் ஏங்கஅவர் ஈயுமரைக்
காசும் பெறவிரிக்கும் கைகண்டாய் - மாசுந்த
விண்டுஞ் சிரங்குனிக்கும் வித்தகனே நின்தலத்தைக்
கண்டுஞ் சிரங்குவியாக் கை. ...22

1990

வெங்கோடை ஆதபத்தின் வீழ்நீர் வறந்துலர்ந்து
மங்கோடை யாதல் வழக்கன்றோ - எங்கோநின்
சீர்சிந்தாச் சேவழியின் சீர்கேட்டும் ஆனந்த
நீர்சிந்தா வன்கண் நிலை. ...23

1991

வாயன்றேல் வெம்மலஞ்செல் வாய்அன்றேல் மாநரக
வாயன்றேல் வல்வெறிநாய் வாயென்பாம் - தாயென்றே
ஊழ்த்தாதா ஏத்தும் உடையாய் சிவஎன்றே
வாழ்த்தாதார் நாற்றப்பாழ் வாய். ...24

1992

வீட்டார் இறைநீ விடைமேல் வரும்பவனி
காட்டா தடைத்த கதவன்றோ - நாட்டாதி
நல்லத் துளையா நதிச்சடையாய் என்னுஞ்சீர்ச்
செல்லத் துளையாச் செவி. ...25

1993

புல்லங் கணநீர்ப் புழையென்கோ புற்றென்கோ

சொல்லும் பசுமட் டுளையென்கோ - சொல்லுஞ்சீர்

வீயாத பிஞ்ஞகப்பேர் மெல்லினத்தின் நல்லிசைதான்

தோயாத நாசித் துளை. ...26

1994

தோற்றமிலாக் கண்ணுஞ் சுவையுணரா நாவுதிகழ்

நாற்றம் அறியாத நாசியுமோர் - மாற்றமுந்தான்

கேளாச் செவியுங்கொள் கீழ்முகமே நீற்றணிதான்

மூளாது பாழ்த்த முகம். ...27

1995

மான்றாம் உலக வழக்கின் படிமதித்து

மூன்றா வகிர்ந்தே முடைநாற - ஊன்றா

மலக்கூடை ஏற்றுகினு மாணாதே தென்பால்

தலக்கூடல் தாழாத் தலை. ...28

1996

கல்லென்கோ நீரடைக்குங் கல்லென்கோ கான்கொள்கருங்

கல்லென்கோ காழ்வயிரக் கல்லென்கோ - சொல்லென்கோ

இன்றா லெனிலோ எடுத்தாளெம் மீன்றாணோர்

நின்தாள் நினையாத நெஞ்சு. ...29

1997

சொல்லுகின்ற உள்ளுயிரைச் சோர்வுற் றிடக்குளிர்ந்து

கொல்லுகின்ற நஞ்சில் கொடிதன்றோ - ஒல்லுமன்றத்

தெம்மானின் தாட்கமல மெண்ணாது பாழ்வயிற்றில்

சும்மா அடைக்கின்ற சோறு. ...30

1998

சோர்படைத்துச் சோறென்றால் தொண்டைவிக்கிக் கொண்டுநடு

மார்படைத்துச் சாவுகினும் மாநன்றே - சீர்படைக்க

எண்ணுவார் எண்ணும் இறைவாநின் தாளேத்தா

துண்ணுவார் உண்ணும் இடத்து. ...31

1999

ஓகோ கொடிதே உறும்புலையர் இல்லினிடத்

தேகோ வதைத்துண் செயலன்றோ - வாகோர்தம்

வாழ்மனையில் செல்லாது வள்ளனினை ஏத்தாதார்

பாழ்மனையில் சென்றுண் பது. ...32

2000

வீயுமிடு காட்டகத்துள் வேம்பிணத்தின் வெந்தசையைப்

பேயுமுடன் உண்ணஉண்ணும் பேறன்றோ - தோயுமயல்

நீங்கஅருள் செய்வோய்வெண் ணீறணியார் தீமனையில்

ஆங்கவரோ டுண்ணு மது. ...33

2001

கண்குழைந்து வாடும் கடுநரகின்பேருரைக்கில்

ஒண்குழந்தை யேனுமுலை உண்ணாதால் - தண்குழைய

பூண்டாதார்க் கொன்றைப் புரிசடையோய் நின்புகழை
வேண்டாதார் வீழ்ந்து விரைந்து. ...34

2882

கண்ணுதலே நின்தாள் கருதாரை நேசிக்க
எண்ணுதலே செய்யேன்மற் றெண்ணுவனேல் - மண்ணுலகில்
ஆமிடத்து நின்னடியார்க் காசையுரைத் தில்லையென்பார்
போமிடத்திற் போவேன் புலர்ந்து. ...35

2883

அங்கணனே நின்னடிக்கோர் அன்பிலரைச் சார்ந்தோர்தம்
வங்கணமே(132) வைப்பதினான் வைத்தேனேல் - அங்கணத்தில்
நீர்போல் எனது நிலைகெடுக நிற்பழிசொற்
றார்போ லழிக தளர்ந்து. ...36

2884

பூவைவிட்டுப் புல்லெடுப்பார் போலுன் திருப்பாதத்
தேவைவிட்டு வெம்பிறவித் தேவர்களைக் - கோவையிட்டுக்
கூவுவார் மற்றவரைக் கூடியிடேன் கூடுவனேல்
ஓவுவா ராவ(133) லுனை. ...37

2885

யாதோ கனற்கண் யமதுதெர் காய்ச்சுகருந்
தாதோ தழற்பிழம்போ தானறியேன் - மீதோங்கு
நாட்டார்தார்க் கொன்றை நதிச்சடையோய் அஞ்செழுத்தை

நாட்டாதார் வாய்க்கு நலம். ...38

2006

என்னெஞ்சோர் கோயில் எனக்கொண்டோய் நின்நினையார்

தன்னெஞ்சோ கல்லாமச் சாம்பிணத்தார் - வன்நெஞ்சில்

சார்ந்தவர்க்கும் மற்றவரைத் தானோக்கி வார்த்தைசொல

நேர்ந்தவர்க்கும் கல்லாகும் நெஞ்சு. ...39

2007

வெள்ளமுதும் தேனும் வியன்கரும்பும் முக்கனியின்

உள்ளமுதும் தெள்ளமுதும் ஒவ்வாதால் கள்ளமிலா

நின்னன்பர் தம்புகழின் நீள்மதுரந் தன்னைஇனி

என்னென்ப தையா இயம்பு. ...40

2008

பண்ணாலுன் சீரினைச்சம் பந்தர்சொல வெள்ளெலும்பு

பெண்ணான தென்பார் பெரிதன்றே - அண்ணாஅச்

சைவவழி வாஞான சம்பந்தர் சீருரைக்கில்

தெய்வவழி வாஞ்சாம்பர் சேர்ந்து. ...41

2009

எங்கோவே யான்புகலி எம்பெருமான் தன்மணத்தில்

அங்கோர் பொருட்சுமையாள் ஆனேனேல் - இங்கேநின்

தாள்வருந்த வேண்டேன் தடைபட்டேன் ஆதலினிந்

நாள்வருந்த வேண்டுகின்றேன் நான். ...42

2010

பூவுக் கரையரும்வான் புங்கவரும் போற்றுதிரு
நாவுக் கரையரெனு நன்னாம - மேவுற்ற
தொண்டர்க்கு நீகட்டுச் சோறெடுத்தாய் என்றறிந்தோ
தொண்டர்க்குத் தொண்டனென்பார் சொல். ...43

2011

எம்பரவை(134) யோமண் ணிடந்தலைந்தான் சுந்தரனார்
தம்பரவை வீட்டுத் தலைக்கடையாய் - வெம்பணையாய்
வாயிற் படியாய் வடிவெடுக்க நேர்ந்திலனே
மாயப்பெயர் நீண்ட மால். ...44

2012

நண்ணித் தலையால் நடக்கின்றோம் என்பதெங்கள்
மண்ணில் பழைய வழக்கங்காண் - பண்ணிற்சொல்
அம்மையார் வாமத்தோய் ஆயினுமுன் காரைக்கால்
அம்மையார் போனடந்தார் ஆர். ...45

2013

வேத முடிவோ விளங்கா கமமுடிவோ
நாத முடிவோ நவில்கண்டாய் - வாதமுறு
மாசகர்க்குள் நில்லா மணிச்சுடரே மாணிக்க
வாசகர்க்கு நீஉரைத்த வாறு. ...46

2014

ஆர்கொண்டார் சேய்க்கறியிட் டாரே சிறுத்தொண்டப்

பேர்கொண்டார் ஆயிடிலெம் பெம்மானே - ஓர்தொண்டே

நாய்க்குங் கடைப்பட்ட நாங்களென்பேம் எங்கள்முடை

வாய்க்கிங் கிஃதோர் வழக்கு. ...47

2015

கோள்கொண்ட நஞ்சங் குடியேனோ கூர்கொண்ட

வாள்கொண்டு வீசி மடியேனோ - கீள்கொண்ட

அங்கோவ ணத்தழகா அம்பலவா நின்புகழை

இங்கோதி வாழ்த்தாத யான். ...48

2016

ஆயாக் கொடியேனுக் கன்புடையாய் நீஅருளிங்

கீயாக் குறையே இலைகண்டாய் - மாயாற்கும்(135)

விள்ளாத் திருவடிக்கீழ் விண்ணப்பம் யான்செய்து

கொள்ளாக் குறையே குறை. ...49

2017

பெற்றிடுதாய் போல்வதுநின் பெற்றியென்பேன் பிள்ளையது

மற்றழுதால் கேட்டும் வராதங்கே - சற்றிருக்கப்

பெற்றாள் பொறுப்பள் பிரானீ பொறுக்கினுநின்

பொற்றாள் பொறாஎம் புலம்பு. ...50

2018

பொன்போல் பொறுமையுளார் புந்திவிடாய் நீஎன்பார்

என்போல் பொறுமையுளார் யார்கண்டாய் - புன்போக

அல்லாம் படிசினங்கொண் டாணவஞ்செய் இன்னாமை

எல்லாம் பொறுக்கின்றேன் யான். ...51

2019

முன்மணத்தில் சுந்தரரை முன்வலுவில் கொண்டதுபோல்

என்மணத்தில் நீவந் திடாவிடினும் - நின்கணத்தில்

ஒன்றும் ஒருகணம்வந் துற்றழைக்கில் செய்ததன்றி

இன்றும் ஒருமணஞ்செய் வேன். ...52

2020

செய்யார் அழலேநின் செம்மேனி என்னினும்என்

அய்யாநின் கால்பிடித்தற் கஞ்சேன்காண் - மெய்யாஇஞ்

ஞான்றுகண்டு நான்மகிழ நந்தொண்டன் என்றெனையும்

ஏன்றுகொண் டால்போதும் எனக்கு. ...53

2021

என்பாலோ என்பால் இராதோடு கின்றமனத்

தின்பாலோ அம்மனத்தைச் சேர்மாயை - தன்பாலோ

யார்பால் பிழையுளதோ யானறியேன் என்னம்மை

ஓர்பால் கொளநின்றோய் ஓது. ...54

2022

நாணவத்தி னேன்றனையோ நாயேனை மூடிநின்ற

ஆணவத்தை யோநான் அறியேனே - வீணவத்தில்

தீங்குடையாய் என்னஇவண் செய்பிழையை நோக்கிஅருட்
பாங்குடையாய் தண்டிப் பது. ...55

2023

எச்சம் பெறுமுலகோர் எட்டிமர மானாலும்
பச்சென் றிருக்கப் பகர்வார்காண் - வெச்சென்ற
நஞ்சனையேன் குற்றமெலாம் நாடாது நாதஎனை
அஞ்சனையேல் என்பாய் அமர்ந்து. ...56

2024

கற்றறியேன் நின்னடிச்சீர் கற்றார் கழகத்தில்
உற்றறியேன் உண்மை உணர்ந்தறியேன் - சிற்றறிவேன்
வன்செய்வேல் நேர்விழியார் மையலினேன் மாதேவா
என்செய்வேன் நின்னருளின் றேல். ...57

2025

மெய்தான் உடையோர் விரும்புகின்ற நின்அருளென்
செய்தால் வருமோ தெரியேனே - பொய்தாவு
நெஞ்சினேன் மன்றுள் நிருத்தா நினைக்கேட்க
அஞ்சினேன் அன்பின்மை யால். ...58

2026

மாதேவா ஓவா மருந்தேவா மாமணிஇப்
போதேவா என்றே புலம்புற்றேன் - நீதாவா
யானாலுன் சித்த மறியேன் உடம்பொழிந்து

போனாலென் செய்வேன் புகல். . ..59

2027

கொன்செய்தாற் கேற்றிடுமென் குற்றமெலாம் ஐயஎனை

என்செய்தால் தீர்ந்திடுமோ யானறியேன் - முன்செய்தோய்

நின்பால் எனைக்கொடுத்தேன் நீசெய்க அன்றிஇனி

என்பால் செயலொன் றிலை. ...60

2028

எண்ணிலெளி யேன்தவிர எல்லா உயிர்களுநின்

தண்ணிலகுந் தாணீழல் சார்ந்திடுங்காண் - மண்ணில்வருந்

தீங்கென்ற எல்லாமென் சிந்தையிசைந் துற்றனமற்

றாங்கொன்றும் இல்லாமை யால். ...61

2029

தாரம்விற்றுஞ் சேய்விற்றுந் தன்னைவிற்றும் பொய்யாத

வாரம்வைத்தான் முன்னிங்கோர் மன்னனென்பர் - நாரம்வைத்த

வேணிப் பிரானதுதான் மெய்யாமேல் அன்றெனைநீ

ஏணிற் பிறப்பித்த தில். ...62

2030

உள்ளொன்ற நின்னடிக்கன் புற்றறியேன் என்னுளத்தின்

வெள்ளென்ற வன்மை விளங்காதோ - நள்ளொன்ற

அச்சங்கொண் டேனைநினக் கன்பனென்பர் வேழத்தின்

எச்சங்கண் டாற்போல வே. ...63

2031

நீத்தாடுஞ்(136) செஞ்சடையாய் நீள்வேடங் கட்டிவஞ்சக்

கூத்தாடு கின்றேனைக் கொண்டுசிலர் - கூத்தாநின்

பத்தனென்பர் என்னோ பகல்வேடத் தார்க்குமிங்கு

வித்தமிலா(137) நாயேற்கும் வேறு. ...64

2032

அன்புடையார் இன்சொல் அமுதேறு நின்செவிக்கே

இன்புடையாய் என்பொய்யும் ஏற்குங்கொல் - துன்புடையேன்

பொய்யுடையேன் ஆயினுநின் பொன்னருளை வேண்டுமொரு

மெய்யுடையேன் என்கோ விரைந்து. ...65

2033

என்னா ருயிர்க்குயிராம் எம்பெருமான் நின்பதத்தை

உன்னார் உயிர்க்குறுதி உண்டோ தான் - பொன்னாகத்

தார்க்கும் சதுமுகர்க்கும் தானத்த(138)வர்க்குமற்றை

யார்க்கும் புகலுன் அருள். ...66

2034

வெள்ளைப் பிறைஅணிந்த வேணிப் பிரானேநான்

பிள்ளைப் பிராயத்தில் பெற்றாளை - எள்ளப்

பொறுத்தாள்அத் தாயில் பொறுப்புடையோய் நீதான்

வெறுத்தால் இனிஎன்செய் வேன். ...67

2035

ஆயிரமன்றே நூறும் அன்றேஈ ரைந்தன்றே
ஆயிரம்பேர் எந்தைஎழுத் தைந்தேகாண் - நீஇரவும்
எல்லு நினைத்தியென ஏத்துகினும் எந்தாய்வீண்
சல்லுமனம் என்செய்கேன் செப்பு. ...68

2936

வஞ்சந் தருங்காம வாழ்க்கையிடைச் சிக்கியஎன்
நெஞ்சந் திருத்தி நிலைத்திலையே - எஞ்சங்
கரனே மழுக்கொள் கரனே அரனே
வரனே சிதம்பரனே வந்து. . ..69

2937

தாழ்விக்கும் வஞ்சச் சகமால் ஒழித்தென்னை
வாழ்விக்கும் நல்ல மருந்தென்கோ - வீழ்விக்கும்
ஈங்கான மாயை இகந்தோர்க் கருள்வோய்நின்
பாங்கான செம்பொற் பதம். ...70

2938

ஏசொலிக்கு மானிடனாய் ஏன்பிறந்தேன் தொண்டர்கடந்
தூசொலிப்பான் கல்லாகத் தோன்றிலனே - தூசொலிப்பான்
கல்லாகத் தோன்றுவனேல் காளகண்டா நாயேனுக்
கெல்லா நலமுமுள தே. ...71

2939

குற்றம் பலசெயினுங் கோபஞ் செயாதவருள்

சிற்றம் பலமுறையுஞ் சிற்பரனே - வெற்றம்பல்

பொய்விட்டால் அன்றிப் புரந்தருளேன் என்றெனைநீ

கைவிட்டால் என்செய்கேன் காண். ...72

2840

தீக்குணத்தார் யாவருமென் சீடரெனில் என்னுடைய

தீக்குணத்தின் எல்லைஎவர் தேர்கிற்பார் - ஊக்கமிகு

நல்லோர்க் களிக்கு நதிச்சடையோய் எற்கருளில்

எல்லோர்க்கும் ஐயுறவா மே. ...73

2841

இன்படையான் றன்புடையான் என்றேழை யேன்தலைமேல்

அன்புடையாய் நீயமைப்பித் தாயிதற்கு - வன்படையா

தெவ்வண்ணம் நின்னெஞ் சிசைந்ததோ அந்நாளில்

இவ்வண்ணம் என்றறிகி லேன். ...74

2842

ஏய்ப்பிறப்பொன் றில்லாதோய் என்பிறப்பின் ஏழ்மடங்கோர்

பேய்ப்பிறப்பே நல்ல பிறப்பந்தோ - வாய்ப்புலகம்

வஞ்சமெனத் தேக மறைத்தழிமண் வையாமல்

அஞ்சிநின்னோ டாடும் அது. ...75

2843

கோடும் பிறைச்சடையோய் கோளுங் குறும்புஞ்சாக்

காடும் பிணிமூப்புங் காணார்காண் - நீடுநினைக்

கண்டார் அடிப்பொடியைக் கண்டார் திருவடியைக்
கண்டார் வடிவுகண்டார் கள். ...76

2044

மாலெங்கே வேதனுயர் வாழ்வெங்கே இந்திரன்செங்
கோலெங்கே வானோர் குடியெங்கே - கோலஞ்சேர்
அண்டமெங்கே அவ்வவ் வரும்பொருளெங் கேநினது
கண்டமங்கே நீலமுறாக் கால். ...77

2045

எவ்வேளை யோவருங்கூற் றெம்பாலென் றெண்ணுகின்ற
அவ்வேளை தோறும் அழுங்குற்றேன் - செவ்வேளை
மிக்களித்தோய் நின்கழற்கால் வீரத்தை எண்ணுதொறும்
எக்களித்து வாழ்கின்றேன் யான். ...78

2046

துற்சங்கத் தோர்கணமுந் தோயாது நின்னடியர்
சற்சங்கத் தென்றனைநீ தான்கூட்டி - நற்சங்கக்
காப்பான் புகழுன் கழற்புகழைக் கேட்பித்துக்
காப்பாய் இஃதென் கருத்து. ...79

2047

என்னமுதே முக்கண் இறையே நிறைஞான
இன்னமுதே நின்னடியை ஏத்துகின்றோர் - பொன்னடிக்கே
காதலுற்றுத் தொண்டுசெயக் காதல்கொண்டேன் எற்கருணீ

காதலுற்றுச் செய்தல் கடன். ...80

2048

ஆரா அமுதே அருட்கடலே நாயேன்றன்

பேராத வஞ்சப் பிழைநோக்கி - யாரேனு

நின்போல்வார் இல்லாதோய் நீயே புறம்பழித்தால்

என்போல்வார் என்சொல்லார் ஈங்கு. ...81

2049

மெய்யாக நின்னைவிட வேறோர் துணையில்லேன்

ஐயா அதுநீ அறிந்ததுகாண் - பொய்யான

தீதுசெய்வேன் தன்பிழையைச் சித்தங் குறித்திடல்யான்

யாதுசெய்வேன் அந்தோ இனி. ...82

2050

திண்ணம் அறியாச் சிறியேன் உளத்திருக்கும்

எண்ணம் அறிந்தாய் இரங்குகிலாய் - அண்ணலுன்பால்

நித்தம் இரங்காஎன் நெஞ்சமர்ந்த தாலோநின்

சித்தம் இரங்காச் செயல். ...83

2051

கொன்னஞ்சேன் தன்பிழையைக் கூர்ந்துற்று நானினைக்கில்

என்நெஞ்சே என்னை எரிக்குங்காண் - மன்னுஞ்சீர்

எந்தாய்நின் சித்தத்திற் கேதாமோ நானறியேன்

சிந்தா குலனென்செய் வேன். ...84

2952

நின்னன்பர் தம்பால் நிறுத்துதியோ அன்றிஎனைப்

பொன்னன்பர் தம்பால் புணர்த்துதியோ - பொன்னன்பர்

வைவமே என்னும் வறியேன் அறியேனென்

தெய்வமே நின்றன் செயல். ...85

2953

என்சிறுமை நோக்கா தெனக்கருளல் வேண்டுமென்றே

நின்பெருமை நோக்கிஇங்கு நிற்கின்றேன் - என்பெரும

யாதோநின் சித்தம் அறியேன் அடியேற்கெப்

போதோ அருள்வாய் புகல். ...86

2954

எந்தாயென் குற்றமெலாம் எண்ணுங்கால் உள்நடுங்கி

நொந்தா குலத்தின் நுழைகின்றேன் - சிந்தாத

காள மகிழ்நின் களக்கருணை எண்ணுதொறும்

மீளமகிழ் கின்றேன் விரைந்து. ...87

2955

எள்ளலே என்னினுமோர் ஏத்துதலாய்க் கொண்டருளெம்

வள்ளலே என்றனைநீ வாழ்வித்தால் - தள்ளலே

வேண்டுமென யாரே விளம்புவார் நின்னடியர்

காண்டுமெனச் சூழ்வார் களித்து. ...88

2956

வேணிக்க மேவைத்த வெற்பே விலையில்லா
மாணிக்க மேகருணை மாகடலே - மாணிக்கு
முன்பொற் கிழியளித்த முத்தேஎன் ஆருயிர்க்கு
நின்பொற் கழலே நிலை. ...89

2957

முத்தேவர் போற்று முதற்றேவ நின்னையன்றி
எத்தேவர் சற்றே எடுத்துரைநீ - பித்தேன்செய்
குற்றமெலாம் இங்கோர் குணமாகக் கொண்டென்னை
அற்றமிலா தாள்கின் றவர். ...90

2958

கங்கைச் சடையாய்முக் கண்ணுடையாய் கட்செவியாம்
அங்கச் சுடையாய் அருளுடையாய் - மங்கைக்
கொருகூ றளித்தாய் உனைத்தொழுமிந் நாயேன்
இருகூ றளித்தேன் இடர்க்கு. ...91

2959

பேசத் தெரியேன் பிழையறியேன் பேதுறினும்
கூசத் தெரியேன் குணமறியேன் - நேசத்தில்
கொள்ளுவார் உன்னடிமைக் கூட்டத்தார் அல்லாதார்
எள்ளுவார் கண்டாய் எனை. ...92

2960

ஊணே உடையேஎன் றுட்கருதி வெட்கமிலேன்

வீணேநன் னாளை விடுகின்றேன் - காணேனின்

செம்பாத மேஎன்றுந் தீராப் பொருளென்று

நம்பாத நாயடியேன் நான். ...93

2961

சிவமே சிவஞானச் செல்வமே அன்பர்

நவமே தவமே நலமே நவமாம்

வடிவுற்ற தேவேநின் மாக்கருணை யன்றோ

படிவுற்ற என்னுட் பயன். ...94

2962

கோளாக்கிக் கொள்ளுங் கொடியே னையுநினக்கோர்

ஆளாக்கிக் கொள்ளற் கமைவாயேல் - நீளாக்குஞ்

செங்கேச வேணிச் சிவனேஎன் ஆணவத்திற்

கெங்கே இடங்காண் இயம்பு. ...95

2963

திண்ணஞ்சற் றீந்திடநின் சித்தம் இரங்காத

வண்ணஞ்சற் றேதெரிய வந்ததுகாண் - எண்ணெஞ்சில்

இத்தனையு மென்வினைகள் நீங்கில் இருக்கஅண்டம்

எத்தனையும் போதாமை என்று. ...96

2964

இண்டைச் சடையோய் எனக்கருள எண்ணுதியேல்

தொண்டைப் பெறுமென் துயரெல்லாம் - சண்டைக்கிங்

குய்ஞ்சே(139 )மனலூடும் லூட்டத்திற் கென்னுடைய
நெஞ்சே பிறகிடுங்காண் நின்று. ...97

2065

கண்ணா ணிழுதைகள்பாற் காட்டிக் கொடுக்கிலெனை
அண்ணா அருளுக் கழகன்றே - உண்ணாடு
நின்னடியார் கூட்டத்தில் நீரிவனைச் சேர்த்திடுமின்
என்னடியான் என்பாய் எடுத்து. ...98

2066

கண்ணப்பன் ஏத்துநுதற் கண்ணப்ப மெய்ஞ்ஞான
விண்ணப்ப நின்றனக்கோர் விண்ணப்பம் - மண்ணிற்சில்
வானவரைப் போற்றும் மதத்தோர் பலருண்டு
நானவரைச் சேராமல் நாட்டு. ...99

2067

பொன்னின் றொளிரும் புரிசடையோய் நின்னையன்றிப்
பின்னொன் றறியேன் பிழைநோக்கி - என்னை
அடித்தாலு நீயே அணைத்தாலு நீயே
பிடித்தேனுன் பொற்பாதப் பேறு. ...100

2068

துற்குணத்தில் வேறு தொடர்வேன் எனினுமற்றை
நற்குணத்தில் உன்சீர் நயப்பேன்காண் - சிற்குணத்தோய்
கூற்றுதைத்த நின்பொற் குரைகழற்பூந் தாளறிக

வேற்றுரைத்தே னில்லை விரித்து. ...101

2069

இப்பாரில் என்பிழைகள் எல்லாம் பொறுத்தருளென்
அப்பாநின் தாட்கே அடைக்கலங்காண் - இப்பாரில்
நானினது தாணீழல் நண்ணுமட்டும் நின்னடியர்
பானினது சீர்கேட்கப் பண். ...102

திருச்சிற்றம்பலம்

-----------

130. மன்னவனே - தொ.வே.1; 2. பொ. சு., பி. இரா., ச. மு. க., சென்னைப் பதிப்புகள்.

131. வந்தி தேன் எனற்பாலது வந்தித்தேன் என விரித்தல் விகாரமாயிற்று. ஈண்டு தேன் என்பது இனிமை. தொ.வே.

132. வங்கணம் - நட்பு. தொ.வே.

133. ஆவலென்பதனை எதிர்காலத் தன்மை ஒருமை வினைமுற்றாகக் கொள்க. தொ. வே.

134. எம்பர - அண்மை விளி, இறை முன்னிலை. தொ. வே.

135. மாயற்கு, மாயாற்கென நீட்டல் விகாரமாயிற்று. தொ.வே.

136. நீத்தம், நீத்தெனக் குறைந்து நின்றது. தொ.வே.

137. வித்தம் - அறிவு. தொ.வே.

138. தானம் - சுவர்க்கம். தொ.வே.

139. உய்ந்தேம், உய்ஞ்சேம் எனத் திரிந்தது. தொ.வே.

-----------------

## 5. மகாதேவ மாலை (2070 - 2170)

### காப்பு

.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2070

கருணைநிறைந் தகம்புறமும் துளும்பிவழிந்
துயிர்க்கெல்லாம் களைகண் ஆகித்
தெருள் நிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற
கண்ணுடையோய் சிதையா ஞானப்
பொருள்நிறைந்த மறையமுதம் -பாழிகின்ற
மலர்வாயோய் பொய்ய னேன்றன்
மருள்நிறைந்த மனக்கருங்கற் பாறையும்உட்
கசிந்துருக்கும் வடிவத் தோயே. ... 1

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2071

உலகநிலை முழுதாகி ஆங்காங் குள்ள
உயிராகி உயிர்க்குயிராம் ஒளிதான் ஆகிக்
கலகநிலை அறியாத காட்சி யாகிக்
கதியாகி மெய்ஞ்ஞானக் கண்ண தாகி
இலகுசிதா காசமதாய்ப் பரமா காச
இயல்பாகி இணையொன்றும் இல்லா தாகி

அலகில்அறி வானந்த மாகிச் சச்சி
தானந்த மயமாகி அமர்ந்த தேவே. ...1

2972

உலகமெலாந் தனிநிறைந்த உண்மை யாகி
யோகியர்தம் அநுபவத்தின் உவப்பாய் என்றும்
கலகமுறா உபசாந்த நிலைய தாகிக்
களங்கமற்ற அருண்ஞானக் காட்சி யாகி
விலகலுறா நிபிடஆ னந்த மாகி
மீதானத் தொளிர்கின்ற விளக்க மாகி
இலகுபரா பரமாய்ச்சிற் பரமாய் அன்பர்
இதயமலர் மீதிருந்த இன்பத் தேவே. ...2<7tr>

2973

வித்தாகி முளையாகி விளைவ தாகி
விளைவிக்கும் பொருளாகி மேலு மாகிக்
கொத்தாகிப் பயனாகிக் கொள்வோ னாகிக்
குறைவாகி நிறைவாகிக் குறைவி லாத
சத்தாகிச் சித்தாகி இன்ப மாகிச்
சதாநிலையாய் எவ்வுயிர்க்குஞ் சாட்சி யாகி
முத்தாகி மாணிக்க மாகித் தெய்வ
முழுவயிரத் தனிமணியாய் முளைத்த தேவே. ...3

2974

வேதாந்த நிலையாகிச் சித்தாந் தத்தின்
மெய்யாகிச் சமரசத்தின் விவேக மாகி
நாதாந்த வெளியாகி முத்தாந் தத்தின்
நடுவாகி நவநிலைக்கு நண்ணா தாகி
மூதாண்ட கோடியெல்லாம் தாங்கி நின்ற
முதலாகி மனாதீத முத்தி யாகி
வாதாண்ட சமயநெறிக் கமையா தென்றும்
மவுனவியோ மத்தினிடை வயங்குந் தேவே. ...4

2975

தோன்றுதுவி தாத்துவித மாய்வி சிட்டாத்
துவிதமாய்க் கேவலாத் துவித மாகிச்
சான்றசுத்தாத் துவிதமாய்ச் சுத்தந் தோய்ந்த
சமரசாத் துவிதமுமாய்த் தன்னை யன்றி
ஊன்றுநிலை வேறொன்று மிலதாய் என்றும்
உள்ளதாய் நிரதிசய உணர்வாய் எல்லாம்
ஈன்றருளுந் தாயாகித் தந்தை யாகி
எழிற்குருவாய்த் தெய்வதமாய் இலங்குந் தேவே. ...5

2976

பரமாகிச் சூக்குமமாய்த் துலெ மாகிப்
பரமார்த்த நிலையாகிப் பதத்தின் மேலாம்
சிரமாகித் திருவருளாம் வெளியாய் ஆன்ம

சிற்சத்தி யாய்ப்பரையின் செம்மை யாகித்

திரமாகித் தற்போத நிவிர்த்தி யாகிச்

சிவமாகிச் சிவானுபவச் செல்வ மாகி

அரமாகி ஆனந்த போத மாகி

ஆனந்தா தீதமதாய் அமர்ந்த தேவே. ...6

2977

இந்தியமாய்க் கரணாதி அனைத்து மாகி

இயல்புருட னாய்க்கால பரமு மாகிப்

பந்தமற்ற வியோமமாய்ப் பரமாய் அப்பால்

பரம்பரமாய் விசுவமுண்ட பான்மை யாகி

வந்தஉப சாந்தமதாய் மவுன மாகி

மகாமவுன நிலையாகி வயங்கா நின்ற

அந்தமில்தொம் பதமாய்த்தற் பதமாய் ஒன்றும்

அசிபதமாய் அதீதமாய் அமர்ந்த தேவே. ...7

2978

நின்மயமாய் என்மயமாய் ஒன்றுங் காட்டா

நிராமயமாய் நிருவிகற்ப நிலையாய் மேலாம்

தன்மயமாய்த் தற்பரமாய் விமல மாகித்

தடத்தமாய்ச் சொரூபமாய்ச் சகச மாகிச்

சின்மயமாய்ச் சிற்பரமாய் அசல மாகிச்

சிற்சொலித மாய்அகண்ட சிவமாய் எங்கும்

மன்மயமாய் வாசகா தீத மாகி

மனாதீத மாய்அமர்ந்த மவுனத் தேவே. ...8

2979

அளவிறந்த நெடுங்காலம் சித்தர் யோகர்

அறிஞர்மலர் அயன்முதலோர் அனந்த வேதம்

களவிறந்தும் கரணாதி இறந்தும் செய்யும்

கடுந்தவத்தும் காண்பரிதாம் கடவு ளாகி

உளவிறந்த எம்போல்வார் உள்ளத் துள்ளே

ஊறுகின்ற தெள்ளமுத ஊற லாகிப்

பிளவிறந்து பிண்டாண்ட முழுதுந் தானாய்ப்

பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரிய தேவே. ...9

2980

வாயாகி வாயிறந்த மவுன மாகி

மதமாகி மதங்கடந்த வாய்மை யாகிக்

காயாகிப் பழமாகித் தருவாய் மற்றைக்

கருவிகர ணாதிகளின் கலப்பாய்ப் பெற்ற

தாயாகித் தந்தையாய்ப் பிள்ளை யாகித்

தானாகி நானாகிச் சகல மாகி

ஓயாத சத்தியெலாம் உடைய தாகி

ஒன்றாகிப் பலவாகி ஓங்குந் தேவே. ...10

2981

அண்டங்கள் பலவாகி அவற்றின் மேலும்

அளவாகி அளவாத அதீத மாகிப்

பிண்டங்கள் அனந்தவகை யாகிப் பிண்டம்

பிறங்குகின்ற பொருளாகிப் பேதந் தோற்றும்

பண்டங்கள் பலவாகி இவற்றைக் காக்கும்

பதியாகி ஆனந்தம் பழுத்துச் சாந்தம்

கொண்டெங்கும் நிழல்பரப்பித் தழைந்து ஞானக்

கொழுங்கடவுள் தருவாகிக் குலவுந் தேவே. . ..11

2982

பொன்னாகி மணியாகிப் போக மாகிப்

புறமாகி அகமாகிப் புனித மாகி

மன்னாகி மலையாகிக் கடலு மாகி

மதியாகி ரவியாகி மற்று மாகி

முன்னாகிப் பின்னாகி நடுவு மாகி

முழுதாகி நாதமுற முழங்கி எங்கும்

மின்னாகிப் பரவிஇன்ப வெள்ளந் தேக்க

வியன்கருணை பொழிமுகிலாய் விளங்குந் தேவே. ...12

2983

அரிதாகி அரியதினும் அரிய தாகி

அநாதியாய் ஆதியாய் அருள தாகிப்

பெரிதாகிப் பெரியதினும் பெரிய தாகிப்

பேதமாய் அபேதமாய்ப் பிறங்கா நின்ற
கரிதாகி வெளிதாகிக் கலைக ளாகிக்
கலைகடந்த பொருளாகிக் கரணா தீதத்
தெரிதான வெளிநடுவில் அருளாம் வண்மைச்
செழுங்கிரணச் சுடராகித் திகழுந் தேவே. ...13

2984

உருவாகி உருவினில்உள் உருவ மாகி
உருவத்தில் உருவாகி உருவுள் ஒன்றாய்
அருவாகி அருவினில்உள் அருவ மாகி
அருவத்தில் அருவாகி அருவுள் ஒன்றாய்க்
குருவாகிச் சத்துவசிற் குணத்த தாகிக்
குணரகிதப் பொருளாகிக் குலவா நின்ற
மருவாகி மலராகி வல்லி யாகி
மகத்துவமாய் அணுத்துவமாய் வயங்குந் தேவே. ...14

2985

சகலமாய்க் கேவலமாய்ச் சுத்த மாகிச்
சராசரமாய் அல்லவாய்த் தானே தானாய்
அகலமாய்க் குறுக்கமாய் நெடுமை யாகி
அவையனைத்தும் அணுகாத அசல மாகி
இகலுறாத் துணையாகித் தனிய தாகி
எண்குணமாய் எண்குணத்தெம் இறையாய் என்றும்

உகலிலாத் தண்ணருள்கொண் டுயிரை யெல்லாம்

ஊட்டிவளர்த் திடுங்கருணை ஓவாத் தேவே. ...15

2986

வாசகமாய் வாச்சியமாய் நடுவாய் அந்த

வாசகவாச் சியங்கடந்த மவுன மாகித்

தேசகமாய் இருளகமாய் இரண்டுங் காட்டாச்

சித்தகமாய் வித்தகமாய்ச் சிறிதும் பந்த

பாசமுறாப் பதியாகிப் பசுவு மாகிப்

பாசநிலை யாகிஒன்றும் பகரா தாகி

நாசமிலா வெளியாகி ஒளிதா னாகி

நாதாந்த முடிவில்நடம் நவிற்றும் தேவே. ...16

2987

சகமாகிச் சீவனாய் ஈச னாகிச்

சதுமுகனாய்த் திருமாலாய் அரன்றா னாகி

மகமாயை முதலாய்க்கூ டத்த னாகி

வான்பிரம மாகிஅல்லா வழக்கு மாகி

இகமாகிப் பதமாகிச் சமய கோடி

எத்தனையு மாகிஅவை எட்டா வான்கற்

பகமாகிப் பரமாகிப் பரம மாகிப்

பராபரமாய்ப் பரம்பரமாய்ப் பதியும் தேவே. ...17

2988

விதியாகி அரியாகிக் கிரீச னாகி
விளங்குமகேச் சுரனாகி விமல மான
நிதியாகுஞ் சதாசிவனாய் விந்து வாகி
நிகழ்நாத மாய்ப்பரையாய் நிமலா னந்தப்
பதியாகும் பரசிவமாய்ப் பரமாய் மேலாய்ப்
பக்கமிரண் டாயிரண்டும் பகரா தாகிக்
கதியாகி அளவிறந்த கதிக ளெல்லாம்
கடந்துநின்று நிறைந்தபெருங் கருணைத் தேவே. ...18

2989

மானாகி மோகினியாய் விந்து மாகி
மற்றவையால் காணாத வான மாகி
நானாகி நானல்ல னாகி நானே
நானாகும் பதமாகி நான்றான் கண்ட
தானாகித் தானல்ல னாகித் தானே
தானாகும் பதமாகிச் சகச ஞான
வானாகி வான்நடுவில் வயங்கு கின்ற
மவுனநிலை யாகியெங்கும் வளருந் தேவே. . ..19

2990

மந்திரமாய்ப் பதமாகி வன்ன மாகி
வளர்கலையாய்த் தத்துவமாய்ப் புவன மாகிச்
சந்திரனாய் இந்திரனாய் இரவி யாகித்

தானவராய் வானவராய்த் தயங்கா நின்ற

தந்திரமாய் இவையொன்றும் அல்ல வாகித்

தானாகித் தனதாகித் தானான் காட்டா

அந்தரமாய் அப்பாலாய் அதற்கப் பாலாய்

அப்பாலுக் கப்பாலாய் அமர்ந்த தேவே. ...20

2091

மலைமேலும் கடன்மேலும் மலரின் மேலும்

வாழ்கின்ற மூவுருவின் வயங்கும் கோவே

நிலைமேலும் நெறிமேலும் நிறுத்து கின்ற

நெடுந்தவத்தோர் நிறைமேலும் நிகழ்த்தும் வேதக்

கலைமேலும் எம்போல்வார் உளத்தின் மேலும்

கண்மேலும் தோள்மேலும் கருத்தின் மேலும்

தலைமேலும் உயிர்மேலும் உணர்வின் மேலும்

தகுமன்பின் மேலும்வளர் தாண்மெய்த் தேவே. . ...21

2092

பொற்குன்றே அகம்புறமும் பொலிந்து நின்ற

பூரணமே ஆரணத்துட் பொருளே என்றும்

கற்கின்றோர்க் கினியசுவைக் கரும்பே தான

கற்பகமே கற்பகத்தீங் கனியே வாய்மைச்

சொற்குன்றா நாவகத்துள் மாறா இன்பம்

தோற்றுகின்ற திருவருட்சீர்ச் சோதி யேவிண்

நிற்கின்ற சுடரேஅச் சுடருள் ஓங்கும்

நீளொளியே அவ்வொளிக்குள் நிறைந்த தேவே. ...22

2893

தேசுவிரித் திருளகற்றி என்றும் ஓங்கித்

திகழ்கின்ற செழுங்கதிரே செறிந்த வாழ்க்கை

மாசுவிரித் திடுமனத்தில் பயிலாத் தெய்வ

மணிவிளக்கே ஆனந்த வாழ்வே எங்கும்

காசுவிரித் திடுமொளிபோல் கலந்து நின்ற

காரணமே சாந்தமெனக் கருதா நின்ற

தூசுவிரித் துடுக்கின்றோர் தம்மை நீங்காச்

சுகமயமே அருட்கருணை துலங்கும் தேவே. ...23

2894

கோவேஎண் குணக்குன்றே குன்றா ஞானக்

கொழுந்தேனே செழும்பாகே குளிர்ந்த மோனக்

காவேமெய் அறிவின்ப மயமே என்றன்

கண்ணேமுக் கண்கொண்ட கரும்பே வானத்

தேவேஅத் தேவுக்குந் தெளிய ஒண்ணாத்

தெய்வமே வாடாமல் திகழ்சிற் போதப்

பூவேஅப் பூவிலுறு மணமே எங்கும்

பூரணமாய் நிறைந்தருளும் புனிதத் தேவே. ...24

2895

வானேஅவ் வானுலவும் காற்றே காற்றின்

வருநெருப்பே நெருப்புறுநீர் வடிவே நீரில்

தானேயும் புவியேஅப் புவியில் தங்கும்

தாபரமே சங்கமமே சாற்று கின்ற

ஊனேநல் உயிரேஉள் ஒளியே உள்ளத்

துணர்வேஅவ் வுணர்வுகலந் தூறு கின்ற

தேனேமுக் கனியேசெங் கரும்பே பாகின்

தீஞ்சுவையே சுவையனைத்தும் திரண்ட தேவே. ...25

2896

விண்ணேவிண் உருவேவிண் முதலே விண்ணுள்

வெளியேஅவ் வெளிவிளங்கு வெளியே என்றன்

கண்ணேகண் மணியேகண் ஒளியே கண்ணுட்

கலந்துநின்ற கதிரேஅக் கதிரின் வித்தே

தண்ணேதண் மதியேஅம் மதியில் பூத்த

தண்ணமுதே தண்ணமுத சார மேசொல்

பண்ணேபண் ணிசையேபண் மயமே பண்ணின்

பயனேமெய்த் தவர்வாழ்த்திப் பரவும் தேவே. ...26

2897

மாணேயத் தவருளத்தே மலர்ந்த செந்தா

மரைமலரின் வயங்குகின்ற மணியே ஞானப்

பூணேமெய்ப் பொருளேஅற் புதமே மோனப்

புத்தமுதே ஆனந்தம் பொலிந்த பொற்பே
ஆணேபெண் உருவமே அலியே ஒன்றும்
அல்லாத பேரொளியே அனைத்துந் தாங்குந்
தூணேசிற் சுகமேஅச் சுகமேல் பொங்குஞ்
சொரூபானந் தக்கடலே சோதித் தேவே. ...27

2998

பூதமே அவைதோன்றிப் புகுந்தொ டுங்கும்
புகலிடமே இடம்புரிந்த பொருளே போற்றும்
வேதமே வேதத்தின் விளைவே வேத
வியன்முடிவே அம்முடிவின் விளங்கும் கோவே
நாதமே நாதாந்த நடமே அந்த
நடத்தினையுள் நடத்துகின்ற நலமே ஞான
போதமே போதமெலாம் கடந்து நின்ற
பூரணமே யோகியருள் பொலிந்த தேவே. ...28

2999

ஞாலமே ஞாலமெலாம் விளங்க வைத்த
நாயகமே கற்பமுதல் நவிலா நின்ற
காலமே காலமெலாம் கடந்த ஞானக்
கதியேமெய்க் கதியளிக்குங் கடவு ளேசிற்
கோலமே குணமேஉட் குறியே கோலங்
குணங்குறிகள் கடந்துநின்ற குருவே அன்பர்

சீலமே மாலறியா மனத்திற் கண்ட

செம்பொருளே உம்பர்பதஞ் செழிக்கும் தேவே. ...29

2100

தத்துவமே தத்துவா தீத மேசிற்

சயம்புவே எங்குநிறை சாட்சி யேமெய்ச்

சத்துவமே சத்துவத்தின் பயனாம் இன்பம்

தந்தருளும் பெருவாழ்வாம் சாமி யேஎம்

சித்தநிலை தெளிவிக்கும் ஒளியே சற்றும்

தெவிட்டாத தெள்ளமுதே தேனே என்றும்

சுத்தநெறி திறம்பாதார் அறிவில் தோய்ந்த

சுகப்பொருளே மெய்ஞ்ஞானம் துலங்கும் தேவே. ...30

2101

யோகமே யோகத்தின் பயனே யோகத்

தொருமுதலே யோகத்தின் ஓங்குந் தூய

போகமே போகத்தின் பொலிவே போகம்

புரிந்தருளும் புண்ணியமே புனித ஞான

யாகமே யாகத்தின் விளைவே யாகத்

திறையேஅவ் விறைபுரியும் இன்பே அன்பர்

மோகமே மோகமெலாம் அழித்து வீறு

மோனமே மோனத்தின் முளைத்த தேவே. ...31

2102

காட்சியே காண்பதுவே ஞேய மேஉள்

கண்ணுடையார் கண்ணிறைந்த களிப்பே ஓங்கும்

மாட்சியே உண்மைஅறி வின்ப மென்ன

வயங்குகின்ற வாழ்வேமா மவுனக் காணி

ஆட்சியே ஆட்சிசெயும் அரசே சுத்த

அறிவேமெய் அன்பேதெள் ளமுதே நல்ல

சூட்சியே(140) சூட்சியெலாம் கடந்து நின்ற

துரியமே துரியமுடிச் சோதித் தேவே. ...32

2103

மறைமுடிக்குப் பொருத்தமுறு மணியே ஞான

வாரிதியே அன்பர்கடம் மனத்தே நின்ற

குறைமுடிக்கும் குணக்குன்றே குன்றா மோனக்

கோமளமே தூயசிவக் கொழுந்தே வெள்ளைப்

பிறைமுடிக்கும் பெருமானே துளவ மாலைப்

பெம்மானே செங்கமலப் பிரானே இந்த

இறைமுடிக்கு மூவர்கட்கு மேலாய் நின்ற

இறையேஇவ் வுருவுமின்றி இருந்த தேவே. ...33

2104

கோதகன்ற யோகர்மனக் குகையில் வாழும்

குருவேசண் முகங்கொண்ட கோவே வஞ்ச

வாதகன்ற ஞானியர்தம் மதியில் ஊறும்

வானமுதே ஆனந்த மழையே மாயை
வேதகன்ற முத்தர்களை விழுங்கு ஞான
வேழமே மெய்யின்ப விருந்தே நெஞ்சில்
தீதகன்ற மெய்யடியர் தமக்கு வாய்த்த
செல்வமே எல்லையிலாச் சீர்மைத் தேவே. ...34

2105

அருளருவி வழிந்துவழிந் தொழுக ஓங்கும்
ஆனந்தத் தனிமலையே அமல வேதப்
பொருளளவு நிறைந்தவற்றின் மேலும் ஓங்கிப்
பொலிகின்ற பரம்பொருளே பூரண மாகி
இருளறுசிற் பிரகாச மயமாஞ் சுத்த
ஏகாந்தப் பெருவெளிக்குள் இருந்த வாழ்வே
தெருளளவும் உளமுழுதுங் கலந்து கொண்டு
தித்திக்குஞ் செழுந்தேனே தேவ தேவே. ...35

2106

அளவையெலாங் கடந்துமனங் கடந்து மற்றை
அறிவையெலாங் கடந்துகடந் தமல யோகர்
உளவையெலாங் கடந்துபதங் கடந்து மேலை
ஒன்றுகடந் திரண்டுகடந் துணரச் சூழ்ந்த
களவையெலாங் கடந்தண்ட பிண்ட மெல்லாம்
கடந்துநிறை வானசுகக் கடலே அன்பர்

வளவையெலாம் இருளகற்றும் ஒளியே மோன

வாழ்வேஎன் உயிர்க்குயிராய் வதியும் தேவே. ...36

2107

வன்புகலந் தறியாத மனத்தோர் தங்கள்

மனங்கலந்து மதிகலந்து வயங்கா நின்ற

என்புகலந் தூன்கலந்து புலன்க ளோடும்

இந்திரிய மவைகலந்துள் இயங்கு கின்ற

அன்புகலந் தறிவுகலந் துயிரைம் பூதம்

ஆன்மாவுங் கலந்துகலந் தண்ணித் தூறி

இன்புகலந் தருள்கலந்து துளும்பிப் பொங்கி

எழுங்கருணைப் பெருக்காறே இன்பத் தேவே. ...37

2108

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத்

தடம்பொழிற்பூ மணம்வீசத் தென்றல் வீச

எண்ணமுதப் பளிக்குநிலா முற்றத் தேஇன்

இசைவீசத் தண்பனிநீர் எடுத்து வீசப்

பெண்ணமுதம் அனையவர்விண் ணமுதம் ஊட்டப்

பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட் டோ டக்

கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்தும் இன்பங்

கலந்துகொளத் தருங்கருணைக் கடவுள் தேவே. ...38

2109

சுழியாத அருட்கருணைப் பெருக்கே என்றுந்
தூண்டாத மணிவிளக்கின் சோதி யேவான்
ஒழியாது கதிர்பரப்புஞ் சுடரே அன்பர்க்
கோவாத இன்பருளும் ஒன்றே விண்ணோர்
விழியாலும் மொழியாலும் மனத்தி னாலும்
விழைதருமெய்த் தவத்தாலும் விளம்பும் எந்த
வழியாலும் கண்டுகொளற் கரிதாய்ச் சுத்த
மவுனவெளி யூடிருந்து வயங்கும் தேவே. ...39

2110

சொல்லொழியப் பொருளொழியக் கரண மெல்லாம்
சோர்ந்தொழிய உணர்வொழியத் துளங்கா நின்ற
அல்லொழியப் பகலொழிய நடுவே நின்ற
ஆனந்த அநுபவமே அதீத வாழ்வே
நெல்லொழியப் பதர்கொள்வார் போல இன்ப
நிறைவொழியக் குறைகொண்மத நெறியோர் நெஞ்சக்
கல்லொழிய மெய்யடியர் இதய மெல்லாங்
கலந்துகலந் தினிக்கின்ற கருணைத் தேவே. ...40

2111

அலைகடலும் புவிவரையும் அனல்கால் நீரும்
அந்தரமும் மற்றைஅகி லாண்டம் யாவும்
நிலைகுலையா வண்ணம்அருள் வெளியி னூடு

நிரைநிரையா நிறுத்திஉயிர் நிகழும் வண்ணம்

தலைகுலையாத் தத்துவஞ்செய் திரோதை யென்னும்

தனியாணை நடத்திஅருள் தலத்தில் என்றும்

மலைவறவீற் றிருந்தருளும் அரசே முத்தி

வழித்துணையே விழித்துணையுள் மணியாம் தேவே. ...41

2112

வரம்பழுத்த நெறியேமெய்ந் நெறியில் இன்ப

வளம்பழுத்த பெருவாழ்வே வானோர் தங்கள்

சிரம்பழுத்த பதப்பொருளே அறிவா னந்தச்

சிவம்பழுத்த அநுபவமே சிதாகா சத்தில்

பரம்பழுத்த நடத்தரசே கருணை என்னும்

பழம்பழுத்த வான்தருவே பரம ஞானத்

திரம்பழுத்த யோகியர்தம் யோகத் துள்ளே

தினம்பழுத்துக் கனிந்தஅருட் செல்வத் தேவே. ...42

2113

அண்டமெலாம் கண்ணாகக் கொளினும் காண்டற்

கணுத்துணையும் கூடாவென் றனந்த வேதம்

விண்டலறி ஓலமிட்டுப் புலம்ப மோன

வெளிக்குள்வெளி யாய்நிறைந்து விளங்கும் ஒன்றே

கண்டவடி வாய்அகண்ட மயமாய் எங்கும்

கலந்துநின்ற பெருங்கருணைக் கடவு ளேஎம்

சண்டவினைத் தொடக்கறச்சின் மயத்தைக் காட்டும்

சற்குருவே சிவகுருவே சாந்தத் தேவே. ...43

2114

பேதமுறா மெய்ப்போத வடிவ மாகிப்

பெருங்கருணை நிறம்பழுத்துச் சாந்தம் பொங்கிச்

சீதமிகுந் தருள்கனிந்து கனிந்து மாறச்

சின்மயமாய் நின்மலமே மணந்து நீங்கா

ஆதரவோ டியன்மவுனச் சுவைமேன் மேற்கொண்

டானந்த ரசமொழுக்கி அன்பால் என்றும்

சேதமுறா தறிஞருளந் தித்தித் தோங்கும்

செழும்புனிதக் கொழுங்கனியே தேவ தேவே. ...44

2115

உடல்குளிர உயிர்தழைக்க உணர்ச்சி ஓங்க

உளங்கனிய மெய்யன்பர் உள்ளத் தூடே

கடலனைய பேரின்பம் துளும்ப நாளும்

கருணைமலர்த் தேன்பொழியும் கடவுட் காவே

விடலரிய எம்போல்வார் இதயந் தோறும்

வேதாந்த மருந்தளிக்கும் விருந்தே வேதம்

தொடலரிய வெளிமுழுதும் பரவி ஞானச்

சோதிவிரித் தொளிர்கின்ற சோதித் தேவே. ...45

2116

கிரியைநெறி அகற்றிமறை முடிவில் நின்று
கேளாமல் கேட்கின்ற கேள்வி யேசொற்
கரியவறை விடுத்துநவ நிலைக்கு மேலே
காணாமற் காண்கின்ற காட்சியே உள்
அரியநிலை ஒன்றிரண்டின் நடுவே சற்றும்
அறியாமல் அறிகின்ற அறிவே என்றும்
உரியசதா நிலைநின்ற உணர்ச்சி மேலோர்
உன்னாமல் உன்னுகின்ற ஒளியாம் தேவே. ...46

2117

சொற்போதற் கரும்பெரிய மறைகள் நாடித்
தொடர்ந்துதொடர்ந் தயர்ந்திளைத்துத் துளங்கி ஏங்கிப்
பிற்போத விரைந்தன்பர் உளத்தே சென்ற
பெருங்கருணைப் பெருவாழ்வே பெயரா தென்றும்
தற்போத ஒழிவினிடை நிறைந்து பொங்கித்
ததும்பிவழிந் தோங்கியெல்லாந் தானே யாகிச்
சிற்போதத் தகம்புறமும் கோத்து நின்ற
சிவானந்தப் பெருக்கேமெய்ச் செல்வத் தேவே. ...47

2118

பொங்குபல சமயமெனும் நதிக ளெல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி ஓங்கும்
கங்குகரை காணாத கடலே எங்கும்

கண்ணாகக் காண்கின்ற கதியே அன்பர்

தங்கநிழல் பரப்பிமயல் சோடை யெல்லாந்

தணிக்கின்ற தருவேபூந் தடமே ஞானச்

செங்குமுத மலரவரு மதியே எல்லாம்

செய்யவல்ல கடவுளே தேவ தேவே. ...48

2119

வான்காணா மறைகாணா மலரோன் காணான்

மால்காணான் உருத்திரனும் மதித்துக் காணான்

நான்காணா இடத்ததனைக் காண்பேம் என்று

நல்லோர்கள் நவில்கின்ற நலமே வேட்கை

மான்காணா உளக்கமல மலர்த்தா நின்ற

வான்சுடரே ஆனந்த மயமே ஈன்ற

ஆன்காணா இளங்கன்றாய் அலமந் தேங்கும்

அன்பர்தமைக் கலந்துகொளும் அமலத் தேவே. ...49

2120

மெய்ஞ்ஞான விருப்பத்தில் ஏறிக் கேள்வி

மீதேறித் தெளிந்திச்சை விடுதல் ஏறி

அஞ்ஞான மற்றபடி ஏறி உண்மை

அறிந்தபடி நிலைஏறி அதுநான் என்னும்

கைஞ்ஞானங் கழன்றேறி மற்ற எல்லாம்

கடந்தேறி மவுனவியற் கதியில் ஏறி

எஞ்ஞானம் அறத்தெளிந்தோர் கண்டுங் காணேம்

என்கின்ற அநுபவமே இன்பத் தேவே. ...50

2121

பற்றறியா முத்தர்தமை எல்லாம் வாழைப்

பழம்போல விழுங்குகின்ற பரமே மாசு

பெற்றறியாப் பெரும்பதமே பதத்தைக் காட்டும்

பெருமானே ஆனந்தப் பேற்றின் வாழ்வே

உற்றறியா தின்னுமின்னும் மறைக ளெல்லாம்

ஓலமிட்டுத் தேடநின்ற ஒன்றே ஒன்றும்

கற்றறியாப் பேதையேன் தனக்கும் இன்பம்

கனிந்தளித்த அருட்கடலே கருணைத் தேவே. ...51

2122

மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த

வெளியாக்கிக் கலந்துகொண்ட வெளியே முற்றும்

பொய்யுணர்ந்த எமைப்போல்வார் தமக்கும் இன்பம்

புரிந்தருளும் கருணைவெள்ளப் பொற்பே அன்பர்

கையுறைந்து வளர்நெல்லிக் கனியே உள்ளம்

கரைந்துகரைந் துருகஅவர் கருத்தி னூடே

உய்யுநெறி ஒளிகாட்டி வெளியும் உள்ளும்

ஓங்குகின்ற சுயஞ்சுடரே உண்மைத் தேவே. ...52

2123

ஒலிவடிவு நிறஞ்சுவைகள் நாற்றம் ஊற்றம்

உறுதொழில்கள் பயன்பலவே றுளவாய் எங்கும்

மலிவகையாய் எவ்வகையும் ஒன்றாய் ஒன்றும்

மாட்டாதாய் எல்லாமும் வல்ல தாகிச்

சலிவகையில் லாதமுதற் பொருளே எல்லாம்

தன்மயமாய் விளங்குகின்ற தனியே ஆண்பெண்

அலிவகையல் லாதவகை கடந்து நின்ற

அருட்சிவமே சிவபோகத் தமைந்த தேவே. ...53

2124

பேராய அண்டங்கள் பலவும் பிண்ட

பேதங்கள் பற்பலவும் பிண்டாண் டத்தின்

வாராய பலபொருளும் கடலும் மண்ணும்

மலையுளவும் கடலுளவும் மணலும் வானும்

ஊராத வான்மீனும் அணுவும் மற்றை

உள்ளனவும் அளந்திடலாம் ஓகோ உன்னை

ஆராலும் அளப்பரிதென் றனந்த வேதம்

அறைந்திளைக்க அதிதூர மாகுந் தேவே. ...54

2125

கற்பங்கள் பலகோடி செல்லத் தீய

கனலினடு ஊசியின்மேல் காலை ஊன்றிப்

பொற்பறமெய் உணவின்றி உறக்க மின்றிப்

புலர்ந்தெலும்பு புலப்படஐம் பொறியை ஓம்பி

நிற்பவருக் கொளித்துமறைக் கொளித்து யோக

நீண்முனிவர்க் கொளித்தமரர்க் கொளித்து மேலாம்

சிற்பதத்தில் சின்மயமாய் நிறைந்து ஞானத்

திருவாளர் உட்கலந்த தேவ தேவே. ...55

2126

மட்டகன்ற நெடுங்காலம் மனத்தால் வாக்கால்

மதித்திடினும் புலம்பிடினும் வாரா தென்றே

கட்டகன்ற மெய்யறிவோர் கரணம் நீக்கிக்

கலையகற்றிக் கருவியெலாம் கழற்றி மாயை

விட்டகன்று கருமமல போதம் யாவும்

விடுத்தொழித்துச் சகசமல வீக்கம் நீக்கிச்

சுட்டகன்று நிற்கஅவர் தம்மை முற்றும்

சூழ்ந்துகலந் திடுஞ்சிவமே துரியத் தேவே. ...56

2127

உருநான்கும் அருநான்கும் நடுவே நின்ற

உருஅருவ மொன்றும்இவை உடன்மேல் உற்ற

ஒருநான்கும் இவைகடந்த ஒன்று மாய்அவ்

வொன்றினடு வாய்நடுவுள் ஒன்றாய் நின்றே

இருநான்கும் அமைந்தவரை நான்கி னோடும்

எண்ணான்கின் மேலிருத்தும் இறையே மாயைக்

கருநான்கும் பொருணான்கும் காட்டு முக்கட்

கடவுளே கடவுளர்கள் கருதுந் தேவே. ...57

2128

பாங்குளநாம் தெரிதுமெனத் துணிந்து கோடிப்

பழமறைகள் தனித்தனியே பாடிப் பாடி

ஈங்குளதென் றாங்குளதென் றோடி யோடி

இளைத்திளைத்துத் தொடர்ந்துதொடர்ந் தெட்டுந் தோறும்

வாங்குபர வெளிமுழுதும் நீண்டு நீண்டு

மறைந்துமறைந் தொளிக்கின்ற மணியே எங்கும்

தேங்குபர மானந்த வெள்ள மேசச்

சிதானந்த அருட்சிவமே தேவே தேவே. ...58

2129

எழுத்தறிந்து தமையுணர்ந்த யோகர் உள்ளத்

தியலறிவாம் தருவினில்அன் பெனுமோர் உச்சி

பழுத்தளிந்து மவுனநறுஞ் சுவைமேற் பொங்கிப்

பதம்பொருந்த அநுபவிக்கும் பழமே மாயைக்

கழுத்தரிந்து கருமமலத் தலையை வீசும்

கடுந்தொழிலோர் தமக்கேநற் கருணை காட்டி

விழுத்துணையாய் அமர்ந்தருளும் பொருளே மோன

வெளியினிறை ஆனந்த விளைவாந் தேவே. ...59

2130

உருத்திரர்நா ரணர்பிரமர் விண்ணோர் வேந்தர்

உறுகருடர் காந்தருவர் இயக்கர் பூதர்

மருத்துவர்யோ கியர்சித்தர் முனிவர் மற்றை

வானவர்கள் முதலோர்தம் மனத்தால் தேடிக்

கருத்தழிந்து தனித்தனியே சென்று வேதங்

களைவினவ மற்றவையுங் காணேம் என்று

வருத்தமுற்றாங் கவரோடு புலம்ப நின்ற

வஞ்சவெளி யேஇன்ப மயமாம் தேவே. ...60

2131

பாயிரமா மறைஅனந்தம் அனந்தம் இன்னும்

பார்த்தளந்து காண்டும்எனப் பல்கான் மேவி

ஆயிரமா யிரமுகங்க ளாலும் பன்னாள்

அளந்தளந்தோர் அணுத்துணையும் அளவு காணா

தேயிரங்கி அழுதுசிவ சிவவென் றேங்கித்

திரும்பஅருட் பரவெளிவாழ் சிவமே ஈன்ற

தாயிரங்கி வளர்ப்பதுபோல் எம்போல் வாரைத்

தண்ணருளால் வளர்த்தென்றும் தாங்குந் தேவே. ...61

2132

அந்தரமிங் கறிவோமற் றதனில் அண்டம்

அடுக்கடுக்காய் அமைந்தஉள வறிவோம் ஆங்கே

உந்துறும்பல் பிண்டநிலை அறிவோஞ் சீவன்

உற்றநிலை அறிவோமற் றனைத்து நாட்டும்

எந்தைநின தருள்விளையாட் டந்தோ அந்தோ

எள்ளளவும் அறிந்திலோம் என்னே என்று

முந்தனந்த மறைகளெலாம் வழுத்த நின்ற

முழுமுதலே அன்பர்குறை முடிக்கும் தேவே. ...62

2133

தோன்றுபர சாக்கிரமும் கண்டோம் அந்தச்

சொப்பனமும் கண்டோம்மேல் சுழுத்தி கண்டோம்

ஆன்றபர துரியநிலை கண்டோம் அப்பால்

அதுகண்டோம் அப்பாலாம் அதுவும் கண்டோம்

ஏன்றஉப சாந்தநிலை கண்டோம் அப்பால்

இருந்தநினைக் காண்கிலோம் என்னே என்று

சான்றவுப நிடங்களெலாம் வழுத்த நின்ற

தன்மயமே சின்மயமே சகசத் தேவே. ...63

2134

பரிக்கிரக நிலைமுழுதுந் தொடர்ந்தோம் மேலைப்

பரவிந்து நிலையனைத்தும் பார்த்தோம் பாசம்

எரிக்கும்இயற் பரநாத நிலைக்கண் மெல்ல

எய்தினோம் அப்பாலும் எட்டிப் போனோம்

தெரிக்கரிய வெளிமூன்றும் தெரிந்தோம் எங்கும்

சிவமேநின் சின்மயம்ஓர் சிறிதும் தேறோம்

தரிக்கரிதென் றாகமங்க ளெல்லாம் போற்றத்

தனிநின்ற பரம்பொருளே சாந்தத் தேவே. ...64

2135

மணக்குமலர்த் தேனுண்ட வண்டே போல

வளர்பரமா னந்தமுண்டு மகிழ்ந்தோர் எல்லாம்

இணக்கமுறக் கலந்துகலந் ததீத மாதற்

கியற்கைநிலை யாததுதான் எம்மாற் கூறும்

கணக்குவழக் கனைத்தினையும் கடந்த தந்தோ

காண்பரிதிங் கெவர்க்கும்எனக் கலைக ளெல்லாம்

பிணக்கறநின் றோலமிடத் தனித்து நின்ற

பெரும்பதமே மதாதீதப் பெரிய தேவே. ...65

2136

பொதுவென்றும் பொதுவில்நடம் புரியா நின்ற

பூரணசிற் சிவமென்றும் போதா னந்த

மதுவென்றும் பிரமமென்றும் பரம மென்றும்

வகுக்கின்றோர் வகுத்திடுக அதுதான் என்றும்

இதுவென்றும் சுட்டவொணா ததனால் சும்மா

இருப்பதுவே துணிவெனக்கொண் டிருக்கின் றோரை

விதுவென்ற(141) தண்ணளியால் கலந்து கொண்டு

விளங்குகின்ற பெருவெளியே விமலத் தேவே. ...66

2137

அருமறையா கமங்கள்முதல் நடுவீ றெல்லாம்
அமைந்தமைந்து மற்றவைக்கும் அப்பா லாகிக்
கருமறைந்த உயிர்கள்தொறுங் கலந்து மேவிக்
கலவாமல் பன்னெறியும் கடந்து ஞானத்
திருமணிமன் றகத்தின்ப உருவாய் என்றும்
திகழ்கருணை நடம்புரியும் சிவமே மோனப்
பெருமலையே பரமஇன்ப நிலையே முக்கட்
பெருமானே எத்திறத்தும் பெரிய தேவே. ...67

2138

என்னுயிர்நீ என்னுயிர்க்கோர் உயிரும் நீஎன்
இன்னுயிர்க்குத் துணைவனீ என்னை ஈன்ற
அன்னைநீ என்னுடைய அப்ப னீஎன்
அரும்பொருள்நீ என்னிதயத் தன்பு நீஎன்
நன்னெறிநீ எனக்குரிய உறவு நீஎன்
நற்குருநீ எனைக்கலந்த நட்பு நீஎன்
தன்னுடைய வாழ்வுநீ என்னைக் காக்குந்
தலைவன்நீ கண்மூன்று தழைத்த தேவே. . ..68

2139

தானாகித் தானல்ல தொன்று மில்லாத்
தன்மையனாய் எவ்வெவைக்குந் தலைவ னாகி
வானாகி வளியனலாய் நீரு மாகி

மலர் தலைய உலகாகி மற்று மாகித்

தேனாகித் தேனினறுஞ் சுவைய தாகித்

தீஞ்சுவையின் பயனாகித் தேடு கின்ற

நானாகி என்னிறையாய் நின்றோய் நின்னை

நாயடியேன் எவ்வாறு நவிற்று மாறே. ...69

2140

ஆனேறும் பெருமானே அரசே என்றன்

ஆருயிருக் கொருதுணையே அமுதே கொன்றைத்

தேனேறு மலர்ச்சடைஎஞ் சிவனே தில்லைச்

செழுஞ்சுடரே ஆனந்தத் தெய்வ மேஎன்

ஊனேறும் உயிர்க்குள்நிறை ஒளியே எல்லாம்

உடையானே நின்னடிச்சீர் உன்னி அன்பர்

வானேறு கின்றார்நான் ஒருவன் பாவி

மண்ணேறி மயக்கேறி வருந்துற் றேனே. ...70

2141

செஞ்சடைஎம் பெருமானே சிறுமான் ஏற்ற

செழுங்கமலக் கரத்தவனே சிவனே சூழ்ந்து

மஞ்சடையும் மதிற்றில்லை மணியே ஒற்றி

வளர்மருந்தே என்னுடைய வாழ்வே வேட்கை

அஞ்சடைய வஞ்சியர்மால் அடைய வஞ்சம்

அடையநெடுந் துயரடைய அகன்ற பாவி

நெஞ்சடைய நினைதியோ நினைதி யேல்மெய்ந்

நெறியுடையார் நெஞ்சமர்ந்த நீத னன்றே. ...71

2142

அன்னையினும் பெரிதினிய கருணை ஊட்டும்

ஆரமுதே என்னுறவே அரசே இந்த

மன்னுலகில் அடியேனை என்னே துன்ப

வலையிலகப் படஇயற்றி மறைந்தாய் அந்தோ

பொன்னைமதித் திடுகின்றோர் மருங்கே சூழ்ந்து

போனகமும் பொய்யுறவும் பொருந்தல் ஆற்றேன்

என்னைஉளங் கொள்ளுதியோ கொள்கி லாயோ

என்செய்வேன் என்செய்வேன் என்செய் வேனே. ...72

2143

படித்தேன்பொய் உலகியனூல் எந்தாய் நீயே

படிப்பித்தாய் அன்றியும்அப் படிப்பில் இச்சை

ஒழித்தேன்நான் ஒழித்தேனோ ஒழிப்பித் தாய்பின்

உன்னடியே துணையெனநான் உறுதி யாகப்

பிடித்தேன்மற் றதுவும்நீ பிடிப்பித் தாய்இப்

பேதையேன் நின்னருளைப் பெற்றோர் போல

நடித்தேன்எம் பெருமான்ஈ தொன்றும் நானே

நடித்தேனோ அல்லதுநீ நடிப்பித் தாயோ. ...73

2144

மத்தேறி அலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை

மயலேறி விருப்பேறி மதத்தி னோடு

பித்தேறி உழல்கின்ற மனத்தால் அந்தோ

பேயேறி நலிகின்ற பேதை யானேன்

வித்தேறி விளைவேறி மகிழ்கின் றோர்போல்

மேலேறி அன்பரெலாம் விளங்கு கின்றார்

ஒத்தேறி உயிர்க்குயிராய் நிறைந்த எங்கள்

உடையானே இதுதகுமோ உணர்கி லேனே. ...74

2145

மதியணிந்த முடிக்கனியே மணியே எல்லாம்

வல்லஅருட் குருவேநின் மலர்த்தாள் வாழ்த்திக்

கதியணிந்தார் அன்பரெலாம் அடியேன் ஒன்றும்

கண்டறியேன் கருமத்தால் கலங்கி அந்தோ

பொதியணிந்து திரிந்துழலும் ஏறு போலப்

பொய்யுலகில் பொய்சுமந்து புலம்பா நின்றேன்

துதியணிந்த நின்னருளென் றனக்கு முண்டோ

இன்றெனிலிப் பாவியேன் சொல்வ தென்னே. ...75

2146

என்னரசே என்னுயிரே என்னை ஈன்ற

என்தாயே என்குருவே எளியேன் இங்கே

தன்னரசே செலுத்திஎங்கும் உழலா நின்ற

சஞ்சலநெஞ் சகத்தாலே தயங்கி அந்தோ

மின்னரசே பெண்ணமுதே என்று மாதர்

வெய்யசிறு நீர்க்குழிக்கண் விழவே எண்ணி

கொன்னரைசேர் கிழக்குருடன் கோல்போல் வீணே

குப்புறுகின் றேன்மயலில் கொடிய னேனே. ...76

2147

அல்விலங்கு செழுஞ்சுடராய் அடியார் உள்ளத்

தமர்ந்தருளும் சிவகுருவே அடியேன் இங்கே

இல்விலங்கு மடந்தையென்றே எந்தாய் அந்த

இருப்புவிலங் கினைஒழித்தும் என்னே பின்னும்

மல்விலங்கு பரத்தையர்தம் ஆசை என்னும்

வல்விலங்கு பூண்டந்தோ மயங்கி நின்றேன்

புல்விலங்கும் இதுசெய்யா ஓகோ இந்தப்

புலைநாயேன் பிழைபொறுக்கில் புதிதே அன்றோ. ...77

2148

வன்கொடுமை மலநீக்கி அடியார் தம்மை

வாழ்விக்குங் குருவேநின் மலர்த்தாள் எண்ண

முன்கொடுசென் றிடுமடியேன் தன்னை இந்த

மூடமனம் இவ்வுலக முயற்சி நாடிப்

பின்கொடுசென் றலைத்திழுக்கு(142) தந்தோ நாயேன்

பேய்பிடித்த பித்தனைப்போல் பிதற்றா நின்றேன்

என்கொடுமை என்பாவம் எந்தாய் எந்தாய்

என்னுரைப்பேன் எங்குறுவேன் என்செய் வேனே. ...78

2149

உய்குவித்து(143) மெய்யடியார் தம்மை எல்லாம்

உண்மைநிலை பெறஅருளும் உடையாய் இங்கே

மைகுவித்த நெடுங்கண்ணார் மயக்கில் ஆழ்ந்து

வருந்துகின்றேன் அல்லால்உன் மலர்த்தாள் எண்ணிக்

கைகுவித்துக் கண்களில்நீர் பொழிந்து நானோர்

கணமேனும் கருதிநினைக் கலந்த துண்டோ

செய்குவித்துக் கொள்ளுதியோ கொள்கி லாயோ

திருவுளத்தை அறியேன்என் செய்கு வேனே. ...79

2150

அருள்வெளியில் ஆனந்த வடிவி னால்நின்

றாடுகின்ற பெருவாழ்வே அரசே இந்த

மருள்வலையில் அகப்பட்ட மனத்தால் அந்தோ

மதிகலங்கி மெய்ந்நிலைக்கோர் வழிகா ணாதே

இருள்நெறியில் கோலிழந்த குருட்டூ மன்போல்

எண்ணாதெல் லாம்எண்ணி ஏங்கி ஏங்கி

உருள்சகடக் கால்போலுஞ் சுழலா நின்றேன்

உய்யும்வகை அறியேனிவ் வொதிய னேனே. ...80

2151

கற்றவளை தனக்கும்உண வளிக்கும் உன்றன்

கருணைநிலை தனைஅறியேன் கடையேன் இங்கே

எற்றவளை எறும்பேபோல் திரிந்து நாளும்

இளைத்துநின தருள்காணா தெந்தாய் அந்தோ

பெற்றவளைக் காணாத பிள்ளை போலப்

பேதுறுகின் றேன்செய்யும் பிழையை நோக்கி

இற்றவளைக்(144) கேள்விடல்போல் விடுதி யேல்யான்

என்செய்வேன் எங்குறுவேன் என்சொல் வேனே. ...81

2152

அடிமைசெயப் புகுந்திடும்எம் போல்வார் குற்றம்

ஆயிரமும் பொறுத்தருளும் அரசே நாயேன்

கொடுமைசெயு மனத்தாலே வருந்தி அந்தோ

குரங்கின்கை மாலையெனக் குலையா நின்றேன்

கடுமைசெயப் பிறர்துணிந்தால் அடிமை தன்னைக்

கண்டிருத்தல் அழகன்றே கருணைக் கெந்தாய்

செடிமையுளப் பாதகனேன் என்செய் வேன்நின்

திருவுளத்தை அறிந்திலேன் திகைக்கின் றேனே. ...82

2153

கூம்பாத மெய்ந்நெறியோர் உளத்தே என்றும்

குறையாத இன்பளிக்கும் குருவே ஆசைத்

தாம்பாலே யாப்புண்டு வருந்தி நாயேன்

தையலார் மையலெனும் சலதி ஆழ்ந்து

ஓம்பாமல் உவர்நீருண் டுயங்கு கின்றேன்

உன்னடியர் அக்கரைமேல் உவந்து நின்றே

தீம்பாலுஞ் சருக்கரையுந் தேனும் நெய்யும்

தேக்குகின்றார் இதுதகுமோ தேவ தேவே. ...83

2154

வெள்ளமணி சடைக்கனியே மூவ ராகி

விரிந்தருளும் ஒருதனியே விழல னேனைக்

கள்ளமனக் குரங்காட்டும் ஆட்ட மெல்லாம்

கண்டிருந்தும் இரங்கிலையேல் கவலை யாலே

உள்ளமெலிந் துழல்கின்ற சிறியேன் பின்னர்

உய்யும்வகை எவ்வகையீ துன்னுந் தோறும்

பொள்ளெனமெய் வியர்க்கஉளம் பதைக்கச் சோபம்

பொங்கிவழி கின்றதுநான் பொறுக்கி லேனே. ...84

2155

எனையறியாப் பருவத்தே ஆண்டு கொண்ட

என்னரசே என்குருவே இறையே இன்று

மனையறியாப் பிழைகருது மகிழ்நன் போல

மதியறியேன் செய்பிழையை மனத்துட் கொண்டே

தனையறியா முகத்தவர்போல் இருந்தாய் எந்தாய்

தடங்கருணைப் பெருங்கடற்குத் தகுமோ கண்டாய்

அனையறியாச் சிறுகுழவி யாகி இங்கே

அடிநாயேன் அரற்றுகின்றேன் அந்தோ அந்தோ. ...85

2156

தீவினைநல் வினையெனும்வன் கயிற்றால் இந்தச்

சீவர்களை ஆட்டுகின்ற தேவே நாயேன்

ஏவினைநேர் கண்மடவார் மையற் பேயால்

இடருழந்தும் சலிப்பின்றி என்னே இன்னும்

நாவினைஎன் பால்வருந்திக் கரண்டு கின்ற

நாய்க்கும்நகை தோன்றநின்று நயக்கின் றேனான்

ஆவினைவிட் டெருதுகறந் திடுவான் செல்லும்

அறிவிலிக்கும் அறிவிலியேன் ஆன வாறே. ...86

2157

எம்பெருமான் நின்விளையாட் டென்சொல் கேன்நான்

ஏதுமறி யாச்சிறியேன் எனைத்தான் இங்கே

செம்புனலால் குழைத்தபுலால் சுவர்சூழ் பொத்தைச்

சிறுவீட்டில் இருட்டறையில் சிறைசெய் தந்தோ

கம்பமுறப் பசித்தழலுங் கொளுந்த அந்தக்

கரணமுதல் பொறிபுலப்பேய் கவர்ந்து சூழ்ந்து

வம்பியற்றக் காமாதி அரட்டர் எல்லாம்

மடிபிடித்து வருத்தவென்றோ வளர்த்தாய் எந்தாய். ...87

2158

அம்பரத்தே ஆனந்த வடிவால் என்றும்

ஆடுகின்ற மாமணியே அரசே நாயேன்

இம்பரத்தம் எனும்உலக நடையில் அந்தோ

இடருழந்தேன் பன்னெறியில் எனைஇ ழுத்தே

பம்பரத்தின் ஆடியலைப் படுத்தும் இந்தப்

பாவிமனம் எனக்குவயப் படுவ தில்லை

கொம்பரற்ற இளங்கொடிபோல் தளர்ந்தேன் என்னைக்

குறிக்கொள்ளக் கருதுதியோ குறித்தி டாயோ. ...88

2159

கண்ணுடைய நுதற்கரும்பே மன்றில் ஆடும்

காரணகா ரியங்கடந்த கடவு ளேநின்

தண்ணுடைய மலரடிக்கோர் சிறிதும் அன்பு

சார்ந்தேனோ செம்மரம்போல் தணிந்த நெஞ்சேன்

பெண்ணுடைய மயலாலே சுழல்கின் றேன்என்

பேதைமையை என்புகல்வேன் பேய னேனைப்

புண்ணுடைய புழுவிரும்பும் புள்ளென் கேனோ

புலைவிழைந்து நிலைவெறுத்தேன் புலைய னேனே. ...89

2160

பொன்னுடையார் இடம்புகவோ அவர்கட் கேற்கப்

பொய்ம்மொழிகள் புகன்றிடவோ பொதிபோல் இந்தக்

கொன்னுடையா உடல்பருக்கப் பசிக்குச் சோறு

கொடுக்கவோ குளிர்க்காடை கொளவோ வஞ்ச

மின்னிடையார் முடைச்சிறுநீர்க் குழிக்கண் அந்தோ

வீழ்ந்திடவோ தாழ்ந்திளைத்து விழிக்க வோதான்

என்னுடையாய் என்னுடையாய் என்னை இங்கே

எடுத்துவளர்த் தனைஅறியேன் என்சொல் வேனே. ...90

2161

வருகணத்து வாழ்ந்திடுமோ விழுமோ இந்த

மலக்கூடென் றறிஞரெலாம் வருந்தக் கேட்டும்

அருகணைத்துக் கொளப்பெண்பேய் எங்கே மேட்டுக்

கடைத்திடவெண் சோறெங்கே ஆடை யெங்கே

இருகணுக்கு வியப்பெங்கே வசதி யான

இடமெங்கே என்றுதிரிந் திளைத்தேன் அல்லால்

ஒருகணத்தும் உனைநினைந்த துண்டோ என்னை

உடையானே எவ்வகைநான் உய்யும் மாறே ...91

2162

பொன்மலையோ சிறிதெனப்பே ராசை பொங்கிப்

புவிநடையில் பற்பலகால் போந்து போந்து

நென்மலையோ நிதிமலையோ என்று தேடி

நிலைகுலைந்த தன்றிஉனை நினைந்து நேடி

மன்மலையோ மாமணியோ மருந்தோ என்று

வழுத்தியதே இல்லைஇந்த வஞ்ச நெஞ்சம்

கன்மலையோ இரும்போசெம் மரமோ பாறைக்

கருங்கல்லோ பராய்முருட்டுக் கட்டை யேயோ. ...92

2163

தம்மைமறந் தருளமுதம் உண்டு தேக்கும்

தகையுடையார் திருக்கூட்டம் சார்ந்து நாயேன்

வெம்மையெலாம் தவிர்ந்துமனங் குளிரக் கேள்வி

விருந்தருந்தி மெய்யறிவாம் வீட்டில் என்றும்

செம்மையெலாம் தரும்மௌன அணைமேற் கொண்டு

செறிஇரவு பகலொன்றும் தெரியா வண்ணம்

இம்மையிலே எம்மையினும் காணாச் சுத்த

இன்பநிலை அடைவேனோ ஏழை யேனே. ...93

2164

அடியனேன் பிழையனைத்தும் பொறுத்தாட் கொண்ட

அருட்கடலே மன்றோங்கும் அரசே இந்நாள்

கொடியனேன் செய்பிழையைத் திருவுள் ளத்தே

கொள்ளுதியோ கொண்டுகுலங் குறிப்ப துண்டோ

நெடியனே முதற்கடவுட் சமுகத் தோர்தம்

நெடும்பிழைகள் ஆயிரமும் பொறுத்து மாயை

ஒடியநேர் நின்றபெருங் கருணை வள்ளல்

எனமறைகள் ஓதுவதிங் குனைத்தா னன்றே. ...94

2165

கண்மயக்கும் பேரிருட்டுக் கங்குற் போதில்

கருத்தறியாச் சிறுவனைஓர் கடுங்கா னத்தே

உண்மயக்கம் கொளவிடுத்தே ஒருவன் பின்போம்

ஒருதாய்போல் மாயைஇருள் ஓங்கும் போதின்

மண்மயக்கம் பெறும்விடயக் காட்டில் அந்தோ

மதியிலேன் மாழாந்து மயங்க நீதான்

வண்மையுற்ற நியதியின்பின் என்னை விட்டே

மறைந்தனையே பரமேநின் வண்மை என்னே. ...95

2166

நற்றாயும் பிழைகுறிக்கக் கண்டோ ம் இந்த

நானிலத்தே மற்றவர்யார் நாடார் வீணே

பற்றாயும் அவர்தமைநாம் பற்றோம் பற்றில்

பற்றாத பற்றுடையார் பற்றி உள்ளே

உற்றாயுஞ் சிவபெருமான் கருணை ஒன்றே

உறுபிழைகள் எத்துணையும் பொறுப்ப தென்றுன்

பொற்றாளை விரும்பியது மன்று ளாடும்

பொருளேஎன் பிழையனைத்தும் பொறுக்க வன்றே. ...96

2167

எண்ணியநம் எண்ணமெலாம் முடிப்பான் மன்றுள்

எம்பெருமான் என்றுமகிழ்ந் திருமாந் திங்கே

நண்ணியமற் றையர்தம்மை உறாமை பேசி

நன்குமதி யாதிருந்த நாயி னேனைத்

தண்ணியநல் அருட்கடலே மன்றில் இன்பத்

தாண்டவஞ்செய் கின்றபெருந் தகையே எங்கள்

புண்ணியனே பிழைகுறித்து விடுத்தி யாயில்

பொய்யனேன் எங்குற்றென் புரிவேன் அந்தோ. ...97

2168

அன்பர்திரு வுளங்கோயி லாகக்கொண்டே

அற்புதச்சிற் சபையோங்கும் அரசே இங்கு

வன்பரிடைச் சிறியேனை மயங்க வைத்து

மறைந்தனையே ஆனந்த வடிவோய் நின்னைத்

துன்பவடி வுடைப்பிறரில் பிரித்து மேலோர்

துரியவடி வினனென்று சொன்ன வெல்லாம்

இன்பவடி வடைந்தன்றே எந்தாய் அந்தோ

என்னளவென் சொல்கேனிவ் வேழை யேனே. ...98

2169

புற்றோங்கும் அரவமெல்லாம் பணியாக் கொண்டு

பொன்மேனி தனில்அணிந்த பொருளே மாயை

உற்றோங்கு வஞ்சமனக் கள்வ னேனை

உளங்கொண்டு பணிகொள்வ துனக்கே ஒக்கும்

மற்றோங்கும் அவரெல்லாம் பெருமை வேண்டும்

வன்மனத்தர் எனைவேண்டார் வள்ள லேநான்

கற்றோங்கும் அறிவறியேன் பலவாச் சொல்லும்
கருத்தறியேன் எனக்கருளக் கருது வாயே. ...99

2170

அருளுடைய பரம்பொருளே மன்றி லாடும்
ஆனந்தப் பெருவாழ்வே அன்பு ளோர்தம்
தெருளுடைய உளமுழுதும் கோயில் கொண்ட
சிவமேமெய் அறிவுருவாம் தெய்வ மேஇம்
மருளுடைய மனப்பேதை நாயி னேன்செய்
வன்பிழையைச் சிறிதேனும் மதித்தி யாயில்
இருளுடைய பவக்கடல்விட் டேறேன் என்னை
ஏற்றுவதற் கெண்ணுகஎன் இன்பத் தேவே. ...100

திருச்சிற்றம்பலம்

---------

140. எதுகை நயம்பற்றி நின்றது. தொ.வே.

141. விது - சந்திரன். ஈண்டு இரண்டன் உருபுவிரிக்க. தொ.வே.

142. இழுக்குது என்பது மரூஉ வழக்கு. அல்லதூஉம், ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய 'கடிசொல்லில்லை' என்பதனால் கோடலுமாம். இங்ஙனமாதல், ''இனியே தெமக்குனருள் வருமோ எனக்கருதி ஏங்குதே நெஞ்சம்'' எனத் தாயுமானார் முதலிய பிற சான்றோர் செய்யுட்களாலும் உணர்க என்க. தொ. வே.

143. உய்குவித்து என்பதனுள் '' கு '' சாரியை. தொ. வே.

144. இற்றவள் - மனையறங் காப்போள். தொ. வே.

---------------------------

## 6. திருவருண் முறையீடு (2171 - 2402)

.

### கட்டளைக் கலித்துறை

2171

துனியால் உளந்தளர்ந் தந்தோ துரும்பில் சுழலுகின்றேன்

இனியா யினும்இரங் காதோநின் சித்தம்எந் தாய்இதென்ன

அனியாய மோஎன் னளவின்நின் பால்தண் ணருளிலையோ

சனியாம்என் வல்வினைப் போதனை யோஎன்கொல் சாற்றுவதே.

...1

2172

என்னே முறையுண் டெனில்கேள்வி உண்டென்பர் என்னளவில்

இன்னே சிறிதும் இலையேநின் பால்இதற் கென்செய்குவேன்

மன்னேமுக் கண்ணுடை மாமணி யேஇடை வைப்பரிதாம்

பொன்னேமின் னேர்சடைத் தன்னே ரிலாப்பரி பூரணனே. ...2

2173

தண்டாத சஞ்சலங் கொண்டேன் நிலையைஇத் தாரணியில்

கண்டார் இரங்குவர் கேட்டார் உருகுவர் கங்கைதிங்கள்

துண்டார் மலர்ச்சடை எந்தாய் இரங்கிலை தூய்மையிலா

அண்டார் பிழையும் பொறுப்போய் இதுநின் அருட்கழகே. ...3

2174

பொய்யாம் உலக நடைநின்று சஞ்சலம் பொங்கமுக்கண்

ஐயாஎன் உள்ளம் அழலார் மெழுகொத் தழிகின்றதால்

பையார் அரவ மதிச்சடை யாய்செம் பவளநிறச்

செய்யாய் எனக்கருள் செய்யாய் எனில்என்ன செய்குவனே. ...4

2175

விடமிலை யேர்மணி கண்டாநின் சைவ விரதஞ்செய்யத்

திடமிலை யேஉட் செறிவிலை யேஎன்றன் சித்தத்துநின்

நடமிலை யேஉன்றன் நண்பிலை யேஉனை நாடுதற்கோர்

இடமிலை யேஇதை எண்ணிலை யேசற் றிரங்கிலையே. ...5

2176

விண்ணுடை யாய்வெள்ளி வெற்புடை யாய்மதி மேவுசடைக்

கண்ணுடை யாய்நெற்றிக் கண்ணுடை யாய்அருட்
கண்ணுடையாய்

பண்ணுடை யாய்திசைப் பட்டுடை யாய்இடப் பாலில்அருட்

பெண்ணுடை யாய்வந்திப் பிட்டுடை யாய்என் பெருஞ்செல்வமே.
...6

2177

விடையுடை யாய்மறை மேலுடை யாய்நதி மேவியசெஞ்

சடையுடை யாய்கொன்றைத் தாருடை யாய்கரம் தாங்குமழுப்

படையுடை யாய்அருட் பண்புடை யாய்பெண் பரவையின்பால்

நடையுடை யாய்அருள் நாடுடை யாய்பதம் நல்குகவே. ...7

2178

கீளுடை யாய்பிறைக் கீற்றுடை யாய்எங் கிளைத்தலைமேல்

தாளுடை யாய்செஞ் சடையுடை யாய்என் தனையுடையாய்

வாளுடை யாய்மலை மானுடை யாய்கலை மானுடையாய்

ஆளுடை யாய்மன்றுள் ஆட்டுடை யாய்என்னை ஆண்டருளே.
...8

2179

நான்படும் பாடு சிவனே உலகர் நவிலும்பஞ்சு

தான்படு மோசொல்லத் தான்படு மோஎண்ணத் தான்படுமோ

கான்படு கண்ணியின் மான்படு மாறு கலங்கிநின்றேன்

ஏன்படு கின்றனை என்றிரங் காய்என்னில் என்செய்வனே. ...9

2180

பொய்யோ அடிமை உரைத்தல்எந் தாய்என்னுட் போந்திருந்தாய்

ஐயோநின் உள்ளத் தறிந்ததன் றோஎன் அவலமெல்லாம்

கையோட வல்லவர் ஓர்பதி னாயிரங் கற்பநின்று

மெய்யோ டெழுதினுந் தான்அடங் காத வியப்புடைத்தே. ...10

2181

தேன்சொல்லும் வாயுமை பாகாநின் தன்னைத் தெரிந்தடுத்தோர்

தான்சொல்லுங் குற்றங் குணமாகக் கொள்ளுந் தயாளுவென்றே

நான்சொல்வ தென்னைபொன் நாண்சொல்லும் வாணிதன்
நாண்சொல்லும்அவ்

வான்சொல்லும் எம்மலை மான்சொல்லும் கைம்மலை
மான்சொல்லுமே. ...11

2182

வென்றே முதலையும் மூர்க்கரும் கொண்டது மீளவிடார்

என்றே உரைப்பரிங் கென்போன்ற மூடர்மற் றில்லைநின்பேர்

நன்றே உரைத்துநின் றன்றே விடுத்தனன் நாணில்என்மட்

டின்றேயக் கட்டுரை இன்றேஎன் சொல்வ திறையவனே. ...12

2183

கைக்கின்ற காயும் இனிப்பாம் விடமும் கனஅமுதாம்

பொய்க்கின்ற கானலும் நீராம்வன் பாவமும் புண்ணியமாம்

வைக்கின்ற ஓடுஞ்செம் பொன்னாம்என் கெட்ட மனதுநின்சீர்

துய்க்கின்ற நல்ல மனதாவ தில்லைஎன் சொல்லுவனே. ...13

2184

வீணே பொழுது கழிக்கின்ற நான்உன் விரைமலர்த்தாள்

காணேன்கண் டாரையுங் காண்கின்றி லேன்சற்றும் காணற்கன்பும்

பூணேன் தவமும் புரியேன் அறமும் புகல்கின்றிலேன்

நாணேன் விலங்கிழி யாணே யெனுங்கடை நாயினனே. ...14

2185

நானோர் எளிமை அடிமையென் றோநல்லன் அல்லனென்று

தானோநின் அன்பர் தகாதென்பர் ஈதென்று தானினைத்தோ

ஏனோநின் உள்ளம் இரங்கிலை இன்னு மிரங்கிலையேல்

கானோடு வேன்கொல் கடல்விழு வேன்கொல்முக் கண்ணவனே. ...15

2186

மின்போலுஞ் செஞ்சடை வித்தக னேஒளி மேவியசெம்

பொன்போலு மேனிஎம் புண்ணிய னேஎனைப் போற்றிப்பெற்ற

தன்போலுந் தாய்தந்தை ஆயிரம் பேரிருந் தாலும்அந்தோ

நின்போலும் அன்புடை யார்எனக் கார்இந்த நீணிலத்தே. ...16

2187

அன்பாலென் தன்னைஇங் காளுடை யாய்இவ் வடியவனேன்

நின்பாலென் துன்ப நெறிப்பால் அகற்றென்று நின்றதல்லால்

துன்பால் இடரைப் பிறர்பால் அடுத்தொன்று சொன்னதுண்டோ

என்பால் இரங்கிலை என்பாற் கடல்பிள்ளைக் கீந்தவனே. ...17

2188

என்போன் மனிதரை ஏன்அடுப் பேன்எனக் கெய்ப்பில்வைப்பாம்

பொன்போல் விளங்கும் புரிசடை யான்றனைப் போயடுத்தேன்

துன்போர் அணுவும் பெறேன்இனி யான்என்று சொல்லிவந்தேன்

முன்போல் பராமுகஞ் செய்யேல் அருளுக முக்கணனே. ...18

2189

பொன்னுடை யார்தமைப் போய்அடுப் பாய்என்ற புன்மையினோர்க்

கென்னுடை யான்றனை யேஅடுப் பேன்இதற் கெள்ளளவும்

பின்னிடை யேன்அவர் முன்னடை யேன்எனப் பேசிவந்தேன்

மின்னிடை மாதுமை பாகாஎன் சோகம் விலக்குகவே. ...19

2190

சாதகத் தோர்கட்குத் தானருள் வேனெனில் தாழ்ந்திடுமா

பாதகத் தோனுக்கு முன்னருள் ஈந்தெப் பான்மைகொண்டோ

தீதகத் தேன்எளி யேன்ஆ யினும்உன் திருவடியாம்

போதகத் தேநினைக் கின்றேன் கருணை புரிந்தருளே. ...20

2191.

அருளறி யாச்சிறு தேவருந் தம்மை அடுத்தவர்கட்

கிருளறி யாவிளக் கென்றாலும் நெஞ்சம் இரங்குகின்றார்

மருளறி யாப்பெருந் தேவேநின் தன்னடி வந்தடுத்தேன்

தெருளறி யாச்சிறி யேன்ஆயி னுஞ்செய்க சீரருளே. ...21

2192

அரும்பொரு ளேஎன் அரசேஎன் ஆருயிர்க் காகவந்த

பெரும்பொரு ளேஅருட் பேறே சிவானந்தம் பெற்றவர்பால்

வரும்பொரு ளேமுக்கண் மாமணி யேநின் வழியருளால்

தரும்பொரு ளேபொருள் என்றுவந் தேன்எனைத் தாங்கிக்கொள்ளே. ...22

2193

சரங்கார் முகந்தொடுத் தெய்வது போலென் றனையுலகத்

துரங்கா ரிருட்பெரு வாதனை யால்இடர் ஊட்டுநெஞ்சக்

குரங்கால் மெலிந்துநின் நாமந் துணையெனக் கூறுகின்றேன்

இரங்கார் தமக்கும் இரங்குகின் றோய்எற் கிரங்குகவே. ...23

2194

கூறுற்ற குற்றமுந் தானே மகிழ்வில் குணமெனவே

ஆறுற்ற செஞ்சடை அண்ணல்கொள் வான்என்பர் ஆங்கதற்கு

வேறுற்ற தோர்கரி வேண்டுங்கொ லோஎன்னுள் மேவிஎன்றும்

வீறுற்ற பாதத் தவன்மிடற் றேகரி மேவியுமே. ...24

2195

சூற்படு மேக நிறத்தோனும் நான்முகத் தோனும்என்னைப்

போற்படும் பாடுநல் லோர்சொலக் கேட்கும் பொழுதுமனம்

வேற்படும் புண்ணில் கலங்கிஅந் தோநம் விடையவன்பூங்

காற்படுந் தூளிநம் மேற்படு மோஒரு கால்என்னுமே. ..25

2196

வாளேய் நெடுங்கண்ணி எம்பெரு மாட்டி வருடுமலர்த்

தாளே வருந்த மணிக்கூடற் பாணன் தனக்கடிமை

ஆளே எனவிற கேற்றுவிற் றோய்நின் னருள்கிடைக்கும்

நாளேநன் னாள்அந்த நாட்கா யிரந்தெண்டன் நான்செய்வனே. ...26

2197

அடுத்தார் தமைஎன்றும் மேலோர் விடார்கள் அவர்க்குப்பிச்சை

எடுத்தா யினும்இடு வார்கள்என் பார்அதற் கேற்கச்சொற்பூத்

தொடுத்தார் ஒருவர்க்குக் கச்சூரி லேபிச்சைச் சோறெடுத்துக்

கொடுத்தாய்நின் பேரருள் என்சொல்லு கேன்எண் குணக்குன்றமே. ...27

2198

நாடிநின் றேநினை நான்கேட்டுக் கொள்வது நண்ணும்பத்துக்

கோடியன் றேஒரு கோடியின் நூற்றொரு கூறுமன்றே

தேடிநின் றேபுதைப் போருந் தருவர்நின் சீர்நினைந்துட்

பாடியந் தோமனம் வாடிநின் றேன்முகம் பார்த்தருளே. ...28

2199

தாயாகி னுஞ்சற்று நேரந் தரிப்பள்நந் தந்தையைநாம்

வாயார வாழ்த்தினும் வையினும் தன்னிடை வந்திதுநீ

ஈயாய் எனில்அருள் வான்என் றுனையடுத் தேன்உமையாள்

நேயா மனமிரங் காயாஎன் எண்ணம் நெறிப்படவே. ...29

2200

நடும்பாட்டை நாவலன் வாய்த்திருப் பாட்டை நயந்திட்டநீ

குடும்பாட்டை மேற்கொண்ட என்தமிழ்ப் பாட்டையும் கொண்டெனுள்ளத்

திடும்பாட்டை நீக்கிலை என்னினுந் துன்பத் திழுக்குற்றுநான்

படும்பாட்டை யாயினும் பார்த்திரங் காய்எம் பரஞ்சுடரே. ...30

2201

ஏட்டாலுங் கேளயல் என்பாரை நான்சிரித் தென்னைவெட்டிப்

போட்டாலும் வேறிடம் கேளேன்என் நாணைப் புறம்விடுத்துக்

கேட்டாலும் என்னை உடையா னிடஞ்சென்று கேட்பனென்றே

நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ் சொல்லி நிறுத்துவனே. ...31

2282

சீர்க்கின்ற கூடலில் பாணனுக் காட்படச் சென்றஅந்நாள்

வேர்க்கின்ற வெம்மணல் என்தலை மேல்வைக்கு மெல்லடிக்குப்

பேர்க்கின்ற தோறும் உறுத்திய தோஎனப் பேசிஎண்ணிப்

பார்க்கின்ற தோறும்என் கண்ணேஎன் உள்ளம் பதைக்கின்றதே. ...32

2283

நீயேஎன் தந்தை அருளுடை யாய்எனை நேர்ந்துபெற்ற

தாயேநின் பாலிடத் தெம்பெரு மாட்டிஇத் தன்மையினால்

நாயேன் சிறிதுங் குணமிலன் ஆயினும் நானும்உங்கள்

சேயே எனைப்புறம் விட்டால் உலகஞ் சிரித்திடுமே. ...33

2284

தெருளும் பொருளும்நின் சீரரு ளேஎனத் தேர்ந்தபின்யான்

மருளும் புவனத் தொருவரை யேனு மதித்ததுண்டோ

வெருளும் புவியில் துயரால் கலங்கி வெதும்புகின்றேன்

இருளும் கருமணி கண்டா அறிந்தும் இரங்கிலையே. ...34

2285

பெண்ணான் மயங்கும் எளியேனை ஆளப் பெருங்கருணை

அண்ணாநின் உள்ளம் இரங்காத வண்ணம் அறிந்துகொண்டேன்

கண்ணார் உலகில்என் துன்பமெல் லாம்வெளி காணிலிந்த

மண்ணா பிலத்தொடு விண்ணாடுங் கொள்ளை வழங்குமென்றே.
...35

2296

நெறிகொண்ட நின்னடித் தாமரைக் காட்பட்டு நின்றஎன்னைக்

குறிகொண்ட வாழ்க்கைத் துயராம் பெரிய கொடுங்கலிப்பேய்

முறிகொண் டலைக்க வழக்கோ வளர்த்த முடக்கிழநாய்

வெறிகொண்ட தேனும் விடத்துணி யார்இவ் வியனிலத்தே. ...36

2297

மதியாமல் ஆரையும் நான்இறு மாந்து மகிழ்கின்றதெம்

பதியாம் உனது திருவருட் சீருரம் பற்றியன்றோ

எதியார் பழினும் இடர்ப்பட் டலையஇவ் வேழைக்கென்ன

விதியா இனிப்பட மாட்டேன் அருள்செய் விடையவனே. ...37

2298

கற்கோட்டை நெஞ்சருந் தம்பால் அடுத்தவர் கட்குச்சும்மாச்

சொற்கோட்டை யாயினும் கட்டுவர் நின்னைத் துணிந்தடுத்தேன்

அற்கோட்டை நெஞ்சுடை யேனுக் கிரங்கிலை அன்றுலவா

நெற்கோட்டை ஈந்தவன் நீயல்லை யோமுக்கண் நின்மலனே. ...38

2299

ஆதிக்க மாயை மனத்தேன் கவலை அடுத்தடுத்து

வாதிக்க நொந்து வருந்துகின் றேன்நின் வழக்கம்எண்ணிச்

சோதிக்க என்னைத் தொடங்கேல் அருளத் தொடங்குகண்டாய்

போதிக்க வல்லநற் சேய்உமை யோடென்னுள் புக்கவனே. ...39

2210

பிறைமுடித் தாண்டொரு பெண்முடித் தோர்பிள்ளைப் பேர்(145)முடித்த

நிறைமுடித் தாண்டவஞ் செவ்வேணி செய்திட நித்தமன்றின்

மறைமுடித் தாண்டவஞ் செய்வோய்என் பாலருள் வைத்தெளியேன்

குறைமுடித் தாண்டுகொள் என்னே பலமுறை கூறுவதே. ...40

2211

நடங்கொண்ட பொன்னடி நீழலில் நான்வந்து நண்ணுமட்டும்

திடங்கொண்ட நின்புகழ் அல்லால் பிறர்புகழ் செப்பவையேல்

விடங்கொண்ட கண்டத் தருட்குன்ற மேஇம வெற்புடையாள்

இடங்கொண்ட தெய்வத் தனிமுத லேஎம் இறையவனே. ...41

2213

விழிக்கஞ்ச னந்தரும் மின்னார்தம் வாழ்க்கையில் வீழ்ந்தயலோர்

மொழிக்கஞ்சி உள்ளம் பொறாதுநின் நாம மொழிந்தெளியேன்

குழிக்கஞ்சி போன்மயங் கின்றேன்(146)அருளக் குறித்திலையேல்

பழிக்கஞ்சி னோய்இன்னும் என்பழிக் கஞ்சப் படுமுனக்கே. ...42

2213

சேல்வைக்கும் கண்ணுமை பாகநின் சித்தம் திருவருள்என்

பால்வைக்கு மேல்இடர் எல்லாம் எனைவிட்டப் பால்நடக்கக்

கால்வைக்கு மேநற் சுகவாழ்வென் மீதினில் கண்வைக்குமே
மால்வைக்கு மாயைகள் மண்வைக்கு மேதங்கள் வாய்தனிலே. ...43

2214

ஒருமாது பெற்ற மகன்பொருட் டாக உவந்துமுன்னம்
வருமாம னாகி வழக்குரைத் தோய்என் வழக்குரைத்தற்
கிருமா நிலத்தது போல்வேடங் கட்ட இருத்திகொலோ
திருமால் வணங்கும் பதத்தவ யானுன் சிறுவனன்றே. ...44

2215

முன்னஞ்ச முண்ட மிடற்றர சேநின் முழுக்கருணை
அன்னஞ் சுகம்பெற உண்டும்உன் பால்அன் படைந்திலதால்
கன்னெஞ்ச மோகட்டை வன்னெஞ்ச மோஎட்டிக் காய்நெஞ்சமோ
என்னெஞ்சம் என்னெஞ்ச மோதெரி யேன்இதற் கென்செய்வதே.
...45

2216

வானம் விடாதுறு கால்போல்என் தன்னை வளைந்துகொண்ட
மானம் விடாதிதற் கென்செய்கு வேன்நின்னை வந்தடுத்தேன்
ஊனம் விடாதுழல் நாயேன் பிழையை உளங்கொண்டிடேல்(147)
ஞானம் விடாத நடத்தோய்நின் தண்ணருள் நல்குகவே. ...46

2217

நாயுஞ் செயாத நடையுடை யேனுக்கு நாணமும்உள்
நோயுஞ் செயாநின்ற வன்மிடி நீக்கிநன் னோன்பளித்தாய்

பேயுஞ் செயாத கொடுந்தவத் தால்பெற்ற பிள்ளைக்குநல்

தாயும் செயாள்இந்த நன்றிகண் டாய்செஞ் சடையவனே. ...47

2218

உருவத்தி லேசிறி யேனாகி யூகத்தி லொன்றுமின்றித்

தெருவத்தி லேசிறு கால்வீசி யாடிடச் சென்றஅந்தப்

பருவத்தி லேநல் அறிவளித் தேஉனைப் பாடச்செய்தாய்

அருவத்தி லேஉரு வானோய்நின் தண்ணளி யார்க்குளதே. ...48

2219

மானெழுந் தாடுங் கரத்தோய்நின் சாந்த மனத்தில்சினந்

தானெழந் தாலும் எழுகஎன் றேஎன் தளர்வைஎல்லாம்

ஊனெழுந் தார்க்கநின் பால்உரைப் பேன்அன்றி ஊர்க்குரைக்க

நானெழுந் தாலும்என் நாஎழு மோமொழி நல்கிடவே. ...49

2220

வனமெழுந் தாடுஞ் சடையோய்நின் சித்த மகிழ்தலன்றிச்

சினமெழுந் தாலும் எழுகஎன் றேஎன் சிறுமையைநின்

முனமெழுந் தாற்றுவ தல்லால் பிறர்க்கு மொழிந்திடஎன்

மனமெழுந் தாலும்என் வாய்எழு மோஉள்ள வாறிதுவே. ...50

2221

சிற்பர மேஎஞ் சிவமே திருவருள் சீர்மிகுந்த

கற்பக மேஉனைச் சார்ந்தோர்க் களிக்குநின் கைவழக்கம்

அற்பமன் றேபல அண்டங் களின்அடங் காததென்றே

நற்பர ஞானிகள் வாசகத் தால்கண்டு நாடினனே. ...51

2222

வருஞ்செல்லுள்(148) நீர்மறுத் தாலும் கருணை மறாதஎங்கள்

பெருஞ்செல்வ மேஎஞ் சிவமே நினைத்தொழப் பெற்றும்இங்கே

தருஞ்செல் அரிக்கு மரம்போல் சிறுமைத் தளர்நடையால்

அருஞ்செல்லல் மூழ்கிநிற் கின்றேன் இதுநின் அருட்கழகே. ...52

2223

கருமுக நீக்கிய பாணனுக் கேகன கங்கொடுக்கத்

திருமுகம் சேரற் களித்தோய்என் றுன்னைத் தெரிந்தடுத்தென்

ஒருமுகம் பார்த்தருள் என்கின்ற ஏழைக் குதவிலையேல்

உருமுக(149) வார்க்கும் விடையோய் எவர்மற் றுதவுவரே. ...53

2224

மருப்பா வனத்துற்ற மாணிக்கு மன்னன் மனமறிந்தோர்

திருப்பா சுரஞ்செய்து பொற்கிழி ஈந்தநின் சீர்நினைந்தே

விருப்பா நினையடுத் தேன்எனக் கீந்திட வேஇன்றென்னை

கருப்பாநின் சித்தம் திருப்பாய்என் மீது கறைக்கண்டனே. ...54

2225

பீழையை மேவும்இவ் வாழ்க்கையி லேமனம் பேதுற்றஇவ்

ஏழையை நீவிட லாமோ அடிமைக் கிரங்குகண்டாய்

மாழையைப்(150) போன்முன்னர்த் தாங்கொண்டு வைத்து வளர்த்தஇள

வாழையைத் தாம்பின்னர் நீர்விட லின்றி மறுப்பதுண்டே. ...55

2226

கருத்தறி யாச்சிறி யேன்படுந் துன்பக் கலக்கமெல்லாம்

உருத்தறி யாமை பொறுத்தருள் ஈபவர் உன்னையன்றித்

திருத்தறி யார்பிறர் அன்றேமென் கன்றின் சிறுமைஒன்றும்

எருத்தறி யாதுநற் சேதா அறியும் இரங்குகவே. ...56

2227

வான்வேண்டிக் கொண்ட மருந்தோமுக் கண்கொண்ட வள்ளலுன்னை

நான்வேண்டிக் கொண்டது நின்னடி யார்க்கு நகைதருமீ

தேன்வேண்டிக் கொண்டனை என்பார் இதற்கின்னும் ஏனிரங்காய்

தான்வேண்டிக் கொண்ட அடிமைக்குக் கூழிடத் தாழ்ப்பதுண்டே. ...57

2228

பையுரைத் தாடும் பணிப்புயத் தோய்தமைப் பாடுகின்றோர்

உய்யுரைத் தாவுள்ள தில்லதென் றில்லதை உள்ளதென்றே

பொய்யுரைத் தாலும் தருவார் பிறர்அது போலன்றிநான்

மெய்யுரைத் தாலும் இரங்காமை நின்னருள் மெய்க்கழகே. ....58

2229

மடல்வற்றி னாலும் மணம்வற்று றாத மலரெனஎன்

உடல்வற்றி னாலும்என் உள்வற்று மோதுயர் உள்ளவெல்லாம்

அடல்வற்று றாதநின் தாட்கன்றி ஈங்கய லார்க்குரையேன்

கடல்வற்றி னாலும் கருணைவற் றாதமுக் கண்ணவனே. ...59

2230

எள்ளிருக் கின்றதற் கேனுஞ் சிறிதிட மின்றிஎன்பான்

முள்ளிருக் கின்றது போலுற்ற துன்ப முயக்கமெல்லாம்

வெள்ளிருக் கின்றவர் தாமுங்கண் டார்எனில் மேவிஎன்றன்

உள்ளிருக் கின்றநின் தாட்கோதல் என்எம் உடையவனே. ...60

2231

பொன்கின்று(151) பூத்த சடையாய்இவ் வேழைக்குன் பொன்னருளாம்

நன்கின்று நீதரல் வேண்டும்அந் தோதுயர் நண்ணிஎன்னைத்

தின்கின்ற தேகொடும் பாம்பையும் பாலுணச் செய்துகொலார்

என்கின்ற ஞாலம் இழுக்குரை யாதெற் கிரங்கிடினே. ...61

2232

வாய்மூடிக் கொல்பவர் போலேஎன் உள்ளத்தை வன்துயராம்

பேய்மூடிக் கொண்டதென் செய்கேன் முகத்தில் பிறங்குகையைச்

சேய்மூடிக் கொண்டுநற் பாற்கழக் கண்டுந் திகழ்முலையைத்

தாய்மூடிக் கொள்ளுவ துண்டோ அருளுக சங்கரனே. ...62

2233

கோள்வேண்டும் ஏழை மனத்தினை வேறுற்றுக் கொட்டக்கொள்ளித்

தேள்வேண்டு மோசுடத் தீவேண்டு மோவதை செய்திடலூர்

வாள்வேண்டு மோகொடுந் துன்பே அதில்எண் மடங்குகண்டாய்

ஆள்வேண்டு மேல்என்னை ஆள்வேண்டும் என்னுள் அஞர்ஒழித்தே. ...63

2234

விடையிலை யோஅதன் மேலேறி என்முன் விரைந்துவரப்

படையிலை யோதுயர் எல்லாம் துணிக்கப் பதங்கொளருட்

கொடையிலை யோஎன் குறைதீர நல்கக் குலவும்என்தாய்

புடையிலை யோஎன் தனக்காகப் பேசஎம் புண்ணியனே. ...64

2235

நறையுள தேமலர்க் கொன்றைகொண் டாடிய நற்சடைமேல்

பிறையுள தேகங்கைப் பெண்ணுள தேபிறங் குங்கழுத்தில்

கறையுள தேஅருள் எங்குள தேஇக் கடையவனேன்

குறையுள தேஎன் றரற்றவும் சற்றுங் குறித்திலதே. ...65

2236

சினத்தாலும் காமத்தி னாலும்என் தன்னைத் திகைப்பிக்கும்இம்

மனத்தால் உறுந்துயர் போதாமை என்று மதித்துச்சுற்றும்

இனத்தாலும் வாழ்க்கை இடும்பையி னாலும் இளைக்கவைத்தாய்

அனத்தான் புகழும் பதத்தோய் இதுநின் அருட்கழகே. ....66

2237

புல்லள வாயினும் ஈயார்தம் வாயில் புகுந்துபுகழ்ச்

சொல்லள வாநின் றிரப்போர் இரக்கநற் சொன்னங்களைக்

கல்லள(152) வாத்தரு கின்றோர்தம் பாலுங் கருதிச்சென்றோர்

நெல்லள வாயினும் கேளேன்நின் பாலன்றி நின்மலனே. ...67

2238

பிறைசூழ்ந்த வேணி முடிக்கனி யேஎம் பெருஞ்செல்வமே

கறைசூழ்ந்த கண்டத்தெம் கற்பக மேநுதற் கட்கரும்பே

மறைசூழ்ந்த மன்றொளிர் மாமணி யேஎன் மனமுழுதும்

குறைசூழ்ந்து கொண்டதென் செய்கேன் அகற்றக் குறித்தருளே.
...68

2239

கண்கட்டி ஆடும் பருவத்தி லேமுலை கண்டஒரு

பெண்கட்டி யாள நினைக்கின்ற ஓர்சிறு பிள்ளையைப்போல்

எண்கட்டி யானுன் அருள்விழைந் தேன்சிவ னேஎன்நெஞ்சம்

புண்கட்டி யாய்அலைக் கின்றது மண்கட்டிப் போலுதிர்ந்தே. ...69

2240

மெய்விட்ட வஞ்சக நெஞ்சால் படுந்துயர் வெந்நெருப்பில்

நெய்விட்ட வாறிந்த வாழ்க்கையின் வாதனை நேரிட்டதால்

பொய்விட்ட நெஞ்சுறும் பொற்பதத் தைய இப் பொய்யனைநீ

கைவிட் டிடநினை யேல்அருள் வாய்கரு ணைக்கடலே. ...70

2241

அருட்கட லேஅக் கடலமு தேஅவ் வமுதத்துற்ற

தெருட்சுவை யேஅச் சுவைப்பய னேமறைச் சென்னிநின்ற

பொருட்பத மேஅப் பதத்தர சேநின் புகழ்நினையா

இருட்குண மாயை மனத்தே னையும்உவந் தேன்றுகொள்ளே.
....71

2242

அண்டங்கண் டானும் அளந்தானும் காண்டற் கரியவநின்

கண்டங்கண் டார்க்குஞ் சடைமேல் குறைந்த கலைமதியின்

துண்டங்கண் டார்க்கும் பயமுள தோஎனச் சூழ்ந்தடைந்தேன்

தொண்டன்கண் டாள்பல தெண்டன்கண் டாய்நின்
துணையடிக்கே. ...72

2243

தேட்டக்கண் டேர்மொழிப் பாகா உலகில் சிலர்குரங்கை

ஆட்டக்கண் டேன்அன்றி அக்குரங் கால்அவர் ஆடச்சற்றும்

கேட்டுக்கண் டேனிலை நானேழை நெஞ்சக் கிழக்குரங்கால்

வேட்டுக்கொண் டாடுகின் றேன்இது சான்ற வியப்புடைத்தே. ...73

2244

போகங்கொண் டார்த்த அருளார் அமுதப் புணர்முலையைப்

பாகங்கொண் டார்த்த பரம்பொரு ளேநின் பதநினையா

வேகங்கொண் டார்த்த மனத்தால்இவ் வேழை மெலிந்துமிகச்

சோகங்கொண் டார்த்துநிற் கின்றேன் அருளத் தொடங்குகவே. .
...74

2245

இன்றல வேநெடு நாளாக ஏழைக் கெதிர்த்ததுன்பம்

ஒன்றல வேபல எண்ணில வேஊற் றுரைத்ததயல்

மன்றல வேபிறர் நன்றல வேயென வந்தகயக்

கன்றல வேபசுங் கன்றடி யேன்றனைக் காத்தருளே. ...75

2246

படிபட்ட மாயையின் பாற்பட்ட சாலப் பரப்பிற்பட்டே

மிடிபட்ட வாழ்க்கையின் மேற்பட்ட துன்ப விசாரத்தினால்

அடிபட்ட நானுனக் காட்பட்டும் இன்னும் அலைதல்நன்றோ

பிடிபட்ட நேரிடைப் பெண்பட்ட பாகப் பெருந்தகையே. ...76

2247

உடையாய்என் விண்ணப்பம் ஒன்றுண்டு கேட்டருள் உன்னடிச்சீர்

தடையாதும் இன்றிப் புகல்வதல் லால்இச் சகத்திடைநான்

நடையால் சிறுமைகொண் டந்தோ பிறரை நவின்றவர்பால்

அடையா மையுநெஞ் சுடையாமை யுந்தந் தருளுகவே. ...77

2248

தஞ்சமென் றேநின்ற நாயேன் குறையைத் தவிர்உனக்கோர்

பஞ்சமின் றேஉல கெல்லாநின் சீரருட் பாங்குகண்டாய்

எஞ்சநின் றேற்குனை யல்லால் துணைபிறி தில்லைஇது

வஞ்சமன் றேநின் பதங்காண்க முக்கண் மணிச்சுடரே. ...78

2249

பொறுத்தாலும் நான்செயும் குற்றங்கள் யாவும் பொறாதெனைநீ

ஒறுத்தாலும் நன்றினிக் கைவிட்டி டேல்என் னுடையவன்நீ
வெறுத்தாலும் வேறிலை வேற்றோர் இடத்தை விரும்பிஎன்னை
அறுத்தாலுஞ் சென்றிட மாட்டேன் எனக்குன் அருளிடமே. ...79

2250

சேல்வரும் ஏர்விழி மங்கைபங் காஎன் சிறுமைகண்டால்
மேல்வரு நீவரத் தாழ்த்தாலும் உன்றன் வியன்அருட்பொற்
கால்வரு மேஇளங் கன்றழத் தாய்ப்பசுக் காணின்மடிப்
பால்வரு மேமுலைப் பால்வரு மேபெற்ற பாவைக்குமே. ...80

2251

வன்பட்ட கூடலில் வான்பட்ட வையை வரம்பிட்டநின்
பொன்பட்ட மேனியில் புண்பட்ட போதில் புவிநடையாம்
துன்பட்ட வீரர்அந் தோவாத வூரர்தம் தூயநெஞ்சம்
என்பட்ட தோஇன்று கேட்டஎன் நெஞ்சம் இடிபட்டதே. ...81

2252

நீர்சிந்தும் கண்ணும் நிலைசிந்தும் நெஞ்சமும் நீணடையில்
சீர்சிந்து வாழ்க்கையும் தேன்சிந்தி வாடிய செம்மலர்போல்
கூர்சிந்து புந்தியும் கொண்டுநின் றேன்உட் குறைசிந்தும்வா
றோர்சிந்து போலருள் நேர்சிந்தன் ஏத்தும் உடையவனே. ...82

2253

கொடிகொண்ட ஏற்றின் நடையும் சடையும் குளிர்முகமும்
துடிகொண்ட கையும் பொடிகொண்ட மேனியும் தோலுடையும்

பிடிகொண்ட பாகமும் பேரருள் நோக்கமும் பெய்கழலும்

குடிகொண்ட நன்மனம் என்மனம் போற்குறை கொள்வதின்றே.
...83

2254

விதிக்கும் பதிக்கும் பதிநதி ஆர்மதி வேணிப்பதி

திதிக்கும் பதிக்கும் பதிமேற் கதிக்குந் திகழ்பதிவான்

துதிக்கும் பதிக்கும் பதிஓங்கு மாபதி சொற்கடந்த

பதிக்கும் பதிசிற் பதியெம் பதிநம் பசுபதியே. ...84

2255

எனையடைந் தாழ்த்திய துன்பச் சுமையை இறக்கெனவே

நினையடைந் தேன்அடி நாயேற் கருள நினைதிகண்டாய்

வினையடைந் தேமன வீறுடைந் தேநின்று வேற்றவர்தம்

மனையடைந் தேமனம் வாடல்உன் தொண்டர் மரபல்லவே. ...85

2256

வனம்போய் வருவது போலேவன் செல்வர் மனையிடத்தே

தினம்போய் வருமிச் சிறியேன் சிறுமைச் செயலதுபோய்ச்

சினம்போய்க் கொடும்பகைக் காமமும் போய்நின் திறநிகழ்த்தா

இனம்போய்க் கொடிய மனம்போய் இருப்பதென் றென்னரசே.
...86

2257

பெற்றா ளனையநின் குற்றேவல் செய்து பிழைக்கறியாச்

சிற்றாள் பலரினும் சிற்றா ளெனுமென் சிறுமைதவிர்த்
துற்றாள் கிலைஎனின் மற்றார் துணைஎனக் குன்கமலப்
பொற்றாள் அருட்புகழ்க் கற்றாய்ந்து பாடப் புரிந்தருளே. ...87

2258

அந்நாணை யாதுநஞ் சேற்றயன் மால்மனை யாதியர்தம்
பொன்னாணைக் காத்த அருட்கட லேபிறர் புன்மனைபோய்
இந்நாணை யாவகை என்னாணைக் காத்தருள் ஏழைக்குநின்
தன்னாணை ஐயநின் தாளாணை வேறு சரணில்லையே. ...88

2259

பவசாத னம்பெறும் பாதகர் மேவும்இப் பாரிடைநல்
சிவசாத னத்தரை ஏன்படைத் தாய்அத் திருவிலிகள்
அவசாத னங்களைக் கண்டிவ ருள்ளம் அழுங்கஎன்றோ
கவசா தனமெனக் கைம்மா னுரியைக் களித்தவனே. ...89

2260

நான்செய்த புண்ணிய மியாதோ சிவாய நமஎனவே
ஊன்செய்த நாவைக்கொண் டோதப்பெற் றேன்எனை ஒப்பவரார்
வான்செய்த நான்முகத் தோனும் திருநெடு மாலுமற்றைத்
தேன்செய்த கற்பகத் தேவனும் தேவருஞ் செய்யரிதே. ...90

2261

உற்றா யினுமறைக் கோர்வரி யோய்எனை உற்றுப்பெற்ற
நற்றா யினும்இனி யானேநின் நல்லருள் நல்கில்என்னை

விற்றா யினுங்கொள வேண்டுகின் றேன்என் விருப்பறிந்தும்
சற்றா யினும்இரங் காதோநின் சித்தம் தயாநிதியே. ... 91

2262

வான்மா றினுமொழி மாறாத மாறன் மனங்களிக்கக்
கான்மாறி யாடிய கற்பக மேநின் கருணையென்மேல்
தான்மா றினும்விட்டு நான்மாறி டேன்பெற்ற தாய்க்குமுலைப்
பான்மாறி னும்பிள்ளை பான்மாறு மோஅதில் பல்லிடுமே. ...92

2263

அன்பரி தாமனத் தேழையன் யான்துய ரால்மெலிந்தே
இன்பரி தாமிச் சிறுநடை வாழ்க்கையில் ஏங்குகின்றேன்
என்பரி தாப நிலைநீ அறிந்தும் இரங்கிலையேல்
வன்பரி தாந்தண் அருட்கட லேஎன்ன வாழ்வெனக்கே. ...93

2264

மைகண்ட கண்டமும் மான்கண்ட வாமமும் வைத்தருளில்
கைகண்ட நீஎங்கும் கண்கண்ட தெய்வம் கருதிலென்றே
மெய்கண்ட நான்மற்றைப் பொய்கண்ட தெய்வங்கள் மேவுவனோ
நெய்கண்ட ஊண்விட்டு நீர்கண்ட கூழுக்கென் நேடுவதே. ...94

2265

வேணிக்கு மேலொரு வேணி(153) வைத் தோய்முன் விரும்பிஒரு
மாணிக்கு வேதம் வகுத்தே கிழிஒன்று வாங்கித்தந்த
காணிக்குத் தானரைக் காணிமட் டாயினும் காட்டுகண்டாய்

பாணிக்குமோ(154) தரும் பாணி(155) வந் தேற்றவர் பான்மைகண்டே. ...95

2266

மறைக்கொளித் தாய்நெடு மாற்கொளித் தாய்திசை மாமுகங்கொள்

இறைக்கொளித் தாய்இங் கதிலோர் பழியிலை என்றன்மனக்

குறைக்கொளித் தாலும் குறைதீர்த் தருளெனக் கூவிடும்என்

முறைக்கொளித் தாலும் அரசேநின் பால்பழி மூடிடுமே. ...96

2267

முன்மழை வேண்டும் பருவப் பயிர்வெயில் மூடிக்கெட்ட

பின்மழை பேய்ந்தென்ன பேறுகண் டாய்அந்தப் பெற்றியைப்போல்

நின்மழை போற்கொடை இன்றன்றி மூப்பு நெருங்கியக்கால்

பொன்மழை பேய்ந்தென்ன கன்மழை பேய்ந்தென்ன பூரணனே. ...97

2268

நீளா தரவுகொண் டென்குறை யாவும் நிகழ்த்தவும்நீ

கேளா தவன்என வாளா இருக்கின்ற கேண்மைஎன்னோ

சூளாத முக்கண் மணியே விடேல்உனைச் சூழ்ந்தஎன்னை

ஆளாகக் கொள்ளினும் மீளா நரகத் தழுத்தினுமே. ...98

2269

வளங்கன்று மாவனத் தீன்றதன் தாயின்றி வாடுகின்ற

இளங்கன்று போல்சிறு வாழ்க்கையில் நின்அருள் இன்றிஅந்தோ

உளங்கன்று நான்செய்வ தென்னே கருணை உதவுகண்டாய்
களங்கன்று பேரருட் காரென்று கூறும் களத்தவனே. ..99

2270

காற்றுக்கு மேல்விட்ட பஞ்சாகி உள்ளம் கறங்கச்சென்றே
சோற்றுக்கு மேற்கதி இன்றென வேற்றகந் தோறும்உண்போர்
தூற்றுக்கு மேல்பெருந் தூறிலை ஆங்கென் துயரமெனும்
சேற்றுக்கு மேல்பெருஞ் சேறிலை காண்அருட் செவ்வண்ணனே.
...100

2271

அந்தோ துயரில் சுழன்றாடும் ஏழை அவலநெஞ்சம்
சிந்தோத நீரில் சுழியோ இளையவர் செங்கைதொட்ட
பந்தோ சிறுவர்தம் பம்பர மோகொட்டும் பஞ்சுகொலோ
வந்தோ டுழலும் துரும்போஎன் சொல்வதெம் மாமணியே. ...101

2272

பொன்வச மோபெண்க ளின்வச மோகடற் பூவசமோ
மின்வச மோஎனும் மெய்வச மோஎன் விதிவசமோ
தன்வச மோமலந் தன்வச மோஎன் சவலைநெஞ்சம்
என்வச மோஇல்லை நின்வசம் நான்எனை ஏன்றுகொள்ளே.
...102

2273

நானடங் காதொரு நாட்செயும் குற்ற நடக்கைஎல்லாம்

வானடங் காதிந்த மண்ணடங் காது மதிக்குமண்டம்

தானடங் காதெங்குந் தானடங் காதெனத் தானறிந்தும்

மானடங் காட்டு மணிஎனை ஆண்டது மாவியப்பே. ...193

2274

பாம்பா யினும்உணப் பால்கொடுப் பார்வளர்ப் பார்மனைப்பால்

வேம்பாயி னும்வெட்டல் செய்யார் வளர்த்த வெருட்சிக்கடாத்

` தாம்பா யினும்(156) ஒரு தாம்பாயி னுங்கொடு தாம்பின்செல்வார்

தேம்பாய் மலர்க்குழற் காம்பாக என்னையும் சேர்த்துக்கொள்ளே.
...194

2275

நெருப்புக்கு முட்டையும் கூழ்க்கிட உப்பையும் நேடிச்செல்வோர்

பருப்புக்கு நெய்யும்ஒண் பாலுக்கு வாழைப் பழமுங்கொள்ளத்

தெருப்புக்கு வாரொடு சேர்கிலென் னாம்இச் சிறுநடையாம்

இருப்புக்கு வேண்டிய நான்சிவ யோகர்பின் எய்திலென்னே.
...195

2276

எம்மத மாட்டு மரியோய்என் பாவி இடும்பைநெஞ்சை

மும்மத யானையின் காலிட் டிடறினும் மொய்அனற்கண்

விம்மத மாக்கினும் வெட்டினும் நன்றுன்னை விட்ட அதன்

வெம்மத நீங்கலென் சம்மதங் காண்எவ் விதத்தினுமே. ...196

2277

கல்லாத புந்தியும் அந்தோநின் தாளில் கணப்பொழுதும்

நில்லாத நெஞ்சமும் பொல்லாத மாயையும் நீண்மதமும்

கொல்லாமல் கொன்றெனைத் தின்னாமல் தின்கின்ற கொள்கையைஇங்

கெல்லாம் அறிந்த உனக்கெளி யேனின் றிசைப்பதென்னே. ...107

2278

தெவ்வழி ஓடும் மனத்தேனுக் குன்றன் திருவுளந்தான்

இவ்வழி ஏகென் றிருவழிக் குள்விட்ட தெவ்வழியோ

அவ்வழி யேவழி செவ்வழி பாடநின் றாடுகின்றோய்

வெவ்வழி நீர்ப்புணைக் கென்னே செயல்இவ் வியனிலத்தே. ..108

2279

கண்ணார் நுதற்செங் கரும்பேநின் பொன்னருட் கான்மலரை

எண்ணாத பாவிஇங் கேன்பிறந் தேன்நினை ஏத்துகின்றோர்

உண்ணாத ஊணும் உடுக்கா உடையும் உணர்ச்சிசற்றும்

நண்ணாத நெஞ்சமும் கொண்டுல கோர்முன்னர் நாணுறவே. ...109

2280

அம்மா வயிற்றெரிக் காற்றேன் எனநின் றழுதலறச்

சும்மாஅச் சேய்முகந் தாய்பார்த் திருக்கத் துணிவள்கொலோ

இம்மா நிலத்தமு தேற்றாயி னுந்தந் திடுவள்முக்கண்

எம்மான்இங் கேழை அழுமுகம் பார்த்தும் இரங்கிலையே. ...110

2281

ஓயாக் கருணை முகிலே நுதற்கண் ஒருவநின்பால்

தோயாக் கொடியவெந் நெஞ்சத்தை நான்சுடு சொல்லைச்சொல்லி

வாயால் சுடினுந் தெரிந்தில தேஇனி வல்வடவைத்

தீயால் சுடினுமென் அந்தோ சிறிதுந் தெரிவதன்றே. ...111

2282

மாலறி யான்மல ரோன்அறி யான்மக வான்அறியான்

காலறி யான்மற்றை வானோர் கனவினுங் கண்டறியார்

சேலறி யாவிழி மங்கைபங் காநின் திறத்தைமறை

நாலறி யாஎனில் நானறி வேன்எனல் நாணுடைத்தே. ... 112

2283

ஆறிட்ட வேணியும் ஆட்டிட்ட பாதமும் அம்மைஒரு

கூறிட்ட பாகமும் கோத்திட்ட கொன்றையும் கோலமிக்க

நீறிட்ட மேனியும் நான்காணும் நாள்என் னிலைத்தலைமேல்

ஏறிட்ட கைகள்கண் டாணவப் பேய்கள் இறங்கிடுமே. ...113

2284

அல்லுண்ட கண்டத் தரசேநின் சீர்த்தி அமுதமுண்டோர்

கொல்லுண்ட தேவர்தங் கோளுண்ட சீரெனும் கூழுண்பரோ

சொல்லுண்ட(157) வாயினர் புல்லுண்ப ரோஇன்
சுவைக்கண்டெனும்

கல்லுண்ட பேர்கருங் கல்லுண்ப ரோஇக் கடலிடத்தே. ...114

2285

காரே எனுமணி கண்டத்தி னான்பொற் கழலையன்றி

யாரே துணைநமக் கேழைநெஞ் சேஇங் கிருந்துகழு

நீரே எனினுந் தரற்கஞ்சு வாரொடு நீயுஞ்சென்று

சேரேல் இறுகச் சிவாய நமஎனச் சிந்தைசெய்யே. ....115

2286

வலைப்பட்ட மானென வாட்பட்ட கண்ணியர் மையலென்னும்

புலைப்பட்ட பேய்க்கு விலைப்பட்ட நான்மதி போய்ப்புலம்ப

விலைப்பட்ட இம்மனம் அந்தோஇவ் வேழைக்கென் றெங்கிருந்து

தலைப்பட்ட தோஇதற் கென்செய்கு வேன்முக்கட் சங்கரனே. ...116

2287

குருந்தாமென் சோக மனமான பிள்ளைக் குரங்குக்கிங்கே

வருந்தா ணவமென்னு மானிடப் பேயொன்று மாத்திரமோ

பெருந்தா மதமென் றிராக்கதப் பேயும் பிடித்ததெந்தாய்

திருந்தா அதன்குதிப் பென்ஒரு வாய்கொண்டு செப்பரிதே. ...117

2288

பெண்மணி பாகப் பெருமணி யேஅருட் பெற்றிகொண்ட

விண்மணி யான விழிமணி யேஎன் விருப்புறுநல்

கண்மணி நேர்கட வுண்மணி யேஒரு கால்மணியைத்

திண்மணிக் கூடலில் விற்றோங்கு தெய்வ சிகாமணியே. ...118

2289

அலையெழுத் துந்தெறும் ஐந்தெழுத் தாலுன்னைஅர்ச்சிக்கின்றோர்

கலையெழுத் தும்புகழ் காலெழுத் திற்குக் கனிவிரக்கம்

இலையெழுத் தும்பிறப் பீடெழுத் துங்கொண்ட எங்கள்புழுத்

தலையெழுத் துஞ்சரி யாமோ நுதற்கண் தனிமுதலே. ...119

2290

ஆட்சிகண் டார்க்குற்ற துன்பத்தைத் தான்கொண் டருளளிக்கும்

மாட்சிகண் டாய்எந்தை வள்ளற் குணமென்பர் மற்றதற்குக்

காட்சிகண் டேனிலை ஆயினும் உன்னருட் கண்டத்திலோர்

சாட்சிகண் டேன்களி கொண்டேன் கருணைத் தடங்கடலே. ...120

2291

கண்கொண்ட நெற்றியும் கார்கொண்ட கண்டமும் கற்பளிக்கும்

பெண்கொண்ட பாகமும் கண்டேன்முன் மாறன் பிரம்படியால்

புண்கொண்ட மேனிப் புறங்கண்டி லேன்அப் புறத்தைக்கண்டால்

ஒண்கொண்ட கல்லும் உருகும்என் றோஇங் கொளித்தனையே. ...121

2292

வேய்க்குப் பொரும்எழில் தோளுடைத் தேவி விளங்குமெங்கள்

தாய்க்குக் கனிந்தொரு கூறளித் தோய்நின் தயவுமிந்த

நாய்க்குக் கிடைக்கும் எனஒரு சோதிடம் நல்கில்அவர்

வாய்க்குப் பழத்தொடு சர்க்கரை வாங்கி வழங்குவனே. ...122

2293

காண்டத்தின் மேவும் உலகீர்இத் தேகம் கரும்பணைபோல்

நீண்டத்தி லென்ன நிலையல வேஇது நிற்றல்பசும்

பாண்டத்தில் நீர்நிற்றல் அன்றோ நமைநம் பசுபதிதான்

ஆண்டத்தில் என்ன குறையோநம் மேற்குறை ஆயிரமே. ...123

2294

வேணிக்கண் நீர்வைத்த தேவே மதுரை வியன்தெருவில்

மாணிக்கம் விற்றசெம் மாணிக்க மேஎனை வாழ்வித்ததோர்

ஆணிப்பொன் னேதெள் ளமுதேநின் செய்ய அடிமலர்க்குக்

காணிக்கை யாக்கிக்கொண் டாள்வாய் எனது கருத்தினையே. ...124

2295

மாகலை வாணர் பிறன்பால் எமக்கும் மனைக்கும்கட்ட

நீகலை தாஒரு மேகலை தாஉண நென்மலைதா

போகலை யாஎனப் பின்தொடர் வார்அவர் போல்மனனீ

ஏகலை ஈகலர் ஏகம்ப வாண ரிடஞ்செல்கவே. ...125

2296

ஊர்தரு வார்நல்ல ஊண்தரு வார்உடை யுந்தருவார்

பார்தரு வார்உழற் கேர்தரு வார்பொன் பணந்தருவார்

சோர்தரு வார்உள் ளறிவுகெ டாமல் சுகிப்பதற்கிங்

கார்தரு வார்அம்மை யார்தரு பாகனை யன்றிநெஞ்சே. ...126

2297

பண்செய்த சொன்மங்கை பாகாவெண் பாற்கடல் பள்ளிகொண்டோன்

திண்செய்த சக்கரங் கொள்வான் அருச்சனை செய்திட்டநாள்

விண்செய்த நின்னருட் சேவடி மேற்பட வேண்டியவன்

கண்செய்த நற்றவம் யாதோ கருத்தில் கணிப்பரிதே. ...127

2298

மாப்பிட்டு நேர்ந்துண்டு வந்தியை வாழ்வித்த வள்ளல்உன்வெண்

காப்பிட்டு மேற்பல பாப்பிட்ட மேனியைக் கண்டுதொழக்

கூப்பிட்டு நானிற்க வந்திலை நாதனைக் கூடஇல்லாள்

பூப்பிட்ட காலத்தில் கூப்பிட்ட போதினும் போவதுண்டே. ...128

2299

என்மேற் பிழையிலை யானென்செய் கேன்என் இடத்திருந்தென்

சொன்மேற் கொளாதெனை இன்மேல் துரும்பெனச் சுற்றுநெஞ்சத்

தின்மேற் பிழையது புன்மேற் பனியெனச் செய்தொழிக்க

நின்மேற் பரம்விடை தன்மேற்கொண் டன்பர்முன் நிற்பவனே. ...129

2300

மைவிட்டி டாமணி கண்டாநின் தன்னை வழுத்தும்என்னை

நெய்விட்டி டாஉண்டி போல்இன்பி லான்மெய்ந் நெறியறியான்

பொய்விட்டி டான்வெம் புலைவிட்டி டான்மயல் போகமெலாம்

கைவிட்டி டான்எனக் கைவிட்டி டேல்வந்து காத்தருளே. ...130

2381

நல்லமு தம்சிவை தான்தரக் கொண்டுநின் நற்செவிக்குச்

சொல்லமு தந்தந்த எங்கள் பிரான்வளஞ் சூழ்மயிலை

இல்லமு தந்திகழ் பெண்ணாக என்பை எழுப்பியநாள்

சில்லமு தம்பெற்ற தேவரை வானஞ் சிரித்ததன்றே. ...131

2382

சொற்றுணைவேதியன் என்னும்பதிகச் சுருதியைநின்

பொற்றுணை வார்கழற் கேற்றியப் பொன்னடிப் போதினையே

நற்றுணை யாக்கரை ஏறிய புண்ணிய நாவரசைக்

கற்றுணை யாதிந்தக் கற்றுணை யாமென் கடைநெஞ்சமே. ...132

2383

சடையவ நீமுன் தடுத்தாண்ட நம்பிக்குச் சற்றெனினும்

கடையவ னேன்செயுங் கைம்மா றறிந்திலன் கால்வருந்தி

நடையுற நின்னைப் பரவைதன் பாங்கர் நடத்திஅன்பர்

இடைவரும் உன்றன் இரக்கத்தைத் தான்வெளி யிட்டதற்கே.
...133

2384

திருவாத வூரெம் பெருமான் பொருட்டன்று தென்னன்முன்னே

வெருவாத வைதிகப் பாய்பரி மேற்கொண்டு மேவிநின்ற

ஒருவாத கோலத் தொருவாஅக் கோலத்தை உள்குளிர்ந்தே

கருவாத நீங்கிடக் காட்டுகண் டாய்என் கனவினிலே. ...134

2395

சீர்தரு நாவுக் கரையரைப் போலிச் சிறியனும்லூர்

கார்தரு மாயைச் சமணான் மனக்கருங் கல்லிற்கட்டிப்

பார்தரு பாவக் கடலிடை வீழ்த்திடப் பட்டுழன்றே

ஏர்தரும் ஐந்தெழுத் தோதுகின் றேன்கரை ஏற்றரசே. . ..135

2396

தூக்கமும் சோம்பலும் துக்கமும் வாழ்க்கையைத் தொட்டுவரும்

ஏக்கமும் நோயும் இடையூறும் மற்றை இடரும்விட்ட

நீக்கமும் நின்மல நெஞ்சமும் சாந்த நிறைவும் அருள்

ஆக்கமும் நின்பதத் தன்பும் தருக அருட்சிவமே. ...136

2397

பொய்வந்த வாயும் புலைவந்த செய்கையும் புன்மையெல்லாம்

கைவந்த நெஞ்சமும் கண்டேன் இனிநற் கனிவுடன்யான்

மெய்வந்த வாயும் விதிவந்த செய்கையும் வீறன்பினால்

தைவந்த நெஞ்சமும் காண்பதென் றோசெஞ் சடைக்கனியே. ...137

2398

கங்கைகொண் டாய்மலர் வேணியி லேஅருட் கண்ணிமலை

மங்கைகொண் டாய்இடப் பாகத்தி லேஐய மற்றுமொரு

நங்கைகொண் டால்எங்கு கொண்டருள் வாயென்று நண்ணுமன்பர்

சங்கைகொண் டால்அதற் கென்சொல்லு வாய்முக்கட் சங்கரனே.
...138

2309

வாட்கொண்ட கண்ணியர் மாயா விகார வலைபிழைத்துன்

தாட்கொண்ட நீழலில் சார்ந்திடு மாறென் றனக்கருள்வாய்

கீட்கொண்ட கோவணப் பேரழ காளனைக் கேதமற

ஆட்கொண்ட நீஇன்று வாளா இருப்ப தழகல்லவே. ...139

2310

வீட்டுத் தலைவநின் தாள்வணங் கார்தம் விரிதலைசும்

மாட்டுத் தலைபட்டி மாட்டுத் தலைபுன் வராகத்தலை

ஆட்டுத் தலைவெறி நாய்த்தலை பாம்பின் அடுந்தலைகற்

பூட்டுத் தலைவெம் புலைத்தலை நாற்றப் புழுத்தலையே. ...140

2311

தெண்ணீர் முடியனைக் காணார்தங் கண்இருள் சேர்குருட்டுக்

கண்ணீர் சொரிந்தகண் காசக்கண் புன்முலைக் கண்நகக்கண்

புண்ணீர் ஒழுகுங் கொடுங்கண் பொறாமைக்கண்
புன்கண்வன்கண்

மண்ணீர்மை யுற்றகண் மாமணி நீத்தகண் மாலைக்கண்ணே.
...141

2312

கண்ணுத லான்புகழ் கேளார் செவிபொய்க் கதைஒலியும்

அண்ணுற மாதரு மைந்தருங் கூடி அழுமொலியும்

துண்ணெனுந் தீச்சொல் ஒலியும்அவ் வந்தகன் தூதர்கண்மொத்

துண்ணுற வாவென் றுரப்பொலி யும்புகும் ஊன்செவியே. ...142

2313

மணிகொண்ட கண்டனை வாழ்த்தார்தம் வாய்த்தெரு மண்ணுண்டவாய்

பிணிகொண்ட வாய்விடப் பிச்சுண்ட வாய்வரும் பேச்சற்றவாய்

துணிகொண்ட வாயனற் சூடுண்ட வாய்மலஞ் சோர்ந்திழிவாய்

குணிகொண்ட உப்பிலிக் கூழுண்ட வாய்எனக் கூறுபவே. ...143

2314

சகமிலை யேஎன் றுடையானை எண்ணலர் தங்கள்நெஞ்சம்

சுகமிலை யேஉணச் சோறிலை யேகட்டத் தூசிலையே

அகமிலை யேபொரு ளாவிலை யேவள்ள லாரிலையே

இகமிலை யேஒன்றும் இங்கிலை யேஎன் றிரங்குநெஞ்சே. ...144

2315

பொங்கரும் பேர்முலை மங்கைக் கிடந்தந்த புத்தமுதே

செங்கரும் பேநறுந் தேனே மதுரச் செழுங்கனியே

திங்களுங் கங்கையுஞ் சேர்ந்தொளிர் வேணிச் சிவக்கொழுந்தே

எங்களை ஆட்கொண்டும் என்னே துயரில் இருத்துவதே. ...145

2316

வில்லைப்பொன் னாக்கரங் கொண்டோ ய்வன்தொண்டர் விரும்புறச்செங்

கல்லைப்பொன் னாக்கிக் கொடுத்தோய்நின் பாதங் கருத்தில்வையார்

புல்லைப்பொன் னாக்கொளும் புல்லர்கள் பாற்சென்று பொன்னளிக்க

வல்லைப்பொன் னார்புய என்பார் இஃதென்சொல் வாணர்களே. ...146

2317

கூத்துடை யாய்என் னுடையாய்முத் தேவரும் கூறுகின்ற

ஏத்துடை யாய்அன்பர் ஏத்துடை யாய்என்றன் எண்மைமொழிச்

சாத்துடை யாய்நின் தனக்கே பரம்எனைத் தாங்குதற்கோர்

வேத்துடை யார்மற் றிலைஅருள் ஈதென்றன் விண்ணப்பமே. ...147

2318

வெப்பிலை யேஎனும் தண்விளக் கேமுக்கண் வித்தகநின்

ஒப்பிலை யேஎனும் சீர்புக லார்புற்கை உண்ணுதற்கோர்

உப்பிலை யேபொரு ளொன்றிலை யேஎன் றுளல்பவர்மேல்

தப்பிலை யேஅவர் புன்தலை ஏட்டில் தவமிலையே. ...148

2319

எனைப்பெற்ற தாயினும் அன்புடை யாய்எனக் கின்பநல்கும்

உனைப்பெற்ற உள்ளத் தவர்மலர்ச் சேவடிக் கோங்கும்அன்பு

தனைப்பெற்ற நன்மனம் தாம்பெற்ற மேலவர் சார்பைப்பெற்றால்

வினைப்பெற்ற வாழ்வின் மனைப்பெற்றம் போல மெலிவதின்றே. ...149

2320

நிறைமதி யாளர் புகழ்வோய் சடையுடை நீண்முடிமேல்
குறைமதி தானொன்று கொண்டனை யேஅக் குறிப்பெனவே
பொறைமதி யேன்றன் குறைமதி தன்னையும் பொன்னடிக்கீழ்
உறைமதி யாக்கொண் டருள்வாய் உலகம் உவப்புறவே. ...150

2321

துடிவைத்த செங்கை அரசேநல் லூரில்நின் தூமலர்ப்பொன்
அடிவைத்த போதெங்கள் அப்பர்தம் சென்னி யதுகுளிர்ந்தெப்
படிவைத்த தோஇன்ப மியான்எணுந் தோறும்இப் பாவிக்குமால்
குடிவைத்த புன்தலை ஒன்றோ மனமும் குளிர்கின்றதே. ...151

2322

ஒருமுடி மேல்பிறை வைத்தோய் அரிஅயன் ஒண்மறைதம்
பெருமுடி மேலுற வேண்ட வராதுனைப் பித்தனென்ற
மருமுடி யூரன் முடிமேல் மறுப்பவும் வந்ததவர்
திருமுடி மேலென்ன ஆசைகண் டாய்நின் திருவடிக்கே. ...152

2323

வேல்கொண்ட கையுமுந் நூல்கொண்ட மார்பமும் மென்மலர்ப்பொற்
கால்கொண்ட ஒண்கழற் காட்சியும் பன்னிரு கண்ணும்விடை
மேல்கொண்ட செஞ்சுடர் மேனியும் சண்முக வீறுங்கண்டு
மால்கொண்ட நெஞ்சம் மகிழ்வதெந் நாள்என்கண் மாமணியே.
...153

2324

விண்பூத்த கங்கையும் மின்பூத்த வேணியும் மென்முகமும்

கண்பூத்த நெற்றியும் பெண்பூத்த பாகமும் கார்மிடறும்

தண்பூத்த பாதமும் பொன்பூத்த மேனியும் சார்ந்துகண்டே

மண்பூத்த வாழ்க்கையை விண்பூத்த பூவின் மதிப்பதென்றே.
...154

2325

தண்மதி யோஅதன் தண்ணமு தோஎனச் சார்ந்திருணீத்

துண்மதி யோர்க்கின் புதவுநின் பேரருள் உற்றிடவே

எண்மதி யோடிச்சை எய்தா தலையுமென் ஏழைமதி

பெண்மதி யோஅன்றிப் பேய்மதி யோஎன்ன பேசுவதே. ...155

2326

பிட்டுக்கும் வந்துமுன் மண்சுமந் தாயென்பர் பித்தனென்ற

திட்டுக்கும் சீரருள் செய்தளித் தாயென்பர் தீவிறகுக்

கட்டுக்கும் பொன்முடி காட்டிநின் றாயென்பர் கண்டிடஎன்

மட்டுக்கும் வஞ்சகத் தெய்வமென் கோமுக்கண் மாணிக்கமே. ...156

2327

மையிட்ட கண்ணியர் பொய்யிட்ட வாழ்வின் மதிமயங்கிக்

கையிட்ட நானும்உன் மெய்யிட்ட சீரருள் காண்குவனோ

பையிட்ட பாம்பணி யையிட்ட மேனியும் பத்தருள்ள

மொய்யிட்ட காலுஞ்செவ் வையிட்ட வேலுங்கொள் முன்னவனே.
...157

2328

தவமே புரியும் பருவமி லேன்பொய்ச் சகநடைக்கண்

அவமே புரியும் அறிவிலி யேனுக் கருளுமுண்டோ

உவமேய மென்னப்ப டாதெங்கு மாகி ஒளிர்ஒளியாம்

சிவமேமுக் கண்ணுடைத் தேவேநின் சித்தந் தெரிந்திலனே. ...158

2329

மட்டுண்ட கொன்றைச் சடையர சேஅன்று வந்தியிட்ட

பிட்டுண்ட பிச்சைப் பெருந்தகை யேகொடும் பெண்மயலால்

கட்டுண்ட நான்சுகப் பட்டுண்டு வாழ்வன்இக் கன்மனமாம்

திட்டுண்ட பேய்த்தலை வெட்டுண்ட நாளில்என் தீமையற்றே.
...159

2330

ஆட்டுக்குக் காலெடுத் தாய்நினைப் பாடலர் ஆங்கியற்றும்

பாட்டுக்குப் பேரென்கொல் பண்ணேன்கொல் நீட்டியப் பாட்டெழுதும்

ஏட்டுக்கு மையென்கொல் சேற்றில் உறங்க இறங்குங்கடா

மாட்டுக்கு வீடென்கொல் பஞ்சணை என்கொல் மதித்திடினே.
...160

2331

ஒப்பற்ற முக்கட் சுடரேநின் சீர்த்தி உறாதவெறும்

துப்பற்ற பாட்டில் சுவையுள தோஅதைச் சூழ்ந்துகற்றுச்

செப்பற்ற வாய்க்குத் திருவுள தோசிறி தேனும்உண்டேல்

உப்பற்ற புன்கறி உண்டோர்தந் நாவுக் குவப்புளதே. ...161

2332

செல்வருங் கண்ணி இடத்தோய்நின் சீர்த்தியைச் சேர்த்தியந்த
நால்வரும் செய்தமிழ் கேட்டுப் புறத்தில் நடக்கச்சற்றே
கால்வரும் ஆயினும் இன்புரு வாகிக் கனிமனம்அப்
பால்வரு மோஅதன் பாற்பெண் களைவிட்டுப் பார்க்கினுமே. ...162

2333

கார்முக மாகப்பொற் கல்வளைத் தோய்இக் கடையவனேன்
சோர்முக மாகநின் சீர்முகம் பார்த்துத் துவளுகின்றேன்
போர்முக மாகநின் றோரையும் காத்தநின் பொன்னருள்இப்
பார்முக மாகஎன் ஓர்முகம் பார்க்கப் பரிந்திலதே. ...163

2334

வான்வளர்த் தாய்இந்த மண்வளர்த் தாய்எங்கும் மன்னுயிர்கள்
தான்வளர்த் தாய்நின் தகைஅறி யாஎன் றனைஅரசே
ஏன்வளர்த் தாய்கொடும் பாம்பையெல் லாந்தள் ளிலைவளர்த்தாய்
மான்வளர்த் தாய்கரத் தார்நினைப் போல வளர்ப்பவரே. ...164

2335

அற்கண்டம் ஓங்கும் அரசேநின் றன்அடி யார்மதுரச்
சொற்கண்ட போதும்என் புற்கண்ட நெஞ்சம் துணிந்துநில்லா
திற்கண்ட மெய்த்தவர் போலோடு கின்ற தெறிந்ததுதீங்
கற்கண் டெனினும்அக் கற்கண்ட காக்கைநிற் காதென்பரே. ...165

2336

சொல்லுகின் றோர்க்கமு தம்போல் சுவைதரும் தொல்புகழோய்

வெல்லுகின் றோரின்றிச் சும்மா அலையுமென் வேடநெஞ்சம்

புல்லுகின் றோர்தமைக் கண்டால்என் னாங்கொல் புகல்வெறும்வாய்

மெல்லுகின் றோர்க்கொரு நெல்லவல் வாய்க்கில் விடுவரன்றே.
...166

2337

சீரிடு வார்பொருட் செல்வர்க்க லாமல்இத் தீனர்கட்கிங்

காரிடு வார்பிச்சை ஆயினும் பிச்சன் அசடன்என்றே

பேரிடு வார்வம்புப் பேச்சிடு வார்இந்தப் பெற்றிகண்டும்

போரிடு வார்நினைப் போற்றார்என் னேமுக்கட் புண்ணியனே.
...167

2338

சேலுக்கு நேர்விழி மங்கைபங் காஎன் சிறுமதிதான்

மேலுக்கு நெஞ்சையுட் காப்பது போல்நின்று வெவ்விடய

மாலுக்கு வாங்கி வழங்கவுந் தான்சம் மதித்ததுகாண்

பாலுக்குங் காவல்வெம் பூனைக்குந் தோழன்என் பார்இதுவே. ..168

2339

இணையேதும் இன்றிய தேவே கனல்இனன் இந்தெனுமுக்(158)

கணையே கொளும்செங் கரும்பே பிறவிக் கடல்கடத்தும்

புணையே திருவருட் பூரண மேமெய்ப் புலமளிக்கும்

துணையேஎன் துன்பந் துடைத்தாண்டு கொள்ளத் துணிந்தருளே. ...169

2340

நிலைகாட்டி ஆண்டநின் தாட்கன்பி லாதன்பில் நீண்டவன்போல்

புலைகாட் டியமனத் தேன்கொண்ட வேடம் புனைஇடைமேல்

கலைகாட்டிக் கட்டு மயிர்த்தலை காட்டிப்புன் கந்தைசுற்றி

முலைகாட்டி ஆண்மகன் பெண்வேடம் காட்டு முறைமையன்றே. ...170

2341

விடநாகப் பூணணி மேலோய்என் நெஞ்சம் விரிதல்விட்டென்

உடனாக மெய்அன்பு ளூற்றாக நின்னரு ளூற்றிடுதற்

கிடனாக மெய்ந்நெறிக் கீடாகச் செய்குவ திங்குனக்கே

கடனாக நிற்பது கண்டேன்பின் துன்பொன்றுங் கண்டிலனே. ...171

2342

நயப்படும் ஓர்நின் அருளெனக் கின்றெனில் நாய்மனமென்

வயப்படு மோதுயர் மண்படு மோநல்ல வாழ்வைஎன்னால்

செயப்படு மோகுணம் சீர்ப்படு மோபவம் சேரச்சற்றும்

பயப்படு மோமலம் பாழ்படு மோஎம் பசுபதியே. ...172

2343

சோபங்கண் டார்க்கருள் செய்வோய் மதிக்கன்றிச் சூழ்ந்திடுவெந்

தீபங்கண் டாலும் இருள்போம்இவ் வேழை தியங்கும்பரி

தாபங்கண் டாய்அருள் செய்யாதென் குற்றந் தனைக்குறித்துக்
கோபங்கண் டாலுநன் றையாஎன் துன்பக் கொதிப்பறுமே. ...173

2344

எல்லா முடைய இறையவ னேநினை ஏத்துகின்ற
நல்லார் தமக்கொரு நாளேனும் பூசை நயந்தியற்றிச்
சொல்லால் அவர்புகழ் சொல்லாதிவ் வண்ணம் துயர்வதற்கென்
கல்லாமை ஒன்றுமற் றில்லாமை ஒன்றிரு காரணமே. ...174

2345

பிறையாறு கொண்டசெவ் வேணிப் பிரான்பதப் பேறடைவான்
மறையாறு காட்டுநின் தண்ணரு ளேயன்றி மாயைஎன்னும்
நிறையாறு சூழுந் துரும்பாய்ச் சுழலும்என் நெஞ்சினுள்ள
குறையாறு தற்கிடம் வேறில்லை காணிக் குவலையத்தே. . ..175

2346

மாலறி யாதவன் அன்றேஅத் தெய்வ வரதனுநின்
காலறி யாதவன் என்றால்அக் காலைஎக் காலைஎமைப்
போலறி யாதவர் காண்பார்முற் கண்டமெய்ப் புண்ணியர்தம்
பாலறி யாதவன் நானிது கேட்டுணர் பாலனன்றே. ...176

2347

ஒன்றேஎன் ஆருயிர்க் கோருற வேஎனக் கோரமுதே
நன்றேமுக் கண்ணுடை நாயக மேமிக்க நல்லகுணக்
குன்றே நிறைஅருட் கோவே எனது குலதெய்வமே

மன்றே ஒளிர்முழு மாணிக்க மேஎனை வாழ்விக்கவே. ...177

2348

தாழ்வேதும் இன்றிய கோவே எனக்குத் தனித்தபெரு

வாழ்வே நுதற்கண் மணியேஎன் உள்ள மணிவிளக்கே

ஏழ்வேலை என்னினும் போதா இடும்பை இடுங்குடும்பப்

பாழ்வே தனைப்பட மாட்டேன் எனக்குன் பதமருளே. ...178

2349

வண்டுகொண் டார்நறுங் கொன்றையி னான்றன் மலரடிக்குத்

தொண்டுகொண் டார்தஞ் சுகத்துக்கும் வாழ்க்கைச் சுழலிற்றள்ளும்

பெண்டுகொண் டார்தம் துயருக்கும் ஒப்பின்று பேசில்என்றே

கண்டுகொண் டாய்இனி நெஞ்சேநின் உள்ளக் கருத்தெதுவே. ..179

2350

மலங்கவிழ்ந் தார்மனம் வான்கவிழ்ந் தாலும்அவ் வான்புறமாம்

சலங்கவிழ்ந் தாலும் சலியாதென் புன்மனந் தான்கடலில்

கலங்கவிழ்ந் தார்மனம் போலே சலிப்பது காண்குடும்ப

விலங்கவிழ்ந் தாலன்றி நில்லாதென் செய்வல் விடையவனே. ...180

2351

மைகொடுத் தார்நெடுங் கண்மலை மானுக்கு வாய்ந்தொருபால்

மெய்கொடுத் தாய்தவர் விட்டவெம் மானுக்கு மேவுறஓர்

கைகொடுத் தாய்மயல் கண்ணியில் வீழ்ந்துட் கலங்குறும்என்

கொய்கொடுத் தாழ்மன மானுக்குக் காலைக் கொடுத்தருளே. ...181

2352

உடம்பார் உறுமயிர்க் கால்புழை தோறனல் ஊட்டிவெய்ய

விடம்பாச் சியஇருப் பூசிகள் பாய்ச்சினும் மெத்தென்னும்இத்

தடம்பார் சிறுநடைத் துன்பஞ்செய் வேதனைத் தாங்கரிதென்

கடம்பாநற் பன்னிரு கண்ணா இனிஎனைக் காத்தருளே. ...182

2353

மண்ணாலும் மண்ணுற்ற வாழ்க்கையி னாலும்அவ் வாழ்க்கைக்குற்ற

பெண்ணாலும் நொந்துவந் தாரை எலாம்அருட் பேறெனுமுக்

கண்ணாலும் பார்த்தைந்து கையாலும் ஈயும் கணபதிநின்

பண்ணாலும் மாமறை மேற்றாளை என்னுட் பதித்தருளே. ...183

2354

வானாள மாலயன் வாழ்வாள அன்றிஇம் மண்முழுதும்

தானாள நின்பதம் தாழ்பவர் தாழ்கலுண் சங்கையங்கை

மானாள மெய்யிடந் தந்தோய்துன் பற்ற மனமதொன்றே

நானாள எண்ணிநின் தாளேத்து கின்றனன் நல்குகவே. ...184

2355

ஈடறி யாதமுக் கண்ணாநின் அன்பர் இயல்பினைஇந்

நாடறி யாதுன் அருளன்றி ஊண்சுவை நாவையன்றி

மேடறி யாதுநற் பாட்டைக்கற் றோரன்றி மேற்சுமந்த

ஏடறி யாதவை யேனறி யாஎன் றிகழ்வரன்றே. ...185

2356

சூடுண்ட பூனைக்குச் சோறுண்ட வாய்பின் துடிப்பதன்றி

ஊடுண்ட பாலிட்ட ஊண்கண்ட தேனும் உணத்துணியா

தீடுண்ட என்மனம் அந்தோ துயரில் இடியுண்டும்இவ்

வீடுண்ட வாழ்க்கையில் வீழுண்ட தால்எம் விடையவனே. ...186

2357

கரங்காட்டி மையிட்ட கண்காட்டி என்பெருங் கன்மநெஞ்சக்

குரங்காட்டிச் சேய்மையில் நிற்கின்ற மாதரைக் கொண்டுகல்லார்

உரங்காட்டிக் கோலொன் றுடனீட்டிக் காட்டி உரப்பிஒரு

மரங்காட் டியகுரங் காட்டுகின் றோரென் மணிகண்டனே. ...187

2358

களங்கனி போல்மணி கண்டாநின் பொற்கழல் காணற்கென்சிற்

றுளங்கனி யாதுநின் சீர்கேட் கினும்அன் புறஉருகா

வளங்கனி காமஞ் சிறவாமல் சிற்றில் வகுத்துழலும்

இளங்கனி போல்நின்ற தென்செய்கு வேன்எம் இறையவனே.
...188

2359

மாமத்தி னால்சுழல் வெண்தயிர் போன்று மடந்தையர்தம்

காமத்தி னால்சுழல் என்றன்நெஞ் சோஉன்றன் காலைஅன்பாம்

தாமத்தி னால்தளை யிட்டநெஞ் சோஇத் தகைஇரண்டின்

நாமத்தினால் பித்தன் என்போய் நினக்கெது நல்லநெஞ்சே. ...189

2360

ஏற்றிலிட் டார்கொடி கொண்டோ ய் விளக்கினை ஏற்றபெருங்

காற்றிலிட் டாலும் இடலாம்நெல் மாவைக் கலித்திடுநீர்

ஆற்றிலிட் டாலும் பெறலாம்உட் காலை அடுங்குடும்பச்

சேற்றிலிட் டால்பின் பரிதாம் எவர்க்கும் திருப்புவதே. ...190

2361

தேரோங்கு காழிக்கண் மெய்ஞ்ஞானப்பாலுண்ட செம்மணியைச்

சீரோங்கு முத்துச் சிவிகையின் மேல்வைத்த தேவஉன்றன்

பேரோங்கும் ஐந்தெழுத் தன்றோ படைப்பைப் பிரமனுக்கும்

ஏரோங்கு காப்பைத் திருநெடு மாலுக்கும் ஈந்ததுவே. . ..191

2362

வேதனை யாமது சூதனை யாஎன்று வேதனையால்

போதனை யாநின் றுனைக்கூவு மேழையைப் போதனைகேள்

வாதனை யாதிங்கு வாதனை யாவென்றுன் வாய்மலரச்

சோதனை யாயினுஞ் சோதனை யாசிற் சுகப்பொருளே. ...192

2363

இன்பற்ற இச்சிறு வாழ்க்கையி லேவெயி லேறவெம்பும்

என்பற்ற புன்புழுப் போல்தளர் ஏழை எனினுமிவன்

அன்பற்ற பாவிஎன் றந்தோ எனைவிடில் ஐயவையத்

தென்பற்ற தாகமற் றில்லைகண் டாய்எனை ஏன்றுகொள்ளே.
...193

2364

களங்கொண்ட ஓர்மணிக் காட்சியும் முச்சுடர்க் கண்அருளும்

வளங்கொண்ட தெய்வத் திருமுக மாட்சியும் வாய்ந்தபரி

மளங்கொண்ட கொன்றைச் சடையும்பொற் சேவடி மாண்பும்ஒன்ற

உளங்கொண்ட புண்ணியர் அன்றோஎன் தன்னை உடையவரே.
. ..194

2365

காவிக்கு நேர்மணி கண்டாவண் டார்குழல் கற்பருளும்

தேவிக்கு வாமங் கொடுத்தோய்நின் மாமலர்ச் சேவடிப்பால்

சேவிக்கும் சேவகஞ் செய்வோரை ஆயினுஞ் சேவிக்கஇப்

பாவிக்கு வாய்க்கில்என் ஆவிக்கு நீண்ட பயனதுவே. ...195

2366

கொங்கிட்ட கொன்றைச் சடையும்நின் னோர்பசுங் கோமளப்பெண்

பங்கிட்ட வெண்திரு நீற்றொளி மேனியும் பார்த்திடில்பின்

இங்கிட்ட மாயையை எங்கிட்ட வாஎன் றிசைப்பினும்போய்ச்

சங்கிட்ட ஓசையில் பொங்கிட்ட வாய்கொடு தாண்டிடுமே. ...196

2367

வெம்பெரு மானுக்குக் கைகொடுத் தாண்ட மிகுங்கருணை

எம்பெரு மானுக்கு விண்ணப்பம் தேவர் இளம்பிடியார்

தம்பெரு மானுக்கும் சார்மலை மானுக்கும் சாற்றுமைங்கைச்

செம்பெரு மானுக்கும் எந்தாய்க்கும் நான்பணி செய்யச்செய்யே. ..197

2368

சாற்றவ னேகநன் னாவுள்ள தாயினும் சாற்றரிதாம்

வீற்றவ னேவெள்ளி வெற்பவ னேஅருள் மேவியவெண்

நீற்றவ னேநின் னருள்தர வேண்டும் நெடுமுடிவெள்

ஏற்றவ னேபலி ஏற்றவனே அன்பர்க் கேற்றவனே. ...198

2369

பதியே சரணம் பரமே சரணம் பரம்பரமாம்

திதியே சரணம் சிவமே சரணம் சிவமுணர்ந்தோர்

கதியே சரணம்என் கண்ணே சரணம்முக் கட்கருணா

நிதியே சரணம் சரணம்என் பால்மெய்ந் நிலையருளே. ...199

2370

என்னுற வேஎன் குருவேஎன் உள்ளத் தெழும்இன்பமே

என்னுயி ரேஎன்றன் அன்பே நிலைபெற்ற என்செல்வமே

என்னறி வேஎன்றன் வாழ்வேஎன் வாழ்வுக் கிடுமுதலே

என்னர சேஎன் குலதெய்வ மேஎனை ஏன்றுகொள்ளே. ...200

2371

கான்போல் இருண்டஇவ் வஞ்சக வாழ்க்கையில் கன்னெஞ்சமே

மான்போல் குதித்துக்கொண் டோடேல் அமுத மதிவிளங்கும்

வான்போல் குளிர்ந்த சிவானந்த வாழ்க்கையின் வாழ்வுறச்செந்

தேன்போல் இனிக்கும் சிவாய நமஎனச் சிந்தைசெய்யே. ...281

2372

வேதனென் கோதற வேண்டுமென் கோஎன விண்ணப்பஞ்செய்

பாதனென் கோகடற் பள்ளிகொண் டான்தொழும் பண்பன்என்கோ

நாதனென் கோபர நாதனென் கோஎங்கள் நம்பிக்குநல்

தூதனென் கோஅவன் தோழனென் கோநினைத் து ய்மணியே. . ..282

2373

இயங்கா மனமும் கயங்கா நிலையும் இகபரத்தே

மயங்கா அறிவும் தியங்கா நெறியும் மகிழ்ந்தருள்வாய்

வயங்கா நிலத்தின் முயங்கா உயர்தவர் வாழ்த்துகின்ற

புயங்கா துதித்தற் குயங்கா தவருட் புகுந்தவனே. ...283

2374

சிவசங்க ராசிவ யோகா சிவகதிச் சீரளிக்கும்

சிவசம்பு வேசிவ லோகா சிவாநந்தச் செல்வநல்கும்

சிவசுந்த ராசிவ போகா சிவாகமச் செந்நெறிசொல்

சிவபுங்க வாசிவ ஞானிகள் வாழ்த்தும் சிவகுருவே. ...284

2375

மதிதத்து வாந்த அருட்சிவ மேசின் மயசிவமே

துதிசித் தெலாம்வல்ல மெய்ச்சிவ மேசிற் சுகசிவமே

கதிநித்த சுத்தச் சிவமே விளங்குமுக் கட்சிவமே

பதிசச்சி தாநந்த சிற்சிவ மேஎம் பரசிவமே. . ..205

2376

கடும்புல வேடர்கள் ஓரைவர் இந்தியக் கள்வரைவர்

கொடுங்கர ணத்துட்டர் நால்வர்கள் வன்மலக் கோளரைவர்

அடும்படை கோடிகொண் டுற்றார்மற் றேழையன் யானொருவன்

இடும்படை யாதுமி லேன்வெல்வ தெங்ஙன் இறையவனே. . ..206

2377

இடைக்கொடி வாமத் திறைவாமெய்ஞ் ஞானிகட் கின்பநல்கும்

விடைக்கொடி ஏந்தும் வலத்தாய்நின் நாமம் வியந்துரையார்

கடைக்கொடி போலக் கதறுகின் றார்பொய்க் கதையவர்தாம்

புடைக்கொடி யாலன்றிப் புல்லால் எயிலைப் புனைபவரே. ...207

2378

உருமத்தி லேபட்ட புன்புழுப் போல்இவ் உலகநடைக்

கருமத்தி லேபட்ட என்மனந் தான்நின் கழலடையும்

தருமத்தி லேபட்ட தின்றேஎன் றெண்ணுந் தனையுமந்தோ

மருமத்தி லேபட்ட வாளியைப் போன்று வருத்துவதே. ...208

2379

என்னிறை வாஇமை யோரிறை வாமறை யின்முடிபின்

முன்னிறை வாமலை மின்னிறை வாமலர் முண்டகத்தோன்

தன்னிறை வாதிதித் தானிறை வாமெய்த் தபோதனருள்

மன்னிறை வாஇங்கு வாஎன் றெனக்குநல் வாழ்வருளே. ..209

2380

போற்றிஎன் ஆவித் துணையேஎன் அன்பில் புகுஞ்சிவமே

போற்றிஎன் வாழ்வின் பயனேஎன் இன்பப் புதுநறவே

போற்றிஎன் கண்ணுண் மணியேஎன் உள்ளம் புனைஅணியே

போற்றிஎன் ஓர்பெருந் தேவே கருணை புரிந்தருளே. . ..210

2381

கஞ்சத்தி லேர்முக மஞ்சத்தி லேர்நடைக் கன்னியர்கண்

நஞ்சத்தி லேஅவர் வஞ்சத்தி லேபட்டு நாணுறும்புன்

நெஞ்சத்தி லேஅதன் தஞ்சத்தி லேமுக் கணித்தஎன்போல்

பஞ்சத்தி லேபிர பஞ்சத்தி லேஉழப் பார்எவரே. ...211

2382

நான்முகத் தோனும் திருநெடு மாலுமெய்ஞ் ஞானமென்னும்

வான்முகக் கண்கொண்டு காணாமல் தம்உரு மாறியும்நின்

தேன்முகக் கொன்றை முடியும்செந் தாமரைச் சேவடியும்

ஊன்முகக் கண்கொண்டு தேடிநின் றார்சற் றுணர்விலரே. ..212

2383

இருவர்க் கறியப் படாதெழுந் தோங்கிநின் றேத்துகின்றோர்

கருவர்க்க நீக்கும் கருணைவெற் பேஎன் கவலையைஇங்

கொருவர்க்கு நான்சொல மாட்டேன் அவரென் னுடையவரோ

வெருவற்க என்றெனை ஆண்டருள் ஈதென்றன் விண்ணப்பமே.
...213

2384

ஒண்ணுதல் ஏழை மடவார்தம் வாழ்க்கையின் உற்றிடினும்

பண்ணுத லேர்மறை ஆயிரஞ் சூழுநின் பாதத்தையான்

எண்ணுத லேதொழி லாகச்செய் வித்தென்னை ஏன்றுகொள்வாய்

கண்ணுத லேகரு ணைக்கட லேஎன் கருத்திதுவே. ..214

2385

தளைக்கின்ற மாயக் குடும்பப் பெருந்துயர் தாங்கிஅந்தோ

இளைக்கின்ற ஏழைக் கிரங்குகண் டாய்சிறி தேஇறகு

முளைக்கின்ற போதறுப் பார்போல்நின் னாம மொழிந்திடுங்கால்

வளைக்கின்ற மாயைக்கிங் காற்றேன்முக் கண்ணுடை மாமணியே. ...215

2386

மஞ்சடை வான நிறத்தோன் அயன்முதல் வானவர்க்கா

நஞ்சடை யாள மிடுமிடற் றோய்கங்கை நண்ணுகின்ற

செஞ்சடை யாய்நின் திருப்பெய ராகச் சிறந்தஎழுத்

தஞ்சடை யார்கண்கள் பஞ்சடை யாமுன் னறிவிலரே. ...216

2387

இலங்கா புரத்தன் இராக்கதர் மன்னன் இராவணன்முன்

மலங்காநின் வெள்ளி மலைக்கீ ழிருந்து வருந்தநின்சீர்

கலங்காமல் பாடிடக் கேட்டே இரங்கிக் கருணைசெய்த

நலங்காணின் தன்மைஇன் றென்னள வியாண்டையின் நண்ணியதே. ...217

2388

உடையென்றும் பூணென்றும் ஊணென்றும் நாடி உழன்றிடும்இந்

நடையென்றும் சஞ்சலஞ் சஞ்சலங் காணிதி னான்சிறியேன்

புடையென்று வெய்ய லுறும்புழுப் போன்று புழுங்குகின்றேன்

விடையென்று மாலறங் கொண்டோ யென் துன்பம் விலக்குகவே. ...218

2389

அருள்அர சேஅருட் குன்றேமன் றாடும் அருளிறையே

அருள்அமு தேஅருட் பேறே நிறைந்த அருட்கடலே

அருள்அணி யேஅருட் கண்ணேவிண் ணோங்கும் அருள்ஒளியே

அருள்அற மேஅருட் பண்பேமுக் கண்கொள் அருட்சிவமே. ...219

2390

நிலையறி யாத குடும்பத் துயரென்னும் நீத்தத்திலே

தலையறி யாது விழுந்தேனை ஆண்டருள் தானளிப்பாய்

அலையறி யாத கடலேமுக் கண்கொண்ட ஆரமுதே

விலையறி யாத மணியே விடேலிதென் விண்ணப்பமே. ...220

2391

மெய்யகத் தேகணப் போதும் விடாது விரும்புகின்றோர்

கையகத் தேநின் றொளிர்கனி யேநுதற் கட்கரும்பே

வையகத் தேநினை அல்லாமல் நற்றுணை மற்றிலைஇப்
பொய்யகத் தேன்செயும் தீங்கா யிரமும் பொறுத்தருளே. ...221

2392

முலைக்கலங் கார மிடுமட வார்மயல் மூழ்அவர்
தலைக்கலங் கார மலர்சூடு வார்நின் றனைவழுத்தார்
இலைக்கலங் காரவ் வியமன்வந் தாலென் இசைப்பர்வெள்ளி
மலைக்கலங் கார மணியேமுக் கண்கொண்ட மாமருந்தே. ...222

2393

புரிகின்ற வீட்டகம் போந்தடி பட்டுப் புறங்கடையில்
திரிகின்ற நாய்க்கும் சிரிப்பாம்என் பாவிச் சிறுபிழைப்பைச்
சொரிகின்ற புண்ணில் கனலிடல் போலெணுந் தோறுநெஞ்சம்
எரிகின்ற தென்செய்கு வேன்பிறை வார்சடை என்னமுதே. ...223

2394

மனக்கேத மாற்று மருந்தே பொதுஒளிர் மாணிக்கமே
கனக்கே துறஎன் கருத்தறி யாமல் கழறுகின்ற
தனக்கேளர் பாற்சென் றடியேன் இதயம் தளர்வதெல்லாம்
நினக்கே தெரிந்த தெனக்கே அருள நினைந்தருளே. ...224

2395

மோகங் கலந்த மனத்தேன் துயரங்கள் முற்றுமற்றுத்
தேகங் கலந்த பவந்தீர்க்கும் நின்பதம் சிந்திக்கும்நாள்
போகங் கலந்த திருநாள் மலையற் புதப்பசுந்தேன்

பாகங் கலந்தசெம் பாலே நுதற்கட் பரஞ்சுடரே. ...225

2396

கோலொன்று கண்ட இறைமகன் வாழ்வினும் கோடிபங்கு

மேலொன்று கண்டனம் நெஞ்சேஎன் சொல்லை விரும்பினியஞ்

சேலொன்று கண்ட மணியான் வரைப்பசுந் தேன்கலந்த

பாலொன்று கண்டகண் கொண்டுயர் வாழ்வு பலித்ததுவே. ...226

2397

புலையள வோஎனும் நெஞ்சக னேன்துயர்ப் போகமெட்டு

மலையள வோஇந்த மண்ணள வோவந்த வானளவோ

அலையள வோவன்று மன்றுணின் றோங்கும் அருமருந்தே

இலையள வோஎனுந் தேவே அறிந்தும் இரங்கிலையே. ...227

2398

கல்லென்று வல்லென்று மின்னார் புளகக் கனதனத்தைச்

சொல்லென்று சொல்லுமுன் சொல்லுமந் தோநின் துணையடிக்கண்

நில்லென்று பல்ல நிகழ்த்தினும் என்மனம் நிற்பதன்றே

அல்லென்று வெல்களங் கொண்டோ ய்என் செய்வ தறிந்திலனே.
...228

2399

கள்ளா டியகொன்றைச் செஞ்சடை யோய்நற் கனகமன்றின்

உள்ளா டியமலர்ச் சேவடி யோய்இவ் வுலகியற்கண்

எள்ளா டியசெக் கிடைப்படல் போல்துன் பிடைஇளைத்துத்

தள்ளா டியநடை கொண்டேற்கு நன்னடை தந்தருளே. ...229

2400

மருக்கா மலர்க்குழல் மின்னார் மயல்சண்ட மாருதத்தால்
இருக்கா துழலுமென் ஏழைநெஞ் சேஇவ் விடும்பையிலே
செருக்கா துருகிச் சிவாய நமஎனத் தேர்ந்தன்பினால்
ஒருக்கால் உரைக்கில் பெருக்காகும் நல்லின்பம் ஓங்கிடுமே. ..230

2401

மதிக்கண் ணணி வேணிப் பெருந்தகை யேநின் மலரடிக்குத்
துதிக்கண் ணணி சூட்டுமெய்த் தொண்டரில் சேர்ந்துநின் தூயஒற்றிப்
பதிக்கண் ணணி நின்னைப் பணிந்தேத்தி உள்ளம் பரவசமாக்
கதிக்கண் ணணி வாழும் படிஅரு ளாயென் கருத்திதுவே. ...231

2402

இரையேற்று துன்பக் குடும்ப விகார இருட்கடலில்
புரையேற்று நெஞ்சம் புலர்ந்துநின் றேனைப் பொருட்படுத்திக்
கரையேற்ற வேண்டுமென் கண்ணே பவத்தைக் கழிமருந்தே
திரையேற்று செஞ்சடைத் தேவே அமரர் சிகாமணியே. ...232

திருச்சிற்றம்பலம்

-------------

145. ஓர்பிள்ளைப்பேர் - மதலை - சரக்கொன்றை. ச. மு. க.

146. மயங்குகின்றேன், மயங்கின்றேன் என விகாரமாயிற்று. தொ. வே.

147. கொண்டிடேல் என முன்னிலை எதிர்மறை ஏவன்முற்றாகக் கொள்க. தொ. வே.

148. செல் - மேகம். தொ. வே.

149. உரும் - இடி. தொ. வே.

150. மாழை - பொன். தொ. வே.

151. பொன்கின்று பூத்த சடை - கொன்றை பூத்த சடை. தொ. வே.

152. கல் - மலை. தொ. வே.

153. வேணி - நதி. தொ. வே.

154. பாணிக்குமோ - தாமதிக்குமோ. ச. மு. க.

155. பாணி - கை, நீர். ச. மு. க.

156. கடா, தாம், பாயினும் - பாய்ந்தாலும் ; தாம்பு - கயிறு. ச. மு. க.

157. சொல் - நெல், தொ. வே.

158. கனல் - அக்கினி. இனன் - சூரியன். இந்து - சந்திரன். ச. மு. க.

-------------------

7. சிகாமணி மாலை (2403 - 2417)

புள்ளிருக்குவேளூர்

.

கட்டளைக் கலித்துறை

2483

வல்வினை யேனைஇவ் வாழ்க்கைக் கடல்நின்றும்
வள்ளல்உன்தன்

நல்வினை வாழ்க்கைக் கரைஏற்றி மெய்அருள் நல்குகண்டாய்

கொல்வினை யானை உரித்தோய் வயித்திய நாதகுன்றாச்

செல்வினை மேலவர் வாழ்வே அமரர் சிகாமணியே. ...1

2484

பொய்யே புலம்பிப் புழுத்தலை நாயின் புறத்திலுற்றேன்

மெய்யே உரைக்கும்நின் அன்பர்தம் சார்பை விரும்புகிலேன்

பையேல் அரவனை யேன்பிழை நோக்கிப் பராமுகம்நீ

செய்யேல் வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...2

2485

கல்லேன் மனக்கருங் கல்லேன் சிறிதும் கருத்தறியாப்

பொல்லேன்பொய் வாஞ்சித்த புல்லேன் இரக்கம் பொறைசிறிதும்

இல்லேன் எனினும்நின் பால்அன்றி மற்றை இடத்தில்சற்றும்

செல்லேன் வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...3

2486

ஆர்ப்பார் கடல்நஞ் சமுதுசெய் தாய்நின் அடிக்கன்பின்றி

வேர்ப்பார் தமக்கும் விருந்தளித் தாய்வெள்ளி வெற்பெடுத்த

கார்ப்பாள னுக்கும் கருணைசெய் தாய்கடை யேன்துயரும்

தீர்ப்பாய் வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...4

2407

நானே நினக்குப் பணிசெயல் வேண்டும்நின் நாண்மலர்த்தாள்
தானே எனக்குத் துணைசெயல் வேண்டும் தயாநிதியே
கோனே கரும்பின் சுவையேசெம் பாலொடு கூட்டுநறுந்
தேனே வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...5

2408

மருவார் குழலியர் மையல் கடல்விழும் வஞ்சநெஞ்சால்
வெருவா உயங்கும் அடியேன் பிணியை விலக்குகண்டாய்
உருவாய் அருவும் ஒளியும் வெளியும்என் றோதநின்ற
திருவார் வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...6

2409

தவநேய மாகும்நின் தாள்நேய மின்றித் தடமுலையார்
அவநேய மேற்கொண் டலைகின்ற பேதைக் கருள்புரிவாய்
நவநேய மாகி மனவாக் கிறந்த நடுஒளியாம்
சிவனே வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...7

2410

ஐவாய் அரவில் துயில்கின்ற மாலும் அயனும்தங்கள்
கைவாய் புதைத்துப் பணிகேட்க மேவும்முக் கண்அரசே
பொய்வாய் விடாஇப் புலையேன் பிழையைப் பொறுத்தருள்நீ
செய்வாய் வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...8

2411

புல்வாயின் முன்னர்ப் புலிப்போத் தெனஎன்முன் போந்துநின்ற

கல்வாய் மனத்தரைக் கண்டஞ்சி னேனைக் கடைக்கணிப்பாய்

அல்வாய் மணிமிடற் றாரமு தேஅருள் ஆன்றபெரும்

செல்வா வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...9

2412

ஆர்த்தார் கடல்நஞ் சமுதுசெய் தாய்என்னை அன்பர்கள்பால்

சேர்த்தாய்என் துன்பம் அனைத்தையும் தீர்த்துத் திருஅருட்கண்

பார்த்தாய் பரம குருவாகி என்னுள் பரிந்தமர்ந்த

தீர்த்தா வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...10

2413

அறத்தாயை ஓர்புடை கொண்டோ ர் புடைமண் அளந்தமுகில்

நிறத்தாயை வைத்துல கெல்லாம் நடத்தும் நிருத்தஅண்டப்

புறத்தாய்என் துன்பம் துடைத்தாண்டு மெய்அருட் போதந்தந்த

திறத்தாய் வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...11

2414

அலைஓய் கடலில் சிவயோகம் மேவிய அந்தணர்தம்

நிலைஓர் சிறிதும் அறியேன் எனக்குன் நிமலஅருள்

மலைஓங்கு வாழ்க்கையும் வாய்க்குங் கொலோபொன்
மலைஎன்கின்ற

சிலையோய் வயித்திய நாதா அமரர் சிகாமணியே. ...12

2415

ஊன்கொண்ட தேகத்தும் உள்ளத்தும் மேவி உறும்பிணியால்

நான்கொண்ட துன்பம் தவிர்ப்பாய் வயித்திய நாதஎன்றே

வான்கொண்ட நின்அருட் சீரேத்து கின்ற வகைஅறியேன்

தேன்கொண்ட கொன்றைச் சடையாய் அமரர் சிகாமணியே. ...13

2416

களிவே தனும்அந்தக் காலனும் என்னைக் கருதலொட்டா

ஒளிவே தரத்திரு வுள்ளஞ்செய் வாய்அன்பர் உள்ளம்என்னும்

தளிவே தனத்துறும் தற்பர மேஅருள் தண்ணமுதத்

தெளிவே வயித்திய நாதா அமரர் சிகாமணியே. . ..14

2417

மால்விடை மேற்கொண்டு வந்தெளி யேனுடை வல்வினைக்கு

மேல்விடை ஈந்திட வேண்டுங்கண் டாய்இது வேசமயம்

நீல்விட முண்ட மிடற்றாய் வயித்திய நாதநின்பால்

சேல்விடு வாட்கண் உமையொடும் தேவர் சிகாமணியே. . ..15

திருச்சிற்றம்பலம்

- - - - - - - - - - - - - - - - -

8. வைத்தியநாதர் பதிகம் (2418 - 2429)

>

புள்ளிருக்குவேளூர்

பன்னிருசீர்க்(159) கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2418

ஓகைமட வார்அல்கு லேபிரம பதம்அவர்கள் உந்தியே வைகுந்தம்மேல்

ஓங்குமுலை யேகைலை அவர்குமுத வாயின்இதழ் ஊறலே அமுதம்அவர்தம்

பாகனைய மொழியேநல் வேதவாக் கியம்அவர்கள் பார்வையே கருணைநோக்கம்

பாங்கின்அவ ரோடுவிளை யாடவரு சுகமதே பரமசுக மாகும்இந்த

யூகமறி யாமலே தேகம்மிக வாடினீர் உறுசுவைப் பழம்எறிந்தே

உற்றவெறு வாய்மெல்லும் வீணர்நீர் என்றுநல் லோரைநிந் திப்பர்அவர்தம்

வாகைவாய் மதமற மருந்தருள்க தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...1

2419

உண்டதே உணவுதான் கண்டதே காட்சிஇதை உற்றறிய மாட்டார்களாய்

உயிருண்டு பாவபுண் ணியமுண்டு வினைகளுண் டுறுபிறவி உண்டுதுன்பத்

தொண்டதே செயுநரக வாதைஉண் டின்பமுறு சொர்க்கமுண் டிவையும்அன்றித்

தொழுகடவுள் உண்டுகதி உண்டென்று சிலர்சொலும் துர்ப்புத்தி யால்உலகிலே

கொண்டதே சாதகம் வெறுத்துமட மாதர்தம் கொங்கையும் வெறுத்துக்கையில்

கொண்டதீங் கனியைவிட் டந்தரத் தொருபழம் கொள்ளுவீர் என்பர்அந்த

வண்டர்வா யறஒரு மருந்தருள்க தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...2

2420

உம்பர்வான் அமுதனைய சொற்களாற் பெரியோர் உரைத்தவாய் மைகளைநாடி

ஓதுகின் றார்தமைக் கண்டவ மதித்தெதிரில் ஓதிபோல நிற்பதுமலால்

கம்பர்வாய் இவர்வாய்க் கதைப்பென்பர் சிறுகருங் காக்கைவாய்க் கத்தல்இவர்வாய்க்

கத்தலில் சிறிதென்பர் சூடேறு நெய்ஒரு கலங்கொள்ள வேண்டும்என்பர்

இம்பர்நாம் கேட்டகதை இதுவெண்பர் அன்றியும் இவர்க்கேது தெரியும்என்பர்

இவைஎலாம் எவனோஒர் வம்பனாம் வீணன்முன் இட்டகட் டென்பர்அந்த

வம்பர்வா யறஒரு மருந்தருள்க தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...3

2421

கல்லையும் உருக்கலாம் நார்உரித் திடலாம் கனிந்தகனி
யாச்செய்யலாம்

கடுவிடமும் உண்ணலாம் அமுதாக்க லாம்கொடுங் கரடிபுலி
சிங்கமுதலா

வெல்லுமிரு கங்களையும் வசமாக்க லாம்அன்றி வித்தையும்
கற்பிக்கலாம்

மிக்கவா ழைத்தண்டை விறகாக்க லாம்மணலை மேவுதேர்
வடமாக்கலாம்

இல்லையொரு தெய்வம்வே றில்லைஎம் பால்இன்பம் ஈகின்ற
பெண்கள்குறியே

எங்கள்குல தெய்வம்எனும் மூடரைத் தேற்றஎனில் எத்துணையும்
அரிதரிதுகாண்

வல்லையவர் உணர்வற மருந்தருள்க தவசிகா மணிஉலக
நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே.
...4

2422

படிஅளவு சாம்பலைப் பூசியே சைவம் பழுத்தபழ மோபூசணைப்

பழமோ எனக்கருங் கல்போலும் அசையாது பாழாகு
கின்றார்களோர்

பிடிஅளவு சாதமும் கொள்ளார்கள் அல்லதொரு பெண்ணைஎனி
னுங்கொள்கிலார்

பேய்கொண்ட தோஅன்றி நோய்கொண்ட தோபெரும் பித்தேற்ற
தோஅறிகிலேன்

செடிஅளவு ஊத்தைவாய்ப் பல்லழுக் கெல்லாம் தெரிந்திடக் காட்டிநகைதான்

செய்துவளை யாப்பெரும் செம்மரத் துண்டுபோல் செம்மாப்பர் அவர்வாய்மதம்

மடிஅளவ தாஒரு மருந்தருள்க தவசிகா மணிஉலக நாதவள்ள

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...5

2423

பெண்கொண்ட சுகமதே கண்கண்ட பலன்இது பிடிக்கஅறி யாதுசிலர்தாம்

பேர்ஊர் இலாதஒரு வெறுவெளியி லேசுகம் பெறவே விரும்பிவீணில்

பண்கொண்ட உடல்வெளுத் துள்ளே நரம்பெலாம் பசைஅற்று மேல்எழும்பப்

பட்டினி கிடந்துசா கின்றார்கள் ஈதென்ன பாவம்இவர் உண்மைஅறியார்

கண்கொண்ட குருடரே என்றுவாய்ப் பல்எலாங் காட்டிச் சிரித்துநீண்ட

கழுமரக் கட்டைபோல் நிற்பார்கள் ஐயஇக் கயவர்வாய் மதமுழுதுமே

மண்கொண்டு போகஒர் மருந்தருள்க தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...6

2424

திருத்தம்உடை யோர்கருணை யால்இந்த உலகில் தியங்குவீர்
அழியாச்சுகம்

சேருலக மாம்பரம பதம்அதனை அடையும்நெறி சேரவா
ருங்கள்என்றால்

இருத்தினிய சுவைஉணவு வேண்டும்அணி ஆடைதரும்
இடம்வேண்டும் இவைகள் எல்லாம்

இல்லையா யினும்இரவு பகல்என்ப தறியாமல் இறுகப்பி
டித்தணைக்கப்

பெருத்தமுலை யோடிளம் பருவமுடன் அழகுடைய பெண்ணகப்
படுமாகிலோ

பேசிடீர் அப்பரம பதநாட்டி னுக்குநும் பிறகிதோ வருவம்என்பார்

வருத்தும்அவர் உறவற மருந்தருள்க தவசிகா மணிஉலக
நாதவள்ளல்

மகிழவரு வேளூரி அன்பர்பவ ரோகமற< ேஊந சூ
ா ூி ா . ...7

2425

பேதைஉல கீர்விரதம் ஏதுதவம் ஏதுவீண் பேச்சிவை
எலாம்வேதனாம்

பித்தன்வாய்ப் பித்தேறு கத்துநூல் கத்திய பெரும்புரட்
டாகும்அல்லால்

ஓதைஉறும் உலகா யதத்தினுள உண்மைபோல் ஒருசிறிதும்
இல்லைஇல்லை

உள்ளதறி யாதிலவு காத்தகிளி போல்உடல் உலர்ந்தீர்கள் இனியாகினும்

மேதைஉண வாதிவேண் டுவஎலாம் உண்டுநீர் விரைமலர்த் தொடைஆதியா

வேண்டுவ எலாங்கொண்டு மேடைமேல் பெண்களொடு விளையாடு வீர்கள்என்பார்

வாதைஅவர் சார்பற மருந்தருள்க தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...8

2426

ஈனம் பழுத்தமன வாதைஅற நின்னருளை< றா ிஷை ஊஸ ழ ீ ஷை

இறைவநின் தோத்திரம் இயம்பிஇரு கண்ணீர் இறைப்பஅது கண்டுநின்று

ஞானம் பழுத்துவிழி யால்ஒழுகு கின்றநீர் நம்உலகில் ஒருவர்அலவே

ஞானிஇவர் யோனிவழி தோன்றியவ ரோஎன நகைப்பர்சும் மாஅழுகிலோ

ஊனம் குழுத்தகண் ணாம்என்பர் உலகத்தில் உயர்பெண்டு சாக்கொடுத்த

ஒருவன்முகம் என்னஇவர் முகம்வாடு கின்றதென உளறுவார் வாய்அடங்க

மானம் பழுத்திடு மருந்தருள்க தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...9

2427

கற்பவை எலாம்கற் றுணர்ந்தபெரி யோர்தமைக் காண்பதே அருமைஅருமை

கற்பதரு மிடியன்இவன் இடைஅடைந் தால்எனக் கருணையால் அவர்வலியவந்

திற்புறன் இருப்பஅது கண்டும்அந் தோகடி தெழுந்துபோய்த் தொழுதுதங்கட்

கியல்உறுதி வேண்டாது கண்கெட்ட குருடர்போல் ஏமாந்தி ருப்பர்இவர்தாம்

பொற்பினறு சுவைஅறியும் அறிவுடையர் அன்றுமேற் புல்லாதி உணும்உயிர்களும்

போன்றிடார் இவர்களைக் கூரைபோய்ப் பாழாம் புறச்சுவர் எனப்புகலலாம்

வற்புறும் படிதரும வழிஓங்கு தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...10

2428

மெய்யோர் தினைத்தனையும் அறிகிலார் பொய்க்கதை விளம்பஎனில் இவ்வுலகிலோ

மேலுலகில் ஏறுகினும் அஞ்சாது மொழிவர்தெரு மேவுமண் ணெனினும்உதவக்

கையோ மனத்தையும் விடுக்கஇசை யார்கள்கொலை களவுகட் காமம்முதலாக்

கண்டதீ மைகள்அன்றி நன்மைஎன் பதனைஒரு கனவிலும் கண்டறிகிலார்

ஐயோ முனிவர்தமை விதிப்படி படைத்தவிதி அங்கைதாங் கங்கைஎன்னும்

ஆற்றில் குளிக்கினும் தீமூழ்கி எழினும்அவ் வசுத்தநீங் காதுகண்டாய்

மையோர் அணுத்துணையும் மேவுறாத் தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...11

2429

இளவேனில் மாலையாய்க் குளிர்சோலை யாய்மலர் இலஞ்சிபூம் பொய்கைஅருகாய்

ஏற்றசந் திரகாந்த மேடையாய் அதன்மேல் இலங்குமர மியஅணையுமாய்த்

தளவேயும் மல்லிகைப் பந்தராய்ப் பால்போல் தழைத்திடு நிலாக்காலமாய்த்

தனிஇளந் தென்றலாய் நிறைநரம் புளவீணை தன்னிசைப் பாடல்இடமாய்

களவேக லந்தகற் புடையமட வரல்புடை கலந்தநய வார்த்தைஉடனாய்க்

களிகொள இருந்தவர்கள் கண்டசுக நின்னடிக் கழல்நிழற் சுகநிகருமே

வளவேலை சூழுலகு புகழ்கின்ற தவசிகா மணிஉலக நாதவள்ளல்

மகிழவரு வேளூரில் அன்பர்பவ ரோகமற வளர்வைத் தியநாதனே. ...12

திருச்சிற்றம்பலம்

-----------------

159. பதினான்கு சீர். ச.மு.க. பதிப்பு.

-----------------

9. நல்ல மருந்து (2430 - 2459)

புள்ளிருக்குவேளூர் சிந்து

.

பல்லவி

2430

நல்ல மருந்திம் மருந்து - சுகம்

நல்கும் வைத்திய நாத மருந்து. ...1

கண்ணிகள்

2431

அருள்வடி வான மருந்து - நம்முள்

அற்புத மாக அமர்ந்த மருந்து

இருளற வோங்கும் மருந்து - அன்பர்க்

கின்புரு வாக இருந்த மருந்து. நல்ல ...1

2432

சஞ்சலந் தீர்க்கும் மருந்து - எங்குந்
தானோதா னாகித் தழைக்கும் மருந்து
அஞ்சலென் றாளும் மருந்து - சச்சி
தானந்த மாக அமர்ந்த மருந்து. நல்ல ...2

2433

வித்தக மான மருந்து - சதுர்
வேத முடிவில் விளங்கு மருந்து
தத்துவா தீத மருந்து - என்னைத்
தானாக்கிக் கொண்ட தயாள மருந்து. நல்ல . ..3

2434

பிறப்பை யொழிக்கு மருந்து - யார்க்கும்
பேசப் படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கும் மருந்து - என்னுள்
என்று மதுரித் தினிக்கு மருந்து. நல்ல . ..4

2435

நானது வாகு மருந்து - பர
ஞான வெளியில் நடிக்கு மருந்து
மோன வடிவா மருந்து - சீவன்
முத்த ருளத்தே முடிக்கு மருந்து. நல்ல ...5

2436

புத்தமு தாகு மருந்து - பார்த்த
போதே பிணிகளைப் போக்கு மருந்து
பத்த ரருந்து மருந்து - அநு
பானமுந் தானாம் பரம மருந்து. நல்ல ...6

2437

மாலயன் தேடு மருந்து - முன்ன
மார்க்கண்ட ரைக்காக்க வந்த மருந்து
காலனைச் சாய்த்த மருந்து - தேவர்
காணுங் கனவினுங் காணா மருந்து. நல்ல ...7

2438

தற்பர யோக மருந்து - உப
சாந்த ருளத்திடைச் சார்ந்த மருந்து
சிற்பர யோக மருந்து - உயர்
தேவரெல் லாந்தொழுந் தெய்வ மருந்து. நல்ல ...8

2439

அம்பலத் தாடு மருந்து - பர
மாநந்த வெள்ளத் தழுத்து மருந்து
எம்பல மாகு மருந்து - வேளூர்
என்னுந் தலத்தி லிருக்கு மருந்து. நல்ல ...9

2440

சேதப்ப டாத மருந்து - உண்டால்

தேன்போ லினிக்குந் தெவிட்டா மருந்து

பேதப்ப டாத மருந்து - மலைப்

பெண்ணிடங் கொண்ட பெரிய மருந்து. நல்ல ...10

2441

ஆர்க்கு மரிதா மருந்து - தானே

ஆதி யநாதியு மான மருந்து

சேர்க்கும் புநித மருந்து - தன்னைத்

தேடுவோர் தங்களை நாடு மருந்து. நல்ல ...11

2442

புண்ணியர்க் கான மருந்து - பரி

பூரண மாகப் பொருந்து மருந்து

எண்ணிய வின்ப மருந்து - எம

தெண்ணமெல் லாமுடித் திட்ட மருந்து. நல்ல ...12

2443

பால்வண்ண மாகு மருந்து - அதில்

பச்சை நிறமும் படர்ந்த மருந்து

நூல்வண்ண நாடு மருந்து - உள்ளே

நோக்குகின் றோர்களை நோக்கு மருந்து. நல்ல ...13

2444

பார்க்கப் பசிபோ மருந்து - தன்னைப்

பாராத வர்களைச் சேரா மருந்து

கூர்க்கத் தெரிந்த மருந்து - அநு

கூல மருந்தென்று கொண்ட மருந்து. நல்ல ...14

2445

கோதிலா தோங்கு மருந்து - அன்பர்

கொள்ளைகொண் டுண்ணக் குலாவு மருந்து

மாதொரு பாக மருந்து - என்னை

வாழ்வித்த என்கண் மணியா மருந்து. நல்ல ...15

2446

ஏக வுருவா மருந்து - மிக்க

ஏழைக ளுக்கும் இரங்கு மருந்து

சோகந் தவிர்க்கு மருந்து - பரஞ்

சோதியென் றன்பர் துதிக்கு மருந்து. நல்ல ...16

2447

கோமளங் கூடு மருந்து - நலங்

கொடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மருந்து

நாமள வாத மருந்து - நம்மை

நாமறி யும்படி நண்ணு மருந்து. நல்ல . ..17

2448

செல்வந் தழைக்கு மருந்து - என்றுந்

தீரா வினையெலாந் தீர்த்த மருந்து

நல்வந் தனைகொள் மருந்து - பர

நாதாந்த வீட்டினுள் நண்ணு மருந்து. நல்ல ...18

2449

வாய்பிடி யாத மருந்து - மத

வாதமும் பித்தமு மாய்க்கு மருந்து

நோய்பொடி யாக்கு மருந்து - அன்பர்

நோக்கிய நோக்கினுள் நோக்கு மருந்து. நல்ல ...19

2450

பெண்ணாசை தீர்க்கு மருந்து - பொருட்

பேராசை யெல்லாம் பிளக்கு மருந்து

மண்ணாசை தீர்க்கு மருந்து - எல்லாம்

வல்ல மருந்தென்று வாழ்த்து மருந்து. நல்ல ...20

2451

என்றுங் கெடாத மருந்து - வரும்

எல்லாப் பிணிக்கு மிதுவே மருந்து

துன்றுஞ் சிவோக மருந்து - நம்மைச்

சூழ்ந்திரு மைக்குந் துணையா மருந்து. நல்ல ...21

2452

கண்ணொளி காட்டு மருந்து - அம்மை

கண்டு கலந்து களிக்கு மருந்து

விண்ணொளி யாரு மருந்து - பர

வீடு தருங்கங்கை வேணி மருந்து. நல்ல ...22

2453

காயாம்பூ வண்ண மருந்து - ஒரு

கஞ்ச மலர்மிசைக் காணு மருந்து

தாயாங் கருணை மருந்து - சிற்

சதாசிவ மானமெஞ் ஞாந மருந்து. நல்ல ...23

2454

அளவைக் கடந்த மருந்து - யார்க்கும்

அருமை யருமை யருமை மருந்து

உளவிற் கிடைக்கு மருந்து - ஒன்றும்

ஒப்புயர் வில்லா துயர்ந்த மருந்து. நல்ல ...24

2455

தன்மய மாகு மருந்து - சிவ

சாதனர் நெஞ்சில் தழைக்கு மருந்து

சின்மய ஜோதி மருந்து - அட்ட

சித்தியு முத்தியுஞ் சேர்க்கு மருந்து. நல்ல ...25

2456

மறந்தா லொளிக்கு மருந்து - தன்னை

மறவா தவருள் வழங்கு மருந்து

இறந்தா லெழுப்பு மருந்து - எனக்

கென்றுந் துணையா யிருக்கு மருந்து. நல்ல ...26

2457

கரும்பி லினிக்கு மருந்து - கடுங்
கண்டகர்க் கெல்லாங் கசக்கு மருந்து
இரும்பைக் குழைக்கு மருந்து - பே
ரின்ப வெள்ளத்தே யிழுக்கு மருந்து. நல்ல ...27

2458

அணிமணி கண்ட மருந்து - அருள்
ஆநந்த சுத்த வகண்ட மருந்து
பிணிதவி ரின்ப மருந்து - யார்க்கும்
பேசா மருந்தென்று பேசு மருந்து. நல்ல ...28

2459

மூவர்க் கரிய மருந்து - செல்வ
முத்துக் குமாரனை யீன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து - தையல்
நாயகி கண்டு தழுவு மருந்து. ...29

நல்ல மருந்திம் மருந்து - சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து.

திருச்சிற்றம்பலம்

---------------

10. திருவாரூர்ப் பதிகம் (2460 - 2469)

.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2460

தண்ணார் மதிபோல் சீதளவெண் தரளக் கவிகைத் தனிநிழற்கீழ்க்

கண்ணார் செல்வச் செருக்கினர்தம் களிப்பில் சிறிய கடைநாயேன்

பெண்ணார் பாகப் பெருந்தகைதன் பெரிய கருணைக்
குரியம்என்றே

எண்ணா நின்று களிக்கின்றேன் ஆரூர் எந்தாய் இரங்காயே. ...1

2461

இரங்கா திருந்தால் சிறியேனை யாரே மதிப்பார் இழிந்தமனக்

குரங்கால் அலைப்புண் டலைகின்ற கொடிய பாவி இவன்என்றே

உரங்கா தலித்தோர் சிரிப்பார்நான் உலகத் துயரம் நடிக்கின்ற

அரங்காக் கிடப்பேன் என்செய்வேன் ஆரூர் அமர்ந்த
அருமணியே. ...2

2462

மணியார் கண்டத் தெண்டோள்செவ் வண்ணப் பவள மாமலையே

அணியால் விளங்கும் திருஆரூர் ஆரா அமுதே அடிச்சிறியேன்

தணியா உலகச் சழக்கிடையே தளர்ந்து கிடந்து தவிக்கின்றேன்

திணியார் முருட்டுக் கடைமனத்தேன் செய்வ தொன்றும்
தெரியேனே. ...3

2463

தெரியத் தெரியும் தெரிவுடையார் சிவாநு பவத்தில் சிறக்கின்றார்

பிரியப் பிரியும் பெரும்பாவி அடியேன் பிழையில்
பிழைக்கின்றேன்

துரியப் பொருளே அணிஆரூர்ச் சோதி மணிநீ துயெஅருள்

புரியப் பெறுவேன் எனில்அவர்போல் யானும் சுகத்திற் பொலிவேனே. ...4

2464

பொலிவேன் கருணை புரிந்தாயேல் போதா னந்தக் கடல்ஆடி

மலிவேன் இன்ப மயமாவேன் ஆரூர் மணிநீ வழங்காயேல்

மெலிவேன் துன்பக் கடல்மூழ்கி மேவி எடுப்பார் இல்லாமல்

நலிவேன் அந்தோ அந்தோநின் நல்ல கருணைக் கழகன்றே. ...5

2465

கருணைக் கடலே திருஆரூர்க் கடவுட் சுடரே நின்னுடைய

அருணக் கமல மலரடிக்கே அடிமை விழைந்தேன் அருளாயேல்

வருணக் கொலைமா பாதகனாம் மறையோன் தனக்கு மகிழ்ந்தன்று

தருணக் கருணை அளித்தபுகழ் என்னாம் இந்நாள் சாற்றுகவே. ...6

2466

இந்நாள் அடியேன் பிழைத்தபிழை எண்ணி இரங்காய் எனில்அந்தோ

அந்நாள் அடிமை கொண்டனையே பிழையா தொன்றும் அறிந்திலையோ

பொன்னார் கருணைக் கடல்இன்று புதிதோ பிறர்பால் போயிற்றோ

என்நா யகனே திருஆரூர் எந்தாய் உள்ளம் இரங்கிலையே. ...7

2467

உள்ளக் கவலை ஒருசிறிதும் ஒருநா ளேனும் ஒழிந்திடவும்

வெள்ளக் கருணை இறையேனும் மேவி யிடவும் பெற்றறியேன்

கள்ளக் குரங்காய் உழல்கின்ற மனத்தேன் எனினும் கடையேனைத்

தள்ளத் தருமோ திருஆரூர் எந்தாய் எந்தாய் தமியேனே. ...8

2468

எந்தாய் ஒருநாள் அருள்வடிவின் எளியேன் கண்டு களிப்படைய

வந்தாய் அந்தோ கடைநாயேன் மறந்து விடுத்தேன் மதிகெட்டேன்

செந்தா மரைத்தாள் இணைஅன்றே சிக்கென் றிறுகப் பிடித்தேனேல்

இந்தார் சடையாய் திருஆரூர்இறைவா துயரற் றிருப்பேனே. ...9

2469

இருப்பு மனத்துக் கடைநாயேன் என்செய் வேன்நின் திருவருளாம்

பொருப்பில் அமர்ந்தார் அடியர்எலாம் அந்தோ உலகப் புலைஒழுக்காம்

திருப்பில் சுழன்று நான்ஒருவன் திகைக்கின் றேன்ஓர் துணைகாணேன்

விருப்பில் கருணை புரிவாயோ ஆரூர் தண்ணார் வியன்அமுதே. ...10

திருச்சிற்றம்பலம்

-----------------

11. கண்ணமங்கைத் தாயார் துதி (2470)

திருக்கண்ணமங்கை

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2470

உலகம் புரக்கும் பெருமான்தன் உளத்தும் புயத்தும் அமர்ந்தருளி
உவகை அளிக்கும் பேரின்ப உருவே எல்லாம் உடையாளே
திலகம் செறிவாள் நுதற்கரும்பே தேனே கனிந்த செழுங்கனியே
தெவிட்டா தன்பர் உளத்துள்ளே தித்தித் தெழும்ஓர் தெள்ளமுதே
மலகஞ் சுகத்தேற் கருளளித்த வாழ்வே என்கண் மணியேஎன்
வருத்தந் தவிர்க்க வரும்குருவாம் வடிவே ஞான மணிவிளக்கே
சலகந் தரம்போற் கருணைபொழி தடங்கண் திருவே கணமங்கைத்
தாயே சரணம் சரணம் இது தருணம் கருணை தருவாயே. ...1

திருச்சிற்றம்பலம்

-------------------

## 12. கலைமகள் வாழ்த்து (2471- 2473)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2471

தவளமலர்க் கமலமிசை வீற்றிருக்கும் அம்மனையைச் சாந்தம் பூத்த
குவளைமலர்க் கண்ணாளைப் பெண்ணாளும் பெண்ணமுதைக் கோதி லாத
பவளஇதழ்ப் பசுங்கொடியை நான்முகனார் நாலுங்கும் பாவை தன்னைக்

கவளமத கயக்கொம்பின் முலையாளைக் கலைமாதைக் கருது வோமே. ...1

2472

சங்கம்வளர்ந் திடவளர்ந்த தமிழ்க்கொடியைச் சரச்சுவதி தன்னை அன்பர்

துங்கமுறக் கலைபயிற்றி உணர்வளிக்கும் கலைஞானத் தோகை தன்னைத்

திங்கணுதல் திருவைஅருட் குருவைமலர் ஓங்கியபெண் தெய்வந் தன்னைத்

தங்கமலை முலையாளைக் கலையாளைத் தொழுதுபுகழ் சாற்று கிற்பாம். ...2

2473

கலைபயின்ற உளத்தினிக்குங் கரும்பினைமுக் கனியைஅருட் கடலை ஓங்கும்

நிலைபயின்ற முனிவரரும் தொழுதேத்த நான்முகனார் நீண்ட நாவின்

தலைபயின்ற மறைபயின்று மூவுலகும் காக்கின்ற தாயை வாகைச்

சிலைபயின்ற நுதலாளைக் கலைவாணி அம்மையைநாம் சிந்திப் போமே. ...3

திருச்சிற்றம்பலம்

----------------

13. பழமலைப் பதிகம் (2474 - 2483)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2474

திருமால் கமலத் திருக்கண்மலர் திகழு மலர்த்தாட்
சிவக்கொழுந்தைக்

கருமா லகற்றுந் தனிமருந்தைக் கனக சபையிற் கலந்தலுன்றை

அருமா மணியை ஆரமுதை அன்பை அறிவை அருட்பெருக்கைக்

குருமா மலையைப் பழமலையிற் குலவி யோங்கக் கண்டேனே. .
..1

2475

வான நடுவே வயங்குகின்ற மவுன மதியை மதிஅமுதைத்

தேனை அளிந்த பழச்சுவையைத் தெய்வ மணியைச் சிவபதத்தை

ஊனம் அறியார் உளத்தொளிரும் ஒளியை ஒளிக்கும்
ஒருபொருளை

ஞான மலையைப் பழமலைமேல் நண்ணி விளங்கக் கண்டேனே.
...2

2476

தவள நிறத்துத் திருநீறு தாங்கு மணித்தோள் தாணுவைநம்

குவளை விழித்தாய் ஒருபுறத்தே குலவ விளங்கும் குருமணியைக்

கவள மதமா கரியுரிவைக் களித்த மேனிக் கற்பகத்தைப்

பவள மலையைப் பழமலையிற் பரவி ஏத்திக் கண்டேனே. ...3

2477

இளைத்த இடத்தில் உதவிஅன்பர் இடத்தே இருந்த
ஏமவைப்பை

வளைத்த மதின்மூன் றெரித்தருளை வளர்த்த கருணை வாரிதியைத்

திளைத்த யோகர் உளத்தோங்கித் திகழுந் துரியா தீதமட்டுங்

கிளைத்த மலையைப் பழமலையிற் கிளர்ந்து வயங்கக் கண்டேனே. ...4

2478

மடந்தை மலையாண் மனமகிழ மருவும் பதியைப் பசுபதியை

அடர்ந்த வினையின் தொடக்கைஅறுத் தருளும் அரசை அலைகடன்மேல்

கிடந்த பச்சைப் பெருமலைக்குக் கேழல் அருள்தந் தகம்புறமும்

கடந்த மலையைப் பழமலைமேற் கண்கள் களிக்கக் கண்டேனே. ...5

2479

துனியும் பிறவித் தொடுவழக்குஞ் சோர்ந்து விடவுந் துரியவெளிக்

கினியும் பருக்குங் கிடையாத இன்பம் அடைந்தே இருந்திடவும்

பனியுந் திமய மலைப்பச்சைப் படர்ந்த பவளப் பருப்பதத்தைக்

கனியுஞ் சிலையுங் கலந்தஇடம்(160) எங்கே அங்கே கண்டேனே. ...6

2480

கருணைக் கடலை அக்கடலிற் கலந்த அமுதை அவ்வமுதத்

தருணச் சுவையை அச்சுவையிற் சார்ந்த பயனைத் தனிச்சுகத்தை

வருணப் பவளப் பெருமலையை மலையிற் பச்சை மருந்தொருபால்

பொருணச் சுறவே பழமலையிற் பொருந்தி யோங்கக் கண்டேனே. ...7

2481

என்னார் உயிரிற் கலந்துகலந் தினிக்கும் கரும்பின் கட்டிதனைப்

பொன்னார் வேணிக் கொழுங்கனியைப் புனிதர்உளத்தில் புகுங் களிப்பைக்

கன்னார் உரித்துப் பணிகொண்ட கருணைப் பெருக்கைக் கலைத்தெளிவைப்

பன்னா கப்பூண் அணிமலையைப் பழைய மலையிற் கண்டேனே. ...8

2482

நல்ல மனத்தே தித்திக்க நண்ணும் கனியை நலம்புரிந்தென்

அல்லல் அகற்றும் பெருவாழ்வை அன்பால் இயன்ற அருமருந்தைச்

சொல்ல முடியாத் தனிச்சுகத்தைத் துரிய நடுவே தோன்றுகின்ற

வல்ல மலையைப் பழமலையில் வயங்கி யோங்கக் கண்டேனே. ...9

2483

ஆதி நடுவு முடிவுமிலா அருளா னந்தப் பெருங்கடலை

ஓதி உணர்தற் கரியசிவ யோகத் தெழுந்த ஒருசுகத்தைப்

பாதி யாகி ஒன்றாகிப் படர்ந்த வடிவைப் பரம்பரத்தைச்

சோதி மலையைப் பழமலையிற் சூழ்ந்து வணங்கிக் கண்டேனே. ...19

திருச்சிற்றம்பலம்

------

169 கனியும் சிலையும் கலந்த இடம் - பழமலை (கனி - பழம். சிலை - மலை)

-----------------------------

14. பழமலையோ கிழமலையோ (2484- 2486)

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2484

ஆதிமலை அனாதிமலை அன்புமலை எங்கும்

ஆனமலை ஞானமலை ஆனந்த மலைவான்

ஜோதிமலை துரியமலை துரியமுடிக் கப்பால்

தோன்றுமலை தோன்றாத சூதான மலைவெண்

பூதிமலை சுத்த அனு பூதிமலை எல்லாம்

பூத்தமலை வல்லியெனப் புகழுமலை தனையோர்

பாதிமலை முத்தரெலாம் பற்றுமலை என்னும்

பழமலையைக் கிழமலையாய்ப் பகருவதென் னுலகே. ...1

2485

சாக்கியனார் எறிந்தசிலை சகித்தமலை சித்த

சாந்தர் உளஞ் சார்ந்தோங்கித் தனித்தமலை சபையில்

தூக்கியகா லொடுவிளங்கும் தூயமலை வேதம்

சொன்னமலை சொல்லிறந்த துரியநடு மலைவான்

ஆக்கியளித் தழிக்குமலை அழியாத மலைநல்

அன்பருக்கின் பந்தருமோர் அற்புதப்பொன் மலைநற்

பாக்கியங்க ளெல்லாமும் பழுத்தமலை என்னும்

பழமலையைக் கிழமலையாய்ப் பகருவதென் னுலகே. ...2

நேரிசை வெண்பா

2486

ஆறு விளங்க அணிகிளர்தேர் ஊர்ந்தஉலாப்

பேறு விளங்கஉளம் பெற்றதுமன் - கூறுகின்ற

ஒன்றிரண்டு தாறுபுடை ஓங்கும் பழமலையார்

மின்திரண்டு நின்றசடை மேல். ...3

திருச்சிற்றம்பலம்

---------------------------------

15. பெரியநாயகியார் தோத்திரம் (2487- 2489)

திருவதிகை வீரட்டானம்

கலிவிருத்தம்

2487

உரிய நாயகி யோங்கதி கைப்பதித்

துரிய நாயகி தூயவீ ரட்டற்கே

பிரிய நாயகி பேரருள் நாயகி

பெரிய நாயகி பெற்றியைப் பேசுவாம். ...1

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2488

உலகந் தழைக்க உயிர்தழைக்க உணர்வு தழைக்க ஒளிதழைக்க
உருவந் தழைத்த பசுங்கொடியே உள்ளத் தினிக்கும் தெள்ளமுதே
திலகந் தழைத்த நுதற்கரும்பே செல்வத் திருவே கலைக்குருவே
சிறக்கும் மலைப்பெண் மணியேமா தேவி இச்சை ஞானமொடு
வலகந் தழைக்குங் கிரியை இன்பம் வழங்கும் ஆதி பரைஎன்ன
வயங்கும் ஒருபே ரருளேஎம் மதியை விளக்கும் மணிவிளக்கே
அலகந் தழைக்குந் திருவதிகை ஐயர் விரும்பும் மெய்யுறவே
அரிய பெரிய நாயகிப்பெண் ணரசே என்னை ஆண்டருளே. ...2

2489

தன்னேர் அறியாப் பரவெளியில் சத்தாம் சுத்த அநுபவத்தைச்
சார்ந்து நின்ற பெரியவர்க்கும் தாயே எமக்குத் தனித்தாயே
மின்னே மின்னேர் இடைப்பிடியே விளங்கும் இதய மலர்அனமே
வேதம் புகலும் பசுங்கிளியே விமலக் குயிலே இளமயிலே
பொன்னே எல்லாம் வல்லதிரி புரையே பரையே பூரணமே
புனித மான புண்ணியமே பொற்பே கற்ப கப்பூவே
அன்னே முன்னே என்னேயத் தமர்ந்த அதிகை அருட்சிவையே
அரிய பெரிய நாயகிப்பெண் ணரசே என்னை ஆண்டருளே. ...3

திருச்சிற்றம்பலம்

---

16. திருவண்ணாமலைப் பதிகம் (2490 - 2499)

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2490

வளங்கிளர் சடையும் விளங்கிய இதழி மாலையும் மால்அயன் வழுத்தும்

குளங்கிளர் நுதலும் களங்கிளர் மணியும் குலவுதிண் புயமும்அம் புயத்தின்

தளங்கிளர் பதமும் இளங்கதிர் வடிவும் தழைக்கநீ இருத்தல்கண் டுவத்தல்

உளங்கிளர் அமுதே துளங்குநெஞ் சகனேன் உற்றரு ணையில்பெற அருளே. ...1

2491

அன்பர்தம் மனத்தே இன்பமுற் றவைகள் அளித்தவர் களித்திடப் புரியும்

பொன்பொலி மேனிக் கருணையங் கடலே பொய்யனேன் பொய்மைகண் டின்னும்

துன்பமுற் றலையச் செய்திடேல் அருணைத் தொல்நக ரிடத்துன தெழில்கண்

டென்புளம் உருகத் துதித்திடல் வேண்டும் இவ்வரம் எனக்கிவண் அருளே. ...2

2492

பூத்திடும் அவனும் காத்திடு பவனும் புள்விலங் குருக்கொடு நேடி

ஏத்திடும் முடியும் கூத்திடும் அடியும் இன்னமும் காண்கிலர் என்றும்

கோத்திடும் அடியர் மாலையின் அளவில் குலவினை என்றுநல் லோர்கள்

சாற்றிடும் அதுகேட் டுவந்தனன் நினது சந்நிதி உறஎனக் கருளே. ...3

2493

அருள்பழுத் தோங்கும் ஆனந்தத் தருவே அற்புத அமலநித் தியமே

தெருள்பழுத் தோங்கும் சித்தர்தம் உரிமைச் செல்வமே அருணையந் தேவே

இருள்பழுத் தோங்கும் நெஞ்சினேன் எனினும் என்பிழை பொறுத்துநின் கோயில்

பொருள்பழுத்தோங்கும் சந்நிதி முன்னர்ப்போந்துனைப் போற்றுமாறருளே. ...4

2494

மறையும் அம் மறையின் வாய்மையும் ஆகி மன்னிய வள்ளலே மலர்மேல்

இறையும்மா தவனும் இறையும்இன் னவன்என் றெய்திடா இறைவனே அடியேன்

பொறையும்நன் னிறையும் அறிவும்நற் செறிவும் பொருந்திடாப் பொய்யனேன் எனினும்

அறையும்நற் புகழ்சேர் அருணையை விழைந்தேன் அங்கெனை அடைகுவித் தருளே. ...5

2495

தேடுவார் தேடும் செல்வமே சிவமே திருஅரு ணாபுரித் தேவே

ஏடுவார் இதழிக் கண்ணிஎங் கோவே எந்தையே எம்பெரு மானே

பாடுவார்க் களிக்கும் பரம்பரப் பொருளே பாவியேன் பொய்யெலாம் பொறுத்து

நாடுவார் புகழும் நின்திருக் கோயில் நண்ணுமா எனக்கிவண் அருளே. ...6

2496

உலகுயிர் தொறும்நின் றூட்டுவித் தாட்டும் ஒருவனே உத்தம னேநின்

இலகுமுக் கண்ணும் காளகண் டமும்மெய் இலங்குவெண் ணீற்றணி எழிலும்

திலகவாள் நுதல்உண் ணாமுலை உமையாள் சேரிடப் பாலுங்கண் டடியேன்

கலகஐம் புலன்செய் துயரமும் மற்றைக் கலக்கமும் நீக்குமா அருளே. ...7

2497

அருட்பெருங் கடலே ஆனந்த நறவே அடிநடு அந்தமுங் கடந்த

தெருட்பெரு மலையே திருஅணா மலையில் திகழ்சுயஞ் சோதியே சிவனே

மருட்பெருங் கடலின் மயங்குகின் றேன்என் மயக்கெலாம் ஒழிந்துவன் பிறவி

இருட்பெருங் கடல்விட் டேறநின் கோயிற் கெளியனேன் வரவரம் அருளே. ...8

2498

கருணையங் கடலே கண்கள்மூன் றுடைய கடவுளே கமலன்மால் அறியா

அருணைஎங் கோவே பரசிவா னந்த அமுதமே அற்புத நிலையே

இருள்நிலம் புகுதா தெனைஎடுத் தாண்ட இன்பமே அன்பர்தம் அன்பே

பொருள்நலம் பெறநின் சந்நிதிக் கெளியேன் போந்துனைப் போற்றும்வா றருளே. ...9

2499

ஏதுசெய் திடினும் பொறுத்தருள் புரியும் என்உயிர்க் கொருபெருந் துணையே

தீதுசெய் மனத்தார் தம்முடன் சேராச் செயல்எனக் களித்தஎன் தேவே

வாதுசெய் புலனால் வருந்தல்செய் கின்றேன் வருந்துறா வண்ணம்எற் கருளித்

தாதுசெய் பவன்ஏத் தருணையங் கோயில் சந்நிதிக் கியான்வர அருளே. ...10

திருச்சிற்றம்பலம்

---------------------------

17. அருணகிரி விளங்க வளர்ந்த சிவக்கொழுந்து

திருவண்ணாமலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2500

திருவிளங்கச் சிவயோக சித்தியெலாம் விளங்கச்

சிவஞான நிலைவிளங்கச் சிவாநுபவம் விளங்கத்

தெருவிளங்கு திருத்தில்லைத் திருச்சிற்றம் பலத்தே

திருக்கூத்து விளங்கஒளி சிறந்ததிரு விளக்கே

உருவிளங்க உயிர்விளங்க உணர்ச்சியது விளங்க

உலகமெலாம் விளங்கஅரு ளுதவுபெருந் தாயாம்

மருவிளங்கு குழல்வல்லி மகிழ்ந்தொருபால் விளங்க

வயங்கருண கிரிவிளங்க வளர்ந்தசிவக் கொழுந்தே. ...1

திருச்சிற்றம்பலம்

-------------------------------

18. திருவோத்தூர் சிவஞான தேசிகன் தோத்திரம்

நாற்பத்தெண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்(161)

2591

உலகியலின் உறுமயலின் அடைவுபெறும் எனதிதயம்

ஒளிபெற விளங்குசுடரே

உதயநிறை மதிஅமுத உணவுபெற நிலவுசிவ

யோகநிலை அருளுமலையே

உனதுசெயல் எனதுசெயல் உனதுடைமை எனதுடைமை

உணர்என உணர்த்துநிறைவே

உளஎனவும் இலஎனவும் உரைஉபய வசனம்அற

ஒருமொழியை உதவுநிதியே

ஒன்றுடன் இரண்டெனவி தண்டைஇடும் மிண்டரொடும்

ஒன்றல்அற நின்றநிலையே

உன்னல்அற உன்னுநிலை இன்னதென என்னுடைய

உள்உணர உள்ளுமதியே

உன்நிலையும் என்நிலையும் அன்னியம்இ லைச்சிறிதும்

உற்றறிதி என்றபொருளே

உண்மைநெறி அண்மைதனில் உண்டுளம்ஒ ருங்கில்என

ஓதுமெய்ப் போதநெறியே ...1/4

அலகின்மறை மொழியும்ஒரு பொருளின்முடி பெனஎன

தகந்தெளிய அருள்செய்தெருளே

ஐம்பூதம் ஆதிநீ அல்லைஅத் தத்துவ

அதீதஅறி வென்றஒன்றே

அத்துவா ஆறையும் அகன்றநிலை யாதஃது

அதீதநிலை என்றநன்றே

ஆணைஎம தாணைஎமை அன்றிஒன் றில்லைநீ

அறிதிஎன அருளுமுதலே

அன்பென்ப தேசிவம் உணர்ந்திடுக எனஎனக்கு

அறிவித்த சுத்தஅறிவே

அத்துவித நிலைதுவித நிலைநின்ற பின்னலது

அடைந்திடா தென்றஇறையே

ஆனந்த மதுசச்சி தானந்த மேஇஃது

அறிந்தடைதி என்றநலமே

அட்டசித் திகளும்நின தேவல்செயும் நீஅவை

அவாவிஇடல் என்றமணியே ....1/2

இலகுபரி பூரண விலாசம்அல திலைஅண்டம்

எங்கணும் எனச்சொல்பதியே

இரவுபகல் அற்றஇடம்அதுசகல கேவலம்

இரண்டின்நடு என்றபரமே

இச்சைமன மாயையே கண்டன எலாம்அவை

இருந்துகாண் என்றதவமே

யான்பிறர் எனும்பேத நடைவிடுத் தென்னோடு

இருத்திஎன உரைசெய்அரைசே

என்களைக ணேஎனது கண்ணேஎன் இருகண்

இலங்குமணி யேஎன்உயிரே

என்உயிர்க் குயிரேஎன் அறிவேஎன் அறிவூடு

இருந்தசிவ மேஎன் அன்பே

என்தெய்வ மேஎனது தந்தையே எனைஈன்று

எடுத்ததா யேஎன்உறவே

என்செல்வ மேஎனது வாழ்வேஎன் இன்பமே

என்அருட் குருவடிவமே 3/4

கலகமனம் உடையஎன் பிழைபொறுத் தாட்கொண்ட

கருணையங் கடல்அமுதமே

காழிதனில் அன்றுசுரர் முனிவர்சித் தர்கள்யோகர்

கருதுசமயாதிபர்களும்

கைகுவித் தருகில்நின் றேத்தமூ வாண்டில்

களித்துமெய்ப் போதம்உண்டு

கனிமதுரம் ஒழுகுசெம் பதிகச்செ ழும்சொன்மழை

கண்ணுதல் பவளமலையில்

கண்டுபொழி அருள்முகில் சம்பந்த வள்ளலாங்

கடவுளே ஓத்தூரினில்

கவினுற விளங்குநற் பணிகள்சிவ புண்ணியக்

கதிஉல கறிந்துய்யவே

கரைஅற்ற மகிழ்வினொடு செய்தருள் புரிந்திடும்

காட்சியே சிவஞானியாம்

கருதவரும் ஒருதிருப் பெயர்கொள்மணியேஎமைக்

காப்பதுன் கடன்என்றுமே. ...1

திருச்சிற்றம்பலம்

----------

161. முற்பதிப்புகள் அனைத்திலும் முப்பத்திரண்டடித் தனி ஆசிரிய விருத்தம் எனக்குறித்திருப்பது பிழை.

-------------------------

19. திருவோத்தூர் சிவஞானதேசிகன் திருச்சீர் அட்டகம் (2582-2585)

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2582

அணிவா யுலகத் தம்புயனும் அளிக்குந் தொழிற்பொன் அம்புயனும்

அறியா அருமைத் திருவடியை அடியேந் தரிசித் தகங்குளிர

மணிவாய் மலர்ந்தெம் போல்வார்க்கு மறையுண் முடிபை வகுத்தருள

வயங்குங் கருணை வடிவெடுத்து வந்து விளங்கு மணிச்சுடரே

பிணிவாய் பிறவிக் கொருமருந்தே பேரா னந்தப் பெருவிருந்தே

பிறங்கு கதியின் அருளாறே பெரியோர் மகிழ்விற் பெரும்பேறே

திணிவாய் எயிற்சூழ் திருவோத்தூர் திகழ அமர்ந்த சிவநெறியே

தேவர் புகழுஞ் சிவஞானத்தேவே ஞான சிகாமணியே. ...1

2583

நின்பால் அறிவும் நின்செயலும் நீயும் பிறிதன் றெமதருளே

நெடிய விகற்ப உணர்ச்சிகொடு நின்றாய் அதனால் நேர்ந்திலைகாண்

அன்பால் உன்பால் ஒருமொழிதந் தனம்இம் மொழியால் அறிந்தொருங்கி

அளவா அறிவே உருவாக அமரென் றுணர்த்தும் அரும்பொருளே

இன்பால் என்பால் தருதாயில் இனிய கருணை இருங்கடலே

இகத்தும் பரத்தும் துணையாகி என்னுள் இருந்த வியனிறைவே

தென்பால் விளங்குந் திருவோத்தூர் திகழும் மதுரச் செழுங்கனியே

தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே. ...2

2584

அசையும் பரிசாந் தத்துவமன் றவத்தைஅகன்ற அறிவேநீ
ஆகும் அதனை எமதருளால் அலவாம் என்றே உலவாமல்
இசையும் விகற்ப நிலையைஒழித் திருந்த படியே இருந்தறிகாண்
என்றென் உணர்வைத் தெளித்தநினக் கென்னே கைம்மா
றறியேனே

நசையும் வெறுப்பும் தவிர்ந்தவர்பால் நண்ணும் துணையே
நன்னெறியே
நான்தான் என்னல் அறத்திகழ்ந்து நாளும் ஓங்கு நடுநிலையே
திசையும் புவியும் புகழோத்தூர்ச் சீர்கொள் மதுரச் செழும்பாகே
தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே. ...3

2585

கண்மூன் றுடையான் எவன்அவனே கடவுள் அவன்தன்
கருணைஒன்றே
கருணை அதனைக் கருதுகின்ற கருத்தே கருத்தாம் அக்கருத்தை
மண்மூன் றறக்கொண் டிருந்தவரே வானோர் வணங்கும்
அருந்தவராம் ...4

... ... ... ... ... ... ... ...

... ... ... ... ... ... (162)

திருச்சிற்றம்பலம்

----------

162. நான்காம் பாவின் பிற்பாதியும் 5,6,7,8 ஆம் பாக்களும்
கிடைக்கவில்லை.

------------------------------

20. திருமுகப் பாசுரம் (2596)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2596

திருத்தகுசீர்த் தமிழ்மறைக்கே முதலாய வாக்கதனால் திருப்பேர் கொண்டு

கருத்தர்நம தேகம்பக் கடவுளையுட் புறங்கண்டு களிக்கின் றோய்நின்

உருத்தகுசே வடிக்கடியேன் ஒருகோடி தெண்டனிட்டே உரைக்கின்றேன்உன்

கருத்தறியேன் எனினு(முனைக்) கொடு(முயல்வேன் றனை)யன்பால் காக்க அன்றே.(163)

திருச்சிற்றம்பலம்

-------------

163. அடைப்புக்குள் உள்ளவை மூலத்தில் எழுத்து விளங்கா இடங்களில் ஆ. பா. ஊகித்து அமைத்த சொற்கள்.

------------------------------

21. சிங்கபுரிக் கந்தர் பதிகம்(164) (2597 - 2517)

காப்பு

நேரிசை வெண்பா

2597

பொன்மகள்வாழ் சிங்கபுரி போதன்அறு மாமுகன்மேல்

நன்மைமிகு செந்தமிழ்ப்பா நாம்உரைக்கச் - சின்மயத்தின்

மெய்வடிவாம் நங்குருதாள் வேழமுகன் தன்னிருதாள்

பொய்யகலப் போற்றுவம்இப் போது. ...1

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2508

சீராரு மறையொழுக்கந் தவிராது நான்மரபு சிறக்க வாழும்

ஏராரு நிதிபதிஇந் திரன்புரமும் மிகநாணும் எழிலின் மிக்க

வாராருங் கொங்கையர்கள் மணவாளர் உடன்கூடி வாழ்த்த நாளும்

தேராரு நெடுவீதிச் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...1

2509

உம்பர்துயர் கயிலைஅரற் கோதிடவே அப்பொழுதே உவந்து நாதன்

தம்பொருவில் முகமாறு கொண்டுநுதல் ஈன்றபொறி சரவ ணத்தில்

நம்புமவர் உயவிடுத்து வந்தருளும் நம்குகனே நலிவு தீர்ப்பாய்

திங்கள்தவழ் மதில்சூழும் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...2

2510

பொல்லாத சூர்க்கிளையைத் தடிந்தமரர் படுந்துயரப் புன்மை நீக்கும்

வல்லானே எனதுபிணி நீநினைந்தால் ஒருகணத்தில் மாறி டாதோ

கல்லாதேன் எனினும்எனை இகழாதே நினதடியார் கழகங் கூட்டாய்

செல்லாதார் வலிஅடக்கும் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...3

2511

பண்டுறுசங் கப்புலவர் அருஞ்சிறையைத் தவிர்த்தருளும் பகவனேஎன்

புண்தருஇந் நோய்தணிக்கப் புரையிலியோய் யான்செய்யும் புன்மை தானோ

தண்டைஎழில் கிண்கிணிசேர் சரணமலர்க் கனுதினமும் தமியேன் அன்பாய்த்

தெண்டனிடச் செய்தருள்வாய் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...4

2512

தாவாத வசியர்குலப் பெண்ணினுக்கோர் கரமளித்த சதுரன் அன்றே

மூவாத மறைபுகலும் மொழிகேட்டுன் முண்டகத்தாள் முறையில் தாழ்ந்து

தேவாதி தேவன்எனப் பலராலும் துதிபுரிந்து சிறப்பின் மிக்க

தீவாய்இப் பிணிதொலைப்பாய் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...5

2513

வானவர்கோன் மேனாளில் தரமறியா திகழ்ந்துவிட விரைவில் சென்று

மானமதில் வீற்றிருந்தே அவன்புரிந்த கொடுமைதனை மாற்றும் எங்கள்

தானவர்தம் குலம்அடர்த்த சண்முகனே இப்பிணியைத் தணிப்பாய் வாசத்

தேனவிழும் பொழில்சூழும் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...6

2514

மட்டாரும் பொழில்சேரும் பரங்கிரிசெந் தூர்பழனி மருவு சாமி

நட்டாரும் பணிபுரியும் ஆறுதலை மலைமுதலாய் நணுகி எங்கள்

ஒட்டாதார் வலிஅடக்கி அன்பர்துதி ஏற்றருளும் ஒருவ காவாய்

தெட்டாதார்க் கருள்புரியும் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. . ..7

2515

முன்செய்த மாதவத்தால் அருணகிரி நாதர்முன்னே முறையிட் டேத்தும்

புன்செயல்தீர் திருப்புகழை ஏற்றருளும் மெய்ஞ்ஞான புனிதன் என்றே

என்செயலில் இரவுபகல் ஒழியாமல் போற்றியிட இரங்கா தென்னே

தென்திசைசேர்ந் தருள்புரியும் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...8

2516

விண்ணவர்கோன் அருந்துயர நீங்கிடவும் மாதுதவ விளைவு நல்கும்

கண்ணகன்ற பேரருளின் கருணையினால் குஞ்சரியைக் காத லோடு

மண்ணுலகோர் முதல்உயிர்கள் மகிழ்ந்திடவும் மணம்புரிந்த வள்ள லேஎன்

திண்ணியதீ வினைஒழிப்பாய் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...9

2517

மாசகன்ற சிவமுனிவர் அருளாலே மானிடமாய் வந்த மாதின்

ஆசில்தவப் பேறளிக்க வள்ளிமலை தனைச்சார்ந்தே அங்குக் கூடி

நேசமிகு மணம்புரிந்த நின்மலனே சிறியேனை நீயே காப்பாய்

தேசுலவு பொழில்சூழும் சிங்கபுரி தனில்அமர்ந்த தெய்வக் குன்றே. ...10

திருச்சிற்றம்பலம்

164. இப்பதிக வரலாறு பின்குறித்தபடி ஓர் நோட்டு பிரதியில் காணப்படுகிறது: "இஃது ரக்தாக்ஷி ளு சித்திரை மாதம் 26 * சுக்கிரவாரம் கார்த்திகை நக்ஷத்திரம் சோதரர் சபாபதி பிள்ளையின் ரோக நிவாரணார்த்தம் சி . இராமலிங்க பிள்ளையவர் களாலியற்றியது." * 6 - 5 1864 _ ஆ. பா.

---------

22. சித்தி விநாயகர் பதிகம் (2518 - 2529)

காப்பு

நேரிசை வெண்பா

2518

அஞ்சுமுகத் தான்மகன்மால் அஞ்சுமுகத் தான்அருள்வான்

அஞ்சுமுகத் தான்அஞ் சணிகரத்தான் - அஞ்சுமுக

வஞ்சரையான் காணா வகைவதைத்தான் ஓர்அரையோ

டஞ்சரையான் கண்கள் அவை. ...1

2519

வாதாகா வண்ண மணியேஎம் வல்லபைதன்

நாதாகா வண்ண நலங்கொள்வான் - போதார்

வனங்காத்து நீர்அளித்த வள்ளலே அன்பால்

இனங்காத் தருளாய் எனை. ...2

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2520

உலகெலாம் தழைப்ப அருள்மத அருவி ஒழுகுமா முகமும்ஐங் கரமும்

இலகுசெம் மேனிக் காட்சியும் இரண்டோ டிரண்டென ஓங்குதிண் தோளும்

திலகவாள் நுதலார் சித்திபுத் திகளைச் சேர்த்தணைத் திடும்இரு மருங்கும்

விலகுறா தெளியேன் விழைந்தனன் சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...3

2521

உள்ளமும் உயிரும் உணர்ச்சியும் உடம்பும் உறுபொருள் யாவும்நின் தனக்கே

கள்ளமும் கரிசும் நினைந்திடா துதவிக் கழல்இணை நினைந்துநின் கருணை

வெள்ளம்உண் டிரவுபகல்அறி யாத வீட்டினில் இருந்துநின் னோடும்

விள்ளல்இல் லாமல் கலப்பனோ சித்தி விநாயக விக்கினேச்சுரனே. ...4

2522

நாதமும் கடந்து நிறைந்துநின் மயமே நான்என அறிந்துநான் தானாம்

பேதமும் கடந்த மௌனராச் சியத்தைப் பேதையேன் பிடிப்பதெந் நாளோ

ஏதமும் சமய வாதமும் விடுத்தோர் இதயமும் ஏழையேன் சிரமும்

வேதமும் தாங்கும் பாதனே சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...5

2523

சச்சிதானந்த வடிவம்நம் வடிவம் தகும்அதிட் டானம்மற் றிரண்டும்

பொய்ச்சிதா பாசக் கற்பனை இவற்றைப் போக்கியாங் கவ்வடி வாகி

அச்சிதா கார போதமும் அதன்மேல் ஆனந்த போதமும் விடுத்தல்

மெய்ச்சிதாம் வீடென் றுரைத்தனை சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...6

2524

ஒன்றல இரண்டும் அலஇரண் டொன்றோ டுருஅல அருஅல உவட்ட

நன்றல நன்றல் லாதல விந்து நாதமும் அலஇவை அனைத்தும்

பொன்றல்என் றறிந்துட் புறத்தினும் அகண்ட பூரண மாம்சிவம் ஒன்றே

வென்றல்என் றறிநீ என்றனை சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...7

2525

சத்தசத் தியல்மற் றறிந்துமெய்ப் போதத் தத்துவ நிலைபெற விழைவோர்

சித்தமுற் றகலா தொளித்தநின் கமலச் சேவடி தொழஎனக் கருள்வாய்

சுத்தசற் குணத்தெள் ளமுதெழு கடலே சுகபரி பூரணப் பொருளே

வித்தக முக்கண் அத்தனே சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...8

2526

மருள்உறு மனமும் கொடியவெங் குணமும் மதித்தறி யாததுன் மதியும்

இருள்உறு நிலையும் நீங்கிநின் அடியை எந்தநாள் அடைகுவன் எளியேன்

அருள்உறும் ஒளியாய் அவ்வொளிக் குள்ளே அமர்ந்தசிற் பரஒளி நிறைவே

வெருள்உறு சமயத் தறியொணாச் சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...9

2527

கேவலசகல வாதனை அதனால் கீழ்ப்படும் அவக்கடல் மூழ்கி

ஓவற மயங்கி உழலும்இச் சிறியேன் உன்அருள் அடையும்நாள் உளதோ

பாவலர் உளத்தில் பரவிய நிறைவே பரமசிற் சுகபரம் பரனே

மேவுறும் அடியார்க் கருளிய சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...10

2528

கானல்நீர் விழைந்த மான்என உலகக் கட்டினை நட்டுழன் றலையும்

ஈனவஞ் சகநெஞ் சகப்புலை யேனை ஏன்றுகொண் டருளும்நாள் உளதோ

ஊனம்ஒன் றில்லா உத்தமர் உளத்தே ஓங்குசீர்ப் பிரணவ ஒளியே

வேல்நவில் கரத்தோர்க் கினியவா சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...11

2529

பெரும்பொருட் கிடனாம் பிரணவ வடிவில் பிறங்கிய ஒருதனிப் பேறே

அரும்பொருள் ஆகி மறைமுடிக் கண்ணே அமர்ந்தபே ரானந்த நிறைவே

தரும்பர போக சித்தியும் சுத்த தருமமும் முத்தியும் சார்ந்து

விரும்பினோர்க் களிக்கும் வள்ளலே சித்தி விநாயக விக்கினேச் சுரனே. ...12

திருச்சிற்றம்பலம்

\-------------------------

23. வல்லபை கணேசர் பிரசாத மாலை (2530 - 2540)

>

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2530

திருநெடு மால்அன் றால்இடை நினது சேவடித் துணைமலர்த் துகளான்

பெருநெடு மேனி தனிற்படப்(165) பாம்பின் பேருரு அகன்றமை மறவேன்

கருநெடுங் கடலைக் கடத்து(166) நற் றுணையே கண்கள்மூன் றுடையசெங் கரும்பே

வருநெடு மருப்பொன் றிலகுவா ரணமே வல்லபைக் கணேசமா மணியே. ...1

2531

நளினமா மலர்வாழ் நான்முகத் தொருவன் நண்ணிநின் துணையடிவழுத்திக்

களிநலன் உடன் இவ்வுலகெலாம்படைக்கக்கடைக்கணித்ததைஉளம்மறவேன்

அளிநலன் உறுபே ரானந்தக் கடலே அருமருந் தேஅருள் அமுதே

வளிநிறை உலகுக் கொருபெருந் துணையே வல்லபைக் கணேசமா மணியே. ...2

2532

சீர்உருத் திரமூர்த் திகட்குமுத் தொழிலும் செய்தருள் இறைமைதந் தருளில்

பேர்உருத் திரங்கொண் டிடச்செயும் நினது பெருமையை நாள்தொறும் மறவேன்

ஆர்உருத் திடினும் அஞ்சுதல் செய்யா ஆண்மைஎற் கருளிய அரசே

வார்உருத் திடுபூண் மணிமுகக் கொங்கை வல்லபைக் கணேசமா மணியே. ...3

2533

விண்ணவர் புகழும் மெய்கண்ட நாதன் வித்தகக் கபிலன்ஆ தியர்க்கே

கண்அருள் செயும்நின் பெருமையை அடியேன் கனவிலும் நனவிலும் மறவேன்

தண்அருட் கடலே அருட்சிவ போக சாரமே சராசர நிறைவே

வண்ணமா மேனிப் பரசிவ களிறே வல்லபைக் கணேசமா மணியே. ...4

2534

நாரையூர் நம்பி அமுதுகொண் டூட்ட நற்றிரு வாய்மலர்ந் தருளிச்

சீரைமே வுறச்செய் தளித்திடும் நினது திருவருள் நாள்தொறும் மறவேன்

தேரைஊர் வாழ்வும் திரம்அல எனும்நற் றிடம்எனக் கருளிய வாழ்வே

வாரைஊர் முலையாள் மங்கைநா யகிஎம் வல்லபைக் கணேசமா மணியே. ...5

2535

கும்பமா முனியின் கரகநீர் கவிழ்த்துக் குளிர்மலர் நந்தனம் காத்துச்

செம்பொன்நாட் டிறைவற் கருளிய நினது திருவருட் பெருமையை மறவேன்

நம்பனார்க் கினிய அருள்மகப் பேறே நற்குணத் தோர்பெரு வாழ்வே

வம்பறா மலர்த்தார் மழைமுகில் கூந்தல் வல்லபைக் கணேசமா மணியே. ...6

2536

அயன்தவத் தீன்ற சித்திபுத் திகள்ஆம் அம்மையர் இருவரை மணந்தே

இயன்றஅண் டங்கள் வாழ்வுறச் செயும்நின் எழில்மணக் கோலத்தை மறவேன்

பயன்தரும் கருணைக் கற்பகத் தருவே பரசிவத் தெழுபரம் பரமே

வயன்தரு நிமல நித்தியப் பொருளே வல்லபைக் கணேசமா மணியே. ...7

2537

முன்அருந் தவத்தோன் முற்கலன் முதலா முனிவர்கள் இனிதுவீ டடைய

இன்னருள் புரியும் நின்அருட் பெருமை இரவினும் பகலினும் மறவேன்

என்அரும் பொருளே என்உயிர்க் குயிரே என்அர சேஎன துறவே

மன்அரு நெறியில் மன்னிய அறிவே வல்லபைக் கணேசமா மணியே. ...8

2538

துதிபெறும் காசி நகரிடத் தனந்தம் தூயநல் உருவுகொண் டாங்கண்

விதிபெறும் மனைகள் தொறும்விருந் தினனாய் மேவிய கருணையை மறவேன்

நதிபெறும் சடிலப் பவளநற் குன்றே நான்மறை நாடரு நலமே

மதிபெறும் உளத்தில் பதிபெறும் சிவமே வல்லபைக் கணேசமா மணியே. ...9

2539

தடக்கைமா முகமும் முக்கணும் பவளச் சடிலமும் சதுர்ப்புயங் களும்கை

இடக்கைஅங் குசமும் பாசமும் பதமும் இறைப்பொழு தேனும்யான் மறவேன்

விடக்களம் உடைய வித்தகப் பெருமான் மிகமகிழ்ந் திடஅருட் பேறே

மடக்கொடி நங்கை மங்கைநா யகிஎம் வல்லபைக் கணேசமா மணியே. ...10

2540

பெருவயல் ஆறு முகன்நகல் அமர்ந்துன் பெருமைகள் பேசிடத் தினமும்

திருவளர் மேன்மைத் திறமுறச் சூழும் திருவருட் பெருமையை மறவேன்

மருவளர் தெய்வக் கற்பக மலரே மனமொழி கடந்தவான் பொருளே

வருமலை வல்லிக் கொருமுதற் பேறே வல்லபைக் கணேசமா மணியே. ...11

திருச்சிற்றம்பலம்

165. தளிர்பட - தொ. வே.

166. கடற்று - தொ. வே.

---------------

## 24. கணேசத் திருஅருள் மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

2541

திருவும் கல்வியும் சீரும்சி றப்பும்உன் திருவ டிப்புகழ் பாடுந்தி றமும்நல்

உருவும் சீலமும் ஊக்கமும் தாழ்வுறா உணர்வும் தந்தென துள்ளத்த மர்ந்தவா

குருவும்தெய்வமும் ஆகிஅன் பாளர்தம் குறைதவிர்க்கும்குணப்பெருங்குன்றமே

வெருவும் சிந்தைவி லகக்க ஜானனம் விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...1

2542

சீத நாள்மலர்ச் செல்வனும் மாமலர்ச் செல்வி மார்பகச் செல்வனும் காண்கிலாப்

பாதம் நாடொறும் பற்றறப் பற்றுவோர் பாதம் நாடப் பரிந்தருள் பாலிப்பாய்

நாதம் நாடிய அந்தத்தில் ஓங்கும்மெய்ஞ் ஞான நாடக நாயக நான்கெனும்

வேதம் நாடிய மெய்பொரு ளேஅருள் விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...2

2543

என்னை வேண்டிஎ னக்கருள் செய்தியேல் இன்னல் நீங்கும்நல் இன்பமும் ஓங்கும்நின்

தன்னை வேண்டிச்ச ரண்புகுந் தேன்என்னைத் தாங்கிக் கொள்ளும்சரண்பிறி தில்லைகாண்

அன்னைவேண்டிஅ ழும்மகப் போல்கின்றேன் அறிகி லேன்நின்தி ருவுளம் ஐயனே

மின்னை வேண்டிய செஞ்சடையாளனே விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...3

2544

நீண்ட மால்அர வாகிக்கி டந்துநின் நேயத் தால்கலி நீங்கிய வாறுகேட்

டாண்ட வாநின்அ டைக்கலம் ஆயினேன் அடியனேன்பிழை ஆயிர மும்பொறுத்

தீண்ட வாவின்ப டிகொடுத்தென்னைநீஏன்றுகொள்வதற்கெண்ணு தியாவரும்

வேண்டு வாழ்வுத ரும்பெருந் தெய்வமே விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...4

2545

தஞ்சம் என்றுனைச் சார்ந்தனன் எந்தைநீ தானும் இந்தச்ச கத்தவர் போலவே

வஞ்சம் எண்ணி இருந்திடில் என் செய்வேன் வஞ்சம் அற்றம னத்துறை அண்ணலே

பஞ்ச பாதகம் தீர்த்தனை என்றுநின் பாத பங்கயம் பற்றினன் பாவியேன்

விஞ்ச நல்லருள் வேண்டித்த ருதியோ விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...5

2546

கள்ள நெஞ்சகன் ஆயினும் ஐயநான் கள்ளம் இன்றிக்க ழறுகின் றேன்என

துள்ளம் நின்திரு வுள்ளம்அ றியுமே ஓது கின்றதென் போதுக ழித்திடேல்

வள்ள மாமலர்ப் பாதப்பெ ரும்புகழ் வாழ்த்தி நாத்தழும் பேறவ ழங்குவாய்

வெள்ள வேணிப்பெ ருந்தகை யேஅருள் விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...6

2547

மண்ணில் ஆசைம யக்கற வேண்டிய மாத வர்க்கும்ம திப்பரி யாய்உனை

எண்ணி லாச்சிறி யேனையும் முன்நின்றே ஏன்று கொண்டனை இன்றுவி டுத்தியோ

உண்ணி லாவிய நின்திரு வுள்ளமும் உவகை(167) யோடுவர்ப் பும்கொள ஒண்ணுமோ

வெண்ணி லாமுடிப் புண்ணியமூர்த்தியே விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...7

2548

ஆணி லேஅன்றி ஆருயிர்ப் பெண்ணிலே அலியி லேஇவ்வ
டியனைப் போலவே

காணி லேன்ஒரு பாவியை இப்பெருங் கள்ள நெஞ்சக்க டையனை
மாயையாம்(168)

ஏணி லேஇடர் எய்தவி டுத்தியேல் என்செய் கேன்இனி இவ்வுல
கத்திலே

வீணி லே உழைப் பேன்அருள் ஐயனே விளங்கும் சித்தி விநாயக
வள்ளலே. ...8

2549

வாளி லேவிழி மங்கையர் கொங்கையாம் மலையி லேமுக மாயத்தி
லேஅவர்

தோளி லே இடைச் சூழலி லேஉந்திச் சுழியி லேநிதம் சுற்றும்என்
நெஞ்சம்நின்

தாளி லேநின்த னித்தபு கழிலே தங்கும் வண்ணம் தரஉளம்
செய்தியோ

வேளி லேஅழ கானசெவ் வேளின்முன் விளங்கும் சித்தி விநாயக
வள்ளலே. ...9

2550

நாவி னால்உனை நாள்தொறும் பாடுவார் நாடு வார் தமை
நண்ணிப்பு கழவும்

ஓவி லாதுனைப் பாடவும் துன்பெலாம் ஓடவும்மகிழ் ஓங்கவும்
செய்குவாய்

காவி நேர்களத் தான்மகிழ் ஐங்கரக் கடவுளேநற்க ருங்குழி என்னும்ஊர்

மேவி அன்பர்க்க ருள்கண நாதனே விளங்கும் சித்தி விநாயக வள்ளலே. ...10

திருச்சிற்றம்பலம்

167. ஆசை - தொ. வே. பதிப்பு

168. ஆளையா - தொ. வே.பதிப்பு

-----------

## 25. கணேசத் தனித் திருமாலை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2551

திங்கள்அம் கொழுந்து வேய்ந்த செஞ்சடைக் கொழுந்தே போற்றி

மங்கைவல் லபைக்கு வாய்த்த மகிழ்நநின் மலர்த்தாள் போற்றி

ஐங்கர நால்வாய் முக்கண் அருட்சிவ களிறே போற்றி

கங்கையை மகிழும் செல்வக் கணேசநின் கழல்கள் போற்றி. ...1

கலிவண்ணத் துறை

2552

உலகம் பரவும் பொருள்என் கோஎன் உறவென்கோ

கலகம் பெறும்ஐம் புலன்வென் றுயரும் கதிஎன்கோ

திலகம் பெறுநெய் எனநின் றிலகும் சிவம்என்கோ

இலகைங் கரஅம் பரநின் தனைஎன் என்கேனோ. ...2

2553

அடியார் உள்ளம் தித்தித் தூறும் அமுதென்கோ

கடியார் கொன்றைச் செஞ்சடை யானைக் கன்றென்கோ

பொடியார் மேனிப் புண்ணியர் புகழும் பொருள்என்கோ

அடிகேள் சித்தி விநாயக என்என் றறைகேனே. ...3

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2554

கமலமலர் அயன்நயனன் முதல்அமரர் இதயம்உறு கரிசகல அருள்செய்பசு பதியாம்

நிமலநிறை மதியின்ஒளிர் நிரதிசய பரமசுக நிலையைஅருள் புரியும்அதிபதியாம்

விமலபிர ணவவடிவ விகடதட கடகரட விபுலகய முகசுகுண பதியாம்

அமலபர சிவஒளியின் உதயசய விசயசய அபயஎனும் எமதுகண பதியே. ...4

கட்டளைக் கலித்துறை

2555

அம்பொன்று செஞ்சடை அப்பரைப் போல்தன் அடியர்தம்துக்

கம்பொன்றும் வண்ணம் கருணைசெய் தாளும் கருதுமினோ

வம்பொன்று பூங்குழல் வல்லபை யோடு வயங்கியவெண்

கொம்பொன்று கொண்டெமை ஆட்கொண் டருளிய குஞ்சரமே. ...5

2556

திருமால் வணங்கத் திசைமுகன் போற்றச் சிவமுணர்ந்த

இருமா தவர்தொழ மன்றகத் தாடு மிறைவடிவாக்

குருமா மலர்ப்பிறை வேணியு முக்கணுங் கூறுமைந்து

வருமா முகமுங்கொள் வல்லபை பாகனை வாழ்த்துதுமே. ...6

திருச்சிற்றம்பலம்

---------------------------

## 26.தெய்வத் தனித் திருமாலை (2557 - 2563)

வஞ்சித்துறை

2557

ஐங்கரன் அடிமலர்

இங்குற நினைதிநின்

பொங்குறு துயரறும்

மங்கலின் மனனனே. ...1

குறள் வெண்செந்துறை

2558

திருமால் அறியாச் சேவடி யாலென்

கருமால் அறுக்குங் கணபதி சரணம். ...2

கலிவிருத்தம்

2559

துதிபெறு கணபதி இணையடி மலரும்

பதிதரு சரவண பவன்மல ரடியுங்

கதிதரு பரசிவன்இயலணி கழலும்

மதியுற மனனிடை மருவுது மிகவே. ...3

2560

அருளுறுங் கயமுகத் தண்ணல் பாதமும்

பொருளுறு சண்முகப் புனிதன் தாள்களும்

தெருளுறு சிவபிரான் செம்பொற் கஞ்சமும்

மருளற நாடொறும் வணங்கி வாழ்த்துவாம். ...4

2561

அற்புதக் கணபதி அமல போற்றியே

தற்பர சண்முக சாமி போற்றியே

சிற்பர சிவமகா தேவ போற்றியே

பொற்பமர் கௌரிநிற் போற்றி போற்றியே. ...5

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2562

மாதங்க முகத்தோன்நங் கணபதிதன் செங்கமல மலர்த்தாள் போற்றி

ஏதங்கள் அறுத்தருளுங் குமரகுருபரன்பாத இணைகள் போற்றி

தாதங்க மலர்க்கொன்றைச் சடையுடைய சிவபெருமான் சரணம் போற்றி

சீதங்கொள் மலர்க்குழலாள் சிவகாம சவுந்தரியின் திருத்தாள் போற்றி. ...6

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2563

கலைநிறை கணபதி சரணஞ் சரணம்

கஜமுக குணபதி சரணஞ் சரணம்

தலைவநின் இணையடி சரணஞ் சரணம்

சரவண பவகுக சரணஞ் சரணம்

சிலைமலை யுடையவ சரணஞ் சரணம்

சிவசிவ சிவசிவ சரணஞ் சரணம்

உலைவறும் ஒருபரை சரணஞ் சரணம்

உமைசிவை அம்பிகை சரணஞ் சரணம். ... 7

திருச்சிற்றம்பலம்

---------------

27.மங்களம்

சிந்து

2564

புங்கவர் புகழுமாதங்கமு கந்திகழ்

எங்கள் கணேசராந் துங்கற்கு-மங்களம். ...1

2565

போதந் திகழ்பர நாதந் தனில்நின்ற

நீதராஞ் சண்முக நாதற்கு -மங்களம். ...2

2566

பூசைசெய் வாருளம் ஆசைசெய் வார்தில்லை

ஈசர் எமதுநட ராஜற்கு -மங்களம். ...3

2567

பூமி புகழ்குரு சாமி தனைஈன்ற

வாமி எனுஞ்சிவ காமிக்கு - மங்களம். ...4

2568

புங்கமி குஞ்செல்வந் துங்கமு றத்தரும்

செங்க மலத்திரு மங்கைக்கு - மங்களம். ...5

2569

பூணி லங்குந்தன வாணி பரம்பர

வாணி கலைஞர்கொள் வாணிக்கு - மங்களம். ...6

2570

புண்ணிய ராகிய கண்ணிய ராய்த்தவம்

பண்ணிய பத்தர்க்கு முத்தர்க்கு - மங்களம். ...7

2571

திருவண்ண நதியும்வளை ஒருவண்ண மதியும்வளர்
செவ்வண்ணம் நண்ணுசடையும்

தெருள்வண்ண நுதல்விழியும் அருள்வண்ண வதனமும்
திகழ்வண்ண வெண்ணகையும்ஓர்

மருவண்ண மணிகுவளை மலர்வண்ண மிடறும்மலை
மகள்வண்ண மருவும்இடமும்

மன்வண்ண மிகுதுணைப் பொன்வண்ண அடிமலரும் மாணிக்க
வண்ணவடிவும்

இருவண்ண மாம்என்மன தொருவண்ணம் ஆகியே இடையறா
தெண்ணும்வண்ணம்

எவ்வண்ணம் அவ்வண்ணம் இவ்வண்ணம் என்றிவண்
இயம்பல்உன் கருணைவண்ணம்

கருவண்ணம் அறஉளம் பெருவண்ணம் உறநின்று
கடல்வண்ணன் எண்ணும்அமுதே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே.
...1

2572

எண்ணுறுவி ருப்பாதி வல்விலங் கினமெலாம் இடைவிடா
துழலஒளிஓர்

எள்அளவும் இன்றிஅஞ் ஞானஇருள் மூடிட இருண்டுயிர்
மருண்டுமாழ்க

நண்ணுமன மாயையாம் காட்டைக் கடந்துநின் ஞானஅருள்
நாட்டைஅடையும்

நாள்எந்த நாள்அந்த நாள்இந்த நாள்என்று நாயினேற்
கருள்செய்கண்டாய்

விண்ணுறுசு டர்க்கெலாம் சுடர்அளித் தொருபெரு
வெளிக்குள்வளர் கின்றசுடரே

வித்தொன்றும் இன்றியே விளைவெலாம் தருகின்ற விஞ்ஞான
மழைசெய்முகிலே

கண்ணுறுநு தற்பெருங் கடவுளே மன்றினில் கருணைநடம்
இடுதெய்வமே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே.
...2

2573

பூதநெறி யாதிவரு நாதநெறி வரையுமாப் புகலுமூ வுலகுநீத்துப்

புரையுற்ற மூடம்எனும் இருள்நிலம்அ கன்றுமேல் போய்அருள்ஒ ளித்துணையினால்

வேதநெறி புகல்சகல கேவலம்இ லாதபர வெளிகண்டு கொண்டுகண்ட

விளைவின்றி நான்இன்றி வெளிஇன்றி வெளியாய் விளங்குநாள் என்றருளுவாய்

வாதநெறி நடவாத போதநெறி யாளர்நிறை மதிநெறிஉ லாவும்மதியே

மணிமிடற் றரசேஎம் வாழ்வின்முத லேஅரு மருந்தேபெ ருந்தெய்வமே

காதநெறி மணம்வீசு கனிதருபொ ழிற்குலவு கழுமதிற் றில்லைநகர்வாழ்

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே. ...3

2574

கூர்கொண்ட வாள்கொண்டு கொலைகொண்ட வேட்டுவக் குடிகொண்ட சேரிநடுவில்

குவைகொண்ட ஒருசெல்வன் அருமைகொண் டீன்றிடு குலங்கொண்ட சிறுவன்ஒருவன்

நேர்கொண்டு சென்றவர்கள் கைகொண் டுறக்கண்கள் நீர்கொண்டு வாடல்எனவே

நிலைகொண்ட நீஅருட் கலைகொண் டளித்தயான் நெறிகொண்ட குறிதவறியே

போர்கொண்ட பொறிமுதல் புலைகொண்ட தத்துவப் புரைகொண்ட மறவர்குடியாம்

பொய்கொண்ட மெய்என்னும் மைகொண்ட சேரியில் போந்துநின் றவர்அலைக்கக்

கார்கொண்ட இடிஒலிக் கண்கொண்ட பார்ப்பில் கலங்கினேன் அருள்புரிகுவாய்

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே. ...4

2575

படமெடுத் தாடுமொரு பாம்பாக என்மனம் பாம்பாட்டி யாகமாயைப்

பார்த்துக் களித்துதவு பரிசுடையர் விடயம் படர்ந்தபிர பஞ்சமாகத்

திடமடுத் துறுபாம்பின் ஆட்டமது கண்டஞ்சு சிறுவன்யா னாகநின்றேன்

தீரத்து ரந்தந்த அச்சந்த விர்த்திடு திறத்தன்நீ ஆகல்வேண்டும்

விடமடுத் தணிகொண்ட மணிகண்ட னேவிமல விஞ்ஞான மாம்அகண்ட

வீடளித் தருள்கருணை வெற்பனே அற்புத விராட்டுருவ வேதார்த்தனே

கடமடுத் திடுகளிற் றுரிகொண்ட ணிந்தமெய்க் டவுளே சடைகொள்அரசே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே. ...5

2576

எழுவகைப் பிறவிகளுள் எப்பிறவி எய்துகினும் எய்துகபி றப்பில்இனிநான்

எய்தாமை எய்துகினும் எய்திடுக இருமையினும் இன்பம்எய் தினும்எய்துக

வழுவகைத் துன்பமே வந்திடினும் வருகமிகு வாழ்வுவந் திடினும்வருக

வறுமைவரு கினும்வருக மதிவரினும் வருகஅவ மதிவரினும் வருகஉயர்வோ

டிழிவகைத் துலகின்மற் றெதுவரினும் வருகஅல தெதுபோ கினும்போகநின்

இணையடிகள் மறவாத மனம்ஒன்று மாத்திரம் எனக்கடைதல் வேண்டும்அரசே

கழிவகைப் பவரோக நீக்கும்நல் லருள்எனும் கதிமருந் துதவுநிதியே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே. ...6

2577

பற்றுவது பந்தம்அப் பற்றறுதல் வீடிஃது பரமவே தார்த்தம்எனவே

பண்புளோர் நண்பினொடு பகருவது கேட்டும்என் பாவிமனம் விடயநடையே

எற்றுவது செய்யாமல் எழுவதொடு விழுவதும் இறங்குவதும் ஏறுவதும்வீண்

எண்ணுவதும் நண்ணுவதும் இப்புவன போகங்கள் யாவினும் சென்றுசென்றே

சுற்றுவதும் ஆகிலூர் சற்றுமறி வில்லாது சுழல்கின்ற
தென்செய்குவேன்

தூயநின் திருவருளின் அன்றிஇவ் வேழைஅச் சுழல்மனம்அ
டக்கவருமோ

கற்றுவழு வற்றவர் கருத்தமர் கருத்தனே கண்ணுதற்
கடவுள்மணியே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே.
...7

2578

எளியனேன் சிறியன்யான் செய்பிழைகள் சிறியவோ எழுகடலி
னும்பெரியவே

என்செய்கேன் என்செய்கேன் இனிஆயி னும்செயா தெந்தைநினை
ஏத்தஎன்றால்

வளியின்வான் சுழல்கின்ற பஞ்சாக நெஞ்சால் மயங்குகின்
றேன்அடியனேன்

மனம்எனது வசமாக நினதுவசம் நானாக வந்தறிவு தந்தருளுவாய்

ஒளியின்ஒளி யேநாத வெளியின் வெளியேவிடய உருவின்உரு
வேஉருவினாம்

உயிரின்உயி ரேஉயர்கொள் உணர்வின்உணர் வேஉணர்வின்
உறவினுற வேஎம்இறையே

களியின்நிறை வேஅளிகொள் கருணைநிதி யேமணிகொள்
கண்டஎண் தோள்கடவுளே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே.
...8

2579

சந்ததம்எ னக்குமகிழ் தந்தைநீ உண்டுநின் தன்னிடத் தேமவல்லி

தாயுண்டு நின்அடியர் என்னும்நல் தமர்உண்டு சாந்தம்எனும் நேயர்உண்டு

புந்திகொள்நி ராசையாம் மனைவிஉண் டறிவெனும் புதல்வன்உண் டிரவுபகலும்

போனவிட முண்டருட் பொருளுமுண் டானந்த போகபோக் கியமும்உண்டு

வந்தனைசெய் நீறெனும் கவசம்உண் டக்கமா மணியும்உண் டஞ்செழுத்தாம்

மந்திரப் படைஉண்டு சிவகதிஎ னும்பெரிய வாழ்வுண்டு தாழ்வும்உண்டோ

கந்தமிகு கொன்றையொடு கங்கைவளர் செஞ்சடைக் கடவுளே கருணைமலையே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே.
...9

2580

நான்முகனும் மாலும்அடி முடியும்அறி வரியபர நாதமிசை ஓங்குமலையே

ஞானமய மானஒரு வானநடு ஆனந்த நடனமிடு கின்றஒளியே

மான்முகம்வி டாதுழலும் எனையும்உயர் நெறிமருவ வைத்தவண்வ ளர்த்தபதியே

மறைமுடிவில் நிறைபரப் பிரமமே ஆகம மதிக்கும்முடி வுற்றசிவமே

ஊண்முகச் செயல்விடுத் துண்முகப் பார்வையின் உறுந்தவர்பெ
றுஞ்செல்வமே

ஒழியாத உவகையே அழியாத இன்பமே ஒன்றிரண்
டற்றநிலையே

கான்முகக் கடகளிற் றுரிகொண்ட கடவுளே கண்கொண்ட
நுதல்அண்ணலே

கனகஅம் பலநாத கருணையங் கணபோத கமலகுஞ் சிதபாதனே.
...10

திருச்சிற்றம்பலம்

-----------------------------------

2. போற்றித் திருப்பதிகம் (2581 - 2590)

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2581

அருள்தரல் வேண்டும் போற்றிஎன் அரசே

அடியனேன் மனத்தகத் தெழுந்த

இருள்கெடல் வேண்டும் போற்றிஎந் தாயே

ஏழையேன் நின்றனைப் பாடும்

தெருள்உறல் வேண்டும் போற்றிஎன் அறிவே

சிந்தைநைந் துலகிடை மயங்கும்

மருள்அறல் வேண்டும் போற்றிஎன் குருவே

மதிநதி வளர்சடை மணியே. . ..1

2582

மணிமிடற் றமுதே போற்றிஎன் தன்னை

வாழ்விக்க வேண்டுவல் போற்றி

அணிமதி முடியோய் போற்றிஇவ் வேழைக்

கருளமு தருளுக போற்றி

பணிஅணி புயத்தோய் போற்றிநின் சீரே

பாடுதல் வேண்டும்நான் போற்றி

தணிவில்பே ரொளியே போற்றிஎன் தன்னைத்

தாங்குக போற்றிநின் பதமே. ...2

2583

நின்பதம் பாடல் வேண்டும்நான் போற்றி

நீறுபூத் தொளிர்குளிர் நெருப்பே

நின்புகழ் கேட்டல் வேண்டும்நான் போற்றி

நெற்றியங் கண்கொளும் நிறைவே

நின்வச மாதல் வேண்டும்நான் போற்றி

நெடியமால் புகழ்தனி நிலையே

நின்பணி புரிதல் வேண்டும்நான் போற்றி

நெடுஞ்சடை முடித்தயா நிதியே. ...3

2584

நிதிதரு நிறைவே போற்றிஎன் உயிர்க்கோர்

நெறிதரு நிமலமே போற்றி

மதிமுடிக் கனியே போற்றிஎன் தன்னை

வாழ்வித்த வள்ளலே போற்றி

விதிமுதற் கிறையே போற்றிமெய்ஞ் ஞான

வியன்நெறி விளக்கமே போற்றி

பதிபசு பதியே போற்றி நின்பாதம்

பாடஎற் கருளுக போற்றி. ...4

2585

போற்றிஎன் உயிர்க்கோர் இன்பமே அன்பர்

புரிதவக் காட்சியே போற்றி

போற்றிஎன் அன்பாம் தெய்வமே சைவம்

புகல்சிவ போகமே போற்றி

போற்றிஎன் பெரிதாஞ் செல்வமே கருணைப்

பூரண வெள்ளமே போற்றி

போற்றிஎன் வாழ்வுக் கொருபெரு முதலே

போற்றிநின் சேவடிப் போதே. ...5

2586

போதஆ னந்த போகமே என்னைப்

புறம்பிட நினைத்திடேல் போற்றி

சீதவான் பிறைசேர் செஞ்சடை யாய்என்

சிறுமைதீர்த் தருளுக போற்றி

பேதம்ஒன் றில்லா அருட்கட லேஎன்

பிழைஎலாம் பொறுத்தருள் போற்றி

வேதமெய்ப் பொருளே போற்றிநின் அல்லால்

வேறெனக் கிலைஅருள் போற்றி. ...6

2587

போற்றுவார் உள்ளம் புகுந்தொளிர் ஒளியே

போற்றிநின் பூம்பதம் போற்றி

ஆற்றுவார் சடைஎன் அப்பனே போற்றி

அமலநின் அடிமலர் போற்றி

ஏற்றுவார் கொடிகொள் எந்தையே போற்றி

இறைவநின் இருங்கழல் போற்றி

சாற்றுமா றரிய பெருமையே போற்றி

தலைவநின் தாட்டுணை போற்றி. ...7

2588

துணைமுலை மடந்தை எம்பெரு மாட்டி

துணைவநின் துணையடி போற்றி

புணைஎன இடரின் கடலினின் றேற்றும்

புனிதநின் பொன்னடி போற்றி

இணையில்பே ரின்ப அமுதருள் கருணை

இறைவநின் இணையடி போற்றி

கணைஎனக் கண்ணன் தனைக்கொளும் ஒருமுக்

கண்ணநின் கழலடி போற்றி. ...8

2589

அடியனேன் பிழைகள் பொறுத்தருள் போற்றி
அயல்எனை விட்டிடேல் போற்றி
கொடியனேற் கின்பந் தந்தருள் போற்றி
குணப்பெருங் குன்றமே போற்றி
நெடியஎன் துன்பந் துடைத்தருள் போற்றி
நினைஅலால் பிறிதிலேன் போற்றி
படிமிசைப் பிறர்பால் செலுத்திடேல் எங்கள்
பரமநின் அடைக்கலம் நானே. ...9

2590

நான்செயும் பிழைகள் பலவும்நீ பொறுத்து
நலந்தரல் வேண்டுவன் போற்றி
ஏன்செய்தாய் என்பார் இல்லைமற் றெனக்குன்
இன்னருள் நோக்கஞ்செய் போற்றி
ஊன்செய்நா வால்உன் ஐந்தெழுத் தெளியேன்
ஓதநீ உவந்தருள் போற்றி
மான்செயும் நெடுங்கண் மலைமகள் இடங்கொள்
வள்ளலே போற்றிநின் அருளே. ...10

திருச்சிற்றம்பலம்

-----------------------------------------

3. அம்மை திருப்பதிகம் (2591 - 2600)

காப்பு

பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2591

உலகின்உயிர் வகைஉவகை யுறஇனிய அருளமுதம்
உதவும்ஆ னந்த சிவையே

உவமைசொல அரியஒரு பெரியசிவ நெறிதனை உணர்த்துபே
ரின்ப நிதியே

இலகுபர அபரநிலை இசையும்அவ ரவர்பருவம் இயலுற
உளங்கொள் பரையே

இருமைநெறி ஒருமையுற அருமைபெறு பெருமைதனை ந்தெனை
அளித்த அறிவே

கலகமுறு சகசமல இருளகல வெளியான< ஸ ய ஊ ஸ ந
பி நை

கடகரட விமலகய முகஅமுதும் அறுமுகக் கநஅமுதும் உதவு
கடலே

அலகில்வளம் நிறையும்ஒரு தில்லையம் பதிமேவும் அண்ணலார்
மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி
உமையே. ...1

2592

கற்பவைஎ லாங்கற்றுள் உணர்பவைஎ லாமனக் கரிசற
உணர்ந்து கேட்டுக்

காண்பவைஎ லாங்கண்டு செய்பவைஎ லாஞ்செய்து கருநெறி
அகன்ற பெரியோர்

பொற்பவைஎ லாஞ்சென்று புகல்பவைஎ லாங்கொண்டு புரிபவை
எலாம்பு ரிந்துன்

புகழவைஎ லாம்புகழ்ந் துறுமவைஎ லாம்உறும் போதவை
எலாம்அ ருளுவாய்

நிற்பவைஎ லாம்நிற்ப அசைபவைஎ லாம்அசைய நிறைபவை
எலாஞ்செய் நிலையே

நினைபவைஎ லாம்நெகிழ நெறிஅவைஎ லாம்ஓங்கும் நித்தியா
னந்த வடிவே

அற்புடைய அடியர்புகழ் தில்லையம் பதிமருவும் அண்ணலார்
மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி
உமையே. ...2

2593

இக்கணம்இ ருந்தஇம் மெய்யென்ற பொய்க்கூரை இனிவரு
கணப்போ திலே

இடியாதி ருக்குமோ இடியுமோ என்செய்கோம் என்செய்கோம்
இடியும் எனில்யாம்

தெக்கணம் நடக்கவரும் அக்கணம் பொல்லாத தீக்கணம் இருப்ப
தென்றே

சிந்தைநைந் தயராத வண்ணம்நல் அருள்தந்த திகழ் பரம
சிவசத்தியே

எக்கணமும் ஏத்தும்ஒரு முக்கணி பரம்பரை<
ெள ந

இறைவிபை ரவிஅமலை எனமறைகள் ஏத்திட இருந்த
ருள்தருந் தேவியே

அக்கணுதல் எம்பிரான் தில்லையம் பதிமருவும் அண்ணலார் மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி உமையே. ...3

2594

பொய்யாத மொழியும்மயல் செய்யாத செயலும்வீண் போகாத நாளும் விடயம்

புரியாத மனமும்உட் பிரியாத சாந்தமும் புந்திதள ராத நிலையும்

எய்யாத வாழ்வும்வே றெண்ணாத நிறைவும்நினை என்றும்மற வாத நெறியும்

இறவாத தகவும்மேற் பிறவாத கதியும்இவ் ஏழையேற் கருள்செய் கண்டாய்

கொய்யாது குவியாது குமையாது மணம்வீசு கோமளத் தெய்வ மலரே

கோவாத முத்தமே குறையாத மதியமே கோடாத மணிவி ளக்கே

ஐயான னம்கொண்ட தில்லையம் பதிமருவும் அண்ணலார் மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி உமையே. ...4

2595

பவமான எழுகடல் கடந்துமேற் கதியான பதிநிலை அணைந்து வாழப்

பகலான சகலமுடன் இரவான கேவலப் பகையுந் தடாத படிஓர்

தவமான கலனில்அருள் மீகாம னால்அலது தமியேன் நடத்த வருமோ

தானா நடக்குமோ என்செய்கேன் நின்திருச் சரணமே சரணம் அருள்வாய்

உவமான மற்றபர சிவமான சுத்தவெளி உறவான முத்தர் உறவே

உருவான அருவான ஒருவான ஞானமே உயிரான ஒளியின் உணர்வே

அவமான நீக்கிஅருள் தில்லையம் பதிமருவும் அண்ணலார் மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி உமையே. ...5

2596

சூரிட்ட நடையில்என் போரிட்ட மனதைநான் சொல்லிட்ட முடன்அ ணைத்துத்

துன்றிட்ட மோனம்எனும் நன்றிட்ட அமுதுண்டு சும்மா இருத்தி என்றால்

காரிட்டி தற்குமுன் யாரிட்ட சாபமோ கண்டிலேன் அம்மம் மலூர்

கணமேனும் நில்லாது பொல்லாது புவியில் கறங்கெ னச்சுழல் கின்றதே

தாரிட்ட நீஅருள் சீரிட்டி டாய்எனில் தாழ்பிறவி தன்னில் அதுதான்

தன்னைவீழ்த் துவதன்றி என்னையும் வீழ்த்தும்இத் தமிய னேன்என் செய்குவேன்

ஆறிட்ட சடையாளர் தில்லையம் பதிமருவும் அண்ணலார் மகிழும் மணியே

அகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி வானந்த வல்லி
உமையே. ...6

2597

மாயைஎனும் இரவில்என் மனையகத் தேவிடய வாதனைஎ
னுங்கள் வர்தாம்

வந்துமன அடிமையை எழுப்பிஅவ னைத்தமது வசமாக உளவு
கண்டு

மேயமதி எனும்ஒரு விளக்கினை அவித்தெனது மெய்ந்நிலைச்
சாளி கைஎலாம்

வேறுற உடைத்துள்ள பொருள்எலாம் கொள்ளைகொள மிகநடுக்
குற்று நினையே

நேயம்உற ஓவாது கூவுகின் றேன்சற்றும் நின்செவிக் கேற
இலையோ

நீதிஇலை யோதரும நெறியும்இலை யோஅருளின்
நிறைவும்இலை யோஎன் செய்கேன்

ஆயமறை முடிநின்ற தில்லையம் பதிமருவும் அண்ணலார்
மகிழும் மணியே

அகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி வானந்த வல்லி
உமையே. ...7

2598

வெவ்வினைக் கீடான காயம்இது மாயம்என வேத முதல்ஆ
கமம்எலாம்

மிகுபறைஅ றைந்தும்இது வெயில்மஞ்சள் நிறம்எனும் விவேகர்
சொற்கேட் டறிந்தும்

கவ்வைபெறு கடலுலகில் வைரமலை ஒத்தவர் கணத்திடை இறத்தல் பலகால்

கண்ணுறக் கண்டும்இப் புலைஉடலின் மானம்லூர் கடுஅளவும் விடுவ தறியேன்

எவ்வம்உறு சிறியனேன் ஏழைமதி என்னமதி இன்னமதி என்று ணர்கிலேன்

இந்தமதி கொண்டுநான் எந்தவகை அழியாத இன்பநிலை கண்டு மகிழ்வேன்

அவ்வியம்அ கற்றிஅருள் தில்லையம் பதிமருவும் அண்ணலார் மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி உமையே. ...8

2599

ஒளிமருவும் உனதுதிரு வருள்அணுத் துணையேனும் உற்றிடில் சிறுது ரும்பும்

உலகம் படைத்தல்முதல் முத்தொழில் இயற்றும்என உயர்மறைகள் ஓர்அ னந்தம்

தெளிவுறமு ழக்கஅது கேட்டுநின் திருவடித் தியானம் இல்லா மல்அவமே

சிறுதெய்வ நெறிசெல்லும் மானிடப் பேய்கள்பால் சேராமை எற்க ருளுவாய்

களிமருவும் இமயவரை அரையன்மகள் எனவரு கருணைதரு கலாப மயிலே

கருதும்அடி யவர்இதய கமலமலர் மிசைஅருட் கலைகி ளரவளர் அன்னமே

அளிநறைகொள் இதழிவனை தில்லையம் பதிமருவும்
அண்ணலார் மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி
உமையே. ...9

2609

நீறணிந் தொளிர்அக்க மணிதரித் துயர்சைவ நெறிநின்று னக்கு
ரியலூர்

நிமலமுறும் ஐந்தெழுத் துள்நிலையு றக்கொண்டு நின்னடிப் பூசை
செய்து

வீறணிந் தென்றும்ஒரு தன்மைபெறு சிவஞான வித்தகர்ப தம்பர
வும்லூர்

மெய்ச்செல்வ வாழ்க்கையில் விருப்பமுடை யேன்இது
விரைந்தருள வேண்டும் அமுதே

பேறணிந் தயன்மாலும் இந்திரனும் அறிவரிய பெருமையை
அணிந்த அமுதே

பிரசமலர் மகள்கலைசொல் மகள்விசய மகள்முதல் பெண்கள்சிரம்
மேவும் மணியே

ஆறணிந் திடுசடையர் தில்லையம் பதிமருவும் அண்ணலார்
மகிழும் மணியே

அகிலாண்ட மும்சரா சரமும்ஈன் றருள்பரசி வானந்த வல்லி
உமையே. ...10

திருச்சிற்றம்பலம்

-----------------------------

4. ஆனந்த நடனப் பதிகம் (2601 - 2610)

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

௨௬௯௧

பரசிவா னந்தபரி பூரண சதானந்த பாவனா தீதமுக்த

பரமகை வல்யசை தன்யநிஷ் களபூத பௌதிகா தாரயுக்த

சர்வமங் களசச்சி தானந்த சௌபாக்ய சாம்பவ விநாசரகித

சாஸ்வத புராதர நிராதர அபேதவா சாமகோ சரநிரூபா

துருவகரு ணாகர நிரந்தர துரந்தர சுகோதய பதித்வநிமல

சுத்தநித் தியபரோ க்ஷாநுபவ அபரோக்ஷ சோமசே கரசொரூபா

அரஹர சிவாயநம என்றுமறை ஓலமிட் டணுவளவும் அறிகிலாத

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...1

௨௬௯௨

ஜோதிமணி யேஅகண் டானந்த சைதன்ய சுத்தமணியே அரியநல்

துரியமணி யேதுரிய முங்கடந் தப்பால் துலங்குமணி யேஉயர்ந்த

ஜாதிமணி யேசைவ சமயமணி யேசச்சி தானந்த மானமணியே

சகஜநிலை காட்டிவினை யோட்டிஅருள் நீட்டிஉயர் சமரச
சுபாவமணியே

நீதிமணி யேநிரு விகற்பமணி யேஅன்பர் நினைவிலமர்
கடவுண்மணியே

நின்மல சுயம்பிர காசங்குலவும் அத்வைத நித்யஆ னந்தமணியே

ஆதிமணி யேஎழில் அநாதிமணி யேஎனக் கன்புதவும்
இன்பமணியே

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...2

2683

தேனமர் பசுங்கொன்றை மாலையா டக்கவின் செய்யுமதி வேணியாட

செய்யுமுப் புரிநூலு மாடநடு வரியுரி சிறந்தாட வேகரத்தில்

மானிமிர்ந் தாடஒளிர் மழுவெழுந் தாடமக வானாதி தேவராட

மாமுனிவர் உரகர்கின் னரர்விஞ்சை யருமாட மால்பிரம னாடஉண்மை

ஞானஅறி வாளர்தின மாடஉல கன்னையாம் நங்கைசிவ காமியாட

நாகமுடன் ஊகமன நாடிஒரு புறமாட நந்திமறை யோர்களாட

ஆனைமுக னாடமயி லேறிவிளை யாடுமுயர் ஆறுமுக னாடமகிழ்வாய்

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...3

2684

பொய்யான வாழ்க்கையினை மெய்யாக நம்பிவீண் போக்கிநன் னாளைமடவார்

போகமே பெரிதெனக் கொண்டறி வழிந்துநின் பொன்னடிக் கானபணியைச்

செய்யாத பாவியேன் என்னைநீ கைவிடில் செய்வதறி யேன்ஏழையேன்

சேய்செய்த பிழையெலாம் தாய்பொறுப் பதுபோல சிந்தைதனில் எண்ணிடாயோ

மெய்யான நிலைபெறக் கையா லணைத்தருள வேண்டுமறை யாகமத்தின்

மேலான சுத்தசன் மார்க்கஅனு பவசாந்த மேதையர்கள்
பரவிவாழ்த்தும்

ஐயான னங்கொண்ட தெய்வமே கங்கைஅர வம்புலியு
மாடமுடிமேல்

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...4

2695

(போதாரு நான்முகப்) புத்தேளி னாற்பெரிய பூமியிடை
வந்துநமனாற்

போகுமுயிர் கள்வினையை ஒழிமின்என் றேகுரவர் போதிக்கும்
உண்மைமொழியைக்

காதார வேபல தரங்கேட்டும் நூற்களிற் கற்றும்அறி வற்றிரண்டு

கண்கெட்ட குண்டையென வீணே யலைந்திடும் கடையனேன்
உய்வதெந்நாள்

மாதாவு மாய்ஞான வுருவுமாய் அருள்செயும் வள்ளலே
உள்ளமுதலே

மாலாதி தேவர்முனி வோர்பரவி யேதொழுது வாழ்த்திமுடி
தாழ்த்துமுன்றன்

ஆதார மானஅம் போருகத் தைக்காட்டி யாண்டருள
வேண்டும்அணிசீர்

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...5

2696

பண்ணாரு மூவர்சொற் பாவேறு கேள்வியிற் பண்படா
ஏழையின்சொற்

பாவையும் இகழ்ந்திடா தேற்றுமறை முடிவான பரமார்த்த ஞானநிலையை

கண்ணார நெல்லியங் கனியெனக் காட்டிநற் கருணைசெய் தாளாவிடில்

கடையனேன் ஈடேறும் வகைஎந்த நாள்அருட் கடவுளே கருணைசெய்வாய்

தண்ணா ரிளம்பிறை தங்குமுடி மேன்மேனி தந்தஒரு சுந்தரியையும்

தக்கவா மத்தினிடை பச்சைமயி லாம்அரிய சத்தியையும் வைத்துமகிழ்என்

அண்ணாஎன் அப்பாஎன் அறிவேஎன் அன்பேஎன் றன்பர் (எப்பொழுதும்) வாழ்த்தும்

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...6

2687

பவமான எழுவகைப் பரப்பான வேலையிற் பசுவான பாவிஇன்னும்

பற்றான குற்றமதை உற்றலை துரும்பெனப் படராது மறையனைத்தும்

உவமான முரைசெய்ய அரிதான சிவநிலையை உற்றதனை யொன்றிவாழும்

உளவான வழியீ தெனக்காட்டி அருள்செய்யில் உய்குவேன் முடிவானநல்

தவமான நெறிபற்றி ரண்டற்ற சுகவாரி< [illegible] ஷை [illegible] ந [illegible] [illegible] ஷை [illegible]

தானான சுத்தசன் மார்க்கஅனு பவசாந்த தற்பரர்க ளகநிறைந்தே

அவமான கருணைப்பிர காசநின் னருள்தனை அடியனுக் கருள்செய்குவாய்

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...7

2698

சந்ததமும் அழியாமல் ஒருபடித் தாயிலகு சாமிசிவ காமியிடமார்

சம்புவா மென்னுமறை ஆகமத் துணிவான சத்யமொழி தன்னைநம்பி

எந்தையே என்றறிஞர் யாவரும் நின்புகழை ஏத்திவினை தனைமாற்றியே

இன்பமய மாயினிது வாழ்ந்திடப் புவியினிடை ஏழையேன் ஒருவன்அந்தோ

சிந்தையா னதுகலக் கங்கொண்டு வாடலென் செப்புவாய் வேதனாதி

தேவர்முனி வர்கருடர் காந்தருவர் விஞ்சையர் சித்தர்களும் ஏவல்புரிய

அந்தணர்கள் பலகோடி முகமனா டப்பிறங் கருண்முக விலாசத்துடன்

அற்புத சிதாகாச ஞானிஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...8

2699

நீறணிந் தொளிர்அக்க மணிபூண்டு சன்மார்க்க நெறிநிற்கும் அன்பர்மனமாம்

நிலமீது வளர்தேவ தாருவே நிலையான நிறைவே (மெய் யருட்சத்தியாம்)(169)

வீறணிந் தழியாத நிதியமே ஒழியாத விண்ணே அகண்டசுத்த

வெளியே விளங்குபர ஒளியே வரைந்திடா வேதமே வேதமுடிவே

தூறணிந் தலைகின்ற பாவியேன் நின்திருத் துணைமலர்த் தாட்குரியனாய்த்

துயர்தீர்ந் திளைப்பாறும் இன்பஅம் போதியில் தோயஅருள் புரிதிகண்டாய்

ஆறணிந் திடுவேணி அண்ணலே அணிகுலவும் அம்மைசிவ காமியுடனே

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...9

2619

மணிகொண்ட நெடியஉல காய்அதில் தங்கும்ஆன் மாக்களாய் ஆன்மாக்களின்

மலமொழித் தழியாத பெருவாழ் வினைத்தரும் வள்ளலாய் மாறாமிகத்

திணிகொண்ட முப்புரா திகளெரிய நகைகொண்ட தேவாய் அகண்டஞானச்

செல்வமாய் வேலேந்து சேயாய் கஜானனச் செம்மலாய் அணையாகவெம்

பணிகொண்ட கடவுளாய்க் கடவுள ரெலாம்தொழும் பரமபதி யாய்எங்கள்தம்

பரமேட்டி யாய்ப்பரம போதமாய் நாதமாய் பரமமோ க்ஷாதிக்கமாய்

அணிகொண்ட சுத்தஅனு பூதியாய்ச் சோதியாய் ஆர்ந்துமங் களவடிவமாய்

அற்புத சிதாகாச ஞானஅம் பலமாடும் ஆனந்த நடனமணியே. ...10

திருச்சிற்றம்பலம்

--------------------

169. அடிக்குறிப்பு 163 காண்க.

----------------------------

5. எதிர்கொள் பத்து (2611 - 2620)

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் (170)

2611

ஆனந்தக் கூத்தனை அம்பலத் தானை

அற்புதத் தேனைஎம் ஆதிப்பி ரானைத்

தேனந்தக் கொன்றைஅம் செஞ்சடை யானைச்

செங்கண்வி டையனை எங்கண்ம ணியை

மோனந்தத் தார்பெறும் தானந்தத் தானை

முத்தனை முத்தியின் வித்தனை முத்தை

ஈனந்தக் காதெனை ஏன்றுகொண் டானை

இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...1

2612

அடுத்தவர்க் கெல்லாம்அ ருள்புரி வானை

அம்பலக் கூத்தனை எம்பெரு மானைத்

தடுத்தெமை ஆண்டுகொண் டன்பளித் தானைச்

சங்கரன் தன்னைஎன் தந்தையைத் தாயைக்
கடுத்ததும் பும்மணி கண்டத்தி னானைக்
கண்ணுத லானைஎம் கண்ணக லானை
எடுத்தெனைத் துன்பம்விட் டேறவைத் தானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...2

2613

மாலயன் தேடியும் காணாம லையை
வந்தனை செய்பவர் கண்டம ருந்தை
ஆலம்அ முதின்அ ருந்தல்செய் தானை
ஆதியை ஆதியோ டந்தமி லானைக்
காலன்வ ருந்திவி ழவுதைத் தானைக்
கருணைக்க டலைஎன் கண்ணனை யானை
ஏலம ணிகுழ லாள்இடத் தானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...3

2614

சுந்தரர்க் காகமுன் தூதுசென் றானைத்
தூயனை யாவரும் சொல்லரி யானைப்
பந்தம்அ றுக்கும்ப ராபரன் தன்னைப்
பத்தர்உ ளங்கொள்ப ரஞ்சுட ரானை
மந்தர வெற்பின்ம கிழ்ந்தமர்ந் தானை
வானவர் எல்லாம்வ ணங்கநின் றானை

எந்தமை ஆண்டுநல் இன்பளித் தானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...4

2615

அன்பர்கள் வேண்டும்அ வைஅளிப் பானை
அம்பலத் தேநடம் ஆடுகின் றானை
வன்பர்கள் நெஞ்சில்ம ருவல்இல் லானை
வானவர் கோனைஎம் வாழ்முத லானைத்
துன்பம் தவிர்த்துச்சு கங்கொடுப் பானைச்
சோதியைச் சோதியுள் சோதியை நாளும்
என்பணி கொண்டெனை ஏன்றுகொண் டானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...5

2616

கண்ணுத லானைஎன் கண்ணமர்ந் தானைக்
கருணாநி தியைக்க றைமிடற் றானை
ஒண்ணுத லாள்உமை வாழ்இடத் தானை
ஒருவனை ஒப்பிலா உத்தமன் தன்னை
நண்ணுதல் யார்க்கும்அ ருமையி னானை
நாதனை எல்லார்க்கும் நல்லவன் தன்னை
எண்ணுதல் செய்தெனக் கின்பளித் தானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...6

2617

வெள்விடை மேல்வரும் வீறுடை யானை
வேதமு டிவினில் வீற்றிருந் தானைக்
கள்விரை யார்மலர்க் கொன்றையி னானைக்
கற்பகந் தன்னைமுக் கண்கொள்க ரும்பை
உள்வினை நீக்கிஎன் உள்ளமர்ந் தானை
உலகுடை யானைஎன் உற்றது ணையை
எள்வினை ஒன்றும்இ லாதவன் தன்னை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...7

2618

பெண்ணமர் பாகனைப் பேரரு ளோனைப்
பெரியவர்க் கெல்லாம்பெ ரியவன் தன்னைக்
கண்ணமர் நெற்றிக் கடவுள்பி ரானைக்
கண்ணனை ஆண்டமுக் கண்ணனை எங்கள்
பண்ணமர் பாடல்ப ரிசளித் தானைப்
பார்முதல் அண்டம்ப டைத்தளிப் பானை
எண்அம ராதஎ ழிலுடை யானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...8

2619

வளங்கொளும் தில்லைப்பொன் மன்றுடை யானை
வானவர் சென்னியின் மாணிக்கம் தன்னைக்
களங்கம்இ லாதக ருத்துடை யானைக்

கற்பனை முற்றுங்க டந்துநின் றானை
உளங்கொளும் என்தன்உ யிர்த்துணை யானை
உண்மையை எல்லாம்உ டையவன் தன்னை
இளம்பிறை சூடிய செஞ்சடை யானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...9

2620

குற்றமெல் லாங்குண மாகக்கொள் வானைக்
கூத்துடை யானைப்பெண் கூறுடை யானை
மற்றவர் யார்க்கும்அ ரியவன் தன்னை
வந்திப்ப வர்க்குமி களிய யானைப்
பெற்றம தேறும்பெ ரியபி ரானைப்
பிறைமுடி யோனைப்பெம் மானைஎம் மானை
எற்றிஎன் துன்பம்எ லாம்ஒழித் தானை
இன்றைஇ ரவில்எ திர்ந்துகொள் வேனே. ...10

திருச்சிற்றம்பலம்

---

---

---

170. எண்சீர்க் கழிநெடிலடிச் சந்த விருத்தம். தொ. வே. 1. ச. மு. க. ஆ. பா.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். தொ. வே. 2.

---

6. புறமொழிக் கிரங்கல் (2621 - 2639)

கட்டளைக் கலித்துறை

2621

கேளனந் தான்ஒரு போதுண் டனைமனக் கேதம்அற

நீளனம் தேடு முடியான் எதுநினக் கீந்ததென்றே

வேளனம் போல்நடை மின்னாரும் மைந்தரும் வேடிக்கையாய்

ஏளனம் செய்குவர் நீஅரு ளாவிடில் என்அப்பனே. ...1

2622

அப்பாநின் பொன்னருள் என்மேல் தயைசெய் தளித்திலையேல்

துப்பா னவும்ஒரு போதுதுவ் வாது சுழன்றனையே

இப்பாரில் ஈசன் திருவருள் நீபெற்ற தெங்ஙனமோ

செப்பாய் எனவரிப் பார்சிரிப் பார்இச் செகத்தவரே. ...2

2623

தீதுசெய் தேற்கருள் செய்வான்நின் சித்தம் திரும்பிலையேல்

தாதுசெய் தேகத்து ணாஒரு போது தவிர்ந்தநினக்

கேதுசெய் தான்சிவன் என்றே உலகர் இழிவுரைத்தால்

யாதுசெய் வேன்தெய்வ மேஎளி யேன்உயிர்க் கின்னமுதே. ,,,3

2624

தெரியாமை யால்சிறி யேன்செய்குற் றத்தைநின் சித்தமதில்

பிரியாமை வைத்தருள் செய்திலை யேல்எனைப் பெற்றவளும்

பெரியாசை கொண்டபிள் ளாய்அரன் என்தரப் பெற்றதென்றே

பரியாசை செய்குவ ளால்அய லார்என் பகருவதே. ...4

2625

எண்ணாமல் நாயடி யேன்செய்த குற்றங்கள் யாவும்எண்ணி
அண்ணாநின் சித்தம் இரங்காய் எனில்இங் கயலவர்தாம்
பெண்ஆர் இடத்தவன் பேரருள் சற்றும் பெறாதநினக்
கொண்ணாதிவ் வண்மை விரதம்என் றால்என் உரைப்பதுவே.
...5

2626

பொய்யான வஞ்சக னேன்பிழை யாவும் பொறுத்துனருள்
செய்யாய் எனில்எது செய்குவன் யான்இச் செகதலத்தோர்
எய்யா விரதத்தில் யாதுபெற் றாய்என் றிகழ்வர்கண்டாய்
அய்யாஎன் இன்னமு தேஅர சேஎன தாண்டவனே. ...6

2627

உன்உள்ளம் கொண்டேற் கருளாய் எனில்இவ் உலகர்பொய்யாம்
என்உள்ளம் கொண்ட களவறி யாதுநின் றேடவிங்கே
நின்உள்ளம் கொள்விர தப்பயன் யாது நிகழ்த்தெனவே
முன்உள்ளம் கொண்டு மொழிவர்கண் டாய்எம் முதலவனே. ...7

2628

முந்தோகை கொண்டுநின் தண்ணருள் வாரியின் மூழ்குதற்கிங்
கந்தோஎன் துன்பம் துடைத்தரு ளாய்எனில் ஆங்குலகர்
வந்தோ சிவவிர தாஎது பெற்றனை வாய்திறஎன்

றிந்தோர் தருசடை யாய்விடை யாய்என்னை ஏசுவரே. ...8

2629

ஆசும் படியில் அகங்கா ரமும்உடை யான்என்றெண்ணிப்

பேசும் படியில் எனக்கரு ளாய்எனில் பேருலகோர்

ஏசும் படிவரும் பொய்வேடன் என்றதை எண்ணிஎண்ணிக்

கூசும் படிவரு மேஎன்செய் கேன்என் குலதெய்வமே. ...9

2630

ஐதட் டிடும்நெஞ் சகத்தேன் பிழைகளை ஆய்ந்துவெறும்

பொய்தட் டிகல்உடை யேற்குன் கருணை புரிந்திலையேல்

வெய்தட்டி உண்ட விரதாநின் நோன்பு விருத்தம்என்றே

கைதட்டி வெண்ணகை செய்வர்கண் டாய்அருட் கற்பகமே. . ..10

திருச்சிற்றம்பலம்

-----------------------------------

7. திருப்புகற் பதிகம் (2631 - 2640)

கொச்சகக் கலிப்பா(171)

2631

வேகமுறு நெஞ்ச மெலிவும் எளியேன்றன்

தேக மெலிவும் தெரிந்தும் இரங்காயேல்

மாக நதியும் மதியும் வளர்சடைஎம்

ஏக இனிமற் றெனக்கார் இரங்குவரே. ...1

2632

கள்ள மனத்துக் கடையோர்பால் நாணுறும்என்
உள்ள மெலிவும் உடல்மெலிவும் கண்டிருந்தும்
எள்ளின் அளவும் இரங்கி அருளாயேல்
எள்ளும் உலகில் எனக்கார் இரங்குவரே. ...2

2633

பொன்னை வளர்ப்பாரைப் போற்றாமல் எம்பெருமான்
உன்னைமதித் துன்னுறும்என் உள்ளம் அறிந்திருந்தும்
அன்னையினும் சால அருள்வோய் அருளாயேல்
என்னை முகம்பார்த் தெனக்கார் இரங்குவரே. ...3

2634

துன்னுடைய வியாக்கிரமத் தோலுடையான் தானிருக்கப்
பொன்னுடையார் பக்கம் புகுவானேன் என்றிருப்பேன்
தன்னுடைய துன்பம் தவிர்த்திங் கருளாயேல்
என்னுடையாய் மற்றிங் கெனக்கார் இரங்குவரே. ...4

2635

வன்கண்ணர் தம்மை மதியாதுன் பொன்னடியின்
தன்கண் அடியேன்தன் சஞ்சலவன் நெஞ்சகத்தின்
புன்கண் உழல்வைப் புகல்கின்றேன் காத்திலையேல்
என்கண் அனையாய் எனக்கார் இரங்குவரே. ...5

2636

தோன்றுவதும் மாய்வதும்ஆம் சூழ்ச்சியிடைப் பட்டலைந்து

மான்றுகொளும் தேவர் மரபை மதியாமே

சான்றுகொளும் நின்னைச் சரணடைந்தேன் நாயேனை

ஏன்றுகொளாய் என்னில் எனக்கார் இரங்குவரே. ...6

2637

தீதுமுற்றும் நாளும் செயினும் பொறுத்தருளும்

சாதுமுற்றும் சூழ்ந்த தயாநிதிநீ என்றடைந்தேன்

கோதுமுற்றும் தீரக் குறியாயேல் நன்மைஎன்ப

தேதும்அற்ற பாவிக் கெவர்தான் இரங்குவரே. ...7

2638

துன்றியமா பாதகத்தோன் சூழ்வினையை ஓர்கணத்தில்

அன்றுதவிர்த் தாண்ட அருட்கடல்நீ என்றடுத்தேன்

கன்றுறும்என் கண்கலக்கம் கண்டும் இரங்காயேல்

என்றும்உளாய் மற்றிங் கெவர்தான் இரங்குவரே. ...8

2639

கோடாமே பன்றிதரும் குட்டிகட்குத் தாயாகி

வாடா முலைகொடுத்த வள்ளல்என நான்அடுத்தேன்

வாடாஎன் றுன்அருளில் வாழ்வான் அருளிலையேல்

ஈடாரும் இல்லாய் எனக்கார் இரங்குவரே. ...9

2640

கல்லா நடையேன் கருணையிலேன் ஆனாலும்

நல்லார் புகழும் நமச்சிவா யப்பெயரே

அல்லாது பற்றொன் றறியேன் அருளாயேல்

எல்லாம் உடையாய் எனக்கார் இரங்குவரே. ...10

திருச்சிற்றம்பலம்

———————————————————————————————

———————————————————————————————

——————————————————

171. கலிவிருத்தம் தொ. வே. 1. 2. ச. மு. க.

கொச்சகக் கலிப்பா. ஆ. பா.

-----------------------------------

8. சிந்தைத் திருப்பதிகம் (2641 - 2650)

கொச்சகக் கலிப்பா

2641

விடைஆர்க்கும் கொடிஉடைய வித்தகஎன் றுன்அடியின்

இடைஆர்த்து நின்றழும்இவ் ஏழைமுகம் பாராமே

நடைஆர்க்கும் வாழ்க்கையிலே நல்குரவோர்க் கீயாத

உடையார்க்கோ என்னை உடையாய் உதவுவதே. ...1

2642

கற்றே அறியாக் கடைப்புலையேன் ஆனாலும்

உற்றேநின் தன்னைநினைந் தோதுகின்றேன் அல்லாமே

மற்றேதும் தேறேன்என் வன்துயர்தீர்ந் துள்குளிரச்

சற்றே இரங்கித் தயவுசெய்தால் ஆகாதோ. ...2

2643

கல்லா ரொடுந்திரிந்தென் கண்ணேநின் தாள்வழுத்தும்

நல்லார் தமைக்காண நாணுகின்றேன் ஆனாலும்

வல்லாய்நின் தன்னைஅன்றி மற்றொன் றறியேன்நான்

எல்லாம் அறிவாய்க் கிதனைஇயம் பல்என்னே. ...3

2644

கள்ளநெறி கொள்ளும் கடைநாயேன் என்னினும்நின்

வள்ளல் மலர்த்தாளே வழுத்துகின்றேன் என்னுடைய

உள்ள மெலிவோ டுடல்மெலிவும் கண்டும்அந்தோ

எள்ளளவும் எந்தாய் இரங்கா திருந்தனையே. ...4

2645

சீர்துணையார் தேடும் சிவனேநின் தன்னைஅன்றி

ஓர்துணையும் இல்லேன்நின் ஒண்பொற் பதம்அறிய

கார்துணையா நாடும் கலாபிஎன நாடுகின்றேன்

ஆர்துணைஎன் றையா அகல இருந்தனையே. ...5

2646

பேய்அனையா ரோடும் பிழைபுரிந்தேன் ஆனாலும்

நாய்அனையேன் நின்னுடைய நாமம் நவிற்றுகின்றேன்

தீஅனைய துன்பில் திகைக்கின்றேன் கண்டிருந்தும்

தாய்அனையாய் சற்றும் தயவு புரிந்திலையே. ...6

2647

வெள்ள மருவும் விரிசடையாய் என்னுடைய
உள்ள விரிவும் உடல்மெலிவும் கண்டிருந்தும்
தள்ளரிய நின்னருள்ஓர் சற்றும் புரியாமே
கள்ளவினைக் கென்உளத்தைக் கைகாட்டி நின்றனையே. ...7

2648

என்னுரிமைத் தாய்க்கும் இனியாய்நின் ஐந்தெழுத்தை
உன்னுநிலைக் கென்னை உரித்தாக்க வேண்டுதியேல்
மன்னுலகில் பொன்னுடையார் வாயில்தனைக் காத்தயர்ந்தேன்
தன்னுடைய எண்ணந் தனைமுடிக்க வேண்டுவதே. ...8

2649

குற்றம்எலாம் நல்ல குணமாகக் கொண்டருளும்
உற்றதுணை நீயேமற் றோர்துணையும் இல்லைஎன்றே
நற்றலைமை யாம்உனது நாமம் நவில்கின்றேன்
கற்றவனே என்றனைநீ கைவிடில்என் செய்வேனே. ...9

2650

அறியாப் பருவத் தறிவுறுத்தி ஆட்கொண்ட
நெறியானே நின்ஆணை நின்ஆணை நின்ஆணை
பொறியார்நின் நாமம் புகலுவதே அன்றிமற்றை
வெறியார்வன் நாமமொன்றும் வேண்டேன்நான் வேண்டேனே. ...10

திருச்சிற்றம்பலம்

---------------------------------

## 9. உய்கைத் திருப்பதிகம் (2651 - 2662)

கலிவிருத்தம்

2651

திருவும் சீரும்சி றப்பும்தி றலும்சற்

குருவும் கல்வியும் குற்றமில் கேள்வியும்

பொருவில் அன்னையும் போக்கறு தந்தையும்

தரும வெள்விடைச் சாமிநின் நாமமே. ...1

2652

பொய்ய னேன்பிழை யாவும்பொ றுத்தருள்

செய்ய வேண்டும்நின் செம்பொற்ப தமலால்

அய்ய னேமுக்க ணாஇவ்அ டியனேற்

குய்ய வேறுபு கல்இலை உண்மையே. ...2

2653

கள்ள நெஞ்சக னேனும்க டையனேன்

வள்ளல் நின்மலர் வார்கழற் பாதமே

உள்ளு வேன்மற்றை ஓர்தெய்வ நேயமும்

கொள்ள லேன்என்கு றிப்பறிந் தாள்கவே. ...3

2654

வஞ்ச மாதர்ம யக்கம்க னவினும்

எஞ்சு றாதிதற் கென்செய்கு வேன்என்றன்

நெஞ்சம் அம்மயல் நீங்கிட வந்தெனைத்

தஞ்சம் என்றுன் சரண்தந்து காக்கவே. ...4

2655

பற்று நெஞ்சகப் பாதக னேன்செயும்

குற்றம் யாவும்கு ணம்எனக் கொண்டருள்

உற்ற எள்துணை யேனும்உ தவுவாய்

கற்ற நற்றவர் ஏத்தும்முக் கண்ணனே. ...5

2656

மதியும் கல்வியும் வாய்மையும் வண்மையும்

பதியும் ஈந்தெம்ப சுபதி மெய்ந்நெறிக்

கதியின் வைப்பது நின்கடன் வன்கடல்

வதியும் நஞ்சம்அ ணிமணி கண்டனே. ...6

2657

நீடு வாழ்க்கை நெறிவரு துன்பினால்

வாடும் என்னைவ ருந்தல்என் றுன்பதம்

பாடும் வண்ணம்நற் பாங்கருள் வாய்மன்றுள்

ஆடும் முக்கண்அ ருட்பெரு வெள்ளமே. ...7

2658

சிந்தை நொந்திச்சி றியஅ டியனேன்

எந்தை என்றுனை எண்ணிநிற் கின்றனன்

இந்து சேகர னேஉன்றன் இன்னருள்

தந்து காப்பதுன் தன்கடன் ஆகுமே. ...8

2659

உன்னை நாடும்என் உள்ளம் பிறரிடைப்
பொன்னை நாடும்பு துமைஇ தென்கொலோ
மின்னை நாடும்நல் வேணிப்பி ரான்இங்கே
என்னை நாடிஎ னக்கருள் செய்கவே. ...9

2660

இழைபொ றுத்தமு லையவர்க் கேற்றஎன்
பிழைபொ றுப்பதுன் பேரருட் கேதகும்
மழைபொ றுக்கும்வ டிவுடை யோன்புகழ்
தழைபொ றுக்கும்ச டைமுடித் தந்தையே. ...10

2661

மூட னேன்பிழை முற்றும் பொறுத்துனைப்
பாட வேஅருட் பாங்கெனக் கீதியேல்
நாட வேறும னையிடை நண்ணிநான்
வாட வேண்டுவ தென்னைஎம் வள்ளலே. ...11

2662

மின்னொப் பாகி விளங்கும்வி ரிசடை
என்னப் பாஎனக் கின்னருள் ஈந்துநின்
பொன்னொப் பாந்துணைப் பூம்பதம் போற்றியே
உன்னப் பாங்கின்உ யர்நெறி உய்க்கவே. ...12

திருச்சிற்றம்பலம்

------------------------------

## 19. அபராத விண்ணப்பம் (2663 - 2684)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2663

உலகம் பரவும் பொருளேஎன் உறவே என்றன் உயிர்க்குயிரே

இலகம் பரத்தே பரம்பரமாய் இன்ப நடஞ்செய் எம்இறையே

கலகம் பரவும் மனத்தேனைக் கைவிட் டிடநீ கருதுதியோ

திலகம் பரவும் நுதற்பாகன் என்ப தருளின் திறத்தன்றே. ...1

2664

அன்றோர் பொருளாய் அடியேனை ஆட்கொண் டருளி அறிவளித்தாய்

இன்றோ சிறியேன் பிழைகருதி இரங்கா தகற்ற எண்ணுதியோ

குன்றோர் அனைய குறைசெயினும் கொண்டு குலம்பேசுதல்எந்தாய்

நன்றோ கருணைப் பெருங்கடலே ஆளாய் இந்த நாயினையே. ...2

2665

நாய்க்குங் கடையேன் பிழைஅனைத்தும் நாடில் தவத்தால் நல்கியநல்

தாய்க்கும் கோபம் உறும்என்னில் யாரே யென்பால் சலியாதார்

வாய்க்கும் கருணைக் கடல்உடையாய் உன்பால் அடுத்தேன் வலிந்தெளிய

பேய்க்கும் தயவு புரிகின்றோய் ஆள வேண்டும் பேதையையே. ...3

2666

பேதைப் பருவத் தெனைவலியப் பிடித்தாட் கொண்ட பெருமானே

போதைக் கழிப்பான் வீண்புரியும் புலையேன் பிழையைப் பொறுக்கிலையேல்

வாதைப் படும்என் உயிரைஉன்றன் மலர்த்தாள் முன்னர் மடிவித்தே

ஓதைக் கடல்சூழ் உலகத்தே பழிசூழ் விப்பேன் உரைத்தேனே.
...4

2667

உரைத்தார் சிலர்சின் னாள்கழிய உறுவேம் என்ன உரைத்தவரே

நரைத்தார் இறந்தார் அவர்தம்மை நான்கண் டிருந்தும் நாணாமே

விரைத்தாள் மலரைப் பெறலாம்என் றெண்ணி வீணே இளைக்கின்றேன்

திரைத்தாழ் கடலிற் பெரும்பிழையே செய்தேன் என்ன செய்வேனே.
...5

2668

செய்வேன் தீமை நலம்ஒன்றும் தெரியேன் தெரிந்து தெளிந்தோரை

வைவேன் அன்றி வாழ்த்தேன்என் வண்ணம் இந்த வண்ணம்எனில்

உய்வேன் என்ப தெவ்வாறென் உடையாய் உய்வேன் உய்வித்தால்

நைவேன் அலதிங் கென்செய்வேன் அந்தோ எண்ணி நலிவேனே.
...6

2669

எண்ணி நலிவேன் நின்பாதம் எந்நாள் அடைவோம் எனஎன்பால்

நண்ணி நலிவைத் தவிராயேல் என்செய் திடுவேன் நாயகனே

கண்ணி நலியப் படும்பறவைக் கால்போல் மனக்கால் கட்டுண்ணப்

பண்ணி நலஞ்சேர் திருக்கூட்டம் புகுத எனினும் பரிந்தருளே. ...7

2670

பரியும் மனத்தால் கருணைநடம் பரவுந் தொண்டர் பதப்பணியே

புரியும் இனத்தா ரொடுங்கூடிப் புனித னாக வேண்டும்எனத்

திரியும் அடிமைச் சிறியேனுக் கிரங்கா திருந்தால் சின்னாட்பின்

எரியுங் கொடுவாய் நரகத்துக் கென்செய் வேன்என் செய்வேனே. ...8

2671

என்செய் திடுவேன் புலைநாயேன் இயற்றும் பிழைகள் எல்லாம்நின்

பொன்செய் மலர்த்தாள் துணைஅந்தோ பொறுத்துக் கருணை புரியாதேல்

புன்செய் விளவிப் பயனிலியாய்ப் புறத்திற் கிடத்தி எனஅடியார்

வன்செய் உரையில் சிரிப்பார்மற் றதுகண் டெங்ஙன் வாழ்வேனே. ...9

2672

வாழா மனத்தின் வழிசென்று வாளா நாளைக் கழிக்கின்ற

பாழாம் உலகச் சிறுநடையில் பாவி யேனைப் பதிவித்தாய்

ஊழாம் எனில்எம் பெருமானே இன்னும் வினையால் ஒதிஅனையேன்

ஏழாம் நரகுக் காளாவேன் அல்லால் புகல்என் எளியேற்கே. ...10

2673

எளியேன் கருணைத் திருநடஞ்செய் இணைத்தாள் மலர்கண் டிதயமெலாம்

களியேன் கருங்கற் பாறைஎனக் கிடக்கின் றேன்இக் கடையேனை

அளியே பெருக ஆளுதியோ ஆள்கி லாயோ யாதொன்றும்

தெளியேன் அந்தோ அந்தோஎன் செய்வேன் விலங்கிற் சிறியேனே. ...11

2674

சிறியேன் பிழையைத் திருவுளத்தே தேர்ந்திங் கென்னைச் சீறுதியோ

எறியேம் எனக்கொண் டிரங்குதியோ இவ்வா றவ்வா றெனஒன்றும்

அறியேன் அவலக் கடல்அழுந்தி அந்தோ அழுங்கி அயர்கின்றேன்

பிறியேன் என்னைப் பிரிக்கினும்பின் துணையும் காணேன் பெருமானே. ...12

2675

காணேன் நினது திருவருளைக் கண்டார் தமது கழல்தலைமேல்

பூணேன் உலகச் சிறுநடையில் போந்து பொய்யே புகன்றந்தோ

வீணே சுழன்று மெலிகின்றேன் என்னே இன்னல் மிகச்சுமக்கும்

தூணே எனஇங் கெனைவிதித்தாய் எந்தாய் யாது சூழ்வேனே. ...13

2676

சூழ்வேன் நினது கருணைநடம் சூழும் பெரியார் தமைச்சூழ்ந்து

வாழ்வேன் எளியேன் குறிப்பிந்த வண்ணம் எனது மனக்குரங்கோ

தாழ்வேன் நினையும் தாழ்விப்பேன் அவலக் கடலில் சலியாமே

வீழ்வேன் என்றால் எம்பெருமான் இதற்கென் செய்கேன் வினையேனே. . ..14

2677

வினையே பெருக்கிக் கடைநாயேன் விடயச் செருக்கால் மிகநீண்ட

பனையே எனநின் றுலர்கின்றேன் பாவி யேனுக் கருளுதியோ

நினையே நினையாப் பிழைகருதி நெகிழ விடவே நினைதியோ

அனையே அனையாய் திருக்குறிப்பை அறியேன் ஈதென் றடியேனே. ...15

2678

அடியேன் முடுகிச் செயும்பிழைகள் அனந்தம் அவற்றை அந்தோஇக்

கொடியேன் நினக்குந்தொறும்உள்ளம் குமைந்து நடுங்கிக் குலைகின்றேன்

செடியேன் மனமோ வினையோநின் செயலோ செய்கை தெரியேன்வெண்

பொடியே திகழும் வடிவுடையாய் யாது புரிவேன் புலையேனே. ...16

2679

புலையே புரியும் மனம்போன போக்கே அல்லால் புண்ணியநல்

நிலையே அறியேன் சிறியேனுக் கருளல் அழகோ நிறைந்தகுண

மலையே மணியே மருந்தேஎன் வாழ்வே எல்லாம் வல்லோனே

கலையே கருதும் கழலுடையாய் அருளா மையும்நின்
கடன்அன்றே. ...17

2680

கடந்தாழ் கயம்போல் செருக்கிமயற் கடலில் அழுத்திக்
கடுவினையேன்

மடந்தாழ் மனத்தோ டுலைகின்றேன் கரைகண் டேறும்
வகைஅறியேன்

தொடர்ந்தார் எடுப்பார் எனையெடுக்கும் துணைநின் மலர்த்தாள்
துணைகண்டாய்

அடர்ந்தார் தமக்கும் அருள்கின்றோய் ஆணை ஆணை
அடியேனே. ...18

2681

அடியார் இன்பம் அடைகின்றார் அடியேன் ஒருவன்
அயர்கின்றேன்

படியார் பலரும் பலபேசிச் சிரியா நின்றார் பரந்திரவும்

விடியா நின்ற தென்புரிவேன் இன்னுங் கருணை
விளைத்திலையே

கொடியார் பிழையும் குணமாகக் கொண்டு மகிழும் குணக்குன்றே. .
..19

2682

குன்றா நிலைநின் றருள்அடைந்தார் அன்பர் எல்லாம் கொடியேன்நான்

நன்றாம் நெறிசென் றறியாதே மனஞ்செல் வழியே நடக்கின்றேன்

பொன்றா மணியே அவர்க்கருளி என்னை விடுத்தல் புகழன்றே

என்றால் எனக்கே நகைதோன்றும் எந்தாய் உளத்துக் கென்னாமே. ...20

2683

என்ஆ ருயிருக் குயிர்அனையாய் என்னைப் பொருளாய் எண்ணிமகிழ்ந்

தந்நாள் அடிமை கொண்டளித்தாய் யார்க்கோ வந்த விருந்தெனவே

இந்நாள் இரங்கா திருக்கின்றாய் எங்கே புகுவேன் என்புரிவேன்

நின்னால் அன்றிப் பிறர்தம்மால் வேண்டேன் ஒன்றும் நின்மலனே. ...21

2684

நின்பால் அடைந்தார் அன்பாலே அடியார் எல்லாம் நெடுவினையேன்

வன்பால் மனப்பேய் தன்பாலே வருந்திச் சுழன்று மயர்கின்றேன்

தென்பால் நோக்கி இன்பநடம் செய்யும் இறைவா சிறுவனுக்கா

முன்பால் அமுதக் கடல்அளித்த முதல்வா என்னை முன்னுதியே. ...22

திருச்சிற்றம்பலம்

---------------------

11. கலி விண்ணப்பம் (2685 - 2694)

கட்டளைக் கலித்துறை

2685

செறியாத நெஞ்சக வஞ்சக னேன்இச் சிறுதலத்தே
அறியா தறிந்தவன் போற்சில செய்திடல் ஐயநின்தாள்
குறியா தரித்தல தாணைமற் றில்லைஎங் கொற்றவனே
முறியா தருள்செய்தி யோதெரி யேன்எந்தை முன்னியதே. ...1

2686

தீதொன்று மேகண் டறிந்ததல் லால்பலன் சேரநலம்
யாதொன்றும் நான்கண் டறியேன் அறிந்தவன் என்னஇங்கே
போதொன்று போக்குகின் றேன்பிழை யாவும் பொறுத்தருள்வாய்
மாதொன்று பாகத் துணைஅன்றி நற்றுணை மற்றிலையே. ...2

2687

எல்லாம் தெரிந்த இறைவாநின் தண்ணருள் எய்துகிலாப்
பொல்லாத பாவிப் புலையேன் பிழையைப் பொறுத்தருள்வாய்
கல்லா மனக்கடை யாலே கடைவைத்துக் கண்டதுதுன்
பல்லால் அணுத்துணை யும்அறி யேன்இன்பம் ஆவதுவே. ...3

2688

மண்ணுடை யாரிடை வாளா மனஞ்செல வைத்ததலால்
எண்ணுடை யாரிடை எய்திநின் தாண்மலர் ஏத்துகிலேன்
புண்ணுடை யாரிற் புலம்புகின் றேனைப் பொறுத்தருள்முக்
கண்ணுடை யாய்கழற் காலுடை யாய்மணி கண்டத்தனே. ...4

2689

தாழாத துன்பச் சமுத்திரத் தேஇத் தனிஅடியேன்

வீழாத வண்ணம் கருணைசெய் வாய்என்னை வேண்டிஅந்நாள்

ஊழாம் வினைதவிர்த் தாண்டனை யேஎன் உடையவனே

வாழா வகைஎனை இந்நாள் விடுத்தல் வழக்கலவே. ...5

2690

ஊன்செய்த வெம்புலைக் கூட்டின் பொருட்டிங் குனைமறந்து

நான்செய்த தீமையை நானே நினைக்க நடுங்குகின்றேன்

ஏன்செய் தனைஎனக் கேளாது மேலும் இரங்குகின்றாய்

வான்செய்த நாதநின் தண்ணருள் வண்ணம்என் வாழ்த்துவனே.
...6

2691

ஆயாது நான்செயும் குற்றங் களைக்கண் டறியில்பெற்ற

தாயாயி னும்பொறுப் பாளல ஆங்கவை சற்றலவே

ஓயாது செய்யுந் தொறும்பொறுத் தாளும் உனைஎளியேன்

வாயால் உரைக்கவும் மாட்டேன்அந் தோஎன்ன வன்மைஇதே.
...7

2692

ஒன்றுந் தெரிந்திட மாட்டாப் பருவத் துணர்வுதந்தாய்

இன்றுந் தருதற் கிறைவா நின்உள்ளம் இயைதிகொலோ

கன்றுங் கருத்தொடு மாழ்குகின் றேன்உன் கழல்அடிக்கே

துன்றுங் கருத்தறி யேன்சிறி யேன்என் துணிவதுவே. ...8

2693

ஆவா எனஎனை ஆட்கொள வேண்டும் அடிமைகொண்ட
தேவாஎன் குற்றம் திருவுளத் தெண்ணில்என் செய்திடுவேன்
வாவா எனஅழைப் பார்பிறர் இல்லை மறந்தும்என்றன்
நாவால் உரைக்கவும் மாட்டேன் சிறுதெய்வ நாமங்களே. ...9

2694

பள்ளத்தி லேசெலும் நீர்போல்என் உள்ளம் பரப்பதலால்
எள்ளத்தி லேசிறி தாயினும் நான்செல்வ தில்லைஎந்தாய்
கள்ளத்தி லேசொல்லு கின்றேன் அலநின் கழலிணைஎன்
உள்ளத்தி லேநின்ற ஆங்கவை காண்க உடையவனே. ...10

திருச்சிற்றம்பலம்

------------------------

## 12. அடிமைப் பதிகம் (2695 - 2704)

எண்சீர்க்(172) கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2695

ஆள்வினையால் பயன்உறுவார் அசதி யாட
அந்தோ இப் புலைநாயேன் அன்பால் நின்பால்
வேள்விசெயும் பெருந்தவர்க்கே வேள்வி செய்ய
வேண்டும்இதற் கெம்பெருமான் கருணை செய்யும்
நாள்விளைவில் சின்னாளே இதுதான் உண்மை

நம்பும்என நவின்றுனையே நம்பி நின்றேன்
கேள்வியிலாத் துரைத்தனமோ அலது நாயேன்
கிளக்குமுறை கிளக்கிலனோ கேட்டி லாயே. ...1

2696

கேட்டிலாய் அடியேன்செய் முறையை அந்தோ
கேடிலாக் குணத்தவர்பால் கிட்டு கின்றோய்
ஏட்டில்ஆ யிரங்கோடி எனினும் சற்றும்
எழுதமுடி யாக்குறைகொண் டிளைக்கின் றேன்நான்
சேட்டியா விடினும்எனைச் சேட்டித் தீர்க்கும்
சிறுமனத்தால் செய்பிழையைத் தேர்தி யாயில்
நாட்டில்ஆர் காக்கவல்லார் என்னை எந்தாய்
நாள்கழியா வண்ணம்இனி நல்கல்வேண்டும். ...2

2697

வேண்டாமை வேண்டுகின்றோர் நிற்க மற்றை
வேண்டுவார் வேண்டுவன விரும்பி நல்கும்
தூண்டாத மணிவிளக்கே பொதுவி லாடும்
சுடர்க்கொழுந்தே என்னுயிர்க்குத் துணையே என்னை
ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டு கொண்ட
அருட்கடலே என்உள்ளத் தமர்ந்த தேவே
ஈண்டாவ எனச்சிறிய அடியேன் உள்ளத்
தெண்ணம்அறிந் தருளாயேல் என்செய் கேனே. ...3

2698

என்னைஅறியாப்பருவத் தாண்டுகொண்ட

என்குருவே எனக்குரிய இன்ப மேஎன்

தன்னைஇன்று விடத்துணிந்தாய் போலும் அந்தோ

தகுமோநின் பெருங்கருணைத் தகவுக் கெந்தாய்

உன்னைஅலா தொருவர்தம்பால் செல்லேன் என்னை

உடையானே என்னுள்ளத் துள்ளே நின்று

முன்னைவினைப் பயன்ஊட்ட நினைப்பிக் கின்றாய்

முடிப்பிக்கத் துணிந்திலையேல் மொழிவ தென்னே. ...4

2699

என்நாணை அறிந்தும்என்னை அந்தோ அந்தோ

இவ்வகைசெய் திடத்துணிந்தாய் என்னே எந்தாய்

நின்ஆணை நின்னையலா தொன்றும் வேண்டேன்

நீஇதனை அறிந்திலையோ நினைப்பிக் கின்ற

மன்னாஎன் ஆருயிர்க்கு வாழ்வே என்கண்

மணியேஎன் குருவேஎன் மருந்தே இன்னும்

உன்னால்இங் குயிர்தரித்து வாழ்கின் றேன்என்

உள்ளம்அறிந் துதவுதியோ உணர்கி லேனே. ...5

2700

உள்ளமறிந் துதவுவன்நம் உடையான் எல்லாம்

உடையான்மற் றொருகுறைஇங் குண்டோ என்னக்

கள்ளமனத் தேன்அந்தோ களித்தி ருந்தேன்

கைவிடுவார் போல்இருந்தாய் கருணைக் குன்றே

எள்ளலுறப் படுவேன்இங் கேது செய்வேன்

எங்கெழுகேன் யார்க்குரைப்பேன் இன்னும் உன்றன்

வள்ளலருள் திறநோக்கி நிற்கின் றேன்என்

மனத்துயர்போம் வகைஅருள மதித்தி டாயே. ...6

2781

வகைஅறியேன் சிறியேன்சன் மார்க்க மேவும்

மாண்புடைய பெருந்தவத்தோர் மகிழ வாழும்

தகைஅறியேன் நலம்ஒன்றும் அறியேன் பொய்ம்மை

தான்அறிவேன் நல்லோரைச் சலஞ்செய் கின்ற

மிகைஅறிவேன் தீங்கென்ப எல்லாம் இங்கே

மிகஅறிவேன் எனினும்எனை விடுதி யாயில்

பகைஅறிவேன் நின்மீதில் பழிவைத் திந்தப்

பாவிஉயிர் விடத்துணிவேன் பகர்ந்திட் டேனே. ...7

2782

இட்டவகை வாழ்கின்றேன் எந்தாய் நானே

எண்ணுகிலேன் எண்ணுவித்தால் என்செய் வேன்நின்

மட்டலர்சே வடிஆணை நினைத்த வண்ணம்

வாழ்விக்க வேண்டும்இந்த வண்ணம் அல்லால்

துட்டன்எனை விடத்துணிதி யாயில் அந்தோ

சூறையுறு துரும்பெனவும் சுழன்று வானில்

விட்டசிலை எனப்பவத்தில் விழுவேன் அன்றி

வேறெதுசெய் வேன்இந்த விழலனேனே. ...8

2783

விழற்கிறைத்து மெலிகின்ற வீண னேன்இவ்

வியன்உலகில் விளைத்திட்ட மிகைகள் எல்லாம்

அழற்கிறைத்த பஞ்செனவே ஆக்கி நீயே

ஆட்கொண்டால் தடுப்பவரிங் காரே ஐயா

கழற்கடிமை எனஉலகம் அறிய ஒன்றும்

கருதறியாச் சிறுபருவத்தென்னை ஆண்டு

நிழற்கருணை அளித்தாயே இந்நாள் நீகை

நெகிழவிட்டால் என்செய்வேன் நிலையி லேனே. ...9

2784

நிலைஅறியேன் நிலைஅறிந்து பெற்ற நல்லோர்

நெறிஅறியேன் எனினும்உன்றன் நேச மன்றி

இலைஅறியேன் மற்றவரைக் கனவி லேனும்

எட்டுணைஓர் துணைஎனவும் எண்ணு றேன்நல்

கலைஅறியேன் கருத்திலிருந் தறிவித் தாய்நான்

கண்டறிந்தேன் எனினும்அவை காட்ட வேண்டும்

அலைஅறியா அருட்கடலே அமுதே தேனே

அம்பலத்தென் குருவேநான் அடிமை ஆளே. ...10

திருச்சிற்றம்பலம்

——————————————————————————————————————————————————————

172. எழுசீர். தொ. வே. 1, 2. எண்சீர். ச. மு. க. ஆ. பா.

-------------------------

13. சரணப் பதிகம் (2705 - 2715)

கலிநிலைத்துறை

2705

மதிவார் சடைமா மணியே அருள்வள் ளலேநன்

நிதியே திருஅம் பலத்தா டல்செய்நித் தனேநின்

துதியேன் எனினும் உனைஅன் றித்துணையி லேன்என்

பதியே எனதெண் ணம்ப லிக்கும்படிக் கருளே. ...1

2706

படிமேல் அடியேன் உனைஅன் றிலூர்பற்றி லேன்என்

முடிமேல் அடிவைத் தருள்செய் திடமுன்னு கண்டாய்

கொடிமேல் விடைநாட் டியஎண்கு ணக்குன் றமே

பொடிமேல் விளங்குந் திருமே னிஎம்புண் ணியனே. ...2

2707

புண்ணாம் மனம்சஞ் சலித்துள் ளம்புலர்ந்து நின்றேன்

அண்ணா எனைஆட் கொளவேண் டும்அகற்று வாயேல்

கண்ணார் களைகண் பிறிதொன் றிலைகள்ள னேனை
எண்ணா வினைஎன் செயுமோ இதற்கென்செய் வேனே. ...3

2708

செய்வேன் அவம்அன் றித்தவம் ஒன்றும்செய் தறியேன்
நைவேன் பிழையா வும்பொறுத் தருள்நல்கு வாயேல்
உய்வேன் அலதுய் வகைஇன் றுமன்றோங்கு கின்றாய்
வைவேன் துதிப்பேன் உனைஎன் றும்மறந்தி லேனே. ...4

2709

மறவா துனைவாழ்த் துமெய்அன் பரைமாநி லத்தே
இறவா வகைஆட் கொண்டரு ளியஈச னேமெய்
உறவா கியநின் பதம்அன் றிஒன் றோர்கி லேன்நான்
பிறவா நெறிதந் தருள்என் பதென் பேசி டாயே. ...5

2710

என்னே இனும்நின் அருள்எய் திலன்ஏழை யேனை
முன்னே வலிந்தாட் கொண்டதின் றுமுனிந்த தேயோ
பொன்னேர் அணிஅம் பலத்தா டியபுண்ணி யாஎன்
அன்னே அரசே அமுதே அருள்ஆண்ட வனே. ...6

2711

ஆண்டாய் எனைஏழ் பிறப்பும் உனைஅன்றி ஒன்றும்
தீண்டா தெனதுள் ளம்என்றால் என்சிறுமை தீர்க்க
வேண்டா தயலார் எனக்காண் பதென்மெய்ய னேபொன்

ஆண்டான் திருஎய் தநஞ்சைக் களம்நாட்டி னோயே. ...7

2712

நாட்டார் நகைசெய் வர்என்றோ அருள்நல்கி லாய்நீ

வீட்டார் நினைஎன் னினைப்பார் எனைமேவி லாயேல்

தாட்டா மரைஅன் றித்துணை ஒன்றும்சார்ந் திலேன்என்

மாட்டா மைஅறிந் தருள்வாய் மணிமன்று ளானே. ...8

2713

மன்றா டியமா மணியே தனிவான வாழ்

மின்றாழ் சடைவே தியனே நினைவேண்டு கின்றேன்

பொன்றா தமெய்அன் பருக்கன் புளம்பூண்டு நின்று

நன்றாய் இரவும் பகலும் உனைநாடு மாறே. ...9

2714

மாறா மனமா யையினால் மதிமாழ்கி மாழ்கி

ஏறா மல்இறங் குகின்றேன் இதற்கென் செய்வேன்

தேறா வுளத்தேன் றனைஏ றிடச்செய்தி கண்டாய்

பேறா மணிஅம் பலமே வியபெற்றி யானே. ...10

2715

ஆனே றிவந்தன் பரைஆட் கொளும்ஐய னேஎம்

மானே மணிமன் றில்நடம் புரிவள்ள லேசெந்

தேனே அமுதே முதலா கியதெய்வ மேநீ

தானே எனைஆண் டருள்வாய் நின்சரண் சரணே. ...11

திருச்சிற்றம்பலம்

-----------------------

## 14. பொதுத் தனித் திருவெண்பா (2716 - 2728)

நேரிசை வெண்பா

2716

வந்திக்கும் மெய்யடியார் மாலற்ற ஓர்மனத்தில்

சந்திக்கும் எங்கள் சயம்புவே - பந்திக்கும்

வன்மலக்கட் டெல்லாம் வலிகெட் டறநினது

நின்மலக்கண் தண்ணருள்தான் நேர். ...1

2717

சங்கரா முக்கட் சயம்புவே தாழ்சடைமேல்

பொங்கராத் திங்கள் பொலிந்தோனே - வெங்கரா

வாய்நின்று பிள்ளை வரப்பாடும் வன்தொண்டர்க்

காய்நின்று சந்துரைத்த தார். ...2

2718

நீலக் களங்கொண்ட நீடொளியே நீள்கங்கை

கோலச் சடைக்கணிந்த கோமளமே - ஞாலத்தில்

அந்தோ சிறியேன் அருளின்றி வாடுவது

சந்தோட மோநின் றனக்கு. ...3

2719

நான்சிறியேன் என்னினும்இந் நானிலத்தில் நான்செய்பிழை

தான்சிறிதோ அன்றுலகில் தான்பெரிதே - மான்கரத்தோய்
அங்ஙனமே னும்உன் அருட்பெருமைக் கிப்பெருமை
எங்ஙனம்என் றுள்ளம் எழும். ...4

2720

ஆவித் துணையேஎன் ஆரமுதே நின்வடிவைப்
பாவித்துள் நையேன்இப் பாவியேன் - சேவித்து
வாழ்த்தேன்நின் பொன்னடியில் வந்தென் தலைகுனித்துத்
தாழ்த்தேன்என் செய்தேன் தவம். ...5

2721

உன்னைநினைந் திங்கே உலாவுகின்றேன் அன்றிஎந்தாய்
பின்னை நினைப்பொன்றும் பெற்றிலேன் - என்னை
விடாதேநின் பொன்னடியை மேவார்சேர் துன்பம்
கொடாதே எனைஏன்று கொள். ...6

2722

என்னரசே நின்னடிக்கீழ் என்னிடரை நீக்கெனநான்
சொன்னதலால் தாயுடனும் சொன்னேனோ - இன்னுமிந்தத்
துன்பச் சுமையைச் சுமக்கமுடி யாதென்னால்
அன்பர்க் கருள்வோய் அருள். ...7

2723

அன்னேஎன் அப்பாஎன் ஆருயிர்க்கோர் ஆதரவே
என்னேநின் உள்ளம் இரங்கிலையே - பொன்னே

உடையா ரிடைஎன் உளநொந்து வாழுக்
கடையேன் படுந்துயரைக் கண்டு. ...8

2724

பகுதி தகுதி விகுதிஎனும் பாட்டில்
இகலில் இடையை இரட்டித் - தகவின்
அருச்சித்தால் முன்னாம் அதுகடையாம் கண்டீர்
திருச்சிற் சபையானைத் தேர்ந்து. (173) ...9

2725

தாதாதா தாதாதா தாக்குறைக்கென் செய்குதும்யாம்
தாதாதா என்றுலகில் தான்அலைந்தோம் - போதாதா
நந்தா மணியே நமச்சிவா யப்பொருளே
எந்தாய் எனப்புகழ வே. (174) ...10

2726

பொய்கண்டாய் காமப் புதுமயக்கிற் போய்உழலக்
கைகண்டாய் என்னபலன் கண்டாயே - மெய்கண்ட
பொன்னே அனையார்பால் போய்வணங்கக் கற்றிலையோ
என்னேநின் தன்மைமன மே. ...11

2727

இவ்வழியில் செல்லாதே என்னுடையான் தன்னடிசேர்
அவ்வழியில் செல்என் றடிக்கடிக்குச் - செவ்வழியில்
சொன்னாலும் கேட்கிலைநீ துட்டமன மேஉனக்கிங்

கென்னால் உறவே தினி. ...12

2728

கால்வாங் கியஊட் கதவம் கொளும்அகத்தின்

பால்வாங் கியகால் பரம்பரனே - மால்வாங்

கரிதாரம் ஊணாதி யாம்மயல்கொண் டேழைப்

பெரிதார ஓர்மொழியைப் பேசு. ...13

திருச்சிற்றம்பலம்

———————————————————————————————————————————————————————————————————————————————————————

173. இதன் பொருள்: பகுதி, தகுதி, விகுதி என்னும் மூன்று சொற்களின் இடையெழுத்தை இரட்டித்து அருச்சித்தால் அவற்றின் கடையெழுத்துகள் சேர்ந்த முன்னெழுத்துகள் கிடைக்கும். மூன்று சொற்களிலும் இடையெழுத்து கு. 3கு x 2 = 6கு, அறுகு (அறுகம்புல்). முதலெழுத்துகள் சேரின்: ப, த, வி - பதவி. கடையெழுத்துகள் சேரின்: தி, தி, தி - மூன்று தி, முக்தி. சிற்சபையானை அறுகால் அருச்சித்தால் முத்திப் பதவி பெறலாம்.

174. 'தா தா தா தா தா தா தாக்குறை' என்பதில் தா என்னும் எழுத்து எழுமுறை அடுக்கி வந்தது. அதனை எழுதாக்குறை என்று படிக்க. ஏழு தா எழுதா. எழுதாக்குறைக்கு என் செய்குதும் - எமது தலையில் எழுதாத குறைக்கு என்ன செய்வோம். இரண்டாவது அடியில் 'தா தா தா' என மும்முறை அடுக்கி வந்ததை தாதா, தா எனப் பிரித்துப் பொருள் கொள்க. தாதா - வள்ளலே, தா - கொடு.

568 ஆம் பாடல் காண்க. முதல் அடியில் எழுதாக்குறை. இரண்டாவது அடியில் 'ததிதி' - ஒலிக்குறிப்பு. மூன்றாம் அடியில் 'திதிதி' - முத்தி. இங்கிதமாலையிலும் இவ்வாறு ஒருபாடல் உண்டு. பாடல் 1930.

குகுகுகுகுகு அணிவேணி - அறுகு அணிந்த சடை . குகுகுகுகுகுகுகு: குகு - அமாவாசை, குகு நான்குமுறை அடுக்கி வந்தது. நாலு குகு என்று கொண்டு தொடங்கும் இருண்ட கூந்தல் எனப் பொருள் கொள்ளவேண்டும். விரிக்கிற் பெருகும்.

-------------------

## 15. தனித் திருவிருத்தம் (2729 - 2785)

### கட்டளைக் கலித்துறை

2729

நீர்பூத்த வேணியும் ஆனந்தம் பூத்து நிறைமதியின்

சீர்பூத் தமுத இளநகை பூத்த திருமுகமும்

பார்பூத்த பச்சைப் பசுங்கொடி பூத்தசெம் பாகமும்ஓர்

கார்பூத்த கண்டமும் கண்பூத்த காலும்என் கண்விருந்தே. ...1

2730

வீழாக ஞான்றசெவ் வேணிப் பிரான்என் வினைஇரண்டும்

கீழாக நான்அதன் மேலாக நெஞ்சக் கிலேசமெல்லாம்

பாழாக இன்பம் பயிராக வாய்க்கில்அப் பாற்பிறவி

ஏழாக அன்றிமற் றெட்டாக இங்கென்னை என்செயுமே. ...2

2731

ஆயிரங் கார்முகில் நீர்விழி நீர்தர ஐயநின்பால்

சேயிரங் கார்எனக் கென்றேநின் பொற்பதம் சிந்திக்கின்றேன்

நீஇரங் காய்எனில் என்செய்கு வேன்இந் நிலத்திற்பெற்ற

தாய்இரங் காள்என்ப துண்டோ தன் பிள்ளை தளர்ச்சிகண்டே.
...3

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2732

செம்பவளத் தனிக்குன்றே அருளா னந்தச்

செழுங்கனியே முக்கணுடைத் தேவே மூவா

அம்புவிநீர் அனல்வளிவான் ஆதி யாய

அரசேஎன் ஆருயிர்க்கோர் அரண மாகும்

சம்புசிவ சயம்புவே சங்க ராவெண்

சைலம்வளர் தெய்வதவான் தருவே மிக்க

வம்பவிழ்மென் குழல்ஒருபால் விளங்க ஓங்கும்

மழவிடைமேல் வருங்காட்சி வழங்கு வாயே. ...4

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2733

நீடுகின்ற மாமறையும் நெடுமாலும் திசைமுகனும் நிமல வாழ்க்கை

நாடுகின்ற முனிவரரும் உருத்திரரும் தேடஅருள் நாட்டங்
கொண்டு

பாடுகின்ற மெய்யடியர் உளம்விரும்பி ஆநந்தப் படிவ மாகி

ஆடுகின்ற மாமணியை ஆரமுதை நினைந்துநினைந் தன்பு
செய்வாம். ...5

வேறு

2734

மறைமுடி விளக்கே போற்றி மாணிக்க மலையே போற்றி

கறைமணி கண்ட போற்றி கண்ணுதற் கரும்பே போற்றி

பிறைமுடிச் சடைகொண் டோங்கும் பேரருட் குன்றே போற்றி

சிறைதவிர்த் தெனையாட் கொண்ட சிவசிவ போற்றி போற்றி. ...6

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2735

செய்வகை அறியேன் மன்றுண்மா மணிநின்

திருவுளக் குறிப்பையுந் தெரியேன்

உய்வகை அறியேன் உணர்விலேன் அந்தோ

உறுகண்மேல் உறுங்கொல்என் றுலைந்தேன்

மெய்வகை அடையேன் வேறெவர்க் குரைப்பேன்

வினையனேன் என்செய விரைகேன்

பொய்வகை உடையேன் எங்ஙனம் புகுகேன்

புலையனேன் புகல்அறி யேனே. . ..7

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2736

நிதியைநினைந் துனைமறந்த மதியைநினைந் தழுகேனோ நிமலா

னந்தக்

கதியைஇகழ்ந் திருள்விழைந்த விதியைநினைந் தழுகேனோ கண்போல் வாய்ந்த

பதியைஉனைப் பாடாத பாட்டைநினைந் தழுகேனோ படிற்று நெஞ்சச்

சதியைநினைந் தழுகேனோ யாதுகுறித் தழுகேன்இத் தமிய னேனே. ...8

வேறு

2737

தாய்தடை என்றேன் பின்னர்த் தாரமே தடைஎன் றேன்நான்

சேய்தடை என்றேன் இந்தச் சிறுதடை எல்லாந் தீர்ந்தும்

தோய்தடைச் சிறியேன் இன்னுந் துறந்திலேன் எனைத் தடுக்க

ஏய்தடை யாதோ எந்தாய் என்செய்கேன் என்செய் கேனே. ...9

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2738

எண்கடந்த உயிர்கள்தொறும் ஒளியாய் மேவி

இருந்தருளும் பெருவாழ்வே இறையே நின்றன்

விண்கடந்த பெரும்பதத்தை விரும்பேன் தூய்மை

விரும்புகிலேன் நின்அருளை விழைந்தி லேன்நான்

பெண்கடந்த மயல்எனும்ஓர் முருட்டுப் பேயாற்

பிடிஉண்டேன் அடிஉண்ட பிஞ்சு போன்றேன்

கண்கடந்த குருட்டூமர் கதைபோல் நின்சீர்

கண்டுரைப்பல் என்கேனோ கடைய னேனே. ...10

வேறு

2739

மின்னைப் போல்இடை மெல்இய லார்என்றே

விடத்தைப் போல்வரும் வெம்மனப் பேய்களைப்

பொன்னைப் போல்மிகப் போற்றி இடைநடுப்

புழையி லேவிரல் போதப்பு குத்திஈத்

தன்னைப் போல்முடை நாற்றச்ச லத்தையே

சந்த னச்சலந் தான்எனக் கொள்கின்றேன்

என்னைப் போல்வது நாய்க்குலம் தன்னிலும்

இல்லை அல்ல தெவற்றினும் இல்லையே. ...11

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2740

கள்உருகும் மலர்மணம்போல் கலந்தெங்கும் நிறைந்தோய்நின் கருணைக் கந்தோ

முள்உருகும் வலியபராய் முருடுருகும் உருகாத முறைசேர் கல்லும்

வள்உருகும் மலைஉருகும் மண்உருகும் மரம்உருகும் மதியி லேன்றன்

உள்உருகும் வகையிலைஎன் செய்கேன்நான் ஏன்பிறந்தேன் ஒதிய னேனே. ...12

2741

மன்உயிர்க்குத் தாய்தந்தை குருதெய்வம் உறவுமுதல் மற்றும் நீயே

பின்உயிர்க்கோர் துணைவேறு பிறிதிலைஎன் றியான்அறிந்த பின்பொய்யான

மின்உடற்குத் தாய்தந்தை யாதியரை மதித்தேனோ விரும்பி னேனோ

என்உயிர்க்குத் துணைவாநின் ஆணைஒன்றும் அறியேன்நான் இரங்கி டாயே. ...13

2742

மாற்றரிய பசும்பொன்னே மணியேஎன் கண்ணேகண் மணியே யார்க்குந்

தோற்றரிய சுயஞ்சுடரே ஆனந்தச் செழுந்தேனே சோதி யேநீ

போற்றரிய சிறியேனைப் புறம்விடினும் வேற்றவர்பாற் போகேன் வேதம்

தேற்றரிய திருவடிக்கண் பழிவிளைப்பேன் நின்ஆணைச் சிறிய னேனே. ...14

2743

உள்உணர்வோர் உளத்துநிறைந் தூற்றெழுந்த தெள்ளமுதே உடையாய் வஞ்ச

நள்உணர்வேன் சிறிதேனும் நலமறியேன் வெறித்துழலும் நாயிற் பொல்லேன்

வெள்உணர்வேன் எனினும்என்னை விடுதியோ விடுதியேல் வேறென் செய்கேன்

தள்உணர்வோன் எனினும்மகன் தனைஈன்றோர் புறம்பாகத் தள்ளார் அன்றே. ...15

2744

கலைபயின்று நெறிஒழுகும் கருத்துடையேன் அலன்நின்னைக் கனவி லேனும்

மலைபயின்ற பெருங்குணத்தெம் வள்ளலே எனத்துதியேன் வஞ்ச மில்லா

நிலைபயின்ற நல்லோர்தம் நேசமிலேன் கைதவமே நினைப்பேன் அந்தோ

உலைபயின்ற அரக்கெனநெஞ் சுருகேன்நான் ஏன்பிறந்தேன் ஒதிய னேனே. ...16

2745

இரும்புன்னை மலர்ச்சடையாய் இவ்வுலகில் சிலர்தங்கட் கென்று வாய்த்த

அரும்பின்னை மார்பகத்தோன் அயனாதி சிறுதெய்வ மரபென் றோதும்

கரும்பொன்னைச் செம்பொன்னில் கைவிடா திருக்கின்றார் கடைய னேற்கே

தரும்பொன்னை மாற்றழிக்கும் அரும்பொன்நீ கிடைத்தும்உனைத் தழுவி லேனே. ...17

2746

கஞ்சமலர்த் தவிசிருந்த நான்முகனும் நெடுமாலும் கருதிப் போற்ற

அஞ்சநடை அம்மைகண்டு களிக்கப்பொன் அம்பலத்தில் ஆடு கின்ற

எஞ்சல்இலாப் பரம்பொருளே என்குருவே ஏழையினே னிடத்து நீயும்

வஞ்சம்நினைத் தனையாயில் என்செய்வேன் என்செய்வேன் மதியிலேனே. ...18

கட்டளைக் கலித்துறை

2747

வேம்புக்கும் தண்ணிய நீர்விடு கின்றனர் வெவ்விடஞ்சேர்

பாம்புக்கும் பாலுண வீகின் றனர்இப் படிமிசையான்

வீம்புக்கும் தீம்புக்கும் ஆனேன் எனினும் விடேல்எனைநீ

தேம்புக்கும் வார்சடைத் தேவே கருணைச் சிவக்கொழுந்தே. ...19

2748

அடமுடி யாதுபல் ஆற்றாலும் ஏழைக் கடுத்ததுன்பம்

படமுடி யாதென்னை செய்கேன்என் தன்முகம் பார்த்திரங்காய்

திடமுடி யால்அயன் மால்வணங் குந்துணைச் சேவடியாய்

தடமுடி யாய்செஞ் சடைமுடி யாய்நந் தயாநிதியே. ...20

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2749

பொல்லா வாழ்க்கைத் துயரம்எனும் புணரிப் பெருக்கில் வீழ்ந்தழுந்திப்

பல்லார் நகைக்கப் பாவிபடும் பாட்டை முழுதும் பார்த்திருந்தும்

கல்லால் அமர்ந்தீர் என்னிரண்டு கண்கள் அனையீர் கறைமிடற்றீர்

எல்லாம் உடையீர் மால்விடையீர் என்னே இரங்கி அருளீரே. . ..21

2750

பொன்னை உடையார் மிகுங்கல்விப் பொருளை உடையார் இவர்முன்னே

இன்னல் எனும்ஓர் கடல்வீழ்ந்திவ் வேழை படும்பா டறிந்திருந்தும்

மின்னை நிகரும் சடைமுடியீர் விடங்கொள் மிடற்றீர் வினைதவிர்ப்பீர்

என்னை உடையீர் வெள்விடையீர் என்னே இரங்கி அருளீரே. ...22

கலித்துறை

2751

ஆயும் வஞ்சக நெஞ்சன்இவ் அடியனேன் ஐயா

நீயும் வஞ்சக நெஞ்சன்என் றால்இந்த நிலத்தே

ஏயும் இங்கிதற் கென்செய்வேன் என்செய்வேன் எவைக்கும்

தாயும் தந்தையும் ஆகிஉள் நிற்கின்றோய் சாற்றாய். ...23

2752

நானும் பொய்யன்நின் அடியனேன் தண்ணருள் நிதிநீ

தானும் பொய்யன்என் றால்இதற் கென்செய்வேன் தலைவா

தேனும் பாலுந்தீங் கட்டியும் ஆகிநிற் றெளிந்தோர்

ஊனும் உள்ளமும் உயிரும்அண் ணிக்கின்ற உரவோய். ...24

நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா

2753

நேசனும்நீ சுற்றமும்நீ நேர்நின் றளித்துவரும்

ஈசனும்நீ ஈன்றாளும் எந்தையும்நீ என்றேநின்

தேசுறுசீர் ஐந்தெழுத்தும் செப்புகின்ற நாயேனை

ஆசகலும் வண்ணம் அருள்புரிந்தால் ஆகாதோ. ...25

கட்டளைக் கலித்துறை

2754

ஆற்றால் விளங்கும் சடையோய்இவ் வேழை அடியனும்பல்

ஆற்றால் வருந்தும் வருத்தம்எல் லாம்முற் றறிந்தும்இன்னம்

ஆற்றா திருத்தல்நின் பேரருள் ஆற்றுக் கழகுகொலோ

ஆற்றாமை மேற்கொண் டழுதால் எவர்எனை ஆற்றுவரே. ...26

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2755

அருளார் அமுதே அரசேநின் அடியேன் கொடியேன் முறையேயோ

இருள்சேர் மனனோ டிடர்உழந்தேன் எந்தாய் இதுதான்
முறையேயோ

மருள்சேர் மடவார் மயலாலே மாழ்கின் றேன்நான் முறையேயோ

தெருளோர் சிறிதும் அறியாதே திகையா நின்றேன் முறையேயோ. .
..27

2756

ஒழியாக் கவலை உறுகின்றேன் உடையாய் முறையோ
முறையேயோ

அழியாக் கருணைக் கடலேஎன் அரசே முறையோ முறையேயோ

பொழியாப் புயலே அனையார்பால் புகுவித் தனையே முறையேயோ

இழியாத் திரிதந் துழல்கின்றேன் இறைவா முறையோ முறையேயோ. ...28

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2757

மதிஒளிர் கங்கைச் சடைப்பெருங் கருணை வள்ளலே தெள்ளிய அமுதே

நிதிஒளிர் வாழ்க்கை இந்திரன் முதலோர்நிலைத்தவான் செல்வமும் மண்ணில்

பதிஒளிர் வாழ்க்கை மணிமுடி அரசர் படைத்திடும் செல்வமும் வேண்டேன்

கதிஒளிர் நினது திருவருட் செல்வக் களிப்பையே கருதுகின் றனனே. ...29

கட்டளைக் கலித்துறை

2758

வெள்ளங்கொண் டோ ங்கும் விரிசடை யாய்மிகு மேட்டினின்றும்

பள்ளங்கொண் டோ ங்கும் புனல்போல்நின் தண்ணருட் பண்புநல்லோர்

உள்ளங்கொண் டோ ங்கும் அவமே பருத்த ஒதிஅனையேன்

கள்ளங்கொண் டோ ங்கும் மனத்துறு மோஉறிற் காண்குவனே. ...30

2759

ஐயாமுக் கண்கொண்ட ஆரமு தேஅரு ளார்பவள

மெய்யாமெய்ஞ் ஞான விளக்கே கருணை விளங்கவைத்த

மையார் மிடற்று மணியேஅன் றென்னை மகிழ்ந்ததந்தோ

பொய்யாஎன் செய்வல் அருளா யெனில்எங்குப் போதுவனே. ...31

2760

நாரா யணன்திசை நான்முகன் ஆதியர் நண்ணிநின்று

பாரா யணஞ்செயப் பட்டநின் சேவடிப் பங்கயமேல்

சீரா யணம்பெறப் பாடுந் திறம்லூர் சிறிதும்இலேன்

ஆரா யணங்குற நின்றேன்பொன் மன்றத் தமர்ந்தவனே. ...32

2761

பேய்கொண்ட நெஞ்சகப் பாழால் வரும்என் பெருந்துயரை

வாய்கொண் டனந்தர் அனந்தர்க்கும் சொல்ல வராதெனில்இந்

நாய்கொண் டுரைக்க வருமோஎன் செய்குவன் நச்சுமரக்

காய்கொண்டு வாழைக் கனியைக்கை விட்ட கடையவனே. ...33

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2762

வன்மானங் கரத்தேந்தும் மாமணியே மணிகண்ட மணியே அன்பர்

நன்மானங் காத்தருளும் அருட்கடலே ஆனந்த நடஞ்செய் வாழ்வே

பொன்மானம் பிணைப்பொருந்தும் அம்பிணைவைத் தாண்டருளும் பொருளேநீ இங்

கென்மானங் காத்தருள வேண்டுதியோ வேண்டாயேல் என்செய்வேனே. ...34

கலிநிலைத் துறை

2763

வைவ மென்றெழு கின்றவர் தமக்கும்நல் வாழ்வு

செய்வம் என்றெழு கின்றமெய்த் திருவருட் செயலும்

சைவ மென்பதும் சைவத்திற் சாற்றிடுந் தலைமைத்

தெய்வ மென்பதும் என்னள வில்லைஎன் செய்வேன். ...35

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2764

ஐய ரேஉம தடியன்நான் ஆகில் அடிகள் நீர்என தாண்டவர் ஆகில்

பொய்ய னேன்உளத் தவலமும் பயமும்புன் கணும்தவிர்த் தருளுதல்வேண்டும்

தைய லோர்புறம் நின்றுளங் களிப்பச் சச்சி தானந்தத் தனிநடம் புரியும்

மெய்ய ரேமிகு துய்யரே தரும விடைய ரேஎன்றன் விழிஅமர்ந் தவரே. . ..36

வேறு

2765

எழுவினும் வலிய மனத்தினேன் மலஞ்சார் ஈயினும் நாயினும் இழிந்தேன்

புழுவினுஞ் சிறியேன் பொய்விழைந் துழல்வேன் புன்மையேன்புலைத்தொழிற் கடையேன்

வழுவினும் பெரியேன் மடத்தினும் பெரியேன் மாண்பிலா வஞ்சக நெஞ்சக்

குழுவினும் பெரியேன் அம்பலக் கூத்தன் குறிப்பினுக் கென்கட வேனே. ...37

கலி விருத்தம்

2766

பொன்அ ளிக்கும்நற் புத்தியுந் தந்துநின்

தன்ன ருட்டுணைத் தாண்மலர்த் தியானமே

மன்ன வைத்திட வேண்டும்எம் வள்ளலே

என்னை நான்பல கால்இங்கி யம்பலே. ...38

2767

தாயும் தந்தையும் சற்குரு நாதனும்

ஆயும் தெய்வமும் நீஎன் றறிந்தனன்

பாயும் மால்விடை ஏறும் பரமனே

நீயும் கைவிட என்னை நினைத்தியோ. ...39

வேறு

2768

ஒழியா மயல்கொண் டுழல்வேன் அவமே

அழியா வகையே அருள்வாய் அருள்வாய்

பொழியா மறையின் முதலே நுதல்ஏய்

விழியாய் விழியாய் வினைதூள் படவே. ...40

வெண்துறை

2769

உலகெ லாம்நிறைந் தோங்கு பேரருள் உருவ மாகிஎவ் உயிரும் உய்ந்திட

இலகு வானொளி யாம்மணி மன்றிடை என்றும்நின்றே

அலகில் ஆனந்த நாடகஞ் செய்யும் அம்பொற் சேவடிக் கபயம் என்னையும்

திலக நீவிழை வாய்நட ராசசி காமணியே. ...41

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2770

என்னிருகண் காள்உமது பெருந்தவம்எப் புவனத்தில் யார்தான் செய்வர்

முன்னிருவர் காணாமல் அலைந்தனரால் இனுங்காண முயலா நின்றார்

நன்னிருபர் தொழுதேத்தும் அம்பலத்தே ஓரிடத்தோர் நாள்ஆ தித்தர்

பன்னிருவர் ஒளிமாற்றும் பரஒளியைப் பார்த்துயர்ந்தீர் பண்பி னீரே. ...42

2771

சேணாடர் முனிவர்உயர் திசைமுகன்மால் உருத்திரன்அத் திரளோர் சற்றும்

காணாத காட்சியைநான் கண்டேன்சிற் றம்பலத்தின் கண்ணே பன்னாள்

ஆணாகப் பிறந்தடியேன் அருந்தவம்என் புரிந்தேனோ அறிகிலேன்முன்

பேணாத பிறப்பெல்லாம் பிறப்பலஇப் பிறப்பேஎன் பிறப்பாம் அந்தோ. ...43

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2772

இருளற ஓங்கும் பொதுவிலே நடஞ்செய் எங்குரு நாதன்எம் பெருமான்

அருளெனும் வடிவங் காட்டிஒண் முகத்தே அழகுறும் புன்னகை காட்டித்

தெருளுற அருமைத் திருக்கையால் தடவித் திருமணி வாய்மலர்ந் தருகில்

பொருளுற இருந்தோர் வாக்களித் தென்னுள் புகுந்தனன் புதுமைஈ தந்தோ. ...44

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2773

பொன்என்கோ மணிஎன்கோ புனிதஒளித் திரள்என்கோ பொற்பின் ஓங்கும்

மின்என்கோ விளக்கென்கோ விரிசுடர்க்கோர் சுடர்என்கோ வினையனேன்யான்

என்என்கோ என்என்கோ எம்பெருமான் திருமேனி இருந்த வண்ணம்

முன்என்கோ தறுதவத்தால் கண்டுகளித் திடப்பெற்றேன் முக்கண் மூர்த்தி. ...45

2774

வஞ்சகர்க்கெல் லாம்முதலாய் அறக்கடையாய் மறத்தொழிலே வலிக்கும்பாவி

நெஞ்சகத்துன் மார்க்கனைமா பாதகனைக் கொடியேனை நீச னேனை

அஞ்சல்எனக் கருணைபுரிந் தாண்டுகொண்ட அருட்கடலை அமுதைத்தெய்வக்

கஞ்சமல ரவன்நெடுமாற் கரும்பொருளைப் பொதுவினில்யான் கண்டுய்ந் தேனே. ...46

கட்டளைக் கலித்துறை

2775

நாதாபொன் அம்பலத் தேஅறி வானந்த நாடகஞ்செய்

பாதா துரும்பினும் பற்றாத என்னைப் பணிகொண்டெல்லாம்

ஓதா துணர உணர்த்திஉள் ளேநின் றுளவுசொன்ன

நீதா நினைமறந் தென்நினைக் கேன்இந்த நீணிலத்தே. ...47

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2776

கந்த நாண்மலர்க் கழலிணை உளத்துறக் கருதுகின் றவர்க்கெல்லாம்

பந்த நாண்வலை அவிழ்த்தருள் சிதம்பரை பரம்பரை யுடன்ஆடும்

அந்த நாள்மகிழ் வடைபவர் உளர்சிலர் அவர்எவர் எனில்இங்கே

இந்த நாள்முறை திறம்பல ராய்உயிர்க் கிதம்செயும் அவர்அன்றே. ...48

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2777

வெட்டை மாட்டி விடாப்பெருந் துன்பநோய்
விளைவ தெண்ணிலர் வேண்டிச்சென் றேதொழுக்
கட்டை மாட்டிக் கொள்வார்என வேண்டிப்பெண்
கட்டை மாட்டிக் கொள்வார்தங் கழுத்திலே
துட்டை மாட்டின் கழுத்தடிக் கட்டையோ
துணிக்கும் கட்டைய தாம்இந்தக் கட்டைதான்
எட்டை மாட்டி உயிர்விடக் கட்டைமேல்
ஏறும் போதும் இழுக்கின்ற கட்டையே. ...49

2778

புண்ணைக் கட்டிக்கொண் டேஅதன் மேல்ஒரு
புடவை கட்டிப் புதுமைகள் காட்டிடும்
பெண்ணைக் கட்டிக்கொள் வார்இவர் கொள்ளிவாய்ப்
பேயைக் கட்டிக்கொண் டாலும் பிழைப்பர்காண்
மண்ணைக் கட்டிக்கொண் டேஅழு கின்றஇம்
மடையப் பிள்ளைகள் வாழ்வினை நோக்குங்கால்
கண்ணைக் கட்டிக்கொண் டூர்வழி போம்கிழக்
கழுதை வாழ்வில் கடைஎனல் ஆகுமே. . ..50

கட்டளைக் கலிப்பா

2779

உடுக்க வோஒரு கந்தைக்கு மேலிலை
உண்ண வோஉண வுக்கும் வழியிலை
படுக்க வோபழம் பாய்க்கும் கதியிலை
பாரில் நல்லவர் பால்சென்று பிச்சைதான்
எடுக்க வோதிடம் இல்லைஎன் பால்உனக்
கிரக்கம் என்பதும் இல்லை உயிரைத்தான்
விடுக்க வோமனம் இல்லைஎன் செய்குவேன்
வெண்பி றைச்சடை வித்தக வள்ளலே. ...51

2780

தொடுக்க வோநல்ல சொன்மலர் இல்லைநான்
துதிக்கவோ பத்தி சுத்தமும் இல்லைஉள்
ஒடுக்க வோமனம் என்வசம் இல்லைஊ
டுற்ற ஆணவ மாதிம லங்களைத்
தடுக்க வோதிடம் இல்லைஎன் மட்டிலே
தயவு தான்நினக் கில்லை உயிரையும்
விடுக்க வோமனம் இல்லைஎன் செய்குவேன்
விளங்கு மன்றில் விளங்கிய வள்ளலே. ...52

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2781

இறகெடுத்த அமணர்குலம் வேரறுத்த சொக்கேச தென்ன ஞாயம்

அறுகடுத்த சடைமுடிமேல் மண்ணெடுக்க மாட்டாமல் அடிபட்டையோ
பிறகெடுத்தீர் வளையல்விற்றீர் சொற்கேளாப்பிள்ளைகளைப் பெற்றதோஷம்
விறகெடுத்தீர் என்செய்வீர் விதிவசந்தான் யாவரையும் விடாது தானே. ...53

கலி விருத்தம்

2782

சச்சிதா நந்தசிற் சபையில் நாடகம்
பச்சிதாந் திருவுருப் பாவை நோக்கிட
மெச்சிதா காரமா விளைப்பர் மெல்லடி
உச்சிதாழ் குவர்நமக் குடையர் நெஞ்சமே. ...54

கட்டளைக் கலித்துறை

2783

தத்தா தனத்தத்தைத் தாவென் றரங்கன் றனிநடிப்பா
தத்தா தனத்தத்தைத் தாவென் றரங்கன் றனிநடிப்பா
தத்தா தனத்தத்தைத் தாவென் றரங்கன் றனிநடிப்பா
தத்தா தனத்தத்தைத் தாவென் றரங்கன் றனஞ்சொல்லுமே. ...55

நேரிசை வெண்பா

2784

இம்மை யறையணைய வேசூர மாதருமா
இம்மையுமை யிம்மையையோ என்செய்த - தம்மைமதன்

மாமாமா மாமாமா மாமாமா மாமாமா

மாமாமா மாமாமா மா. . ..56

2785

ஆவியீ ரைந்தை அபரத்தே வைத்தோதில்

ஆவியீ ரைந்தை அகற்றலாம் - ஆவியீர்

ஐந்துறலா மாவியீ ரைந்தறலா மாவியீ

ரைந்திடலா மோரிரண்டோ டாய்ந்து. (176) ...57

திருச்சிற்றம்பலம்

---

176. இதன் பொருள் : ஆவி - ஆன்மவக்கரமென்னும், ஈரைந்து - பத்தாகிய யகரத்தை, ஐ - சிவத்திற்கு, அபரத்தே - பின்னாக, வைத்து - பொருத்தி, ஓதில் - செபிக்கில், ஆவியீ ரைந்தை - ஆ என்னும் ஆபத்துகளையும் வி என்னும் விபத்துகளையும், அகற்றலாம் - நீக்கிக் கொள்ளலாம். ஆவி - ஆன்மவியற்கையை, ஈர் - கெடுக்கும், ஐந்து - பஞ்சமலங்களையும், அறலாம் - களைந்து விடலாம், ஆவி - ஆன்மாவுக் குறுதியாய், ஈரைந்து - பத்தியை, உறலாம் - பொருந்தலாம், ஆய்ந்து - சேர்க்கும் வகை தெரிந்து, ஆவி - பிராணனது கலைகள், ஈரைந்து - பத்துடன், ஓர் - ஒரு, இரண்டோ டு - இரண்டையுங் கழியாமல், இடலாம் - சேர்த்துக் கட்டிக் கொள்ளலாம்.

- ஆறாம் திருமுறை முதற் பதிப்பு 1885

இப்பதிகத்துள் கலித்துறைகளும் விரவி நிற்கவும், விருத்தமெனக் குறியிட்டாளப் பட்டமைக் கீண்டு விதியெழுதப் புகின் மிகப்

பெருகுமாதலின் விடுக்கப்பட்டது. சைவம் பன்னிரண்டு திருமுறைகளுள் ஆளுடைய வரசாகிய அப்பர் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருமுறையில் "குலம்பலம்பாவரும்" என்றற் றொடக்கத் திலக்கியங்களாற் கண்டுகொள்க. - தொ. வே.

-------------------------

16. திருக்குறிப்பு நாட்டம் (2786 - 2789)

ஆசிரியத் துறை(177)

2786

ஆற்றுக் கேபிறைக் கீற்றுக் கேசடை ஆக்கிச் சேவடி தூக்கி ஆருயிர்ப்

பேற்றுக்கே நடிப்பாய் மணிமன்றில் பெருந்தகையே

சோற்றுக் கேஇதஞ் சொல்லிப் பேதையர் சூழல் வாய்த்துயர் சூழ்ந்து மேற்றிசைக்

காற்றுக்கே கறங்காய்ச் சுழன்றேனைக் கருதுதியோ. ...1

2787

ஞாலத் தார்தமைப் போலத் தாம்இங்கு நண்ணு வார்நின்னை எண்ணு வார்மிகு

சீலத்தார் சிவமே எவையும்எனத் தேர்ந்தனரால்

சாலத் தான்கொடுஞ் சாலத் தாலத்தைத் தாவி நான்பெரும் பாவி ஆயினன்

ஏலத்தார் குழலா ளிடத்தாய்எனை எண்ணுதியோ. ...2

2788

அண்ண லேநின்னை எண்ண லேன்என்னை ஆண்டு கொண்டனை மீண்டும் விண்டனன்

நண்ணலே அறியேன் கடையேன்சிறு நாயனையேன்

பெண்ண லேன்இயல் ஆண லேன்அலிப் பேய னேன்கொடும் பேதை யேன்பிழை

கண்ணலே புரியா தினும்மீட்கக் கருதுதியோ. ...3

2789

வல்லி ஆனந்த வல்லி சேர்மண வாள னேஅரு ளாள னேமலை

வில்லியாய் நகைத்தே புரம்வீழ்த்த விடையவனே

புல்லி யான்புலைப் போகம் வேட்டுநின் பொன்ன டித்துணைப் போகம் போக்கினேன்

இல்லிஆர் கடம்போ லிருந்தேன்எனை எண்ணுதியோ. ...4

திருச்சிற்றம்பலம்

— — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — —
— — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — —
— — — — — — — — — — — — — — — — —

175. ஆசிரியத்தாழிசை. தொ. வே. 1, 2. ஆசிரியத்துறை. ச. மு. க. ஆ. பா.

17. தனித் திருப்புலம்பல் (2790 - 2793)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2790

திங்கள் விளங்கும் சடைத்தருவைத் தீம்பாற் சுவையைச் செந்தேனைச்

செங்கை மருவும் செழுங்கனியைச் சீரார் முக்கட் செங்கரும்பை

மங்கை மலையாள் மணந்தபெரு வாழ்வைப் பவள மலைதன்னை

எங்கள் பெருமான் தனைஅந்தோ என்னே எண்ணா திருந்தேனே. ...1

2791

அன்பர் இதய மலர்க்கோயில் அமர்ந்த பரமா னந்தத்தைத்

துன்பம் அகலச் சுகமளிக்கும் தூய துணையைச் சுயஞ்சுடரை

வன்ப ரிடத்தின் மருவாத மணியை மணியார் மிடற்றானை

இன்ப நிறைவை இறையோனை என்னே எண்ணா திருந்தேனே. ...2

2792

ஒருமைப் பயனை ஒருமைநெறி உணர்ந்தார் உணர்வின் உள்ளுணர்வைப்

பெருமைக் கதியைப் பசுபதியைப் பெரியோர் எவர்க்கும் பெரியோனை

அருமைக் களத்தில் கருமைஅணி அம்மான் தன்னை எம்மானை

இருமைப் பயனுந் தருவானை என்னே எண்ணா திருந்தேனே. ...3

2793

கறையோர் கண்டத் தணிந்தருளும் கருணா நிதியைக் கண்ணுதலை

மறையோன் நெடுமாற் கரியசிவ மலையை அலையில் வாரிதியைப்

பொறையோர் உள்ளம் புகுந்தொளிரும் புனித ஒளியைப் பூரணனாம்

இறையோன் தன்னை அந்தோநான் என்னே எண்ணா திருந்தேனே. ...4

திருச்சிற்றம்பலம்

---------------------------

## 18. பரம ராசியம் (2794 -2795)

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2794

விதிஎ லாம்விலக் கெனவிலக் கிடுவேன்

விலக்கெ லாங்கொண்டு விதிஎன விதிப்பேன்

நிதிஎ லாம்பெற நினைத்தெழு கின்றேன்

நிலமெ லாங்கொளும் நினைப்புறு கின்றேன்

எதிஎ லாம்வெறுத் திட்டசிற் றூழை

இன்பெ லாங்கொள எண்ணிநின் றயர்வேன்

பதிஎ லாங்கடந் தெவ்வணம் உய்வேன்

பரம ராசியப் பரம்பரப் பொருளே. ...1

2795

செடிய னேன்கடுந் தீமையே புரிவேன்

தெளிவி லேன்மனச் செறிவென்ப தறியேன்

கொடிய னேன்கொடுங் கொலைபயில் இனத்தேன்

கோள னேன்நெடு நீளவஞ் சகனேன்

அடிய னேன்பிழை அனைத்தையும் பொறுத்துன்

அன்பர் தங்களோ டின்புற அருள்வாய்

படிஅ னேகமுங் கடந்தசிற் சபையில்

பரம ராசியப் பரம்பரப் பொருளே. ...2

திருச்சிற்றம்பலம்

----------------------------

19. திருப்புகழ்ச்சி (2796 - 2798)

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2796

திருவுளந் தெரியேன் திகைப்புறு கின்றேன்

சிறியரிற் சிறியனேன் வஞ்சக்

கருவுளக் கடையேன் பாவியேன் கொடிய

கன்மனக் குரங்கனேன் அந்தோ

வெருவுறு கின்றேன் அஞ்சல்என் றின்னே

விரும்பிஆட் கொள்ளுதல் வேண்டும்

மருவுமா கருணைப் பெருங்கடல் அமுதே

வள்ளலே என்பெரு வாழ்வே. . ..1

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2797

தாயும் தந்தையும் தெய்வமும் குருவும்

தாங்கு கின்றதோர் தலைவனும் பொருளும்
ஆயும் இன்பமும் அன்பும்மெய் அறிவும்
அனைத்தும் நீஎன ஆதரித் திருந்தேன்
ஏயும் என்னள விரக்கம்இலன் றிலையேல்
என்செய் வேன்இதை யார்க்கெடுத் துரைப்பேன்
சேயும் நின்னருள் நசைஉறுங் கண்டாய்
தில்லை மன்றிடைத் திகழ்ஒளி விளக்கே. ...2

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2798

அருள்பழுத் தோங்கும் கற்பகத் தருவே
அருண்மருந் தொளிர்குணக் குன்றே
அருள்எனும் அமுதந் தரும்ஒரு கடலே
அருட்கிர ணங்கொளும் சுடரே
அருள்ஒளி வீசும் அரும்பெறன் மணியே
அருட்சுவை கனிந்தசெம் பாகே
அருள்மணம் வீசும் ஒருதனி மலரே
அருண்மய மாம்பர சிவமே. ...3

திருச்சிற்றம்பலம்

--------------------------------

29. திருமருந்தருள் நிலை (2799 -2800)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2799

பனகஅணைத் திருநெடுமால் அயன்போற்றப் புலவரெலாம் பரவ ஓங்கும்

கனகமணி அம்பலத்தே பெரியமருந் தொன்றிருக்கக் கண்டேன் கண்டேன்

அனகநடத் ததுசச்சி தானந்த வடிவதுபே ரருள்வாய்ந் துள்ள

தெனகமமர்ந் திருப்பதெல்லாம் வல்லதுபேர் நடராசன் என்ப தம்மா. ...1

2800

திருநெடுமால் அயன்தேடத் துரியநடு ஒளித்ததெனத் தெளிந்தோர்சொல்லும்

ஒருகருணை மருந்துதிரு அம்பலத்தே இருந்திடக்கண் டுவந்தேன் அந்தோ

அருவுருவங் கடந்ததுபே ரானந்த வடிவதுநல் லருள்வாய்ந் துள்ள

திருமையும்நன் களிப்பதெல்லாம் வல்லதுபேர் நடராசன் என்ப தம்மா. . ..2

திருச்சிற்றம்பலம்

-----------------------------

21. திருவருள் விலாசம் (2801 - 2802)

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2801

ஆண்டவன்நீ யாகில்உனக் கடியனும்நா னாகில்

அருளுடையாய் இன்றிரவில் அருள் இறையாய் வந்து

நீண்டவனே முதலியரும் தீண்டரிதாம் பொருளின்

நிலைகாட்டி அடிமுடியின் நெறிமுழுதும் காட்டி

வீண்டவனே காலையில்நீ விழித்தவுடன் எழுந்து

விதிமுடித்துப் புரிதிஇது விளங்கும்எனப் புகல்வாய்

தாண்டவனே அருட்பொதுவில் தனிமுதலே கருணைத்

தடங்கடலே நெடுந்தகையே சங்கரனே சிவனே. ...1

2892

திருநெறிமெய்த் தமிழ்மறையாம் திருக்கடைக்காப் பதனால்

திருவுளங்காட் டியநாளில் தெரிந்திலன் இச் சிறியேன்

பெருநெறிஎன் உளத்திருந்து காட்டியநாள் அறிந்தேன்

பிழைபடாத் தெய்வமறை இதுவெனப்பின் புணர்ந்தேன்

ஒருநெறியில் எனதுகரத் துவந்தளித்த நாளில்

உணராத உளவைஎலாம் ஒருங்குணர்ந்து தெளிந்தேன்

தெருணெறிதந் தருளும்மறைச் சிலம்பணிந்த பதத்தாள்

சிவகாம வல்லிமகிழ் திருநடத்தெள் ளமுதே. . ..2

திருச்சிற்றம்பலம்

---

## 22. சிவ சிதம்பர சங்கீர்த்தனம் (2893 - 2897)

எண்சீர்க் கழிநெடிலடிச் சந்த விருத்தம்(178)

2893

உலக முஞ்சரா சரமும் நின்றுநின் றுலவு கின்றபே ருலகம் என்பதும்

கலகம் இன்றிஎங் கணுநி றைந்தசிற் கனம்வி ளங்குசிற் ககனம் என்பதும்

இலக ஒன்றிரண் டெனல்அ கன்றதோர் இணையில் இன்பமாம் இதயம் என்பதும்

திலகம் என்றநங் குருசி தம்பரம் சிவசி தம்பரம் சிவசி தம்பரம். ...1

2804

வரமு றுஞ்சுதந் தரசு கந்தரும் மனம டங்குசிற் கனந டந்தரும்

உரமு றும்பதம் பெறவ ழங்குபே ரொளிந டந்தரும் வெளிவி டந்தரும்

பரமு றுங்குணங் குறிக டந்தசிற் பரம மாகியே பரவு மாமறைச்

சிரமு றும்பரம் பரசி தம்பரம் சிவசி தம்பரம் சிவசி தம்பரம். ...2

2805

நித்தி யம்பரா பரநி ராதரம் நிர்க்கு ணஞ்சதா நிலய நிட்களம்

சத்தி யம்கனா கனமி குந்ததோர் தற்ப ரம்சிவம் சமர சத்துவம்

வித்தி யஞ்சுகோ தயநி கேதனம் விமலம் என்றுநால் வேத முந்தொழும்

சித்தி யங்குசிற் கனசி தம்பரம் சிவசி தம்பரம் சிவசி தம்பரம். ...3

2806

அருள்அ ளித்துமெய் யன்பர் தம்மைஉள் ளங்கை நெல்லிபோல் ஆக்கு கின்றதும்

பொருள்அ ளித்துநான் மறையின் அந்தமே புகலு கின்றதோர் புகழ்அ ளிப்பதும்

வெருள்அ ளித்திடா விமல ஞானவான் வெளியி லேவெளி விரவி நிற்பதாம்

தெருள்அ ளிப்பதும் இருள்கெ டுப்பதும் சிவசி தம்பரம் சிவசி தம்பரம். ...4

2807

பெத்த முஞ்சதா முத்தி யும்பெரும் பேத மாயதோர் போத வாதமும்

சுத்த முந்தெறா வித்த முந்தரும் சொரூப இன்பமே துய்க்கும் வாழ்க்கையும்

நித்த முந்தெரிந் துற்ற யோகர்தம் நிமல மாகிமெய்ந் நிறைவு கொண்டசிற்

சித்த முஞ்செலாப் பரம ராசியம் சிவசி தம்பரம் சிவசி தம்பரம். ...5

திருச்சிற்றம்பலம்

---

178. கட்டளைக் கலிப்பா. தொ. வே. 1, 2. ச. மு. க.

எண்சீர்க் கழிநெடிலடிச் சந்த விருத்தம். ஆ. பா.

---

23. சிவகாமவல்லி துதி (2808 - 2812)

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2808

அரங்காய மனமாயை அளக்கர் ஆழம்

அறியாமல் காலிட்டிங் கழுந்து கின்றேன்

இரங்காயோ சிறிதும்உயிர் இரக்கம் இல்லா

என்மனமோ நின்மனமும் இறைவி உன்றன்

உரங்காணும் அரசியற்கோல் கொடுங்கோல் ஆனால்

ஓடிஎங்கே புகுந்தெவருக் குரைப்ப தம்மா

திரங்காணாப் பிள்ளைஎனத் தாய்வி டாளே

சிவகாம வல்லிஎனும் தெய்வத் தாயே. ...1

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2809

தனத்தால் இயன்ற தனிச்சபையில் நடிக்கும் பெருமான் தனக்கன்றே

இனத்தால் உயர்ந்த மணமாலை இட்டுக் களித்த துரைப்பெண்ணே

மனத்தான் விளங்கும் சிவகாம வல்லிக் கனியே மாலொடும்ஓர்

அனத்தான் புகழும் அம்மேஇவ் வடியேன் உனக்கே அடைக்கலமே. ...2

2810

திருவே திகழுங் கலைமகளே திருவே மலையான் திருமகளே

உருவே இச்சை மயமேமெய் உணர்வின் வணமே உயர்இன்பக்

குருவே ஆதித் தனித்தாயே குலவும் பரையாம் பெருந்தாயே

மருவே மலரே சிவகாம வல்லி மணியே வந்தருளே. ...3

2811

அருளே அறிவே அன்பேதெள் ளமுதே மாதர் அரசேமெய்ப்

பொருளே தெருளே மாற்றறியாப் பொன்னே மின்னே பூங்கிளியே

இருளேய் மனத்தில் எய்தாத இன்பப் பெருக்கே இவ்வடியேன்

மருளே தவிர்த்த சிவகாம வல்லி நினக்கே வந்தனமே. ...4

கட்டளைக் கலித்துறை

2812

தருவாய் இதுநல் தருணங்கண் டாய்என்னைத் தாங்கிக்கொண்ட

குருவாய் விளங்கு மணிமன்ற வாணனைக் கூடிஇன்ப

உருவாய்என் உள்ளத்தின் உள்ளே அமர்ந்துள்ள உண்மைஎலாம்

திருவாய் மலர்ந்த சிவகாம வல்லிநின் சீர்அருளே. ...5

திருச்சிற்றம்பலம்

---------------------------

24. சிவ பரம்பொருள் (2813 -2816)

கலிநிலைத் துறை

2813

உருத்தி ரன்திரு மால்அயன் ஒப்பமுக் குணமாய்

இருத்தல் இன்றிஅக் குணங்களை என்றும்ஆண் டருளுங்

கருத்தன் ஆகையிற் குணேசன்அக் குணவிகா ரத்திற்

பொருத்த மின்மையன் ஆகையால் புகல்குண ரகிதன். ...1

2814

களங்க அக்குணம் கடந்திருத் தலில்குணா தீதன்

வளங்கொ ளத்தகும் உலகெலாம் மருவிநிற் றலினால்

விளங்கு விச்சுவ வியாபிஇவ் விசுவத்தை யாண்டு

துளங்கு றாநலந் தோற்றலின் விச்சுவ கருத்தன். ...2

2815

வெய்ய னாய்உல கழித்தலின் விசுவசங் காரி

பைய மேலெனப் படுவன பலவற்றின் மேலாம்

ஐயன் ஆதலிற் பராபர னாம்எனப் பட்ட

செய்ய னாகிய சிவபிரான் ஒருவனுண் டமரீர். ...3

2816

உய்வ தாம்இது நம்குரு வாணையொன் றுரைப்பேன்

சைவ மாதிசித் தாந்தத்து மறைமுடித் தலத்தும்

நைவ தின்றிஆங் கதுவது வாயது நமது

தெய்வ மாகிய சிவபரம் பொருளெனத் தெளிவீர். . ..4

திருச்சிற்றம்பலம்

---

25. நடராஜ அலங்காரம் (2817 -2819)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2817

இரண்டே காற்கை முகந்தந்தீர் இன்ப நடஞ்செய் பெருமானீர்

இரண்டே காற்கை முகங்கொண்டீர் என்னே அடிகள் என்றுரைத்தேன்

இரண்டே காற்கை முகம்புடைக்க இருந்தாய் எனைக்கென் றிங்கேநீ

இரண்டே காற்கை முகங்கொண்டாய் என்றார் மன்றில் நின்றாரே.(179) ...1

2818

இரண்டே காற்கை முகங்கொண்டீர் என்னை உடையீர் அம்பலத்தீர்

இரண்டே காற்கை முகந்தந்தீர் என்னை இதுதான் என்றுரைத்தேன்

இரண்டே காற்கை முகங்கொண்டிங் கிருந்த நீயும் எனைக்கண்டே

இரண்டே காற்கை முகங்கொண்டாய் என்றார் தோழி இவர்வாழி.(180) ...2

2819

ஆடுங் கருணைத் திருநடத்தீர் ஆடும் இடந்தான் யாதென்றேன்

பாடுந் திருவுஞ் சவுந்தரமும் பழமுங் காட்டும் இடமென்றார்

நாடும் பழநன் கருளுமென்றேன் நங்காய் முன்பின் ஒன்றேயாய்

ஈடுந் தியபன் னடுவுளதால் என்றார் தோழி இவர்வாழி.(181) ...3

திருச்சிற்றம்பலம்

— — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — —
— — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — —
— — — — — — — — — — — — — — — — — —

179. பதவுரை : இன்பம் - பேரின்பம் தருவதாகிய, நடஞ்செய் - திருநடனத்தைப் புரியா நின்ற, பெருமானீர் - பெருமானாகிய நீர், இரண்டே - இரண்டேயாகிய, காற்கு - பாதங்களையுடைய எனக்கு, ஐ - அழகிய, முகம் - முகம் ஒன்றினை, தந்தீர் - கொடுத்தீர், இங்ஙனம் இருக்க, இரண்டே காற்கு - இரண்டு பாதாம்புயங்களுக்கு, ஐமுகம் - பஞ்சமுகங்களை, கொண்டீர் - கொண்ட நீராக இருக்கின்றீர், என்னே - யாதுபற்றி, அடிகள் - அடிகளே, என்றுரைத்தேன் - எனப் புகன்றேன். அதற்கு மன்றில் நின்றார் - அம்பலத்தின் கண்ணின்ற இவர் அடியாளைக் கண்ணுற்று, இரண்டே கால் - இரண்டு காலாகப் பெற்ற நீ, கைமுகம் புடைக்க விருந்தாய் - கைத்த முகம் பெருக்கக் காட்டினை, எனைக்கென்று - யாதுபற்றி என வினவி, இங்கே நீ - இப்போது இவ்விடத்து, இரண்டே காற்கு - இரு காலாகிய அரை ( அல்குலுக்கு இன்பம் பெருக்க எண்ணி ) ஐமுகம் கொண்டாய் என்றார் - சுமுகங் கொண்டனை எனப் புகல்கின்றனர். ஏ! தோழி ! இஃது என் ? என வினவியது. - ச.மு.க.

180. பதவுரை : இரண்டேகாற்கு - இருவினை வழி செல்லாதவர்களுக்கு, ஐமுகம் - ஆசாரிய முகத்தினை, கொண்டனை - கொண்ட நீராயிருக்கின்றீர். என்னை - அடியாளை, உடையீர் - உடையவரே, அம்பலத்தீர் - திருவம்பலத்தில் நடிக்கின்றவரே, இரண்டேகாற்கு - சூரியகலை சந்திரகலையாகிய வாசியனுபவத்திற்கு, ஐ - அழகிய, முகந்தந்நீர் - முகத்தினைத் தந்தவரே, என்னை இது தானென்று - இஃது என்ன விஷயத்திற்கு என்று, உரைத்தேன் - செப்பினேன். அதற்கு அன்னார், இரண்டே கால், கை, முகங் கொண்டிருந்த

நீயும் - இரண்டு காலும், இருகையும், முகமும் அடையப் பெற்றிரா நின்ற நீயும், எனைக் கண்டே - நம்மைத் தரிசித்த தக்ஷணம் நீ முன் உரைத்த வண்ணமே, இரண்டேகாற்கு - வாசிக்கு, ஐமுகங்கொண்டாய் - அழகிய முகத்தினை அனுபவ இடமாகக் கொண்டு விட்டனை என்கின்றனர் தோழி, இன்னார் நீடுழி வாழ்க எனத் தலைவி வாழ்த்தியதாகக் கொள்க.

இரண்டேகாற்கை - தமிழில் எழுதினால் இரண்டு (உ), கால் (வ), கை : உவகை.

இரண்டேகாற் கைமுகந் தந்தீர் என்றதற்கு, விநாயகருக்கு கை - துதிக்கையுடைய முகத்தினைத் தந்தீர் எனப் பொருள் கூறுவாரும் உளர். தலைவி தலைவருக்குள் நடந்த அலங்கார விவகாரத்துள் விநாயகரைப் பற்றிக் கூறுதல் அவ்வளவு விசேட மன்றெனக் கொள்க.

181. குறிப்பு : ஆடுமிடம் - நடனஞ் செய்யுமிடம், பாடும் - வேதாகமங்களால் புகழப்படும், திருவும் - பொன் என்னுஞ் சொல்லும், சவுந்தரமும் - அழகு, அழகுக்குப் பிரதிபதமாய அம் என்னும் சொல்லும், பழமும் - (பழம் = பலம் வடமொழி ) - பலம் என்னும் சொல்லும் சேர்ந்தால், பொன்னம்பலம் ஆகிறது. முன்பின் ஒன்றேயாய் - முன்னும் பின்னும் ஒரு சொல்லாகிய அம், பல் நடு வுளது - பல் என்னுஞ் சொல் நடுவுளது. அம்+பல்+அம் - அம்பலம், ச. மு. க.

-------------------------

26. பாங்கிமார் கண்ணி (2829 -- 2846)

சிந்து

2829

அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமா ரே - அவர்

ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமாரே. ...1

2821

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமா ரே - மிக

ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே. ...2

2822

இன்பவடி வாய்ச்சபையிற் பாங்கிமா ரே - நட

மிட்டவர்மே லிட்டம்வைத்தேன் பாங்கிமாரே. ...3

2823

ஈனவுடற் கிச்சைவையேன் பாங்கிமா ரே - நட

னேசர்தமை யெய்தும்வண்ணம் பாங்கிமாரே. . ..4

2824

உத்தமர்பொன் னம்பலத்தே பாங்கிமா ரே - இன்ப

உருவாகி ஓங்குகின்றார் பாங்கிமாரே. ...5

2825

ஊனவுல கைக்கருதேன் பாங்கிமா ரே - மன்றில்

உத்தமருக் குறவாவேன் பாங்கிமாரே. ...6

2826

கற்பனையெல் லாங்கடந்தார் பாங்கிமா ரே - என்றன்

கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமாரே. ...7

2627

கண்டிலர்நான் படும்பாடு பாங்கிமா ரே - மூன்று

கண்ணுடையா ரென்பாரையோ பாங்கிமாரே. ...8

2828

கன்மனமெல் லாங்கரைப்பார் பாங்கிமா ரே - மனங்

கரையாரென் னளவிலே பாங்கிமாரே. ...9

2829

கள்ளமொன்று மறியேனான் பாங்கிமா ரே - என்னைக்

கைவிடவுந் துணிவாரோ பாங்கிமாரே. ...10

2830

கற்பழித்துக் கலந்தாரே பாங்கிமா ரே - இன்று

கைநழுவ விடுவாரோ பாங்கிமாரே. ...11

2831

கண்டவரெல் லாம்பழிக்கப் பாங்கிமா ரே - என்றன்

கன்னியழித் தேயொளித்தார் பாங்கிமாரே. ...12

2832

காமனைக்கண் ணாலெரித்தார் பாங்கிமா ரே - என்றன்

காதலைக்கண் டறிவாரோ பாங்கிமாரே. ...13

2833

காவலையெல் லாங்கடந்து பாங்கிமா ரே - என்னைக்

கைகலந்த கள்ளரவர் பாங்கிமாரே. ...14

2834

காணவிழைந் தேனவரைப் பாங்கிமா ரே - கொண்டு

காட்டுவாரை யறிந்திலேன் பாங்கிமாரே. ...15

2835

கிட்டவர வேண்டுமென்றார் பாங்கிமா ரே - நான்

கிட்டுமுன்னே யெட்டநின்றார் பாங்கிமாரே. ...16

2836

கின்னரங்கே ளென்றிசைத்தார் பாங்கிமா ரே - நான்

கேட்பதன்முன் சேட்படுத்தார் பாங்கிமாரே. ...17

2837

கிள்ளையைத்தூ தாவிடுத்தேன் பாங்கிமா ரே - அது

கேட்டுவரக் காணேனையோ பாங்கிமாரே. ...18

2838

கீதவகை பாடிநின்றார் பாங்கிமா ரே - அது

கேட்டுமதி மயங்கினேன் பாங்கிமாரே. ...19

2839

கீழ்மைகுறி யாமலென்னைப் பாங்கிமா ரே - மனக்

கேண்மைகுறித் தாரேயன்று பாங்கிமாரே. ...20

2840

கீடமனை யேனெனையும் பாங்கிமா ரே - அடிக்

கேயடிமை கொண்டாரன்று பாங்கிமாரே. ...21

2841

குற்றமெல்லாங் குணமாகப் பாங்கிமா ரே - கொள்ளுங்

கொற்றவரென் கொழுநர்காண் பாங்கிமாரே. ...22

2842

குற்றமொன்றுஞ் செய்தறியேன் பாங்கிமா ரே - என்னைக்

கொண்டுகுலம் பேசுவாரோ பாங்கிமாரே. ...23

2843

குஞ்சிதப்பொற் பாதங்கண்டாற் பாங்கிமா ரே - உள்ள

குறையெல்லாந் தீருங்கண்டீர் பாங்கிமாரே. . ..24

2844

கூற்றுதைத்த பாதங்கண்டீர் பாங்கிமா ரே - நங்கள்

குடிக்கெல்லாங் குலதெய்வம் பாங்கிமாரே. ...25

2845

கூறரிய பதங்கண்டு பாங்கிமா ரே - களி

கொண்டுநிற்க விழைந்தேனான் பாங்கிமாரே. ...26

2846

கூடல்விழைந் தேனவரைப் பாங்கிமா ரே - அது

கூடும்வண்ணம் கூட்டிடுவீர் பாங்கிமாரே. ...27

திருச்சிற்றம்பலம்

-------------------------

27. வெண்ணிலாக் கண்ணி (2847 - 2869)

சிந்து

2847

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலா வே - ஒரு
தந்திரநீ சொல்லவேண்டும் வெண்ணிலா வே. ...1

2848

நாதமுடி மேலிருந்த வெண்ணிலா வே - அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலா வே. ...2

2849

சச்சிதானந் தக்கடலில் வெண்ணிலா வே - நானுந்
தாழ்ந்துவிழ வேண்டுகின்றேன் வெண்ணிலா வே. ...3

2850

இராப்பகலில் லாவிடத்தே வெண்ணிலா வே - நானும்
இருக்கவெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலா வே. ...4

2851

தேசுநிற மாய்நிறைந்த வெண்ணிலா வே - நானுஞ்
சிவமயம தாய்விழைந்தேன் வெண்ணிலா வே. ...5

2852

போதநடு வூடிருந்த வெண்ணிலா வே - மலப்
போதமற வேண்டுகின்றேன் வெண்ணிலா வே. ...6

2853

ஆருமறி யாமலிங்கே வெண்ணிலா வே - அரு
ளாளர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலா வே. ...7

2854

அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலா வே - யெங்கள்

ஐயர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலா வே. ...8

2855

வேதமுடி மேலிருந்த வெண்ணிலா வே - மல

வேதையுள வேதுசொல்லாய் வெண்ணிலா வே. ...9

2856

குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலா வே - அந்தக்

குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலா வே. ...10

2857

ஆதியந்த மென்றுரைத்தார் வெண்ணிலா வே - அந்த

ஆதியந்த மாவதென்ன வெண்ணிலா வே. ...11

2858

வித்திலாம லேவிளைந்த வெண்ணிலா வே - நீதான்

விளைந்தவண்ண மேதுசொல்லாய் வெண்ணிலா வே. ...12

2859

முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலா வே - அந்த

மூன்றுமொன்றாய் முடிந்ததென்ன வெண்ணிலா வே. . ..13

2860

நானதுவாய் நிற்கும்வண்ணம் வெண்ணிலா வே - ஒரு

ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலா வே. ...14

2861

ஞானமய மாய்விளங்கும் வெண்ணிலா வே - என்னை

நானறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலா வே. ...15

2862

வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலா வே - அந்த

வாசியென்ன பேசுகண்டாய் வெண்ணிலா வே. ...16

2863

ஐந்தலைப்பாம் பாட்டுகின்றார் வெண்ணிலா வே - அவர்

அம்பலத்தில் நின்றதென்ன வெண்ணிலா வே. ...17

2864

ஓரெழுத்தி லைந்துண்டென்பார் வெண்ணிலா வே - அது

ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலா வே. ...18

2865

அம்பலத்தில் ஆடுகின்றார் வெண்ணிலா வே - அவர்

ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலா வே. ...19

2866

அந்தரத்தில் ஆடுகின்றார் வெண்ணிலா வே - அவர்

ஆடும்வகை எப்படியோ வெண்ணிலா வே. ...20

2867

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலா வே - எங்கும்

ஆகிநின்ற வண்ணமென்ன வெண்ணிலா வே. ...21

2868

அண்டபகி ரண்டமெல்லாம் வெண்ணிலா வே - ஐயர்

ஆட்டமென்று சொல்வதென்ன வெண்ணிலா வே. ...22

2869

அம்பரத்தி லாடுகின்றார் வெண்ணிலா வே - என்னை

ஆட்டுகின்றார் இம்பரத்தே வெண்ணிலா வே. ...23

திருச்சிற்றம்பலம்

-----------------------

28. முறையீட்டுக் கண்ணி (2870 - 2938)

தாழிசை

2870

பற்று நினைத்தெழுமிப் பாவிமனத் தீமையெலாம்

உற்று நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...1

2871

எள்ளேத நின்னிடத்தே எண்ணுகின்ற தோறுமதை

உள்ளே நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...2

2872

துன்னுகின்ற தீமைநின்பாற் சூழ்ந்துரைக்குந் தோறுமதை

உன்னுகின்ற போதிலெனக் கூடுருவிப் போகுதடா. . ..3

2873

எள்ளுகின்ற தீமைநின்பா லெண்ணுகின்ற தோறுமதை

உள்ளுகின்ற போதிலெனக் கூடுருவிப் போகுதடா. ...4

2874

மிக்க நிலைநிற்க விரும்பேன் பிழைகளெலாம்

ஒக்க நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...5

2875

கோகோ வெனுங்கொடியேன் கூறியகுற் றங்களெலாம்

ஓகோ நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...6

2876

பித்து மனக்கொடியேன் பேசியவன் சொல்லையெலாம்

ஒத்து நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...7

2877

தேர்ந்து தெளியாச் சிறியவனேன் தீமையெலாம்

ஓர்ந்து நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...8

2878

நிறுத்தி யறியே நிகழ்த்தியவன் சொல்லை

உறுத்தி நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...9

2879

தோன்றி விரியுமனத் துட்டனேன் வன்பிழையை

ஊன்றி நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. ...10

2880

எண்ணினைப்ப தின்றிநினை யெள்ளி யுரைத்ததனை

உண்ணினைக்குந் தோறுமெனக் குள்ள முருகுதடா. ...11

2881

கடையவனேன் வைதகடுஞ் சொன்னினைக்குந் தோறும்

உடையவனே யென்னுடைய வுள்ள முருகுதடா. ...12

2882

பித்தனெனத் தீமை பிதற்றியதெண் ணுந்தோறும்

உத்தமனே யென்னுடைய வுள்ள முருகுதடா. ...13

2883

மன்றுடையாய் நின்னருளை வைதகொடுஞ் சொற்பொருளில்

ஒன்றை நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ...14

2884

வெருவாம லையோ விளம்பியசொல் லெல்லாம்

ஒருவா நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ...15

2885

புலைக்கொடியேன் புன்சொற் புகன்றதெண் ணுந்தோறும்

உலைக்கண்மெழு காகவென்ற னுள்ள முருகுதடா. ...16

2886

ஈடில்பெருந் தாயி லினியாய்நின் றண்ணருட்பால்

ஊடியசொல் லுன்னிலெனக் குள்ள முருகுதடா. ...17

2887

புரைத்தமன வஞ்சப் புலையேன் றிருவருளை

உரைத்தபிழை யெண்ணிலெனக் குள்ள முருகுதடா. ...18

2888

நாடி நினையா நவையுடையேன் புன்சொலெலாம்
ஓடி நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ...19

2889

வெப்பில் கருணை விளக்கனையா யென்பிழையை
ஒப்பி நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. ...20

2890

அஞ்சலென்றாய் நின்பால் அடாதமொழி பேசியதை
அஞ்சிநினைக் கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...21

2891

மெய்யோர் சிறிதுமிலேன் வீண்மொழியா லூடியதை
ஐயோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. . ..22

2892

இத்தா ரணிக்குளெங்கு மில்லாத தீமைசெய்தேன்
அத்தா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...23

2893

பொய்யால் விரிந்த புலைமனத்தேன் செய்பிழையை
ஐயா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...24

2894

இப்பாவி நெஞ்சா லிழுக்குரைத்தே னாங்கதனை
அப்பாநி னைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...25

2895

எண்ணாக் கொடுமையெலா மெண்ணியுரைத் தேனதனை
அண்ணா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...26

2896

வெம்மான் மனத்து வினையேன் புகன்றதெலாம்
அம்மா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...27

2897

எச்சோடு மில்லா திழிந்தேன் பிழைகளெலாம்
அச்சோநி னைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...28

2898

வந்தோழி நைமனத்து வஞ்சகனேன் வஞ்சமெலாம்
அந்தோநி னைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...29

2899

ஓவாக் கொடியே னுரைத்த பிழைகளெலாம்
ஆவா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...30

2900

கரைசேர வொண்ணாக் கடையேன் பிழையை
அரைசேநி னைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...31

2901

மருளுடையேன் வஞ்ச மனத்தீமை யெல்லாம்
அருளுடையா யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...32

2982

ஈண்டவனேன் வன்சொல் இயம்பியதை யென்னுடைய

ஆண்டவனே யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...33

2983

வற்புதனேன் வஞ்ச மனப்பிழையை மன்றாடும்

அற்புதனே யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...34

2984

துன்புடையேன் புன்மொழிகள் தூற்றியதை யெவ்வுயிர்க்கும்

அன்புடையா யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. ...35

2985

கொதிக்கின்ற வன்மொழியாற் கூறியதை யையோ

மதிக்கின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...36

2986

சினங்கொண்ட போதெல்லாஞ் செப்பிய வன்சொல்லை

மனங்கொள்ளுந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...37

2987

செய்தநன்றி யெண்ணாச் சிறியவனே னின்னருளை

வைத்தெண்ணுந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...38

2988

பொய்த்த மனத்தேன் புகன்றகொடுஞ் சொற்களெலாம்

வைத்துநினைக் குந்தோறும் வாளிட் டறுக்குதடா. ...39

2909

பொங்குகின்ற தீமை புகன்றதெலா மெண்ணியெண்ணி

மங்குகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...40

2910

ஊடுகின்ற சொல்லா லுரைத்ததனை யெண்ணியெண்ணி

வாடுகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...41

2911

உயங்குகின்றேன் வன்சொல் லுரைத்ததனை யெண்ணி

மயங்குகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...42

2912

சொல்விளைவு நோக்காதே சொன்னதெலா மெண்ணுதொறும்

வல்வினையே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ...43

2913

மேல்விளைவு நோக்காதே வேறுசொன்ன தெண்ணுதொறும்

மால்வினையே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ...44

2914

விஞ்சகத்தா லந்தோ விளம்பியதை யெண்ணுதொறும்

வஞ்சகத்தே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ...45

2915

விலங்குகின்ற நெஞ்ச விளைவையெண் ணுந்தோறும்

மலங்குகின்றே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ...46

2916

தூய்மையிலா வன்மொழியாற் சொன்னவெலா மெண்ணுதொறும்

வாய்மையிலே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. ...47

2917

கலிக்கின்ற வஞ்சகக் கருத்தைக் கருதி

வலிக்கின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. . ..48

2918

நீட்டுகின்ற வஞ்ச நெடுஞ்சொலெலா நெஞ்சகத்தே

மாட்டுகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...49

2919

பொருந்துகின்ற வஞ்சப் புதுமையெண்ணி யையோ

வருந்துகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...50

2920

வெருவிக்கும் வஞ்ச வெறுஞ்சொலெலாம் நெஞ்சில்

வருவிக்குந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. ...51

2921

ஊடும்போ துன்னை யுரைத்தவெலா நாயடியேன்

நாடும்போ தெல்லாமென் னாடி நடுங்குதடா. ...52v

2922

வாய்க்கடையா வன்சொல் வழங்கியவென் வன்மனத்தை

நாய்க்கடையே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ...53

2923

கன்றி யுரைத்த கடுஞ்சொற் கடுவையெலாம்

நன்றியிலே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ...54

2924

புன்மையினால் வன்சொற் புகன்றபுலைத் தன்மையெலாம்

நன்மையிலே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ...55

2925

ஊனெண்ணும் வஞ்ச வுளத்தா லுரைத்தவெலாம்

நானெண்ணுந் தோறுமென்ற னாடி நடுங்குதடா. ...56

2926

வஞ்சனையா லஞ்சாது வன்சொல் புகன்றவெலாம்

நஞ்சனையே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ...57

2927

கோணநெடு நெஞ்சக் குரங்காற் குதித்தவெலாம்

நாணமிலே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ...58v

2928

ஊனமிலா நின்னை யுரைத்தகொடுஞ் சொல்லையெலாம்

ஞானமிலே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. ...59

2929

எற்றே மதியிலியே னெண்ணா துரைத்ததனைச்

சற்றே நினைத்திடினுந் தாது கலங்குதடா. ...60

2930

இனியேது செய்வே னிகழ்ந்துரைத்த சொல்லைத்

தனியே நினைத்திடினுந் தாது கலங்குதடா. ...61

2931

நாயனையே னெண்ணாம னலங்கியவன் சொல்லையெலாம்

தாயனையா யெண்ணுதொறுந் தாது கலங்குதடா. ...62

2932

நிற்குருகா வஞ்ச நினைவால் நினைத்தவெலாஞ்

சற்குருவே யெண்ணுதொறுந் தாது கலங்குதடா. ...63

2933

வெந்நரகில் வீழும் விளைவால் விளம்பியதை

என்னரசே யெண்ணுதொறு மென்னை விழுங்குதடா. ...64

2934

நன்கறியேன் வாளா நவின்ற நவையனைத்தும்

என்குருவே யெண்ணுதொறு மென்னை விழுங்குதடா. ...65v

2935

ஆவ தறியா தடியே னிகழ்ந்தகொடும்

பாவ நினைக்கிற் பகீரென் றலைக்குதடா. ...66

2936

வந்திப் பறியேன் வழங்கியவன் சொல்லையெலாம்

சிந்திக் கிலுள்ளே திடுக்கிட் டழுங்குதடா. ...67

2937

குற்ற நினைத்த கொடுஞ்சொலெலா மென்னுளத்தே

பற்ற நினைக்கிற் பயமா யிருக்குதடா. ...68

2938

எள்ளுகின்ற தீமை யெடுத்துரைத்தே னாங்கதனை

விள்ளுகின்ற தோறு முள்ளம்வெந்து வெதும்புதடா. ...69

திருச்சிற்றம்பலம்

-------------------------

## 29. திருவடிக் கண்ணி (2939 - 2949)

தாழிசை

2939

மின்னிடையாள் காண விளங்குமன்றி லாடுகின்றாய்

என்னுடையா யுன்ற னிணையடிதான் நோவாதா. ...1

2940

வன்னமுதே யின்ப மலியமன்றி லாடுகின்றாய்

என்னமுதே யுன்ற னிணையடிதான் நோவாதா. ...2

2941

நண்ணியமெய் யன்பர் நயக்கமன்றி லாடுகின்றாய்

புண்ணியனே யுன்றனது பொன்னடிதான் நோவாதா. ...3

2942

அன்பரின்பங் கொள்ளநட மம்பலத்தே யாடுகின்றாய்

இன்புருவா முன்ற னிணையடிதான் நோவாதா. ...4

2943

நூலுணர்வா நுண்ணுணர்வி னோக்கநட மாடுகின்றாய்
மாலறியா வுன்றன் மலர்ப்பாதம் நோவாதா. ...5

2944

எள்ளலற வம்பலத்தே யின்பநட மாடுகின்றாய்
வள்ளலே யுன்றன் மலரடிதான் நோவாதா. ...6

2945

சைவ நிலைத்துத் தழைத்தோங்க வாடுகின்றாய்
தெய்வ மணியே திருவடிதான் நோவாதா. ...7

2946

எல்லாரு மின்புற் றிருக்கநட மாடுகின்றாய்
வல்லாரின் வல்லாய் மலர்ப்பாதம் நோவாதா. ...8

2947

அவமே கழிந்தின்ப மன்பர்கொள வாடுகின்றாய்
சிவமே நினது திருவடிதான் நோவாதா. ...9

2948

தற்பரமா மன்றிற் றனிநடன மாடுகின்றாய்
சிற்பரமே யுன்றன் திருமேனி நோவாதா. ...10

2949

வில்வவேர் மாலை மிளிர்ந்தசைய வாடுகின்றாய்

செல்வமே யுன்றன் திருமேனி நோவாதா. . ..11

திருச்சிற்றம்பலம்

-------------------------

## 30. பேரன்புக் கண்ணி (2950 - 2963)

தாழிசை

2950

கற்றதென்றுஞ் சாகாத கல்வியென்று கண்டுகொண்டுன்

அற்புதச்சிற் றம்பலத்தி லன்புவைத்தேன் ஐயாவே. ...1

2951

ஈடணைகள் நீக்கிநமக் கின்பளிக்கு மென்றுமன்றில்

ஆடுந் திருவடிக்கே ஆசைவைத்தேன் ஐயாவே. ...2

2952

நானந்த மெய்தா நலம்பெறவே யெண்ணிமன்றில்

ஆனந்த நாடகத்துக் கன்புவைத்தேன் ஐயாவே. ...3

2953

வாடலறச் சாகா வரங்கொடுக்கு மென்றுமன்றில்

ஆடலடிப் பொன்மலர்க்கே அன்புவைத்தேன் ஐயாவே. ...4

2954

பொற்புறவே பொன்றாப் பொருளளிக்கு மென்றுமன்றில்

அற்புதப்பொற் சேவடிக்கே அன்புவைத்தேன் ஐயாவே. ...5

2955

ஈனமறுத் தென்றும் இறவாமை நல்குமென்றே

ஞானமணி மன்றிடத்தே நண்புவைத்தேன் ஐயாவே. ...6

2956

ஓர்துணைநின் பொன்னடியென் றுன்னுகின்றே னுன்னையன்றி

ஆர்துணையும் வேண்டேனென் அன்புடைய ஐயாவே. ...7

2957

பூசைசெய்து பெற்றவுன்றன் பொன்னடிமே லன்றியயல்

ஆசையொன்று மில்லையெனக் கன்புடைய ஐயாவே. ...8

2958

இச்சைநின்மே லன்றியெனக் கெள்ளளவும் வேறுமொன்றில்

இச்சையிலை நின்னாணை யென்னருமை ஐயாவே. ...9

2959

எப்படிநின் னுள்ள மிருக்கின்ற தென்னளவில்

அப்படிநீ செய்கவெனக் கன்புடைய ஐயாவே. . ..10

2960

எவ்வண்ணம் நின்கருத்திங் கென்னளவி லெண்ணியதோ

அவ்வண்ணஞ் செய்கவெனக் கன்புடைய ஐயாவே. ...11

2961

தேசுறுநின் றண்ணருளாந் தெள்ளமுதங் கொள்ளவுள்ளே

ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐயாவே. ...12

2962

மாசறுநின் பொன்னருளா மாமணிபெற் றாடவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐயாவே. ...13

2963

நாசமிலா நின்னருளாம் ஞானமருந் துண்ணவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐயாவே. ...14

திருச்சிற்றம்பலம்

---------------------

## 31. நடேசர் கொம்மி (2964 -2979)

சிந்து

பல்லவி

2964

கொம்மிய டிப்பெண்கள் கொம்மி யடி - இரு
கொங்கைகு லுங்கவே கொம்மியடி. ...1

பல்லவி எடுப்பு

2965

நம்மை யாளும்பொன் னம்பல வாணனை
நாடிக் கொம்மிய டியுங்க டி - பதம்
பாடிக் கொம்மிய டியுங்கடி. கொம்மி ...1

கண்ணிகள்

2966

காம மகற்றிய தூய னடி - சிவ

காம சவுந்தரி நேய னடி

மாமறை யோதுசெவ் வாய னடி - மணி

மன்றெனு ஞானவா காயனடி. கொம்மி ...1

2967

ஆனந்தத் தாண்டவ ராஜ னடி - நமை

ஆட்கொண் டருளிய தேஜ னடி

வானந்த மாமலை மங்கை மகிழ் - வடி

வாளன டிமண வாளனடி. கொம்மி ...2

2968

கல்லைக் கனிவிக்குஞ் சுத்த னடி - முடி

கங்கைக் கருளிய கர்த்த னடி

தில்லைச்சி தம்பர சித்த னடி - தேவ

சிங்கம டியுயர் தங்கமடி. கொம்மி ...3

2969

பெண்ணொரு பால்வைத்த மத்த னடி - சிறு

பிள்ளைக் கறிகொண்ட பித்த னடி

நண்ணி நமக்கரு ளத்த னடி - மிக

நல்லன டியெல்லாம் வல்லனடி. கொம்மி ...4

2970

அம்பலத் தாடல்செய் ஐய னடி - அன்பர்

அன்புக் கெளிதரு மெய்ய னடி

தும்பை முடிக்கணி தூய னடி - சுயஞ்

சோதிய டிபரஞ் சோதியடி. கொம்மி ...5

---------------------------

32. தோழியர் உரையாடல் (2971 - 2976)

தாழிசை

2971

தண்மதி யொண்முகப் பெண்மணி யே - உன்னைத்

தான்கொண்ட நாயக ராரே டி

அண்மையிற் பொன்னணி யம்பலத் தாடல்செய்

ஐய ரமுத ரழகரடி. ...1

2972

செங்கயற் கண்மட மங்கைநல் லாய் - உன்றன்

செங்கை பிடித்தவ ராரே டி

அங்கய லாரன்று பொன்னம்ப லத்தெங்கள்

ஆனந்தத் தாண்டவ ராஜனடி. ...2

2973

கன்னற் சுவைமொழி மின்னிடை யாய் - உன்னைக்

கன்னி யழித்தவ ராரே டி

உன்னற் கரியபொன் னம்பலத் தாடல்செய்

உத்தம ரானந்த சித்தரடி. ...3

2974

தீமையி லாதபெண் மாமயி லே - உன்னைச்

சேர்ந்து கலந்தவ ராரே டி

தாமமு டிக்கணிந் தம்பலத் தேயின்பத்

தாண்டவஞ் செய்யுஞ் சதுரரடி. ...4

2975

அன்னந டைப்பெண்க ளாரமு தே - உன்னை

அன்பிற் புணர்ந்தவ ராரே டி

துன்ன லுடையின ரம்பலத் தேநின்ற

தூய திருநட ராயரடி. ...5

2976

காரள கப்பெண் சிகாமணி யே - உன்றன்

கற்பை யழித்தவ ராரே டி

பேரள வைக்கடந் தம்பலத் தேநின்ற

பித்தர் பரானந்த நித்தரடி. ...6

திருச்சிற்றம்பலம்

----------------------------

33. தெண்டனிட்டேன் (2977 - 2985)

சிந்து

பல்லவி

2977

தெண்டனிட்டே னென்று சொல்ல டி - சு வாமிக்குநான்

தெண்டனிட்டே னென்று சொல்லடி. ...1

பல்லவி எடுப்பு

2978

தண்டலை விளங்குந் தில்லைத் தலத்திற்பொன் னம்பலத்தே

கண்டவர் மயங்கவேடங் கட்டியாடு கின்றவர்க்கு தெண்ட ...1

கண்ணிகள்

2979

கற்பூர வாசம்வீசும் பொற்பாந்தி ருமுகத்தே

கனிந்தபுன் னகையாடக் கருணைக்க டைக்கணாட

அற்பார்பொன் னம்பலத்தே ஆனந்தத் தாண்டவம்

ஆடிக்கொண் டேயென்னை ஆட்டங்கண் டாருக்கு தெண்ட ...1

2980

இழிந்தாலு நம்மையிங்கே யேற்றுவா ரென்றடைந்தால்

ஏற்றுவார் போலேபின்னு மிழியவைப் பாருக்குப்

பழந்தான் நழுவிமெல்லப் பாலில் விழுந்ததென்னப்

பசப்பிப் பசப்பியன்பர் பண்டம் பறிப்பவர்க்கு தெண்ட ...2

2981

சுட்டதிரு நீறுபூசித் தொந்தோமென் றாடுவார்க்குத்

தோன்றுதலை மாலையணி தோள்விளங்க வருவார்க்குப்

பிட்டுக்காசைப் பட்டுமாறன் பிரம்படி பட்டவர்க்குப்

பிள்ளைக்கறிக் காசைகொண்ட கள்ளத்தவ வேடருக்கு தெண்ட ...3

2982

வாழ்ந்தாரை மேன்மேலும் வாழச்செய் பவருக்கு

மாசுபறித் தவர்கையிற் காசுபறிக் கின்றவர்க்குத்

தாழ்ந்தாரை யடிக்கடி தாழக்காண் பவருக்குத்

தானாகி நானாகித் தனியேநின் றவருக்கு தெண்ட ...4

2983

ஆதியந்த நடுவில்லா ஆனந்த நாடருக்கு

அண்டருயிர் காத்தமணி கண்டசசி கண்டருக்குச்

சோதிமய மாய்விளங்குந் தூயவடி வாளருக்குத்

தொண்டர்குடி கெடுக்கவே துஜங்கட்டிக் கொண்டவர்க்கு தெண்ட ...5

2984

பாட்டுக்காசைப் பட்டுமுன்னம் பரவைதன் வாயிலிற்போய்ப்

பண்புரைத்துத் தூதனென்றே பட்டங்கட்டிக் கொண்டவர்க்கு

வீட்டுக்காசைப் படுவாரை வீட்டைவிட்டுத் துரத்தியே

வேட்டாண்டி யாயுலகில் ஓட்டாண்டி யாக்குவார்க்கு தெண்ட ...6

2985

தாய்வறிற்றிற் பிறவாது தானே முளைத்தவர்க்குச்

சாதிகுல மறியாது தாண்டவஞ்செய் கின்றவர்க்கு

ஏய தொழிலருளு மென்பிராண நாயகர்க்கு

ஏமாந்த வரையெல்லாம் ஏமாத்து மீசருக்கு ...7

தெண்டனிட்டே னென்று சொல்ல டி - சு வாமிக்குநான்

தெண்டனிட்டே னென்று சொல்ல டி.

திருச்சிற்றம்பலம்

-----------------------------

34. இன்னந் தயவு வரவிலையா (2986 - 2992)

சிந்து

பல்லவி

2986

இன்னந் தயவுவர விலையா - உனக்கென்மீதில்

என்ன வர்மஞ் சொலையா. ...1

கண்ணிகள்

2987

அன்னம் பாலிக்குந்தில்லைப் பொன்னம் பலத்திலாடும்

அரசே - அரசே - அரசேயென் றலறவும் இன்னந் ...1

2988

சின்னஞ் சிறுவயதி லென்னை யடிமைகொண்ட

சிவமே - சிவமே - சிவமேயென் றலறவும் இன்னந் ...2

2989

முன்னம் பிழைபொறுத்தா யின்னம் பொறாதுவிட்டால்

முறையோ - முறையோ - முறையோவென் றலறவும் இன்னந் ...3

2990

தன்னை யறியாவென்னை யின்ன லுறச்செய்தாயே

தருமோ - தருமோ - தருமோவென் றலறவும் இன்னந் ...4

2991

பண்டு மகிழ்ந்தெனையாட் கொண்டு கருணைசெய்த

பரமே - பரமே - பரமேயென் றலறவும் இன்னந் ...5

2992

கொண்டு குலம்பேசுவா ருண்டோ வுலகிலெங்கள்

குருவே - குருவே - குருவேயென் றலறவும் ...6

இன்னந் தயவுவர விலையா - உனக்கென்மீதில்

என்ன வர்மஞ் சொலையா.

திருச்சிற்றம்பலம்

-------------------------------

35. வினா விடை (2993 - 2995)

கொச்சகக் கலிப்பா

2993

ஆகமமு மாரணமு மரும்பொருளென் றொருங்குரைத்த

ஏகவுரு வாகிநின்றா ரிவரார்சொல் தோழி

மாகநதி முடிக்கணிந்து மணிமன்று ளனவரத

நாகமணி மிளிரநட நவில்வார்காண் பெண்ணே. ...1

தாழிசை

2994

அருளாலே அருளிறை அருள்கின்ற பொழுதங்

கனுபவ மாகின்ற தென்னடி தாயே

தெருளாலே மருளாலே தெரியாது தெரியும்

திருநட இன்பம்என் றறியாயோ மகளே. ...2

2995

அறிவாலே அறிவினை அறிகின்ற பொழுதங்

கனுபவ மாகின்ற தென்னடி தாயே

செறிவாலே பிறிவாலே தெரியாது தெரியும்

திருவருள் உருவம்என் றறியாயோ மகளே. ...3

திருச்சிற்றம்பலம்

----------------------

36. நற்றாய் கவன்றது (2996 - 3004)

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

2996

திருவருட் புனிதை மகிழநின் றாடும் தில்லைமன் றழகனே என்பாள்

மருவருட் கடலே மாணிக்க மலையே மதிச்சடை வள்ளலே என்பாள்

இருவருக் கரிய ஒருவனே எனக்கிங் கியார்துணை நின்னலா தென்பாள்

வெருவிஉட் குழைவாள் விழிகணீர் துளிப்பாள் வெய்துயிர்ப் பாள்என்றன் மின்னே. ...1

2997

ஓடுவாள் தில்லைத் திருச்சிற்றம் பலம்என் றுருகுவாள் உணர்விலள் ஆகித்

தேடுவாள் திகைப்பாள் தியங்குவாள் ஐயோ தெய்வமே தெய்வமே என்பாள்

பாடுவாள் பதைப்பாள் பதறுவாள் நான் பெண்பாவி காண்பாவிகாண் என்பாள்

வாடுவாள் மயங்கி வருந்துவாள் இருந்து வல்வினை யேன்பெற்ற மகளே. ...2

2998

உலகெலாந் தழைப்பப்பொதுவினில் ஓங்கும் ஒருதனித் தெய்வம்என்கின்றாள்

இலகுபே ரின்ப வாரிஎன் கின்றாள் என்னுயிர்க் கிறைவன்என் கின்றாள்

அலகிலாக் கருணை அமுதன்என் கின்றாள் அன்பர்கட்கன்பன்என் கின்றாள்

திலகவா ணுதலாள் இவ்வணம் புலம்பித் தியக்கமுற் றழுங்குகின் றாளே. ...3

2999

திருஎலாம்அளிக்கும் தெய்வம்என் கின்றாள் திருச்சிற் றம்பலவன்என்கின்றாள்

உருஎலாம் உடைய ஒருவன்என் கின்றாள் உச்சிமேல் கரங்குவிக் கின்றாள்

கருஎலாங் கடந்தாங் கவன்திரு மேனி காண்பதெந் நாள்கொல்என் கின்றாள்

மருஎலாம்மயங்கும் மலர்க்குழல் முடியாள் வருந்துகின்றாள்என்றன் மகளே. ...4

3000

மின்இணைச் சடில விடங்கன்என் கின்றாள் விடைக்கொடி விமலன்என் கின்றாள்

பொன்இணை மலர்த்தாள் புனிதன்என் கின்றாள் பொதுவிலே நடிப்பன்என் கின்றாள்

என்இணை விழிகள் அவன்திரு அழகை என்றுகொல் காண்பதென் கின்றாள்

துன்இணை முலைகள் விம்முற இடைபோல் துவள்கின்றாள் பசியபொற் றொடியே. ...5

3001

கருங்களிற் றுரிபோர்த் தம்பலத் தாடும் கருணைஎங் கடவுள்என் கின்றாள்

பெருங்களி துளும்ப வடவனத் தோங்கும் பித்தரில் பித்தன்என் கின்றாள்

ஒருங்களி மிழற்றும் குழலினார் என்போல் உறுவரோ அவனைஎன்கின்றாள்

தருங்களி உண்டாள் போல்கின்றாள் நாணும் தவிர்க்கின்றாள் என்அருந் தவளே. ...6

3002

மன்றிடை நடிக்கும் மணாளனை அல்லால் மதிப்பனோ பிறரைஎன்கின்றாள்

வன்துயர் நீக்கும் அவன்திரு வடிவை மறப்பனோ கணமும்என் கின்றாள்

ஒன்றுமில் லவன்என் றுரைக்கினும் எல்லாம் உடையவன்ஆகும்என்கின்றாள்

பொன்றுதல் பிறழ்தல் இனியுறேன் என்றே பொற்றொடி பொங்குகின்றாளே. ...7

3993

திருத்தகு தில்லைத் திருச்சிற்றம்பலத்தே தெய்வம்ஒன் றுண்டெமக்கென்பாள்

பெருத்தகுங் குமப்பொற் கலசவாண் முலையார் பேசுக பலபல என்பாள்

மருத்தகு குழலாள் மனமொழி உடலம் மற்றவும் அவன்கழற் கென்பாள்

குருத்தகு குவளைக் கண்ணின்நீர் கொழிப்பாள் குதுகுலிப் பாள்பசுங் கொடியே. ...8

3994

அம்பலத் தாடும் அழகனைக் காணா தருந்தவும் பொருந்துமோ என்பாள்

கம்பமுற் றிடுவாள் கண்கள்நீர் உகுப்பாள் கைகுவிப் பாள்உளங் கனிவாள்

வம்பணி முலைகள் இரண்டும்நோக் கிடுவாள் வள்ளலைப்பரிகிலீர் என்பாள்

உம்பரன் தவஞ்செய் திடுமினீர் என்பாள் உயங்குவாள்
மயங்குவாள் உணர்வே. ...9

திருச்சிற்றம்பலம்

----------------------------

## 37. சல்லாப லகரி (3995 - 3996)

கலிநிலைத்துறை (182)

3995

சுந்தர நீறணி சுந்தரர் நடனத் தொழில்வல்லார்

வந்தனர் இங்கே வந்தனம் என்றேன் மாதேநீ

மந்தணம் இதுகேள் அந்தனம் இலநம் வாழ்வெல்லாம்

அந்தரம் என்றார் என்னடி அம்மா அவர்சூதே. ...1

3996

நம்பல மாம்என நன்மனை புக்கார் நடராஜர்

எம்பல மாவீர் எம்பெரு மானீ ரேஎன்றேன்

வம்பல மடவாய் எம்முடை இன்ப வாழ்வெல்லாம்

அம்பலம் என்றார் என்னடி அம்மா அவர்சூதே. ...2

திருச்சிற்றம்பலம்

---

182. கலிச்சந்த விருத்தம். தொ. வே. 1, 2. ச. மு. க.
கலிநிலைத்துறை. ஆ. பா.

---------------------

## 38. தலைமகளின் முன்ன முடிபு (3007 - 3016)

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3007

வெறுத்துரைத்தேன் பிழைகளெலாம் பொறுத்தருளல் வேண்டும்

விளங்கறிவுக் கறிவாகி மெய்ப்பொதுவில் நடிப்போய்

கறுத்துரைத்தார் தமக்கும்அருள் கனிந்துரைக்கும் பெரிய

கருணைநெடுங் கடலேமுக் கண்ணோங்கு கரும்பே

மறுத்துரைப்ப தெவன்அருள்நீ வழங்குகினும் அன்றி

மறுத்திடினும் உன்னையலால் மற்றொருசார் பறியேன்

செறுத்துரைத்த உரைகளெலாம் திருவருளே என்று

சிந்திப்ப தல்லாமல் செய்வகைஒன் றிலனே. ...1

3008

மிகுத்துரைத்தேன் பிழைகளெலாம் சகித்தருளல் வேண்டும்

மெய்யறிவின் புருவாகி வியன்பொதுவில் நடிப்போய்

தொகுத்துரைத்த மறைகளும்பின் விரித்துரைத்தும் காணாத்

துரியநடு வேஇருந்த பெரியபரம் பொருளே

பகுத்துரைத்த பயன்உரைக்கோர் பொருளாகி விளங்கும்

பரஞ்சுடரே பரம்பரனே பசுபதியே அடியேன்

வகுத்துரைப்ப தெவன்அருள்நீ வழங்குகினும் அன்றி

மறுத்திடினும் உன்னையலால் மற்றொருசார் பிலனே. ..2

3009

முன்னவனே சிறியேன்நான் சிறிதும்அறி யாதே

முனிந்துரைத்த பிழைபொறுத்துக் கனிந்தருளல் வேண்டும்

என்னவனே என்துணையே என்உறவே என்னை

ஈன்றவனே என்தாயே என்குருவே எனது

மன்னவனே என்னுடைய வாழ்முதலே என்கண்

மாமணியே மணிமிடற்றோர் மாணிக்க மலையே

அன்னவனே அம்பலத்துள் ஆடுகின்ற அமுதே

ஆறணிந்த சடையாய்யான் வேறுதுணை இலனே. . ..3

3010

சினந்துரைத்தேன் பிழைகளெலாம் மனம்பொறுத்தல் வேண்டும்

தீனதயா நிதியேமெய்ஞ் ஞானசபா பதியே

புனைந்துரைப்பார் அகத்தொன்றும் புறத்தொன்றும் நினைத்தே

பொய்யுலகர் ஆங்கவர்போல் புனைந்துரைத்தேன் அலன்நான்

இனந்திருந்தி எனையாட்கொண் டென்னுள்அமர்ந் தெனைத்தான்

எவ்வுலகும் தொழநிலைமேல் ஏற்றியசற் குருவே

கனந்தருசிற் சுகஅமுதம் களித்தளித்த நிறைவே

கருணைநடத் தரசேஎன் கண்ணிலங்கு மணியே. ...4

3011

ஊடுதற்கோர் இடங்காணேன் உவக்கும்இடம் உளதோ

உன்னிடமும் என்னிடமும் ஓர்இடம்ஆ தலினால்

வாடுதற்கு நேர்ந்திடிலோ மாட்டாமை யாலும்

மனம்பிடியா மையினாலும் சினந்துரைத்தேன் சிலவே

கூடுதற்கு வல்லவன்நீ கூட்டிஎனைக் கொண்டே

குலம்பேச வேண்டாம்என் குறிப்பனைத்தும் அறிந்தாய்

நாடுதற்கிங் கென்னாலே முடியாது நீயே

நாடுவித்துக் கொண்டருள்வாய் ஞானசபா பதியே. ...5

3012

என்னுளம்நீ கலந்துகொண்டாய் உன்னுளம்நான் கலந்தேன்

என்செயல்உன் செயல்உன்றன் இருஞ்செயல்என் செயலே

பின்னுளநான் பிதற்றல்எலாம் வேறுகுறித் தெனைநீ

பிழைஏற்ற நினைத்திடிலோ பெருவழக்கிட் டிடுவேன்

அன்னையினும் தயவுடையாய் அப்பன்எனக் கானாய்

அன்றியும்என் ஆருயிருக் காருயிராய் நிறைந்தாய்

மன்னுமணிப் பொதுநடஞ்செய் மன்னவனே கருணை

மாநிதியே எனக்கருள்வாய் மனக்கலக்கந் தவிர்த்தே. ...6

3013

எணங்குறியேன் இயல்குறியேன் ஏதுநினை யாதே

என்பாட்டுக் கிருந்தேன்இங் கெனைவலிந்து நீயே

மணங்குறித்துக் கொண்டாய்நீ கொண்டதுதொட் டெனது

மனம்வேறு பட்டதிலை மாட்டாமை யாலே

கணங்குறித்துச் சிலபுகன்றேன் புகன்றமொழி எனது

கருத்தில்இலை உன்னுடைய கருத்தில்உண்டோ உண்டேல்

குணங்குறிப்பான் குற்றம்ஒன்றுங் குறியான்என் றறவோர்

கூறிடும்அவ் வார்த்தைஇன்று மாறிடுமே அரசே. ...7

3014

மனம்பிடியா மையினாலோ மாட்டாமை யாலோ

மறதியினா லோஎனது வருத்தமத னாலோ

தினம்பிடியா மயக்காலோ திகைப்பாலோ பிறர்மேல்

சினத்தாலோ எதனாலோ சிலபுகன்றேன் இதனைச்

சினம்பிடியாத் தேவர்திரு வுளம்பிடியா தெனவே

சிந்தைகளித் திருக்கின்றேன் திருவுளத்தை அறியேன்

இனம்பிடியா மையும்உண்டோ உண்டெனில்அன் புடையார்

ஏசல்புகழ் பேசல்என இயம்புதல்என் உலகே. ...8

3015

நாயகரே உமதுவசம் நான்இருக்கின் றதுபோல்

நாடியதத் துவத்தோழி நங்கையர்என் வசத்தே

மேயவர்ஆ காமையினால் அவர்மேல்அங் கெழுந்த

வெகுளியினால் சிலபுகன்றேன் வேறுநினைத் தறியேன்

தூயவரே வெறுப்புவரில் விதிவெறுக்க என்றார்

சூழவிதித் தாரைவெறுத் திடுதல்அவர் துணிவே

தீயவர்ஆ யினும்குற்றம் குறியாது புகன்றால்

தீமொழிஅன் றெனத்தேவர் செப்பியதும் உளதே. ...9

3016

குற்றம்ஒரு சிறிதெனினும் குறித்தறியேன் வேறோர்
குறைஅதனால் சிலபுகன்றேன் குறித்தறியேன் மீட்டும்
சற்றுமனம் வேறுபட்ட தில்லைகண்டீர் எனது
சாமிஉம்மேல் ஆணைஒரு சதுரும்நினைத் தறியேன்
பெற்றவளும் உற்றவரும் சுற்றமும்நீர் என்றே
பிடித்திருக்கின் றேன்பிறிதோர் வெடிப்பும்உரைத் தறியேன்
இற்றைதொடுத் தென்அளவில் வேறுநினை யாதீர்
என்னுடைய நாயகரே என்ஆசை இதுவே. ...10

திருச்சிற்றம்பலம்

-----------------------

39. வேட்கைக் கொத்து (3017 - 3026)

தலைமகள் பாங்கியொடு கூறல்

எண்சீர்க் கழிநெடிலடிச் சந்த விருத்தம்

3017

விண்படைத்த பொழிற்றில்லை(183) அம்பலத்தான் எவர்க்கும்
மேலானான் அன்பருளம் மேவுநட ராஜன்
பண்படைத்த எனைஅறியா இளம்பருவந் தனிலே
பரிந்துவந்து மாலையிட்டான் பார்த்தறியான் மீட்டும்
பெண்படைத்த பெண்களெல்லாம் அவமதித்தே வலது
பேசுகின்றார் கூசுகின்றேன் பிச்சிஎனல் ஆனேன்

கண்படைத்தும் குழியில்விழக் கணக்கும்உண்டோ அவன்றன்

கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாய்என் தோழீ. ...1

3018

சீத்தமணி அம்பலத்தான் என்பிராண நாதன்

சிவபெருமான் எம்பெருமான் செல்வநட ராஜன்

வாய்த்தஎன்னை அறியாத இளம்பருவந் தனிலே

மகிழ்ந்துவந்து மாலையிட்டான் மறித்தும்முகம் பாரான்

ஆய்த்தகலை கற்றுணர்ந்த அணங்கனையார் தமக்குள்

ஆர்செய்த போதனையோ ஆனாலும் இதுகேள்

காய்த்தமரம் வளையாத கணக்கும்உண்டோ அவன்றன்

கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாய்என் தோழீ. ...2

3019

என்னுயிரில் கலந்துகலந் தினிக்கின்ற பெருமான்

என்இறைவன் பொதுவில்நடம் இயற்றும்நட ராஜன்

தன்னைஅறி யாப்பருவத் தென்னைமணம் புரிந்தான்

தனைஅறிந்த பருவத்தே எனைஅறிய விரும்பான்

பின்னைஅன்றி முன்னும்ஒரு பிழைபுரிந்தேன் இல்லை

பெண்பரிதா பங்காணல் பெருந்தகைக்கும் அழகோ

கன்னல்என்றால் கைக்கின்ற கணக்கும்உண்டோ அவன்றன்

கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாய்என் தோழீ. ...3

3020

தெருளமுதத் தனியோகர் சிந்தையிலும் ஞானச்

செல்வர்அறி விடத்தும்நடஞ் செய்யும்நட ராஜன்

அருளமுதம் அளிப்பன்என்றே அன்றுமணம் புணர்ந்தான்

அளித்தறியான் அணுத்துணையும் அனுபவித்தும் அறியேன்

மருளுடையான் அல்லன்ஒரு வஞ்சகனும் அல்லன்

மனம்இரக்கம் மிகஉடையான் வல்வினையேன் அளவில்

இருளுடையார் போலிருக்கும் இயல்பென்னை அவன்றன்

இயல்பறிந்தும் விடுவேனோ இனித்தான்என் தோழீ. ...4

3921

சின்மயமாம் பொதுவினிலே தன்மயமாய் நின்று

திருநடஞ்செய் பெருங்கருணைச் செல்வநட ராஜன்

என்மயம்நான் அறியாத இளம்பருவந் தனிலே

என்னைமணம் புரிந்தனன்ஈ தெல்லாரும் அறிவார்

இன்மயம்இல் லாதவர்போல் இன்றுமணந் தருளான்

இறைஅளவும் பிழைபுரிந்தேன் இல்லைஅவன் இதயம்

கன்மயமோ அன்றுசுவைக் கனிமயமே என்னும்

கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாய்என் தோழீ. ...5

3922

என்குணத்தான் எல்லார்க்கும் இறைவன்எல்லாம் வல்லான்

என்அகத்தும் புறத்தும்உளான் இன்பநட ராஜன்

பெண்குணத்தை அறியாத இளம்பருவந் தனிலே

பிச்சேற்றி மணம்புரிந்தான் பெரிதுகளித் திருந்தேன்
வண்குணத்தால் அனுபவம்நான் அறியநின்ற பொழுதில்
வந்தறியான் இன்பம்ஒன்றும் தந்தறியான் அவனும்
வெண்குணத்தான் அல்லன்மிகு நல்லன்எனப் பலகால்
விழித்தறிந்தும் விடுவேனோ விளம்பாய்என் தோழீ. ...6

3923

பொய்யாத புகழுடையான் பொதுவில்நடம் புரிவான்
புண்ணியர்பால் நண்ணியநற் புனிதநட ராஜன்
கொய்யாத அரும்பனைய இளம்பருவந் தனிலே
குறித்துமணம் புரிந்தனன்நான் மறித்தும்வரக் காணேன்
செய்யாத செய்கைஒன்றும் செய்தறியேன் சிறிதும்
திருவுளமே அறியும்மற்றென் ஒருஉளத்தின் செயல்கள்
நையாத என்றன்உயிர் நாதன்அருட் பெருமை
நானறிந்தும் விடுவேனோ நவிலாய்என் தோழீ. ...7

3924

கண்ணனையான் என்னுயிரில் கலந்துநின்ற கணவன்
கணக்கறிவான் பிணக்கறியான் கருணைநட ராஜன்
தண்ணனையாம் இளம்பருவந் தன்னில்எனைத் தனித்துத்
தானேவந் தருள்புரிந்து தனிமாலை புனைந்தான்
பெண்ணனையார் கண்டபடி பேசவும்நான் கூசாப்
பெருமையொடும் இருந்தேன்என் அருமைஎலாம் அறிந்தான்

உண்ணனையா வகைவரவு தாழ்த்தனன்இன் றவன்றன்

உளம்அறிந்தும் விடுவேனோ உரையாய்என் தோழீ. ...8

3925

ஊன்மறந்த உயிரகத்தே ஒளிநிறைந்த ஒருவன்

உலகமெலாம் உடையவன்என் னுடையநட ராஜன்

பான்மறந்த சிறியஇனம் பருவமதின் மாலைப்

பரிந்தணிந்தான் தெரிந்ததனிப் பருவமிதிற் பரியான்

தான்மறந்தான் எனினும்இங்கு நான்மறக்க மாட்டேன்

தவத்தேறி அவத்திழியச் சம்மதமும் வருமோ

கோன்மறந்த குடியேபோல் மிடியேன்நான் அவன்றன்

குணம்அறிந்தும் விடுவேனோ கூறாய்என் தோழீ. ...9

3926

தனித்தபர நாதமுடித் தலத்தின்மிசைத் தலத்தே

தலைவரெலாம் வணங்கநின்ற தலைவன்நட ராசன்

இனித்தசுகம் அறிந்துகொளா இளம்பருவந் தனிலே

என்புருவ நடுஇருந்தான் பின்புகண்டேன் இல்லை

அனித்தம்இலா இச்சரிதம் யார்க்குரைப்பேன் அந்தோ

அவன்அறிவான் நான்அறிவேன் அயலறிவார் உளரோ

துனித்தநிலை விடுத்தொருகால் சுத்தநிலை அதனில்

சுகங்கண்டும் விடுவேனோ சொல்லாய்என் தோழீ. ...10

திருச்சிற்றம்பலம்

-----------------

183. இறுக்கம் இரத்தின முதலியார்க்கு 26-11-1866 இல் வரைந்த திருமுகத்தில் ' விண்படைத்த பொழிற்றில்லை அம்பலத்தான் எவர்க்கு மேலானா னன்பருள மேவு நடராஜன் எனல் வேண்டும் ' என வள்ளற்பெருமான் திருத்தமொன்றை அருளியுள்ளார். திரு அருட்பா உரைநடைப்பகுதி, ஊரன் அடிகள் பதிப்பு பக்கம், 399 காண்க. எனினும் 1867 தொ. வே. முதற் பதிப்பில் ' விண்படைத்த புகழ்த்தில்லை ' என்றே அச்சாகியுள்ளது. பின்வந்த பதிப்புகளிலும் அவ்வாறே. ஆ. பா. மட்டும் பெருமானின் திருத்தத்தைப் பின்பற்றி ' விண் படைத்த பொழிற்றில்லை ' எனப் பதிப்பித்துள்ளார்.

---------------------------

40. அறநிலை விளக்கம் (3927)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3927

மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்தில் கண்விழித்து வயங்கும் அப்பெண்

உருவாணை உருவாக்கி இறந்தவரை எழுப்புகின்ற உறுவ னேனும்

கருவாணை யுறஇரங்கா துயிருடம்பைக் கடிந்துண்ணுங் கருத்த னேல்எங்

குருவாணை எமதுசிவக் கொழுந்தாணை ஞானிஎனக் கூறொ ணாதே.(184) ...1

திருச்சிற்றம்பலம்

— — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — —
— — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — — —
— — — — — — — — — — — — — — — — — — — —

184. இறுக்கம் இரத்தின முதலியார்க்கு வரைந்த திருமுகமொன்றின் தொடக்கத்தில் பெருமான் இப்பாடலை எழுதியருளியுள்ளார். திரு அருட்பா உரைநடைப்பகுதி, ஊரான் அடிகள் பதிப்பு, பக்கம் 385 காண்க.

-------

## 41. அருள்நிலை விளக்கம் (3928)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3928

மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக் கில்லைஎன்றார் மேலோர் நானும்

பொய்விளக்கே விளக்கெனஉட் பொங்கிவழி கின்றேன்ஓர் புதுமை அன்றே

செய்விளக்கும் புகழுடைய சென்னநகர் நண்பர்களே செப்பக் கேளீர்

நெய்விளக்கே போன்றொருதண் ணீர்விளக்கும் எரிந்ததுசந் நிதியின் முன்னே.(185) ...1

3929

அற்புதப்பொன் அம்பலத்தே ஆடுகின்ற அரசே

ஆரமுதே அடியேன்றன் அன்பேஎன் அறிவே

கற்புதவு பெருங்கருணைக் கடலேஎன் கண்ணே

கண்ணுதலே ஆனந்தக் களிப்பேமெய்க் கதியே

வெற்புதவு பசுங்கொடியை மருவுபெருந் தருவே
வேதஆ கமமுடியின் விளங்கும்ஒளி விளக்கே
பொற்புறவே இவ்வுலகில் பொருந்துசித்தன் ஆனேன்
பொருத்தமும் நின்திருவருளின் பொருத்தமது தானே.

1

3930

நிறைஅணிந்த சிவகாமி நேயநிறை ஒளியே
நித்தபரி பூரணமாம் சுத்தசிவ வெளியே
கறைஅணிந்த களத்தரசே கண்ணுடைய கரும்பே
கற்கண்டே கனியேஎன் கண்ணேகண் மணியே
பிறைஅணிந்த முடிமலையே பெருங்கருணைக் கடலே
பெரியவரெல் லாம்வணங்கும் பெரியபரம் பொருளே
குறைஅணிந்து திரிகின்றேன் குறைகளெலாந் தவிர்த்தே
குற்றமெலாங் குணமாகக் கொள்வதுநின் குணமே.

2

3931

ஆண்பனைபெண் பனையாக்கி அங்கமதங் கனையாய்
ஆக்கிஅருண் மணத்தில்ஒளி அனைவரையும் ஆக்கும்
மாண்பனைமிக் குவந்தளித்த மாகருணை மலையே
வருத்தமெலாந் தவிர்த்தெனக்கு வாழ்வளித்த வாழ்வே
நாண்பனையுந் தந்தையும்என் நற்குருவும் ஆகி

நாயடியேன் உள்ளகத்து நண்ணியநா யகனே

வீண்பனைபோன் மிகநீண்டு விழற்கிறைப்பேன் எனினும்

விருப்பமெலாம் நின்அருளின் விருப்பம்அன்றி இலையே.

3

3932

சித்தமனே கம்புரிந்து திரிந்துழலுஞ் சிறியேன்

செய்வகைஒன் றறியாது திகைக்கின்றேன் அந்தோ

உத்தமனே உன்னையலால் ஒருதுணைமற் றறியேன்

உன்னாணை உன்னாணை உண்மைஇது கண்டாய்

இத்தமனே யச்சலனம் இனிப்பொறுக்க மாட்டேன்

இரங்கிஅருள் செயல்வேண்டும் இதுதருணம் எந்தாய்

சுத்தமனே யத்தவர்க்கும் எனைப்போலு மவர்க்கும்

துயர்தவிப்பான் மணிமன்றில் துலங்குநடத் தரசே.

4

3933

துப்பாடு திருமேனிச் சோதிமணிச் சுடரே

துரியவெளிக் குள்ளிருந்த சுத்தசிவ வெளியே

அப்பாடு சடைமுடிஎம் ஆனந்த மலையே

அருட்கடலே குருவேஎன் ஆண்டவனே அரசே

இப்பாடு படஎனக்கு முடியாது துரையே

இரங்கிஅருள் செயல்வேண்டும் இதுதருணங் கண்டாய்

தப்பாடு வேன்எனினும் என்னைவிடத் துணியேல்
தனிமன்றுள் நடம்புரியுந் தாண்மலர்எந் தாயே.

5

3934

கண்ணோங்கு நுதற்கரும்பே கரும்பினிறை அமுதே
கற்கண்டே சர்க்கரையே கதலிநறுங் கனியே
விண்ணோங்கு வியன்சுடரே வியன்சுடர்க்குட் சுடரே
விடையவனே சடையவனே வேதமுடிப் பொருளே
பெண்ணோங்கும் ஒருபாகம் பிறங்குபெருந் தகையே
பெருமானை ஒருகரங்கொள் பெரியபெரு மானே
எண்ணோங்கு சிறியவனேன் என்னினும்நின் னடியேன்
என்னைவிடத் துணியேல்நின் இன்னருள்தந் தருளே.

6

3935

திருநெறிசேர் மெய்அடியர் திறன்ஒன்றும் அறியேன்
செறிவறியேன் அறிவறியேன் செய்வகையை அறியேன்
கருநெறிசேர்ந் துழல்கின்ற கடையரினுங் கடையேன்
கற்கின்றேன் சாகாத கல்விநிலை காணேன்
பெருநெறிசேர் மெய்ஞ்ஞான சித்திநிலை பெறுவான்
பிதற்றுகின்றேன் அதற்குரிய பெற்றியிலேன் அந்தோ
வருநெறியில் என்னைவலிந் தாட்கொண்ட மணியே

மன்றுடைய பெருவாழ்வே வழங்குகநின் அருளே.

7

3836

குன்றாத குணக்குன்றே கோவாத மணியே

குருவேஎன் குடிமுழுதாட் கொண்டசிவக் கொழுந்தே

என்றாதை யாகிஎனக் கன்னையுமாய் நின்றே

எழுமையும்என் றனை ஆண்ட என்உயிரின் துணையே

பொன்றாத பொருளேமெய்ப் புண்ணியத்தின் பயனே

பொய்யடியேன் பிழைகளெலாம் பொறுத்தபெருந் தகையே

அன்றால நிழல்அமர்ந்த அருள்இறையே எளியேன்

ஆசையெலாம் நின்னடிமேல் அன்றிஒன்றும் இலையே.

8

3837

பூணாத பூண்களெலாம் பூண்டபரம் பொருளே

பொய்யடியேன் பிழைமுழுதும் பொறுத்தருளி என்றும்

காணாத காட்சியெலாங் காட்டிஎனக் குள்ளே

கருணைநடம் புரிகின்ற கருணையைஎன் புகல்வேன்

மாணாத குணக்கொடியேன் இதைநினைக்குந் தோறும்

மனமுருகி இருகண்ணீர் வடிக்கின்றேன் கண்டாய்

ஏணாதன் என்னினும்யான் அம்மையின்நின் அடியேன்

எனஅறிந்தேன் அறிந்தபின்னர் இதயமலர்ந் தேனே.

9

3938

அந்தோஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அறிவறியாச் சிறியேனை அறிவறியச் செய்தே

இந்தோங்கு சடைமணிநின் அடிமுடியுங் காட்டி

இதுகாட்டி அதுகாட்டி என்நிலையுங் காட்டிச்

சந்தோட சித்தர்கள்தந் தனிச்சூதுங் காட்டி

சாகாத நிலைகாட்டிச் சகசநிலை காட்டி

வந்தோடு(184) நிகர்மனம்போய்க் கரைந்த இடங் காட்டி

மகிழ்வித்தாய் நின்அருளின் வண்மைஎவர்க் குளதே.

10

184. வந்து - காற்று. ச.மு.க.

3939

அன்பர்உளக் கோயிலிலே அமர்ந்தருளும் பதியே

அம்பலத்தில் ஆடுகின்ற ஆனந்த நிதியே

வன்பர்உளத் தேமறைந்து வழங்கும்ஒளி மணியே

மறைமுடிஆ கமமுடியின் வயங்குநிறை மதியே

என்பருவங் குறியாமல் என்னைவலிந் தாட்கொண்

டின்பநிலை தனைஅளித்த என்னறிவுக் கறிவே

முன்பருவம் பின்பருவங் கண்டருளிச் செய்யும்

முறைமைநின தருள்நெறிக்கு மொழிதல்அறிந் திலனே.

11

3840

பால்காட்டும் ஒளிவண்ணப் படிகமணி மலையே

பத்திக்கு நிலைதனிலே தித்திக்கும் பழமே

சேல்காட்டும் விழிக்கடையால் திருவருளைக் காட்டும்

சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகனே

மால்காட்டி மறையாதென் மதிக்குமதி யாகி

வழிகாட்டி வழங்குகின்ற வகையதனைக் காட்டிக்

கால்காட்டிக் காலாலே காண்பதுவும் எனக்கே

காட்டியநின் கருணைக்குக் கைம்மாறொன் றிலனே.

12

3841

என்னைஒன்றும் அறியாத இளம்பவருவந் தனிலே

என்உளத்தே அமர்ந்தருளி யான்மயங்குந் தோறும்

அன்னைஎனப் பரிந்தருளி அப்போதைக் கப்போ

தப்பன்எனத் தெளிவித்தே அறிவுறுத்தி நின்றாய்

நின்னைஎனக் கென்என்பேன் என்உயிர் என்பேனோ

நீடியஎன் உயிர்த்துணையாம் நேயமதென் பேனோ

இன்னல்அறுத் தருள்கின்ற என்குருவென் பேனோ

என்என்பேன் என்னுடைய இன்பமதென் பேனே.

13

3042

பாடும்வகை அணுத்துணையும் பரிந்தறியாச் சிறிய
பருவத்தே அணிந்தணிந்து பாடும்வகை புரிந்து
நாடும்வகை உடையோர்கள் நன்குமதித் திடவே
நல்லறிவு சிறிதளித்துப் புல்லறிவு போக்கி
நீடும்வகை சன்மார்க்க சுத்தசிவ நெறியில்
நிறுத்தினைஇச் சிறியேனை நின்அருள்என் என்பேன்
கூடும்வகை உடையரெலாங் குறிப்பெதிர்பார்க் கின்றார்
குற்றமெலாங் குணமாகக் கொண்டகுணக் குன்றே.

14

3043

சற்றும்அறி வில்லாத எனையும்வலிந் தாண்டு
தமியேன்செய் குற்றமெலாஞ் சம்மதமாக் கொண்டு
கற்றுமறிந் துங்கேட்டுந் தெளிந்தபெரி யவருங்
கண்டுமகி ழப்புரிந்து பண்டைவினை அகற்றி
மற்றும்அறி வனவெல்லாம் அறிவித்தென் உளத்தே
மன்னுகின்ற மெய்இன்ப வாழ்க்கைமுதற் பொருளே
பெற்றுமறி வில்லாத பேதைஎன்மேல் உனக்குப்
பெருங்கருணை வந்தவகை எந்தவகை பேசே.

15

3044

சுற்றதுமற் றவ்வழிமா சூததுஎன் றெண்ணாத்

தொண்டரெலாங் கற்கின்றார் பண்டுமின்றுங் காணார்

எற்றதும்பு மணிமன்றில் இன்பநடம் புரியும்

என்னுடைய துரையேநான் நின்னுடைய அருளால்

கற்றதுநின் னிடத்தேபின் கேட்டதுநின் னிடத்தே

கண்டதுநின் னிடத்தேஉட் கொண்டதுநின் னிடத்தே

பெற்றதுநின் னிடத்தேஇன் புற்றதுநின் னிடத்தே

பெரியதவம் புரிந்தேன்என் பெற்றிஅதி சயமே.

16

3845

ஏறியநான் ஒருநிலையில் ஏறஅறி யாதே

இளைக்கின்ற காலத்தென் இளைப்பெல்லாம் ஒழிய

வீறியலூர் பருவசத்தி கைகொடுத்துத் தூக்கி

மேலேற்றச் செய்தவளை மேவுறவுஞ் செய்து

தேறியநீர் போல்எனது சித்தமிகத் தேறித்

தெளிந்திடவுஞ் செய்தனைஇச் செய்கைஎவர் செய்வார்

ஊறியமெய் அன்புடையார் உள்ளம்எனும் பொதுவில்

உவந்துநடம் புரிகின்ற ஒருபெரிய பொருளே.

17

3846

தருநிதியக் குருவியற்றச் சஞ்சலிக்கு மனத்தால்

தளர்ந்தசிறி யேன்தனது தளர்வெல்லாந் தவிர்த்து

இருநிதியத் திருமகளிர் இருவர்எனை வணங்கி

இசைந்திடுவந் தனம்அப்பா என்றுமகிழ்ந் திசைத்துப்

பெருநிதிவாய்த் திடஎனது முன்பாடி ஆடும்

பெற்றிஅளித் தனைஇந்தப் பேதமையேன் தனக்கே

ஒருநிதிநின் அருள்நிதியும் உவந்தளித்தல் வேண்டும்

உயர்பொதுவில் இனபநடம் உடையபரம் பொருளே.

18

3847

அஞ்சாதே என்மகனே அனுக்கிரகம் புரிந்தாம்

ஆடுகநீ வேண்டியவா றாடுகஇவ் வுலகில்

செஞ்சாலி வயலோங்கு தில்லைமன்றில் ஆடுந்

திருநடங்கண் டன்புருவாய்ச் சித்தசுத்த னாகி

எஞ்சாத நெடுங்காலம் இன்பவெள்ளந் திளைத்தே

இனிதுமிக வாழியவென் றெனக்கருளிச் செய்தாய்

துஞ்சாதி யந்தமிலாச் சுத்தநடத் தரசே

துரியநடு வேஇருந்த சுயஞ்சோதி மணியே.

19

3848

நான்கேட்கின் றவையெல்லாம் அளிக்கின்றாய் எனக்கு

நல்லவனே எல்லாமும் வல்லசிவ சித்தா

தான்கேட்கின் றவையின்றி முழுதொருங்கே உணர்ந்தாய்
தத்துவனே மதிஅணிந்த சடைமுடிஎம் இறைவா
தேன்கேட்கும் மொழிமங்கை ஒருபங்கில் உடையாய்
சிவனேஎம் பெருமானே தேவர்பெரு மானே
வான்கேட்கும் புகழ்த்தில்லை மன்றில்நடம் புரிவாய்
மணிமிடற்றுப் பெருங்கருணை வள்ளல்என்கண் மணியே.

௨0

3௭49

ஆனந்த வெளியினிடை ஆனந்த வடிவாய்
ஆனந்த நடம்புரியும் ஆனந்த அமுதே
வானந்த முதல்எல்லா அந்தமுங்கண் டறிந்தோர்
மதிக்கின்ற பொருளேவெண் மதிமுடிச்செங் கனியே
ஊனந்தங் கியமாயை உடலினிடத் திருந்தும்
ஊனமிலா திருக்கின்ற உளவருளிச் செய்தாய்
நானந்த உளவுகண்டு நடத்துகின்ற வகையும்
நல்லவனே நீமகிழ்ந்து சொல்லவரு வாயே.

௨1

3௭50

ஆரணமும் ஆகமமும் எதுதுணிந்த ததுவே
அம்பலத்தில் ஆடுகின்ற ஆட்டமென எனக்குக்
காரணமுங் காரியமும் புலப்படவே தெரித்தாய்

கண்ணுதலே இங்கிதற்குக் கைம்மாறொன் றறியேன்

பூரணநின் அடித்தொண்டு புரிகின்ற சிறியேன்

போற்றிசிவ போற்றிஎனப் போற்றிமகிழ் கின்றேன்

நாரணநான் முகன்முதலோர் காண்பரும்அந் நடத்தை

நாயடியேன் இதயத்தில் நவிற்றியருள் வாயே.

22

3051

இறைவநின தருளாலே எனைக்கண்டு கொண்டேன்

எனக்குள்உனைக் கண்டேன்பின் இருவரும்ஒன் றாக

உறைவதுகண் டதிசயித்தேன் அதிசயத்தை ஒழிக்கும்

உளவறியேன் அவ்வுளவொன் றுரைத்தருளல் வேண்டும்

மறைவதிலா மணிமன்றுள் நடம்புரியும் வாழ்வே

வாழ்முதலே பரமசுக வாரிஎன்கண் மணியே

குறைவதிலாக் குளிர்மதியே சிவகாமவல்லிக்

கொழுந்துபடர்ந் தோங்குகின்ற குணநிமலக் குன்றே.

23

3052

சத்தியமெய் அறிவின்ப வடிவாகிப் பொதுவில்

தனிநடஞ்செய் தருளுகின்ற சற்குருவே எனக்குப்

புத்தியொடு சித்தியும்நல் லறிவும்அளித் தழியாப்

புனிதநிலை தனிலிருக்கப் புரிந்தபரம் பொருளே

பத்திஅறி யாச்சிறியேன் மயக்கம்இன்னுந் தவிர்த்துப்

பரமசுக மயமாக்கிப் பழிற்றுளத்தைப் போக்கித்

தத்துவநீ நான்என்னும் போதமது நீக்கித்

தனித்தசுகா தீதமும்நீ தந்தருள்க மகிழ்ந்தே.

24

3953

ஏதும்அறி யாதிருளில் இருந்தசிறி யேனை

எடுத்துவிடுத் தறிவுசிறி தேய்ந்திடவும் புரிந்து

ஓதுமறை முதற்கலைகள் ஓதாமல் உணர

உணர்விலிருந் துணர்த்திஅருள் உண்மைநிலை காட்டித்

தீதுசெறி சமயநெறி செல்லுதலைத் தவிர்த்துத்

திருஅருண்மெய்ப் பொதுநெறியில் செலுத்தியும் நான்மருளும்

போதுமயங் கேல்மகனே என்றுமயக் கெல்லாம்

போக்கிஎனக் குள்ளிருந்த புனிதபரம் பொருளே.

25

3954

முன்னறியேன் பின்னறியேன் முடிபதொன்று மறியேன்

முன்னியுமுன் னாதும்இங்கே மொழிந்தமொழி முழுதும்

பன்னிலையில் செறிகின்றோர் பலரும்மனம் உவப்பப்

பழுதுபடா வண்ணம்அருள் பரிந்தளித்த பதியே

தன்னிலையில் குறைவுபடாத் தத்துவப்பேர் ஒளியே

தனிமன்றுள் நடம்புரியஞ் சத்தியதற் பரமே
இந்நிலையில் இன்னும்என்றன் மயக்கமெலாந் தவிர்த்தே
எனைஅடிமை கொளல்வேண்டும் இதுசமயங் காணே.

26

3855

ஐயறிவிற் சிறிதும்அறிந் தனுபவிக்கக் தெரியா
தழுதுகளித் தாடுகின்ற அப்பருவத் தெளியேன்
மெய்யறிவிற் சிறந்தவருங் களிக்கஉனைப் பாடி
விரும்பிஅருள் நெறிநடக்க விடுத்தனைநீ யன்றோ
பொய்யறிவிற் புலைமனத்துக் கொடியேன்முன் பிறப்பில்
புரிந்ததவம் யாததனைப் புகன்றருள வேண்டும்
துய்யறிவுக் கறிவாகி மணிமன்றில் நடஞ்செய்
சுத்தபரி பூரணமாஞ் சுகரூபப் பொருளே.

27

3856

அருள்நிறைந்த பெருந்தகையே ஆனந்த அமுதே
அற்புதப்பொன் அம்பலத்தே ஆடுகின்ற அரசே
தெருள்நிறைந்த சிந்தையிலே தித்திக்குந் தேனே
செங்கனியே மதிஅணிந்த செஞ்சடைஎம் பெருமான்
மருள்நிறைந்த மனக்கொடியேன் வஞ்சமெலாங் கண்டு
மகிழ்ந்தினிய வாழ்வளித்த மாகருணைக் கடலே

இருள்நிறைந்த மயக்கம்இன்னுந் தீர்த்தருளல் வேண்டும்

என்னுடைய நாயகனே இதுதருணங் காணே.

28

3957

மன்னியபொன் னம்பலத்தே ஆனந்த நடஞ்செய்

மாமணியே என்னிருகண் வயங்கும்ஒளி மணியே

தன்னியல்பின் நிறைந்தருளுஞ் சத்துவபூ ரணமே

தற்பரமே சிற்பரமே தத்துவப்பே றொளியே

அன்னியமில் லாதசுத்த அத்துவித நிலையே

ஆதியந்த மேதுமின்றி அமர்ந்தபரம் பொருளே

என்னியல்பின் எனக்கருளி மயக்கம்இன்னுந் தவிர்த்தே

எனைஆண்டு கொளல்வேண்டும் இதுதருணங் காணே.

29

3958

பூதநிலை முதற்பரம நாதநிலை அளவும்

போந்தவற்றின் இயற்கைமுதற் புணர்ப்பெல்லாம் விளங்க

வேதநிலை ஆகமத்தின் நிலைகளெலாம் விளங்க

வினையேன்றன் உளத்திருந்து விளக்கியமெய் விளக்கே

போதநிலை யாய்அதுவுங் கடந்தஇன்ப நிலையாய்ப்

பொதுவினின்மெய் அறிவின்ப நடம்புரியும் பொருளே

ஏதநிலை யாவகைஎன் மயக்கம்இன்னுந் தவிர்த்தே

எனைக்காத்தல் வேண்டுகின்றேன் இதுதருணங் காணே.

30

3059

செவ்வண்ணத் திருமேனி கொண்டொருபாற் பசந்து

திகழ்படிக வண்ணமொடு தித்திக்குங் கனியே

இவ்வண்ணம் எனமறைக்கும் எட்டாமெய்ப் பொருளே

என்னுயிரே என்னுயிர்க்குள் இருந்தருளும் பதியே

அவ்வண்ணப் பெருந்தகையே அம்பலத்தே நடஞ்செய்

ஆரமுதே அடியேனிங் ககமகிழ்ந்து புரிதல்

எவ்வண்ணம் அதுவண்ணம் இசைத்தருளல் வேண்டும்

என்னுடைய நாயகனே இதுதருணங் காணே.

31

திருச்சிற்றம்பலம்

## 2. அருட்பிரகாச மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3060

உலகமெலாம் உதிக்கின்ற ஒளிநிலைமெய் யின்பம்

உறுகின்ற வெளிநிலையென் றுபயநிலை யாகி

இலகியநின் சேவடிகள் வருந்தியிட நடந்தே

இரவில்எளி யேன்இருக்கும் இடந்தேடி அடைந்து

கலகமிலாத் தெருக்கதவங் காப்பவிழ்க்கப் புரிந்து

களித்தெனைஅங் கழைத்தெனது கையில்ஒன்று கொடுத்தாய்
அலகில்அருட் கடலாம்உன் பெருமையைஎன் என்பேன்
ஆனந்த வல்லிமகிழ் அருள்நடநா யகனே.

1

3961

ஒளிவண்ணம் வெளிவண்ணம் என்றனந்த வேத
உச்சியெலாம் மெச்சுகின்ற உச்சமல ரடிகள்
அளிவண்ணம் வருந்தியிட நடந்தருளி அடியேன்
அடைந்தவிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
களிவண்ணம் எனைஅழைத்தென் கையில்வண்ணம் அளித்த
கருணைவண்ணந் தனைவியந்து கருதும்வண்ணம் அறியேன்
தெளிவண்ண முடையர்அன்பு செய்யும்வண்ணம் பொதுவில்
தெய்வநடம் புரிகின்ற சைவபரம் பொருளே.

2

3962

திருமாலும் உருமாறிச் சிரஞ்சீவி யாகித்
தேடியுங்கண் டறியாத சேவடிகள் வருந்த
வருமாலை மண்ணுறுத்தப் பெயர்த்துநடந் தருளி
வஞ்சகனேன் இருக்குமிடம் வலிந்திரவில் தேடித்
தெருமாலைக் கதவுதனைத் திறப்பித்து நின்று
செவ்வண்ணத் திடைப்பசந்த திருமேனி காட்டிக்

குருமாலைப் பெருவண்ணக் கொழுந்தொன்று கொடுத்தாய்
குருமணிநின் திருவருளைக் குறித்துமகிழ்ந் தனனே.

3

3963

அன்றொருநாள் இரவிடைவந் தணிக்கதவந் திறப்பித்
தருண்மலர்ச்சே வடிவாயிற் படிப்புறத்தும் அகத்தும்
மன்றவைத்துக் கொண்டென்னை வரவழைத்து மகனே
வருந்தாதே இங்கிதனை வாங்கிக்கொள் ளென்ன
ஒன்றுசிறி யேன்மறுப்ப மறித்தும்வலிந் தெனது
ஒருகைதனிற் கொடுத்திங்கே உறைதிஎன்று மறைந்தாய்
இன்றதுதான் அனுபவத்துக் கிசைந்ததுநா யடியேன்
என்னதவம் புரிந்தேனோ இனித்துயரொன் றிலனே.

4

3964

இரவில்அடி வருந்தநடந் தெழிற்கதவந் திறப்பித்
தெனைஅழைத்து மகனேநீ இவ்வுலகிற் சிறிதும்
கரவிடைநெஞ் சயர்ந்திளைத்துக் கலங்காதே இதனைக்
களிப்பொடுவாங் கெனஎனது கைதனிலே கொடுத்து
உரவிடைஇங் குறைகமகிழ்ந் தெனத்திருவாய் மலர்ந்த
உன்னுடைய பெருங்கருணைக் கொப்பிலைஎன் புகல்வேன்
அரவிடையில் அசைந்தாட அம்பலத்தி னடுவே

ஆனந்தத் திருநடஞ்செய் தாட்டுகின்ற அரசே.

5

3965

இயங்காத இரவிடைஅன் றொருநாள்வந் தெளியேன்

இருக்குமிடந் தனைத்தேடிக் கதவுதிறப் பித்துக்

கயங்காத மலரடிகள் கவின்வாயிற் படியின்

கடைப்புறத்தும் அகத்தும்வைத்துக் களித்தெனைஅங் கழைத்து

மயங்காதே இங்கிதனை வாங்கிக்கொண் டுலகில்

மகனேநீ விளையாடி வாழ்களன உரைத்தாய்

புயங்காநின் அருளருமை அறியாது திரிந்தேன்

பொய்யடியேன் அறிந்தின்று பூரித்தேன் உளமே.

6

3966

ஒருநாளன் றிரவில்அடி வருந்தநடந் தடியேன்

உற்றஇடந் தனைத்தேடிக் கதவுதிறப் பித்து

மருநாள மலரடிஒன் றுள்ளகத்தே பெயர்த்து

வைத்துமகிழ்ந் தெனைஅழைத்து வாங்கிதனை என்று

தருநாளில் யான்மறுப்ப மறித்தும்வலிந் தெனது

தடங்கைதனிற் கொடுத்திங்கே சார்களன உரைத்தாய்

வருநாளில் அதனருமை அறிந்துமகிழ் கின்றேன்

மணிமன்றுள் நடம்புரியும் மாணிக்க மணியே.

7

3967

நெடுமாலும் பன்றிஎன நெடுங்காலம் விரைந்து
நேடியுங்கண் டறியாது நீடியபூம் பதங்கள்
தொடுமாலை யெனவருபூ மகள்முடியிற் சூட்டித்
தொல்வினையேன் இருக்குமிடந் தனைத்தேடித் தொடர்ந்து
கடுமாலை நடுஇரவிற் கதவுதிறப் பித்துக்
கடையேனை அழைத்தெனது கையில்ஒன்று கொடுத்துக்
கொடுமாலை விடுத்துமகிழ் எனத்திருவாய் மலர்ந்தாய்
குணக்குன்றே இந்நாள்நின் கொடையைஅறிந் தனனே.

8

3968

மறைமுடிக்கு மணியாகி வயங்கியசே வடிகள்
மண்மீது படநடந்து வந்தருளி அடியேன்
குறைமுடிக்கும் படிக்கதவந் திறப்பித்து நின்று
கூவிஎனை அழைத்தொன்று கொடுத்தருளிச் செய்தாய்
கறைமுடிக்குங் களத்தரசே கருணைநெடுங் கடலே
கண்ணோங்கும் ஒளியேசிற் கனவெளிக்குள் வெளியே
பிறைமுடிக்குஞ் சடைக்கடவுட் பெருந்தருவே குருவே
பெரியமன்றுள் நடம்புரியும் பெரியபரம் பொருளே.

9

3069

அன்றகத்தே அடிவருந்த நடந்தென்னை அழைத்திங்

கஞ்சாதே மகனேஎன் றளித்தனைஒன் றதனைத்

துன்றகத்துச் சிறியேன் நான் அறியாது வறிதே

சுழன்றதுகண் டிரங்கிமிகத் துணிந்துமகிழ் விப்பான்

இன்றகத்தே புகுந்தருளி எனக்கதனைத் தெரிவித்

தின்புறச்செய் தருளியநின் இரக்கம்எவர்க் குளதோ

மன்றகத்து நடம்புரிந்து வயங்கும்ஒரு குருவே

வல்லவரெல் லாம்வணங்கும் நல்லபரம் பொருளே.

10

3070

அன்பர்மனக் கோயிலிலே அமர்ந்தருளி விளங்கும்

அரும்பொருளாம் உனதுமல ரடிவருந்த நடந்து

வன்பர்களில் தலைநின்ற வஞ்சகனேன் இருந்த

மனைக்கதவு திறப்பித்து மகிழ்ந்தெனைஅங் கழைத்துத்

துன்பமெலாம் நீங்குகஇங் கிதுதனைவாங் குகநீ

தொழும்பன்என்ற என்னுடைய துரையேநின் னருளை

என்புகர்வேன் என்வியப்பேன் எங்ஙனம்நான் மறப்பேன்

என்உயிருக் குயிராகி இலங்கியசற் குருவே.

11

3071

ஞாலநிலை அடிவருந்த நடந்தருளி அடியேன்

நண்ணும்இடந் தனிற்கதவம் நன்றுதிறப் பித்துக்

காலநிலை கருதிமனங் கலங்குகின்ற மகனே

கலங்காதே என்றெனது கையில்ஒன்று கொடுத்துச்

சீலநிலை உறவாழ்க எனத்திருவாய் மலர்ந்த

சிவபெருமான் நின்பெருமைத் திருவருள்என் னென்பேன்

ஆலநிலை மணிகண்டத் தரும்பெருஞ்சீர் ஒளியே

அம்பலத்தில் திருநடஞ்செய் தாட்டுகின்ற அரசே.

12

3972

இருள்நிறைந்த இரவில்அடி வருந்தநடந் தடியேன்

இருக்குமிடந் தனைத்தேடிக் கதவுதிறப் பித்து

மருள்நிறைந்த மனத்தாலே மயங்குகின்ற மகனே

மயங்காதே என்றென்னை வரவழைத்துப் புகன்று

தெருள்நிறைந்த தொன்றெனது செங்கைதனிற் கொடுத்துத்

திகழ்ந்துநின்ற பரம்பொருள்நின் திருவருள்என் னென்பேன்

அருள்நிறைந்த மெய்ப்பொருளே அடிமுடிஒன் றில்லா

ஆனந்த மன்றில்நடம் ஆடுகின்ற அரசே.

13

3973

கன்மயமுங் கனிவிக்குந் திருவடிகள் வருந்தக்

கடைப்புலையேன் இருக்குமிடந் தனைத்தேடி நடந்து
தொன்மயமாம் இரவினிடைக் கதவுதிறப் பித்துத்
துணிந்தழைத்தென் கைதனிலே தூயஒன்றை யளித்து
வன்மயமில் லாமனத்தால் வாழ்கஎன உரைத்த
மாமணிநின் திருவருளின் வண்மையைஎன் என்பேன்
தன்மயமே சின்மயப்பொன் அம்பலத்தே இன்பத்
தனிநடஞ்செய் தருளுகின்ற தத்துவப்பே ரொளியே.

14

3874

பிரணவத்தின் அடிமுடியின் நடுவினும்நின் றோங்கும்
பெருங்கருணைத் திருவடிகள் பெயர்ந்துவருந் திடவே
கரணமுற்று நடந்தடியேன் இருக்குமிடந் தேடிக்
கதவுதிறப் பித்தருளிக் கடையேனை அழைத்துச்
சரணமுற்று வருந்தியஎன் மகனேஇங் கிதனைத்
தாங்குகஎன் றொன்றெனது தடங்கைதனிற் கொடுத்து
மரணமற்று வாழ்கஎனத் திருவார்த்தை அளித்தாய்
மன்றுடையாய் நின்அருளின் வண்மைஎவர்க் குளதே.

15

3875

ஓங்காரத் துள்ளொளியாய் அவ்வொளிக்குள் ஒளியாய்
உபயவடி வாகியநின் அபயபதம் வருந்த

ஈங்கார நடந்திரவில் யானிருக்கும் இடம்போந்

தெழிற்கதவந் திறப்பித்தங் கென்னைவலிந் தழைத்துப்

பாங்காரும் வண்ணம்ஒன் றென் கைதனிலே அளித்துப்

பண்பொடுவாழ்ந் திடுகஎனப் பணித்தபரம் பொருளே

ஆங்கார வண்ணம்அகன் றதைஅறிந்து மகிழ்ந்தே

அனுபவிக்கின் றேன்பொதுவில் ஆடுகின்ற அரசே.

16

3976

அரிபிரமா தியரெல்லாம் அறிந்தணுக ஒண்ணா

அரும்பெருஞ்சீர் அடிமலர்கள் அன்றொருநாள் வருந்தக்

கரிஇரவில் நடந்தருளி யானிருக்கு மிடத்தே

கதவுதிறப் பித்தெனது கையில்ஒன்று கொடுத்து

உரிமையொடு வாழ்கஎன உரைத்ததுவும் அன்றி

உவந்தின்றை இரவினும்வந் துணர்த்தினைஎன் மீது

பிரியமுனக் கிருந்தவண்ணம் என்புகல்வேன் பொதுவில்

பெருநடஞ்செய் அரசேஎன் பிழைபொறுத்த குருவே.

17

3977

காரணன்என் றுரைக்கின்ற நாரணனும் அயனும்

கனவிடத்துங் காண்பரிய கழலடிகள் வருந்த

ஊரணவி நடந்தெளியேன் உறையும்இடந் தேடி

உவந்தெனது கைதனிலே ஒன்றுகொடுத் திங்கே

ஏரணவி உறைகமகிழ்ந் தெனஉரைத்தாய் நின்சீர்

யாதறிந்து புகன்றேன்முன் யாதுதவம் புரிந்தேன்

பாரணவி அன்பரெலாம் பரிந்துபுகழ்ந் தேத்தப்

பணிஅணிந்து மணிமன்றுள் அணிநடஞ்செய் பதியே.

18

3978

துரியவெளி தனிற்பரம நாதஅணை நடுவே

சுயஞ்சுடரில் துலங்குகின்ற துணையடிகள் வருந்தப்

பிரியமொடு நடந்தெளியேன் இருக்குமிடந் தேடிப்

பெருங்கதவந் திறப்பித்துப் பேயன்எனை அழைத்து

உரியபொருள் ஒன்றெனது கையில்அளித் திங்கே

உறைகமகிழ்ந் தெனஉரைத்த உத்தமநின் னருளைப்

பெரியபொரு ளெவற்றினுக்கும் பெரியபொரு ளென்றே

பின்னர்அறிந் தேன்இதற்கு முன்னர்அறி யேனே.

19

3979

நீளாதி மூலமென நின்றவனும் நெடுநாள்

நேடியுங்கண் டறியாத நின்னடிகள் வருந்த

ஆளாநான் இருக்குமிடம் அதுதேடி நடந்தே

அணிக்கதவந் திறப்பித்துள் ளன்பொடெனை அழைத்து

வாளாநீ மயங்காதே மகனேஇங் கிதனை
வாங்கிக்கொள் என்றெனது மலர்க்கைதனிற் கொடுத்தாய்
கேளாய்என் உயிர்த்துணையாய்க் கிளர்மன்றில் வேத
கீதநடம் புரிகின்ற நாதமுடிப் பொருளே.

20

3980

சத்தஉரு வாமறைப்பொற் சிலம்பணிந்தம் பலத்தே
தனிநடஞ்செய் தருளும்அடித் தாமரைகள் வருந்த
சித்தஉரு வாகிஇங்கே எனைத்தேடி நடந்து
தெருக்கதவந் திறப்பித்தென் செங்கையில்ஒன் றளித்து
மத்தஉரு வாமனத்தால் மயக்கமுறேல் மகனே
மகிழ்ந்துறைக எனத்திருவாய் மலர்ந்தகுண மலையே
சுத்தஉரு வாய்ச்சுத்த அருவாகி அழியாச்
சுத்தஅரு உருவான சுத்தபரம் பொருளே.

21

3981

பலகோடி மறைகளெலாம் உலகோடி மயங்கப்
பரநாத முடிநடிக்கும் பாதமலர் வருந்தச்
சிலகோடி நடந்தெளியேன் இருக்குமிடத் தணைந்து
தெருக்கதவந் திறப்பித்தென் செங்கையில்ஒன் றளித்தே
அலகோடி வருந்தேல்இங் கமர்கஎனத் திருவாய்

அலர்ந்தஅருட் குருவேபொன் னம்பலத்தெம் அரசே

விலகோடி எனத்துயர்கள் ஒன்றொடொன்று புகன்று

விரைந்தோடச் செய்தனைஇவ் விளைவறியேன் வியப்பே.

22

3982

செய்வகைஒன் றறியாது திகைப்பினொடே இருந்தேன்

திடுக்கெனஇங் கெழுந்திருப்பத் தெருக்கதவந் திறப்பித்

துய்வகைஒன் றெனதுகரத் துவந்தளித்து மகனே

உய்கமகிழ்ந் தின்றுமுதல் ஒன்றும்அஞ்சேல் என்று

மெய்வகையில் புகன்றபின்னும் அஞ்சியிருந் தேனை

மீட்டும்இன்றை இரவில்உணர் வூட்டிஅச்சந் தவிர்த்தாய்

ஐவகையாய் நின்றுமன்றில் ஆடுகின்ற அரசே

அற்புதத்தாள் மலர்வருத்தம் அடைந்தனஎன் பொருட்டே.

23

3983

உள்ளிரவி மதியாய்நின் றுலகமெலாம் நடத்தும்

உபயவகை யாகியநின் அபயபதம் வருந்த

நள்ளிரவின் மிகநடந்து நான்இருக்கும் இடத்தே

நடைக்கதவந் திறப்பித்து நடைக்கடையில் அழைத்து

எள்ளிரவு நினைந்துமயக் கெய்தியிடேல் மகனே

என்றென்கை தனில்ஒன்றை ஈந்துமகிழ் வித்தாய்

அள்ளிரவு போல்மிடற்றில் அழகுகிளர்ந் தாட
அம்பலத்தில் ஆடுகின்ற செம்பவளக் குன்றே.

24

3984

விளங்கறிவுக் கறிவாகி மெய்த்துரிய நிலத்தே
விளையும்அனு பவமயமாம் மெல்லடிகள் வருந்தத்
துளங்குசிறி யேன்இருக்கும் இடந்தேடி நடந்து
தொடர்க்கதவந் திறப்பித்துத் தொழும்பன்எனை அழைத்துக்
களங்கமிலா ஒன்றெனது கைதனிலே கொடுத்துக்
களித்துறைக எனத்திருவாக் களித்தஅருட் கடலே
குளங்கொள்விழிப் பெருந்தகையே மணிமன்றில் நடஞ்செய்
குருமணியே அன்பர்மனக் கோயில்வாழ் குருவே.

25

3985

வேதமுடி மேற்சுடராய் ஆகமத்தின் முடிமேல்
விளங்கும்ஒளி யாகியநின் மெல்லடிகள் வருந்தப்
பூதமுடி மேல்நடந்து நானிருக்கு மிடத்தே
போந்திரவிற் கதவுதனைக் காப்பவிழ்க்கப் புரிந்து
நாதமுடி மேல்விளங்குந் திருமேனி காட்டி
நற்பொருள்என் கைதனிலே நல்கியநின் பெருமை
ஓதமுடி யாதெனில்என் புகல்வேன்அம் பலத்தே

உயிர்க்கின்பந் தரநடனம் உடையபரம் பொருளே.

26

3986

தங்குசரா சரமுழுதும் அளித்தருளி நடத்துந்

தாள்மலர்கள் மிகவருந்தத் தனித்துநடந் தொருநாள்

கங்குலில்யான் இருக்குமனைக் கதவுதிறப் பித்துக்

கையில்ஒன்று கொடுத்தஉன்றன் கருணையைஎன் என்பேன்

இங்குசிறி யேன்பிழைகள் எத்தனையும் பொறுத்த

என்குருவே என்உயிருக் கின்பருளும் பொருளே

திங்களணி சடைப்பவளச் செழுஞ்சோதி மலையே

சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகனே.

27

3987

மாமாயை அசைந்திடச்சிற் றம்பலத்தே நடிக்கும்

வருந்தாத மலரடிகள் வருந்தநடந் தருளி

ஆமாறன் றிரவினிடை அணிக்கதவந் திறப்பித்

தங்கையில்ஒன் றளித்தினிநீ அஞ்சேல்என் றுவந்து

தேமாவின் பழம்பிழிந்து வடித்துநறு நெய்யுந்

தேனும்ஒக்கக் கலந்ததெனத் திருவார்த்தை அளித்தாய்

கோமான்நின் அருட்பெருமை என்உரைப்பேன் பொதுவில்

கூத்தாடி எங்களைஆட் கொண்டபரம் பொருளே.

28

3988

படைப்பவனுங் காப்பவனும் பற்பலநாள் முயன்று

பார்க்கவிரும் பினுங்கிடையாப் பாதமலர் வருந்த

நடைப்புலையேன் பொருட்டாக நடந்திரவிற் கதவம்

நன்குதிறப் பித்தொன்று நல்கியதும் அன்றி

இடைப்படுநா ளினும்வந்தென் இதயமயக் கெல்லாம்

இரிந்திடச்செய் தனைஉன்றன் இன்னருள்என் என்பேன்

தடைப்படுமா றில்லாத பேரின்பப் பெருக்கே

தனிமன்றில் ஆனந்தத் தாண்டவஞ்செய் அரசே.

29

3989

முன்னைமறை முடிமணியாம் அடிமலர்கள் வருந்த

முழுதிரவில் நடந்தெளியேன் முயங்குமிடத் தடைந்து

அன்னையினும் பரிந்தருளி அணிக்கதவந் திறப்பித்

தங்கையில்ஒன் றளித்தெனையும் அன்பினொடு நோக்கி

என்னைஇனி மயங்காதே என்மகனே மகிழ்வோ

டிருத்திஎன உரைத்தாய்நின் இன்னருள்என் என்பேன்

மின்னைநிகர் செஞ்சடைமேன் மதியம்அசைந் தாட

வியன்பொதுவில் திருநடஞ்செய் விமலபரம் பொருளே.

30

3090

மீதானத் தருள்ஒளியாய் விளங்கியநின் அடிகள்

மிகவருந்த நடந்திரவில் வினையேன்றன் பொருட்டாச்

சீதானக் கதவுதனைத் திறப்பித்துச் சிறியேன்

செங்கையில்ஒன் றளித்தினிநீ சிறிதுமஞ்சேல் இங்கு

மாதானத் தவர்சூழ வாழ்கஎன உரைத்தாய்

மாமணிநின் திருவருளின் வண்மைஎவர்க் குளதே

ஓதானத் தவர்தமக்கும் உணர்வரிதாம் பொருளே

ஓங்கியசிற் றம்பலத்தே ஒளிநடஞ்செய் பதியே.

31

3091

வேதாந்த சித்தாந்தம் என்னும்அந்தம் இரண்டும்

விளங்கஅமர்ந் தருளியநின் மெல்லடிகள் வருந்த

நாதாந்த வெளிதனிலே நடந்தருளும் அதுபோல்

நடந்தருளிக் கடைநாயேன் நண்ணும்இடத் தடைந்து

போதாந்த மிசைவிளக்குந் திருமேனி காட்டிப்

புலையேன்கை யிடத்தொன்று பொருந்தவைத்த பொருளே

சூதாந்த மனைத்தினுக்கும் அப்பாற்பட் டிருந்த

துரியவெளிக் கேவிளங்கும் பெரியஅருட் குருவே.

32

3092

ஒருமையிலே இருமைஎன உருக்காட்டிப் பொதுவில்

ஒளிநடஞ்செய் தருளுகின்ற உபயபதம் வருந்த

அருமையிலே நடந்தெளியேன் இருக்குமிடத் தடைந்தே

அணிக்கதவந் திறப்பித்தென் அங்கையில்ஒன் றளித்துப்

பெருமையிலே பிறங்குகநீ எனத்திருவாய் மலர்ந்த

பெருங்கருணைக் கடலேநின் பெற்றியைஎன் என்பேன்

கருமையிலே நெடுங்காலங் கலந்துகலக் குற்ற

கலக்கமெலாந் தவிர்த்தெம்மைக் காத்தருளும் பதியே.

33

3993

விந்துநிலை நாதநிலை இருநிலைக்கும் அரசாய்

விளங்கியநின் சேவடிகள் மிகவருந்த நடந்து

வந்துநிலை பெறச்சிறியேன் இருக்குமிடத் தடைந்து

மணிக்கதவந் திறப்பித்து மகனேஎன் றழைத்து

இந்துநிலை முடிமுதலாந் திருஉருவங் காட்டி

என்கையில்ஒன் றளித்தின்பம் எய்துகஎன் றுரைத்தாய்

முந்துநிலைச் சிறியேன்செய் தவமறியேன் பொதுவில்

முத்தர்மனந் தித்திக்க நிருத்தமிடும் பொருளே.

34

3994

நவநிலைக்கும் அதிகாரம் நடத்துகின்ற அரசாய்

நண்ணியநின் பொன்னடிகள் நடந்துவருந் திடவே

அவநிலைக்குங் கடைப்புலையேன் இருக்கும்இடத் திரவில்

அணைந்தருளிக் கதவுதிறந் தடியேனை அழைத்தே

சிவநிலைக்கும் படிஎனது செங்கையில்ஒன் றளித்துச்

சித்தமகிழ்ந் துறைகஎனத் திருப்பவளந் திறந்தாய்

பவநிலைக்குங் கடைநாயேன் பயின்றதவம் அறியேன்

பரம்பரமா மன்றில்நடம் பயின்றபசு பதியே.

35

3895

புண்ணியர்தம் மனக்கோயில் புகுந்தமர்ந்து விளங்கும்

பொன்மலர்ச்சே வடிவருத்தம் பொருந்தநடந் தெளியேன்

நண்ணியஓர் இடத்தடைந்து கதவுதிறப் பித்து

நற்பொருள்ஒன் றென்கைதனில் நல்கியநின் பெருமை

எண்ணியபோ தெல்லாம்என் மனமுருக்கும் என்றால்

எம்ப ருமான் நின்அருளை என்னெனயான் புகல்வேன்

தண்ணியவெண் மதிஅணிந்த செஞ்சடைநின் றாடத்

தனித்தமன்றில் ஆனந்தத் தாண்டவஞ்செய் அரசே.

36

3896

மூவருக்கும் எட்டாது மூத்ததிரு அடிகள்

முழுதிரவில் வருந்தியிட முயங்கிநடந் தருளி

யாவருக்கும் இழிந்தேன்இங் கிருக்கும்இடத் தடைந்தே

எழிற்கதவந் திறப்பித்துள் எனைஅழைத்து மகனே

தேவருக்கும் அரிதிதனை வாங்கெனஎன் கரத்தே

சித்தமகிழ்ந் தளித்தனைநின் திருவருள்என் என்பேன்

பூவருக்கும் பொழிற்றில்லை அம்பலத்தே நடனம்

புரிந்துயிருக் கின்பருளும் பூரணவான் பொருளே.

37

3897

கற்றவர்தம் கருத்தினின்முக் கனிரசம்போல் இனிக்கும்

கழலடிகள் வருந்தியிடக் கழிதுநடந் திரவில்

மற்றவர்கா ணாதெளியேன் இருக்கும்இடத் தடைந்து

மனைக்கதவு திறப்பித்து வலிந்தெனைஅங் கழைத்து

நற்றவர்க்கும் அரிதிதனை வாங்கெனஎன் கரத்தே

நல்கியநின் பெருங்கருணை நட்பினைஎன் என்பேன்

அற்றவர்க்கும் பற்றவர்க்கும் பொதுவினிலே நடஞ்செய்

அருட்குருவே சச்சிதா னந்தபரம் பொருளே.

38

3898

கருணைவடி வாய்அடியார் உள்ளகத்தே அமர்ந்த

கழலடிகள் வருந்தியிடக் கங்குலிலே நடந்து

மருணிறையுஞ் சிறியேன்நான் இருக்குமிடத் தடைந்து

மணிக்கதவந் திறப்பித்து மகிழ்ந்தழைத்து மகனே

பொருணிறையும் இதனைஇங்கே வாங்கெனஎன் கரத்தே

பொருந்தஅளித் தருளியநின் பொன்னருள்என் என்பேன்

அருணிறையும் பெருங்கடலே அம்பலத்தில் பரமா

னந்தவுரு வாகிநடம் ஆடுகின்ற அரசே.

39

3099

அருளுருவாய் ஐந்தொழிலும் நடத்துகின்ற அடிகள்

அசைந்துவருந் திடஇரவில் யானிருக்கும் இடத்தே

தெருளுருவின் நடந்துதெருக் கதவுதிறப் பித்துச்

சிறியேனை அழைத்தெனது செங்கையில்ஒன் றளித்து

மருளுருவின் மற்றவர்போல் மயங்கேல்என் மகனே

மகிழ்ந்துதிரு அருள்வழியே வாழ்கஎன உரைத்தாய்

இருளுருவின் மனக்கொடியேன் யாதுதவம் புரிந்தேன்

எல்லாம்வல் லவனாகி இருந்தபசு பதியே.

40

3100

முழுதும்உணர்ந் தவர்முடிமேல் முடிக்குமணி யாகி

முப்பொருளு மாகியநின் ஒப்பில்அடி மலர்கள்

கழுதும்உணர் வரியநடுக் கங்குலிலே வருந்தக்

கடிதுநடந் தடிநாயேன் கருதுமிடத் தடைந்து

பழுதுபடா வண்ணம்எனைப் பரிந்தழைத்து மகனே
பணிந்திதனை வாங்கெனஎன் பாணியுறக் கொடுத்துத்
தொழுதெனைப்பா டுகஎன்று சொன்னபசு பதிநின்
தூயஅருட் பெருமையைஎன் சொல்லிவியக் கேனே.

41

3101

மானினைத்த அளவெல்லாங் கடந்தப்பால் வயங்கும்
மலரடிகள் வருந்தியிட மகிழ்ந்துநடந் தருளிப்
பானினைத்த சிறியேன்நான் இருக்குமிடத் தடைந்து
பணைக்கதவந் திறப்பித்துப் பரிந்தழைத்து மகனே
நீநினைத்த வண்ணமெலாங் கைகூடும் இதுஓர்
நின்மலம்என் றென்கைதனில் நேர்ந்தளித்தாய் நினக்கு
நானினைத்த நன்றிஒன்றும் இலையேநின் அருளை
நாயடியேன் என்புகல்வேன் நடராஜ மணியே.

42

3102

சூரியசந் திரரெல்லாந் தோன்றாமை விளங்கும்
சுயஞ்சோதி யாகும்அடித் துணைவருந்த நடந்து
கூரியமெய் அறிவென்ப தொருசிறிதுங் குறியாக்
கொடியேன்நான் இருக்குமிடங் குறித்திரவில் நடந்து
காரியம்உண் டெனக்கூவிக் கதவுதிறப் பித்துக்

கையில் ஒன்றை அளித்தனைஉன் கருணையைஎன் என்பேன்
ஆரியர்தம் அளவுகடந் தப்பாலுங் கடந்த
ஆனந்த மன்றில்நடம் ஆடுகின்ற அரசே.

43

3103

தற்போதந் தோன்றாத தலந்தனிலே தோன்றும்
தாள்மலர்கள் வருந்தியிடத் தனித்துநடந் தருளி
எற்போதங் ககன்றிரவில் யானிருக்கு மிடம்போந்
தெழிற்கதவந் திறப்பித்திவ் வெளியேனை அழைத்துப்
பொற்போத வண்ணம்ஒன் றென் கைதனிலே அளித்துப்
புலையொழிந்த நிலைதனிலே பொருந்துகஎன் றுரைத்தாய்
சிற்போத மயமான திருமணிமன் றிடத்தே
சிவமயமாம் அனுபோகத் திருநடஞ்செய் அரசே.

44

3104

கற்பனைகள் எல்லாம்போய்க் கரைந்ததலந் தனிலே
கரையாது நிறைந்ததிருக் கழலடிகள் வருந்த
வெற்பனையும் இன்றிஒரு தனியாக நடந்து
விரைந்திரவிற் கதவுதனைக் காப்பவிழ்க்கப் புரிந்து
அற்பனைஓர் பொருளாக அழைத்தருளி அடியேன்
அங்கையில்ஒன் றளித்தனைநின் அருளினைஎன் புகல்வேன்

நற்பனவர் துதிக்கமணி மன்றகத்தே இன்ப
நடம்புரியும் பெருங்கருணை நாயகமா மணியே.

45

3105

ஒன்றாகி இரண்டாகி ஒன்றிரண்டின் நடுவே
உற்றஅனு பவமயமாய் ஒளிர்அடிகள் வருந்த
அன்றார நடந்திரவில் யானுறையும் இடத்தே
அடைந்துகத வந்திறப்பித் தன்பொடெனை அழைத்து
நன்றார எனதுகரத் தொன்றருளி இங்கே
நண்ணிநீ எண்ணியவா நடத்துகஎன் றுரைத்தாய்
இன்றார வந்ததனை உணர்த்தினைநின் அருளை
என்புகல்வேன் மணிமன்றில் இலங்கியசற் குருவே.

46

3106

எங்கும்விளங் குவதாகி இன்பமய மாகி
என்னுணர்வுக் குணர்வுதரும் இணையடிகள் வருந்த
பொங்குமிர விடைநடந்து நானுறையும் இடத்தே
போந்துமணிக் கதவுதனைக் காப்பவிழ்க்கப் புரிந்து
தங்குமடி யேனைஅழைத் தங்கையில்ஒன் றளித்தே
தயவினொடு வாழ்கஎனத் தனித்திருவாய் மலர்ந்தாய்
இங்குநின தருட்பெருமை என்னுரைப்பேன் பொதுவில்

இன்பநடம் புரிகின்ற என்னுடைநா யகனே.

47

3107

சித்தெவையும் வியத்தியுறுஞ் சுத்தசிவ சித்தாய்ச்

சித்தமதில் தித்திக்குந் திருவடிகள் வருந்த

மத்தஇர விடைநடந்து வந்தருளி அடியேன்

வாழுமனைத் தெருக்கதவு திறப்பித்தங் கடைந்து

அத்தகவின் எனைஅழைத்தென் அங்கையில்லொன் றளித்தாய்

அன்னையினும் அன்புடையாய் நின்னருள்என் என்பேன்

முத்தர்குழுக் காணமன்றில் இன்பநடம் புரியும்

முக்கணுடை ஆனந்தச் செக்கர்மணி மலையே.

48

3108

சகலமொடு கேவலமுந் தாக்காத இடத்தே

தற்பரமாய் விளங்குகின்ற தாள்மலர்கள் வருந்தப்

பகலொழிய நடுவிரவில் நடந்தருளி அடியேன்

பரியுமிடத் தடைந்துமணிக் கதவுதிறப் பித்துப்

புகலுறுக வருகஎன அழைத்தெனது கரத்தே

பொருந்தஒன்று கொடுத்தனைநின் பொன்னருள்என் என்பேன்

உகல்ஒழியப் பெருந்தவர்கள் உற்றுமகிழ்ந் தேத்த

உயர்பொதுவில் இன்பநடம் உடையபரம் பொருளே.

49

3109

உள்ளுருகுந் தருணத்தே ஒளிகாட்டி விளங்கும்
உயர்மலர்ச்சே வடிவருந்த உவந்துநடந் தருளிக்
கள்ளமனத் தேனிருக்கும் இடந்தேடி அடைந்து
கதவுதிறப் பித்தருளிக் களித்தெனைஅங் கழைத்து
நள்ளுலகில் உனக்கிதுநாம் நல்கினம்நீ மகிழ்ந்து
நாளும்உயிர்க் கிதம்புரிந்து நடத்திஎன உரைத்தாய்
தெள்ளும்அமு தாய்அன்பர் சித்தம்எலாம் இனிக்கும்
செழுங்கனியே மணிமன்றில் திருநடநா யகனே.

50

3110

தன்னுருவங் காட்டாத மலஇரவு விடியுந்
தருணத்தே உதயஞ்செய் தாள்மலர்கள் வருந்தப்
பொன்னுருவத் திருமேனி கொண்டுநடந் தடியேன்
பொருந்துமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
தன்னுருவம் போன்றதொன்றங் கெனை அழைத்தென் கரத்தே
தந்தருளி மகிழ்ந்திங்கே தங்குகஎன் றுரைத்தாய்
என்னுருவம் எனக்குணர்த்தி அருளியநின் பெருமை
என்னுரைப்பேன் மணிமன்றில் இன்பநடத் தரசே.

51

3111

அண்டவகை பிண்டவகை அனைத்தும்உதித் தொடுங்கும்

அணிமலர்ச்சே வடிவருத்தம் அடையநடந் தருளிக்

கண்டவருங் காணாத நடுஇரவு தனில்யான்

கருதுமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து

தொண்டனென எனையும்அழைத் தென்கையில்ஒன் றளித்தாய்

துரையேநின் அருட்பெருமைத் தொண்மையைஎன் என்பேன்

உண்டவர்கள் உணுந்தோறும் உவட்டாத அமுதே

உயர்பொதுவில் இன்பநடம் உடையபரம் பொருளே.

52

3112

அறிவுடையார் உள்ளகப்போ தலருகின்ற தருணத்

தருள்மணத்தே னாகிஉற்ற அடிஇணைகள் வருந்தப்

பிறிவுடையேன் இருக்குமிடந் தேடிநடந் தடைந்து

பெருங்கதவந் திறப்பித்துப் பேயன்எனை அழைத்துச்

செறிவுடையாய் இதுவாங்கென் றுதவவும்நான் மறுப்பத்

திரும்பவும்என் கைதனிலே சேரஅளித் தனையே

பொறிவறியேன் அளவினில்உன் கருணையைஎன் என்பேன்

பொற்பொதுவில் நடம்புரியும் பூரணவான் பொருளே.

53

3113

விடையமொன்றுங் காணாத வெளிநடுவே ஒளியாய்

விளங்குகின்ற சேவடிகள் மிகவருந்த நடந்து

கடையனையுங் குறிக்கொண்டு கருதுமிடத் தடைந்து

கதவுதிறப் பித்தெனது கையில்ஒன்று கொடுக்க

இடையின்அது நான்மறுப்ப மறுக்கேல்என் மகனே

என்றுபின்னுங் கொடுத்தாய்நின் இன்னருள்என் என்பேன்

உடையபரம் பொருளேஎன் உயிர்த்துணையே பொதுவில்

உய்யும்வகை அருள்நடனஞ் செய்யும்ஒளி மணியே.

54

3114

நான்தனிக்குந் தரணத்தே தோன்றுகின்ற துணையாய்

நான்தனியா இடத்தெனக்குத் தோன்றாத துணையாய்

ஏன்றருளுந் திருவடிகள் வருந்தநடந் தருளி

யானுறையும் இடத்தடைந்து கதவுதிறப் பித்து

ஆன்றஎனை அழைத்தெனது கையில்ஒன்று கொடுத்தாய்க்

கறிவிலியேன் செய்யும்வகை அறியேன்நின் கருணை

ஈன்றவட்கும் இல்லைஎன நன்கறிந்தேன் பொதுவில்

இன்பநடம் புரிகின்ற என்னுயிர்நா யகனே.

55

3115

அருள்விளங்கும் உள்ளகத்தே அதுஅதுவாய் விளங்கும்

அணிமலர்ச்சே வடிவருத்தம் அடையநடந் தருளிப்

பொருள்விளங்கா நடுஇரவில் நானுறையும் இடத்தே

போந்துதெருக் காப்பவிழ்க்கப் புரிந்தெனைஅங் கழைத்துத்

தெருள்விளங்கும் ஒருபொருள்என் செங்கைதனில் அளித்தாய்

சிவபெருமான் பெருங்கருணைத் திறத்தினைஎன் என்பேன்

மருள்விளங்கி உணர்ச்சியுறத் திருமணிமன் றிடத்தே

மன்னுயிர்க் கின்பருள வயங்குநடத் தரசே.

56

3116

பருவமுறு தருணத்தே சர்க்கரையும் தேனும்

பாலுநெய்யும் அளிந்தநறும் பழரசமும் போல

மருவும்உளம் உயிர்உணர்வோ டெல்லாந்தித் திக்க

வயங்கும்அடி யிணைகள்மிக வருந்தநடந் தருளித்

தெருவடைந்து நானிருக்கு மனைக்காப்புத் திறக்கச்

செய்தருளிப் பொருள்ஒன்றென் செங்கைதனில் அளித்தாய்

திருமணிமன் றிடைநடிக்கும் பெருமான்நின் கருணைத்

திறத்தினைஇச் சிறியேன்நான் செப்புதல்எங் ஙனமே.

57

3117

என்அறிவை உண்டருளி என்னுடனே கூடி

என்இன்பம் எனக்கருளி என்னையுந்தா னாக்கித்

தன்அறிவாய் விளங்குகின்ற பொன்னடிகள் வருந்தத்

தனிநடந்து தெருக்கதவந் தாள்திறப்பித் தருளி

முன்னறிவில் எனைஅழைத்தென் கையில்ஒன்று கொடுத்த

முன்னவநின் இன்னருளை என்எனயான் மொழிவேன்

மன்அறிவுக் கறிவாம்பொன் னம்பலத்தே இன்ப

வடிவாகி நடிக்கின்ற மாகருணை மலையே.

58

3118

பரயோக அனுபவத்தே அகம்புறந்தோன் றாத

பரஞ்சோதி யாகும்இணைப் பாதமலர் வருந்த

வரயோகர் வியப்பஅடி யேன்இருக்கும் இடத்தே

வந்துதெருக் கதவுதனைக் காப்பவிழ்க்கப் புரிந்து

திரயோகர்க் கரிதிதனை வாங்குகஎன் றெனது

செங்கைதனில் அளித்தாய்நின் திருவருள்என் என்பேன்

உரயோகர் உளம்போல விளங்குமணி மன்றில்

உயிர்க்கின்பந் தரநடனம் உடையபரம் பொருளே.

59

3119

சொன்னிறைந்த பொருளும்அதன் இலக்கியமும் ஆகித்

துரியநடு விருந்தஅடித் துணைவருந்த நடந்து

கொன்னிறைந்த இரவினிடை எழுந்தருளிக் கதவம்

கொழுங்காப்பை அவிழ்வித்துக் கொடியேனை அழைத்து
என்னிறைந்த ஒருபொருள்என் கையில்அளித் தருளி
என்மகனே வாழ்கஎன எழில்திருவாய் மலர்ந்தாய்
தன்னிறைந்த நின்கருணைத் தன்மையைஎன் புகல்வேன்
தனிமன்றில் ஆனந்தத் தாண்டவஞ்செய் அரசே.

60

3120

முத்திஒன்று வியத்திஒன்று காண்மின்என்றா கமத்தின்
முடிகள்முடித் துரைக்கின்ற அடிகள்மிக வருந்தப்
பத்திஒன்றும் இல்லாத கடைப்புலையேன் பொருட்டாப்
படிற்றுளத்தேன் இருக்கும்இடந் தனைத்தேடி நடந்து
சித்திஒன்று திருமேனி காட்டிமனைக் கதவம்
திறப்பித்தங் கெனைஅழைத்தென் செங்கையிலே மகிழ்ந்து
சத்திஒன்று கொடுத்தாய்நின் தண்ணருள்என் என்பேன்
தனிமன்றுள் ஆனந்தத் தாண்டவஞ்செய் அரசே.

61

3121

எனக்குநன்மை தீமையென்ப திரண்டுமொத்த இடத்தே
இரண்டும்ஒத்துத் தோன்றுகின்ற எழிற்பதங்கள் வருந்தத்
தனக்குநல்ல வண்ணம்ஒன்று தாங்கிநடந் தருளித்
தனித்திரவில் கடைப்புலையேன் தங்குமிடத் தடைந்து

கனக்குமனைத் தெருக்கதவங் காப்பவிழ்க்கப் புரிந்து

களிப்பொடெனை அழைத்தெனது கையில்ஒன்று கொடுத்து

உனக்கினிய வண்ணம்இதென் றுரைத்தருளிச் சென்றாய்

உடையவநின் அருட்பெருமை உரைக்கமுடி யாதே.

62

3122

இம்மையினோ டம்மையினும் எய்துகின்ற இன்பம்

எனைத்தொன்றும் வேண்டாத இயற்கைவருந் தருணம்

எம்மையினும் நிறைசொருப சுத்தசுகா ரம்பம்

இயற்சொருப சுத்தசுக அனுபவம்என் றிரண்டாய்ச்

செம்மையிலே விளங்குகின்ற திருவடிகள் வருந்தச்

சிறியேன்பால் அடைந்தெனது செங்கையில்ஒன் றளித்தாய்

உம்மையிலே யான்செய்தவம் யாதெனவும் அறியேன்

உயர்பொதுவில் இன்பநடம் உடையபரம் பொருளே.

63

3123

அன்பளிப்ப தொன்றுபின்னர் இன்பளிப்ப தொன்றென்

றறிஞரெலாம் மதிக்கின்ற அடிமலர்கள் வருந்த

என்பளித்த உடல்கள்தொறும் உயிர்க்குயிராய் இருக்கும்

எம்பெருமான் நடந்தருளிக் கதவுதிறப் பித்துத்

துன்பளிக்கும் நெஞ்சகத்தென் றனைக்கூவி அழைத்துத்

தூயஇள நகைமுகத்தே துளும்பஎனை நோக்கி

முன்பளித்த தென்றனது கையில்ஒன்றை அளித்தாய்

முன்னவநின் அருட்பெருமை முன்னஅறி யேனே.

64

3124

மோகஇருட் கடல்கடத்தும் புணைஒன்று நிறைந்த

மோனசுகம் அளிப்பிக்கும் துணைஒன்றென் றுரைக்கும்

யோகமலர்த் திருவடிகள் வருந்தநடந் தருளி

உணர்விலியேன் பொருட்டாக இருட்டிரவில் நடந்து

போகமனைப் பெருங்கதவந் திறப்பித்துட் புகுந்து

புலையேனை அழைத்தொன்று பொருந்தஎன்கை கொடுத்தாய்

நாகமணிப் பணிமிளிர அம்பலத்தே நடஞ்செய்

நாயகநின் பெருங்கருணை நவிற்றமுடி யாதே.

65

3125

காணுகின்ற கண்களுக்குக் காட்டுகின்ற ஒளியாய்க்

காட்டுகின்ற ஒளிதனக்குக் காட்டுவிக்கும் ஒளியாய்

பூணுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியேன்

பொருந்துமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து

கோணுகின்ற மனத்தாலே நாணுவதேன் மகனே

குறைவறவாழ் கெனமகிழ்ந்து கொடுத்தனைஒன் றெனக்கு

மாணுகின்ற நின்னருளின் பெருமையைஎன் என்பேன்
மணிமன்றில் ஆனந்த மாநடஞ்செய் அரசே.

66

3126

ஆறாறு தத்துவத்தின் சொரூபமுதல் அனைத்தும்
அறிவிக்கும் ஒன்றவற்றின் அப்பாலே இருந்த
வீறாய தற்சொருப முதலனைத்தும் அறிவில்
விளக்குவிக்கும் ஒன்றென்று விளைவறிந்தோர் விளம்பும்
பேறாய திருவடிகள் வருந்தநடந் திரவில்
பேயடியேன் இருக்குமிடத் தடைந்தென்னை அழைத்துச்
சோறாய பொருள்ஒன்றென் கரத்தளித்தாய் பொதுவில்
சோதிநின தருட்பெருமை ஓதிமுடி யாதே.

67

3127

கருவிகளை நம்முடனே கலந்துளத்தே இயக்கிக்
காட்டுவதொன் றக்கருவி கரணங்கள் அனைத்தும்
ஒருவிஅப்பாற் படுத்திநமை ஒருதனியாக் குவதொன்
றுபயம்எனப் பெரியர்சொலும் அபயபதம் வருந்தத்
துருவிஅடி யேன்இருக்கும் இடத்திரவில் அடைந்து
துணிந்தெனது கையில்ஒன்று சோதியுறக் கொடுத்து
வெருவியிடேல் இன்றுமுதல் மிகமகிழ்க என்றாய்

வித்தகநின் திருவருளை வியக்கமுடி யாதே.

68

3128

ஆதியிலே கலப்பொழிய ஆன்மசுத்தி அளித்தாங்

கதுஅதுஆக் குவதொன்றாம் அதுஅதுவாய் ஆக்கும்

சோதியிலே தாணாகிச் சூழ்வதொன்றாம் என்று

சூழ்ச்சிஅறிந் தோர்புகலும் துணையடிகள் வருந்த

வீதியிலே நடந்தடியேன் இருக்கும்இடந் தேடி

விரும்பிஅடைந் தெனைக்கூவி விளைவொன்று கொடுத்தாய்

பாதியிலே ஒன்றான பசுபதிநின் கருணைப்

பண்பைஅறிந் தேன்ஒழியா நண்பைஅடைந் தேனே.

69

3129

இருட்டாய மலச்சிறையில் இருக்கும்நமை எல்லாம்

எடுப்பதொன்றாம் இன்பநிலை கொடுப்பதொன்றாம் எனவே

பொருட்டாயர் போற்றுகின்ற பொன்னடிகள் வருந்தப்

பொறையிரவில் யானிருக்கும் இடந்தேடிப் புகுந்து

மருட்டாயத் திருந்தேனைக் கூவிவர வழைத்து

வண்ணம்ஒன்றென் கைதனிலே மகிழ்ந்தளித்தாய் நின்றன்

அருட்டாயப் பெருமைதனை என்னுரைப்பேன் பொதுவில்

ஆனந்தத் திருநடஞ்செய் தருளுகின்ற அரசே.

70

3130

உன்மனியின் உள்ளகத்தே ஒளிருவதொன் றாகி
உற்றஅதன் வெளிப்புறத்தே ஓங்குவதொன் றாகிச்
சின்மயமாய் விளங்குகின்ற திருவடிகள் வருந்தச்
சிறுநாயேன் பொருட்டாகத் தெருவில்நடந் தருளிப்
பொன்மயமாந் திருமேனி விளங்கஎன்பால் அடைந்து
பொருள்ஒன்றென் கைதனிலே பொருந்தஅளித் தனையே
நின்மலனே நின்னருளை என்புகல்வேன் பொதுவில்
நிறைந்தஇன்ப வடிவாகி நிருத்தம்இடும் பதியே.

71

3131

ஐவர்களுக் கைந்தொழிலும் அளித்திடுவ தொன்றாம்
அத்தொழிற்கா ரணம்புரிந்து களித்திடுவ தொன்றாம்
தெய்வநெறி என்றறிஞர் புகழ்ந்துபுகழ்ந் தேத்துந்
திருவடிகள் மிகவருந்தத் தெருவினிடை நடந்து
கைவரயான் இருக்கும்மணைக் கதவுதிறப் பித்துக்
களித்தெனைஅங் கழைத்தெனது கையில்ஒன்று கொடுத்தாய்
சைவமணி மன்றிடத்தே தனிநடனம் புரியும்
தற்பரநின் அருட்பெருமை சாற்றமுடி யாதே.

72

3132

அருளுதிக்குந் தருணத்தே அமுதவடி வாகி
ஆனந்த மயமாகி அமர்ந்ததிரு வடிகள்
இருளுதிக்கும் இரவினிடை வருந்தநடந் தருளி
யானிருக்கும் மனைக்கதவந் திறப்பித்தங் கடைந்து
மருளுதிக்கும் மனத்தேனை வரவழைத்து நோக்கி
மகிழ்ந்தெனது கரத்தொன்று வழங்கியசற் குருவே
தெருளுதிக்கும் மணிமன்றில் திருநடஞ்செய் அரசே
சிவபெருமான் நின்கருணைத் திறத்தைவியக் கேனே.

73

3133

நான்கண்ட போதுசுயஞ் சோதிமய மாகி
நான்பிடித்த போதுமதி நளினவண்ண மாகித்
தேன்கொண்ட பாலெனநான் சிந்திக்குந் தோறுந்
தித்திப்ப தாகிஎன்றன் சென்னிமிசை மகிழ்ந்து
தான்கொண்டு வைத்தஅந்நாள் சில்லென்றென் உடம்பும்
தகஉயிருங் குளிர்வித்த தாண்மலர்கள் வருந்த
வான்கொண்டு நடந்திங்கு வந்தெனக்கும் அளித்தாய்
மன்றில்நடத் தரசேநின் மாகருணை வியப்பே.

74

3134

யோகாந்த மிசைஇருப்ப தொன்றுகலாந் தத்தே

உவந்திருப்ப தொன்றெனமெய் யுணர்வுடையோர் உணர்வால்

ஏகாந்தத் திருந்துணரும் இணையடிகள் வருந்த

என்பொருட்டாய் யானிருக்கும் இடந்தேடி நடந்து

வாகாந்தச் சணிக்கதவந் திறப்பித்தங் கென்னை

வரவழைத்தென் கைதனிலே மகிழ்ந்தொன்று கொடுத்தாய்

மோகாந்த காரம்அறுத் தவர்ஏத்தப் பொதுவில்

முயங்கிநடம் புரிகின்ற முக்கனுடை அரசே.

75

3135

மகமதிக்கு மறையும்மறை யான்மதிக்கும் அயனும்

மகிழ்ந்தயனான் மதிக்கும்நெடு மாலும்நெடு மாலான்

மிகமதிக்கும் உருத்திரனும் உருத்திரனால் மதிக்கும்

மேலவனும் அவன்மதிக்க விளங்குசதா சிவனும்

தகமதிக்குந் தோறும்அவர் அவர்உளத்தின் மேலும்

தலைமேலும் மறைந்துறையுந் தாள்மலர்கள் வருந்த

அகமதிக்க நடந்தென்பால் அடைந்தொன்று கொடுத்தாய்

அம்பலத்தில் ஆடுகின்றாய் அருட்பெருமை வியப்பே.

76

3136

இருவினைஒப் பாகிமல பரிபாகம் பொருந்தல்

எத்தருணம் அத்தருணத் தியல்ஞான ஒளியாம்

உருவினையுற் றுள்ளகத்தும் பிரணவமே வடிவாய்

உற்றுவெளிப் புறத்தும்எழுந் துணர்த்திஉரைத் தருளும்

திருவடிகள் மிகவருந்த நடந்தெளியேன் பொருட்டாத்

தெருக்கவந் திறப்பித்துச் சிறியேனை அழைத்துக்

குருவடிவங் காட்டிஒன்று கொடுத்தாய் என்கரத்தே

குணக்குன்றே நின்னருட்கென் குற்றமெலாங் குணமே.

77

3137

தம்மடியார் வருந்திலது சகியாதக் கணத்தே

சார்ந்துவருத் தங்களெலாந் தயவினொடு தவிர்த்தே

எம்மடியார் என்றுகொளும் இணையடிகள் வருந்த

இரவினிடை நடந்தெளியேன் இருக்கும்இடத் தடைந்து

கம்மடியா(185)க் கதவுபெருங் காப்பவிழப் புரிந்து

கடையேனை அழைத்தெனது கையில்ஒன்று கொடுத்து

நம்மடியான் என்றெனையுந் திருவுளத்தே அடைத்தாய்

நடம்புரியும் நாயகநின் நற்கருணை வியப்பே.

78

185. கம்மடியர் - தொ.வே. - அடிகளார் எழுத்து

இவ் விரு வகையாகக் கொள்ளக் கிடக்கிறது.

பொருத்தமான பொருள் தருவதைக் கொள்க. ஆ.பா.

3138

உம்பருக்குங் கிடைப்பரிதாம் மணிமன்றில் பூத

உருவழிவங் கடந்தாடுந் திருவடிக ளிடத்தே

செம்பருக்கைக் கல்லுறுத்தத் தெருவில்நடந் திரவில்

தெருக்கதவந் திறப்பித்துச் சிறியேனை அழைத்து

வம்பருக்குப் பெறலரிதாம் ஒருபொருள்என் கரத்தே

மகிழ்ந்தளித்துத் துயர்தீர்ந்து வாழ்கஎன உரைத்தாய்

இம்பருக்கோ அம்பருக்கும் இதுவியப்பாம் எங்கள்

இறைவநின தருட்பெருமை இசைப்பதெவன் அணிந்தே.

79

3139

உருவம்ஒரு நான்காகி அருவமும்அவ் வளவாய்

உருஅருஒன் றாகிஇவை ஒன்பானுங் கடந்து

துருவமுடி யாப்பரம துரியநடு விருந்த

சொருபஅனு பவமயமாந் துணையடிகள் வருந்தத்

தெருவமிசை நடந்துசிறு செம்பரற்கல் உறுத்தச்

சிறியேன்பால் அடைந்தெனது செங்கையில்ஒன் றளித்தாய்

மருவஇனி யாய்மன்றில் நடம்புரிவாய் கருணை

மாகடலே நின்பெருமை வழுத்தமுடி யாதே.

80

3140

பக்குவத்தால் உயர்வாழைப் பழங்கனிந்தாற் போலும்

பரங்கருணை யாற்கனிந்த பத்தர்சித்தந் தனிலே

பொக்கமில்அப் பழந்தனிலே தெள்ளமுதங் கலந்தாற்

போற்கலந்து தித்திக்கும் பொன்னடிகள் வருந்த

மிக்கஇருள் இரவினிடை நடந்தெளியேன் இருக்கும்

வியன்மனையில் அடைந்துகத வந்திறக்கப் புரிந்து

ஒக்களனை அழைத்தொன்று கொடுத்திங்கே இருஎன்

றுரைத்தனைஎம் பெருமான்நின் உயர்கருணை வியப்பே.

81

3141

உளவறிந்தோர் தமக்கெல்லாம் உபநிடதப் பொருளாய்

உளவறியார்க் கிகபரமும் உறுவிக்கும் பொருளாய்

அளவறிந்த அறிவாலே அறிந்திடநின் றாடும்

அடிமலர்கள் வருந்தியிட நடந்திரவில் அடைந்து

களவறிந்தேன் தனைக்கூவிக் கதவுதிறப் பித்துக்

கையில்ஒன்று கொடுத்தாய்நின் கருணையைஎன் என்பேன்

விளவெறிந்தோன் அயன்முதலோர் பணிந்தேத்தப் பொதுவில்

விளங்குநடம் புரிகின்ற துளங்கொளிமா மணியே.

82

3142

எவ்வுலகும் எவ்வுயிரும் எச்செயலுந் தோன்றி

இயங்கும்இட மாகிஎல்லாம் முயங்கும்இட மாகித்

தெவ்வுலகும் நண்புலகுஞ் சமனாகக் கண்ட

சித்தர்கள்தம் சித்தத்தே தித்திக்கும் பதங்கள்

இவ்வுலகில் வருந்தநடந் தென்பொருட்டால் இரவில்

எழிற்கதவந் திறப்பித்தங் கென்கையில்ஒன் றளித்தாய்

அவ்வுலக முதல்உலகம் அனைத்துமகிழ்ந் தேத்த

அம்பலத்தே நடம்புரியும் செம்பவளக் குன்றே.

83

3143

மானினொடு மோகினியும் மாமாயை யுடனே

வைந்துவமும் ஒன்றினொன்று வதிந்தசைய அசைத்தே

ஊனினொடும் உயிருணர்வுங் கலந்துகலப் புறுமா

றுறுவித்துப் பின்கரும ஒப்புவருந் தருணம்

தேனினொடு கலந்தஅமு தெனருசிக்க இருந்த

திருவடிகள் வருந்தநடந் தடியேன்பால் அடைந்து

வானினொடு விளங்குபொருள் ஒன்றெனக்கும் அளித்தாய்

மன்றில்நடத் தரசேநின் மாகருணை வியப்பே.

84

3144

பசுபாச பந்தம்அறும் பாங்குதனைக் காட்டிப்

பரமாகி உள்ளிருந்து பற்றறவும் புரிந்தே

அசமான மானசிவா னந்தஅனு பவமும்

அடைவித்தவ் வனுபவந்தாம் ஆகியசே வடிகள்

வசுமீது வருந்தியிட நடந்தடியேன் இருக்கும்

மனையைஅடைந் தணிக்கதவந் திறப்பித்து நின்று

விசுவாச முறஎனைஅங் கழைத்தொன்று கொடுத்தாய்

விடையவநின் அருட்பெருமை என்புகல்வேன் வியந்தே.

85

3145

ஆதியுமாய் அந்தமுமாய் நடுவாகி ஆதி

அந்தநடு வில்லாத மந்தணவான் பொருளாய்ச்

சோதியுமாய்ச் சோதியெலாந் தோன்றுபர மாகித்

துரியமுமாய் விளங்குகின்ற துணையடிகள் வருந்த

பாதியிர விடைநடந்து நான்இருக்கும் இடத்தே

படர்ந்துதெருக் கதவங்காப் பவிழ்த்திடவும் புரிந்து

ஓதியிலங் கெனையழைத்தென் கரத்தொன்று கொடுத்தாய்

உடையவநின் அருட்பெருமை என்னுரைப்பேன் உவந்தே.

86

3146

பாடுகின்ற மறைகளெலாம் ஒருபுறஞ்சூழ்ந் தாடப்

பத்தரொடு முத்தரெலாம் பார்த்தாடப் பொதுவில்

ஆடுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியேன்

அடையும்இடத் தடைந்திரவிற் காப்பவிழ்க்கப் புரிந்து

நாடுகின்ற சிறியேனை அழைத்தருளி நோக்கி

நகைமுகஞ்செய் தென்கரத்தே நல்கினைஒன் றிதனால்

வாடுகின்ற வாட்டமெலாந் தவிர்ந்துமகிழ் கின்றேன்

மன்னவநின் பொன்னருளை என்னெனவாழ்த் துவனே.

87

3147

எம்மதத்தில் எவரெவர்க்கும் இயைந்தஅனு பவமாய்

எல்லாமாய் அல்லவுமாய் இருந்தபடி இருந்தே

அம்மதப்பொன் னம்பலத்தில் ஆனந்த நடஞ்செய்

அரும்பெருஞ்சே வடியிணைகள் அசைந்துமிக வருந்த

இம்மதத்தில் என்பொருட்டாய் இரவில்நடந் தருளி

எழிற்கதவந் திறப்பித்தங் கெனைஅழைத்தென் கரத்தே

சம்மதத்தால் ஒன்றளித்த தயவினைஎன் புகல்வேன்

தம்மைஅறிந் தவர்அறிவின் மன்னும்ஒளி மணியே.

88

3148

பூதவெளி கரணவெளி பகுதிவெளி மாயா

போகவெளி மாமாயா யோகவெளி புகலும்

வேதவெளி அபரவிந்து வெளிஅபர நாத

வெளிஏக வெளிபரம வெளிஞான வெளிமா

நாதவெளி சுத்தவெறு வெளிவெட்ட வெளியா
நவில்கின்ற வெளிகளெலாம் நடிக்கும்அடி வருந்த
ஏதஎளி யேன்பொருட்டா நடந்தென்பால் அடைந்தே
என்கையின்ஒன் றளித்தனைநின் இரக்கம்எவர்க் குளதே.

89

3149

வானதுவாய்ப் பசுமலம்போய்த் தனித்துநிற்குந் தருணம்
வயங்குபரா னந்தசுகம் வளைந்துகொள்ளுந் தருணம்
தானதுவாய் அதுதானாய்ச் சகசமுறுந் தருணம்
தடையற்ற அனுபவமாந் தன்மையடி வருந்த
மானதுவாய் நடந்தெளியேன் இருக்குமிடத் தடைந்து
மணிக்கதவந் திறப்பித்து மகிழ்ந்தெனைஅங் கழைத்து
ஆனதொரு பொருளளித்தாய் நின்னருள்என் என்பேன்
அம்பலத்தே நடம்புரியும் எம்பெருஞ்சோ தியனே.

90

3150

புன்றலைஎன் தலையெனநான் அறியாமல் ஒருநாள்
பொருத்தியபோ தினிற்சிவந்து பொருந்தியபொன் னடிகள்
இன்றலைவின் மிகச்சிவந்து வருந்தநடந் தெளியேன்
இருக்குமிடத் தடைத்துகத வந்திறக்கப் புரிந்து
மன்றலின்அங் கெனைஅழைத்தென் கையில்ஒன்று கொடுத்தாய்

மன்னவநின் பெருங்கருணை வண்மையையென் என்பேன்
பொன்றலிலாச் சித்தர்முத்தர் போற்றமணி மன்றில்
புயங்கநடம் புரிகின்ற வயங்கொளிமா மணியே.

91

3151

தஞ்சமுறும் உயிர்க்குணர்வாய் இன்பமுமாய் நிறைந்த
தம்பெருமை தாமறியாத் தன்மையவாய் ஒருநாள்
வஞ்சகனேன் புன்றலையில் வைத்திடவுஞ் சிவந்து
வருந்தியசே வடிபின்னும் வருந்தநடந் தருளி
எஞ்சலிலா இரவினிடை யானிருக்கும் இடஞ்சேர்ந்
தெழிற்கதவந் திறப்பித்தங் கெனைஅழைத்தொன் றளித்தாய்
விஞ்சுபரா னந்தநடம் வியன்பொதுவிற் புரியும்
மேலவநின் அருட்பெருமை விளம்பலெவன் வியந்தே.

92

3152

எழுத்தினொடு பதமாகி மந்திரமாய்ப் புவனம்
எல்லாமாய்த் தத்துவமாய் இயம்புகலை யாகி
வழுத்துமிவைக் குள்ளாகிப் புறமாகி நடத்தும்
வழியாகி நடத்துவிக்கும் மன்னிறையு மாகி
அழுத்துறுமிங் கிவையெல்லாம் அல்லனவாய் அப்பால்
ஆகியதற் கப்பாலும் ஆனபதம் வருந்த

இழைத்துநடந் திரவில்என்பால் அடைந்தொன்று கொடுத்தாய்
எம்பெருமான் நின்பெருமை என்னுரைப்பேன் வியந்தே.

93

3153

மாவின்மணப் போர்விடைமேல் நந்திவிடை மேலும்

வயங்கிஅன்பர் குறைதவிர்த்து வாழ்வளிப்ப தன்றிப்

பூவின்மணம் போல்உயிருக் குயிராகி நிறைந்து

போகம்அளித் தருள்கின்ற பொன்னடிகள் வருந்தத்

தாவிநடந் திரவின்மனைக் கதவுதிறப் பித்தே

தயவுடன்அங் கெனைஅழைத்துத் தக்கதொன்று கொடுத்தாய்

நாவின்மணந் துறப்புலவர் வியந்தேத்தும் பொதுவில்

நடம்புரியும் நாயகநின் நற்கருணை இதுவே.

94

3154

மணப்போது வீற்றிருந்தான் மாலவன்மற் றவரும்

மனஅழுக்கா றுறச்சிறியேன் வருந்தியநாள் அந்தோ

கணப்போதுந் தரியாமற் கருணைஅடி வருந்தக்

கங்குலிலே நடந்தென்னைக் கருதிஒன்று கொடுத்தாய்

உணப்போது போக்கினன்முன் உளவறியா மையினால்

உளவறிந்தேன் இந்நாள்என் உள்ளமகிழ் வுற்றேன்

தணப்போது மறைகளெலாந் தனித்தனிநின் றேத்தத்

தனிமன்றில் ஆனந்தத் தாண்டவஞ்செய் அரசே.

95

3155

நடுங்கமலக் கண்குறுகி நெடுங்கமலக் கண்விளங்கும்(186)

நல்லதிரு வடிவருந்த வல்இரவில் நடந்து

தொடுங்கதவந் திறப்பித்துத் துணிந்தெனையங் கழைத்துத்

துயரமெலாம் விடுகஇது தொடுகஎனக் கொடுத்தாய்

கொடுங்குணத்தேன் அளவினில்என் குற்றமெலாங் குணமாக்

கொண்டகுணக் குன்றேநின் குறிப்பினைஎன் புகல்வேன்

இடுங்கடுக என்றுணர்த்தி ஏற்றுகின்ற அறிவோர்

ஏத்தமணிப் பொதுவில்அருட் கூத்துடைய பொருளே.

96

186. அடிகளாரின் எழுத்து பாவில் உள்ளபடி தோன்றுகிறது.

தொ.வே. அவர்களும் அப்படியே பதித்திருக்கிறார்கள்.

சீர் அமைவு கருதி 'நெடுங்கமலம் விளங்கும்' எனக்

கொள்வார் கொள்க ஆ.பா.

3156

வெய்யபவக் கோடையிலே மிகஇளைத்து மெலிந்த

மெய்யடியர் தமக்கெல்லாம் விரும்புகுளிர் சோலைத்

துய்யநிழ லாய்அமுதாய் மெலிவனைத்துந் தவிர்க்கும்

துணையடிகள் மிகவருந்தத் துணிந்துநடந் தடியேன்

உய்யநடு இரவினில்யான் இருக்குமிடத் தடைந்தே
உயர்கதவந் திறப்பித்தங் குவந்தழைத்தொன் றளித்தாய்
வையகமும் வானகமும் வாழமணிப் பொதுவில்
மாநடஞ்செய் அரசேநின் வண்மைஎவர்க் குளதே.

97

3157

சிறயவனேன் சிறுமையெலாம் திருவுளங்கொள் ளாதென்
சென்னிமிசை அமர்ந்தருளும் திருவடிகள் வருந்தச்
செறியிரவில் நடந்தணைந்து நானிருக்கு மிடத்தே
தெருக்கதவந் திறப்பித்துச் சிறப்பின்எனை அழைத்துப்
பிறிவிலதிங் கிதுதணைநீ பெறுகவெனப் பரிந்து
பேசிஒன்று கொடுத்தாய்நின் பெருமையைஎன் என்பேன்
பொறியினற வோர்துதிக்கப் பொதுவில்நடம் புரியும்
பொருளேநின் அருளேமெய்ப் பொருள்எனத்தேர்ந் தனனே.

98

3158

அடிநாளில் அடியேனை அறிவுகுறிக் கொள்ளா
தாட்கொண்டென் சென்னிமிசை அமர்ந்தபதம் வருந்தப்
படிநாளில் நடந்திரவில் அடைந்தருளித் தெருவில்
படர்கதவந் திறப்பித்துப் பரிந்தெனைஅங் கழைத்துப்
பிடிநாளு மகிழ்ந்துனது மனங்கொண்ட படியே

பேரறஞ்செய் துறுகஎனப் பேசிஒன்று கொடுத்தாய்

பொடிநாளும் அணிந்துமணிப் பொதுவில்நடம் புரியும்

பொருளேநின் அருளேமெய்ப் பொருள்எனத்தேர்ந் தனனே.

99

3159

உலகியலோ டருளியலும் ஒருங்கறியச் சிறியேன்

உணர்விலிருந் துணர்த்திஎன துயிர்க்குயிராய் விளங்கித்

திலகமெனத் திகழ்ந்தெனது சென்னிமிசை அமர்ந்த

திருவடிகள் வருந்தநடை செய்தருளி அடியேன்

இலகுமனைக் கதவிரவில் திறப்பித்தங் கென்னை

இனிதழைத்தொன் றளித்துமகிழ்ந் தின்னும்நெடுங் காலம்

புலவர்தொழ வாழ்கஎன்றாய் பொதுவில்நடம் புரியும்

பொருளேநின் அருளேமெய்ப் பொருள்எனத்தேர்ந் தனனே.

100

திருச்சிற்றம்பலம்

3. பிரசாத மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3160

திருஉருக்கொண் டெழுந்தருளிச் சிறியேன்முன் அடைந்து

திருநீற்றுப் பைஅவிழ்த்துச் செஞ்சுடர்ப்பூ அளிக்கத்

தருவுருக்கொண் டெதிர்வணங்கி வாங்கியநான் மீட்டும்

தயாநிதியே திருநீறும் தருகஎனக் கேட்ப

மருவுருக்கொண் டன்றளித்தாம் திருநீறின் றுனக்கு

மகிழ்ந்தளித்தாம் இவைஎன்று வாய்மலர்ந்து நின்றாய்

குருஉருக்கொண் டம்பலத்தே அருள்நடனம் புரியும்

குருமணியே என்னைமுன்னாட் கொண்டகுணக் குன்றே.

1

3161

என்வடிவந் தழைப்பஒரு பொன்வடிவந் தரித்தே

என்முன்அடைந் தெனைநோக்கி இளநகைசெய் தருளித்

தன்வடிவத் திருநீற்றுத் தனிப்பைஅவிழ்த் தெனக்குத்

தகுசுடர்ப்பூ அளிக்கவும்நான் தான்வாங்கிக் களித்து

மின்வடிவப் பெருந்தகையே திருநீறும் தருதல்

வேண்டுமென முன்னரது விரும்பியளித் தனம்நாம்

உன்வடிவிற் காண்டியென உரைத்தருளி நின்றாய்

ஒளிநடஞ்செய் அம்பலத்தே வெளிநடஞ்செய் அரசே.

2

3162

அழகுநிறைந் திலகஒரு திருமேனி தரித்தே

அடியேன்முன் எழுந்தருளி அருள்நகைகொண் டடியார்

கழகநடு எனைஇருத்தி அவர்க்கெல்லாம் நீறு

களித்தருளி என்னளவிற் கருணைமுக மலர்ந்து

குழகியற்செஞ் சுடர்ப்பூவைப் பொக்கணத்தில் எடுத்துக்

கொடுத்தருளி நின்றனைநின் குறிப்பறியேன் குருவே

மழகளிற்றின் உரிவிளங்க மணிப்பொதுவிற் சோதி

மயவடிவோ டின்பநடம் வாய்ந்தியற்றும் பதியே.

3

3163

விலைகடந்த மணிஎனஓர் திருமேனி தரித்து

வினையேன்முன் எழுந்தருளி மெய்யடியர் விரும்பக்

கலைகடந்த பொருட்கெல்லாங் கரைகடந்து நாதக்

கதிகடந்த பெருங்கருணைக் கடைக்கண்மலர்ந் தருளி

அலைகடந்த கடல்மலர்ந்த மணச்செழும்பூ அடியேன்

அங்கைதனில் அளித்தனைநின் அருட்குறிப்பே தறியேன்

மலைகடந்த நெடுந்தோளில் இதழிஅசைந் தாட

மன்றில்நடம் புரிகின்ற வள்ளல்அருட் குருவே.

4

3164

உலர்ந்தமரந் தழைக்கும்ஒரு திருஉருவந் தாங்கி

உணர்விலியேன் முன்னர்உவந் துறுகருணை துளும்ப

மலர்ந்தமுகம் காட்டிநின்று திருநீற்றுப் பையை

மலர்க்கரத்தால் அவிழ்த்தங்கு வதிந்தவர்கட் கெல்லாம்

அலர்ந்ததிரு நீறளித்துப் பின்னர்என்றன் கரத்தில்

அருள்மணப்பூ அளித்தனைநின் அருட்குறிப்பே தறியேன்
கலந்தவரைக் கலந்துமணிக் கனகமன்றில் நடஞ்செய்
கருணைநெடுங் கடலேஎன் கண்அமர்ந்த ஒளியே.

5

3165

பிழைஅலதொன் றறியாத சிறியேன்முன் புரிந்த
பெருந்தவமோ திருவருளின் பெருமையிதோ அறியேன்
மழைஎனநின் றிலகுதிரு மணிமிடற்றில் படிக
வடந்திகழ நடந்துகுரு வடிவதுகொண் டடைந்து
விழைவினொடென் எதிர்நின்று திருநீற்றுக் கோயில்
விரித்தருளி அருண்மணப்பூ விளக்கம்ஒன்று கொடுத்தாய்
குழைஅசையச் சடைஅசையக் குலவுபொன்னம் பலத்தே
கூத்தியற்றி என்னைமுன்னாட் கொண்டசிவக் கொழுந்தே.

6

3166

முத்தேவர் அழுக்காற்றின் மூழ்கியிடத் தனித்த
முழுமணிபோன் றொருவடிவென் முன்கொடுவந் தருளி
எத்தேவர் தமக்குமிக அரியஎனும் மணப்பூ
என்கரத்தே கொடுத்தனைநின் எண்ணம்இதென் றறியேன்
சித்தேஎன் பவரும்ஒரு சத்தேஎன் பவரும்
தேறியபின் ஒன்றாகத் தெரிந்துகொள்ளும் பொதுவில்

அத்தேவர் வழுத்தஇன்ப உருவாகி நடஞ்செய்

ஆரமுதே என்னுயிருக் கானபெருந் துணையே.

7

3167

தெள்ளமுதம் அனையஒரு திருஉருவந் தாங்கிச்

சிறியேன்முன் எழுந்தருளிச் செழுமணப்பூ அளித்தாய்

உள்ளமுதம் ஆகியநின் திருக்குறிப்பே துணரேன்

உடையவளை உடையவனே உலகுணரா ஒளியே

கள்ளமிலா அறிவாகி அவ்வறிவுக் கறிவாய்க்

கலந்துநின்ற பெருங்கருணைக் கடலேஎன் கண்ணே

கொள்ளுதொறும் கரணமெலாங் கரைந்துகனிந் தினிக்கும்

கொழுங்கனியே கோற்றேனே பொதுவிளங்குங் குருவே.

8

3168

கண்விருப்பங் கொளக்கரணங் கனிந்துகனிந் துருகக்

கருணைவடி வெடுத்தருளிக் கடையேன்முன் கலந்து

மண்விருப்பங் கொளுமணப்பூ மகிழ்ந்தெனக்குக் கொடுத்து

வாழ்கஎன நின்றனைநின் மனக்குறிப்பே தறியேன்

பெண்விருப்பந் தவிர்க்கும்ஒரு சிவகாம வல்லிப்

பெண்விருப்பம் பெறஇருவர் பெரியர்(187)உளங் களிப்பப்

பண்விருப்பந் தருமறைகள் பலபலநின் றேத்தப்

பரமசிதம் பரநடனம் பயின்றபசு பதியே.

9

187. இருவர் பெரியர் - பதஞ்சலி, வியாக்கிரபாதர். ச.மு.க.

3169

உன்னுதற்கும் உணர்வதற்கும் உவட்டாத வடிவம்

ஒன்றெடுத்து மெய்யன்பர் உவக்களழுந் தருளி

முன்னுதற்கோர் அணுத்துணையுந் தரமில்லாச் சிறியேன்

முகநோக்கிச் செழுமணப்பூ முகமலர்ந்து கொடுத்தாய்

துன்னுதற்கிங் கரிதாம்நின் திருஉள்ளக் குறிப்பைத்

துணிந்தறியேன் என்னினும்ஓர் துணிவின்உவக் கின்றேன்

பொன்னுதற்குத் திலகமெனுஞ் சிவகாம வல்லிப்

பூவைஒரு புறங்களிப்பப் பொதுநடஞ்செய் பொருளே.

10

திருச்சிற்றம்பலம்

4. ஆனந்த மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3170

திருவருடுந் திருவடிப்பொற் சிலம்பசைய நடந்தென்

சிந்தையிலே புகுந்துநின்பாற் சேர்ந்துகலந் திருந்தாள்

தெருமரலற் றுயர்ந்தமறைச் சிரத்தமர்ந்த புனிதை

சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்பப்

பொருவருமெய் யன்புடையார் இருவருங்கண் டுவந்து
போற்றமணிப் பொதுவில்நடம் புரிகின்ற துரையே
பருவரல்அற் றடிச்சிறியேன் பெருவரம்பெற் றுனையே
பாடுகின்றேன் பெரியஅருட் பருவமடைந் தனனே.

1

3171

சண்பைமறைக் கொழுந்துமகிழ் தரஅமுதங் கொடுத்தாள்
தயவுடையாள் எனையுடையாள் சர்வசத்தி யுடையாள்
செண்பகப்பொன் மேனியினாள் செய்யமலர்ப் பதத்தாள்
சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்பப்
பண்பகர்பொன் அம்பலத்தே ஆனந்த நடஞ்செய்
பரம்பரநின் திருவருளைப் பாடுகின்றேன் மகிழ்ந்து
எண்பகர்குற் றங்களெலாங் குணமாகக் கொள்ளும்
எந்துரைஎன் றெண்ணுகின்ற எண்ணமத னாலே.

2

3172

அருளுடைய நாயகிஎன் அம்மைஅடி யார்மேல்
அன்புடையாள் அமுதனையாள் அற்புதப்பெண் ணரசி
தெருளுடைய சிந்தையிலே தித்திக்கும் பதத்தாள்
சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்ப
மருளுடைய மாயையெலாந் தேயமணி மன்றின்

மாநடஞ்செய் துரையேநின் மன்னருளின் திறத்தை
இருளுடைய மனச்சிறியேன் பாடுகின்றேன் பருவம்
எய்தினன்என் றறிஞரெலாம் எண்ணிமதித் திடவே.

3

3173

மாசுடையேன் பிழைஅனைத்தும் பொறுத்துவர மளித்தாள்
மங்கையர்கள் நாயகிநான் மறைஅணிந்த பதத்தாள்
தேசுடையாள் ஆனந்தத் தெள்ளமுத வடிவாள்
சிவகாம வல்லிபெருந் தேவே உளங் களிப்பக்
காசுடைய பவக்கோடைக் கொருநிழலாம் பொதுவில்
கனநடஞ்செய் துரையேநின் கருணையையே கருதி
ஆசுடையேன் பாடுகின்றேன் துயரமெலாந் தவிர்ந்தேன்
அன்பர்பெறும் இன்பநிலை அனுபவிக்கின் றேனே.

4

3174

பொய்யாத வரம்எனக்குப் புரிந்தபரம் பரைவான்
பூதமுதற் கருவியெலாம் பூட்டுவிக்குந் திறத்தாள்
செய்யாளுங் கலையவளும் உருத்திரையும் வணங்கும்
சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்பக்
கையாத இன்பநடங் கனகமணிப் பொதுவில்
களித்தியற்றுந் துரையேநின் கருணையைநான் கருதி

நையாத வண்ணமெலாம் பாடுகின்றேன் பருவம்

நண்ணியபுண் ணியரெல்லாம் நயந்துமகிழ்ந் திடவே.

5

3175

அறங்கனிந்த அருட்கொடிஎன் அம்மைஅமு தளித்தாள்

அகிலாண்ட வல்லிசிவா னந்திசௌந் தரிசீர்த்

திறங்கலந்த நாதமணிச் சிலம்பணிந்த பதத்தாள்

சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்ப

மறங்கனிந்தார் மயக்கமெலாந் தெளியமணிப் பொதுவில்

மாநடஞ்செய் துரையேநின் வண்மைதனை அடியேன்

புறங்கவியப் பாடுகின்றேன் அகங்கவியப் பாடும்

புண்ணியரெல் லாம்இவன்ஓர் புதியன்எனக் கொளவே.

6

3176

உள்ளமுதம் ஊற்றுவிக்கும் உத்தமிஎன் அம்மை

ஓங்கார பீடமிசைப் பாங்காக இருந்தாள்

தெள்ளமுத வடிவுடையாள் செல்வநல்கும் பதத்தாள்

சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்பக்

கள்ளமறுத் தருள்விளக்கும் வள்ளன்மணிப் பொதுவில்

கால்நிறுத்திக் கால்எடுத்துக் களித்தாடுந் துரையே

எள்ளலறப் பாடுகின்றேன் நின்னருளை அருளால்

இப்பாட்டிற் பிழைகுறித்தல் எங்ஙனம்இங் ஙனமே.

7

3177

பார்பூத்த பசுங்கொடிபொற் பாவையர்கள் அரசி

பரம்பரைசிற் பரைபரா பரைநிமலை யாதி

சீர்பூத்த தெய்வமறைச் சிலம்பணிந்த பதத்தாள்

சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்ப

ஏர்பூத்த மணிமன்றில் இன்பநடம் புரியும்

என்னருமைத் துரையேநின் இன்னருளை நினைந்து

கார்பூத்த கனைமழைபோல் கண்களின்நீர் சொரிந்து

கனிந்துமிகப் பாடுகின்ற களிப்பைஅடைந் தனனே.

8

3178

பூரணிசிற் போதைசிவ போகிசிவ யோகி

பூவையர்கள் நாயகிஐம் பூதமுந்தா ணாணாள்

தேரணியும் நெடுவீதித் தில்லைநக ருடையாள்

சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்ப

ஏரணியும் மணிமன்றில் இன்பவடி வாகி

இன்பநடம் புரிகின்ற எம்முடைய துரையே

தாரணியில் உனைப்பாடுந் தரத்தைஅடைந் தனன்என்

தன்மையெலாம் நன்மைஎனச் சம்மதித்த வாறே.

9

3179

தன்னொளியில் உலகமெலாந் தாங்குகின்ற விமலை

தற்பரைஅம் பரைமாசி தம்பரைசிற் சத்தி

சின்னவய தினில்என்னை ஆளநினைக் கிசைத்தாள்

சிவகாம வல்லிபெருந் தேவிஉளங் களிப்ப

மன்னியபொன் மணிப்பொதுவில் இன்பநடம் புரிந்து

வயங்குகின்ற துரையேநின் மாகருணைத் திறத்தை

உன்னிஉவந் துணர்ந்துருகிப் பாடுகின்றேன் எங்கள்

உடையானே நின்னருளின் அடையாளம் இதுவே.

10

திருச்சிற்றம்பலம்

5. பக்தி மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3180

அருளுடையாய் அடியேன்நான் அருளருமை அறியேன்

அறியாதே மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து

மருளுடையேன் தனைஅழைத்துத் திரும்பவும்என் கரத்தே

மகிழ்ந்தளித்த பெருங்கருணை வண்ணம்என்றன் மனமும்

தெருளுடைய கண்களும்விட் டகலாதே இன்னும்

தெரிகின்ற தாயினும்என் சிந்தைஉரு கிலதே

இருளுடைய சிலையும்இதற் குருகல்அரி தலவே
இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

1

3181

அன்புடையாய் அடியேன்நான் அருளருமை அறியேன்
அறியாதே மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து
வன்புடையேன் தனைஅழைத்துத் திரும்பவும்என் கரத்தே
வலிந்தளித்த பெருங்கருணை வண்ணம்என்றன் மனமும்
இன்புடைய கண்களும்விட் டகலாதே இன்னும்
விளங்குகின்ற தாயினும்என் வெய்யமனம் உருகா
என்புடைய உடலும்இதற் குருகல்அரி தலவே
இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

2

3182

ஆளுடையாய் சிறியேன்நான் அருளருமை அறியேன்
அறியாதே மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து
வாளுடையேன்(188) தனைஅழைத்துத் திரும்பவும்என் கரத்தே
வலிந்தளித்த பெருங்கருணை வண்ணம்என்றன் மனமும்
நீளுடைய கண்களும்விட் டகலாதே இன்னும்
நிகழ்கின்ற தாயினும்என் நெஞ்சம்உரு கிலதே
ஏளுடைய மலையும்இதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

3

188. வாள் - ஒளி, பட்டயம். ச.மு.க.

3183

ஆரமுதே அடியேன்நான் அருளருமை அறியேன்

அறியாதே மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து

வாரமுற எனையழைத்துத் திரும்பவும்என் கரத்தே

மகிழ்ந்தளித்த பெருங்கருணை வண்ணம்என்றன் மனமும்

சீருடைய கண்களும்விட் டகலாதே இன்னும்

தெரிகின்ற தாயினும்என் சிந்தைஉரு கிலதே

ஈரமிலா மரமும்இதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

4

3184

அற்புதநின் அருளருமை அறியேன்நான் சிறிதும்

அறியாதே மறுத்தபிழை ஆயிரமும் பொறுத்து

வற்புறுவேன் தனைஅழைத்துத் திரும்பவும்என் கரத்தே

வலிந்தளித்த பெருங்கருணை வண்ணம்என்றன் மனமும்

கற்புடைய கண்களும்விட் டகலாதே இன்னும்

காண்கின்ற தென்னினும்என் கன்மனமோ உருகா

இற்புடைய இரும்பும்இதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

5

3185

ஆண்டவநின் அருளருமை அறியாதே திரிந்தேன்

அன்றிரவின் மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து

வேண்டிஎனை அருகழைத்துத் திரும்பவும்என் கரத்தே

மிகஅளித்த அருள்வண்ணம் வினையுடையேன் மனமும்

காண்தகைய கண்களும்விட் டகலாதே இன்னும்

காண்கின்ற தாயினும்என் கருத்துருகக் காணேன்

ஈண்டுருகாக் கரடும்இதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

6

3186

அரசேநின் திருவருளின் அருமைஒன்றும் அறியேன்

அறியாதே மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து

விரவும்அன்பில் எனைஅழைத்து வலியவும்என் கரத்தே

வியந்தளித்த பெருங்கருணை விளக்கம்என்றன் மனமும்

உரவுமலர்க் கண்களும்விட் டகலாதே இன்னும்

ஒளிர்கின்ற தாயினும்என் உள்ளம்உரு கிலதே

இரவுநிறத் தவரும்இதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

7

3187

ஐயா நின் அருட்பெருமை அருமைஒன்றும் அறியேன்

அறியாதே மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து

மெய்யாஅன் றெனைஅழைத்து வலியவுமென் கரத்தே

வியந்தளித்த பெருங்கருணை விளக்கம்என்றன் மனமும்

கையாது கண்களும்விட் டகலாதே இன்னும்

காண்கின்ற தாயினும்என் கருத்துருகக் காணேன்

எய்யாவன் பரலும்இதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

8

3188

அப்பாநின் திருவருட்பேர் அமுதருமை அறியேன்

அன்றிரவின் மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து

இப்பாரில் எனைஅழைத்து வலியவும்என் கரத்தே

இனிதளித்த பெருங்கருணை இன்பமென்றன் மனமும்

துப்பாய கண்களும்விட் டகலாதே இன்னும்

தோன்றுகின்ற தாயினும்இத் துட்டநெஞ்சம் உருகா

எப்பாவி நெஞ்சுமிதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

9

3189

அம்மான்நின் அருட்சத்தி அருமைஒன்றும் அறியேன்

அன்றிரவின் மறுத்தபிழை அத்தனையும் பொறுத்து

வெம்மாயை அகற்றிஎனை அருகழைத்தென் கரத்தே

மிகஅளித்த பெருங்கருணை விளக்கம்என்றன் மனமும்

மைம்மாழை விழிகளும்விட் டகலாதே இன்னும்

வதிகின்ற தாயினும்என் வஞ்சநெஞ்சம் உருகா

எம்மாய நெஞ்சும்இதற் குருகல்அரி தலவே

இனித்தநடம் புரிந்துமன்றில் தனித்தசிவக் கொழுந்தே.

10

திருச்சிற்றம்பலம்

6. சௌந்தர மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3190

சேலோடும் இணைந்தவிழிச் செல்விபெருந் தேவி

சிவகாம வல்லியொடு சிவபோக வடிவாய்

மேலோடு கீழ்நடுவுங் கடந்தோங்கு வெளியில்

விளங்கியநின் திருஉருவை உளங்கொளும்போ தெல்லாம்

பாலோடு பழம்பிழிந்து தேன்கலந்து பாகும்

பசுநெய்யுங் கூட்டிஉண்ட படிஇருப்ப தென்றால்

மாலோடு காண்கின்ற கண்களுக்கங் கிருந்த

வண்ணம்இந்த வண்ணம்என எண்ணவும்ஒண் ணாதே.

1

3191

இன்பருளும் பெருந்தாய்என் இதயத்தே இருந்தாள்

இறைவியொடும் அம்பலத்தே இலங்கியநின் வடிவை

வன்புறுகன் மனக்கொடியேன் நினைக்கும்இடத் தெல்லாம்

மனங்கரைந்து சுகமயமாய் வயங்கும்எனில் அந்தோ

அன்புடையார் நின்றுநின்று கண்டுகொண்ட காலம்

ஆங்கவர்கட் கிருந்தவண்ணம் ஈங்கெவர்கள் புகல்வார்

துன்புறுதல் இல்லாத சுத்தநிலை உடையார்

தொழுகின்ற தோறுமகிழ்ந் தெழுகின்ற துரையே.

2

3192

சிவயோக சந்திதரும் தேவிஉல குடையாள்

சிவகாம வல்லியொடுஞ் செம்பொன்மணிப் பொதுவில்

நவயோக உருமுடிக்கண் விளங்கியநின் வடிவை

நாய்க்கடையேன் நான்நினைத்த நாள்எனக்கே மனமும்

பவயோக இந்தியமும் இன்பமய மான

படிஎன்றால் மெய்யறிவிற் பழுத்தபெருங் குணத்துத்

தவயோகர் கண்டவிடத் தவர்க்கிருந்த வண்ணம்

தன்னைஇந்த வண்ணம்என என்னை உரைப்பதுவே.

3

3193

சித்தியெலாம் அளித்தசிவ சத்திஎனை யுடையாள்

சிவகாம வல்லியொடு சிவஞானப் பொதுவில்

முத்தியெலாந் தரவிளங்கும் முன்னவநின் வடிவை

மூடமனச் சிறியேன்நான் நாடவரும் பொழுது

புத்தியெலாம் ஒன்றாகிப் புத்தமுதம் உண்டாற்

போலும்இருப் பதுஅதற்கு மேலும்இருப் பதுவேல்

பத்திஎலாம் உடையவர்கள் காணுமிடத் திருக்கும்

படிதான்எப் படியோஇப் படிஎன்ப தரிதே.

4

3194

தெய்வமெலாம் வணங்குகின்ற தேவிஎனை அளித்தாள்

சிவகாம வல்லியொடு திருமலிஅம் பலத்தே

சைவமெலாந் தரவிளங்கு நின்வடிவைக் கொடியேன்

தான்நினைத்த போதெனையே நான்நினைத்த திலையேல்

ஐவகைஇந் தியங்கடந்தார் கண்டவிடத் திருந்த

அனுபவத்தின் வண்ணமதை யார்புகல வல்லார்

உய்வகைஅந் நாள் உரைத்த தன்றியும்இந் நாளில்

உந்திரவில் வந்துணர்வு தந்தசிவ குருவே.

5

3195

தேன்மொழிப்பெண் ணரசிஅருட் செல்வம்எனக் களித்தாள்

சிவகாம வல்லியொடு செம்பொன்மணிப் பொதுவில்

வான்மொழிய நின்றிலங்கு நின்வடிவைச் சிறியேன்

மனங்கொண்ட காலத்தே வாய்த்தஅனு பவத்தை

நான்மொழிய முடியாதேல் அன்பர்கண்ட காலம்

நண்ணியமெய் வண்ணமதை எண்ணிஎவர் புகல்வார்

நூன்மொழிக்கும் பொருட்கும்மிக நுண்ணியதாய் ஞான

நோக்குடையார் நோக்கினிலே நோக்கியமெய்ப் பொருளே.

6

3196

சிற்றிடைஎம் பெருமாட்டி தேவர்தொழும் பதத்தாள்

சிவகாம வல்லியொடு சிறந்தமணிப் பொதுவில்

உற்றிடைநின் றிலங்குகின்ற நின்வடிவைக் கொடியேன்

உன்னுதொறும் உளம்இளகித் தளதளஎன் றுருகி

மற்றிடையில் வலியாமல் ஆடுகின்ற தென்றால்

வழியடியர் விழிகளினால் மகிழ்ந்துகண்ட காலம்

பற்றிடையா தாங்கவர்கட் கிருந்தவண்ணந் தனையார்

பகர்வாரே பகர்வாரேல் பகவன்நிகர் வாரே.

7

3197

ஆரமுதம் அனையவள்என் அம்மைஅபி ராமி

ஆனந்த வல்லியொடும் அம்பலத்தே விளங்கும்

பேரமுத மயமாம்உன் திருவடிவைக் குறித்துப்

பேசுகின்ற போதுமணம் வீசுகின்ற தொன்றோ

சீரமுத மாகிஎல்லாந் தித்திப்ப தன்போர்

சிறிதுமிலாக் கடைப்புலையேன் திறத்துக்கிங் கென்றால்

ஊரமுதப் பேரன்பர் பேசுமிடத் தவர்பால்

உற்றவண்ணம் இற்றிதென்ன உன்னமுடி யாதே.

8

3198

பொற்பதத்தாள் என்னளவிற் பொன்னாசை தவிர்த்தாள்

பூரணிஆ னந்தசிவ போகவல்லி யோடு

சொற்பதமுங் கடந்தமன்றில் விளங்கியநின் வடிவைத்

தூய்மையிலேன் நான்எண்ணுந் தோறும்மனம் இளகிச்

சிற்பதத்திற் பரஞான மயமாகும் என்றால்

தெளிவுடையார் காண்கின்ற திறத்தில்அவர்க் கிருக்கும்

நற்பதம்எத் தன்மையதோ உரைப்பரிது மிகவும்

நாதமுடி தனிற்புரியும் ஞானநடத் தரசே.

9

3199

என்பிழையா வையும்பொறுத்தாள் என்னைமுன்னே அளித்தாள்

இறைவிசிவ காமவல்லி என்னம்மை யுடனே

இன்பவடி வாய்ப்பொதுவில் இலங்கியநின் வண்ணம்

இற்றெனநான் நினைத்திடுங்கால் எற்றெனவும் மொழிவேன்

அன்புருவாய் அதுஅதுவாய் அளிந்தபழம் ஆகி

அப்பழச்சா றாகிஅதன் அருஞ்சுவையும் ஆகி

என்புருக மனஞான மயமாகும் என்றால்

எற்றோமெய் அன்புடையார் இயைந்துகண்ட இடத்தே.

10

3290

கரும்பனையாள் என்னிரண்டு கண்களிலே இருந்தாள்

கற்பகப்பொன் வல்லிசிவ காமவல்லி யுடனே

விரும்புமணிப் பொதுவினிலே விளங்கியநின் வடிவை

வினையுடையேன் நினைக்கின்ற வேளையில்என் புகல்வேன்

இரும்பனைய மனம்நெகிழ்ந்து நெகிழ்ந்துருகி ஒருபேர்

இன்பமய மாகும்எனில் அன்பர்கண்ட காலம்

அரும்பிமலர்ந் திட்டசிவா னந்தஅனு பவத்தை

யாரறிவார் நீஅறிவாய் அம்பலத்தெம் அரசே.

11

3291

காமசத்தி யுடன்களிக்கும் காலையிலே அடியேன்

கனஞான சத்தியையும் கலந்துகொளப் புரிந்தாள்

வாமசத்தி சிவகாம வல்லியொடும் பொதுவில்

வயங்கியநின் திருவடியை மனங்கொளும்போ தெல்லாம்

ஆமசத்தன் எனும்எனக்கே ஆனந்த வெள்ளம்

அதுததும்பிப் பொங்கிவழிந் தாடும்எனில் அந்தோ

ஏமசத்தர் எனும்அறிஞர் கண்டவிடத் திருந்த

இன்பஅனு பவப்பெருமை யாவர்புகல் வாரே.

12

திருச்சிற்றம்பலம்

## 7. அதிசய மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3282

அக்கோஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அயன்முதலோர் நெடுங்காலம் மயன்முதல்நீத் திருந்து

மிக்கோல மிடவும்அவர்க் கருளாமல் இருளால்

மிகமருண்டு மதியிலியாய் வினைவிரிய விரித்து

இக்கோலத் துடனிருந்தேன் அன்பறியேன் சிறியேன்

எனைக்கருதி என்னிடத்தே எழுந்தருளி எனையும்

தக்கோன்என் றுலகிசைப்பத் தன்வணம்ஒன் றளித்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

1

3283

அச்சோஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்
அரிமுதலோர் நெடுங்காலம் புரிமுதல்நீத் திருந்து
நச்சோல மிடவும்அவர்க் கருளாமல் மருளால்
நாள்கழித்துக் கோள்கொழிக்கும் நடைநாயிற் கடையேன்
எச்சோடும் இழிவினுக்கொன் றில்லேன்நான் பொல்லேன்
எனைக்கருதி யானிருக்கும் இடத்திலெழுந் தருளித்
தச்சோதி வணப்பொருள்ஒன் றெனக்களித்துக் களித்தான்
தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

2

3284

அத்தோஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்
அந்தணரெல் லாரும்மறை மந்தணமே புகன்று
ஒத்தோல மிடவும்அவர்க் கொருசிறிதும் அருளான்
ஓதியனையேன் விதியறியேன்ஒருங்கேன்வன் குரங்கேன்
இத்தோட மிகவுடையேன் கடைநாய்க்குங் கடையேன்
எனைக்கருதி யானிருக்கும் இடந்தேடி நடந்து
சத்தோட முறஎனக்கும் சித்தியொன்று கொடுத்தான்
தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

3

3285

அந்தோஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அறிவுடையார் ஐம்புலனும் செறிவுடையார் ஆகி

வந்தோல மிடவும்அவர்க் கருளாமல் மருளால்

மனஞ்சென்ற வழியெல்லாந் தினஞ்சென்ற மதியேன்

எந்தோஎன் றுலகியம்ப விழிவழியே உழல்வேன்

எனைக்கருதி எளியேன்நான் இருக்குமிடத் தடைந்து

சந்தோட முறஎனக்கும் தன்வணம்ஒன் றளித்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

4

3296

அப்பாஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அருந்தவர்கள் விரும்பிமிக வருந்திஉளம் முயன்று

இப்பாரில் இருந்திடவும் அவர்க்கருளான் மருளால்

இவ்வுலக நடைவிழைந்து வெவ்வினையே புரிந்து

எப்பாலும் இழிந்துமனத் திச்சைபுரி கின்றேன்

எனைக்கருதி யானிருக்கும் இடந்தேடி அடைந்து

தப்பாத ஒளிவண்ணந் தந்தென்னை அளித்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

5

3297

அம்மாஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அன்பரெலாம் முயன்றுமுயன் றின்படைவான் வருந்தி

எம்மானென் றேத்திடவும் அவர்க்கருளான் மருளால்

இதுநன்மை இதுதீமை என்றுநினை யாமே

மைம்மாலிற் களிசிறந்து வல்வினையே புரியும்

வஞ்சகனேன் தனைக்கருதி வந்துமகிழ்ந் தெனக்கும்

தம்மான முறவியந்து சம்மான மளித்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

6

3288

ஆவாஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அடியரெலாம் நினைந்துநினைந் தவிழ்ந்தகநெக் குருகி

ஓவாமல் அரற்றிடவும் அவர்க்கருளான் மாயை

உலகவிட யானந்தம் உவந்துவந்து முயன்று

தீவாய நரகினிடை விழக்கடவேன் எனைத்தான்

சிவயாநம எனப்புகலும் தெளிவுடையன் ஆக்கிச்

சாவாத வரங்கொடுத்துத் தனக்கடிமை பணித்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

7

3289

அண்ணாஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அறங்கரைந்த நாவினர்கள் அகங்கரைந்து கரைந்து

கண்ணார நீர்பெருக்கி வருந்தவும்அங் கருளான்

கடைநாயிற் கடையேன்மெய்க் கதியைஒரு சிறிதும்

எண்ணாத கொடும்பாவிப் புலைமனத்துச் சிறியேன்

எனைக்கருதி வலியவும்நான் இருக்குமிடத் தடைந்து

தண்ணார்வெண் மதியமுதம் உணவொன்று கொடுத்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

8

3210

ஐயாஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அருமைஅறிந் தருள்விரும்பி உரிமைபல இயற்றிப்

பொய்யாத நிலைநின்ற புண்ணியர்கள் இருக்கப்

புலைமனத்துச் சிறியேன்ஓர் புல்லுநிகர் இல்லேன்

செய்யாத சிறுதொழிலே செய்துழலுங் கடையேன்

செருக்குடையேன் எனைத்தனது திருவுளத்தில் அடைத்தே

சையாதி அந்தநடுக் காட்டிஒன்று கொடுத்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

9

3211

அன்னோஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அருளருமை அறிந்தவர்கள் அருளமுதம் விரும்பி

என்னோஇங் கருளாமை என்றுகவன் றிருப்ப

யாதுமொரு நன்றியிலேன் தீதுநெறி நடப்பேன்

முன்னோபின் னும்அறியா மூடமனப் புலையேன்

முழுக்கொடியேன் எனைக்கருதி முன்னர்எழுந் தருளித்

தன்னோடும் இணைந்தவண்ணம் ஒன்றெனக்குக் கொடுத்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினிந்தநடத் தவனே.

10

3212

ஐயோஈ ததிசயம்ஈ ததிசயம்என் புகல்வேன்

அருவினைகள் அணுகாமல் அறநெறியே நடந்து

மெய்யோதும் அறிஞரெலாம் விரும்பியிருந்திடவும்

வெய்யவினைக் கடல்குளித்து விழற்கிறைத்துக் களித்துப்

பொய்லூதிப் புலைபெருக்கி நிலைசுருக்கி உழலும்

புரைமனத்தேன் எனைக்கருதிப் புகுந்தருளிக் கருணைச்

சையோக முறஎனக்கும் வலிந்தொன்று கொடுத்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

11

3213

எற்றேஈ ததிசயம்ஈ ததிசயம்என் இசைப்பேன்

இச்சையெலாம் விடுத்துவனத் திடத்தும்மலை யிடத்தும்

உற்றேமெய்த் தவம்புரிவார் உன்னிவிழித் திருப்ப

உலகவிட யங்களையே விலகவிட மாட்டேன்

கற்றேதும் அறியகிலேன் கடையரினுங் கடையேன்

கருணையிலாக் கல்மனத்துக் கள்வன்எனைக் கருதிச்

சற்றேயும் அன்றுமிகப் பெரிதெனக்கிங் களித்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

12

3214

என்னேஈ ததிசயம்ஈ ததிசயம்என் இசைப்பேன்

இரவுபகல் அறியாமல் இருந்தஇடத் திருந்து

முன்னேமெய்த் தவம்புரிந்தார் இன்னேயும் இருப்ப

மூடர்களில் தலைநின்ற வேடமனக் கொடியேன்

பொன்னேயம் மிகப்புரிந்த புலைக்கடையேன் இழிந்த

புழுவினும்இங் கிழிந்திழிந்து புகுந்தஎனைக் கருதித்

தன்னேய முறஎனக்கும் ஒன்றளித்துக் களித்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

13

3215

ஓகோஈ ததிசயம்ஈ ததிசயம்என் னுரைப்பேன்

உள்ளபடி உள்ளஒன்றை உள்ளமுற விரும்பிப்

பாகோமுப் பழரசமோ எனருசிக்கப் பாடிப்

பத்திசெய்வார் இருக்கவும்ஓர் பத்தியும்இல் லாதே

கோகோஎன் றுலகுரைப்பத் திரிகின்ற கொடியேன்

குற்றமன்றிக் குணமறியாப் பெத்தன்எனைக் கருதித்

தாகோத ரங்குளிர்ந்த தன்மைஒன்று கொடுத்தான்

தனித்தசிவ காமவல்லிக் கினித்தநடத் தவனே.

14

திருச்சிற்றம்பலம்

8. அபராத மன்னிப்பு மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3216

செய்வகைநன் கறியாதே திருவருளோ டூடிச்

சிலபுகன்றேன் அறிவறியாச் சிறியரினுஞ் சிறியேன்

பொய்வகையேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

புண்ணியனே மதியணிந்த புரிசடையாய் விடையாய்

மெய்வகையோர் விழித்திருப்ப விரும்பிஎனை அன்றே

மிகவலிந்தாட் கொண்டருளி வினைதவிர்த்த விமலா

ஐவகைய கடவுளரும் அந்தணரும் பரவ

ஆனந்தத் திருநடஞ்செய் அம்பலத்தெம் அரசே.

1

3217

நிலைநாடி அறியாதே நின்னருளோ டூடி

நீர்மையல புகன்றேன்நன் னெறிஒழுகாக் கடையேன்

புலைநாயேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

பூதகணஞ் சூழநடம் புரிகின்ற புனிதா

கலைநாடு மதியணிந்த கனபவளச் சடையாய்

கருத்தறியாக் காலையிலே கருணைஅளித் தவனே

தலைஞான முனிவர்கள்தந் தலைமீது விளங்கும்

தாளுடையாய் ஆளுடைய சற்குருஎன் அரசே.

௨

3218

கலைக்கடைநன் கறியாதே கனஅருளோ டூடிக்

கரிசுபுகன் றேன்கவலைக் கடற்புணைஎன் றுணரேன்

புலைக்கடையேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

போற்றிசிவ போற்றிசிவ போற்றிசிவ போற்றி

தலைக்கடைவாய் அன்றிரவில் தாள்மலரொன் றமர்த்தித்

தனிப்பொருள்என் கையிலளித்த தயவுடைய பெருமான்

கொலைக்கடையார்க் கெய்தரிய குணமலையே பொதுவில்

கூத்தாடிக் கொண்டுலகைக் காத்தாளுங் குருவே.

3

3219

நின்புகழ்நன் கறியாதே நின்னருளோ டூடி

நெறியலவே புகன்றேன்நன் னிலைவிரும்பி நில்லேன்

புன்புலையேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

பூரணசிற் சிவனேமெய்ப் பொருள்அருளும் புனிதா

என்புடைஅந் நாளிரவில் எழுந்தருளி அளித்த

என்குருவே என்னிருகண் இலங்கியநன் மணியே
அன்புடையார் இன்படையும் அழகியஅம் பலத்தே
ஆத்தாளும் அப்பனுமாய்க் கூத்தாடும் பதியே.

4

3220

துலைக்கொடிநன் கறியோதே துணைஅருளோ டூடித்
துரிசுபுகன் றேன்கருணைப் பரிசுபுகன் றறியேன்
புலைக்கொடியேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்
பொங்குதிரைக் கங்கைமதி தங்கியசெஞ் சடையாய்
மலைக்கொடிஎன் அம்மைஅருள் மாதுசிவ காம
வல்லிமறை வல்லிதுதி சொல்லிநின்று காணக்
கலைக்கொடிநன் குணர்முனிவர் கண்டுபுகழ்ந் தேத்தக்
கனகசபை தனில்நடிக்குங் காரணசற் குருவே.

5

3221

பழுத்தலைநன் குணராதே பதியருளோ டூடிப்
பழுதுபுகன் றேன்கருணைப் பாங்கறியாப் படிறேன்
புழுத்தலையேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்
புண்ணியர்தம் உள்ளகத்தே நண்ணியமெய்ப் பொருளே
கழுத்தலைநஞ் சணிந்தருளுங் கருணைநெடுங் கடலே
கால்மலர்என் தலைமீது தான்மலர அளித்தாய்

விழுத்தலைவர் போற்றமணி மன்றில்நடம் புரியும்

மெய்ம்மைஅறி வின்புருவாய் விளங்கியசற் குருவே.

6

3222

கையடைநன் கறியாதே கனஅருளோ டூடிக்

காசுபுகன் றேன்கருணைத் தேசறியாக் கடையேன்

பொய்யடியேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

புத்தமுதே சுத்தசுக பூரணசிற் சிவமே

ஐயடிகள் காடவர்கோன் அகமகிழ்ந்து போற்றும்

அம்பலத்தே அருள்நடஞ்செய் செம்பவள மலையே

மெய்யடியர் உள்ளகத்தில் விளங்குகின்ற விளக்கே

வேதமுடி மீதிருந்த மேதகுசற் குருவே.

7

3223

திறப்படநன் குணராதே திருவருளோ டூடித்

தீமைபுகன் றேன்கருணைத் திறஞ்சிறிதுந் தெளியேன்

புறப்படிறேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

பூதமுதல் நாதவரைப் புணருவித்த புனிதா

உறப்படுமெய் உணர்வுடையார் உள்ளகத்தே விளங்கும்

உண்மையறி வானந்த உருவுடைய குருவே

சிறப்படைமா தவர்போற்றச் செம்பொன்மணிப் பொதுவில்

திருத்தொழில்ஐந் தியற்றுவிக்குந் திருநடநா யகனே.

8

3224

தேர்ந்துணர்ந்து தெளியாதே திருவருளோ டூடிச்

சிலபுகன்றேன் திருக்கருணைத் திறஞ்சிறிதுந் தெரியேன்

போந்தகனேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

போதாந்த மிசைவிளங்கு நாதாந்த விளக்கே

ஊர்ந்தபணக் கங்கணமே முதற்பணிகள் ஒளிர

உயர்பொதுவில் நடிக்கின்ற செயலுடைய பெருமான்

சார்ந்தவரை எவ்வகையுந் தாங்கிஅளிக் கின்ற

தயவுடைய பெருந்தலைமைத் தனிமுதல்எந் தாயே.

9

3225

ஒல்லும்வகை அறியாதே உன்னருளோ டூடி

ஊறுபுகன் றேன்துயரம் ஆறும்வகை உணரேன்

புல்லியனேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்

பூதியணிந் தொளிர்கின்ற பொன்மேனிப் பெருமான்

சொல்லியலும் பொருளியலும் கடந்தபர நாதத்

துரியவெளிப் பொருளான பெரியநிலைப் பதியே

மெல்லியல்நற் சிவகாம வல்லிகண்டு மகிழ

விரியுமறை ஏத்தநடம் புரியும்அருள் இறையே.

திருச்சிற்றம்பலம்

9. ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3226

உலகியல் உணர்வோர் அணுத்துணை மேலும்

உற்றிலாச் சிறியனூர் பருவத்

திலகிய எனக்குள் இருந்தருள் நெறியில்

ஏற்றவுந் தரமிலா மையினான்

விலகுறங் காலத் தடிக்கடி ஏற

விடுத்துப்பின் விலகுறா தளித்தாய்

திலகநற் காழி ஞானசம் பந்தத்

தெள்ளமு தாஞ்சிவ குருவே.(189)

1

உலகியல் உணர்வோர் அணுத்துணை யேனும்

உற்றிலாச் சிறியனூர் பருவத்

திலகிய எனக்குள் இருந்தருள் நெறியில்

ஏற்றவுந் தரமிலா மையினான்

விலகுறுங் காலத் தடிக்கடி ஏற

விடுத்துப்பின் விலகுறா வண்ணம்

அலகிலா உணர்ச்சி அளித்தனை உன்றன்

அருட்கடற் பெருமைஎன் புகல்வேன்

திலகநற் காழி ஞானசம் பந்தத்

தெள்ளமு தாஞ்சிவ குருவே.

189. பெருமானின் கையெழுத்து மூலத்தில் இவ்விருத்தம் இவ்வாறு ஐந்து அடிகளுடன் காணப்பெறுவதாக ஆ.பா.கூறி இங்ஙனமே பதிப்பித்துள்ளார். தொ. வே. முதற்பதிப்பிலும் பின் பதிப்புகளிலும் `அலகிலா உணர்ச்சி அளித்தனை' என்னும் நான்காம் அடி இல்லை. `திலகநற்காழி' என்பதனை நான்காம் அடியாக அவர்கள் கொண்டனர். ஆசிரியவிருத்தம் நான்கடியின் மிக்கு வராது. பெருமானது கையெழுத்து மூலங்களில் அடித்தல் திருத்தல்கள் உண்டு. பாடும் வேகத்தில் ஐந்தடியாக அமைந்த இதனைப் பெருமான் திருத்தியமைக்காதுவிட்டார்கள் போலும்.

3227

உயிர்அனு பவம்உற் றிடில்அத னிடத்தே

ஓங்கருள் அனுபவம் உறும்அச்

செயிரில்நல் அனுப வத்திலே சுத்த

சிவஅனு பவம்உறும் என்றாய்

பயிலுமூ வாண்டில் சிவைதரு ஞானப்

பால்மகிழ்ந் துண்டுமெய்ந் நெறியாம்

பயிர்தழைந் துறவைத் தருளிய ஞான

பந்தன்என் றோங்குசற் குருவே.

3228

தத்துவநிலைகள் தனித்தனி ஏறித்

தனிப்பர நாதமாந் தலத்தே

ஒத்ததன் மயமாம் நின்னைநீ இன்றி

உற்றிடல் உயிரனு பவம்என்

றித்துணை வெளியின் என்னைஎன் னிடத்தே

இருந்தவா றளித்தனை அன்றோ

சித்தநற் காழி ஞானசம் பந்தச்

செல்வமே எனதுசற் குருவே.

3

3229

தனிப்பர நாத வெளியின்மேல் நினது

தன்மயந் தன்மயம் ஆக்கிப்

பனிப்பிலா தென்றும் உள்ளதாய் விளங்கிப்

பரம்பரத் துட்புற மாகி

இனிப்புற ஒன்றும் இயம்புறா இயல்பாய்

இருந்ததே அருளனு பவம்என்

றெனக்கருள் புரிந்தாய் ஞானசம் பந்தன்

என்னும்என் சற்குரு மணியே.

4

3230

உள்ளதாய் விளங்கும் ஒருபெரு வெளிமேல்

உள்ளதாய் முற்றும்உள் ளதுவாய்

நள்ளதாய் எனதாய் நானதாய்த் தளதாய்

நவிற்றருந் தானதாய் இன்ன

விள்ளொணா அப்பால் அப்படிக் கப்பால்

வெறுவெளி சிவஅனு பவம்என்

றுள்ளுற அளித்த ஞானசம் பந்த

உத்தம சுத்தசற் குருவே.

5

3231

பொத்திய மூல மலப்பிணி தவிர்க்கும்

பொருள்அரு ளனுபவம் அதற்குப்

பத்தியம் உயிரின் அனுபவம் இதனைப்

பற்றறப் பற்றுதி இதுவே

சத்தியம் எனஎன் தனக்கருள் புரிந்த

தனிப்பெருங் கருணைஎன் புகல்வேன்

முத்தியற் சிவிகை இவர்ந்தருள் நெறியின்

முதலர சியற்றிய துரையே.

6

3232

அடியெனல் எதுவோ முடியெனல் எதுவோ

அருட்சிவ மதற்கெனப் பலகால்

படியுற வருந்தி இருந்தஎன் வருத்தம்

பார்த்தரு ளால்எழுந் தருளி

மிடியற எனைத்தான் கடைக்கணித் துனக்குள்

விளங்குவ அடிமுடி என்றாய்

வடிவிலாக் கருணை வாரியே மூன்று

வயதினில் அருள்பெற்ற மணியே.

7

3233

செவ்வகை ஒருகால் படுமதி அளவே

செறிபொறி மனம்அதன் முடிவில்

எவ்வகை நிலையும் தோற்றும்நீ நினக்குள்

எண்ணிய படிஎலாம் எய்தும்

இவ்வகை ஒன்றே வருத்தமில் வகைஎன்

றெனக்கருள் புரிந்தசற் குருவே

தெவ்வகை அமண இருளற எழுந்த

தீபமே சம்பந்தத் தேவே.

8

3234

முன்புறு நிலையும் பின்புறு நிலையும்

முன்னிநின் றுளமயக் குறுங்கால்

அன்புறு நிலையால் திருநெறித் தமிழ்கொண்

டையநீத் தருளிய அரசே

என்புபெண் ணுருவோ டின்னுயி ரதுகொண்

டெழுந்திடப் புரிந்துல கெல்லாம்

இன்புறப் புரிந்த மறைத்தனிக் கொழுந்தே

என்னுயிர்க் குயிர்எனுங் குருவே.

9

3235

வருபகற் கற்பம் பலமுயன் றாலும்

வரலருந் திறனெலாம் எனக்கே

ஒருபகற் பொழுதில் உறஅளித் தனைநின்

உறுபெருங் கருணைஎன் உரைப்பேன்

பெருமண நல்லூர்த் திருமணங் காணப்

பெற்றவர் தமையெலாம் ஞான

உருவடைந் தோங்கக் கருணைசெய் தளித்த

உயர்தனிக் கவுணிய மணியே.

10

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3236

சீரார் சண்பைக் கவுணியர்தம் தெய்வ மரபில் திகழ்விளக்கே

தெவிட்டா துளத்தில் தித்திக்கும் தேனே அழியாச் செல்வமே

காரார் மிடற்றுப் பவளமலைக் கண்ணின் முளைத்த கற்பகமே

கரும்பே கனியே என்இரண்டு கண்ணே கண்ணிற் கருமணியே

ஏரார் பருவம் மூன்றில்உமை இனிய முலைப்பால் எடுத்தூட்டும்

இன்பக் குதலைமொழிக்குருந்தே என்ஆ ருயிருக் கொருதுணையே

பேரார் ஞான சம்பந்தப் பெருமா னேநின் திருப்புகழைப்

பேசு கின்றோர் மேன்மேலும் பெருஞ்செல் வத்தில்
பிறங்குவரே.(198)

11

198. இஃதோர் தனிப்பாடல். இதனை இவ்விடத்தில் சேர்த்துத் தொ.வே. பதிப்பித்துள்ளார்.

திருச்சிற்றம்பலம்

## 18. ஆளுடைய அரசுகள் அருண்மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3237

திருத்தகுசீர் அதிகைஅருள் தலத்தின் ஓங்கும்

சிவக்கொழுந்தின் அருட்பெருமைத் திறத்தால் வாய்மை

உருத்தகுமெய் உணர்ச்சிவடி வாகிச் சைவ

ஒளிவிளங்க நாவரசென் றொருபேர் பெற்றுப்

பொருத்தமுற உழவாரப் படைகைக் கொண்ட

புண்ணியனே நண்ணியசீர்ப் புனித னேஎன்

கருத்தமர்ந்த கலைமதியே கருணை ஞானக்

கடலேநின் கழல்கருதக் கருது வாயே.

1

3238

வாய்மையிலாச் சமணாதர் பலகாற் செய்த

வஞ்சமெலாம் திருவருட்பேர் வலத்தால் நீந்தித்

தூய்மைபெறும் சிவநெறியே விளங்க ஓங்கும்

சோதிமணி விளக்கேஎன் துணையே எம்மைச்

சேய்மைவிடா தணிமையிடத் தாள வந்த

செல்வமே எல்லையிலாச் சிறப்பு வாய்ந்துள்

ஆய்மையுறு பெருந்தகையே அமுதே சைவ

அணியேசொல் லரசெனும்பேர் அமைந்த தேவே.

2

3239

தேவரெலாம் தொழுந்தலைமைத் தேவர் பாதத்

திருமலரை முடிக்கணிந்து திகழ்ந்து நின்ற

நாவரசே நான்முகனும் விரும்பும் ஞான

நாயகனே நல்லவர்க்கு நண்ப னேஎம்

பாவமெலாம் அகற்றிஅருட் பான்மை நல்கும்

பண்புடைய பெருமானே பணிந்து நின்பால்

மேவவிருப் புறும்அடியர்க் கன்பு செய்ய

வேண்டினேன் அவ்வகைநீ விதித்தி டாயே.

3

3240

விதிவிலக்கீ தென்றறியும் விளைவொன் றில்லா
வினையினேன் எனினும்என்னை விரும்பி என்னுள்
மதிவிளக்கை ஏற்றிஅருள் மனையின் ஞான
வாழ்வடையச் செயல்வேண்டும் வள்ள லேநற்
பதிமலர்த்தாள் நிழலடைந்த தவத்தோர்க் கெல்லாம்
பதியேசொல் லரசெனும்பேர் படைத்த தேவே
கதிதருகற் பகமேமுக் கனியே ஞானக்
கடலேஎன் கருத்தேஎன் கண்ணு ளானே.

4

3241

கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளைந்தஅருட் பயனே உண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாதம் அன்றி
விண்ணுளே அடைகின்ற போகம் ஒன்றும்
விரும்பேன்என் றனையாள வேண்டுங் கண்டாய்
ஒண்ணுளே ஒன்பதுவாய் வைத்தாய் என்ற
உத்தமனே(191) சித்தமகிழ்ந் துதவு வோனே.

5

191. எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணினல்லால்
கண்ணிலேன் மற்றோர்க ளைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல்வைத்
தாய்ஒக்க அடைக்கும்போ துணரமாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

7215 (6-99-1) திருநாவுக்கரசர், திருப்புகலூர்த் திருத்தாண்டகம்.

3242

ஓங்காரத் தனிமொழியின் பயனைச் சற்றும்
ஓர்கிலேன் சிறியேன்இவ் வுலக வாழ்வில்
ஆங்காரப் பெருமதமால் யானை போல
அகம்பாவ மயனாகி அலைகின் றேன்உன்
பாங்காய மெய்யடியர் தம்மைச் சற்றும்
பரிந்திலேன் அருளடையும் பரிசொன் றுண்டோ
தீங்காய செயலனைத்தும் உடையேன் என்ன
செய்வேன்சொல் லரசேஎன் செய்கு வேனே.

6

3243

செய்வகைஒன் றறியாத சிறியேன் இந்தச்

சிற்றுலக வாழ்க்கையிடைச் சிக்கி அந்தோ

பொய்வகையே புரிகின்றேன் புண்ணி யாநின்

பொன்னடியைப் போற்றிலேன் புனித னேநான்

உய்வகைஎவ் வகையாது செய்வேன் நீயே

உறுதுணைஎன் றிருக்கின்றேன் உணர்வி லேனை

மெய்வகையிற் செலுத்தநினைத் திடுதி யோசொல்

வேந்தேஎன் உயிர்த்துணையாய் விளங்குங் கோவே.

7

3244

விளங்குமணி விளக்கெனநால் வேதத் துச்சி

மேவியமெய்ப் பொருளை உள்ளே விரும்பி வைத்துக்

களங்கறுமெய் யன்பரெல்லாங் களிப்ப அன்றோர்

கற்றுணையாற் கடல்கடந்து கரையிற் போந்து

துளங்குபெருஞ் சிவநெறியைச் சார்ந்த ஞானத்

துணையேநந் துரையேநற் சுகமே என்றும்

வளங்கெழும்ஆ கமநெறியை வளர்க்க வந்த

வள்ளலே நின்னருளை வழங்கு வாயே.

8

3245

அருள்வழங்குந் திலகவதி அம்மை யார்பின்

அவதரித்த மணியேசொல் லரசே ஞானத்

தெருள்வழங்கும் சிவநெறியை விளக்க வந்த

செழுஞ்சுடர்மா மணிவிளக்கே சிறிய னேனை

இருள்வழங்கும் உலகியல்நின் றெடுத்து ஞான

இன்னருள்தந் தாண்டருள்வாய் இன்றேல் அந்தோ

மருள்வழங்கும் பவநெறியிற் சுழல்வேன் உய்யும்

வகைஅறியேன் நின்னருட்கு மரபன் றீதே.

9

3246

தேர்ந்தஉளத் திடைமிகவும் தித்தித் தூறும்

செழுந்தேனே சொல்லரசாம் தேவே மெய்ம்மை

சார்ந்துதிகழ் அப்பூதி அடிகட் கின்பம்

தந்தபெருந் தகையேஎம் தந்தை யேஉள்

கூர்ந்தமதி நிறைவேஎன் குருவே எங்கள்

குலதெய்வ மேசைவக் கொழுந்தே துன்பம்

தீர்ந்தபெரு நெறித்துணையே ஒப்பி லாத

செல்வமே அப்பனெனத் திகழ்கின் றோனே.

10

திருச்சிற்றம்பலம்

11. ஆளுடைய நம்பிகள் அருண்மாலை

கொச்சகக் கலிப்பா

3247

மதியணிசெஞ் சடைக்கனியை மன்றுள்நடம் புரிமருந்தைத்

துதியணிசெஞ் சுவைப்பொருளில் சொன்மாலை தொடுத்தருளி

விதியணிமா மறைநெறியும் மெய்ந்நிலைஆ கமநெறியும்

வதியணிந்து விளங்கவைத்த வன்தொண்டப் பெருந்தகையே.

1

3248

நீற்றிலிட்ட நிலையாப்புன் னெறியுடையார் தமைக்கூடிச்

சேற்றிலிட்ட கம்பமெனத் தியங்குற்றேன் தனைஆளாய்

ஏற்றிலிட்ட திருவடியை எண்ணிஅரும் பொன்னையெலாம்

ஆற்றில்இட்டுக் குளத்தெடுத்த அருட்டலைமைப் பெருந்தகையே.

2

3249

இலைக்குளநீ ரழைத்ததனில் இடங்கர்உற அழைத்ததன்வாய்த்

தலைக்குதலை மதலைஉயிர் தழைப்பஅழைத் தருளியநின்

கலைக்கும்வட கலையின்முதற் கலைக்கும்உறு கணக்குயர்பொன்

மலைக்கும்அணு நிலைக்கும்உறா வன்தொண்டப் பெருந்தகையே.

3

3250

வேதமுதற் கலைகளெலாம் விரைந்துவிரைந் தனந்தமுறை

ஓதஅவைக் கணுத்துணையும் உணர்வரிதாம் எம்பெருமான்

பாதமலர் நினதுதிருப் பணிமுடிமேற் படப்புரிந்த

மாதவம்யா துரைத்தருளாய் வன்தொண்டப் பெருந்தகையே.

4

3251

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய

தோழனுமாய் என்றுமுன்நீ சொன்னபெருஞ் சொற்பொருளை192

ஆழநினைத் திடில்அடியேன் அருங்கரணம் கரைந்துகரைந்

தூழியல்இன் புறுவதுகாண் உயர்கருணைப் பெருந்தகையே.

192. ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய

தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக் குடனாகி

மாழைஒண்கண் பரவையைத்தந் தாண்டானை மதிகில்லா

ஏழையேன் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே.

- 7751 (7-51-10) சுந்தரர், திருவாரூர்ப்பதிகம்.

3252

வான்காண இந்திரனும் மாலயனும் மாதவரும்

தான்காண இறைஅருளால் தனித்தவள யானையின்மேல்

கோன்காண எழுந்தருளிக் குலவியநின் கோலமதை

நான்காணப் பெற்றிலனே நாவலூர்ப் பெருந்தகையே.

6

3253

தேன்படிக்கும் அமுதாம்உன் திருப்பாட்டைத்(193) தினந்தோறும்

நான்படிக்கும் போதென்னை நானறியேன் நாஒன்றோ

ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்

தான்படிக்கும் அனுபவங்காண் தனிக்கருணைப் பெருந்தனையே.

7

193. திருஞானசம்பந்தர் தேவாரத்தைத் திருக்கடைக்காப்பு என்பதும்,

திருநாவுக்கரசர் தேவாரத்தைத் தேவாரம் என்பதும், சுந்தரமூர்த்திகள் தேவாரத்தைத்

திருப்பாட்டு என்பதும் ஒருவகை வழக்கு.

3254

இன்பாட்டுத் தொழிற்பொதுவில் இயற்றுகின்ற எம்பெருமான்

உன்பாட்டுக் குவப்புறல்போல் ஊர்பாட்டுக் குவந்திலர்என்

றென்பாட்டுக் கிசைப்பினும்என் இடும்பாட்டுக் கரணமெலாம்

அன்பாட்டுக் கிசைவதுகாண் அருட்பாட்டுப் பெருந்தகையே.

8

3255

பரம்பரமாம் துரியமெனும் பதத்திருந்த பரம்பொருளை

உரம்பெறத்தோ ழமைகொண்ட உன்பெருமை தனைமதித்து

வரம்பெறநற் றெய்வமெலாம் வந்திக்கும் என்றால்என்

தரம்பெறஎன் புகல்வேன்நான் தனித்தலைமைப் பெருந்தகையே.

9

3256

பேரூரும் பரவைமனப் பிணக்கறஎம் பெருமானை
ஊரூரும் பலபுகல ஓரிரவில் தூதன்எனத்
தேரூரும் திருவாரூர்த் தெருவுதொறும் நடப்பித்தாய்
ஆரூர நின்பெருமை அயன்மாலும் அளப்பரிதே.

10

திருச்சிற்றம்பலம்

12. ஆளுடைய அடிகள் அருண்மாலை

தரவு கொச்சகக் கலிப்பா

3257

தேசகத்தில் இனிக்கின்ற தெள்ளமுதே மாணிக்க
வாசகனே ஆனந்த வடிவான மாதவனே
மாசகன்ற நீதிருவாய் மலர்ந்ததமிழ் மாமறையின்
ஆசகன்ற அனுபவம்நான் அனுபவிக்க அருளுதியே.

1

3258

கருவெளிக்குட் புறனாகிக் கரணமெலாங் கடந்துநின்ற
பெருவெளிக்கு நெடுங்காலம் பித்தாகித் திரிகின்றோர்
குருவெளிக்கே நின்றுழலக் கோதறநீ கலந்ததனி
உருவெளிக்கே மறைபுகழும் உயர்வாத வூர்மணியே.

2

3259

மன்புருவ நடுமுதலா மனம்புதைத்து நெடுங்காலம்

என்புருவாய்த் தவஞ்செய்வார் எல்லாரும் ஏமாக்க

அன்புருவம் பெற்றதன்பின் அருளுருவம் அடைந்துபின்னர்

இன்புருவம் ஆயினைநீ எழில்வாத வூர்இறையே.

3

3269

உருஅண்டப் பெருமறைஎன் றுலகமெலாம் புகழ்கின்ற

திருஅண்டப் பகுதிஎனும் திருஅகவல் வாய்மலர்ந்த

குருஎன்றெப் பெருந்தவரும் கூறுகின்ற கோவேநீ

இருஎன்ற தனிஅகவல்(194) எண்ணம்எனக் கியம்புதியே.

4

194. `இருஎன்ற தனிஅகவல்' என்றது திருவாசகம், திருவண்டப்பகுதியில்`என்னையும் இருப்பதாக்கினன்' என்ற வாசகத்தை

வாக்கிறந்து அமுதம் மயிர்க்கால் தோறும்

தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை

குரம்பை தோறும் நாயுட லகத்தே

குரம்புகொண்டு இன்தேன் பாய்த்தினன் நிரம்பிய

அற்புத மான அமுத தாரைகள்

எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவது

உள்ளம் கொண்டுஓர் உருச்செய்தாங்கு எனக்கு

அள்ளூறு ஆக்கை அமைத்தனன் ஒள்ளிய

கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை

என்னையும் இருப்ப தாக்கினன் என்னில்

கருணை வான்தேன் கலக்க

அருளொடு பராவமுது ஆக்கினன்

பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே.

- திருவாசகம். 3. திருவண்டப் பகுதி 170-182.

3261

தேடுகின்ற ஆனந்தச் சிற்சபையில் சின்மயமாய்

ஆடுகின்ற சேவடிக்கீழ் ஆடுகின்ற ஆரமுதே

நாடுகின்ற வாதவூர் நாயகனே நாயடியேன்

வாடுகின்ற வாட்டமெலாம் வந்தொருக்கால் மாற்றுதியே.

5

3262

சேமமிகும் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்

மாமணியே நீஉரைத்த வாசகத்தை எண்ணுதொறும்

காமமிகு காதலன்றன் கலவிதனைக் கருதுகின்ற

ஏமமுறு கற்புடையாள் இன்பினும்இன் பெய்துவதே.

6

3263

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை

நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.

7

3264

வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தில்
ஒருமொழியே என்னையும்என் உடையனையும் ஒன்றுவித்துத்
தருமொழியாம் என்னில்இனிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பிஅயல் கூடுவதேன் கூறுதியே.

8

3265

பெண்சுமந்த பாகப் பெருமான் ஒருமாமேல்
எண்சுமந்த சேவகன்போல் எய்தியதும் வைகைநதி
மண்சுமந்து நின்றதும்ஓர் மாறன் பிரம்படியால்
புண்சுமந்து கொண்டதும்நின் பொருட்டன்றோ புண்ணியனே.

9

3266

வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னில்இங்கு நானடைதல் வியப்பன்றே.

3267

எல்லாம் செயல்கூடும் என்ஆணை அம்பலத்தே

எல்லாம்வல் லான்தனையே ஏத்து.197

1

197. எல்லாம்வல் லான்தாளை ஏத்து - முதற்பதிப்பு, பொ. சு. பதிப்பு.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3268

திருவிளங்கச் சிவயோக சித்திஎலாம் விளங்கச்

சிவஞான நிலைவிளங்கச் சிவானுபவம் விளங்கத்

தெருவிளங்கு திருத்தில்லைத் திருச்சிற்றம் பலத்தே

திருக்கூத்து விளங்கஒளி சிறந்ததிரு விளக்கே

உருவிளங்க உயிர்விளங்க உணர்ச்சியது விளங்க

உலகமெலாம் விளங்கஅருள் உதவுபெருந் தாயாம்

மருவிளங்கு குழல்வல்லி மகிழ்ந்தொருபால் விளங்க

வயங்குமணிப் பொதுவிளங்க வளர்ந்தசிவக் கொழுந்தே.198

2

198. 2500 ஆம் பாடலின் உத்தரவடிவம்.

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3269

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே அன்பெனும் குடில்புகும் அரசே

அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே அன்பெனும் கரத்தமர் அமுதே

அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே

அன்பெனும் அணுவுள் ளமைந்தபே ரொளியே அன்புரு வாம்பர சிவமே.

3

திருச்சிற்றம்பலம்

2. திருச்சிற்றம்பலத் தெய்வமணிமாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3278

அகரநிலை விளங்குசத்தர் அனைவருக்கும் அவர்பால்

அமர்ந்தசத்தி மாரவர்கள் அனைவருக்கும் அவரால்

பகரவரும் அண்டவகை அனைத்தினுக்கும் பிண்டப்

பகுதிகள்அங் கனைத்தினுக்கும் பதங்கள்அனைத் தினுக்கும்

இகரமுறும் உயிர்எவைக்கும் கருவிகள்அங் கெவைக்கும்

எப்பொருட்கும் அனுபவங்கள் எவைக்கும்முத்தி எவைக்கும்

சிகரமுதல் சித்திவகை எவைக்கும்ஒளி வழங்கும்

திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வம்ஒன்றே கண்டீர்.

1

3271

வண்ணமிகு பூதவெளி பகுதிவெளி முதலா
வகுக்குமடி வெளிகளெலாம் வயங்குவெளி யாகி
எண்ணமுறு மாமவுன வெளியாகி அதன்மேல்
இசைத்தபர வெளியாகி இயல்உபய வெளியாய்
அண்ணுறுசிற் பரவெளியாய்த் தற்பரமாம் வெளியாய்
அமர்ந்தபெரு வெளியாகி அருளின்ப வெளியாய்த்
திண்ணமுறும் தனிஇயற்கை உண்மைவெளி யான
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வம்ஒன்றே கண்டீர்.

2

3272

சார்பூத விளக்கமொடு பகுதிகளின் விளக்கம்
தத்துவங்கள் விளக்கமெலாந் தருவிளக்க மாகி
நேராதி விளக்கமதாய்ப் பரைவிளக்க மாகி
நிலைத்தபரா பரைவிளக்க மாகிஅகம் புறமும்
பேராசை விளக்கமதாய்ச் சுத்தவிளக் கமதாய்ப்
பெருவிளக்க மாகிஎலாம் பெற்றவிளக் கமதாய்ச்
சீராட விளங்குகின்ற இயற்கைவிளக் கமதாம்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வம்ஒன்றே கண்டீர்.

3

3273

இடம்பெறும்இந் திரியஇன்பம் கரணஇன்பம் உலக
இன்பம்உயிர் இன்பம்முதல் எய்தும்இன்ப மாகித்
தடம்பெறும்ஓர் ஆன்மஇன்பம் தனித்தஅறி வின்பம்
சத்தியப்பே ரின்பம்முத்தி இன்பமுமாய் அதன்மேல்
நடம்பெறுமெய்ப் பொருள்இன்பம் நிரதிசய இன்பம்
ஞானசித்திப் பெரும்போக நாட்டரசின் பமுமாய்த்
திடம்பெறஓங் கியஇயற்கைத் தனிஇன்ப மயமாம்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வம்ஒன்றே கண்டீர்.

4

3274

எல்லாந்தான் உடையதுவாய் எல்லாம்வல் லதுவாய்
எல்லாந்தான் ஆனதுவாய் எல்லாந்தான் அலதாய்ச்
சொல்லாலும் பொருளாலும் தோன்றும்அறி வாலும்
துணிந்தளக்க முடியாதாய்த் துரியவெளி கடந்த
வல்லாளர் அனுபவத்தே அதுஅதுவாய் அவரும்
மதித்திடுங்கால் அரியதுவாய்ப் பெரியதுவாய் அணுவும்
செல்லாத நிலைகளினும் செல்லுவதாய் விளங்கும்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வம்ஒன்றே கண்டீர்.

5

3275

அயர்வறுபே ரறிவாகி அவ்வறிவுக் கறிவாய்

அறிவறிவுள் அறிவாய்ஆங் கதனுள்ளோர் அறிவாய்

மயர்வறும்லோர் இயற்கைஉண்மைத் தனிஅறிவாய்ச் செயற்கை

மன்னும்அறி வனைத்தினுக்கும் வயங்கியதா ரகமாய்த்

துயரறுதா ரகமுதலாய் அம்முதற்கோர் முதலாய்த்

துரியநிலை கடந்ததன்மேல் சுத்தசிவ நிலையாய்

உயர்வுறுசிற் றம்பலத்தே எல்லாந்தா மாகி

ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

6

3276

அண்டம்எலாம் பிண்டம்எலாம் உயிர்கள்எலாம் பொருள்கள்

ஆனஎலாம் இடங்கள்எலாம் நீக்கமற நிறைந்தே

கொண்டஎலாங் கொண்டஎலாம் கொண்டுகொண்டு மேலும்

கொள்வதற்கே இடங்கொடுத்துக் கொண்டுசலிப் பின்றிக்

கண்டமெலாங் கடந்துநின்றே அகண்டமதாய் அதுவும்

கடந்தவெளி யாய்அதுவும் கடந்ததனி வெளியாம்

ஓண்தகுசிற் றம்பலத்தே எல்லாம்வல் லவராய்

ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

7

3277

பாரொடுநீர் கனல்காற்றா காயம்எனும் பூதப்

பகுதிமுதல் பகர்நாதப் பகுதிவரை யான

ஏர்பெறுதத் துவஉருவாய்த் தத்துவகா ரணமாய்

இயம்பியகா ரணமுதலாய்க் காரணத்தின் முடிவாய்

நேருறும்அம் முடிவனைத்தும் நிகழ்ந்திடுபூ ரணமாய்

நித்தியமாய்ச் சத்தியமாய் நிற்குணசிற் குணமாய்

ஓர்தருசன் மாத்திரமாம் திருச்சிற்றம் பலத்தே

ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

8

3278

இரவிமதி உடுக்கள்முதல் கலைகள்எலாம் தம்மோர்

இலேசமதாய் எண்கடந்தே இலங்கியபிண் டாண்டம்

பரவுமற்றைப் பொருள்கள்உயிர்த் திரள்கள்முதல் எல்லாம்

பகர்அகத்தும் புறத்தும்அகப் புறத்துடன்அப் புறத்தும்

விரவிஎங்கும் நீக்கமற விளங்கிஅந்த மாதி

விளம்பரிய பேரொளியாய் அவ்வொளிப்பே ரொளியாய்

உரவுறுசின் மாத்திரமாம் திருச்சிற்றம் பலத்தே

ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

9

3279

ஆற்றுவிட யானந்தம் தத்துவா னந்தம்

அணியோகா னந்தம்மதிப் பருஞானா னந்தம்

பேற்றுறும்ஆன் மானந்தம் பரமானந் தஞ்சேர்

பிரமானந் தம்சாந்தப் பேரானந் தத்தோ
டேற்றிடும்ஏ கானந்தம் அத்துவிதா னந்தம்
இயன்றசச்சி தானந்தம் சுத்தசிவா னந்த
ஊற்றமதாம் சமரசஆ னந்தசபை தனிலே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

10

3280

வகுத்தஉயிர் முதற்பலவாம் பொருள்களுக்கும் வடிவம்
வண்ணநல முதற்பலவாங் குணங்களுக்கும் புகுதல்
புகுத்தலுறல் முதற்பலவாம் செயல்களுக்கும் தாமே
புகல்கரணம் உபகரணம் கருவிஉப கருவி
மிகுந்தஉறுப் பதிகரணம் காரணம்பல் காலம்
விதித்திடுமற் றவைமுழுதும் ஆகிஅல்லார் ஆகி
உகப்புறும்ஓர் சுத்தசிவா னந்தசபை தனிலே
ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

11

3281

இயற்கையிலே பாசங்கள் ஒன்றும்இலார் குணங்கள்
ஏதுமிலார் தத்துவங்கள் ஏதுமிலார் மற்றோர்
செயற்கைஇல்லார் பிறப்பில்லார் இறப்பில்லார் யாதும்
திரிபில்லார் களங்கம்இல்லார் தீமைஒன்றும் இல்லார்

வியப்புறவேண் டுதல்இல்லார் வேண்டாமை இல்லார்

மெய்யேமெய் ஆகிஎங்கும் விளங்கிஇன்ப மயமாய்

உயத்தரும்ஓர் சுத்தசிவா னந்தசபை தனிலே

ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

12

3282

ஒன்றும்அலார் இரண்டும்அலார் ஒன்றிரண்டும் ஆனார்

உருவும்அலார் அருவும்அலார் உருஅருவும் ஆனார்

அன்றும்உளார் இன்றும்உளார் என்றும்உளார் தமக்கோர்

ஆதியிலார் அந்தமிலார் அரும்பெருஞ்சோ தியினார்

என்றுகனல் மதிஅகத்தும் புறத்தும்விளங் கிடுவார்

யாவும்இலார் யாவும்உளார் யாவும்அலார் யாவும்

ஒன்றுறுதாம் ஆகிநின்றார் திருச்சிற்றம் பலத்தே

ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவர்உண்டே கண்டீர்.

13

திருச்சிற்றம்பலம்

3. ஆற்றாமை

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3283

எழுவினும் வலிய மனத்தினேன் மலஞ்சார்

ஈயினும் நாயினும் இழிந்தேன்

புழுவினும் சிறியேன்பொய்விழைந் துழல்வேன்

புன்மையேன் புலைத்தொழிற் கடையேன்

வழுவினும் பெரியேன் மடத்தினும் பெரியேன்

மாண்பிலா வஞ்சக நெஞ்சக்

குழுவினும் பெரியேன் அம்பலக் கூத்தன்

குறிப்பினுக் கென்கட வேனே.

1

3284

கற்றமே லவர்தம் உறவினைக் கருதேன்

கலகர்தம் உறவினிற் களித்தேன்

உற்றமே தகவோர் உவட்டுற இருந்தேன்

உலகியற் போகமே உவந்தேன்

செற்றமே விழையும் சிறுநெறி பிடித்தேன்

தெய்வம்ஒன் றெனும்அறி வறியேன்

குற்றமே உடையேன் அம்பலக் கூத்தன்

குறிப்பினுக் கென்கட வேனே.

2

3285

கடுமையேன் வஞ்சக் கருத்தினேன் பொல்லாக்

கண்மனக் குரங்கனேன் கடையேன்

நெடுமைஆண் பனைபோல் நின்றவெற் றுடம்பேன்

நீசனேன் பாசமே உடையேன்
நடுமைஒன் றறியேன் கெடுமையிற் கிளைத்த
நச்சுமா மரம்எனக்கிளைத்தேன்
கொடுமையே குறித்தேன் அம்பலக் கூத்தன்
குறிப்பினுக் கென்கட வேனே.

3

3286

நிலத்திலும்பணத்தும் நீள்விழிமடவார்
நெருக்கிலும்பெருக்கிய நினைப்பேன்
புலத்திலும் புரைசேர் பொறியிலும் மனத்தைப்
போக்கிவீண் போதுபோக் குறுவேன்
நலத்தில்ஓர் அணுவும் நண்ணிலேன் கடைய
நாயினுங் கடையனேன் நவையேன்
குலத்திலும் கொடியேன் அம்பலக் கூத்தன்
குறிப்பினுக் கென்கட வேனே.

4

3287

செடிமுடிந் தலையும்மனத்தினேன் துன்பச்
செல்லினால்அரிப்புண்டசிறியேன்
அடிமுடி அறியும் ஆசைசற் றறியேன்
அறிந்தவர் தங்களை அடையேன்

படிமுடி வழித்துக் கடிகொளும் கடையர்

பணத்திலும் கொடியனேன் வஞ்சக்

கொடிமுடிந் திடுவேன் அம்பலக் கூத்தன்

குறிப்பினுக் கென்கட வேனே.

5

3288

அரங்கினிற் படைகொண் டுயிர்க்கொலை புரியும்

அறக்கடை யவரினுங் கடையேன்

இரங்கில்லூர் சிறிதும் இரக்கம்உற் றறியேன்

இயலுறு நாசியுட் கிளைத்த

சிரங்கினிற் கொடியேன் சிவநெறி பிடியேன்

சிறுநெறிச் சழக்கையே சிலுகுக்

குரங்கெனப் பிடித்தேன் அம்பலக் கூத்தன்

குறிப்பினுக் கென்கட வேனே.

6

3289

வாட்டமே உடையார் தங்களைக் காணின்

மனஞ்சிறிதிரக்கமுற் றறியேன்

கோட்டமே உடையேன் கொலையனேன் புலையேன்

கூற்றினும் கொடியனேன் மாயை

ஆட்டமே புரிந்தேன் அறத்தொழில் புரியேன்

அச்சமும் அவலமும் இயற்றும்

கூட்டமே விழைந்தேன் அம்பலக் கூத்தன்

குறிப்பினுக் கென்கட வேனே.

7

3290

கலைத்தொழில் அறியேன் கள்உணுங் கொடியேன்

கறிக்குழல் நாயினும் கடையேன்

விலைத்தொழில் உடையேன் மெய்எலாம் வாயாய்

விளம்புறும் வீணனேன் அசுத்தப்

புலைத்தொழில் புரிவேன் பொய்யனேன் சீற்றம்

பொங்கிய மனத்தினேன் பொல்லாக்

கொலைத்தொழில் புரிவேன் அம்பலக் கூத்தன்

குறிப்பினுக் கென்கட வேனே.

8

3291

பணமிலார்க் கிடுக்கண் புரிந்துணுஞ் சோற்றுப்

பணம்பறித் துழல்கின்ற படிறேன்

எணமிலா தடுத்தார்க் குறுபெருந்தீமை

இயற்றுவேன் எட்டியே அனையேன்

மணமிலா மலரிற் பூத்தனன் இருகால்

மாடெனத் திரிந்துழல் கின்றேன்

குணமிலாக் கொடியேன் அம்பலக் கூத்தன்
குறிப்பினுக் கென்கட வேனே.

9

3292

கடியரில் கடியேன் கடையரில் கடையேன்
கள்வரில் கள்வனேன் காமப்
பொடியரில் பொடியேன் புலையரில் புலையேன்
பொய்யரில் பொய்யனேன் பொல்லாச்
செடியரில் செடியேன் சினத்தரில் சினத்தேன்
தீயரில் தீயனேன் பாபக்
கொடியரில் கொடியேன் அம்பலக் கூத்தன்
குறிப்பினுக் கென்கட வேனே.

10

திருச்சிற்றம்பலம்

## 4. பிறப்பவம் பொறாது பேதுறல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3293

குலத்திடையும் கொடியன்ஒரு குடித்தனத்தும் கொடியேன்
குறிகளிலும் கொடியன்அன்றிக் குணங்களிலும் கொடியேன்
மலத்திடையே புழுத்தசிறு புழுக்களிலும் கடையேன்
வன்மனத்துப் பெரும்பாவி வஞ்சநெஞ்சப் புலையேன்

நலத்திடைஓர் அணுஅளவும் நண்ணுகிலேன் பொல்லா

நாய்க்குநகை தோன்றநின்றேன் பேய்க்கும்மிக இழிந்தேன்

நிலத்திடைநான் ஏன்பிறந்தேன் நின்கருத்தை அறியேன்

நிர்க்குணனே நடராஜ நிபுணமணி விளக்கே.

1

3294

விளக்கறியா இருட்டறையில் கவிழ்ந்துகிடந் தழுது

விம்முகின்ற குழவியினும் மிகப்பெரிதும் சிறியேன்

அளக்கறியாத் துயர்க்கடலில் விழுந்துநெடுங் காலம்

அலைந்தலைந்து மெலிந்ததுரும் பதனின்மிகத் துரும்பேன்

கிளக்கறியாக் கொடுமைஎலாம் கிளைத்தபழு மரத்தேன்

கெடுமதியேன் கடுமையினேன் கிறிபேசும் வெறியேன்

களக்கறியாப் புவியிடைநான் ஏன்பிறந்தேன் அந்தோ

கருணைநடத் தரசேநின் கருத்தைஅறி யேனே.

2

3295

அறியாத பொறியவர்க்கும் இழிந்ததொழி லவர்க்கும்

அதிகரித்துத் துன்மார்க்கத் தரசுசெயுங் கொடியேன்

குறியாத கொடும்பாவச் சுமைசுமக்கும் திறத்தேன்

கொல்லாமை என்பதைஓர் குறிப்பாலும் குறியேன்

செறியாத மனக்கடையேன் தீமையெலாம் உடையேன்

சினத்தாலும் மதத்தாலும் செறிந்தபுதல் அனையேன்

எறியாத புவியிடைநான் ஏன்பிறந்தேன் உன்றன்

இதயமறி யேன்மன்றில் இனித்தநடத் திறையே.

3

3296

இனித்தபழச் சாறுவிடுத் திழித்தமலங் கொளும்ஓர்

இழிவிலங்கில் இழிந்துநின்றேன் இரக்கம்ஒன்றும் இல்லேன்

அனித்தநெறி யிடைத்தொடர்ந்து மனித்தஉடம் பெடுத்த

அறக்கடையர் தமக்கெல்லாம் அறக்கடையன் ஆனேன்

பனித்தமனக் குரங்காட்டிப் பலிக்குழலும் கொடியேன்

பாதகமும் சூதகமும் பயின்றபெறும் படிறேன்

தனித்தகடுங் குணத்தேன்நான் ஏன்பிறந்தேன் நினது

தனிக்கருத்தை அறிந்திலேன் சபைக்கேற்றும் ஒளியே.

4

3297

ஏறுகின்றேம் எனமதித்தே இறங்குகின்ற கடையேன்

ஏதமெலாம் நிறைமனத்தேன் இரக்கமிலாப் புலையேன்

சீறுகின்ற புலியனையேன் சிறுதொழிலே புரிவேன்

செய்வகைஒன் றறியாத சிறியரினும் சிறியேன்

மாறுகின்ற குணப்பேதை மதியதனால் இழிந்தேன்

வஞ்சம்எலாம் குடிகொண்ட வாழ்க்கைமிக உடையேன்

வீறுகின்ற உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது

மெய்க்கருத்தை அறிந்திலேன் விளங்குநடத் தரசே.

5

3298

அரசர்எலாம் மதித்திடப்பே ராசையிலே அரசோ

டால்எனவே மிகக்கிளைத்தேன் அருளறியாக் கடையேன்

புரசமரம் போற்பருத்தேன் எட்டிஎனத் தழைத்தேன்

புங்கெனவும் புளிஎனவும் மங்கிஉதிர் கின்றேன்

பரசும்வகை தெரிந்துகொளேன் தெரிந்தாரைப் பணியேன்

பசைஅறியாக் கருங்கல்மனப் பாவிகளிற் சிறந்தேன்

விரசுநிலத் தேன்பிறந்தேன் நின்கருத்தை அறியேன்

வியக்குமணி மன்றோங்கி விளங்குபரம் பொருளே.

6

3299

பொருளறியேன் பொருளறிந்தார் போன்றுநடித் திங்கே

பொங்கிவழிந் துடைகின்றேன் பொய்யகத்தேன் புலையேன்

மருளறியாத் திருவாளர் உளங்கயக்கத் திரிவேன்

வையுண்டும் உழவுதவா மாடெனவே தழித்தேன்

வெருளறியாக் கொடுமனத்தேன் விழற்கிறைத்துக் களிப்பேன்

வீணர்களில் தலைநின்றேன் விலக்கனைத்தும் புரிவேன்

தெருளறியேன் உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது

திருவுளத்தை அறிந்திலேன் தெய்வநடந் தவனே.

7

3380

தவம்புரியேன் தவம்புரிந்தார் தமைப்போல நடித்துத்

தருக்குகின்றேன் உணர்ச்சியிலாச் சடம்போல இருந்தேன்

பவம்புரிவேன் கமரினிடைப் பால்கவிழ்க்கும் கடையேன்

பயனறியா வஞ்சமனப் பாறைசுமந் துழல்வேன்

அவம்புரிவேன் அறிவறியேன் அன்பறியேன் அன்பால்

ஐயாநின் அடியடைந்தார்க் கணுத்துணையும் உதவேன்

நவம்புரியும் உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது

நல்லதிரு வுளம்அறியேன் ஞானநடத் திறையே.

8

3381

இறைஅளவும் அறிவொழுக்கத் திச்சையிலேன் நரகில்

இருந்துழன்று வாடுகின்றோர் எல்லார்க்கும் இழிந்தேன்

பொறைஅளவோ நன்மைஎலாம் போக்கில்விட்டுத் தீமை

புரிகின்றேன் எரிகின்ற புதுநெருப்பிற் கொடியேன்

நிறைஅளவோ முறைஅளவோ நிலைஅளவுந் தவிர்ந்த

நெடுஞ்சால நெஞ்சகத்தேன் நீலவிடம் போல்வேன்

கறையளவா உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது

கருத்தறியேன் கருணைநடங் காட்டுகின்ற குருவே.

9

3392

காட்டுகின்ற உவர்க்கடல்போல் கலைகளிலும் செல்வக்

களிப்பினிலும் சிறந்துமிகக் களித்துநிறை கின்றேன்

நீட்டுகின்ற ஆபத்தில் ஒருசிறிதும் உதவேன்

நெடுந்தூரம் ஆழ்ந்துதவாப் படுங்கிணறு போல்வேன்

ஆட்டுகின்ற அருட்பெருமை ஒருசிறிதும் தெரியேன்

அச்சமிலேன் நாணமிலேன் அடக்கம்ஒன்றும் இல்லேன்

கூட்டுகின்ற உலகிடைநான் ஏன்பிறந்தேன் நினது

குறிப்பறியேன் மன்றில்நடங் குலவுகுல மணியே.

10

திருச்சிற்றம்பலம்

5. மாயைவலிக் கழுங்கல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3393

தாவு மான்எனக் குதித்துக்கொண் டோ டித்

தைய லார்முலைத் தடம்படுங் கடையேன்

கூவு காக்கைக்குச் சோற்றில்ஓர் பொருக்கும்

கொடுக்க நேர்ந்திடாக் கொடியரில் கொடியேன்

ஓவு றாதுழல் ஈஎனப் பலகால்

ஓடி ஓடியே தேடுறும் தொழிலேன்

சாவு றாவகைக் கென்செயக் கடவேன்
தந்தை யேஎனைத் தாங்கிக்கொண் டருளே.

1

3384

போக மாதியை விழைந்தனன் வீணில்
பொழுது போக்கிடும் இழுதையேன் அழியாத்
தேக மாதியைப் பெறமுயன் றறியேன்
சிரங்கு நெஞ்சகக் குரங்கொடும் உழல்வேன்
காக மாதிகள் அருந்தலூர் பொருக்கும்
காட்ட நேர்ந்திடாக் கடையரில் கடையேன்
ஆக மாதிசொல் அறிவறி வேனோ
அப்ப னேஎனை ஆண்டுகொண் டருளே.

2

3385

விழியைத் தூர்க்கின்ற வஞ்சரை விழைந்தேன்
விருந்தி லேஉண வருந்திலூர் வயிற்றுக்
குழியைத் தூர்க்கின்ற கொடியரில் கொடியேன்
கோப வெய்யனேன் பாபமே பயின்றேன்
வழியைத் தூர்ப்பவர்க் குளவுரைத் திடுவேன்
மாய மேபுரி பேயரில் பெரியேன்
பழியைத் தூர்ப்பதற் கென்செயக் கடவேன்

பரம னேஎனைப் பரிந்துகொண் டருளே.

3

3306

மதத்தி லேஅபி மானங்கொண் டுழல்வேன்

வாட்ட மேசெயும் கூட்டத்தில் பயில்வேன்

இதத்தி லேஒரு வார்த்தையும் புகலேன்

ஈயும் மொய்த்திடற் கிசைவுறா துண்பேன்

குதத்தி லேஇழி மலத்தினுங் கடையேன்

கோடை வெய்யலின் கொடுமையிற் கொடியேன்

சிதத்தி லேஉறற் கென்செயக் கடவேன்

தெய்வ மேஎனைச் சேர்த்துக்கொண் டருளே.

4

3307

கொடிய வெம்புலிக் குணத்தினேன் உதவாக்

கூவம் நேர்ந்துளேன் பாவமே பயின்றேன்

கடிய நெஞ்சினேன் குங்குமம் சுமந்த

கழுதை யேன்அவப் பொழுதையே கழிப்பேன்

விடியு முன்னரே எழுந்திடா துறங்கும்

வேட னேன்முழு மூடரில் பெரியேன்

அடிய னாவதற் கென்செயக் கடவேன்

அப்ப னேஎனை ஆண்டுகொண் டருளே.

5

3308

தூங்கு கின்றதே சுகம்என அறிந்தேன்

சோற தேபெறும் பேறதென் றுணர்ந்தேன்

ஏங்கு கின்றதே தொழிலெனப் பிடித்தேன்

இரக்கின் றோர்களே என்னினும் அவர்பால்

வாங்கு கின்றதே பொருள்என வலித்தேன்

வஞ்ச நெஞ்சினால் பஞ்செனப் பறந்தேன்

ஓங்கு கின்றதற் கென்செயக் கடவேன்

உடைய வாஎனை உவந்துகொண் டருளே.

6

3309

வருத்த நேர்பெரும் பாரமே சுமந்து

வாடும் ஓர்பொதி மாடென உழன்றேன்

பருத்த ஊனொடு மலம்உணத் திரியும்

பன்றி போன்றுளேன் நன்றியொன் றறியேன்

கருத்தி லாதயல் குரைத்தலுப் படைந்த

கடைய நாயினிற் கடையனேன் அருட்குப்

பொருத்தன் ஆவதற் கென்செயக் கடவேன்

புண்ணி யாஎனைப் புரிந்துகொண் டருளே.

7

3310

துருக்க லோகொடுங் கருங்கலோ வயிரச்

சூழ்க லோஎனக் காழ்கொளும் மனத்தேன்

தருக்கல் ஆணவக் கருக்கலோ டுழல்வேன்

சந்தை நாயெனப் பந்தமுற் றலைவேன்

திருக்கெ லாம்பெறு வெருக்கெனப்[199] புகுவேன்

தீய னேன்பெரும் பேயனேன் உளந்தான்

உருக்கல் ஆகுதற் கென்செயக் கடவேன்

உடைய வாஎனை உவந்துகொண் டருளே.

8

199. வெருக்கு - பூனை. ககரமெய் விரிக்கும் வழி விரித்தல். முதற்பதிப்பு

3311

கான மேஉழல் விலங்கினிற் கடையேன்

காம மாதிகள் களைகணிற் பிடித்தேன்

மான மேலிடச் சாதியே மதமே

வாழ்க்கை யேஎன வாரிக்கொண் டலைந்தேன்

ஈன மேபொருள் எனக்களித் திருந்தேன்

இரக்கம் என்பதோர் எட்டுணை அறியேன்

ஞான மேவுதற் கென்செயக் கடவேன்

நாய காஎனை நயந்துகொண் டருளே.

9

3312

இருளை யேஒளி எனமதித் திருந்தேன்
இச்சை யேபெரு விச்சைஎன் றலந்தேன்
மருளை யேதரு மனக்குரங் கோடும்
வனமெ லாஞ்சுழன் றினம்எனத் திரிந்தேன்
பொருளை நாடுநற் புந்திசெய் தறியேன்
பொதுவி லேநடம் புரிகின்றோய் உன்றன்
அருளை மேவுதற் கென்செயக் கடவேன்
அப்ப னேஎனை ஆண்டுகொண் டருளே.

10

திருச்சிற்றம்பலம்

## 6. முறையீடு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3313

மருந்தறியேன் மணிஅறியேன் மந்திரம்ஒன் றறியேன்
மதிஅறியேன் விதிஅறியேன் வாழ்க்கைநிலை அறியேன்
திருந்தறியேன் திருவருளின் செயலறியேன் அறந்தான்
செய்தறியேன் மனமடங்கும் திறத்தினில்ஓர் இடத்தே
இருந்தறியேன் அறிந்தோரை ஏத்திடவும் அறியேன்
எந்தைபிரான் மணிமன்றம் எய்தஅறி வேனோ

இருந்ததிசை சொலஅறியேன் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

1

3314

அகங்காரக் கொடுங்கிழங்கை அகழ்ந்தெறிய அறியேன்
அறிவறிந்த அந்தணர்பால் செறியும்நெறி அறியேன்
நகங்கானம் உறுதவர்போல் நலம்புரிந்தும் அறியேன்
நச்சுமரக் கனிபோல இச்சைகனிந் துழல்வேன்
மகங்காணும் புலவரெலாம் வந்துதொழ நடிக்கும்
மணிமன்றந் தனைஅடையும் வழியும்அறி வேனோ
இகங்காணத் திரிகின்றேன் எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

2

3315

கற்குமுறை கற்றறியேன் கற்பனகற் றறிந்த
கருத்தர்திருக் கூட்டத்தில் களித்திருக்க அறியேன்
நிற்குநிலை நின்றறியேன் நின்றாரின் நடித்தேன்
நெடுங்காமப் பெருங்கடலை நீந்தும்வகை அறியேன்
சிற்குணமா மணிமன்றில் திருநடனம் புரியும்
திருவடிஎன் சென்னிமிசைச் சேர்க்கஅறி வேனோ
இற்குணஞ்செய் துழல்கின்றேன் எங்ஙனம்நான் புகுவேன்

யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

3

3316

தேகமுறு பூதநிலைத் திறம்சிறிதும் அறியேன்

சித்தாந்த நிலைஅறியேன் சித்தநிலைஅறியேன்

யோகமுறு நிலைசிறிதும் உணர்ந்தறியேன் சிறியேன்

உலகநடை யிடைக்கிடந்தே உழைப்பாரில் கடையேன்

ஆகமுறு திருநீற்றின் ஒளிவிளங்க அசைந்தே

அம்பலத்தில் ஆடுகின்ற அடியைஅறி வேனோ

ஏகஅனு பவம்அறியேன் எங்ஙனம்நான் புகுவேன்

யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

4

3317

வேதாந்த நிலைநாடி விரைந்துமுயன் றறியேன்

மெய்வகையும் கைவகையும் செய்வகையும் அறியேன்

நாதாந்தத் திருவீதி நடந்திடுதற் கறியேன்

நான்ஆர்என் றறியேன்எங் கோன்ஆர்என் றறியேன்

போதாந்தத் திருநாடு புகஅறியேன் ஞான

பூரணா காயம்எனும் பொதுவைஅறி வேனோ

ஏதாந்தீ யேன்சரிதம் எங்ஙனம்நான் புகுவேன்

யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

5

3318

கலைமுடிவு கண்டறியேன் கரணமெலாம் அடக்கும்
கதிஅறியேன் கதிஅறிந்த கருத்தர்களை அறியேன்
கொலைபுலைகள் விடுத்தறியேன் கோபமறுத் தறியேன்
கொடுங்காமக் கடல்கடக்கும் குறிப்பறியேன் குணமாம்
மலைமிசைநின் றிடஅறியேன் ஞானநடம் புரியும்
மணிமன்றந் தனைஅடையும் வழியும்அறி வேனோ
இலைஎனும்பொய் உலகினிடை எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

6

3319

சாதிமதம் சமயம்எனும் சங்கடம்விட் டறியேன்
சாத்திரச்சே றாடுகின்ற சஞ்சலம்விட் டறியேன்
ஆதிஅந்த நிலையறியேன் அலைஅறியாக் கடல்போல்
ஆனந்தப் பெரும்போகத் தமர்ந்திடவும் அறியேன்
நீதிநெறி நடந்தறியேன் சோதிமணிப் பொதுவில்
நிருத்தமிடும் ஒருத்தர்திருக் கருத்தைஅறி வேனோ
ஏதிலர்சார் உலகினிடை எங்ஙனம்நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

7

3320

சாகாத தலைஅறியேன் வேகாத காலின்

தரம்அறியேன் போகாத தண்ணீரை அறியேன்

ஆகாய நிலைஅறியேன் மாகாய நிலையும்

அறியேன்மெய்ந் நெறிதனைஓர் அணுஅளவும் அறியேன்

மாகாத லுடையபெருந் திருவாளர் வழுத்தும்

மணிமன்றந் தனைஅடையும் வழியும்அறி வேனோ

ஏகாய200 உலகினிடை எங்ஙனம்நான் புகுவேன்

யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

8

200. ஏகம் - முத்தி, ஈறுதொக்கு நின்றது, முதற்பதிப்பு.

3321

தத்துவம்என் வசமாகத் தான்செலுத்த அறியேன்

சாகாத கல்விகற்கும் தரஞ்சிறிதும் அறியேன்

அத்தநிலை சத்தநிலை அறியேன்மெய் அறிவை

அறியேன்மெய் அறிந்தடங்கும் அறிஞரையும் அறியேன்

சுத்தசிவ சன்மார்க்கத் திருப்பொது வி னிடத்தே

தூயநடம் புரிகின்ற ஞாயமறி வேனோ

எத்துணையும் குணமறியேன் எங்ஙனம்நான் புகுவேன்

யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

9

3322

வரைஅபர மார்க்கமொடு பரமார்க்கம் அறியேன்

மரணபயம் தவிர்த்திடுஞ்சன் மார்க்கமதை அறியேன்

திரையறுதண் கடலறியேன் அக்கடலைக் கடைந்தே

தெள்ளமுதம் உணவறியேன் சினமடக்க அறியேன்

உரைஉணர்வு கடந்ததிரு மணிமன்றந் தனிலே

ஒருமைநடம் புரிகின்றார் பெருமைஅறி வேனோ

இரையுறுபொய் உலகினிடை எங்ஙனம்நான் புகுவேன்

யார்க்குரைப்பேன் என்னசெய்வேன் ஏதும்அறிந் திலனே.

10

திருச்சிற்றம்பலம்

7. அடியார் பேறு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3323

அடியார் வருத்தம் தனைக்கண்டு தரியார் இன்பம் அளித்திடுவார்

வடியாக் கருணைப் பெருங்கடலார் என்ற பெரியர் வார்த்தைஎலாம்

நெடியார்க் கரியாய் கொடியேன்என் ஒருவன் தனையும் நீக்கியதோ

கடியாக் கொடுமா பாதகன்முன் கண்ட பரிசுங் கண்டிலனே.

1

3324

பையார் பாம்பு கொடியதெனப் பகர்வார் அதற்கும் பரிந்துமுன்னாள்

ஐயா கருணை அளித்தனைஎன் அளவில் இன்னும் அளித்திலையே

மையார் மிடற்றோய் ஆனந்த மன்றில் நடிப்போய் வல்வினையேன்

நையா நின்றேன் ஐயோநான் பாம்பிற் கொடியன் ஆனேனே.

௨

3325

பீழை புரிவான் வருந்துகின்ற பேய்க்கும் கருணை பெரிதளிப்பான்

ஊழை அகற்றும் பெருங்கருணை உடையான் என்பார் உனைஐயோ

மோழை மனத்தால் குரங்கெறிந்த விளங்கா யாகி மொத்துண்ணும்

ஏழை அடியேன் வருத்தங்கண் டிருத்தல் அழகோ எங்கோவே.

3

3326

மருணா டுலகில் கொலைபுரிவார் மனமே கரையாக் கல்என்று

பொருணா டியநின் திருவாக்கே புகல அறிந்தேன் என்னளவில்

கருணா நிதிநின் திருவுளமுங் கல்என் றுரைக்க அறிந்திலனே

இருணா டியஇச் சிறியேனுக் கின்னும் இரங்கா திருந்தாயே.

4

3327

முன்னுங் கொடுமை பலபுரிந்து முடுகிப் பின்னுங் கொடுமைசெய

உன்னுங் கொடியர் தமக்கும்அருள் உதவுங் கருணை உடையானே

மன்னும் பதமே துணைஎன்று மதித்து வருந்தும் சிறியேனுக்

கின்னுங் கருணை புரிந்திலைநான் என்ன கொடுமை செய்தேனோ.

5

3328

அங்கே அடியர் தமக்கெல்லாம் அருளார் அமுதம் அளித்தையோ

இங்கே சிறியேன் ஒருவனுக்கும் இடர்தான் அளிக்க இசைந்தாயேல்

செங்கேழ் இதழிச் சடைக்கனியே291 சிவமே அடிமைச் சிறுநாயேன்

எங்கே புகுவேன் என்செய்வேன் எவர்என் முகம்பார்த் திடுவாரே.

6

291. செங்கேழ் வண்ணத் தனிக்கனியே - முதற்பதிப்பு, பொ. சு; பி. இரா. பாடம்.

3329

அளியே அன்பர் அன்பேநல் லமுதே சுத்த அறிவான

வெளியே வெளியில் இன்பநடம் புரியும் அரசே விதிஒன்றும்

தெளியேன் தீங்கு பிறர்செயினும் தீங்கு நினையாத் திருவுளந்தான்

எளியேன் அளவில் நினைக்கஒருப் படுமோ கருணை எந்தாயே.

7

3330

தீது நினைக்கும் பாவிகட்கும் செய்தாய் கருணை எனத்தெளிந்து

வாது நினைக்கும் மனக்கடையேன் மகிழ்வுற் றிருந்தேன் என்னளவில்

சூது நினைப்பாய் எனில்யார்க்குச் சொல்வேன் யாரைத் துணைகொள்வேன்

ஏது நினைப்பேன் ஐயோநான் பாவி உடம்பேன் எடுத்தேனே.

8

3331

பொதுவென் றறிந்தும் இரங்காத சிலர்க்கும் கருணை புரிவதன்றிக்

கதுவென் றழுங்க நினையாநின் கருணை உளந்தான் அறிவென்ப

திதுவென் றறியா எனைவருத்த எந்த வகையால் துணிந்ததுவோ

எதுவென் றறிவேன் என்புரிவேன் ஐயோ புழுவில் இழிந்தேனே.

9

3332

வெடிக்கப் பார்த்து நிற்கின்ற வெய்யர் தமையும் வினைத்துயர்கள்

பிடிக்கப் பார்க்கத் துணியாத பெருமான் நினது திருவுளந்தான்

நடிக்கப் பார்க்கும் உலகத்தே சிறியேன் மனது நவையாலே

துடிக்கப் பார்த்திங் கிருந்ததுகாண் ஐயோ இதற்குந் துணிந்ததுவோ.

10

3333

கல்லுங் கனியத் திருநோக்கம் புரியும் கருணைக் கடலேநான்

அல்லும் பகலுந் திருக்குறிப்பை எதிர்பார்த் திங்கே அயர்கின்றேன்

கொல்லுங் கொடியார்க் குதவுகின்ற குறும்புத் தேவர் மனம்போலச்

சொல்லும் இரங்கா வன்மைகற்க எங்கே ஐயோ துணிந்தாயோ.

11

3334

படிமேல் ஆசை பலவைத்துப் பணியும் அவர்க்கும் பரிந்துசுகக்

கொடிமேல் உறச்செய் தருள்கின்றாய் என்பால் இரக்கங் கொண்டிலையே

பொடிமேல் அணிநின் அருட்கிதுதான் அழகோ பொதுவில் நடிக்கும்உன்றன்

அடிமேல் ஆசை அல்லால்வே றாசை ஐயோ அறியேனே.

12

3335

நாயேன் உலகில் அறிவுவந்த நாள்தொட் டிந்த நாள்வரையும்

ஏயேன் பிறிதி லுன்குறிப்பே எதிர்பார்த் திருந்தேன் என்னுடைய

தாயே பொதுவில் நடம்புரிஎந் தாயே தயவு தாராயேல்

மாயேன் ஐயோ எதுகொண்டு வாழ்ந்திங் கிருக்கத் துணிவேனே.

13

3336

நயத்தால் உனது திருவருளை நண்ணாக் கொடியேன் நாய் உடம்பை

உயத்தான் வையேன் மடித்திடுவேன் மடித்தாற் பின்னர் உலகத்தே

வயத்தால் எந்த உடம்புறுமோ என்ன வருமோ என்கின்ற

பயத்தால் ஐயோ இவ்வுடம்பைச் சுமக்கின் றேன்எம் பரஞ்சுடரே.

14

3337

இன்ப மடுத்துன் அடியர்எலாம் இழியா தேறி யிருக்கின்றார்

வன்ப ரிடத்தே பலகாற்சென் றவரோ டுறவு வழங்கிஉன்றன்

அன்பர் உறவை விடுத்துலகில் ஆழப் பாழ அடுத்தவினைத்

துன்ப முடுகிச் சுடச்சுடவுஞ் சோறுண் டிருக்கத் துணிந்தேனே.

15

3338

எந்நாள் கருணைத் தனிமுதல்நீ என்பால் இரங்கி அருளுதலோ

அந்நாள் இந்நாள் இந்நாள்என் றெண்ணி எண்ணி அலமந்தேன்

சென்னாள் களில்லூர் நன்னாளுந் திருநா ளான திலைஐயோ

முன்னாள் என்னை ஆட்கொண்டாய் என்ன நாணம் முடுகுவதே.

16

3339

எந்த வகைசெய் திடிற்கருணை எந்தாய் நீதான் இரங்குவையோ

அந்த வகையை நான்அறியேன் அறிவிப் பாரும் எனக்கில்லை

இந்த வகைஇங் கையோநான் இருந்தால் பின்னர் என்செய்வேன்292

பந்த வகைஅற் றவர்உளத்தே நடிக்கும் உண்மைப் பரம்பொருளே293.

17

292. என்செய்கேன் - ச மு க. பதிப்பு.

293. பரஞ்சுடரே - படிவேறுபாடு. ஆ பா.

3340

அடுக்குந் தொண்டர் தமக்கெல்லாம் அருளீந் திங்கே என்னளவில்

கொடுக்குந் தன்மை தனைஒளித்தால் ஒளிக்கப் படுமோ குணக்குன்றே

தடுக்குந் தடையும் வேறில்லை தமியேன் தனைஇத் தாழ்வகற்றி

எடுக்குந் துணையும் பிறிதில்லை ஐயோ இன்னும் இரங்கிலையே.

18

3341

எல்லாம் உடையாய் நின்செயலே எல்லாம் என்றால் என்செயல்கள்

எல்லாம் நினது செயல்அன்றோ என்னே என்னைப் புறந்தள்ளல்

வல்லாய் என்னைப் புறம்விடுத்தால் புறத்தும் உன்றன் மயம்அன்றே

நல்லார் எங்கும் சிவமயம்என் றுரைப்பார் எங்கள் நாயகனே.

19

3342

கூடுங் கருணைத் திருக்குறிப்பை இற்றைப் பொழுதே குறிப்பித்து

வாடுஞ் சிறியேன் வாட்டம்எலாந் தீர்த்து வாழ்வித் திடல்வேண்டும்

பாடும் புகழோய் நினைஅல்லால் துணைவே றில்லைப் பரவெளியில்

ஆடுஞ் செல்வத் திருவடிமேல் ஆணை முக்கால் ஆணையதே.

29

திருச்சிற்றம்பலம்

8. ஆன்ம விசாரத் தழுங்கல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3343

போகமே விழைந்தேன் புலைமனச் சிறியேன்

பூப்பினும் புணர்ந்தவெம் பொறியேன்

ஏகமே பொருள்என் றறிந்திலேன் பொருளின்

இச்சையால் எருதுநோ வறியாக்

காகமே எனப்போய்ப் பிறர்தமை வருத்திக்

களித்த பாதகத்தொழிற் கடையேன்

மோகமே உடையேன் என்னினும் எந்தாய்

முனிந்திடேல் காத்தருள் எனையே.

1

3344

பூப்பினும் பலகால் மடந்தையர் தமைப்போய்ப்

புணர்ந்தவெம் புலையனேன் விடஞ்சார்

பாப்பினுங் கொடியர் உறவையே விழைந்த

பள்ளனேன் கள்ளனேன் நெருக்கும்

ஆப்பினும் வலியேன் அறத்தொழில் புரியேன்

அன்பினால் அடுத்தவர் கரங்கள்

கூப்பினுங் கூப்பாக் கொடுங்கையேன் எனினும்

கோபியேல் காத்தருள் எனையே.

2

3345

விழுத்தலை நெறியை விரும்பிலேன் கரும்பின்

மிகஇனிக் கின்றநின் புகழ்கள்

வழுத்தலை அறியேன் மக்களே மனையே

வாழ்க்கையே துணைஎன மதித்துக்

கொழுத்தலை மனத்துப் புழுத்தலைப் புலையேன்

கொக்கனேன் செக்கினைப் பலகால்

இழுத்தலை எருதேன் உழத்தலே உடையேன்

என்னினும் காத்தருள் எனையே.

3

3346

புலைவிலைக் கடையில் தலைகுனித் தலைந்து

பொறுக்கிய சுணங்கனேன் புரத்தில்

தலைவிலை பிடித்துக் கடைவிலை படித்த

தயவிலாச் சழக்கனேன் சழக்கர்

உலைவிலை எனவே வியக்கவெந் தொழிலில்

உழன்றுழன் றழன்றதோர் உளத்தேன்

இலைவிலை எனக்கென் றகங்கரித் திருந்தேன்

என்னினும் காத்தருள் எனையே.

4

3347

கொட்டிலை அடையாப் பட்டிமா டனையேன்

கொட்டைகள் பரப்பிமேல் வனைந்த

கட்டிலை விரும்பி அடிக்கடி படுத்த

கடையனேன் கங்குலும் பகலும்

அட்டிலை அடுத்த பூனையேன் உணவை

அறவுண்டு குப்பைமேற் போட்ட

நெட்டிலை அனையேன் என்னினும் வேறு

நினைத்திடேல் காத்தருள் எனையே.

5

3348

நேரிழை யவர்தம் புணர்முலை நெருக்கில்

நெருக்கிய மனத்தினேன் வீணில்

போரிழை வெறியர் புகழ்பெறு வெறியேன்

புனைகலை இலர்க்கொரு கலையில்

ஓரிழை எனினும் கொடுத்திலேன் நீள

உடுத்துடுத் தூர்தொறுந் திரிந்தேன்

ஏரிழை விழைந்து பூண்டுளங் களித்தேன்

என்னினும் காத்தருள்எனையே.

6

3349

அளத்திலே படிந்த துரும்பினும் கடையேன்

அசடனேன் அறிவிலேன்உலகில்

குளத்திலே குளிப்பார் குளிக்கவெஞ் சிறுநீர்க்

குழியிலே குளித்தவெங் கொடியேன்

வளத்திலே பொசித்துத் தளத்திலே படுக்க

மனங்கொண்ட சிறியேனன் மாயைக்

களத்திலே பயின்ற உளத்திலே பெரியன்

என்னினும் காத்தருள் எனையே.

7

3350

தொழுதெலாம் வல்ல கடவுளே நின்னைத்

துதித்திலேன் தூய்மைஒன் றறியேன்

கழுதெலாம் அனையேன் இழுதெலாம் உணவில்

கலந்துணக் கருதிய கருத்தேன்

பழுதெலாம் புரிந்து பொழுதெலாம் கழித்த

பாவியேன் தீமைகள் சிறிதும்

எழுதலாம் படித்தன் றெனமிக உடையேன்

என்னினும் காத்தருள் எனையே.

8

3351

வட்டியே பெருக்கிக் கொட்டியே ஏழை

மனைகவர் கருத்தினேன் ஓட்டைச்

சட்டியே எனினும் பிறர்கொளத் தரியேன்

தயவிலேன் சூதெலாம் அடைத்த

பெட்டியே நிகர்த்த மனத்தினேன் உலகில்

பெரியவர் மனம்வெறுக் கச்செய்

எட்டியே மண்ணாங் கட்டியே அனையேன்

என்னினும் காத்தருள் எனையே.

9

3352

உடுத்திலேம் சிறிதும் உண்டிலேம் எனவந்

தோதிய வறிஞருக் கேதும்

கொடுத்திலேன் கொடுக்கும் குறிப்பிலேன் உலகில்

குணம்பெரி துடையநல் லோரை

அடுத்திலேன் அடுத்தற் காசையும் இல்லேன்

அவனிமேல் நல்லவன் எனப்பேர்

எடுத்திலேன் எனினும் தெய்வமே துணைஎன்

றிருக்கின்றேன் காத்தருள் எனையே.

10

திருச்சிற்றம்பலம்

9. அவா அறுத்தல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3353

தாலவாழ்க் கையிலே சார்ந்தவர் எல்லாம்

தக்கமுப் போதினும் தனித்தே

சீலமார் பூசைக் கடன்முடிக் கின்றார்

சிறியனேன் தவஞ்செய்வான் போலே

ஞாலமே லவர்க்குக் காட்டிநான் தனித்தே

நவிலும்இந் நாய்வயிற் றினுக்கே

காலையா தியமுப் போதினும் சோற்றுக்

கடன்முடித் திருந்தனன் எந்தாய்.

1

3354

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடில் ஒருவன்

துன்னுநல் தவம்எலாஞ் சுருங்கி

ஆற்றிலே கரைத்த புளிஎனப் போம்என்
றறிஞர்கள் உரைத்திடல் சிறிதும்
போற்றிலேன் உன்னைப் போற்றிலேன் சுவையில்
பொருந்திய காரசா ரஞ்சேர்
சாற்றிலே கலந்த சோற்றிலே ஆசை
தங்கினேன் என்செய்வேன் எந்தாய்.

உ

3355

விருப்பிலேன் போலக் காட்டினேன் அன்றி
விளைவிலா தூண்எலாம் மறுத்த
கருப்பிலே எனினும் கஞ்சியா திகளைக்
கருத்துவந் துண்ணுதற் கமையேன்
நெருப்பிலே உருக்கு நெய்யிலே சிறிதும்
நீரிடாத் தயிரிலே நெகிழ்ந்த
பருப்பிலே சோற்றுப் பொருப்பிலே ஆசை
பற்றினேன் என்செய்வேன் எந்தாய்.

3

3356

உறியிலே தயிரைத் திருடிஉண் டனன்என்
றொருவனை உரைப்பதோர் வியப்போ
குறியிலே அமைத்த உணவெலாம் திருடிக்

கொண்டுபோய் உண்டனன் பருப்புக்

கறியிலே பொரித்த கறியிலே கூட்டுக்

கறியிலே கலந்தபே ராசை

வெறியிலே உனையும் மறந்தனன் வயிறு

வீங்கிட உண்டனன் எந்தாய்.

4

3357

கீரையே விரும்பேன் பருப்பொடு கலந்த

கீரையே விரும்பினேன் வெறுந்தண்

நீரையே விரும்பேன் தெங்கிளங் காயின்

நீரையே விரும்பினேன் உணவில்

ஆரையே எனக்கு நிகர்எனப் புகல்வேன்

அய்யகோ அடிச்சிறு நாயேன்

பேரையே உரைக்கில் தவம்எலாம் ஓட்டம்

பிடிக்குமே என்செய்வேன் எந்தாய்.

5

3358

பாலிலே கலந்த சோறெனில் விரைந்தே

பத்தியால் ஒருபெரு வயிற்றுச்

சாலிலே அடைக்கத் தடைபடேன் வாழை

தகுபலா மாமுதற் பழத்தின்

தோலிலே எனினும் கிள்ளிலூர் சிறிதும்

சூழ்ந்தவர்க் கீந்திடத் துணியேன்

வாலிலேன் இருக்கில் வனத்திலே இருக்க

வாய்ப்புளேன் என்செய்வேன் எந்தாய்.

6

3359

உடம்பொரு வயிறாய்ச் சருக்கரை கலந்த

உண்டியே உண்டனன் பலகால்

கடம்பெறு புளிச்சோ றுண்டுளே களித்தேன்

கட்டிநல் தயிரிலே கலந்த

தடம்பெறு சோற்றில் தருக்கினேன் எலுமிச்

சம்பழச் சோற்றிலே தடித்தேன்

திடம்பெறும் மற்றைச் சித்திரச் சோற்றில்

செருக்கினேன் என்செய்வேன் எந்தாய்.

7

3360

மிளகுமேன் மேலும் சேர்த்தபல் உணவில்

விருப்பெலாம் வைத்தனன்உதவாச்

சுளகினும் கடையேன் பருப்பிலே அமைத்த

துவையலே சுவர்க்கம்என் றுண்டேன்

இளகிலா மனத்தேன் இனியபச் சடிசில்

எவற்றிலும் இச்சைவைத் திசைத்தேன்
குளகுணும் விலங்கின் இலைக்கறிக் காசை
கொண்டனன் என்செய்வேன்எந்தாய்.

8

3361

தண்டுகாய் கிழங்கு பூமுதல் ஒன்றும்
தவறவிட் டிடுவதற் கமையேன்
கொண்டுபோய் வயிற்றுக் குழிஎலாம் நிரம்பக்
கொட்டினேன் குணமிலாக் கொடியேன்
வண்டுபோல் விரைந்து வயல்எலாம் நிரம்ப
மலங்கொட்ட ஓடிய புலையேன்
பண்டுபோல் பசித்தூண் வருவழி பார்த்த
பாவியேன் என்செய்வேன் எந்தாய்.

9

3362

வறுத்தலே பொடித்து மலர்த்தலே புரட்டி
வைத்தலே துவட்டலில் சுவைகள்
உறுத்தலே முதலா உற்றபல் உணவை
ஒருமல வயிற்றுப்பை உள்ளே
துறுத்தலே எனக்குத் தொழில்எனத் துணிந்தேன்
துணிந்தரைக் கணத்தும்வன் பசியைப்

பொறுத்தலே அறியேன் மலப்புலைக் கூட்டைப்

பொறுத்தனன் என்செய்வேன் எந்தாய்.

10

3363

பருப்பிடி யரிவா லிடிகளா திகளால்

பண்ணிய பண்ணிகா ரங்கள்

உருப்பிடி நிரம்ப வரவர எல்லாம்

ஒருபெரு வயிற்றிலே அடைத்தேன்

கருப்பிடி உலகின் எருப்பிடி அனைய

கடையரில் கடையனேன் உதவாத்

துருப்பிடி இருப்புத் துண்டுபோல் கிடந்து

தூங்கினேன் என்செய்வேன் எந்தாய்.

11

3364

அடிக்கடி நுண்மை விழைந்துபோய் அவைகள்

அடுக்கிய இடந்தொறும் அலைந்தே

தடிக்கடி நாய்போல் நுகர்ந்துவாய் சுவைத்துத்

தவம்புரிந் தான்என நடித்தேன்

பொடிக்கடி நாசித் துளையிலே புகுத்திப்

பொங்கினேன் அய்யகோ எனது

முடிக்கடி புனைய முயன்றிலேன் அறிவில்

மூடனேன் என்செய்வேன் எந்தாய்.

12

3365

உண்டியே விழைந்தேன் எனினும்என் தன்னை

உடையவா அடியனேன் உனையே

அண்டியே இருந்தேன் இருக்கின்றேன் இருப்பேன்

அப்பநின் ஆணைநின் தனக்கே

தொண்டுறா தவர்கைச் சோற்றினை விரும்பேன்

தூயனே துணைநினை அல்லால்

கண்டிலேன் என்னைக் காப்பதுன் கடன்காண்

கைவிடேல் கைவிடேல் எந்தாய்.

13

திருச்சிற்றம்பலம்

10. தற் சுதந்தரம் இன்மை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3366

இப்பாரில் உடல்ஆவி பொருளும்உன்பாற்

கொடுத்தேன்மற் றெனக்கென் றிங்கே

எப்பாலும் சுதந்தரம்ஓர் இறையும்இலை

அருட்சோதி இயற்கை என்னும்

துப்பாய உடலாதி தருவாயோ

இன்னும்எனைச் சோதிப் பாயோ

அப்பாநின் திருவுளத்தை அறியேன்இவ்

வடியேனால் ஆவ தென்னே.

1

3367

என்னேஎம் பெருமான்இங் கின்னும்அணைந்

திலன்என்றே ஏங்கி ஏங்கி

மன்னேஎன் மணியேகண் மணியேஎன்

வாழ்வேநல் வரத்தாற் பெற்ற

பொன்னேஅற் புதமேசெம் பொருளேஎன்

புகலேமெய்ப் போத மேஎன்

அன்னேஎன் அப்பாஎன் றழைத்தலன்றி

அடியேனால் ஆவ தென்னே.

2

3368

பொடிஎடுக்கப் போய்அதனை மறந்துமடி

எடுத்தரையில் புனைவேன் சில்லோர்

தடிஎடுக்கக் காணில்அதற் குளங்கலங்கி

ஓடுவனித் தரத்தேன் இங்கே

முடிஎடுக்க வல்லேனோ இறைவாநின்

அருள்இலதேல் முன்னே வைத்த

அடிஎடுக்க முடியாதே அந்தோஇச்

சிறியேனால் ஆவ தென்னே.

3

3369

பாட்டுவித்தால் பாடுகின்றேன் பணிவித்தால்

பணிகின்றேன் பதியே நின்னைக்

கூட்டுவித்தால் கூடுகின்றேன் குழைவித்தால்

குழைகின்றேன் குறித்த ஊணை

ஊட்டுவித்தால் உண்கின்றேன் உறக்குவித்தால்

உறங்குகின்றேன் உறங்கா தென்றும்

ஆட்டுவித்தால் ஆடுகின்றேன் அந்தோஇச்

சிறியேனால் ஆவ தென்னே.

4

3370

உடுப்பவனும் உண்பவனும் நானேஎன்

னவும்நாணம் உறுவ தெந்தாய்

தடுப்பவனும் தடைதீர்த்துக் கொடுப்பவனும்

பிறப்பிறப்புத் தன்னை நீக்கி

எடுப்பவனும் காப்பவனும் இன்பஅனு

பவஉருவாய் என்னுள் ஓங்கி

அடுப்பவனும் நீஎன்றால் அந்தோஇச்

சிறியேனால் ஆவ தென்னே.

5

3371

சாவதென்றும் பிறப்பதென்றும் சாற்றுகின்ற

பெரும்பாவம் தன்னை எண்ணி

நோவதின்று புதிதன்றே என்றும்உள

தால்இந்த நோவை நீக்கி

ஈவதுமன் றிடைநடிப்போய் நின்னாலே

ஆகும்மற்றை இறைவ ராலே

ஆவதொன்றும் இல்லைஎன்றால் அந்தோஇச்

சிறியேனால் ஆவ தென்னே.

6

3372

இசைத்திடவும் நினைத்திடவும் பெரிதரிதாம்

தனித்தலைமை இறைவா உன்றன்

நசைத்திடுபே ரருட்செயலால் அசைவதன்றி

ஐந்தொழில்செய் நாத ராலும்

தசைத்திடுபுன் துரும்பினையும் அகங்கரித்துத்

தங்கள்சுதந் தரத்தால் இங்கே

அசைத்திடற்கு முடியாதேல் அந்தோஇச்

சிறியேனால் ஆவ தென்னே.

7

3373

கல்லாய மனத்தையும்ஓர் கணத்தினிலே
கனிவித்துக் கருணை யாலே
பல்லாரும் அதிசயிக்கப் பக்குவந்தந்
தருட்பதமும் பாலிக் கின்றோய்
எல்லாஞ்செய் வல்லோய்சிற் றம்பலத்தே
ஆடல்இடு கின்றோய் நின்னால்
அல்லால்ஒன் றாகாதேல் அந்தோஇச்
சிறியேனால் ஆவ தென்னே.

8

3374

கரைசேரப் புரிந்தாலும் கடையேன்செய்
குற்றமெலாம் கருதி மாயைத்
திரைசேரப் புரிந்தாலும் திருவுளமே
துணைஎனநான் சிந்தித் திங்கே
உரைசேர இருத்தல்அன்றி உடையாய்என்
உறவேஎன் உயிரே என்றன்
அரைசேஎன் அம்மேஎன் அப்பாஇச்
சிறியேனால் ஆவ தென்னே.

9

3375

இன்பேநன் றருளிஅருள் இயற்கையிலே

வைத்தாலும் இங்கே என்னைத்

துன்பேசெய் வித்தாலும் என்செய்வேன்

நின்னருளே துணைஎன் றந்தோ

என்பேதை மனமடங்கி இருப்பதன்றி

எல்லாங்கண் டிருக்கும் என்றன்

அன்பேஎன் அம்மேஎன் அப்பாஇச்

சிறியேனால் ஆவ தென்னே.

10

திருச்சிற்றம்பலம்

11. அத்துவித ஆனந்த அனுபவ இடையீடு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3376

திருத்தகுபொன் னம்பலத்தே திருநடஞ்செய் தருளும்

திருவடிகள் அடிச்சிறியேன் சென்னிமிசை வருமோ

உருத்தகுநா னிலத்திடைநீள் மலத்தடைபோய் ஞான

உருப்படிவம் அடைவேனோ ஒன்றிரண்டென் னாத

பொருத்தமுறு சுத்தசிவா னந்தவெள்ளம் ததும்பிப்

பொங்கிஅகம் புறங்காணா தெங்கு நிறைந்திடுமோ

அருத்தகும்அவ் வெள்ளத்தே நான்மூழ்கி நான்போய்

அதுவாகப் பெறுவேனோ அறிந்திலன்மேல் விளைவே.

1

3377

கரணமெலாம் கரைந்ததனிக் கரைகாண்ப துளதோ

கரைகண்ட பொழுதெனையுங் கண்டுதெளி வேனோ

அரணமெலாம் கடந்ததிரு வருள்வெளிநேர் படுமோ

அவ்வெளிக்குள் ஆனந்த அனுபவந்தான் உறுமோ

மரணமெலாம் தவிர்ந்துசிவ மயமாகி நிறைதல்

வாய்த்திடுமோ மூலமல வாதனையும் போமோ

சரணமெலாம் தரமன்றில் திருநடஞ்செய் பெருமான்

தனதுதிரு உளம்எதுவோ சற்றுமறிந் திலனே.

2

3378

நாதாந்தத் திருவீதி நடந்துகடப் பேனோ

ஞானவெளி நடுஇன்ப நடந்தரிசிப் பேனோ

போதாந்தத் திருவடிஎன் சென்னிபொருந் திடுமோ

புதுமையறச் சிவபோகம் பொங்கிநிறைந் திடுமோ

வேதாந்த சித்தாந்த சமரசமும் வருமோ

வெறுவெளியில் சுத்தசிவ வெளிமயந்தான் உறுமோ

பாதாந்த வரைநீறு மணக்கமன்றில் ஆடும்

பரமர்திரு உளம்எதுவோ பரமம்அறிந் திலனே.

3

3379

சிதம்பரத்தே ஆனந்த சித்தர்திரு நடந்தான்
சிறிதறிந்த படிஇன்னும் முழுதும்அறி வேனோ
பதம்பெறத்தேம் பழம்பிழிந்து பாலும்நறும் பாகும்
பசுநெய்யும் கலந்ததெனப் பாடிமகிழ் வேனோ
நிதம்பரவி ஆனந்த நித்திரைநீங் காத
நித்தர்பணி புரிந்தின்ப சித்திபெறு வேனோ
மதம்பரவு மலைச்செருக்கில் சிறந்தசிறி யேன்நான்
வள்ளல்குரு நாதர்திரு உள்ளம்அறி யேனே.

4

3380

களக்கமறப் பொதுநடம்நான் கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்துக் காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ வெம்பிஉதிர்ந் திடுமோ
வெம்பாது பழுக்கினும்என் கரத்தில்அகப் படுமோ
கொளக்கருது மலமாயைக் குரங்குகவர்ந் திடுமோ
குரங்குகவ ராதெனது குறிப்பில்அகப் படினும்
துளக்கமற உண்ணுவனோ தொண்டைவிக்கிக் கொளுமோ
ஜோதிதிரு உளம்எதுவோ ஏதும்அறிந் திலனே.

5

3381

திருப்பொதுவில் திருநடம்நான் சென்றுகண்ட தருணம்

சித்திஎனும் பெண்ணரசி எத்திஎன்கை பிழித்தாள்

கருப்பறியா தெனைஅதன்முன் கலந்தபுத்தி எனும்ஓர்

காரிகைதான் கண்டளவில் கனிந்துமகிழ்ந் திடுமோ

விருப்பமுறா தெனைமுனிந்து விடுத்திடுமோ நேயம்

விளைந்திடுமோ இவர்க்குநிதம் சண்டைவிளைந் திடுமோ

தருப்பொதுவில் இருவர்க்கும் சந்ததிஉண் டாமோ

தடைபடுமோ திருஉளந்தான் சற்றும்அறிந் திலனே.

6

3382

ஆனந்த நடம்பொதுவில் கண்டதரு ணத்தே

அருமருந்தொன் றென்கருத்தில் அடைந்தமர்ந்த ததுதான்

கானந்த மதத்தாலே காரமறை படுமோ

கடுங்கார மாகிஎன்றன் கருத்தில்உறைந் திடுமோ

ஊனந்த மறக்கொளும்போ தினிக்கரசம் தருமோ

உணக்கசந்து குமட்டிஎதிர் எடுத்திடநேர்ந் திடுமோ

நானந்த உளவறிந்து பிறர்க்கீய வருமோ

நல்லதிரு உளம்எதுவோ வல்லதறிந் திலனே.

7

3383

தாய்கொண்ட திருப்பொதுவில் எங்கள்குரு நாதன்

சந்நிதிபோய் வரவிடுத்த தனிக்கரணப் பூவை

காய்கொண்டு வந்திடுமோ பழங்கொண்டு வருமோ

கனிந்தபழங் கொண்டுவருங் காலதனை மதமாம்

பேய்கொண்டு போய்விடுமோ பிலத்திடைவீழ்ந் திடுமோ

பின்படுமோ முன்படுமோ பிணங்கிஒளித் திடுமோ

வாய்கொண்டு வென்றிடுமோ தோற்றிடுமோ என்னை

மறந்திடுமோ திருஉளத்தின் வண்ணம்அறிந் திலனே.

8

3384

தீட்டுமணிப் பொதுநடஞ்செய் திருவடிகண் டேத்தச்

செல்கின்றேன் சிறியேன்முன் சென்றவழி அறியேன்

காட்டுவழி கிடைத்திடுமோ நாட்டுவழி தருமோ

கால்இளைப்புக் கண்டிடுமோ காணாதோ களிப்பாம்

மேட்டினிடை விடுத்திடுமோ பள்ளத்தே விடுமோ

விவேகம்எனும் துணையுறுமோ வேடர்பயம் உறுமோ

ஈட்டுதிரு வடிச்சமுகம் காணவும்நேர்ந் திடுமோ

எப்படியோ திருஉளந்தான் ஏதும்அறிந் திலனே.

9

3385

ஞானமணிப் பொதுநடஞ்செய் திருவடிகண் டிடவே

நடக்கின்றேன் அந்தோமுன் நடந்தவழி அறியேன்

ஊனமிகும் ஆணவமாம் பாவிஎதிர்ப் படுமோ

உடைமைஎலாம் பறித்திடுமோ நடைமெலிந்து போமோ

ஈனமுறும் அகங்காரப் புலிகுறுக்கே வருமோ

இச்சைஎனும் இராக்கதப்பேய் எனைப்பிடித்துக் கொளுமோ

ஆனமலத் தடைநீக்க அருட்டுணைதான் உறுமோ

ஐயர்திரு உளம்எதுவோ யாதுமறிந் திலனே.

10

திருச்சிற்றம்பலம்

12. பிள்ளைச் சிறு விண்ணப்பம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3386

தடித்தஓர் மகனைத் தந்தைஈண் டடித்தால்

தாயுடன் அணைப்பள்தாய் அடித்தால்

பிடித்தொரு தந்தை அணைப்பன்இங் கெனக்குப்

பேசிய தந்தையும் தாயும்

பொடித்திரு மேனி அம்பலத் தாடும்

புனிதநீ ஆதலால் என்னை

அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்

அம்மைஅப் பாஇனி ஆற்றேன்.

1

3387

பெற்றதம் பிள்ளைக் குணங்களை எல்லாம்

பெற்றவர் அறிவரே அல்லால்

மற்றவர் அறியார் என்றனை ஈன்ற

வள்ளலே மன்றிலே நடிக்கும்

கொற்றவ ஓர்எண் குணத்தவ நீதான்

குறிக்கொண்ட கொடியனேன் குணங்கள்

முற்றும்நன் கறிவாய் அறிந்தும்என் றனைநீ

முனிவதென் முனிவுதீர்ந் தருளே.

2

3388

வெம்மதிக் கொடிய மகன்கொடுஞ் செய்கை

விரும்பினும் அங்ஙனம் புரியச்

சம்மதிக் கின்றார் அவன்றனைப் பெற்ற

தந்தைதாய் மகன்விருப் பாலே

இம்மதிச் சிறியேன் விழைந்ததொன் றிலைநீ

என்றனை விழைவிக்க விழைந்தேன்

செம்மதிக் கருணைத் திருநெறி இதுநின்

திருவுளம் அறியுமே எந்தாய்.

3

3389

பொய்பிழை அனந்தம் புகல்கின்றேன் அதில்ஓர்
புல்முனை ஆயினும் பிறர்க்கு
நைபிழை உளதேல் நவின்றிடேன் பிறர்பால்
நண்ணிய கருணையால் பலவே
கைபிழை யாமை கருதுகின் றேன்நின்
கழற்பதம் விழைகின்றேன் அல்லால்
செய்பிழை வேறொன் றறிகிலேன் அந்தோ
திருவுளம் அறியுமே எந்தாய்.

4

3390

அப்பணி முடி204என் அப்பனே மன்றில்
ஆனந்த நடம்புரி அரசே
இப்புவி தனிலே அறிவுவந் ததுதொட்
டிந்தநாள் வரையும்என் தனக்கே
எப்பணி இட்டாய் அப்பணி அலதென்
இச்சையால் புரிந்ததொன் றிலையே
செப்புவ தென்நான் செய்தவை எல்லாம்
திருவுளம் அறியுமே எந்தாய்.

5

204. அப்பணிசடை - ச. மு. க. பதிப்பு.

3391

முன்னொடு பின்னும் நீதரு மடவார்

முயக்கினில் பொருந்தினேன் அதுவும்

பொன்னொடு விளங்கும் சபைநடத் தரசுன்

புணர்ப்பலால் என்புணர்ப் பலவே

என்னொடும் இருந்திங் கறிகின்ற நினக்கே

எந்தைவே றியம்புவ தென்னோ

சொன்னெடு வானத் தரம்பையர் எனினும்

துரும்பெனக் காண்கின்றேன் தனித்தே.

6

3392

இன்னுமிங் கெனைநீ மடந்தையர் முயக்கில்

எய்துவித் திடுதியேல் அதுவுன்

தன்னுளப் புணர்ப்பிங் கெனக்கொரு சிறிதும்

சம்மதம் அன்றுநான் இதனைப்

பன்னுவ தென்னே இதில்அரு வருப்புப்

பால்உணும் காலையே உளதால்

மன்னும்அம் பலத்தே நடம்புரி வோய்என்

மதிப்பெலாம் திருவடி மலர்க்கே.

7

3393

அறிவிலாச் சிறிய பருவத்திற் றானே

அருந்தலில் எனக்குள வெறுப்பைப்

பிறிவிலா தென்னுட் கலந்ததீ அறிதி

இன்றுநான் பேசுவ தென்னே

செறிவிலாக் கடையேன் என்னினும் அடியேன்

திருவருள் அமுதமே விழைந்தேன்

எறிவிலாச் சுவைவே றெவற்றினும் விழைவோர்

எட்டுணை யேனும்இன் றெந்தாய்.

8

3394

இன்சுவை உணவு பலபல எனக்கிங்

கெந்தைநீ கொடுப்பிக்கச் சிறியேன்

நின்சுவை உணவென் றுண்கின்றேன் இன்னும்

நீதரு வித்திடில் அதுநின்

தன்சுதந் தரம்இங் கெனக்கதில் இறையும்

சம்மதம் இல்லைநான் தானே

என்சுதந் தரத்தில் தேடுவேன் அல்லேன்

தேடிய தும்இலை ஈண்டே.

9

3395

செறிவதில் மனத்தேன் காசிலே ஆசை

செய்திலேன் இந்தநாள் அன்றி

அறிவதில் லாத சிறுபரு வத்தும்

அடுத்தவர் கொடுத்தகா சவர்மேல்

எறிவதும் மேட்டில் எறிந்ததும் எனக்குள்

இருக்கின்ற நீ அறிந் ததுவே

பிறிவதில் லாநின் அருட்பெரும் பொருளைப்

பெற்றனன் பேசுவ தென்னே.

10

3396

பணத்திலே சிறிதும் ஆசைஒன் றிலைநான்

படைத்தஅப் பணங்களைப் பலகால்

கிணற்றிலே எறிந்தேன் குளத்திலும் எறிந்தேன்

கேணியில் எறிந்தனன் எந்தாய்

குணத்திலே நீதான் கொடுக்கின்ற பொருளை

எறிகலேன் கொடுக்கின்றேன் பிறர்க்கே

கணத்திலே எல்லாம் காட்டும்நின் அருளைக்

கண்டனன் இனிச்சொல்வ தென்னே.

11

3397

கிளைத்தஇவ் வுடம்பில் ஆசைஎள் ளளவும்

கிளைத்திலேன் பசிஅற உணவு

திளைத்திடுந் தோறும் வெறுப்பொடும் உண்டேன்

இன்றுமே வெறுப்பில்உண் கின்றேன்

தளைத்திடு முடைஊன் உடம்பொரு சிறிதும்

தழித்திட நினைத்திலேன் இன்றும்

இளைத்திட விழைகின் றேன்இது நான்தான்

இயம்பல்என் நீஅறிந் ததுவே.

12

3398

இவ்வுல கதிலே இறைஅர சாட்சி

இன்பத்தும் மற்றைஇன் பத்தும்

எவ்வள வெனினும் இச்சைஒன் றறியேன்

எண்ணுதோ றருவருக் கின்றேன்

அவ்வுலக கதிலே இந்திரர் பிரமர்

அரிமுத லோர்அடை கின்ற

கவ்வைஇன் பத்தும் ஆசைசற் றறியேன்

எந்தைஎன் கருத்தறிந் ததுவே.

13

3399

சரியைஓர் நான்கும் கிரியைஓர் நான்கும்

சாற்றிடும் யோகமோர் நான்கும்

புரியவும் பதங்கள் பொருந்தவும் எனது

புந்தியில் ஆசைசற் றறியேன்

பெரியதோர் ஞானம் நான்கினும் ஆசை

பெற்றிலேன் முத்திபெற் றிடவும்

உறியதோர் இச்சை எனக்கிலை என்றன்

உள்ளம்நீ அறிந்ததே எந்தாய்.

14

3400

இறக்கவும் ஆசை இல்லைஇப் படிநான்

இருக்கவும் ஆசைஇன் றினிநான்

பிறக்கவும் ஆசை இலைஉல கெல்லாம்

பெரியவர் பெரியவர் எனவே

சிறக்கவும் ஆசை இலைவிசித் திரங்கள்

செய்யவும் ஆசைஒன் றில்லை

துறக்கவும் ஆசை இலைதுயர் அடைந்து

தூங்கவும் ஆசைஒன் றிலையே.

15

3401

சற்சபைக் குரியார் தம்மொடும் கூடித்

தனித்தபே ரன்புமெய் அறிவும்

நற்சபைக் குரிய ஒழுக்கமும் அழியா

நல்லமெய் வாழ்க்கையும் பெற்றே

சிற்சபை நடமும் பொற்சபை நடமும்

தினந்தொறும் பாடிநின் றாடித்

தெற்சபை உலகத் துயிர்க்கெலாம் இன்பம்

செய்வதென் இச்சையாம் எந்தாய்.

16

3482

உருமலி உலகில் உன்னைநான் கலந்தே

ஊழிதோ றூழியும் பிரியா

தொருமையுற் றழியாப் பெருமைபெற் றடியேன்

உன்னையே பாடி நின்றாடி

இருநிலத் தோங்கிக் களிக்கவும் பிறருக்

கிடுக்கணுற் றால்அவை தவிர்த்தே

திருமணிப் பொதுவில் அன்புடை யவராச்

செய்யவும் இச்சைகாண் எந்தாய்.

17

3483

எவ்வுயிர்த் திரளும் என்னுயிர் எனவே

எண்ணிநல் இன்புறச் செயவும்

அவ்வுயிர் களுக்கு வரும்இடை யூற்றை

அகற்றியே அச்சநீக் கிடவும்

செவ்வையுற் றுனது திருப்பதம் பாடிச்

சிவசிவ என்றுகூத் தாடி

ஒவ்வுறு களிப்பால் அழிவுறா திங்கே
ஓங்கவும் இச்சைகாண் எந்தாய்.

18

3484

உலகறி வெனக்கிங் குற்றநாள் தொடங்கி
உன்அறி வடையும்நாள் வரையில்
இலகிஎன் னோடு பழகியும் எனைத்தான்
எண்ணியும் நண்ணியும் பின்னர்
விலகிய மாந்தர் அனைவரும் இங்கே
மெய்யுறக் கூடிநின் றுனையே
அலகில்பே ரன்பில் போற்றிவாழ்ந் திடவும்
அடியனேற் கிச்சைகாண் எந்தாய்.

19

3485

திருவளர் திருச்சிற் றம்பலம் ஓங்கும்
சிதம்பரம் எனும்பெருங் கோயில்
உருவளர் மறையும் ஆகமக் கலையும்
உரைத்தவா றியல்பெறப் புதுக்கி
மருவளர் மலரின் விளக்கிநின் மேனி
வண்ணணங்கண் டுளங்களித் திடவும்
கருவளர் உலகில் திருவிழாக் காட்சி

காணவும் இச்சைகாண் எந்தாய்.

20

3406

தங்கமே அனையார் கூடிய ஞான

சமரச சுத்தசன் மார்க்கச்

சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்

சார்திருக் கோயில்கண் டிடவும்205

துங்கமே பெறுஞ்சற் சங்கம்நீ டூழி

துலங்கவும் சங்கத்தில் அடியேன்

அங்கமே குளிர நின்றனைப் பாடி

ஆடவும் இச்சைகாண் எந்தாய்.

21

205. சங்கம் சார்திருக்கோயில் - வடலூர் ஞானசபை. ச . மு. க.

3407

கருணையே வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த

கடுந்துயர் அச்சமா திகளைத்

தருணநின் அருளால் தவிர்த்தவர்க் கின்பம்

தரவும்வன் புலைகொலை இரண்டும்

ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க

உஞற்றவும் அம்பலந் தனிலே

மருவிய புகழை வழுத்தவும் நின்னை

வாழ்த்தவும் இச்சைகாண்எந்தாய்.

22

3498

மண்ணுல கதிலே உயிர்கள்தாம் வருந்தும்

வருத்தத்தை ஒருசிறி தெனினும்

கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்

கணமும்நான் சகித்திடமாட்டேன்

எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால்

இசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்

நண்ணும்அவ் வருத்தம் தவிர்க்கும்நல் வரந்தான்

நல்குதல் எனக்கிச்சை எந்தாய்.

23

3499

இவையலால் பிறிதோர் விடயத்தில் இச்சை

எனக்கிலை இவைஎலாம் என்னுள்

சிவையொடும் அமர்ந்த பெருந்தயா நிதிநின்

திருவுளத் தறிந்தது தானே

தவம்இலேன் எனினும் இச்சையின் படிநீ

தருதலே வேண்டும்இவ் விச்சை

நவைஇலா இச்சை எனஅறி விக்க

அறிந்தனன் நவின்றனன் எந்தாய்.

திருச்சிற்றம்பலம்

## 13. பிள்ளைப் பெரு விண்ணப்பம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3410

தனிப்பெருஞ் சோதித் தலைவனே எனது

தந்தையே திருச்சிற்றம் பலத்தே

கனிப்பெருங் கருணைக் கடவுளே அடியேன்

கருதிநின் றுரைக்கும்விண் ணப்பம்

இனிப்புறும் நினது திருவுளத் தடைத்தே

எனக்கருள் புரிகநீ விரைந்தே

இனிச்சிறு பொழுதும் தரித்திடேன் உன்றன்

இணைமலர்ப் பொன்னடி ஆணை.

1

3411

திரிபிலாப் பொருளே திருச்சிற்றம் பலத்தே

திகழ்கின்ற தெய்வமே அன்பர்

பரிவுறுந் தோறும் விரைந்துவந் தருளும்

பண்பனே பரையிடப் பாகா

பெரியபொற் சபையில் நடம்புரி கின்ற

பேரருட் சோதியே எனக்கே

உரியநல் தந்தை வள்ளலே அடியேன்

உரைக்கின்றேன் கேட்டருள் இதுவே.

2

3412

தானலா திறையும் உயிர்க்கசை வில்லாத்

தலைவனே திருச்சிற்றம் பலத்தே

வானலால் வேறொன் றிலைஎன உரைப்ப

வயங்கிய மெய்யின்ப வாழ்வே

ஊனலால் உயிரும் உளமும்உள் உணர்வும்

உவப்புற இனிக்குந்தெள் ளமுதே

ஞானநா டகஞ்செய் தந்தையே அடியேன்

நவில்கின்றேன் கேட்டருள் இதுவே.

3

3413

என்னுயிர்க் குயிராம் தெய்வமே என்னை

எழுமையும் காத்தருள் இறைவா

என்னுளத் தினிக்கும் தீஞ்சுவைக் கனியே

எனக்கறி வுணர்த்திய குருவே

என்னுடை அன்பே திருச்சிற்றம் பலத்தே

எனக்கருள் புரிந்தமெய் இன்பே

என்னைஈன் றெடுத்த தந்தையே அடியேன்

இசைக்கின்றேன் கேட்கஇம் மொழியே.

4

3414

கருணையார் அமுதே என்னுயிர்க் குயிரே

கனிந்தசிற் றம்பலக் கனியே

வருணமா மறையின் மெய்ப்பொருள் ஆகி

வயங்கிய வள்ளலே அன்பர்

தெருள்நிறை உளத்தே திகழ்தனித் தலைமைத்

தெய்வமே திருவருட் சிவமே

தருணம்என் ஒருமைத் தந்தையே தாயே

தரித்தருள் திருச்செவிக் கிதுவே.

5

3415

என்னைஆண் டருளி என்பிழை பொறுத்த

இறைவனே திருச்சிற்றம் பலத்தே

என்னைஆண் டஞ்சேல் உனக்குநல் அருளிங்

கீகுதும் என்றஎன் குருவே

என்னைவே றெண்ணா துள்ளதே உணர்த்தி

எனக்குளே விளங்குபே ரொளியே

என்னைஈன் றளித்த தந்தையே விரைந்திங்

கேற்றருள் திருச்செவிக் கிதுவே.

6

3416

இரும்புநேர் மனத்தேன் பிழையெலாம் பொறுத்தென்

இதயத்தில் எழுந்திருந் தருளி

விரும்புமெய்ப் பொருளாம் தன்னியல் எனக்கு

விளங்கிட விளக்கியுட் கலந்தே

கரும்புமுக் கனிபால் அமுதொடு செழுந்தேன்

கலந்தென இனிக்கின்றோய் பொதுவில்

அரும்பெருஞ் சோதி அப்பனே உளத்தே

அடைத்தருள் என்மொழி இதுவே.

7

3417

மலத்திலே கிடந்தேன் தனையெடுத் தருளி

மன்னிய வடிவளித் தறிஞர்

குலத்திலே பயிலுந் தரமுமிங் கெனக்குக்

கொடுத்துளே விளங்குசற் குருவே

பலத்திலே சிற்றம் பலத்திலே பொன்னம்

பலத்திலே அன்பர்தம் அறிவாம்

தலத்திலே ஓங்கும் தலைவனே எனது

தந்தையே கேட்கஎன் மொழியே.

8

3418

விண்டபோ தகரும் அறிவரும் பொருளே

மெய்யனே ஐயனே உலகில்

தொண்டனேன் தன்னை அடுத்தவர் நேயர்

சூழ்ந்தவர் உறவினர் தாயர்

கொண்டுடன் பிறந்தோர் அயலவர் எனும்இக்

குறிப்பினர் முகங்களில் இளைப்பைக்

கண்டபோ தெல்லாம் மயங்கிஎன் னுள்ளம்

கலங்கிய கலக்கம்நீ அறிவாய்.

9

3419

சீர்த்தசிற் சபைஎன் அப்பனே எனது

தெய்வமே என்பெருஞ் சிறப்பே

ஆர்த்தஇவ் வுலகில் அம்மையர் துணைவர்

அடுத்தவர் உறவினர் நேயர்

வேர்த்தமற் றயலார் பசியினால் பிணியால்

மெய்யுளம் வெதும்பிய வெதுப்பைப்

பார்த்தபோ தெல்லாம் பயந்தென துள்ளம்

பதைத்ததுன் உளம்அறி யாதோ.

10

3420

பரைத்தனி வெளியில் நடம்புரிந் தருளும்

பரமனே அரும்பெரும் பொருளே

தரைத்தலத் தியன்ற வாழ்க்கையில் வறுமைச்

சங்கடப் பாவியால் வருந்தி

நரைத்தவர் இளைஞர் முதலினோர் எனையோர்

நண்பன்என் றவரவர் குறைகள்

உரைத்தபோ தெல்லாம் நடுங்கிஎன் னுள்ளம்

உடைந்ததுன் உளம்அறி யாதோ.

11

3421

அன்னையே அப்பா திருச்சிற்றம் பலத்தென்

ஐயனே இவ்வுல கதிலே

பொன்னையே உடையார் வறியவர் மடவார்

புகலும்ஆ டவர்இவர் களுக்குள்

தன்னையே அறியாப் பிணியினால் ஆவி

தளர்கின்றார் தருணம்ஈ தெனவே

சொன்னபோ தெல்லாம் பயந்துநான் அடைந்த

சோபத்தை நீஅறி யாயோ.

12

3422

உண்டதோ றெல்லாம் அமுதென இனிக்கும்

ஒருவனே சிற்சபை உடையாய்

விண்டபே ருலகில் அம்மஇவ் வீதி

மேவும்லூர் அகத்திலே ஒருவர்

ஒண்டுயிர் மடிந்தார் அலறுகின் றார்என்

றொருவரோ டொருவர்தாம் பேசிக்

கொண்டபோ தெல்லாம் கேட்டென துள்ளம்

குலைநடுங் கியதறிந் திலையோ.

13

3423

காவிநேர் கண்ணாள் பங்கனே296 தலைமைக்

கடவுளே சிற்சபை தனிலே

மேவிய ஒளியே இவ்வுல கதில்ஊர்

வீதிஆ திகளிலே மனிதர்

ஆவிபோ னதுகொண் டுறவினர் அழுத

அழுகுரல் கேட்டபோ தெல்லாம்

பாவியேன் உள்ளம் பகீர்என நடுங்கிப்

பதைத்ததுன் உளம்அறி யாதோ.

14

296. காவியல் கருணை வடிவனே - முதற் பதிப்பு, பொ. சு. பதிப்பு.

3424

நாதனே என்னை நம்பிய மாந்தர்

ஞாலத்தில் பிணிபல அடைந்தே

ஏதநேர்ந் திடக்கண் டையகோ அடியேன்

எய்திய சோபமும் இளைப்பும்

ஓதநேர் உள்ள நடுக்கமும் திகைப்பும்

உற்றபேர் ஏக்கமா திகளும்

தீதனேன் இன்று நினைத்திட உள்ளம்

திடுக்கிடல் நீஅறிந் திலையோ.

15

3425

கற்றவர் உளத்தே கரும்பினில் இனிக்கும்

கண்ணுதற் கடவுளே என்னைப்

பெற்றதாய் நேயர் உறவினர் துணைவர்

பெருகிய பழக்கமிக் குடையோர்

மற்றவர் இங்கே தனித்தனி பிரிந்து

மறைந்திட்ட தோறும்அப் பிரிவை

உற்றுநான் நினைக்குந் தோறும்உள் நடுங்கி

உடைந்தனன் உடைகின்றேன் எந்தாய்.

16

3426

என்றும்நா டுறுவோர்க் கின்பமே புரியும்

எந்தையே என்றனைச் சூழ்ந்தே
நன்றுநா டியநல் லோர்உயிர்ப் பிரிவை
நாயினேன் கண்டுகேட் டுற்ற
அன்றுநான் அடைந்த நடுக்கமுந் துயரும்
அளவிலை அளவிலை அறிவாய்
இன்றவர் பிரிவை நினைத்திடுந் தோறும்
எய்திடும் துயரும்நீ அறிவாய்.

17

3427

நிலைபுரிந் தருளும் நித்தனே உலகில்
நெறியலா நெறிகளில் சென்றே
கொலைபுரிந் திட்ட கொடியவர் இவர்என்
றயலவர் குறித்தபோ தெல்லாம்
உலைபுரிந் திடுவெந் தீவயிற் றுள்ளே
உற்றென நடுநடுக் குற்றே
துலைபுரிந்297 தோடிக் கண்களை மூடித்
துயர்ந்ததும் நீஅறிந் ததுவே.

18

297. தொலைபுரிந்து முதற்பதிப்பு, பொ.சு., ச.மு.க.

3428

ஓர்ந்தஉள் ளகத்தே நிறைந்தொளிர் கின்ற

ஒருவனே உலகியல் அதிலே

மாந்தர்கள் இறப்பைக் குறித்திடும் பறையின்

வல்லொலி கேட்டபோ தெல்லாம்

காந்திஎன் உள்ளம் கலங்கிய கலக்கம்

கடவுள்நீ யேஅறிந் திடுவாய்

ஏந்தும்இவ் வுலகில் இறப்பெனில் எந்தாய்

என்னுளம் நடுங்குவ தியல்பே.

19

3429

மறைமுடி வயங்கும் ஒருதனித் தலைமை

வள்ளலே உலகர சாள்வோர்

உறைமுடி208 வாள்கொண் டொருவரை ஒருவர்

உயிரறச் செய்தனர் எனவே

தறையுறச் சிறியேன் கேட்டபோ தெல்லாம்

தளர்ந்துள நடுங்கிநின் றயர்ந்தேன்

இறையும்இவ் வுலகில் கொலைஎனில் எந்தாய்

என்னுளம் நடுங்குவ தியல்பே.

20

208. உறைஉறு - முதற்பதிப்பு, பொ.சு., ச. மு. க.

3430

தாய்மொழி குறித்தே கணக்கிலே மற்றோர்

தாய்க்குநால் என்பதை இரண்டாய்

வாய்மொழி வஞ்சம் புகன்றனன் வரைந்தேன்

நடுங்கினேன் நினைத்ததை மனத்தே

தூய்மொழி நேயர் நம்பினோர் இல்லில்

சூழ்ந்தனன் நினைத்தது துயர்ந்தேன்

காய்மொழி புகன்றேன் பொய்மொழி புகன்றேன்

கலங்கினேன் அதுநினைத் தெந்தாய்.

21

3431

எட்டரும் பொருளே திருச்சிற்றம் பலத்தே

இலகிய இறைவனே உலகில்

பட்டினி உற்றோர் பசித்தனர் களையால்

பரதவிக் கின்றனர் என்றே

ஒட்டிய பிறரால் கேட்டபோ தெல்லாம்

உளம்பகீர் எனநடுக் குற்றேன்

இட்டஇவ் வுலகில் பசிஎனில் எந்தாய்

என்னுளம் நடுங்குவ தியல்பே.

22

3432

பல்லிகள் பலவா யிடத்தும்உச் சியினும்

பகரும்நேர் முதற்பல வயினும்

சொல்லிய தோறும் பிறர்துயர் கேட்கச்

சொல்கின் றவோஎனச் சூழ்ந்தே

மெல்லிய மனம்நொந் திளைத்தனன் கூகை

வெங்குரல் செயுந்தொறும் எந்தாய்209

வல்லியக் குரல்கேட் டயர்பசுப் போல

வருந்தினேன் எந்தைநீ அறிவாய்.

23

209. எந்தாய் கூகை வெங்குரல் செயுந்தோறும் - முதற்பதிப்பு, பொ.சு.,பி. இரா.

3433

காக்கைகள் கூவக் கலங்கினேன் பருந்தின்

கடுங்குரல் கேட்டுளங் குலைந்தேன்

தாக்கிய ஆந்தை குரல்செயப் பயந்தேன்

சாக்குரல் பறவையால் தளர்ந்தேன்

வீக்கிய வேறு கொடுஞ்சகு னஞ்செய்

வீக்களால் மயங்கினேன் விடத்தில்210

ஊக்கிய பாம்பைக் கண்டபோ துள்ளம்

ஒடுங்கினேன் நடுங்கினேன் எந்தாய்.

24

210. விடத்தின் - ச. மு. க.

3434

வேறுபல் விடஞ்செய் உயிர்களைக் கண்டு

வெருவினேன் வெய்யநாய்க் குழுவின்

சீறிய குரலோ டழுகுரல் கேட்டுத்

தியங்கினேன் மற்றைவெஞ் சகுனக்

கூறதாம் விலங்கு பறவைஊர் வனவெங்

கோள்செயும்211 ஆடவர் மடவார்

ஊறுசெய் கொடுஞ்சொல் இவைக்கெலாம் உள்ளம்

உயங்கினேன் மயங்கினேன் எந்தாய்.

25

211. செறும் - பி. இரா. பதிப்பு.

3435

நிறமுறு விழிக்கீழ்ப் புறத்தொடு தோளும்

நிறைஉடம் பிற்சில உறுப்பும்

உறவுதோல் தடித்துத் துடித்திடுந் தோறும்

உன்னிமற் றவைகளை அந்தோ

பிறர்துயர் காட்டத் துடித்தவோ என்று

பேதுற்று மயங்கிநெஞ் சுடைந்தேன்

நறுவிய துகிலில் கறைஉறக் கண்டே

நடுங்கினேன் எந்தைநீ அறிவாய்.

26

3436

மங்கையர் எனைத்தாம் வலிந்துறுந் தோறும்

மயங்கிநாம் இவரொடு முயங்கி

இங்குளங் களித்தால் களித்தவர்க் குடனே

இன்னல்உற் றிடும்நமக் கின்னல்

தங்கிய பிறர்தம் துயர்தனைக்212 காண்டல்

ஆகும்அத் துயருறத் தரியேம்

பங்கமீ தெனவே எண்ணிநான் உள்ளம்

பயந்ததும் எந்தைநீ அறிவாய்.

27

212. துயர்களை - ச. மு. க.

3437

வலிந்தெனை அழைக்கும் மடந்தையர் தெருவில்

மறைந்துவந் தடுத்தபின் நினைந்தே

மலிந்திவர் காணில் விடுவர்அன் றிவரால்

மயங்கிஉள் மகிழ்ந்தனம் எனிலோ

நலிந்திடு பிறர்தந் துயர்தனைக் கண்டே

நடுங்குற வரும்எனப் பயந்தே

மெலிந்துடன் ஒளித்து வீதிவே றொன்றின்

மேவினேன் எந்தைநீ அறிவாய்.

28

3438

களிப்புறு சுகமாம் உணவினைக் கண்ட
காலத்தும் உண்டகா லத்தும்
நெளிப்புறு மனத்தோ டஞ்சினேன் எனைத்தான்
நேர்ந்தபல் சுபங்களில் நேயர்
அளிப்புறு விருந்துண் டமர்களன் றழைக்க
அவர்களுக் கன்பினோ டாங்கே
ஒளிப்புறு வார்த்தை உரைத்தயல் ஒளித்தே
பயத்தொடும் உற்றனன் எந்தாய்.

29

3439

இன்புறும் உணவு கொண்டபோ தெல்லாம்
இச்சுகத் தால்இனி யாது
துன்புறுங் கொல்லோ என்றுளம் நடுங்கிச்
சூழ்வெறு வயிற்றொடும் இருந்தேன்
அன்பிலே அன்பர் கொடுத்தவை எல்லாம்
ஐயகோ213 தெய்வமே இவற்றால்
வன்புறச் செய்யேல் என்றுளம் பயந்து
வாங்கியுண் டிருந்தனன் எந்தாய்.

30

213. ஐயவோ - படிவேறுபாடு. ஆ. பா.

3440

உற்றதா ரணியில் எனக்குல குணர்ச்சி
உற்றநாள் முதல்ஒரு சிலநாள்
பெற்றதாய் வாட்டம் பார்ப்பதற் கஞ்சிப்
பேருண வுண்டனன் சிலநாள்
உற்றவர் நேயர் அன்புளார் வாட்டம்
உறுவதற் கஞ்சினேன் உண்டேன்
மற்றிவை அல்லால் சுகஉணாக் கொள்ள
மனநடுங் கியதுநீ அறிவாய்.

31

3441

தொழுந்தகை உடைய சோதியே அடியேன்
சோம்பலால் வருந்திய தோறும்
அழுந்தஎன் உள்ளம் பயந்ததை என்னால்
அளவிடற் கெய்துமோ பகலில்
விழுந்துறு தூக்கம் வரவது தடுத்தும்
விட்டிடா வன்மையால் தூங்கி
எழுந்தபோ தெல்லாம் பயத்தொடும் எழுந்தேன்
என்செய்வேன் என்செய்வேன் என்றே.

32

3442

அந்தமோ டாதி இல்லதோர் பொதுவில்

அரும்பெருஞ் சோதியே அடியேன்

சொந்தமோ அறியேன் பகலிர வெல்லாம்

தூக்கமே கண்டனன் தூக்கம்

வந்தபோ தெல்லாம் பயத்தொடு படுத்தேன்

மற்றுநான் எழுந்தபோதெல்லாம்

தொந்தமாம் பயத்தால் சிவசிவ தூக்கம்

தொலைவதெக் காலம்என் றெழுந்தேன்.

33

3443

உடையஅம் பலத்தில் ஒருவனே என்றன்

உயிர்க்குயிர் ஆகிய ஒளியே

கடையன்நான் நனவில் நடுங்கிய நடுக்கம்

கணக்கிலே சிறிதுறும் கனவில்

இடையுறு நடுக்கம் கருதவும் சொலவும்

எண்ணவும் எழுதவும் படுமோ

நடையுறு சிறியேன் கனவுகண் டுள்ளம்

நடுங்கிடா நாளும்ஒன் றுளதோ.

34

3444

பகலிர வடியேன் படுத்தபோ தெல்லாம்

தூக்கமாம் பாவிவந் திடுமே

இகலுறு கனவாம் கொடியவெம் பாவி

எய்துமே என்செய்வோம் என்றே

உகலுற உள்ளே நடுங்கிய நடுக்கம்

உன்னுளம் அறியுமே எந்தாய்

நகலுறச் சிறியேன் கனவுகண் டுள்ளம்

நடுங்கிடா நாளும்ஒன் றுளதோ.

35

3445

தொகுப்புறு சிறுவர் பயிலுங்கால் பயிற்றும்

தொழிலிலே வந்தகோ பத்தில்

சகிப்பிலா மையினால் அடித்தனன் அடித்த

தருணம்நான் கலங்கிய கலக்கம்

வகுப்புற நினது திருவுளம் அறியும்

மற்றுஞ்சில் உயிர்களில் கோபம்

மிகப்புகுந் தடித்துப் பட்டபா டெல்லாம்

மெய்யநீ அறிந்ததே அன்றோ.

36

3446

ஒடித்தஇவ் வுலகில் சிறுவர்பால் சிறிய

உயிர்கள்பால் தீமைகண் டாங்கே

அடித்திடற் கஞ்சி உளைந்தனன் என்னால்

ஆற்றிடாக் காலத்தில் சிறிதே

பொழித்துநான் பயந்த பயமெலாம் உனது

புந்தியில் அறிந்ததே எந்தாய்

வெடித்தவெஞ் சினம்என் உளமுறக் கண்டே

வெதும்பிய நடுக்கம்நீ214 அறிவாய்.

37

214. நடுக்கமும் - பழிவேறுபாடு. ஆ. பா.

3447

கோபமே வருமோ காமமே வருமோ

கொடியமோ கங்களே வருமோ

சாபமே அனைய தடைமதம் வருமோ

தாமதப் பாவிவந் திடுமோ

பாபமே புரியும் லோபமே வருமோ

பயனில்மாற் சரியம்வந் திடுமோ

தாபஆங் கார மேஉறு மோஎன்

றையநான் தளர்ந்ததும் அறிவாய்.

38

3448

காமமா மதமாங் காரமா திகள்என்

கருத்தினில் உற்றபோ தெல்லாம்

நாமம்ஆர் உளத்தோ டையவோ நான்தான்

நடுங்கிய நடுக்கம்நீ அறிவாய்

சேமமார் உலகில் காமமா திகளைச்

செறிந்தவர் தங்களைக் கண்டே

ஆமைபோல் ஒடுங்கி அடங்கினேன் அதுவும்

ஐயநின் திருவுளம் அறியும்.

39

3449

கருத்துவே றாகிக் கோயிலில் புகுந்துன்

காட்சியைக் கண்டபோ தெல்லாம்

வருத்தமே அடைந்தேன் பயத்தொடும் திரும்பி

வந்துநொந் திளைத்தனன் எந்தாய்

நிருத்தனே நின்னைத் துதித்தபோ தெல்லாம்

நெகிழ்ச்சிஇல் லாமையால் நடுங்கிப்

பருத்தஎன் உடம்பைப் பார்த்திடா தஞ்சிப்

படுத்ததும் ஐயநீ அறிவாய்.

40

3450

புன்புலால் உடம்பின் அசுத்தமும் இதனில்

புகுந்துநான் இருக்கின்ற புணர்ப்பும்

என்பொலா மணியே எண்ணிநான் எண்ணி

ஏங்கிய ஏக்கம்நீ அறிவாய்

வன்புலால் உண்ணும் மனிதரைக் கண்டு
மயங்கிஉள் நடுங்கிஆற் றாமல்
என்பெலாம் கருக இளைத்தனன் அந்த
இளைப்பையும் ஐயநீ அறிவாய்.

41

3451

இந்தவிர் சடைஎம் இறைவனே என்னோ
டியல்கலைத் தருக்கஞ்செய் திடவே
வந்தவர் தம்மைக் கண்டபோ தெல்லாம்
மனம்மிக நடுங்கினேன் அறிவாய்
சந்தியுற் றொருகால் படித்தசாத் திரத்தைத்
தமியனேன் மீளவுங் கண்டே
நொந்ததும் உலகப் படிப்பில்என் உள்ளம்
நொந்ததும் ஐயநீ அறிவாய்.

42

3452

முனித்தவெவ் வினையோ நின்னருட் செயலோ
தெரிந்திலேன் மோகமே லின்றித்
தனித்தனி ஒருசார் மடந்தையர் தமக்குள்
ஒருத்தியைக் கைதொடச் சார்ந்தேன்
குனித்தமற் றவரைத் தொட்டனன் அன்றிக்

கலப்பிலேன் மற்றிது குறித்தே
பனித்தனன் நினைத்த தோறும்உள் உடைந்தேன்
பகர்வதென் எந்தைநீ அறிவாய்.

43

3453

பதியனே பொதுவில் பரமநா டகஞ்செய்
பண்பனே நண்பனே உலகில்
ஓதியனேன் பிறர்பால் உரத்தவார்த் தைகளால்
ஒருசில வாதங்கள் புரிந்தே
மதியிலா மையினால் அகங்கரித் ததன்பின்
வள்ளல்உன் அருளினால் அறிந்தே
விதியைநான் நொந்து நடுங்கிய தெல்லாம்
மெய்யனே நீஅறிந் ததுவே.

44

3454

அருளினை அளிக்கும் அப்பனே உலகில்
அன்புளார் வலிந்தெனக் கீந்த
பொருளினை வாங்கிப் போனபோ தெல்லாம்
புழுங்கிய புழுக்கம்நீ அறிவாய்
மருளும்அப் பொருளைச் சாலகத் தெறிந்து
மனமிக இளைத்ததும் பொருளால்

இருளுரும் எனநான் உளம்நடுங் கியதும்
எந்தைநின் திருவுளம் அறியும்.

45

3455

பொருளிலே உலகம் இருப்பதா தலினால்
புரிந்துநாம் ஒருவர்பால் பலகால்
மருவினால் பொருளின் இச்சையால் பலகால்
மருவுகின் றான்எனக் கருதி
வெருவுவர் எனநான் அஞ்சிஎவ் விடத்தும்
மேவிலேன் எந்தைநீ அறிவாய்
ஒருவும்அப் பொருளை நினைத்தபோ தெல்லாம்
உவட்டினேன் இதுவும்நீ அறிவாய்.

46

3456

தகைத்தபே ருலகில் ஐயனே அடியேன்
தடித்தஉள் ளத்தொடு களித்தே
நகைத்தபோ தெல்லாம் நடுங்கினேன் இங்கே
நல்லவா கனங்களில் ஏறி
உகைத்தபோ தெல்லாம் நடுங்கினேன் விரைந்தே
ஓட்டிய போதெலாம் பயந்தேன்
பகைத்தபோ தயலார் பகைகளுக் கஞ்சிப்

பதுங்கினேன் ஒதுங்கினேன் எந்தாய்.

47

3457

சகப்புற வாழ்வைப் பார்த்திடில் கேட்கில்

சஞ்சலம் உறும்எனப் பயந்தே

நகர்புறத் திருக்குந் தோட்டங்கள் தோறும்

நண்ணியும் பிறவிடத் தலைந்தும்

பகற்பொழு தெல்லாம் நாடொறுங் கழித்தேன்

பகலன்றி இரவும்அப் படியே

மிகப்பல விடத்தும் திரிந்தனன் அடியேன்

விளம்பலென் நீஅறிந் ததுவே.

48

3458

உருவுள மடவார் தங்களை நான்கண்

ணுற்றபோ துளநடுக் குற்றேன்

ஒருவுளத் தவரே வலிந்திட வேறோர்

உவளகத் தொளித்தயல் இருந்தேன்

கருவுளச் சண்டைக் கூக்குரல் கேட்ட

காலத்தில் நான்உற்ற கலக்கம்

திருவுளம் அறியும் உரத்தசொல் எனது

செவிபுகில் கனல்புகு வதுவே.

49

3459

பண்ணிகா ரங்கள் பொசித்தஅப் போதும்

பராக்கிலே செலுத்திய போதும்

எண்ணிய மடவார் தங்களை விழைந்தே

இசைந்தனு பவித்தஅப் போதும்

நண்ணிய தயிலம் முழுக்குற்ற போதும்

நவின்றசங் கீதமும் நடமும்

கண்ணுறக் கண்டு கேட்டஅப் போதும்

கலங்கிய கலக்கம்நீ அறிவாய்.

50

3460

நயந்தபொற் சரிகைத் துகில்எனக் கெனது

நண்பினர் உடுத்திய போது

பயந்தஅப் பயத்தை அறிந்தவர் எல்லாம்

பயந்தனர் வெய்யிலிற் கவிகை

வியந்துமேற் பிடித்த போதெலாம் உள்ளம்

வெருவினேன் கைத்துகில் வீசி

அயந்தரு தெருவில் நடப்பதற் கஞ்சி

அரைக்குமேல் வீக்கினன் எந்தாய்.

51

3461

கையுற வீசி நடப்பதை நாணிக்

கைகளைக் கட்டியே நடந்தேன்

மெய்யுறக் காட்ட வெருவிவெண் துகிலால்

மெய்எலாம் ஐயகோ215 மறைத்தேன்

வையமேல் பிறர்தங் கோலமும் நடையும்

வண்ணமும் அண்ணலே சிறிதும்

பையநான் ஊன்றிப் பார்த்ததே இல்லைப்

பார்ப்பனேல் பயமிகப் படைப்பேன்.

52

215. ஐயவோ - படிவேறுபாடு. ஆ. பா

3462

வைகிய நகரில் எழிலுடை மடவார்

வலிந்தெனைக் கைபிடித் திழுத்தும்

சைகைவே றுரைத்தும் சரசவார்த் தைகளால்

தனித்தெனைப் பலவிசை அறிந்தும்

பொய்கரைந் தாணை புகன்றுமேல் விழுந்தும்

பொருள்முத லியகொடுத் திசைத்தும்

கைகலப் பறியேன் நடுங்கினேன் அவரைக்

கடிந்ததும் இல்லைநீ அறிவாய்.

53

3463

எளியரை வலியார் அடித்தபோ தையோ

என்மனம் கலங்கிய கலக்கம்

தெளியநான் உரைக்க வல்லவன் அல்லேன்

திருவுளம் அறியுமே எந்தாய்216

களியரைக் கண்டு பயந்தஎன் பயந்தான்

கடலினும் பெரியது கண்டாய்

அளியர்பால் கொடியர் செய்தவெங் கொடுமை

அறிந்தஎன் நடுக்கம்ஆர் அறிவார்.



216. அறியும் எந்தாயே - பி. இரா. பதிப்பு.

3464

இரவிலே பிறர்தம் இடத்திலே இருந்த

இருப்பெலாம் கள்ளர்கள் கூடிக்

கரவிலே கவர்ந்தார் கொள்ளைஎன் றெனது

காதிலே விழுந்தபோ தெல்லாம்

விரவிலே217 நெருப்பை மெய்யிலே மூட்டி

வெதுப்பல்போல் வெதும்பினேன் எந்தாய்

உரவிலே ஒருவர் திடுக்கென வரக்கண்

டுளம்நடுக் குற்றனன் பலகால்.

217. விரைவிலே - முதற்பதிப்பு, பொ. சு., ச. மு. க., பி. இரா. பதிப்பு.

3465

உரத்தொரு வருக்கங் கொருவர் பேசியபோ

துள்ளகம் நடுங்கினேன் பலகால்

கரத்தினால் உரத்துக் கதவுதட் டியபோ

தையவோ கலங்கினேன் கருத்தில்

புரத்திலே அம்மா அப்பனே ஐயோ

எனப்பிறர் புகன்றசொல் புகுந்தே

தரத்தில்என் உளத்தைக் கலக்கிய கலக்கம்

தந்தைநீ அறிந்தது தானே.



3466

மண்ணினீள் நடையில் வந்தவெந் துயரை

மதித்துளம் வருந்திய பிறர்தம்

கண்ணினீர் விடக்கண் டையவோ நானும்

கண்ணினீர் விட்டுளங் கவன்றேன்

நண்ணிநின் றொருவர் அசப்பிலே218 என்னை

அழைத்தபோ தடியனேன் எண்ணா

தெண்ணியா துற்ற தோஎனக் கலங்கி

ஏன்எனல் மறந்தனன் எந்தாய்.

57

218. அசைப்பிலே - படிவேறுபாடு. ஆ. பா.

3467

தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால்

சிலுகுறும்219 என்றுளம் பயந்தே

நாட்டிலே சிறிய ஊர்ப்புறங் களிலே

நண்ணினேன் ஊர்ப்புறம் அடுத்த

காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க்

களத்திலே திரிந்துற்ற இளைப்பை

ஏட்டிலே எழுத முடியுமோ இவைகள்

எந்தைநீ அறிந்தது தானே.

58

219. சிறுகுறும் - முதற்பதிப்பு, பொ. சு., ச.மு. க. பதிப்பு.

3468

என்புடை வந்தார் தம்முகம் நோக்கி

என்கொலோ என்கொலோ இவர்தாம்

துன்புடை யவரோ இன்புடை யவரோ

சொல்லுவ தென்னையோ என்றே

வன்புடை மனது கலங்கிஅங் கவரை

வாஎனல் மறந்தனன் எந்தாய்

அன்புடை220 யவரைக் கண்டபோ தெல்லாம்

என்கொலோ என்றயர்ந் தேனே.

59

220. இன்புடை - ச.மு க. பதிப்பு.

3469

காணுறு பசுக்கள் கன்றுக ளாதி

கதறிய போதெலாம் பயந்தேன்

ஏணுறு மாடு முதல்பல விருகம்221

இளைத்தவை கண்டுளம் இளைத்தேன்

கோணுறு கோழி முதல்பல பறவை

கூவுதல் கேட்டுளங் குலைந்தேன்

வீணுறு கொடியர் கையிலே வாளை

தீர்த்தல்கண் டென்என வெருண்டேன்.

60

221. மிருகம் - முதற்பதிப்பு, பொ. சு., ச.மு.க., பி. இரா. பதிப்பு.

3470

பிதிர்ந்தமண் உடம்பை மறைத்திட வலியார்

பின்முன்நோக் காதுமேல் நோக்கி

அதிர்ந்திட நடந்த போதெலாம் பயந்தேன்

அவர்புகன் றிட்டதீ மொழிகள்

பொதிந்திரு செவியில் புகுந்தொறும் பயந்தேன்

புண்ணியா நின்துதி எனும்லூர்

முதிர்ந்ததீங் கனியைக் கண்டிலேன் வேர்த்து

முறிந்தகாய் கண்டுளம் தளர்ந்தேன்.

61

3471

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்

வாடினேன் பசியினால் இளைத்தே

வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த

வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்

நீடிய பிணியால் வருந்துகின் றோர்என்

நேர்உறக் கண்டுளந் துடித்தேன்

ஈடின்மா222 னிகளாய் ஏழைக ளாய்நெஞ்

சிளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன்.

62

222. ஈடு - ஒப்பு, முதற் பதிப்பு.

3472

நலிதரு சிறிய தெய்வமென் றையோ

நாட்டிலே பலபெயர் நாட்டிப்

பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்

பலிக்கடா முதலிய உயிரைப்

பொலிவுறக் கொண்டே போகவும் கண்டே

புந்திநொந் துளநடுக் குற்றேன்

கலியுறு சிறிய தெய்வவெங் கோயில்

கண்டகா லத்திலும் பயந்தேன்.

63

3473

துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்

தொடங்கிய போதெலாம் பயந்தேன்

கண்ணினால் ஐயோ பிறஉயிர் பதைக்கக்

கண்டகா லத்திலும் பதைத்தேன்

மண்ணினில் வலையும் தூண்டிலும் கண்ணி

வகைகளும் கண்டபோ தெல்லாம்

எண்ணிஎன் உள்ளம் நடுங்கிய நடுக்கம்

எந்தைநின் திருவுளம்223 அறியும்.

64

223. திருவருள் - முதற் பதிப்பு, பொ. சு. பதிப்பு.

3474

நடுநிலை இல்லாக் கூட்டத்தைக் கருணை

நண்ணிடா அரையரை நாளும்

கெடுநிலை நினைக்கும் சிற்றதி காரக்

கேடரைப் பொய்யலால் கிளத்தாப்

படுநிலை யவரைப் பார்த்தபோ தெல்லாம்

பயந்தனன் சுத்தசன் மார்க்கம்

விடுநிலை உலக நடைஎலாங் கண்டே

வெருவினேன் வெருவினேன் எந்தாய்.

65

3475

ஓங்கிய திருச்சிற் றம்பல முடைய

ஒருதனித் தலைவனே என்னைத்

தாங்கிய தாயே தந்தையே குருவே

தயாநிதிக் கடவுளே நின்பால்

நீங்கிய மனத்தார் யாவரே எனினும்

அவர்தமை நினைத்தபோ தெல்லாம்

தேங்கிய உள்ளம் பயந்தனன் அதுநின்

திருவுளம் அறியுமே எந்தாய்.

66

3476

காட்டுயர் அணைமேல் இருக்கவும் பயந்தேன்

காலின்மேல் கால்வைக்கப் பயந்தேன்

பாட்டயல் கேட்கப் பாடவும் பயந்தேன்

பஞ்சணை படுக்கவும் பயந்தேன்

நாட்டிய உயர்ந்த திண்ணைமேல் இருந்து

நன்குறக் களித்துக் கால்கீழே

நீட்டவும் பயந்தேன் நீட்டிப்பே சுதலை

நினைக்கவும் பயந்தனன் எந்தாய்.

67

3477

தலைநெறி ஞான சுத்தசன் மார்க்கம்

சார்ந்திட முயலுறா தந்தோ

கலைநெறி உலகக் கதியிலே கருத்தைக்

கனிவுற வைத்தனர் ஆகிப்

புலைநெறி விரும்பி னார்உல குயிர்கள்

பொதுஎனக் கண்டிரங் காது

கொலைநெறி நின்றார் தமக்குளம் பயந்தேன்

எந்தைநான் கூறுவ தென்னே.

68

3478

இவ்வணஞ் சிறியேற் குலகியல் அறிவிங்

கெய்திய நாளது தொடங்கி

நைவணம் இற்றைப் பகல்வரை அடைந்த

நடுக்கமும் துன்பமும் உரைக்க

எவ்வணத் தவர்க்கும் அலகுறா224 தெனில்யான்

இசைப்பதென் இசைத்ததே அமையும்

செவ்வணத் தருணம் இதுதலை வாநின்

திருவுளம் அறிந்ததே எல்லாம்.

69

224. அலகுறாது - குறைவுபடாது. முதற் பதிப்பு.

3479

தரைத்தலத் தெனைநீ எழுமையும் பிரியாத்
தம்பிரான் அல்லையோ மனத்தைக்
கரைத்துளே புகுந்தென் உயிரினுட் கலந்த
கடவுள்நீ அல்லையோ எனைத்தான்
இரைத்திவ ணளித்தோர் சிற்சபை விளங்கும்
எந்தைநீ அல்லையோ நின்பால்
உரைத்தல்என் ஒழுக்கம் ஆதலால் உரைத்தேன்
நீஅறி யாததொன் றுண்டோ .

70

3480

கைதலத் தோங்கும் கனியின்225 என் னுள்ளே
கனிந்தஎன் களைகண்நீ அலையோ
மெய்தலத் தகத்தும் புறத்தும்விட் டகலா
மெய்யன்நீ அல்லையோ எனது
பைதல்தீர்த் தருளுந் தந்தைநீ அலையோ
பரிந்துநின் திருமுன்விண் ணப்பம்
செய்தல்என் ஒழுக்கம் ஆதலால் செய்தேன்
திருவுளம் தெரிந்ததே226 எல்லாம்.

71

225. கனியில் - பி. இரா. பதிப்பு.

226. அறிந்ததே - முதற்பதிப்பு, பொ. சு., ச. மு. க. பதிப்பு.

3481

இன்னவா றடியேன் அச்சமுந் துயரும்

எய்திநின் றிளைத்தனன் அந்தோ

துன்னஆ ணவமும் மாயையும் வினையும்

சூழ்ந்திடும் மறைப்பும்இங் குனைத்தான்

உன்னவா சற்றே உரைக்கவா ஒட்டேம்

என்பவால் என்செய்வேன் எனது

மன்னவா ஞான மன்றவா எல்லாம்

வல்லவா இதுதகு மேயோ.

72

3482

எள்ளலாம் பயத்தால் துயரினால் அடைந்த

இளைப்பெலாம் இங்குநான் ஆற்றிக்

கொள்ளவே அடுத்தேன் மாயையா திகள்என்

கூடவே அடுத்ததென் அந்தோ

வள்ளலே எனது வாழ்முதற் பொருளே

மன்னவா நின்னலால் அறியேன்

உள்ளல்வே றிலைஎன் உடல்பொருள்ஆவி

உன்னதே என்னதன் றெந்தாய்.

73

3483

என்சுதந் தரம்இலர் எட்டுணை யேனும்

இல்லையே எந்தைஎல் லாம்உன்

தன்சுதந் தரமே அடுத்தஇத் தருணம்

தமியனேன் தனைப்பல துயரும்

வன்சுமை மயக்கும் அச்சமும் மறைப்பும்

மாயையும் வினையும்ஆ ணவமும்

இன்சுவைக் கனிபோல் உண்கின்ற தழகோ

இவைக்கெலாம் நான்இலக் கலவே.

74

3484

அறிவொரு சிறிதிங் கறிந்தநாள் முதல்என்

அப்பனே நினைமறந் தறியேன்

செறிவிலாச் சிறிய பருவத்தும் வேறு

சிந்தைசெய் தறிந்திலேன் உலகில்

பிறிதொரு பிழையுஞ் செய்திலேன் அந்தோ

பிழைத்தனன் ஆயினும்என்னைக்

குறியுறக் கொண்டே குலங்குறிப் பதுநின்

குணப்பெருங் குன்றினுக் கழகோ.

75

3485

ஐயநான் ஆடும் பருவத்திற் றானே

அடுத்தநன் னேயனோ டப்பா

பொய்யுல காசை எனக்கிலை உனக்கென்

புகல்என அவனும்அங் கிசைந்தே

மெய்யுறத் துறப்போம் என்றுபோய் நினது

மெய்யருள் மீட்டிட மீண்டேம்

துய்யநின் உள்ளம் அறிந்ததே எந்தாய்

இன்றுநான் சொல்லுவ தென்னே.

76

3486

தேர்விலாச் சிறிய பருவத்திற் றானே

தெய்வமே தெய்வமே எனநின்

சார்வுகொண் டெல்லாச் சார்வையும் விடுத்தேன்

தந்தையும் குருவும்நீ என்றேன்

பேர்விலா துளத்தே வந்தவா பாடிப்

பிதற்றினேன் பிறர்மதிப் பறியேன்

ஓர்விலாப் பிழைகள் ஒன்றையும் அறியேன்

இன்றுநான் உரைப்பதிங் கென்னே.

77

3487

பொறித்துனைப் பதியாப் பெற்றநாள் அடிமை

புரிந்தது போலவே இன்றும்

செறித்துநிற் கின்றேன் அன்றிஎன் உரிமைத்

தெய்வமும் குருவும்மெய்ப் பொருளும்

நெறித்தநற் றாயுந் தந்தையும் இன்பும்

நேயமும் நீஎனப் பெற்றே

குறித்தறிந் ததன்பின் எந்தைநான் ஏறிக்

குதித்ததென் கூறுக நீயே.

78

3488

பரிந்துனைப் பதியாப் பெற்றநாள் அடிமை

பணிபுரிந் தாங்கிது வரையில்

புரிந்துறு கின்றேன் அன்றிஎன் உயிரும்

பொருளும்என் புணர்ப்பும்என் அறிவும்

விரிந்தஎன் சுகமும் தந்தையுங் குருவும்

மெய்ம்மையும் யாவும்நீ என்றே

தெரிந்தபின் அந்தோ வேறுநான் செய்த

செய்கைஎன் செப்புக நீயே.

79

3489

மைதவழ் விழிஎன் அம்மைஓர் புடைகொள்227

வள்ளலே நின்னைஅன் பாலும்

வைதவர் தமைநான் மதித்திலேன் அன்பால்

வாழ்த்துகின் றோர்தமை வாழ்த்தி

உய்தவர் இவர்என் றுறுகின்றேன் அல்லால்

உன்அருள் அறியநான் வேறு

செய்ததொன் றிலையே செய்தனன் எனினும்

திருவுளத் தடைத்திடல் அழகோ.

89

227. மைதவழ் முகில்போன் றருள்பொழி கருணை - முதற் பதிப்பு,

பொ. சு., ச. மு. க. 'மைதவழ் விழியென் னம்மையோர் புடைகொள் வள்ளலே' என்றும் பாடம்

எனச் ச.மு.க. அடிக்குறிப்பிடுகிறார்.

3490

ஆரணம் உரைத்த வரைப்பெலாம் பலவாம்

ஆகமம் உரைவரைப் பெல்லாம்

காரண நினது திருவருட் செங்கோல்

கணிப்பருங் களிப்பிலே ஓங்கி

நாரணர் முதலோர் போற்றிட விளங்கி

நடக்கின்ற பெருமைநான் அறிந்தும்

தாரணி யிடைஇத் துன்பமா திகளால்
தனையனேன் தளருதல் அழகோ.

81

3491

பார்முதல் நாதப் பதிஎலாங் கடந்தப்
பாலும்அப் பாலும்அப் பாலும்
ஓர்முதல் ஆகித் திருவருட் செங்கோல்
உரைப்பரும் பெருமையின் ஓங்கிச்
சீர்பெற விளங்க நடத்திமெய்ப் பொதுவில்
சிறந்தமெய்த் தந்தைநீ இருக்க
வார்கடல் உலகில் அச்சமா திகளால்
மகன்மனம் வருந்துதல் அழகோ.

82

3492

ஆர்ந்தவே தாந்தப் பதிமுதல் யோகாந்
தப்பதி வரையும்அப் பாலும்
தேர்ந்தருள் ஆணைத் திருநெறிச் செங்கோல்
செல்லலூர் சிற்சபை இடத்தே
சார்ந்தபே ரின்பத் தனியர சியற்றும்
தந்தையே தனிப்பெருந் தலைவா
பேர்ந்திடேன் எந்த விதத்திலும் நினக்கே

பிள்ளைநான் வருந்துதல் அழகோ.

83

3493

சித்திகள் எல்லாம் வல்லதோர் ஞானத்

திருச்சபை தன்னிலே திகழும்

சத்திகள் எல்லாம் சத்தர்கள் எல்லாம்

தழைத்திடத் தனிஅருட் செங்கோல்

சத்திய ஞானம் விளக்கியே நடத்தும்

தனிமுதல் தந்தையே தலைவா

பித்தியல் உடையேன் எனினும்நின் தனக்கே

பிள்ளைநான் வாடுதல் அழகோ.

84

3494

சாற்றுபே ரண்டப் பகுதிகள் அனைத்தும்

தனித்தனி அவற்றுளே நிரம்பித்

தோற்றுமா பிண்டப் பகுதிகள் அனைத்தும்

சோதியால் விளக்கிஆ னந்த

ஆற்றிலே நனைத்து வளர்த்திடும் பொதுவில்

அரும்பெருந் தந்தையே இன்பப்

பேற்றிலே விழைந்தேன் தலைவநின் தனக்கே

பிள்ளைநான் பேதுறல் அழகோ.

85

3495

சிறந்தத் துவங்கள் அனைத்துமாய் அலவாய்த்
திகழ்ஒளி யாய்ஒளி எல்லாம்
பிறங்கிய வெளியாய் வெளிஎலாம் விளங்கும்
பெருவெளி யாய்அதற் கப்பால்
நிறைந்தசிற் சபையில் அருளர சியற்றும்
நீதிநல் தந்தையே இனிமேல்
பிறந்திடேன் இறவேன் நின்னைவிட் டகலேன்
பிள்ளைநான் வாடுதல் அழகோ.

86

3496

எண்ணிய எல்லாம் வல்லபே ரருளாம்
இணையிலாத் தனிநெடுஞ் செங்கோல்
நண்ணிய திருச்சிற் றம்பலத் தமர்ந்தே
நடத்தும்ஓர் ஞானநா யகனே
தண்ணருள் அளிக்கும் தந்தையே உலகில்
தனையன்நான் பயத்தினால் துயரால்
அண்ணிய மலங்கள் ஐந்தினால் இன்னும்
ஐயகோ வாடுதல் அழகோ.

87

3497

கலைஎலாம் புகலும் கதிஎலாம் கதியில்

காண்கின்ற காட்சிகள் எல்லாம்

நிலையெலாம் நிலையில் நேர்ந்தனு பவஞ்செய்

நிறைவெலாம் விளங்கிடப் பொதுவில்

மலைவிலாச் சோதி அருட்பெருஞ் செங்கோல்

வாய்மையான் நடத்தும்லூர் தனிமைத்

தலைவனே எனது தந்தையே நினது

தனையன்நான் தளருதல் அழகோ.

88

3498

ஆதியே நடுவே அந்தமே எனும்இவ்

வடைவெலாம் இன்றிஒன் றான

சோதியே வடிவாய்த் திருச்சிற்றம் பலத்தே

தூயபே ரருள்தனிச் செங்கோல்

நீதியே நடத்தும் தனிப்பெருந் தலைமை

நிருத்தனே ஒருத்தனே நின்னை

ஓதியே வழுத்தும் தனையன்நான் இங்கே

உறுகணால் தளருதல் அழகோ.

89

3499

அத்தனே திருச்சிற் றம்பலத் தரசே
அரும்பெருஞ் சோதியே அடியார்
பித்தனே எனினும் பேயனே எனினும்
பெரிதருள் புரிதனித் தலைமைச்
சித்தனே எல்லாம் செய்திட வல்ல
செல்வனே சிறப்பனே சிவனே
சுத்தனே நினது தனையன்நான் மயங்கித்
துயர்ந்துளம் வாடுதல் அழகோ.

90

3590

உற்றதோர் திருச்சிற் றம்பலத் தோங்கும்
ஒருதனித் தந்தையே நின்பால்
குற்றம்நான் புரிந்திங் கறிந்திலேன் குற்றம்
குயிற்றினேன் என்னில்அக் குற்றம்
இற்றென அறிவித் தறிவுதந் தென்னை
இன்புறப் பயிற்றுதல் வேண்டும்
மற்றய லார்போன் றிருத்தலோ தந்தை
வழக்கிது நீஅறி யாயோ.

91

3591

குற்றமோ குணமோ நான்அறி யேன்என்

குறிப்பெலாம் திருச்சிற்றம் பலத்தே

உற்றதா தலினால் உலகியல் வழக்கில்

உற்றன228 மற்றென தலவே

தெற்றென229 அருட்கே குற்றம்என் பதுநான்

செய்திடில் திருத்தலே அன்றி

மற்றய லார்போன் றிருப்பதோ தந்தை

மரபிது நீஅறி யாயோ.

92

228. உற்றிடின் - முதற்பதிப்பு; பொ. சு., ச. மு. க. பதிப்பு.

229. தெற்றென - விரைந்து. முதற்பதிப்பு.

3592

மாயையால் வினையால் அரிபிர மாதி

வானவர் மனமதி மயங்கித்

தீயகா ரியங்கள் செய்திடில் அந்தோ

சிறியனேன் செய்வது புதிதோ

ஆயினும் தீய இவைஎன அறியேன்

அறிவித்துத் திருத்துதல் அன்றி

நீயிவண் பிறர்போன் றிருப்பது தந்தை

நெறிக்கழ கல்லவே எந்தாய்.

93

3593

கருணையும் சிவமே பொருள்எனக் காணும்
காட்சியும் பெறுகமற் றெல்லாம்
மருள்நெறி எனநீ எனக்கறி வித்த
வண்ணமே பெற்றிருக் கின்றேன்
இருள்நெறி மாயை வினைகளால் கலக்கம்
எய்திய தென்செய்வேன் எந்தாய்
தெருள்நிலை இன்றிக் கலங்கினேன் எனினும்
சிறுநெறி பிடித்ததொன் றிலையே.

94

3504

கலங்கிய போதும் திருச்சிற்றம் பலத்தில்
கருணையங் கடவுளே நின்பால்
இலங்கிய நேயம் விலங்கிய திலையே
எந்தைநின் உளம்அறி யாதோ
மலங்கிய மனத்தேன் புகல்வதென் வினையால்
மாயையால் வரும்பிழை எல்லாம்
அலங்கும்என் பிழைகள் அல்லஎன் றுன்னோ
டடிக்கடி அறைந்தனன் ஆண்டே.

95

3505

இரும்பினும் கொடிய மனஞ்செயும் பிழையும்

என்பிழை அன்றெனப் பலகால்

விரும்பிநின் அடிக்கே விண்ணப்பித் திருந்தேன்

வேறுநான் செய்ததிங் கென்னே

அரும்பொனே திருச்சிற் றம்பலத் தமுதே

அப்பனே என்றிருக் கின்றேன்

துரும்பினுஞ் சிறியேன் புகல்வதென் நினது

தூயதாம் திருவுளம் அறியும்.

96

3596

வருமுயிர் இரக்கம் பற்றியே உலக

வழக்கில்என் மனஞ்சென்ற தோறும்

வெருவிநின் அடிக்கே விண்ணப்பித் திருந்தேன்

விண்ணப்பஞ் செய்கின்றேன் இன்றும்

உருவஎன் உயிர்தான் உயிர்இரக் கந்தான்

ஒன்றதே இரண்டிலை இரக்கம்

ஒருவில்என் உயிரும் ஒருவும்என் உள்ளத்

தொருவனே நின்பதத் தாணை.

97

3597

தலைவர்கள் எல்லாம் தனித்தனி வணங்கும்

தலைவனே இன்றும்என் உளமும்

மலைவில்என் அறிவும் நானும்இவ் வுலக

வழக்கிலே உயிர்இரக் கத்தால்

இலகுகின் றனம்நான் என்செய்வேன் இரக்கம்

என்னுயிர் என்னவே றிலையே

நிலைபெறும் இரக்கம் நீங்கில்என் உயிரும்

நீங்கும்நின் திருவுளம் அறியும்.

98

3598

ஆதலால் இரக்கம் பற்றிநான் உலகில்

ஆடலே அன்றிஓர் விடயக்

காதலால் ஆடல் கருதிலேன் விடயக்

கருத்தெனக் கில்லைஎன் றிடல்இப்

போதலால் சிறிய போதும்உண் டதுநின்

புந்தியில் அறிந்தது தானே

ஈதலால் வேறோர் தீதென திடத்தே

இல்லைநான் இசைப்பதென் எந்தாய்.

99

3599

என்னையும் இரக்கந் தன்னையும் ஒன்றாய்

இருக்கவே இசைவித் திவ்வுலகில்

மன்னிவாழ் வுறவே வருவித்த கருணை

வள்ளல்நீ நினக்கிது விடயம்

பன்னல்என் அடியேன் ஆயினும் பிள்ளைப்

பாங்கினால் உரைக்கின்றேன் எந்தாய்

இன்னவா றெனநீ சொன்னவா றியற்றா

திருந்ததோர் இறையும்இங் கிலையே.

100

3510

உறுவினை தவிர்க்கும் ஒருவனே உலகில்

ஓடியும் ஆடியும் உழன்றும்

சிறுவர்தாம் தந்தை வெறுப்பஆர்க் கின்றார்

சிறியனேன் ஒருதின மேனும்

மறுகிநின் றாடி ஆர்த்ததிங் குண்டோ

நின்பணி மதிப்பலால் எனக்குச்

சிறுவிளை யாட்டில் சிந்தையே இலைநின்

திருவுளம் அறியுமே எந்தாய்.

101

3511

தந்தையர் வெறுப்ப மக்கள்தாம் பயனில்

சழக்குரை யாடிவெங் காமச்

சிந்தைய ராகித் திரிகின்றார் அந்தோ

சிறியனேன் ஒருதின மேனும்

எந்தைநின் உள்ளம் வெறுப்பநின் பணிவிட்

டிவ்வுல கியலில்அவ் வாறு

தெந்தன என்றே திரிந்ததுண் டேயோ

திருவுளம் அறியநான் அறியேன்.

102

3512

அம்புவி தனிலே தந்தையர் வெறுப்ப

அடிக்கடி அயலவர் உடனே

வம்புறு சண்டை விளைக்கின்றார் சிறுவர்

வள்ளலே நின்பணி விடுத்தே

இம்பர்இவ் வுலகில் ஒருதின மேனும்

ஏழையேன் பிறரொடு வெகுண்டே

வெம்புறு சண்டை விளைத்ததுண் டேயோ

மெய்யநின் ஆணைநான் அறியேன்.

103

3513

வள்ளல்இவ் வுலகில் தந்தையர் வெறுப்ப

மக்கள்தாம் ஒழுக்கத்தை மறந்தே

கள்ளருந் துதல்சூ தாடுதல் காமக்

கடைதொறும் மயங்குதல் பொய்யே

விள்ளுதல் புரிவார் ஐயகோ அடியேன்

மெய்யநின் திருப்பணி விடுத்தே
எள்ளிஅவ் வாறுபுரிந்ததொன் றுண்டோ
எந்தைநின் ஆணைநான் அறியேன்.

104

3514

மலைவிலாத் திருச்சிற் றம்பலத் தமர்ந்த
வள்ளலே உலகினில் பெற்றோர்
குலைநடுக் குறவே கடுகடுத் தோடிக்
கொடியதீ நெறியிலே மக்கள்
புலைகொலை களவே புரிகின்றார் அடியேன்
புண்ணிய நின்பணி விடுத்தே
உலையஅவ் வாறு புரிந்ததொன் றுண்டோ
உண்பதத் தாணைநான் அறியேன்.

105

3515

தனிப்பெருஞ் சோதித் தந்தையே உலகில்
தந்தையர் பற்பல காலும்
இனிப்புறு மொழியால் அறிவுற மக்கட்
கேற்கவே பயிற்றிடுந் தோறும்
பனிப்புற ஓடிப் பதுங்கிடு கின்றார்
பண்பனே என்னைநீ பயிற்றத்

தினைத்தனை யேனும் பதுங்கிய துண்டோ
திருவுளம் அறியநான் அறியேன்.

106

3516

தன்னைநே ரில்லாத் தந்தையே உலகில்
தந்தையர் தங்களை அழைத்தே
சொன்னசொல் மறுத்தே மக்கள்தம் மனம்போம்
சூழலே போகின்றார் அடியேன்
என்னைநீ உணர்த்தல் யாதது மலையின்
இலக்கெனக் கொள்கின்றேன் அல்லால்
பின்னைஓர் இறையும் மறுத்ததொன் றுண்டோ
பெரியநின் ஆணைநான் அறியேன்.

107

3517

போற்றுவார் போற்றும் புனிதனே மக்கள்
பொருந்துதம் தந்தையர் தமையே
வேற்றுவாழ் வடைய வீடுதா பணந்தா
மெல்லிய சரிகைவத் திரந்தா
ஏற்றஆ பரணந் தாஎனக் கேட்டே
இரங்குவார் இவைகுறித் தடியேன்
தேற்றுவாய் நின்னைக் கேட்டதொன் றுண்டோ

திருவுளம் அறியநான் அறியேன்.

108

3518

குணம்புரி எனது தந்தையே உலகில்

கூடிய மக்கள்தந் தையரைப்

பணம்புரி காணி பூமிகள் புரிநற்

பதிபுரி ஏற்றபெண் பார்த்தே

மணம்புரி எனவே வருத்துகின் றார்என்

மனத்திலே ஒருசிறி தேனும்

எணம்புரிந் துணைநான் வருத்திய துண்டோ

எந்தைநின் ஆணைநான் அறியேன்.

109

3519

இகத்திலே எனைவந் தாண்டமெய்ப் பொருளே

என்னுயிர்த் தந்தையே இந்தச்

சகத்திலே மக்கள் தந்தையர் இடத்தே

தாழ்ந்தவ ராய்ப்புறங் காட்டி

அகத்திலே வஞ்சம் வைத்திருக் கின்றார்

ஐயவோ வஞ்சம்நின் அளவில்

முகத்திலே என்றன் அகத்திலே உண்டோ

முதல்வநின் ஆணைநான் அறியேன்.

110

3520

தன்மைகாண் பரிய தலைவனே எனது
தந்தையே சகத்திலே மக்கள்
வன்மைவார்த் தைகளால் தந்தையர் தம்மை
வைகின்றார் வள்ளலே மருந்தே
என்மனக் கனிவே என்னிரு கண்ணே
என்னுயிர்க் கிசைந்தமெய்த் துணையே
நின்மனம் வெறுப்பப் பேசிய துண்டோ
நின்பதத் தாணைநான் அறியேன்.

111

3521

ஒப்பிலா மணிஎன் அப்பனே உலகில்
உற்றிடு மக்கள்தந் தையரை
வைப்பில்வே றொருவர் வைதிடக் கேட்டு
மனம்பொறுத் திருக்கின்றார் அடியேன்
தப்பிலாய்230 நினைவே றுரைத்திடக் கேட்டால்
தரிப்பனோ தரித்திடேன் அன்றி
வெப்பில்என் உயிர்தான் தரிக்குமோ யாதாய்
விளையுமோ அறிந்திலேன் எந்தாய்.

112

239. தப்பிலா - முதற்பதிப்பு., பொ.சு., ச. மு. க. பதிப்பு.

3522

இத்தகை உலகில் இங்ஙனம் சிறியேன்

எந்தைநின் திருப்பணி விடுத்தே

சித்தம்வே றாகித் திரிந்ததே இலைநான்

தெரிந்தநாள் முதல்இது வரையும்

அத்தனே அரசே ஐயனே அமுதே

அப்பனே அம்பலத் தாடும்

சித்தனே சிவனே என்றென துளத்தே

சிந்தித்தே இருக்கின்றேன் இன்றும்.

113

3523

பொய்வகை மனத்தேன் என்னினும் எந்தாய்

பொய்யுல காசைசற் றறியேன்

நைவகை தவிரத் திருச்சிற்றம் பலத்தே

நண்ணிய மெய்ப்பொருள் நமது

கைவகைப் படல்எக் கணத்திலோ எனநான்

கருதினேன் கருத்தினை முடிக்கச்

செய்வகை அறியேன் என்செய்வேன் ஐயோ

தெய்வமே என்றிருக் கின்றேன்.

114

3524

அன்னையே என்றன் அப்பனே திருச்சிற்

றம்பலத் தமுதனே எனநான்

உன்னையே கருதி உன்பணி புரிந்திங்

குலகிலே கருணைஎன் பதுதான்

என்னையே நிலையாய் இருத்தஉள் வருந்தி

இருக்கின்றேன் என்உள மெலிவும்

மன்னும்என் உடம்பின் மெலிவும்நான் இருக்கும்

வண்ணமும் திருவுளம் அறியும்.

115

3525

பொய்படாப் பயனே பொற்சபை நடஞ்செய்

புண்ணியா கண்ணினுள் மணியே

கைபடாக் கனலே கறைபடா மதியே

கணிப்பருங் கருணையங் கடலே

தெய்வமே எனநான் நின்னையே கருதித்

திருப்பணி புரிந்திருக் கின்றேன்

மைபடா உள்ள மெலிவும்நான் இருக்கும்

வண்ணமும் திருவுளம் அறியும்.

116

3526

தன்னிகர் அறியாத் தலைவனே தாயே
தந்தையே தாங்குநற் றுணையே
என்னிறு கண்ணே என்னுயிர்க் குயிரே
என்னுடை எய்ப்பினில் வைப்பே
உன்னுதற் கினிய வொருவனே எனநான்
உன்னையே நினைத்திருக் கின்றேன்
மன்னும்என் உள்ள மெலிவும்நான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும்.

117

3527

திருவளர் திருஅம் பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந் திரத்திரு முறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உளத்திலே நின்று
காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவிஎன் உளத்தே நம்பிநான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும்.

118

3528

உவந்தென துளத்தே உணர்த்திய எல்லாம்

உறுமலை இலக்கென நம்பி

நிவந்ததோள் பணைப்ப மிகஉளங் களிப்ப

நின்றதும் நிலைத்தமெய்ப் பொருள்இப்

பவந்தனில் பெறுதல் சத்தியம் எனவே

பற்பல குறிகளால் அறிந்தே

சிவந்தபொன் மலைபோல் இருந்ததும் இந்நாள்

திகைப்பதும் திருவுளம் அறியும்.

119

3529

ஏய்ந்தபொன் மலைமேல் தம்பத்தில் ஏறி

ஏகவும் ஏகவும் நுணுகித்

தேய்ந்தபோ தடியேன் பயந்தவெம் பயத்தைத்

தீர்த்துமேல் ஏற்றிய திறத்தை

வாய்ந்துளே கருதி மலைஎனப் பணைத்தே

மனங்களிப் புற்றுமெய் இன்பம்

தோய்ந்துநின் றாடிச்சுழன்றதும் இந்நாள்

சுழல்வதும் திருவுளம் அறியும்.

120

3530

வாட்டமோ டிருந்த சிறியனேன் தனது

வாட்டமும் மாயையா திகளின்

ஈட்டமும் தவிர்க்கத் திருவுளத் திரங்கி

என்னைஓர் பொருள்என மதித்தே

தீட்டரும் புகழ்சேர் திருவடித் துணைகள்

செலுத்திய திருச்சிலம் பொலிநான்

கேட்டபோ திருந்த கிளர்ச்சியும் இந்நாள்

கிலேசமுந் திருவுளம் அறியும்.

121

3531

கற்றவர் கல்லார் பிறர்பிறர் குரல்என்

காதிலே கிடைத்தபோ தெல்லாம்

மற்றவர் தமக்கென் உற்றதோ அவர்தம்

மரபினர் உறவினர் தமக்குள்

உற்றதிங் கெதுவோ என்றுளம் நடுங்கி

ஓடிப்பார்த் தோடிப்பார்த் திரவும்

எற்றரு பகலும் ஏங்கிநான் அடைந்த

ஏக்கமுந் திருவுளம் அறியும்.

122

3532

கருணையம் பதிநங் கண்ணுள்மா மணிநம்

கருத்திலே கலந்ததெள் ளமுதம்

மருள்நெறி தவிர்க்கும் மருந்தெலாம் வல்ல

வள்ளல்சிற் றம்பலம் மன்னும்

பொருள்நிறை இன்பம் நம்மைஆண் டளித்த

புண்ணியம் வருகின்ற தருணம்

தருணம்இப் போதென் றெண்ணிநான் இருக்கும்

தன்மையும் திருவுளம் அறியும்.

123

3533

இமையவர் பிரமர் நாரணர் முதலோர்

எய்துதற் கரியபே ரின்பம்

தமைஅறிந் தவருட் சார்ந்தபே ரொளிநம்

தயாநிதி தனிப்பெருந் தந்தை

அமையும்நம் உயிர்க்குத் துணைதிருப் பொதுவில்

ஐயர் தாம் வருகின்ற சமயம்

சமயம்இப் போதென் றெண்ணிநான் இருக்கும்

தன்மையும் திருவுளம் அறியும்.

124

3534

அடியனேன் உள்ளம் திருச்சிற்றம் பலத்தென்

அமுதநின் மேல்வைத்த காதல்

நெடியஏழ் கடலில் பெரிதெனக் கிந்நாள்

நிகழ்கின்ற ஆவலும் விரைவும்

படியஎன் தன்னால் சொலமுடி யாது
பார்ப்பறப் பார்த்திருக் கின்றேன்
செடியனேன் இருக்கும் வண்ணங்கள் எல்லாம்
திருவுளங் கண்டதே எந்தாய்.

125

3535

பன்னிரண் டாண்டு தொடங்கிநான் இற்றைப்
பகல்வரை அடைந்தவை எல்லாம்
உன்னிநின் றுரைத்தால் உலப்புறா ததனால்
ஒருசில உரைத்தனன் எனினும்
என்னுளத் தகத்தும் புறத்தும்உட் புறத்தும்
இயல்புறப் புறத்தினும் விளங்கி
மன்னிய சோதி யாவும்நீ அறிந்த
வண்ணமே வகுப்பதென் நினக்கே.

126

3536

இதுவரை அடியேன் அடைந்தவெம் பயமும்
இடர்களும் துன்பமும் எல்லாம்
பொதுவளர் பொருளே பிறர்பொருட் டல்லால்
புலையனேன் பொருட்டல இதுநின்
மதுவளர் மலர்ப்பொற் பதத்துணை அறிய

வகுத்தனன் அடியனேன் தனக்கே
எதிலும்ஓர் ஆசை இலைஇலை பயமும்
இடரும்மற் றிலைஇலை எந்தாய்.

127

3537

என்னள விலையே என்னினும் பிறர்பால்
எய்திய கருணையால் எந்தாய்
உன்னுறு பயமும் இடருமென் தன்னை
உயிரொடும் தின்கின்ற தந்தோ
இன்னும்என் றனக்கிவ் விடரொடு பயமும்
இருந்திடில்231 என்உயிர் தரியா
தன்னையும் குருவும் அப்பனும் ஆன
அமுதனே அளித்தருள் எனையே.

128

231. இருக்கில் - பி. இரா. பதிப்பு.

3538

பயத்தொடு துயரும் மறைப்புமா மாயைப்
பற்றொடு வினையும்ஆ ணவமும்
கயத்தவன் மயக்கும் மருட்சியும் எனது
கருத்திலே இனிஒரு கணமும்
வியத்திடத் தரியேன் இவையெலாந் தவிர்த்துன்

மெய்யருள் அளித்திடல் வேண்டும்

உயத்தரு வாயேல் இருக்கின்றேன் இலையேல்

உயிர்விடு கின்றனன் இன்றே.

129

3539

ஐயநான் பயத்தால் துயரினால் அடைந்த

அடைவைஉள் நினைத்திடுந் தோறும்

வெய்யதீ மூட்டி விடுதல்232 ஒப் பதுநான்

மிகஇவற் றால்இளைத் திட்டேன்

வையமேல் இனிநான் இவைகளால் இளைக்க

வசமிலேன் இவைஎலாம் தவிர்த்தே

உய்யவைப் பாயேல் இருக்கின்றேன் இலையேல்

உயிர்விடு கின்றனன் இன்றே.

130

232. விடுத்தல் - முதற்பதிப்பு, பொ. சு.,ச. மு. க., பி. இரா. பதிப்பு.

3540

பயந்துயர் இடர்உள் மருட்சியா தியஇப்

பகைஎலாம் பற்றறத் தவிர்த்தே

நயந்தநின் அருளார்233 அமுதளித் தடியேன்

நாடிஈண் டெண்ணிய எல்லாம்

வியந்திடத் தருதல் வேண்டும்ஈ தெனது

விண்ணப்பம் நின்திரு உளத்தே

வயந்தரக் கருதித் தயவுசெய் தருள்க

வள்ளலே சிற்சபை வாழ்வே.

131

233. அருளாம் - ச. மு. க. பதிப்பு.

3541

என்னுயிர் காத்தல் கடன்உனக் கடியேன்

இசைத்தவிண் ணப்பம்ஏற் றருளி

உன்னுமென் உள்ளத் துறும்பயம் இடர்கள்

உறுகண்மற் றிவைஎலாம் ஒழித்தே

நின்னருள் அமுதம் அளித்தென தெண்ணம்

நிரப்பியாட் கொள்ளுதல் வேண்டும்

மன்னுபொற் சபையில் வயங்கிய மணியே

வள்ளலே சிற்சபை வாழ்வே.

132

3542

பரிக்கிலேன் பயமும் இடரும்வெந் துயரும்

பற்றறத் தவிர்த்தருள் இனிநான்

தரிக்கிலேன் சிறிதும் தரிக்கிலேன் உள்ளம்

தரிக்கிலேன் தரிக்கிலேன் அந்தோ

புரிக்கிலே சத்தை அகற்றிஆட் கொள்ளும்

பொற்சபை அண்ணலே கருணை

வரிக்கணோர் மடந்தை பாகனே சிவனே234

வள்ளலே சிற்சபை வாழ்வே.

133

234. வரிக்கணோர் இன்ப வல்லியை மணந்த - முதற்பதிப்பு, பொ. சு., ச.மு.க. பதிப்பு.

திருச்சிற்றம்பலம்

## 14. மாயையின் விளக்கம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3543

திடுக்கற எனைத்தான் வளர்த்திடப் பரையாம்

செவிலிபாற் சேர்த்தனை அவளோ

எடுக்கவும் நினையாள் படுக்கவும் ஒட்டாள்

என்செய்வேன் இன்னும்என் னிடைப்பால்

மடுக்கநற் றாயும் வந்திலள் நீயும்

வந்தெனைப் பார்த்திலை அந்தோ

தடுக்கருங் கருணைத் தந்தையே தளர்ந்தேன்

தனையனேன் தளர்ந்திடல் அழகோ.

1

3544

தளர்ந்திடேல் மகனே என்றெனை எடுத்தோர்

தாய்கையில் கொடுத்தனை அவளோ

வளர்ந்திடா வகையே நினைத்தனள் போன்று

மாயமே புரிந்திருக் கின்றாள்

கிளர்ந்திட எனைத்தான் பெற்றநற் றாயும்

கேட்பதற் கடைந்திலன் அந்தோ

உளந்தரு கருணைத் தந்தையே நீயும்

உற்றிலை பெற்றவர்க் கழகோ.

3545

தாங்கஎன் தனைஓர் தாய்கையில் கொடுத்தாய்

தாயவள் நான்தனித் துணர்ந்து

தூங்கவும் ஒட்டாள் எடுக்கவும் துணியாள்

சூதையே நினைத்திருக் கின்றாள்

ஓங்குநற் றாயும் வந்திலாள் அந்தோ

உளந்தளர் வுற்றனன் நீயும்

ஈங்குவந் திலையேல் என்செய்கேன் இதுதான்

எந்தைநின் திருவருட் கழகோ.

3

3546

அத்தநீ எனைஓர் தாய்கையில் கொடுத்தாய்

ஆங்கவள் மகள்கையில் கொடுத்தாள்

நித்திய மகள்லூர் நீலிபாற் கொடுத்தாள்
நீலியோ தன்புடை ஆடும்
தத்துவ மடவார் தங்கையில் கொடுத்தாள்
தனித்தனி அவர்அவர் எடுத்தே
கத்தவெம் பயமே காட்டினர் நானும்
கலங்கினேன் கலங்கிடல் அழகோ.

4

3547

வாங்கிய செவிலி அறிவொடும் துயிற்ற
மகள்கையில் கொடுத்தனள் எனைத்தான்
ஈங்கிவள் கருத்தில் எதுநினைத் தனளோ
என்செய்வேன் என்னையே உணர்ந்து
தூங்கவும் ஒட்டாள் அழக்கழ கிள்ளித்
தொட்டிலும் ஆட்டிடு கின்றாள்
ஏங்குறு கின்றேன் பிள்ளைதன் அருமை
ஈன்றவர் அறிவரே எந்தாய்.

5

3548

வலத்திலே செவிலி எடுத்திடச் சோம்பி
மக்கள்பால் காட்டிவிட் டிருந்தாள்
மலத்திலே உழைத்துக் கிடந்தழல் கேட்டும்

வந்தெனை எடுத்திலார் அவரும்

இலத்திலே கூடி ஆடுகின் றனர்நான்

என்செய்வேன் என்னுடை அருமை

நிலத்திலே அவர்கள் அறிந்திலார் பெற்றோய்

நீயும்இங் கறிந்திலை யேயோ.

6

3549

தும்மினேன் வெதும்பித் தொட்டிலிற் கிடந்தே

சோர்ந்தழு திளைத்துமென் குரலும்

கம்மினேன் செவிலி அம்மிபோல் அசையாள்

காதுறக் கேட்டிருக் கின்றாள்

செம்மியே மடவார் கொம்மியே பாடிச்

சிரித்திருக் கின்றனர் அந்தோ

இம்மியே எனினும் ஈந்திடார் போல

இருப்பதோ நீயும்எந் தாயே.

7

3550

துருவிலா வயிரத் தொட்டிலே தங்கத்

தொட்டிலே பலஇருந் திடவும்

திருவிலாப் பொத்தைத் தொட்டிலிற் செவிலி

சிறியனைக் கிடத்தினள் எந்தாய்

பிரிவிலாத் தனிமைத் தலைவநீ பெற்ற

பிள்ளைநான் எனக்கிது பெறுமோ

கருவிலாய் நீஇத் தருணம்வந் திதனைக்

கண்டிடில் சகிக்குமோ நினக்கே.

8

3551

காய்ந்திடு மனத்தாள் போன்றனள் சிறிதும்

னிவிலாள் காமமா திகளாம்

பாய்ந்திடு வேடப் பயல்களால் எனக்குப்

பயம்புரி வித்தனள் பலகால்

தேய்ந்திடு மதிஎன் றெண்ணினாள் குறையாத்

திருமதி எனநினைந் தறியாள்

சாய்ந்தஇச் செவிலி கையிலே என்னைத்

தந்தது சாலும்எந் தாயே.

9

3552

ஞானஆ னந்த வல்லியாம் பிரியா

நாயகி யுடன்எழுந் தருளி

ஈனம்ஆர் இடர்நீத் தெடுத்தெனை அணைத்தே

இன்னமு தனைத்தையும் அருத்தி

ஊனம்ஒன் றில்லா தோங்குமெய்த் தலத்தில்

உறப்புரிந் தெனைப்பிரி யாமல்

வானமும் புவியும் மதிக்கவாழ்ந் தருள்க

மாமணி மன்றில்எந் தாயே.

10

திருச்சிற்றம்பலம்

## 15. அபயத் திறன்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3553

ஆடக மணிப்பொற் குன்றமே என்னை

ஆண்டுகொண் டருளிய பொருளே

வீடகத் தேற்றும் விளக்கமே விளக்கின்

மெய்யொளிக் குள்ளொளி வியப்பே

வாடகச் சிறியேன் வாட்டங்கள் எல்லாம்

தவிர்த்தருள் வழங்கிய மன்றில்

நாடகக் கருணை நாதனே உன்னை

நம்பினேன் கைவிடேல் எனையே.

1

3554

வட்டவான் சுடரே வளரொளி விளக்கே

வயங்குசிற் சோதியே அடியேன்

இட்டமே இட்டத் தியைந்துளே கலந்த

இன்பமே என்பெரும் பொருளே

கட்டமே தவிர்த்திங் கென்னைவாழ் வித்த

கடவுளே கனகமன் றகத்தே

நட்டமே புரியும் பேரரு ளரசே

நம்பினேன் கைவிடேல் எனையே.

2

3555

புல்லவா மனத்தேன் என்னினும் சமயம்

புகுதவா பொய்ந்நெறி ஒழுக்கம்

சொல்லவா பிறரைத் துதிக்கவா சிறிதோர்

சொப்பனத் தாயினும் நினையேன்

கல்லவா மனத்தோர் உறவையுங் கருதேன்

கனகமா மன்றிலே நடிக்கும்

நல்லவா எல்லாம் வல்லவா உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

3

3556

புண்படா உடம்பும் புரைபடா மனமும்

பொய்படா ஒழுக்கமும் பொருந்திக்

கண்படா திரவும் பகலும்நின் தனையே

கருத்தில்வைத் தேத்துதற் கிசைந்தேன்

உண்பனே எனினும் உடுப்பனே எனினும்

உலகரை நம்பிலேன் எனது

நண்பனே நலஞ்சார் பண்பனே உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

4

3557

புண்ணிலே புகுந்த கோல்எனத் துயரம்

புகுந்தெனைக் கலக்கிய போதும்

கண்ணிலே எனது கருத்திலே கலந்த

கருத்தனே நின்றனை அல்லால்

மண்ணிலே வயங்கும் வானிலே பிறரை

மதித்திலேன் மதிக்கின்றார் தமையும்

நண்ணிலேன் வேறொன் றெண்ணிலேன் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

5

3558

ஊன்பெறும் உயிரும் உணர்ச்சியும் அன்பும்

ஊக்கமும் உண்மையும் என்னைத்

தான்பெறு தாயும் தந்தையும் குருவும்

தனிப்பெருந் தெய்வமுந் தவமும்

வான்பெறு பொருளும் வாழ்வும்நற் றுணையும்

மக்களும் மனைவியும் உறவும்

நான்பெறு நண்பும் யாவும்நீ என்றே

நம்பினேன் கைவிடேல் எனையே.

6

3559

வாட்டமும் துயரும் அச்சமும் தவிர்த்தென்

வடிவமும் வண்ணமும் உயிரும்

தேட்டமும் நீயே கொண்டுநின் கருணைத்

தேகமும் உருவும்மெய்ச் சிவமும்

ஈட்டமும் எல்லாம் வல்லநின் னருட்பே

ரின்பமும் அன்பும்மெய்ஞ் ஞான

நாட்டமும் கொடுத்துக் காப்பதுன் கடன்நான்

நம்பினேன் கைவிடேல் எனையே.

7

3560

வம்பனேன் பிறர்போல் வையமும் வானும்

மற்றவும் மதித்திலேன் மதஞ்சார்

உம்பனேர் அகங்கா ரந்தவிர்ந் தெல்லா

உலகமும் வாழ்கவென் றிருந்தேன்

செம்பொனே கருணைத் தெய்வமே எல்லாம்

செயவல்ல சித்தனே சிவனே

நம்பனே ஞான நாதனே உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

8

3561

ஆயகால் இருந்தும் நடந்திட வலியில்

லாமையால் அழுங்குவார் எனஉண்

மேயகால் இருந்தும் திருவருள் உறலூர்

விருப்பிலா மையின்மிக மெலிந்தேன்

தீயகான் விலங்கைத் தூயமா னிடஞ்செய்

சித்தனே சத்திய சபைக்கு

நாயகா உயிர்க்கு நயகா உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

9

3562

அற்றமும் மறைக்கும் அறிவிலா தோடி

ஆடிய சிறுபரு வத்தே

குற்றமும் குணங்கொண் டென்னைஆட் கொண்ட

குணப்பெருங் குன்றமே குருவே

செற்றமும் விருப்பும் தீர்த்தமெய்த் தவர்தம்

சிந்தையில் இனிக்கின்ற தேனே

நற்றக வுடைய நாதனே உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

10

3563

படம்புரி பாம்பிற் கொடியனேன் கொடிய

பாவியிற் பாவியேன் தீமைக்

கிடம்புரி மனத்தேன் இரக்கம்ஒன் றில்லேன்

என்னினும் துணைஎந்த விதத்தும்

திடம்புரி நின்பொன் அடித்துணை எனவே

சிந்தனை செய்திருக் கின்றேன்

நடம்புரி கருணை நாயகா உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

11

3564

படித்தனன் உலகப் படிப்பெலாம் மெய்ந்நூல்

படித்தவர் தங்களைப் பார்த்து

நொடித்தனன் கடிந்து நோக்கினேன் காம

நோக்கினேன் பொய்யர்தம் உறவு

பிடித்தனன் உலகில் பேதையர் மயங்கப்

பெரியரில் பெரியர்போல் பேசி

நடித்தனன் எனினும் நின்னடித் துணையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

12

3565

பஞ்சுநேர் உலகப் பாட்டிலே மெலிந்த

பாவியேன் சாவியே போன

புஞ்செயே அனையேன் புழுத்தலைப் புலையேன்

பொய்யெலாம் பூரித்த வஞ்ச

நெஞ்சினேன் பாப நெறியினேன் சினத்தில்

நெடியனேன் கொடியனேன் காம

நஞ்சினேன் எனினும் அஞ்சினேன் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

13

3566

கயந்துளே உவட்டும் காஞ்சிரங் காயில்

கடியனேன் காமமே கலந்து

வியந்துளே மகிழும் வீணனேன் கொடிய

வெகுளியேன் வெய்யனேன் வெறியேன்

மயர்ந்துளேன் உலக வாழ்க்கையை மனையை

மக்களை ஒக்கலை மதித்தே

நயந்துளேன் எனினும் பயந்துளேன் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

14

3567

ஓடினேன் பெரும்பே ராசையால் உலகில்

ஊர்தொறும் உண்டியே உடையே

தேடினேன் காமச் சேற்றிலே விழுந்து

தியங்கினேன் மயங்கினேன் திகைத்து

வாடினேன் சிறிய வாரியான் மகிழ்ந்தேன்

வஞ்சமே பொருளென மதித்து

நாடினேன் எனினும் பாடினேன் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

15

3568

காட்டிலே திரியும் விலங்கினிற் கடையேன்

கைவழக் கத்தினால் ஒடிந்த

ஓட்டிலே எனினும் ஆசைவிட் டறியேன்

உலுத்தனேன் ஒருசிறு துரும்பும்

ஏட்டிலே எழுதிக் கணக்கிட்ட கொடியேன்

எச்சிலும் உமிழ்ந்திடேன் நரக

நாட்டிலே பெரியேன் என்னினும் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

16

3569

துனித்தவெம் மடவார் பகல்வந்த போது

துறவியின் கடுகடுத் திருந்தேன்

தனித்திர வதிலே வந்தபோ தோடித்

தழுவினேன் தடமுலை விழைந்தேன்

இனித்தசொல் புகன்றேன் என்பினைக் கறித்தே

இடர்ப்பட்ட நாயென இளைத்தேன்

நனித்தவ றுடையேன் என்னினும் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

17

3570

தார்த்தட முலையார் நான்பல ரொடுஞ்சார்

தலத்திலே வந்தபோ தவரைப்

பார்த்திலேன் வார்த்தை பகர்ந்திலேன் தவசுப்

பாதகப் பூனைபோல் இருந்தேன்

பேர்த்துநான் தனித்த போதுபோய் வலிந்து

பேசினேன் வஞ்சரிற் பெரியேன்

நார்த்திடர் உளத்தேன் என்னினும் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

18

3571

பெண்மையே விழைந்தேன் அவர்மனம் அறியேன்

பேய்எனப் பிடித்தனன் மடவார்க்
குண்மையே புகல்வான் போன்றவர் தமைத்தொட்
டுவந்தகங் களித்தபொய் யுளத்தேன்
தண்மையே அறியேன் வெம்மையே உடையேன்
சாத்திரம் புகன்றுவாய் தடித்தேன்
நண்மையே அடையேன் என்னினும் உனையே
நம்பினேன் கைவிடேல் எனையே.

19

3572

வன்மையில் பொருள்மேல் இச்சைஇல் லவன்போல்
வாதிபோல் வார்த்தைகள் வழங்கி
அன்மையில் பிறர்பால் உளவினால் பொருளை
அடிக்கடி வாங்கிய கொடியேன்
இன்மையுற் றவருக் குதவிலேன் பொருளை
எனைவிடக் கொடியருக் கீந்தேன்
நன்மையுற் றறியேன் என்னினும் உனையே
நம்பினேன் கைவிடேல் எனையே.

20

3573

கட்டமே அறியேன் அடுத்தவர் இடத்தே
காசிலே ஆசையில் லவன்போல்

பட்டமே காட்டிப் பணம்பறித் துழன்றேன்

பகல்எலாம் தவசிபோல் இருந்தேன்

இட்டமே இரவில் உண்டயல் புணர்ந்தே

இழுதையிற் றூங்கினேன் களித்து

நட்டமே புரிந்தேன் என்னினும் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

21

3574

காணியே கருதும் கருத்தினைப் பிறர்க்குக்

காட்டிடா தம்பெலாம் அடங்கும்

தூணியே எனச்சார்ந் திருந்தனன் சோற்றுச்

சுகத்தினால் சோம்பினேன் உதவா

ஏணியே அனையேன் இரப்பவர்க் குமியும்

ஈந்திலேன் ஈந்தவன் எனவே

நாணிலேன் உரைத்தேன் என்னினும் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

22

3575

அடுத்தவர் மயங்கி மதித்திட நினைத்தேன்

அடிக்கடி பொய்களே புனைந்தே

எடுத்தெடுத் துரைத்தேன் எனக்கெதிர் இலைஎன்

றிகழ்ந்தனன் அகங்கரித் திருந்தேன்
கொடுத்தவர் தமையே மிகவுப சரித்தேன்
கொடாதவர் தமைஇகழ்ந் துரைத்தேன்
நடுத்தய வறியேன் என்னினும் உனையே
நம்பினேன் கைவிடேல் எனையே.

23

3576

எளியவர் விளைத்த நிலமெலாங் கவரும்
எண்ணமே பெரிதுளேன் புன்செய்க்
களியுணும் மனையில் சர்க்கரை கலந்து
காய்ச்சுபால் கேட்டுண்ட கடையேன்
துளியவர்க் குதவேன் விருப்பிலான் போலச்
சுவைபெறச் சுவைத்தநாக் குடையேன்
நளிர்எனச் சுழன்றேன் என்னினும் உனையே
நம்பினேன் கைவிடேல் எனையே.

24

3577

கொலைபல புரிந்தே புலைநுகர்ந் திருந்தேன்
கோடுறு குரங்கினிற் குதித்தே
அலைதரு மனத்தேன் அறிவிலேன் எல்லாம்
அறிந்தவன் போல்பிறர்க் குரைத்தேன்

மலைவுறு சமய வலைஅகப் பட்டே
மயங்கிய மதியினேன் நல்லோர்
நலையல எனவே திரிந்தனன் எனினும்
நம்பினேன் கைவிடேல் எனையே.

25

3578

ஈயெனப் பறந்தேன் எறும்பென உழன்றேன்
எட்டியே எனமிகத் தழைத்தேன்
பேயெனச் சுழன்றேன் பித்தனே எனவாய்ப்
பிதற்றொடும் ஊர்தொறும் பெயர்ந்தேன்
காயெனக் காய்த்தேன் கடையென நடந்தேன்
கல்லெனக் கிடந்தனன் குரைக்கும்
நாயெனத் திரிந்தேன் என்னினும் உனையே
நம்பினேன் கைவிடேல் எனையே.

26

3579

ஒன்றியே உணவை உண்டுடல் பருத்த
ஊத்தையேன் நாத்தழும் புறவே
வென்றியே உரைத்து வினைகளே விளைத்த
வீணனேன் ஊர்தொறுஞ் சுழன்ற
பன்றியே அனையேன் கட்டுவார் அற்ற

பகடெனத் திரிகின்ற படிறேன்

நன்றியே அறியேன் என்னினும் உனையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

27

3580

சுவையெலாந் தவிர்ந்த வெறுமரம் அனையேன்

கள்ளனேன் கள்ளுண்ட கடியேன்

சுவையெலாம் விரும்பிச் சுழன்றதோர் கடையேன்

துட்டனேன் தீதெலாந் துணிந்தேன்

இவையெலாம் அந்நாள் உடையனோ அலனோ

இந்தநாள் இறைவநின் அருளால்

நவையெலாம் தவிர்ந்தேன் தூயனாய் நினையே

நம்பினேன் கைவிடேல் எனையே.

28

திருச்சிற்றம்பலம்

## 16. ஆற்ற மாட்டாமை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3581

இப்பார் முதல்எண் மூர்த்தமதாய்

இலங்கும் கருணை எங்கோவே

தப்பா யினதீர்த் தென்னையும்முன்

தடுத்தாட் கொண்ட தயாநிதியே

எப்பா லவரும் புகழ்ந்தேத்தும்

இறைவா எல்லாம் வல்லோனே

அப்பா அரசே இனிச்சிறிதும்

ஆற்ற மாட்டேன் கண்டாயே.

1

3582

புரைசேர் துயரப் புணரிமுற்றும்

கடத்தி ஞான பூரணமாம்

கரைசேர்த் தருளி இன்னமுதக்

கடலைக் குடிப்பித் திடல்வேண்டும்

உரைசேர் மறையின் முடிவிளங்கும்

ஒளிமா மணியே உடையானே

அரைசே அப்பா இனிச்சிறிதும்

ஆற்ற மாட்டேன் கண்டாயே.

2

3583

கண்ணார் அமுதக் கடலேஎன்

கண்ணே கண்ணுட் கருமணியே

தண்ணார் மதியே கதிர்பரப்பித்

தழைத்த சுடரே தனிக்கனலே

எண்ணா டரிய பெரியஅண்டம்

எல்லாம் நிறைந்த அருட்சோதி

அண்ணா அரசே இனிச்சிறிதும்

ஆற்ற மாட்டேன் கண்டாயே.

3

3584

பொய்யா தென்றும் எனதுளத்தே

பொருந்தும் மருந்தே புண்ணியனே

கையார்ந் திலங்கு மணியேசெங்

கரும்பே கனியே கடையேற்குச்

செய்யா உதவி செய்தபெருந்

தேவே மூவாத் தெள்ளமுதே

ஐயா அரசே இனிச்சிறிதும்

ஆற்ற மாட்டேன் கண்டாயே.

4

3585

இத்தா ரணியில் என்பிழைகள்

எல்லாம் பொறுத்த என்குருவே

நித்தா சிற்றம் பலத்தாடும்

நிருத்தா எல்லாஞ் செயவல்ல

சித்தா சித்தி புரத்தமர்ந்த

தேவே சித்த சிகாமணியே
அத்தா அரசே இனிச்சிறிதும்
ஆற்ற மாட்டேன் கண்டாயே.

5

3586

எம்மே தகவும் உடையவர்தம்
இதயத் தமர்ந்த இறையவனே
இம்மே தினியில் எனைவருவித்
திட்ட கருணை எம்மானே
நம்மே லவர்க்கும் அறிவரிய
நாதா என்னை நயந்தீன்ற
அம்மே அப்பா இனிச்சிறிதும்
ஆற்ற மாட்டேன்கண்டாயே.

6

3587

செப்பார் கலைகள் மொழிந்தபொருள்
திறங்கள் அனைத்துந் தெரிந்துதெளிந்
திப்பா ரிடைநின் புகழ்பாடு
கின்ற பெரிய ரின்மொழிப்பாட்
டொப்பாச் சிறியேன் புன்மொழிப்பாட்
டெல்லாம் உவந்த உடையானே

அப்பா அரசே இனிச்சிறிதும்
ஆற்ற மாட்டேன் கண்டாயே.

7

3588

துப்பார் கனகப் பொதுவில்நடத்
தொழிலால் உலகத் துயர்ஒழிக்கும்
வைப்பாம் இறைவா சிவகாம
வல்லிக் கிசைந்த மணவாளா
ஒப்பார் உயர்ந்தார் இல்லாத
ஒருவா எல்லாம் உடையானே
அப்பா அரசே இனிச்சிறிதும்
ஆற்ற மாட்டேன் கண்டாயே.

8

3589

ஒப்பா ருரைப்பார் நின்பெருமைக்
கெனமா மறைகள் ஓலமிடும்
துப்பார் வண்ணச் சுடரேமெய்ச்
சோதிப் படிக வண்ணத்தாய்
வெப்பா னவைதீர்த் தெனக்கமுத
விருந்து புரிதல் வேண்டும்என்றன்
அப்பா அரசே இனிச்சிறிதும்

ஆற்ற மாட்டேன் கண்டாயே.

9

3590

வெப்பார் உள்ளக் கலக்கமெலாம்

இற்றைப் பொழுதே விலக்கிஒழித்

திப்பா ரிடைஎன் கருத்தின்வண்ணம்

எல்லாம் விரைவின் ஈந்தருள்க

ஒப்பால் உரைத்த தன்றுண்மை

உரைத்தேன் கருணை உடையானே

அப்பா அரசே இனிச்சிறிதும்

ஆற்ற மாட்டேன் கண்டாயே.

10

திருச்சிற்றம்பலம்

17. வாதனைக் கழிவு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3591

பாழுது விடிந்த தினிச்சிறிதும்

பொறுத்து முடியேன் எனநின்றே

அழுது விழிகள் நீர்துளும்பக்

கூவிக் கூவி அயர்கின்றேன்

பழுது தவிர்க்கும் திருச்செவிக்குள்

பட்ட திலையோ பலகாலும்235

உழுது களைத்த மாடனையேன்

துணைவே றறியேன் உடையானே.

1

235. பலநாளும் - ச. மு. க. பதிப்பு.

3592

உடையாய் திருஅம் பலத்தாடல்

ஒருவா ஒருவா உலவாத

கொடையாய் எனநான் நின்றனையே

கூவிக் கூவி அயர்கின்றேன்

தடையா யினதீர்த் தருளாதே

தாழ்க்கில் அழகோ புலைநாயிற்

கடையாய்த் திரிந்தேன் கலங்குதல்சம்

மதமோ கருணைக் கருத்தினுக்கே.

2

3593

கருணைக் கருத்து மலர்ந்தெனது

கலக்க மனைத்துந் தவிர்த்தேஇத்

தருணத் தருளா விடில்அடியேன்

தரியேன் தளர்வேன் தளர்வதுதான்

அருணச் சுடரே நின்னருளுக்

கழகோ அழகென் றிருப்பாயேல்

தெருணற் பதஞ்சார் அன்பரெலாம்236

சிரிப்பார் நானும் திகைப்பேனே.

3

236. அடியரெலாம் - முதற்பதிப்பு, பொ. சு., ச. மு. க., பி. இரா.

3594

திகைப்பார் திகைக்க நான்சிறிதும்

திகையேன் எனநின் திருவடிக்கே

வகைப்பா மாலை சூட்டுகின்றேன்

மற்றொன் றறியேன் சிறியேற்குத்

தகைப்பா ரிடைஇத் தருணத்தே

தாராய் எனிலோ பிறரெல்லாம்

நகைப்பார் நகைக்க உடம்பினைவைத்

திருத்தல் அழகோ நாயகனே.

4

3595

நாயிற் கடையேன் கலக்கமெலாம்

தவிர்த்து நினது நல்லருளை

ஈயிற் கருணைப் பெருங்கடலே

என்னே கெடுவ தியற்கையிலே

தாயிற் பெரிதும்237 தயவுடையான்

குற்றம் புரிந்தோன் தன்னையும்லூர்

சேயிற் கருதி அணைத்தான்என்

றுரைப்பா ருனைத்தான் தெரிந்தோரே.

5

237. தாயிற் பெரிய - முதற்பதிப்பு, பொ. சு., பி. இரா.

3596

தெரிந்த பெரியர்க் கருள்புரிதல்

சிறப்பென் றுரைத்த தெய்வமறை

திரிந்த சிறியர்க் கருள்புரிதல்

சிறப்பிற் சிறப்பென் றுரைத்தனவே

புரிந்தம் மறையைப் புகன்றவனும்

நீயே என்றால் புண்ணியனே

விரிந்த மனத்துச் சிறியேனுக்

கிரங்கி அருளல் வேண்டாவோ.

6

3597

வேண்டார் உளரோ நின்னருளை

மேலோ ரன்றிக் கீழோரும்

ஈண்டார் வதற்கு வேண்டினரால்

இன்று புதிதோ யான்வேண்டல்

தூண்டா விளக்கே திருப்பொதுவிற்

சோதி மணியே ஆறொடுமூன்
றாண்டா வதிலே முன்னென்னை
ஆண்டாய் கருணை அளித்தருளே.

7

3598

அருளே வடிவாம் அரசேநீ
அருளா விடில்இவ் வடியேனுக்
கிருளே தொலைய அருளளிப்பார்
எவரே எல்லாம் வல்லோய்நின்
பொருளேய் வடிவிற் கலைஒன்றே
புறத்தும் அகத்தும் புணர்ந்தெங்குந்
தெருளே யுறஎத் தலைவருக்குஞ்
சிறந்த அருளாய்த் திகழ்வதுவே.

8

3599

திகழ்ந்தார் கின்ற திருப்பொதுவில்
சிவமே நின்னைத் தெரிந்துகொண்டு
புகழ்ந்தார் தம்மைப் பொறுத்திடவும்
புன்மை அறிவால் பொய்உரைத்தே
இகழ்ந்தேன் தனைக்கீழ் வீழ்த்திடவும்
என்னே புவிக்கிங் கிசைத்திலைநீ

அகழ்ந்தார் தமையும் பொறுக்களன

அமைத்தாய் எல்லாம் அமைத்தாயே.

9

3690

எல்லாம் வகுத்தாய் எனக்கருளில்

ரே தடுப்பார் எல்லாஞ்செய்

வல்லான் வகுத்த வண்ணம்என

மகிழ்வார் என்கண் மணியேஎன்

சொல்லா னவையும் அணிந்துகொண்ட

துரையே சோதித் திருப்பொதுவில்

நல்லாய் கருணை நடத்தரசே

தருணம் இதுநீ நயந்தருளே.

10

3691

நயந்த கருணை நடத்தரசே

ஞான அமுதே நல்லோர்கள்

வியந்த மணியே மெய்யறிவாம்

விளக்கே என்னை விதித்தோனே

கயந்த மனத்தேன் எனினும்மிகக்

கலங்கி நரகக் கடுங்கடையில்

பயந்த பொழுதும் தாழ்த்திருத்தல்

அழகோ கடைக்கண் பார்த்தருளே.

11

3692

பார்த்தார் இரங்கச் சிறியேன்நான்

பாவி மனத்தால் பட்டதுயர்

தீர்த்தாய் அந்நாள் அதுதொடங்கித்

தெய்வந் துணைஎன் றிருக்கின்றேன்

சேர்த்தார்238 உலகில் இந்நாளில்

சிறியேன் தனைவெந் துயர்ப்பாவி

ஈர்த்தால் அதுகண் டிருப்பதுவோ

கருணைக் கழகிங் கெந்தாயே.

12

238. சேர்த்தாய் - முதற்பதிப்பு, பொ. சு., ச. மு. க., பி. இரா.

3693

தாயே எனைத்தான் தந்தவனே

தலைவா ஞான சபாபதியே

பேயேன் செய்த பெருங்குற்றம்

பொறுத்தாட் கொண்ட பெரியோனே

நீயே இந்நாள் முகமறியார்

நிலையில் இருந்தால் நீடுலகில்

நாயே அனையேன் எவர்துணைஎன்

றெங்கே புகுவேன் நவிலாயே.

13

3684

ஆயேன் வேதா கமங்களைநன்

கறியேன் சிறியேன் அவலமிகும்

பேயேன் எனினும் வலிந்தென்னைப்

பெற்ற கருணைப் பெருமானே

நீயே அருள நினைத்தாயேல்

எல்லா நலமும் நிரம்புவன்நான்

காயே எனினும் கனிஆகும்

அன்றே நினது கருணைக்கே.

14

3685

கருணா நிதியே என்இரண்டு

கண்ணே கண்ணிற் கலந்தொளிரும்

தெருணா டொளியே வெளியேமெய்ச்

சிவமே சித்த சிகாமணியே

இருணா டுலகில் அறிவின்றி

இருக்கத் தரியேன் இதுதருணம்

தருணா அடியேற் கருட்சோதி

தருவாய் என்முன் வருவாயே.

15

3696

வருவாய் என்கண் மணிநீஎன்

மனத்திற் குறித்த வண்ணமெலாம்

தருவாய் தருணம் இதுவேமெய்த்

தலைவா ஞான சபாபதியே

உருவாய்239 சிறிது தாழ்க்கில்உயிர்

ஒருவும் உரைத்தேன் என்னுடைவாய்

இருவாய் அலநின் திருவடிப்பாட்

டிசைக்கும் ஒருவாய் இசைத்தேனே.

16

239. ஒருவா - ச. மு. க.

3697

தேனே திருச்சிற் றம்பலத்தில்

தெள்ளா ரமுதே சிவஞான

வானே ஞான சித்தசிகா

மணியே என்கண் மணியேஎன்

ஊனே புகுந்தென் உளங்கலந்த

உடையாய் அடியேன் உவந்திடநீ

தானே மகிழ்ந்து தந்தாய்இத்

தருணம் கைம்மா றறியேனே.

17

3698

அறியேன் சிறியேன் செய்தபிழை

அனைத்தும் பொறுத்தாய் அருட்சோதிக்

குறியே குணமே பெறஎன்னைக்

குறிக்கொண் டளித்தாய் சன்மார்க்க

நெறியே விளங்க எனைக்கலந்து

நிறைந்தாய் நின்னை ஒருகணமும்

பிறியேன் பிறியேன் இறவாமை

பெற்றேன் உற்றேன் பெருஞ்சுகமே.

18

3699

சுகமே நிரம்பப் பெருங்கருணைத்

தொட்டில் இடத்தே எனைஅமர்த்தி

அகமே விளங்கத் திருஅருளார்

அமுதம் அளித்தே அணைத்தருளி

முகமே மலர்த்திச் சித்திநிலை

முழுதும் கொடுத்து மூவாமல்

சகமேல்240 இருக்கப் புரிந்தாயே

தாயே என்னைத் தந்தாயே.

19

249. சகமே - முதற்பதிப்பு, பொ. சு., ச.மு.க.

3610

தந்தாய் இன்றும் தருகின்றாய்

தருவாய் மேலுந் தனித்தலைமை

எந்தாய் நினது பெருங்கருணை

என்என் றுரைப்பேன் இவ்வுலகில்

சிந்தா குலந்தீர்த் தருள்எனநான்

சிறிதே கூவு முன்என்பால்

வந்தாய் கலந்து மகிழ்கின்றாய்

எனது பொழுது வான்பொழுதே.

20

திருச்சிற்றம்பலம்

18. அபயம் இடுதல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3611

உருவாய் அருவாய் ஒளியாய் வெளியாய்

உலவா ஒருபேர் அருளார் அமுதம்

தருவாய் இதுவே தருணம் தருணம்

தரியேன் சிறிதுந் தரியேன் இனிநீ

வருவாய் அலையேல் உயிர்வாழ் கலன்நான்

மதிசேர் முடிஎம் பதியே அடியேன்

குருவாய் முனமே மனமே இடமாக்
குடிகொண் டவனே அபயம் அபயம்.

1

3612

என்னே செய்வேன் செய்வகை ஒன்றிங்
கிதுஎன் றருள்வாய் இதுவே தருணம்
மன்னே அயனும் திருமா லவனும்
மதித்தற் கரிய பெரிய பொருளே
அன்னே அப்பா ஐயா அரசே
அன்பே அறிவே அமுதே அழியாப்
பொன்னே மணியே பொருளே அருளே
பொதுவாழ் புனிதா அபயம் அபயம்.

2

3613

கருணா நிதியே அபயம் அபயம்
கனகா கரனே அபயம் அபயம்
அருணா டகனே அபயம் அபயம்
அழகா அமலா அபயம் அபயம்
தருணா தவனே அபயம் அபயம்
தனிநா யகனே அபயம் அபயம்
தெருணா டுறுவாய் அபயம் அபயம்

திருவம் பலவா அபயம் அபயம்.

3

3614

மருளும் துயரும் தவிரும் படிஎன்

மனமன் றிடைநீ வருவாய் அபயம்

இருளும் பவமும் பெறுவஞ் சகநெஞ்

சினன்என் றிகழேல் அபயம் அபயம்

வெருளும் கொடுவெம் புலையும் கொலையும்

விடுமா றருள்வாய் அபயம் அபயம்

அருளும் பொருளும் தெருளும் தருவாய்

அபயம் அபயம் அபயம் அபயம்.

4

3615

இனிஓர் இறையும் தரியேன் அபயம்

இதுநின் அருளே அறியும் அபயம்

கனியேன் எனநீ நினையேல் அபயம்

கனியே241 கருணைக் கடலே அபயம்

தனியேன் துணைவே றறியேன் அபயம்

தகுமோ தகுமோ தலைவா அபயம்

துனியே அறவந் தருள்வாய் அபயம்

சுகநா டகனே அபயம் அபயம்.

5

241. களியே - படிவேறுபாடு. ஆ. பா.

3616

அடியார் இதயாம் புயனே அபயம்
அரசே அமுதே அபயம் அபயம்
முடியா தினிநான் தரியேன் அபயம்
முறையோ முறையோ முதல்வா அபயம்
கடியேன் அலன்நான் அபயம் அபயம்
கருணா கரனே அபயம் அபயம்
தடியேல் அருள்வாய் அபயம் அபயம்
தருணா தவனே அபயம் அபயம்.

6

3617

மலவா தனைதீர் கலவா அபயம்
வலவா திருஅம் பலவா அபயம்
உலவா நெறிநீ சொலவா அபயம்
உறைவாய் உயிர்வாய் இறைவா அபயம்
பலஆ குலம்நான் தரியேன் அபயம்
பலவா பகவா பணவா அபயம்
நலவா அடியேன் அலவா அபயம்
நடநா யகனே அபயம் அபயம்.

7

3618

கொடியேன் பிழைநீ குறியேல் அபயம்
கொலைதீர் நெறிஎன் குருவே அபயம்
முடியேன் பிறவேன் எனநின் அடியே
முயல்வேன் செயல்வே றறியேன் அபயம்
படியே அறியும் படியே வருவாய்
பதியே கதியே பரமே அபயம்
அடியேன் இனிஓர் இறையும் தரியேன்
அரசே அருள்வாய் அபயம் அபயம்.

8

3619

இடர்தீர் நெறியே அருள்வாய் அபயம்
இனிநான் தரியேன் தரியேன் அபயம்
விடர்போல் எனைநீ நினையேல் அபயம்
விடுவேன் அலன்நான் அபயம் அபயம்
உடலோ டுறுமா பொருள்ஆ வியும்இங்
குனவே எனவே அலவே அபயம்
சுடர்மா மணியே அபயம் அபயம்
சுகநா டகனே அபயம் அபயம்.

9

3620

குற்றம் பலஆ யினும்நீ குறியேல்

குணமே கொளும்என் குருவே அபயம்

பற்றம் பலமே அலதோர் நெறியும்

பதியே அறியேன் அடியேன் அபயம்

சுற்றம் பலவும் உனவே எனவோ

துணைவே றிலைநின் துணையே அபயம்

சிற்றம் பலவா அருள்வாய் இனிநான்

சிறிதுந் தரியேன் தரியேன் அபயம்.

10

திருச்சிற்றம்பலம்

19. பிரிவாற்றாமை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3621

போக மாட்டேன் பிறரிடத்தே பொய்யிற் கிடந்து புலர்ந்துமனம்

வேக மாட்டேன் பிறிதொன்றும் விரும்ப மாட்டேன் பொய்யுலகன்

ஆக மாட்டேன் அரசேஎன் அப்பா என்றன் ஐயாநான்

சாக மாட்டேன் உனைப்பிரிந்தால் தரிக்க மாட்டேன் கண்டாயே.

1

3622

செல்ல மாட்டேன் பிறரிடத்தே சிறிதுந் தரியேன் தீமொழிகள்

சொல்ல மாட்டேன் இனிக்கணமுந் துயர மாட்டேன் சோம்பன்மிடி

புல்ல மாட்டேன் பொய்யொழுக்கம் பொருந்த மாட்டேன் பிறஉயிரைக்

கொல்ல மாட்டேன் உனைஅல்லால் குறிக்க மாட்டேன் கனவிலுமே242

2

242. கண்டாயே - முதற்பதிப்பு, பொ. க., ச.மு.க.

3623

வெறுக்க மாட்டேன் நின்றனையே விரும்பிப் பிடித்தேன் துயர்சிறிதும்

பொறுக்க மாட்டேன் உலகவர்போல் பொய்யிற் கிடந்து புரண்டிநான்

சிறுக்க மாட்டேன் அரசேநின் திருத்தாள் ஆணை நின்ஆணை

மறுக்க மாட்டேன் வழங்குவன எல்லாம் வழங்கி வாழியவே.

3

3624

கருணைப் பெருக்கே ஆனந்தக் கனியே என்னுட் கலந்தொளிரும்

தருணச் சுடரே எனைஈன்ற தாயே என்னைத் தந்தோனே

வருணப் படிக மணிமலையே மன்றில் நடஞ்செய் வாழ்வேநற்

பொருண்மெய்ப் பதியே இனித்துயரம் பொறுக்க மாட்டேன் கண்டாயே.

4

3625

திண்ணம் பழுத்த சிந்தையிலே தித்தித் துலவாச் சுயஞ்சோதி

வண்ணம் பழுத்த தனிப்பழமே மன்றில் விளங்கு மணிச்சுடரே

தண்ணம் பழுத்த மதிஅமுதே தருவாய் இதுவே தருணம்என்றன்

எண்ணம் பழுத்த தினிச்சிறியேன் இறையுந் தரியேன் தரியேனே.

5

3626

நாட்டுக் கிசைந்த மணிமன்றில் ஞான வடிவாய் நடஞ்செயருள்

ஆட்டுக் கிசைந்த பெருங்கருணை அப்பா என்றன் அரசேஎன்

பாட்டுக் கிசைந்த பதியேஓர் பரமா னந்தப் பழமேமேல்

வீட்டுக் கிசைந்த விளக்கேஎன் விவேகம் விளங்க விளக்குகவே.

6

3627

வேதந் தலைமேற் கொளவிரும்பி வேண்டிப் பரவு நினதுமலர்ப்

பாதந் தலைமேற் சூட்டிஎனைப் பணிசெய் திடவும்
பணித்தனைநான்

சாதந் தலைமேல் எடுத்தொருவர் தம்பின் செலவும் தரமில்லேன்

ஏதந் தலைமேற் சுமந்தேனுக் கிச்சீர் கிடைத்த243 தெவ்வாறே.

7

243. கொடுத்த - முதற்பதிப்பு, பொ. சு., பி. இரா. ச.மு.க.

3628

பொய்விட் டகலாப் புலைக்கொடியேன் பொருட்டா இரவில் போந்தொருநின்

கைவிட் டகலாப் பெரும்பொருள்என் கையிற் கொடுத்தே களிப்பித்தாய்

மைவிட் டகலா விழிஇன்ப வல்லி மகிழும் மணவாளா

மெய்விட் டகலா மனத்தவர்க்கு வியப்பாம் உனது மெய்யருளே.

8

3629

சாமத் திரவில் எழுந்தருளித் தமியேன் தூக்கந் தடுத்துமயல்

காமக் கடலைக் கடத்திஅருட் கருணை அமுதங் களித்தளித்தாய்

நாமத் தடிகொண் டடிபெயர்க்கும் நடையார் தமக்கும் கடையானேன்

ஏமத் தருட்பே றடைந்தேன்நான் என்ன தவஞ்செய் திருந்தேனே.

9

3630

பாதி இரவில் எழுந்தருளிப் பாவி யேனை எழுப்பிஅருட்

சோதி அளித்தென் உள்ளகத்தே சூழ்ந்து கலந்து துலங்குகின்றாய்

நீதி நடஞ்செய் பேரின்ப நிதிநான் பெற்ற நெடும்பேற்றை

ஓதி முடியா தென்போல்இவ் வுலகம் பெறுதல் வேண்டுவனே.

10

திருச்சிற்றம்பலம்

20. இறை பொறுப் பியம்பல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3631

தேடிய துண்டு நினதுரு வுண்மை
தெளிந்திடச் சிறிதுநின் னுடனே
ஊடிய துண்டு பிறர்தமை அடுத்தே
உரைத்ததும் உவந்ததும் உண்டோ
ஆடிய பாதம் அறியநான் அறியேன்
அம்பலத் தரும்பெருஞ் சோதி
கூடிய நின்னைப் பிரிகிலேன் பிரிவைக்
கூறவுங் கூசும்என் நாவே.

1

3632

மடம்புரி மனத்தாற் கலங்கிய துண்டு
வள்ளலே நின்திரு வரவுக்
கிடம்புரி சிறியேன் கலங்கினேன் எனினும்
இறையும்வே றெண்ணிய துண்டோ
நடம்புரி பாதம் அறியநான் அறியேன்
நான்செயும் வகையினி நன்றே
திடம்புரிந் தருளிக் காத்திடல் வேண்டும்
சிறிதும் நான் பொறுக்கலேன் சிவனே.

2

3633

நீக்கிய மனம்பின் அடுத்தெனைக் கலக்கி

நின்றதே அன்றிநின் அளவில்

நோக்கிய நோக்கம் பிறவிட யத்தே

நோக்கிய திறையும் இங்குண்டோ

தூக்கிய பாதம் அறியநான் அறியேன்

துயரினிப் பொறுக்கலேன் சிறிதும்

தேக்கிய களிப்பில் சிறப்பவந் தென்னைத்

தெளிவித்தல் நின்கடன் சிவனே.

3

3634

ஈன்றநற் றாயுந் தந்தையுங் குருவும்

என்னுயிர்க் கின்பமும் பொதுவில்

ஆன்றமெய்ப் பொருளே என்றிருக் கின்றேன்

அன்றிவே றெண்ணிய துண்டோ

ஊன்றிய பாதம் அறியநான் அறியேன்

உறுகணிங் காற்றலேன் சிறிதும்

தோன்றிஎன் உளத்தே மயக்கெலாந் தவிர்த்துத்

துலக்குதல் நின்கடன் துணையே.

4

3635

மாயையாற் கலங்கி வருந்திய போதும்
வள்ளல்உன் தன்னையே மதித்துன்
சாயையாப்244 பிறரைப் பார்த்ததே அல்லால்
தலைவவே245 றெண்ணிய துண்டோ
தூயபொற் பாதம் அறியநான் அறியேன்
துயர்இனிச் சிறிதும்இங் காற்றேன்
நாயகா எனது மயக்கெலாம் தவிர்த்தே
நன்றருள் புரிவதுன் கடனே.

5

244. சாயையாற்

245. தலைவரென் - படிவேறுபாடுகள். ஆ. பா.

3636

வண்ணம் வேறெனினும் வடிவுவே றெனினும்
மன்னிய உண்மை ஒன்றென்றே
எண்ணிய தல்லால் சச்சிதா னந்தத்
திறையும்வே றெண்ணிய துண்டோ
அண்ணல்நின் பாதம் அறியநான் அறியேன்
அஞர்இனிச் சிறிதும்இங் காற்றேன்
திண்ணமே நின்மேல் ஆணைஎன் தன்னைத்
தெளிவித்துக் காப்பதுன் கடனே.

6

3637

ஊடல்செய் மதமும் சமயமும் இவற்றில்

உற்றகற் பனைகளும் தவிர்ந்தேன்

வாடல்செய் மனத்தால் கலங்கினேன் எனினும்

மன்றினை மறந்ததிங் குண்டோ

ஆடல்செய் பாதம் அறியநான் அறியேன்

ஐயவோ சிறிதும்இங் காற்றேன்

பாடல்செய் கின்றேன் படிக்கின்றேன் எனக்குப்

பரிந்தருள் புரிவதுன் கடனே.

7

3638

உள்ளதே உள்ள திரண்டிலை எல்லாம்

ஒருசிவ மயமென உணர்ந்தேன்

கள்ளநேர் மனத்தால் கலங்கினேன் எனினும்

கருத்தயல் கருதிய துண்டோ

வள்ளலுன் பாதம் அறியநான் அறியேன்

மயக்கினிச் சிறிதும்இங் காற்றேன்

தெள்ளமு தருளி மயக்கெலாம் தவிர்த்தே

தெளிவித்தல் நின்கடன் சிவனே.

8

3639

எம்மத நிலையும் நின்னருள் நிலையில்

இலங்குதல் அறிந்தனன் எல்லாம்

சம்மதம் ஆக்கிக் கொள்கின்றேன் அல்லால்

தனித்துவே றெண்ணிய துண்டோ

செம்மலுன் பாதம் அறியநான் அறியேன்

சிறிதும்இங் கினித்துயர் ஆற்றேன்

இம்மதிக் கடியேன் குறித்தவா றுள்ள

தியற்றுவ துன்கடன் எந்தாய்.

9

3649

அகம்புறம் மற்றை அகப்புறம் புறத்தே

அடுத்திடும் புறப்புறம் நான்கில்

இகந்ததும் இலைஓர் ஏகதே சத்தால்

இறையும்இங் கெண்ணிய துண்டோ

உகந்தநின் பாதம் அறியநான் அறியேன்

உறுகணிங் கினிச்சிறி துந்தான்

இகம்பெறல் ஆற்றேன் மயக்கெலாம் தவிர்த்திங்

கென்னைஆண் டருள்வ துன்கடனே.

10

திருச்சிற்றம்பலம்

21. கைம்மாறின்மை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3641

இழைஎலாம் விளங்கும் அம்மை இடங்கொள்நின் கருணை என்னும்

மழைஎலாம் பொழிந்தென் உள்ள மயக்கெலாம் தவிர்த்து நான்செய்

பிழைஎலாம் பொறுத்த உன்றன் பெருமைக்கென் புரிவேன் அந்தோ

உழைஎலாம் இலங்குஞ் சோதி உயர்மணி மன்று ளானே.

1

3642

போதுதான் வீணே போக்கிப் புலையனேன் புரிந்த பொல்லாத்

தீதுதான் பொறுத்த உன்றன் திருவருட் பெருமைக் கந்தோ

ஏதுதான் புரிவேன் ஓகோ என்என்று புகழ்வேன் ஞான

மாதுதான் இடங்கொண் டோங்க வயங்குமா மன்று ளானே.

2

3643

சிற்றறி வுடையன் ஆகித் தினந்தொறும் திரிந்து நான்செய்

குற்றமும் குணமாக் கொண்ட குணப்பெருங் குன்றே என்னைப்

பெற்றதா யுடனுற் றோங்கும் பெருமநின் பெருமை தன்னைக்

கற்றறி வில்லேன் எந்தக் கணக்கறிந் துரைப்பேன் அந்தோ.

3

3644

மையரி நெடுங்க ணார்தம் வாழ்க்கையின் மயங்கி இங்கே

பொய்யறி வுடையேன் செய்த புன்மைகள் பொறுத்தாட் கொண்டாய்

ஐயறி வுடையார் போற்றும் அம்பலத் தரசே நின்சீர்

மெய்யறி வறியேன் எந்த விளைவறிந் துரைப்பேன் அந்தோ.

4

3645

பேயினும் பெரியேன் செய்த பிழைகளுக் கெல்லை இல்லை

ஆயினும் பொறுத்தாட் கொண்டாய் அம்பலத் தரசே என்றன்

தாயினும் இனிய உன்றன் தண்அருட் பெருமை தன்னை

நாயினுங் கடையேன் எந்த நலமறிந் துரைப்பேன் அந்தோ.

5

3646

துரும்பினில் சிறியேன் வஞ்சம் சூழ்ந்தநெஞ் சகத்தேன் செய்த

பெரும்பிழை அனைத்தும் அந்தோ பெருங்குண மாகக்கொண்டாய்

அரும்பொருள் என்ன வேதம் ஆகமம் வழுத்து கின்ற

கரும்பினில் இனியாய் உன்றன் கருணைஎன் என்பேன்
அந்தோ.

6

3647

வரைகடந் தடியேன் செய்த வன்பிழை பொறுத்தாட் கொண்டாய்

திரைகடந் தண்ட பிண்டத் திசைஎலாம் கடந்தே அப்பால்

கரைகடந் தோங்கும் உன்றன் கருணையங் கடற்சீர் உள்ளம்
உரைகடந் ததுஎன் றால்யான் உணர்வதென் உரைப்ப தென்னே.

7

3648

நனவினும் பிழையே செய்தேன் நாயினும் கடையேன் அந்தோ
கனவினும் பிழையே செய்தேன் கருணைமா நிதியே நீதான்
நினைவினும் குறியா தாண்டாய் நின்னருட் பெருமை தன்னை
வினவினும் சொல்வார் காணேன் என்செய்வேன் வினைய னேனே.

8

3649

வன்செயல் பொறுத்தாட் கொண்ட வள்ளலே அடிய னேன்றன்
முன்செயல் அவைக ளோடு முடுகுபின் செயல்கள் எல்லாம்
என்செயல் ஆகக் காணேன் எனைக்கலந் தொன்றாய் நின்றோய்
நின்செயல் ஆகக் கண்டேன் கண்டபின் நிகழ்த்தல் என்னே.

9

3650

இருமையும் ஒருமை தன்னில் ஈந்தனை எந்தாய் உன்றன்
பெருமைஎன் என்று நான்தான் பேசுவேன் பேதம் இன்றி
உரிமையால் யானும் நீயும் ஒன்றெனக் கலந்து கொண்ட
ஒருமையை நினைக்கின் றேன்என் உள்ளகந் தழைக்கின் றேனே.

10

திருச்சிற்றம்பலம்

## 22. நடராசபதி மாலை

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3651

அருள்நிலை விளங்குசிற் றம்பலம்என னுஞ்சிவ சுகாதீத வெளிநடுவிலே

அண்டபகி ரண்டகோ டிகளும் சராசரம் அனைத்தும்அவை ஆக்கல்முதலாம்

பொருள்நிலைச் சத்தரொடு சத்திகள் அனந்தமும் பொற்பொடுவி ளங்கிலங்கப்

புறப்புறம் அகப்புறம் புறம்அகம் இவற்றின்மேல் பூரணா காரமாகித்

தெருள்நிலைச் சச்சிதா னந்தகிர ணாதிகள் சிறப்பமுதல் அந்தம்இன்றித்

திகழ்கின்ற மெய்ஞ்ஞான சித்திஅனு பவநிலை தெளிந்திட வயங்குசுடரே

சுருள்நிலைக் குழலம்மை ஆனந்த வல்லிசிவ சுந்தரிக் கினியதுணையே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

1

3652

என்இயல் உடம்பிலே என்பிலே அன்பிலே இதயத்தி லேதயவிலே

என்உயிரி லேஎன்றன் உயிரினுக் குயிரிலே என்இயற்
குணம்அதனிலே

இன்இயல்என் வாக்கிலே என்னுடைய நாக்கிலே என்செவிப்
புலன்இசையிலே

என்இருகண் மணியிலே என்கண்மணி ஒளியிலே என்அனு
பவந்தன்னிலே

தன்இயல்என் அறிவிலே அறிவினுக் கறிவிலே தானே
கலந்துமுழுதும்

தன்மயம தாக்கியே தித்தித்து மேன்மேல் ததும்பிநிறை
கின்றஅமுதே

துன்னிய பெருங்கருணை வெள்ளமே அழியாத சுகமே சுகாதீதமே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

௨

3653

உடல்எலாம் உயிர்எலாம் உளம்எலாம் உணர்வெலாம்
உள்ளனஎ லாங்கலந்தே

ஒளிமயம தாக்கிஇருள் நீக்கிஎக் காலத்தும் உதயாத்த
மானம்இன்றி

இடல்எலாம் வல்லசிவ சத்திகிர ணாங்கியாய் ஏகமாய் ஏகபோக

இன்பநிலை என்னும்ஒரு சிற்சபையின் நடுவே இலங்கிநிறை
கின்றசுடரே

கடல்எலாம் புவிஎலாம் கனல்எலாம் வளிஎலாம் ககன்எலாம்
கண்டபரமே

காணாத பொருள்எனக் கலைஎலாம் புகலஎன் கண்காண வந்தபொருளே

தொடல்எலாம் பெறஎனக் குள்ளும் புறத்தும்மெய்த் துணையாய் விளங்கும்அறிவே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

3

3654

மெய்தழைய உள்ளங் குளிர்ந்துவகை மாறாது மேன்மேற் கலந்துபொங்க

விச்சைஅறி வோங்கஎன் இச்சைஅறி வனுபவம் விளங்கஅறி வறிவதாகி

உய்தழை வளித்தெலாம் வல்லசித் ததுதந் துவட்டாதுள் ஊறிஊறி

ஊற்றெழுந் தென்னையும் தானாக்கி என்னுளே உள்ளபடி உள்ளஅமுதே

கைதழைய வந்தவான் கனியே எலாங்கண்ட கண்ணே கலாந்தநடுவே

கற்பனைஇ லாதோங்கு சிற்சபா மணியே கணிப்பருங் கருணைநிறைவே

துய்தழை பரப்பித் தழைந்ததரு வேஅருட் சுகபோக யோகஉருவே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

4

3655

எண்ணிலா அண்டபகி ரண்டத்தின் முதலிலே இடையிலே கடையிலேமேல்

ஏற்றத்தி லேஅவையுள் ஊற்றத்தி லேதிர டெய்துவழி வந்தன்னிலே

கண்ணுறா அருவிலே உருவிலே குருவிலே கருவிலே தன்மைதனிலே

கலையாதி நிலையிலே சத்திசத் தாகிக் கலந்தோங்கு கின்றபொருளே

தெண்ணிலாக் காந்தமணி மேடைவாய்க் கோடைவாய்ச் சேர்ந்தனு பவித்தசுகமே

சித்தெலாஞ் செயவல்ல தெய்வமே என்மனத் திருமாளி கைத்தீபமே

துண்ணுறாச் சாந்தசிவ ஞானிகள் உளத்தே சுதந்தரித் தொளிசெய்ஒளியே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

5

3656

அம்புவியி லேபுவியின் அடியிலே முடியிலே அம்மண்ட லந்தன்னிலே

அகலத்தி லேபுவியின் அகிலத்தி லேஅவைக் கானவழி வாதிதனிலே

விம்பமுற வேநிறைந் தாங்கவை நிகழ்ந்திட விளக்கும்அவை அவையாகியே

மேலும்அவை அவையாகி அவைஅவைஅ லாததொரு மெய்ந்நிலையும் ஆனபொருளே

தம்பமிசை எனைஏற்றி அமுதூற்றி அழியாத் தலத்திலுற
வைத்தஅரசே

சாகாத வித்தைக் கிலக்கண இலக்கியம் தானாய்இ ருந்தபரமே

தொம்பதமும் உடனுற்ற தற்பதமும் அசிபதச் சுகமும்ஒன்
றானசிவமே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

6

3657

நீரிலே நீர்உற்ற நிறையிலே நிறைஉற்ற நிலையிலே
நுண்மைதனிலே

நிகழ்விலே நிகழ்வுற்ற திகழ்விலே நிழலிலே நெகிழிலே
தண்மைதனிலே

ஊரிலே அந்நீரின் உப்பிலே உப்பிலுறும் ஒண்சுவையி
லேதிரையிலே

உற்றநீர்க் கீழிலே மேலிலே நடுவிலே உற்றியல் உறுத்தும்ஒளியே

காரிலே ஒருகோடி பொழியினும் துணைபெறாக் கருணைமழை
பொழிமேகமே

கனகசபை நடுநின்ற கடவுளே சிற்சபைக் கண்ணோங்கும்
ஒருதெய்வமே

தூரிலே பலமளித் தூரிலே வளர்கின்ற சுகசொருப மானதருவே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

7

3658

ஒள்ளிய நெருப்பிலே உப்பிலே ஒப்பிலா ஒளியிலே சுடரிலேமேல்

ஓட்டிலே சூட்டிலே உள்ளாடும் ஆட்டிலே உறும்ஆதி
அந்தத்திலே

தெள்ளிய நிறத்திலே அருவத்தி லேஎலாம் செயவல்ல
செய்கைதனிலே

சித்தாய் விளங்கிஉப சித்தாய சத்திகள் சிறக்கவளர் கின்றஒளியே

வள்ளிய சிவானந்த மலையே சுகாதீத வானமே ஞானமயமே

மணியேஎன் இருகண்ணுள் மணியேஎன் உயிரேஎன்
வாழ்வேஎன் வாழ்க்கைவைப்பே

துள்ளிய மனப்பேயை உள்ளுற அடக்கிமெய்ச் சுகம்எனக்
கீந்ததுணையே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

8

3659

அறைகின்ற காற்றிலே காற்றுப்பி லேகாற்றின் ஆதிநடு
அந்தத்திலே

ஆனபல பலகோடி சத்திகளின் உருவாகி ஆடும்அதன்
ஆட்டத்திலே

உறைகின்ற நிறைவிலே ஊக்கத்தி லேகாற்றின் உற்றபல
பெற்றிதனிலே

ஓங்கிஅவை தாங்கிமிகு பாங்கினுறு சத்தர்கட் குபகரித்
தருளும்ஒளியே

குறைகின்ற மதிநின்று கூசஒளிர் ஆயிரம் கோடிகிர ணங்கள்வீசிக்

குலஅமுத மயமாகி எவ்வுயி ரிடத்தும் குலாவும்ஒரு தண்மதியமே

துறைநின்று பொறைஒன்று தூயர்அறி வாற்கண்ட சொருபமே
துரியபதமே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

9

3660

வானிலே வானுற்ற வாய்ப்பிலே வானின்அரு வத்திலே
வான்இயலிலே

வான்அடியி லேவானின் நடுவிலே முடியிலே வண்ணத்தி
லேகலையிலே

மானிலே நித்திய வலத்திலே பூரண வரத்திலே மற்றையதிலே

வளரனந் தானந்த சத்தர்சத் திகள்தம்மை வைத்தஅருள்
உற்றஒளியே

தேனிலே பாலிலே சர்க்கரையி லேகனித் திரளிலே தித்திக்கும்ஓர்

தித்திப்பெ லாங்கூட்டி உண்டாலும் ஒப்பெனச் செப்பிடாத்
தெள்ளமுதமே

தூநிலா வண்ணத்தில் உள்ளோங்கும் ஆனந்த சொருபமே
சொருபசுகமே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

10

3661

என்றிரவி தன்னிலே இரவிசொரு பத்திலே இயல்உருவி
லேஅருவிலே

ஏறிட்ட சுடரிலே சுடரின்உட் சுடரிலே எறிஆத பத்திரளிலே

ஒன்றிரவி ஒளியிலே ஓங்கொளியின் ஒளியிலே ஒளிஒளியின்
ஒளிநடுவிலே

ஒன்றாகி நன்றாகி நின்றாடு கின்றஅருள் ஒளியேஎன்
உற்றதுணையே

அன்றிரவில் வந்தெனக் கருள்ஒளி அளித்தஎன் அய்யனே
அரசனேஎன்

அறிவனே அமுதனே அன்பனே இன்பனே அப்பனே
அருளாளனே

துன்றியஎன் உயிரினுக் கினியனே தனியனே தூயனே
என்நேயனே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

11

3662

அணிமதியி லேமதியின் அருவிலே உருவிலே அவ்வுருவின்
உருவத்திலே

அமுதகிர ணத்திலே அக்கிரண ஒளியி அவ்வொளியின்
ஒளிதன்னிலே

பணிமதியின் அமுதிலே அவ்வமு தினிப்பிலே பக்கநடு
அடிமுடியிலே

பாங்குபெற ஓங்கும்ஒரு சித்தேஎன் உள்ளே பலித்தபர மானந்தமே

மணிஒளியில் ஆடும்அருள் ஒளியே நிலைத்தபெரு வாழ்வே
நிறைந்தமகிழ்வே

மன்னேஎன் அன்பான பொன்னேஎன் அன்னேஎன் வரமே வயங்குபரமே

துணிமதியில் இன்பஅனு பவமாய் இருந்தகுரு துரியமே பெரியபொருளே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

12

3663

அண்டவொரு மைப்பகுதி இருமையாம் பகுதிமேல் ஆங்காரி யப்பகுதியே

ஆதிபல பகுதிகள் அனந்தகோ டிகளின்ந அடியினொடு முடியும்அவையில்

கண்டபல வண்ணமுத லானஅக நிலையும் கணித்தபுற நிலையும்மேன்மேல்

கண்டதிக ரிக்கின்ற கூட்டமும் விளங்கக் கலந்துநிறை கின்றஒளியே

கொண்டபல கோலமே குணமே குணங்கொண்ட குறியே குறிக்கவொண்ணாக்

குருதுரிய மேசுத்த சிவதுரிய மேஎலாம் கொண்டதனி ஞானவெளியே

தொண்டர்இத யத்திலே கண்டெனஇனிக்கின்ற சுகயோக அனுபோகமே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

13

3664

கரையிலாக் கடலிலே கடல்உப்பி லேகடற் கடையிலே
கடல்இடையிலே

கடல்முதலி லேகடல் திரையிலே நுரையி கடல்ஓசை
அதன்நடுவிலே

வரையிலா வெள்ளப் பெருக்கத்தி லேவட்ட வடிவிலே
வண்ணம்அதிலே

மற்றதன் வளத்திலே உற்றபல சத்தியுள் வயங்கிஅவை காக்கும்
ஒளியே

புரையிலா ஒருதெய்வ மணியேஎன் உள்ளே புகுந்தறி
வளித்தபொருளே

பொய்யாத செல்வமே நையாத கல்வியே புடம்வைத் திடாதபொன்னே

மரையிலா வாழ்வே மறைப்பிலா வைப்பே மறுப்பிலா
தருள்வள்ளலே

மணிமன்றில் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம் வல்லநட ராசபதியே.

14

3665

உற்றியலும் அணுவாதி மலைஅந்த மானஉடல் உற்றகரு
வாகிமுதலாய்

உயிராய் உயிர்க்குள்உறும் உயிராகி உணர்வாகி
உணர்வுள்உணர் வாகிஉணர்வுள்

பற்றியலும் ஒளியாகி ஒளியின்ஒளி யாகிஅம் பரமாய்ச்
சிதம்பரமுமாய்ப்

பண்புறுசி தம்பரப் பொற்சபையு மாய்அதன் பாங்கோங்கு
சிற்சபையுமாய்த்

தெற்றியலும் அச்சபையின் நடுவில்நடம் இடுகின்ற சிவமாய் விளங்குபொருளே

சித்தெலாம் செய்எனத் திருவாக் களித்தெனைத் தேற்றிஅருள் செய்தகுருவே

மற்றியலும் ஆகிஎனை வாழ்வித்த மெய்ஞ்ஞான வாழ்வேஎன் வாழ்வின்வரமே

மணிமன்றில் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம் வல்லநட ராசபதியே.

15

3666

எவ்வுலகும் எவ்வுயிரும் எப்பொருளும் உடையதாய் எல்லாஞ்செய் வல்லதாகி

இயற்கையே உண்மையாய் இயற்கையே அறிவாய் இயற்கையே இன்பமாகி

அவ்வையின் அனாதியே பாசமில தாய்ச்சுத்த அருளாகி அருள்வெளியிலே

அருள்நெறி விளங்கவே அருள்நடம் செய்தருள் அருட்பெருஞ் சோதியாகிக்

கவ்வைஅறு தனிமுதற் கடவுளாய் ஓங்குமெய்க் காட்சியே கருணைநிறைவே

கண்ணேஎன் அன்பிற் கலந்தெனை வளர்க்கின்ற கதியே கனிந்தகனியே

வெவ்வினை தவிர்த்தொரு விளக்கேற்றி என்னுள் வீற்றிருந் தருளும்அரசே

மெய்ஞ்ஞான நிலைநின்ற விஞ்ஞான கலர்உளே மேவுநட ராசபதியே.

16

3667

நாதாந்த போதாந்த யோகாந்த வேதாந்த நண்ணுறு கலாந்தம்உடனே

நவில்கின்ற சித்தாந்தம் என்னும்ஆ றந்தத்தின் ஞானமெய்க் கொடிநாட்டியே

மூதாண்ட கோடிக ளொடுஞ்சரா சரம்எலாம் முன்னிப் படைத்தல்முதலாம்

முத்தொழிலும் இருதொழிலும் முன்னின் றியற்றிஐம் மூர்த்திகளும் ஏவல்கேட்ப

வாதாந்தம் உற்றபல சத்திக ளொடுஞ்சத்தர் வாய்ந்துபணி செய்யஇன்ப

மாராச்சி யத்திலே திருவருட் செங்கோல் வளத்தொடு செலுத்துமரசே

சூதாண்ட நெஞ்சினில் தோயாத நேயமே துரியநடு நின்றசிவமே

சுத்தசிவ சன்மார்க்க நிதியே அருட்பெருஞ் சோதிநட ராசபதியே.

17

3668

ஒருபிரமன் அண்டங்கள் அடிமுடிப் பெருமையே உன்னமுடி யாஅவற்றின்

ஓராயி ரங்கோடி மால்அண்டம் அரன்அண்டம் உற்றகோ டாகோடியே

திருகலறு பலகோடி ஈசன்அண் டம்சதா சிவஅண்டம் எண்ணிறந்த

திகழ்கின்ற மற்றைப் பெருஞ்சத்தி சத்தர்தம் சீரண்டம் என்புகலுவேன்

உறுவுறும்இவ் வண்டங்கள் அத்தனையும் அருள்வெளியில் உறுசிறு அணுக்களாக

ஊடசைய அவ்வெளியின் நடுநின்று நடனமிடும் ஒருபெருங் கருணைஅரசே

மருவிஎனை ஆட்கொண்டு மகனாக்கி அழியா வரந்தந்த மெய்த்தந்தையே

மணிமன்றின் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம் வல்லநட ராசபதியே.

18

3669

வரவுசெல வற்றபரி பூரணா காரசுக வாழ்க்கைமுத லாஎனக்கு

வாய்த்தபொரு ளேஎன்கண் மணியேஎன் உள்ளே வயங்கிஒளிர் கின்றஒளியே

இரவுபகல் அற்றஒரு தருணத்தில் உற்றபேர் இன்பமே அன்பின்விளைவே

என்தந்தை யேஎனது குருவேஎன் நேயமே என்னாசை யேஎன் அறிவே

கரவுநெறி செல்லாக் கருத்தினில் இனிக்கின்ற கருணைஅமு தேகரும்பே

கனியே அருட்பெருங் கடலேஎ லாம்வல்ல கடவுளே கலைகள்எல்லாம்

விரவிஉணர் வரியசிவ துரியஅனு பவமான மெய்ம்மையே சன்மார்க்கமா

மெய்ஞ்ஞான நிலைநின்ற விஞ்ஞான கலர்உளே மேவுநட ராசபதியே.

19

3670

பாராதி பூதமொடு பொறிபுலன் கரணமும் பகுதியும் காலம்முதலாப்

பகர்கின்ற கருவியும் அவைக்குமேல் உறுசுத்த பரமாதி நாதம்வரையும்

சீராய பரவிந்து பரநாத முந்தனது திகழங்கம் என்றுரைப்பத்

திருவருட் பெருவெளியில் ஆனந்த நடனமிடு தெய்வமே என்றும்அழியா

ஊராதி தந்தெனை வளர்க்கின்ற அன்னையே உயர்தந்தையேஎன்உள்ளே

உற்றதுணை யேஎன்றன் உறவேஎன் அன்பேஉவப்பேஎன் னுடையஉயிரே

ஆராலும் அறியாத உயர்நிலையில் எனைவைத்த அரசே அருட்சோதியே

அகரநிலை முழுதுமாய் அப்பாலு மாகிநிறை அமுதநட ராசபதியே.

20

3671

உரைவிசுவம் உண்டவெளி உபசாந்த வெளிமேலை உறுமவுன வெளிவெளியின்மேல்

ஓங்குமா மவுனவெளி யாதியுறும் அனுபவம் ஒருங்கநிறை உண்மைவெளியே

திரையறு பெருங்கருணை வாரியே எல்லாஞ்செய் சித்தே எனக்குவாய்த்த

செல்வமே ஒன்றான தெய்வமே உய்வகை தெரித்தெனை வளர்த்தசிவமே

பரைநடு விளங்கும்ஒரு சோதியே எல்லாம் படைத்திடுக என்றெனக்கே

பண்புற உரைத்தருட் பேரமுத ளித்தமெய்ப் பரமமே பரமஞான

வரைநடு விளங்குசிற் சபைநடுவில் ஆனந்த வண்ணநடம் இடுவள்ளலே

மாறாத சன்மார்க்க நிலைநீதி யேஎலாம் வல்லநட ராசபதியே.

21

3672

ஊழிதோ றூழிபல அண்டபகிர் அண்டத் துயிர்க்கெலாம் தரினும்அந்தோ

ஒருசிறிதும் உலவாத நிறைவாகி அடியேற் குவப்பொடு கிடைத்தநிதியே

வாழிநீ டூழியென வாய்மலர்ந் தழியா வரந்தந்த வள்ளலேஎன்

மதியினிறை மதியே வயங்குமதி அமுதமே மதிஅமுதின் உற்றசுகமே

ஏழினோ டேழுலகில் உள்ளவர்கள் எல்லாம்இ தென்னைஎன் றதிசயிப்ப

இரவுபகல் இல்லாத பெருநிலையில் ஏற்றிஎனை இன்புறச் செய்தகுருவே

ஆழியோ டணிஅளித் துயிரெலாம் காத்துவிளை யாடென் றுரைத்தஅரசே

அகரநிலை முழுதுமாய் அப்பாலு மாகிஒளிர் அபயநட ராசபதியே.

22

3673

பூதமுத லாயபல கருவிகள் அனைத்தும்என் புகல்வழிப் பணிகள்கேட்பப்

பொய்படாச் சத்திகள் அனந்தகோ டிகளும்மெய்ப் பொருள்கண்ட சத்தர்பலரும்

ஏதமற என்னுளம் நினைத்தவை நினைத்தாங் கிசைந்தெடுத் துதவஎன்றும்

இறவாத பெருநிலையில் இணைசொலா இன்புற் றிருக்கஎனை வைத்தகுருவே

நாதமுதல் இருமூன்று வரையந்த நிலைகளும் நலம்பெறச் சன்மார்க்கமாம்

ஞானநெறி ஓங்கஓர் திருவருட் செங்கோல் நடத்திவரு நல்லஅரசே

வாதமிடு சமயமத வாதிகள் பெறற்கரிய மாமதியின் அமுதநிறைவே

மணிமன்றின் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம் வல்லநட ராசபதியே.

23

3674

வாட்டமொடு சிறியனேன் செய்வகையை அறியாது மனமிக மயங்கிஒருநாள்

மண்ணிற் கிடந்தருளை உன்னிஉல கியலினை மறந்துதுயில் கின்றபோது

நாட்டமுறு வைகறையில் என்அருகணைந்தென்னை நன்றுற எழுப்பிமகனே

நல்யோக ஞானம்எனி னும்புரிதல் இன்றிநீ நலிதல்அழ கோஎழுந்தே

ஈட்டுகநின் எண்ணம் பலிக்கஅருள் அமுதம்உண் டின்புறுக என்றகுருவே

என்ஆசை யேஎன்றன் அன்பே நிறைந்தபே ரின்பமே என்செல்வமே

வேட்டவை அளிக்கின்ற நிதியமே சாகாத வித்தையில் விளைந்தசுகமே

மெய்ஞ்ஞான நிலைநின்ற விஞ்ஞான கலர்உளே மேவுநட ராசபதியே.

24

3675

என்செய்வேன் சிறியனேன் என்செய்வேன் என்எண்ணம் ஏதாக முடியுமோஎன்

றெண்ணிஇரு கண்ணினீர் காட்டிக் கலங்கிநின் றேங்கிய இராவில்ஒருநாள்

மின்செய்மெய்ஞ் ஞானஉரு வாகிநான் காணவே வெளிநின்
றணைத்தென்உள்ளே

மேவிஎன் துன்பந் தவிர்த்தருளி அங்ஙனே வீற்றிருக்
கின்றகுருவே

நன்செய்வாய் இட்டவிளை வதுவிளைந் ததுகண்ட நல்குரவி
னோன்அடைந்த

நன்மகிழ்வின் ஒருகோடி பங்கதிகம் ஆகவே நான்கண்டு
கொண்டமகிழ்வே

வன்செய்வாய் வாதருக் கரியபொரு ளேஎன்னை வலியவந்
தாண்டபரமே

மணிமன்றின் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம் வல்லநட
ராசபதியே. 25

3676

துன்பெலாந் தீர்ந்தன சுகம்பலித் ததுநினைச் சூழ்ந்ததருள்
ஒளிநிறைந்தே

சுத்தசன் மார்க்கநிலை அனுபவம் நினக்கே சுதந்தரம
தானதுலகில்

வன்பெலாம் நீக்கிநல் வழியெலாம் ஆக்கிமெய் வாழ்வெலாம்
பெற்றுமிகவும்

மன்னுயிர் எலாம்களித் திடநினைத் தனைஉன்றன் மனநினைப்
பின்படிக்கே

அன்பநீ பெறுகஉல வாதுநீ டூழிவிளை யாடுக அருட்சோதியாம்

ஆட்சிதந் தோம்உனைக் கைவிடோம் கைவிடோம் ஆணைநம்
ஆணைஎன்றே

இன்புறத் திருவாக் களித்தெனுள் ளேகலந் திசைவுடன்
இருந்தகுருவே

எல்லாஞ்செய் வல்லசித் தாகிமணி மன்றினில் இலங்குநட
ராசபதியே. 26

3677

பேருற்ற உலகிலுறு சமயமத நெறிஎலாம் பேய்ப்பிடிப் புற்றபிச்சுப்

பிள்ளைவிளை யாட்டென உணர்ந்திடா துயிர்கள்பல பேதமுற்
றங்கும்இங்கும்

போருற் றிறந்துவீண் போயினார் இன்னும்வீண் போகாத
படிவிரைந்தே

புனிதமுறு சுத்தசன் மார்க்கநெறி காட்டிமெய்ப் பொருளினை
உணர்த்திஎல்லாம்

ஏருற்ற சுகநிலை அடைந்திடப் புரிதிநீ என்பிள்ளை ஆதலாலே

இவ்வேலை புரிகஎன் றிட்டனம் மனத்தில்வே றெண்ணற்க
என்றகுருவே

நீருற்ற ஒள்ளிய நெருப்பே நெருப்பினுள் நிறைந்திருள்
அகற்றும்ஒளியே

நிர்க்குணா னந்தபர நாதாந்த வரைஓங்கு நீதிநட ராசபதியே. 27

3678

சாகாத கல்வியே கல்விஒன் றேசிவம் தான்என அறிந்தஅறிவே

தகும்அறிவு மலம்ஐந்தும் வென்றவல் லபமே தனித்தபூ
ரணவல்லபம்

வேகாத காலாதி கண்டுகொண் டெப்பொருளும் விளையவிளை
வித்ததொழிலே

மெய்த்தொழில தாகும்இந் நான்கையும் ஒருங்கே வியந்தடைந் துலகம்எல்லாம்

மாகாத லுறஎலாம் வல்லசித் தாகிநிறை வானவர மேஇன்பமாம்

மன்னும்இது நீபெற்ற சுத்தசன் மார்க்கத்தின் மரபென் றுரைத்தகுருவே

தேகாதி மூன்றும்நான் தருமுன்அருள் செய்தெனைத் தேற்றிஅருள் செய்தசிவமே

சிற்சபையின் நடுநின்ற ஒன்றான கடவுளே தெய்வநட ராசபதியே. 28

3679

நீடுலகில் உற்றவர்கள் நன்குற உரைக்கின்ற நின்வார்த்தை யாவும்நமது

நீள்வார்த்தை யாகும்இது உண்மைமக னேசற்றும் நெஞ்சம்அஞ் சேல் உனக்கே

ஆடுறும் அருட்பெருஞ் சோதிஈந் தனம்என்றும் அழியாத நிலையின்நின்றே

அன்பினால் எங்கெங்கும் எண்ணிய படிக்குநீ ஆடிவாழ் கென்றகுருவே

நாடுநடு நாட்டத்தில் உற்றஅனு பவஞான நான்இளங் காலைஅடைய

நல்கிய பெருங்கருணை அப்பனே அம்மையே நண்பனே துணைவனேஎன்

ஊடுபிரி யாதுற்ற இன்பனே அன்பனே ஒருவனே அருவனேஉள்

ஊறும்அமு தாகிஓர் ஆறின்முடி மீதிலே ஓங்குநட ராசபதியே.

29

3680

அந்நாளில் அம்பலத் திருவாயி லிடைஉனக் கன்புடன் உரைத்தபடியே

அற்புதம்எ லாம்வல்ல நம்அருட் பேரொளி அளித்தனம் மகிழ்ந்துன்உள்ளே

இந்நாள் தொடுத்துநீ எண்ணிய படிக்கே இயற்றிவிளை யாடிமகிழ்க

என்றும்இற வாநிலையில் இன்பஅனு பவனாகி இயல்சுத்தம் ஆதிமூன்றும்

எந்நாளும் உன்இச்சை வழிபெற்று வாழ்கயாம் எய்திநின் னுட்கலந்தேம்

இனிஎந்த ஆற்றினும் பிரிவுறேம் உண்மைஈ தெம்மாணை என்றகுருவே

மன்னாகி என்பெரிய வாழ்வாகி அழியாத வரமாகி நின்றசிவமே

மணிமன்றின் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம் வல்லநட ராசபதியே.

30

3681

காய்எலாம் கனிஎனக் கனிவிக்கும் ஒருபெருங் கருணைஅமு தேஎனக்குக்

கண்கண்ட தெய்வமே கலிகண்ட அற்புதக் காட்சியே கனகமலையே

தாய்எலாம் அனையஎன் தந்தையே ஒருதனித் தலைவனே நின்பெருமையைச்

சாற்றிட நினைத்திட மதித்திட அறிந்திடச் சார்கின்ற தோறும்அந்தோ

வாய்எலாந் தித்திக்கும் மனம்எலாந் தித்திக்கும் மதிஎலாந் தித்திக்கும்என்

மன்னியமெய் அறிவெலாந் தித்திக்கும் என்னில்அதில் வரும்இன்பம் என்புகலுவேன்

தூய்எலாம் பெற்றநிலை மேல்அருட் சுகம்எலாம் தோன்றிட விளங்குசுடரே

துரியவெளி நடுநின்ற பெரியபொரு ளேஅருட் சோதிநட ராசகுருவே.

31

3682

எய்ப்பற எனக்குக் கிடைத்தபெரு நிதியமே எல்லாஞ்செய் வல்லசித்தாய்

என்கையில் அகப்பட்ட ஞானமணி யேஎன்னை எழுமையும் விடாதநட்பே

கைப்பறஎன் உள்ளே இனிக்கின்ற சர்க்கரைக் கட்டியே கருணைஅமுதே

கற்பக வனத்தே கனிந்தகனி யேஎனது கண்காண வந்தகதியே

மெய்ப்பயன் அளிக்கின்ற தந்தையே தாயேஎன் வினைஎலாந் தீர்த்தபதியே

மெய்யான தெய்வமே மெய்யான சிவபோக விளைவேஎன் மெய்ம்மைஉறவே

துய்ப்புறும்என் அன்பான துணையேஎன் இன்பமே சுத்தசன் மார்க்கநிலையே

துரியவெளி நடுநின்ற பெரியபொரு ளேஅருட் சோதிநட ராசகுருவே.

32

3683

துன்புறு மனத்தனாய் எண்ணாத எண்ணிநான் சோர்ந்தொரு புறம்படுத்துத்

தூங்குதரு ணத்தென்றன் அருகிலுற் றன்பினால் தூயதிரு வாய்மலர்ந்தே

இன்புறு முகத்திலே புன்னகை ததும்பவே இருகைமலர் கொண்டுதூக்கி

என்றனை எடுத்தணைத் தாங்குமற் றோரிடத் தியலுற இருத்திமகிழ்வாய்

வன்பறு பெருங்கருணை அமுதளித் திடர்நீக்கி வைத்தநின் தயவைஅந்தோ

வள்ளலே உள்ளுதொறும் உள்ளக மெலாம்இன்ப வாரிஅமு தூறிஊறித்

துன்பம்அற மேற்கொண்டு பொங்கித் ததும்பும்இச் சுகவண்ணம் என்புகலுவேன்

துரியவெளி நடுநின்ற பெரியபொரு ளேஅருட் சோதிநட ராசகுருவே.

33

3684

ஓங்கிய பெருங்கருணை பொழிகின்ற வானமே ஒருமைநிலை உறுஞானமே

உபயபத சததளமும் எனதிதய சததளத் தோங்கநடு வோங்குசிவமே

பாங்கியல் அளித்தென்னை அறியாத ஒருசிறிய பருவத்தில் ஆண்டபதியே

பாசநெறி செல்லாத நேசர்தமை ஈசராம் படிவைக்க வல்லபரமே

ஆங்கியல்வ தென்றுமற் றீங்கியல்வ தென்றும்வாய் ஆடுவோர்க் கரியசுகமே

ஆனந்த மயமாகி அதுவுங் கடந்தவெளி ஆகிநிறை கின்றநிறைவே

தூங்கிவிழு சிறியனைத் தாங்கிஎழு கென்றெனது தூக்கந் தொலைத்ததுணையே

துரியவெளி நடுநின்ற பெரியபொரு ளேஅருட் சோதிநட ராசகுருவே.

34

திருச்சிற்றம்பலம்

## 23. சற்குருமணி மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3685

மாற்றறி யாதசெ ழும்பசும் பொன்னே

மாணிக்க மேசுடர் வண்ணக் கொழுந்தே

கூற்றறி யாதபெ ருந்தவர் உள்ளக்

கோயில் இருந்த குணப்பெருங் குன்றே

வேற்றறி யாதசிற் றம்பலக் கனியே

விச்சையில் வல்லவர் மெச்சுவி ருந்தே

சாற்றறி யாதஎன் சாற்றுங் களித்தாய்
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

1

3686

கற்கரை யும்படி கரைவிக்குங் கருத்தே
கண்மணி யேமணி கலந்தகண் ஒளியே
சொற்கரை யின்றிய ஒளியினுள் ஒளியே
துரியமுங் கடந்திட்ட பெரியசெம் பொருளே
சிற்கரை திரையறு திருவருட் கடலே
தெள்ளமு தேகனி யேசெழும் பாகே
சர்க்கரை யேஅது சார்ந்தசெந் தேனே
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

2

3687

என்னுயி ரேஎன தின்னுயிர்க் குயிரே
என்அறி வேஎன தறிவினுக் கறிவே
அன்னையில் இனியஎன் அம்பலத் தமுதே
அற்புத மேபத மேஎன தன்பே
பொன்னிணை அடிமலர் முடிமிசை பொருந்தப்
பொருத்திய தயவுடைப் புண்ணியப் பொருளே
தன்னியல் அறிவருஞ் சத்திய நிலையே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

3

3688

காய்மனக் கடையனைக் காத்தமெய்ப் பொருளே

கலைகளுங் கருதரும் ஒருபெரும் பதியே

தேய்மதிச் சமயருக் கரியஒண் சுடரே

சித்தெலாம் வல்லதோர் சத்திய முதலே

ஆய்மதிப் பெரியருள் அமர்ந்தசிற் பரமே

அம்பலத் தாடல்செய் செம்பதத் தரசே

தாய்மதிப் பரியதோர் தயவுடைச் சிவமே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

4

3689

உருவமும் அருவமும் உபயமும் உளதாய்

உளதில தாய்ஒளிர் ஒருதனி முதலே

கருவினில் எனக்கருள் கனிந்தளித் தவனே

கண்ணுடை யாய்பெருங் கடவுளர் பதியே

திருநிலை பெறஎனை வளர்க்கின்ற பரமே

சிவகுரு துரியத்தில் தெளிஅனு பவமே

தருவளர் பொழிவடல் சபைநிறை ஒளியே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

5

3690

ஆறந்த நிலைகளின் அனுபவ நிறைவே
அதுஅது வாய்ஒளிர் பொதுவுறு நிதியே
கூறெந்த நிலைகளும் ஒருநிலை எனவே
கூறிஎன் உள்ளத்தில் குலவிய களிப்பே
பேறிந்த நெறிஎனக் காட்டிஎன் தனையே
பெருநெறிக் கேற்றிய ஒருபெரும் பொருளே
சாறெந்த நாள்களும் விளங்கும்ஓர் வடல்வாய்த்
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

6

3691

சாகாத தலைஇது வேகாத காலாம்
தரம்இது காண்எனத் தயவுசெய் துரைத்தே
போகாத புனலையும் தெரிவித்தென் உளத்தே
பொற்புற அமர்ந்ததோர் அற்புதச் சுடரே
ஆகாத பேர்களுக் காகாத நினைவே
ஆகிய எனக்கென்றும் ஆகிய சுகமே
தாகாதல் எனத்தரும் தருமசத் திரமே
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

7

3692

தத்துவ மசிநிலை இதுஇது தானே

சத்தியம் காண்எனத் தனித்துரைத் தெனக்கே

எத்துவந் தனைகளும் நீக்கிமெய்ந் நிலைக்கே

ஏற்றிநான் இறவாத இயல்அளித் தருளால்

சித்துவந் துலகங்கள் எவற்றினும் ஆடச்

செய்வித்த பேரருட் சிவபரஞ் சுடரே

சத்துவ நெறிதரு வடல்அருட் கடலே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

8

3693

இதுபதி இதுபொருள் இதுசுகம் அடைவாய்

இதுவழி எனஎனக் கியல்புற உரைத்தே

விதுஅமு தொடுசிவ அமுதமும் அளித்தே

மேனிலைக் கேற்றிய மெய்நிலைச் சுடரே

பொதுநடம் இடுகின்ற புண்ணியப் பொருளே

புரையறும் உளத்திடைப் பொருந்திய மருந்தே

சதுமறை முடிகளின் முடியுறு சிவமே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

9

3694

என்னிலை இதுவுறு நின்னிலை இதுவாம்

இருநிலை களும்ஒரு நிலைஎன அறிவாய்

முன்னிலை சிறிதுறல்246 இதுமயல் உறலாம்

முன்னிலை பின்னிலை முழுநிலை உளவாம்

இந்நிலை அறிந்தவண் எழுநிலை கடந்தே

இயனிலை அடைகஎன் றியம்பிய பரமே

தன்னிலை ஆகிய நன்னிலை அரசே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

10

சிறிதுற - பி. இரா.பதிப்பு. சிறிதுறில் - படிவேறுபாடு. ஆ. பா.

3695

காரணம் இதுபுரி காரியம் இதுமேல்

காரண காரியக் கருவிது பலவாய்

ஆரணம் ஆகமம் இவைவிரித் துரைத்தே

அளந்திடும் நீஅவை அளந்திடன் மகனே

பூரண நிலைஅனு பவமுறில் கணமாம்

பொழுதினில் அறிதிஎப் பொருள்நிலை களுமே

தாரணி தனில்என்ற தயவுடை அரசே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

11

3696

பன்னெறிச் சமயங்கள் மதங்கள்என் றிடும்லூர்

பவநெறி இதுவரை பரவிய திதனால்

செந்நெறி247 அறிந்திலர் இறந்திறந் துலகோர்

செறிஇருள் அடைந்தனர் ஆதலின் இனிநீ

புன்னெறி தவிர்த்தொரு பொதுநெறி எனும்வான்

புத்தமு தருள்கின்ற சுத்தசன் மார்க்கத்

தன்னெறி செலுத்துக என்றஎன் அரசே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

12

247. சென்னெறி - முதற்பதிப்பு, பொ.,சு., பி. இரா., ச. மு. க.

3697

அடிஇது முடிஇது நடுநிலை இதுமேல்

அடிநடு முடியிலா தது இது மகனே

படிமிசை அடிநடு முடிஅறிந் தனையே

பதிஅடி முடியிலாப் பரிசையும் அறிவாய்

செடியற உலகினில் அருள்நெறி இதுவே

செயலுற முயலுக என்றசிற் பரமே

தடிமுகில் எனஅருள் பொழிவடல் அரசே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

13

3698

நண்ணிய மதநெறி பலபல அவையே
நன்றற நின்றன சென்றன சிலவே
அண்ணிய உலகினர் அறிகிலர் நெடுநாள்
அலைதரு கின்றனர் அலைவற மகனே
புண்ணியம் உறுதிரு அருள்நெறி இதுவே
பொதுநெறி எனஅறி வுறமுய லுதிநீ
தண்ணிய அமுதுணத் தந்தனம் என்றாய்
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

14

3699

அஞ்சலை நீஒரு சிறிதும்என் மகனே
அருட்பெருஞ் சோதியை அளித்தனம் உனக்கே
துஞ்சிய மாந்தரை எழுப்புக நலமே
சூழ்ந்தசன் மார்க்கத்தில் செலுத்துக சுகமே
விஞ்சுற மெய்ப்பொருள் மேனிலை தனிலே
விஞ்சைகள் பலவுள விளக்குக என்றாய்
தஞ்சம்என் றவர்க்கருள் சத்திய முதலே
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

15

3700

வேதத்தின் முடிமிசை விளங்கும்ஓர் விளக்கே

மெய்ப்பொருள் ஆகம வியன்முடிச் சுடரே

நாதத்தின் முடிநடு நடமிடும் ஒளியே

நவைஅறும் உளத்திடை நண்ணிய நலமே

ஏதத்தின் நின்றெனை எடுத்தருள் நிலைக்கே

ஏற்றிய கருணைஎன் இன்உயிர்த் துணையே

தாதுற்ற உடம்பழி யாவகை புரிந்தாய்

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

16

3781

சந்திர சூரியர் ஒளிபெற விளங்கும்

தனிஅருட் பெருவெளித் தலத்தெழுஞ் சுடரே

வந்திர விடைஎனக் கருளமு தளித்தே

வாழ்கஎன் றருளிய வாழ்முதற் பொருளே

மந்திர மேஎனை வளர்க்கின்ற மருந்தே

மாநிலத் திடைஎனை வருவித்த பதியே

தந்திரம் யாவையும் உடையமெய்ப் பொருளே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

17

3782

அமரரும் முனிவரும் அதிசயித் திடவே

அருட்பெருஞ் சோதியை அன்புடன் அளித்தே

கமமுறு சிவநெறிக் கேற்றிஎன் றனையே

காத்தென துளத்தினில் கலந்தமெய்ப் பதியே

எமன்எனும் அவன்இனி இலைஇலை மகனே

எய்ப்பற வாழ்கஎன் றியம்பிய அரசே

சமரச சன்மார்க்க சங்கத்தின் முதலே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

18

3783

நன்மார்க்கத் தவர்உளம் நண்ணிய வரமே

நடுவெளி நடுநின்று நடஞ்செயும் பரமே

துன்மார்க்க வாதிகள் பெறற்கரு நிலையே

சுத்தசி வானந்தப் புத்தமு துவப்பே

என்மார்க்கம் எனக்களித் தெனையுமேல் ஏற்றி

இறவாத பெருநலம் ஈந்தமெய்ப் பொருளே

சன்மார்க்க சங்கத்தார் தழுவிய பதியே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

19

3784

ஆதியும் அந்தமும் இன்றிஒன் றாகி

அகம்புறம் அகப்புறம் புறப்புறம் நிறைந்தே

ஓதியும் உணர்ந்தும்இங் கறிவரும் பொருளே

உளங்கொள்சிற் சபைநடு விளங்குமெய்ப் பதியே
சோதியும் சோதியின் முதலுந்தான் ஆகிச்
சூழ்ந்தெனை வளர்க்கின்ற சுதந்தர அமுதே
சாதியும் சமயமும் தவிர்த்தவர் உறவே
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

20

3785

கற்பனை முழுவதும் கடந்தவர் உளத்தே
கலந்துகொண் டினிக்கின்ற கற்பகக் கனியே
அற்பனை யாண்டுகொண் டறிவளித் தழியா
அருள்நிலை தனில்உற அருளிய அமுதே
பற்பல உலகமும் வியப்பஎன் தனக்கே
பதமலர் முடிமிசைப் பதித்தமெய்ப் பதியே
தற்பர பரம்பர சிதம்பர நிதியே
தனிநட ராசஎன் சற்குரு மணியே.

21

3786

பவநெறி செலுமவர் கனவினும் அறியாப்
பரம்பொரு ளாகிஎன் உளம்பெறும் ஒளியே
நவநெறி கடந்ததோர் ஞானமெய்ச் சுகமே
நான்அருள் நிலைபெற நல்கிய நலமே

சிவநெறி யேசிவ நெறிதரு நிலையே

சிவநிலை தனில்உறும் அனுபவ நிறைவே

தவநெறி செலும்அவர்க் கினியநல் துணையே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

22

3797

அறியாமல் அறிகின்ற அறிவினுள் அறிவே

அடையாமல் அடைகின்ற அடைவினுள் அடைவே

செறியாமல் செறிகின்ற செறிவினுட் செறிவே

திளையாமல் திளைக்கின்ற திளைப்புறு திளைப்பே

பிரியாமல் என்னுளம் கலந்தமெய்க் கலப்பே

பிறவாமல் இறவாமல் எனைவைத்த பெருக்கே

தறியாகி உணர்வாரும் உணர்வரும் பொருளே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

23

3798

கருதாமல் கருதும்ஓர் கருத்தினுட் கருத்தே

காணாமல் காணும்ஓர் காட்சியின் விளைவே

எருதாகத் திரிந்தேனுக் கிகபரம் அளித்தே

இறவாத வரமுந்தந் தருளிய ஒளியே

வருதாகந் தவிர்த்திட வந்ததெள் அமுதே

மாணிக்க மலைநடு மருவிய பரமே

தருதான முணவெனச் சாற்றிய பதியே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

24

3709

ஏகாஅ னேகாஎன் றேத்திடு மறைக்கே

எட்டாத நிலையேநான் எட்டிய மலையே

ஓகாள மதங்களை முழுவதும் மாற்றி

ஒருநிலை ஆக்கஎன் றுரைத்தமெய்ப் பரமே

ஈகாதல் உடையவர்க் கிருநிதி அளித்தே

இன்புறப் புரிகின்ற இயல்புடை இறையே

சாகாத வரந்தந்திங் கெனைக்காத்த அரசே

தனிநட ராசஎன் சற்குரு மணியே.

25

திருச்சிற்றம்பலம்

## 24. தற்போத இழப்பு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3710

அவ்வண்ணம் பழுத்தவரும் அறிந்திலர்சற் றெனினும்

அறிந்தனம்ஓர் சிறிதுகுரு அருளாலே அந்தச்

செவ்வண்ணம் பழுத்ததனித் திருவுருக்கண் டெவர்க்கும்

தெரியாமல் இருப்பம்எனச் சிந்தனைசெய் திருந்தேன்

இவ்வண்ணம் இருந்தஎனைப் பிறர்அறியத் தெருவில்

இழுத்துவிடுத் ததுகடவுள் இயற்கைஅருட் செயலோ

மவ்வண்ணப் பெருமாயை தன்செயலோ அறியேன்

மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

1

3711

கள்ளிருந்த மலர்இதழிச் சடைக்கனிநின் வடிவம்

கண்டுகொண்டேன் சிறிதடியேன் கண்டுகொண்ட படியே

நள்ளிருந்த வண்ணம்இன்னும் கண்டுகண்டு களித்தே

நாடறியா திருப்பம்என்றே நன்றுநினைந் தொருசார்

உள்ளிருந்த எனைத்தெருவில் இழுத்துவிடுத் ததுதான்

உன்செயலோ பெருமாயை தன்செயெலோ அறியேன்

வள்ளிருந்த குணக்கடையேன் இதைநினைக் குந்தோறும்

மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

2

3712

இகத்திருந்த வண்ணம்எலாம் மிகத்திருந்த அருட்பேர்

இன்பவடி வம்சிறியேன் முன்புரிந்த தவத்தால்

சகத்திருந்தார் காணாதே சிறிதுகண்டு கொண்ட

தரம்நினைந்து பெரிதின்னும் தான்காண்பேம் என்றே

அகத்திருந்த எனைப்புறத்தே இழுத்துவிடுத் ததுதான்

ஆண்டவநின் அருட்செயலோ மருட்செயலோ அறியேன்

மகத்திருந்தார் என்அளவில் என்நினைப்பார் அந்தோ

மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

3

3713

கருங்களிறு போல்மதத்தால் கண்செருக்கி வீணே

காலம்எலாம் கழிக்கின்ற கடையர்கடைத் தலைவாய்

ஒருங்குசிறி யேன்தனைமுன் வலிந்தருளே வழிவாய்

உள்அமர்ந்தே உள்ளதனை உள்ளபடி உணர்த்திப்

பெருங்கருணை யால்அளித்த பேறதனை இன்னும்

பிறர்அறியா வகைபெரிதும் பெறுதும்என உள்ளே

மருங்கிருந்த எனைவெளியில் இழுத்துவிட்ட தென்னோ

மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

4

3714

நாடுகின்ற மறைகள்எலாம் நாம்அறியோம் என்று

நாணிஉரைத் தலமரவே நல்லமணி மன்றில்

ஆடுகின்ற சேவடிகண் டானந்தக் கடலில்

ஆடும்அன்பர் போல்நமக்கும் அருள்கிடைத்த தெனினும்

வீடுகின்ற பிறர்சிறிதும் அறியாமல் இருக்க

வேண்டும்என இருந்தஎன்னை வெளியில்இழுத் திட்டு
வாடுகின்ற வகைபுரிந்த விதியைநினைந் தையோ
மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

5

3715

நதிகலந்த சடைஅசையத் திருமேனி விளங்க
நல்லதிருக் கூத்தாட வல்லதிரு அடிகள்
கதிகலந்து கொளச்சிறியேன் கருத்திடையே கலந்து
கள்ளம்அற உள்ளபடி காட்டிடக்கண் டின்னும்
பதிகலந்து கொளும்மட்டும் பிறர்அறியா திருக்கப்
பரிந்துள்ளே இருந்தஎன்னை வெளியில் இழுத் திட்டு
மதிகலந்து கலங்கவைத்த விதியைநினைந் தையோ
மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

6

3716

மஞ்சனைய குழலம்மை எங்கள்சிவ காம
வல்லிமகிழ் திருமேனி வண்ணமது சிறிதே
நஞ்சனைய கொடியேன்கண் டிடப்புரிந்த அருளை
நாடறியா வகைஇன்னும் நீடநினைத் திருந்தேன்
அஞ்சனைய பிறர்எல்லாம் அறிந்துபல பேசி
அலர்தூற்ற அளியஎனை வெளியில்இழுத் திட்டு

வஞ்சனைசெய் திடவந்த விதியைநினைந் தையோ
மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

7

3717

அரிபிரமர் உருத்திரரும் அறிந்துகொள மாட்டா
தலமரவும் ஈதென்ன அதிசயமோ மலத்தில்
புரிபுழுவில் இழிந்தேனைப் பொருளாக்கி அருளாம்
பொருள்அளிக்கப் பெற்றனன்இப் புதுமைபிறர் அறியா
துரிமைபெற இருப்பன்என உள்இருந்த என்னை
உலகறிய வெளியில்இழுத் தலகில்விருத் தியினால்
வரிதலையிட் டாட்டுகின்ற விதியைநினைந் தையோ
மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில் நடத் தரசே.

8

3718

விழற்கிறைத்துக் களிக்கின்ற வீணர்களிற் சிறந்த
வினைக்கொடியேம் பொருட்டாக விரும்பிஎழுந் தருளிக்
கழற்கிசைந்த பொன்அடிநம் தலைமேலே அமைத்துக்
கருணைசெயப் பெற்றனம்இக் கருணைநம்மை இன்னும்
நிழற்கிசைத்த மேல்நிலையில் ஏற்றும்என மகிழ்ந்து
நின்றஎன்னை வெளியில்இழுத் துலகவியா பார
வழக்கில்வளைத் தலைக்கவந்த விதியைநினைந் தையோ

மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில்நடத் தரசே.

9

3719

அடிபிடித்துத் திரிகின்ற மறைகள்எலாம் காணா

அருள்வடிவைக் காட்டிநம்மை ஆண்டுகொண்ட கருணைக்

கொடிபிடித்த குருமணியைக் கூடுமட்டும் வேறோர்

குறிப்பின்றி இருப்பம்எனக் கொண்டகத்தே இருந்தேன்

படிபிடித்த பலர்பலவும் பகர்ந்திடஇங் கெனைத்தான்

படுவழக்கிட் டுலகியலாம் வெளியில்இழுத் தலைத்தே

மடிபிடித்துப் பறிக்கவந்த விதியைநினைந் தையோ

மனம்ஆலை பாய்வதுகாண் மன்றில் நடத் தரசே.

10

திருச்சிற்றம்பலம்

## 25. திருமுன் விண்ணப்பம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3720

மாழை மாமணிப் பொதுநடம் புரிகின்ற வள்ளலே அளிகின்ற

வாழை வான்பழச் சுவைஎனப் பத்தர்தம் மனத்துளே தித்திப்போய்

ஏழை நாயினேன் விண்ணப்பம் திருச்செவிக் கேற்றருள் செயல்வேண்டும்

கோழை மானிடப் பிறப்பிதில் உன்னருட் குருஉருக்
கொளும்ஆறே.

1

3721

பொன்னின் மாமணிப் பொதுநடம் புரிகின்ற புண்ணியா
கனிந்தோங்கி

மன்னு வாழையின் பழச்சுவை எனப்பத்தர் மனத்துளே
தித்திப்போய்

சின்ன நாயினேன் விண்ணப்பம் திருச்செவி சேர்த்தருள்
செயல்வேண்டும்

இன்ன என்னுடைத் தேகம்நல் ஒளிபெறும் இயல்உருக்
கொளும்ஆறே.

2

3722

விஞ்சு பொன்னணி அம்பலத் தருள்நடம் விளைத்துயிர்க் குயிராகி

எஞ்சு றாதபேர் இன்பருள் கின்றஎன் இறைவநின்
அருள்இன்றி

அஞ்சும் நாயினேன் விண்ணப்பம் திருச்செவி அமைத்தருள்
செயல்வேண்டும்

துஞ்சும் இவ்வுடல் இம்மையே துஞ்சிடாச் சுகஉடல்
கொளும்ஆறே.

3

3723

ஓங்கு பொன்அணி அம்பலத் தருள்நடம் உயிர்க்கெலாம் ஒளிவண்ணப்

பாங்கு மேவநின் றாடல்செய் இறைவநின் பதமலர் பணிந்தேத்தாத்

தீங்கு நாயினேன் விண்ணப்பம் திருச்செவி சேர்த்தருள் செயல்வேண்டும்

ஈங்கு வீழுடல் இம்மையே வீழ்ந்திடா இயலுடல் உறும்ஆறே.

4

3724

இலங்கு பொன்னணிப் பொதுநடம் புரிகின்ற இறைவஇவ் வுலகெல்லாம்

துலங்கும் வண்ணநின் றருளுநின் திருவடித் துணைதுணை என்னாமல்

கலங்கு நாயினேன் விண்ணப்பம் திருச்செவி கலந்தருள் செயல்வேண்டும்

அலங்கும் இவ்வுடல் இம்மையே அழிவுறா அருள்உடல் உறும்ஆறே.

5

3725

சிறந்த பொன்னணித் திருச்சிற்றம் பலத்திலே திருநடம் புரிகின்ற

அறந்த வாதசே வடிமலர் முடிமிசை அணிந்தக மகிழ்ந்தேத்த

மறந்த நாயினேன் விண்ணப்பம் திருச்செவி மடுத்தருள் செயல்வேண்டும்

பிறந்த இவ்வுடல் இம்மையே அழிவுறாப் பெருநலம் பெறும்ஆறே.

6

3726

விளங்கு பொன்அணிப் பொதுநடம் புரிகின்ற விரைமலர்த் திருத்தாளை248

உளங்கொள் அன்பர்தம் உளங்கொளும் இறைவநின் ஒப்பிலாப் பெருந்தன்மை

களங்கொள் நாயினேன் விண்ணப்பம் திருச்செவி கலந்தருள் செயல்வேண்டும்

துளங்கும் இவ்வுடல் இம்மையே அழிவுறாத் தொல்லுடல் உறும்ஆறே.

7

விளங்கு பொன்னணித் திருச்சிற்றம் பலத்திலே விரைமலர்த் திருத்தாளை - முதற் பதிப்பு.

3727

வாய்ந்த பொன்அணிப் பொதுநடம் புரிகின்ற வள்ளலே மறைஎல்லாம்

ஆய்ந்தும் இன்னஎன் றறிந்திலா நின்திரு அடிமலர் பணியாமல்

சாய்ந்த நாயினேன் விண்ணப்பம் திருச்செவி தரித்தருள் செயல்வேண்டும்

ஏய்ந்த இவ்வுடல் இம்மையே திருவருள் இயல்உடல் உறும்ஆறே.

8

3728

மாற்றி லாதபொன் அம்பலத் தருள்நடம் வயங்கநின் றொளிர்கின்ற

பேற்றில் ஆருயிர்க் கின்பருள் இறைவநின் பெயற்கழல் கணிமாலை

சாற்றி டாதஎன் விண்ணப்பம் திருச்செவி தரித்தருள் செயல்வேண்டும்

காற்றில் ஆகிய இவ்வுடல் இம்மையே கதியுடல் உறும்ஆறே..

9

3729

தீட்டு பொன்அணி அம்பலத் தருள்நடம் செய்துயிர்த் திரட்கின்பம்

காட்டு கின்றதோர் கருணையங் கடவுள்நின் கழலிணை கருதாதே

நீட்டு கின்றஎன் விண்ணப்பம் திருச்செவி நேர்ந்தருள் செயல்வேண்டும்

வாட்டும்249இவ்வுடல் இம்மையே அழிவுறா வளமடைந் திடும்ஆறே.

10

249. ஆட்டும் - படிவேறுபாடு. ஆ. பா.

திருச்சிற்றம்பலம்

26. இனித்த வாழ்வருள் எனல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3730

உரத்தவான் அகத்தே உரத்தவா ஞான ஒளியினால் ஓங்கும்ஓர் சித்தி

புரத்தவா பெரியோர் புரத்தவா குற்றம் பொறுத்தடி யேன்தனக் களித்த

வரத்தவா உண்மை வரத்தவா ஆக மங்களும் மறைகளும் காணாத்

தரத்தவா அறிவா தரத்தவா பொதுவில் தனித்தவா இனித்தவாழ் வருளே.

1

3731

முன்னவா திபர்க்கு முன்னவா வேத முடிமுடி மொழிகின்ற முதல்வா

பின்னவா திபர்க்குப் பின்னவா எவர்க்கும் பெரியவா பெரியவர் மதிக்கும்

சின்னவா சிறந்த சின்னவா ஞான சிதம்பர வெளியிலே நடிக்கும்

மன்னவா அமுதம் அன்னவா எல்லாம் வல்லவா நல்லவாழ் வருளே.

2

3732

விடையவா தனைதீர் விடையவா சுத்த வித்தைமுன் சிவவரை கடந்த

நடையவா ஞான நடையவா இன்ப நடம்புரிந் துயிர்க்கெலாம் உதவும்

கொடையவா ஓவாக் கொடையவா எனையாட் கொண்டெனுள் அமர்ந்தரு ளியஎன்

உடையவா எல்லாம் உடையவா உணர்ந்தோர்க் குரியவா பெரியவாழ் வருளே.

3

3733

வலத்தவா நாத வலத்தவா சோதி மலையவா மனமுதல் கடந்த

புலத்தவா எனது புலத்தவா தவிர்த்துப் பூரண ஞானநோக் களித்த

நலத்தவா வரையா நலத்தவா மறைகள் நாடியும் காண்பதற் கரிதாம்

பலத்தவா திருஅம் பலத்தவா எல்லாம் படைத்தவா படைத்தவாழ் வருளே.

4

3734

உணர்ந்தவர் உளத்தை உகந்தவா இயற்கை உண்மையே உருவதாய் இன்பம்

புணர்ந்திட எனைத்தான் புணர்ந்தவா ஞானப் பொதுவிலே பொதுநடம் புரிந்தெண்

குணந்திகழ்ந் தோங்கும் குணத்தவா குணமும் குறிகளும் கோலமும் குலமும்

தணந்தசன் மார்க்கத் தனிநிலை நிறுத்தும் தக்கவா மிக்கவாழ் வருளே.

5

3735

தத்துவங் கடந்த தத்துவா ஞான சமரச சுத்தசன் மார்க்கச்

சத்துவ நெறியில் நடத்திஎன் தனைமேல் தனிநிலை நிறுத்திய தலைவா

சித்துவந் தாடும் சித்திமா புரத்தில் திகழ்ந்தவா திகழ்ந்தென துளத்தே

ஒத்துநின் றோங்கும் உடையவா கருணை உளத்தவா வளத்தவாழ் வருளே.

6

3736

மதம்புகல் முடிபு கடந்தமெய்ஞ் ஞான மன்றிலே வயங்கொள்நா டகஞ்செய்

பதம்புகல் அடியேற் கருட்பெருஞ் சோதிப் பரிசுதந் திடுதும்என் றுளத்தே

நிதம்புகல் கருணை நெறியவா இன்ப நிலையவா நித்தநிற் குணமாம்

சிதம்புகல் வேத சிரத்தவா இனித்த தேனவா ஞானவாழ் வருளே.

7

3737

மூவிரு முடிபும் கடந்ததோர் இயற்கை முடிபிலே முடிந்தென துடம்பும்

ஆவியும் தனது மயம்பெறக் கிடைத்த அருட்பெருஞ் சோதிஅம் பலவா

ஓவுரு முதலா உரைக்கும்மெய் உருவும் உணர்ச்சியும் ஒளிபெறு செயலும்

மேவிநின் றவர்க்குள் மேவிய உணர்வுள் மேயவா தூயவாழ் வருளே.

8

3738

பங்கமோர் அணுவும் பற்றிடா அறிவால் பற்றிய பெற்றியார் உளத்தே

தங்கும்ஓர் சோதித் தனிப்பெருங் கருணைத் தரந்திகழ் சத்தியத் தலைவா

துங்கம்உற் றழியா நிலைதரும் இயற்கைத் தொன்மையாம் சுத்தசன் மார்க்கச்

சங்கநின் றேத்தும் சத்திய ஞான சபையவா அபயவாழ் வருளே.

9

3739

இனித்தசெங் கரும்பில் எடுத்ததீஞ் சாற்றின் இளம்பதப் பாகொடு தேனும்

கனித்ததீங் கனியின் இரதமும் கலந்து கருத்தெலாம் களித்திட உண்ட

மனித்தரும் அமுத உணவுகொண் டருந்தும் வானநாட் டவர்களும் வியக்கத்

தனித்தமெய்ஞ் ஞானஅமுதெனக் களித்த தனியவா இனியவாழ் வருளே.

10

திருச்சிற்றம்பலம்

## 27. திருவருள் விழைதல்

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3740

செய்வகை அறியேன் மன்றுள்மா மணிநின்

திருவுளக் குறிப்பையும் தெரியேன்

உய்வகை அறியேன் உணர்விலேன் அந்தோ

உறுகண்மேல் உறுங்கொல்என் றுலைந்தேன்

மெய்வகை அடையேன் வேறெவர்க் குரைப்பேன்

வினையனேன் என்செய விரைகேன்

பொய்வகை உடையேன் எங்ஙனம் புகுவேன்

புலையனேன் புகல்அறி யேனே.

1

3741

அறிவிலேன் அறிந்தார்க் கடிப்பணி புரியேன்

அச்சமும் அவலமும் உடையேன்

செறிவிலேன் பொதுவாம் தெய்வம்நீ நினது

திருவுளத் தெனைநினை யாயேல்

எறிவிலேன் சிறியேன் எங்ஙனம் புகுவேன்

என்செய்வேன் யார்துணை என்பேன்

பிறிவிலேன் பிரிந்தால் உயிர்தரிக் கலன்என்

பிழைபொறுத் தருள்வதுன் கடனே.

2

3742

உன்கடன் அடியேற் கருளல்என் றுணர்ந்தேன்

உடல்பொருள் ஆவியும் உனக்கே

பின்கடன் இன்றிக் கொடுத்தனன் கொடுத்த

பின்னும்நான் தளருதல் அழகோ

என்கடன் புரிவேன் யார்க்கெடுத் துரைப்பேன்

என்செய்வேன் யார்துணை என்பேன்

முன்கடன் பட்டார் போல்மனம் கலங்கி

முறிதல்லூர் கணம்தரி யேனே.

3

3743

தரித்திடேன் சிறிதும் தரித்திடேன் எனது

தளர்ச்சியும் துன்பமும் தவிர்த்தே

தெரித்திடல் அனைத்தும் தெரித்திடல் வேண்டும்

தெரித்திடாய் எனில்இடர் எனைத்தான்

எரித்திடும் அந்தோ என்செய்வேன் எங்கே

எய்துகேன் யார்துணை என்பேன்

திரித்தநெஞ் சகத்தேன் சரித்திரம் அனைத்தும்

திருவுளம் தெரிந்தது தானே.

4

3744

தான்எனைப் புணரும் தருணம்ஈ தெனவே

சத்தியம் உணர்ந்தனன் தனித்தே

தேன்உறக் கருதி இருக்கின்றேன் இதுநின்

திருவுளம் தெரிந்ததெந் தாயே

ஆன்எனக் கூவி அணைந்திடல் வேண்டும்

அரைக்கணம் ஆயினும் தாழ்க்கில்

நான்இருப் பறியேன் திருச்சிற்றம் பலத்தே

நடம்புரி ஞானநா டகனே.

5

3745

ஞானமும் அதனால் அடைஅனு பவமும்

நாயினேன் உணர்ந்திட உணர்த்தி

ஈனமும் இடரும் தவிர்த்தனை அந்நாள்

இந்தநாள் அடியனேன் இங்கே

ஊனம்ஒன் றில்லோய் நின்றனைக் கூவி

உழைக்கின்றேன் ஒருசிறி தெனினும்

ஏனென வினவா திருத்தலும் அழகோ

இறையும்நான் தரிக்கலன் இனியே.

6

3746

இனியநற் றாயின் இனியஎன் அரசே
என்னிரு கண்ணினுண் மணியே
கனிஎன இனிக்கும் கருணைஆர் அமுதே
கனகஅம் பலத்துறும் களிப்பே
துனிஉறு மனமும் சோம்புறும் உணர்வும்
சோர்வுறு முகமும்கொண் டடியேன்
தனிஉளங் கலங்கல் அழகதோ எனைத்தான்
தந்தநற் றந்தைநீ அலையோ.

7

3747

தந்தையும் தாயும் குருவும்யான் போற்றும்
சாமியும் பூமியும் பொருளும்
சொந்தநல் வாழ்வும் நேயமும் துணையும்
சுற்றமும் முற்றும்நீ என்றே
சிந்தையுற் றிங்கே இருக்கின்றேன் இதுநின்
திருவுளம் தெரிந்ததே எந்தாய்
நிந்தைசெய் உலகில் யான்உளம் கலங்கல்
நீதியோ நின்அருட் கழகோ.

8

3748

அழகனே ஞான அமுதனே என்றன்

அப்பனே அம்பலத் தரசே
குழகனே இன்பக் கொழுஉளம் களிக்கும்
கொழுநனே சுத்தசன் மார்க்கக்
கழகநேர் நின்ற கருணைமா நிதியே
கடவுளே கடவுளே எனநான்
பழகநேர்ந் திட்டேன் இன்னும்இவ் வுலகில்
பழங்கணால் அழுங்குதல் அழகோ.

9

3749

பழம்பிழி மதுரப் பாட்டல எனினும்
பத்தரும் பித்தரும் பிதற்றும்
கிழம்பெரும் பாட்டும் கேட்பதுன் உள்ளக்
கிளர்ச்சிஎன் றறிந்தநாள் முதலாய்
வழங்குநின் புகழே பாடுறு கின்றேன்
மற்றொரு பற்றும்இங் கறியேன்
சழங்குடை உலகில் தளருதல் அழகோ
தந்தையுந் தாயும்நீ அலையோ.

10

3750

தாயும்என் ஒருமைத் தந்தையும் ஞான
சபையிலே தனிநடம் புரியும்

தூயநின் பாதத் துணைஎனப் பிடித்தேன்
தூக்கமும் சோம்பலும் துயரும்
மாயையும் வினையும் மறைப்பும்ஆ ணவமும்
வளைத்தெனைப் பிடித்திடல் வழக்கோ
நாயினேன் இனிஓர் கணந்தரிப் பறியேன்
நல்அருட் சோதிதந் தருளே.

11

3751

சோதியேல் எனைநீ சோதனை தொடங்கில்
சூழ்உயிர் விடத்தொடங் குவன்நான்
நீதியே நிறைநின் திருவருள் அறிய
நிகழ்த்தினேன் நிச்சயம் இதுவே
ஓதியே உணர்தற் கரும்பெரும் பொருளே
உயிர்க்குயிர் ஆகிய ஒளியே
ஆதியே நடுவே அந்தமே ஆதி
நடுஅந்தம் இல்லதோர் அறிவே.

12

3752

இல்லைஉண் டெனும்இவ் விருமையும் கடந்தோர்
இயற்கையின் நிறைந்தபே ரின்பே
அல்லைஉண் டெழுந்த தனிப்பெருஞ் சுடரே

அம்பலத் தாடல்செய் அமுதே
வல்லைஇன் றடியேன் துயர்எலாம் தவிர்த்து
வழங்குக நின்அருள் வழங்கல்
நல்லைஇன் றலது நாளைஎன் றிடிலோ
நான்உயிர் தரிக்கலன் அரசே.

13

3753

அரைசெலாம் வழங்கும் தனிஅர சதுநின்
அருளர செனஅறிந் தனன்பின்
உரைசெய்நின் அருள்மேல் உற்றபே ராசை
உளம்எலாம் இடங்கொண்ட தெந்தாய்
வரைசெயா மேன்மேல் பொங்கிவாய் ததும்பி
வழிகின்ற தென்வசங் கடந்தே
இரைசெய்என் ஆவி தழைக்கஅவ் வருளை
ஈந்தருள் இற்றைஇப் போதே.

14

3754

போதெலாம் வீணில் போக்கிஏ மாந்த
புழுத்தலைப் புலையர்கள் புணர்க்கும்
சூதெலாம் கேட்குந் தொறும்உனைப் பரவும்
தூயர்கள் மனம்அது துளங்கித்

தாதெலாம் கலங்கத் தளருதல் அழகோ
தனிஅருட் சோதியால் அந்த
வாதெலாம் தவிர்த்துச் சுத்தசன் மார்க்கம்
வழங்குவித் தருளுக விரைந்தே.

15

3755

விரைந்துநின் அருளை ஈந்திடல் வேண்டும்
விளம்பும்இத் தருணம்என் உளந்தான்
கரைந்தது காதல் பெருகிமேல் பொங்கிக்
கரைஎலாம் கடந்தது கண்டாய்
வரைந்தெனை மணந்த வள்ளலே எல்லாம்
வல்லவா அம்பல வாணா
திரைந்தஎன் உடம்பைத் திருஉடம் பாக்கித்
திகழ்வித்த சித்தனே சிவனே.

16

3756

சிவந்திகழ் கருணைத் திருநெறிச் சார்பும்
தெய்வம்ஒன் றேஎனும் திறமும்
நவந்தரு நிலைகள் சுதந்தரத் தியலும்
நன்மையும் நரைதிரை முதலாம்
துவந்துவம் தவிர்த்துச் சுத்தமா தியமுச்

சுகவழி வம்பெறும் பேறும்

தவந்திகழ் எல்லாம் வல்லசித் தியும்நீ

தந்தருள் தருணம்ஈ தெனக்கே.

17

3757

தருணம்இஞ் ஞான்றே சுத்தசன் மார்க்கத்

தனிநெறி உலகெலாம் தழைப்பக்

கருணையும் சிவமே பொருள்எனக் கருதும்

கருத்தும்உற் றெம்மனோர் களிப்பப்

பொருள்நிறை ஓங்கத் தெருள்நிலை விளங்கப்

புண்ணியம் பொற்புற வயங்க

அருள்நயந் தருள்வாய் திருச்சிற்றம் பலத்தே

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

18

3758

என்உள வரைமேல் அருள்ஒளி ஓங்கிற்

றிருள்இர வொழிந்தது முழுதும்

மன்உறும் இதய மலர்மலர்ந் ததுநன்

மங்கல முழங்குகின் றனசீர்ப்

பொன்இயல் விளக்கம் பொலிந்தது சித்திப்

பூவையர் புணர்ந்திடப் போந்தார்

சொன்னநல் தருணம் அருட்பெருஞ் சோதி

துலங்கவந் தருளுக விரைந்தே.

19

3759

வந்தருள் புரிக விரைந்திது தருணம்

மாமணி மன்றிலே ஞான

சுந்தர வடிவச் சோதியாய் விளங்கும்

சுத்தசன் மார்க்கசற் குருவே

தந்தருள் புரிக வரம்எலாம் வல்ல

தனிஅருட் சோதியை எனது

சிந்தையில் புணர்ப்பித் தென்னொடுங் கலந்தே

செய்வித் தருள்கசெய் வகையே.

20

திருச்சிற்றம்பலம்

## 28. திருக்கதவந் திறத்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3760

திருக்கதவம் திறவாயோ திரைகளெலாம் தவிர்த்தே

திருவருளாம் பெருஞ்சோதித் திருஉருக்காட் டாயோ

உருக்கிஅமு தூற்றெடுத்தே உடம்புயிரோ டுளமும்

ஒளிமயமே ஆக்குறமெய் உணர்ச்சிஅரு ளாயோ

கருக்கருதாத் தனிவடிவோய் நின்னைஎன்னுட் கலந்தே

கங்குல்பகல் இன்றிஎன்றும் களித்திடச்செய் யாயோ

செருக்கருதா தவர்க்கருளும் சித்திபுரத் தரசே

சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

1

3761

மணிக்கதவம் திறவாயோ மறைப்பையெலாம் தவிர்த்தே

மாற்றறியாப் பொன்னேநின் வடிவதுகாட் டாயோ

கணிக்கறியாப் பெருநிலையில் என்னொடுநீ கலந்தே

கரைகடந்த பெரும்போகம் கண்டிடச்செய் யாயோ

தணிக்கறியாக் காதல்மிகப் பெருகுகின்ற தரசே

தாங்கமுடி யாதினிஎன் தனித்தலைமைப் பதியே

திணிக்கலையா தியஎல்லாம் பணிக்கவல்ல சிவமே

சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

2

3762

உரைகடந்த திருவருட்பே ரொளிவடிவைக் கலந்தே

உவட்டாத பெரும்போகம் ஓங்கியுறும் பொருட்டே

இரைகடந்தென் உள்ளகத்தே எழுந்துபொங்கித் ததும்பி

என்காதல் பெருவெள்ளம் என்னைமுற்றும் விழுங்கிக்

கரைகடந்து போனதினித் தாங்கமுடி யாது

கண்டுகொள்வாய் நீயேஎன் கருத்தின்வண்ணம் அரசே

திரைகடந்த குருமணியே சிவஞான மணியே

சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

3

3763

உன்புடைநான் பிறர்போலே உடுக்கவிழைந் தேனோ

உண்ணவிழைந் தேனோவே றுடைமைவிழைந் தேனோ

அன்புடையாய் என்றனைநீ அணைந்திடவே விழைந்தேன்

அந்தோஎன் ஆசைவெள்ளம் அணைகடந்த தரசே

என்புடைவந் தணைகஎன இயம்புகின்றேன் உலகோர்

என்சொலினும் சொல்லுகஎன் இலச்சைஎலாம் ஒழித்தேன்

தென்புடையோர் முகநோக்கித் திருப்பொதுநிற் கின்றோய்

சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

4

3764

இறந்திறந்தே இளைத்ததெலாம் போதும்இந்த உடம்பே

இயற்கைஉடம் பாகஅருள் இன்னமுதம் அளித்தென்

புறந்தழுவி அகம்புணர்ந்தே கலந்துகொண்டெந் நாளும்

பூரணமாம் சிவபோகம் பொங்கியிட விழைந்தேன்

பிறந்திறந்து போய்க்கதியைப் பெறநினைந்தே மாந்த

பேதையர்போல் எனைநினையேல் பெரியதிருக் கதவம்

திறந்தருளி அணைந்திடுவாய் சிற்சபைவாழ் அரசே
சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

5

3765

பொய்யுடையார் விழைகின்ற புணர்ச்சிவிழைந் தேனோ
பூணவிழைந் தேனோவான் காணவிழைந் தேனோ
மெய்யுடையாய் என்னொடுநீ விளையாட விழைந்தேன்
விளையாட்டென் பதுஞான விளையும்விளை யாட்டே
பையுடைப்பாம் பனையரொடும் ஆடுகின்றோய் எனது
பண்பறிந்தே நண்புவைத்த பண்புடையோய் இன்னே
செய்யுடைஎன் னொடுகூடி ஆடஎழுந் தருள்வாய்
சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

6

3766

கூறுகின்ற சமயம்எலாம் மதங்கள்எலாம் பிடித்துக்
கூவுகின்றார் பலன்ஒன்றும் கொண்டறியார் வீணே
நீறுகின்றார் மண்ணாகி நாறுகின்றார் அவர்போல்
நீடுலகில் அழிந்துவிட நினைத்தேனோ நிலைமேல்
ஏறுகின்ற திறம்விழைந்தேன் ஏற்றுவித்தாய் அங்கே
இலங்குதிருக் கதவுதிறந் தின்னமுதம் அளித்தே
தேறுகின்ற மெய்ஞ்ஞான சித்திஉறப் புரிவாய்

சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

7

3767

வேதநெறி ஆகமத்தின் நெறிபவுரா ணங்கள்

விளம்புநெறி இதிகாசம் விதித்தநெறி முழுதும்

ஓதுகின்ற சூதனைத்தும் உளவனைத்தும் காட்டி

உள்ளதனை உள்ளபடி உணரஉரைத் தனையே

ஏதமற உணர்ந்தனன்வீண் போதுகழிப் பதற்கோர்

எள்ளளவும் எண்ணம்இலேன் என்னொடுநீ புணர்ந்தே

தீதறவே அனைத்தும்வல்ல சித்தாடல் புரிவாய்

சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

8

3768

கலையுரைத்த கற்பனையே நிலைஎனக்கொண் டாடும்

கண்மூடி வழக்கம்எலாம் மண்மூடிப் போக

மலைவறுசன் மார்க்கம்ஒன்றே நிலைபெறமெய் உலகம்

வாழ்ந்தோங்கக் கருதியருள் வழங்கினைஎன் தனக்கே

உலைவறும்இப் பொழுதேநல் தருணம்என நீயே

உணர்த்தினைவந் தணைந்தருள்வாய் உண்மைஉரைத் தவனே

சிலைநிகர்வன் மனங்கரைத்துத் திருவமுதம் அளித்தோய்

சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

9

3769

திருத்தகும்ஓர் தருணம்இதில் திருக்கதவம் திறந்தே
திருவருட்பே ரொளிகாட்டித் திருஅமுதம் ஊட்டிக்
கருத்துமகிழ்ந் தென்உடம்பில் கலந்துளத்தில் கலந்து
கனிந்துயிரில் கலந்தறிவிற் கலந்துலகம் அனைத்தும்
உருத்தகவே அடங்குகின்ற ஊழிதொறும் பிரியா
தொன்றாகிக் காலவரை உரைப்பஎலாம் கடந்தே
திருத்தியொடு விளங்கிஅருள் ஆடல்செய வேண்டும்
சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே.

10

திருச்சிற்றம்பலம்

## 29. சிற்சபை விளக்கம்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3770

சோறு வேண்டினும் துகில்அணி முதலாம்
சுகங்கள் வேண்டினும் சுகமலால் சுகமாம்
வேறு வேண்டினும் நினைஅடைந் தன்றி
மேவொ ணாதெனும் மேலவர் உரைக்கே
மாறு வேண்டிலேன் வந்துநிற் கின்றேன்
வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்

சாறு வேண்டிய பொழில்வடல் அரசே
சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.259

1

259. இஃது 1492 ஆம் பாடலின் உத்தர வடிவம்.

3771

எஞ்சல் இன்றிய துயரினால் இடரால்
இடுக்குண் டையநின் இன்னருள் விரும்பி
வஞ்ச நெஞ்சினேன் வந்துநிற் கின்றேன்
வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்
அஞ்சல் என்றெனை ஆட்கொளல் வேண்டும்
அப்ப நின்னலால் அறிகிலேன் ஒன்றும்
தஞ்சம் என்றவர்க் கருள்வடல் அரசே
சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

2

3772

சூழ்வி லாதுழல் மனத்தினால் சுழலும்
துட்ட னேன்அருட் சுகப்பெரும் பதிநின்
வாழ்வு வேண்டினேன் வந்துநிற் கின்றேன்
வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்
ஊழ்வி டாமையில் அரைக்கணம் எனினும்
உன்னை விட்டயல் ஒன்றும்உற் றறியேன்

தாழ்வி லாதசீர் தருவடல் அரசே
சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

3

3773

ஆட்டம் ஓய்கிலா வஞ்சக மனத்தால்
அலைதந் தையவோ அயர்ந்துளம் மயர்ந்து
வாட்ட மோடிவண் வந்துநிற் கின்றேன்
வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்
நாட்டம் நின்புடை அன்றிமற் றறியேன்
நாயி னேன்பிழை பொறுத்திது251 தருணம்
தாட்ட லந்தரு வாய்வடல் அரசே
சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

4

251. நயந்திது - பழிவேறுபாடு. ஆ. பா.

3774

கருணை ஒன்றிலாக் கல்மனக் குரங்கால்
காடு மேடுழன் றுளம்மெலிந் தந்தோ
வருண நின்புடை வந்துநிற் கின்றேன்
வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்
அருணன் என்றெனை அகற்றிடு வாயேல்
ஐய வோதுணை அறிந்திலன் இதுவே

தருணம் எற்கருள் வாய்வடல் அரசே

சத்தி யச்சபைத் தனிபெரும் பதியே.

5

3775

கரண வாதனை யால்மிக மயங்கிக்

கலங்கி னேன்ஒரு களைகணும் அறியேன்

மரணம் நீக்கிட வந்துநிற் கின்றேன்

வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்

இரணன் என்றெனை எண்ணிடேல் பிறிதோர்

இச்சை ஒன்றிலேன் எந்தைநின் உபய

சரணம் ஈந்தருள் வாய்வடல் அரசே

சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

6

3776

தூய நெஞ்சினேன் அன்றுநின் கருணைச்

சுகம்வி ழைந்திலேன் எனினும்பொய் உலக

மாயம் வேண்டிலேன் வந்துநிற் கின்றேன்

வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்

ஈய வாய்த்தநல் தருணம்ஈ தருள்க

எந்தை நின்மலர் இணைஅடி அல்லால்

தாயம் ஒன்றிலேன் தனிவடல் அரசே

சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

7

3777

சிரத்தை ஆதிய சுபகுணம் சிறிதும்

சேர்ந்தி லேன்அருட் செயலிலேன் சாகா

வரத்தை வேண்டினேன் வந்துநிற் கின்றேன்

வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்

கரத்தை நேர்உளக் கடையன்என் றெனைநீ

கைவி டேல்ஒரு கணம்இனி ஆற்றேன்

தரத்தை ஈந்தருள் வாய்வடல் அரசே

சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

8

3778

பத்தி யஞ்சிறி துற்றிலேன் உன்பால்

பத்தி ஒன்றிலேன் பரமநின் கருணை

மத்தி யம்பெற வந்துநிற் கின்றேன்

வள்ளலே உன்றன் மனக்குறிப் பறியேன்

எத்தி அஞ்சலை எனஅரு ளாயேல்

ஏழை யேன்உயிர் இழப்பன்உன் ஆணை

சத்தி யம்புகன் றேன்வடல் அரசே

சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

9

3779

கயவு செய்மத கரிஎனச் செருக்கும்

கருத்தி னேன்மனக் கரிசினால் அடைந்த

மயர்வு நீக்கிட வந்துநிற் கின்றேன்

வள்ள லேஉன்றன் மனக்குறிப் பறியேன்

உயவு வந்தருள் புரிந்திடாய் எனில்என்

உயிர் தரித்திடா துன்அடி ஆணை

தயவு செய்தருள் வாய்வடல் அரசே

சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே.

10

திருச்சிற்றம்பலம்

30. திருவருட் பேறு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3780

படிகள்எலாம் ஏற்றுவித்தீர் பரமநடம் புரியும்

பதியைஅடை வித்தீர்அப் பதிநடுவே விளங்கும்

கொடிகள்நிறை மணிமாடக் கோயிலையும் காட்டிக்

கொடுத்தீர்அக் கோயிலிலே கோபுரவா யிலிலே

செடிகள்இலாத் திருக்கதவம் திறப்பித்துக் காட்டித்

திரும்பவும்நீர் மூடுவித்தீர் திறந்திடுதல் வேண்டும்

அடிகள்இது தருணம்இனி அரைக்கணமும் தரியேன்

அம்பலத்தே நடம்புரிவீர் அளித்தருள்வீர் விரைந்தே.

1

3781

பெட்டிஇதில் உலவாத பெரும்பொருள்உண் டிதுநீ

பெறுகஎன அதுதிறக்கும் பெருந்திறவுக் கோலும்

எட்டிரண்டும் தெரியாதேன் என்கையிலே கொடுத்தீர்

இதுதருணம் திறந்ததனை எடுக்கமுயல் கின்றேன்

அட்டிசெய நினையாதீர் அரைக்கணமும் தரியேன்

அரைக்கணத்துக் காயிரம்ஆ யிரங்கோடி ஆக

வட்டிஇட்டு நும்மிடத்தே வாங்குவன்நும் ஆணை

மணிமன்றில் நடம்புரிவீர் வந்தருள்வீர் விரைந்தே.

2

3782

கைக்கிசைந்த பொருள்எனக்கு வாய்க்கிசைந்துண் பதற்கே

காலம்என்ன கணக்கென்ன கருதும்இடம் என்ன

மெய்க்கிசைந்தன் றுரைத்ததுநீர் சத்தியம் சத்தியமே

விடுவேனோ இன்றடியேன் விழற்கிறைத்தேன் அலவே

செய்க்கிசைந்த சிவபோகம் விளைத்துணவே இறைத்தேன்

தினந்தோறும் காத்திருந்தேன் திருவுளமே அறியும்

மைக்கிசைந்த விழிஅம்மை சிவகாம வல்லி

மகிழநடம் புரிகின்றீர் வந்தருள்வீர் விரைந்தே.

3

3783

பரிகலத்தே திருஅமுதம் படைத்துணவே பணித்தீர்

பணித்தபின்னோ என்னுடைய பக்குவம்பார்க் கின்றீர்

இருநிலத்தே பசித்தவர்க்குப் பசிநீக்க வல்லார்

இவர்பெரியர் இவர்சிறியர் என்னல்வழக் கலவே

உரிமையுற்றேன் உமக்கேஎன் உள்ளம்அன்றே அறிந்தீர்

உடல்பொருள்ஆ விகளைஎலாம் உம்மதெனக் கொண்டீர்

திரிவகத்தே நான்வருந்தப் பார்த்திருத்தல் அழகோ

சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகரே.

4

3784

பொய்கொடுத்த மனமாயைச் சேற்றில்விழா தெனக்கே

பொன்மணிமே டையில்ஏறிப் புந்திமகிழ்ந் திருக்கக்

கைகொடுத்தீர் உலகம்எலாம் களிக்கஉல வாத

கால்இரண்டும் கொடுத்தீர்எக் காலும்அழி யாத

மெய்கொடுக்க வேண்டும்உமை விடமாட்டேன் கண்டீர்

மேல்ஏறி னேன்இனிக்கீழ் விழைந்திறங்கேன் என்றும்

மைகொடுத்த விழிஅம்மை சிவகாம வல்லி

மகிழநடம் புரிகின்றீர் வந்தருள்வீர் விரைந்தே.

5

3785

மின்போலே வயங்குகின்ற விரிசடையீர் அடியேன்

விளங்கும்உம திணைஅடிகள் மெய்அழுந்தப் பிடித்தேன்

முன்போலே ஏமாந்து விடமாட்டேன் கண்டீர்

முனிவறியீர் இனிஒளிக்க முடியாது நுமக்கே

என்போலே இரக்கம்விட்டுப் பிடித்தவர்கள் இலையே

என்பிடிக்குள் இசைந்ததுபோல் இசைந்ததிலை பிறர்க்கே

பொன்போலே முயல்கின்ற மெய்த்தவர்க்கும் அரிதே

பொய்தவனேன் செய்தவம்வான் வையகத்திற் பெரிதே.

6

3786

எதுதருணம் அதுதெரியேன் என்னினும்எம் மானே

எல்லாஞ்செய் வல்லவனே என்தனிநா யகனே

இதுதருணம் தவறும்எனில் என்உயிர்போய் விடும்இவ்

வெளியேன்மேல் கருணைபுரிந் தெழுந்தருளல் வேண்டும்

மதுதருண வாரிசமும் மலர்ந்ததருள் உதயம்

வாய்த்ததுசிற் சபைவிளக்கம் வயங்குகின்ற துலகில்

விதுதருண அமுதளித்தென் எண்ணம்எலாம் முடிக்கும்

வேலைஇது காலைஎன விளம்பவும்வேண் டுவதோ.

7

3787

கோள்அறிந்த பெருந்தவர்தம் குறிப்பறிந்தே உதவும்

கொடையாளா சிவகாமக் கொடிக்கிசைந்த கொழுநா

ஆள்அறிந்திங் கெனைஆண்ட அரசேஎன் அமுதே

அம்பலத்தே நடம்புரியும் அரும்பெருஞ்சோ தியனே

தாள்அறிந்தேன் நின்வரவு சத்தியம்சத் தியமே

சந்தேகம் இல்லைஅந்தத் தனித்ததிரு வரவின்

நாள்அறிந்து கொளல்வேண்டும் நவிலுகநீ எனது

நனவிடையா யினும்அன்றிக் கனவிடையா யினுமே.

8

3788

அன்றெனக்கு நீஉரைத்த தருணம்இது எனவே

அறிந்திருக்கின் றேன்அடியேன் ஆயினும்என் மனந்தான்

கன்றெனச்சென் றழிக்கழஉட் கலங்குகின்ற252 தரசே

கண்ணுடைய கரும்பேஎன் கவலைமனக் கலக்கம்

பொன்றிடப்பே ரின்பவெள்ளம் பொங்கிடஇவ் வுலகில்

புண்ணியர்கள் உளங்களிப்புப் பொருந்திவிளங் கிடநீ

இன்றெனக்கு வெளிப்படஎன் இதயமலர் மிசைநின்253

றெழுந்தருளி அருள்வதெலாம் இனிதருள்க விரைந்தே.

9

252. கலக்குகின்ற - ச. மு. க. பதிப்பு.

253. மிசையின் - ச. மு. க. பதிப்பு.

3789

இதுதருணம் நமையாளற் கெழுந்தருளுந் தருணம்

இனித்தடையுன் றிலைகண்டாய் என்மனனே நீதான்

மதுவிழுமோர் ஈப்போலே மயங்காதே கயங்கி

வாடாதே மலங்காதே மலர்ந்துமகிழ்ந் திருப்பாய்

குதுகலமே இதுதொடங்கிக் குறைவிலைகாண் நமது

குருவாணை நமதுபெருங் குலதெய்வத் தாணை

பொதுவில்நடம் புரிகின்ற புண்ணியனார் எனக்குள்

புணர்ந்துரைத்த திருவார்த்தை பொன்வார்த்தை இதுவே.

10

திருச்சிற்றம்பலம்

31. உண்மை கூறல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3790

தனிப்பெருந் தலைவரே தாயவ ரேஎன்

தந்தைய ரேபெருந் தயவுடை யவரே

பனிப்பறுத் தெனையாண்ட பரம்பர ரேஎம்

பார்வதி புரஞானப் பதிசிதம் பரரே

இனிச்சிறு பொழுதேனுந் தாழ்த்திடல் வேண்டா

இறையவ ரேஉமை இங்குகண் டல்லால்

அனிச்சய உலகினைப் பார்க்கவும் மாட்டேன்
அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

1

3791

பெறுவது நுமைஅன்றிப் பிறிதொன்றும் விரும்பேன்
பேசல்நும் பேச்சன்றிப் பிறிதொன்றும் பேசேன்
உறுவதுநும் அருள்அன்றிப் பிரிதொன்றும் உவவேன்
உன்னல்உம் திறன்அன்றிப் பிரிதொன்றும் உன்னேன்
மறுநெறி தீர்த்தெனை வாழ்வித்துக் கொண்டீர்
வள்ளலே நும்திரு வரவுகண் டல்லால்
அறுசுவை உண்டிகொண் டருந்தவும் மாட்டேன்
அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

2

3792

கரும்பிடை இரதமும் கனியில்இன் சுவையும்
காட்டிஎன் உள்ளம் கலந்தினிக் கின்றீர்
விரும்பிநும் பொன்னடிக் காட்பட்டு நின்றேன்
மேல்விளை வறிகிலன் விச்சைஒன் றில்லேன்
துரும்பினும் சிறியனை அன்றுவந் தாண்டீர்
தூயநும் பேரருட் சோதிகண் டல்லால்
அரும்பெறல் உண்டியை விரும்பவும் மாட்டேன்

அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

3

3793

தடுத்தெனை ஆட்கொண்ட தந்தைய ரேஎன்

தனிப்பெருந் தலைவரே சபைநடத் தவரே

தொடுத்தொன்று சொல்கிலேன் சொப்பனத் தேனும்

தூயநும் திருவருள் நேயம்விட் டறியேன்

விடுத்திடில் என்னைநீர் விடுப்பன்என் உயிரை

வெருவுளக் கருத்தெல்லாம் திருவுளத் தறிவீர்

அடுத்தினிப் பாயலில் படுக்கவும் மாட்டேன்

அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

4

3794

காசையும் பணத்தையும் கன்னியர் தமையும்

காணியின் ஆட்சியும் கருதிலேன் கண்டீர்

நேசநும் திருவருள் நேசம்ஒன் றல்லால்

நேசம்மற் றிலைஇது நீர்அறி யீரோ

ஏசறல் அகற்றிவந் தென்னைமுன் ஆண்டீர்

இறையவ ரேஉமை இன்றுகண் டல்லால்

ஆசையிற் பிறரொடு பேசவும் மாட்டேன்

அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

5

3795

என்பொருள் என்உடல் என்உயிர் எல்லாம்

ஈந்தனன் உம்மிடத் தெம்பெரு மானீர்

இன்பொடு வாங்கிக்கொண் டென்னையாட் கொண்டீர்

என்செயல் ஒன்றிலை யாவும்நும் செயலே

வன்பொடு நிற்கிலீர் என்பொடு கலந்தீர்

வள்ளலே நும்திரு வரவுகண் டல்லால்

அன்பொடு காண்பாரை முன்பிட மாட்டேன்

அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

6

3796

திருந்தும்என் உள்ளத் திருக்கோயில் ஞான

சித்தி புரம்எனச் சத்தியம் கண்டேன்

இருந்தருள் கின்றநீர் என்னிரு கண்கள்

இன்புற அன்றுவந் தெழில்உருக் காட்டி

வருந்தலை என்றெனைத் தேற்றிய வாறே

வள்ளலே இன்றுநும் வரவுகண் டல்லால்

அருந்தவர் நேரினும் பொருந்தவும் மாட்டேன்

அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

7

3797

கரைக்கணம் இன்றியே கடல்நிலை செய்தீர்

கருணைக் கடற்குக் கரைக்கணஞ் செய்யீர்

உரைக்கண வாத உயர்வுடை யீர்என்

உரைக்கண விப்பல உதவிசெய் கின்றீர்

வரைக்கண எண்குண மாநிதி ஆனீர்

வாய்மையில் குறித்தநும் வரவுகண் டல்லால்

அரைக்கணம் ஆயினும் தரித்திட மாட்டேன்

அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

8

3798

மடுக்கநும் பேரருள் தண்அமு தெனக்கே

மாலையும் காலையும் மத்தியா னத்தும்

கடுக்கும் இரவினும் யாமத்தும் விடியற்

காலையி னுந்தந்தென் கடும்பசி தீர்த்து

எடுக்குநற் றாயொடும் இணைந்துநிற் கின்றீர்

இறையவ ரேஉம்மை இங்குகண் டல்லால்

அடுக்கவீழ் கலைஎடுத் துடுக்கவும் மாட்டேன்

அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

9

3799

கறுத்துரைக் கின்றவர் களித்துரைக் கின்ற
காலைஈ தென்றே கருத்துள் அறிந்தேன்
நிறுத்துரைக் கின்றபல் நேர்மைகள் இன்றி
நீடொளிப் பொற்பொது நாடகம் புரிவீர்
செறுத்துரைக் கின்றவர் தேர்வதற் கரியீர்
சிற்சபை யீர்எனைச் சேர்ந்திடல் வேண்டும்
அறுத்துரைக் கின்றேன்நான் பொறுத்திட மாட்டேன்
அருட்பெருஞ் சோதியீர் ஆணைநும் மீதே.

10

திருச்சிற்றம்பலம்

32. பிரியேன் என்றல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3800

அப்பாநான் பற்பலகால் அறைவதென்னே அடியேன்
அச்சம்எலாம் துன்பம்எலாம் அறுத்துவிரைந் துவந்தே
இப்பாரில் இதுதருணம் என்னைஅடைந் தருளி
எண்ணம்எலாம் முடித்தென்னை ஏன்றுகொளாய் எனிலோ
தப்பாமல் உயிர்விடுவேன் சத்தியஞ்சத் தியம்நின்
தாளிணைகள் அறிகஇது தயவுடையோய் எவர்க்கும்
துப்பாகித் துணையாகித் துலங்கியமெய்த் துணையே
சுத்தசிவா னந்தஅருட் சோதிநடத் தரசே.

1

3801

ஆணைஉன்மேல் ஆணைஉன்மேல் ஆணைஉன்மேல் ஐயா
அரைக்கணமும் நினைப்பிரிந்தே இனித்தரிக்க மாட்டேன்
கோணைநிலத் தவர்பேசக் கேட்டதுபோல் இன்னும்
குறும்புமொழி செவிகள்உறக் கொண்டிடவும் மாட்டேன்
ஊணைஉறக் கத்தையும்நான் விடுகின்றேன் நீதான்
உவந்துவராய் எனில்என்றன் உயிரையும்விட் டிடுவேன்
மாணைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்நீ எனது
மனம்அறிவாய் இனம்உனக்கு வகுத்துரைப்ப தென்னே.

2

3802

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே
பட்டதெல்லாம் போதும்இந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
உடல்உயிரா தியஎல்லாம் நீஎடுத்துக் கொண்டுன்
உடல்உயிரா தியஎல்லாம் உவந்தெனக்கே அளிப்பாய்
வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாய்என் கண்ணுள்
மணியேஎன் குருமணியே மாணிக்க மணியே
நடனசிகா மணியேஎன் நவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராஜ மணியே.

3

3803

வாழையடி வாழைஎன வந்ததிருக் கூட்ட
மரபினில்யான் ஒருவன்அன்றோ வகைஅறியேன் இந்த
ஏழைபடும் பாடுனக்குந் திருவுளச்சம் மதமோ
இதுதகுமோ இதுமுறையோ இதுதருமந் தானோ
மாழைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்யான் உனக்கு
மகன்அலனோ நீஎனக்கு வாய்த்ததந்தை அலையோ
கோழைஉல குயிர்த்துயரம் இனிப்பொறுக்க மாட்டேன்
கொடுத்தருள்நின் அருள்ஒளியைக் கொடுத்தருள்இப் பொழுதே.

4

3804

செய்வகைஎன் எனத்திகைத்தேன் திகையேல்என் றொருநாள்
திருமேனி காட்டிஎனைத் தெளிவித்தாய் நீயே
பொய்வகைஅன் றிதுநினது புந்திஅறிந் ததுவே
பொன்னடியே துணைஎனநான் என்உயிர்வைத் திருந்தேன்
எய்வகைஎன் நம்பெருமான் அருள்புரிவான் என்றே
எந்தைவர வெதிர்பார்த்தே இன்னும்இருக் கின்றேன்
ஐவகைஇவ் உயிர்த்துயரம் இனிப்பொறுக்க மாட்டேன்
அருட்சோதிப் பெரும்பொருளை அளித்தருள்இப் பொழுதே.

5

3805

முன்ஒருநாள் மயங்கினன்நீ மயங்கேல்என் றெனக்கு
முன்னின்உருக் காட்டினைநான் முகமலர்ந்திங் கிருந்தேன்
இன்னும்வரக் காணேன்நின் வரவைஎதிர் பார்த்தே
எண்ணிஎண்ணி வருந்துகின்றேன் என்னசெய்வேன் அந்தோ
அன்னையினும் தயவுடையாய் நின்தயவை நினைத்தே
ஆருயிர்வைத் திருக்கின்றேன் ஆணைஇது கண்டாய்
என்இருகண் மணியேஎன் அறிவேஎன் அன்பே
என்னுயிர்க்குப் பெருந்துணையே என்னுயிர்நா யகனே.

6

3896

உன்னைமறந் திடுவேனோ மறப்பறியேன் மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தரியேன் உன்ஆணை இதுநீ
என்னைமறந் திடுவாயோ மறந்திடுவாய் எனில்யான்
என்னசெய்வேன் எங்குறுவேன் எவர்க்குரைப்பேன் எந்தாய்
அன்னையினும் தயவுடையாய் நீமறந்தாய் எனினும்
அகிலம்எலாம் அளித்திடும்நின் அருள்மறவா தென்றே
இன்னுமிகக் களித்திங்கே இருக்கின்றேன் மறவேல்
இதுதருணம் அருட்சோதி எனக்குவிரைந் தருளே.

7

3897

நான்மறந்தேன் எனினும்எனைத் தான்மறவான் எனது

நாயகன்என் றாடுகின்றேன் எனினும்இது வரையும்

வான்மறந்தேன் வானவரை மறந்தேன்மால் அயனை

மறந்தேன்நம் உருத்திரரை மறந்தேன்என் னுடைய

ஊன்மறந்தேன் உயிர்மறந்தேன் உணர்ச்சிஎலாம் மறந்தேன்

உலகம்எலாம் மறந்தேன்இங் குன்னைமறந் தறியேன்

பான்மறந்த குழவியைப்போல் பாரேல்இங் கெனையே

பரிந்துநின தருட்சோதி புரிந்துமகிழ்ந் தருளே.

8

3898

தெருவிடத்தே விளையாடித் திரிந்தஎனை வலிந்தே

சிவமாலை அணிந்தனைஅச் சிறுவயதில் இந்த

உருவிடத்தே நினக்கிருந்த ஆசைஎலாம் இந்நாள்

ஓடியதோ புதியஒரு உருவுவிழைந் ததுவோ

கருவிடத்தே எனைக்காத்த காவலனே உனது

கால்பிடித்தேன் விடுவேனோ கைப்பிடிஅன் றதுதான்

வெருவிடத்தென் உயிர்ப்பிடிகாண் உயிர்அகன்றால் அன்றி

விடமாட்டேன் விடமாட்டேன் விடமாட்டேன் நானே.

9

3899

பெரியன்அருட் பெருஞ்சோதிப் பெருங்கருணைப் பெருமான்

பெரும்புகழைப் பேசுதலே பெரும்பேறென் றுணர்ந்தே

துரியநிலத் தவர்எல்லாம் துதிக்கின்றார் ஏழை

துதித்தல்பெரி தலஇங்கே துதித்திடஎன் றெழுந்த

அரியபெரும் பேராசைக் கடல்பெரிதே அதுஎன்

அளவுகடந் திழுக்கின்ற தாதலினால் விரைந்தே

உரியஅருள் அமுதளித்தே நினைத்துதிப்பித் தருள்வாய்

உலகமெலாம் களித்தோங்க ஓங்குநடத் தரசே.

10

3810

கவலைஎலாம் தவிர்ந்துமிகக் களிப்பினொடு நினையே

கைகுவித்துக் கண்களில்நீர் கனிந்துசுரந் திடவே

சவலைமனச் சலனம்எலாம் தீர்ந்துசுக மயமாய்த்

தானேதான் ஆகிஇன்பத் தனிநடஞ்செய் இணைத்தாள்

தவலருஞ்சீர்ச் சொன்மாலை வனைந்துவனைந் தணிந்து

தானாகி நானாடத் தருணம்இது தானே

குவலயத்தார் அதிசயிக்க எழுந்தருளி வருவாய்

குருவேஎன் குற்றமெலாம் குணமாக்கொண் டவனே.

11

திருச்சிற்றம்பலம்

## 33. சிவ தரிசனம்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3811

திருஉடையாய் சிற்சபைவாழ் சிவபதியே எல்லாம்
செய்யவல்ல தனித்தலைமைச் சித்தசிகா மணியே
உருஉடைஎன் உயிர்க்குயிராய் ஒளிர்கின்ற ஒளியே
உன்னுதொறும் என்னுளத்தே ஊறுகின்ற அமுதே
அருஉடைய பெருவெளியாய் அதுவிளங்கு வெளியாய்
அப்பாலும் ஆய்நிறைந்த அருட்பெருஞ்சோ தியனே
மருஉடையாள் சிவகாம வல்லிமண வாளா
வந்தருள்க அருட்சோதி தந்தருள்க விரைந்தே.

1

3812

சொல்லவனே பொருளவனே துரியபதத் தவனே
தூயவனே நேயவனே சோதிஉரு வவனே
நல்லவனே நன்னிதியே ஞானசபா பதியே
நாயகனே தாயகனே நண்பவனே அனைத்தும்
அல்லவனே ஆனவனே அம்மைஅப்பா என்னை
ஆண்டவனே தாண்டவனே அருட்குருவே எல்லாம்
வல்லவனே சிவகாம வல்லிமண வாளா
மன்னவனே என்னவனே வந்தருள்க விரைந்தே.

2

3813

துரியநிலை துணிந்தவரும் சொல்லரும்மெய்ப் பொருளே

சுத்தசிவா னந்தசபைச் சித்தசிகா மணியே

பெரியசிவ பதியேநின் பெருமைஅறிந் திடவே

பேராசைப் படுகின்றேன் பித்தர்களில் பெரியேன்

கரியமணித் திறத்தினையும் காணவல்லேன் அல்லேன்

கண்மணியே நின்திறத்தைக் காணுதல்வல் லேனோ

அரியபெரும் பொருளாம்உன் அருட்சோதி எனக்கே

அளித்தனையேல் அறிந்துகொள்வேன் அளித்திடுக விரைந்தே.

3

3814

மறப்பறியாப் பேரறிவில் வாய்த்தபெருஞ் சுகமே

மலைவறியா நிலைநிரம்ப வயங்கியசெம் பொருளே

இறப்பறியாத் திருநெறியில்254 என்னைவளர்த் தருளும்

என்னுடைய நற்றாயே எந்தாயே நினது

சிறப்பறியா உலகமெலாம் சிறப்பறிந்து கொளவே

சித்தசிகா மணியேநீ சித்திஎலாம் விளங்கப்

பிறப்பறியாப் பெருந்தவரும் வியப்பவந்து தருவாய்

பெருங்கருணை அரசேநீ தருந்தருணம் இதுவே.

4

254. திருநிலையில் - முதற் பதிப்பு, பொ. சு., பி. இரா.

3815

முன்னுழைப்பால் உறும்எனவே மொழிகின்றார் மொழியின்

முடிவறியேன் எல்லாம்செய் முன்னவனே நீஎன்

தன்னுழைப்பார்த் தருள்வாயேல் உண்டனைத்தும் ஒருநின்

தனதுசுதந் தரமேஇங் கெனதுசுதந் தரமோ

என்னுழைப்பால் என்பயனோ இரங்கிஅரு ளாயேல்

யானார்என் அறிவெதுமேல் என்னைமதிப் பவரார்

பொன்னுழைப்பால் பெறலும்அரி தருள்இலையேல் எல்லாம்

பொதுநடஞ்செய் புண்ணியநீ எண்ணியவா றாமே.

5

3816

விழித்துவிழித் திமைத்தாலும் சுடர்உதயம் இலையேல்

விழிகள்விழித் திளைப்பதலால் விளைவொன்றும் இலையே

மொழித்திறஞ்செய் தடிக்கடிநான் முடுகிமுயன் றாலும்

முன்னவநின் பெருங்கருணை முன்னிடல்இன் றெனிலோ

செழித்துறுநற் பயன்எதுவோ திருவுளந்தான் இரங்கில்

சிறுதுரும்போர் ஐந்தொழிலும் செய்திடல்சத் தியமே

பழித்துரைப்பார் உரைக்களலாம் பசுபதிநின் செயலே

பரிந்தெனையும் பாடுவித்துப் பரிசுமகிழ்ந் தருளே.

6

3817

மாநிருபா திபர்சூழ மணிமுடிதான் பொறுத்தே

மண்ணாள வானாள மனத்தில்நினைத் தேனோ

தேன்ஒருவா மொழிச்சியரைத் திளைக்கவிழைந் தேனோ
தீஞ்சுவைகள் விரும்பினனோ தீமைகள்செய் தேனோ
நானொருபா வமும்அறியேன் நன்னிதியே எனது
நாயகனே பொதுவிளங்கும் நடராஜ பதியே
ஏன்ஒருமை இலர்போல்நீ இருக்கின்றாய் அழகோ
என்ஒருமை அறியாயோ யாவும்அறிந் தாயே.

7

3818

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே
பதிவெறுத்தேன் நிதிவெறுத்தேன் பற்றனைத்தும் தவிர்ந்தேன்
ஆவிஉடல் பொருளைஉன்பாற் கொடுத்தேன்உன் அருட்பேர்
ஆசைமய மாகிஉனை அடுத்துமுயல் கின்றேன்
கூவிஎனை ஆட்கொள்ள நினையாயோ நினது
குறிப்பறியேன் பற்பலகால் கூறிஇளைக் கின்றேன்
தேவிசிவ காமவல்லி மகிழுமண வாளா
தெருள்நிறைவான் அமுதளிக்கும் தருணம்இது தானே.

8

3819

கட்டவிழ்ந்த கமலம்எனக் கருத்தவிழ்ந்து நினையே
கருதுகின்றேன் வேறொன்றும் கருதுகிலேன் இதுதான்
சிட்டருளம் திகழ்கின்ற சிவபதியே நினது

திருவுளமே அறிந்ததுநான் செப்புதல்என் புவிமேல்

விட்டகுறை தொட்டகுறை இரண்டும்நிறைந் தனன்நீ

விரைந்துவந்தே அருட்சோதி புரிந்தருளும் தருணம்

தொட்டதுநான் துணிந்துரைத்தேன் நீஉணர்த்த உணர்ந்தே

சொல்வதலால் என்அறிவால் சொல்லவல்லேன் அன்றே.

9

3820

காட்டைஎலாம் கடந்துவிட்டேன் நாட்டைஅடைந் துனது

கழிநகர்ப்பொன் மதிற்காட்சி கண்குளிரக் கண்டேன்

கோட்டைஎலாம் கொடிநாட்டிக் கோலமிடப் பார்த்தேன்

கோயிலின்மேல் வாயிலிலே குறைகளெலாம் தவிர்ந்தேன்

சேட்டைஅற்றுக் கருவிஎலாம் என்வசம்நின் றிடவே

சித்திஎலாம் பெற்றேன்நான் திருச்சிற்றம் பலமேல்

பாட்டைஎலாம் பாடுகின்றேன் இதுதருணம் பதியே

பலந்தரும்என் உளந்தனிலே கலந்துநிறைந் தருளே.

10

3821

சித்திஎலாம் வல்லசிவ சித்தன்உளம் கலந்தான்

செத்தாரை எழுப்புகின்ற திருநாள்கள் அடுத்த

இத்தினமே தொடங்கிஅழி யாதநிலை அடைதற்

கேற்றகுறி ஏற்றவிடத் திசைந்தியல்கின் றனநாம்

சத்தியமே பெருவாழ்வில் பெருங்களிப்புற் றிடுதல்

சந்தேகித் தலையாதே சாற்றியஎன் மொழியை

நித்தியவான் மொழிஎன்ன நினைந்துமகிழ்ந் தமைவாய்

நெஞ்சேநீ அஞ்சேல்உள் அஞ்சேல்அஞ் சேலே.

11

திருச்சிற்றம்பலம்

34. அனுபோக நிலயம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3822

இனிப்பிரிந் திறையும் இருக்கலேன் பிரிவை

எண்ணினும் ஐயவோ மயங்கிப்

பனிப்பில்என் உடம்பும் உயிரும்உள் உணர்வும்

பரதவிப் பதைஅறிந் திலையோ

தனிப்படு ஞான வெளியிலே இன்பத்

தனிநடம் புரிதனித் தலைவா

கனிப்பயன் தருதற் கிதுதகு தருணம்

கலந்தருள் கலந்தருள் எனையே.

1

3823

பிரிந்தினிச் சிறிதும் தரிக்கலேன் பிரிவைப்

பேசினும் நெய்விடுந் தீப்போல்

எரிந்துளங் கலங்கி255 மயங்கல்கண் டிலையோ

எங்கணும் கண்ணுடை எந்தாய்

புரிந்தசிற் பொதுவில் திருநடம் புரியும்

புண்ணியா என்னுயிர்த் துணைவா

கரந்திடா256 துறுதற் கிதுதகு தருணம்

கலந்தருள் கலந்தருள் எனையே.

2

255. கருகி - முதற் பதிப்பு, பொ. சு., பி. இரா., ச. மு. க.

256. கரைந்திடாது - முதற்பதிப்பு, பொ. சு., ச. மு. க.

3824

மேலைஏ காந்த வெளியிலே நடஞ்செய்

மெய்யனே ஐயனே எனக்கு

மாலையே அணிந்த மகிழ்நனே எல்லாம்

வல்லனே நல்லனே அருட்செங்

கோலையே நடத்தும் இறைவனே ஓர்எண்

குணத்தனே இனிச்சகிப் பறியேன்

காலையே தருதற் கிதுதகு தருணம்

கலந்தருள் கலந்தருள் எனையே.

3

3825

பண்டுகொண் டெனைத்தான் பிழைகுறி யாத

பண்பனே திருச்சிற்றம் பலத்தே

தொண்டுகொண் டடியர் களிக்கநின் றாடும்

தூயனே நேயனே பிரமன்

விண்டுகண் டறியா முடிஅடி எனக்கே

விளங்குறக் காட்டிய விமலா

கண்டுகொண் டுறுதற் கிதுதகு தருணம்

கலந்தருள் கலந்தருள் எனையே.

4

3826

தனித்துணை எனும்என் தந்தையே தாயே

தலைவனே சிற்சபை தனிலே

இனித்ததெள் ளமுதே என்னுயிர்க் குயிரே

என்னிரு கண்ணுள்மா மணியே

அனித்தமே நீக்கி ஆண்டஎன் குருவே

அண்ணலே இனிப்பிரி வாற்றேன்

கனித்துணை தருதற் கிதுதகு தருணம்

கலந்தருள் கலந்தருள் எனையே.

5

3827

துன்பெலாம் தவிர்க்கும் திருச்சிற்றம் பலத்தே

சோதியுட் சோதியே அழியா

இன்பெலாம் அளிக்கும் இறைவனே என்னை

ஈன்றநல் தந்தையே தாயே

அன்பெலாம் ஆகி நிறைந்ததோர் நிறைவே

அண்ணலே இனிப்பிரி வாற்றேன்

பொன்பதந் தருதற் கிதுதகு தருணம்

புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.

6

3828

ஏதும்ஒன் றறியாப் பேதையாம் பருவத்

தென்னைஆட் கொண்டெனை உவந்தே

ஓதும்இன் மொழியால் பாடவே பணித்த

ஒருவனே என்னுயிர்த் துணைவா

வேதமும் பயனும் ஆகிய பொதுவில்

விளங்கிய விமலனே ஞான

போதகம் தருதற் கிதுதகு தருணம்

புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.

7

3829

எண்ணிய எனதுள் எண்ணமே எண்ணத்

திசைந்தபேர் இன்பமே யான்தான்

பண்ணிய தவமே தவத்துறும் பலனே

பலத்தினால் கிடைத்தஎன் பதியே

தண்ணிய மதியே மதிமுடி அரசே

தனித்தசிற் சபைநடத் தமுதே

புண்ணியம் அளித்தற் கிதுதகு தருணம்

புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.

8

3830

மலப்பகை தவிர்க்கும் தனிப்பொது மருந்தே

மந்திர மேஒளிர் மணியே

நிலைப்பட எனைஅன் றாண்டருள் அளித்த

நேயனே தாயனை யவனே

பலப்படு பொன்னம் பலத்திலே நடஞ்செய்

பரமனே பரமசிற் சுகந்தான்

புலப்படத் தருதற் கிதுதகு தருணம்

புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.

9

3831

களிப்புறும் அடியேன் கையிலே கிடைத்த

கற்பகத் தீஞ்சுவைக் கனியே

வெளிப்புறத் தோங்கும் விளக்கமே அகத்தே

விளங்கும்ஓர் விளக்கமே எனக்கே

ஒளிப்பிலா தன்றே அளித்தசிற் பொதுவில்

ஒருவனே இனிப்பிரி வாற்றேன்

புளிப்பற இனித்தற் கிதுதகு தருணம்

புணர்ந்தருள் புணர்ந்தருள் எனையே.

10

திருச்சிற்றம்பலம்

## 35. சிவயோக நிலை

நேரிசை வெண்பா

3832

மதிமண்ட லத்தமுதம் வாயார உண்டே

பதிமண்ட லத்தரசு பண்ண - நிதிய

நவநேய மாக்கும் நடராச னேயெஞ்

சிவனே கதவைத் திற.

1

3833

இந்தார் அருளமுதம் யானருந்தல் வேண்டுமிங்கே

நந்தா மணிவிளக்கே ஞானசபை - எந்தாயே

கோவே எனது குருவே எனையாண்ட

தேவே கதவைத் திற.

2

3834

சாகா அருளமுதம் தானருந்தி நான்களிக்க
நாகா திபர்சூழ் நடராசா - ஏகா
பவனே பரனே பராபரனே எங்கள்
சிவனே கதவைத் திற.

3

3835

அருளோங்கு தண்ணமுதம் அன்பால் அருந்தி
மருள்நீங்கி நான்களித்து வாழப் - பொருளாந்
தவநேயர் போற்றும் தயாநிதியே எங்கள்
சிவனே கதவைத் திற.

4

3836

வானோர்க் கரிதெனவே மாமறைகள் சாற்றுகின்ற
ஞானோ தயஅமுதம் நானருந்த - ஆனாத்
திறப்பா வலர்போற்றும் சிற்றம் பலவா
சிறப்பா கதவைத் திற.

5

3837

எல்லாமும் வல்லசித்தென் றெல்லா மறைகளுஞ்சொல்
நல்லார் அமுதமது நானருந்த - நல்லார்க்கு
நல்வாழ் வளிக்கும் நடராயா மன்றோங்கு

செல்வா கதவைத் திற.

6

3838

ஏழ்நிலைக்கும் மேற்பால் இருக்கின்ற தண்ணமுதம்

வாழ்நிலைக்க நானுண்டு மாண்புறவே - கேழ்நிலைக்க

ஆவாஎன் றென்னைஉவந் தாண்டதிரு அம்பலமா

தேவா கதவைத் திற.

7

3839

ஈன உலகத் திடர்நீங்கி இன்புறவே

ஞான அமுதமது நானருந்த - ஞான

உருவே உணர்வே ஒளியே வெளியே

திருவே கதவைத் திற.

8

3840

திரையோ தசத்தே திகழ்கின்ற என்றே

வரையோது தண்ணமுதம் வாய்ப்ப - உரைஓது

வானேஎம் மானேபெம் மானே மணிமன்றில்

தேனே கதவைத் திற.

9

3841

சோதிமலை மேல்வீட்டில் தூய திருஅமுதம்
மேதினிமேல் நான்உண்ண வேண்டினேன் - ஓதரிய
ஏகா அனேகா எழிற்பொதுவில் வாழ்ஞான
தேகா கதவைத் திற.

10

திருச்சிற்றம்பலம்

36. பெற்ற பேற்றினை வியத்தல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3842

சீரிடம் பெறும்ஓர் திருச்சிற்றம் பலத்தே
திகழ்தனித் தந்தையே நின்பால்
சேரிடம் அறிந்தே சேர்ந்தனன்257 கருணை
செய்தருள் செய்திடத் தாழ்க்கில்
யாரிடம் புகுவேன் யார்துணை என்பேன்
யார்க்கெடுத் தென்குறை இசைப்பேன்
போரிட முடியா தினித்துய ரொடுநான்
பொறுக்கலேன் அருள்கஇப் போதே.

1

257. சேரிடம் அறிந்து சேர் - ஆத்திசூடி.

3843

போதுதான் விரைந்து போகின்ற தருள்நீ

புரிந்திடத் தாழ்த்தியேல் ஐயோ

யாதுதான் புரிவேன் யாரிடம் புகுவேன்

யார்க்கெடுத் தென்குறை இசைப்பேன்

தீதுதான் புரிந்தேன் எனினும்நீ அதனைத்

திருவுளத் தடைத்திடு வாயேல்

ஈதுதான் தந்தை மரபினுக் கழகோ

என்னுயிர்த் தந்தைநீ அலையோ.

2

3844

தந்தைநீ அலையோ தனயன்நான் அலனோ

தமியனேன் தளர்ந்துளங் கலங்கி

எந்தையே குருவே இறைவனே முறையோ

என்றுநின் றோலிடு கின்றேன்

சிந்தையே அறியார் போன்றிருந் தனையேல்

சிறியனேன் என்செய்கேன் ஐயோ

சந்தையே புகுந்த நாயினில் கடையேன்

தளர்ச்சியைத் தவிர்ப்பவர் யாரே.

3

3845

யாரினும் கடையேன் யாரினும் சிறியேன்

என்பிழை பொறுப்பவர் யாரே

பாரினும் பெரிதாம் பொறுமையோய் நீயே

பாவியேன் பிழைபொறுத் திலையேல்

ஊரினும் புகுத ஒண்ணுமோ பாவி

உடம்பைவைத் துலாவவும் படுமோ

சேரினும் எனைத்தான் சேர்த்திடார் பொதுவாம்

தெய்வத்துக் கடாதவன் என்றே.

4

3846

அடாதகா ரியங்கள் செய்தனன் எனினும்

அப்பநீ அடியனேன் தன்னை

விடாதவா றறிந்தே களித்திருக் கின்றேன்

விடுதியோ விட்டிடு வாயேல்

உடாதவெற் றரைநேர்ந் துயங்குவேன் ஐயோ

உன்னருள் அடையநான் இங்கே

படாதபா டெல்லாம் பட்டனன் அந்தப்

பாடெலாம் நீஅறி யாயோ.

5

3847

அறிந்திலை யோஎன் பாடெலாம் என்றே

அழைத்தனன் அப்பனே என்னை

எறிந்திடா திந்தத் தருணமே வந்தாய்

எடுத்தணைத் தஞ்சிடேல் மகனே
பிறிந்திடேம் சிறிதும் பிறிந்திடேம் உலகில்
பெருந்திறல் சித்திகள் எல்லாம்
சிறந்திட உனக்கே தந்தனம் எனஎன்
சென்னிதொட் டுரைத்தனை களித்தே.

6

3848

களித்தென துடம்பில் புகுந்தனை எனது
கருத்திலே அமர்ந்தனை கனிந்தே
தெளித்தஎன் அறிவில் விளங்கினை உயிரில்
சிறப்பினால் கலந்தனை உள்ளம்
தளிர்த்திடச் சாகா வரங்கொடுத் தென்றும்
தடைபடாச் சித்திகள் எல்லாம்
அளித்தனை எனக்கே நின்பெருங் கருணை
அடியன்மேல் வைத்தவா றென்னே.

7

3849

என்நிகர் இல்லா இழிவினேன் தனைமேல்
ஏற்றினை யாவரும் வியப்பப்
பொன்இயல் வடிவும் புரைபடா உளமும்
பூரண ஞானமும் பொருளும்

உன்னிய எல்லாம் வல்லசித் தியும்பேர்

உவகையும் உதவினை எனக்கே

தன்னிகர் இல்லாத் தலைவனே நினது

தயவைஎன் என்றுசாற் றுவனே.

8

3850

சாற்றுவேன் எனது தந்தையே தாயே

சற்குரு நாதனே என்றே

போற்றுவேன் திருச்சிற் றம்பலத் தாடும்

பூரணா எனஉல கெல்லாம்

தூற்றுவேன் அன்றி எனக்குநீ செய்த

தூயபேர் உதவிக்கு நான்என்

ஆற்றுவேன் ஆவி உடல்பொருள் எல்லாம்

அப்பநின் சுதந்தரம் அன்றோ.

9

3851

சுதந்தரம் உனக்கே கொடுத்தனம் உனது

தூயநல் உடம்பினில் புகுந்தேம்

இதந்தரும் உளத்தில் இருந்தனம் உனையே

இன்புறக் கலந்தனம் அழியாப்

பதந்தனில் வாழ்க அருட்பெருஞ் சோதிப்

பரிசுபெற் றிடுகபொற் சபையும்

சிதந்தரு சபையும் போற்றுக என்றாய்

தெய்வமே வாழ்கநின் சீரே.

10

திருச்சிற்றம்பலம்

37. அழிவுறா அருள்வடிவப் பேறு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3852

சிவங்க னிந்தசிற் றம்பலத் தருள்நடம் செய்கின்ற பெருவாழ்வே

நவங்க னிந்தமேல் நிலைநடு விளங்கிய நண்பனே அடியேன்றன்

தவங்க னிந்ததோர் விண்ணப்பம் திருச்செவி தரித்தருள் புரிந்தாயே

பவங்க னிந்தஇவ் வடிவமே அழிவுறாப் பதிவடி வாமாறே.

1

3853

விளங்கு கின்றசிற் றம்பலத் தருள்நடம் விளைக்கின்ற பெருவாழ்வே

களங்க மில்லதோர் உளநடு விளங்கிய கருத்தனே அடியேன்நான்

விளம்பி நின்றதோர் விண்ணப்பம் திருச்செவி வியந்தருள் புரிந்தாயே

உளங்கொள் இவ்வடி விம்மையே மந்திர ஒளிவடி வாமாறே.

2

3854

விஞ்சு கின்றசிற் றம்பலத் தருள்நடம் விளைக்கின்ற பெருவாழ்வே

எஞ்சல் அற்றமா மறைமுடி விளங்கிய என்னுயிர்த் துணையேநான்

அஞ்சல் இன்றியே செய்தவிண் ணப்பம்ஏற் றகங்களித் தளித்தாயே

துஞ்சும் இவ்வுடல் அழிவுறா தோங்குமெய்ச் சுகவடி வாமாறே.

3

3855

ஓங்கு கின்றசிற் றம்பலத் தருள்நடம் ஒளிர்கின்ற பெருவாழ்வே

தேங்கு லாவிய தெள்ளமு தேபெருஞ் செல்வமே சிவமேநின்

பாங்க னேன்மொழி விண்ணப்பம் திருச்செவி பதித்தருள் புரிந்தாயே

ஈங்கு வீழுடல் என்றும்வீ ழாதொளிர் இயல்வடி வாமாறே.

4

3856

இலங்கு கின்றசிற் றம்பலத் தருள்நடம் இடுகின்ற பெருவாழ்வே

துலங்கு பேரருட் சோதியே சோதியுள் துலங்கிய பொருளேஎன்

புலங்கொள் விண்ணப்பம் திருச்செவிக் கேற்றருள் புரிந்தனைஇஞ்ஞான்றே

அலங்கும் இவ்வுடல் எற்றையும் அழிவுறா அருள்வடி வாமாறே.

5

3857

சிறந்த பேரொளித் திருச்சிற்றம் பலத்திலே திகழ்கின்ற பெருவாழ்வே

துறந்த பேருளத் தருட்பெருஞ் சோதியே சுகப்பெரு நிலையேநான்

மறந்தி டாதுசெய் விண்ணப்பம் திருச்செவி மடுத்தருள் புரிந்தாயே

பிறந்த இவ்வுடல் என்றும்இங் கழிவுறாப் பெருமைபெற் றிடுமாறே.

6

3858

வயங்கு கின்றசிற் றம்பலந் தன்னிலே வளர்கின்ற பெருவாழ்வே

மயங்கு றாதமெய் அறிவிலே விளங்கிய மாமணி விளக்கேஇங்

கியங்கு சிற்றடி யேன்மொழி விண்ணப்பம் ஏற்றருள் புரிந்தாயே

தயங்கும் இவ்வுடல் எற்றையும் அழிவுறாத் தனிவடி வாமாறே.

7

3859

தீட்டு கின்றசிற் றம்பலந் தன்னிலே திகழ்கின்ற பெருவாழ்வே

காட்டு கின்றதோர் கதிர்நடு விளங்கிய கடவுளே அடியேன்நான்

நீட்டி நின்றதோர் விண்ணப்பம் திருச்செவி நிறைத்தருள் புரிந்தாயே

பூட்டும் இவ்வுடல் எற்றையும் அழிவுறாப் பொன்வடி வாமாறே.

8

3860

தடையி லாதசிற் றம்பலந் தன்னிலே தழைக்கின்ற பெருவாழ்வே

கடையி லாப்பெருங் கதிர்நடு விளங்கும்ஓர் கடவுளே அடியேன்நான்

இடைவு றாதுசெய் விண்ணப்பம் திருச்செவிக் கேற்றருள் புரிந்தாயே

புடையின் இவ்வுடல் எற்றையும் அழிவுறாப் பொன்வடி வாமாறே.

9

3861

கையின் நெல்லிபோல் விளங்குசிற் றம்பலங் கலந்தருள் பெருவாழ்வே

மெய்யி லேவிளைந் தோங்கிய போகமே மெய்ப்பெரும் பொருளேநான்

ஐய மற்றுரைத் திட்டவிண் ணப்பம்ஏற் றளித்தனை இஞ்ஞான்றே

செய்யும் இவ்வுடல் என்றுமிங் கழிவுறாச் சிவவடி வாமாறே.

10

திருச்சிற்றம்பலம்

## 38. பேரருள் வாய்மையை வியத்தல்

கட்டளைக் கலித்துறை

3862

நன்றே தருந்திரு நாடகம் நாடொறும் ஞானமணி

மன்றே விளங்கப் புரிகின்ற ஆனந்த வார்கழலோய்

இன்றே அருட்பெருஞ் சோதிதந் தாண்டருள் எய்துகணம்

ஒன்றே எனினும் பொறேன்அருள் ஆணை உரைத்தனனே.

1

3863

தற்சோதி என்னுயிர்ச் சத்திய சோதி தனித்தலைமைச்

சிற்சோதி மன்றொளிர் தீபக சோதிஎன் சித்தத்துள்ளே

நற்சோதி ஞானநல் நாடக சோதி நலம்புரிந்த

பொற்சோதி ஆனந்த பூரண சோதிஎம் புண்ணியனே.

2

3864

திரைகண்ட மாயைக் கடல்கடந் தேன்அருட் சீர்விளங்கும்

கரைகண் டடைந்தனன் அக்கரை மேல்சர்க் கரைகலந்த

உரைகண்ட தெள்ளமு துண்டேன் அருளொளி ஓங்குகின்ற

வரைகண்ட தன்மிசை உற்றேன் உலகம் மதித்திடவே.

3

3865

மனக்கேத மாற்றிவெம் மாயையை நீக்கி மலிந்தவினை

தனக்கே விடைகொடுத் தாணவம் தீர்த்தருள் தண்ணமுதம்

எனக்கே மிகவும் அளித்தருட் சோதியும் ஈந்தழியா

இனக்கேண்மை யுந்தந்தென் உட்கலந் தான்மன்றில் என்னப்பனே.

4

3866

வாதித்த மாயை வினையா ணவம்எனும் வன்மலத்தைச்

சேதித்தென் உள்ளம் திருக்கோயி லாக்கொண்டு சித்திஎலாம்

போதித் துடம்பையும் பொன்னுடம் பாக்கிநற் புத்தமுதும்

சாதித் தருளிய நின்னருட் கியான்செயத் தக்கதென்னே.

5

3867

செத்தார் எழுகெனச் சிந்தைசெய் முன்னஞ் சிரித்தெழவே

இத்தா ரணியில் அருட்பெருஞ் சோதி எனக்களித்தாய்

எத்தாலும் என்றும் அழியா வடிவுதந் தென்னுள்நின்னை

வைத்தாய் மணிமன்ற வாணநின் பேரருள் வாய்மையென்னே.

6

3868

ஆக்கல்ஒன் றோதொழில் ஐந்தையும் தந்திந்த அண்டபிண்ட

வீக்கம்எல் லாம்சென்றுன் இச்சையின் வண்ணம் விளங்குகநீ

ஏக்கமு றேல்என் றுரைத்தருட் சோதியும் ஈந்தெனக்கே

ஊக்கமெ லாம்உற உட்கலந் தான்என் உடையவனே.

7

3869

என்னேஎன் மீதெம் பெருமான் கருணை இருந்தவண்ணம்

தன்னேர் இலாத அருட்பெருஞ் சோதியைத் தந்துலகுக்

கன்னே எனவிளை யாடுக என்றழி யாதசெழும்

பொன்னேர் வடிவும் அளித்தென் உயிரில் புணர்ந்தனனே.

8

3870

அச்சோ என்என்று புகல்வேன்என் ஆண்டவன் அம்பலத்தான்

எச்சோ தனையும் இயற்றாதென் னுட்கலந் தின்னருளாம்

மெய்ச்சோதி ஈந்தெனை மேனிலைக் கேற்றி விரைந்துடம்பை

இச்சோதி ஆக்கிஅழியா நலந்தந்த விச்சையையே.

9

3871

வாழிஎன் ஆண்டவன் வாழிஎங் கோன்அருள் வாய்மைஎன்றும்

வாழிஎம் மான்புகழ் வாழிஎன் நாதன் மலர்ப்பதங்கள்

வாழிமெய்ச் சுத்தசன் மார்க்கப் பெருநெறி மாண்புகொண்டு

வாழிஇவ் வையமும் வானமும் மற்றவும் வாழியவே.

10

3872

அருட்பெருஞ் சோதி அமுதமே அமுதம்

அளித்தெனை வளர்த்திட அருளாம்

தெருட்பெருந் தாய்தன் கையிலே கொடுத்த

தெய்வமே சத்தியச் சிவமே

இருட்பெரு நிலத்தைக் கடத்திஎன் றனைமேல்

ஏற்றிய இன்பமே எல்லாப்

பொருட்பெரு நெறியும் காட்டிய குருவே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

1

3873

சித்தெலாம் வல்ல சித்தனே ஞான

சிதம்பர ஜோதியே சிறியேன்

கத்தெலாம் தவிர்த்துக் கருத்தெலாம் அளித்த

கடவுளே கருணையங் கடலே

சத்தெலாம் ஒன்றே சத்தியம் எனஎன்

தனக்கறி வித்ததோர் தயையே

புத்தெலாம் நீக்கிப் பொருளெலாம் காட்டும்

பொதுநடம் புரிகின்ற பொருளே.

2

3874

கலைகளோர் அனந்தம் அனந்தமேல் நோக்கிக்

கற்பங்கள் கணக்கில கடப்ப

நிலைகளோர் அனந்தம் நேடியுங் காணா

நித்திய நிற்குண(258) நிறைவே

அலைகளற் றுயிருக் கமுதளித் தருளும்

அருட்பெருங் கடல்எனும் அரசே

புலைகள வகற்றி எனக்குளே நிறைந்து

பொதுநடம் புரிகின்ற பொருளே.

3

(258). நிர்க்குண - முதற்பதிப்பு. பொ. சு., பி. இரா., ச. மு. க.

3875

தண்ணிய மதியே தனித்தசெஞ் சுடரே

சத்திய சாத்தியக் கனலே

ஒண்ணிய ஒளியே ஒளிக்குள்ஓர் ஒளியே

உலகெலாந் தழைக்கமெய் உளத்தே

நண்ணிய விளக்கே எண்ணிய படிக்கே

நல்கிய ஞானபோ னகமே

புண்ணிய நிதியே கண்ணிய நிலையே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

4

3876

அற்புத நிறைவே சற்புதர்259 அறிவில்

அறிவென அறிகின்ற அறிவே

சொற்புனை மாயைக் கற்பனை கடந்த

துரியநல் நிலத்திலே துலங்கும்

சிற்பரஞ் சுடரே தற்பர ஞானச்

செல்வமே சித்தெலாம் புரியும்

பொற்புலம் அளித்த நற்புலக் கருத்தே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

5

(259). சற்புதர் - நல்லறிவுடையவர்.

3877

தத்துவ பதியே தத்துவம் கடந்த

தனித்ததோர் சத்திய பதியே

சத்துவ நெறியில் சார்ந்தசன் மார்க்கர்

தமக்குளே சார்ந்தநற் சார்பே

பித்துறு சமயப் பிணக்குறும் அவர்க்குப்

பெறல்அரி தாகிய(260) பேறே

புத்தமு தளித்தென் உளத்திலே கலந்து

பொதுநடம் புரிகின்ற பொருளே.

6

(260). பெரிதரிதாகிய - பொ. சு. பதிப்பு.

3878

மேல்வெளி காட்டி வெளியிலே விளைந்த

விளைவெலாம் காட்டிமெய் வேத

நூல்வழி காட்டி என்னுளே விளங்கும்

நோக்கமே ஆக்கமுந் திறலும்

நால்வகைப் பயனும் அளித்தெனை வளர்க்கும்

நாயகக் கருணைநற் றாயே
போலுயிர்க் குயிராய்ப் பொருந்திய மருந்தே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

7

3879

அலப்பற விளங்கும் அருட்பெரு விளக்கே
அரும்பெருஞ் சோதியே சுடரே
மலப்பிணி அறுத்த வாய்மைஎம் மருந்தே
மருந்தெலாம் பொருந்திய மணியே
உலப்பறு கருணைச் செல்வமே எல்லா
உயிர்க்குளும் நிறைந்ததோர் உணர்வே
புலப்பகை தவிர்க்கும் பூரண வரமே
பொதுநடம் புரிகின்ற பொருளே.

8

3880

பரம்பர நிறைவே பராபர வெளியே
பரமசிற் சுகந்தரும் பதியே
வரம்பெறு சிவசன் மார்க்கர்தம் மதியில்
வயங்கிய பெருஞ்சுடர் மணியே
கரம்பெறு கனியே கனிவுறு சுவையே
கருதிய கருத்துறு களிப்பே

புரம்புகழ் நிதியே சிரம்புகல் கதியே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

9

3881

வெற்புறு முடியில் தம்பமேல் ஏற்றி

மெய்ந்நிலை அமர்வித்த வியப்பே

கற்புறு கருத்தில் இனிக்கின்ற கரும்பே

கருணைவான் அமுதத்தெண் கடலே(261)

அற்புறும் அறிவில் அருள்ஒளி ஆகி

ஆனந்த மாம்அனு பவமே

பொற்புறு பதியே அற்புத நிதியே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

10

(261). தண்கடலே - படிவேறுபாடு. ஆ. பா.

3882

தன்மைகாண் பரிய தலைவனே எல்லாம்

தரவல்ல சம்புவே சமயப்

புன்மைநீத் தகமும் புறமும்ஒத் தமைந்த

புண்ணியர் நண்ணிய புகலே

வன்மைசேர் மனத்தை நன்மைசேர் மனமா

வயங்குவித் தமர்ந்தமெய் வாழ்வே

பொன்மைசார் கனகப் பொதுவொடு ஞானப்

பொதுநடம் புரிகின்ற பொருளே.

11

3883

மூவிரு முடிபின் முடிந்ததோர்(262) முடிபே

முடிபெலாம் கடந்ததோர் முதலே

தாவிய முதலும் கடையும்மேற் காட்டாச்

சத்தியத் தனிநடு நிலையே

மேவிய நடுவில் விளங்கிய விளைவே

விளைவெலாம் தருகின்ற வெளியே

பூவியல் அளித்த புனிதசற் குருவே

பொதுநடம் புரிகின்ற பொருளே

12

(262). முடிந்தவோர் - முதற்பதிப்பு, பொ. சு., பி. இரா., ச. மு. க., ஆ. பா.

3884

வேதமும் பொருளும் பயனும்ஓர் அடைவும்

விளம்பிய அனுபவ விளைவும்

போதமும் சுகமும் ஆகிஇங் கிவைகள்

போனது மாய்ஒளிர் புலமே

ஏதமுற் றிருந்த ஏழையேன் பொருட்டிவ்

விருநிலத் தியல்அருள் ஒளியால்

பூதநல் வடிவம் காட்டிஎன் உளத்தே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

13

3885

அடியனேன் பொருட்டிவ் வவனிமேல் கருணை

அருள்வடி வெடுத்தெழுந் தருளி

நெடியனே முதலோர் பெறற்கரும் சித்தி

நிலைஎலாம் அளித்தமா நிதியே

மடிவுறா தென்றும் சுத்தசன் மார்க்கம்

வயங்கநல் வரந்தந்த வாழ்வே

பொடிஅணி கனகப் பொருப்பொளிர் நெருப்பே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

14

3886

என்பிழை அனைத்தும் பொறுத்தருள் புரிந்தென்

இதயத்தில் இருக்கின்ற குருவே

அன்புடை அரசே அப்பனே என்றன்

அம்மையே அருட்பெருஞ் சோதி

இன்புறு நிலையில் ஏற்றிய துணையே

என்னுயிர் நாதனே என்னைப்

பொன்புனை மாலை புனைந்தலூர் பதியே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

15

3887

சத்திய பதியே சத்திய நிதியே

சத்திய ஞானமே வேத

நித்திய நிலையே நித்திய நிறைவே

நித்திய வாழ்வருள் நெறியே

சித்திஇன் புருவே சித்தியின் கருவே

சித்தியிற் சித்தியே எனது

புத்தியின் தெளிவே புத்தமு தளித்துப்

பொதுநடம் புரிகின்ற பொருளே.

16

3888

சிதத்தொளிர் பரமே பரத்தொளிர் பதியே

சிவபத அனுபவச் சிவமே

மதத்தடை தவிர்த்த மதிமதி மதியே

மதிநிறை அமுதநல் வாய்ப்பே

சதத்திரு நெறியே தனிநெறித் துணையே

சாமியே தந்தையே தாயே

புதப்பெரு வரமே புகற்கருந் தரமே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

17

3889

கலைவளர் கலையே கலையினுட் கலையே

கலைஎலாம் தரும்ஒரு கருவே

நிலைவளர் கருவுட் கருஎன வயங்கும்

நித்திய வானமே ஞான

மலைவளர் மருந்தே மருந்துறு பலனே

மாபலம் தருகின்ற வாழ்வே

புலைதவிர்த் தெனையும் பொருளெனக் கொண்டு

பொதுநடம் புரிகின்ற பொருளே.

18

3890

மெய்ம்மையே கிடைத்த மெய்ம்மையே ஞான

விளக்கமே விளக்கத்தின் வியப்பே

கைம்மையே தவிர்த்து மங்கலம் அளித்த

கருணையே கரிசிலாக் களிப்பே

ஐம்மையே அதற்குள் அதுஅது ஆகும்

அற்புதக் காட்சியே எனது

பொய்ம்மையே பொறுத்துப் புகலளித் தருளிப்

பொதுநடம் புரிகின்ற பொருளே.

19

3891

காரண அருவே காரிய உருவே

காரண காரியம் காட்டி

ஆரண முடியும் ஆகம முடியும்

அமர்ந்தொளிர் அற்புதச் சுடரே

நாரண தலமே(263) நாரண வலமே

நாரணா காரத்தின் ஞாங்கர்ப்

பூரண ஒளிசெய் பூரண சிவமே

பொதுநடம் புரிகின்ற பொருளே.

20

(263). தரமே - முதற்பதிப்பு. பொ. சு., ஆ. பா.

## 40. ஆனந்தானுபவம்

நேரிசை வெண்பா

3892

கள்ளத்தை எல்லாம் கடக்கவிட்டேன் நின்அருளாம்

வெள்ளத்தை எல்லாம் மிகஉண்டேன் - உள்ளத்தே

காணாத காட்சிஎலாம் காண்கின்றேன் ஓங்குமன்ற(264)

வாணா நினக்கடிமை வாய்த்து.

1

(264). ஓங்குமறை - படிவேறுபாடு. ஆ. பா.

3893

காலையிலே நின்றன்னைக் கண்டுகொண்டேன் சன்மார்க்கச்

சாலையிலே இன்பம் தழைக்கின்றேன் - ஞாலமிசைச்

சாகா வரம்பெற்றேன் தத்துவத்தின் மேல்நடிக்கும்

ஏகா நினக்கடிமை ஏற்று.

2

3894

மூவர்களும் செய்ய முடியா முடிபெல்லாம்

யாவர்களுங் காண எனக்களித்தாய் - மேவுகடை

நாய்க்குத் தவிசளித்து நன்முடியும் சூட்டுதல்எந்

தாய்க்குத் தனிஇயற்கை தான்.

3

3895

கொள்ளைஎன இன்பம் கொடுத்தாய் நினதுசெல்வப்

பிள்ளைஎன எற்குப் பெயரிட்டாய் - தெள்ளமுதம்

தந்தாய் சமரசசன் மார்க்கசங்கத் தேவைத்தாய்

எந்தாய் கருணை இது.

4

3896

கண்டேன் களித்தேன் கருணைத் திருஅமுதம்

உண்டேன் உயர்நிலைமேல் ஓங்குகின்றேன் - கொண்டேன்

அழியாத் திருஉருவம் அச்சோஎஞ் ஞான்றும்

அழியாச்சிற் றம்பலத்தே யான்.

5

3897

பார்த்தேன் பணிந்தேன் பழிச்சினேன் மெய்ப்புளகம்

போர்த்தேன்என் உள்ளமெலாம் பூரித்தேன் - ஆர்த்தேநின்

றாடுகின்றேன் பாடுகின்றேன் அன்புருவா னேன்அருளை

நாடுகின்றேன் சிற்சபையை நான்.

6

3898

எண்ணுகின்றேன் எண்ணங்கள் எல்லாம் தருகின்றான்

உண்ணுகின்றேன் உண்ணஉண்ண ஊட்டுகின்றான் - நண்ணுதிருச்

சிற்றம் பலத்தே திருநடஞ்செய் கின்றான்என்

குற்றம் பலபொறுத்துக் கொண்டு.

7

3899

கொண்டான் அடிமை குறியான் பிழைஒன்றும்

கண்டான்(265) களித்தான் கலந்திருந்தான் - பண்டாய

நான்மறையும் ஆகமமும் நாடுந் திருப்பொதுவில்

வான்மயத்தான் என்னை மகிழ்ந்து.

8

(265). கண்டே - முதற்பதிப்பு. பி. இரா.

3990

கண்டேன் களித்தேன் கருணைத் திருஅமுதம்

உண்டேன் அழியா உரம்(266) பெற்றேன் - பண்டே

எனைஉவந்து கொண்டான் எழில்ஞான மன்றம்

தனைஉவந்து கொண்டான் தனை.

9

(266). வரம் - படிவேறுபாடு. ஆ. பா.

3991

தாதையாம் என்னுடைய தாயாம்என் சற்குருவாம்

மேதையாம் இன்ப விளைவுமாம் - ஓது

குணவாளன் தில்லைஅருட் கூத்தன் உமையாள்

மணவாளன் பாத மலர்.

10

3992

திருவாம்என் தெய்வமாம் தெள்ளமுத ஞானக்

குருவாம் எனைக்காக்கும் கோவாம் - பருவரையின்

தேப்பிள்ளை யாம்எம் சிவகாம வல்லிமகிழ்

மாப்பிள்ளை பாத மலர்.

11

3903

என்அறிவாம் என்அறிவின் இன்பமாம் என்னறிவின்

தன்அறிவாம் உண்மைத் தனிநிலையாம் - மன்னுகொடிச்

சேலைஇட்டான் வாழச் சிவகாம சுந்தரியை

மாலைஇட்டான் பாதமலர்.

12

## 41. பரசிவ நிலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3904.

அருட்சோதித் தெய்வம்எனை ஆண்டுகொண்ட தெய்வம்

அம்பலத்தே ஆடுகின்ற ஆனந்தத் தெய்வம்

பொருட்சாரும் மறைகளெலாம் போற்றுகின்ற தெய்வம்

போதாந்தத் தெய்வம்உயர் நாதாந்தத் தெய்வம்

இருட்பாடு நீக்கிஒளி ஈந்தருளும் தெய்வம்

எண்ணியநான் எண்ணியவா றெனக்கருளும் தெய்வம்

தெருட்பாடல் உவந்தெனையும் சிவமாக்கும் தெய்வம்

சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

1

3905

எல்லாஞ்செய் வல்லதெய்வம் எங்கும்நிறை தெய்வம்

என்னுயிரில் கலந்தெனக்கே இன்பநல்கும் தெய்வம்

நல்லார்க்கு நல்லதெய்வம் நடுவான தெய்வம்

நற்சபையில் ஆடுகின்ற நடராசத் தெய்வம்

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுந் தெய்வம்

காரணமாந் தெய்வம்அருட் பூரணமாந் தெய்வம்

செல்லாத நிலைகளெலாஞ் செல்லுகின்ற தெய்வம்

சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

௨

3996

தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்

தன்னைநிகர் இல்லாத தனித்தலைமைத் தெய்வம்

வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்

மலரடிஎன் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம்

காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம்

கருணைநிதித் தெய்வம்முற்றுங் காட்டுவிக்குந் தெய்வம்

சேயாக எனைவளர்க்குந் தெய்வமகா தெய்வம்

சிற்சபையில் ஆடுகின்ற தெய்வமதே தெய்வம்.

3

3997

என்னிதய கமலத்தே இருந்தருளுந் தெய்வம்

என்னிரண்டு கண்மணிக்குள் இலங்குகின்ற தெய்வம்

பொன்னடிஎன் சென்னியிலே பொருந்தவைத்த தெய்வம்

பொய்யாத தெய்வம்இடர் செய்யாத தெய்வம்
அன்னியம்அல் லாததெய்வம் அறிவான தெய்வம்
அவ்வறிவுக் கறிவாம்என் அன்பான தெய்வம்
சென்னிலையில் செம்பொருளாய்த் திகழ்கின்ற தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

௪

3998

எண்ணியவா விளையாடென் றெனைஅளித்த தெய்வம்
எல்லாஞ்செய் வல்லசித்தே எனக்கீந்த தெய்வம்
நண்ணியபொன் னம்பலத்தே நடம்புரியுந் தெய்வம்
நானாகித் தானாகி நண்ணுகின்ற தெய்வம்
பண்ணியஎன் பூசையிலே பலித்தபெருந் தெய்வம்
பாடுகின்ற மறைமுடியில் ஆடுகின்ற தெய்வம்
திண்ணியன்என் றெனைஉலகம் செப்பவைத்த தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

5

3999

இச்சைஎலாம் எனக்களித்தே எனைக்கலந்த தெய்வம்
இறந்தவர்கள் அனைவரையும் எழுப்புகின்ற தெய்வம்
எச்சமயத் தெய்வமுந்தான் எனநிறைந்த தெய்வம்
எல்லாஞ்செய் வல்லதெய்வம் எனதுகுல தெய்வம்

பிச்சகற்றும் பெருந்தெய்வம் சிவகாமி எனும்ஓர்

பெண்கொண்ட தெய்வம்எங்கும் கண்கண்ட தெய்வம்

செச்சைமலர்267 எனவிளங்குந் திருமேனித் தெய்வம்

சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

6

267. செச்சைமலர் - வெட்சிமலர். முதற்பதிப்பு.

3910

சாகாத வரம்எனக்கே தந்ததனித் தெய்வம்

சன்மார்க்க சபையில்எனைத் தனிக்கவைத்த தெய்வம்

மாகாத லால்எனக்கு வாய்த்தஒரு தெய்வம்

மாதவரா தியர்எல்லாம் வாழ்த்துகின்ற தெய்வம்

ஏகாத நிலைஅதன்மேல் எனைஏற்றும் தெய்வம்

எண்ணுதொறும் என்னுளத்தே இனிக்கின்ற தெய்வம்

தேகாதி உலகமெலாஞ் செயப்பணித்த தெய்வம்

சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

7

3911

தூண்டாத மணிவிளக்காய்த் துலங்குகின்ற தெய்வம்

துரியதெய்வம் அரியதெய்வம் பெரியபெருந் தெய்வம்

மாண்டாரை எழுப்புகின்ற மருந்தான தெய்வம்

மாணிக்க வல்லியைஓர் வலத்தில்வைத்த தெய்வம்

ஆண்டாரை ஆண்டதெய்வம் அருட்சோதித் தெய்வம்

ஆகமவே தாதிஎலாம் அறிவரிதாந் தெய்வம்

தீண்டாத வெளியில்வளர் தீண்டாத தெய்வம்

சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

8

3912

எவ்வகைத்தாந் தவஞ்செயினும் எய்தரிதாந் தெய்வம்

எனக்கெளிதிற் கிடைத்தென்மனம் இடங்கொண்ட தெய்வம்

அவ்வகைத்தாந் தெய்வம்அதற் கப்பாலாந் தெய்வம்

அப்பாலும் பெருவெளிக்கே அப்பாலாந் தெய்வம்

ஒவ்வகத்தே ஒளியாகி ஓங்குகின்ற தெய்வம்

ஒன்றான தெய்வம்மிக நன்றான தெய்வம்

செவ்வகைத்தென் றறிஞரெலாஞ் சேர்பெரிய தெய்வம்

சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

9

3913

சத்தியமாந் தனித்தெய்வம் தடையறியாத் தெய்வம்

சத்திகள்எல் லாம்விளங்கத் தாணோங்கும் தெய்வம்

நித்தியதன் மயமாகி நின்றதெய்வம் எல்லா

நிலைகளுந்தன் அருள்வெளியில் நிலைக்கவைத்த தெய்வம்

பத்திவலைப் படுகின்ற தெய்வம்எனக் கெல்லாப்

பரிசுமளித் தழியாத பதத்தில்வைத்த தெய்வம்

சித்திஎலாந் தருதெய்வம் சித்தாந்தத் தெய்வம்

சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

10

## 42. பேரானந்தப் பெருநிலை

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3914.

அணிவளர் திருச்சிற் றம்பலத் தாடும்

ஆனந்த போகமே அமுதே

மணிவளர் ஒளியே ஒளியினுள் ஒளியே

மன்னும்என் ஆருயிர்த் துணையே

துணிவுறு சித்தாந் தப்பெரும் பொருளே

தூயவே தாந்தத்தின் பயனே

பணிவுறும் உளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

1

3915

திருவளர் திருச்சிற் றம்பலத் தாடும்

தெய்வமே மெய்ப்பொருட் சிவமே

உருவளர் ஒளியே ஒளியினுள் ஒளியே

ஓங்கும்என் உயிர்ப்பெருந் துணையே

ஒருதனித் தலைமை அருள்வெளி நடுவே

உவந்தர சளிக்கின்ற அரசே

பருவரல் நீக்கி இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

௨

3916

துதிவளர் திருச்சிற் றம்பலத் தாடும்

சோதியுட் சோதியே எனது

மதிவளர் மருந்தே மந்திர மணியே

மன்னிய பெருங்குண மலையே

கதிதரு துரியத் தனிவெளி நடுவே

கலந்தர சாள்கின்ற களிப்பே

பதியுறும் உளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

3

3917

சீர்வளர் திருச்சிற் றம்பலத் தோங்குஞ்

செல்வமே என்பெருஞ் சிறப்பே

நீர்வளர் நெருப்பே நெருப்பினுள் ஒளியே

நிறைஒளி வழங்கும்ஓர் வெளியே

ஏர்தரு கலாந்த மாதிஆ றந்தத்

திருந்தர சளிக்கின்ற பதியே

பாருறும் உளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

4

3918

உரைவளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்

ஒள்ளிய தெள்ளிய ஒளியே

வரைவளர் மருந்தே மவுனமந் திரமே

மந்திரத் தாற்பெற்ற மணியே

நிரைதரு சுத்த நிலைக்குமேல் நிலையில்

நிறைந்தர சாள்கின்ற நிதியே

பரையுறும் உளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

5

3919

மேல்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்

மெய்யறி வானந்த விளக்கே

கால்வளர் கனலே கனல்வளர் கதிரே

கதிர்நடு வளர்கின்ற கலையே

ஆலுறும் உபசாந் தப்பர வெளிக்கப்

பால்அர சாள்கின்ற அரசே

பாலுறும் உளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

6 <

3920

இசைவளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்

இன்பமே என்னுடை அன்பே

திசைவளர் அண்ட கோடிகள் அனைத்தும்

திகழுறத் திகழ்கின்ற சிவமே

மிசையுறு மௌன வெளிகடந் ததன்மேல்

வெளிஅர சாள்கின்ற பதியே

பசையுறும் உளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

7

3921

அருள்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்

அரும்பெருஞ் சோதியே எனது

பொருள்வளர் அறிவுக் கறிவுதந் தென்னைப்

புறம்விடா தாண்டமெய்ப் பொருளே

மருவும்ஓர் நாத வெளிக்குமேல் வெளியில்

மகிழ்ந்தர சாள்கின்ற வாழ்வே

பருவரல் நீக்கி இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

8

3922

வான்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்

மாபெருங் கருணைஎம் பதியே

ஊன்வளர் உயிர்கட் குயிரதாய் எல்லா

உலகமும் நிறைந்தபே ரொளியே

மான்முதன் மூர்த்தி மானிலைக் கப்பால்

வயங்கும்ஓர் வெளிநடு மணியே

பான்மையுற் றுளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

9

3923

தலம்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும்

தனித்தமெய்ப் பொருட்பெருஞ் சிவமே

நலம்வளர் கருணை நாட்டம்வைத் தெனையே

நண்புகொண் டருளிய நண்பே

வலமுறு நிலைகள் யாவையுங் கடந்து

வயங்கிய தனிநிலை வாழ்வே

பலமுறும் உளத்தே இனித்திட எனக்கே

பழுத்தபே ரானந்தப் பழமே.

## 43. திருவடி நிலை

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3924.

உலகுபல் கோடி கோடிகள் இடங்கொள்

உவப்பிலா அண்டத்தின் பகுதி

அலகுகாண் பரிய பெரியகூட் டத்த

அவைஎலாம் புறத்திறைச் சார்பில்

விலகுறா அணுவில் கோடியுள் ஒருகூற்

றிருந்தென விருந்தன மிடைந்தே

இலகுபொற் பொதுவில் நடம்புரி தருணத்

தென்பர்வான் திருவடி நிலையே.

1

3925

தடையுறாப் பிரமன் விண்டுருத் திரன்மா

யேச்சுரன் சதாசிவன் விந்து

நடையுறாப் பிரமம் உயர்பரா சத்தி

நவில்பர சிவம்எனும் இவர்கள்

இடையுறாத் திருச்சிற் றம்பலத் தாடும்

இடதுகாற் கடைவிரல் நகத்தின்

கடையுறு துகள்என் றறிந்தனன் அதன்மேற்

கண்டனன் திருவடி நிலையே.

2

3926

அடர்மலத் தடையால் தடையுறும் அயன்மால்

அரன்மயேச் சுரன்சதா சிவன்வான்

படர்தரு விந்து பிரணவப் பிரமம்

பரைபரம் பரன்எனும் இவர்கள்

சுடர்மணிப் பொதுவில் திருநடம் புரியும்

துணையடிப் பாதுகைப் புறத்தே

இடர்கெட வயங்கு துகள்என அறிந்தே

ஏத்துவன் திருவடி நிலையே.

3

3927

இகத்துழல் பகுதித் தேவர்இந் திரன்மால்

பிரமன்ஈ சானனே முதலாம்

மகத்துழல் சமய வானவர் மன்றின்

மலரடிப் பாதுகைப் புறத்தும்

புகத்தரம் பொருந்தா மலத்துறு சிறிய

புழுக்கள்என் றறிந்தனன் அதன்மேல்

செகத்தொடர் பிகந்தார் உளத்தமர் ஒளியில்

தெரிந்தனன் திருவடி நிலையே.

4

3928

பொன்வணப் பொருப்பொன் றதுசகு ணாந்தம்

போந்தவான் முடியதாங் கதன்மேல்

மன்வணச் சோதித் தம்பம்ஒன் றதுமா

வயிந்துவாந் தத்ததாண் டதன்மேல்

என்வணச் சோதிக் கொடிபர நாதாந்

தத்திலே இலங்கிய ததன்மேல்

தன்வணம் மணக்கும் ஒளிமல ராகத்

தழுவினன் திருவடி நிலையே.

5

3929

மண்முதல் பகர்பொன் வண்ணத்த வுளவான்

மற்றவற் றுட்புறங் கீழ்மேல்

அண்ணுறு நனந்தர் பக்கம்என் றிவற்றின்

அமைந்தன சத்திகள் அவற்றின்

கண்ணுறு சத்தர் எனும்இரு புடைக்கும்

கருதுரு முதலிய விளங்க

நண்ணுறும் உபயம் எனமன்றில் என்று

நவின்றனர் திருவடி நிலையே.

6

3930

தொகையள விவைஎன் றறிவரும் பகுதித்

தொல்லையின் எல்லையும் அவற்றின்

வகையொடு விரியும் உளப்பட ஆங்கே

மன்னிஎங் கணும்இரு பாற்குத்

தகையுறு முதலா வணங்கடை யாகத்

தயங்கமற் றதுவது கருவிச்

சிகையுற உபயம் எனமன்றில் ஆடும்

என்பரால் திருவடி நிலையே.

7

3931

மன்றலங் கியமா மாயையின் பேத

வகைதொகை விரிஎன மலிந்த

ஒன்றின்ஒன் றனந்த கோடிகோ டிகளா

உற்றன மற்றவை எல்லாம்

நின்றஅந் நிலையின் உருச்சுவை விளங்க

நின்றசத் திகளொடு சத்தர்

சென்றதி கரிப்ப நடித்திடும் பொதுவில்

என்பரால் திருவடி நிலையே.

8

3932

பேசும்லூங் காரம் ஈறதாப் பேசாப்

பெரியலூங் காரமே முதலா

ஏசறும் அங்கம் உபாங்கம்வே றங்கம்

என்றவற் றவண்அவண் இசைந்த

மாசறு சத்தி சத்தர்ஆண் டமைத்து

மன்அதி காரம்ஐந் தியற்றத்

தேசுசெய் தணிபொன் னம்பலத் தாடும்

என்பரால் திருவடி நிலையே.

9

3933

பரைதரு சுத்த நிலைமுதல் அதீதப்

பதிவரை நிறுவிஆங் கதன்மேல்

உரைதர ஒண்ணா வெறுவெளி வெட்ட

வெறுவெளி எனஉல குணர்ந்த

புரைஅறும் இன்ப அனுபவம் தரற்கோர்

திருவுருக் கொண்டுபொற் பொதுவில்

திரைஅறும் இன்ப நடம்புரி கின்ற

என்பரால் திருவடி நிலையே.

10

## 44. காட்சிக் களிப்பு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3934.

அறிந்தானை அறிவறிவுக் கறிவா னானை
அருட்பெருஞ்சோ தியினானை அடியேன் அன்பில்
செறிந்தானை எல்லாஞ்செய் வல்ல சித்தாய்ச்
சிறந்தானைச் சிறுநெறியில் சென்றார் தம்மைப்
பிறிந்தானை என்னுளத்தில் கலந்து கொண்ட
பிரியமுள பெருமானைப் பிறவி தன்னை
எறிந்தானை எனைஎறியா தெடுத்தாண் டானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

1

3935

பாலானைத் தேனானைப் பழத்தி னானைப்
பலனுறுசெங் கரும்பானைப் பாய்ந்து வேகாக்
காலானைக் கலைசாகாத் தலையி னானைக்
கால்என்றும் தலையென்றும் கருதற் கெய்தா
மேலானை மேல்நிலைமேல் அமுதா னானை
மேன்மேலும் எனதுளத்தே விளங்கல் அன்றி
ஏலானை என்பாடல் ஏற்றுக் கொண்ட
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

2

3936

உள்ளானைக் கதவுதிறந் துள்ளே காண

உளவெனக்கே உரைத்தானை உணரார் பாட்டைக்

கொள்ளானை என்பாட்டைக் குறிக்கொண் டானைக்

கொல்லாமை விரதமெனக் கொண்டார் தம்மைத்

தள்ளானைக் கொலைபுலையைத் தள்ளா தாரைத்

தழுவானை யான்புரிந்த தவறு நோக்கி

எள்ளானை இடர்தவிர்த்திங் கென்னை ஆண்ட

எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

3

3937

உறவானை என்னுயிர்க்குள் உயிரா னானை

உறுபிழைகள் செயினும்அவை உன்னி என்னை

மறவானை அறவாழி வழங்கி னானை

வஞ்சகர்க்குத் திருக்கோயில் வழிக்க பாடந்

திறவானை என்னளவில் திறந்து காட்டிச்

சிற்சபையும் பொற்சபையும் சேர்வித் தானை

இறவானைப் பிறவானை இயற்கை யானை

எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

4

3938

அகத்தானைப் புறத்தானை அணுவா னானை

அணுவினுக்குள் அணுவானை அதனுள் ளானை
மகத்தானை மகத்தினும்ஓர் மகத்தா னானை
மாமகத்தாய் இருந்தானை வயங்கா நின்ற
சகத்தானை அண்டமெலாம் தானா னானைத்
தனிஅருளாம் பெருங்கருணைத் தாயா னானை
இகத்தானைப் பரத்தானைப் பொதுவில் ஆடும்
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

5

3939

செய்யானைக் கரியானைப் பசுமை யானைத்
திகழ்ந்திடுபொன் மையினானை வெண்மை யானை
மெய்யானைப் பொய்யானை மெய்பொய் இல்லா
வெளியானை ஒளியானை விளம்பு வார்க்குக்
கையானை என்னையெடுத் தணைத்துக் கொண்ட
கையானை என்னைஎன்றும் கையா தானை
எய்யானை எவ்வுலகும் ஏத்த என்னை
ஈன்றானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

6

3940

மருந்தானை மணியானை வழுத்தா நின்ற
மந்திரங்க ளானானை வான நாட்டு

விருந்தானை உறவானை நண்பி னானை
மேலானைக் கீழானை மேல்கீழ் என்னப்
பொருந்தானை என்னுயிரில் பொருந்தி னானைப்
பொன்னானைப் பொருளானைப் பொதுவாய் எங்கும்
இருந்தானை இருப்பானை இருக்கின் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

7

3941

ஆன்றானை அறிவானை அழிவி லானை
அருட்பெருஞ்ஜோ தியினானை அலர்ந்த ஜோதி
மூன்றானை இரண்டானை ஒன்றானானை
முன்னானைப் பின்னானை மூட நெஞ்சில்
தோன்றானைத் தூயருளே தோன்றி னானைச்
சுத்தசிவ சன்மார்க்கந் துலங்க என்னை
ஈன்றானை எல்லாமாய் அல்லா தானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

8

3942

தோய்ந்தானை என்னுளத்தே என்பால் அன்பால்
சூழ்ந்தானை யான்தொடுத்த சொற்பூ மாலை
வேய்ந்தானை என்னுடைய வினைதீர்த் தானை

வேதாந்த முடிமுடிமேல் விளங்கி னானை
வாய்ந்தானை எய்ப்பிடத்தே வைப்பா னானை
மணிமன்றில் நடிப்பானை வரங்கள் எல்லாம்
ஈய்ந்தானை(268) ஆய்ந்தவர்தம் இதயத் தானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

9

(268). ஈந்தானை - முதற் பதிப்பு, பொ. சு., பி. இரா., ச. மு. க.

3943

நன்றானை மன்றகத்தே நடிக்கின் றானை
நாடாமை நாடலிவை நடுவே ஓங்கி
நின்றானைப் பொன்றாத நிலையி னானை
நிலைஅறிந்து நில்லாதார் நெஞ்சி லேசம்
ஒன்றானை எவ்வுயிர்க்கும் ஒன்றா னானை
ஒருசிறியேன் தனைநோக்கி உளம்நீ அஞ்சேல்
என்றானை என்றும்உள இயற்கை யானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

10

45. கண்கொளாக் காட்சி

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3944.

அடுத்தானை அடியேனை அஞ்சேல் என்றிங்

காண்டானைச் சிறுநெறிகள் அடையா தென்னைத்

தடுத்தானைப் பெருநெறிக்குத் தடைதீர்த் தானைத்

தன்னருளும் தன்பொருளும் தானே என்பால்

கொடுத்தானைக் குற்றமெலாம் குணமாக் கொள்ளும்

குணத்தானைச் சமயமதக் குழிநின் றென்னை

எடுத்தானை எல்லாஞ்செய் வல்ல சித்தே

ஈந்தானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

1

3945

விரித்தானைக் கருவிஎலாம் விரிய வேதம்

விதித்தானை மெய்ந்நெறியை மெய்யே எற்குத்(269)

தெரித்தானை நடம்பொதுவில் செய்கின் றானைச்

சிறியேனுக் கருள்ஒளியால் சிறந்த பட்டம்

தரித்தானைத் தானேநா னாகி என்றும்

தழைத்தானை எனைத்தடுத்த தடைகள் எல்லாம்

எரித்தானை என்உயிருக் கின்பா னானை

எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

2

(269). விரைத்தானை மெய்யே என்னை - பி. இரா.பதிப்பு.

3946

நட்டானை நட்டஎனை நயந்து கொண்டே

நம்மகன்நீ அஞ்சல்என நவின்றென் சென்னி

தொட்டானை எட்டிரண்டும் சொல்லி னானைத்

துன்பமெலாம் தொலைத்தானைச் சோர்ந்து தூங்க

ஒட்டானை மெய்அறிவே உருவாய் என்னுள்

உற்றானை உணர்ந்தார்க்கும் உணர்ந்து கொள்ள

எட்டானை என்னளவில் எட்டி னானை

எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

3

3947

சோற்றானைச்278 சோற்றில்உறும் சுகத்தி னானைத்

துளக்கம்இலாப் பாரானை நீரா னானைக்

காற்றானை வெளியானைக் கனலா னானைக்

கருணைநெடுங் கடலானைக் களங்கர் காணத்

தோற்றானை நான்காணத் தோற்றி னானைச்

சொல்லறியேன் சொல்லியபுன் சொல்லை யெல்லாம்

ஏற்றானை என்னுளத்தில் எய்தி னானை

எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

4

(278). சோறு - முத்தி. முதற்பதிப்பு. ஈண்டு சோறு என்பது உண்ணும் சோறே.

3948

சேர்த்தானை என்றனைத்தன் அன்ப ரோடு
செறியாத மனஞ்செறியச் செம்பொற் றாளில்
ஆர்த்தானை அம்பலத்தில் ஆடா நின்ற
ஆனந்த நடத்தானை அருட்கண் நோக்கம்
பார்த்தானைப் பாராரைப் பாரா தானைப்
பார்ப்பறவே பார்த்திருக்கப் பண்ணி என்னை
ஈர்த்தானை ஐந்தொழில்நீ இயற்றென் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

5

3949

முளையானைச் சுத்தசிவ வெளியில் தானே
முளைத்தானை மூவாத முதலா னானைக்
களையானைக் களங்கமெலாம் களைவித் தென்னைக்
காத்தானை என்பிழையைக் கருதிக் கோபம்
விளையானைச் சிவபோகம் விளைவித் தானை
வேண்டாமை வேண்டல்இவை மேவி என்றும்
இளையானை மூத்தானை மூப்பி லானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

6

3950

புயலானை மழையானை அதிர்ப்பி னானைப்

போற்றியமின் ஒளியானைப் புனித ஞானச்

செயலானைச் செயலெல்லாந் திகழ்வித் தானைத்

திருச்சிற்றம் பலத்தானைத் தெளியார் உள்ளே

அயலானை உறவானை அன்பு ளானை

அறிந்தாரை அறிந்தானை அறிவால் அன்றி

இயலானை எழிலானைப் பொழிலா னானை

எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

7

3951

தாயானைத் தந்தைஎனக் காயி னானைச்

சற்குருவு மானானைத் தமியேன் உள்ளே

மேயானைக் கண்காண விளங்கி னானை

மெய்ம்மைஎனக் களித்தானை வேதஞ் சொன்ன

வாயானை வஞ்சம்இலா மனத்தி னானை

வரங்கொடுக்க வல்லானை மணிமன் றன்றி

ஏயானைத் துரியநடு விருக்கின் றானை

எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

8

3952

தழைத்தானைத் தன்னைஒப்பார் இல்லா தானைத்

தானேதா னானானைத் தமிய னேனைக்

குழைத்தானை என்கையிலோர் கொடைதந் தானைக்
குறைகொண்டு நின்றேனைக் குறித்து நோக்கி
அழைத்தானை அருளமுதம் அளிக்கின் றானை
அச்சமெலாம் தவிர்த்தானை அன்பே என்பால்
இழைத்தானை என்னிதயத் திருக்கின் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

9

3953

உடையானை அருட்சோதி உருவி னானை
ஓவானை மூவானை உலவா இன்பக்
கொடையானை என்குறைதீர்த் தென்னை ஆண்டு
கொண்டானைக் கொல்லாமை குறித்தி டாரை
அடையானைத் திருசிற்றம் பலத்தி னானை
அடியேனுக் கருளமுதம் அளிக்க வேபின்
இடையானை என்னாசை எல்லாந் தந்த
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே.

10

## 46. இறை திருக்காட்சி

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3954.

அருளெலாம் அளித்த அம்பலத் தமுதை

அருட்பெருஞ் ஜோதியை அரசை

மருளெலாம் தவிர்த்து வாழ்வித்த மருந்தை

வள்ளலை மாணிக்க மணியைப்

பொருளெலாம் கொடுத்தென் புந்தியில் கலந்த

புண்ணிய நிதியைமெய்ப் பொருளைத்

தெருளெலாம் வல்ல சித்தைமெய்ஞ் ஞான

தீபத்தைக் கண்டுகொண் டேனே.

1

3955

துன்பெலாம் தவிர்த்த துணையைஎன் உள்ளத்

துரிசெலாந் தொலைத்தமெய்ச் சுகத்தை

என்பொலா மணியை என்சிகா மணியை

என்னிரு கண்ணுள்மா மணியை

அன்பெலாம் அளித்த அம்பலத் தமுதை

அருட்பெருஞ் ஜோதியை அடியேன்

என்பெலாம் உருக்கி இன்பெலாம் அளித்த

எந்தையைக் கண்டுகொண் டேனே.

2

3956

சிதத்திலே(271) ஊறித் தெளிந்ததெள் ளமுதைச்

சித்தெலாம் வல்லமெய்ச் சிவத்தைப்

பதத்திலே பழுத்த தனிப்பெரும் பழத்தைப்

பரம்பர வாழ்வைஎம் பதியை

மதத்திலே மயங்கா மதியிலே விளைந்த

மருந்தைமா மந்திரந் தன்னை

இதத்திலே என்னை இருத்திஆட் கொண்ட

இறைவனைக் கண்டுகொண் டேனே.

4

(271). 271. சிதம் - ஞானம்

3957

உணர்ந்தவர் உளம்போன் றென்னுளத் தமர்ந்த

ஒருபெரும் பதியைஎன் உவப்பைப்

புணர்ந்தெனைக் கலந்த போகத்தை எனது

பொருளைஎன் புண்ணியப் பயனைக்

கொணர்ந்தொரு பொருள்என் கரத்திலே கொடுத்த

குருவைஎண் குணப்பெருங் குன்றை

மணந்தசெங் குவளை மலர்எனக் களித்த

வள்ளலைக் கண்டுகொண் டேனே.

4

3958

புல்லிய நெறிநீத் தெனைஎடுத் தாண்ட

பொற்சபை அப்பனை வேதம்

சொல்லிய படிஎன் சொல்எலாம் கொண்ட

ஜோதியைச் சோதியா தென்னை

மல்லிகை மாலை அணிந்துளே கலந்து

மன்னிய பதியைஎன் வாழ்வை

எல்லியும் இரவும் என்னைவிட் டகலா

இறைவனைக் கண்டுகொண் டேனே.

5

3959

பண்ணிய தவமும் பலமும்மெய்ப் பலஞ்செய்

பதியுமாம் ஒருபசு பதியை

நண்ணிஎன் உளத்தைத் தன்னுளம் ஆக்கி

நல்கிய கருணைநா யகனை

எண்ணிய படியே எனக்கருள் புரிந்த

இறைவனை மறைமுடி இலங்கும்

தண்ணிய விளக்கைத் தன்னிக ரில்லாத்

தந்தையைக் கண்டுகொண் டேனே.

6

3960

பெண்மையை வயங்கும் ஆண்மையை அனைத்தும்

பிறங்கிய பொதுமையைப் பெரிய

தண்மையை எல்லாம் வல்லஓர் சித்த

சாமியைத் தயாநிதி தன்னை

வண்மையை அழியா வரத்தினை ஞான

வாழ்வைஎன் மதியிலே விளங்கும்

உண்மையை என்றன் உயிரைஎன் உயிருள்

ஒருவனைக் கண்டுகொண் டேனே.

7

3961

ஆதியை ஆதி அந்தமீ தெனஉள்

அறிவித்த அறிவைஎன் அன்பைச்

சோதியை எனது துணையைஎன் சுகத்தைச்

சுத்தசன் மார்க்கத்தின் துணிபை

நீதியை எல்லா நிலைகளும் கடந்த

நிலையிலே நிறைந்தமா நிதியை

ஓதியை ஓதா துணர்த்திய வெளியை

ஒளிதனைக் கண்டுகொண் டேனே.

8

3962

என்செயல் அனைத்தும் தன்செயல் ஆக்கி

என்னைவாழ் விக்கின்ற பதியைப்

பொன்செயல் வகையை உணர்த்திஎன் உளத்தே

பொருந்திய மருந்தையென் பொருளை

வன்செயல் அகற்றி உலகெலாம் விளங்க

வைத்தசன் மார்க்கசற் குருவைக்

கொன்செயல் ஒழித்த சத்திய ஞானக்

கோயிலில் கண்டுகொண் டேனே.

9

3963

புன்னிக ரில்லேன் பொருட்டிருட் டிரவில்

போந்தருள் அளித்தசற் குருவைக்

கன்னிகர் மனத்தைக் கரைத்தெனுட் கலந்த

கருணையங் கடவுளைத் தனது

சொன்னிகர் எனஎன் சொல்எலாங் கொண்டே

தோளுறப் புனைந்தமெய்த் துணையைத்

தன்னிக ரில்லாத் தலைவனை எனது

தந்தையைக் கண்டுகொண் டேனே.

10

3964

ஏங்கலை மகனே தூங்கலை எனவந்

தெடுத்தெனை அணைத்தஎன் தாயை

ஓங்கிய எனது தந்தையை எல்லாம்

உடையஎன் ஒருபெரும் பதியைப்

பாங்கனில் என்னைப் பரிந்துகொண் டெல்லாப்

பரிசும்இங் களித்ததற் பரத்தைத்

தாங்கும்ஓர் நீதித் தனிப்பெருங் கருணைத்

தலைவனைக் கண்டுகொண் டேனே.

11

3965

துன்புறேல் மகனே தூங்கலை எனஎன்

சோர்வெலாந் தவிர்த்தநற் றாயை

அன்புளே கலந்த தந்தையை என்றன்

ஆவியைப் பாவியேன் உளத்தை

இன்பிலே நிறைவித் தருள்உரு வாக்கி

இனிதமர்ந் தருளிய இறையை

வன்பிலாக் கருணை மாநிதி எனும்என்

வள்ளலைக் கண்டுகொண் டேனே.

12

3966

நனவினும் எனது கனவினும் எனக்கே

நண்ணிய தண்ணிய அமுதை

மனனுறு மயக்கம் தவிர்த்தருட் சோதி

வழங்கிய பெருந்தயா நிதியைச்

சினமுதல் ஆறுந் தீர்த்துளே அமர்ந்த

சிவகுரு பதியைஎன் சிறப்பை

உனலரும் பெரிய துரியமேல் வெளியில்

ஒளிதனைக் கண்டுகொண் டேனே.

13

3967

கரும்பிலின் சாற்றைக் கனிந்தமுக் கனியைக்

கருதுகோற் றேன்நறுஞ் சுவையை

அரும்பெறல் அமுதை அறிவைஎன் அன்பை

ஆவியை ஆவியுட் கலந்த

பெருந்தனிப் பதியைப் பெருஞ்சுகக் களிப்பைப்

பேசுதற் கரும்பெரும் பேற்றை

விரும்பிஎன் உளத்தை இடங்கொண்டு விளங்கும்

விளக்கினைக் கண்டுகொண் டேனே.

14

3968

களங்கொளுங் கடையேன் களங்கெலாந் தவிர்த்துக்

களிப்பெலாம் அளித்தசர்க் கரையை

உளங்கொளுந் தேனை உணவுணத் தெவிட்டா

துள்ளகத் தூறும்இன் அமுதை

வளங்கொளும் பெரிய வாழ்வைஎன் கண்ணுள்

மணியைஎன் வாழ்க்கைமா நிதியைக்

குளங்கொளும் ஒளியை ஒளிக்குளே விளங்கும்

குருவையான் கண்டுகொண் டேனே.

15

3969

சிதம்பர ஒளியைச் சிதம்பர வெளியைச்

சிதம்பர நடம்புரி சிவத்தைப்

பதந்தரு பதத்தைப் பரம்பர பதத்தைப்

பதிசிவ பதத்தைத்தற் பதத்தை

இதந்தரும் உண்மைப் பெருந்தனி நிலையை

யாவுமாய் அல்லவாம் பொருளைச்

சதந்தருஞ் சச்சி தானந்த நிறைவைச்

சாமியைக் கண்டுகொண் டேனே.

16

3970

ஆரண முடிமேல் அமர்பிர மத்தை

ஆகம முடிஅமர் பரத்தைக்

காரண வரத்தைக் காரிய தரத்தைக்

காரிய காரணக் கருவைத்

தாரண நிலையைத் தத்துவ பதியைச்

சத்திய நித்திய தலத்தைப்

பூரண சுகத்தைப் பூரண சிவமாம்

பொருளினைக் கண்டுகொண் டேனே.

17

3971

சுத்தவே தாந்த பிரமரா சியத்தைச்

சுத்தசித் தாந்தரா சியத்தைத்

தத்துவா தீதத் தனிப்பெரும் பொருளைச்

சமரச சத்தியப் பொருளைச்

சித்தெலாம் வல்ல சித்தைஎன் அறிவில்

தெளிந்தபே ரானந்தத் தெளிவை

வித்தமா வெளியைச் சுத்தசிற் சபையின்

மெய்ம்மையைக் கண்டுகொண் டேனே.

18

3972

சமயமும் மதமும் கடந்ததோர் ஞான

சபைநடம் புரிகின்ற தனியைத்

தமைஅறிந் தவருட் சார்ந்தமெய்ச் சார்வைச்

சத்துவ நித்தசற் குருவை

அமைஎன் மனத்தைத் திருத்திநல் லருளா

ரமுதளித் தமர்ந்தஅற் புதத்தை

நிமலநிற் குணத்தைச் சிற்குணா கார

நீதியைக் கண்டுகொண் டேனே.

19

3973

அளவைகள் அனைத்தும் கடந்துநின் றோங்கும்

அருட்பெருஞ் சோதியை உலகக்

களவைவிட் டவர்தங் கருத்துளே விளங்கும்

காட்சியைக் கருணையங் கடலை

உளவைஎன் றனக்கே உரைத்தெலாம் வல்ல

ஒளியையும் உதவிய ஒளியைக்

குளவயின் நிறைந்த குருசிவ பதியைக்

கோயிலில் கண்டுகொண் டேனே.

20

3974

சார்கலாந் தாதிச் சடாந்தமுங் கலந்த

சமரச சத்திய வெளியைச்

சோர்வெலாந் தவிர்த்தென் அறிவினுக் கறிவாய்த்

துலங்கிய ஜோதியைச் சோதிப்

பார்பெறாப் பதத்தைப் பதமெலாங் கடந்த

பரமசன் மார்க்கமெய்ப் பதியைச்

சேர்குணாந் தத்திற் சிறந்ததோர் தலைமைத்

தெய்வத்தைக் கண்டுகொண் டேனே.

21

3975

அடிநடு முடியோர் அணுத்துணை யேனும்
அறிந்திடப் படாதமெய் அறிவைப்
படிமுதல் அண்டப் பரப்பெலாங் கடந்த
பதியிலே விளங்குமெய்ப் பதியைக்
கடியஎன் மனனாங் கல்லையும் கனியிற்
கடைக்கணித் தருளிய கருணைக்
கொடிவளர் இடத்துப் பெருந்தயா நிதியைக்
கோயிலில் கண்டுகொண் டேனே.

22

3976

பயமும்வன் கவலை இடர்முதல் அனைத்தும்
பற்றறத் தவிர்த்தருட் பரிசும்
நயமும்நற் றிருவும் உருவும்ஈங் கெனக்கு
நல்கிய நண்பைநன் னாத
இயமுற வெனது குளநடு நடஞ்செய்
எந்தையை என்னுயிர்க் குயிரைப்
புயனடு விளங்கும் புண்ணிய ஒளியைப்
பொற்புறக் கண்டுகொண் டேனே.

23

3977

கலைநிறை மதியைக் கனலைச்செங் கதிரைக்

ககனத்தைக் காற்றினை அமுதை

நிலைநிறை அடியை அடிமுடி தோற்றா

நின்மல நிற்குண நிறைவை

மலைவறும் உளத்தே வயங்குமெய் வாழ்வை

வரவுபோக் கற்றசின் மயத்தை

அலையறு கருணைத் தனிப்பெருங் கடலை

அன்பினிற் கண்டுகொண் டேனே.

24

3978

மும்மையை எல்லாம் உடையபே ரரசை

முழுதொருங் குணர்த்திய உணர்வை

வெம்மையைத் தவிர்த்திங் கெனக்கரு ளமுதம்

வியப்புற அளித்தமெய் விளைவைச்

செம்மையை எல்லாச் சித்தியும் என்பால்

சேர்ந்திடப் புரிஅருட் டிறத்தை

அம்மையைக் கருணை அப்பனை என்பே

ரன்பனைக் கண்டுகொண் டேனே.

25

3979

கருத்தனை எனது கண்அனை யவனைக்

கருணையா ரமுதெனக் களித்த

ஒருத்தனை என்னை உடையநா யகனை
உண்மைவே தாகம முடியின்
அருத்தனை வரனை அபயனைத் திருச்சிற்
றம்பலத் தருள்நடம் புரியும்
நிருத்தனை எனது நேயனை ஞான
நிலையனைக் கண்டுகொண் டேனே.

26

3980

வித்தெலாம் அளித்த விமலனை எல்லா
விளைவையும் விளைக்கவல் லவனை
அத்தெலாங்(272) காட்டும் அரும்பெறல் மணியை
ஆனந்தக் கூத்தனை அரசைச்
சத்தெலாம் ஆன சயம்புவை ஞான
சபைத்தனித் தலைவனைத் தவனைச்
சித்தெலாம் வல்ல சித்தனை ஒன்றாந்
தெய்வத்தைக் கண்டுகொண் டேனே.

27

(272). அத்து - செந்நிறம். முதற்பதிப்பு.

3981

உத்தர ஞான சித்திமா புரத்தின்
ஓங்கிய ஒருபெரும் பதியை

உத்தர ஞான சிதம்பர ஒளியை

உண்மையை ஒருதனி உணர்வை

உத்தர ஞான நடம்புரி கின்ற

ஒருவனை உலகெலாம் வழுத்தும்

உத்தர ஞான சுத்தசன் மார்க்கம்

ஓதியைக் கண்டுகொண் டேனே.

28

3982

புலைகொலை தவிர்த்த நெறியிலே என்னைப்

புணர்த்திய புனிதனை எல்லா

நிலைகளும் காட்டி அருட்பெரு நிலையில்

நிறுத்திய நிமலனை எனக்கு

மலைவறத் தெளிந்த அமுதளித் தழியா

வாழ்க்கையில் வாழவைத் தவனைத்

தலைவனை ஈன்ற தாயைஎன் உரிமைத்

தந்தையைக் கண்டுகொண் டேனே.

29

3983

பனிஇடர் பயந்தீர்த் தெனக்கமு தளித்த

பரமனை என்னுளே பழுத்த

கனிஅனை யவனை அருட்பெருஞ் சோதிக்

கடவுளைக் கண்ணினுள் மணியைப்
புனிதனை எல்லாம் வல்லவூர் ஞானப்
பொருள்எனக் களித்தமெய்ப் பொருளைத்
தனியனை ஈன்ற தாயைஎன் உரிமைத்
தந்தையைக் கண்டுகொண் டேனே.

30

47. உளம் புகுந்த திறம் வியத்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3984.

வானிருக்கும் பிரமர்களும் நாரணரும் பிறரும்
மாதவம்பன் னாட்புரிந்து மணிமாட நடுவே
தேனிருக்கும் மலரணைமேல் பளிக்கறையி னூடே
திருவடிசேர்த் தருள்கஎனச் செப்பிவருந் திடவும்
நானிருக்கும் குடிசையிலே வலிந்துநுழைந் தெனக்கே
நல்லதிரு அருளமுதம் நல்கியதன் றியும்என்
ஊனிருக்கும் குடிசையிலும் உவந்துநுழைந் தடியேன்
உள்ளமெனும் சிறுகுடிசை யுள்ளும்நுழைந் தனையே.

1

3985

படிசெய்பிர மன்முதலோர் பற்பலநாள் வருந்திப்
பன்மணிகள் ஒளிவிளங்கப் பதித்தசிங்கா தனத்தே

அடிசெய்தெழுந் தருளிஎமை ஆண்டருளல் வேண்டும்

அரசேஎன் றவரவரும் ஆங்காங்கே வருந்த

வடிசெய்மறை முடிநடுவே மன்றகத்தே நடிக்கும்

மலரடிகள் சிவப்பஒரு வளமும்இலா அசுத்தக்

குடிசைநுழைந் தனையேஎன் றேசுவரே அன்பர்

கூசாமல் என்னுளமாம் குடிசைநுழைந் தனையே.

௨

3986

உள்ளபடி உள்ளதுவாய் உலகமெலாம் புகினும்

ஒருசிறிதும் தடையிலதாய் ஒளியதுவே மயமாய்

வெள்ளவெளி நடுவுளதாய் இயற்கையிலே விளங்கும்

வேதமுடி இலக்கியமா மேடையிலே அமர்ந்த

வள்ளன்மலர் அடிசிவப்ப வந்தெனது கருத்தின்

வண்ணமெலாம் உவந்தளித்து வயங்கியபேர் இன்பம்

கொள்ளைகொளக் கொடுத்ததுதான் போதாதோ அரசே

கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

3

3987

தடையறியாத் தகையினதாய்த் தன்னிகரில் லதுவாய்த்

தத்துவங்கள் அனைத்தினுக்கும் தாரகமாய் அவைக்கு

விடையறியாத் தனிமுதலாய் விளங்குவெளி நடுவே

விளங்குகின்ற சத்தியமா மேடையிலே அமர்ந்த

நடையறியாத் திருவடிகள் சிவந்திடவந் தெனது

நலிவனைத்துந் தவிர்த்தருளி ஞானஅமு தளித்தாய்

கொடையிதுதான் போதாதோ என்னரசே அடியேன்

குடிசையிலுங் கோணாதே குலவிநுழைந் தனையே.

4

3988

இறையளவுந் துரிசிலதாய்த் தூய்மையதாய் நிறைவாய்

இயற்கையதாய் அனுபவங்கள் எவைக்கும்முத லிடமாய்

மறைமுடியோ டாகமத்தின் மணிமுடிமேல் முடியாய்

மன்னுகின்ற மெய்ஞ்ஞான மணிமேடை அமர்ந்த

நிறையருட்சீ ரடிமலர்கள் சிவந்திடவந் தடியேன்

நினைத்தஎலாம் கொடுத்தருளி நிலைபெறச்செய் தனையே

குறைவிலதிப் பெருவரந்தான் போதாதோ அரசே

கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

5

3989

உருவினதாய் அருவினதாய் உருஅருவாய் உணர்வாய்

உள்ளதுவாய் ஒருதன்மை உடையபெரும் பதியாய்

மருவியவே தாந்தமுதல் வகுத்திடுங்க லாந்த

வரைஅதன்மேல் அருள்வெளியில் வயங்கியமே டையிலே

திருவுறவே அமர்ந்தருளும் திருவடிகள் பெயர்த்தே

சிறியேன்கண் அடைந்தருளித் திருவனைத்தும் கொடுத்தாய்

குருவேஎன் அரசேஈ தமையாதோ அடியேன்

குடிசையிலும் கோணாதே குலவிநுழைந் தனையே.

6

3990

மணமுளதாய் ஒளியினதாய் மந்திரஆ தரமாய்

வல்லதுவாய் நல்லதுவாய் மதங்கடந்த வரைப்பாய்

வணமுளதாய் வளமுளதாய் வயங்கும்ஒரு வெளியில்

மணிமேடை அமர்ந்ததிரு அடிமலர்கள் பெயர்த்தே

எணமுளஎன் பால்அடைந்தென் எண்ணமெலாம் அளித்தாய்

இங்கிதுதான் போதாதோ என்னரசே ஞானக்

குணமலையே அருளமுதே குருவேஎன் பதியே

கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

7

3991

சிரம்பெறுவே தாகமத்தின் அடிநடுவும் முடியும்

செல்லாத நிலைஅதுவாய் எல்லாம்வல் லதுவாய்

பரம்பரமாய்ப் பரம்பரமேற் பரவுசிதம் பரமாய்ப்

பதிவெளியில் விளங்குகின்ற மதிசிவமே டையிலே

தரங்குலவ அமர்ந்ததிரு வடிகள்பெயர்த் தெனது

சார்படைந்தென் எண்ணமெலாம் தந்தனைஎன் அரசே
குரங்குமனச் சிறியேனுக் கிங்கிதுபோ தாதோ
கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

8

3992

பற்றியபற் றனைத்தினையும் பற்றறவிட் டறிவாம்
பான்மைஒன்றே வடிவாகிப் பழுத்தபெரி யவரும்
உற்றறிதற்(273) கரியஒரு பெருவெளிமேல் வெளியில்
ஓங்குமணி மேடைஅமர்ந் தோங்கியசே வடிகள்
பெற்றறியப் பெயர்த்துவந்தென் கருத்தனைத்துங் கொடுத்தே
பிறவாமல் இறவாமல் பிறங்கவைத்தாய்(274) அரசே
கொற்றமுளேன் தனக்கிதுதான் போதாதோ கொடியேன்
குடிசையிலும் கோணாதே குலவிநுழைந் தனையே.

9

(273). உற்றிடுதற் - படிவேறுபாடு. ஆ. பா.

(274). பிறங்கவைத்த - முதற்பதிப்பு. பொ. சு., ச. மு. க.

3993

கருவியொடு கரணமெலாம் கடந்துகடந் ததன்மேல்
காட்சியெலாம் கடந்ததன்மேல் காணாது கடந்து
ஒருநிலையின் அனுபவமே உருவாகிப் பழுத்த
உணர்ச்சியினும் காணாமல் ஓங்கும்ஒரு வெளியில்

மருவியதோர் மேடையிலே வயங்கியசே வடிகள்

மலர்த்திவந்தென் கருத்தனைத்தும் வழங்கினைஇன் புறவே

குருமணியே என்னரசே எனக்கிதுபோ தாதோ

கொடும்புலையேன் குடிசையிலும் குலவிநுழைந் தனையே.

10

48. வரம்பில் வியப்பு

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

3994.

பொன்புனை புயனும் அயனும்மற் றவரும்

புகலரும் பெரியஓர் நிலையில்

இன்புரு வாகி அருளொடும் விளங்கி

இயற்றலே ஆதிஐந் தொழிலும்

தன்பொதுச் சமுகத் தைவர்கள் இயற்றத்

தனிஅர சியற்றும்ஓர் தலைவன்

அன்பெனும் குடிசை நுழைந்தன னானால்

அவன்தனை மறுப்பவர் யாரே.

1

3995

மன்பதை வகுக்கும் பிரமர்நா ரணர்கள்

மன்னுருத் திரர்களே முதலா

ஒன்பது கோடித் தலைவர்கள் ஆங்காங்

குறுபெருந் தொழில்பல இயற்றி

இன்புறச் சிறிதே கடைக்கணித் தருளி

இலங்கும்ஓர் இறைவன்இன் றடியேன்

அன்பெனும் குடிசை நுழைந்தனன் அந்தோ

அவன்தனை மறுப்பவர் யாரே.

2

3996

தன்னிக ரில்லாத் தலைவஎன் றரற்றித்

தனித்தனி மறைகள்ஆ கமங்கள்

உன்னிநின் றோடி உணர்ந்துணர்ந் துணரா

ஒருதனிப் பெரும்பதி உவந்தே

புன்னிக ரில்லாப் புலையனேன் பிழைகள்

பொறுத்தருட் பூரண வடிவாய்

என்னுளம் புகுந்தே நிறைந்தனன் அந்தோ

எந்தையைத் தடுப்பவர் யாரே.

3

3997

பால்வகை ஆணோ பெண்கொலோ இருமைப்

பாலதோ பால்உறா அதுவோ

ஏல்வகை ஒன்றோ இரண்டதோ அனாதி

இயற்கையோ ஆதியின் இயல்போ

மேல்வகை யாதோ எனமறை முடிகள்
விளம்பிட விளங்கும்ஓர் தலைவன்
மால்வகை மனத்தேன் உளக்குடில் புகுந்தான்
வள்ளலைத் தடுப்பவர் யாரே.

4

3998

வரம்பெறும் ஆன்ம உணர்ச்சியும் செல்லா
வருபர உணர்ச்சியும் மாட்டாப்
பரம்பர உணர்ச்சி தானும்நின் றறியாப்
பராபர உணர்ச்சியும் பற்றா
உரம்பெற உணர்வார் யார்எனப் பெரியர்
உரைத்திட ஓங்கும்ஓர் தலைவன்
கரம்பெறு கனிபோல் என்னுளம் புகுந்தான்
கடவுளைத் தடுப்பவர் யாரே.

5

3999

படைத்திடல் முதல்ஐந் தொழில்புரிந் திலங்கும்
பரம்பர ஒளிஎலாம் அணுவில்
கிடைத்திடக் கீழ்மேல் நடுஎனக் காட்டாக்
கிளர்ஒளி யாய்ஒளிக் கெல்லாம்
அடைத்தகா ரணமாய்க் காரணங் கடந்த

அருட்பெருஞ் ஜோதியாம் ஒருவன்

கடைத்தனிச் சிறியேன் உளம்புகுந் தமர்ந்தான்

கடவுளைத் தடுப்பவர் யாரே.

6

4000

அளவெலாங் கடந்த பெருந்தலை அண்ட

அடுக்கெலாம் அம்மலூர் அணுவின்

பிளவில்லூர் கோடிக் கூற்றில்லூன் றாகப்

பேசநின் றோங்கிய பெரியோன்

களவெலாந் தவிர்த்தென் கருத்தெலாம் நிரப்பிக்

கருணையா ரமுதளித் துளமாம்

வளவிலே புகுந்து வளர்கின்றான் அந்தோ

வள்ளலைத் தடுப்பவர் யாரே.

7

4001

உள்ளவாம் அண்ட கோடி கோடிகளில்

உளவுயிர் முழுவதும் ஒருங்கே

கொள்ளைகொண் டிடினும் அணுத்துணை எனினும்

குறைபடாப் பெருங்கொடைத் தலைவன்

கள்ளநெஞ் சகத்தேன் பிழைஎலாம் பொறுத்துக்

கருத்தெலாம் இனிதுதந் தருளித்

தள்ளரும் திறத்தென் உள்ளகம் புகுந்தான்

தந்தையைத் தடுப்பவர் யாரே.

௮

௪௮௮௨

அறிந்தன அறிந்தாங் கறிந்தறிந் தறியா

தையகோ ஐயகோ அறிவின்

மறிந்தன மயர்ந்தேம் எனமறை அனந்தம்

வாய்குழைந் துரைத்துரைத் துரையும்

முறிந்திட வாளா இருந்தஎன் றறிஞர்

மொழியும்ஓர் தனிப்பெருந் தலைவன்

செறிந்தென துளத்தில் சேர்ந்தனன் அவன்றன்

திருவுளம் தடுப்பவர் யாரே.

௯

௪௮௮௩

கருமுதற் கருவாய்க் கருவினுட் கருவாய்க்

கருஎலாங் காட்டும்ஓர் கருவாய்க்

குருமுதற் குருவாய்க் குருஎலாங் கிடைத்த

கொள்கையாய்க் கொள்கையோ டளவா

அருமுதல் அருவாய் அல்லவாய் அப்பால்

அருட்பெருஞ் ஜோதியாந் தலைவன்

மருவிஎன் உளத்தில் புகுந்தனன் அவன்தன்

வண்மையைத் தடுப்பவர் யாரே.

10

49. கண்டேன் கனிந்தேன் கலந்தேன் எனல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4004.

அருளரசை அருட்குருவை அருட்பெருஞ் சோதியைஎன்

அம்மையைஎன் அப்பனைஎன் ஆண்டவனை அமுதைத்

தெருளுறும்என் உயிரைஎன்றன் உயிர்க்குயிரை எல்லாம்

செய்யவல்ல தனித்தலைமைச் சித்தசிகா மணியை

மருவுபெரு வாழ்வைஎல்லா வாழ்வும்எனக் களித்த

வாழ்முதலை மருந்தினைமா மணியைஎன்கண் மணியைக்

கருணைநடம் புரிகின்ற கனகசபா பதியைக்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

1

4005

திருத்தகுவே தாந்தமொடு சித்தாந்த முதலாத்

திகழ்கின்ற அந்தமெலாம் தேடியுங்கண் டறியா

ஒருத்தனைஉள் ளொளியைஒளிர் உள்ளொளிக்குள் ஒளியை

உள்ளபடி உள்ளவனை உடையபெருந் தகையை

நிருத்தனைமெய்ப் பொருளான நின்மலனைச் சிவனை

நித்தியனைச் சத்தியனை நிற்குணனை எனது

கருத்தனைச்சிற் சபையோங்கு கடவுளைஎன் கண்ணால்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

2

4006

பாட்டுவந்து பரிசளித்த பதியைஅருட் பதியைப்

பசுபதியைக் கனகசபா பதியைஉமா பதியைத்

தேட்டமிகும் பெரும்பதியைச் சிவபதியை எல்லாம்

செய்யவல்ல தனிப்பதியைத் திகழ்தெய்வப் பதியை

ஆட்டியல்செய் தருள்பரம பதியைநவ பதியை

ஆனந்த நாட்டினுக்கோர் அதிபதியை ஆசை

காட்டிஎனை மணம்புரிந்தென் கைபிடித்த பதியைக்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

3

4007

மதித்திடுதல் அரியஒரு மாணிக்க மணியை

வயங்கியபே ரொளியுடைய வச்சிரமா மணியைத்

துதித்திடுவே தாகமத்தின் முடிமுடித்த மணியைச்

சுயஞ்சோதித் திருமணியைச் சுத்தசிவ மணியை

விதித்தல்முதல் தொழில்இயற்று வித்தகுரு மணியை

விண்மணியை அம்மணிக்குள் விளங்கியமெய்ம் மணியைக்

கதித்தசுக மயமணியைச் சித்தசிகா மணியைக்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன்
களித்தே.

4

4008

மாற்றைஅளந் தறிந்திலம்என் றருமறைஆ கமங்கள்

வழுத்தமணி மன்றோங்கி வயங்கும்அருட் பொன்னை

ஆற்றல்மிகு பெரும்பொன்னை ஐந்தொழிலும் புரியும்

அரும்பொன்னை என்தன்னை ஆண்டசெழும் பொன்னைத்

தேற்றமிகு பசும்பொன்னைச் செம்பொன்னை ஞான

சிதம்பரத்தே விளங்கிவளர் சிவமயமாம் பொன்னைக்

காற்றனல்ஆ காயம்எலாம் கலந்தவண்ணப் பொன்னைக்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன்
களித்தே.

5

4009

ஆய்தருவே தாகமத்தின் அடிமுடிநின் றிலங்கும்

அரியபெரும் பொருளைஅவைக் கனுபவமாம் பொருளை

வேய்தருதத் துவப்பொருளைத் தத்துவங்கள் விளங்க

விளங்குகின்ற பரம்பொருளைத் தத்துவங்கள் அனைத்தும்

தோய்தரல்இல் லாததனிச் சுயஞ்சோதிப் பொருளைச்

சுத்தசிவ மயமான சுகாதீதப் பொருளைக்

காய்தரல்இல் லாதென்னைக் காத்தஅருட் பொருளைக்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

6

4010

திருத்தமிகு முனிவர்களும் தேவர்களும் அழியாச்

சித்தர்களும் சிருட்டிசெயும் திறத்தர்களும் காக்கும்

அருத்தமிகு தலைவர்களும் அடக்கிடல்வல் லவரும்

அலைபுரிகின் றவர்களும்உள் அனுக்கிரகிப் பவரும்

பொருத்துமற்றைச் சத்திகளும் சத்தர்களும் எல்லாம்

பொருள்எதுவோ எனத்தேடிப் போகஅவர் அவர்தம்

கருத்தில்ஒளித் திருக்கின்ற கள்வனைஎன் கண்ணால்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

7

4011

கோணாத நிலையினராய்க் குறிகுணங்கண் டிடவும்

கூடாத வண்ணம்மலைக் குகைமுதலாம் இடத்தில்

ஊணாதி விடுத்துயிர்ப்பை அடக்கிமனம் அடக்கி

உறுபொறிகள் அடக்கிவரும் உகங்கள்பல கோடித்

தூணாக அசைதல்இன்றித் தூங்காது விழித்த

தூயசதா நிட்டர்களும் துரியநிலை இடத்தும்

காணாத வகைஒளித்த கள்வனைஎன் கண்ணால்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

8

4812

நீட்டாய சித்தாந்த நிலையினிடத் தமர்ந்தும்

நிகழ்கின்ற வேதாந்த நெறியினிடத் திருந்தும்

ஆட்டாய போதாந்தம் அலைவறுநா தாந்தம்

ஆதிமற்றை அந்தங்கள் அனைத்தினும்ஊற் றறிந்தும்

வேட்டாசைப் பற்றனைத்தும் விட்டுலகம் போற்ற

வித்தகராய் விளங்குகின்ற முத்தர்கட்கும் தன்னைக்

காட்டாமல் ஒளித்திருக்குங் கள்வனைஎன் கண்ணால்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

9

4813

மருள்நெறிசேர் மலஉடம்பை அழியாத விமல

வடிவாக்கி எல்லாஞ்செய் வல்லசித்தாம் பொருளைத்

தருணமது தெரிந்தெனக்குத் தானேவந் தளித்த

தயாநிதியை எனைஈன்ற தந்தையைஎன் தாயைப்

பொருள்நிறைசிற் றம்பலத்தே விளங்குகின்ற பதியைப்

புகல்அரிதாம் சுத்தசிவ பூரணமெய்ச் சுகத்தைக்

கருணைஅருட் பெருஞ்சோதிக் கடவுளைஎன் கண்ணால்

கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டே களித்தே.

10

## 50. ஆண்டருளிய அருமையை வியத்தல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4014.

அம்பலத் தாடும் அமுதமே என்கோ அடியனேன் ஆருயிர் என்கோ

எம்பலத் தெல்லாம் வல்லசித் தென்கோ என்னிரு கண்மணி என்கோ

நம்பிடில் அணைக்கும் நற்றுணை என்கோ நான்பெற்ற பெருஞ்செல்வம் என்கோ

இம்பர்இப் பிறப்பே மெய்ப்பிறப் பாக்கி என்னைஆண் டருளிய நினையே.

1

4015

அம்மையே என்கோ அப்பனே என்கோ அருட்பெருஞ் சோதியே என்கோ

செம்மையே எல்லாம் வல்லசித் தென்கோ திருச்சிற்றம் பலத்தமு தென்கோ

தம்மையே உணர்ந்தார் உளத்தொளி என்கோ தமியனேன் தனித்துணை என்கோ

இம்மையே அழியாத் திருஉரு அளித்திங் கென்னைஆண் டருளிய நினையே.

2

4016

எய்ப்பிலே கிடைத்த வைப்பது என்கோ

என்னுயிர்க் கின்பமே என்கோ

துய்ப்பிலே நிறைந்த பெருங்களிப் பென்கோ

சோதியுட் சோதியே என்கோ

தப்பெலாம் பொறுத்த தயாநிதி என்கோ

தனிப்பெருந் தலைவனே என்கோ

இப்பிறப் பதிலே மெய்ப்பயன் அளித்திங்

கென்னைஆண் டருளிய நினையே.

3

4017

அச்சம்நீக் கியஎன் ஆரியன் என்கோ

அம்பலத் தெம்பிரான் என்கோ

நிச்சலும் எனக்கே கிடைத்தவாழ் வென்கோ

நீடும்என் நேயனே என்கோ

பிச்சனேற் களித்த பிச்சனே என்கோ

பெரியரிற் பெரியனே என்கோ

இச்சகத் தழியாப் பெருநலம் அழித்திங்

கென்னைஆண் டருளிய நினையே.

4

4018

அத்தம்நேர் கிடைத்த சுவைக்கனி என்கோ

அன்பிலே நிறைஅமு தென்கோ

சித்தெலாம் வல்ல சித்தனே என்கோ

திருச்சிற்றம் பலச்சிவம் என்கோ

மத்தனேன் பெற்ற பெரியவாழ் வென்கோ

மன்னும்என் வாழ்முதல் என்கோ

இத்தனிப் பிறப்பை நித்தியம் ஆக்கி

என்னைஆண் டருளிய நினையே.

5

4019

மறப்பெலாம் தவிர்த்த மதிஅமு தென்கோ

மயக்கநீத் தருள்மருந் தென்கோ

பறப்பெலாம் ஒழித்த பதிபதம் என்கோ

பதச்சுவை அனுபவம் என்கோ

சிறப்பெலாம் எனக்கே செய்ததாய் என்கோ

திருச்சிற்றம் பலத்தந்தை என்கோ

இறப்பிலா வடிவம் இம்மையே அளித்திங்

கென்னைஆண் டருளிய நினையே.

6

4020

அன்பிலே பழுத்த தனிப்பழம் என்கோ

அறிவிலே அறிவறி வென்கோ

இன்பிலே நிறைந்த சிவபதம் என்கோ

என்னுயிர்த் துணைப்பதி என்கோ

வன்பிலா மனத்தே வயங்கொளி என்கோ

மன்னும்அம் பலத்தர சென்கோ

என்புரி அழியாப் பொன்புரி ஆக்கி

என்னைஆண் டருளிய நினையே.

7

4021

தடையிலா தெடுத்த அருளமு தென்கோ

சர்க்கரைக் கட்டியே என்கோ

அடைவுறு வயிரக் கட்டியே என்கோ

அம்பலத் தாணிப்பொன் என்கோ

உடைய மாணிக்கப் பெருமலை என்கோ

உள்ளொளிக் குள்ளொளி என்கோ

இடைதல்அற் றோங்கும் திருஅளித் திங்கே

என்னைஆண் டருளிய நினையே.

8

4922

மறைமுடி விளங்கு பெரும்பொருள் என்கோ

மன்னும்ஆ கமப்பொருள் என்கோ

குறைமுடித் தருள்செய் தெய்வமே என்கோ

குணப்பெருங் குன்றமே என்கோ

பிறைமுடிக் கணிந்த பெருந்தகை என்கோ

பெரியஅம் பலத்தர சென்கோ

இறைமுடிப் பொருள்என் உளம்பெற அளித்திங்

கென்னைஆண் டருளிய நினையே.

9

4923

என்உளம் பிரியாப் பேர்ஒளி என்கோ

என்உயிர்த் தந்தையே என்கோ

என்உயிர்த் தாயே இன்பமே என்கோ

என்உயிர்த் தலைவனே என்கோ

என்உயிர் வளர்க்கும் தனிஅமு தென்கோ

என்னுடை நண்பனே என்கோ

என்ஒரு(275) வாழ்வின் தனிமுதல் என்கோ

என்னைஆண் டருளிய நினையே.

10

(275).என்பெரு - பி. இரா. பதிப்பு.

51. இறைவனை ஏத்தும் இன்பம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4024.

கருணைமா நிதியே என்னிரு கண்ணே

கடவுளே கடவுளே என்கோ

தருணவான் அமுதே என்பெருந் தாயே

தந்தையே தந்தையே என்கோ

தெருள்நிறை மதியே என்குரு பதியே

தெய்வமே தெய்வமே என்கோ

அருள்நிறை தரும்என் அருட்பெருஞ் சோதி

ஆண்டவ நின்றனை அறிந்தே.

1

4025

ஒட்டியே என்னுள் உறும்ஒளி என்கோ

ஒளிஎலாம் நிரம்பிய நிலைக்கோர்

வெட்டியே என்கோ வெட்டியில்(276) எனக்கு

விளங்குறக் கிடைத்தஓர் வயிரப்

பெட்டியே என்கோ பெட்டியின் நடுவே

பெரியவர் வைத்ததோர் தங்கக்

கட்டியே என்கோ அம்பலத் தாடும்

கருணையங் கடவுள்நின் றனையே.

2

(276) கெட்டியே என்கோ கெட்டியில் - முதற்பதிப்பு., பொ. சு. பதிப்பு.

4026

துன்பெலாம் தவிர்த்த துணைவனே என்கோ

சோதியுட் சோதியே என்கோ

அன்பெலாம் அளித்த அன்பனே என்கோ

அம்மையே அப்பனே என்கோ

இன்பெலாம் புரிந்த இறைவனே என்கோ

என்உயிர்க் கின்அமு தென்கோ

என்பொலா மணியே என்கணே என்கோ

என்னுயிர் நாதநின் றனையே.

3

4027

கருத்தனே எனது கருத்தினுக் கிசைந்த

கணவனே கணவனே என்கோ

ஒருத்தனே எல்லாம் உடையநா யகனே

ஒருதனிப் பெரியனே என்கோ

திருத்தனே எனது செல்வமே எல்லாம்

செயவல்ல சித்தனே என்கோ

நிருத்தனே எனக்குப் பொருத்தனே என்கோ

நிறைஅருட் சோதிநின் றனையே.

௪

௪௮௨௮

தாயனே எனது தாதையே ஒருமைத்

தலைவனே தலைவனே என்கோ

பேயனேன் பிழையைப் பொறுத்தருள் புரிந்த

பெருந்தகைப் பெரும்பதி என்கோ

சேயனேன் பெற்ற சிவபதம் என்கோ

சித்தெலாம் வல்லசித் தென்கோ

தூயனே எனது நேயனே என்கோ

சோதியுட் சோதிநின் றனையே.

5

௪௮௨௯

அரும்பிலே மலர்வுற் றருள்மணம் வீசும்

ஆனந்தத் தனிமலர் என்கோ

கரும்பிலே எடுத்த சுவைத்திரள் என்கோ

கடையனேன் உடையநெஞ் சகமாம்

இரும்பிலே பழுத்துப் பேரொளி ததும்பி

இலங்கும்ஓர் பசும்பொனே என்கோ
துரும்பினேன் பெற்ற பெரும்பதம் என்கோ
சோதியுட் சோதிநின் றனையே.

6

4030

தாகமுள் எடுத்த போதெதிர் கிடைத்த
சர்க்கரை அமுதமே என்கோ
மோகம்வந் தடுத்த போதுகைப் பிடித்த
முகநகைக் கணவனே என்கோ
போகமுள் விரும்பும் போதிலே வலிந்து
புணர்ந்தஓர் பூவையே என்கோ
ஆகமுட் புகுந்தென் உயிரினுட் கலந்த
அம்பலத் தாழநின் றனையே.

7

4031

தத்துவம் அனைத்தும் தவிர்த்துநான் தனித்த
தருணத்தில் கிடைத்ததொன் றென்கோ
சத்துவ நிரம்பும் சுத்தசன் மார்க்கந்
தனில்உறும் அனுபவம் என்கோ
ஒத்துவந் தெனைத்தான் கலந்துகொண் டெனக்குள்
ஓங்கிய ஒருமையே என்கோ

சித்துவந் தாடுஞ் சித்தனே என்கோ
திருச்சிற்றம் பலத்தவ நினையே.

8

4832

யோகமெய்ஞ் ஞானம் பலித்தபோ துளத்தில்
ஓங்கிய காட்சியே என்கோ
ஏகமெய்ஞ் ஞான யோகத்திற் கிடைத்துள்
இசைந்தபே ரின்பமே என்கோ
சாகலைத் தவிர்த்தென் தன்னைவாழ் விக்கச்
சார்ந்தசற் குருமணி என்கோ
மாகமும் புவியும் வாழ்வுற மணிமா
மன்றிலே நடிக்கின்றோய் நினையே.

9

4833

இரவிலா தியம்பும் பகலிலா திருந்த
இயற்கையுள் இயற்கையே என்கோ
வரவிலா வுரைக்கும் போக்கிலா நிலையில்(277)
வயங்கிய வான்பொருள் என்கோ
திரையிலா தெல்லாம் வல்லசித் தெனக்கே
செய்ததோர் சித்தனே என்கோ
கரவிலா தெனக்குப் பேரருட் சோதி

களித்தளித் தருளிய நினையே.

10

(277) நிலைக்கும் - முதற்பதிப்பு, பொ. சு. பதிப்பு.

52. பாமாலை ஏற்றல்

நேரிசை வெண்பா

4034.

நான்புனைந்த சொன்மாலை நன்மாலை என்றருளித்

தான்புனைந்தான் ஞான சபைத்தலைவன் - தேன்புனைந்த

சொல்லாள் சிவகாம சுந்தரியைத் தோள்புணர்ந்த

நல்லான்தன் தாட்கே நயந்து.

1

4035

சொல்லுகின்ற என்சிறுவாய்ச் சொன்மாலை அத்தனையும்

வெல்லுகின்ற தும்பைஎன்றே மேல்அணிந்தான் - வல்லிசிவ

காம சவுந்தரிக்குக் கண்ணனையான் ஞானசபைச்

சேமநட ராஜன் தெரிந்து.

2

4036

ஏதாகு மோஎனநான் எண்ணி இசைத்தஎலாம்

வேதாக மம்என்றே மேல்அணிந்தான் - பாதார

விந்தம் எனதுசிர மேல்அமர்த்தி மெய்அளித்த

எந்தைநட ராஜன் இசைந்து.

3

4037

இன்உரைஅன் றென்றுலகம் எல்லாம் அறிந்திருக்க
என்உரையும் பொன்உரைஎன் றேஅணிந்தான் - தன்உரைக்கு
நேர்என்றான் நீடுலகில் நின்போல் உரைக்கவல்லார்
ஆர்என்றான் அம்பலவன் ஆய்ந்து.

4

4038

என்பாட்டுக் கெண்ணாத தெண்ணி இசைத்தேன்என்
தன்பாட்டைச் சத்தியமாத் தான்புனைந்தான் - முன்பாட்டுக்
காலையிலே வந்து கருணைஅளித் தேதருமச்
சாலையிலே வாஎன்றான் தான்.

5

4039

என்னே அதிசயம்ஈ திவ்வுலகீர் என்னுரையைப்
பொன்னே எனமேற் புனைந்துகொண்டான் - தன்னேரில்
நல்ஆ ரணங்கள்எலாம் நாணியவே எல்லாஞ்செய்
வல்லான் திருக்கருணை வாய்ப்பு.

6

4040

முன்பின்அறி யாது மொழிந்தமொழி மாலைஎலாம்

அன்பின் இசைந் தந்தோ அணிந்துகொண்டான் - என்பருவம்

பாராது வந்தென் பருவரல்எல் லாம்தவிர்த்துத்

தாரா வரங்களெலாம் தந்து.

7

4041

பொன்னொப்ப தாம்ஒருநீ போற்றியசொன் மாலைஎன்றே

என்னப்பன் என்சொல் இசைந்தணிந்தான் - தன்ஒப்பில்

வல்லான் இசைந்ததுவே மாமாலை அற்புதம்ஈ

தெல்லாம் திருவருட்சீ ரே.

8

4042

பின்முன்அறி யேன்நான் பிதற்றியசொன் மாலைஎலாம்

தன்முன்அரங் கேற்றெனவே தான்உரைத்தான் - என்முன்

இருந்தான்என் னுள்ளே இருக்கின்றான் ஞான

மருந்தான்சிற் றம்பலத்தான் வாய்ந்து.

9

4043

நீயேஎன் பிள்ளைஇங்கு நின்பாட்டில் குற்றம்ஒன்றும்

ஆயேம்என் றந்தோ அணிந்துகொண்டான் - நாயேன்செய்

புண்ணியம்இவ் வானிற் புவியின் மிகப்பெரிதால்

எண்ணியஎல் லாம்புரிகின் றேன்.

10

4044

எண்ணுகின்றேன் எண்ணுதொறென் எண்ணமெலாம் தித்திக்க
நண்ணுகின்ற தென்புகல்வேன் நானிலத்தீர் - உண்ணுகின்ற
உள்ளமுதோ நான்தான் உஞற்றுதவத் தாற்கிடைத்த
தெள்ளமுதோ அம்பலவன் சீர்.

11

4045

ஆக்கி அளித்தல்முதல் ஆந்தொழில்லூர் ஐந்தினையும்
தேக்கி அமுதொருநீ செய்என்றான் - தூக்கி
எடுத்தான் அணைத்தான் இறவாத தேகம்
கொடுத்தான்சிற் றம்பலத்தென் கோ.

12

53. உத்தரஞானசிதம்பர மாலை

கட்டளைக் கலித்துறை

4046.

அருளோங்கு கின்ற தருட்பெருஞ் சோதி யடைந்ததென்றன்
மருளோங்கு றாமல் தவிர்த்தது நல்ல வரமளித்தே
பொருளோங்கி நான்அருட் பூமியில் வாழப் புரிந்ததென்றும்
தெருளோங்க ஓங்குவ துத்தர ஞான சிதம்பரமே.

1

4047

இணைஎன்று தான்தனக் கேற்றது போற்றும் எனக்குநல்ல
துணைஎன்று வந்தது சுத்தசன் மார்க்கத்தில் தோய்ந்ததென்னை
அணைஎன் றணைத்துக்கொண் டைந்தொழில் ஈந்த தருளுலகில்
திணைஐந்து மாகிய துத்தர ஞான சிதம்பரமே.

2

4048

உலகம் எலாந்தொழ உற்ற தெனக்குண்மை ஒண்மைதந்தே
இலக எலாம்படைத் தாருயிர் காத்தருள் என்றதென்றும்
கலகம் இலாச்சுத்த சன்மார்க்க சங்கம் கலந்ததுபார்த்
திலகம் எனாநின்ற துத்தர ஞான சிதம்பரமே.

3

4049

பவமே தவிர்ப்பது சாகா வரமும் பயப்பதுநல்
தவமே புரிந்தவர்க் கின்பந் தருவது தான்தனக்கே
உவமே யமான தொளிஓங்கு கின்ற தொளிருஞ்சுத்த
சிவமே நிறைகின்ற துத்தர ஞான சிதம்பரமே.

4

4050

ஒத்தா ரையும்இழிந் தாரையும் நேர்கண் டுவக்கஒரு

மித்தாரை வாழ்விப்ப தேற்றார்க் கமுதம் விளம்பிஇடு

வித்தாரைக் காப்பது சித்தாடு கின்றது மேதினிமேல்

செத்தாரை மீட்கின்ற துத்தர ஞான சிதம்பரமே.

5

4051

எத்தாலும் மிக்க தெனக்கருள் ஈந்ததெல் லாமும்வல்ல

சித்தாடல் செய்கின்ற தெல்லா உலகும் செழிக்க வைத்த

தித்தா ரணிக்கணி ஆயது வான்தொழற் கேற்றதெங்கும்

செத்தால் எழுப்புவ துத்தர ஞான சிதம்பரமே.

6

4052

குருநெறிக் கேஎன்னைக் கூட்டிக் கொடுத்தது கூறரிதாம்

பெருநெறிக் கேசென்ற பேர்க்குக் கிடைப்பது பேய்உலகக்

கருநெறிக் கேற்றவர் காணற் கரியது காட்டுகின்ற

திருநெறிக் கேற்கின்ற துத்தர ஞான சிதம்பரமே.

7

4053

கொல்லா நெறியது கோடா நிலையது கோபமிலார்

சொல்லால் உவந்தது சுத்தசன் மார்க்கந் துணிந்ததுல

கெல்லாம் அளிப்ப திறந்தால் எழுப்புவ தேதம்ஒன்றும்

செல்லா வளத்தின துத்தர ஞான சிதம்பரமே.

8

4054

காணாத காட்சிகள் காட்டுவிக் கின்றது காலமெல்லாம்

வீணாள் கழிப்பவர்க் கெய்தரி தானது வெஞ்சினத்தால்

கோணாத நெஞ்சில் குலாவிநிற் கின்றது கூடிநின்று

சேணாடர் வாழ்த்துவ துத்தர ஞான சிதம்பரமே.

9

4055

சொல்வந்த வேத முடிமுடி மீதில் துலங்குவது

கல்வந்த நெஞ்சினர் காணற் கரியது காமம்இலார்

நல்வந் தனைசெய நண்ணிய பேறது நன்றெனக்கே

செல்வந்தந் தாட்கொண்ட துத்தர ஞான சிதம்பரமே.

10

4056

ஏகாந்த மாகி வெளியாய் இருந்ததிங் கென்னைமுன்னே

மோகாந்த காரத்தின் மீட்டதென் நெஞ்ச முயங்கிரும்பின்

மாகாந்த மானது வல்வினை தீர்த்தெனை வாழ்வித்தென்றன்

தேகாந்த நீக்கிய துத்தர ஞான சிதம்பரமே.

11

54. செய்பணி வினவல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4057.

அருளே பழுத்த சிவதருவில்அளிந்த பழந்தந் தடியேனைத்

தெருளே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

மருளே முதலாம் தடைஎல்லாம்தீர்ந்தேன் நின்பால் வளர்கின்றேன்

பொருளே இனிநின் தனைப்பாடிஆடும் வண்ணம் புகலுகவே.

1

4058

ஒருவா தடியேன் எண்ணியவா றெல்லாம் அருளி உளங்களித்தே

திருவார் சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

பெருவாழ் வடைந்தேன் பெருங்களிப்பால் பெருமான் நின்பால் வளர்கின்றேன்

உருவார் உலகில் உனைப்பாடி ஆடும் வண்ணம் உரைத்தருளே.

2

4059

அவமே புரிந்தேன் தனைமீட்டுன் அருளார் அமுதம் மிகப்புகட்டிச்

சிவமே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

பவமே தொலைத்தேன் பெருங்களிப்பால் பதியே நின்பால் வளர்கின்றேன்

நவமே அடியேன் நினைப்பாடி ஆடும் வண்ணம் நவிலுகவே.

3

4060

பல்வா தனையும் தவிர்த்தெனக்கே பரமா னந்த அமுதளித்துச்

செல்வா சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

வல்வா தனைசெய் மனச்செருக்கை மாற்றி நின்பால் வளர்கின்றேன்

நல்வாழ் வளித்தாய் நினைப்பாடி ஆடும் வண்ணம் நவிலுகவே.

4

4961

ஓவா இன்ப மயமாகி ஓங்கும் அமுதம் உதவிஎனைத்

தேவா சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

பூவார் மணம்போல் சுகந்தருமெய்ப் பொருளே நின்பால் வளர்கின்றேன்

நாவால் அடியேன் நினைப்பாடி ஆடும் வண்ணம் நவிலுகவே.

5

4962

இளிவே தவிர்த்துச் சிறியேன்தன் எண்ணம் முழுதும் அளித்தருளித்

தெளிவே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

ஒளிவேய் வடிவு பெற்றோங்கி உடையாய் உன்பால் வளர்கின்றேன்

தளிவேய் நினது புகழ்பாடி ஆடும் வண்ணம் சாற்றுகவே.

6

4963

மறப்பே தவிர்த்திங் கெனைஎன்றும் மாளா நிலையில் தனியமர்த்திச்

சிறப்பே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

பிறப்பே தவிர்ந்தேன் பெருங்களிப்பால் பெருமான் நின்பால் வளர்கின்றேன்

திறப்பேர் உலகில் உனைப்பாடி ஆடும் வண்ணம் செப்புகவே.

7

4964

ஊனே புகுந்தென் உளங்கனிவித் துயிரில் கலந்தே ஒன்றாகித்

தேனே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

நானே அழியா வாழ்வுடையேன் நானே நின்பால் வளர்கின்றேன்

தானேர் உலகில் உனைப்பாடி ஆடும் வண்ணம் சாற்றுகவே.

8

4965

ஆரா அமுதம் அளித்தருளி அன்பால் இன்ப நிலைக்கேற்றிச்

சீரார் சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

ஏரார் இன்ப அனுபவங்கள் எல்லாம் பொருந்தி இருக்கின்றேன்

தீரா உலகில் அடிச்சிறியேன் செய்யும் பணியைத் தெரித்தருளே.

9

4966

மெய்வைப் பழியா நிலைக்கேற்றி விளங்கும் அமுதம் மிகஅளித்தே

தெய்வப் பதியே சிவமேநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

ஐவைப் பறிந்தேன் துரிசெல்லாம் அறுத்தேன் நின்பால் வளர்கின்றேன்

பொய்வைப் படையேன் இவ்வுலகில் புரியும் பணியைப் புகன்றருளே.

10

4067

. ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

நாரா யணனு நான்முகனு நயந்து வியக்க நிற்கின்றேன்

ஏரார் உலகில் இனிஅடியேன் செய்யும் பணியை இயம்புகவே.

11

4068

பிறந்தேற் கென்றும் இறவாது பிறவா தோங்கும் பெருமைதந்து

சிறந்தே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை ஆக்கினையே

திறந்தேர் முனிவர் தேவரெலாந் தேர்ந்து நயப்ப நிற்கின்றேன்

அறந்தேர் உலகில் இனிஅடியேன் செய்யும் பணியை அருளுகவே.278

12

4067, 4068.

இவ்வொன்றரைப் பாட்டும் பெருமான் கையெழுத்தில்

இருப்பதாகக் கூறி ஆ. பா. இவற்றைத் தனிப்பாசுரப் பகுதியில் சேர்த்துள்ளார்.

பொருளமைதி கருதி இவை ஈண்டு இப்பதிகத்துடன் சேர்க்கப்பெற்றன.

13

## 55. ஆன்ம தரிசனம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4069.

திருஎலாம் தரும்ஓர் தெய்வமாம் ஒருவன்

திருச்சிற்றம் பலந்திகழ் கின்றான்

உருஎலாம் உணர்ச்சி உடல்பொருள் ஆவி

உளஎலாம் ஆங்கவன் தனக்கே

தெருஎலாம் அறியக் கொடுத்தனன் வேறு

செயலிலேன் எனநினைத் திருந்தேன்

அருஎலாம் உடையாய் நீஅறிந் ததுவே

அடிக்கடி உரைப்பதென் நினக்கே.

1

4070

நினைத்தபோ தெல்லாம் நின்னையே நினைத்தேன்

நினைப்பற நின்றபோ தெல்லாம்

எனைத்தனி ஆக்கி நின்கணே நின்றேன்

என்செயல் என்னலூர் செயலும்

தினைத்தனை எனினும் புரிந்திலேன் எல்லாம்

சிவன்செய லாம்எனப் புரிந்தேன்

அனைத்தும்என் அரசே நீஅறிந் ததுவே

அடிக்கடி உரைப்பதென் நினக்கே.

2

4071

களித்தபோ தெல்லாம் நின்இயல் உணர்ந்தே

களித்தனன் கண்கள்நீர் ததும்பித்

துளித்தபோ தெல்லாம் நின்அருள் நினைத்தே

துளித்தனன் சூழ்ந்தவர் உளத்தைத்

தெளித்தபோ தெல்லாம் நின்திறம் புகன்றே

தெளித்தனன் செய்கைவே றறியேன்

ஒளித்திரு வுளமே அறிந்ததிவ் வனைத்தும்

உரைப்பதென் அடிக்கடி உனக்கே.

3

4072

உண்டதும் பொருந்தி உவந்ததும் உறங்கி உணர்ந்ததும் உலகியல் உணர்வால்

கண்டதும் கருதிக் களித்ததும் கலைகள் கற்றதும் கரைந்ததும் காதல்

கொண்டதும் நின்னோ டன்றிநான் தனித்தென் குறிப்பினில் குறித்ததொன் றிலையே

ஒண்தகும் உனது திருவுளம் அறிந்த துரைப்பதென் அடிக்கடி உனக்கே.

4

4073

களவிலே களித்த காலத்தும் நீயே களித்தனை நான்களித் தறியேன்

உளவிலே உவந்த போதும்நீ தானே உவந்தனை நான்உவந் தறியேன்

கொளஇலே சமும்லூர் குறிப்பிலேன் அனைத்தும் குறித்தனை கொண்டனை நீயே

அளவிலே எல்லாம் அறிந்தனை அரசே அடிக்கடி உரைப்பதென் நினக்கே.

5

4074

திலகவாள் நுதலார் தமைக்கன விடத்தும் சிறிதும்நான் விழைந்திலேன் இந்த

உலகவாழ் வதில்லூர் அணுத்துணை எனினும் உவப்பிலேன் உலகுறு மாயைக்

கலகவா தனைதீர் காலம்என் றுறுமோ கடவுளே எனத்துயர்ந் திருந்தேன்

அலகிலாத் திறலோய் நீஅறிந் ததுநான் அடிக்கடி உரைப்பதென் நினக்கே.

6

4975

சாதியும் மதமும் சமயமும் தவிர்ந்தேன் சாத்திரக் குப்பையும் தணந்தேன்

நீதியும் நிலையும் சத்தியப் பொருளும் நித்திய வாழ்க்கையும் சுகமும்

ஆதியும் நடுவும் அந்தமும் இல்லா அருட்பெருஞ் சோதிஎன் றறிந்தேன்

ஓதிய அனைத்தும் நீஅறிந் ததுநான் உரைப்பதென் அடிக்கடி உனக்கே.

7

4976

பித்தெலாம் உடைய உலகர்தங் கலகப் பிதற்றெலாம் என்றொழிந் திடுமோ

சத்தெலாம் ஒன்றென் றுணர்ந்தசன் மார்க்க சங்கம்என் றோங்குமோ தலைமைச்

சித்தெலாம் வல்ல சித்தன்என் றுறுமோ தெரிந்திலேன் எனத்துயர்ந் திருந்தேன்

ஒத்தெலாம் உனது திருவுளம் அறிந்த துரைப்பதென் அடிக்கடி உனக்கே.

8

4977

ஒன்றெனக் காணும் உணர்ச்சிஎன் றுறுமோ ஊழிதோ றூழிசென் றிடினும்

என்றும்இங் கிறவா இயற்கைஎன் றுறுமோ இயல்அருட் சித்திகள் எனைவந்

தொன்றல்என் றுறுமோ அனைத்தும்என் வசத்தே உறுதல்என் றோஎனத் துயர்ந்தேன்

உன்திரு வுளமே அறிந்ததிவ் வனைத்தும் உரைப்பதென் அடிக்கடி உனக்கே.

9

4078

கள்ளவா தனையைக் களைந்தருள் நெறியைக் காதலித் தொருமையில் கலந்தே

உள்ளவா றிந்த உலகெலாம் களிப்புற் றோங்குதல் என்றுவந் துறுமோ

வள்ளலே அதுகண் டடியனேன் உள்ளம் மகிழ்தல்என் றோஎனத் துயர்ந்தேன்

ஒள்ளியோய் நினது திருவுளம் அறிந்த துரைப்பதென் அடிக்கடி உனக்கே.

10

## 56. சுத்த சன்மார்க்க வேண்டுகோள்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4079

அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்

எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே

எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்

செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ மார்க்கம்

திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்

தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்

தலைவநினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே.

1

4080

ஐயாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

அடிமுடிகண் டெந்நாளும் அனுபவித்தல் வேண்டும்

பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும்

புகன்றபடி புகன்றபடி புரிந்திடுதல் வேண்டும்

எய்யாத(279) அருட்சோதி என்கையுறல் வேண்டும்

இறந்தஉயிர் தமைமீட்டும் எழுப்பியிடல் வேண்டும்

நையாத வண்ணம்உயிர் காத்திடுதல் வேண்டும்

நாயகநின் தனைப்பிரியா துறுதலும்வேண் டுவனே.

2

(279). எய்யாத - அறியாத. முதற்பதிப்பு.

4081

அண்ணாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

அழியாத தனிவடிவம் யானடைதல் வேண்டும்

கண்ணார நினைஎங்கும் கண்டுவத்தல் வேண்டும்

காணாத காட்சிஎலாம் கண்டுகொளல் வேண்டும்

பண்ணார நின்றனையே பாடியுறல் வேண்டும்

பரமானந் தப்பெருங்கூத் தாடியிடல் வேண்டும்

உண்ணாடி உயிர்கள்உறும் துயர்தவிர்த்தல் வேண்டும்

உனைப்பிரியா துறுகின்ற உறவதுவேண் டுவனே.

3

4982

அத்தாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

அருட்பெருஞ்சோ தியைப்பெற்றே அகங்களித்தல் வேண்டும்

செத்தாரை மீட்டும்இங்கே எழுப்பியிடல் வேண்டும்

திருச்சபைக்கே அடிமைகளாச் செய்வித்தல் வேண்டும்

ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்

ஒருமைஉளர் ஆகிஉல கியல்நடத்தல் வேண்டும்

எத்தாலும் அழியாத வடிவதிலே நானும்

எந்தாயும் ஒன்றாக இனிதுறல்வேண் டுவனே.

4

4983

அரைசேநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

அருட்பெருஞ்சோ தியைப்பெற்றே அகமகிழ்தல்வேண்டும்

வரைசேர்எவ் வுலகமும்ஓர் ஒழுக்கமுறல் வேண்டும்

மடிந்தாரை மீளவும்நான் வருவித்தல் வேண்டும்

புரைசேரும் கொலைநெறியும் புலைநெறியும் சிறிதும்

பொருந்தாமல் எவ்வுயிரும் புரிந்துவத்தல் வேண்டும்

உரைசேர்மெய்த் திருவடிவில் எந்தாயும் நானும்

ஒன்றாகி எஞ்ஞான்றும் ஓங்குதல்வேண் டுவனே.

5

4984

அடிகேள்நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

அண்டம்எலாம் பிண்டம்எலாம் கண்டுகொளல் வேண்டும்

துடிசேர்எவ் வுலகமும்எத் தேவரும்எவ் வுயிரும்

சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றிடுதல் வேண்டும்

படிவானும் படைத்தல்முதல் ஐந்தொழிலும் ஞானம்

படைத்தல்முதல் ஐந்தொழிலும் நான்புரிதல் வேண்டும்

ஒடியாத திருவடிவில் எந்தாயும் நானும்

ஒன்றாகி எஞ்ஞான்றும் ஓங்குதல்வேண் டுவனே.

6

4985

அம்மாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

ஆணவம்ஆ தியமுழுதும் அறுத்துநிற்றல் வேண்டும்

இம்மாலைத் தத்துவங்கள் எல்லாம்என் வசத்தே

இயங்கிஒரு தீமையும்இல் லாதிருத்தல் வேண்டும்

எம்மான்நான் வேண்டுதல்வேண் டாமையறல் வேண்டும்

ஏகசிவ போகஅனு போகம்உறல் வேண்டும்

தம்மானத் திருவழிவில் எந்தாயும் நானும்

சார்ந்துகலந் தோங்குகின்ற தன்மையும்வேண் டுவனே.

7

4986

அச்சாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

ஆறந்த நிலைகளெலாம் அறிந்தடைதல் வேண்டும்

எச்சார்பும் ஆகிஉயிர்க் கிதம்புரிதல் வேண்டும்

எனைஅடுத்தார் தமக்கெல்லாம் இன்புதரல் வேண்டும்

இச்சாதி சமயவிகற் பங்களெலாம் தவிர்த்தே

எவ்வுலகும் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்

உச்சாதி அந்தமிலாத் திருவழிவில் யானும்

உடையாயும் கலந்தோங்கும் ஒருமையும்வேண் டுவனே.

8

4987

அறிவாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

ஐந்தொழில்நான் புரிந்துலகில் அருள்விளக்கல் வேண்டும்

செறியாத கரணமெலாம் செறித்தடக்கல் வேண்டும்

சித்தாந்த வேதாந்தப் பொதுசிறத்தல் வேண்டும்

எறியாதென் எண்ணமெலாம் இனிதருளல் வேண்டும்

எல்லாஞ்செய் வல்லசித்தே எனக்களித்தல் வேண்டும்

பிறியாதென் னொடுகலந்து நீஇருத்தல் வேண்டும்

பெருமான்நின் தனைப்பாடி ஆடுதல்வேண் டுவனே.

9

4088

அருளாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

அணுத்துணையும் சினங்காமம் அடையாமை வேண்டும்

மருளாய உலகமெலாம் மருள்நீங்கி ஞான

மன்றிடத்தே வள்ளல்உனை வாழ்த்தியிடல் வேண்டும்

இருளாமை உறல்வேண்டும் எனைஅடுத்தார் சுகம்வாய்ந்

திடல்வேண்டும் எவ்வுயிரும் இன்படைதல் வேண்டும்

பொருளாம்ஓர் திருவடியில் உடையாயும் நானும்

புணர்ந்துகலந் தொன்றாகிப் பொருந்துதல்வேண் டுவனே.

10

4089

அமலாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்

ஆடிநிற்குஞ் சேவடியைப் பாடிநிற்க வேண்டும்

எமனாதித் தடைஎன்றும் எய்தாமை வேண்டும்

எல்லாம்செய் வல்லதிறன் எனக்களித்தல் வேண்டும்

கமையாதி(280) அடைந்துயிர்கள் எல்லாம்சன் மார்க்கம்

காதலித்தே திருப்பொதுவைக் களித்தேத்தல் வேண்டும்

விமலாதி உடையஒரு திருவடியில் யானும்

விமலாநீ யுங்கலந்தே விளங்குதல்வேண் டுவனே.

11

(280). கமை - பொறுமை. முதற்பதிப்பு.

## 57. அருள் விளக்க மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4090

அருள்விளக்கே அருட்சுடரே அருட்சோதிச் சிவமே

அருளமுதே அருள்நிறைவே அருள்வடிவப் பொருளே

இருள்கடிந்தென் உளமுழுதும் இடங்கொண்ட பதியே

என்அறிவே என்உயிரே எனக்கினிய உறவே

மருள்கடிந்த மாமணியே மாற்றறியாப் பொன்னே

மன்றில்நடம் புரிகின்ற மணவாளா எனக்கே

தெருள்அளித்த திருவாளா ஞானஉரு வாளா

தெய்வநடத் தரசேநான் செய்மொழிஏற் றருளே.

1

4091

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த

குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே

ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே

உகந்ததண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே

மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே

மென்காற்றில் விளைசுகமே சுகத்தில்உறும் பயனே
ஆடையிலே எனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

2

4892

இன்புறநான் எய்ப்பிடத்தே பெற்றபெரு வைப்பே
ஏங்கியபோ தென்றன்னைத் தாங்கியநல் துணையே
அன்புறஎன் உட்கலந்தே அண்ணிக்கும் அமுதே
அச்சமெலாம் தவிர்த்தென்னை ஆட்கொண்ட குருவே
என்பருவம் குறியாதே எனைமணந்த பதியே
இச்சையுற்ற படிஎல்லாம் எனக்கருளும் துரையே
துன்புறமெய் அன்பருக்கே பொதுநடஞ்செய் அரசே
தூயதிரு அடிகளுக்கென் சொல்லும்அணிந் தருளே.

3

4893

ஒசித்தகொடி அனையேற்குக் கிடைத்தபெரும் பற்றே
உள்மயங்கும் போதுமயக் கொழித்தருளும் தெளிவே
பசித்தபொழு தெதிர்கிடைத்த பால்சோற்றுத் திரளே
பயந்தபொழு தெல்லாம்என் பயந்தவிர்த்த துரையே
நசித்தவரை எழுப்பிஅருள் நல்கியமா மருந்தே
நான்புணர நானாகி நண்ணியமெய்ச் சிவமே

கசித்தமனத் தன்பர்தொழப் பொதுநடஞ்செய் அரசே
களித்தெனது சொன்மாலை கழலில்அணிந் தருளே.

௪

௪௮௯௪

மனம்இளைத்து வாடியபோ தென்எதிரே கிடைத்து
வாட்டமெலாம் தவிர்த்தெனக்கு வாழ்வளித்த நிதியே
சினமுகத்தார் தமைக்கண்டு திகைத்தபொழு தவரைச்
சிரித்தமுகத் தவராக்கி எனக்களித்த சிவமே
அனம்உகைத்தான் அரிமுதலோர் துருவிநிற்க எனக்கே
அடிமுடிகள் காட்டுவித்தே அடிமைகொண்ட பதியே
இனம்எனப்பேர் அன்பர்தொழப் பொதுநடஞ்செய் அரசே
என்னுடைய சொன்மாலை யாவும்அணிந் தருளே.

5

௪௮௯5

கங்குலிலே வருந்தியஎன் வருத்தமெலாம் தவிர்த்தே
காலையிலே என்உளத்தே கிடைத்தபெருங் களிப்பே
செங்குவளை மாலையொடு மல்லிகைப்பூ மாலை
சேர்த்தணிந்தென் தனைமணந்த தெய்வமண வாளா
எங்கும்ஒளி மயமாகி நின்றநிலை காட்டி
என்அகத்தும் புறத்தும்நிறைந் திலங்கியமெய்ப் பொருளே
துங்கமுறத் திருப்பொதுவில் திருநடஞ்செய் அரசே

சொன்மாலை சூட்டுகின்றேன் தோளில்அணிந் தருளே.

6

4996

கரைந்துவிடா தென்னுடைய நாவகத்தே இருந்து

கனத்தசுவை தருகின்ற கற்கண்டே கனிவாய்

விரைந்துவந்தென் துன்பமெலாம் தவிர்த்தஅரு ளமுதே

மெய்அருளே மெய்யாகி விளங்குகின்ற விளக்கே

திரைந்தஉடல் விரைந்துடனே பொன்உடம்பே ஆகித்

திகழ்ந்தழியா தோங்கஅருள் சித்தேமெய்ச் சத்தே

வரைந்தென்னை மணம்புரிந்து பொதுநடஞ்செய் அரசே

மகிழ்வொடுநான் புனைந்திடுஞ்சொன் மாலைஅணிந் தருளே.

7

4997

கதிக்குவழி காட்டுகின்ற கண்ணேஎன் கண்ணில்

கலந்தமணி யேமணியில் கலந்தகதிர் ஒளியே

விதிக்கும்உல குயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே

மெய்யுணர்ந்தோர் கையகத்தே விளங்கியதீங் கனியே

மதிக்குமதிக் கப்புறம்போய் வயங்குதனி நிலையே

மறைமுடிஆ கமமுடிமேல் வயங்கும்இன்ப நிறைவே

துதிக்கும்அன்பர் தொழப்பொதுவில் நடம்புரியும் அரசே

சொன்மாலை சூட்டுகின்றேன் தோளில்அணிந் தருளே.

8

4998

அண்டவள வெவ்வளவோ அவ்வளவும் அவற்றில்

அமைந்தசரா சரஅளவெவ் வளவோஅவ் வளவும்

கண்டதுவாய் ஆங்கவைகள் தனித்தனியே அகத்தும்

காண்புறத்தும் அகப்புறத்தும் புறப்புறத்தும் விளங்க

விண்டகுபே ரருட்சோதிப் பெருவெளிக்கு நடுவே

விளங்கிஒரு பெருங்கருணைக் கொடிநாட்டி அருளாம்

தண்டகும்ஓர் தனிச்செங்கோல் நடத்திமன்றில் நடிக்கும்

தனிஅரசே என்மாலை தாளில்அணிந் தருளே.

9

4999

நல்லார்சொல் யோகாந்தப் பதிகள்பல கோடி

நாட்டியதோர் போதாந்தப் பதிகள்பல கோடி

வல்லார்சொல் கலாந்தநிலைப் பதிகள்பல கோடி

வழுத்தும்ஒரு நாதாந்தப் பதிகள்பல கோடி

இல்லார்ந்த வேதாந்தப் பதிகள்பல கோடி

இலங்குகின்ற சித்தாந்தப் பதிகள்பல கோடி

எல்லாம்பேர் அருட்சோதித் தனிச்செங்கோல் நடத்தும்

என்அரசே என்மாலை இனிதுபுனைந் தருளே.

10

4100

நாட்டியதோர் சுத்தபரா சத்திஅண்டம் முதலா

ஞானசத்தி அண்டமது கடையாக இவற்றுள்

ஈட்டியபற் பலசத்தி சத்தர்அண்டப் பகுதி

எத்தனையோ கோடிகளும் தன்நிழற்கீழ் விளங்கச்

சூட்டியபொன் முடிஇலங்கச் சமரசமெய்ஞ் ஞானச்

சுத்தசிவ சன்மார்க்கப் பெருநிலையில் அமர்ந்தே

நீட்டியபே ரருட்சோதித் தனிச்செங்கோல் நடத்தும்

நீதிநடத் தரசேஎன் நெடுஞ்சொல்அணிந் தருளே.

11

4101

தன்பெருமை தான்அறியாத் தன்மையனே எனது

தனித்தலைவா என்னுயிர்க்குள் இனித்ததனிச் சுவையே

நின்பெருமை நான்அறியேன் நான்மட்டோ அறியேன்

நெடுமால்நான் முகன்முதலா மூர்த்திகளும் அறியார்

அன்புறும்ஆ கமமறைகள் அறியாவே எனினும்

அவரும்அவை களும்சிலசொல் அணிகின்றார் நினக்கே

என்பருவம் குறியாதே எனையாண்ட அரசே

யானும்அவர் போல்அணிகின் றேன்அணிந்திங் கருளே.

12

4102

உண்ணஉண்ணத் தெவிட்டாதே தித்தித்தென் உடம்போ
டுயிர்உணர்வும் கலந்துகலந் துள்ளகத்தும் புறத்தும்
தண்ணியவண் ணம்பரவப் பொங்கிநிறைந் தாங்கே
ததும்பிஎன்றன் மயம்எல்லாம் தன்மயமே ஆக்கி
எண்ணியஎன் எண்ணம்எலாம் எய்தஒளி வழங்கி
இலங்குகின்ற பேர்அருளாம் இன்னமுதத் திரளே
புண்ணியமே என்பெரிய பொருளேஎன் அரசே
புன்மொழிஎன் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.

13

4103

நாட்டார்கள் சூழ்ந்துமதித் திடமணிமே டையிலே
நடுஇருக்க என்றனையே நாட்டியபே ரிறைவா
பாட்டாளர் பாடுதொறும் பரிசளிக்கும் துரையே
பன்னுமறைப் பாட்டேமெய்ப் பாட்டினது பயனே
கூட்டாளா சிவகாமக் கொடிக்கிசைந்த கொழுநா
கோவேஎன் கணவாஎன் குரவாஎன்(281) குணவா
நீட்டாளர் புகழ்ந்தேத்த மணிமன்றில் நடிக்கும்
நீதிநடத் தரசேஎன் நெடுமொழிகொண் டருளே.

14

(281). எண் - முதற்பதிப்பு., பொ. சு., ச. மு. க.

4104

கைக்கிசைந்த பொருளேஎன் கருத்திசைந்த கனிவே

கண்ணேஎன் கண்களுக்கே கலந்திசைந்த கணவா

மெய்க்கிசைந்த அணியேபொன் மேடையில்என் னுடனே

மெய்கலந்த தருணத்தே விளைந்தபெருஞ் சுகமே

நெய்க்கிசைந்த உணவேஎன் நெறிக்கிசைந்த நிலையே

நித்தியமே எல்லாமாஞ் சத்தியமே உலகில்

பொய்க்கிசைந்தார் காணாதே பொதுநடஞ்செய் அரசே

புன்மொழிஎன் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.

15

4105

கொடுத்திடநான் எடுத்திடவும் குறையாத நிதியே

கொல்லாத நெறியேசித் தெல்லாஞ்செய் பதியே

மடுத்திடவும் அடுத்தடுத்தே மடுப்பதற்குள் ஆசை

வைப்பதன்றி வெறுப்பறியா வண்ணநிறை அமுதே

எடுத்தெடுத்துப் புகன்றாலும் உலவாத ஒளியே

என்உயிரே என்உயிருக் கிசைந்தபெருந் துணையே

தடுத்திடவல் லவர்இல்லாத் தனிமுதற்பே ரரசே

தாழ்மொழிஎன் றிகழாதே தரித்துமகிழ்ந் தருளே.

16

4106

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்

சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலுந் தேங்கின்
தனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்அளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி
எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடுந்தெள் ளமுதே
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கல்அணிந் தருளே.

17

4107

மலைவறியாப் பெருஞ்சோதி வச்சிரமா மலையே
மாணிக்க மணிப்பொருப்பே மரகதப்பேர் வரையே
விலைஅறியா உயர்ஆணிப் பெருமுத்துத் திரளே
விண்ணவரும் நண்ணரும்லூர் மெய்ப்பொருளின் விளைவே
கொலைஅறியாக் குணத்தோர்தங் கூட்டுறவே அருட்செங்
கோல்நடத்து கின்றதனிக் கோவேமெய் அறிவால்
நிலைஅறிந்தோர் போற்றுமணி மன்றில்நடத் தரசே
நின்னடிப்பொன் மலர்களுக்கென் நெடுஞ்சொல்அணிந் தருளே.

18

4108

கண்களிக்கப் புகைசிறிதும் காட்டாதே புருவக்
கலைநடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே

பண்களிக்கப் பாடுகின்ற பாட்டில்விளை சுகமே

பத்தருளே தித்திக்கப் பழுத்ததனிப் பழமே

மண்களிக்க வான்களிக்க மணந்தசிவ காம

வல்லிஎன மறைகளெலாம் வாழ்த்துகின்ற வாமப்

பெண்களிக்கப் பொதுநடஞ்செய் நடத்தரசே நினது

பெரும்புகழ்ச்சே வடிகளுக்கென் அரும்பும்அணிந் தருளே.

19

4109

உருவெளியே உருவெளிக்குள் உற்றவெளி உருவே

உருநடுவும் வெளிநடுவும் ஒன்றான ஒன்றே

பெருவெளியே பெருவெளியில் பெருஞ்சோதி மயமே

பெருஞ்சோதி மயநடுவே பிறங்குதனிப் பொருளே

மருஒழியா மலர்அகத்தே வயங்குஒளி மணியே

மந்திரமே தந்திரமே மதிப்பரிய மருந்தே

திருஒழியா தோங்குமணி மன்றில்நடத் தரசே

சிறுமொழிஎன் றிகழாதே சேர்த்துமகிழ்ந் தருளே.

20

4110

நான்என்றும் தான்என்றும் நாடாத நிலையில்

ஞானவடி வாய்விளங்கும் வானநடு நிலையே

ஊன்என்றும் உயிர்என்றும் குறியாமே முழுதும்

ஒருவடிவாம் திருவடிவம் உவந்தளித்த பதியே

தேன்என்றும் கரும்பென்றும் செப்பரிதாய் மனமும்

தேகமும்உள் உயிர்உணர்வும் தித்திக்கும் சுவையே

வான்என்றும் ஒளிஎன்றும் வகுப்பரிதாம் பொதுவில்

வயங்குநடத் தரசேஎன் மாலையும்ஏற் றருளே.

21

4111

எட்டிரண்டும் என்என்றால் மயங்கியஎன் றனக்கே

எட்டாத நிலைஎல்லாம் எட்டுவித்த குருவே

சுட்டிரண்டுங் காட்டாதே துரியநிலை நடுவே

சுகமயமாய் விளங்குகின்ற சுத்தபரம் பொருளே

மட்டிதுஎன் றறிவதற்கு மாட்டாதே மறைகள்

மவுனம்உறப் பரம்பரத்தே வயங்குகின்ற ஒளியே

தட்டறியாத் திருப்பொதுவில் தனிநடஞ்செய் அரசே

தாழ்மொழிஎன் றிகழாதே தரித்துமகிழ்ந் தருளே.

22

4112

சாதிகுலம் சமயமெலாம் தவிர்த்தெனைமேல் ஏற்றித்

தனித்ததிரு அமுதளித்த தனித்தலைமைப் பொருளே

ஆதிநடுக் கடைகாட்டா தண்டபகிர் அண்டம்

ஆருயிர்கள் அகம்புறம்மற் றனைத்தும்நிறை ஒளியே

ஓதிஉணர்ந் தவர்எல்லாம் எனைக்கேட்க எனைத்தான்
ஓதாமல் உணர்ந்துணர்வாம் உருவுறச்செய் உறவே
சோதிமய மாய்விளங்கித் தனிப்பொதுவில் நடிக்கும்
தூயநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே

23

4113

அடிக்கடிஎன் அகத்தினிலும் புறத்தினிலும் சோதி
அருள்உருவாய்த் திரிந்துதிரிந் தருள்கின்ற பொருளே
படிக்களவின் மறைமுடிமேல் ஆகமத்தின் முடிமேல்
பதிந்தபதம் என்முடிமேல் பதித்ததனிப் பதியே
பொடிக்கனகத் திருமேனித் திருமணங்கற் பூரப்
பொடிமணத்தோ டகம்புறமும் புதுமணஞ்செய் அமுதே
அடிக்கனக அம்பலத்தே திருச்சிற்றம் பலத்தே
ஆடல்புரி அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

24

4114

அறையாத மிகுபெருங்காற் றடித்தாலும் சிறிதும்
அசையாதே அவியாதே அண்டபகி ரண்டத்
துறையாவும் பிண்டவகைத் துறைமுழுதும் விளங்கத்
தூண்டாதே விளங்குகின்ற ஜோதிமணி விளக்கே
மறையாதே குறையாதே களங்கமும் இல்லாதே

மயக்காதே பணிக்காதே வயங்குகின்ற மதியே

இறையாய்எவ் வுயிரகத்தும் அகப்புறத்தும் புறத்தும்

இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

25

4115

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்

பக்கம்நின்று கேட்டாலும் பரிந்துள்உணர்ந் தாலும்

ஈர்த்தாலும் பிடித்தாலும் கட்டிஅணைத் தாலும்

இத்தனைக்கும் தித்திக்கும் இனித்தசுவைக் கரும்பே

வேர்த்தாவி மயங்காது கனிந்தநறுங் கனியே

மெய்ம்மைஅறி வானந்தம் விளக்கும்அருள் அமுதே

தீர்த்தாஎன் றன்பர்எலாம் தொழப்பொதுவில் நடிக்கும்

தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

26

4116

பற்றுதலும் விடுதலும்உள் அடங்குதலும் மீட்டும்

படுதலொடு சுடுதலும்புண் படுத்தலும்இல் லாதே

உற்றொளிகொண் டோங்கிஎங்கும் தன்மயமாய் ஞான

உருவாகி உயிர்க்குயிராய் ஓங்குகின்ற நெருப்பே

சுற்றுதலும் தோன்றுதலும் மறைதலும்வெச் சென்றே

சுடுதலும்இல் லாதென்றும் துலங்குகின்ற சுடரே

முற்றும்உணர்ந் தவர்உளத்தே திருச்சிற்றம் பலத்தே

முயங்கும்நடத் தரசேஎன் மொழியும்அணிந் தருளே.

27

4117

ஐம்பூத பரங்கள்முதல் நான்கும்அவற் றுள்ளே

அடுத்திடுநந் நான்கும்அவை அகம்புறமேல் நடுக்கீழ்

கம்பூத பக்கமுதல் எல்லாந்தன் மயமாய்க்

காணும்அவற் றப்புறமும் கலந்ததனிக் கனலே

செம்பூத உலகங்கள் பூதாண்ட வகைகள்

செழித்திடநற் கதிர்பரப்பித் திகழ்கின்ற சுடரே

வெம்பூதத் தடைதவிர்ந்தார் ஏத்தமணி மன்றில்

விளங்கும்நடத் தரசேஎன் விளம்பும்அணிந் தருளே.

28

4118

வாதுறும்இந் தியகரண பரங்கள்முதல் நான்கும்

வகுத்திடுநந் நான்கும்அகம் புறமேல்கீழ் நடுப்பால்

ஓதுறும்மற் றெல்லாந்தன் மயமாகக் கலந்தே

ஓங்கவற்றின் அப்புறமும் ஒளிர்கின்ற ஒளியே

சூதுறுமிந் தியகரண லோகாண்டம் அனைத்தும்

சுடர்பரப்பி விளங்குகின்ற சுயஞ்சோதிச் சுடரே

போதுறுவார் பலர்நின்று போற்றநடம் பொதுவில்

புரியும்நடத் தரசேஎன் புகலும்அணிந் தருளே.

29

4119

பகுதிபர முதல்நான்கும் அவற்றுறுநந் நான்கும்

பரவிஎலாம் தன்மயமாம் படிநிறைந்து விளங்கித்

தகுதிபெறும் அப்பகுதிக் கப்புறமும் சென்றே

தனிஒளிச்செங் கோல்நடத்தித் தழைக்கின்ற ஒளியே

மிகுதிபெறு பகுதிஉல கம்பகுதி அண்டம்

விளங்கஅருட் சுடர்பரப்பி விளங்குகின்ற சுடரே

தொகுதிபெறு கடவுளர்கள் ஏத்தமன்றில் நடிக்கும்

துரியநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

30

4120

மாமாயைப் பரமாதி நான்கும்அவற் றுள்ளே

வயங்கியநந் நான்குந்தன் மயத்தாலே விளக்கி

ஆமாறம் மாமாயைக் கப்புறத்தும் நிறைந்தே

அறிவொன்றே வடிவாகி விளங்குகின்ற ஒளியே

தாமாயா புவனங்கள் மாமாயை அண்டம்

தழைத்துவிளங் கிடக்கதிர்செய் தனித்தபெருஞ் சுடரே

தேமாலும் பிரமனும்நின் றேத்தமன்றில் நடிக்கும்

தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

31

4121

சுத்தபர முதல்நான்கும் அவற்றுறுநந் நான்கும்

தூயஒளி வடிவாகத் துலங்கும்ஒளி அளித்தே

நித்தபரம் பரநடுவாய் முதலாய்அந் தமதாய்

நீடியஓர் பெருநிலைமேல் ஆடியபே ரொளியே

வித்தமுறும் சுத்தபர லோகாண்டம் அனைத்தும்

விளக்கமுறச் சுடர்பரப்பி விளங்குகின்ற சுடரே

சத்தியஞா னானந்தச் சித்தர்புகழ் பொதுவில்

தனித்தநடத் தரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

32

4122

சாற்றுகின்ற கலைஐந்தில் பரமாதி நான்கும்

தக்கஅவற் றூடிருந்த நந்நான்கும் நிறைந்தே

ஊற்றுகின்ற அகம்புறமேல் நடுக்கீழ்மற் றனைத்தும்

உற்றிடுந்தன் மயமாகி ஒளிர்கின்ற ஒளியே

தோற்றுகின்ற கலைஉலகம் கலைஅண்ட முழுதும்

துலங்குகின்ற சுடர்பரப்பிச் சூழ்கின்ற சுடரே

போற்றுகின்ற மெய்அடியர் களிப்பநடித் தருளும்

பொதுவில்நடத் தரசேஎன் புகலும்அணிந் தருளே.

33

4123

நாட்டியலூங் காரம்ஐந்தில் பரமுதல்லூர் நான்கும்

நந்நான்கு மாறிடத்தும் நயந்துநிறைந் தருளி

ஈட்டியசெம் பொருள்நிலையோ டிலக்கியமும் விளங்க

இனிதுநின்று விளங்குகின்ற இன்பமய ஒளியே

கூட்டியலூங் காரஉல கோங்கார அண்டம்

குடிவிளங்கக் கதிர்பரப்பிக் குலவுபெருஞ் சுடரே

பாட்டியல்கொண் டன்பரெலாம் போற்றமன்றில் நடிக்கும்

பரமநடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

34

4124

மன்னுகின்ற அபரசத்திப் பரமாதி அவற்றுள்

வகுத்தநிலை யாதிஎலாம் வயங்கவயின் எல்லாம்

பன்னுகின்ற பற்பலவாம் விசித்திரசித் திரங்கள்

பரவிவிளங் கிடவிளங்கிப் பதிந்தருளும் ஒளியே

துன்அபர சத்திஉல கபரசத்தி அண்டம்

சுகம்பெறவே கதிர்பரப்பித் துலங்குகின்ற சுடரே

உன்னும்அன்பர் உளங்களிக்கத் திருச்சிற்றம் பலத்தே

ஓங்கும்நடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

35

4125

விளங்குபர சத்திகளின் பரமாதி அவற்றுள்

விரிந்தநிலை யாதிஎலாம் விளங்கிஒளி வழங்கிக்

களங்கமிலாப் பரவெளியில் அந்தம்முதல் நடுத்தான்

காட்டாதே நிறைந்தெங்கும் கலந்திடும்பே ரொளியே

உளங்குலவு பரசத்தி உலகமண்ட முழுதும்

ஒளிவிளங்கச் சுடர்பரப்பி ஓங்குதனிச் சுடரே

வளங்குலவு திருப்பொதுவில் மாநடஞ்செய் அரசே

மகிழ்ந்தெனது சொல்எனும்ஓர் மாலைஅணிந் தருளே.

36

4126

தெரிந்தமகா சுத்தபர முதலும்அவற் றுள்ளே

சிறந்தநிலை யாதிகளும் தெளிந்துவிளங் குறவே

பரிந்தஒரு சிவவெளியில் நீக்கமற நிறைந்தே

பரமசுக மயமாகிப் பரவியபே ரொளியே

விரிந்தமகா சுத்தபர லோகஅண்ட முழுதும்

மெய்அறிவா னந்தநிலை விளக்குகின்ற சுடரே

புரிந்ததவப் பயனாகும் பொதுவில்நடத் தரசே

புன்மொழிஎன் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.

37

4127

வாய்ந்தபர நாதம்ஐந்தில் பரமுதலும் அவற்றுள்

மன்னுநிலை யாதிகளும் வயங்கியிட நிறைந்தே

ஆய்ந்தபர சிவவெளியில் வெளிஉருவாய் எல்லாம்

ஆகியதன் இயல்விளக்கி அலர்ந்திடும்பேர் ஒளியே

தோய்ந்தபர நாதஉல கண்டமெலாம் விளங்கச்

சுடர்பரப்பி விளங்குகின்ற தூயதனிச் சுடரே

வேய்ந்தமணி மன்றிடத்தே நடம்புரியும் அரசே

விளம்புறும்என் சொன்மாலை விளங்கஅணிந் தருளே.

38

4128

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே

காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே

வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே

மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே

நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே

நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே

எல்லார்க்கும் பொதுவில்நடம் இடுகின்ற சிவமே

என்அரசே யான்புகலும் இசையும்அணிந் தருளே.

39

4129

காட்சியுறக் கண்களுக்குக் களிக்கும் வண்ணம் உளதாய்க்

கையும்மெய்யும் பரிசிக்கச் சுகபரிசத் ததுவாய்ச்

சூழ்ச்சியுற நாசிக்குச் சுகந்தஞ்செய் குவதாய்த்

தூயசெவிக் கினியதொரு சுகநாதத் ததுவாய்

மாட்சியுற வாய்க்கினிய பெருஞ்சுவைஈ குவதாய்

மறைமுடிமேல் பழுத்தெனக்கு வாய்த்தபெரும் பழமே

ஆட்சியுற அருள்ஒளியால் திருச்சிற்றம் பலத்தே

ஆடல்புரி அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

௪0

௪130

திரைஇலதாய் அழிவிலதாய்த் தோலிலதாய்ச் சிறிதும்

சினைப்பிலதாய்ப் பனிப்பிலதாய்ச் செறிந்திடுகோ திலதாய்

விரைஇலதாய்ப் புரைஇலதாய் நார்இலதாய் மெய்யே

மெய்யாகி அருள்வண்ணம் விளங்கிஇன்ப மயமாய்ப்

பரைவெளிக்கப் பால்விளங்கு தனிவெளியில் பழுத்தே

படைத்தஎன துளத்தினிக்கக் கிடைத்ததனிப் பழமே

உரைவளர்மா மறைகளெலாம் போற்றமணிப் பொதுவில்

ஓங்கும்நடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

௪1

௪131

கார்ப்பிலதாய்த் துவர்ப்பிலதாய் உவர்ப்பிலதாய்ச் சிறிதும்

கசப்பிலதாய்ப் புளிப்பிலதாய்க் காய்ப்பிலதாய்ப் பிறவில்

சேர்ப்பிலதாய் எஞ்ஞான்றும் திரிபிலதாய் உயிர்க்கே

திணைத்தனையும் நோய்தரும்அத் தீமையொன்றும் இலதாய்ப்
பார்ப்பனையேன் உள்ளகத்தே விளங்கிஅறி வின்பம்
படைத்திடமெய்த் தவப்பயனால் கிடைத்ததனிப் பழமே
ஓர்ப்புடையார் போற்றமணி மன்றிடத்தே வெளியாய்
ஓங்கியபே ரரசேஎன் உரையும்அணிந் தருளே.

42

4132

தெற்றியிலே நான்பசித்துப் படுத்திளைத்த தருணம்
திருஅமுதோர் திருக்கரத்தே திகழ்வள்ளத் தெடுத்தே
ஒற்றியிற்போய்ப் பசித்தனையோ என்றெனையங் கெழுப்பி
உவந்துகொடுத் தருளியஎன் உயிர்க்கினிதாந் தாயே
பற்றியஎன் பற்றனைத்தும் தன்அடிப்பற் றாகப்
பரிந்தருளி எனைஈன்ற பண்புடைஎந் தாயே
பெற்றியுளார் சுற்றிநின்று போற்றமணிப் பொதுவில்
பெருநடஞ்செய் அரசேஎன் பிதற்றும்உவந் தருளே.

43

4133

தாய்முதலோ ரொடுசிறிய பருவமதில்(282) தில்லைத்
தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேல் காட்டாதே என்றனக்கே எல்லாம்
வெளியாகக் காட்டியஎன் மெய்உறவாம் பொருளே

காய்வகைஇல் லாதுளத்தே கனிந்தநறுங் கனியே

கனவிடத்தும் நனவிடத்தும் எனைப்பிரியாக் களிப்பே

தூய்வகையோர் போற்றமணி மன்றில்நடம் புரியும்

சோதிநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

44

(282). தாய் முதலோரோடு சிறு பருவமதில் - முதற்பதிப்பு, பொ. சு., ச. மு, க.

4134

ஓங்கியஓர் துணைஇன்றிப் பாதிஇர வதிலே

உயர்ந்தஒட்டுத் திண்ணையிலே படுத்தகடைச் சிறியேன்

தூங்கிமிகப் புரண்டுவிழத் தரையில்விழா தெனையே

தூக்கிஎடுத் தணைத்துக்கீழ்க் கிடத்தியமெய்த் துணையே

தாங்கியஎன் உயிர்க்கின்பம் தந்தபெருந் தகையே

சற்குருவே நான்செய்பெருந் தவப்பயனாம் பொருளே

ஏங்கியஎன் ஏக்கமெலாம் தவிர்த்தருளிப் பொதுவில்

இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

45

4135

தனிச்சிறியேன் சிறிதிங்கே வருந்தியபோ ததனைத்

தன்வருத்தம் எனக்கொண்டு தரியாதக் கணத்தே

பனிப்புறும்அவ் வருத்தமெலாம் தவிர்த்தருளி மகனே

பயம்உனக்கென் என்றென்னைப் பரிந்தணைத்த குருவே
இனிப்புறுநன் மொழிபுகன்றென் முடிமிசையே மலர்க்கால்
இணைஅமர்த்தி எனையாண்ட என்னுயிர்நற் றுணையே
கனித்தநறுங் கனியேஎன் கண்ணேசிற் சபையில்
கலந்தநடத் தரசேஎன் கருத்தும்அணிந் தருளே.

46

4136

ஒருமடந்தை வலிந்தணைந்து கலந்தகன்ற பின்னர்
உளம்வருந்தி என்செய்தோம் என்றயர்ந்த போது
பெருமடஞ்சேர் பிள்ளாய்என் கெட்டதொன்றும் இலைநம்
பெருஞ்செயல்என் றெனைத்தேற்றிப் பிடித்தபெருந் தகையே
திருமடந்தை மார்இருவர் என்எதிரே நடிக்கச்
செய்தருளிச் சிறுமைஎலாம் தீர்த்ததனிச் சிவமே
கருமடம்தீர்ந் தவர்எல்லாம் போற்றமணி மன்றில்
காட்டும்நடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

47

4137

இருள்இரவில் ஒருமூலைத் திண்ணையில்நான் பசித்தே
இளைப்புடனே படுத்திருக்க எனைத்தேடி வந்தே
பொருள்உணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியைப்
போக்கிஅருள் புரிந்தஎன்றன் புண்ணியநற் றுணையே

மருள்இரவு நீக்கிஎல்லா வாழ்வும்எனக் கருளி

மணிமேடை நடுஇருக்க வைத்தஒரு மணியே

அருள்உணவும் அளித்தென்னை ஆட்கொண்ட சிவமே

அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

48

4138

நான்பசித்த போதெல்லாம் தான்பசித்த தாகி

நல்உணவு கொடுத்தென்னைச் செல்வம்உற வளர்த்தே

ஊன்பசித்த இளைப்பென்றும் தோற்றாத வகையே

ஒள்ளியதெள் ளமுதெனக்கிங் குவந்தளித்த ஒளியே

வான்பதிக்கும் நெடுமாற்கும் நான்முகற்கும் அரிதாம்

வாழ்வெனக்கே ஆகியுற வரம்அளித்த பதியே

தேன்பரித்த மலர்மணமே திருப்பொதுவில் ஞானத்

திருநடஞ்செய் அரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

49

4139

நடைக்குரிய உலகிடைஓர் நல்லநண்பன் ஆகி

நான்குறித்த பொருள்கள்எலாம் நாழிகைஒன் றதிலே

கிடைக்கஎனக் களித்தகத்தும் புறத்தும்அகப் புறத்தும்

கிளர்ந்தொளிகொண் டோங்கியமெய்க் கிளைஎனும்பேர் ஒளியே

படைப்புமுதல் ஐந்தொழிலும் கொள்கஎனக் குறித்தே

பயந்தீர்த்தென் உள்ளகத்தே அமர்ந்ததனிப் பதியே

கடைப்படும்என் கரத்தில்ஒரு கங்கணமும் தரித்த

ககனநடத் தரசேஎன் கருத்தும்அணிந் தருளே.

50

4140

நீநினைத்த நன்மைஎலாம் யாம்அறிந்தோம் நினையே

நேர்காண வந்தனம்என் றென்முடிமேல்(283) மலர்க்கால்

தான்நிலைக்க வைத்தருளிப் படுத்திடநான் செருக்கித்

தாள்களெடுத் தப்புறத்தே வைத்திடத்தான் நகைத்தே

ஏன்நினைத்தாய் இவ்வளவு சுதந்தரம்என் மகனே

எனக்கிலையோ என்றருளி எனையாண்ட குருவே

தேன்நிலைத்த தீம்பாகே சர்க்கரையே கனியே

தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

51

(283). முடிமேல் - முதற்பதிப்பு. பொ. சு., ச. மு. க., மடிமேல் - பி. இரா., ஆ. பா.

4141

மூர்த்திகளும் நெடுங்காலம் முயன்றாலும் அறிய

முடியாத முடிவெல்லாம் முன்னியஓர் தினத்தே

ஆர்த்தியுடன் அறியஎனக் களித்தருளி அடியேன்

அகத்தினைத்தன் இடமாக்கி அமர்ந்தஅருட் குருவே

பார்த்திபரும் விண்ணவரும் பணிந்துமகிழ்ந் தேத்தப்

பரநாத நாட்டரசு பாலித்த பதியே

ஏர்த்திகழும் திருப்பொதுவில் இன்பநடத் தரசே

என்னுடைய சொன்மாலை இலங்கஅணிந் தருளே.

52

4142

இச்சைஒன்றும் இல்லாதே இருந்தஎனக் கிங்கே

இயலுறுசன் மார்க்கநிலைக் கிச்சையைஉண் டாக்கித்

தச்சுறவே பிறமுயற்சி செயுந்தோறும் அவற்றைத்

தடையாக்கி உலகறியத் தடைதீர்த்த குருவே

எச்சமய முடிபுகளும் திருச்சிற்றம் பலத்தே

இருந்தஎன எனக்கருளி இசைவித்த இறையே

முச்சகமும் புகழமணி மன்றிடத்தே நடிக்கும்

முதல்அரசே என்னுடைய மொழியும்அணிந் தருளே.

53

4143

கையாத தீங்கனியே கயக்காத அமுதே

கரையாத கற்கண்டே புரையாத கரும்பே

பொய்யாத பெருவாழ்வே புகையாத கனலே

போகாத புனலேஉள் வேகாத காலே

கொய்யாத நறுமலரே கோவாத மணியே

குளியாத பெருமுத்தே ஒளியாத வெளியே
செய்யாத பேருதவி செய்தபெருந் தகையே
தெய்வநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

54

4144

எண்ணாத மந்திரமே எழுதாத மறையே
ஏறாத மேனிலைநின் றிறங்காத நிறைவே
பண்ணாத பூசையிலே படியாத படிப்பே
பாராத பார்வையிலே பதியாத பதிப்பே
நண்ணாத மனத்தகத்தே அண்ணாத நலமே
நாடாத நாட்டகத்தே நடவாத நடப்பே
அண்ணாஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே
அடிஇணைக்கென் சொன்மாலை அணிந்துமகிழ்ந் தருளே.

55

4145

சாகாத கல்வியிலே தலையான நிலையே
சலியாத காற்றிடைநின் றொலியாத கனலே
ஏகாத புனலிடத்தே இடியாத புவியே
ஏசாத மந்திரத்தே பேசாத பொருளே
கூகாஎன் றெனைக்கூடி எடுக்காதே என்றும்
குலையாத வடிவெனக்கே கொடுத்ததனி அமுதே

மாகாதல் உடையார்கள் வழுத்தமணிப் பொதுவில்

மாநடஞ்செய் அரசேஎன் மாலையும்ஏற் றருளே.

56

4146

சுத்தநிலை அனுபவங்கள் தோன்றுவெளி யாகித்

தோற்றும்வெளி யாகிஅவை தோற்றுவிக்கும் வெளியாய்

நித்தநிலை களின்நடுவே நிறைந்தவெளி யாகி

நீயாகி நானாகி நின்றதனிப்பொருளே

சத்தியமே சத்துவமே தத்துவமே நவமே

சமரசசன் மார்க்கநிலைத் தலைநின்ற சிவமே

புத்தமுதே சித்திஎலாம் வல்லதிருப் பொதுவில்

புனிதநடத் தரசேஎன் புகலும்அணிந் தருளே.

57

4147

நான்அளக்குந் தோறும்அதற் குற்றதுபோல் காட்டி

நாட்டியபின் ஒருசிறிதும் அளவில்உறா தாகித்

தான்அளக்கும் அளவதிலே முடிவதெனத் தோற்றித்

தன்அளவுங் கடந்தப்பால் மன்னுகின்ற பொருளே

வான்அளக்க முடியாதே வான்அனந்தங் கோடி

வைத்தபெரு வான்அளக்க வசமோஎன் றுரைத்துத்

தேன்அளக்கும் மறைகளெலாம் போற்றமணி மன்றில்

திகழுநடத் தரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

58

4148

திசையறிய மாட்டாதே திகைத்தசிறி யேனைத்

தெளிவித்து மணிமாடத் திருத்தவிசில் ஏற்றி

நசைஅறியா நற்றவரும் மற்றவருஞ் சூழ்ந்து

நயப்பஅருட் சிவநிலையை நாட்டவைத்த பதியே

வசையறியாப் பெருவாழ்வே மயல்அறியா அறிவே

வான்நடுவே இன்பவடி வாய்இருந்த பொருளே

பசைஅறியா மனத்தவர்க்கும் பசைஅறிவித் தருளப்

பரிந்தநடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

59

4149

என்உயிரும் என்உடலும் என்பொருளும் யானே

இசைந்துகொடுத் திடவாங்கி இட்டதன்பின் மகிழ்ந்தே

தன்உயிரும் தன்உடலும் தன்பொருளும் எனக்கே

தந்துகலந் தெனைப்புணர்ந்த தனித்தபெருஞ் சுடரே

மன்உயிருக் குயிராகி இன்பமுமாய் நிறைந்த

மணியேஎன் கண்ணேஎன் வாழ்முதலே மருந்தே

மின்னியபொன் மணிமன்றில் விளங்குநடத் தரசே

மெய்யும்அணிந் தருள்வோய்என் பொய்யும்அணிந் தருளே.

60

4150

மன்னுகின்ற பொன்வடிவும் மந்திரமாம் வடிவும்

வான்வடிவும் கொடுத்தெனக்கு மணிமுடியுஞ் சூட்டிப்

பன்னுகின்ற தொழில்ஐந்துஞ்செய்திடவே பணித்துப்

பண்புறஎன் அகம்புறமும் விளங்குகின்ற பதியே

உன்னுகின்ற தோறும்எனக் குள்ளமெலாம் இனித்தே

ஊறுகின்ற தெள்ளமுதே ஒருதனிப்பே ரொளியே

மின்னுகின்ற மணிமன்றில் விளங்குநடத் தரசே

மெய்யும்அணிந் தருள்வோய்என் பொய்யும்அணிந் தருளே.

61

4151

நன்மைஎலாம் தீமைஎனக் குரைத்தோடித் திரியும்

நாய்க்குலத்தில் கடையான நாயடியேன் இயற்றும்

புன்மைஎலாம் பெருமைஎனப் பொறுத்தருளிப் புலையேன்

பொய்உரைமெய் உரையாகப் புரிந்துமகிழ்ந் தருளித்

தன்மைஎலாம் உடையபெருந் தவிசேற்றி முடியும்

தரித்தருளி ஐந்தொழில்செய் சதுர்அளித்த பதியே

இன்மைஎலாம் தவிர்ந்தடியார் இன்பமுறப் பொதுவில்

இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

62

4152

விழுக்குலத்தார் அருவருக்கும் புழுக்குலத்தில் கடையேன்

மெய்யுரையேன் பொய்யுரையை வியந்துமகிழ்ந் தருளி

முழுக்குலத்தோர் முடிசூட்டி ஐந்தொழில்செய் எனவே

மொழிந்தருளி எனையாண்ட முதற்றனிப்பேர் ஒளியே

எழுக்குலத்தில் புரிந்தமனக் கழுக்குலத்தார் தமக்கே

எட்டாத நிலையேநான் எட்டியபொன் மலையே

மழுக்குலத்தார் போற்றமணி மன்றில்நடம் புரியும்

மாநடத்தென் அரசேஎன் மாலைஅணிந் தருளே.

63

4153

கலைக்கொடிகண் டறியாத புலைக்குடியில் கடையேன்

கைதவனேன் பொய்தவமும் கருத்தில்உவந் தருளி

மலைக்குயர்மாத் தவிசேற்றி மணிமுடியுஞ் சூட்டி

மகனேநீ வாழ்கஎன வாழ்த்தியஎன் குருவே

புலைக்கொடியார் ஒருசிறிதும் புலப்படக்கண் டறியாப்

பொன்னேநான் உண்ணுகின்ற புத்தமுதத் திரளே

விலைக்கறியா மாமணியே வெறுப்பறியா மருந்தே

விளங்குநடத் தரசேஎன் விளம்பும்அணிந் தருளே.

64

4154

மதம்என்றும் சமயம்என்றும் சாத்திரங்கள் என்றும்
மன்னுகின்ற தேவர்என்றும் மற்றவர்கள் வாழும்
பதம்என்றும் பதம்அடைந்த பத்தர்அனு பவிக்கப்
பட்டஅனு பவங்கள்என்றும் பற்பலவா விரிந்த
விதம்ஒன்றும் தெரியாதே மயங்கியஎன் தனக்கே
வெட்டவெளி யாஅறிவித் திட்டஅருள் இறையே
சதம்ஒன்றும் சுத்தசிவ சன்மார்க்கப் பொதுவில்
தனிநடஞ்செய் அரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

65

4155

என்ஆசை எல்லாம்தன் அருள்வடிவந் தனக்கே
எய்திடச்செய் திட்டருளி எனையும்உடன் இருத்தித்
தன்ஆசை எல்லாம்என் உள்ளகத்தே வைத்துத்
தானும்உடன் இருந்தருளிக் கலந்தபெருந் தகையே
அன்னாஎன் ஆருயிரே அப்பாஎன் அமுதே
ஆவாஎன் றெனையாண்ட தேவாமெய்ச் சிவமே
பொன்னாரும் பொதுவில்நடம் புரிகின்ற அரசே
புண்ணியனே என்மொழிப்பூங் கண்ணியும்ஏற் றருளே.

66

4156

தன்அரசே செலுத்திநின்ற தத்துவங்கள் அனைத்தும்

தனித்தனிஎன் வசமாகித் தாழ்ந்தேவல் இயற்ற

முன்அரசும் பின்அரசும் நடுஅரசும் போற்ற

முன்னும்அண்ட பிண்டங்கள் எவற்றினும்எப் பாலும்

என்அரசே என்றுரைக்க எனக்குமுடி சூட்டி

இன்பவடி வாக்கிஎன்றும் இலங்கவைத்த சிவமே

என்அரசே என்உயிரே என்இருகண் மணியே

இணைஅடிப்பொன் மலர்களுக்கென் இசையும்அணிந் தருளே.

67

4157

பரவெளியே நடுவெளியே உபசாந்த வெளியே

பாழ்வெளியே முதலாக ஏழ்வெளிக்கப் பாலும்

விரவியமா மறைகளெலாம் தனித்தனிசென் றளந்தும்

மெய்யளவு காணாதே மெலிந்திளைத்துப் போற்ற

உரவில்அவை தேடியஅவ் வெளிகளுக்குள் வெளியாய்

ஓங்கியஅவ் வெளிகளைத்தன் னுள்அடக்கும் வெளியாய்க்

கரையறநின் றோங்குகின்ற சுத்தசிவ வெளியே

கனிந்தநடத் தரசேஎன் கருத்தும்அணிந் தருளே.

68

4158

வெய்யலிலே நடந்திளைப்பு மேவியஅக் கணத்தே

மிகுநிழலும் தண்ணமுதும் தந்தஅருள் விளைவே

மையல்சிறி துற்றிடத்தே மடந்தையர்கள் தாமே
வலிந்துவரச் செய்வித்த மாண்புடைய நட்பே
கையறவால் கலங்கியபோ தக்கணத்தே போந்து
கையறவு தவிர்த்தருளிக் காத்தளித்த துரையே
ஐயமுறேல் என்றெனையாண் டமுதளித்த பதியே
அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

69

4159

கொலைபுரிவார் தவிரமற்றை எல்லாரும் நினது
குலத்தாரே நீஎனது குலத்துமுதல் மகனே
மலைவறவே சுத்தசிவ சமரசசன் மார்க்கம்
வளரவளர்ந் திருக்கஎன வாழ்த்தியஎன் குருவே
நிலைவிழைவார் தமைக்காக்கும் நித்தியனே எல்லா
நிலையும்விளங் குறஅருளில் நிறுத்தியசிற் குணனே
புலையறியாப் பெருந்தவர்கள் போற்றமணிப் பொதுவில்
புனிதநடத் தரசேஎன் புகலும்அணிந் தருளே.

70

4160

உயிர்க்கொலையும் புலைப்பொசிப்பும் உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லர்அவர் புறஇனத்தார் அவர்க்குப்
பயிர்ப்புறும்ஓர் பசிதவிர்த்தல் மாத்திரமே புரிக

பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புதவேல் இங்கே

நயப்புறுசன் மார்க்கம்அவர் அடையளவும் இதுதான்

நம்ஆணை என்றெனக்கு நவின்றஅருள் இறையே

மயர்ப்பறுமெய்த்(284) தவர்போற்றப் பொதுவில்நடம் புரியும்

மாநடத்தென் அரசேஎன் மாலைஅணிந் தருளே.

71

(284). மயர்ப்பு - சோர்வு. முதற்பதிப்பு.

4161

வன்புடையார் கொலைகண்டு புலைஉண்பார் சிறிதும்

மரபினர்அன் றாதலினால் வகுத்தஅவர் அளவில்

அன்புடைய என்மகனே பசிதவிர்த்தல் புரிக

அன்றிஅருட் செயல்ஒன்றும் செயத்துணியேல் என்றே

இன்புறஎன் தனக்கிசைத்த என்குருவே எனைத்தான்

ஈன்றதனித் தந்தையே தாயேஎன் இறையே

துன்பறுமெய்த் தவர்சூழ்ந்து போற்றுதிருப் பொதுவில்

தூயநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

72

4162

கொடியவரே கொலைபுரிந்து புலைநுகர்வார் எனினும்

குறித்திடும்ஓர் ஆபத்தில் வருந்துகின்ற போது

படியில்அதைப் பார்த்துகவேல் அவர்வருத்தம் துன்பம்

பயந்தீர்த்து விடுகஎனப் பரிந்துரைத்த குருவே
நெடியவரே நான்முகரே நித்தியரே பிறரே
நின்மலரே என்கின்றோர் எல்லாரும் காண
அடியும்உயர் முடியும்எனக் களித்தபெரும் பொருளே
அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

73

4163

தயைஉடையார் எல்லாரும் சமரசசன் மார்க்கம்
சார்ந்தவரே ஈங்கவர்கள் தம்மோடுங் கூடி
நயமுறுநல் அருள்நெறியில் களித்துவிளை யாடி
நண்ணுகஎன் றெனக்கிசைத்த நண்புறுசற் குருவே
உயலுறும்என் உயிர்க்கினிய உறவேஎன் அறிவில்
ஓங்கியபேர் அன்பேஎன் அன்பிலுறும் ஒளியே
மயலறுமெய்த் தவர்சூழ்ந்து போற்றும்மணி மன்றில்
மாநடத்தென் அரசேஎன் மாலைஅணிந் தருளே.

74

4164

அருளுடையார் எல்லாரும் சமரசசன் மார்க்கம்
அடைந்தவரே ஆதலினால் அவருடனே கூடித்
தெருளுடைய அருள்நெறியில் களித்துவிளை யாடிச்
செழித்திடுக வாழ்கஎனச் செப்பியசற் குருவே

பொருளுடைய பெருங்கருணைப் பூரணமெய்ச் சிவமே

போதாந்த முதல்ஆறும் நிறைந்தொளிரும் ஒளியே

மருளுடையார் தமக்குமருள் நீக்கமணிப் பொதுவில்

வயங்குநடத் தரசேஎன் மாலையும்ஏற் றருளே.

75

4165

வெம்மாலைச் சிறுவரொடும் விளையாடித் திரியும்

மிகச்சிறிய பருவத்தே வியந்துநினை நமது

பெம்மான்என் றடிகுறித்துப் பாடும்வகை புரிந்த

பெருமானே நான்செய்த பெருந்தவமெய்ப் பயனே

செம்மாந்த சிறியேனைச் சிறுநெறியில் சிறிதும்

செலுத்தாமல் பெருநெறியில் செலுத்தியநற் றுணையே

அம்மானே என்ஆவிக் கானபெரும் பொருளே

அம்பலத்தென் அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

76

4166

ஆணவமாம் இருட்டறையில் கிடந்தசிறி யேனை

அணிமாயை விளக்கறையில் அமர்த்திஅறி வளித்து

நீணவமாம் தத்துவப்பொன் மாடமிசை ஏற்றி

நிறைந்தஅருள் அமுதளித்து நித்தமுற வளர்த்து

மாணுறஎல் லாநலமும் கொடுத்துலகம் அறிய

மணிமுடியும் சூட்டியஎன் வாழ்முதலாம் பதியே
ஏணுறுசிற் சபைஇடத்தும் பொற்சபையின் இடத்தும்
இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

77

4167

பான்மறுத்து விளையாடும் சிறுபருவத் திடையே
பகரும்உல கிச்சைஒன்றும் பதியாதென் உளத்தே
மான்மறுத்து விளங்குதிரு ஐந்தெழுத்தே பதிய
வைத்தபெரு வாழ்வேஎன் வாழ்வில்உறும் சுகமே
மீன்மறுத்துச் சுடர்மயமாய் விளங்கியதோர் விண்ணே
விண்அனந்தம் உள்ளடங்க விரிந்தபெரு வெளியே
ஊன்மறுத்த பெருந்தவருக் கொளிவடிவம் கொடுத்தே
ஓங்குநடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

78

4168

மெய்ச்சுகமும் உயிர்ச்சுகமும் மிகுங்கரணச் சுகமும்
விளங்குபதச் சுகமும்அதன் மேல்வீட்டுச் சுகமும்
எச்சுகமும் தன்னிடத்தே எழுந்தசுகம் ஆக
எங்கணும்ஓர் நீக்கமற எழுந்தபெருஞ் சுகமே
அச்சுகமும் அடையறிவும் அடைந்தவரும் காட்டா
ததுதானாய் அதுஅதுவாய் அப்பாலாம் பொருளே

பொய்ச்சுகத்தை விரும்பாத புனிதர்மகிழ்ந் தேத்தும்

பொதுநடத்தென் அரசேஎன் புகலும்அணிந் தருளே.

79

4169

அண்டவகை எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்

அமைந்தஉயிர் எவ்வளவோ அவ்வளவும் அவைகள்

கண்டபொருள் எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்

கலந்தகலப் பெவ்வளவோ அவ்வளவும் நிறைந்தே

விண்டகும்ஓர் நாதவெளி சுத்தவெளி மோன

வெளிஞான வெளிமுதலாம் வெளிகளெலாம் நிரம்பிக்

கொண்டதுவாய் விளங்குகின்ற சுத்தசிவ மயமே

குலவுநடத் தரசேஎன் குற்றமும்கொண் டருளே.

80

4170

சத்தியநான் முகர்அனந்தர் நாரணர்மற் றுளவாம்

தலைவர்அவர் அவருலகில் சார்ந்தவர்கள் பிறர்கள்

இத்திசைஅத் திசையாக இசைக்கும்அண்டப் பகுதி

எத்தனையோ கோடிகளில் இருக்கும்உயிர்த் திரள்கள்

அத்தனைபேர் உண்டாலும் அணுவளவும் குறையா

தருள்வெளியில் ஒளிவடிவாய் ஆனந்த மயமாய்ச்

சுத்தசிவ அனுபவமாய் விளங்கியதெள் ளமுதே

தூயநடத் தரசேஎன் சொல்லும்அணிந் தருளே.

81

4171

பொறிகரண முதற்பலவாம் தத்துவமும் அவற்றைப்

புரிந்தியக்கி நடத்துகின்ற பூரணரும் அவர்க்குச்

செறியும்உப காரிகளாம் சத்திகளும் அவரைச்

செலுத்துகின்ற சத்தர்களும் தன்ஒளியால் விளங்க

அறிவறிவாய் அவ்வறிவுக் கறிவாய்எவ் விடத்தும்

ஆனதுவாய்த் தானதுவாய் அதுஅதுவாய் நிறைந்தே

நெறிவழங்கப் பொதுவில்அருள் திருநடஞ்செய் அரசே

நின்அடியேன் சொன்மாலை நிலைக்கஅணிந் தருளே.

82

4172

உண்ணுகின்ற ஊண்வெறுத்து வற்றியும்புற் றெழுந்தும்

ஒருகோடிப் பெருந்தலைவர் ஆங்காங்கே வருந்திப்

பண்ணுகின்ற பெருந்தவத்தும் கிடைப்பரிதாய்ச் சிறிய

பயல்களினும் சிறியேற்குக் கிடைத்தபெரும் பதியே

நண்ணுகின்ற பெருங்கருணை அமுதளித்தென் உளத்தே

நானாகித் தானாகி அமர்ந்தருளி நான்தான்

எண்ணுகின்ற படிஎல்லாம் அருள்கின்ற சிவமே

இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

83

4173

கொள்ளைவினைக் கூட்டுறவால் கூட்டியபல் சமயக்
கூட்டமும்அக் கூட்டத்தே கூவுகின்ற கலையும்
கள்ளம்உறும் அக்கலைகள் காட்டியபல் கதியும்
காட்சிகளும் காட்சிதரு கடவுளரும் எல்லாம்
பிள்ளைவிளை யாட்டெனநன் கறிவித்திங் கெனையே
பிள்ளைஎனக் கொண்டுபிள்ளைப் பெயரிட்ட பதியே
தள்ளரிய மெய்யடியார் போற்றமணி மன்றில்
தனிநடஞ்செய் அரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

84

4174

நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா
நவின்றகலைச் சரிதம்எலாம் பிள்ளைவிளை யாட்டே
மேல்வருணம் தோல்வருணம் கண்டறிவார் இலைநீ
விழித்திதுபார் என்றெனக்கு விளம்பியசற் குருவே
கால்வருணங் கலையாதே வீணில்அலை யாதே
காண்பனஎல் லாம்எனக்குக் காட்டியமெய்ப் பொருளே
மால்வருணங் கடந்தவரை மேல்வருணத் தேற்ற
வயங்குநடத் தரசேஎன் மாலைஅணிந் தருளே.

85

4175

எவ்விடத்தும் எவ்வுயிர்க்கும் இலங்குசிவம் ஒன்றே
என்னாணை என்மகனே இரண்டில்லை ஆங்கே
செவ்விடத்தே அருளொடுசேர்த் திரண்டெனக்கண் டறிநீ
திகைப்படையேல் என்றெனக்குச் செப்பியசற் குருவே
அவ்விடத்தே உவ்விடத்தே அமர்ந்ததுபோல் காட்டி
அங்குமிங்கும் அப்புறமும் எங்குநிறை பொருளே
ஒவ்விடச்சிற் சபைஇடத்தும் பொற்சபையின் இடத்தும்
ஓங்குநடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

86

4176

இயல்வேதா கமங்கள்புரா ணங்கள்இதி காசம்
இவைமுதலா இந்திரசா லங்கடையா உரைப்பார்
மயல்ஒருநூல் மாத்திரந்தான் சாலம்என அறிந்தார்
மகனேநீ நூல்அனைத்தும் சாலம்என அறிக
செயல்அனைத்தும் அருள்ஒளியால் காண்கஎன எனக்கே
திருவுளம்பற் றியஞான தேசிகமா மணியே
அயல்அறியா அறிவுடையார் எல்லாரும் போற்ற
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

87

4177

தோன்றியவே தாகமத்தைச் சாலம்என உரைத்தேம்
சொற்பொருளும் இலக்கியமும் பொய்எனக்கண் டறியேல்
ஊன்றியவே தாகமத்தின் உண்மைநினக் காகும்
உலகறிவே தாகமத்தைப் பொய்எனக்கண் டுணர்வாய்
ஆன்றதிரு அருட்செங்கோல் நினக்களித்தோம் நீயே
ஆள்கஅருள் ஒளியால்என் றளித்ததனிச் சிவமே
ஏன்றதிரு அமுதெனக்கும் ஈந்தபெரும் பொருளே
இலங்குநடத் தரசேஎன் இசையும்அணிந் தருளே.

88

4178

நான்முகர்நல் உருத்திரர்கள் நாரணர்இந் திரர்கள்
நவில்அருகர் புத்தர்முதல் மதத்தலைவர் எல்லாம்
வான்முகத்தில் தோன்றிஅருள் ஒளிசிறிதே அடைந்து
வானகத்தும் வையகத்தும் மனம்போன படியே
தேன்முகந்துண் டவர்எனவே விளையாடா நின்ற
சிறுபிள்ளைக் கூட்டம்என அருட்பெருஞ்சோ தியினால்
தான்மிகக்கண் டறிகஎனச் சாற்றியசற் குருவே
சபையில்நடத் தரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

89

4179

தவறாத வேதாந்த சித்தாந்த முதலாச்

சாற்றுகின்ற அந்தமெலாம் தனித்துரைக்கும் பொருளை

இவறாத சுத்தசிவ சன்மார்க்க நிலையில்

இருந்தருளாம் பெருஞ்சோதி கொண்டறிதல் கூடும்

எவராலும் பிறிதொன்றால் கண்டறிதல் கூடா

தென்ஆணை என்மகனே அருட்பெருஞ்சோ தியைத்தான்

தவறாது பெற்றனைநீ வாழ்கஎன்ற பதியே

சபையில்நடத் தரசேஎன் சாற்றும்அணிந் தருளே.

90

4180

ஐயமுறேல் என்மகனே இப்பிறப்பிற் றானே

அடைவதெலாம் அடைந்தனைநீ அஞ்சலைஎன் றருளி

வையமிசைத் தனிஇருத்தி மணிமுடியும் சூட்டி

வாழ்கஎன வாழ்த்தியஎன் வாழ்க்கைமுதற் பொருளே

துய்யஅருட் பெருஞ்சோதி சுத்தசிவ வெளியே

சுகமயமே எல்லாஞ்செய் வல்லதனிப் பதியே

உய்யுநெறி காட்டிமணி மன்றிடத்தே நடிக்கும்

ஒருமைநடத் தரசேஎன் உரையும்அணிந் தருளே.

91

4181

காலையிலே என்றனக்கே கிடைத்தபெரும் பொருளே

களிப்பேஎன் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே

மேலையிலே இம்மையிலே ஒருமையிலே தவத்தால்

மேவுகின்ற பெரும்பயனாம் விளைவைஎலாம் தருமச்

சாலையிலே ஒருபகலில் தந்ததனிப் பதியே

சமரசசன் மார்க்கசங்கத் தலைஅமர்ந்த நிதியே

மாலையிலே சிறந்தமொழி மாலைஅணிந் தாடும்

மாநடத்தென் அரசேஎன் மாலையும்ஏற் றருளே.

92

4182

சிற்பதமும் தற்பதமும் பொற்பதத்தே காட்டும்

சிவபதமே ஆனந்தத் தேம்பாகின் பதமே

சொற்பதங்கள் கடந்ததன்றி முப்பதமும் கடந்தே

துரியபத முங்கடந்த பெரியதனிப் பொருளே

நற்பதம்என் முடிசூட்டிக் கற்பதெலாங் கணத்தே

நான்அறிந்து தானாக நல்கியஎன் குருவே

பற்பதத்துத் தலைவரெலாம் போற்றமணி மன்றில்

பயிலும்நடத் தரசேஎன் பாடல்அணிந் தருளே.

93

4183

ஆதியிலே எனையாண்டென் அறிவகத்தே அமர்ந்த

அப்பாஎன் அன்பேஎன் ஆருயிரே அமுதே

வீதியிலே விளையாடித் திரிந்தபிள்ளைப் பருவம்

மிகப்பெரிய பருவம்என வியந்தருளி அருளாம்

சோதியிலே விழைவுறச்செய் தினியமொழி மாலை

தொடுத்திடச்செய் தணிந்துகொண்ட துரையேசிற் பொதுவாம்

நீதியிலே நிறைந்தநடத் தரசேஇன் றடியேன்

நிகழ்த்தியசொன் மாலையும்நீ திகழ்த்திஅணிந் தருளே.

௯௪

௪௧௮௪

கணக்குவழக் கதுகடந்த பெருவெளிக்கு நடுவே

கதிர்பரப்பி விளங்குகின்ற கண்நிறைந்த சுடரே

இணக்கம்உறும் அன்பர்கள்தம் இதயவெளி முழுதும்

இனிதுவிளங் குறநடுவே இலங்கும்ஒளி விளக்கே

மணக்குநறு மணமேசின் மயமாய்என் உளத்தே

வயங்குதனிப் பொருளேஎன் வாழ்வேஎன் மருந்தே

பிணக்கறியாப் பெருந்தவர்கள் சூழமணி மன்றில்

பெருநடஞ்செய் அரசேஎன் பிதற்றும்அணிந் தருளே.

௯௫

௪௧௮௫

அடிச்சிறியேன் அச்சமெலாம் ஒருகணத்தே நீக்கி

அருளமுதம் மிகஅளித்தோர் அணியும்எனக் கணிந்து

கடிக்கமலத் தயன்முதலோர் கண்டுமிக வியப்பக்

கதிர்முடியும் சூட்டிஎனைக் களித்தாண்ட பதியே

வழித்தமறை முடிவயங்கு மாமணிப்பொற் சுடரே

மனம்வாக்குக் கடந்தபெரு வான்நடுவாம் ஒளியே

பழித்தலத்தார் வான்தலத்தார் பரவியிடப் பொதுவில்

பரிந்தநடத் தரசேஎன் பாட்டும்அணிந் தருளே.

96

4186

எத்துணையும் சிறியேனை நான்முகன்மால் முதலோர்

ஏறரிதாம் பெருநிலைமேல் ஏற்றிஉடன் இருந்தே

மெய்த்துணையாம் திருவருட்பேர் அமுதம்மிக அளித்து

வேண்டியவா றடிநாயேன் விளையாடப் புரிந்து

சுத்தசிவ சன்மார்க்க நெறிஒன்றே எங்கும்

துலங்கஅருள் செய்தபெருஞ் சோதியனே பொதுவில்

சித்துருவாய் நடம்புரியும் உத்தமசற் குருவே

சிற்சபைஎன் அரசேஎன் சிறுமொழிஏற் றருளே.

97

4187

இருந்தஇடந் தெரியாதே இருந்தசிறி யேனை

எவ்வுலகில் உள்ளவரும் ஏத்திடமேல் ஏற்றி

அருந்தவரும் அயன்முதலாம் தலைவர்களும் உளத்தே

அதிசயிக்கத் திருஅமுதும் அளித்தபெரும் பதியே

திருந்துமறை முடிப்பொருளே பொருள்முடிபில் உணர்ந்தோர்

திகழமுடிந் துட்கொண்ட சிவபோகப் பொருளே
பெருந்தவர்கள் போற்றமணி மன்றில்நடம் புரியும்
பெருநடத்தென் அரசேஎன் பிதற்றும்அணிந் தருளே.

98

4188

குணமறியேன் செய்தபெருங் குற்றமெலாங் குணமாக்
கொண்டருளி என்னுடைய குறிப்பெல்லாம் முடித்து
மணமுறுபே ரருள்இன்ப அமுதமெனக் களித்து
மணிமுடியும் சூட்டிஎனை வாழ்கஎன வாழ்த்தித்
தணவிலிலா தென்னுளத்தே தான்கலந்து நானும்
தானும்ஒரு வடிவாகித் தழைத்தோங்கப் புரிந்தே
அணவுறுபேர் அருட்சோதி அரசுகொடுத் தருளி
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

99

4189

தலைகால்இங் கறியாதே திரிந்தசிறி யேனைத்
தான்வலிந்தாட் கொண்டருளித் தடைமுழுதுந் தவிர்த்தே
மலைவறுமெய் அறிவளித்தே அருளமுதம் அருத்தி
வல்லபசத் திகளெல்லாம் மருவியிடப் புரிந்து
நிலையுறவே தானும்அடி யேனும்ஒரு வடிவாய்
நிறையநிறை வித்துயர்ந்த நிலைஅதன்மேல் அமர்த்தி

அலர்தலைப்பேர் அருட்சோதி அரசுகொடுத் தருளி

ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

100

## 58. நற்றாய் கூறல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4190.

காதல்கைம் மிகுந்த தென்செய்வேன் எனைநீ

கண்டுகொள் கணவனே என்றாள்

ஓதலுன் புகழே அன்றிநான் ஒன்றும்

உவந்திலேன் உண்மையீ தென்றாள்

பேதைநான் பிறிதோர் புகலிலேன் செய்த

பிழையெலாம் பொறுத்தருள் என்றாள்

மாதய வுடைய வள்ளலே என்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

1

4191

மயங்கினேன் எனினும் வள்ளலே உனைநான்

மறப்பனோ கனவினும் என்றாள்

உயங்கினேன் உன்னை மறந்திடில் ஐயோ

உயிர்தரி யாதெனக் கென்றாள்

கயங்கினேன் கயங்கா வண்ணநின் கருணைக்

கடலமு தளித்தருள் என்றாள்

வயங்குசிற் சபையில் வரதனே என்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

2

4192

அஞ்சல்என் றெனைஇத் தருணநீ வந்தே

அன்பினால் அணைத்தருள் என்றாள்

பஞ்சுபோல் பறந்தேன் அய்யவோ துன்பம்

படமுடி யாதெனக் கென்றாள்

செஞ்செவே எனது கருத்தெலாம் உனது

திருவுளம் அறியுமே என்றாள்

வஞ்சகம் அறியா வள்ளலே என்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

3

4193

பூமியோ பொருளோ விரும்பிலேன் உன்னைப்

புணர்ந்திட விரும்பினேன் என்றாள்

காமிஎன் றெனைநீ கைவிடேல் காமக்

கருத்தெனக் கில்லைகாண் என்றாள்

சாமிநீ வரவு தாழ்த்திடில் ஐயோ

சற்றுநான் தரித்திடேன் என்றாள்

மாமிகு கருணை வள்ளலே என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

4

4194

அடுத்துநான் உன்னைக் கலந்தனு பவிக்க
ஆசைமேற் பொங்கிய தென்றாள்
தடுத்திட முடியா தினிச்சிறு பொழுதும்
தலைவனே தாழ்த்திடேல் என்றாள்
தொடுத்துல குள்ளார் தூற்றுதல் வாயால்
சொலமுடி யாதெனக் கென்றாள்
மடுத்தவெந் துயர்தீர்த் தெடுத்தருள் என்றாள்
வரத்தினால் நான்பெற்ற மகளே.

5

4195

தடுத்திடல் வல்லார் இல்லைநின் அருளைத்
தருகநற் றருணமீ தென்றாள்
கொடுத்திடல் ஐயோ நின்னருட் பெருமை
குறையுமோ குறைந்திடா தென்றாள்
நடுத்தய விலர்போன் றிருத்தலுன் றனக்கு
ஞாயமோ நண்பனே என்றாள்
வடுத்தினும் வாயேன் அல்லன்நான் என்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

6

4196

பொன்செய் நின்வடிவைப் புணர்ந்திட நினைத்தேன்

பொங்கிய தாசைமேல் என்றாள்

என்செய்வேன் எனையும் விழுங்கிய தையோ

என்னள வன்றுகாண் என்றாள்

கொன்செயும் உலகர் என்னையும் உனது

குறிப்பையும் குறித்திலார் என்றாள்

வன்செயும் அவர்வாய் ஓய்வதென் றென்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

7

4197

மெலிந்தஎன் உளத்தை அறிந்தனை தயவு

மேவிலை என்னையோ என்றாள்

நலிந்தபோ தின்னும் பார்த்தும்என் றிருத்தல்

நல்லவர்க் கடுப்பதோ என்றாள்

மலிந்த இவ்வுலகர் வாய்ப்பதர் தூற்ற

வைத்தல்உன் மரபல என்றாள்

வலிந்தெனைக் கலந்த வள்ளலே என்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

8

4198

ஒன்றிலேன் பிறிதொன் றுன்னருட் சோதி

ஒன்றுற ஒன்றினேன் என்றாள்

நன்றிலேன் எனினும் நின்திரு வடியை

நம்பினேன் நயந்தருள் என்றாள்

குன்றிலே இருத்தற் குரியநான் துயரக்

குழியிலே இருந்திடேன் என்றாள்

மன்றிலே நடஞ்செய் வள்ளலே என்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

9

4199

ஆடிய பாதத் தழகன்என் றனைத்தான்

அன்பினால் கூடினன் என்றாள்

கோடிமா தவங்கள் புரியினும் பிறர்க்குக்

கூடுதல் கூடுமோ என்றாள்

பாடிய படிஎன் கருத்தெலாம் நிரப்பிப்

பரிசெலாம் புரிந்தனன் என்றாள்

வாடிய உளமும் தளிர்த்தனன் என்றாள்

வரத்தினால் நான்பெற்ற மகளே.

10

59. பாங்கி தலைவி பெற்றி உரைத்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4290.

அம்மதவேள் கணைஒன்றோ ஐங்கணையும் விடுத்தான்

அருள்அடையும் ஆசையினால் ஆருயிர்தான் பொறுத்தாள்

இம்மதமோ சிறிதும்இலாள் கலவியிலே எழுந்த

ஏகசிவ போகவெள்ளத் திரண்டுபடாள் எனினும்

எம்மதமோ எக்குலமோ என்றுநினைப் புளதேல்

இவள்மதமும் இவள்குலமும் எல்லாமும் சிவமே

சம்மதமோ தேவர்திரு வாய்மலர வேண்டும்

சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே.

1

4291

அங்கலிட்ட(285) களத்தழகர் அம்பலவர் திருத்தோள்

ஆசையெனும் பேய்அகற்றல் ஆவதிலை எனவே

பொங்கலிட்ட தாயர்முகம் தொங்கலிட்டுப் போனார்

பூவைமுகம் பூமுகம்போல் பூரித்து மகிழ்ந்தாள்

எங்களிட்டம் திருவருள்மங் கலஞ்சூட்டல் அன்றி

இரண்டுபடா தொன்றாக்கி இன்படைவித் திடவே

தங்களிட்டம் யாதுதிரு வாய்மலர வேண்டும்

சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே.

௨

(285). அங்கு அல் எனப்பிரித்து அவ்விடத்துஇருள் எனப் பொருள்கொள்க - முதற்பதிப்பு. இருள் - நஞ்சு.

௪௨௮௨

பனம்பழமே எனினும்இந்தப் பசிதவிர்த்தால் போதும்
பாரும்எனப் பகர்கின்ற பாவையர்போல் பகராள்
இனம்பழமோ கங்கலந்தாள் சிவானுபவத் தல்லால்
எந்தஅனு பவங்களிலும் இச்சைஇல்லாள் அவர்தம்
மனம்பழமோ காயோஎன் றறிந்துவர விடுத்தாள்
மற்றவர்போல் காசுபணத் தாசைவைத்து வருந்தாள்
தனம்பழமோ தேவர்திரு வாய்மலர வேண்டும்
சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே.

3

௪௨௮௩

புல்லவரே பொய்உலக போகம்உற விழைவார்
புண்ணியரே சிவபோகம் பொருந்துதற்கு விழைவார்
கல்லவரே மணிஇவரே என்றறிந்தாள் அதனால்
கனவிடையும் பொய்யுறவு கருதுகிலாள் சிறிதும்
நல்லவரே எனினும்உமை நாடாரேல் அவரை
நன்குமதி யாள்இவளை நண்ணஎண்ணம் உளதோ
வல்லவரே நுமதுதிரு வாய்மலர வேண்டும்

வயங்குதிரு மணிமன்றில் வாழ்பெரிய துரையே.

௪

௪௨௮௪

தத்துவரும் தத்துவஞ்செய் தலைவர்களும் பிறரும்

தனித்தனியே வலிந்துவந்து தன்எதிர்நிற் கின்றார்

எத்துணையும் மற்றவரை ஏறெடுத்துப் பாரான்

இருவிழிகள் நீர்சொரிவாள் என்னுயிர்நா யகனே

ஒத்துயிரில் கலந்துகொண்ட உடையாய்என் றுமையே

ஓதுகின்றாள் இவள்அளவில் உத்தமரே உமது

சித்தம்எது தேவர்திரு வாய்மலர வேண்டும்

சிற்சபையில் பொற்சபையில் திகழ்பெரிய துரையே.

5

௪௨௮5

அன்னையைக்கண் டம்மாநீ அம்பலத்தென் கணவர்

அடியவளேல் மிகவருக அல்லள்எனில் இங்கே

என்னைஉனக் கிருக்கின்ற தேதுகஎன் றுரைப்பாள்

இச்சைஎலாம் உம்மிடத்தே இசைந்தனள்இங் கிவளை

முன்னையள்என் றெண்ணாதீர் தாழ்த்திருப்பீர் ஆனால்

முடுகிஉயிர் விடுத்திடுவாள் கடுகிவரல் உளதேல்

மன்னவரே உமதுதிரு வாய்மலர வேண்டும்

வயங்குதிரு மணிமன்றில் வாழ்பெரிய துரையே.

6

4296

கரவறியா அம்பலத்தென் கணவரைக்கண் டலது
கண்துயிலேன் உண்டிகொளேன் களித்தமரேன் என்பாள்
இரவறியாள் பகலறியாள் எதிர்வருகின் றவரை
இன்னவர்என் றறியாள்இங் கின்னல்உழக் கின்றாள்
வரவெதிர்பார்த் துழல்கின்றாள் இவள்அளவில் உமது
மனக்கருத்தின் வண்ணம்எது வாய்மலர வேண்டும்
விரவும்ஒரு கணமும்இனித் தாழ்க்கில்உயிர் தரியாள்
மெய்ப்பொதுவில் நடம்புரியும் மிகப்பெரிய துரையே.

7

4297

ஊராசை உடலாசை உயிர்பொருளின் ஆசை
உற்றவர்பெற் றவராசை ஒன்றுமிலாள் உமது
பேராசைப் பேய்பிடித்தாள் கள்ளுண்டு பிதற்றும்
பிச்சிஎனப் பிதற்றுகின்றாள் பிறர்பெயர்கேட் டிடிலோ
நாராசஞ் செவிபுகுந்தால் என்னநலி கின்றாள்
நாடறிந்த திதுஎல்லாம் நங்கைஇவள் அளவில்
நீர்ஆசைப் பட்டதுண்டேல் வாய்மலர வேண்டும்
நித்தியமா மணிமன்றில் நிகழ்பெரிய துரையே.

8

4288

என்னுயிரில் கலந்துகொண்டார் வரில்அவர்தாம் இருக்க

இடம்புனைக என்கின்றாள் இச்சைமய மாகித்

தன்னுயிர்தன் உடல்மறந்தாள் இருந்தறியாள் படுத்தும்

தரித்தறியாள் எழுந்தெழுந்து தனித்தொருசார் திரிவாள்

அன்னமுண அழைத்தாலும் கேட்பதிலாள் உலகில்

அணங்கனையார் அதிசயிக்கும் குணங்கள்பல பெற்றாள்

மின்னிவளை விழைவதுண்டேல் வாய்மலர வேண்டும்

மெய்ப்பொதுவில் நடம்புரியும் மிகப்பெரிய துரையே.

9

4289

அம்பலத்தே நடம்புரியும் எனதுதனித் தலைவர்

அன்புடன்என் உளங்கலந்தே அருட்பெருஞ்சோ தியினால்

தம்பலத்தே பெரும்போகந் தந்திடுவார் இதுதான்

சத்தியஞ்சத் தியமதனால் சார்ந்தவர்தாம் இருக்க

எம்பலத்தே மலரணையைப் புனைகஎனப் பலகால்

இயம்புகின்றாள் இவள்அளவில் இசைந்துநும தருளாம்

செம்பலத்தே உறுதருணம் வாய்மலர வேண்டும்

சிற்சபைபொற் சபைஓங்கித் திகழ்பெரிய துரையே.

10

## 69. தலைவி வருந்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4210.

பருவமிலாக் குறையாலோ பகுதிவகை யாலோ
பழக்கமிலா மையினாலோ படிற்றுவினை யாலோ
இருவகைமா யையினாலோ ஆணவத்தி னாலோ
என்னாலோ பிறராலோ எதனாலோ அறியேன்
சருவல்ஒழிந் தென்மனமாம் பாங்கிபகை யானாள்
தனித்தபரை எனும்வளர்த்த தாயும்முகம் பாராள்
நிருவமடப் பெண்களெலாம் வலதுகொழிக் கின்றார்
நிபுணர்எங்கள் நடராயர் நினைவைஅறிந் திலனே.

1

4211

அம்பலத்தே திருநடஞ்செய் அடிமலர்என் முடிமேல்
அணிந்திடமுன் சிலசொன்னேன் அதனாலோ அன்றி
எம்பலத்தே எம்மிறைவன் என்னைமணம் புரிவான்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
வம்பிசைத்தேன் எனஎனது பாங்கிபகை யானாள்
வளர்த்தெடுத்த தனித்தாயும் மலர்ந்துமுகம் பாராள்
நிம்பமரக் கனியானார் மற்றையர்கள் எல்லாம்
நிபுணர்எங்கள் நடராயர் நினைவைஅறிந் திலனே.

2

4212

கண்ணுறங்கேன் உறங்கினும்என் கணவரொடு கலக்கும்

கனவன்றி இலைஎன்றேன் அதனாலோ அன்றி

எண்ணுறங்கா நிலவில்அவர் இருக்குமிடம் புகுவேன்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

பெண்ணடங்காள் எனத்தோழி பேசிமுகங் கடுத்தாள்

பெருந்தயவால் வளர்த்தவளும் வருந்தயலாள் ஆனாள்

மண்ணடங்காப் பழிகூறி மற்றவர்கள் இருந்தார்

வள்ளல்நட ராயர்திரு உள்ளம்அறிந் திலனே.

3

4213

எல்லாஞ்செய் வல்லதுரை என்கணவர் என்றால்

எனக்கும்ஒன்று நினக்கும்ஒன்றா என்றஅத னாலோ

இல்லாமை எனக்கில்லை எல்லார்க்குந் தருவேன்

என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்

கல்லார்போல் என்னைமுகம் கடுத்துநின்றாள் பாங்கி

களித்தெடுத்து வளர்த்தவளும் கலந்தனள்அங் குடனே

செல்லாமை சிலபுகன்று சிரிக்கின்றார் மடவார்

சித்தர்நட ராயர்திருச் சித்தமறிந் திலனே.

4

4214

இச்சைஎலாம் வல்லதுரை என்னைமணம் புரிந்தார்
ஏழைஎனக் கிணைஎவர்கள் என்றஅத னாலோ
எச்சமயத் தேவரையும் இனிமதிக்க மாட்டேன்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
நச்சுமரக் கனிபோலே பாங்கிமனங் கசந்தாள்
நயந்தெடுத்து வளர்த்தவளும் கயந்தெடுப்புப் புகன்றாள்
அச்சமிலாள் இவள்என்றே அலர்உரைத்தார் மடவார்
அண்ணல்நட ராயர்திரு எண்ணம்அறிந் திலனே.

5

4215

வஞ்சமிலாத் தலைவருக்கே மாலையிட்டேன் எல்லா
வாழ்வும்என்றன் வாழ்வென்றேன் அதனாலோ அன்றி
எஞ்சலுறேன் மற்றவர்போல் இறந்துபிறந் துழலேன்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
அஞ்சுமுகங் காட்டிநின்றாள் பாங்கிஎனை வளர்த்த
அன்னையும்அப் படியாகி என்னைமுகம் பாராள்
நெஞ்சுரத்த பெண்களெலாம் நீட்டிநகைக் கின்றார்
நிருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

6

4216

அன்னமுண அழைத்தனர்நான் ஆடும்மலர் அடித்தேன்

அருந்துகின்றேன் எனஉரைத்தேன் அதனாலோ அன்றி

என்னுயிர்நா யகனொடுநான் அணையும்இடம் எங்கே

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

துன்னுநெறிக் கொருதுணையாம் தோழிமனங் கசந்தாள்

துணிந்தெடுத்து வளர்த்தவளும் சோர்ந்தமுகம் ஆனாள்

நென்னல்ஒத்த பெண்களெலாங் கூடிநகைக் கின்றார்

நிபுணர்எங்கள் நடராயர் நினைவைஅறிந் திலனே.

7

4217

பொதுநடஞ்செய் துரைமுகத்தே தளதளஎன் றொளிரும்

புன்னகைஎன் பொருள்என்றேன் அதனாலோ அன்றி

இதுவரையும் வரக்காணேன் தடைசெய்தார் எவரோ

எனப்புகன்றேன் இதனாலோ எதனாலோ அறியேன்

புதுமுகங்கொண் டெனதுதனித் தோழிமனந் திரிந்தாள்

புரிந்தெடுத்து வளர்த்தவளும் புதுமைசில புகன்றாள்

மதுவுகந்து களித்தவர்போல் பெண்கள்நொடிக் கின்றார்

வள்ளல்நட ராயர்திரு உள்ளமறிந் திலனே.

8

4218

கண்கலந்த கள்வர்என்னைக் கைகலந்த தருணம்

கரணம்அறிந் திலன்என்றேன் அதனாலோ அன்றி

எண்கலந்த போகமெலாம் சிவபோகந் தனிலே

இருந்ததென்றேன் இதனாலோ எதனாலோ அறியேன்

விண்கலந்த மதிமுகந்தான் வேறுபட்டாள் பாங்கி

வியந்தெடுத்து வளர்த்தவளும் வேறுசில புகன்றாள்

பண்கலந்த மொழிமடவார் பழிகூற லானார்

பத்தர்புகழ் நடராயர் சித்தம்அறிந் திலனே.

9

4219

மாடமிசை ஓங்குநிலா மண்டபத்தே மகிழ்ந்தேன்

வள்ளலொடு நானென்றேன் அதனாலோ அன்றி

ஈடறியாச் சுகம்புகல என்னாலே முடியா

தென்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

ஏடவிழ்பூங் குழற்கோதைத் தோழிமுகம் புலர்ந்தாள்

எனைஎடுத்து வளர்த்தவளும் இரக்கமிலாள் ஆனாள்

நாடறியப் பெண்களெலாங் கூடிநகைக் கின்றார்

நல்லநட ராயர்கருத் தெல்லைஅறிந் திலனே.

10

4220

கற்பூரம் மணக்கின்ற தென்மேனி முழுதும்

கணவர்மணம் அதுவென்றேன் அதனாலோ அன்றி

இற்பூவை அறியுமடி நடந்தவண்ணம் எல்லாம்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

பொற்பூவின் முகம்வியர்த்தாள் பாங்கிஅவ ளுடனே

புரிந்தெடுத்து வளர்த்தவளும் கரிந்தமுகம் படைத்தாள்

சொற்பூவைத் தொடுக்கின்றார் கால்கள்களை யாதே

துன்னுநட ராயர்கருத் தெல்லைஅறிந் திலனே.

11

4221

மன்னுதிருச் சபைநடுவே மணவாள ருடனே

வழக்காடி வலதுபெற்றேன் என்றஅத னாலோ

இன்னும்அவர் வதனஇள நகைகாணச் செல்வேன்

என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்

மின்னும்இடைப் பாங்கிஒரு விதமாக நடந்தாள்

மிகப்பரிவால் வளர்த்தவளும் வெய்துயிர்த்துப் போனாள்

அன்னநடைப் பெண்களெலாம் சின்னமொழி புகன்றார்

அத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

12

4222

கள்ளுண்டாள் எனப்புகன்றீர் கனகசபை நடுவே

கண்டதலால் உண்டதிலை என்றஅத னாலோ

எள்ளுண்ட மற்றவர்போல் என்னைநினை யாதீர்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

உள்ளுண்ட மகிழ்ச்சிஎலாம் உவட்டிநின்றாள் பாங்கி

உவந்துவளர்த் தவளும்என்பால் சிவந்தகண்ணள் ஆனாள்

துள்ளுண்ட பெண்களெலாம் சூழ்ந்துநொடிக் கின்றார்

சுத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

13

4223

காரிகையீர் எல்லீரும் காணவம்மின் எனது

கணவர்அழ கினைஎன்றேன் அதனாலோ அன்றி

ஏரிகவாத் திருஉருவை எழுதமுடி யாதே

என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்

காரிகவாக் குழல்சோரக் கடுத்தெழுந்தாள் பாங்கி

கண்பொறுத்து வளர்த்தவளும் புண்பொறுத்தாள் உளத்தே

நேரிகவாப் பெண்கள்மொழிப் போர்இகவா தெடுத்தார்

நிருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

14

4224

கண்ணேறு படும்எனநான் அஞ்சுகின்றேன் எனது

கணவர்வடி வதுகாணற் கென்றஅத னாலோ

எண்ணாத மனத்தவர்கள் காணவிழை கின்றார்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

நண்ணாரில் கடுத்தமுகம் தோழிபெற்றாள் அவளை

நல்கிஎனை வளர்த்தவளும் மல்கியவன் படுத்தாள்
பெண்ணாயம் பலபலவும் பேசுகின்றார் இங்கே
பெரியநட ராயர்உள்ளப் பிரியம்அறிந் திலனே.

15

4225

கற்பூரம் கொணர்ந்துவம்மின் என்கணவர் வந்தால்
கண்ணெச்சில் கழிக்கஎன்றேன் அதனாலோ அன்றி
எற்பூத நிலையவர்தம் திருவடித்தா மரைக்கீழ்
என்றுசொன்னேன் இதனாலோ எதனாலோ அறியேன்
வற்பூத வனம்போன்றாள் பாங்கியவள் தனைமுன்
மகிழ்ந்துபெற்றிங் கெனைவளர்த்தாள் வினைவளர்த்தாள் ஆனாள்
விற்பூஒள் நுதல்மடவார் சொற்போர்செய் கின்றார்
விண்ணிலவு நடராயர் எண்ணம்அறிந் திலனே.

16

4226

மனைஅணைந்த மலரணைமேல் எனைஅணைந்த போது
வடிவுசுக வடிவானேன் என்றஅத னாலோ
இனைவறியேன் முன்புரிந்த பெருந்தவம்என் புகல்வேன்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
புனைமுகம்ஓர் கரிமுகமாய்ப் பொங்கிநின்றாள் பாங்கி
புழுங்குமனத் தவளாகி அழுங்குகின்றாள் செவிலி

பனையுலர்ந்த ஓலைஎனப் பெண்கள்ஒலிக் கின்றார்
பண்ணவர்என் நடராயர் எண்ணம்அறிந் திலனே.

17

4227

தாழ்குழலீர் எனைச்சற்றே தனிக்கவிட்டால் எனது
தலைவரைக்காண் குவல்என்றேன் அதனாலோ அன்றி
ஏழ்கடலிற் பெரிதன்றோ நான்பெற்ற இன்பம்
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
கூழ்கொதிப்ப தெனக்கொதித்தாள் பாங்கிஎனை வளர்த்த
கோதைமருண் டாடுகின்ற பேதைஎனல் ஆனாள்
சூழ்மடந்தை மார்களெலாம் தூற்றிநகைக் கின்றார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

18

4228

தனித்தலைவர் வருகின்ற தருணம்இது மடவீர்
தனிக்கஎனை விடுமின்என்றேன் அதனாலோ அன்றி
இனித்தசுவை எல்லாம்என் கணவர்அடிச் சுவையே
என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்
பனித்தகுளிர் காலத்தே சனித்தசலம் போன்றாள்
பாங்கிஎனை வளர்த்தவளும் தூங்குமுகங் கொண்டாள்
கனித்தபழம் விடுத்துமின்னார் காய்தின்னு கின்றார்

கருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

19

4229

அரும்பொன்அனை யார்எனது துரைவரும்ஓர் சமயம்

அகலநின்மின் அணங்கனையீர் என்றஅத னாலோ

இரும்புமணம் ஆனாலும் இளகிவிடுங் கண்டால்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

கரும்பனையாள் பாங்கியும்நாய்க் கடுகனையாள் ஆனாள்

களித்தென்னை வளர்த்தவளும் புளித்தின்றாள் ஒத்தாள்

விரும்புகின்ற பெண்களெலாம் அரும்புகின்றார் அலர்தான்

வித்தகர்என் நடராயர் சித்தம்அறிந் திலனே.

20

4230

மணவாளர் வருகின்ற தருணம்இது மடவீர்

மறைந்திருமின் நீவிர்என்றேன் அதனாலோ அன்றி

எணமேது நுமக்கெனைத்தான் யார்தடுக்கக் கூடும்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

குணநீடு பாங்கிஅவள் எம்மிறையை நினையார்

குணங்கொண்டாள் வளர்த்தவளும் பணம்விண்டாள் ஆனாள்

மணநீடு குழன்மடவார் குணநீடு கின்றார்

வள்ளல்நட ராயர்திரு உள்ளம்அறிந் திலனே.

21

4231

பதிவரும்ஓர் தருணம்இது நீவிர்அவர் வடிவைப்

பார்ப்பதற்குத் தரமில்லீர் என்றஅத னாலோ

எதிலும்எனக் கிச்சைஇல்லை அவரடிக்கண் அல்லால்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

மதிமுகத்தாள் பாங்கிஒரு விதிமுகத்தாள் ஆனாள்

மகிழ்ந்தென்னை வளர்த்தவளும் இகழ்ந்துபல புகன்றாள்

துதிசெய்மட மாதர்எலாம் சதிசெய்வார் ஆனார்

சுத்தர்நட ராயர்திருச் சித்தம்அறிந் திலனே.

22

4232

மன்றாடுங் கணவர்திரு வார்த்தைஅன்றி உமது

வார்த்தைஎன்றன் செவிக்கேறா தென்றஅத னாலோ

இன்றாவி அன்னவர்க்குத் தனித்தஇடங் காணேன்

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

முன்றானை அவிழ்ந்துவிழ முடுகிநடக் கின்றாள்

முதற்பாங்கி வளர்த்தவளும் மதர்ப்புடன்செல் கின்றாள்

ஒன்றாத மனப்பெண்கள் வென்றாரின் அடுத்தார்

ஒருத்தநட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

23

4233

கூடியஎன் கணவர்எனைக் கூடாமற் கலைக்கக்

கூடுவதோ நும்மாலே என்றஅத னாலோ

ஏடிஎனை அறியாரோ சபைக்குவரு வாரோ

என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்

நாடியஎன் பாங்கிமன மூடிநின்று போனாள்

நண்ணிஎனை வளர்த்தவளும் எண்ணியவா றிசைத்தாள்

தேடியஆ யங்களெலாம் கூடிஉரைக் கின்றார்

திருத்தர்நட ராயர்திருக் கருத்தைஅறிந் திலனே.

24

61. ஞானசிதம்பர வெண்பா: தில்லையும் பார்வதிபுரமும்

நேரிசை வெண்பா

4234.

அன்னையப்பன் மாவினத்தார் ஆய்குழலார் ஆசையினால்

தென்னைஒப்ப நீண்ட சிறுநெஞ்சே - என்னைஎன்னை

யாவகைசேர் வாயில் எயிற்றில்லை என்கிலையே

ஆவகைஐந் தாய்ப்பதம்ஆ றார்ந்து.

1

4235

நீர்க்கிசைந்த நாம நிலைமூன்று கொண்டபெயர்

போர்க்கிசைந்த தென்றறியாப் புன்னெஞ்சே - நீர்க்கிசைந்தே

ஒன்றுஒன்றுஒன்று ஒன்றுஒன்றுஒன்று ஒன்றுஒன்று
தில்லைமணி

மன்றொன்று வானை மகிழ்ந்து.

2

4236

ஈற்றில்ஒன்றாய் மற்றை இயல்வருக்க மாகியபேர்

ஏற்ற பறவை இருமைக்கும் - சாற்றுவமை

அன்றே தலைமகட்கா அம்பலவர் தம்பால்ஏ(கு)

என்றே எனக்குநினைக் கும்.

3

4237

கைத்தலைமே லிட்டலையிற் கண்ணுடையான் கால்மலர்க்குக்

கைத்தலைமே லிட்டலையிற் கண்ணீர்கொண் - டுய்த்தலைமேல்

காணாயேல் உண்மைக் கதிநிலையைக் கைக்கணியாக்

காணாயே நெஞ்சே களித்து.

4

4238

கல்லோ மணலோ கனியோ கரும்போஎன்(று)

எல்லோமும் இங்கே இருக்கின்றோம் - சொல்லோம்

அதுவாய் அதன்பொருளாய் அப்பாலாய் யார்க்கும்

பொதுவாய் நடிக்கின்ற போது.

5

4239

அதுபார் அதிலே அடைந்துவதி மற்றாங்(கு)

அதில்ஏழை யைப்புரமெய் யன்பால் - அதிலே

நலமே வதிலேநின் ணாவூர் திருவம்

பலமேவக் காட்டும் பரிசு.

6

4240

நம்பார் வதிபாக னம்புரத்தில் நின்றுவந்தோன்

அம்பாரத் தென்கிழக்கே அம்பலத்தான் - வெம்பாது

பார்த்தால் அளிப்பான் தெரியுஞ் சிதம்பரம்நீ

பார்த்தாய்இப் பாட்டின் பரிசு.

7

4241

நடிப்பார் வதிதில்லை நற்கோ புரத்தின்

அடிப்பாவை யும்(286)வடக்கே ஆர்ந்து - கொடிப்பாய

நின்று வளர்மலைபோல் நெஞ்சேபார்த் தால்தெரியும்

இன்றெவ்விடத் தென்னிலிப்பாட் டில்.

8

(286). அடிப்பார்வையும் - முதற்பதிப்பு, சிவாசாரியர் அகவற் பதிப்பு., பொ. சு., பி. இரா.,

௪௨௪௨

பூமி பொருந்து புரத்தே(287) நமதுசிவ
காமிதனை வேட்டுக் கலந்தமர்ந்தான் - நேமி
அளித்தான்மால் கண்மலருக் கானந்தக் கூத்தில்
களித்தான் அவன்றான் களித்து.

9

(287). பூமிபொருந்துபுரம் - பார்வதிபுரம். பூமி - பார், பொருந்து - வதி.

62. சிவபதி விளக்கம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

௪௨௪௩.

உரைவளர் கலையே கலைவளர் உரையே உரைகலை வளர்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே விரைமலர் வளர்தரு நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே கரைதரு வளர்கிளர் கனியே
பரைவளர் ஒளியே ஒளிவளர் பரையே பரையொளி வளர்சிவ பதியே.

1

௪௨௪௪

ஒளிவளர் உயிரே உயிர்வளர் ஒளியே ஒளியுயிர் வளர்தரும் உணர்வே

வெளிவளர் நிறைவே நிறைவளர் வெளியே வெளிநிறை வளர்தரு விளைவே
வளிவளர் அசைவே அசைவளர் வளியே வளியசை வளர்தரு செயலே
அளிவளர் அனலே அனல்வளர் அளியே அளியனல் வளர்சிவ பதியே.

2

4245

அடிவளர் இயலே இயல்வளர் அடியே அடியியல் வளர்தரு கதியே
முடிவளர் பொருளே பொருள்வளர் முடியே முடிபொருள் வளர்சுக நிதியே
படிவளர் விதையே விதைவளர் படியே படிவிதை வளர்பல நிகழ்வே
தடிவளர் முகிலே முகில்வளர் தடியே தடிமுகில் வளர்சிவ பதியே.

3

4246

சிரம்வளர் முதலே முதல்வளர் சிரமே சிரமுதல் வளர்தரு செறிவே
தரம்வளர் நிலையே நிலைவளர் தரமே தரநிலை வளர்தரு தகவே
வரம்வளர் நிறையே நிறைவளர் வரமே வரநிறை வளர்தரு வயமே
பரம்வளர் பதமே பதம்வளர் பரமே பரபதம் வளர்சிவ பதியே.

4

4247

திருவளர் வளமே வளம்வளர் திருவே திருவளம் வளர்தரு திகழ்வே

உருவளர் வடிவே வடிவளர் உருவே உருவடி வளர்தரு முறைவே

கருவளர் அருவே அருவளர் கருவே கருவரு வளர்நவ கதியே

குருவளர் நெறியே நெறிவளர் குருவே குருநெறி வளர்சிவ பதியே.

5

4248

நிறைவளர் முறையே முறைவளர் நிறையே நிறைமுறை வளர்பெரு நெறியே

பொறைவளர் புவியே புவிவளர் பொறையே புவிபொறை வளர்தரு புனலே

துறைவளர் கடலே கடல்வளர் துறையே துறைகடல் வளர்தரு சுவையே

மறைவளர் பொருளே பொருள்வளர் மறையே மறைபொருள்வளர்சிவபதியே.

6

4249

தவம்வளர் தயையே தயைவளர் தவமே தவநிறை தயைவளர் சதுரே

நவம்வளர் புரமே புரம்வளர் நவமே நவபுரம் வளர்தரும் இறையே

துவம்வளர் குணமே குணம்வளர் துவமே துவகுணம் வளர்தரு திகழ்வே

சிவம்வளர் பதமே பதம்வளர் சிவமே சிவபதம் வளர்சிவ பதியே.

7

4250

நடம்வளர் நலமே நலம்வளர் நடமே நடநலம் வளர்தரும் ஒளியே

இடம்வளர் வலமே வலம்வளர் இடமே இடம்வலம் வளர்தரும் இசைவே

திடம்வளர் உளமே உளம்வளர் திடமே திடவுளம் வளர்தரு திருவே

கடம்வளர் உயிரே உயிர்வளர் கடமே கடமுயிர் வளர்சிவ பதியே.

8

4251

அதுவளர் அணுவே அணுவளர் அதுவே அதுவணு வளர்தரும் உறவே

விதுவளர் ஒளியே ஒளிவளர் விதுவே விதுஒளி வளர்தரு செயலே

மதுவளர் சுவையே சுவைவளர் மதுவே மதுவுறு சுவைவளர் இயலே

பொதுவளர் வெளியே வெளிவளர் பொதுவே பொதுவெளி வளர்சிவ பதியே.

9

4252

நிதிவளர் நிலமே நிலம்வளர் நிதியே நிதிநிலம் வளர்தரு நிறைவே

மதிவளர் நலமே நலம்வளர் மதியே மதிநலம் வளர்தரு பரமே

கதிவளர் நிலையே நிலைவளர் கதியே கதிநிலை வளர்தரு பொருளே

பதிவளர் பதமே பதம்வளர் பதியே பதிபதம் வளர்சிவ பதியே.

10

63. ஞானோபதேசம்

கலிவிருத்தம் ; பண்: நட்டராகம்

4253.

கண்ணே கண்மணி யே - கருத் - தேகருத் தின்கனி வே

விண்ணே விண்ணிறை வே - சிவ - மேதனி மெய்ப்பொரு ளே

தண்ணேர் ஒண்மதி யே - எனைத் - தந்த தயாநிதி யே

உண்ணேர் உள்ளொளி யே - எனக் - குண்மை உரைத்தரு ளே.

1

4254

வளியே வெண்ணெருப் பே - குளிர் - மாமதி யேகன லே

வெளியே மெய்ப்பொரு ளே - பொருள் - மேவிய மேனிலை யே

அளியே அற்புத மே - அமு - தேஅறி வேஅர சே

ஒளியே உத்தம னே - எனக் - குண்மை உரைத்தரு ளே.

2

4255

அன்பே என்னர சே - திரு - வம்பலத் தாரமு தே

என்பே உள்ளுரு கக் - கலந் - தென்னு ளிருந்தவ னே

இன்பே என்னறி வே - பர - மேசிவ மேயென வே

உன்பே ரோதுகின் றேன் - எனக் - குண்மை உரைத்தரு ளே.

3

4256

தனையா வென்றழைத் தே - அருட் - சத்தி யளித்தவ னே

அனையா யப்பனு மாய் - எனக் - காரிய னானவ னே

இனையா தென்னையு மேல் - நிலை - ஏற்றுவித் தாண்டவ னே

உனையான் ஏத்துகின் றேன் - எனக் - குண்மை உரைத்தரு ளே.

4

4257

துப்பார் செஞ்சுடரே - அருட் - சோதி சுகக்கட லே

அப்பா என்னர சே - திரு - வம்பலத் தாரமு தே

இப்பா ரிற்பசிக் கே - தந்த - இன்சுவை நல்லுண வே

ஒப்பாய் ஒப்பரி யாய் - எனக் - குண்மை உரைத்தரு ளே.

5

4258

என்றே யென்று ளுறுஞ் - சுட - ரேஎனை ஈன்றவ னே

நன்றே நண்பெனக் கே - மிக - நல்கிய நாயக னே

மன்றோர் மாமணி யே - சுக - வாழ்க்கையின் மெய்ப்பொரு ளே

ஒன்றே யென்றுணை யே - எனக் - குண்மை உரைத்தரு ளே.

6

4259

திருவே தெள்ளமு தே - அருட் - சித்த சிகாமணி யே

கருவே ரற்றிட வே - களை - கின்றவென் கண்ணுத லே

மருவே மாமல ரே - மலர் - வாழ்கின்ற வானவ ணாம்

உருவே என்குரு வே - எனக் - குண்மை உரைத்தரு ளே.

7

4260

தடையா வுந்தவிர்த் தே - எனைத் - தாங்கிக்கொண் டாண்டவ னே

அடையா யன்பிலர் பால் - எனக் - கன்பொடு தந்தபெ ருங்

கொடையாய் குற்றமெ லாங் - குணங் - கொண்டகு ணக்குன்ற மே

உடையாய் உத்தம னே - எனக் - குண்மை உரைத்தரு ளே.

8

4261

பெண்ணாய் ஆணுரு வாய் - எனைப் - பெற்றபெ ருந்தகை யே

அண்ணா என்னர சே - திரு - வம்பலத் தாடுகின் றோய்

எண்ணா நாயடி யேன் - களித் - திட்டவு ணவையெ லாம்

உண்ணா துண்டவ னே - எனக் - குண்மை உரைத்தரு ளே.

9

4262

நந்நா லுங்கடந் தே - ஒளிர் - ஞானச பாபதி யே
பொன்னா ருஞ்சபை யாய் - அருட் - பூரண புண்ணிய னே
என்னால் ஆவதொன் றும் - உனக் - கில்லையெ னினுமெந் தாய்
உன்னால் வாழுகின் றேன் - எனக் - குண்மை உரைத்தரு ளே.

10

64. ஆரமுதப் பேறு

கலிவிருத்தம் ; பண்: நட்டராகம்

4263.

விரைசேர் பொன்மல ரே - அதில் - மேவிய செந்தே னே
கரைசேர் முக்கனி யே - கனி - யிற்சுவை யின்பய னே
பரைசேர் உள்ளொளி யே - பெரும் - பற்றம்ப லநடஞ் செய்
அரைசே தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

1

4264

விண்ணார் செஞ்சுட ரே - சுடர் - மேவிய உள்ளொளி யே
தண்ணார் வெண்மதி யே - அதில் - தங்கிய தண்ணமு தே
கண்ணார் மெய்க்கன லே - சிவ - காமப்பெண் காதல னே
அண்ணா தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

2

4265

துப்பார் செஞ்சடை யாய் - அருட் - சோதிச் சுகக்கட லே

செப்பா மேனிலைக் கே - சிறி - யேனைச் செலுத்திய வா
எப்பா லும்புக ழும் - பொது - இன்ப நடம்புரி யும்
அப்பா தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

3

4266

மெய்யா மெய்யரு ளே - என்று - மேவிய மெய்ப்பொரு ளே
கையா ருங்கனி யே - நுதற் - கண்கொண்ட செங்கரும் பே
செய்யாய் வெண்ணிறத் தாய் - திருச் - சிற்றம்ப லநடஞ் செய்
ஐயா தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

4

4267

பொறிவே றின்றி நினை - நிதம் - போற்றும் புனிதரு ளே
குறிவே றின்றி நின்ற - பெருஞ் - சோதிக் கொழுஞ்சுட ரே
செறிவே தங்களெ லாம் - உரை - செய்ய நிறைந்திடும் பேர்
அறிவே தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

5

4268

முத்தா முத்தரு ளே - ஒளிர் - கின்ற முழுமுத லே
சித்தா சித்திஎ லாந் - தர - வல்ல செழுஞ்சுட ரே
பித்தா பித்தனெ னை - வலிந் - தாண்ட பெருந்தகை யே
அத்தா தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

6

4269

தன்னே ரில்லவ னே - எனைத் - தந்த தயாநிதி யே
மன்னே மன்றிடத் தே - நடஞ் - செய்யுமென் வாழ்முத லே
பொன்னே என்னுயி ரே - உயி - ருள்நிறை பூரண மே
அன்னே தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

7

4270

ஒளியே அவ்வொளி யின் - நடு - உள்ளொளிக் குள்ளொளி யே
வெளியே எவ்வெளி யும் - அடங் - கின்ற வெறுவெளி யே
தளியே அம்பலத் தே - நடஞ் - செய்யுந் தயாநிதி யே
அளியே தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

8

4271

மருளேய் நெஞ்சக னேன் - மன - வாட்டமெ லாந்தவிர்த் தே
தெருளே யோர்வடி வாய் - உறச் - செய்த செழுஞ்சுட ரே
பொருளே சிற்சபை வாழ் - வுறு - கின்றவென் புண்ணிய னே
அருளே தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

9

4272

முன்பே என்றனை யே - வலிந் - தாட்கொண்ட முன்னவ னே

இன்பே என்னுயி ரே - எனை -ஈன்ற இறையவ னே
பொன்பே ரம்பல வா - சிவ - போகஞ்செய் சிற்சபை வாழ்
அன்பே தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

10

4273

பவனே வெம்பவ நோய் - தனைத் - தீர்க்கும் பரஞ்சுட ரே
சிவனே செம்பொரு ளே - திருச் - சிற்றம் பலநடிப் பாய்
தவநே யம்பெறு வார் - தமைத் - தாங்கி யருள்செய வல்
லவனே தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

11

4274

தேனாய்த் தீம்பழ மாய்ச் - சுவை - சேர்கரும் பாயமு தம்
தானாய் அன்பரு ளே - இனிக் - கின்ற தனிப்பொரு ளே
வானாய்க் காலன லாய்ப் - புன - லாயதில் வாழ்புவி யாய்
ஆனாய் தந்தனை யே - அரு - ளாரமு தந்தனை யே.

12

4275

பொடியேற் கும்புய னே - அருட் - பொன்னம் பலத்தர சே
செடியேற் கன்றளித் தாய் - திருச் - சிற்றம் பலச்சுட ரே
கடியேற் கன்னையெ னுஞ் - சிவ - காமக் கொடையுடை யாய்
அடியேற் கின்றளித் தாய் - அரு - ளாரமு தந்தனை யே.

## 65. உபதேச வினா

### கலித்தாழிசை

4276.

வேதாந்த நிலையொடு சித்தாந்த நிலையும்

மேவும் பொதுநடம் நான்காணல் வேண்டும்

நாதாந்தத் திருவீதி நடப்பாயோ தோழி

நடவாமல் என்மொழி கடப்பாயோ தோழி.

1

4277

தொம்பத உருவொடு தத்பத வெளியில்

தோன்றசி பதநடம் நான்காணல் வேண்டும்

எம்பதமாகி இசைவாயோ தோழி

இசையாமல் வீணிலே அசைவாயோ தோழி.

2

4278

சின்மய வெளியிடைத் தன்மய மாகித்

திகழும் பொதுநடம் நான்காணல் வேண்டும்

என்மய மாகி இருப்பாயோ தோழி

இச்சை மயமாய் இருப்பாயோ(288) தோழி.

3

(288). மயமாய்ப் பொருப்பாயோ - ஆ. பா. பதிப்பு.

4279

நவநிலை மேற்பர நாதத் தலத்தே

ஞானத் திருநடம் நான்காணல் வேண்டும்

மவுனத் திருவீதி வருவாயோ தோழி

வாராமல் வீண்பழி தருவாயோ தோழி.

4

4280

ஆறாறுக் கப்புற மாகும் பொதுவில்

அதுவது வாநடம் நான்காணல் வேண்டும்

ஏறாமல் இழியாமல் இருப்பாயோ தோழி

ஏறி இழிந்திங் கிறப்பாயோ(289) தோழி.

5

(289). இழிந்திங் கிருப்பாயோ - முதற்பதிப்பு.

4281

வகார வெளியில் சிகார உருவாய்

மகாரத் திருநடம் நான்காணல் வேண்டும்

விகார உலகை வெறுப்பாயோ தோழி

வேறாகி என்சொல் மறுப்பாயோ தோழி.

6

4282

நாதாந்த நிலையொடு போதாந்த நிலைக்கு
நடுவாம் பொதுநடம் நான்காணல் வேண்டும்
சூதாந்தற் போதத்தைச் சுடுவாயோ தோழி
துட்டநெறியில் கெடுவாயோ தோழி.

7

4283

அறிவில் அறிவை அறியும் பொதுவில்
ஆனந்தத் திருநடம் நான்காணல் வேண்டும்
செறிவில் அறிவாகிச் செல்வாயோ தோழி
செல்லாமல் மெய்ந்நெறி வெல்வாயோ தோழி.

8

4284

என்னைத் தன்னோடே இருத்தும் பொதுவில்
இன்பத் திருநடம் நான்காணல் வேண்டும்
நின்னைவிட் டென்னோடே நிலைப்பாயோ தோழி
நிலையாமல் என்னையும் அலைப்பாயோ தோழி.

9

4285

துரியத்திற் கப்பாலுந் தோன்றும் பொதுவில்
ஜோதித் திருநடம் நான்காணல் வேண்டும்
கரியைக்கண் டாங்கது காண்பாயோ தோழி

காணாது போய்ப்பழி(290) பூண்பாயோ தோழி.

10

(290) பொய்ப்பணி - முதற்பதிப்பு. பொ. சு., பி. இரா.,

4286

தத்துவத் துட்புறந் தானாம் பொதுவில்

சத்தாந் திருநடம் நான்காணல் வேண்டும்

கொத்தறு வித்தைக் குறிப்பாயோ தோழி

குறியா துலகில் வெறிப்பாயோ தோழி

11

## 66. நெஞ்சொடு நேர்தல்

கலித்தாழிசை

4287.

அடங்குநாள் இல்லா தமர்ந்தானைக் காணற்கே(291)

தொடங்குநாள் நல்லதன் றோ - நெஞ்சே

தொடங்குநாள் நல்லதன் றோ.

1

(291) காணவே - பி. இரா., பதிப்பு

4288

வல்லவா றெல்லாமும் வல்லானைக் காணற்கே

நல்லநாள் எண்ணிய நாள் - நெஞ்சே

நல்லநாள் எண்ணிய நாள்.

2

4289

காலங் கடந்த கடவுளைக் காணற்குக்

காலங் கருதுவ தேன் - நெஞ்சே

காலங் கருதுவ தேன்.

3

4290

ஆலம் அமுதாக்கும் அண்ணலைக் காணற்குக்

காலங் கருதுவ தேன் - நெஞ்சே

காலங் கருதுவ தேன்.

4

4291

தடையாதும் இல்லாத் தலைவனைக் காணற்கே

தடையாதும் இல்லைகண் டாய் - நெஞ்சே

தடையாதும் இல்லைகண் டாய்.

5

4292

கையுள் அமுதத்தை வாயுள் அமுதாக்கப்

பையுள்(292) உனக்கென்னை யோ - நெஞ்சே

பையுள் உனக்கென்னை யோ.

6

(292). பையுள் - வருத்தம். முதற்பதிப்பு.

4293

என்னுயிர் நாதனை யான்கண் டணைதற்கே

உன்னுவ தென்னைகண் டாய் - நெஞ்சே

உன்னுவ தென்னைகண் டாய்.

7

4294

நான்பெற்ற செல்வத்தை நான்பற்றிக் கொள்ளற்கே

ஏன்பற்று வாயென்ப தார் - நெஞ்சே

ஏன்பற்று வாயென்ப தார்.

8

4295

தத்துவா தீதத் தலைவனைக் காணற்குத்

தத்துவ முன்னுவ தேன் - நெஞ்சே

தத்துவ முன்னுவ தேன்.

9

4296

ஒக்க அமுதத்தை உண்டோ ம் இனிச்சற்றும்

விக்கல் வராதுகண் டாய் - நெஞ்சே

விக்கல் வராதுகண் டாய்.

10

67. அஞ்சாதே நெஞ்சே

சிந்து

பல்லவி

4297.

அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே

அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே.

1

கண்ணிகள்

4298

வஞ்சமி லார்நாம்(293) வருந்திடில் அப்போதே

அஞ்சலென் பார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

1

(293). வஞ்சமிலா நாம் - முதற்பதிப்பு., பொ. சு; பி. இரா. பதிப்பு.

4299

துய்யர் அருட்பெருஞ் ஜோதியார் நம்முடை

அய்யர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

2

4300

மண்ணில் நமையாண்ட வள்ளலார் நம்முடை

அண்ணல் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சாதே

3

4301

இப்புவி யில்நம்மை ஏன்றுகொண் டாண்டநம்

அப்பர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சாதே

4

4302

சித்தர் எலாம்வல்ல தேவர் நமையாண்ட

அத்தர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சாதே

5

4303

சோதி அருட்பெருஞ் சோதியார் நம்முடை

ஆதி இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சாதே

6

4304

தாண்டவ னார்என்னைத் தான்தடுத் தாட்கொண்ட

ஆண்டவ னார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

7

4305

வன்பர் மனத்தை மதியா தவர்நம

தன்பர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

8

4306

தெருளுடை யார்எலாஞ் செய்யவல் லார்திரு

அருளுடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

9

4307

நம்மை ஆட்கொள்ள நடம்புரி வார்நம

தம்மை யினோடிதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

10

4308

தன்னைஒப் பார்சிற் சபைநடஞ் செய்கின்றார்

அன்னைஒப் பார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

11

4309

பாடுகின் றார்க்கருட் பண்பினர் ஞானக்கூத்

தாடுகின் றார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

12

4310

காதரிப் பார்கட்குக் காட்டிக் கொடார்நம்மை

ஆதரிப் பார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

13

4311

நீளவல் லார்க்குமேல் நீளவல்லார் நம்மை

ஆளவல் லார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

14

4312

இன்புடை யார்நம் இதயத் தமர்ந்தபே

ரன்புடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

15

4313

உபய பதத்தைநம் உச்சிமேற் சூட்டிய

அபயர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

16

4314

வேண்டுகொண் டார்என்னை மேல்நிலைக் கேற்றியே

ஆண்டுகொண் டார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

17

4315

எச்சம்பெ றேல்மக னேஎன்றென் னுள்உற்ற

அச்சம் தவிர்த்தவர் அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

18

4316

நமுதன் முதற்பல நன்மையு மாம்ஞான

அமுதர் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

19

4317

செடிகள் தவிர்த்தருட் செல்வ மளிக்கின்ற

அடிகள் இதோதிரு வம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

20

4318

விரசுல கெல்லாம் விரித்தைந் தொழில்தரும்

அரசுடை யார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

21

4319

செறிவுடை யார்உளத் தேநடஞ் செய்கின்ற

அறிவுரு வார்இதோ அம்பலத் திருக்கின்றார்

அஞ்சா தே

22

அஞ்சா தே நெஞ்சே அஞ்சா தே

அஞ்சா தே நெஞ்சே

அஞ்சா தே

68. ஆடிய பாதம்

சிந்து

பல்லவி

4320.

ஆடிய பாதமன் றாடிய பாதம்

ஆடிய பாதநின் றாடிய பாதம்.

1

கண்ணிகள்

4321

பாடிய வேதங்கள் தேடிய பாதம்

பத்திசெய் பத்தர்க்குத் தித்திக்கும் பாதம்

நாடிய மாதவர்(294) நேடிய பாதம்

நாதாந்த நாட்டுக்கு நாயக பாதம்

ஆடிய

1

(294) மாதவன் - ஆ. பா. பாதிப்பு.

4322

தீராத வல்வினை தீர்க்கின்ற பாதம்

தெய்வங்கள் எல்லாந் தெரிசிக்கும் பாதம்

வாரா வரவாகி வந்தபொற் பாதம்

வஞ்ச மனத்தில் வசியாத பாதம்.

ஆடிய

2

4323

ஆரா அமுதாகி அண்ணிக்கும் பாதம்

அன்பர் உளத்தே அமர்ந்தருள் பாதம்

நாரா யணன்விழி நண்ணிய பாதம்

நான்புனை பாடல் நயந்தபொற் பாதம்.

ஆடிய

3

4324

நல்லவர் எல்லாம் நயக்கின்ற பாதம்

நாத முடிவில் நடிக்கின்ற பாதம்

வல்லவர் சொல்லெல்லாம் வல்லபொற் பாதம்

மந்திர யந்திர தந்திர பாதம்.

ஆடிய

4

4325

எச்சம யத்தும் இலங்கிய பாதம்

எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்குமாம் பாதம்

அச்சம் தவிர்த்தென்னை ஆட்கொண்ட பாதம்

ஆனந்த நாட்டுக் கதிபதி பாதம்

ஆடிய

5

4326

தேவர்கள் எல்லாரும் சிந்திக்கும் பாதம்

தெள்ளமு தாய்உளந் தித்திக்கும் பாதம்

மூவரும் காணா முழுமுதற் பாதம்

முப்பாழுக் கப்பால் முளைத்தபொற் பாதம்.

ஆடிய 6

4327

துரிய வெளிக்கே உரியபொற் பாதம்

சுகமய மாகிய சுந்தரப் பாதம்

பெரிய பொருளென்று பேசும்பொற் பாதம்

பேறெல்லாந் தந்த பெரும்புகழ்ப் பாதம்.

ஆடிய

7

4328

சாகா வரந்தந்த தாரகப் பாதம்

சச்சிதா னந்த சதோதய பாதம்

தேகாதி எல்லாம் சிருட்டிக்கும் பாதம்

திதிமுதல் ஐந்தொழில் செய்கின்ற பாதம்.

ஆடிய

8

4329

ஓங்கார பீடத் தொளிர்கின்ற பாதம்

ஒன்றாய் இரண்டாகி ஓங்கிய பாதம்
தூங்காத தூக்கத்தில் தூக்கிய பாதம்
துரியத்தில் ஊன்றித் துலங்கிய பாதம்.

ஆடிய

9

4330

ஐவண்ண முங்கொண்ட அற்புதப் பாதம்
அபயர்(295) எல்லார்க்கும் அமுதான பாதம்
கைவண்ண நெல்லிக் கனியாகும் பாதம்
கண்ணும் கருத்தும் கலந்தபொற் பாதம்.

ஆடிய

10

(295) ஐயர் - ச. மு. க. பதிப்பு.

4331

ஆருயிர்க் காதாரம் ஆகிய பாதம்
அண்ட பிண்டங்கள் அளிக்கின்ற பாதம்
சாருயிர்க் கின்பம் தருகின்ற பாதம்
சத்திய ஞான தயாநிதி பாதம்.

ஆடிய

11

4332

தாங்கி எனைப்பெற்ற தாயாகும் பாதம்

தந்தையு மாகித் தயவுசெய் பாதம்

ஓங்கிஎன் னுள்ளே உறைகின்ற பாதம்

உண்மை விளங்க உரைத்தபொற் பாதம்.

ஆடிய

12

4333

எண்ணிய வாறே எனக்கருள் பாதம்

இறவா நிலையில் இருத்திய பாதம்

புண்ணியர் கையுள் பொருளாகும் பாதம்

பொய்யர் உளத்தில் பொருந்தாத பாதம்.

ஆடிய

13

4334

ஆறந்தத் துள்ளும் அமர்ந்தபொற் பாதம்

ஆதி அனாதியும் ஆகிய பாதம்

மாறந்தம் இல்லாஎன் வாழ்முதற் பாதம்

மண்முதல் ஐந்தாய் வழங்கிய பாதம்.

ஆடிய

14

4335

அருட்பெருஞ் ஜோதிய தாகிய பாதம்

அம்மையும் அப்பனும் ஆகிய பாதம்

பொருட்பெரும் போகம் புணர்த்திய பாதம்

பொன்வண்ண மாகிய புண்ணிய பாதம்.

ஆடிய

15

4336

நாரண னாதியர் நாடரும் பாதம்

நான்தவத் தாற்பெற்ற நற்றுணைப் பாதம்

ஆரணம் ஆகமம் போற்றிய பாதம்

ஆசைவிட் டார்க்கே அணிமையாம் பாதம்.

16

ஆடிய பாதமன் றாடிய பாதம்

ஆடிய பாதநின் றாடிய பாதம்.

69. அபயம் அபயம்

சிந்து

பல்லவி

4337.

அபயம் அபயம் அபயம்.

1

கண்ணிகள்

4338

உபயம தாய்என் உறவாய்ச் சிதம்பரச்

சபையில் நடஞ்செயும் சாமி பதத்திற்கே(296)

அபயம்

1

(296) பாதத்திற்கே - பி. இரா., ஆ. பா.

4339

எம்பலத் தால்எம்மை ஏன்றுகொ ளத்தில்லை

அம்பலத் தாடும்எம் ஐயர் பதத்திற்கே

அபயம்

2

4340

தவசிதம் பரமாகித் தன்மய மாய்ச்செயும்

சிவசிதம் பரமகா தேவர் பதத்திற்கே

அபயம்

3

4341

ஒன்றும் பதத்திற் குயர்பொரு ளாகியே

என்றும்என் உள்ளத் தினிக்கும் பதத்திற்கே

அபயம்

4

4342

வானந்த மாந்தில்லை மன்றிடை என்றுநின்

றானந்தத் தாண்டவ மாடும் பதத்திற்கே

அபயம்

5

4343

நாரா யணனொடு நான்முக னாதியர்

பாரா யணம்செயும் பதும பதத்திற்கே

அபயம்

6

4344

அன்பர் செயும்பிழை ஆயிர மும்பொறுத்

தின்ப மளிக்குநம் ஈசர் பதத்திற்கே

அபயம்

7

4345

குற்றம் செயினும் குணமாகக் கொண்டுநம்

அற்றம் தவிர்க்குநம் அப்பர் பதத்திற்கே

அபயம்

8

4346

செம்பொருள் ஆகிச் சிதம்பரத் தேஎன்றும்

நம்பொருள் ஆன நடேசர் பதத்திற்கே

அபயம்

9

4347

வெச்சென்ற மாயை வினையாதி யால்வந்த

அச்சம் தவிர்க்குநம் ஐயர் பதத்திற்கே

அபயம்

10

4348

எண்ணிய எண்ணங்கள் எல்லா முடிக்குநம்

புண்ணிய னார்தெய்வப் பொன்னடிப் போதுக்கே

அபயம்

11

4349

மன்னம் பரத்தே வழிவில் வழிவாகிப்

பொன்னம் பலத்தாடும் பொன்னடிப் போதுக்கே

அபயம்

12

4350

நாத முடியில்/(297) நடம்புரிந் தன்பர்க்குப்

போதம் அளிக்கின்ற பொன்னடிப் போதுக்கே

அபயம் 13

13

(297) முடிவில் - முதற்பதிப்பு., பொ. சு., ச. மு. க.

4351

உச்சி தாழ்கின்ற உறவோர் உறவான

சச்சி தானந்தத் தனிநடப் போதுக்கே

அபயம்

14

4352

சித்தமும் உள்ளமும் தித்தித் தினிக்கின்ற

புத்தமு தாகிய பொன்னடிப் போதுக்கே

அபயம்

15

அபயம் அபயம் அபயம்.

## 70. அம்பலவாணர் வருகை

சிந்து

பல்லவி

4353.

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம

வல்லி மணாளரே வாரீர்

மணிமன்ற வாணரே வாரீர்.

1

கண்ணிகள்

4354

அருட்பெருஞ் சோதிஎன் ஆண்டவ ரேதிரு

அம்பல வாணரே வாரீர்

அன்புடை யாளரே வாரீர்.

வாரீர்

1

4355

அச்சம் தவிர்த்தென்னை ஆட்கொண் டருளிய

அந்தண ரேஇங்கு வாரீர்

அம்பலத் தையரே வாரீர்.

வாரீர்

2

4356

அன்புரு வானவர் இன்புற உள்ளே

அறிவுரு வாயினீர் வாரீர்

அருட்பெருஞ் ஜோதியீர் வாரீர்.

வாரீர்

3

4357

அண்டங்கள் எல்லாம் அணுவில் அடக்கும்

அரும்பெருஞ் சித்தரே வாரீர்

அற்புத ரேஇங்கு வாரீர்.

வாரீர்

4

4358

அம்மையு மாய்எனக் கப்பனு மாகிஎன்

அன்பனு மாயினீர் வாரீர்

அங்கண ரேஇங்கு வாரீர்.

வாரீர்

5

4359

அல்லல் அறுத்தென் அறிவை விளக்கிய

அம்பல வாணரே வாரீர்

செம்பொரு ளாயினீர் வாரீர்.

வாரீர்

6

4360

அப்பணி பொன்முடி அப்பனென் றேத்துமெய்

அன்பருக் கன்பரே வாரீர்

இன்பம் தரஇங்கு வாரீர்.

வாரீர்

7

4361

அச்சுதர் நான்முகர் உச்சியில் மெச்சும்

அடிக்கம லத்தீரே வாரீர்

நடிக்கவல் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

8

4362

அண்டர்க் கரும்பதந் தொண்டர்க் கெளிதில்

அளித்திட வல்லீரே வாரீர்

களித்தென்னை ஆண்டீரே வாரீர்.

வாரீர்

9

4363

அம்பர மானசி தம்பர நாடகம்

ஆடவல் லீர்இங்கு வாரீர்

பாடல்உ வந்தீரே(298) வாரீர்.

வாரீர்

10

4364

ஆதிஅ னாதிஎன் றாரணம் போற்றும்

அரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்

ஆனந்த நாடரே வாரீர்.

வாரீர்

11

4365

ஆகம வேதம் அனேக முகங்கொண்

டருச்சிக்கும் பாதரே வாரீர்

ஆருயிர் நாதரே வாரீர்.

வாரீர்

12

4366

ஆசறும் அந்தங்கள் ஆறும் புகன்றநல்

ஆரிய ரேஇங்கு வாரீர்

ஆனந்தக் கூத்தரே வாரீர்

. வாரீர்

13

4367

ஆல நிழற்கண் அமர்ந்தறஞ் சொன்னநல்

ஆரிய ரேஇங்கு வாரீர்

ஆனந்தக் கூத்தரே வாரீர்.

வாரீர்

14

4368

ஆரமு தாகிஎன் ஆவியைக் காக்கின்ற

ஆனந்த ரேஇங்கு வாரீர்

ஆடல்வல் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

15

4369

ஆதர வாய்என் அறிவைத் தெளிவித்

தமுதம் அளித்தீரே வாரீர்

ஆடிய பாதரே வாரீர்.

வாரீர்

16

4370

ஆதார மீதானத் தப்பாலும் காண்டற்

கரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்

கரும்பினில் இனிக்கின்றீர் வாரீர்.

வாரீர்

17

4371

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்

ஜோதிய ரேஇங்கு வாரீர்

வேதிய ரேஇங்கு வாரீர்.

வாரீர்

18

4372

ஆடல்கொண் டீர்திரு வம்பலத் தேஎன்றன்

பாடல்கொண் டீர்இங்கு வாரீர்

கூடவல் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

19

4373

ஆக்கம் கொடுத்தென்றன் தூக்கம் தடுத்தஎன்

ஆண்டவ ரேஇங்கு வாரீர்

தாண்டவ ரேஇங்கு வாரீர்.

வாரீர்

20

4374

ஆபத்தை நீக்கிஓர் தீபத்தை ஏற்றிஎன்

ஆணவம் போக்கினீர் வாரீர்

காணவந் தேன்இங்கு வாரீர்.

வாரீர்

21

4375

இதுதரு ணம்தரு ணம்தரு ணம்என்

இறையவ ரேஇங்கு வாரீர்

இடர்தவிர்த் தாட்கொண்டீர் வாரீர்.

வாரீர்

22

4376

இச்சையின் வண்ணம் எனக்கருள் செய்ய

இதுதரு ணம்இங்கு வாரீர்

இன்னமு தாயினீர் வாரீர்.

வாரீர்

23

4377

இன்பம் கொடுத்தேஎன் துன்பம் கெடுத்துள்

இருக்கின்ற நாதரே வாரீர்

இருக்கின் பொருளானீர் வாரீர்.

வாரீர்

24

4378

இரவும் பகலும் இதயத்தி லூறி

இனிக்கும் அமுதரே வாரீர்

இனித்தரி யேன்இங்கு வாரீர்.

வாரீர்

25

4379

இன்னும்தாழ்த் தங்கே இருப்ப தழகன்று

இதுதரு ணம்இங்கு வாரீர்

இருமையும் ஆயினீர் வாரீர்.

வாரீர்

26

4380

இடர்தவிர்த் தின்பம் எனக்களித் தாளற்

கிதுதரு ணம்இங்கு வாரீர்

இனியவ ரேஇங்கு வாரீர். வாரீர்

27

4381

இறையும் பொறுப்பரி தென்னுயிர் நாதரே

இத்தரு ணம்இங்கு வாரீர்

இதநடஞ் செய்கின்றீர் வாரீர்.

வாரீர்

28

4382

இம்மையி லேஎனக் கம்மையின் இன்பம்

இதுஎன் றளித்தீரே வாரீர்

இதயத் திருந்தீரே வாரீர்.

வாரீர்

29

4383

இங்கங்கென் னாமலே எள்ளுக்குள் எண்ணெய்போல்

எங்கும் நிறைந்தீரே வாரீர்

இந்தெழில் வண்ணரே வாரீர்.

வாரீர்

30

4384

இணைஒன்றும் இல்லா இணையடி என்தலை

ஏறவைத் தீர்இங்கு வாரீர்

இறுதியி லீர்இங்கு வாரீர்.

வாரீர்

31

4385

ஈன்றாளும் எந்தையும் என்குரு வும்எனக்

கின்பமும் ஆயினீர் வாரீர்

அன்பருக் கன்பரே வாரீர்.

வாரீர்

32

4386

ஈனம் அறுத்துமெய்ஞ் ஞான விளக்கென்

இதயத்தில் ஏற்றினீர் வாரீர்

உதயச் சுடரினீர் வாரீர்.

வாரீர்

33

4387

ஈடறி யாதமெய் வீடுதந் தன்பரை

இன்புறச் செய்கின்றீர் வாரீர்

வன்பர்க் கரியீரே வாரீர்.

வாரீர்

34

4388

ஈதியல் என்றுநின் றோதிய வேதத்திற்

கெட்டா திருந்தீரே வாரீர்

நட்டார்க் கெளியீரே வாரீர்.

வாரீர்

35

4389

ஈசர் எனும்பல தேசர்கள் போற்றும்ந

டேசரே நீர்இங்கு வாரீர்

நேசரே நீர்இங்கு வாரீர்.

வாரீர்

36

4390

ஈசர் பலிக்குழல்(299) நேசர்என் றன்பர்கள்

ஏசநின் றீர்இங்கு வாரீர்

நாசமில் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

37

(299) ஈசர் எளியற்கு - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா,

4391

ஈறறி யாமறை யோன்என் றறிஞர்

இயம்பநின் றீர்இங்கு வாரீர்

வயந்தரு வீர்இங்கு வாரீர்.

வாரீர்

38

4392

ஈதல்கண் டேமிகக் காதல்கொண் டேன்எனக்

கீதல்செய் வீர்இங்கு வாரீர்

ஓதரி யீர்இங்கு வாரீர்.

வாரீர்

39

4393

ஈடணை அற்றநெஞ் சூடணை உற்றுமற்

றீடணை யீர்இங்கு வாரீர்

ஆடவல் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

40

4394

ஈண்டறி வோங்கிடத் தூண்டறி வாகிஉள்

ஈண்டுகின் றீர்இங்கு வாரீர்

ஆண்டவ ரேஇங்கு வாரீர்.

வாரீர்

41

4395

உள்ளதே உள்ளது விள்ளது வென்றெனக்

குள்ள துரைசெய்தீர் வாரீர்
வள்ளல் விரைந்திங்கு வாரீர்.

வாரீர்

43

4396

உருவாய் அருவாய் உருவரு வாய்அவை
ஒன்றுமல் லீர்இங்கு வாரீர்
என்றும்நல் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

43

4397

உறவும் பகையும் உடைய நடையில்
உறவும்எண் ணேன்இங்கு வாரீர்
பிறவுநண் ணேன்இங்கு வாரீர்.

வாரீர்

44

4398

உள்ளக் கருத்தைநான் வள்ளற் குரைப்பதென்
உள்ளத் திருந்தீரே வாரீர்
விள்ளற் கரியீரே வாரீர்.

வாரீர்

45

4399

உய்யவல் லார்க்கருள் செய்யவல் லீர்நானும்

உய்யவல் லேன்இங்கு வாரீர்

செய்யவல் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

46

4400

உடையவ ரார்இக் கடையவ னேனுக்

குடையவ ரேஇங்கு வாரீர்

சடையவ ரே(300) இங்கு வாரீர்.

வாரீர்

47

(300) தடை தவிர்ப்பீர் - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா.

4401

உறங்கி இறங்கும் உலகவர் போலநான்

உறங்கமாட் டேன்இங்கு வாரீர்

இறங்கமாட் டேன்இங்கு வாரீர்.

வாரீர்

48

4402

உண்டுடுத் தின்னும் உழலமாட் டேன்அமு

துண்டி விரும்பினேன் வாரீர்

உண்டி தரஇங்கு வாரீர்.

வாரீர்

49

4403

உன்னுதோ றுன்னுதோ றுள்ளே இனிக்கின்ற

உத்தம ரேஇங்கு வாரீர்

உற்ற துணையானீர் வாரீர்.

வாரீர்

50

4404

உம்மாணை உம்மாணை உம்மைஅல் லால்எனக்

குற்றவர் மற்றிலை வாரீர்

உற்றறிந் தீர்இங்கு வாரீர்.

வாரீர்

51

4405

ஊன நடந்தவிர்த் தான நடங்காட்டு

மோன நடேசரே வாரீர்

ஞான நடேசரே வாரீர்.

வாரீர்

52

4406

ஊருமில் லீர்ஒரு பேருமில் லீர்அறி

வோருமில் லீர்இங்கு வாரீர்

யாருமில் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

53

4407

ஊறு சிவானந்தப் பேறு தருகின்ற

வீறுடை யீர்இங்கு வாரீர்

நீறுடை யீர்இங்கு வாரீர்.

வாரீர்

54

4408

ஊன்றுநும் சேவடி சான்று தரிக்கிலேன்

ஏன்றுகொள் வீர்இங்கு வாரீர்

ஆன்றவ ரேஇங்கு வாரீர்.

வாரீர்

55

4409

ஊற்றை உடம்பிது மாற்றுயர் பொன்னென

ஏற்றம் அருள்செய்வீர் வாரீர்

தேற்றம் அருள்செய்வீர் வாரீர்.

வாரீர்

56

4410

ஊடல்இல் லீர்எனைக் கூடல்வல் லீர்என்னுள்

பாடல்சொல் வீர்இங்கு வாரீர்

ஆடல்நல் லீர்இங்கு வாரீர்.

வாரீர்

57

4411

ஊக்கம் கொடுத்தென்றன் ஏக்கம் கெடுத்தருள்

ஆக்க மடுத்தீரே வாரீர்

தூக்கம் தவிர்த்தீரே வாரீர்.

வாரீர்

58

4412

ஊமை எழுத்தினுள் ஆமை எழுத்துண்டென்

றோமை அறிவித்தீர் வாரீர்

சேமஞ் செறிவித்தீர் வாரீர்.

வாரீர்

59

4413

ஊக மிலேன்பெற்ற தேகம் அழியாத

யோகம் கொடுத்தீரே வாரீர்

போகம் கொடுத்தீரே வாரீர்.

வாரீர்

60

4414

ஊதியம் தந்தநல் வேதிய ரேஉண்மை

ஓதிய நாதரே வாரீர்

ஆதிஅ னாதியீர் வாரீர்.

வாரீர்

61

4415

என்குறை தீர்த்தென்னுள் நன்குறை வீர்இனி

என்குறை என்முன்னீர் வாரீர்

தன்குறை இல்லீரே வாரீர்.

வாரீர்

62

4416

என்னுயிர் ஆகிஎன் றன்உயிர்க் குள்ளேஓர்

இன்னுயிர் ஆயினீர் வாரீர்

என்னுயிர் நாதரே வாரீர்.

வாரீர்

63

4417

என்கண் அருள்செய்தென் புன்கண் விலக்கிய

என்கண் ணனையீரே வாரீர்

மின்கண் ணுதலீரே வாரீர்.

வாரீர்

64

4418

எல்லா உயிர்களும் நல்லார் எனத்தொழும்

எல்லாம்வல் லீர்இங்கு வாரீர்

சொல்லா நிலையினீர் வாரீர்.

வாரீர்

65

4419

எட்டும் இரண்டுமென் றிட்டு வழங்குதல்

எட்டும் படிசெய்தீர் வாரீர்

எட்டுரு வாயினீர் வாரீர்381.

வாரீர்

66

(381) எட்டும் இரண்டும் - பத்து (ய). ய - ஆன்மா.

எட்டுரு - அஷ்டமூர்த்தம் எட்டு உரு-(எட்டு தமிழில் எழுத `அஉ ஆகும்)

அகர வடிவம். எட்டுரு - அரு. ச. மு. க

4420

என்று கண்டாய்இது(382) நன்றுகொண் டாளுக

என்றுதந் தீர்இங்கு வாரீர்

அன்றுவந் தீர்இன்று வாரீர்.

வாரீர்

67

(382) கண்டாமிது - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா.

4421

எச்சம யங்களும் பொய்ச்சம யமென்றீர்

இச்சம யம்இங்கு வாரீர்

மெய்ச்சம யந்தந்தீர் வாரீர்.

வாரீர்

68

4422

என்பாற் களிப்பொடும் அன்பால்ஒன் றீந்திதை

இன்பால் பெறுகென்றீர் வாரீர்

தென்பால் முகங்கொண்டீர் வாரீர்.

வாரீர்

69

4423

எச்ச உரையன்றென் இச்சைஎல் லாம்உம

திச்சைகண் டீர்இங்கு வாரீர்

அச்சம்த விர்த்தீரே வாரீர்.

வாரீர்

70

4424

எண்ணமெல் லாம்உம தெண்ணமல் லால்வேறோர்

எண்ணம் எனக்கில்லை வாரீர்

வண்ணம் அளிக்கின்றீர் வாரீர்.

வாரீர்

71

4425

ஏராய நான்முகர் நாராய ணர்மற்றும்

பாராய ணம்செய்வீர் வாரீர்

ஊராயம் ஆயினீர் வாரீர்.

வாரீர்

72

4426

ஏம மிருந்திரு வாம சுகந்தரும்

ஏம சபேசரே வாரீர்

சோம சிகாமணி வாரீர்.

வாரீர்

73

4427

ஏத மிலாப்பர நாத முடிப்பொருள்

ஏதது சொல்லுவீர் வாரீர்

ஈதல் உடையீரே வாரீர்.

வாரீர்

74

4428

ஏக பராபர யோக வெளிக்கப்பால்

ஏக வெளிநின்றீர் வாரீர்

ஏகர் அனேகரே வாரீர்.

வாரீர்

75

4429

ஏறி இறங்கி இருந்தேன் இறங்காமல்

ஏறவைத் தீர்இங்கு வாரீர்

தேறவைத் தீர்இங்கு வாரீர்.

வாரீர்

76

4430

ஏகாந்த நன்னிலை யோகாந்தத் துள்ளதென்

றேகாந்தம் சொல்லினீர் வாரீர்

தேகாந்தம் இல்லீரே வாரீர்.

வாரீர்

77

4431

ஏகாத கல்விதான் சாகாத கல்வியென்

றேகாத லாற்சொன்னீர் வாரீர்

வேகாத காலினீர் வாரீர்.

வாரீர்

78

4432

ஏடா யிரமென்னை கோடா மொழிஒன்றே

ஏடாஎன் றீர்இங்கு வாரீர்

ஈடாவார் இல்லீரே வாரீர்.

வாரீர்

79

4433

ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்

ஈசான மேலென்றீர் வாரீர்

ஆசாதி இல்லீரே வாரீர்.

வாரீர்

80

4434

ஏனென்பார் வேறிலை நான்அன்பாற் கூவுகின்

றேன்என்பால் ஏனென்பீர் வாரீர்

ஆனின்பால் ஆடுவீர் வாரீர்.

வாரீர்

81

4435

ஐந்து மலங்களும் வெந்து விழஎழுத்

தைந்துஞ் செயும்என்றீர் வாரீர்

இந்து சிகாமணி வாரீர்.

வாரீர்

82

4436

ஐயமுற் றேனைஇவ் வையங் கரியாக

ஐயம் தவிர்த்தீரே வாரீர்

மெய்யம் பலத்தீரே வாரீர்.

வாரீர்

83

4437

ஐயர் நடம்புரி மெய்யர்என் றேஉணர்ந்

தையர் தொழநின்றீர் வாரீர்

துய்யர் உளநின்றீர் வாரீர்.

வாரீர்

84

4438

ஐவணங் காட்டும் மெய்வணம் வேட்டுநின்

றைவணர் ஏத்துவீர் வாரீர்

பொய்வணம் போக்குவீர் வாரீர்.

வாரீர்

85

4439

ஒன்றே சிவம்அதை ஒன்றுசன் மார்க்கமும்

ஒன்றேஎன் றீர்இங்கு வாரீர்

நன்றேநின் றீர்இங்கு வாரீர்.

வாரீர்

86

4440

ஒப்பாரில் லீர்உமக் கிப்பாரில் பிள்ளைநான்

ஒப்பாரி அல்லகாண் வாரீர்

முப்பாழ் கடந்தீரே வாரீர்

. வாரீர்

87

4441

ஒத்த இடந்தன்னில் நித்திரை செய்என்றீர்

ஒத்த இடங்காட்ட வாரீர்(303)

சித்த சிகாமணி வாரீர்.

வாரீர்

88

(303) 'ஒத்த இடத்தில் நித்திரை செய்' என்பது ஔவையார் அருளிய கொன்றை

வேந்தன்.'ஒத்த இடம் - மேடுபள்ள மில்லாத இடம், மனம் ஒத்த இடம், நினைப்பு

மறப்பு அற்ற இடம், தனித்த இடம், தத்துவாதீதநிலை,' என்பது ச. மு. க. குறிப்பு.

இருவினையும் ஒத்த இடம், இருவினைஒப்புநிலை என்பதே பொருத்தமாம்.

4442

ஒட்டுமற் றில்லைநான் விட்டுப் பிரிகலேன்

ஒட்டுவைத் தேனும்மேல் வாரீர்

எட்டுக் குணத்தீரே வாரீர்.

வாரீர்

89

4443

ஒருமை நிலையில் இருமையும் தந்த

ஒருமையி னீர்இங்கு வாரீர்

பெருமையி னீர்இங்கு வாரீர்.

வாரீர்

90

4444

ஒண்மை விரும்பினேன் அண்மையில் ஈகுவீர்

உண்மைசொன் னேன்இங்கு வாரீர்

பெண்மை(304) இடங்கொண்டீர் வாரீர்.

வாரீர்

91

(304) வண்மை - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா.,

4445

ஓங்கார நாடகம் பாங்காகச்(305) செய்கின்ற

ஓங்கார நாடரே வாரீர்

ஆங்கார நீக்கினீர் வாரீர்.

வாரீர்

92

(395) பாங்காரச் - பி. இரா.

4446

ஓங்கும்பிண் டாண்டங்கள் தாங்கும் பெருவெளி

ஓங்கு நடேசரே வாரீர்

பாங்குசெய் வீர்இங்கு வாரீர்.

வாரீர்

93

4447

ஓசையின் உள்ளேஓர் ஆசை(396) உதிக்கமெல்(397)

ஓசைசெய் வித்தீரே வாரீர்

பாசம் அறுத்தீரே வாரீர்.

வாரீர்

94

(396) ஓசை - பிரதிபேதம். ஆ. பா.

397. மேல் - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா.

4448

ஓரா துலகினைப் பாரா திருநினக்

கோரா வகைஎன்றீர் வாரீர்

பேரா நிலைதந்தீர் வாரீர்.

வாரீர்

95

4449

ஓடாது மாயையை நாடாது நன்னெறி

ஊடா திருஎன்றீர் வாரீர்

வாடா திருஎன்றீர் வாரீர்.

வாரீர்

96

4450

ஓலக் கபாடத்தைச் சாலத் திறந்தருள்

ஓலக்கங் காட்டினீர் வாரீர்

காலக் கணக்கில்லீர் வாரீர்.

வாரீர்

97

4451

ஓடத்தின் நின்றொரு மாடத்தில் ஏற்றிமெய்

யூடத்தைக் காட்டினீர் வாரீர்

வேடத்தைப் பூட்டினீர் வாரீர்.

வாரீர்

98

4452

ஓமத்தி லேநடுச் சாமத்தி லேஎனை

ஓமத்தன்(308) ஆக்கினீர் வாரீர்

சாமத்த(309) நீக்கினீர் வாரீர்.

வாரீர்

99

(308) ஓமத்தன் - உருவருவ வடிவம்., பிரணவதேகம். ச. மு. க.

சாமத்தை - பொ. சு., ச. மு. க; சாமத்தை - சாகுந்தன்மையை., ச. மு. க.

4453

ஓமென்ப தற்குமுன் ஆமென் றுரைத்துடன்

ஊமென்று(310) காட்டினீர் வாரீர்

நாமென்று நாட்டினீர் வாரீர்.

வாரீர்

100

(310) ஓம் - ஆம் - ஊம் - ஓம் ஹாம் ஹூம். பீஜாக்கரங்கள்.

4454

ஔவிய மார்க்கத்தின் வெவ்வியல் நீக்கியே

செவ்வியன் ஆக்கினீர் வாரீர்

ஒவ்விஒன் றாக்கினீர் வாரீர்.

வாரீர்

101

4455

கண்ணனை யீர்உம்மைக் காணஎன் ஆசை

கடல்பொங்கு கின்றது வாரீர்

உடல்தங்கு கின்றது வாரீர்.

வாரீர்

102

4456

கண்டணைந் தால்அன்றிக் காதல் அடங்காதென்

கண்மணி யீர்இங்கு வாரீர்

உண்மணி யீர்இங்கு வாரீர்.

வாரீர்

103

4457

கட்டிக்கொண் டும்மைக் கலந்து கொளல்வேண்டும்

காரண ரேஇங்கு வாரீர்

பூரண ரேஇங்கு வாரீர்.

104

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம

வல்லி மணாளரே வாரீர்

மணிமன்ற வாணரே வாரீர்.

## 71. அம்பலவாணர் ஆடவருகை

சிந்து

பல்லவி

4458.

ஆடவா ரீர் என்னோ டாடவா ரீர்

அம்பலத்தில் ஆடுகின்றீர் ஆடவா ரீர்.

1

கண்ணிகள்

4459

தன்மைபிறர்க் கறிவரியீர் ஆடவா ரீர்

தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்

வன்மைமனத் தவர்க்கரியீர் ஆடவா ரீர்

வஞ்சமிலா நெஞ்சகத்தீர் ஆடவா ரீர்

தொன்மைமறை முடியமர்ந்தீர் ஆடவா ரீர்

துரியபதங் கடந்தவரே ஆடவா ரீர்

இன்மைதவிர்த் தெனைமணந்தீர் ஆடவா ரீர்.

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்

ஆடவா ரீர்

1

4460

திருவாளர் போற்ற என்னோ டாடவா ரீர்

திருவனையார் வாழ்த்தஇங்கே ஆடவா ரீர்

பெருவாய்மைப் பெருந்தகையீர் ஆடவா ரீர்

பேராசை பொங்குகின்றேன் ஆடவா ரீர்

உருவாகி ஓங்குகின்றீர் ஆடவா ரீர்

உத்தமரே இதுதருணம் ஆடவா ரீர்

இருவாணர் ஏத்தநின்றீர் ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

2

4461

வேற்றுமுகம் பாரேன்என்னோ டாடவா ரீர்

வெட்கமெல்லாம் விட்டுவிட்டேன் ஆடவா ரீர்

மாற்றுதற்கெண் ணாதிர்என்னோ டாடவா ரீர்

மாற்றில்உயிர் மாய்ப்பேன்கண்டீர் ஆடவா ரீர்

கூற்றுதைத்த சேவடியீர் ஆடவா ரீர்

கொண்டுகுலங் குறியாதீர் ஆடவா ரீர்

ஏற்றதனித் தருணமீதே ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

3

4462

இல்லாமை நீக்கிநின்றீர் ஆடவா ரீர்
என்னைமண மாலையிட்டீர் ஆடவா ரீர்
கொல்லாமை நெறிஎன்றீர் ஆடவா ரீர்
குற்றமெலாங் குணங்கொண்டீர் ஆடவா ரீர்
நல்லார்சொல் நல்லவரே ஆடவா ரீர்
நற்றாயில் இனியவரே ஆடவா ரீர்
எல்லாம்செய் வல்லவரே ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

4

4463

ஆசைகொண்டேன் ஆடஎன்னோ டாடவா ரீர்
ஆசைவெட்கம் அறியாதால் ஆடவா ரீர்
ஓசைகொண்ட தெங்குமிங்கே ஆடவா ரீர்
உம்ஆணை உம்மைவிடேன் ஆடவா ரீர்
காசுபணத் தாசையிலேன் ஆடவா ரீர்
கைபிடித்தாற் போதும்என்னோ டாடவா ரீர்
ஏசறல்நீத் தெனைஆண்டீர் ஆடவா ரீர்
என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

5

௪௪௬௪

சன்மார்க்க நெறிவைத்தீர் ஆடவா ரீர்

சாகாத வரந்தந்தீர் ஆடவா ரீர்

கன்மார்க்க மனங்கரைத்தீர் ஆடவா ரீர்

கண்ணிசைந்த கணவரேநீர் ஆடவா ரீர்

சொன்மார்க்கப் பொருளானீர் ஆடவா ரீர்

சுத்தஅருட் சோதியரே ஆடவா ரீர்

என்மார்க்கம் உளத்துகந்தீர் ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

௬

௪௪௬௫

அண்டமெலாம் கண்டவரே ஆடவா ரீர்

அகண்டபரி பூரணரே ஆடவா ரீர்

பண்டமெலாம் படைத்தவரே ஆடவா ரீர்

பற்றொடுவீ டில்லவரே ஆடவா ரீர்

கொண்டெனைவந் தாண்டவரே ஆடவா ரீர்

கூத்தாட வல்லவரே ஆடவா ரீர்

எண்தகுபொற் சபையுடையீர் ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

7

4466

பேதநினை யாதுவிரைந் தாடவா ரீர்

பின்பாட்டுக் காலையிதே ஆடவா ரீர்

ஓதஉல வாதவரே ஆடவா ரீர்

உள்ளாசை பொங்குகின்ற தாடவா ரீர்

சாதல்அறுத் தெனைஆண்டீர் ஆடவா ரீர்

தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்

ஏதமறுத் தவர்க்கினியீர் ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

8

4467

கள்ளமொன்றும் அறியேன்நான் ஆடவா ரீர்

கைகலந்து கொண்டீர்என்னோ டாடவா ரீர்

உள்ளபடி உரைக்கின்றேன் ஆடவா ரீர்

உம்மாசை பொங்குகின்ற தாடவா ரீர்

தள்ளரியேன் என்னோடிங்கே ஆடவா ரீர்

தாழ்க்கில்இறை யும்தரியேன் ஆடவா ரீர்

எள்ளல்அறுத் தாண்டுகொண்டீர் ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

9

4468

நச்சுகின்றேன் நிச்சலிங்கே ஆடவா ரீர்

நாணமச்சம் விட்டேனென்னோ டாடவா ரீர்

விச்சையெலாம் தந்துகளித் தாடவா ரீர்

வியந்துரைத்த தருணமிதே ஆடவா ரீர்

எச்சுகமும் ஆகிநின்றீர் ஆடவா ரீர்

எல்லாம்செய் வல்லவரே ஆடவா ரீர்.

இச்சைமய மாய்இருந்தேன் ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

10

4469

என்உயிருக் குயிரானீர் ஆடவா ரீர்

என்அறிவுக் கறிவானீர் ஆடவா ரீர்

என்னுடைஎன் பிற்கலந்தீர் ஆடவா ரீர்

என்னுடைஉள் ளத்திருந்தீர் ஆடவா ரீர்

என்உரிமைத் தாயனையீர் ஆடவா ரீர்

எனதுதனித் தந்தையரே ஆடவா ரீர்

என்ஒருமைச் சற்குருவே ஆடவா ரீர்

என்னுடைய நாயகரே ஆடவா ரீர்.

ஆடவா ரீர்

11

ஆடவா ரீர் என்னோ டாடவா ரீர்

அம்பலத்தில் ஆடுகின்றீர் ஆடவா ரீர்.

72. அம்பலவாணர் அணையவருகை

சிந்து

பல்லவி

4470.

அணையவா ரீர் என்னை அணையவா ரீர்

அணிவளர்(311)சிற் றம்பலத்தீர் அணையவா ரீர்.

1

(311) அணிகிளர் - முதற்பதிப்பு, பொ. சு., பி. இரா., ச. மு. க.

கண்ணிகள்

4471

இயற்கைஉண்மை வடிவினரே அணையவா ரீர்

எல்லாம்செய் வல்லவரே அணையவா ரீர்

இயற்கைவிளக் கத்தவரே அணையவா ரீர்

எல்லார்க்கும் நல்லவரே அணையவா ரீர்

இயற்கைஇன்ப மானவரே அணையவா ரீர்

இறைமையெலாம் உடையவரே அணையவா ரீர்

இயற்கைநிறை வானவரே அணையவா ரீர்

என்னுடைய நாயகரே அணையவா ரீர்.

அணையவா ரீர்

1

4472

உலகமெல்லாம் உடையவரே அணையவா ரீர்

உண்மைஉரைக் கின்றவரே அணையவா ரீர்

கலகமறுத் தாண்டவரே அணையவா ரீர்

கண்ணனைய காதலரே அணையவா ரீர்

அலகறியாப் பெருமையரே அணையவா ரீர்

அற்புதப்பொற் சோதியரே அணையவா ரீர்

இலகுசபா பதியவரே அணையவா ரீர்

என்னுடைய நாயகரே அணையவா ரீர்.

அணையவா ரீர்

2

4473

பொதுவில்நடிக் கின்றவரே அணையவா ரீர்

பொற்புடைய புண்ணியரே அணையவா ரீர்

மதுவில்இனிக் கின்றவரே அணையவா ரீர்

மன்னியஎன் மன்னவரே அணையவா ரீர்

விதுவின்அமு தானவரே அணையவா ரீர்

மெய்யுரைத்த வித்தகரே அணையவா ரீர்

இதுதருணம் இறையவரே அணையவா ரீர்

என்னுடைய நாயகரே அணையவா ரீர்.

அணையவா ரீர்

3

4474

வினைமாலை நீத்தவரே அணையவா ரீர்

வேதமுடிப் பொருளவரே அணையவா ரீர்

அனைமாலைக் காத்தவரே அணையவா ரீர்

அருட்பெருஞ்சோ திப்பதியீர் அணையவா ரீர்

புனைமாலை வேய்ந்தவரே அணையவா ரீர்

பொதுவில்நிறை பூரணரே அணையவா ரீர்

எனைமாலை யிட்டவரே அணையவா ரீர்

என்னுடைய நாயகரே அணையவா ரீர்.

அணையவா ரீர்

4

4475

சிறுவயதில் எனைவிழைந்தீர் அணையவா ரீர்

சித்தசிகா மணியேநீர் அணையவா ரீர்

உறுவயதிங் கிதுதருணம் அணையவா ரீர்

உண்மைசொன்ன உத்தமரே அணையவா ரீர்

பொறுமைமிக உடையவரே அணையவாரீர்

பொய்யாத வாசகரே அணையவாரீர்

இறுதிதவிர்த் தாண்டவரே அணையவாரீர்

என்னுடைய நாயகரே அணையவாரீர்.

அணையவாரீர்

5

4476

சாதிமதந் தவிர்த்தவரே அணையவாரீர்

தனித்தலைமைப் பெரும்பதியீர் அணையவாரீர்

ஆதியந்தம் இல்லவரே அணையவாரீர்

ஆரணங்கள் போற்றநின்றீர் அணையவாரீர்

ஓதியுணர் வரியவரே அணையவாரீர்

உள்ளபடி உரைத்தவரே அணையவாரீர்

ஈதிசைந்த தருணமிங்கே அணையவாரீர்

என்னுடைய நாயகரே அணையவாரீர்.

அணையவாரீர்

6

4477

அன்பாட்டை விழைந்தவரே அணையவாரீர்

அருட்சோதி வடிவினரே அணையவாரீர்

துன்பாட்டை ஒழித்தவரே அணையவாரீர்

துரியநிறை பெரியவரே அணையவா ரீர்
பின்பாட்டுக் காலையிதே அணையவா ரீர்
பிச்சேற்று கின்றவரே அணையவா ரீர்
என்பாட்டை ஏற்றவரே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர்.

அணையவா ரீர்

7

4478

அரைக்கணமும் தரியேன்நான் அணையவா ரீர்
ஆணைஉம்மேல் ஆணைஎன்னை அணையவா ரீர்
புரைக்கணங்கண் டறியேன்நான் அணையவா ரீர்
பொன்மேனிப் புண்ணியரே அணையவா ரீர்
வரைக்கணஞ்செய் வித்தவரே அணையவா ரீர்
மன்றில்நடிக் கின்றவரே அணையவா ரீர்
இரைக்கணவு தருணமிதே அணையவா ரீர்
என்னுடைய நாயகரே அணையவா ரீர்.

அணையவா ரீர்

8

4479

கருணைநடஞ் செய்பவரே அணையவா ரீர்
கண்மணியில் கலந்தவரே அணையவா ரீர்

அருள்நிறைசிற் சபையவரே அணையவாரீர்

அன்பர்குறை தீர்த்தவரே அணையவாரீர்

தருணமிது விரைந்தென்னை அணையவாரீர்

சத்தியரே நித்தியரே அணையவாரீர்

இருள்நிறைந்தார்க் கறிவரியீர் அணையவாரீர்

என்னுடைய நாயகரே அணையவாரீர்.

அணையவாரீர்

9

4480

சேரஉம்மேல் ஆசைகொண்டேன் அணையவாரீர்

திருவுளமே அறிந்ததெல்லாம் அணையவாரீர்

ஆரெனக்கிங் கும்மையல்லால் அணையவாரீர்

அயலறியேன் ஆணைஉம்மேல் அணையவாரீர்

ஈரகத்தேன் அல்லஇங்கே அணையவாரீர்

என்னாசை பொங்குகின்ற தணையவாரீர்

ஏரகத்தே அமர்ந்தருள்வீர் அணையவாரீர்

என்னுடைய நாயகரே அணையவாரீர்.

அணையவாரீர்

10

4481

கலந்துகொள வேண்டுகின்றேன் அணையவாரீர்

காதல்பொங்கு கின்றதென்னை அணையவா ரீர்

புலந்தறியேன் விரைகின்றேன் அணையவா ரீர்

புணர்வதற்குத் தருணமிதே அணையவா ரீர்

அலந்தவிடத் தருள்கின்றீர் அணையவா ரீர்

அரைக்கணமும் இனித்தரியேன் அணையவா ரீர்

இலந்தைநறுங் கனியனையீர்அணையவா ரீர்

என்னுடைய நாயகரே அணையவா ரீர்.

அணையவா ரீர்

11

அணையவா ரீர்என்னை அணையவா ரீர்

அணிவளர்(312) சிற் றம்பலத்தீர் அணையவா ரீர்.

(312) அணிகிளர் - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா., ச. மு. க.

73. வருவார் அழைத்துவாடி

சிந்து

பல்லவி

4482.

வருவார ழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே

வந்தாற் பெறலாம்நல்ல வரமே.

1

பல்லவி எடுப்பு

4483

திருவார்பொன் னம்பலத்தே செழிக்குங்குஞ் சிதபாதர்

சிவசிதம் பரபோதர் தெய்வச் சபாநாதர்

வருவார்

1

கண்ணிகள்

4484

சிந்தை களிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு

தெளிந்தோர்எல் லாரும்தொண்டு செய்யப் பவுரிகொண்டு

இந்த வெளியில்நட மிடத்துணிந் தீரேஅங்கே

இதைவிடப் பெருவெளி இருக்குதென் றால்இங்கே

வருவார்

1

4485

இடுக்கி லாமல்இருக்க இடமுண்டு நடஞ்செய்ய

இங்கம் பலம்ஒன்றங்கே எட்டம் பலம்உண்டைய

ஒடுக்கில் இருப்பதென்ன உளவுகண்டு கொள்வீர்என்னால்

உண்மைஇது வஞ்சமல்ல உம்மேல்
ஆணை(313)என்றுசொன்னால்

வருவார்

2

(313) உன்மேலாணை - முதற்பதிப்பு., பொ. சு., ச. மு. க.

4486

மெல்லியல் சிவகாம வல்லி யுடன்களித்து

விளையா டவும்எங்கள் வினைஓ டவும்ஒளித்து

எல்லையில் இன்பந்தரவும் நல்லசம யந்தானிது

இங்குமங்கும் நடமாடி இருக்கலாம் என்றபோது

வருவார்

3

வருவார ழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே

வந்தாற் பெறலாம்நல்ல வரமே.

74. என்ன புண்ணியம் செய்தேனோ

சிந்து

பல்லவி

4487.

என்ன புண்ணியம் செய்தே னோ - அம் மாநான்

என்ன புண்ணியம் செய்தே னோ.

1

பல்லவி எடுப்பு

4488

மன்னர்நாதர் அம்பலவர் வந்தார்வந்தார் என்றுதிருச்

சின்னநாதம் என்னிரண்டு செவிகளினுள் சொல்கின்றதே.

என்ன

1

கண்ணிகள்

4489

பொருள்நான் முகனுமாலும் தெருள்நான்ம றையுநாளும்

போற்றும்சிற் றம்பலத்தே ஏற்றும ணிவிளக்காய்

அருள்நாட கம்புரியும் கருணாநி தியர்உன்னை

ஆளவந்தார் வந்தார்என்றெக் காளநாதம் சொல்கின்றதே.

என்ன

1

4490

பாடியநல் லோர்தமக்கே நாடியதெல் லாம்அளிப்பார்

பத்திவலை யுட்படுவார் சத்தியர்நித் தியர்மன்றில்

ஆடியபொற் பாதர்வேதம் தேடியசிற் போதர்உன்னை

அணையவந்தார்வந்தார்என்றேஇணையில்நாதம்சொல்கின்றதே.

என்ன

2

4491

எந்தரமுட் கொண்டஞான சுந்தரர்என் மணவாளர்

எல்லாம்செய் வல்லசித்தர் நல்லோர் உளத்தமர்ந்தார்

மந்திரமா மன்றில்இன்பம் தந்தநட ராஜர்உன்னை

மருவவந்தார் வந்தார்என்று தெருவில்நாதம் சொல்கின்றதே.

என்ன

3

4492

ஓதிஎந்த விதத்தாலும் வேதியனும் தேர்வரியார்

ஓங்கார பஞ்சகத்தே பாங்காக நடிக்கின்றார்

ஆதியந்தம் காண்பரிய ஜோதிசுயஞ் ஜோதிஉன்னோ

டாடவந்தார் வந்தார்என்றே நாடிநாதம் சொல்கின்றதே.

என்ன

4

4493

அற்புதப்பே ரழகாளர் சொற்பதம் கடந்துநின்றார்

அன்பரெலாம் தொழமன்றில் இன்பநடம் புரிகின்றார்

சிற்பரர்எல் லாமும்வல்ல தற்பரர் விரைந்திங்குன்னைச்

சேரவந்தார் வந்தார்என்றோங் காரநாதம் சொல்கின்றதே.

என்ன

5

4494

ஆரணர்நா ரணர்எல்லாம் பூரணர்என் றேத்துகின்ற

ஐயர்திரு வம்பலவர் மெய்யர்எல்லாம் வல்லசித்தர்

காரணமும் காரியமும் தாரணிநீ யாகஉன்னைக்

காணவந்தார் வந்தார்என்றே வேணுநாதம் சொல்கின்றதே.

என்ன

6

4495

பாகார்மொழி யாள்சிவ மாகாம வல்லிநாளும்

பார்த்தாட மணிமன்றில் கூத்தாடு கின்றசித்தர்

வாகாஉனக்கே என்றும் சாகா வரங்கொடுக்க

வலியவந்தார் வந்தார்என்றே வலியநாதம் சொல்கின்றதே.

என்ன

7

என்ன புண்ணியம் செய்தே னோ - அம் மாநான்

என்ன புண்ணியம் செய்தே னோ.

75. இவர்க்கும் எனக்கும்

சிந்து

பல்லவி

4496.

இவர்க்கும் எனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது

என்றும் தீரா வழக்குக் காண டி.

1

பல்லவி எடுப்பு

4497

எவர்க்கும் பெரியவர்பொன் னம்பலத் தேநடம்

இட்டார் எனக்குமாலை இட்டார் இதோவந்தார்.

இவர்க்கும்

1

கண்ணிகள்

4498

அன்றிதோ வருகின்றேன் என்று போனவர்அங்கே

யார்செய்த தடையாலோ இருந்தார்என் கையிற்சங்கை

இன்றுதம் கையிற்கொண்டே வந்துநிற் கின்றார்இங்கே

இந்தக் கதவைமூடு இவர்போவ தினிஎங்கே.

இவர்க்கும்

1

4499

அவரவர் உலகத்தே அறிந்தலர் தூற்றப்பட்டேன்

அன்றுபோ னவர்இன்று வந்துநிற் கின்றார்கெட்டேன்

இவர்சூதை அறியாதே முன்னம் ஏமாந்துவிட்டேன்

இந்தக் கதவைமூடு இனிஎங்கும் போகவொட்டேன்.

இவர்க்கும்

2

4500

சின்ன வயதில்என்னைச் சேர்ந்தார்புன் னகையோடு

சென்றார் தயவால்இன்று வந்தார் இவர்க்கார்ஈடு

என்னைவிட் டினிஇவர் எப்படிப் போவார்ஓடு
இந்தக் கதவைமூடு இரட்டைத்தாட் கோலைப்போடு.

3

இவர்க்கும் எனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றும் தீரா வழக்குக் காண டி.

76. இது நல்ல தருணம்

சிந்து

பல்லவி

4581.

இதுநல்ல தருணம் - அருள்செய்ய
இதுநல்ல தருணம்.

1

பல்லவி எடுப்பு

4582

பொதுநல்ல நடம்வல்ல புண்ணிய ரேகேளும்
பொய்யேதும் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன்.

இதுநல்ல

1

கண்ணிகள்

4583

மதித்த சமயமத வழக்கெல்லா மாய்ந்தது

வருணாச் சிரமம்எனு மயக்கமும் சாய்ந்தது
கொதித்த லோகாசாரக் கொதிப்பெல்லாம் ஒழிந்தது
கொலையும் களவுமற்றைப் புலையும் அழிந்தது.

இதுநல்ல

1

4584

குறித்த வேதாகமக் கூச்சலும் அடங்கிற்று
குதித்த(314) மனமுருட்டுக் குரங்கு முடங்கிற்று
வெறித்தவெவ் வினைகளும் வெந்து குலைந்தது
விந்தைசெய் கொடுமாயைச் சந்தையும் கலைந்தது.

இதுநல்ல

2

(314) கொதித்த - முதற்பதிப்பு., பொ சு, பி. இரா., ச. மு. க.

4585

கோபமும் காமமும் குடிகெட்டுப் போயிற்று
கொடியஅகங் ஆங்காரம் பொடிப்பொடி ஆயிற்று
தாபமும் சோபமும் தான்தானே சென்றது
தத்துவம் எல்லாம்என் றன்வசம் நின்றது.

இதுநல்ல

3

4586

கரையா எனதுமனக் கல்லும் கரைந்தது

கலந்து கொளற்கென் கருத்தும் விரைந்தது

புரையா நிலையில்என் புந்தியும் தங்கிற்று

பொய்படாக் காதல் ததும்பிமேல் பொங்கிற்று.

4

இதுநல்ல தருணம் - அருள்செய்ய

இதுநல்ல தருணம்.

77. ஆனந்தப் பரிவு

தாழிசை

4597.

நானந்த மடையாதெந் நாளினும்உள் ளவனாகி நடிக்கும் வண்ணம்

ஆனந்த நடம்புரிவான் ஆனந்த அமுதளித்தான் அந்தோ அந்தோ.

1

4598

சாதிமதம் சமயமுதற் சங்கற்ப விகற்பம்எலாம் தவிர்ந்து போக

ஆதிநடம் புரிகின்றான் அருட்சோதி எனக்களித்தான் அந்தோ அந்தோ.

2

4599

துரியபதம் அடைந்தபெருஞ் சுத்தர்களும் முத்தர்களும் துணிந்து சொலற்

கரியபதம் எனக்களித்தான் அம்பலத்தில் ஆடுகின்றான் அந்தோ அந்தோ.

3

4510

மருட்பெருஞ்சோ தனைஎனது மட்டுமிலா வணங்கருணை வைத்தே மன்றில்

அருட்பெருஞ்சோ திப்பெருமான் அருளமுதம் எனக்களித்தான் அந்தோ அந்தோ.

4

4511

துன்பமெலாம் ஒருகணத்தில் தொலைத்தருளி எந்நாளும் சுகத்தில் ஓங்க

அன்புடையான் அம்பலத்தான் அருட்சோதி எனக்களித்தான் அந்தோ அந்தோ.

5

4512

பந்தமெலாம் தவிர்த்தருளிப் பதந்தருயோ காந்தமுதல் பகரா நின்ற

அந்தமெலாம் கடந்திடச்செய் தருளமுதம் எனக்களித்தான் அந்தோ அந்தோ.

6

4513

பேராலும் அறிவாலும் பெரியரெனச் சிறப்பாகப் பேச நின்றோர்

ஆராலும் பெறலரிய தியாததனைப் பெறுவித்தான் அந்தோ அந்தோ.

7

4514

தினைத்தனையும் அறிவறியாச் சிறியனென நினையாமல் சித்தி யான

அனைத்துமென்றன் வசமாக்கி அருளமுதம் எனக்களித்தான் அந்தோ அந்தோ.

8

4515

பொதுவாகிப் பொதுவில்நடம் புரிகின்ற பேரின்பப் பொருள்தான் யாதோ

அதுநானாய் நான்அதுவாய் அத்துவிதம் ஆகின்றேன் அந்தோ அந்தோ.

9

4516

மருள்வடிவே எஞ்ஞான்றும் எவ்விடத்தும் எதனாலு மாய்வி லாத

அருள்வடிவாய் இம்மையிலே அடைந்திடப்பெற் றாடுகின்றேன்அந்தோஅந்தோ

10

4517

எக்கரையும் காணாதே இருட்கடலில் கிடந்தேனை எடுத்தாட் கொண்டு

அக்கரைசேர்த்தருளெனுமோர்சர்க்கரையுமெனக்களித்தான்அந்தோ அந்தோ(315).

(315) இப்பதினோராம் செய்யுள் ஒரு தனிப்பாடல். பொருள் ஒற்றுமை கருதி

இப்பதிகத்தில் சேர்க்கப்பெற்றது.

78. ஞான மருந்து

சிந்து

பல்லவி

4518.

ஞான மருந்திம் மருந்து - சுகம்

நல்கிய சிற்சபா நாத மருந்து.

1

கண்ணிகள்

4519

அருட்பெருஞ் சோதி மருந்து - என்னை

ஐந்தொழில் செய்தற் களித்த மருந்து

பொருட்பெரும் போக மருந்து - என்னைப்

புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து.

ஞான

1

4520

எல்லாம்செய் வல்ல மருந்து - என்னுள்

என்றும் விடாமல் இனிக்கு மருந்து

சொல்லால் அளவா மருந்து - சுயஞ்

ஜோதி அருட்பெருஞ் ஜோதி மருந்து.

ஞான

2

4521

காணாது காட்டு மருந்து - என்றன்

கையிற்பொற் கங்கணம் கட்டு மருந்து

ஆணாகிப் பெண்ணாம் மருந்து - அது

வாகி மணிமன்றில் ஆடு மருந்து.

ஞான

3

4522

சுத்தசன் மார்க்க மருந்து - அருட்

சோதி மலையில் துலங்கு மருந்து

சித்துரு வான மருந்து - என்னைச்

சித்தெலாம் செய்யச்செய் வித்த மருந்து.

ஞான

4

4523

அன்பர்க் கெளிய மருந்து - மற்றை

ஐவர்க்கும் காண்டற் கரிய மருந்து

என்பற்றில் ஓங்கு மருந்து - என்னை

இன்ப நிலையில் இருத்து மருந்து.

ஞான

5

4524

நாதாந்த நாட்டு மருந்து - பர

ஞான வெளியில் நடிக்கு மருந்து

போதாந்தர்க் கெய்து மருந்து - என்னுள்

பொன்னடி காட்டிப் புணர்ந்த மருந்து.

ஞான

6

4525

ஆதி அனாதி மருந்து - திரு

அம்பலத் தேநட மாடு மருந்து

ஜோதி மயமா மருந்து - என்னைச்

சோதியா தாண்ட துரிய மருந்து.

ஞான

7

4526

ஆறந்தத் தோங்கு மருந்து - அதற்

கப்பாலுக் கப்பாலும் ஆன மருந்து
ஊறந்த மில்லா மருந்து - எனக்
குள்ளே கலந்த உறவா மருந்து.

ஞான

8

4527

என்னுயிர்க் கன்பா மருந்து - கலந்
தென்னுயிர்க் குள்ளே இருந்த மருந்து
என்னுயிர் காக்கு மருந்து - என்றும்
என்னுயி ராகிய இன்ப மருந்து.

ஞான

9

4528

என்னறி வுட்கொள் மருந்து - என்றும்
என்னறி வாகி இலங்கு மருந்து
என்னறி வின்ப மருந்து - என்னுள்
என்னறி வுக்கறி வென்னு மருந்து

ஞான

10

4529

என்குரு வான மருந்து - என்றும்

என்தெய்வ மாகி இருக்கு மருந்து

என்அன்னை யென்னு மருந்து - என்றும்

என்தந்தை யாகிய இன்ப மருந்து.

ஞான

11

4530

என்பெரு வாழ்வா மருந்து - என்றும்

என்செல்வ மாகி இருக்கு மருந்து

என்னுயிர் நட்பா மருந்து - எனக்

கெட்டெட்டுச் சித்தியும் ஈந்த மருந்து.

ஞான

12

4531

என்னிறை யான மருந்து - மகிழ்ந்

தெனக்குத்தன் பொன்மேனி ஈந்த மருந்து

தன்னறி வாகு மருந்து - என்னைத்

தந்த மருந்தென்றன் சொந்த மருந்து.

ஞான

13

4532

உள்ளத்தி னுள்ளா மருந்து - என்றன்

உயிருக் கனாதி உறவா மருந்து
தெள்ளத் தெளிக்கு மருந்து - என்னைச்
சிவமாக்கிக் கொண்ட சிவாய மருந்து.

ஞான

14

4533

மெய்ப்பொரு ளென்னு மருந்து - எல்லா
வேதா கமத்தும் விளங்கு மருந்து
கைப்பொரு ளான மருந்து - மூன்று
கண்கொண்ட என்னிரு கண்ணுள் மருந்து.

ஞான

15

4534

மதியில் விளைந்த மருந்து - யார்க்கும்
மதிக்கப்ப டாதபொன் வண்ண மருந்து
கதிதரும் இன்ப மருந்து - அருட்
கண்ணால்என் றன்னைக் கலந்த மருந்து.

ஞான

16

4535

கற்பூர ஜோதி மருந்து - பசுங்

கற்பூர நன்மணங் காட்டு மருந்து

பொற்பூவின் ஓங்கு மருந்து - என்தற்

போதம் தவிர்த்தசிற் போத மருந்து.

ஞான

17

4536

மேலை வெளியா மருந்து - நான்

வேண்டுந்தோ றெல்லாம் விளையு மருந்து

சாலை விளக்கு மருந்து - சுத்த

சமரச சன்மார்க்க சங்க மருந்து.

ஞான

18

4537

என்னைத்தா ணாக்கு மருந்து - இங்கே

இறந்தாரை எல்லாம் எழுப்பு மருந்து

துன்னுமெய்ச் சோதி மருந்து - அருட்

சோதியால் என்னைத் துலக்கு மருந்து.

ஞான

19

4538

பொய்யர்க் கரிதா மருந்து - என்னைப்

புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து

கையிற் கிடைத்த மருந்து - சிவ

காமக் கொழியைக் கலந்த மருந்து.

ஞான

20

4539

ஆணவம் தீர்க்கு மருந்து - பர

மானந்தத் தாண்டவ மாடும் மருந்து

மாணவ வண்ண மருந்து - என்னை

வலிய அழைத்து வளர்க்கு மருந்து.

ஞான

21

4540

வானடு வான மருந்து - என்னை

மாமணி மேடைமேல் வைத்த மருந்து

ஊனம் தவிர்த்த மருந்து - கலந்

துள்ளே இனிக்கின்ற உண்மை மருந்து.

ஞான

22

4541

மலையிலக் கான மருந்து - என்றன்

மறைப்பைத் தவிர்த்தமெய் வாழ்க்கை மருந்து
கலைநலம் காட்டு மருந்து - எங்கும்
கண்ணாகிக் காணும் கனத்த மருந்து.
ஞான

23

4542

அற்புத ஜோதி மருந்து - எல்லாம்
ஆகியன் றாகி அமர்ந்த மருந்து
தற்பதம் தந்த மருந்து - எங்கும்
தானேதா னாகித் தனித்த மருந்து.
ஞான

24

4543

தன்னை அளித்த மருந்து - என்றும்
சாகாத நல்வரம் தந்த மருந்து
பொன்னடி ஈந்த மருந்து - அருட்
போனகம் தந்த புனித மருந்து.
ஞான

25

4544

கண்ணுக் கினிய மருந்து - என்றன்

கைப்பொரு ளாந்தங்கக் கட்டி மருந்து

எண்ணுக் கடங்கா மருந்து - என்னை

ஏதக்குழிவிட் டெடுத்த மருந்து.

ஞான

26

4545

சுட்டப் படாத மருந்து - என்றன்

தூக்கமும் சோர்வும் தொலைத்த மருந்து

எட்டுதற் கொண்ணா மருந்து - நான்

எட்டிப் பிடிக்க இசைந்த மருந்து.

ஞான

27

4546

உன்னற் கரிதா மருந்து - எனக்

குள்ளும் புறத்தும் உலாவு மருந்து

தன்னந் தனித்த மருந்து - சுத்தச்

சாக்கிரா தீதச் சபேச மருந்து.

ஞான

28

4547

ஒன்றில்ஒன் றான மருந்து - அந்த

ஒன்றில் இரண்டாகி ஓங்கு மருந்து
அன்றிமூன் றான மருந்து - நான்
காகிஐந் தாகி அமர்ந்த மருந்து.

ஞான

29

4548

வெளிக்குள் வெளியா மருந்து - எல்லா
வெளியும் கடந்து விளங்கு மருந்து
ஒளிக்குள் ஒளியா மருந்து - எல்லா
ஒளியும்தா னாகிய உண்மை மருந்து.

ஞான

30

4549

ஆறாறுக் கப்பால் மருந்து - அதற்
கப்புறத் தீராறுக் கப்பால் மருந்து
ஈறாதி இல்லா மருந்து - என்னை
எல்லாம் செயச்செய்த இன்ப மருந்து.

ஞான

31

4550

ஆரணத் தோங்கு மருந்து - அருள்

ஆகம மாகிஅண் ணிக்கு மருந்து

காரணம் காட்டு மருந்து - எல்லாம்

கண்ட மருந்தென்னுள் கொண்ட மருந்து.

ஞான

32

4551

மலமைந்து நீக்கு மருந்து - புவி

வானண்ட மெல்லாம் வளர்க்கு மருந்து

நலமிக் கருளு மருந்து - தானே

நானாகித் தானாளு நாட்டு மருந்து.

33

ஞான மருந்திம் மருந்து - சுகம்

நல்கிய சிற்சபா நாத மருந்து.

79. சிவசிவ ஜோதி

சிந்து

பல்லவி

4552.

சிவசிவ சிவசிவ ஜோதி - சிவ

சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி

சிவசிவ சிவசிவ ஜோதி.

1

கண்ணிகள்

4553

சிற்பர மாம்பரஞ் ஜோதி - அருட்

சித்தெல்லாம் வல்ல சிதம்பர ஜோதி

தற்பர தத்துவ ஜோதி - என்னைத்

தாணாக்கிக் கொண்ட தயாநிதி ஜோதி.

சிவசிவ

1

4554

சித்துரு வாம்சுயஞ் ஜோதி - எல்லாம்

செய்திட வல்ல சிதம்பர ஜோதி

அத்துவி தானந்த ஜோதி - என்னை

ஆட்கொண் டருளும்சிற் றம்பல ஜோதி.

சிவசிவ

2

4555

சின்மய மாம்பெருஞ் ஜோதி - அருட்

செல்வ மளிக்கும் சிதம்பர ஜோதி

தன்மய மாய்நிறை ஜோதி - என்னைத்

தந்தமெய் ஜோதி சதானந்த ஜோதி.

சிவசிவ

3

4556

ஆதிஈ றில்லாமுற் ஜோதி - அரன்

ஆதியர் தம்மை அளித்தபிற் ஜோதி

ஓதி உணர்வரும் ஜோதி - எல்லா

உயிர்களின் உள்ளும் ஒளிர்கின்ற ஜோதி.

சிவசிவ

4

4557

மன்னிய பொன்வண்ண ஜோதி - சுக

வண்ணத்த தாம்பெரு மாணிக்க ஜோதி

துன்னிய வச்சிர ஜோதி - முத்து

ஜோதி மரகத ஜோதியுள் ஜோதி.

சிவசிவ

5

4558

பார்முதல் ஐந்துமாம் ஜோதி - ஐந்தில்

பக்கமேல் கீழ்நடுப் பற்றிய ஜோதி

ஓர்ஐம் பொறியுரு ஜோதி - பொறிக்

குள்ளும் புறத்தும் ஒளிர்கின்ற ஜோதி.

சிவசிவ

6

4559

ஐம்புல மும்தாணாம் ஜோதி - புலத்

தகத்தும் புறத்து மலர்ந்தொளிர் ஜோதி

பொய்ம்மயல் போக்கும்உள் ஜோதி - மற்றைப்

பொறிபுலன் உள்ளும் புறத்துமாம் ஜோதி.

சிவசிவ

7

4560

மனமாதி எல்லாமாம் ஜோதி - அவை

வாழ அகம்புறம் வாழ்கின்ற ஜோதி

இனமான உள்ளக ஜோதி - சற்றும்

ஏறா திறங்கா தியக்குமோர் ஜோதி.

சிவசிவ

8

4561

முக்குண மும்மூன்றாம் ஜோதி - அவை

முன்பின் இயங்க முடுக்கிய ஜோதி

எக்குணத் துள்ளுமாம் ஜோதி - குணம்

எல்லாம் கடந்தே இலங்கிய ஜோதி.

சிவசிவ

9

4562

பகுதிமூன் றாகிய ஜோதி - மூலப்

பகுதிகள் மூன்றும் படைத்தருள் ஜோதி

பகுதி பலவாக்கும் ஜோதி - சற்றும்

விகுதிஒன் றின்றி விளக்கிய ஜோதி.

சிவசிவ

10

4563

கால முதற்காட்டும் ஜோதி - கால

காரணத் தப்பால் கடந்தொளிர் ஜோதி

கோலம் பலவாகும் ஜோதி - ஒன்றும்

குறிக்கப் படாச்சிற் குணப்பெருஞ் சோதி.

சிவசிவ

11

4564

தத்துவம் எல்லாமாம் ஜோதி - அந்தத்

தத்துவம் எல்லாம் தருவிக்கும் ஜோதி

அத்துவி தப்பெருஞ் ஜோதி - எல்லாம்

அருளில் விளங்க அமர்த்திய ஜோதி.

சிவசிவ

12

4565

சத்தர்கள் எல்லாமாம் ஜோதி - அவர்

சத்திகள் எல்லாம் தழைப்பிக்கும் ஜோதி

முத்தர் அனுபவ ஜோதி - பர

முத்தியாம் ஜோதிமெய்ச் சித்தியாம் ஜோதி.

சிவசிவ

13

4566

ஆறந்தத் தேநிறை ஜோதி - அவைக்

கப்புறத் தப்பாலும் ஆகிய ஜோதி

வீறும் பெருவெளி ஜோதி - மேலும்

வெட்ட வெளியில் விளங்கிய ஜோதி.

சிவசிவ

14

4567

பேரருட் ஜோதியுள் ஜோதி - அண்ட

பிண்டங்கள் எல்லாம் பிறங்கிய ஜோதி

வாரமுற் றோங்கிய ஜோதி - மன

வாக்குக் கெட்டாததோர் மாமணி(316) ஜோதி.

சிவசிவ

15

(316) மாணிக்க - ச. மு. க. பதிப்பு.

4568

ஒன்றான பூரண ஜோதி - அன்பில்

ஒன்றாத உள்ளத்தில் ஒன்றாத ஜோதி

என்றா ஒளிர்கின்ற ஜோதி - என்னுள்

என்றும் விளங்கிய என்னுயிர் ஜோதி.

சிவசிவ

16

4569

மெய்யேமெய் யாகிய ஜோதி - சுத்த

வேதாந்த வீட்டில் விளங்கிய ஜோதி

துய்ய சிவானந்த ஜோதி - குரு

துரியத் தலத்தே துலங்கிய ஜோதி.

சிவசிவ

17

4570

சிவமய மாம்சுத்த ஜோதி - சுத்த

சித்தாந்த வீட்டில் சிறந்தொளிர் ஜோதி

உவமையில் லாப்பெருஞ் ஜோதி - என

துள்ளே நிரம்பி ஒளிர்கின்ற ஜோதி.

சிவசிவ

18

4571

என்னைத்தா னாக்கிய ஜோதி - இங்கே

இறந்தாரை எல்லாம் எழுப்புமோர் ஜோதி

அன்னைக்கு மிக்கருட் ஜோதி - என்னை

ஆண்டமு தம்தந்த ஆனந்த ஜோதி.

சிவசிவ

19

4572

சித்தம் சிவமாக்கும் ஜோதி - நான்

செய்த தவத்தால் தெரிந்தஉட் ஜோதி

புத்தமு தாகிய ஜோதி - சுக

பூரண மாய்ஒளிர் காரண ஜோதி.

சிவசிவ

20

4573

தம்பத்தில் ஏற்றிய ஜோதி - அப்பால்

சார்மணி மேடைமேல் தான்வைத்த ஜோதி

விம்பப் பெருவெளி ஜோதி - அங்கே

வீதியும் வீடும் விளக்கிய ஜோதி.

சிவசிவ

21

4574

சுகமய மாகிய ஜோதி - எல்லா

ஜோதியு மான சொரூபஉட் ஜோதி

அகமிதந் தீர்த்தருள் ஜோதி - சச்சி

தானந்த ஜோதி சதானந்த ஜோதி.

சிவசிவ

22

4575

நித்த பரானந்த ஜோதி - சுத்த

நிரதிச யானந்த நித்திய ஜோதி

அத்துவி தானந்த ஜோதி - எல்லா

ஆனந்த வண்ணமும் ஆகிய ஜோதி.

சிவசிவ

23

4576

பொய்யாத புண்ணிய ஜோதி - எல்லாப்

பொருளும் விளங்கப் புணர்த்திய ஜோதி

நையா தருள்செய்த ஜோதி - ஒரு

நானும்தா னும்ஒன்றாய் நண்ணிய ஜோதி.

சிவசிவ

24

4577

கண்ணிற் கலந்தருள் ஜோதி - உளக்

கண்ணுயிர்க் கண்ணருட் கண்ணுமாம் ஜோதி

எண்ணிற்ப டாப்பெருஞ் சோதி - நான்

எண்ணிய வண்ணம் இயற்றிய ஜோதி.

சிவசிவ

25

4578

விந்து ஒளிநடு ஜோதி - பர

விந்து ஒளிக்குள் விளங்கிய ஜோதி

நம்துயர் தீர்த்தருள் ஜோதி - பர

நாதாந்த நாட்டுக்கு நாயக ஜோதி.

சிவசிவ

26

4579

தான்அன்றி ஒன்றிலா ஜோதி - என்னைத்

தன்மயம் ஆக்கிய சத்திய ஜோதி

நான்இன்று கண்டதோர் ஜோதி - தானே

நானாகி வாழ்ந்திட நல்கிய ஜோதி.

சிவசிவ

27

4580

தன்னிகர் இல்லதோர் ஜோதி - சுத்த

சன்மார்க்க சங்கம் தழுவிய ஜோதி

என்னுள் நிறைந்தமெய் ஜோதி - என்னை

ஈன்றைந் தொழில்செய்என் றேவிய ஜோதி.

சிவசிவ

28

4581

அச்சம் தவிர்த்தமெய் ஜோதி - என்னை

ஆட்கொண் டருளிய அம்பல ஜோதி

இச்சை எலாம்தந்த ஜோதி - உயிர்க்

கிங்குமங் கென்னாமல் எங்குமாம் ஜோதி.

சிவசிவ

29

4582

காலையில் நான்கண்ட ஜோதி - எல்லாக்

காட்சியும் நான்காணக் காட்டிய ஜோதி

ஞாலமும் வானுமாம் ஜோதி - என்னுள்

நானாகித் தானாகி நண்ணிய ஜோதி.

சிவசிவ

30

4583

ஏகாந்த மாகிய ஜோதி - என்னுள்

என்றும் பிரியா திருக்கின்ற ஜோதி

சாகாத வரந்தந்த ஜோதி - என்னைத்

தானாக்கிக் கொண்டதோர் சத்திய ஜோதி.

சிவசிவ

31

4584

சுத்த சிவமய ஜோதி - என்னை

ஜோதி மணிமுடி சூட்டிய ஜோதி

சத்திய மாம்பெருஞ் ஜோதி - நானே

தானாகி ஆளத் தயவுசெய் ஜோதி.

32

சிவசிவ சிவசிவ ஜோதி - சிவ

சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி

சிவசிவ சிவசிவ ஜோதி.

## 80. ஜோதியுள் ஜோதி

சிந்து

பல்லவி

4585.

ஜோதியுள் ஜோதியுள் ஜோதி - சுத்த

ஜோதி சிவஜோதி ஜோதியுள் ஜோதி

ஜோதியுள் ஜோதியுள் ஜோதி.

1

கண்ணிகள்

4586

சிவமே பொருளென்று தேற்றி - என்னைச்

சிவவெளிக் கேறும் சிகரத்தில் ஏற்றிச்

சிவமாக்கிக் கொண்டது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

1

4587

வித்தெல்லாம் ஒன்றென்று நாட்டி - அதில்

விளைவு பலபல வேறென்று காட்டிச்

சித்தெல்லாம் தந்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

2

4588

சொல்வந்த அந்தங்கள் ஆறும் - ஒரு

சொல்லாலே ஆமென்றச் சொல்லாலே வீறும்

செல்வம் கொடுத்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

3

4589

தங்கோல் அளவெனக் கோதிச் - சுத்த

சமரச சத்திய சன்மார்க்க நீதிச்

செங்கோல் அளித்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

4

4590

ஆபத்தை நீக்கி வளர்த்தே - சற்றும்

அசையாமல் அவியாமல் அடியேன் உளத்தே

தீபத்தை வைத்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

5

4591

மெய்யொன்று சன்மார்க்க மேதான் - என்றும்

விளங்கப் படைப்பாதி மெய்த்தொழில் நீதான்

செய்யென்று தந்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

6

4592

என்பால் வருபவர்க் கின்றே - அருள்

ஈகின்றேன் ஈகின்றேன் ஈகின்றேன் என்றே(317)

தென்பால் இருந்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

7

(317) ஈகின்றோம் ஈகின்றோம் ஈகின்றோம் என்றே - ச. மு. க.

4593

துரியத் தலமூன்றின் மேலே - சுத்த

துரியப் பதியில் அதுஅத னாலே

தெரியத் தெரிவது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

8

4594

பரைதூக்கிக் காட்டிய காலே - ஆதி

பரைஇவர்க் கப்பால்அப் பால்என்று மேலே

திரைதூக்கிக் காட்டுதல் பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

9

4595

தற்பர மேவடி வாகி - அது

தன்னைக் கடந்து தனிஉரு வாகிச்

சிற்பரத் துள்ளது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

10

4596

நவவெளி நால்வகை யாதி - ஒரு

நடுவெளிக் குள்ளே நடத்திய நீதிச்

சிவவெளி யாம்இது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

11

4597

மேருவெற் புச்சியின் பாலே - நின்று

விளங்குமோர் தம்பத்தின் மேலுக்கு மேலே

சேருமோர் மேடைமேல் பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

12

4598

ஆரண வீதிக் கடையும் - சுத்த

ஆகம வீதிகள் அந்தக் கடையும்

சேர நடுக்கடை பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

13

4599

பாடல் மறைகளோர் கோடி - அருட்

பாத உருவ சொரூபங்கள் பாடி

தேட இருந்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

14

௪௬௯௦

நீடு சிவாகமங் கோடி - அருள்

நேருறப் பாடியும் ஆடியும் ஓடித்

தேட இருந்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

15

௪௬௯௧

பத்தி நெறியில் செழித்தே - அன்பில்

பாடுமெய் யன்பர் பதியில் பழுத்தே

தித்தித் திருப்பது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

16

௪௬௯௨

பித்தாடு மாயைக்கு மேலே - சுத்தப்

பிரம வெளியினில் பேரரு ளாலே

சித்தாடு கின்றது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

17

4683

தருநெறி எல்லாம்உள் வாங்கும் - சுத்த
சன்மார்க்கம் என்றோர் தனிப்பேர்கொண் டோங்கும்
திருநெறிக் கேசென்று பாரீர் - திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

18

4684

எம்பொருள் எம்பொருள் என்றே - சொல்லும்
எல்லாச் சமயத்துள் எல்லார்க்கும் ஒன்றே
செம்பொருள் என்பது பாரீர் - திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

19

4685

சைவ முதலாக நாட்டும் - பல
சமயங்கள் எல்லாம் தனித்தனிக் காட்டும்
தெய்வம் இதுவந்து பாரீர் - திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

20

4686

எள்ளலில் வான்முதல் மண்ணும் - அமு

தெல்லாம் இதிலோர் இறையள வென்னும்

தெள்ளமு தாம்இது பாரீர் -திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

21

4687

எத்தாலும் ஆகாதே அம்மா - என்றே

எல்லா உலகும் இயம்புதல் சும்மா

செத்தாரை மீட்பது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

22

4688

பிறந்து பிறந்துழன் றேனை - என்றும்

பிறவா திறவாப் பெருமைதந் தூனைச்

சிறந்தொளிர் வித்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

23

4609

வருவித்த வண்ணமும் நானே - இந்த

மாநிலத் தேசெயும் வண்ணமும் தானே

தெரிவித் தருளிற்றுப் பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

24

4610

பாரிடம் வானிட மற்றும் - இடம்

பற்றிய முத்தர்கள் சித்தர்கள் முற்றும்

சேரிட மாம்இது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

25

4611

உய்பிள்ளை பற்பலர் ஆவல் - கொண்டே

உலகத் திருப்பஇங் கென்னைத்தன் ஏவல்

செய்பிள்ளை ஆக்கிற்றுப் பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

26

4612

உருவும் உணர்வும்செய் நன்றி - அறி

உளமும் எனக்கே உதவிய தன்றித்

திருவும் கொடுத்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

27

4613

எண்ணிய எண்ணங்கள் எல்லாம் - நான்

எண்ணிய வாறே இனிதுதந் தென்னைத்

திண்ணியன் ஆக்கிற்றுப் பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

28

4614

பேருல கெல்லாம் மதிக்கத் - தன்

பிள்ளைஎன் றென்னைப் பெயரிட் டழைத்தே

சீருறச் செய்தது பாரீர் - திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

ஜோதி

29

ஜோதியுள் ஜோதியுள் ஜோதி - சுத்த

ஜோதி சிவஜோதி ஜோதியுள் ஜோதி

ஜோதியுள் ஜோதியுள் ஜோதி.

4615.

அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் சோதி

அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி

அருட்சிவ நெறிசார் அருட்பெரு நிலைவாழ்

அருட்சிவ பதியாம் அருட்பெருஞ் ஜோதி

ஆகம முடிமேல் ஆரண முடிமேல்

ஆகநின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி

இகநிலைப் பொருளாய்ப் பரநிலைப் பொருளாய்

அகமறப் பொருந்திய அருட்பெருஞ் ஜோதி

ஈனமின் றிகபரத் திரண்டின்மேற் பொருளாய்

ஆனலின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி

10

உரைமனங் கடந்த ஒருபெரு வெளிமேல்

அரைசுசெய் தோங்கும் அருட்பெருஞ் ஜோதி

ஊக்கமும் உணர்ச்சியும் ஒளிதரும் ஆக்கையும்

ஆக்கமும் அருளிய அருட்பெருஞ் ஜோதி

எல்லையில் பிறப்பெனும் எழுகடல்318 கடத்திஎன்

அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

இருங்கடல் வடலூரில் சத்திய தருமச்சாலையில்

வழிபாட்டில் உள்ள அடிகள் எழுதியருளிய கையெழுத்துப்படி.

ஏறா நிலைமிசை ஏற்றிஎன் தனக்கே

ஆறாறு காட்டிய அருட்பெருஞ் ஜோதி

ஐயமும் திரிபும் அறுத்தென துடம்பினுள்

ஐயமும் நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

20

ஒன்றென இரண்டென ஒன்றிரண் டெனஇவை

அன்றென விளங்கிய அருட்பெருஞ் ஜோதி

ஓதா துணர்ந்திட ஒளியளித் தெனக்கே

ஆதாரம் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

ஔவியம் ஆதிஓர் ஆறுந் தவிர்த்தபேர்

அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ் ஜோதி

திருநிலைத் தனிவெளி சிவவெளி எனும்ஓர்

அருள்வெளிப் பதிவளர் அருட்பெருஞ் ஜோதி

சுத்தசன் மார்க்க சுகத்தனி வெளிஎனும்

அத்தகைச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

30

சுத்தமெய்ஞ் ஞான சுகோதய வெளிஎனும்

அத்து விதச்சபை அருட்பெருஞ் ஜோதி

தூயக லாந்த சுகந்தரு வெளிஎனும்

ஆயசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

ஞானயோ காந்த நடத்திரு வெளிஎனும்

ஆனியில் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

விமலபோ தாந்தமா மெய்ப்பொருள் வெளிஎனும்

அமலசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

பெரியநா தாந்தப் பெருநிலை வெளிஎனும்

அரியசிற் றம்பலத் தருட்பெருஞ் ஜோதி

௪0

சுத்தவே தாந்தத் துரியமேல் வெளிஎனும்

அத்தகு சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

சுத்தசித் தாந்த சுகப்பெரு வெளிஎனும்

அத்தனிச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

தகரமெய்ஞ் ஞானத் தனிப்பெரு வெளிஎனும்

அகர நிலைப்பதி அருட்பெருஞ் ஜோதி

தத்துவா தீதத் தனிப்பொருள் வெளிஎனும்

அத்திரு அம்பலத் தருட்பெருஞ் ஜோதி

சச்சிதா னந்தத் தனிப்பர வெளிஎனும்

அச்சியல் அம்பலத் தருட்பெருஞ் ஜோதி

௫0

சாகாக் கலைநிலை தழைத்திடு வெளிஎனும்

ஆகா யத்தொளிர் அருட்பெருஞ் ஜோதி

காரண காரியம் காட்டிடு வெளிஎனும்

ஆரணச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

ஏகம் அனேகம் எனப்பகர் வெளிஎனும்

ஆகமச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

வேதா கமங்களின் விளைவுகட் கெல்லாம்

ஆதார மாம்சபை அருட்பெருஞ் ஜோதி

என்றா தியசுடர்க் கியனிலை ஆய்அது(319)

அன்றாம் திருச்சபை அருட்பெருஞ் ஜோதி

60

(319). ஆய்அவை - ச.மு.க. பதிப்பு.

சமயம் கடந்த தனிப்பொருள் வெளியாய்(320)

அமையும் திருச்சபை அருட்பெருஞ் ஜோதி

(320). தனிப்பெரு வெளியாய் - ச.மு.க. பதிப்பு.

முச்சுடர் களும்ஒளி முயங்குற அளித்தருள்

அச்சுட ராம்சபை அருட்பெருஞ் ஜோதி

துரியமும் கடந்த சுகபூ ரணந்தரும்

அரியசிற் றம்பலத் தருட்பெருஞ் ஜோதி

எவ்வகைச் சுகங்களும் இனிதுற அளித்தருள்

அவ்வகைச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

இயற்கைஉண் மையதாய் இயற்கைஇன் பமுமாம்

அயர்ப்பிலாச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

79

சாக்கிரா தீதத் தனிவெளி யாய்நிறை

வாக்கிய சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

சுட்டுதற் கரிதாம் சுகாதீத வெளிஎனும்

அட்டமேற் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

நவந்தவிர் நிலைகளும் நண்ணும்லூர் நிலையாய்

அவந்தவிர் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

உபயபக் கங்களும் ஒன்றெனக் காட்டிய

அபயசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

சேகர மாம்பல சித்தி நிலைக்கெலாம்

ஆகர மாம்சபை அருட்பெருஞ் ஜோதி

80

மனாதிகட் கரிய மதாதீத வெளியாம்(321)

அனாதிசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

(321). வெளியாய் ச.மு.க. பதிப்பு br>

ஓதிநின் றுணர்ந்துணர்ந் துணர்தற் கரிதாம்

ஆதிசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

வாரமும் அழியா வரமும் தரும்திரு

ஆரமு தாம்சபை அருட்பெருஞ் ஜோதி

இழியாப் பெருநலம் எல்லாம் அளித்தருள்

அழியாச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

கற்பம் பலபல கழியினும் அழிவுறா
அற்புதம் தரும்சபை அருட்பெருஞ் ஜோதி

99

எனைத்தும் துன்பிலா இயல்அளித் தெண்ணிய
அனைத்தும் தரும்சபை அருட்பெருஞ் ஜோதி

பாணிப் பிலதாய்ப் பரவினோர்க் கருள்புரி
ஆணிப்பொன் னம்பலத் தருட்பெருஞ் ஜோதி

எம்பலம் எனத்தொழு தேத்தினோர்க் கருள்புரி
அம்பலத் தாடல்செய் அருட்பெருஞ் ஜோதி

தம்பர ஞான சிதம்பரம் எனுமோர்
அம்பரத் தோங்கிய அருட்பெருஞ் ஜோதி

எச்சபை பொதுஎன இயம்பினர் அறிஞர்கள்
அச்சபை இடங்கொளும் அருட்பெருஞ் ஜோதி

100

வாடுதல் நீக்கிய மணிமன் றிடையே
ஆடுதல் வல்ல அருட்பெருஞ் ஜோதி

நாடகத் திருச்செயல் நவிற்றிடும் ஒருபேர்
ஆடகப் பொதுஒளிர் அருட்பெருஞ் ஜோதி

கற்பனை முழுவதும் கடந்தொளி தரும்ஓர்
அற்புதச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

ஈன்றநற் றாயினும் இனிய பெருந்தய

வான்றசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

இன்புறு நான்உளத் தெண்ணியாங் கெண்ணியாங்

கன்புறத் தருசபை அருட்பெருஞ் ஜோதி

110

எம்மையும் என்னைவிட் டிறையும் பிரியா

தம்மைஅப் பனுமாம் அருட்பெருஞ் ஜோதி

பிரிவுற் றறியாப் பெரும்பொரு ளாய்என்

அறிவுக் கறிவாம் அருட்பெருஞ் ஜோதி

சாதியும் மதமும் சமயமும் காணா

ஆதிஅ னாதியாம் அருட்பெருஞ் ஜோதி

தனுகர ணாதிகள் தாங்கடந் தறியும்ஓர்

அனுபவம் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

உனும்உணர் வுணர்வாய் உணர்வெலாம் கடந்த

அனுபவா தீத அருட்பெருஞ் ஜோதி

120

பொதுவுணர் வுணரும் போதலால் பிரித்தே

அதுஎனில் தோன்றா அருட்பெருஞ் ஜோதி

உளவினில் அறிந்தால் ஒழியமற் றளக்கின்

அளவினில் அளவா அருட்பெருஞ் ஜோதி

என்னையும் பணிகொண் டிறவா வரமளித்

தன்னையில் உவந்த அருட்பெருஞ் ஜோதி

ஓதிஓ தாமல் உறவெனக் களித்த

ஆதிஈ றில்லா அருட்பெருஞ் ஜோதி

படிஅடி வான்முடி பற்றினும் தோற்றா

அடிமுடி எனும்ஓர் அருட்பெருஞ் ஜோதி

130

பவனத் தின் அண்டப் பரப்பின்எங் கெங்கும்

அவனுக் கவனாம் அருட்பெருஞ் ஜோதி

திவள்உற்ற அண்டத் திரளின்எங் கெங்கும்

அவளுக் கவளாம் அருட்பெருஞ் ஜோதி

மதன்உற்ற அண்ட வரைப்பின்எங் கெங்கும்

அதனுக் கதுவாம் அருட்பெருஞ் ஜோதி

எப்பாலு மாய்வெளி எல்லாம் கடந்துமேல்

அப்பாலும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

வல்லதாய் எல்லாம் ஆகிஎல் லாமும்

அல்லதாய் விளங்கும் அருட்பெருஞ் சோதி

140

எப்பொருள் மெய்ப்பொருள் என்பர்மெய் கண்டோர்

அப்பொருள் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

தாங்ககி லாண்ட சராசர நிலைநின்

றோங்குற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

சத்தர்கள் எல்லாம் தழைத்திட அகம்புறத்

தத்திசை விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

சத்திகள் எல்லாம் தழைக்கஎங் கெங்கும்

அத்தகை விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

முந்துறும் ஐந்தொழில் மூர்த்திகள் பலர்க்கும்

ஐந்தொழில் அளிக்கும் அருட்பெருஞ் ஜோதி

150

பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினும் சிறிதாய்

அரிதினும் அரிதாம் அருட்பெருஞ் ஜோதி

காட்சியும் காணாக் காட்சியும் அதுதரும்

ஆட்சியும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

இன்புறு சித்திகள் எல்லாம் புரிகஎன்

றன்புடன் எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

இறவா வரமளித் தென்னைமேல் ஏற்றிய

அறவாழி யாம்தனி அருட்பெருஞ் ஜோதி

நான்அந்தம் இல்லா நலம்பெற எனக்கே

ஆனந்தம் நல்கிய அருட்பெருஞ் ஜோதி

160

எண்ணிய எண்ணியாங் கியற்றுக என்றெனை

அண்ணிஉள் ஓங்கும் அருட்பெருஞ் ஜோதி

மேயினை மெய்ப்பொருள் விளங்கினை நீஅது

ஆயினை என்றருள் அருட்பெருஞ் ஜோதி

எண்ணிற் செழுந்தேன் இனியதெள் ளமுதென

அண்ணித் தினிக்கும் அருட்பெருஞ் ஜோதி

சிந்தையில் துன்பொழி சிவம்பெறு கெனத்தொழில்

ஐந்தையும் எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

எங்கெங் கிருந்துயிர் ஏதெது வேண்டினும்

அங்கங் கிருந்தருள் அருட்பெருஞ் ஜோதி

170

சகமுதல் புறப்புறம் தங்கிய அகப்புறம்

அகம்புறம் முற்றுமாம் அருட்பெருஞ் ஜோதி

சிகரமும் வகரமும் சேர்தனி உகரமும்

அகரமும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

உபரச வேதியின் உபயமும் பரமும்

அபரமும் ஆகிய அருட்பெருஞ் ஜோதி

மந்தணம் இதுவென மறுவிலா மதியால்

அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ் ஜோதி

எம்புயக் கனியென எண்ணுவார் இதய

அம்புயத் தமர்ந்த அருட்பெருஞ் ஜோதி

180

செடியறுத் தேதிட தேகமும் போகமும்

அடியருக் கேதரும் அருட்பெருஞ் ஜோதி

துன்பறுத் தொருசிவ துரிய சுகந்தனை

அன்பருக் கேதரும் அருட்பெருஞ் ஜோதி

பொதுஅது சிறப்பது புதியது பழயதென்

றதுஅது வாய்த்திகழ் அருட்பெருஞ் ஜோதி

சேதனப் பெருநிலை திகழ்தரும் ஒருபரை

ஆதனத் தோங்கிய அருட்பெருஞ் ஜோதி

ஓமயத் திருவுரு(322) உவப்புடன் அளித்தெனக்

காமயத் தடைதவிர் அருட்பெருஞ் ஜோதி

190

(322). ஓமயத் திருவுரு  பிரணவ உடம்பு.

(ஓமயம் - ஓங்காரமயம்.)

எப்படி எண்ணிய தென்கருத் திங்கெனக்

கப்படி அருளிய அருட்பெருஞ் ஜோதி

எத்தகை விழைந்தன என்மனம் இங்கெனக்

கத்தகை அருளிய அருட்பெருஞ் ஜோதி

இங்குறத் திரிந்துளம் இளையா வகைஎனக்

கங்கையில் கனியாம் அருட்பெருஞ் ஜோதி

பாருயப் புரிகெனப் பணித்தெனக் கருளிஎன்

ஆருயிர்க் குள்ஒளிர் அருட்பெருஞ் ஜோதி

தேவியுற் றொளிர்தரு திருவுரு உடன்என

தாவியில் கலந்தொளிர் அருட்பெருஞ் ஜோதி

200

எவ்வழி மெய்வழி என்பவே தாகமம்

அவ்வழி எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

வையமும் வானமும் வாழ்த்திட எனக்கருள்

ஐயறி வளித்த அருட்பெருஞ் ஜோதி

சாமா றனைத்தும் தவிர்த்திங் கெனக்கே

ஆமா றருளிய அருட்பெருஞ் ஜோதி

சத்திய மாம்சிவ சத்தியை ஈந்தெனக்

கத்திறல் வளர்க்கும் அருட்பெருஞ் ஜோதி

சாவா நிலையிது தந்தனம் உனக்கே

ஆவா எனஅருள் அருட்பெருஞ் ஜோதி

218

சாதியும் மதமும் சமயமும் பொய்என

ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ் ஜோதி

மயர்ந்திடேல் சிறிதும் மனந்தளர்ந் தஞ்சேல்

அயர்ந்திடேல் என்றருள் அருட்பெருஞ் ஜோதி

தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருளியல்

ஆசறத் தெரித்த அருட்பெருஞ் ஜோதி

காட்டிய உலகெலாம் கருணையால் சித்தியின்

ஆட்டியல் புரியும் அருட்பெருஞ் ஜோதி

எங்குலம் எம்மினம் என்பதொண் ணூற்றா

றங்குலம் என்றருள் அருட்பெருஞ் ஜோதி

220

எம்மதம் எம்இறை என்ப உயிர்த்திரள்

அம்மதம் என்றருள் அருட்பெருஞ் ஜோதி

கூறிய கருநிலை குலவிய கீழ்மேல்

ஆறியல் எனஉரை அருட்பெருஞ் ஜோதி

எண்தர முடியா திலங்கிய பற்பல

அண்டமும் நிறைந்தொளிர் அருட்பெருஞ் ஜோதி

சாருயிர்க் கெல்லாம் தாரக மாம்பரை

ஆருயிர்க் குயிராம் அருட்பெருஞ் ஜோதி

வாழிநீ டூழி வாழிஎன் றோங்குபேர்

ஆழியை அளித்த அருட்பெருஞ் ஜோதி

230

மாய்ந்தவர் மீட்டும் வருநெறி தந்திதை

ஆய்ந்திடென் றுரைத்த அருட்பெருஞ் ஜோதி

எச்சம் நினக்கிலை எல்லாம் பெருகஎன்

றச்சம் தவிர்த்தஎன் அருட்பெருஞ் ஜோதி

நீடுக நீயே நீள்உல கனைத்தும்நின்

றாடுக என்றஎன் அருட்பெருஞ் ஜோதி

முத்திறல் வடிவமும்(323) முன்னியாங் கெய்துறும்

அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

(323). முத்திறல் வடிவம் மூன்று வகை உடம்புகள்.

சுத்த தேகம், பிரணவ தேகம், ஞான தேகம்.

மூவகைச் சித்தியின் முடிபுகள் முழுவதும்

ஆவகை எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

249

கருமசித் திகளின் கலைபல கோடியும்

அரசுற எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

யோகசித் திகள்வகை உறுபல கோடியும்

ஆகஎன் றெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

ஞானசித் தியின்வகை நல்விரி வனைத்தும்

ஆனியின் றெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை

அடைவதென் றருளிய அருட்பெருஞ் ஜோதி

முத்திஎன் பதுநிலை முன்னுறு சாதனம்

அத்தக வென்றஎன் அருட்பெருஞ் ஜோதி

250

சித்திஎன் பதுநிலை சேர்ந்த அனுபவம்

அத்திறம் என்றஎன் அருட்பெருஞ் ஜோதி

ஏகசிற் சித்தியே இயல்உற அனேகம்

ஆகிய தென்றஎன் அருட்பெருஞ் ஜோதி

இன்பசித் தியின்இயல் ஏகம்அ னேகம்

அன்பருக் கென்றஎன் அருட்பெருஞ் ஜோதி

எட்டிரண் டென்பன இயலும்முற் படிஎன

அட்டநின் றருளிய அருட்பெருஞ் ஜோதி

இப்படி கண்டனை இனிஉறு படிஎலாம்

அப்படி யேஎனும் அருட்பெருஞ் ஜோதி

260

படிமுடி கடந்தனை பார்இது பார்என

அடிமுடி காட்டிய அருட்பெருஞ் ஜோதி

சோதியுட் சோதியின் சொருபமே அந்தம்

ஆதியென் றருளிய அருட்பெருஞ் ஜோதி

இந்தசிற் ஜோதியின் இயல்உரு ஆதி

அந்தமென் றருளிய அருட்பெருஞ் ஜோதி

ஆதியும் அந்தமும் அறிந்தனை நீயே

ஆதியென் றருளிய அருட்பெருஞ் ஜோதி

நல்அமு தென்ஒரு நாஉளம் காட்டிஎன்

அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

270

கற்பகம் என்னுளங் கைதனில் கொடுத்தே

அற்புதம் இயற்றெனும் அருட்பெருஞ் ஜோதி

கதிர்நலம் என்இரு கண்களிற் கொடுத்தே

அதிசயம் இயற்றெனும் அருட்பெருஞ் ஜோதி

அருள்ஒளி என்தனி அறிவினில் விரித்தே

அருள்நெறி விளக்கெனும் அருட்பெருஞ் ஜோதி

பரைஒளி என்மனப் பதியினில் விரித்தே

அரசது இயற்றெனும் அருட்பெருஞ் ஜோதி

வல்லப சத்திகள் வகைஎலாம் அளித்தென

தல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

280

ஆரியல் அகம்புறம் அகப்புறம் புறப்புறம்

ஆரமு தெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

சூரிய சந்திர ஜோதியுட் ஜோதிஎன்

றாரியர் புகழ்தரும் அருட்பெருஞ் ஜோதி

பிறிவே தினிஉனைப் பிடித்தனம் உனக்குநம்

அறிவே வடிவெனும் அருட்பெருஞ் ஜோதி

எஞ்சேல் உலகினில் யாதொன்று பற்றியும்

அஞ்சேல் என்றருள் அருட்பெருஞ் ஜோதி

மாண்டுழ லாவகை வந்திளங் காலையே

ஆண்டுகொண் டருளிய அருட்பெருஞ் ஜோதி

290

பற்றுகள் அனைத்தையும் பற்றறத் தவிர்த்தென

தற்றமும் நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

சமயம் குலமுதல் சார்பெலாம் விடுத்த

அமயந் தோன்றிய அருட்பெருஞ் ஜோதி

வாய்தற் குரித்தெனும் மறைஆ கமங்களால்

ஆய்தற் கரிய அருட்பெருஞ் ஜோதி

எல்லாம் வல்லசித் தெனக்களித் தெனக்குனை

அல்லா திலைஎனும் அருட்பெருஞ் ஜோதி

நவையிலா உளத்தில் நாடிய நாடிய

அவைஎலாம் அளிக்கும் அருட்பெருஞ் ஜோதி

300

கூற்றுதைத் தென்பால் குற்றமும் குணங்கொண்

டாற்றல்மிக் களித்த அருட்பெருஞ் ஜோதி

நன்றறி வறியா நாயினேன் தனையும்

அன்றுவந் தாண்ட அருட்பெருஞ் ஜோதி

நாயினும் கடையேன் ஈயினும் இழிந்தேன்

ஆயினும் அருளிய அருட்பெருஞ் ஜோதி

தோத்திரம் புகலேன் பாத்திரம் அல்லேன்

ஆத்திரம் அளித்த அருட்பெருஞ் ஜோதி

எச்சோ தனைகளும் இயற்றா தெனக்கே

அச்சோ என்றருள் அருட்பெருஞ் ஜோதி

310

ஏறா நிலைநடு ஏற்றிஎன் றனைஈண்

டாறாறு கடத்திய அருட்பெருஞ் ஜோதி

தாபத் துயரம் தவிர்த்துல குறும்எலா

ஆபத்தும் நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

மருட்பகை தவிர்த்தெனை வாழ்வித் தெனக்கே

அருட்குரு வாகிய அருட்பெருஞ் ஜோதி

உருவமும் அருவமும் உபயமும் ஆகிய

அருள்நிலை தெரித்த அருட்பெருஞ் ஜோதி

இருள்அறுத் தென்உளத் தெண்ணியாங் கருளி

அருளமு தளித்த அருட்பெருஞ் ஜோதி

320

தெருள்நிலை இதுவெனத் தெருட்டிஎன் உளத்திருந்

தருள்நிலை காட்டிய அருட்பெருஞ் ஜோதி

பொருட்பதம் எல்லாம் புரிந்துமேல் ஓங்கிய

அருட்பதம் அளித்த அருட்பெருஞ் ஜோதி

உருள்சக டாகிய உளஞ்சலி யாவகை

அருள்வழி நிறுத்திய அருட்பெருஞ் ஜோதி

வெருள்மன மாயை வினைஇருள் நீக்கிஉள்

அருள்விளக் கேற்றிய அருட்பெருஞ் ஜோதி

சுருள்விரி வுடைமனச் சுழல்எலாம் அறுத்தே

அருள்ஒளி நிரப்பிய அருட்பெருஞ் ஜோதி

330

விருப்போ டிகல்உறு வெறுப்பும் தவிர்த்தே

அருட்பே றளித்த அருட்பெருஞ் ஜோதி

அருட்பேர் தரித்துல கனைத்தும் மலர்ந்திட
அருட்சீர் அளித்த அருட்பெருஞ் ஜோதி

உலகெலாம் பரவஎன் உள்ளத் திருந்தே
அலகிலா ஒளிசெய் அருட்பெருஞ் ஜோதி

விண்ணினுள் விண்ணாய் விண்ணடு விண்ணாய்
அண்ணி நிறைந்த அருட்பெருஞ் ஜோதி

விண்ணுறு விண்ணாய் விண்ணிலை விண்ணாய்
அண்ணி வயங்கும் அருட்பெருஞ் ஜோதி

340

காற்றினுட் காற்றாய்க் காற்றிடைக் காற்றாய்
ஆற்றலின் ஓங்கும்(324) அருட்பெருஞ் ஜோதி

(324). ஓங்கிய - ச.மு.க. பதிப்பு.

காற்றுறு காற்றாய்க் கானிலைக் காற்றாய்
ஆற்ற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

அனலினுள் அனலாய் அனல்நடு அனலாய்
அனலுற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி

அனலுறும் அனலாய் அனல்நிலை அனலாய்
அனலுற வயங்கும் அருட்பெருஞ் ஜோதி

புனலினுள் புனலாய்ப் புனலிடைப் புனலாய்
அனைஎன வயங்கும் அருட்பெருஞ் ஜோதி

350

புனலுறு புனலாய்ப் புனல்நிலைப் புனலாய்
அனைஎனப் பெருகும் அருட்பெஞ் ஜோதி

புவியினுள் புவியாய்ப் புவிநடுப் புவியாய்
அவைதர வயங்கும் அருட்பெருஞ் ஜோதி

புவியுறு புவியாய்ப் புவிநிலைப் புவியாய்
அவைகொள விரிந்த அருட்பெருஞ் ஜோதி

விண்ணிலை சிவத்தின் வியனிலை அளவி
அண்ணுற அமைந்த அருட்பெருஞ் ஜோதி

வளிநிலைச் சத்தியின் வளர்நிலை அளவி
அளிஉற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

360

நெருப்பது நிலைநடு நிலைஎலாம் அளவி
அருப்பிட வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீர்நிலை திரைவளர் நிலைதனை அளவி
ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புவிநிலைச் சுத்தமாம் பொற்பதி அளவி
அவையுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணினில் திண்மையை வகுத்ததிற் கிடக்கை
அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணினில் பொன்மை வகுத்ததில் ஐம்மையை
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

379

மண்ணினில் ஐம்பூ வகுத்ததில் ஐந்திறம்
அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணினில் நாற்றம் வகுத்ததில்(325) பல்வகை
அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

(325). வகுத்தது - சாலையில் உள்ள அடிகள் கையெழுத்துப் படி.

மண்ணினில் பற்பல வகைகரு நிலஇயல்
அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணினில் ஐந்தியல் வகுத்ததில் பல்பயன்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணிடை அடிநிலை வகுத்ததில் பல்நிலை
அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

380

மண்ணில்ஐந் தைந்து வகையும் கலந்துகொண்
டண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணியல் சத்திகள் மண்செயல் சத்திகள்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணுருச் சத்திகள் மண்கலைச் சத்திகள்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணொளிச் சத்திகள் மண்கருச் சத்திகள்

அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மண்கணச் சத்திகள் வகைபல பலவும்

அண்கொள அமைத்த அருட்பெருஞ் ஜோதி

399

மண்ணிலைச் சத்தர்கள் வகைபல பலவும்

அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

மண்கரு உயிர்த்தொகை வகைவிரி பலவா

அண்கொள அமைத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணினிற் பொருள்பல வகைவிரி வெவ்வே

றண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணுறு நிலைபல வகுத்ததிற் செயல்பல

அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

மண்ணியல் பலபல வகுத்ததிற் பிறவும்(326)

அண்ணுற வமைத்த வருட்பெருஞ் ஜோதி

(326). ஆ. பா. பதிப்பைத் தவிர ஏனைய பதிப்புகள் அனைத்திலும்,

சாலையிலுள்ள அடிகள் கையெழுத்துப் படியிலும் 399, 400 ஆம் அடிகள்

401, 402 ஆக உள்ளன. ஆ.பா. பதிப்பில் மட்டும் இப்பதிப்பில்

உள்ளவாறு காணப்படுகிறது.

400

மண்ணிடைப் பக்குவம் வகுத்ததில் பயன்பல
அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

நீரினில் தண்மையும் நிகழ்ஊ றொழுக்கமும்
ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீரினிற் பசுமையை நிறுத்தி அதிற்பல
ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடைப் பூவியல் நிகழ்உறு திறஇயல்
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீரினில் சுவைநிலை நிரைத்ததில் பல்வகை
ஆருறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

410

நீரினில் கருநிலை நிகழ்த்திய பற்பல
ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடை நான்கியல் நிலவுவித் ததிற்பல
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடை அடிநடு நிலைஉற வகுத்தனல்
ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடை ஒளிஇயல் நிகழ்பல குணஇயல்
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடைச் சத்திகள் நிகழ்வகை பலபல
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

429

நீரினில் சத்தர்கள் நிறைவகை உறைவகை

ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடை உயிர்பல நிகழ்உறு பொருள்பல

ஆருற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடை நிலைபல நிலைஉறு செயல்பல

ஆர்கொள வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீர்உறு பக்குவ நிறைவுறு பயன்பல

ஆருற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

நீர்இயல் பலபல நிறைத்ததிற் பிறவும்

ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

430

தீயினில் சூட்டியல் சேர்தரச்(327) செலவியல்

ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(327). சேர்பரச் - ஆ.சபாபதி சிவாசாரியார் அகவல் பதிப்பு., பி. இரா. பதிப்பு.

தீயினில் வெண்மைத் திகழ்இயல் பலவாய்

ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடைப் பூஎலாம் திகழுறு திறம்எலாம்

ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடை ஒளியே திகழுற அமைத்ததில்

ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடை அருநிலை திருநிலை கருநிலை

ஆயுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

௪௪0

தீயிடை மூவியல் செறிவித் ததிற்பல

ஆய்வகை அமைத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடை நடுநிலை திகழ்நடு நடுநிலை

ஆயுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடைப் பெருந்திறல் சித்திகள் பலபல

ஆயுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடைச் சித்துகள் செப்புறும் அனைத்தும்

ஆயுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடைச் சத்திகள் செறிதரு சத்தர்கள்

ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி

௪50

தீயிடை உயிர்பல திகழுறு பொருள்பல

ஆய்வகை அமைத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடை நிலைபல திகழ்செயல் பலபயன்

ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி

தீயினிற் பக்குவஞ் சேர்குணம் இயற்குணம்

ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி

தீயிடை உருக்கியல் சிறப்பியல் பொதுவியல்

ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

தீயியல் பலபல செறித்ததில் பலவும்

ஆயுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி

460

காற்றிடை அசைஇயல் கலைஇயல் உயிரியல்

ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றிடைப் பூவியல் கருதுறு திறஇயல்

ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றினில் ஊறியல் காட்டுறு பலபல

ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றினில் பெருநிலை கருநிலை அளவில

ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றிடை ஈரியல் காட்டி அதிற்பல

ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

470

காற்றினில் இடைநடு கடைநடு அகப்புறம்

ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றினில் குணம்பல கணம்பல வணம்பல

ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றிடைச் சத்திகள் கணக்கில உலப்பில

ஆற்றவும் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றிடைச் சத்தர்கள் கணிதங் கடந்தன

ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றிடை உயிர்பல கதிபல கலைபல

ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

௪௮0

காற்றிடை நானிலைக் கருவிகள் அனைத்தையும்

ஆற்றுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றிடை உணரியல் கருதியல் ஆதிய

ஆற்றுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றிடைச் செயல்எலாம் கருதிய பயன்எலாம்

ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றினில் பக்குவக் கதிஎலாம் விளைவித்

தாற்றலின் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காற்றினில் காலம் கருதுறு வகைஎலாம்

ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

௪௯0

காற்றியல் பலபல கணித்ததிற் பிறவும்

ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

வெளியிடைப் பகுதியின் விரிவியல் அணுவியல்

அளியுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

வெளியிடைப் பூஎலாம் வியப்புறு திறன்எலாம்

அளியுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

வெளியினில் ஒலிநிறை வியனிலை அனைத்தும்

அளியுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

வெளியிடைக் கருநிலை விரிநிலை அருநிலை

அளிகொள வகுத்த அருட்பெருஞ் ஜோதி

500

வெளியிடை முடிநிலை விளங்குற வகுத்தே

அளிபெற விளக்கும் அருட்பெருஞ் ஜோதி

வெளியினில் சத்திகள் வியப்புறு(328) சத்தர்கள்

அளியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(328). வியப்புற - சாலையிலுள்ள அடிகள் கையெழுத்துப் படி.

வெளியிடை ஒன்றே விரித்ததில் பற்பல

அளிதர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

வெளியிடை பலவே விரித்ததில் பற்பல

அளிதர அமைத்த அருட்பெருஞ் ஜோதி

வெளியிடை உயிரியல் வித்தியல் சித்தியல்

அளிபெற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

510

வெளியின் அனைத்தையும் விரித்ததில் பிறவும்

அளியுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

புறநடுவொடு கடை புணர்ப்பித் தொருமுதல்
அறமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புறந்தலை நடுவொடு புணர்ப்பித் தொருகடை
அறம்பெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகப்புற நடுக்கடை அணைவால் புறமுதல்
அகப்பட வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகப்புற நடுமுதல் அணைவால் புறக்கடை
அகப்பட அமைத்த அருட்பெருஞ் ஜோதி

530

கருதக நடுவொடு கடைஅணைந் தகமுதல்
அருளுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

தணிஅக நடுவொடு தலைஅணைந் தகக்கடை
அணியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகநடு புறக்கடை அணைந்தகப் புறமுதல்
அகமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகநடு புறத்தலை அணைந்தகப் புறக்கடை
அகலிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகநடு அதனால் அகப்புற நடுவை
அகமற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

539

அகப்புற நடுவால் அணிபுற நடுவை

அகப்பட அமைத்த அருட்பெருஞ் ஜோதி

புறநடு அதனால் புறப்புற நடுவை

அறமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புகலரும் அகண்ட பூரண நடுவால்

அகநடு வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புறப்புறக் கடைமுதல் புணர்ப்பால் புறப்புறம்

அறக்கணம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புறத்தியல் கடைமுதல் புணர்ப்பால் புறத்துறும்

அறக்கணம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

540

அகப்புறக் கடைமுதல் அணைவால் அக்கணம்(329)

அகத்துற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(329). அகக்கணம் - ச.மு.க. பதிப்பு.

அகக்கடை முதல்புணர்ப் பதனால் அகக்கணம்

அகத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

வானிடைக் காற்றும் காற்றிடை நெருப்பும்

ஆனற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நெருப்பிடை நீரும் நீரிடைப் புவியும்

அருப்பிட வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மேல் உயிர்ப்பும்

ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

559

புனல்மேல் புவியும் புவிமேல் புடைப்பும்

அனல்மேல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பகுதிவான் வெளியில் படர்ந்தமா பூத

அகல்வெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உயிர்வெளி இடையே உரைக்கரும் பகுதி

அயவெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உயிர்வெளி அதனை உணர்கலை வெளியில்

அயலற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

கலைவெளி அதனைக் கலப்பறு சுத்த

அலர்வெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி

560

சுத்தநல் வெளியைத் துரிசறு பரவெளி

அத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பரவெளி அதனைப் பரம்பர வெளியில்

அரசுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பரம்பர வெளியைப் பராபர வெளியில்

அரந்தெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பராபர வெளியைப் பகர்பெரு வெளியில்

அராவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பெருவெளி அதனைப் பெருஞ்சுக வெளியில்

அருளுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

579

குணமுதல் கருவிகள் கூடிய பகுதியில்

அணைவுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மனமுதல் கருவிகள் மன்னுயிர் வெளியிடை

அனமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காலமே முதலிய கருவிகள் கலைவெளி

ஆலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

துரிசறு கருவிகள் சுத்தநல் வெளியிடை

அரசுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

இவ்வெளி எல்லாம் இலங்கஅண் டங்கள்

அவ்வயின் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

580

ஓங்கிய அண்டம் ஒளிபெற முச்சுடர்

ஆங்கிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

சிருட்டித் தலைவரைச் சிருட்டிஅண் டங்களை

அருட்டிறல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

காவல்செய் தலைவரைக் காவல்அண் டங்களை

ஆவகை அமைத்த அருட்பெருஞ் ஜோதி

அழித்தல்செய் தலைவரை அவரண் டங்களை

அழுக்கற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

மறைத்திடு தலைவரை மற்றும்அண் டங்களை

அறத்தொடு வகுத்த அருட்பெருஞ் ஜோதி

590

தெளிவுசெய் தலைவரைத் திகழும்அண் டங்களை

அளிபெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

விந்துவாம் சத்தியை விந்தின்அண் டங்களை

அந்திறல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

ஓங்கார சத்திகள் உற்றஅண் டங்களை

ஆங்காக வமைத்த(330) அருட்பெருஞ் ஜோதி

(330). ஆங்காங் கமைத்த - முதற் பதிப்பு., பொ.சு., பி. இரா., ச.மு.க.

சத்தத் தலைவரைச் சாற்றும்அண் டங்களை

அத்தகை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நாதமாம் பிரமமும் நாதஅண் டங்களை

ஆதரம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

600

பகர்பரா சத்தியைப் பதியும்அண் டங்களும்

அகமற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பரசிவ பதியைப் பரசிவாண் டங்களை

அரசுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

எண்ணில்பல் சத்தியை எண்ணில்அண் டங்களை

அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அளவில்பல் சத்தரை அளவில் அண்டங்களை

அளவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உயிர்வகை அண்டம் உலப்பில எண்ணில

அயர்வற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

610

களவில கடல்வகை கங்கில கரைஇல

அளவில வகுத்த அருட்பெருஞ் ஜோதி

கடலவை அனைத்தும் கரைஇன்றி நிலையுற

அடல்அனல் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

கடல்களும் மலைகளும் கதிகளும் நதிகளும்

அடலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

கடலிடைப் பல்வளம் கணித்ததில் பல்உயிர்

அடலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மலையிடைப் பல்வளம் வகுத்ததில் பல்லுயிர்

அலைவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

620

ஒன்றினில் ஒன்றே ஒன்றிடை ஆயிரம்

அன்றற வகுத்த அருட்பெஞ் ஜோதி

பத்திடை ஆயிரம் பகரதில் கோடி

அத்துற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நூற்றிடை இலக்கம் நுவலதில் அனந்தம்

ஆற்றிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

கோடியில் அனந்த கோடிபல் கோடி

ஆடுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

வித்தியல் ஒன்றாய் விளைவியல் பலவாய்

அத்தகை அமைத்த அருட்பெருஞ் ஜோதி

630

விளைவியல் அனைத்தும் வித்திடை அடங்க

அளவுசெய் தமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்தும் பதமும் விளையுப கரிப்பும்

அத்திறல் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்திடை முளையும் முளையிடை விளைவும்

அத்தக அமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்தினுள் வித்தும் வித்ததில் வித்தும்

அத்திறம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

விளைவினுள் விளைவும் விளைவதில் விளைவும்

அளையுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

640

முளையதின் முளையும் முளையினுள் முளையும்

அளைதர அமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்திடைப் பதமும் பதத்திடை வித்தும்

அத்துற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

பதமதிற் பதமும் பதத்தினுள் பதமும்

அதிர்வற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

ஒற்றுமை வேற்றுமை உரிமைகள் அனைத்தும்

அற்றென வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பொருள்நிலை உறுப்பியல் பொதுவகை முதலிய

அருளுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

650

உறவினில் உறவும் உறவினில் பகையும்

அறனுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பகையினில் பகையும் பகையினில் உறவும்

அகைவுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பாதியும் முழுதும் பதிசெயும் அந்தமும்

ஆதியும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

துணையும் நிமித்தமும் துலங்கதின் அதுவும்

அணைவுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உருவதின் உருவும் உருவினுள் உருவும்

அருளுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

660

அருவினுள் அருவும் அருவதில் அருவும்

அருளியல் அமைத்த அருட்பெருஞ் ஜோதி

கரணமும் இடமும் கலைமுதல் அணையுமோர்

அரணிலை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உருவதில் அருவும் அருவதில் உருவும்

அருளுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி(331)

(331). ச.மு.க. பதிப்பில் இவ்விரண்டடிகள் முன்னும், மேல் இரண்டடிகள் பின்னுமாக உள்ளன.

வண்ணமும் வடிவும் மயங்கிய வகைபல

அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

சிறுமையில் சிறுமையும் சிறுமையில் பெருமையும்

அறிதர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

670

பெருமையில் பெருமையும் பெருமையில் சிறுமையும்

அருணிலை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

திண்மையில் திண்மையும் திண்மையில் நேர்மையும்

அண்மையின் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மென்மையில் மென்மையும் மென்மையில் வன்மையும்

அன்மையற் றமைத்த அருட்பெருஞ் ஜோதி

அடியினுள் அடியும் அடியிடை அடியும்

அடியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நடுவினுள் நடுவும் நடுவதில் நடுவும்

அடர்வுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

680

முடியினுள் முடியும் முடியினில் முடியும்
அடர்தர அமைத்த அருட்பெருஞ் ஜோதி
அகப்பூ அகவுறுப் பாக்க அதற்கவை
அகத்தே வகுத்த அருட்பெருஞ் ஜோதி
புறப்பூ புறத்தில் புணையுரு வாக்கிட
அறத்துடன் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அகப்புறப் பூஅகப் புறவுறுப் பியற்றிட
அகத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
புறப்புறப் பூவதில் புறப்புற உறுப்புற
அறத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

690

பாரிடை வேர்வையில் பையிடை முட்டையில்
ஆருயிர் அமைக்கும் அருட்பெருஞ் ஜோதி
ஊர்வன பறப்பன உறுவன நடப்பன
ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அசைவில அசைவுள ஆருயிர்த் திரள்பல
அசலற(332 )வகுத்த அருட்பெருஞ் ஜோதி

(332). அசைவற முதற் பதிப்பு., பொ.சு., பி. இரா., ச.மு.க.

அறிவொரு வகைமுதல் ஐவகை அறுவகை
அறிதர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

வெவ்வே றியலொடு வெவ்வேறு பயன்உற

அவ்வா றமைத்த அருட்பெருஞ் ஜோதி

700

சித்திர விசித்திர சிருட்டிகள் பலபல

அத்தகை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பெண்ணினுள் ஆணும் ஆணினுள் பெண்ணும்

அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பெண்ணினுள் மூன்றும் ஆணினுள் இரண்டும்

அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பெண்ணிடை நான்கும் ஆணிடை மூன்றும்

அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

பெண்ணியல் ஆணும் ஆணியல் பெண்ணும்

அண்ணுற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

710

பெண்திறல் புறத்தும் ஆண்திறல் அகத்தும்

அண்டுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பெண்ணியல் மனமும் ஆணியல் அறிவும்

அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

தனித்தனி வடிவினும் தக்கஆண் பெண்இயல்

அனைத்துற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உனற்கரும் உயிருள உடலுள உலகுள

அனைத்தையும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

ஓவுறா எழுவகை உயிர்முதல் அனைத்தும்

ஆவகை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

720

பைகளில் முட்டையில் பாரினில் வேர்வினில்

ஐபெற அமைத்த அருட்பெருஞ் ஜோதி

தாய்கருப் பையினுள் தங்கிய உயிர்களை

ஆய்வுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

முட்டைவாய்ப் பயிலும் முழுஉயிர்த் திரள்களை

அட்டமே காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

நிலம்பெறும் உயிர்வகை நீள்குழு அனைத்தும்

அலம்பெறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

வேர்வுற உதித்த மிகும்உயிர்த் திரள்களை

ஆர்வுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

730

உடலுறு பிணியால் உயிருடல் கெடாவகை

அடலுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

சிசுமுதல் பருவச் செயல்களின் உயிர்களை

அசைவறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

உயிருறும் உடலையும் உடலுறும் உயிரையும்

அயர்வறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

பாடுறும் அவத்தைகள் பலவினும் உயிர்களை

ஆடுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

முச்சுட ராதியால் எச்சக உயிரையும்

அச்சறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

740

வான்முகில் சத்தியால் மழைபொழி வித்துயிர்

ஆனறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

இன்புறு சத்தியால் எழில்மழை பொழிவித்

தன்புறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

எண்இயல் சத்தியால் எல்லா உலகினும்

அண்ணுயிர் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

அண்டப் புறப்புற அமுதம் பொழிந்துயிர்

அண்டுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

தேவரை எல்லாம் திகழ்புற(333) அமுதளித்

தாவகை காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

750

(333). திகழ்வுற முதற்பதிப்பு., பொ.சு., பி.இரா., ஆ.பா.

அகப்புற அமுதளித் தைவரா திகளை

அகப்படக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

தரும்அக அமுதால் சத்திசத் தர்களை

அருளினில் காக்கும் அருட்பெருஞ் ஜோதி

காலமும் நியதியும் காட்டிஎவ் வுயிரையும்

ஆலுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

விச்சையை இச்சையை விளைவித் துயிர்களை

அச்சறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

போகமும் களிப்பும் பொருந்துவித் துயிர்களை

ஆகமுட் காக்கும் அருட்பெருஞ் ஜோதி

760

கலையறி வளித்துக் களிப்பினில் உயிரெலாம்

அலைவறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

விடய நிகழ்ச்சியால் மிகுமுயிர் அனைத்தையும்

அடைவுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

துன்பளித் தாங்கே சுகமளித் துயிர்களை

அன்புறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

கரணேந் தியத்தால் களிப்புற உயிர்களை

அரணோர்ந்(334) தளித்தருள் அருட்பெருஞ் ஜோதி

(334). அரணேந்து - ச.மு.க. பதிப்பு.

எத்தகை எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்

கத்தகை அளித்தருள் அருட்பெருஞ் ஜோதி

770

எப்படி எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்

கப்படி அளித்தருள் அருட்பெருஞ் ஜோதி

ஏங்கா துயிர்த்திரள் எங்கெங் கிருந்தன
ஆங்காங் களித்தருள் அருட்பெருஞ் ஜோதி

சொல்லுறும் அசுத்தத் தொல்லுயிர்க் கவ்வகை
அல்லலில் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

சுத்தமும் அசுத்தமும் தோய்உயிர்க் கிருமையின்
அத்தகை காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

வாய்ந்திடும் சுத்த வகைஉயிர்க் கொருமையின்
ஆய்ந்துறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

780

எவைஎலாம் எவையெலாம் ஈண்டின ஈண்டின
அவைஎலாம் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

அண்டத் துரிசையும் அகிலத் துரிசையும்
அண்டற அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

பிண்டத் துரிசையும் பேருயிர்த் துரிசையும்
அண்டற அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

உயிருறு மாயையின் உறுவிரி வனைத்தும்
அயிரற அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

உயிர்உறும் இருவினை உறுவிரி வனைத்தும்
அயர்வற அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

790

காமப் புடைப்புயிர் கண்தொட ராவகை

ஆமறு அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

பொங்குறு வெகுளிப் புடைப்புகள் எல்லாம்

அங்கறு அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

மதம்புரை மோகமும் மற்றவும் ஆங்காங்

கதம்பெறு அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

வடுவுறும் அசுத்த வாதனை அனைத்தையும்

அடர்பற(335) அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

(335). அடர்வற முதற்பதிப்பு., பொ.சு., ச.மு.க.

சுத்தமும் அசுத்தமும் தோய்ந்தவா தனைகளை

அத்தகை அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

888

நால்வயிற் றுரிசு நண்ணுயிர் ஆதியில்

ஆலறு அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

நால்வயிற் படைப்பும் நால்வயிற் காப்பும்

ஆலறு அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

மூவிடத் திருமையின் முன்னிய தொழிற்கரில்(336)

ஆவிடத் தடக்கும் அருட்பெருஞ் ஜோதி

(336). தொழில்களில் - முதற்பதிப்பு., பொ.சு., பி.இரா.

மூவிட மும்மையின் முன்னிய தொழிற்கரில்(337)

ஆவிடம் அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

(337). தொழில்களில் - முதற்பதிப்பு., பொ.சு., பி.இரா.

தத்துவச் சேட்டையுந் தத்துவத் துரிசும்

அத்தகை அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

810

சுத்தமா நிலையில் சூழுறு விரிவை

அத்தகை அடக்கும் அருட்பெருஞ் ஜோதி

கரைவின்மா(338) மாயைக் கரும்பெருந் திரையால்

அரைசது(338) மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

(338). கரவின்மா, அரசது - முதற்பதிப்பு., பொ.சு., பி.இரா.

பேருறு நீலப் பெருந்திரை அதனால்

ஆருயிர் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

பச்சைத் திரையால் பரவெளி அதனை

அச்சுற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

செம்மைத் திரையால் சித்துறு வெளியை

அம்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

820

பொன்மைத் திரையால் பொருளுறு வெளியை

அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

வெண்மைத் திரையால் மெய்ப்பதி வெளியை

அண்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

கலப்புத் திரையால் கருதனு பவங்களை

அலப்புற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

விடய நிலைகளை வெவ்வேறு திரைகளால்
அடர்புற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
தத்துவ நிலைகளைத் தனித்தனித் திரையால்
அத்திறம் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
839
திரைமறைப் பெல்லாம் தீர்த்தாங் காங்கே
அரைசுறக் காட்டும் அருட்பெருஞ் ஜோதி
தோற்றமா மாயைத் தொடர்பறுத் தருளின்
ஆற்றலைக் காட்டும் அருட்பெருஞ் ஜோதி
சுத்தமா மாயைத் தொடர்பறுத் தருளை
அத்தகை காட்டும் அருட்பெருஞ் ஜோதி
எனைத்தா ணவமுதல் எல்லாந் தவிர்த்தே
அனுக்கிர கம்புரி அருட்பெருஞ் ஜோதி
விடய மறைப்பெலாம் விடுவித் துயிர்களை
அடைவுறத் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி
840
சொருப மறைப்பெலாம் தொலைப்பித் துயிர்களை
அருளினில் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி
மறைப்பின் மறந்தன(339) வருவித் தாங்கே
அறத்தொடு தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி
(339). மறைப்பின் மறைந்தன முதற்பதிப்பு., பொ.சு.

மறப்பின் மறந்தன - ச.மு.க. பதிப்பு.

எவ்வகை உயிர்களும் இன்புற ஆங்கே

அவ்வகை தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

கடவுளர் மறைப்பைக் கழந்தவர்க் கின்பம்

அடையுறத் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

சத்திகள் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்பம்

அத்துறத் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

850

சத்தர்கள் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்பம்

அத்தகை தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

படைக்கும் தலைவர்கள் பற்பல கோடியை

அடைப்புறப் படைக்கும் அருட்பெருஞ் ஜோதி

காக்கும் தலைவர்கள் கணக்கில்பல் கோடியை

ஆக்குறக் காக்கும் அருட்பெருஞ் ஜோதி

அடக்கும் தலைவர்கள் அளவிலர் தம்மையும்

அடர்ப்பற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

மறைக்கும் தலைவர்கள் வகைபல கோடியை

அறத்தொடு மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

860

தெருட்டும் தலைவர்கள் சேர்பல கோடியை

அருட்டிறம் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

ஐந்தொழி லாதிசெய் ஐவரா திகளை

ஐந்தொழி லாதிசெய் அருட்பெருஞ் ஜோதி

இறந்தவர் எல்லாம் எழுந்திட உலகில்

அறந்தலை அளித்த அருட்பெருஞ் ஜோதி

செத்தவர் எல்லாம் சிரித்தாங் கெழுதிறல்

அத்தகை காட்டிய அருட்பெருஞ் ஜோதி

இறந்தவர் எழுகஎன் றெண்ணியாங் கெழுப்பிட

அறந்துணை எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

870

செத்தவர் எழுகெனச் செப்பியாங் கெழுப்பிட

அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

சித்தெலாம் வல்ல திறல்அளித் தெனக்கே

அத்தன்என் றோங்கும் அருட்பெருஞ் ஜோதி

ஒன்றதி ரண்டது ஒன்றின்இ ரண்டது

ஒன்றினுள் ஒன்றது ஒன்றெனும் ஒன்றே

ஒன்றல இரண்டல ஒன்றின்இ ரண்டல

ஒன்றினுள் ஒன்றல ஒன்றெனும் ஒன்றே

ஒன்றினில் ஒன்றுள ஒன்றினில் ஒன்றில

ஒன்றுற ஒன்றிய ஒன்றெனும் ஒன்றே

880

களங்கநீத் துலகங் களிப்புற மெய்ந்நெறி

விளங்கஎன் உள்ளே விளங்குமெய்ப் பொருளே

மூவிரு நிலையின் முடிநடு முடிமேல்

ஓவற விளங்கும் ஒருமைமெய்ப் பொருளே

எழுநிலை மிசையே இன்புரு வாகி

வழுநிலை நீக்கி வயங்குமெய்ப் பொருளே

நவநிலை மிசையே நடுவுறு நடுவே

சிவமய மாகித் திகழ்ந்தமெய்ப் பொருளே

ஏகா தசநிலை யாததி னடுவே

ஏகா தனமிசை இருந்தமெய்ப் பொருளே

890

திரையோ தசநிலை சிவவெளி நடுவே

வரையோ தருசுக வாழ்க்கைமெய்ப் பொருளே

ஈரெண் நிலைஎன இயம்புமேல் நிலையில்

பூரண சுகமாய்ப் பொருந்துமெய்ப் பொருளே

எல்லா நிலைகளும் இசைந்தாங் காங்கே

எல்லா மாகி இலங்குமெய்ப் பொருளே

மனாதிகள் பொருந்தா வானடு வானாய்

அனாதிஉண் மையதாய் அமர்ந்தமெய்ப் பொருளே

தானொரு தானாய்த் தானே தானாய்

ஊனுயிர் விளக்கும் ஒருதனிப் பொருளே

900

அதுவினுள் அதுவாய் அதுவே அதுவாய்ப்

பொதுவினுள் நடிக்கும் பூரணப் பொருளே

இயல்பினுள் இயல்பாய் இயல்பே இயல்பாய்

உயலுற விளங்கும் ஒருதனிப் பொருளே

அருவினுள் அருவாய் அருஅரு அருவாய்

உருவினுள் விளங்கும் ஒருபரம் பொருளே

அலகிலாச் சித்தாய் அதுநிலை அதுவாய்

உலகெலாம் விளங்கும் ஒருதனிப் பொருளே

பொருளினுள் பொருளாய்ப் பொருளது பொருளாய்

ஒருமையின் விளங்கும் ஒருதனிப் பொருளே

910

ஆடுறு சித்திகள் அறுபத்து நான்கெழு

கோடியும் விளங்கக் குலவுமெய்ப் பொருளே

கூட்டுறு சித்திகள் கோடிபல் கோடியும்

ஆட்டுற விளங்கும் அருட்பெரும் பொருளே

அறிவுறு சித்திகள் அனந்தகோ டிகளும்

பிறிவற விளக்கும் பெருந்தனிப் பொருளே

வீடுகள் எல்லாம் விதிநெறி விளங்க

ஆடல்செய் தருளும் அரும்பெரும் பொருளே

பற்றுகள் எல்லாம் பதிநெறி விளங்க

உற்றரு ளாடல்செய் ஒருதனிப் பொருளே

௯௨௰

பரத்தினிற் பரமே பரத்தின்மேற் பரமே

பரத்தினுட் பரமே பரம்பரம் பரமே

பரம்பெறும் பரமே பரந்தரும் பரமே

பரம்பதம் பரமே பரஞ்சிதம் பரமே

பரம்புகழ் பரமே பரம்பகர் பரமே

பரஞ்சுக பரமே பரஞ்சிவ பரமே

பரங்கொள்சிற் பரமே பரஞ்செய்தற் பரமே

தரங்கொள்பொற் பரமே தனிப்பெரும் பரமே

வரம்பரா பரமே வணம்பரா பரமே

பரம்பரா பரமே பதம்பரா பரமே

௯௩௰

சத்திய பதமே சத்துவ பதமே

நித்திய பதமே நிற்குண பதமே

தத்துவ பதமே தற்பத பதமே

சித்துறு பதமே சிற்சுக பதமே

தம்பரம் பதமே தனிச்சுகம் பதமே

அம்பரம் பதமே அருட்பரம் பதமே

தந்திர பதமே சந்திர பதமே

மந்திர பதமே மந்தண பதமே

நவந்தரு பதமே நடந்தரு பதமே

சிவந்தரு பதமே சிவசிவ பதமே

௧௪௰

பிரமமெய்க் கதியே பிரமமெய்ப் பதியே

பிரமநிற் குணமே பிரமசிற் குணமே

பிரமமே பிரமப் பெருநிலை மிசையுறும்

பரமமே பரம பதந்தரும் சிவமே

அவனோ டவளாய் அதுவாய் அலவாய்

நவமா நிலைமிசை நண்ணிய சிவமே

எம்பொரு ளாகி எமக்கருள் புரியும்

செம்பொரு ளாகிய சிவமே சிவமே

ஒருநிலை இதுவே உயர்நிலை எனும்ஒரு

திருநிலை மேவிய சிவமே சிவமே

௧௫௰

மெய்வைத் தழியா வெறுவெளி நடுவுறு

தெய்வப் பதியாம் சிவமே சிவமே

புரைதவிர்த் தெனக்கே பொன்முடி சூட்டிச்

சிரமுற நாட்டிய சிவமே சிவமே

கல்வியும் சாகாக் கல்வியும் அழியாச்

செல்வமும் அளித்த சிவமே சிவமே

அருளமு தெனக்கே அளித்தருள் நெறிவாய்த்

தெருளுற வளர்க்கும் சிவமே சிவமே

சத்தெலா மாகியும் தானொரு தானாம்

சித்தெலாம் வல்லதோர் திருவருட் சிவமே

960

எங்கே கருணை இயற்கையின் உள்ளன

அங்கே விளங்கிய அருட்பெருஞ் சிவமே

ஆரே என்னினும் இரங்குகின் றார்க்குச்

சீரே அளிக்கும் சிதம்பர சிவமே

பொய்ந்நெறி அனைத்தினும் புகுத்தா தெனையருள்

செந்நெறி செலுத்திய சிற்சபைச் சிவமே

கொல்லா நெறியே குருவருள் நெறிஎனப்

பல்கால் எனக்குப் பகர்ந்தமெய்ச் சிவமே

உயிரெலாம் பொதுவின் உளம்பட நோக்குக

செயிரெலாம் விடுகெனச் செப்பிய சிவமே

970

பயிர்ப்புறு கரணப் பரிசுகள் பற்பல

உயிர்த்திரள் ஒன்றென உரைத்தமெய்ச் சிவமே

உயிருள்யாம் எம்முள் உயிரிவை உணர்ந்தே

உயிர்நலம் பரவுகென் றுரைத்தமெய்ச் சிவமே

இயலருள் ஒளிஓர் ஏகதே சத்தினாம்

உயிர்ஒளி காண்கஎன் றுரைத்தமெய்ச் சிவமே

அருளலா தணுவும் அசைந்திடா ததனால்

அருள்நலம் பரவுகென் றறைந்தமெய்ச் சிவமே

அருளுறின் எல்லாம் ஆகும்ஈ துண்மை

அருளுற முயல்கஎன் றருளிய சிவமே

980

அருள்நெறி ஒன்றே தெருள்நெறி மற்றெலாம்

இருள்நெறி எனஎனக் கியம்பிய சிவமே

அருள்பெறில் துரும்புஓர் ஐந்தொழில் புரியும்

தெருள்இது எனவே செப்பிய சிவமே

அருளறி வொன்றே அறிவுமற் றெல்லாம்

மருளறி வென்றே வகுத்தமெய்ச் சிவமே

அருட்சுகம் ஒன்றே அரும்பெறல் பெருஞ்சுகம்

மருட்சுகம் பிறஎன வகுத்தமெய்ச் சிவமே

அருட்பே றதுவே யரும்பெறற் பெரும்பே

றிருட்பே றறுக்கும்என் றியம்பிய சிவமே

990

அருட்டனி வல்லபம் அதுவே எலாம்செய்

பொருட்டனிச் சித்தெனப் புகன்றமெய்ச் சிவமே

அருளறி யார்தமை அறியார் எம்மையும்

பொருளறி யார்எனப் புகன்றமெய்ச் சிவமே

அருள்நிலை ஒன்றே அனைத்தும் பெறுநிலை

பொருள்நிலை காண்கெனப் புகன்றமெய்ச் சிவமே

அருள்வழி வதுவே அழியாத் தனிவழி
வருள்பெற முயலுகென் றருளிய சிவமே
அருளே நம்மியல் அருளே நம்உரு
அருளே நம்வடி வாம்என்ற சிவமே
1000
அருளே நம்அடி அருளே நம்முடி
அருளே நம்நடு வாம்என்ற சிவமே
அருளே நம்அறி வருளே நம்மனம்
அருளே நம்குண மாம்என்ற சிவமே
அருளே நம்பதி அருளே நம்பதம்
அருளே நம்இட மாம்என்ற சிவமே
அருளே நம்துணை அருளே நம்தொழில்
அருளே நம்விருப் பாம்என்ற சிவமே
அருளே நம்பொருள் அருளே நம்ஒளி
அருளே நாம்அறி வாய்என்ற சிவமே
1010
அருளே நம்குலம் அருளே நம்இனம்
அருளே நாம்அறி வாய்என்ற சிவமே
அருளே நம்சுகம் அருளே நம்பெயர்
அருளே நாம்அறி வாய்என்ற சிவமே
அருள்ஒளி அடைந்தனை அருள்அமு துண்டனை

அருண்மதி வாழ்களன் றருளிய சிவமே

அருள்நிலை பெற்றனை அருள்வழி வுற்றனை

அருளர சியற்றுகென் றருளிய சிவமே

உள்ளகத் தமர்ந்தென துயிரில் கலந்தருள்

வள்ளல்சிற் றம்பலம் வளர்சிவ பதியே

1029

நிகரிலா இன்ப நிலைநடு வைத்தெனைத்

தகவொடு காக்கும் தனிச்சிவ பதியே

சுத்தசன் மார்க்கச் சுகநிலை தனில்எனைச்

சத்தியன் ஆக்கிய தனிச்சிவ பதியே

ஐவருங் காண்டற் கரும்பெரும் பொருளென்

கைவரப் புரிந்த கதிசிவ பதியே

துன்பம் தொலைத்தருட் சோதியால் நிறைந்த

இன்பம் எனக்கருள் எழிற்சிவ பதியே

சித்தமும் வாக்கும் செல்லாப் பெருநிலை

ஒத்துற வேற்றிய ஒருசிவ பதியே

1030

கையற வனைத்தும் கழிந்தெனைத் தேற்றி

வையமேல் வைத்த மாசிவ பதியே

இன்புறச் சிறியேன் எண்ணுதோ றெண்ணுதோ

றன்பொடென் கண்ணுறும் அருட்சிவ பதியே

பிழைஎலாம் பொறுத்தெனுள் பிறங்கிய கருணை

மழைஎலாம் பொழிந்து வளர்சிவ பதியே

உளத்தினும் கண்ணினும் உயிரினும் எனது

குளத்தினும் நிரம்பிய குருசிவ பதியே

பரமுடன் அபரம் பகர்நிலை இவையெனத்

திறமுற(340) அருளிய திருவருட் குருவே

1040

(340). திறமுற - சாலையில் உள்ள அடிகள் கையெழுத்துப் படி., சிவாசாரியார் பதிப்பு., பி.இரா பதிப்பு.

மதிநிலை இரவியின் வளர்நிலை அனலின்

திதிநிலை அனைத்தும் தெரித்தசற் குருவே

கணநிலை அவற்றின் கருநிலை அனைத்தும்

குணமுறத் தெரித்துட் குலவுசற் குருவே

பதிநிலை பசுநிலை பாச நிலைஎலாம்

மதியுறத் தெரித்துள் வயங்குசற் குருவே

பிரம ரகசியம் பேசிஎன் உளத்தே

தரமுற விளங்கும் சாந்தசற் குருவே

பரம ரகசியம் பகர்ந்தென துளத்தே

வரமுற வளர்த்து வயங்குசற் குருவே

1050

சிவரக சியம்எலாம் தெரிவித்(341)தெனக்கே

நவநிலை காட்டிய ஞானசற் குருவே

(341). தெளிவித் தெனக்கே - ச.மு.க. பதிப்பு.

சத்தியல் அனைத்தும் சித்தியல் முழுதும்

அத்தகை தெரித்த அருட்சிவ குருவே

அறிபவை எல்லாம் அறிவித் தென்னுள்ளே

பிறிவற விளங்கும் பெரியசற் குருவே

கேட்பவை எல்லாம் கேட்பித் தென்உளே342

வேட்கையின் விளங்கும் விமலசற் குருவே

342. கேட்பித் தெனுள்ளே - சாலைப் படி., சிவாசாரியார்., பி.இரா., ச.மு.க.

காண்பவை எல்லாம் காட்டுவித் தெனக்கே

மாண்பதம் அளித்து வயங்குசற் குருவே

1060

செய்பவை எல்லாம் செய்வித் தெனக்கே

உய்பவை அளித்தெனுள் ஓங்குசற் குருவே

உண்பவை எல்லாம் உண்ணுவித் தென்னுள்

பண்பினில் விளங்கும் பரமசற் குருவே

சாகாக் கல்வியின் தரம்எலாம் கற்பித்

தேகாக் கரப்பொருள் ஈந்தசற் குருவே

சத்திய மாம்சிவ சித்திகள் அனைத்தையும்

மெய்த்தகை அளித்தெனுள் விளங்குசற் குருவே

எல்லா நிலைகளும் ஏற்றிச் சித்தெலாம்
வல்லான் எனஎனை வைத்தசற் குருவே

1979

சீருற அருளாம் தேசுற அழியாப்
பேருற என்னைப் பெற்றநற் றாயே

பொருந்திய அருட்பெரும் போகமே உறுகெனப்
பெருந்தய வால்எனைப் பெற்றநற் றாயே

ஆன்றசன் மார்க்கம் அணிபெற எனைத்தான்
ஈன்றமு தளித்த இனியநற் றாயே

பசித்திடு தோறும்என் பால்அணைந் தருளால்
வசித்தமு தருள்புரி வாய்மைநற் றாயே

தளர்ந்ததோ றடியேன் சார்பணைந் தென்னை
உளந்தெளி வித்த ஒருமைநற் றாயே

1980

அருளமு தேமுதல் ஐவகை அமுதமும்
தெருளுற எனக்கருள் செல்வநற் றாயே

இயலமு தேமுதல் எழுவகை அமுதமும்
உயலுற எனக்கருள் உரியநற் றாயே

நண்புறும் எண்வகை நவவகை அமுதமும்
பண்புற எனக்கருள் பண்புடைத் தாயே

மற்றுள அமுத வகைஎலாம் எனக்கே

உற்றுண வளித்தருள் ஓங்குநற் றாயே

கலக்கமும் அச்சமும் கழிந்தென துளத்தே

அலக்கணும் தவிர்த்தருள் அன்புடைத் தாயே

1090

துய்ப்பினில் அனைத்தும் சுகம்பெற அளித்தெனக்

கெய்ப்பெலாந் தவிர்த்த இன்புடைத் தாயே

சித்திகள் எல்லாம் தெளிந்திட எனக்கே

சத்தியை அளித்த தயவுடைத் தாயே

சத்தினி பாதந் தனைஅளித் தெனைமேல்

வைத்தமு தளித்த மரபுடைத் தாயே

சத்திசத் தர்கள்எலாஞ் சார்ந்தென தேவல்செய்

சித்தியை அளித்த தெய்வநற் றாயே

தன்னிகர் இல்லாத் தலைவனைக் காட்டியே

என்னைமேல் ஏற்றிய இனியநற் றாயே

1100

வெளிப்பட விரும்பிய விளைவெலாம் எனக்கே

அளித்தளித் தின்புசெய் அன்புடைத் தாயே

எண்ணகத் தொடுபுறத் தென்னைஎஞ் ஞான்றும்

கண்எனக் காக்கும் கருணைநற் றாயே

இன்னருள் அமுதளித் திறவாத் திறல்புரிந்

தென்னை வளர்த்திடும் இன்புடைத் தாயே

என்னுடல் என்னுயிர் என்னறி வெல்லாம்

தன்னஎன் றாக்கிய தயவுடைத் தாயே

தெரியா வகையால் சிறியேன் தளர்ந்திடத்

தரியா தணைத்த தயவுடைத் தாயே

1119

சினமுதல் அனைத்தையுந் தீர்த்தெனை நனவினும்

கனவினும் பிரியாக் கருணைநற் றாயே

தூக்கமும் சோம்பும்என் துன்பமும் அச்சமும்

ஏக்கமும் நீக்கிய என்தனித் தாயே

துன்பெலாம் தவிர்த்துளே அன்பெலாம் நிரம்ப

இன்பெலாம் அளித்த என்தனித் தந்தையே

எல்லா நன்மையும் என்தனக் களித்த

எல்லாம் வல்லசித் தென்தனித் தந்தையே

நாயிற் கடையேன் நலம்பெறக் காட்டிய

தாயிற் பெரிதும் தயவுடைத் தந்தையே

1120

அறிவிலாப் பருவத் தறிவெனக் களித்தே

பிறிவிலா தமர்ந்த பேரருள் தந்தையே

புன்னிகர் இல்லேன் பொருட்டிவண் அடைந்த

தன்னிகர் இல்லாத் தனிப்பெருந் தந்தையே

அகத்தினும் புறத்தினும் அமர்ந்தருட் ஜோதி

சகத்தினில் எனக்கே தந்தமெய்த் தந்தையே

இணைஇலாக் களிப்புற் றிருந்திட எனக்கே

துணைஅடி சென்னியில் சூட்டிய தந்தையே

ஆதியீ றறியா அருளர சாட்சியில்

சோதிமா மகுடம் சூட்டிய தந்தையே

1139

எட்டிரண் டறிவித் தெனைத்தனி ஏற்றிப்

பட்டிமண் டபத்தில் பதித்தமெய்த் தந்தையே

தங்கோல் அளவது தந்தருட் ஜோதிச்

செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே

தன்பொருள் அனைத்தையும் தன்அர சாட்சியில்

என்பொருள் ஆக்கிய என்தனித் தந்தையே

தன்வடி வனைத்தையும் தன்அர சாட்சியில்

என்வடி வாக்கிய என்தனித் தந்தையே

தன்சித் தனைத்தையும் தன்சமு கத்தினில்

என்சித் தாக்கிய என்தனித் தந்தையே

1140

தன்வச மாகிய தத்துவம் அனைத்தையும்

என்வசம் ஆக்கிய என்உயிர்த் தந்தையே

தன்கையில் பிடித்த தனிஅருட் ஜோதியை

என்கையில் கொடுத்த என்தனித் தந்தையே

தன்னையும் தன்னருட் சத்தியின் வடிவையும்

என்னையும் ஒன்றென இயற்றிய தந்தையே

தன்இயல் என்இயல் தன்செயல் என்செயல்

என்ன இயற்றிய என்தனித் தந்தையே

தன்உரு என்உரு தன்உரை என்உரை

என்ன இயற்றிய என்தனித் தந்தையே

1150

சதுரப் பேரருள் தனிப்பெருந் தலைவன்என்

றெதிரற் றோங்கிய என்னுடைத் தந்தையே

மனவாக் கறியா வரைப்பினில் எனக்கே

இனவாக் கருளிய என்னுயிர்த் தந்தையே

உணர்ந்துணர்ந் துணரினும் உணராப் பெருநிலை

அணைந்திட எனக்கே அருளிய தந்தையே

துரியவாழ் வுடனே சுகபூ ரணம்எனும்

பெரியவாழ் வளித்த பெருந்தனித் தந்தையே

ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த

பேறளித் தாண்ட பெருந்தகைத் தந்தையே

1160

எவ்வகைத் திறத்தினும் எய்துதற் கரிதாம்

அவ்வகை நிலைஎனக் களித்தநல் தந்தையே

இனிப்பிற வாநெறி எனக்களித் தருளிய

தனிப்பெருந் தலைமைத் தந்தையே தந்தையே

பற்றயர்ந் தஞ்சிய பரிவுகண் டணைந்தெனைச்

சற்றும்அஞ் சேல்எனத் தாங்கிய துணையே

தளர்ந்தஅத் தருணம்என் தளர்வெலாம் தவிர்த்துட்

கிளர்ந்திட எனக்குக் கிடைத்தமெய்த் துணையே

துறைஇது வழிஇது துணிவிது நீசெயும்

முறைஇது எனவே மொழிந்தமெய்த் துணையே

1179

எங்குறு தீமையும் எனைத்தொட ராவகை

கங்குலும் பகலும்மெய்க் காவல்செய் துணையே

வேண்டிய வேண்டிய விருப்பெலாம் எனக்கே

ஈண்டிருந் தருள்புரி என்னுயிர்த் துணையே

இகத்தினும் பரத்தினும் எனக்கிடர் சாரா

தகத்தினும் புறத்தினும் அமர்ந்தமெய்த் துணையே

அயர்வற எனக்கே அருட்டுணை ஆகிஎன்

உயிரினும் சிறந்த ஒருமைஎன் நட்பே

அன்பினில் கலந்தென தறிவினில் பயின்றே

இன்பினில் அளைந்தஎன் இன்னுயிர் நட்பே

1189

நான்புரி வனஎலாம் தான்புரிந் தெனக்கே

வான்பத மளிக்க வாய்த்தநல் நட்பே

உள்ளமும் உணர்ச்சியும் உயிரும் கலந்துகொண்

டெள்ளுறு நெய்யில்என் உள்ளுறு நட்பே

செற்றமும் தீமையும் தீர்த்துநான் செய்த

குற்றமும் குணமாக் கொண்டஎன் நட்பே

குணங்குறி முதலிய குறித்திடா தெனையே

அணங்கறக் கலந்த அன்புடை நட்பே

பிணக்கும் பேதமும் பேயுல கோர்புகல்

கணக்கும் தீர்த்தெனைக் கலந்தநல் நட்பே

1190

சவலைநெஞ் சகத்தின் தளர்ச்சியும் அச்சமும்

கவலையும் தவிர்த்தெனைக் கலந்தநல் நட்பே

களைப்பறிந் தெடுத்துக் கலக்கம் தவிர்த்தெனக்

கிளைப்பறிந் துதவிய என்உயிர் உறவே

தன்னைத் தழுவுறு தரஞ்சிறி தறியா

என்னைத் தழுவிய என்உயிர் உறவே

மனக்குறை நீக்கிநல் வாழ்வளித் தென்றும்

எனக்குற வாகிய என்உயிர் உறவே

துன்னும் அனாதியே சூழ்ந்தெனைப் பிரியா

தென்உற வாகிய என்உயிர் உறவே

1200

என்றும்ஓர் நிலையாய் என்றும்ஓர் இயலாய்

என்றும்உள் ளதுவாம் என்தனிச் சத்தே
அனைத்துல கவைகளும் ஆங்காங் குணரினும்
இனைத்தென அறியா என்தனிச் சத்தே
பொதுமறை முடிகளும் புகலவை முடிகளும்
இதுஎனற் கரிதாம் என்தனிச் சத்தே
ஆகம முடிகளும் அவைபுகல் முடிகளும்
ஏகுதற் கரிதாம் என்தனிச் சத்தே
சத்தியம் சத்தியம் சத்தியம் எனவே
இத்தகை வழுத்தும் என்தனிச் சத்தே

1210

துரியமும் கடந்ததோர் பெரியவான் பொருள்என
உரைசெய் வேதங்கள் உன்னும்மெய்ச் சத்தே
அன்றதன் அப்பால் அதன்பரத் ததுதான்
என்றிட நிறைந்த என்தனிச் சத்தே
என்றும்உள் ளதுவாய் எங்கும்ஓர் நிறைவாய்
என்றும் விளங்கிடும் என்தனிச் சித்தே
சத்திகள் பலவாய்ச் சத்தர்கள் பலவாய்
இத்தகை விளங்கும் என்தனிச் சித்தே
தத்துவம் பலவாய்த் தத்துவி பலவாய்
இத்தகை விளங்கும் என்தனிச் சித்தே

1220

படிநிலை பலவாய்ப் பதநிலை பலவாய்

இடிவற விளங்கிடும் என்தனிச் சித்தே

மூர்த்தர்கள் பலவாய் மூர்த்திகள் பலவாய்

ஏற்பட விளக்கிடும் என்தனிச் சித்தே

உயிர்வகை பலவாய் உடல்வகை பலவாய்

இயலுற விளக்கிடும் என்தனிச் சித்தே

அறிவவை பலவாய் அறிவன பலவாய்

எறிவற விளக்கிடும் என்தனிச் சித்தே

நினைவவை பலவாய் நினைவன பலவாய்

இனைவற விளக்கிடும் என்தனிச் சித்தே

1239

காட்சிகள் பலவாய்க் காண்பன பலவாய்

ஏட்சியின் விளக்கிடும் என்தனிச் சித்தே

செய்வினை பலவாய்ச் செய்வன பலவாய்

எய்வற விளக்கிடும் என்தனிச் சித்தே

அண்ட சராசரம் அனைத்தையும் பிறவையும்

எண்தர விளக்கும் என்தனிச் சித்தே

எல்லாம் வல்லசித் தெனமறை புகன்றிட

எல்லாம் விளக்கிடும் என்தனிச் சித்தே

ஒன்றதில் ஒன்றென் றுரைக்கவும் படாதாய்

என்றும்ஓர் படித்தாம் என்தனி இன்பே

1240

இதுஅது என்னா இயலுடை அதுவாய்

எதிர்அற நிறைந்த என்தனி இன்பே

ஆக்குறும் அவத்தைகள் அனைத்தையும் கடந்துமேல்

ஏக்கற நிறைந்த என்தனி இன்பே

அறிவுக் கறிவினில் அதுவது அதுவாய்

எறிவற் றோங்கிய என்தனி இன்பே

விடயம் எவற்றினும் மேன்மேல் விளைந்தவை

இடைஇடை ஓங்கிய என்தனி இன்பே

இம்மையும் மறுமையும் இயம்பிடும் ஒருமையும்

எம்மையும் நிரம்பிடும் என்தனி இன்பே

1250

முத்தர்கள் சித்தர்கள் சத்திகள் சத்தர்கள்

எத்திறத் தவர்க்குமாம் என்தனி இன்பே

எல்லா நிலைகளின் எல்லா உயிர்உறும்

எல்லா இன்புமாம் என்தனி இன்பே

கரும்புறு சாறும் கனிந்தமுக் கனியின்

விரும்புறும் இரதமும் மிக்கதீம் பாலும்

குணங்கொள்கோற் றேனும் கூட்டிஒன் றாக்கி

மணங்கொளப் பதஞ்செய் வகையுற இயற்றிய

உணவெனப் பலகால்(343) உரைக்கினும் நிகரா

வணம்உறும் இன்ப மயமே அதுவாய்க்

1260

(343). பல்கால் - சாலைப் படி.,சிவாசாரியார்., ச.மு.க.

கலந்தறி வுருவாய்க் கருதுதற் கரிதாய்

நலந்தரு விளக்கமும் நவில்அருந் தண்மையும்

உள்ளதாய் என்றும் உள்ளதாய் என்னுள்

உள்ளதாய் என்றன் உயிர்உளம் உடம்புடன்

எல்லாம் இனிப்ப இயலுறு சுவைஅளித்

தெல்லாம் வல்லசித் தியற்கைய தாகிச்

சாகா வரமும் தனித்தபேர் அறிவும்

மாகா தலிற்சிவ வல்லப சத்தியும்

செயற்கரும் அனந்த சித்தியும் இன்பமும்

மயக்கறத் தருந்திறல் வண்மைய தாகிப்

1270

பூரண வடிவாய்ப் பொங்கிமேல் ததும்பி

ஆரண முடியுடன் ஆகம முடியும்

கடந்தென தறிவாம் கனமேல் சபைநடு

நடந்திகழ் கின்றமெஞ் ஞானஆ ரமுதே

சத்திய அமுதே தனித்திரு அமுதே

நித்திய அமுதே நிறைசிவ அமுதே

சச்சிதா னந்தத் தனிமுதல் அமுதே

மெய்ச்சிதா காச விளைவருள் அமுதே
ஆனந்த அமுதே அருளொளி அமுதே
தானந்த மில்லாத் தத்துவ அமுதே

1289

நவநிலை தரும்ஓர் நல்லதெள் ளமுதே
சிவநிலை தனிலே திரண்டஉள் ளமுதே
பொய்படாக் கருணைப் புண்ணிய அமுதே
கைபடாப் பெருஞ்சீர்க் கடவுள்வான் அமுதே
அகம்புறம் அகப்புறம் ஆகிய புறப்புறம்
உகந்தநான் கிடத்தும் ஓங்கிய அமுதே
பனிமுதல் நீக்கிய பரம்பர அமுதே
தனிமுத லாய சிதம்பர அமுதே
உலகெலாம் கொள்ளினும் உலப்பிலா அமுதே
அலகிலாப் பெருந்திறல் அற்புத அமுதே

1290

அண்டமும் அதன்மேல் அண்டமும் அவற்றுள
பண்டமும் காட்டிய பரம்பர மணியே
பிண்டமும் அதில்உறு பிண்டமும் அவற்றுள
பண்டமும் காட்டிய பராபர மணியே
நினைத்தவை நினைத்தவை நினைத்தாங் கெய்துற
அனைத்தையும் தரும்ஓர் அரும்பெறல் மணியே

விண்பதம் அனைத்தும் மேற்பத முழுவதும்

கண்பெற நடத்தும் ககனமா மணியே

பார்பதம் அனைத்தும் பகர்அடி முழுவதும்

சார்புற நடத்தும் சரஒளி மணியே

1300

அண்டகோ டிகள்எலாம் அரைக்கணத் தேகிக்

கண்டுகொண் டிடஒளிர் கலைநிறை மணியே

சராசர உயிர்தொறும் சாற்றிய பொருள்தொறும்

விராவியுள் விளங்கும் வித்தக மணியே

மூவரும் முனிவரும் முத்தரும் சித்தரும்

தேவரும் மதிக்கும் சித்திசெய் மணியே

தாழ்வெலாம் தவிர்த்துச் சகமிசை அழியா

வாழ்வெனக் களித்த வளர்ஒளி மணியே

நவமணி முதலிய நலமெலாம் தரும்ஒரு

சிவமணி எனும்அருட் செல்வமா மணியே

1310

வான்பெறற் கரிய வகைஎலாம் விரைந்து

நான்பெற அளித்த நாதமந் திரமே

கற்பம் பலபல கழியினும் அழியாப்

பொற்புற அளித்த புனிதமந் திரமே

அகரமும் உகரமும் அழியாச் சிகரமும்

வகரமும் ஆகிய வாய்மைமந் திரமே

ஐந்தென எட்டென ஆறென நான்கென

முந்துறு மறைமுறை மொழியுமந் திரமே

வேதமும் ஆகம விரிவுகள் அனைத்தும்

ஓதநின் றுலவா தோங்குமந் திரமே

1320

உடற்பிணி அனைத்தையும் உயிர்ப்பிணி அனைத்தையும்

அடர்ப்பறத் தவிர்த்த அருட்சிவ மருந்தே

சித்திக்கு மூலமாம் சிவமருந் தெனஉளம்

தித்திக்கும் ஞானத் திருவருள் மருந்தே

இறந்தவர் எல்லாம் எழுந்திடப் புரியும்

சிறந்தவல் லபம்உறு திருவருள் மருந்தே

மரணப் பெரும்பிணி வாரா வகைமிகு

கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே

நரைதிரை மூப்பவை நண்ணா வகைதரும்

உரைதரு பெருஞ்சீர் உடையநல் மருந்தே

1330

என்றே என்னினும் இளமையோ டிருக்க

நன்றே தரும்ஒரு ஞானமா மருந்தே

மலப்பிணி தவிர்த்தருள் வலந்தரு கின்றதோர்

நலத்தகை அதுஎன நாட்டிய மருந்தே

சிற்சபை நடுவே திருநடம் புரியும்
அற்புத மருந்தெனும் ஆனந்த மருந்தே
இடையுறப் படாத இயற்கை விளக்கமாய்த்
தடையொன்றும் இல்லாத் தகவுடை யதுவாய்
மாற்றிவை என்ன மதித்தளப் பரிதாய்
ஊற்றமும் வண்ணமும் ஒருங்குடை யதுவாய்க்

1340

காட்சிக் கினியநற் கலையுடை யதுவாய்
ஆட்சிக் குரியபன் மாட்சியும் உடைத்தாய்
கைதவர் கனவினும் காண்டற் கரிதாய்ச்
செய்தவப் பயனாம் திருவருள் வலத்தால்
உளம்பெறும் இடம்எலாம் உதவுக எனவே
வளம்பட வாய்த்த மன்னிய பொன்னே
புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்தசெம் பொன்னே
மும்மையும் தரும்ஒரு செம்மையை உடைத்தாய்
இம்மையே கிடைத்திங் கிலங்கிய பொன்னே

1350

எடுத்தெடுத் துதவினும் என்றும் குறையா
தடுத்தடுத் தோங்குமெய் அருளுடைப் பொன்னே
தளர்ந்திடேல் எடுக்கின் வளர்ந்திடு வேம்எனக்

கிளர்ந்திட உரைத்துக் கிடைத்தசெம் பொன்னே

எண்ணிய தோறும் இயற்றுக என்றெனை

அண்ணிஎன் கரத்தில் அமர்ந்தபைம் பொன்னே

நீகேள் மறக்கினும் நின்னையாம் விட்டுப்

போகேம் எனஎனைப் பொருந்திய பொன்னே

எண்ணிய எண்ணியாங் கெய்திட எனக்குப்

பண்ணிய தவத்தால் பழுத்தசெம் பொன்னே

1360

விண்ணியல் தலைவரும் வியந்திட எனக்குப்

புண்ணியப் பயனால் பூத்தசெம் பொன்னே

நால்வகை நெறியினும் நாட்டுக எனவே

பால்வகை முழுதும் பணித்தபைம் பொன்னே

எழுவகை நெறியினும் இயற்றுக எனவே

முழுவகை காட்டி முயங்கிய பொன்னே

எண்ணிய படிஎலாம் இயற்றுக என்றெனைப்

புண்ணிய பலத்தால் பொருந்திய நிதியே

ஊழிதோ றூழி உலப்புறா தோங்கி

வாழிஎன் றெனக்கு வாய்த்தநல் நிதியே

1370

இதமுற(344) ஊழிதோ றெடுத்தெடுத் துலகோர்க்

குதவினும் உலவா தோங்குநல் நிதியே

(344). இதமுறு - ஆ.பா.

இருநிதி எழுநிதி இயல்நவ நிதிமுதல்

திருநிதி எல்லாம் தரும்ஒரு நிதியே

எவ்வகை நிதிகளும் இந்தமா நிதியிடை

அவ்வகை கிடைக்கும்என் றருளிய நிதியே

அற்புதம் விளங்கும் அருட்பெரு நிதியே

கற்பனை கடந்த கருணைமா நிதியே

நற்குண நிதியே சற்குண நிதியே

நிர்க்குண நிதியே சிற்குண நிதியே

1380

பளகிலா தோங்கும் பளிக்குமா மலையே

வளம்எலாம் நிறைந்த மாணிக்க மலையே

மதியுற விளங்கும் மரகத மலையே

வதிதரு பேரொளி வச்சிர மலையே

உரைமனங் கடந்தாங் கோங்குபொன் மலையே

துரியமேல் வெளியில் சோதிமா மலையே

புற்புதந் திரைநுரை புரைமுதல் இலதோர்

அற்புதக் கடலே அமுதத்தண் கடலே(345)

(345). தெண் கடலே  முதற்பதிப்பு., பொ.சு., பி.இரா., ச.மு.க.

இருட்கலை தவிர்த்தொளி எல்லாம் வழங்கிய

அருட்பெருங் கடலே ஆனந்தக் கடலே

1399

பவக்கடல் கடந்துநான் பார்த்தபோ தருகே
உவப்புறு வளங்கொண் டோ ங்கிய கரையே
என்றுயர்ச் சோடைகள் எல்லாம் தவிர்த்துளம்
நன்றுற விளங்கிய நந்தனக் காவே
சேற்றுநீர் இன்றிநல் தீஞ்சுவை தரும்லூர்
ஊற்றுநீர் நிரம்ப உடையபூந் தடமே
கோடைவாய் விரிந்த குளிர்தரு நிழலே
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே
களைப்பறக் கிடைத்த கருணைநன் னீரே
இளைப்பற வாய்த்த இன்சுவை உணவே

1400

தென்னைவாய்க் கிடைத்த செவ்விள நீரே
தென்னைவான் பலத்தில்(346) திருகுதீம் பாலே
(346). பலத்தின் - ச.மு.க. பதிப்பு.
நீர்நசை தவிர்க்கும் நெல்லியங் கனியே
வேர்விளை பலவின் மென்சுவைச் சுளையே
கட்டுமாம் பழமே கதலிவான் பழமே
இட்டநற் சுவைசெய் இலந்தையங் கனியே
புனிதவான் தருவில் புதுமையாம் பலமே
கனிஎலாம் கூட்டிக் கலந்ததீஞ் சுவையே

இதந்தரு(347) கரும்பில் எடுத்ததீஞ் சாறே
பதந்தரு வெல்லப் பாகினின் சுவையே

1419

(347). ஓர் அன்பர் படியில் மட்டும் ஓ இதம் பெறு ஓ என்றிருக்கிறது - ஆ.பா.

சாலவே இனிக்கும் சர்க்கரைத் திரளே
ஏலவே நாவுக் கினியகற் கண்டே
உலப்புறா தினிக்கும் உயர்மலைத் தேனே
கலப்புறா மதுரம் கனிந்தகோற் றேனே
நவைஇலா தெனக்கு நண்ணிய நறவே
சுவைஎலாம் திரட்டிய தூயதீம் பதமே
பதம்பெறக் காய்ச்சிய பசுநறும் பாலே
இதம்பெற உருக்கிய இளம்பசு நெய்யே
உலர்ந்திடா தென்றும் ஒருபடித் தாகி
மலர்ந்துநல் வண்ணம் வயங்கிய மலரே

1420

இகந்தரு புவிமுதல் எவ்வுல குயிர்களும்
உகந்திட மணக்கும் சுகந்தநல் மணமே
யாழுறும் இசையே இனியஇன் னிசையே
ஏழுறும் இசையே இயல்அருள் இசையே
திவள்ஒளிப் பருவம் சேர்ந்தநல் லவளே

அவளொடும் கூடி அடைந்ததோர் சுகமே

நாதநல் வரைப்பின் நண்ணிய பாட்டே

வேதகீ தத்தில் விளைதிருப் பாட்டே

நன்மார்க்கர் நாவில் நவிற்றிய பாட்டே

சன்மார்க்க சங்கம் தழுவிய பாட்டே

1430

நம்புறும் ஆகமம் நவிற்றிய பாட்டே

எம்பலம் ஆகிய அம்பலப் பாட்டே

என்மனக் கண்ணே என்அருட் கண்ணே

என்னிரு கண்ணே என்கணுள் மணியே

என்பெருங் களிப்பே என்பெரும் பொருளே

என்பெருந் திறலே என்பெருஞ் செயலே

என்பெருந் தவமே என்தவப் பலனே

என்பெருஞ் சுகமே என்பெரும் பேறே

என்பெரு வாழ்வே என்றன்வாழ் முதலே

என்பெரு வழக்கே என்பெருங் கணக்கே

1440

என்பெரு நலமே என்பெருங் குலமே

என்பெரு வலமே என்பெரும் புலமே

என்பெரு வரமே என்பெருந் தரமே

என்பெரு நெறியே என்பெரு நிலையே

என்பெருங் குணமே என்பெருங் கருத்தே
என்பெருந் தயவே என்பெருங் கதியே
என்பெரும் பதியே என்னுயிர் இயலே
என்பெரு நிறைவே என்தனி அறிவே
தோலெலாம் குழைந்திடச் சூழ்நரம் பனைத்தும்
மேலெலாம் கட்டவை விட்டுவிட் டியங்கிட
1450
என்பெலாம் நெக்குநெக் கியலிடை நெகிழ்ந்திட
மென்புடைத் தசைஎலாம் மெய்உறத் தளர்ந்திட
இரத்தம் அனைத்தும்உள் இறுகிடச் சுக்கிலம்
உரத்திடை பந்தித் தொருதிர ளாயிட
மடல்எலாம் மூளை மலர்ந்திட அமுதம்
உடல்எலாம் ஊற்றெடுத் தோடி நிரம்பிட
ஒண்ணுதல் வியர்த்திட ஒளிமுகம் மலர்ந்திடத்
தண்ணிய உயிர்ப்பினில் சாந்தம் ததும்பிட
உண்ணகை தோற்றிட உரோமம் பொடித்திடக்
கண்ணில்நீர் பெருகிக் கால்வழிந் தோடிட
1460
வாய்துடித் தலறிட வளர்செவித் துளைகளில்(348)
கூயிசைப் பொறிஎலாம் கும்மெனக் கொட்டிட

(348). துணைகளில் - சாலைப் பழ.,முதற்பதிப்பு., பொ.சு., ச.மு.க.

மெய்எலாம் குளிர்ந்திட மென்மார் பசைந்திடக்

கைஎலாம் குவிந்திடக் கால்எலாம் சுலவிட

மனங்கனிந் துருகிட மதிநிறைந் தொளிர்ந்திட

இனம்பெறு சித்தம் இயைந்து களித்திட

அகங்காரம் ஆங்காங் கதிகரிப் பமைந்திடச்

சகங்காண உள்ளம் தழைத்து மலர்ந்திட

அறிவுரு அனைத்தும் ஆனந்த மாயிடப்

பொறியுறும் ஆன்மதற் போதமும் போயிடத்

1470

தத்துவம் அனைத்தும் தாமொருங் கொழிந்திடச்

சத்துவம் ஒன்றே தனித்துநின் றோங்கிட

உலகெலாம் விடயம் உளவெலாம் மறைந்திட

அலகிலா அருளின் ஆசைமேற் பொங்கிட

என்னுளத் தெழுந்துயிர் எல்லாம் மலர்ந்திட

என்னுளத் தோங்கிய என்தனி அன்பே

பொன்னடி கண்டருள் புத்தமு துணவே

என்னுளத் தெழுந்த என்னுடை அன்பே

தன்னையே எனக்குத் தந்தருள் ஒளியால்

என்னைவே தித்த என்தனி அன்பே

1480

என்னுளே அரும்பி என்னுளே மலர்ந்து

என்னுளே விரிந்த என்னுடை அன்பே

என்னுளே விளங்கி என்னுளே பழுத்து

என்னுளே கனிந்த என்னுடை அன்பே

தன்னுளே நிறைவுறு தரம்எலாம் அளித்தே

என்னுளே நிறைந்த என்தனி அன்பே

துன்புள அனைத்தும் தொலைத்தெனை துருவை

இன்புறு வாக்கிய என்னுடை அன்பே

பொன்னுடம் பெனக்குப் பொருந்திடும் பொருட்டாய்

என்னுளங் கலந்த என்தனி அன்பே

1490

தன்வச மாகித் ததும்பிமேற் பொங்கி

என்வசங் கடந்த என்னுடை அன்பே

தன்னுளே பொங்கிய தண்அமு துணவே

என்னுளே பொங்கிய என்தனி அன்பே

அருளொளி விளங்கிட ஆணவம் எனும்ஓர்

இருளற என்னுளத் தேற்றிய விளக்கே

துன்புறு தத்துவத் துரிசெலாம் நீக்கிநல்

இன்புற என்னுளத் தேற்றிய விளக்கே

மயலற அழியா வாழ்வுமேன் மேலும்

இயலுற என்னுளத் தேற்றிய விளக்கே

1509

இடுவெளி அனைத்தும் இயல்ஒளி விளங்கிட

நடுவெளி நடுவே நாட்டிய விளக்கே

கருவெளி அனைத்தும் கதிரொளி விளங்கிட

உருவெளி நடுவே ஒளிதரு(349) விளக்கே

(349). ஒளிர்தரு - சாலைப் படி., சிவாசாரியார் பதிப்பு.

தேற்றிய வேதத் திருமுடி விளங்கிட

ஏற்றிய ஞான இயல்ஒளி விளக்கே

ஆகம முடிமேல் அருள்ஒளி விளங்கிட

வேகம தறவே விளங்கொளி விளக்கே

ஆரியர் வழுத்திய அருள்நிலை அனாதி

காரியம் விளக்கும்ஓர் காரண விளக்கே

1510

தண்ணிய அமுதே தந்தென துளத்தே

புண்ணியம் பலித்த பூரண மதியே

உய்தர அமுதம் உதவிஎன் உளத்தே

செய்தவம் பலித்த திருவளர் மதியே

பதிஎலாம் தழைக்கப் பரம்பெறும்(350) அமுத

நிதிஎலாம் அளித்த நிறைதிரு மதியே

(350). பதம்பெறும் - சாலைப் படி., பொ.சு., பி.இரா., ச.மு.க.

பால்எனத் தண்கதிர் பரப்பிஎஞ் ஞான்றும்
மேல்வெளி விளங்க விளங்கிய மதியே
உயங்கிய உள்ளமும் உயிருந் தழைத்திட
வயங்கிய கருணை மழைபொழி மழையே

1528

என்னையும் பணிகொண் டென்னுளே நிரம்ப
மன்னிய கருணை மழைபொழி மழையே
உளங்கொளும் எனக்கே உவகைமேற் பொங்கி
வளங்கொளக் கருணை மழைபொழி மழையே
நலந்தர உடல்உயிர் நல்அறி வெனக்கே
மலர்ந்திடக் கருணை மழைபொழி மழையே
தூய்மையால் எனது துரிசெலாம் நீக்கிநல்
வாய்மையால் கருணை மழைபொழி மழையே
வெம்மல இரவது விடிதரு ணந்தனில்
செம்மையில் உதித்துளந் திகழ்ந்தசெஞ் சுடரே

1538

திரைஎலாம் தவிர்த்துச் செவ்விஉற் றாங்கே
வரைஎலாம் விளங்க வயங்குசெஞ் சுடரே
அலகிலாத் தலைவர்கள் அரசுசெய் தத்துவ
உலகெலாம் விளங்க ஓங்குசெஞ் சுடரே
முன்னுறு மலஇருள் முழுவதும் நீக்கியே

என்னுள வரைமேல் எழுந்தசெஞ் சுடரே

ஆதியும் நடுவுடன் அந்தமும் கடந்த

சோதியாய் என்னுளம் சூழ்ந்தமெய்ச் சுடரே

உள்ஒளி ஓங்கிட உயிர்ஒளி விளங்கிட

வெள்ஒளி காட்டிய மெய்அருட் கனலே

1540

நலங்கொளப் புரிந்திடு ஞானயா கத்திடை

வலஞ்சுழித் தெழுந்து வளர்ந்தமெய்க் கனலே

வேதமும் ஆகம விரிவும் பரம்பர

நாதமும் கடந்த ஞானமெய்க் கனலே

எண்ணிய எண்ணிய எல்லாந் தரஎனுள்

நண்ணிய புண்ணிய ஞானமெய்க் கனலே

வலமுறு சுத்தசன் மார்க்க நிலைபெறு

நலம்எலாம் அளித்த ஞானமெய்க் கனலே

இரவொடு பகலிலா இயல்பொது நடமிடு

பரமவே தாந்தப் பரம்பரஞ் சுடரே

1550

வரநிறை பொதுவிடை வளர்திரு நடம்புரி

பரமசித் தாந்தப் பதிபரஞ் சுடரே

சமரச சத்தியச் சபையில் நடம்புரி

சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே

சபைஎன துளம்எனத் தான்அமர்ந் தெனக்கே
அபயம் அளித்ததோர் அருட்பெருஞ் ஜோதி
மருள்எலாம் தவிர்த்து வரம்எலாம் கொடுத்தே
அருள்அமு தருத்திய அருட்பெருஞ் ஜோதி
வாழிநின் பேரருள் வாழிநின் பெருஞ்சீர்
ஆழிஒன் றளித்த அருட்பெருஞ் ஜோதி

1560

என்னையும் பொருள்என எண்ணிஎன் உளத்தே
அன்னையும் அப்பனும் ஆகிவீற் றிருந்து
உலகியல் சிறிதும் உளம்பிடி யாவகை
அலகில்பேர் அருளால் அறிவது விளக்கிச்
சிறுநெறி செல்லாத் திறன்அளித் தழியா
துறுநெறி உணர்ச்சிதந் தொளிஉறப் புரிந்து
சாகாக் கல்வியின் தரம்எலாம் உணர்த்திச்
சாகா வரத்தையுந் தந்துமேன் மேலும்
அன்பையும் விளைவித் தருட்பேர் ஒளியால்
இன்பையும் நிறைவித் தென்னையும் நின்னையும்

1570

ஓர்உரு ஆக்கியான் உன்னிய படிஎலாம்
சீர்உறச் செய்துயிர்த் திறம்பெற அழியா
அருள்அமு தளித்தனை அருள்நிலை ஏற்றினை

அருள்அறி வளித்தனை அருட்பெருஞ் ஜோதி

வெல்கநின் பேரருள் வெல்கநின் பெருஞ்சீர்

அல்கல்இன் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி

உலகுயிர்த் திரள்எலாம் ஒளிநெறி பெற்றிட

இலகும்ஐந் தொழிலையும் யான்செயத் தந்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்

ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ் ஜோதி

1580

மூவரும் தேவரும் முத்தரும் சித்தரும்

யாவரும் பெற்றிடா இயல்எனக் களித்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்

ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ் ஜோதி

சித்திகள் அனைத்தையும் தெளிவித் தெனக்கே

சத்திய நிலைதனைத் தயவினில் தந்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்

ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ் ஜோதி

உலகினில் உயிர்களுக் குறும்இடை யூறெலாம்

விலகநீ அடைந்து விலக்குக மகிழ்க

1590

சுத்தசன் மார்க்கச் சுகநிலை பெறுக

உத்தமன் ஆகுக ஓங்குக என்றனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்

ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ் ஜோதி

அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி

அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி

1596

திருச்சிற்றம்பலம்

வெண் செந்துறை

4616.

அருட்சபை நடம்புரி அருட்பெருஞ் சோதி

தெருட்பெருஞ் சீர்சொலத் திகழ்வ சித்தியே.(351)

(351). இது பொ.சு. அவர்கள்1892 ஆம் ஆண்டு பதிப்பித்த ஆறு திருமுறையும் சேர்ந்த

முதற் பதிப்பில் ஆறாந் திருமுறை இறுதியில் ஓபல்வகைய தனிப்பாடல்கள்ஒள என்ற தலைப்பின்கீழ்

முதன்முதலாக. அச்சிடப்பெற்றது பி.இரா. பதிப்பில் (1896) இஃது அகவலுக்கு முன்னர் காப்புப்

போன்று வைக்கப்பெற்றுள்ளது.. ஆ.பா இதனை ஆறாம் திருமுறை முன் பகுதி

(பூர்வ ஞான சிதம்பரப் பகுதி)யின் இறுதியில் தனித்திரு அலங்கலில் சேர்த்திருக்கிறார்.

1

திருச்சிற்றம்பலம்

Back

## 82. அருட்பெருஞ்சோதி அட்டகம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4617.

அருட்பெரு வெளியில் அருட்பெரு உலகத்

தருட்பெருந் தலத்துமேல் நிலையில்

அருட்பெரும் பீடத் தருட்பெரு வடிவில்

அருட்பெருந் திருவிலே அமர்ந்த

அருட்பெரும் பதியே அருட்பெரு நிதியே

அருட்பெருஞ் சித்திஎன் அமுதே

அருட்பெருங் களிப்பே அருட்பெருஞ் சுகமே

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

1

4618

குலவுபே ரண்டப் பகுதிஓர் அனந்த

கோடிகோ டிகளும்ஆங் காங்கே

நிலவிய பிண்டப் பகுதிகள் முழுதும்

நிகழ்ந்தபற் பலபொருள் திரளும்

விலகுறா தகத்தும் புறத்துமேல் இடத்தும்

மெய்அறி வானந்தம் விளங்க

அலகுறா தொழியா ததுஅதில் விளங்கும்

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

2

4619

கண்முதல் பொறியால் மனமுதல் கரணக்

கருவினால் பகுதியின் கருவால்

எண்முதல் புருட தரத்தினால் பரத்தால்

இசைக்கும்ஓர் பரம்பர உணர்வால்

விண்முதல் பரையால் பராபர அறிவால்

விளங்குவ தரிதென உணர்ந்தோர்

அண்முதல் தழுத்துப் பழுத்திட ஓங்கும்

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

3

4620

நசைத்தமேல் நிலைஈ தெனஉணர்ந் தாங்கே

நண்ணியும் கண்ணுறா தந்தோ

திசைத்தமா மறைகள் உயங்கின மயங்கித்

திரும்பின எனில்அதன் இயலை

இசைத்தல்எங் ஙனமோ ஐயகோ சிறிதும்

இசைத்திடு வேம்என நாவை

அசைத்திடற் கரிதென் றுணர்ந்துளோர் வழுத்தும்

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

4

4621

சுத்தவே தாந்த மவுனமோ அலது

சுத்தசித் தாந்தரா சியமோ

நித்தநா தாந்த நிலைஅனு பவமோ

நிகழ்பிற முடிபின்மேல் முடிபோ

புத்தமு தனைய சமரசத் ததுவோ

பொருள்இயல் அறிந்திலம் எனவே

அத்தகை உணர்ந்தோர் உரைத்துரைத் தேத்தும்

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

5

4622

ஏகமோ அன்றி அனேகமோ என்றும்

இயற்கையோ செயற்கையோ சித்தோ

தேகமோ பொதுவோ சிறப்பதோ பெண்ணோ

திகழ்ந்திடும் ஆணதோ அதுவோ

யோகமோ பிரிவோ ஒளியதோ வெளியோ

உரைப்பதெற் றோஎன உணர்ந்தோர்

ஆகமோ டுரைத்து வழுத்தநின் றோங்கும்

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

6

4623

தத்துவம் அனைத்தும் தனித்தனி கடந்தேம்

தத்துவா தீதமேல் நிலையில்

சித்தியல் முழுதும் தெரிந்தனம் அவைமேல்

சிவநிலை தெரிந்திடச் சென்றேம்

ஒத்தஅந் நிலைக்கண் யாமும்எம் உணர்வும்

ஒருங்குறக் கரைந்துபோ யினம்என்

றத்தகை உணர்ந்தோர் வழுத்தநின் றோங்கும்

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

7

4624

எங்குமாய் விளங்கும் சிற்சபை இடத்தே

இதுஅது எனஉரைப் பரிதாய்த்

தங்கும்ஓர் இயற்கைத் தனிஅனு பவத்தைத்

தந்தெனைத் தன்மயம் ஆக்கிப்

பொங்கும்ஆ னந்த போகபோக் கியனாய்ப்

புத்தமு தருத்திஎன் உளத்தே

அங்கையில் கனிபோன் றமர்ந்தருள் புரிந்த

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

8

திருச்சிற்றம்பலம்

Back

83. இறை இன்பக் குழைவு

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4625.

கருணை ததும்பிப் பொதுநோக்கும் கண்ணிற் கிடைத்த கண்ணேஓர்

கனியில் கனிந்தன் புருவான கருத்தில் கிடைத்த கருத்தேமெய்

அருள்நன் னிலையில்(352) அதுஅதுவாய் அறிவிற் கிடைத்த அறிவேஎன்

அகத்தும் புறத்தும் ஒளிநிறைவித் தமர்ந்த குருவே ஐம்பூத

வருண முதலா அவைகடந்த வரைப்பாய் விளங்கு மணிமன்றில்

வயங்கு சுடரே எல்லாஞ்செய் வல்ல குருவே என்னுளத்தே

தருண நடஞ்செய் அரசேஎன் தாயே என்னைத் தந்தாயே

தனித்த தலைமைப் பதியேஇத் தருணம் வாய்த்த தருணமதே.

1

(352). நிலையின் - பி. இரா. பதிப்பு.

4626.

கருவிற் கலந்த துணையேஎன் கனிவில் கலந்த அமுதேஎன்

கண்ணிற் கலந்த ஒளியேஎன் கருத்திற் கலந்த களிப்பேஎன்

உருவிற் கலந்த அழகேஎன் உயிரிற் கலந்த உறவேஎன்

உணர்விற் கலந்த சுகமேஎன் னுடைய ஒருமைப் பெருமானே

தெருவிற் கலந்து விளையாடுஞ் சிறியேன் தனக்கே மெய்ஞ்ஞான

சித்தி அளித்த பெருங்கருணைத் தேவே உலகத் திரளெல்லாம்

மருவிக் கலந்து வாழ்வதற்கு வாய்த்த தருணம் இதுஎன்றே

வாயே பறையாய் அறைகின்றேன் எந்தாய் கருணை வலத்தாலே.

2

4627.

தானே தயவால் சிறியேற்குத் தனித்த ஞான அமுதளித்த

தாயே எல்லாச் சுதந்தரமும் தந்த கருணை எந்தாயே

ஊனே விளங்க ஊனமிலா ஒளிபெற் றெல்லா உலகமும்என்

உடைமை யாக்கொண் டருள்நிலைமேல் உற்றேன் உன்றன் அருளாலே

வானே மதிக்கச் சாகாத வரனாய்(353) எல்லாம் வல்லசித்தே

வயங்க உனையுட் கலந்துகொண்டேன் வகுக்குந் தொழிலே முதலைந்தும்

நானே புரிகின் றேன்புரிதல் நானோ நீயோ நான்அறியேன்

நான்நீ என்னும் பேதம்இலா நடஞ்செய் கருணை நாயகனே.

3

(353). வானாய் - முதற்பதிப்பு., பொ. சு, பி. இரா., ச. மு. க.

4628.

கலைசார் முடிபு கடந்துணர்வு கடந்து நிறைவாய்க் கரிசிலதாய்க்

கருணை மயமாய் விளங்குசிதா காய நடுவில் இயற்கையுண்மைத்

தலைசார் வடிவில் இன்பநடம் புரியும் பெருமைத் தனிமுதலே

சாகாக் கல்வி பயிற்றிஎன்னுட் சார்ந்து விளங்கும் சற்குருவே

புலைசார் மனத்துச் சிறியேன்றன் குற்றம் அனைத்தும் பொறுத்தருளிப்

பொன்றா வடிவு கொடுத்தெல்லாம் புரிவல் லபந்தந் தருட்சோதி

நிலைசார் இறைமை அளித்தனைநான் பொதுவில் ஞான நீதிஎனும்

நிருத்தம் புரிகின் றேன்புரிதல் நீயோ நானோ நிகழ்த்தாயே.

4

4629.

கருத்தில் கருதிக் கொண்டஎலாம் கணத்தில் புரிய எனக்கேமெய்க்

காட்சி ஞானக் கண்கொடுத்த கண்ணே விடயக் கானகத்தே

எருத்தில் திரிந்த கடையேனை எல்லா உலகும் தொழநிலைமேல்

ஏற்றி நீயும் நானும்ஒன்றாய் இருக்கப் புரிந்தாய் எந்தாயே

இருத்திக் கருத்தில் உன்தயவை எண்ணுந் தோறும் அந்தோஎன்

இதயம் உருகித் தளதளஎன் றிளகி இளகித் தண்ணீராய்

அருத்திப் பெருநீர் ஆற்றொடுசேர்ந் தன்புப் பெருக்கில் கலந்ததுநான்

அதுஎன் றொன்றும் தோற்றாதே அச்சோ அச்சோ அச்சோவே.

5

4630.

ஏதும் தெரியா தகங்கரித்திங் கிருந்த சிறியேன் தனைவலிந்தே

எல்லா உலகும் அதிசயிக்க எல்லாம் வல்ல சித்தெனவே

ஓதும் பொருளைக் கொடுத்தென்றும் உலவா இன்பப்
பெருநிலையில்

ஓங்கி உறவைத் தனையேஎன் னுடைய ஒருமைப் பெருமானே

ஈதுன் கருணைக் கியல்போநீ என்பால் வைத்த பெருங்கருணை

இந்நாட் புதிதே அந்நாளில் இலையே இதனை எண்ணியநான்

தாதும் உணர்வும் உயிரும்உள்ளத் தடமும் பிறவாந் தத்துவமும்

தாமே குழைந்து தழைந்தமுத சார மயமா கின்றேனே.

6

4631.

ஓவா துண்டு படுத்துறங்கி உணர்ந்து விழித்துக் கதைபேசி

உடம்பு நோவா துளமடக்கா தோகோ நோன்பு கும்பிட்டே

சாவா வரமும் சித்திஎலாம் தழைத்த நிலையும் சன்மார்க்க

சங்க மதிப்பும் பெற்றேன்என் சதுர்தான் பெரிதென் சரித்திரத்தை

ஆவா நினைக்கில் அதிசயம்என் அப்பா அரசே அமுதேஎன்

ஆவிக் கினிய துணையேஎன் அன்பே அறிவே அருட்சோதித்

தேவா இதுநின் செயலேஇச் செயலை நினைக்குந் தொறும்எனது

சிந்தை கனிந்து கனிந்துருகித் தெள்ளா ரமுதம் ஆனதுவே.

7

4632.

இரவும் பகலும் தூங்கியஎன் தூக்கம் அனைத்தும் இயல்யோகத்

திசைந்த பலனாய் விளைந்ததுநான் இரண்டு பொழுதும் உண்டஎலாம்

பரவும் அமுத உணவாயிற் றந்தோ பலர்பால் பகல்இரவும்

படித்த சமயச் சாத்திரமும் பலரால் செய்த தோத்திரமும்

விரவிக் களித்து நாத்தடிக்க விளம்பி விரித்த பாட்டெல்லாம்

வேதா கமத்தின் முடிமீது விளங்கும் திருப்பாட் டாயினவே

கரவொன் றறியாப் பெருங்கருணைக் கடவுள் இதுநின் தயவிதனைக்

கருதும் தொறும்என் கருத்தலர்ந்து சுகமே மயமாக் கண்டதுவே.

8

4633.

ஊற்றை உடம்பில் இருட்டறைவாய் உறங்கி விழித்துக் கதைபேசி

உண்டிங் குடுத்துக் கருத்திழந்தே உதவா எருதின் ஊர்திரிந்து

நேற்றை வரையும் வீண்போது போக்கி இருந்தேன் நெறிஅறியேன்

நேரேஇற்றைப் பகல்அந்தோ நெடுங்கா லமும்மெய்த் தவயோக

ஆற்றை அடைந்தோர் எல்லோரும் அச்சோ என்றே அதிசயிப்ப

அமுதுண் டழியாத் திருஉருவம் அடைந்தேன் பெரிய அருட்சோதிப்

பேற்றை உரிமைப் பேறாகப் பெற்றேன் பெரிய பெருமான்நின்

பெருமை இதுவேல் இதன்இயலை யாரே துணிந்து பேசுவரே.

9

4634.

புரைசேர் வினையும் கொடுமாயைப் புணர்ப்பும் இருளும் மறைப்பினொடு

புகலும் பிறவாம் தடைகளெலாம் போக்கி ஞானப் பொருள்விளங்கும்

வரைசேர்த் தருளிச் சித்தியெலாம் வழங்கிச் சாகா வரங்கொடுத்து

வலிந்தென் உளத்தில் அமர்ந்துயிரில் கலந்து மகிழ்ந்து வாழ்கின்றாய்

பரைசேர் வெளியில் பதியாய்அப் பால்மேல் வெளியில் விளங்குசித்த

பதியே சிறியேன் பாடலுக்குப் பரிசு விரைந்தே பாலித்த

அரைசே அமுதம் எனக்களித்த அம்மே உண்மை அறிவளித்த

அப்பா பெரிய அருட்சோதி அப்பா வாழி நின்அருளே.

10

திருச்சிற்றம்பலம்

Back

## 84. பெறாப் பேறு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4635.

ஆவாஎன் றெனையாட்கொண் டருளியதெள் ளமுதே

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

சாவாத வரம்எனக்குத் தந்தபெருந் தகையே

தயாநிதியே சிற்சபையில் தனித்தபெரும் பதியே
ஓவாதென் உள்ளகத்தே ஊற்றெழும்பேர் அன்பே
உள்ளபடி என்னறிவில் உள்ளபெருஞ் சுகமே
நீவாஎன் மொழிகளெலாம் நிலைத்தபயன் பெறவே
நித்திரைதீர்ந் தேன்இரவு நீங்கிவிடிந் ததுவே.

1

4636

ஆராலும் அறிந்துகொளற் கரியபெரும் பொருளே
அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே
காராலும் கனலாலும் காற்றாலும் ககனக்
கலையாலும் கதிராலும் கடலாலும் கடல்சூழ்
பாராலும் படையாலும் பிறவாலும் தடுக்கப்
படுதலிலாத் தனிவடிவம் எனக்களித்த பதியே
சீராலும் குணத்தாலும் சிறந்தவர்சேர் ஞான
சித்திபுரத் தமுதேஎன் நித்திரைதீர்ந் ததுவே.

2

4637

ஆதிஅந்தம் தோற்றாத அரும்பெருஞ்சோ தியனே
அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே
ஓதிஎந்த வகையாலும் உணர்ந்துகொளற் கரிதாய்
உள்ளபடி இயற்கையிலே உள்ளஒரு பொருளே

ஊதியம்தந் தெனையாட்கொண் டுள்ளிடத்தும் புறத்தும்

ஓவாமல் விளங்குகின்ற உடையவனே இந்தச்

சாதிஇந்த மதம்எனும்வாய்ச் சழக்கைஎலாம் தவிர்த்த

சத்தியனே உண்கின்றேன்(354) சத்தியத்தெள் ளமுதே.

3

(354). உணர்கின்றேன் - ச. மு. க. பதிப்பு.

4638

அச்சமெலாம் தவிர்த்தருளி இச்சைஎலாம் அளித்த

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

துச்சவுல காசாரத் துடுக்கனைத்தும் தவிர்த்தே

சுத்தநெறி வழங்குவித்த சித்தசிகா மணியே

உச்சநிலை நடுவிளங்கும் ஒருதலைமைப் பதியே

உலகமெலாம் எடுத்திடினும் உலவாத நிதியே

இச்சமயம் எழுந்தருளி இறவாத வரமும்

எல்லாஞ்செய் வல்லசித்தின் இயற்கையுந்தந் தனையே.

4

4639

அன்புடைய என்னறிவே அருளுடைய பொருளே

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

துன்புடைய உலகரெலாம் சுகமுடையார் ஆகத்

துன்மார்க்கம் தவிர்த்தருளிச் சன்மார்க்கம் வழங்க

இன்புடைய பேரருளிங் கெனைப்பொருள்செய் தளித்த

என்அமுதே என்உறவே எனக்கினிய துணையே

என்புடைநீ இருக்கின்றாய் உன்புடைநான் மகிழ்ந்தே

இருக்கின்றேன் இவ்வொருமை யார்பெறுவார் ஈண்டே.

5

4640

அடுக்கியபேர் அண்டம்எலாம் அணுக்கள்என விரித்த

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

நடுக்கியஎன் அச்சம்எலாம் தவிர்த்தருளி அழியா

ஞானஅமு தளித்துலகில் நாட்டியபேர் அறிவே

இடுக்கியகைப் பிள்ளைஎன இருந்தசிறி யேனுக்

கெல்லாஞ்செய் வல்லசித்தி ஈந்தபெருந் தகையே

முடுக்கியஅஞ் ஞானாந்த காரமெலாம் தவிர்த்து

முத்தருளத் தேமுளைத்த சுத்தபரஞ் சுடரே.

6

4641

ஆங்காரம் தவிர்ந்தவருள் ஓங்காநின் றவனே

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

ஓங்கார நிலைகாட்டி அதன்மேல்உற் றொளிரும்

ஒருநிலையும் காட்டிஅப்பால் உயர்ந்ததனி நிலையில்

பாங்காக ஏற்றி(355) எந்தப் பதத்தலைவ ராலும்

படைக்கவொணாச் சித்தியைநான் படைக்கவைத்த பதியே

தூங்காது பெருஞ்சுகமே சுகித்திடஇவ் வுலகைச்

சுத்தசன்மார்க் கந்தனிலே வைத்தருள்க விரைந்தே.

7

(355). ஏத்தி - முதற்பதிப்பு., பொ. சு; பி. இரா, ச. மு. க.

4642

ஆடகப்பொற் சபைநடுவே நாடகஞ்செய் தருளும்

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

ஏடகத்தே எழுதாத மறைகளெலாம் களித்தே

என்உளத்தே எழுதுவித்த என்உரிமைப் பதியே

பாடகக்கால் மடந்தையரும் மைந்தரும்சன் மார்க்கப்

பயன்பெறநல் அருளளித்த பரம்பரனே மாயைக்

காடகத்தை வளஞ்செறிந்த நாடகமாப் புரிந்த

கருணையனே சிற்சபையில் கனிந்தநறுங் கனியே.

8

4643

அடியாதென் றறிந்துகொளற் கரும்பெரிய நிலையே

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

முடியாதென் றறிந்திடற்கு முடியாதென் றுணர்ந்தோர்

மொழிந்திடவே முடியாது முடிந்ததனி முடிபே

கடியாத பெருங்கருணைக் கருத்தேஎன் கருத்தில்

கனிந்துகனிந் தினிக்கின்ற கனியேஎன் களிப்பே

மடியாத வடிவெனக்கு வழங்கியநல் வரமே

மணிமன்றில் நடம்புரியும் வாழ்க்கை இயற் பொருளே.

9

4644

அனந்தமறை ஆகமங்கள் அளப்பரிய சிவமே

அம்மேஎன் அப்பாஎன் ஐயாஎன் அரசே

மனந்தருவா தனைதவிர்த்தோர்(356) அறிவினில்லூர் அறிவாய்

வயங்குகின்ற குருவேஎன் வாட்டம்எலாம் தவிர்த்தே

இனந்தழுவி என்னுளத்தே இருந்துயிரில் கலந்தென்

எண்ணமெலாம் களித்தளித்த என்னுரிமைப் பதியே

சினந்தவிர்ந்தெவ் வுலகமும்ஓர் சன்மார்க்கம் அடைந்தே

சிறப்புறவைத் தருள்கின்ற சித்தசிகா மணியே.

10

(356). தவிர்ந்தோர் - பி. இரா. பதிப்பு.

9

திருச்சிற்றம்பலம்

Back

85. சிவானந்தத் தழுந்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4645.

காரண காரியக் கல்விகள் எல்லாம்
கற்பித்தென் னுள்ளே கலந்துகொண் டென்னை
நாரணர் நான்முகர் போற்றமேல் ஏற்றி
நாதாந்த நாட்டுக்கோர் நாயகன் ஆக்கிப்
பூரண மாம்இன்பம் பொங்கித் ததும்பப்
புத்தமு தாம்அருட் போனகம் தந்தே
ஆரண வீதியில் ஆடச்செய் தீரே
அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

1

4646

தேகம்எப் போதும் சிதையாத வண்ணம்
செய்வித் தெலாம்வல்ல சித்தியும் தந்தே
போகம்எல் லாம்என்றன் போகம தாக்கிப்
போதாந்த நாட்டைப் புரக்கமேல் ஏற்றி
ஏகசி வானந்த வாழ்க்கையில் என்றும்
இன்புற்று வாழும் இயல்பளித் தென்னை
ஆகம வீதியில் ஆடச்செய் தீரே
அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

2

4647

தானந்தம் இல்லாத தன்மையைக் காட்டும்

சாகாத கல்வியைத் தந்தெனக் குள்ளே

தேனந்தத் தெள்ளமு தூற்றிப் பெருக்கித்

தித்தித்துச் சித்தம் சிவமய மாக்கி

வானந்தம் ஆதியும் கண்டுகொண் டழியா

வாழ்க்கையில் இன்புற்றுச் சுத்தவே தாந்த

ஆனந்த வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

3

4648

சிற்சபை இன்பத் திருநடங் காட்டித்

தெள்ளமு தூட்டிஎன் சிந்தையைத் தேற்றிப்

பொற்சபை தன்னில் பொருத்திஎல் லாம்செய்

பூரண சித்திமெய்ப் போகமும் தந்தே

தற்பர மாம்ஓர் சதானந்த நாட்டில்

சத்தியன் ஆக்கிஓர் சுத்தசித் தாந்த

அற்புத வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

4

4649

தத்துவம் எல்லாம்என் தன்வசம் ஆக்கிச்

சாகாவ ரத்தையும் தந்தெனைத் தேற்றி

ஒத்துவந் துள்ளே கலந்துகொண் டெல்லா

உலகமும் போற்ற உயர்நிலை ஏற்றிச்

சித்திஎ லாம்செயச் செய்வித்துச் சத்தும்

சித்தும் வெளிப்படச் சுத்தநா தாந்த

அத்திரு வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

5

4650

இத்தனை என்றுநின் றெண்ணிடல் ஒண்ணா

என்பிழை யாவையும் அன்பினில் கொண்டே

சத்திய மாம்சிவ சித்தியை என்பால்

தந்தெனை யாவரும் வந்தனை செயவே

நித்தியன் ஆக்கிமெய்ச் சுத்தசன் மார்க்க

நீதியை ஓதிஓர் சுத்தபோ தாந்த

அத்தனி வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

6

4651

மருந்திது மணிஇது மந்திரம் இதுசெய்

வகைஇது துறைஇது வழிஇது எனவே

இருந்தெனுள் அறிவித்துத் தெள்ளமு தளித்தே

என்னையும் தன்னையும் ஏகம தாக்கிப்

பொருந்திஎ லாஞ்செய வல்லலூர் சித்திப்

புண்ணிய வாழ்க்கையில் நண்ணியோ காந்த

அருந்தவ வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

7

4652

பதிசார வைத்துமுற் பசுநிலை காட்டிப்

பாசவி மோசனப் பக்குவன் ஆக்கி

நிதிசார நான் இந்த நீள்உல கத்தே

நினைத்தன நினைத்தன நேருறப் புரிந்து

திதிசேர மன்னுயிர்க் கின்பஞ்செய் கின்ற

சித்திஎ லாந்தந்து சுத்தக லாந்த

அதிகார வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

8

4653

இருளான மலம்அறுத் திகபரங் கண்டே

எல்லா உயிர்களும் இன்புற்று வாழ

மருளான பற்பல மார்க்கங்கள் எல்லாம்

வழிதுறை தெரியாமல் மண்மூடிப் போகத்

தெருளான சுத்தசன் மார்க்கம தொன்றே

சிறந்து விளங்கவூர் சிற்சபை காட்டும்

அருளான வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

9

4654

இருட்சாதித் தத்துவச் சாத்திரக் குப்பை

இருவாய்ப்புப் புன்செயில் எருவாக்கிப் போட்டு

மருட்சாதி சமயங்கள் மதங்களாச் சிரம

வழக்கெலாம் குழிக்கொட்டி மண்மூடிப் போட்டுத்

தெருட்சாருஞ் சுத்தசன் மார்க்கநன் னீதி

சிறந்து விளங்கவூர் சிற்சபை காட்டும்

அருட்சோதி வீதியில் ஆடச்செய் தீரே

அருட்பெருஞ் ஜோதிஎன் ஆண்டவர் நீரே.

10

திருச்சிற்றம்பலம்

Back

86. திருவருட் பெருமை

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4655

அன்பனே அப்பா அம்மையே அரசே

அருட்பெருஞ் சோதியே அடியேன்

துன்பெலாம் தொலைத்த துணைவனே ஞான

சுகத்திலே தோற்றிய சுகமே

இன்பனே எல்லாம் வல்லசித் தாகி

என்னுளே இலங்கிய பொருளே

வன்பனேன் பிழைகள் பொறுத்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

1

4656

பெருகுமா கருணைப் பெருங்கடல் இன்பப்

பெருக்கமே என்பெரும் பேறே

உருகும்ஓர் உள்ளத் துவட்டுறா தினிக்கும்

உண்மைவான் அமுதமே என்பால்

கருகும்நெஞ் சதனைத் தளிர்த்திடப் புரிந்த

கருணையங் கடவுளே விரைந்து

வருகஎன் றுரைத்தேன் வந்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

2

4657

எந்தைஎன் குருவே என்னுயிர்க் குயிரே

என்னிரு கண்ணினுள் மணியே

இந்துறும் அமுதே என்னுயிர்த் துணையே
இணையிலா என்னுடை அன்பே
சொந்தநல் உறவே அம்பலத் தரசே
சோதியே சோதியே விரைந்து
வந்தருள் என்றேன் வந்தருட் சோதி
வழங்கினை வாழிநின் மாண்பே.

3

4658

கோஎன எனது குருஎன ஞான
குணம்என ஒளிர்சிவக் கொழுந்தே
பூஎன அதிலே மணம்என வணத்தின்
பொலிவென வயங்கிய பொற்பே
தேவெனத் தேவ தேவென ஒருமைச்
சிவம்என விளங்கிய பதியே
வாஎன உரைத்தேன் வந்தருட் சோதி
வழங்கினை வாழிநின் மாண்பே.

4

4659

உள்ளமே இடங்கொண் டென்னைஆட் கொண்ட
ஒருவனே உலகெலாம் அறியத்
தெள்ளமு தளித்திங் குன்னைவாழ் விப்பேம்

சித்தம்அஞ் சேல்என்ற சிவமே

கள்ளமே தவிர்த்த கருணைமா நிதியே

கடவுளே கனகஅம் பலத்தென்

வள்ளலே என்றேன் வந்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

5

4660

நல்லவா அளித்த நல்லவா எனையும்

நயந்தவா நாயினேன் நவின்ற

சொல்லவா எனக்குத் துணையவா ஞான

சுகத்தவா சோதிஅம் பலவா

அல்லவா அனைத்தும் ஆனவா என்னை

ஆண்டவா தாண்டவா எல்லாம்

வல்லவா என்றேன் வந்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

6

4661

திண்மையே முதலைங் குணக்கரு வாய

செல்வமே நல்வழி காட்டும்

கண்மையே கண்மை கலந்தஎன் கண்ணே

கண்ணுற இயைந்தநற் கருத்தே

உண்மையே எல்லாம் உடையவர் தலைமை

ஒருதனித் தெய்வமே உலவா

வண்மையே என்றேன் வந்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

7

4662

காய்மையே தவிர்த்துக் கருணையே கனிந்த

கற்பகத் தனிப்பெருந் தருவே

தூய்மையே விளக்கித் துணைமையே அளித்த

சோதியே தூய்மைஇல் லவர்க்குச்

சேய்மையே எல்லாம் செயவல்ல ஞான

சித்தியே சுத்தசன் மார்க்க

வாய்மையே என்றேன் வந்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

8

4663

என்னவா அனைத்தும் ஈந்தவா என்னை

ஈன்றவா என்னவா வேதம்

சொன்னவா கருணைத் தூயவா பெரியர்

துதியவா அம்பலத் தமுதம்

அன்னவா அறிவால் அறியரி வறிவா(357)

ஆனந்த நாடகம் புரியும்

மன்னவா என்றேன் வந்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

9

(357). அறியறி வறிவா - பி. இரா., ச. மு. க.

4664 விரதமா திகளும் தவிர்த்துமெய்ஞ் ஞான

விளக்கினால் என்னுளம் விளக்கி

இரதமா தியநல் தெள்ளமு தளித்திங்

கென்கருத் தனைத்தையும் புரிந்தே

சரதமா நிலையில் சித்தெலாம் வல்ல

சத்தியைத் தயவினால் தருக

வரதனே என்றேன் வந்தருட் சோதி

வழங்கினை வாழிநின் மாண்பே.

10

திருச்சிற்றம்பலம்

Back

87. அச்சோப் பத்து

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4665.

கருத்தனைஎன் கண்மணியைக் கண்ணுதலைப்

பெருங்கருணைக் கடலை வேதத்

திருத்தனைஎன் சிவபதியைத் தீங்கனியைத்

தெள்ளமுதத் தெளிவை வானில்

ஒருத்தனைஎன் உயிர்த்துணையை உயிர்க்குயிரை

உயிர்க்குணர்வை உணர்த்த னாதி

அருத்தனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

1

4666

மெய்யனைஎன் துயர்தவிர்த்த விமலனைஎன்

இதயத்தே விளங்கு கின்ற

துய்யனைமெய்த் துணைவனைவான் துரியநிலைத்

தலைவனைச்சிற் சுகந்தந் தானைச்

செய்யனைவெண் நிறத்தனைஎன் சிவபதியை

ஒன்றான தெய்வம் தன்னை

அய்யனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

2

4667

எப்பொருளும் எவ்வுயிரும் எவ்வுலகும்

விளங்கவிளக் கிடுவான் தன்னைச்

செப்பரிய பெரியஒரு சிவபதியைச்

சிவகதியைச் சிவபோ கத்தைத்(358)
துப்புரவு பெறஎனக்கே அருளமுதம்
துணிந்தளித்த துணையை என்றன்
அப்பனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ
தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

3

(358). சிவபோகத்தே - முதற்பதிப்பு. பொ. சு. பதிப்பு.

4668

பிறிவெனைத்துந் தோற்றாதென் உளங்கலந்த
பெருந்தகைஎம் பெருமான் தன்னைச்
செறிவனைத்தும் என்மனத்துக் களித்தெனக்குப்
பெருங்களிப்புச் செய்தான் தன்னை
முறிவெனைத்தும் இன்றிஅருள் அமுதுணவு
கொடுத்தெனக்கு முன்னின் றானை
அறிவனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ
தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

4

4669

பொன்புனைஉள் ளொளிக்கொளியைப் பூரணமாம்
பெரும்பொருளைப் புனிதம் தன்னை
என்பிழையைப் பொறுத்தெனையும் ஏன்றுகொண்ட

பெருங்கருணை இயற்கை தன்னை

இன்பினைஎன் இதயத்தே இருந்தருளும்

பெருவாழ்வை என்னுள் ஓங்கும்

அன்பினைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

5

4670

இத்தனைஎன் றிடமுடியாச் சத்திஎலாம்

உடையானை எல்லாம் வல்ல

சித்தனைஎன் சிவபதியைத் தெய்வமெலாம்

விரித்தடக்கும் தெய்வம் தன்னை

எத்தனையும் என்பிழைகள் பொறுத்ததனிப்

பெருந்தாயை என்னை ஈன்ற

அத்தனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

6

4671

எம்மையும்என் தனைப்பிரியா தென்னுளமே

இடங்கொண்ட இறைவன் தன்னை

இம்மையில்என் தனக்கழியாத் திருவடிவம்

தந்தானை எல்லாம் வல்ல

செம்மைதரு சித்தனைஎன் சிவபதியைத்

தெள்ளமுதத் திரளை என்றன்

அம்மையைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

7

4672

என்னையும்என் பொருளையும்என் ஆவியையும்

தான்கொண்டிங் கென்பால் அன்பால்

தன்னையும்தன் பொருளையும்தன் ஆவியையும்

களித்தளித்த தலைவன் தன்னை

முன்னையும்பின் னையும்எனக்கே முழுத்துணையாய்

இருந்தமுழு முதல்வன் தன்னை

அன்னையைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

8

4673

எண்ணலைவே றிரங்கலைநின் எண்ணமெலாம்

தருகின்றோம்(359) இன்னே என்றென்

கண்நிரம்ப ஒளிகாட்டிக் கருத்தில்அமர்ந்

திருக்கின்ற கருத்தன் தன்னைப்

புண்ணியனை உளத்தூறும் புத்தமுதை

மெய்இன்பப் பொருளை என்றன்

அண்ணலைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

6

(359). தருகின்றாம் - பி. இரா. பதிப்பு.

4674

சாதியைநீள் சமயத்தை மதத்தைஎலாம்

விடுவித்தென் தன்னை ஞான

நீதியிலே சுத்தசிவ சன்மார்க்க

நிலைதனிலே நிறுத்தி னானைப்

பாதியைஒன் றானவனைப் பரம்பரனைப்

பராபரனைப் பதிஅ னாதி

ஆதியைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்சோ

தியைப்பெற்றேன் அச்சோ அச்சோ.

10

திருச்சிற்றம்பலம்

Back

88. அனுபவ நிலை

கட்டளைக் கலித்துறை

4675.

நான்செய்த புண்ணியம் என்னுரைக் கேன்பொது நண்ணியதோர்

வான்செய்த மாமணி என்கையில் பெற்றுநல் வாழ்வடைந்தேன்

ஊன்செய்த தேகம் ஒளிவடி வாகநின் றோங்குகின்றேன்

தேன்செய்த தெள்ளமு துண்டேன்கண் டேன்மெய்த் திருநிலையே.

1

4676

நான்செய்த புண்ணியம் என்னுரைப் பேன்பொது நண்ணியதோர்

வான்செய்த மெய்ப்பொருள் என்கையிற் பெற்றுமெய்
வாழ்வடைந்தேன்

கோன்செய்த பற்பல கோடிஅண் டங்களும் கூறவற்றில்

தான்செய்த பிண்டப் பகுதியும் நான்செயத் தந்தனனே.

3

4677

திருநிலை பெற்றனன் அம்பலத் தான்அருள் தெள்ளமுதுண்

டுருநிலை பெற்றனன் ஒன்றே சிவமென ஓங்குகின்ற

பெருநிலை பெற்றனன் சுத்தசன் மார்க்கம் பிடித்துநின்றேன்

இருநிலை முந்நிலை எல்லா நிலையும் எனக்குளவே.

3

4678

எத்தனை நான்குற்றம் செய்தும் பொறுத்தனை என்னைநின்பால்

வைத்தனை உள்ளம் மகிழ்ந்தனை நான்சொன்ன
வார்த்தைகள்இங்

கத்தனை யும்சம் மதித்தருள் செய்தனை அம்பலத்தே

முத்தனை யாய்நினக் கென்மேல் இருக்கின்ற மோகம்என்னே.

4

4679

இனியே இறையும் சகிப்பறி யேன்எனக் கின்பநல்கும்

கனியேஎன் தன்இரு கண்ணேமுக் கண்கொண்ட கற்பகமே

தனியேஎன் அன்புடைத் தாயேசிற் றம்பலம் சார்தந்தையே

முனியேல் அருள்க அருள்கமெய்ஞ் ஞானம் முழுதையுமே.

5

4680

புத்தியஞ் சேல்சற்றும் என்நெஞ்ச மேசிற் பொதுத்தந்தையார்

நித்தியஞ் சேர்ந்த நெறியில் செலுத்தினர் நீஇனிநன்

முத்தியும் ஞானமெய்ச் சித்தியும் பெற்று முயங்கிடுவாய்

சத்தியம் சத்தியம் சத்தியம் சத்தியம் சத்தியமே.

6

4681

கூடிய நாளிது தான்தரு ணம்எனைக் கூடிஉள்ளே

வாடிய வாட்டமெல் லாந்தவிர்த் தேசுக வாழ்வளிப்பாய்

நீடிய தேல்இனிச் சற்றும்பொ றேன்உயிர் நீத்திடுவேன்

ஆடிய பாதம் அறியச்சொன் னேன்என தாண்ட வனே.

7

4682

ஆக்கிய நாள்இது தான்தரு ணம்அருள் ஆரமுதம்

தேக்கிமெய் இன்புறச் செய்தருள் செய்தருள் செய்தருள்நீ

நீக்கினை யேல்இனிச் சற்றும்பொ றேன்உயிர் நீத்திடுவேன்

தூக்கிய பாதம் அறியச்சொன் னேன்அருட் சோதியனே.

8

திருச்சிற்றம்பலம்

Back

89. அருட்பெருஞ்சோதி அடைவு

கட்டளைக் கலித்துறை

4683.

அருட்பெருஞ் சோதிஎன் ஆருயி ரில்கலந் தாடுகின்ற

அருட்பெருஞ் சோதிஎன் அன்பிற் கலந்தறி வாய்விளங்கும்

அருட்பெருஞ் சோதித்தெள் ளார்அமு தாகிஉள் அண்ணிக்கின்ற

அருட்பெருஞ் சோதிநின் ஆசைஒன் றேஎன்னுள் ஆர்கின்றதே.

1

4684

ஆர்கின்ற தெள்ளமு தின்சுவை என்என் றறைவன்அந்தோ

சார்கின்ற சிற்றம் பலப்பெருஞ் சீரினைச் சாற்றுதொறும்

சேர்கின்ற நாவுடன் உள்ளமும் ஆவியும் தித்தித்தலே

நேர்கின்ற தால்என் அருட்பெருஞ் சோதி நிறைந்துளத்தே.

2

4685

உளத்தே பெருங்களிப் புற்றடி யேன்மிக உண்ணுகின்றேன்
வளத்தே அருட்பெருஞ் சோதியி னால்ஒளி வாய்ந்தெனது
குளத்தே நிறைந்தணை யுங்கடந் தோங்கிக் குலவுபரி
மளத்தே மிகுந்து வயங்கும் அமுதம் மனமகிழ்ந்தே.

3

4686

மனமகிழ்ந் தேன்மன மாயையை நீக்கினன் மாநிலத்தே
சினமொடும் காமமும் தீர்ந்தேன் எலாம்வல்ல சித்தும்பெற்றேன்
இனமிகும் சுத்தசன் மார்க்கப் பெருநெறி எய்திநின்றேன்
கனமிகும் மன்றில் அருட்பெருஞ் சோதியைக் கண்டுகொண்டே.

4

4687

கண்டேன் அருட்பெருஞ் சோதியைக் கண்களில் கண்டுகளி
கொண்டேன் சிவானந்தக் கூத்தாடிக் கொண்டிக் குவலயத்தே
தொண்டே திருஅம் பலந்தனக் காக்கிச் சுகஅமுதம்
உண்டேன் உயிர்தழைத் தோங்குகின் றேன்உள் உவப்புறவே.

5

4688

உறவே எனதின் னுயிரேஎன் உள்ளத்தில் உற்றினிக்கும்

நறவே அருட்பெருஞ் சோதிமன் றோங்கு நடத்தரசே
இறவேன் எனத்துணி வெய்திடச் செய்தனை என்னைஇனி
மறவேல் அடிச்சிறி யேன்ஒரு போது மறக்கினுமே.

6

4689

மறப்பேன் அலேன்உன்னை ஓர்கண மேனும் மறக்கில்அன்றே
இறப்பேன் இதுசத் தியம்சத் தியம்சத் தியம்இசைத்தேன்
பிறப்பே தவிர்த்தெனை ஆட்கொண் டமுதம் பெரிதளித்த
சிறப்பே அருட்பெருஞ் சோதிமன் றோங்கு செழுஞ்சுடரே.

7

4690

சுடரே அருட்பெருஞ் சோதிய னேபெண் சுகத்தைமிக்க
விடரே எனினும் விடுவர்எந் தாய்நினை விட்டயல்ஒன்
றடரேன் அரைக்கண முப்பிரிந் தாற்றலன் ஆணைகண்டாய்
இடரே தவிர்த்தெனக் கெல்லா நலமும்இங் கீந்தவனே.

8

4691

தவநேய மும்சுத்த சன்மார்க்க நேயமும் சத்தியமாம்
சிவநேய மும்தந்தென் உள்ளம் தெளியத் தெளித்தனையே
நவநேய மன்றில் அருட்பெருஞ் சோதியை நாடிநின்ற
இவனே அவன்எனக் கொள்வார்உன் அன்பர் இருநிலத்தே.

9

4692

நிலத்தே புழுத்த புழுவும் அலேன்புன் நிலத்திழிந்த

மலத்தே புழுத்த புழுஅனை யேனைஅவ் வான்துதிக்கும்

குலத்தே தலைமை கொடுத்தென் உளத்தில் குலவுகின்றாய்

தலத்தே அருட்பெருஞ் சோதிஅப் பாஎன் தயாநிதியே.

10

4693

நிதியே என்னுள்ள நிறைவே பொதுவில் நிறைந்தசிவ

பதியே அருட்பெருஞ் சோதிய னேஅம் பலம்விளங்கும்

கதியே என்கண்ணும் கருத்தும் களிக்கக் கலந்துகொண்ட

மதியே அமுத மழையேநின் பேரருள் வாழியவே.

11

4694

வாழிஎன் றேஎனை மால்அயன் ஆதியர் வந்தருட்பேர்

ஆழிஎன் றேதுதித் தேத்தப் புரிந்தனை அற்புதம்நீ

டூழிஅன் றேஎன்றும் சாகா வரமும் உவந்தளித்தாய்

வாழிமன் றோங்கும் அருட்பெருஞ் சோதிநின் மன்னருளே.

12

4695

மன்னிய நின்அருள் ஆரமு தம்தந்து வாழ்வித்துநான்

உன்னிய உன்னிய எல்லாம் உதவிஎன் உள்ளத்திலே

தன்னியல் ஆகிக் கலந்தித் தருணம் தயவுசெய்தாய்

துன்னிய நின்னருள் வாழ்க அருட்பெருஞ் சோதியனே.

13

திருச்சிற்றம்பலம்

Back

98. அடிமைப் பேறு

நேரிசை வெண்பா

4696.

அருள்அளித்தான் அன்பளித்தான் அம்பலத்தான் உண்மைப்

பொருள்அளித்தான் என்னுட் புணர்ந்தான் - தெருள்அளித்தான்

எச்சோ தனையும் இயற்றாமல் ஆண்டுகொண்டான்

அச்சோ எனக்கவன்போல் ஆர்.

1

4697

ஆரணமும் ஆகமமும் ஆங்காங் குணர்த்துகின்ற

காரணமும் காரியமும் காட்டுவித்தான் - பூரணன்சிற்

றம்பலத்தான் என்னாசை அப்பன் எலாம்வல்ல

செம்பலத்தை என்உளத்தே சேர்த்து.

2

4698

சேர்த்தான் பதம்என் சிரத்தே திருவருட்கண்
பார்த்தான்என் எண்ணமெலாம் பாலித்தான் - தீர்த்தான்என்
துன்பமெலாம் தூக்கமெலாம் சூழாது நீக்கிவிட்டான்
இன்பமெலாம் தந்தான் இசைந்து.

3

4699

இசைந்தான்என் உள்ளத் திருந்தான் எனையும்
நசைந்தான்என் பாட்டை நயந்தான் - அசைந்தாடு
மாயை மனம்அடக்கி வைத்தான் அருள்எனும்என்
தாயைமகிழ் அம்பலவன் தான்.

4

4700

தானே அருள்ஆனான் தானே பொருள்ஆனான்
தானேஎல் லாம்வல்ல தான்ஆனான் - தானேதான்
நான்ஆனான் என்னுடைய நாயகன்ஆ னான்ஞான
வான்ஆனான் அம்பலத்தெம் மான்.

5

4701

மான்முதலா உள்ள வழக்கெல்லாம் தீர்த்தருளித்
தான்முதலாய் என்னுளமே சார்ந்தமர்ந்தான் - தேன்முதலாத்
தித்திக்கும் பண்டமெலாம் சேர்த்தாங்கென் சிந்தைதனில்

தித்திக்கும் அம்பலத்தான் தேர்ந்து.

6

4782

தேர்ந்தேன் தெளிந்தேன் சிவமே பொருள்எனஉள்

ஓர்ந்தேன் அருளமுதம் உண்கின்றேன் - சார்ந்தேன்சிற்

றம்பலத்தில் எல்லாம்வல் லானை அவன்அருளால்

எம்பலத்தெல் லாம்வலன்ஆ னேன்.

7

4783

ஆனேன் அவனா அவன்அருளால் ஆங்காங்கு

நானே களித்து நடிக்கின்றேன் - தானேஎன்

தந்தைஎன்பால் வைத்த தயவைநினைக் குந்தோறும்

சிந்தைவியக் கின்றேன் தெரிந்து.

8

4784

தெரிந்தேன் அருளால் சிவம்ஒன்றே என்று

புரிந்தேன் சிவம்பலிக்கும் பூசை - விரிந்தமனச்

சேட்டைஎலாம் தீர்த்துவிட்டேன் சித்தெல்லாம் வல்லஅருள்

நாட்டைஎலாம் கைக்கொண்டேன் நான்.

9

4785

நான்செய்த நற்றவந்தான் யாதோ நவிற்றரிது
வான்செய்த தேவரெலாம் வந்தேவல் - தான்செய்து
தம்பலம்என் றேமதிக்கத் தான்வந்தென் னுட்கலந்தான்
அம்பலவன் தன்அருளி னால்.

10

திருச்சிற்றம்பலம்

Back

91. உலப்பில் இன்பம்

கலிவிருத்தம்

4796.

கருணாநிதி யேஅடி யேன்இரு கண்ணுளானே
தெருள்நாடும்என் சிந்தையுள் மேவிய தேவதேவே
பொருள்நாடிய சிற்றம்ப லத்தொளிர் புண்ணியாமெய்த்
தருணாஇது தான்தரு ணம்எனைத் தாங்கிக்கொள்ளே.

1

4797

கூகாஎனக் கூடி எடாதிக் கொடியனேற்கே
சாகாவரம் தந்த தயாநிதித் தந்தையேநின்
மாகாதலன் ஆகினன் நான்இங்கு வாழ்கின்றேன்என்
யோகாதி சயங்கள் உரைக்க உலப்புறாதே.

2

4708

எந்தாய்உனைக் கண்டு களித்தனன் ஈண்டிப்போதே
சிந்தாநல மும்பல மும்பெற்றுத் தேக்குகின்றேன்
அந்தாமரை யான்நெடு மாலவன் ஆதிவானோர்
வந்தார்எனை வாழ்த்துகின் றார்இங்கு வாழ்கஎன்றே.

3

4709

வாழ்வேன்அரு ளாரமு துண்டிங்கு வாழ்கின்றேன்நான்
ஏழ்வேதனை யும்தவிர்ந் தேன்உனை யேஅடைந்தேன்
சூழ்வேன்திருச் சிற்றம்பலத்தைத் துதித்து வாழ்த்தித்
தாழ்வேன்அல தியார்க்கும் இனிச்சற்றும் தாழ்ந்திடேனே.

4

4710

தாழாதெனை ஆட்கொண் டருளிய தந்தையேநின்
கேழார்மணி அம்பலம் போற்றக் கிடைத்துளேன்நான்
ஏழாநிலை மேல்நிலை ஏறி இலங்குகின்றேன்
ஊழால்வந்த துன்பங்கள் யாவும் ஒழிந்ததன்றே.

5

4711

கோடாமறை ஆகமம் ஆதிய கூறுகின்ற
சூடாமணி யேமணி யுள்ஒளிர் சோதியேஎன்

பாடானவை தீர்த்தருள் ஈந்துநின் பாதம்என்னும்

வாடாமலர் என்முடி சூட்டினை வாழிநீயே.

6

4712

எல்லாஞ்செய வல்லவ னேஎனை ஈன்றதாயின்

நல்லாய்சிவ ஞானிகள் பெற்றமெய்ஞ் ஞானவாழ்வே

கொல்லாநெறி காட்டிஎன் தன்னைக் குறிப்பிற்கொண்டென்

பொல்லாமை பொறுத்தனை வாழ்கநின் பொற்பதமே.

7

4713

பரமான சிதம்பர ஞான சபாபதியே

வரமான எல்லாம் எனக்கீந்தநல் வள்ளலேஎன்

தரமானது சற்றும் குறித்திலை சாமிநின்னை

உரமானஉள் அன்பர்கள் ஏசுவர் உண்மைஈதே.

8

4714

தாயேஎனைத் தந்த தயாநிதித் தந்தையேஇந்

நாயேன்பிழை யாவையும் கொண்டனை நன்மைஎன்றே

காயேகனி யாகக் கருதும் கருத்தனேநின்

சேயேஎன என்பெயர் எங்கும் சிறந்ததன்றே.

9

4715

பொய்யே உரைக் கின்றஎன் சொல்லும் புனைந்துகொண்டாய்

மெய்யேதிரு அம்பலத் தாடல்செய் வித்தகனே

எய்யேன்இனி வெம்மலக் கூட்டில் இருந்தென்உள்ளம்

நையேன்சுத்த நல்லுடம் பெய்தினன் நானிலத்தே.

10

திருச்சிற்றம்பலம்

Back

92. மெய் இன்பப் பேறு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4716.

சத்தியம் சத்தியம் அருட்பெருஞ் சோதித்

தந்தைய ரேஎனைத் தாங்குகின் றீரே

உத்தமம் ஆகும்நுந் திருச்சமு கத்தென்

உடல்பொருள் ஆவியை உவப்புடன் அளித்தேன்

இத்தகை உலகிடை அவைக்கும்என் தனக்கும்

ஏதுஞ் சுதந்தரம் இல்லைஇங் கினிநீர்

எத்தகை ஆயினும் செய்துகொள் கிற்பீர்

எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

1

4717

ஆணைநும் ஆணைஎன் அருட்பெருஞ் சோதி
ஆண்டவ ரேதிரு அம்பலத் தவரே
நாணைவிட் டுரைக்கின்ற வாறிது கண்டீர்
நாயக ரேஉமை நான்விட மாட்டேன்
கோணைஎன் உடல்பொருள் ஆவியும் நுமக்கே
கொடுத்தனன் இனிஎன்மேல் குறைசொல்ல வேண்டாம்
ஏணைநின் றெடுத்தகைப் பிள்ளைநான் அன்றோ
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

2

4718

அகத்தொன்று புறத்தொன்று நினைத்ததிங் கில்லை
அருட்பெருஞ் சோதிஎன் ஆண்டவ ரேநீர்
சகத்தென்றும் எங்கணும் சாட்சியாய் நின்றீர்
தனிப்பெருந் தேவரீர் திருச்சமு கத்தே
உகத்தென(369) துடல்பொருள் ஆவியை நுமக்கே
ஒருமையின் அளித்தனன் இருமையும் பெற்றேன்
இகத்தன்றிப் பரத்தினும் எனக்கோர்பற் றிலைகாண்
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

3

(369). உகத்து - உகந்து என்பதன் வலித்தல் விகாரம் - முதற்பதிப்பு.

4719

தப்படி எடுத்துக்கொண் டுலகவர் போலே
சாற்றிட மாட்டேன்நான் சத்தியம் சொன்னேன்
செப்படி வித்தைசெய் சித்தர்என் றோதும்
தேவரீர் வல்லபத் திருச்சமு கத்தே
இப்படி வான்முதல் எங்கணும் அறிய
என்னுடல் ஆதியை ஈந்தனன் உமக்கே
எப்படி ஆயினும் செய்துகொள் கிற்பீர்
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

4

4720

தருணத்துக் கேற்றவா சொல்லிப்பின் மாற்றும்
தப்புரை ஈதன்று சத்தியம் சொன்னேன்
கருணைப் பெருக்கினில் கலந்தென துள்ளே
கனவினும் நனவினும் களிப்பருள் கின்றீர்
வருணப் பொதுவிலும் மாசமு கத்தென்
வண்பொரு ளாதியை நண்பொடு கொடுத்தேன்
இருள்நச் சறுத்தமு தந்தர வல்லீர்
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

5

4721

வாய்மட்டில் சொல்கின்ற வார்த்தைஅன் றிதுஎன்

மனம்ஒத்துச் சொல்லிய வாய்மைமுக் காலும்

தாய்மட்டில் அன்றிஎன் தந்தையும் குருவும்

சாமியும் ஆகிய தனிப்பெருந் தகையீர்

ஆய்மட்டில் என்னுடல் ஆதியை நுமக்கே

அன்புடன் கொடுத்தனன் ஆண்டவ ரேநீர்

ஏய்மட்டில் எப்படி யேனுஞ்செய் கிற்பீர்

எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

6

4722

தித்திக்கப் பேசிக் கசப்புள்ளே காட்டும்

திருட்டுப்பேச் சன்றுநும் திருவுளம் அறியும்

எத்திக்கும் அறியஎன் உடல்பொருள் ஆவி

என்பவை மூன்றும்உள் அன்பொடு கொடுத்தேன்

சித்திக்கும் மூலத்தைத் தெளிவித்தென் உள்ளே

திருநடம் செய்கின்ற தேவரீர் தாமே

இத்திக்கில் எப்படி யேனுஞ்செய் கிற்பீர்

எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

7

4723

புன்மார்க்கத் துள்ளும் புறத்தும் வேறாகிப்

புகன்றசொல் அன்றுநும் பொன்னடி கண்ட

சன்மார்க்க சங்கத்துச் சாதுக்கள் காணச்

சத்தியம் சத்தியம் சத்தியம் சொன்னேன்

தன்மார்க்கத் தென்னுடல் ஆதியை நுமக்கே

தந்தனன் திருவருட் சந்நிதி முன்னே

என்மார்க்கத் தெப்படி யேனுஞ்செய் கிற்பீர்

எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

8

4724

இச்சைவே றில்லைஇங் கென்கருத் தெல்லாம்

என்னுள் அமர்ந்தறிந் தேஇருக் கின்றீர்

விச்சை எலாம்வல்ல நுந்திருச் சமுக361

விண்ணப்பம் என்னுடல் ஆதியை நுமக்கே

நிச்சலும் தந்தனன் என்வசம் இன்றி

நின்றனன் என்றனை நீர்செய்வ தெல்லாம்

எச்செயல் ஆயினும் செய்துகொள் கிற்பீர்

எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

9

361. சமுகம் - ச. மு. க. பதிப்பு.

4725

மன்செய்து கொண்டசன் மார்க்கத்தில் இங்கே

வான்செய்து கொண்டது நான்செய்து கொண்டேன்

முன்செய்து கொண்டதும் இங்ஙனங் கண்டீர்

மூவகை யாம்உடல் ஆதியை நுமது

பொன்செய்து கொண்ட பொதுவினில் ஆடும்

பொன்னடி காணப் பொருந்திக் கொடுத்தேன்

என்செய்து கொண்டாலும் செய்துகொள் கிற்பீர்

எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

10

4726

தெய்வங்கள் பலபல சிந்தைசெய் வாரும்

சேர்கதி பலபல செப்புகின் றாரும்

பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும்

பொய்ச்சம யாதியை மெச்சுகின் றாரும்

மெய்வந்த திருவருள் விளக்கம்ஒன் றில்லார்

மேல்விளை வறிகிலர் வீண்கழிக் கின்றார்

எய்வந்த துன்பொழித் தவர்க்கறி வருள்வீர்

எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே.

11

திருச்சிற்றம்பலம்

Back

93. சிவபுண்ணியப் பேறு

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4727.

மாலிலே மயங்கி மண்ணிலே அநித்த
வாழ்விலே வரவிலே மலஞ்சார்
தோலிலே ஆசை வைத்துவீண் பொழுது
தொலைக்கின்றார் தொலைக்கநான் உனது
காலிலே ஆசை வைத்தனன் நீயும்
கனவினும் நனவினும் எனைநின்
பாலிலே வைத்தாய் எனக்கிது போதும்
பண்ணிய தவம்பலித் ததுவே.

1

4728

மதத்திலே சமய வழக்கிலே மாயை
மருட்டிலே இருட்டிலே மறவாக்
கதத்திலே மனத்தை வைத்துவீண் பொழுது
கழிக்கின்றார் கழிக்கநான் உன்பூம்
பதத்திலே மனத்தை வைத்தனன் நீயும்
பரிந்தெனை அழிவிலா நல்ல
பதத்திலே வைத்தாய் எனக்கிது போதும்
பண்ணிய தவம்பலித் ததுவே.

3

4729

குலத்திலே சமயக் குழியிலே நரகக்

குழியிலே குமைந்துவீண் பொழுது

நிலத்திலே போக்கி மயங்கிஏ மாந்து

நிற்கின்றார் நிற்கநான் உவந்து

வலத்திலே நினது வசத்திலே நின்றேன்

மகிழ்ந்துநீ என்உளம் எனும்அம்

பலத்திலே நின்றாய் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

3

4730

கூடவும் பின்னே பிரியவும் சார்ந்த

கொழுநரும் மகளிரும் நாண

நீடஎன் உளத்தே கலந்துகொண் டென்றும்

நீங்கிடா திருந்துநீ என்னோ

டாடவும் எல்லாம் வல்லசித் தியைப்பெற்

றறிவுரு வாகிநான் உனையே

பாடவும் பெற்றேன் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

4

4731

உயத்திடம் அறியா திறந்தவர் தமைஇவ்

வுலகிலே உயிர்பெற்று மீட்டும்

நயத்தொடு வருவித் திடும்ஒரு ஞான

நாட்டமும் கற்பகோ டியினும்

வயத்தொடு சாகா வரமும்என் தனக்கே

வழங்கிடப் பெற்றனன் மரண

பயத்தைவிட் டொழித்தேன் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

5

4732

நாடல்செய் கின்றேன் அருட்பெருஞ் சோதி

நாதனை என்உளே கண்டு

கூடல்செய் கின்றேன் எண்ணிய எல்லாம்

கூடிடக் குலவிஇன் புருவாய்

ஆடல்செய் கின்றேன் சித்தெலாம் வல்லான்

அம்பலம் தன்னையே குறித்துப்

பாடல்செய் கின்றேன் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

6

4733

துதிபெறும் அயனோ டரிஅரன் முதலோர்

சூழ்ந்துசூழ்ந் திளைத்தொரு தங்கள்

விதியைநொந் தின்னும் விழித்திருக் கின்றார்

விழித்திருந் திடவும்நோ வாமே

மதியிலேன் அருளால் சுத்தசன் மார்க்க

மன்றிலே வயங்கிய தலைமைப்

பதிபதம் பெற்றேன் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

7

4734

புரிசைவான் உலகில் பூவுல கெல்லாம்

புண்ணிய உலகமாய்ப் பொலிந்தே

கரிசெலாம் தவிர்ந்து களிப்பெலாம் அடைந்து

கருத்தொடு வாழவும் கருத்தில்

துரிசெலாம் தவிர்க்கும் சுத்தசன் மார்க்கம்

துலங்கவும் திருவருட் சோதிப்

பரிசெலாம் பெற்றேன் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

8

4735

வேதமே விளங்க மெய்ம்மையே வயங்க

வெம்மையே நீங்கிட விமல

வாதமே வழங்க வானமே முழங்க

வையமே உய்யஓர் பரம

நாதமே தொனிக்க ஞானமே வடிவாய்

நன்மணி மன்றிலே நடிக்கும்

பாதமே பிடித்தேன் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

9

4736

கட்டமும் கழன்றேன் கவலைவிட் டொழித்தேன்

கலக்கமும் தீர்ந்தனன் பிறவிச்

சட்டமும் கிழித்தேன் தூக்கமும் துறந்தேன்

சாவையும் நோவையும் தவிர்ந்தேன்

சிட்டமும் அடைந்தேன் சிற்சபை உடையான்

செல்வமெய்ப் பிள்ளைஎன் றொருபேர்ப்

பட்டமும் தரித்தேன் எனக்கிது போதும்

பண்ணிய தவம்பலித் ததுவே.

10

திருச்சிற்றம்பலம்

Back

## 94. சிவானந்தப் பற்று

கட்டளைக் கலித்துறை

4737.

வேதமும் வேதத்தின் அந்தமும் போற்ற விளங்கியநின்

பாதமும் மாமுடி யும்கண்டு கொள்ளும் படிஎனக்கே

போதமும் போதத் தருள்அமு தும்தந்த புண்ணியனே

நாதமும் நாத முடியும் கடந்த நடத்தவனே.

1

4738

வண்ணப்பொன் னம்பல வாழ்வேஎன் கண்ணினுள் மாமணியே

சுண்ணப்பொன் நீற்றொளி ஓங்கிய சோதிச் சுகப்பொருளே

எண்ணப்ப யின்றஎன் எண்ணம் எலாம்முன்னர் ஈகஇதென்

விண்ணப்பம் ஏற்று வருவாய்என் பால்விரைந் தேவிரைந்தே.

2

4739

சிற்சபை அப்பனைக் கண்டுகொண் டேன்அருள் தெள்ளமுதம்

சற்சபை உள்ளம் தழைக்கஉண் டேன்உண்மை தான்அறிந்த

நற்சபைச் சித்திகள் எல்லாம்என் கைவசம் நண்ணப்பெற்றேன்

பொற்சபை ஓங்கப் புரிந்தாடு தற்குப் புகுந்தனனே.

3

4740

வரையற்ற சீர்ப்பெரு வாழ்வுதந் தென்மனம் மன்னிஎன்றும்

புரையற்ற மெய்ந்நிலை ஏற்றிமெய்ஞ் ஞானப் பொதுவினிடைத்

திரையற்ற காட்சி அளித்தின் னமுதத் தெளிவருளி

நரையற்று மூப்பற் றிறப்பற் றிருக்கவும் நல்கியதே(362).

4

(362). நண்ணினனே - முதற்பதிப்பு., பொ. சு., ச. மு. க.

4741

தாயாகி என்உயிர்த் தந்தையும் ஆகிஎன் சற்குருவாய்த்

தேயாப் பெரும்பதம் ஆகிஎன் சத்தியத் தெய்வமுமாய்

வாயாரப் பாடும்நல் வாக்களித் தென்உளம் மன்னுகின்ற

தூயா திருநட ராயாசிற் றம்பலச் சோதியனே.

5

4742

ஆதியும் அந்தமும் இல்லாத் தனிச்சுட ராகிஇன்ப

நீதியும் நீர்மையும் ஓங்கப் பொதுவில் நிருத்தமிடும்

சோதியும் வேதியும் நான்அறிந் தேன்இச் செகதலத்தில்

சாதியும் பேதச் சமயமும் நீங்கித் தனித்தனனே.

6

4743

தன்னே ரிலாத தலைவாசிற் றம்பலம் தன்னில்என்னை

இன்னே அடைகுவித் தின்பருள் வாய்இது வேதருணம்

அன்னே எனைப்பெற்ற அப்பாஎன் றுன்னை அடிக்கடிக்கே

சொன்னேன்முன் சொல்லுகின் றேன்பிற ஏதுந் துணிந்திலனே.

7

4744

தேகாதி மூன்றும்உன் பாற்கொடுத் தேன்நின் திருவடிக்கே

மோகா திபன்என் றுலகவர் தூற்ற முயலுகின்றேன்

நாகா திபரும் வியந்திட என்எதிர் நண்ணிஎன்றும்

சாகா வரந்தந்து சன்மார்க்க நீதியும் சாற்றுகவே.

8

4745

கற்றேன்சிற் றம்பலக் கல்வியைக் கற்றுக் கருணைநெறி

உற்றேன்எக் காலமும் சாகாமல் ஓங்கும் ஒளிவடிவம்

பெற்றேன் உயர்நிலை பெற்றேன் உலகில் பிறநிலையைப்

பற்றேன் சிவானந்தப் பற்றேஎன் பற்றெனப் பற்றினனே.

9

4746

தீமைகள் யாவும் தொலைத்துவிட் டேன்இத் தினந்தொடங்கிச்

சேமநல் இன்பச் செயலே விளங்கமெய்ச் சித்திஎலாம்

காமமுற் றென்னைக் கலந்துகொண் டாடக் கருணைநடத்

தாமன்என் உள்ளமும் சாரவும் பெற்றனன் சத்தியமே.

10

திருச்சிற்றம்பலம்

Back

## 95. இறை எளிமையை வியத்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

4747.

படமாட்டேன் துயர்சிறிதும் படமாட்டேன் இனிநான்

பயப்படவும் மாட்டேன்நும் பதத்துணையே பிடித்தேன்

விடமாட்டேன் ஏமாந்து விடமாட்டேன் கண்டீர்

மெய்ம்மைஇது நும்மாணை விளம்பினன்நும் அடியேன்

கெடமாட்டேன் பிறர்மொழிகள் கேட்டிடவும் மாட்டேன்

கிளர்ஒளிஅம் பலத்தாடல் வளர்ஒளிநும் அல்லால்

நடமாட்டேன் என்உளத்தே நான்சாக மாட்டேன்

நல்லதிரு வருளாலே நான்தான்ஆ னேனே.

1

4748

சாகாத கல்வியிலே தலைகாட்டிக் கொடுத்தீர்

தடையறியாக் கால்காட்டித் தரம்பெறவும் அளித்தீர்

மாகாதல் உடையவனா மனங்கனிவித் தழியா

வான்அமுதும் மெய்ஞ்ஞான மருந்தும்உணப் புரிந்தீர்

போகாத புனலாலே சுத்தஉடம் பினராம்

புண்ணியரும் நண்ணரிய பொதுநிலையுந் தந்தீர்

நாகாதி பதிகளும்நின் றேத்தவளர்க் கின்றீர்

நடராஜ ரேநுமக்கு நான்எதுசெய் வேனே.

2

4749

வேதாந்த நிலையும்அதன் அந்தத்தே விளங்கும்

மெய்ந்நிலையும் காட்டுவித்தீர் விளங்கியசித் தாந்தப்

போதாந்த நிலையும்அப்பால் புகல்அரிதாம் பெரிய

பொருள்நிலையும் தெரிவித்தீர் புண்ணியரே நுமது

பாதாந்தம் அறிவித்தீர் சுத்தவடி வுடனே

பகர்பிரண வாகாரப் பரிசும்எனக் களித்தீர்

நாதாந்தத் தனிச்செங்கோல் நான்செலுத்தக் கொடுத்தீர்

நடராஜ ரேநுமக்கு நான்எதுசெய் வேனே.

3

4750

ஆர்நீஎன் றெதிர்வினவில் விடைகொடுக்கத் தெரியா

அறிவிலியேன் பொருட்டாக அன்றுவந்தென் தனக்கே

ஏர்நீடும் பெரும்பொருள்ஒன் றீந்துமகிழ்ந் தாண்டீர்

இன்றும்வலிந் தெளியேன்பால் எய்திஒளி ஓங்கப்

பார்நீடத் திருவருளாம் பெருஞ்சோதி அளித்தீர்

பகரும்எலாம் வல்லசித்திப் பண்புறவும் செய்தீர்

நார்நீட நான்தானாய் நடம்புரிகின் றீரே

நடராஜ ரேநுமக்கு நான்எதுசெய் வேனே.

4

4751

பாயிரமா மறைகளெலாம் பாடுகின்ற பாட்டுன்

பாட்டேஎன் றறிந்துகொண்டேன் பரம்பொருள்உன் பெருமை

ஆயிரம்ஆ யிரங்கோடி நாஉடையோர் எனினும்

அணுத்துணையும் புகல்அரிதேல் அந்தோஇச் சிறியேன்

வாய்இரங்கா வகைபுகலத் துணிந்தேன்என் னுடைய

மனத்தாசை ஒருகடலோ எழுகடலிற் பெரிதே

சேய்இரங்கா முனம்எடுத்தே அணைத்திடுந்தாய் அனையாய்

திருச்சிற்றம் பலம்விளங்கும் சிவஞான குருவே.

5

4752

ஊன்உரைக்கும் உயிரளவும் உலகளவும் அறியேன்

உன்னளவை அறிவேனோ என்னளவை அறிந்தோய்

வான்உரைக்க மாட்டாதே வருந்தினவே மறையும்

வகுத்துரைக்க அறியாதே மயங்கினவே அந்தோ

கோன்உரைக்கும் குறிகுணங்கள் கடந்தபெரு வெளிமேல்

கூடாதே கூடிநின்ற கோவேநின் இயலை

நான்உரைக்க நான்ஆரோ நான்ஆரோ நவில்வேன்

நான்எனவே நாணுகின்றேன் நடராஜ குருவே.

6

4753

கண்ணுடையீர் பெருங்கருணைக் கடலுடையீர் எனது

கணக்கறிந்தீர் வழக்கறிந்தீர் களித்துவந்தன் றுரைத்தீர்

எண்ணுடையார் எழுத்துடையார் எல்லாரும் போற்ற

என்னிதய மலர்மிசைநின் றெழுந்தருளி வாமப்

பெண்ணுடைய மனங்களிக்கப் பேருலகம் களிக்கப்

பெத்தருமுத் தருமகிழப் பத்தரெலாம் பரவ

விண்ணுடைய அருட்ஜோதி விளையாடல் புரிய

வேண்டும்என்றேன் என்பதன்முன் விரைந்திசைந்தீர் அதற்கே.

7

4754

பொதுநடஞ்செய் மலரடிஎன் தலைமேலே அமைத்தீர்

புத்தமுதம் அளித்தீர்என் புன்மைஎலாம் பொறுத்தீர்

சதுமறைஆ கமங்கள்எலாம் சாற்றரிய பெரிய

தனித்தலைமைத் தந்தையரே சாகாத வரமும்

எதுநினைத்தேன் நினைத்தாங்கே அதுபுரியும் திறமும்

இன்பஅனு பவநிலையும் எனக்கருளு வதற்கே

இதுதருணம் என்றேன்நான் என்பதன்முன் கொடுத்தீர்

என்புகல்வேன் என்புடைநும் அன்பிருந்த வாறே.

8

4755

கரும்பின்மிக இனிக்கின்ற கருணைஅமு தளித்தீர்

கண்ணனையீர் கனகசபை கருதியசிற் சபைமுன்

துரும்பின்மிகச் சிறியேன்நான் அன்றுநின்று துயர்ந்தேன்

துயரேல்என் றெல்லையிட்டீர் துரையேஅவ் வெல்லை

விரும்புறஆ யிற்றிதுதான் தருணம்இந்தத் தருணம்

விரைந்தருள வேண்டுமென விளம்பிநின்றேன் அடியேன்

பெரும்பிழைகள் அனைத்தினையும் பொறுத்தருளி இந்நாள்

பெரிதளித்தீர் அருட்பெருமை பெற்றவளில் பெரிதே.

9

4756

அந்நாளில் அடிச்சிறியேன் அம்பலவா யிலிலே

அருளைநினைந் தொருபுறத்தே அயர்ந்தழுது நின்றேன்

முந்நாளில் யான்புரிந்த பெருந்தவத்தால் எனக்கு

முகமலர்ந்து மொழிந்தஅருண் மொழியைநினைந் தந்தச்

செந்நாளை எதிர்பார்த்தே பன்னாளும் களித்தேன்

சிந்தைமலர்ந் திருந்தேன்அச் செல்வமிகு திருநாள்

இந்நாளே ஆதலினால் எனக்கருள்வீர் என்றேன்

என்பதன்முன் அளித்தீர்நும் அன்புலகில் பெரிதே.

10

திருச்சிற்றம்பலம்

Back

## 96. திருநடப் புகழ்ச்சி

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4757.

பதியேஎம் பரனேஎம் பரம்பரனே எமது

பராபரனே ஆனந்தப் பதந்தருமெய்ஞ் ஞான

நிதியேமெய்ந் நிறைவேமெய்ந் நிலையேமெய் இன்ப

நிருத்தமிடும் தனித்தலைமை நிபுணமணி விளக்கே

கதியேஎன் கண்ணேஎன் கண்மணியே எனது

கருத்தேஎன் கருத்தில்ஊற்ற கனிவேசெங் கனியே

துதியேஎன் துரையேஎன் தோழாஎன் உளத்தே

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

1

4758

ஆரணமே ஆகமமே ஆரணஆ கமத்தின்

அரும்பொருளே அரும்பொருளின் அனுபவமே அறிவே

காரணமே காரியமே காரணகா ரியங்கள்

கடந்தபெரும் பதியேஎன் கருத்தமர்ந்த நிதியே

பூரணமே புண்ணியமே பொதுவிளங்கும் அரசே

புத்தமுதே சத்தியமே பொன்னேசெம் பொருளே

தோரணமே விளங்குசித்தி புரத்தினும்என் உளத்தும்

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

2

4759

இணைஏதும் இன்றிநின்ற இறையவனே மறைசொல்

ஏகமுமாய் அனேகமுமாய் இலங்குபரம் பரனே

அணையேதும் இன்றிநிறை பெரும்புனலே அதன்மேல்

அனலேஎன் அப்பாஎன் அவத்தைஎலாம் கடத்தும்

புணையேமெய்ப் பொருளேமெய்ப் புகழேமெய்ப் புகலே

பொதுவேஉள் ளதுவேதற் போதமிலார்க் குதவும்

துணையேசத் துவமேதத் துவமேஎன் னுளத்தே

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

3

4760

எருதின்உழைத் திருந்தேனுக் கிரங்கிஅடிச் சிறியேன்

இருந்தஇடந் தனைத்தேடி இணைப்பரிமான் ஈர்க்கும்

ஒருதிருத்தேர் ஊர்ந்தென்னை உடையவளோ டடைந்தே

உள்வாயில் தாழ்பிடித்துப் பயத்தொடுநின் றேனே

வருதிஎனத் திருக்கரங்கள் அசைத்தழைத்த பதியே

மணியேஎன் மருந்தேஎன் வாழ்வேஎன் வரமே

சுருதிமுடி அடிக்கணிந்த துரையேஎன் உளத்தே

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

4

4761

அகவடிவை ஒருகணத்தே அனகவடி வாக்கி

அருளமுதம் உவந்தளித்தே அடிக்கடிஎன் உளத்தே

முகவடிவந் தனைக்காட்டி களித்துவியந் திடவே

முடிபனைத்தும் உணர்த்திஒரு முன்னிலைஇல் லாதே

சகவடிவில் தானாகி நானாகி நானும்

தானும்ஒரு வடிவாகித் தனித்தோங்கப் புரிந்தே

சுகவடிவந் தனைஅளித்த துரையேஎன் உளத்தே

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

5

4762

உடுத்ததுகில் அவிழ்த்துவிரித் தொருதரையில் தனித்தே

உன்னாதும் உன்னிஉளத் துறுகலக்கத் தோடே

படுத்தயர்ந்த சிறியேன்றன் அருகணைந்து மகனே

பயமுனக்கென் என்றென்னைப் பரிந்துதிருக் கரத்தால்

அடுத்தணைத்துக் கொண்டெடுத்துப் போய்ப்பிறிதோர் இடத்தே

அமர்த்திநகைத் தருளியஎன் ஆண்டவனே அரசே

தொடுத்தணிஎன் மொழிமாலை அணிந்துகொண்டென் உளத்தே

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

6

4763

ஆற்றாத அடிச்சிறியேற் காற்றல்மிகக் கொடுத்தே

அம்மையுமாய் அப்பனுமாய் ஆதரித்தன் புடனே

போற்றாத குற்றமெலாம் பொறுத்தருளி எனைஇப்

பூதலத்தார் வானகத்தார் போற்றிமதித் திடவே

ஏற்றாத உயர்நிலைமேல் ஏற்றிஎல்லாம் வல்ல

இறைமையுந்தந் தருளியஎன் இறையவனே எனக்கே

தோற்றாத தோற்றுவித்த துரையேஎன் உளத்தே

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

7

4764

படிப்படக்கிக் கேள்விஎலாம் பற்றறவிட் டடக்கிப்

பார்த்திடலும் அடக்கிஉறும் பரிசம்எலாம் அடக்கித்

தடிப்புறும்ஊண் சுவைஅடக்கிக் கந்தம்எலாம் அடக்கிச்

சாதிமதம் சமயம்எனும் சழக்கையும்விட் டடக்கி

மடிப்படக்கி நின்றாலும் நில்லேன்நான் எனவே

வனக்குரங்கும் வியப்பஎன்றன் மனக்குரங்கு குதித்த

துடிப்படக்கி ஆட்கொண்ட துரையேஎன் உளத்தே

சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

8

4765

பணிந்தறியேன் அன்புடனே பாடுதலும் அறியேன்

படித்தறியேன் கேட்டறியேன் பத்தியில்பூ மாலை
அணிந்தறியேன் மனம்உருகக் கண்களின்நீர் பெருக
அழுதறியேன் தொழுதறியேன் அகங்காரம் சிறிதும்
தணிந்தறியேன் தயவறியேன் சத்தியவா சகமும்
தான்அறியேன் உழுந்தடித்த தடியதுபோல் இருந்தேன்
துணிந்தெனக்கும் கருணைசெய்த துரையேஎன் உளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

9

4766

தாங்காதே பசிபெருக்கிக் கடைநாய்போல் உலம்பித்
தவம்விடுத்தே அவந்தொடுத்தே தனித்துண்டும் வயிறு(363)
வீங்காதேல் எழுந்திருக்கேன் வீங்கிவெடித் திடல்போல்
விம்மும்எனில் எழுந்துடனே வெறுந்தடிபோல் விழுந்தே
வாங்காது தூங்கியதோர் வழக்கம்உடை யேனை
வலிந்தடிமை கொண்டருளி மறப்பொழித்தெந் நாளும்
தூங்காதே விழிக்கவைத்த துரையேஎன் உளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

10

(363). தனித்துண்டு வயிறும் - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா., ச. மு. க.

திருச்சிற்றம்பலம்

Back

97. திருவருட்பேறு

நேரிசை வெண்பா

4767.

சீர்விளங்கு சுத்தத் திருமேனி தான்தரித்துப்
பார்விளங்க நான்படுத்த பாயலிலே - தார்விளங்க
வந்தாய் எனைத்தூக்கி மற்றொருசார் வைத்தனையே
எந்தாய்நின் உள்ளமறி யேன்.

1

4768

பயத்தோ டொருபால் படுத்திருந்தேன் என்பால்
நயத்தோ டணைந்தே நகைத்து - வயத்தாலே
தூக்கி எடுத்தெனைமேல் சூழலிலே வைத்தனைநான்
பாக்கியவான் ஆனேன் பதிந்து.

2

4769

என்னேநின் தண்ணருளை என்னென்பேன் இவ்வுலகில்
முன்னே தவந்தான் முயன்றேனோ - கொன்னே
படுத்தயர்ந்தேன் நான்படுத்த பாய்அருகுற் றென்னை
எடுத்தொருமேல் ஏற்றிவைத்தா யே.

3

4770

சிந்தா குலத்தொடுநான் தெய்வமே என்றுநினைந்

தந்தோ படுத்துள் அயர்வுற்றேன் - எந்தாய்

எடுத்தாள் எனநினையா தேகிடந்தேன் என்னை

எடுத்தாய் தயவைவிய வேன்.

4

4771

உன்னுகின்ற தோறுமென துள்ளம் உருகுகின்ற

தென்னுரைப்பேன் என்னுரைப்பேன் எந்தாயே - துன்னிநின்று

தூக்கம் தவிர்த்தென்னைத் தூக்கிஎடுத் தன்பொடுமேல்

ஆக்கமுற வைத்தாய் அது.

5

4772

நான்படுத்த பாய்அருகில் நண்ணி எனைத்தூக்கி

ஊன்படுத்த தேகம் ஒளிவிளங்கத் - தான்பதித்த

மேலிடத்தே வைத்தனைநான் வெம்மைஎலாம் தீர்ந்தேன்நின்

காலிடத்தே வாழ்கின்றேன் காண்.

6

4773

புண்ணியந்தான் யாது புரிந்தேனோ நானறியேன்

பண்ணியதுன் போடே படுத்திருந்தேன் - நண்ணிஎனைத்

தூக்கி எடுத்தெனது துன்பமெலாந் தீர்த்தருளி

ஆக்கியிடென் றேயருள்தந் தாய்.

7

4774

அஞ்சிஅஞ்சி ஊணும் அருந்தாமல் ஆங்கொருசார்

பஞ்சின் உழந்தே படுத்தயர்ந்தேன் - விஞ்சிஅங்கு

வந்தாய் எனைத்தூக்கி மற்றொருசார் வைத்தமுது

தந்தாய்என் நான்செய் தவம்.

8

4775

நானே தவம்புரிந்தேன் நானே களிப்படைந்தேன்

தேனே எனும்அமுதம் தேக்கஉண்டேன் - ஊனே

ஒளிவிளங்கப் பெற்றேன் உடையான் எனைத்தான்

அளிவிளங்கத் தூக்கிஅணைத் தான்.

9

4776

வாழி எனைத்தூக்கி வைத்த கரதலங்கள்

வாழி எலாம்வல்ல மணிமன்றம் - வாழிநடம்

வாழி அருட்சோதி வாழிநட ராயன்

வாழி சிவஞான வழி.

திருச்சிற்றம்பலம்

Back

98. அருட்கொடைப் புகழ்ச்சி

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4777.

கடையேன் புரிந்த குற்றமெலாம்

கருதா தென்னுட் கலந்துகொண்டு

தடையே முழுதும் தவிர்த்தருளித்

தனித்த ஞான அமுதளித்துப்

புடையே இருத்தி அருட்சித்திப்

பூவை தனையும் புணர்த்திஅருட்

கொடையே கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

1

4778.

கடுத்த மனத்தை அடக்கிஒரு

கணமும் இருக்க மாட்டாதே

படுத்த சிறியேன் குற்றமெலாம்

பொறுத்தென் அறிவைப் பலநாளும்

தடுத்த தடையைத் தவிர்த்தென்றும்

சாகா நலஞ்செய் தனிஅமுதம்

கொடுத்த குருவே நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

2

4779.

மருவும் உலகம் மதித்திடவே

மரண பயந்தீர்த் தெழில்உறுநல்

உருவும் பொருள்ஒன் றெனத்தெளிந்த

உணர்வும் என்றும் உலவாத

திருவும் பரம சித்திஎனும்

சிறப்பும் இயற்கைச் சிவம்எனும்ஓர்

குருவும் கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

3

4780.

சேட்டித் துலகச் சிறுநடையில்

பல்கால் புகுந்து திரிந்துமயல்

நீட்டித் தலைந்த மனத்தைஒரு

நிமிடத் தடக்கிச் சன்மார்க்கக்

கோட்டிக் கியன்ற குணங்களெலாம்

கூடப் புரிந்து மெய்ந்நிலையைக்

காட்டிக் கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

4

4781.

தோலைக் கருதித் தினந்தோறும்

சுழன்று சுழன்று மயங்கும்அந்த

வேலைக் கிசைந்த மனத்தைமுற்றும்

அடக்கி ஞான மெய்ந்நெறியில்

கோலைத் தொலைத்துக் கண்விளக்கம்

கொடுத்து மேலும் வேகாத

காலைக் கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

5

4782.

பட்டிப் பகட்டின் ஊர்திரிந்து

பணமே நிலமே பாவையரே

தெட்டிற் கடுத்த பொய்ஒழுக்கச்

செயலே என்று திரிந்துலகில்

ஒட்டிக் குதித்துச் சிறுவிளையாட்

டுஞற்றி யோடும் மனக்குரங்கைக்

கட்டிக் கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

6

4783.

மதியைக் கெடுத்து மரணம்எனும்
வழக்கைப் பெருக்கி இடர்ப்படும்ஓர்
விதியைக் குறித்த சமயநெறி
மேவா தென்னைத் தடுத்தருளாம்
பதியைக் கருதிச் சன்மார்க்கப்
பயன்பெற் றிடஎன் உட்கலந்தோர்
கதியைக் கொடுத்தாய் நின்தனக்குக்
கைம்மா றேது கொடுப்பேனே.

7

4784.

தருண நிதியே என்னொருமைத்
தாயே என்னைத் தடுத்தாண்டு
வருண நிறைவில் சன்மார்க்கம்
மருவப் புரிந்த வாழ்வேநல்
அருண ஒளியே எனச்சிறிதே
அழைத்தேன் அழைக்கும் முன்வந்தே
கருணை கொடுத்தாய் நின்தனக்குக்
கைம்மா றேது கொடுப்பேனே.

8

4785.

பொற்பங் கயத்தின் புதுநறவும்

சுத்த சலமும் புகல்கின்ற

வெற்பந் தரமா மதிமதுவும்

விளங்கு(364) பசுவின் தீம்பாலும்

நற்பஞ் சகமும் ஒன்றாகக்

கலந்து மரண நவைதீர்க்கும்

கற்பங் கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

9

364. விளங்கும் - முதற்பதிப்பு., பொ, சு., பி. இரா., ச. மு. க.

4786.

புலையைத் தவிர்த்தென் குற்றமெலாம்

பொறுத்து ஞான பூரணமா

நிலையைத் தெரித்துச் சன்மார்க்க

நீதிப் பொதுவில் நிருத்தமிடும்

மலையைக் காட்டி அதனடியில்

வயங்க இருத்திச் சாகாத

கலையைக் கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

10

4787.

அருணா டறியா மனக்குரங்கை

அடக்கத் தெரியா ததனொடுசேர்ந்

திருணா டனைத்தும் சுழன்றுசுழன்

றிளைத்துக் களைத்தேன் எனக்கந்தோ

தெருணா டுலகில் மரணம்உறாத்

திறந்தந் தழியாத் திருஅளித்த

கருணா நிதியே நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

11

4788.

மண்ணுள் மயங்கிச் சுழன்றோடு

மனத்தை அடக்கத் தெரியாதே

பெண்ணுள் மயலைப் பெருங்கடல்போல்

பெருக்கித் திரிந்தேன் பேயேனை

விண்ணுள் மணிபோன் றருட்சோதி

விளைவித் தாண்ட என்னுடைய

கண்ணுள் மணியே நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

12

4789.

புலந்த மனத்தை அடக்கிஒரு

போது நினைக்க மாட்டாதே

அலந்த சிறியேன் பிழைபொறுத்தே

அருளா ரமுதம் அளித்திங்கே

உலந்த உடம்பை அழியாத

உடம்பாப் புரிந்தென் உயிரினுளே

கலந்த பதியே நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

13

4790.

தனியே கிடந்து மனங்கலங்கித்

தளர்ந்து தளர்ந்து சகத்தினிடை

இனியே துறுமோ என்செய்வேன்

எந்தாய் எனது பிழைகுறித்து

முனியேல் எனநான் மொழிவதற்கு

முன்னே கருணை அமுதளித்த

கனியே கரும்பே நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

14

4791.

பெண்ணே பொருளே எனச்சுழன்ற

பேதை மனத்தால் பெரிதுழன்று
புண்ணே எனும்இப் புலைஉடம்பில்
புகுந்து திரிந்த புலையேற்குத்
தண்ணேர் மதியின் அமுதளித்துச்
சாகா வரந்தந் தாட்கொண்ட
கண்ணே மணியே நின்தனக்குக்
கைம்மா றேது கொடுப்பேனே.

15

4792.

பொருத்திக் கொடுத்த புலைஉடம்பில்
புகுந்தேன் புணைத்தற் கிணங்காத
எருத்தில் திரிந்தேன் செய்பிழையை
எண்ணா தந்தோ எனைமுற்றும்
திருத்திப் புனித அமுதளித்துச்
சித்தி நிலைமேல் சேர்வித்தென்
கருத்தில் கலந்தோய் நின்தனக்குக்
கைம்மா றேது கொடுப்பேனே.

16

4793.

பெண்ணுக் கிசைந்தே பலமுகத்தில்
பேய்போல் சுழன்ற பேதைமனத்

தெண்ணுக் கிசைந்து துயர்க்கடலாழ்ந்

திருந்தேன் தன்னை எடுத்தருளி

விண்ணுக் கிசைந்த கதிர்போல்என்

விவேகத் திசைந்து மேலும்என்தன்

கண்ணுக் கிசைந்தோய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

17

4794.

மாட்சி அளிக்கும் சன்மார்க்க

மரபில் மனத்தைச் செலுத்துதற்கோர்

சூழ்ச்சி அறியா துழன்றேனைச்

சூழ்ச்சி அறிவித் தருளரசின்

ஆட்சி அடைவித் தருட்சோதி

அமுதம் அளித்தே ஆனந்தக்

காட்சி கொடுத்தாய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

18

4795.

பொய்யிற் கிடைத்த மனம்போன

போக்கில் சுழன்றே பொய்உலகில்

வெய்யிற் கிடைத்த புழுப்போல

வெதும்பிக் கிடந்த வெறியேற்கு

மெய்யிற் கிடைத்தே சித்திஎலாம்

விளைவித் திடுமா மணியாய்என்

கையிற் கிடைத்தோய் நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

19

4796.

போதல் ஒழியா மனக்குரங்கின்

போக்கை அடக்கத் தெரியாது

நோதல் புரிந்த சிறியேனுக்

கிரங்கிக் கருணை நோக்களித்துச்

சாதல் எனும்ஓர் சங்கடத்தைத்

தவிர்த்தென் உயிரில் தான்கலந்த

காதல் அரசே நின்தனக்குக்

கைம்மா றேது கொடுப்பேனே.

20

திருச்சிற்றம்பலம்

Back

99. திருவருட் கொடை

கொச்சகக் கலிப்பா

4797.

சிருட்டிமுதல் ஐந்தொழில்நான் செய்யஎனக் கருள்புரிந்தாய்
பொருட்டிகழ்நின் பெருங்கருணைப் புனிதஅமு துவந்தளித்தாய்
தெருட்டிகழ்நின் அடியவர்தம் திருச்சபையின் நடுஇருத்தித்
தெருட்டிஎனை வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

1

4798

படைத்தல்முதல் ஐந்தொழில்செய் பணிஎனக்கே பணித்திட்டாய்
உடைத்தனிப்பேர் அருட்சோதி ஓங்கியதெள் ளமுதளித்தாய்
கொடைத்தனிப்போ கங்கொடுத்தாய் நின்அடியர் குழுநடுவே
திடத்தமர்த்தி வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

2

4799

அயன்முதலோர் ஐவர்செயும் தொழில்எனக்கே அளித்திட்டாய்
உயர்வுறுபேர் அருட்சோதித் திருவமுதம் உவந்தளித்தாய்
மயர்வறுநின் அடியவர்தம் சபைநடுவே வைத்தருளிச்
செயமுறவே வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

3

4800

ஐவர்செயும் தொழில்எனக்கே அளித்தாய்நின் அருளமுதென்
கைவரச்செய் துண்ணுவித்தாய் கங்கணம்என் கரத்தணிந்தாய்
சைவர்எனும் நின்னடியார் சபைநடுவே வைத்தருளித்

தெய்வமென்று வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

4

4801

முத்தொழிலோ ஐந்தொழிலும் முன்னிமகிழ்ந் தெனக்களித்தாய்

புத்தமுதம் உண்ணுவித்தோர் பொன்னணிஎன் கரத்தணிந்தாய்

சித்தர்எனும் நின்னடியார் திருச்சபையில் நடுஇருத்திச்

சித்துருவின் வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

5

4802

ஐந்தொழில்நான் செயப்பணித்தாய் அருளமுதம் உணவளித்தாய்

வெந்தொழில்தீர்ந் தோங்கியநின் மெய்யடியார் சபைநடுவே

எந்தைஉனைப் பாடிமகிழ்ந் தின்புறவே வைத்தருளிச்

செந்தமிழின் வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

6

4803

நான்முகன்நா ரணன்முதலாம் ஐவர்தொழில் நயந்தளித்தாய்

மேன்மைபெறும் அருட்சோதித் திருவமுதும் வியந்தளித்தாய்

பான்மையுறு நின்னடியார் சபைநடுவே பதித்தருளித்

தேன்மையொடு வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

7

4804

நாயெனவே திரிந்தேனை வலிந்தழைத்து நான்முகன்மால்
தூயபெருந் தேவர்செயும் தொழில்புரியென் றமுதளித்தாய்
நாயகநின் னடியர்சபை நடுவிருக்க வைத்தருளிச்
சேயெனவே வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

8

4805

புல்வழங்கு புழுஅதனில் சிறியேனைப் புணர்ந்தருளிச்
சொல்வழங்கு தொழில்ஐந்தும் துணிந்துகொடுத் தமுதளித்தாய்
கல்விபெறு நின்னடியர் கழகநடு வைத்தென்னைச்
செல்வமொடு வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

9

4806

தெருமனைதோ றலைந்தேனை அலையாமே சேர்த்தருளி
அருளொளியால் ஐந்தொழிலும் செயப்பணித்தே அமுதளித்து
மருவியநின் மெய்யடியார் சபைநடுவே வைத்தழியாத்
திருவளித்து வளர்க்கின்றாய் சிற்சபையில் நடிக்கின்றாய்.

10

திருச்சிற்றம்பலம்

Back

100. அனுபவ சித்தி

கட்டளைக் கலித்துறை

4807.

அப்பா எனக்கெய்ப்பில் வைப்பாய் இருக்கின்ற ஆரமுதே

இப்பாரில் என்தன்னை நீயே வருவித் திசைவுடனே

தப்பாத தந்திரம் மந்திரம் யாவையும் தந்துலகில்

வெப்பா னதுதவிர்த் தைந்தொழில் செய்ய விதித்தனையே.

1

4808

விதித்தனை என்னைநின் தன்மக னாக விதித்துளத்தே

பதித்தனை என்னுட் பதிந்தனை சிற்றம் பலநடமும்

உதித்தொளிர் பொன்னம் பலநட மும்ஒருங் கேஎனக்கே

கதித்தழி யாமையும் இன்பமும் கைவரக் காட்டினையே.

2

4809

காட்டினை ஞான அமுதளித் தாய்நற் கனகசபை

ஆட்டினை என்பக்கம் ஆக்கினை மெய்ப்பொருள் அன்றுவந்து

நீட்டினை என்றும் அழியா வரந்தந்து நின்சபையில்

கூட்டினை நான்முனம் செய்தவம் யாதது கூறுகவே.

3

4810

கூறுகந் தாய்சிவ காமக் கொடியைக் கொடியில்வெள்ளை

ஏறுகந் தாய்என்னை ஈன்றுகந் தாய்மெய் இலங்குதிரு

நீறுகந் தாய்உல கெல்லாம் தழைக்க நிமிர்சடைமேல்
ஆறுகந் தாய்மன்றில் ஆட்டுகந் தாய்என்னை ஆண்டவனே.

4

4811

ஆண்டவ னேதிரு அம்பலத் தேஅரு ளால்இயற்றும்
தாண்டவ னேஎனைத் தந்தவ னேமுற்றுந் தந்தவனே
நீண்டவ னேஉயிர்க் கெல்லாம் பொதுவினில் நின்றவனே
வேண்ட அனேக வரங்கொடுத் தாட்கொண்ட மேலவனே.

5

4812

மேலவ னேதிரு அம்பலத் தாடல் விளக்கும்மலர்க்
காலவ னேகனல் கையவ னேநுதற் கண்ணவனே
மாலவன் ஏத்தும் சிவகாம சுந்தர வல்லியைஓர்
பாலவ னேஎனைப் பாலகன் ஆக்கிய பண்பினனே.

6

4813

வாட்டமெல் லாந்தவிர்ந் தேன்அருட் பேரொளி வாய்க்கப்பெற்றேன்
கூட்டமெல் லாம்புகழ் அம்பல வாணரைக் கூடப்பெற்றேன்
தேட்டமெல் லாம்வல்ல சித்திபெற் றேன்இச் செகதலத்தே
ஆட்டமெல் லாம்விளை யாடுகின் றேன்எனக் கார்சரியே.

7

4814

நான்செய்த புண்ணியம் யார்செய் தனர்இந்த நானிலத்தே

வான்செய்த தேவரும் காணாத காட்சி மகிழ்ந்துகண்டேன்

ஊன்செய்த மெய்யும் உயிரும் உணர்வும் ஒளிமயமாக்

கோன்செய வேபெற்றுக் கொண்டேன்உண் டேன்அருட்
கோன்அமுதே.

8

4815

எனையான் மதித்துப் புகல்கின்ற தன்றிஃ தெந்தைபிரான்

தனையான் மதித்திங்குப் பெற்றநல் வாழ்வது சாற்றுகின்றேன்

வினையான் மெலிந்த மெலிவைஎல் லாம்விரைந் தேதவிர்த்துத்

தனையான் புணர்ந்திடச் சாகா வரத்தையும் தந்தனனே.

9

4816

சிற்றம் பலத்தைத் தெரிந்துகொண் டேன்எம் சிவன்அருளால்

குற்றம் பலவும் தவிர்ந்துநின் றேன்எண் குணக்குன்றிலே

வெற்றம்பல் செய்தவர் எல்லாம் விரைந்து விரைந்துவந்தே

நற்றம் பலம்தரு வாய்என்கின் றார்இந்த நானிலத்தே.

10

4817

ஒன்றுகண் டேன்திரு அம்பலத் தேஒளி ஓங்குகின்ற

நன்றுகண் டேன்உல கெல்லாம் தழைக்க நடம்புரிதல்
இன்றுகண் டேன்என்றும் சாகா வரத்தை எனக்கருள
மன்றுகண் டார்க்கிந்த வாழ்வுள தென்று மகிழ்ந்தனனே.

11

திருச்சிற்றம்பலம்

Back

101. பொன்வடிவப் பேறு

நேரிசை வெண்பா

4818.

அருட்பெருஞ் சோதி அபயம் அபயம்
பொருட்பெருஞ் சோதிப் புணைதந் - திருட்பெருங்கார்
அள்ளற் கடல்கடத்தி அக்கரைமேல் ஆனந்தம்
கொள்ளற் கபயங் கொடு.

1

4819

ஆரமுதம் தந்தென்னுள் அச்சமெலாம் தீர்த்தருளிச்
சீரமுத வண்ணத் திருவடிகண் - டார்வமிகப்
பாடி உடம்புயிரும் பத்திவடி வாகிக்கூத்
தாடிக் களிக்க அருள்.

2

4820

இடர்தொலைந்த ஞான்றே இனைவும் தொலைந்த
சுடர்கலந்த ஞான்றே சுகமும் - முடுகிஉற்ற
தின்னே களித்திடுதும் என்நெஞ்சே அம்பலவன்
பொன்னேர் பதத்தைப் புகழ்.

3

4821

ஈனமெலாம் தீர்ந்தனவே இன்பமெலாம் எய்தினவே
ஊனமெலாம் கைவிட் டொழிந்தனவே - ஞானமுளோர்
போற்றும்சிற் றம்பலத்தும் பொன்னம்ப லத்துநடம்
போற்றும் படிப்பெற்ற போது.

4

4822

உள்ளக் கவலையெலாம் ஓடி ஒழிந்தனவே
வள்ளற் பெருஞ்சோதி வாய்த்தனவே - கள்ளக்
கருத்தொழிய ஞானக் கருத்தியைந்து நாதன்
பொருத்தமுற்றென் உள்ளமர்ந்த போது.

59

4823

ஊன உடம்பே ஒளிஉடம்பாய் ஓங்கிநிற்க
ஞான அமுதெனக்கு நல்கியதே - வானப்
பொருட்பெருஞ் சோதிப் பொதுவில் விளங்கும்

அருட்பெருஞ் சோதி அது.

6

4824

எல்லாம் செயவல்லான் எந்தையருள் அம்பலவன்

நல்லான் எனக்குமிக நன்களித்தான் - எல்லாரும்

கண்டுவியக் கின்றார் கருணைத் திருவமுதம்

உண்டுவியக் கின்றேன் உவந்து.

7

4825

ஏசா உலகவர்கள் எல்லாரும் கண்டுநிற்கத்

தேசார் ஒளியால் சிறியேனை - வாசாம

கோசரத்தின் ஏற்றிக் கொடுத்தான் அருளமுதம்

ஈசனத்தன் அம்பலவ னே.

8

4826

ஐயனெனக் கீந்த அதிசயத்தை என்புகல்வேன்

பொய்யடியேன் குற்றம் பொறுத்தருளி - வையத்

தழியாமல் ஓங்கும் அருள்வடிவம் நான்ஓர்

மொழிஆடு தற்கு முனம்.

9

4827

ஒப்புயர்வொன் றில்லா ஒருவன் அருட்சோதி

அப்பனெலாம் வல்லதிரு அம்பலத்தான் - இப்புவியில்

வந்தான் இரவி வருதற்கு முன்கருணை

தந்தானென் னுட்கலந்தான் தான்.

10

4828

ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்

சாதல் ஒழித்தென்னைத் தானாக்கிப் - பூதலத்தில்

ஐந்தொழில்செய் என்றே அருட்சோதிக் கோலளித்தான்

வெந்தொழில்போய் நீங்க விரைந்து.

11

4829

ஔவியந்தீர் உள்ளத் தறிஞரெலாம் கண்டுவக்கச்

செவ்வியசன் மார்க்கம் சிறந்தோங்க - ஒவ்வி

விரைந்துவந்தென் உட்கலந்து மெய்யேமெய் யாக

நிரந்தொன்றாய்(365) நின்றான் நிலத்து.

12

(365). நிறைந்தொன்றாய் - முதற்பதிப்பு., பொ. சு., ச. மு. க.

நிரைந்தொன்றாய் - பி. இரா. ' நிரந்தொன்றாய் ' -

என்பது அடிகள் எழுத்து.

4830

சோதிப் பிழம்பே சுகவடிவே மெய்ஞ்ஞான
நீதிப் பொதுவே நிறைநிதியே - சோதிக்
கடவுளே மாயைஇரு கன்மமிருள் எல்லாம்
விடவுளே நின்று விளங்கு.

13

4831

துன்பமெலாம் தீர்ந்த சுகமெல்லாம் கைதந்த
அன்பரெலாம் போற்ற அருள்நடஞ்செய் - இன்பன்
அருட்பெருஞ்சிற் சோதிதிரு அம்பலத்தான் வேதப்
பொருட்பெருஞ்சித் தென்னுட் புகுந்து.

14

4832

தூக்கம் கெடுத்துச் சுகங்கொடுத்தான் என்தனக்கே
ஆக்கமென ஓங்கும்பொன் அம்பலத்தான் - ஏக்கமெலாம்
நீங்கினேன் எண்ணம் நிரம்பினேன் பொன்வடிவம்
தாங்கினேன் சத்தியமாத் தான்.

15

4833

துன்பம் கெடுத்துச் சுகங்கொடுத்தான் என்தனக்கே
அன்பகத்தில் வாழும்சிற் றம்பலத்தான் - இன்புருவம்
தாங்கினேன் சாகாத் தனிவடிவம் பெற்றொளியால்

ஓங்கினேன் உண்மை உரை.

16

திருச்சிற்றம்பலம்

Back

102. தத்துவ வெற்றி

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4834.

திருவளர்பே ரருளுடையான் சிற்சபையான் எல்லாம்

செய்யவல்ல தனித்தலைமைச் சித்தன்எல்லாம் உடையான்

உருவமுமாய் அருவமுமாய் உபயமுமாய் அலவாய்

ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி ஒருவனுண்டே அவன்றான்

பெருமையினால் எனையீன்றான் நான்ஒருவன் தானே

பிள்ளைஅவன் பிள்ளைஎனப் பெரியர்எலாம் அறிவார்

இருமையுறு தத்துவர்காள் என்னைஅறி யீரோ

ஈங்குமது துள்ளல்எலாம் ஏதும்நட வாதே.

1

4835

மனம்எனும்ஓர் பேய்க்குரங்கு மடைப்பயலே நீதான்

மற்றவர்போல் எனைநினைத்து மருட்டாதே கண்டாய்

இனமுறஎன் சொல்வழியே இருத்தியெனில் சுகமாய்

இருந்திடுநீ என்சொல்வழி ஏற்றிலைஆ னாலோ

தினையளவுன் அதிகாரம் செல்லவொட்டேன் உலகம்

சிரிக்கஉனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே

நனவில்எனை அறியாயோ யார்எனஇங் கிருந்தாய்

ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே.

2

4836

பன்முகஞ்சேர் மனம்எனும்ஓர் பரியாசப் பயலே

பதையாதே சிதையாதே பார்க்கும்இடம் எல்லாம்

கொன்முகங்கொண் டடிக்கடிபோய்க் குதியாதே எனது

குறிப்பின்வழி நின்றிடுநின் குதிப்புநட வாது

என்முனம்ஓர் புன்முனைமேல் இருந்தபனித் துளிநீ

இம்மெனும்முன் அடக்கிடுவேன் என்னைஅறி யாயோ

பின்முன்என நினையேல்காண் சிற்சபையில் நடிக்கும்

பெரியதனித் தலைவனுக்குப் பெரியபிள்ளை நானே.

3

4837

விரிந்தமனம் எனும்சிறிய விளையாட்டுப் பயலே

விரிந்துவிரிந் தலையாதே மெலியாதே விடயம்

புரிந்தநெறி புரிந்தவமே போகாதே பொறிவாய்ப்

புரையாதே விரையாதே புகுந்துமயங் காதே

தெரிந்துதெளிந் தொருநிலையில் சித்திரம்போல் இருநீ

சிறிதசைந்தால் அக்கணமே சிதைத்திடுவேன் கண்டாய்

பரிந்தெனைநீ யார்என்று பார்த்தாய்சிற் சபைவாழ்

பதிதனக்கே அருட்பட்டம் பலித்தபிள்ளை நானே.

4

4838

பாய்மனம்என் றுரைத்திடும்ஓர் பராய்முருட்டுப் பயலே

பல்பொறியாம் படுக்காளிப் பயல்களொடும் கூடிச்

சேய்மையினும் அண்மையினும் திரிந்தோடி ஆடித்

தியங்காதே ஒருவார்த்தை திருவார்த்தை என்றே(366)

ஆய்வுறக்கொண் டடங்குகநீ அடங்கிலையேல் உனைத்தான்

அடியொடுவேர் அறுத்திடுவேன் ஆணைஅருள் ஆணை

பேய்மதியா நீஎனைத்தான் அறியாயோ எல்லாம்

பெற்றவன்தன் செல்வாக்குப் பெற்றபிள்ளை நானே.

5

(366). எனவே - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா.

4839

மயங்குபுத்தி எனும்உலக வழக்காளிப் பயலே

வழிதுறையீ தென்றறியாய் வகைசிறிதும் அறியாய்

உயங்கிவிசா ரித்திடவே ஓடுகின்றாய் உணரும்

உளவறியாய் வீணுழைப்பிங் குழைப்பதில்என் பயனோ

வயங்குமனம் அடங்கியவா றடங்குகநீ இலையேல்

மடித்திடுவேன் கணத்தில்உனை வாய்மைஇது கண்டாய்
இயங்கஎன்னை அறியாயோ யார்எனஎண் ணினையோ
எல்லாஞ்செய் வல்லவனுக் கினியபிள்ளை நானே.

6

4840

கலையறியாச் சித்தம்எனும் கனமோசப் பயலே
கால்அறியாய் தலைஅறியாய் காண்பனகண் டறியாய்
நிலையறியாய் ஒன்றைஒன்றா நிச்சயித்திவ் வுலகை
நெறிமயங்க மயக்குகின்றாய் நீயோஇங் குறுவாய்
அலையறியாக் கடல்போலே அசைவறநின் றிடுநீ
அசைவாயேல் அக்கணத்தே அடக்கிடுவேன் உனைத்தான்
அலைவறிவாய் என்றனைநீ அறியாயோ நான்தான்
ஆண்டவன்தன் தாண்டவங்கண் டமர்ந்தபிள்ளை காணே.

7

4841

அகங்காரம் எனும்பொல்லா அடவாதிப் பயலே
அடுக்கடுக்காய் எடுக்கின்றாய் அடுத்துமுடுக் கின்றாய்
செகங்காணத் தலைகாலும் தெரியாமல் அலைந்து
திரிகின்றாய் நின்செபந்தான் சிறிதும்நட வாது
இகங்காண அடங்குகநீ அடங்காயேல் கணத்தே
இருந்தஇடம் தெரியாதே எரிந்திடச்செய் திடுவேன்

சுகங்காண என்றனைநீ அறியாயோ நான்தான்

சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றபிள்ளை காணே.

8

4842

மான்எனும்ஓர் சகச்சாலச் சிறுக்கிஇது கேள்உன்

வஞ்சகக்கூத் தெல்லாம்ஓர் மூட்டைஎனக் கட்டி

ஈனம்உற நின்தலைமேல் ஏற்றெடுத்துக் கொண்டுன்

ஏவல்புரி பெண்களொடே இவ்விடம்விட் டேகிக்

கானடைந்து கருத்தடங்கிப் பிழைத்திடுநீ இலையேல்

கணத்தில்உனை மாய்ப்பேன்உன் கணத்தினொடுங் கண்டாய்

ஏன்எனைநீ அறியாயோ சிற்சபையில் நடஞ்செய்

இறைவன்அருட் பெருஞ்ஜோதிக் கினியபிள்ளை நானே.

9

4843

மாயைஎனும் படுதிருட்டுச் சிறுக்கிஇது கேள்உன்

மாயைஎலாம் சுமைசுமையா வரிந்து கட்டிக் கொண்டுன்

சாயைஎனும் பெண்இனத்தார் தலைமேலும் உனது

தலைமேலும் சுமந்துகொண்டோ ர் சந்துவழி பார்த்தே

பேய்எனக்காட் டிடைஓடிப் பிழைத்திடுநீ இலையேல்

பேசுமுன்னே மாய்த்திடுவேன் பின்னும்முன்னும் பாரேன்

ஆய்எனைநீ அறியாயோ எல்லாஞ்செய் வல்லார்

அருள்அமுதுண் டருள்நிலைமேல் அமர்ந்தபிள்ளை நானே.

10

4844

மாமாயை எனும்பெரிய வஞ்சகநீ இதுகேள்

வரைந்தஉன்தன் பரிசனப்பெண் வகைதொகைகள் உடனே

போமாறுன் செயல்அனைத்தும் பூரணமாக் கொண்டு

போனவழி தெரியாதே போய்பிழைநீ இலையேல்

சாமாறுன் தனைஇன்றே சாய்த்திடுவேன் இதுதான்

சத்தியம்என் றெண்ணுதிஎன் தன்னைஅறி யாயோ

ஆமாறு சிற்சபையில் அருள்நடனம் புரிவார்

அருள்அமுதுண் டருள்நிலைமேல் அமர்ந்தபிள்ளை காணே.

11

4845

கன்மம்எனும் பெருஞ்சிலுகுக் கடுங்கலகப் பயலே

கங்குகரை காணாத கடல்போலே வினைகள்

நன்மையொடு தீமைஎனப் பலவிகற்பங் காட்டி

நடத்தினைநின் நடத்தைஎலாம் சிறிதும்நட வாது

என்முன்இருந் தனைஎனில்நீ அழிந்திடுவாய் அதனால்

இக்கணத்தே நின்இனத்தோ டேகுகநீ இலையேல்

இன்மையுற மாய்த்திடுவேன் என்னையறி யாயோ

எல்லாஞ்செய் வல்லவனுக் கினியபிள்ளை நானே.

12

4846

எத்துணையும் காட்டாத ஆணவம்என் றிடும்ஓர்
இருட்டறைக்கோர் அதிகாரக் குருட்டுமுடப் பயலே
இத்தனைநாள் பிடித்ததுனைக் கண்டுதுரத் திடவே
இன்னும்அரைக் கணந்தரியேன் இக்கணத்தே நினது
பொத்தியசுற் றத்துடனே போய்விடுதி இலையேல்
பூரணமெய் அருள்ஒளியால் பொன்றுவிப்பேன் நினையே
சத்தியஞ்சொன் னேன்எனைநீ அறியாயோ ஞான
சபைத்தலைவன் தருதலைமைத் தனிப்பிள்ளை நானே.

13

4847

பெருமாயை என்னும்ஒரு பெண்பிள்ளை நீதான்
பெற்றவுடம் பிதுசாகாச் சுத்தவுடம் பாக்கி
ஒருஞானத் திருவமுதுண் டோங்குகின்றேன் இனிநின்
உபகரிப்போர் அணுத்துணையும் உளத்திடைநான் விரும்பேன்
அருளாய ஜோதிஎனக் குபகரிக்கின் றதுநீ
அறியாயோ என்னளவில் அமைகஅயல் அமர்க
தெருளாய உலகிடைஎன் சரிதமுணர்ந் திலையோ
சிற்சபைஎன் அப்பனுக்குச் சிறந்தபிள்ளை நானே.

14

4848

பேசுதிரோ தாயிஎனும் பெண்மடவாய் இதுகேள்
பின்முன்அறி யாதெனைநீ என்முன்மறைக் காதே
வேசறமா மலஇரவு முழுதும்விடிந் ததுகாண்
வீசும்அருட் பெருஞ்ஜோதி விளங்குகின்ற தறிநீ
ஏசுறுநின் செயல்அனைத்தும் என்னளவில் நடவா
திதைஅறிந்து விரைந்தெனைவிட் டேகுகஇக் கணத்தே
மாசறும்என் சரிதம்ஒன்றும் தெரிந்திலையோ எல்லாம்
வல்லஒரு சித்தருக்கே நல்லபிள்ளை நானே.

15

4849

தூக்கம்எனும் கடைப்பயலே சோம்பேறி இதுகேள்
துணிந்துனது சுற்றமொடு சொல்லும்அரைக் கணத்தே
தாக்கு(367)பெருங் காட்டகத்தே ஏகுகநீ இருந்தால்
தப்பாதுன் தலைபோகும் சத்தியம்ஈ தறிவாய்
ஏக்கமெலாம் தவிர்த்துவிட்டேன் ஆக்கமெலாம் பெற்றேன்
இன்பமுறு கின்றேன்நீ என்னைஅடை யாதே
போக்கில்விரைந் தோடுகநீ பொற்சபைசிற் சபைவாழ்
பூரணர்க்கிங் கன்பான பொருளன்என அறிந்தே.

16

(367) 'தாக்கு' என்றே எல்லாப் படிகளிலும் முதல் அச்சிலும் காண்கிறது. மூலத்தில்

இது 'தணிந்த' என்பதுபோலும் தெளிவற்றுத் தோன்றுகின்றது. - ஆ. பா.

ஆ. பா. மூலத்தில் என்று சொல்வது அடிகள் கையெழுத்து மூலத்தையே. முதற்பதிப்பு;

பொ. சு., பி. இரா; ச. மு. க. பதிப்புகளில் தாக்கு என்ற பாடமே காணப்படுகிறது.

சாலையில் உள்ள அடிகள் கையெழுத்துப் படியில் 'தணிந்த' என்றே உள்ளது. மிகத்

தெளிவாகவும் காணப்படுகிறது.

4850

பயம்எனும்ஓர் கொடும்பாவிப் பயலேநீ இதுகேள்

பற்றறஎன் தனைவிடுத்துப் பனிக்கடல்வீழ்ந் தொளிப்பாய்

தயவின்உரைத் தேன்இன்னும் இருத்திஎனில் உனது

தன்றலைக்குத் தீம்புவரும் தலைமட்டோ நினது

செயலுறும்உள் உடம்பழியும் சுற்றமெலாம் இறக்கும்

தீர்ந்ததினி இல்லைஎன்றே திருவார்த்தை பிறக்கும்

அயலிடைநேர்ந் தோடுகநீ என்னைஅறி யாயோ

அம்பலத்தென் அப்பன்அருள் நம்புபிள்ளை நானே.



4851

கோபமெனும் புலைப்பயலே காமவலைப் பயலே

கொடுமோகக் கடைப்பயலே குறும்புமதப் பயலே

தாபஉலோ பப்பயலே மாற்சரியப் பயலே

தயவுடன்இங் கிசைக்கின்றேன் தாழ்ந்திருக்கா தீர்காண்

தீபம்எலாம் கடந்திருள்சேர் நிலஞ்சாரப் போவீர்

சிறிதுபொழு திருந்தாலும் திண்ணம்இங்கே அழிவீர்

சாபமுறா முன்னம்அறிந் தோடுமினோ என்னைத்

தான்அறியீர் தனித்தலைவன் தலைப்பிள்ளை நானே.

18

4852

பசிஎனும்ஓர் பெரும்பாவிப் பயலேதுன் பெனும்ஓர்

படுபாவிப் பயலேஆ பத்தெனும்பொய்ப் பயலே

வசியவத்தைக் கடைப்பயலே தடைப்பயலே இடராம்

வன்பயலே நீவீர்எலாம் என்புடைநில் லாதீர்

நசியஉமக் குளம்உளதோ இக்கணத்தே நீவீர்

நடந்துவிரைந் தோடுமினோ நாடறியா வனத்தே

கசியுமனத் தெனைஅறியீர் சிற்சபையில் விளங்கும்

கடவுள்மகிழ்ந் தளித்ததனிக் கதிர்ப்பிள்ளை நானே.

19

4853

மரணம்எனும் பெருந்திருட்டு மாபாவிப் பயலே

வையகமும் வானகமும் மற்றகமும் கடந்தே

பரணம்உறு பேர்இருட்டுப் பெருநிலமும் தாண்டிப்

பசைஅறநீ ஒழிந்திடுக இங்கிருந்தாய் எனிலோ

இரணமுற உனைமுழுதும் மடித்திடுவேன் இதுதான்

என்னுடையான் அருள்ஆணை என்குருமேல் ஆணை

அரண்உறும்என் தனைவிடுத்தே ஓடுகநீ நான்தான்

அருட்பெருஞ்ஜோ திப்பதியை அடைந்தபிள்ளை காணே.

28

திருச்சிற்றம்பலம்

Back

103. பேறடைவு

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4854.

மணம்புரி கடிகை இரண்டரை எனும்ஓர்

வரையுள தாதலால் மகனே

எணம்புரிந் துழலேல் சவுளம்ஆ தியசெய்

தெழில்உறு மங்கலம் புனைந்தே

குணம்புரிந் தெமது மகன்எனும் குறிப்பைக்

கோலத்தால் காட்டுக எனவே

வணம்புரி மணிமா மன்றில்என் தந்தை

வாய்மலர்ந் தருளினர் மகிழ்ந்தே.

1

4855

எம்பொருள் எனும்என் அன்புடை மகனே

இரண்டரைக் கழிகையில் உனக்கே

அம்புவி வானம் அறியமெய் அருளாம்

அனங்கனை(368) தனைமணம் புரிவித்

தும்பரும் வியப்ப உயர்நிலை தருதும்

உண்மைஈ தாதலால் உலகில்

வெம்புறு துயர்தீர்ந் தணிந்துகொள் என்றார்

மெய்ப்பொது நடத்திறை யவரே.

2

(368). அங்கனை - முதற்பதிப்பு., பொ. சு; பி. இரா., ச. மு. க.

4856

அன்புடை மகனே மெய்யருள் திருவை

அண்டர்கள் வியப்புற நினக்கே

இன்புடை உரிமை மணம்புரி விப்பாம்

இரண்டரைக் கழிகையில் விரைந்தே

துன்புடை யவைகள் முழுவதும் தவிர்ந்தே

தூய்மைசேர் நன்மணக் கோலம்

பொன்புடை விளங்கப் புனைந்துகொள் என்றார்

பொதுநடம் புரிகின்றார் தாமே.

3

4857

ஈதுகேள் மகனே மெய்யருள் திருவை
இரண்டரைக் கடிகையில் நினக்கே
ஊதியம் பெறவே மணம்புரி விப்பாம்
உண்மைஈ தாதலால் இனிவீண்
போதுபோக் காமல் மங்கலக் கோலம்
புனைந்துளம் மகிழ்கநீ என்றார்
தீதுதீர்த் தென்னை இளந்தையில் தானே
தெருட்டிய சிற்சபை யவரே.

4

4858

விரைந்துகேள் மகனே உலகெலாம் களிக்க
மெய்யருள் திருவினை நினக்கே
வரைந்துநன் மணஞ்செய் தொருபெரு நிலையில்
வைத்துவாழ் விக்கின்றோம் அதனால்
இரைந்துளம் கவலேல் இரண்டரைக் கடிகை
எல்லையுள் எழில்மணக் கோலம்
நிரைந்துறப் புனைதி என்றுவாய் மலர்ந்தார்
நிருத்தஞ்செய் ஒருத்தர்உள் உவந்தே.

5

4859

களிப்பொடு மகனே அருள்ஒளித் திருவைக்

கழிகைஒர் இரண்டரை அதனில்

ஒளிப்பிலா துலகம் முழுவதும் அறிய

உனக்குநன் மணம்புரி விப்பாம்

அளிப்புறு மகிழ்வால் மங்கலக் கோலம்

அணிபெறப் புனைகநீ விரைந்தே

வெளிப்பட உரைத்தாம் என்றனர் மன்றில்

விளங்குமெய்ப் பொருள்இறை யவரே.

6

4860

கலங்கிடேல் மகனே அருள்ஒளித் திருவைக்

களிப்பொடு மணம்புரி விப்பாம்

விலங்கிடேல் வீணில் போதுபோக் காமல்

விரைந்துநன் மங்கலக் கோலம்

நலங்கொளப் புனைந்து மகிழ்கஇவ் வுலகர்

நவிலும்அவ் வுலகவர் பிறரும்

இலங்கநின் மணமே ஏத்துவர் என்றார்

இயலுறு சிற்சபை யவரே.

7

4861

ஐயுறேல் இதுநம் ஆணைநம் மகனே
அருள்ஒளித் திருவைநின் தனக்கே
மெய்யுறு மகிழ்வால் மணம்புரி விப்பாம்
விரைந்திரண் டரைக்கடி கையிலே
கையற வனைத்தும் தவிர்ந்துநீ மிகவும்
களிப்பொடு மங்கலக் கோலம்
வையமும் வானும் புகழ்ந்திடப் புனைக
என்றனர் மன்றிறை யவரே.

8

4862

தூங்கலை மகனே எழுகநீ விரைந்தே
தூயநீர் ஆடுக துணிந்தே
பாங்குற ஓங்கு மங்கலக் கோலம்
பண்பொடு புனைந்துகொள் கடிகை
ஈங்கிரண் டரையில் அருள்ஒளித் திருவை
எழில்உற மணம்புரி விப்பாம்
ஏங்கலை இதுநம் ஆணைகாண் என்றார்
இயன்மணி மன்றிறை யவரே.

9

4863

மயங்கிடேல் மகனே அருள்ஒளித் திருவை

மணம்புரி விக்கின்றாம் இதுவே

வயங்குநல் தருணக் காலைகாண் நீநன்

மங்கலக் கோலமே விளங்க

இயங்கொளப் புனைதி இரண்டரைக் கழிகை

எல்லையுள் என்றுவாய் மலர்ந்தார்

சயங்கொள எனக்கே தண்ணமு தளித்த

தந்தையார் சிற்சபை யவரே.

19

திருச்சிற்றம்பலம்

Back

## 104. அடைக்கலம் புகுதல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4864.

எண்ணா நின்றேன் எண்ணமெலாம் எய்த அருள்செய் கின்றதனித்

தண்ணார் அமுதே சிற்சபையில் தனித்த தலைமைப் பெருவாழ்வே

கண்ணார் ஒளியே ஒளிஎல்லாம் கலந்த வெளியே கருதும்என்

அண்ணா ஐயா அம்மாஎன் அப்பா யான்உன் அடைக்கலமே.

1

4865.

திரைசேர் மறைப்பைத் தீர்த்தெனக்கே தெரியா வெல்லாந்
தெரிவித்துப்

பரைசேர் ஞானப் பெருவெளியில் பழுத்த கொழுத்த பழந்தந்தே

கரைசேர் இன்பக் காட்சிஎலாம் காட்டிக் கொடுத்தே எனையாண்ட

அரைசே ஐயா அம்மாஎன் அப்பா யான்உன் அடைக்கலமே.

2

4866.

தேனே அமுதே சிற்சபையில் சிவமே தவமே செய்கின்றோர்

ஊனே புகுந்த ஒளியேமெய் உணர்வே என்றன் உயிர்க்குயிராம்

வானே என்னைத் தானாக்கு வானே கோனே எல்லாம்வல்

லானே ஐயா அம்மாஎன் அப்பா யான்உன் அடைக்கலமே.

3

4867.

கடையேன் உள்ளக் கவலைஎலாம் கழற்றிக் கருணை
அமுதளித்தென்

புடையே அகத்தும் புறத்தும்அகப் புறத்தும் விளங்கும்
புண்ணியனே

தடையே தவிர்க்கும் கனகசபைத் தலைவா ஞான சபாபதியே

அடையேன் உலகைஉனை அடைந்தேன் அடியேன்உன்றன்
அடைக்கலமே.

4

4868.

இகத்தும் பரத்தும் பெறும்பலன்கள் எல்லாம் பெறுவித் திம்மையிலே

முகத்தும் உளத்தும் களிதுளும்ப மூவா இன்ப நிலைஅமர்த்திச்

சகத்துள் எவர்கள் மிகத்துதிப்பத் தக்கோன் எனவைத் தென்னுடைய

அகத்தும் புறத்தும் விளங்குகின்றோய் அடியேன் உன்றன் அடைக்கலமே.

5

4869.

நீண்ட மறைகள் ஆகமங்கள் நெடுநாள் முயன்று வருந்திநின்று

வேண்ட அவைகட் கொருசிறிதும் விளங்கக் காட்டா தென்மொழியைப்

பூண்ட அடியை என்தலைமேல் பொருந்தப் பொருத்தி என்தன்னை

ஆண்ட கருணைப் பெருங்கடலே அடியேன் உன்றன் அடைக்கலமே.

6

4870.

பாடுஞ் சிறியேன் பாட்டனைத்தும் பலிக்கக் கருணை பாலித்துக்

கோடு மனப்பேய்க் குரங்காட்டம் குலைத்தே சீற்றக் கூற்றொழித்து

நீடும் உலகில் அழியாத நிலைமேல் எனைவைத் தென்னுளத்தே

ஆடும் கருணைப் பெருவாழ்வே அடியேன் உன்றன் அடைக்கலமே.

7

4871.

கட்டுக் கடங்கா மனப்பரியைக் கட்டும் இடத்தே கட்டுவித்தென்

மட்டுக் கடங்கா ஆங்கார மதமா அடங்க அடக்குவித்தே

எட்டுக் கிசைந்த இரண்டும்எனக் கிசைவித் தெல்லா இன்னமுதும்

அட்டுக் கொடுத்தே அருத்துகின்றோய் அடியேன் உன்றன் அடைக்கலமே.

9

4872.

புல்லுங் களபப் புணர்முலையார் புணர்ப்பும் பொருளும் பூமியும்என்

தொல்லும் உலகப் பேராசை உவரி கடத்தி எனதுமனக்

கல்லுங் கனியக் கரைவித்துக் கருணை அமுதங் களித்தளித்தே

அல்லும் பகலும் எனதுளத்தே அமர்ந்தோய் யான்உன் அடைக்கலமே.

9

4873.

பிச்சங் கவரி நிழற்றியசைத் திடமால் யானைப் பிடரியின்மேல்

நிச்சம் பவனி வருகின்ற நிபுணர் எல்லாம் தொழுதேத்த

எச்சம் புரிவோர் போற்றஎனை ஏற்றா நிலைமேல் ஏற்றுவித்தென்

அச்சந் தவிர்த்தே ஆண்டுகொண்டோய் அடியேன் உன்றன் அடைக்கலமே.

10

4874.

இருளைக் கெடுத்தென் எண்ணமெலாம் இனிது முடிய நிரம்புவித்து

மருளைத் தொலைத்து மெய்ஞ்ஞான வாழ்வை அடையும் வகைபுரிந்து

தெருளைத் தெளிவித் தெல்லாஞ்செய் சித்தி நிலையைச் சேர்வித்தே

அருளைக்கொடுத்தென் தனைஆண்டோய் அடியேன் உன்றன் அடைக்கலமே.

11

திருச்சிற்றம்பலம்

Back

105. இறைவரவு இயம்பல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4875.

அப்பன்வரு தருணம்இதே ஐயம்இலை கண்டாய்

அஞ்சாதே அஞ்சாதே அகிலமிசை உள்ளார்க்

கெய்ப்பறவே சத்தியம்என் றுரைத்திடுநின் உரைக்கோர்

எள்ளளவும் பழுதுவரா தென்னிறைவன் ஆணை

இப்புவியோ வானகமும் வானகத்தின் புறத்தும்

எவ்வுயிரும் எவ்வெவரும் ஏத்திமகிழ்ந் திடவே
செப்பம்உறு திருவருட்பே ரொளிவடிவாய்க் களித்தே
செத்தாரை எழுப்புதல்நாம் திண்ணம்உணர் மனனே.

1

4876

இறைவன்வரு தருணம்இதே இரண்டிலைஅஞ் சலை நீ
எள்ளளவும் ஐயமுறேல் எவ்வுலகும் களிப்ப
நிறைமொழிகொண் டறைகஇது பழுதுவரா திறையும்
நீவேறு நினைத்தயரேல் நெஞ்சேநான் புகன்ற
முறைமொழிஎன் னுடையவன்தான் மொழிந்தமொழி எனக்கோர்
மொழிஇலைஎன் உடலாவி முதல்அனைத்தும் தானே
பொறையுறக்கொண் டருட்ஜோதி தன்வடிவும் உயிரும்
பொருளும்அளித் தெனைத்தானாப் புணர்த்தியது காணே.

2

4877

என்இறைவன் வருதருணம் இதுகண்டாய் இதற்கோர்
எட்டுணையும் ஐயமிலை என்னுள்இருந் தெனக்கே
தன்னருள்தெள் அமுதளிக்கும் தலைவன்மொழி இதுதான்
சத்தியம்சத் தியம்நெஞ்சே சற்றும்மயக் கடையேல்
மன்னுலகத் துயிர்கள்எலாம் களித்துவியந் திடவே
வகுத்துரைத்துத் தெரிந்திடுக வருநாள்உன் வசத்தால்

உன்னி உரைத் திடமுடியா தாதலினால் இன்றே
உரைத்திடுதல் உபகாரம் உணர்ந்திடுக விரைந்தே.

3

4878

எல்லாஞ்செய் வல்லதனிப் பெருந்தலைமைச் சித்தன்
எனமறைஆ கமம்புகலும் என்இறைவன் மகிழ்ந்தே
நல்லார்கள் வியக்கஎனக் கிசைத்தபடி இங்கே
நான்உனக்கு மொழிகின்றேன் நன்றறிவாய் மனனே
பல்லாரும் களிப்படையப் பகல்இரவும் தோற்றாப்
பண்பின்அருட் பெருஞ்ஜோதி நண்பினொடு நமக்கே
எல்லாநன் மைகளும்உற வருதருணம் இதுவே
இவ்வுலகம் உணர்ந்திடநீ இசைத்திடுக விரைந்தே.

4

4879

கருநாள்கள் அத்தனையும் கழிந்தனநீ சிறிதும்
கலக்கமுறேல் இதுதொடங்கிக் கருணைநடப் பெருமான்
தருநாள்இவ் வுலகமெலாம் களிப்படைய நமது
சார்பின்அருட் பெருஞ்ஜோதி தழைத்துமிக விளங்கும்
திருநாள்கள் ஆம்இதற்கோர் ஐயம்இலை இதுதான்
திண்ணம்இதை உலகறியத் தெரித்திடுக மனனே
வருநாளில் உரைத்திடலாம் எனநினைத்து மயங்கேல்

வருநாளில் இன்பமயம் ஆகிநிறை வாயே.

5

4880

உள்ளபடி உரைக்கின்றேன் சத்தியமாம் உரையீ

துணர்ந்திடுக மனனேநீ உலகமெலாம் அறிய

வள்ளல்வரு தருணம்இது தருணம்இதே என்று

வகுத்துரைத்துத் தெரித்திடுக மயக்கம்அணுத் துணையும்

கொள்ளலைஎன் குருநாதன் அருட்ஜோதிப் பெருமான்

குறிப்பிதுஎன் குறிப்பெனவும் குறியாதே கண்டாய்

நள்ளுலகில் இனிநாளைக் குரைத்தும்எனத் தாழ்க்கேல்

நாளைதொட்டு நமக்கொழியா ஞானநடக் களிப்பே.

6

4881

மாயைவினை ஆணவமா மலங்களெலாம் தவிர்த்து

வாழ்வளிக்கும் பெருங்கருணை வள்ளல்வரு தருணம்

மேயதிது வாம்இதற்கோர் ஐயம்இலை இங்கே

விரைந்துலகம் அறிந்திடவே விளம்புகநீ மனனே

நாயகன்றன் குறிப்பிதுஎன் குறிப்பெனநீ நினையேல்

நாளைக்கே விரித்துரைப்பேம் எனமதித்துத் தாழ்க்கேல்

தூயதிரு அருட்ஜோதித் திருநடங்காண் கின்ற

தூயதிரு நாள்வருநாள் தொடங்கிஒழி யாவே.

7

4882

மாற்றுரைக்க முடியாத திருமேனிப் பெருமான்
வருதருணம் இதுகண்டாய் மனனேநீ மயங்கேல்
நேற்றுரைத்தேன் இலைஉனக்கிங் கிவ்வாறென் இறைவன்
நிகழ்த்துகஇன் றென்றபடி நிகழ்த்துகின்றேன் இதுதான்
கூற்றுதைத்த திருவடிமேல் ஆணைஇது கடவுள்
குறிப்பெனக்கொண் டுலகமெலாம் குதுகலிக்க விரைந்தே
சாற்றிடுதி வருநாளில் உரைத்தும்எனத் தாழ்க்கேல்
தனித்தலைவன் அருள்நடஞ்செய் சாறொழியா இனியே.

8

4883

ஏதும்அறி யாச்சிறிய பயல்களினும் சிறியேன்
இப்பெரிய வார்த்தைதனக் கியானார்என் இறைவன்
ஓதுகநீ என்றபடி ஓதுகின்றேன் மனனே
உள்ளபடி சத்தியம்ஈ துணர்ந்திடுக நமது
தீதுமுழு தும்தவிர்த்தே சித்திஎலாம் அளிக்கத்
திருவருளாம் பெருஞ்ஜோதி அப்பன்வரு தருணம்
ஈதிதுவே என்றுலகம் அறியவிரைந் துரைப்பாய்
எல்லாரும் களிப்படைந்துள் இசைந்தேத்தி யிடவே.

9

4884

தனித்தலைவன் எல்லாஞ்செய் வல்லசித்தன் ஞான

சபைத்தலைவன் என்உளத்தே தனித்திருந்துள் உணர்த்தக்

கனித்தஉளத் தொடும்உணர்ந்தே உணர்த்துகின்றேன் இதைலூர்

கதைஎனநீ நினையேல்மெய்க் கருத்துரைஎன் றறிக

இனித்தஅருட் பெருஞ்சோதி ஆணைஎல்லாம் உடைய

இறைவன்வரு தருணம்இது சத்தியமாம் இதனைப்

பனித்தவுல கவர்அறிந்தே உய்யும்வகை இன்னே

பகர்ந்திடுக நாளைஅருட் பரமசுகச் சாறே.

10

திருச்சிற்றம்பலம்

Back

## 106. திருப்பள்ளி எழுச்சி

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

4885.

பொழுது விடிந்ததென் உள்ளமென் கமலம்

பூத்தது பொன்னொளி பொங்கிய தெங்கும்

தொழுதுநிற் கின்றனன் செய்பணி எல்லாம்

சொல்லுதல் வேண்டும்என் வல்லசற் குருவே

முழுதும்ஆ னான்என ஆகம வேத

முறைகளெ லாம்மொழி கின்றமுன் னவனே

எழுதுதல் அரியசீர் அருட்பெருஞ் சோதி

என்தந்தை யேபள்ளி எழுந்தருள் வாயே.

1

4886

துற்குண மாயைபோய்த் தொலைந்தது ஞானம்

தோன்றிடப் பொன்னொளி தோற்றிய கதிர்தான்

சிற்குண வரைமிசை உதயஞ்செய் ததுமா

சித்திகள் அடிப்பணி செய்திடச் சூழ்ந்த

நற்குணச் சன்மார்க்க சங்கத்தார் எல்லாம்

நண்ணினர் தோத்திரம் பண்ணிநிற் கின்றார்

எற்குண வளித்தஎன் அருட்பெருஞ் சோதி

என்னம்மை யேபள்ளி எழுந்தருள் வாயே.

2

4887

நிலந்தெளிந் ததுகண மழுங்கின சுவண

நீடொளி தோன்றிற்றுக் கோடொலிக் கின்ற

அலர்ந்தது தாமரை ஆணவ இருள்போய்

அழிந்தது கழிந்தது மாயைமால் இரவு

புலர்ந்தது தொண்டரோ டண்டரும் கூடிப்

போற்றியோ சிவசிவ போற்றிஎன் கின்றார்

இலங்குரு வளித்தஎன் அருட்பெருஞ் சோதி

என்குரு வேபள்ளி எழுந்தரு ளாயே.

3

4888

கல்லாய மனங்களும் கரையப்பொன் னொளிதான்

கண்டது கங்குலும் விண்டது தொண்டர்

பல்லாரும் எய்தினர் பாடிநின் றாடிப்

பரவுகின் றார்அன்பு விரவுகின் றாராய்

நல்லார்மெய்ஞ் ஞானிகள் யோகிகள் பிறரும்

நண்ணினர் சூழ்ந்தனர் புண்ணிய நிதியே

எல்லாஞ்செய் வல்லஎன் அருட்பெருஞ் சோதி

என்தெய்வ மேபள்ளி எழுந்தருள் வாயே.

4

4889

புன்மாலை இரவெலாம் புலர்ந்தது ஞானப்

பொருப்பின்மேல் பொற்கதிர் பொலிந்தது புலவோர்

சொன்மாலை தொடுத்தனர் துதித்துநிற் கின்றார்

சுத்தசன் மார்க்கசங் கத்தவர் எல்லாம்

மன்மாலை மாலையா வந்துசூழ் கின்றார்

வானவர் நெருங்கினர் வாழிஎன் கின்றார்

என்மாலை அணிந்தஎன் அருட்பெருஞ் சோதி

என்பதி யேபள்ளி எழுந்தருள் வாயே.

5

4890

ஒருமையின் உலகெலாம் ஓங்குக எனவே
ஊதின சின்னங்கள் ஊதின சங்கம்
பெருமைகொள் சமரச சுத்தசன் மார்க்கப்
பெரும்புகழ் பேசினர் பெரியவர் சூழ்ந்தார்
அருமையும் எளிமையும் ஆகிஅன் றாகி
அம்பலத் தேசித்தி ஆடல்செய் பதியே
இருமையும் அளித்தஎன் அருட்பெருஞ் சோதி
என்அர சேபள்ளி எழுந்தருள் வாயே.

6

4891

சினைப்பள்ளித் தாமங்கள் கொணர்ந்தனர் அடியார்
சிவசிவ போற்றிஎன் றுவகைகொள் கின்றார்
நினைப்பள்ளி உண்ணத்தெள் ளாரமு தளிக்கும்
நேரம்இந் நேரம்என் றாரியர் புகன்றார்
முனைப்பள்ளி பயிற்றாதென் தனைக்கல்வி பயிற்றி
முழுதுணர் வித்துடல் பழுதெலாம் தவிர்த்தே
எனைப்பள்ளி எழுப்பிய அருட்பெருஞ் சோதி
என்னப்ப னேபள்ளி எழுந்தருள் வாயே.

7

4892

மதம்பிடித் தவர்எல்லாம் வாய்ப்பிடிப் புண்டு

வந்துநிற் கின்றனர் வாய்திறப் பிப்பான்

கதம்பிடித் தவர்எல்லாம் கடும்பிணி யாலே

கலங்கினர் சூழ்ந்தனர் உலம்புறு கின்றார்

பதம்பிடித் தவர்எல்லாம் அம்பலப் பாட்டே

பாடினர் ஆடினர் பரவிநிற் கின்றார்

இதம்பிடித் தெனையாண்ட அருட்பெருஞ் சோதி

என்அய்ய னேபள்ளி எழுந்தருள் வாயே.

8

4893

மருளொடு மாயைபோய்த் தொலைந்தது மதங்கள்

வாய்மூடிக் கொண்டன மலர்ந்தது கமலம்

அருள்ஒளி விளங்கிய தொருதிருச் சபையும்

அலங்கரிக் கின்றனர் துலங்கிவீற் றிருக்கத்

தெருளொடு பொருளும்மேன் மேல்எனக் களித்துச்

சித்தெலாஞ் செய்திடத் திருவருள் புரிந்தே

இருள்அறுத் தெனையாண்ட அருட்பெருஞ் சோதி

என்வள்ள லேபள்ளி எழுந்தருள் வாயே.

9

4894

அலங்கரிக் கின்றோம்லூர் திருச்சபை அதிலே

அமர்ந்தருட் சோதிகொண் டடிச்சிறி யோமை

வலம்பெறும் இறவாத வாழ்வில்வைத் திடவே

வாழ்த்துகின் றோம்முன்னர் வணங்கிநிற் கின்றோம்

விலங்கிய திருள்எலாம் விடிந்தது பொழுது

விரைந்தெமக் கருளுதல் வேண்டும்இத் தருணம்

இலங்குநல் தருணம்எம் அருட்பெருஞ் சோதி

எம்தந்தை யேபள்ளி எழுந்தருள் வாயே.

10

திருச்சிற்றம்பலம்

Back

107. திரு உந்தியார்

கலித்தாழிசை

4895.

இரவு விடிந்தது இணையடி வாய்த்த

பரவி மகிழ்ந்தேன்என்று உந்தீபற

பாலமுது உண்டேன்என்று உந்தீபற.

1

4896

பொழுது விடிந்தது பொற்பதம் வாய்த்த

தொழுது மகிழ்ந்தேன்என்று உந்தீபற

தூயவன் ஆனேன்என்று உந்தீபற.

2

4897

தூக்கம் தொலைந்தது சூரியன் தோன்றினன்

ஏக்கம் தவிர்ந்தேன்என்று உந்தீபற

இன்னமுது உண்டேன்என்று உந்தீபற.

3

4898

துன்பம் தவிர்ந்தது தூக்கம் தொலைந்தது

இன்பம் கிடைத்ததென்று உந்தீபற

எண்ணம் பலித்ததென்று உந்தீபற.

4

4899

ஞானம் உதித்தது நாதம் ஒலித்தது

தீனந் தவிர்ந்ததென்று உந்தீபற

சிற்சபை கண்டேன்என்று உந்தீபற.

5

4900

திரையற்று விட்டது செஞ்சுடர் தோன்றிற்று

பரைஒளி ஓங்கிற்றென்று உந்தீபற

பலித்தது பூசையென்று உந்தீபற.

6

4901

உள்ளிருள் நீங்கிற்றென் உள்ளொளி ஓங்கிற்றுத்

தெள்ளமுது உண்டேனென்று உந்தீபற

தித்திக்க உண்டேனென்று உந்தீபற.

7

4902

எந்தையைக் கண்டேன் இடரெலாம் நீங்கினேன்

சிந்தை மகிழ்ந்தேனென்று உந்தீபற

சித்திகள் பெற்றேனென்று உந்தீபற.

8

4903

தந்தையைக் கண்டேன்நான் சாகா வரம்பெற்றேன்

சிந்தை களித்தேனென்று உந்தீபற

சித்தெலாம் வல்லேனென்று உந்தீபற.

9

4904

முத்தியைப் பெற்றேன்அம் முத்தியினால் ஞான

சித்தியை உற்றேனென்று உந்தீபற

சித்தனும் ஆனேனென்று உந்தீபற.

10

திருச்சிற்றம்பலம்

Back

108. அருள் அற்புதம்

சிந்து

பல்லவி

4905.

அற்புதம் அற்புத மே - அருள்

அற்புதம் அற்புத மே. 1

கண்ணிகள்

4906.

சிற்பதம் பொற்பதஞ் சீரே சிறந்தது

சித்தாடு கின்ற திருநாள் பிறந்தது

கற்பத நெஞ்சக் கரிசு துறந்தது

கற்றபொய்ந் நூல்கள் கணத்தே மறந்தது

அற்புதம்

1

4907

செத்தார் எழுகின்ற திருநாள் அடுத்தது

சிவநெறி ஒன்றேஎங் கும்தலை எடுத்தது

இத்தா ரணிமுதல் வானும் உடுத்தது

இறவா வரந்தான் எனக்குக் கொடுத்தது

அற்புதம்

௨

௪௯௦௮

ஆனந்த நாடகம் ஆடுதல் சார்ந்தது
அடுத்த தருணம் இதுவாக நேர்ந்தது
ஈனந்த மாயை இருள்வினை சோர்ந்தது
என்னருட் சோதிஎன் உள்ளத்தில் ஆர்ந்தது

அற்புதம்

௩

௪௯௦௯

சத்திய ஞான சபைஎன்னுள் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்
நித்திய ஞான நிறையமு துண்டனன்
நிந்தை உலகியற் சந்தையை விண்டனன்

அற்புதம்

௪

௪௯௧௦

வஞ்சகர் அஞ்சினர் வாய்மூடிச் சென்றனர்
வந்து திரும்பவும் வாயிலில் நின்றனர்
தஞ்சம் எமக்கருள் சாமிநீ என்றனர்
சன்மார்க்க சங்கத் தவர்களே வென்றனர்

அற்புதம்

5

4911

புறங்கூறி னாரெல்லாம் புல்லெனப் போயினர்

பொற்படிக் கீழ்ப்புற மீளவு மேயினர்

மறங்கூறி னோம்என்செய் வோம்என்று கூயினர்

வாழிய என்றுசொல் வாயினர் ஆயினர்

அற்புதம்

6

4912

வெவ்வினைக் காடெலாம் வேரொடு வெந்தது

வெய்ய மாமாயை விரிவற்று நொந்தது

செவ்விய ஞானம் சிறப்புற வந்தது

சித்திகள் யாவையும் செய்திடத் தந்தது

அற்புதம்

7

4913

சாதி சமயச் சழக்கெலாம் அற்றது

சன்மார்க்க ஞான சபைநிலை பெற்றது

மேதியிற் சாகாத வித்தையைக் கற்றது

மெய்யருட் சோதிஎன் உள்ளத்தில் உற்றது

8

அற்புதம் அற்புத மே - அருள்

அற்புதம் அற்புத மே.

திருச்சிற்றம்பலம்

Back

## 109. ஆணிப்பொன்னம்பலக் காட்சி

சிந்து

பல்லவி

4914.

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்

அற்புதக் காட்சிய டி - அம்மா

அற்புதக் காட்சிய டி. 1

கண்ணிகள்

4915.

ஜோதி மலைஒன்று தோன்றிற் றதில்ஒரு

வீதிஉண் டாச்சுத டி - அம்மா

வீதிஉண் டாச்சுத டி.

ஆணி

1

4916

வீதியில் சென்றேன்அவ் வீதி நடுஒரு

மேடை இருந்தத டி - அம்மா

மேடை இருந்தத டி.

ஆணி

2

4917

மேடைமேல் ஏறினேன் மேடைமேல் அங்கொரு

கூடம் இருந்தத டி - அம்மா

கூடம் இருந்தத டி.

ஆணி

3

4918

கூடத்தை நாடஅக் கூடமேல் ஏழ்நிலை

மாடம் இருந்தத டி - அம்மா

மாடம் இருந்தத டி.

ஆணி

4

4919

ஏழ்நிலைக் குள்ளும் இருந்த அதிசயம்

என்னென்று சொல்வன டி - அம்மா

என்னென்று சொல்வன டி.

ஆணி

5

4920

ஓர்நிலை தன்னில் ஒளிர்முத்து வெண்மணி

சீர்நீலம் ஆச்சுத டி - அம்மா

சீர்நீலம் ஆச்சுத டி.

ஆணி

6

4921

பாரோர் நிலையில் கருநீலம் செய்ய

பவளம தாச்சுத டி - அம்மா

பவளம தாச்சுத டி.

ஆணி

7

4922

மற்றோர் நிலையில் மரகதப் பச்சைசெம்

மாணிக்கம் ஆச்சுத டி - அம்மா

மாணிக்கம் ஆச்சுத டி.

ஆணி

8

4923

பின்னோர் நிலையில் பெருமுத்து வச்சிரப்

பேர்மணி ஆச்சுத டி - அம்மா

பேர்மணி ஆச்சுத டி.

ஆணி

9

4924

வேறோர் நிலையில் மிகும்பவ ளத்திரள்

வெண்மணி ஆச்சுத டி - அம்மா

வெண்மணி ஆச்சுத டி.

ஆணி

10

4925

புகலோர் நிலையில் பொருந்திய பன்மணி

பொன்மணி ஆச்சுத டி - அம்மா

பொன்மணி ஆச்சுத டி.

ஆணி

11

4926

பதியோர் நிலையில் பகர்மணி எல்லாம்

படிகம தாச்சுத டி - அம்மா

படிகம தாச்சுத டி.

ஆணி

12

4927

ஏழ்நிலை மேலே இருந்ததோர் தம்பம்

இசைந்தபொற் றம்பம டி - அம்மா

இசைந்தபொற் றம்பம டி.

ஆணி

13

4928

பொற்றம்பம் கண்டேறும் போதுநான் கண்ட

புதுமைஎன் சொல்வன டி - அம்மா

புதுமைஎன் சொல்வன டி.

ஆணி

14

4929

ஏறும்போ தங்கே எதிர்ந்த வகைசொல

என்னள வல்லவ டி - அம்மா

என்னள வல்லவ டி.

ஆணி

15

> 4930

ஆங்காங்கே சத்திகள் ஆயிரம் ஆயிரம்

ஆகவந் தார்கள டி - அம்மா

ஆகவந் தார்கள டி.

ஆணி

16

4931

வந்து மயக்க மயங்காமல் நான்அருள்

வல்லபம் பெற்றன டி - அம்மா

வல்லபம் பெற்றன டி.

ஆணி

17

4932

வல்லபத் தால்அந்த மாதம்பத் தேறி

மணிமுடி கண்டேன டி - அம்மா

மணிமுடி கண்டேன டி.

ஆணி

18

4933

மணிமுடி மேலோர் கொடுமுடி நின்றது

மற்றது கண்டேன டி - அம்மா

மற்றது கண்டேன டி.

ஆணி

19

4934

கொடுமுடி மேல்ஆயி ரத்தெட்டு மாற்றுப்பொற்

கோயில் இருந்தத டி - அம்மா

கோயில் இருந்தத டி.

ஆணி

20

4935

கோயிலைக் கண்டங்கே கோபுர வாயிலில்

கூசாது சென்றன டி - அம்மா

கூசாது சென்றன டி.

ஆணி

21

4936

கோபுர வாயிலுள் சத்திகள் சத்தர்கள்

கோடிபல் கோடிய டி - அம்மா

கோடிபல் கோடிய டி.

ஆணி

22

4937

ஆங்கவர் வண்ணம்வெள் வண்ணம்செவ் வண்ணமுன்

ஐவண்ணம் ஆகுமடி - அம்மா

ஐவண்ணம் ஆகுமடி.

ஆணி

23

4938

அங்கவ ரெல்லாம்இங் கார்இவர் என்னவும்

அப்பாலே சென்றனடி - அம்மா

அப்பாலே சென்றனடி.

ஆணி

24

4939

அப்பாலே சென்றேன்அங் கோர்திரு வாயிலில்

ஐவர் இருந்தாரடி - அம்மா

ஐவர் இருந்தாரடி.

ஆணி

25

4940

மற்றவர் நின்று வழிகாட்ட மேலோர்

மணிவாயில் உற்றேனடி - அம்மா

மணிவாயில் உற்றேனடி.

ஆணி

26

4941

எண்ணும்அவ் வாயிலில் பெண்ணோ டாணாக

இருவர் இருந்தார டி - அம்மா

இருவர் இருந்தார டி.

ஆணி

27

4942

அங்கவர் காட்ட அணுக்கத் திருவாயில்

அன்பொடு கண்டேன டி - அம்மா

அன்பொடு கண்டேன டி.

ஆணி

28

4943

அத்திரு வாயிலில் ஆனந்த வல்லிஎன்

அம்மை இருந்தாள டி - அம்மா

அம்மை இருந்தாள டி.

ஆணி

29

4944

அம்மையைக் கண்டேன் அவளருள் கொண்டேன்

அமுதமும் உண்டேன டி - அம்மா

அமுதமும் உண்டேன டி.

ஆணி

30

4945

தாங்கும் அவளரு ளாலே நடராஜர்

சந்நிதி கண்டேன டி - அம்மா

சந்நிதி கண்டேன டி.

ஆணி

31

4946

சந்நிதி யில்சென்று நான்பெற்ற பேறது

சாமி அறிவார டி - அம்மா

சாமி அறிவார டி.

32

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்

அற்புதக் காட்சிய டி - அம்மா

அற்புதக் காட்சிய டி.

திருச்சிற்றம்பலம்

Back

110. அருட்காட்சி

சிந்து

பல்லவி

4947.

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்

மயில்குயில் ஆச்சுத டி - அக்கச்சி

மயில்குயில் ஆச்சுத டி.(369)

1

(369). மயில் - விந்து. குயில் - நாதம்.

4948

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றாடும்

வள்ளலைக் கண்டேன டி - அக்கச்சி

வள்ளலைக் கண்டேன டி.

2

4949

சாதி சமயச் சழக்கைவிட் டேன்அருட்

சோதியைக் கண்டேன டி - அக்கச்சி

சோதியைக் கண்டேன டி.

3

4950

பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றாடும்

ஐயரைக் கண்டேன டி - அக்கச்சி

ஐயரைக் கண்டேனடி.

4

திருச்சிற்றம்பலம்

Back

111. பந்தாடல்

சிந்து

பல்லவி

4951.

ஆடேடி பந்து ஆடேடி பந்து

ஆடேடி பந்து ஆடேடி பந்து. 1

கண்ணிகள்

4952.

வாழிஎன் தோழிஎன் வார்த்தைகேள் என்றும்

மரணமில் லாவரம் நான்பெற்றுக் கொண்டேன்

சூழியற் செஞ்சுடர் தோற்றுறு கீழ்பால்

தூய்த்திசை நோக்கினேன் சீர்த்திகழ் சித்தி

ஊழிதோ றூழிநின் றாடுவன் நீயும்

உன்னுதி யேல்இங்கே மன்னரு ளாணை

ஆழி கரத்தணிந் தாடேடி பந்து

அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

1

4953

இசையாமல் போனவர் எல்லாரும் நாண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
வசையாதும் இல்லாத மேற்றிசை நோக்கி
வந்தேன்என் தோழிநீ வாழிகாண் வேறு
நசையாதே என்னுடை நண்பது வேண்டில்
நன்மார்க்க மாம்சுத்த சன்மார்க்கம் தன்னில்
அசையாமல் நின்றங்கே ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

2

4954

இன்பாலே உலகத்தார் எல்லாரும் காண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
தென்பாலே நோக்கினேன் சித்தாடு கின்ற
திருநாள் இதுதொட்டுச் சேர்ந்தது தோழி
துன்பாலே அசைந்தது நீக்கிஎன் னோடே
சுத்தசன் மார்க்கத்தில் ஒத்தவள் ஆகி
அன்பாலே அறிவாலே ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

3

4955

சதுமறை(378) ஆகம சாத்திரம் எல்லாம்

சந்தைப் படிப்புநம் சொந்தப் படிப்போ

விதுநெறி சுத்தசன் மார்க்கத்தில் சாகா

வித்தையைக் கற்றனன் உத்தரம் எனுமோர்

பொதுவளர் திசைநோக்கி வந்தனன் என்றும்

பொன்றாமை வேண்டிடில் என்தோழி நீதான்

அதுஇது என்னாமல் ஆடேடி பந்து

அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

4

(378). சதுர்மறை - பொ. சு., ச. மு. க. பதிப்புகள்

4956

தப்பாலே சகத்தவர் சாவே துணிந்தார்

தாமுளம் நாணநான் சாதலைத் தவிர்த்தே

எப்பாலும் எக்காலும் இருத்தலே பெற்றேன்

என்தோழி வாழிநீ என்னொடு கூடி

துப்பாலே விளங்கிய சுத்தசன் மார்க்கச்

சோதிஎன் றோதிய வீதியை விட்டே

அப்பாலே போகாமல் ஆடேடி பந்து

அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

5

4957

வெங்கேத மரணத்தை விடுவித்து விட்டேன்

விச்சைஎ லாம்கற்றென் இச்சையின் வண்ணம்

எங்கேயும் ஆடுதற் கெய்தினேன் தோழி

என்மொழி சத்தியம் என்னோடும் கூடி

இங்கே களிப்பது நன்றிந்த உலகோ

ஏதக் குழியில் இழுக்கும் அதனால்

அங்கேபா ராதேநீ ஆடேடி பந்து

அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

6

4958

சிவமே பொருள்என் றறிவால் அறிந்தேன்

செத்தாரை மீட்கின்ற திண்மையைப் பெற்றேன்

உவமேயம் இல்லாத ஒருநிலை தன்னில்

ஒன்றிரண் டென்னாத உண்மையில் நின்றேன்

தவமே புரிகின்றார் எல்லாரும் காணத்

தயவால் அழைக்கின்றேன் கயவாதே தோழி
அவமேபோ காதென்னோ டாடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

7

4959

துஞ்சாத நிலைஒன்று சுத்தசன் மார்க்கச்
சூழலில் உண்டது சொல்லள வன்றே
எஞ்சாத அருளாலே யான்பெற்றுக் கொண்டேன்
இறந்தாரை எல்லாம் எழுப்புதல் வல்லேன்
விஞ்சாத அறிவாலே தோழிநீ இங்கே
வேதுசெய் மரணத்துக் கெதுசெய்வோ மென்றே
அஞ்சாமல் என்னோடே ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

8

4960

ஈரமும் அன்புங்கொண் டின்னருள் பெற்றேன்
என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம் தோழி
காரமும் மிகுபுளிச் சாரமும் துவர்ப்பும்
கைப்போடே உப்போடே கசப்போடே கூட்டி

ஊரமு துண்டுநீ ஒழியாதே அந்தோ

ஊழிதோ றூழியும் உலவாமை நல்கும்

ஆரமு துண்டென்னோ டாடேடி பந்து

அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

ஆடேடி

9

4961

துதிசெயும் முத்தரும் சித்தரும் காணச்

சுத்தசன் மார்க்கத்தில் உத்தம ஞானப்

பதிசெயும் சித்திகள் பற்பல வாகப்

பாரிடை வானிடைப் பற்பல காலம்

விதிசெயப் பெற்றனன் இன்றுதொட் டென்றும்

மெய்யருட் சோதியால் விளைவிப்பன் நீஅவ்

அதிசயம் பார்க்கலாம் ஆடேடி பந்து

அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

10

ஆடேடி பந்து ஆடேடி பந்து

அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

கலிவிருத்தம்

4962

பூவாம லேநிதம் காய்த்த இடத்தும்

பூவார் மலர்கொண்டு பந்தாடா நின்றேன்

சாவா வரம்தந்து வாழ்வாயோ பந்தே

சாவாமல் என்னொடு வீழ்வாயோ பந்தே.

1

திருச்சிற்றம்பலம்

Back

112. மெய்யருள் வியப்பு

சிந்து

பல்லவி

4963.

எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்த மோ

இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்த மோ.

1

கண்ணிகள்

4964.

தனக்கு நிகரிங் கில்லா துயர்ந்த தம்பம் ஒன்ற தே

தாவிப் போகப் போக நூலின் தரத்தில் நின்ற தே

கனக்கத் திகைப்புற் றங்கே நானும் கலங்கி வருந்த வே

கலக்கம் நீக்கித் தூக்கி வைத்தாய் நிலைபொ ருந்த வே.

எனக்கும் உனக்கும்

1

4965

இங்கோர் மலையின் நடுவில் உயர்ந்த தம்பம் நணுக வே

ஏறிப் போகப் போக நூலின் இழைபோல் நுணுக வே

அங்கே திகைத்து நடுங்கும் போதென் நடுக்கம் நீக்கி யே

அதன்மேல் உயர்ந்த நிலையில் வைத்தாய் அடிமை ஆக்கி யே.

எனக்கும் உனக்கும்

2

4966

இரவில் பெரிய வெள்ளம் பரவி எங்கும் தயங்க வே

யானும் சிலரும் படகில் ஏறி யேம யங்க வே

விரவில் தனித்தங் கென்னை ஒருகல் மேட்டில் ஏற்றி யே

விண்ணில் உயர்ந்த மாடத் திருக்க விதித்தாய் போற்றி யே.

எனக்கும் உனக்கும்

3

4967

மேலைப் பாற்சிவ கங்கை என்னுமோர் தீர்த்தம் தன்னை யே

மேவிப் படியில் தவறி நீரில் விழுந்த என்னை யே

ஏலத் துகிலும் உடம்பும் நனையா தெடுத்த தேஒன் றோ

எடுத்தென் கரத்தில் பொற்பூண் அணிந்த இறைவன் நீயன் றோ.

எனக்கும் உனக்கும்

4

4968

என்ன துடலும் உயிரும்371 பொருளும் நின்ன தல்ல வோ

எந்தாய் இதனைப் பெறுக எனநான் இன்று சொல்ல வோ

சின்ன வயதில் என்னை ஆண்ட திறத்தை நினைக்கு தே

சிந்தை நினைக்கக் கண்ணீர் பெருக்கி372 உடம்பை நனைக்கு தே.

எனக்கும் உனக்கும்

5

371. உயிரும் உடலும் - ச. மு. க.

372. பெருகி - ச. மு. க.

4969

அப்பா நின்னை அன்றி எங்கும் அணைப்பார் இல்லை யே

அந்தோ நின்னை அன்றி எங்கும் அருள்வார் இல்லை யே

எப்பா லவர்க்கும் நின்னை அன்றி இறைமை இல்லை யே

எனக்கும் நின்மே லன்றி உலகில் இச்சை இல்லை யே.

எனக்கும் உனக்கும்

6

4970

அரசே உன்னை அணைக்க எனக்குள் ஆசை பொங்கு தே

அணைப்போம் என்னும் உண்மை யால்என் ஆவி தங்கு தே

விரைசேர் பாதம் பிடிக்க என்கை விரைந்து நீளு தே

மேவிப் பிடித்துக் கொள்ளுந் தோறும் உவகை ஆளு தே.

எனக்கும் உனக்கும்

7

4971

தனிஎன்373 மேல்நீ வைத்த தயவு தாய்க்கும் இல்லை யே

தரும்ஐந் தொழிலும் வேண்டுந் தோறும் தருதல் வல்லை யே

வினவும் எனக்கென் உயிரைப் பார்க்க மிகவும் நல்லை யே

மிகவும் நான்செய் குற்றம் குறித்து விடுவாய் அல்லை யே.

எனக்கும் உனக்கும்

8

373. தனியன் - பி. இரா., ச. மு. க.

4972

என்னை ஆண்ட வண்ணம் எண்ணில் உள்ளம் உருகு தே

என்னை விழுங்கி எங்கும் இன்ப வெள்ளம் பெருகு தே

உன்ன உன்ன மனமும் உயிரும் உடம்பும் இனிக்கு தே

உன்னோ டென்னை வேறென் றெண்ணில் மிகவும் பனிக்கு தே.

எனக்கும் உனக்கும்

9

4973

உன்பேர் அருளை நினைக்குந் தோறும் உடம்பு பொடிக்கு தே

உண்டு பசிதீர்ந் தாற்போல் காதல் மிகவும் தடிக்கு தே

அன்பே அமையும் என்ற பெரியர் வார்த்தை போயிற் றே

அன்போர் அணுவும் இல்லா எனக்கிங் கருளல் ஆயிற் றே.

எனக்கும் உனக்கும்

10

4974

நினைக்க நினைக்கத் தித்திப் பெனது நினைவில் கொடுக்கு தே

நின்பால் அன்றிப் பிறர்பால் செல்ல நெஞ்சம் நடுக்கு தே

எனைத்துன் பொழித்தாட் கொண்ட நின்னை அன்னை என்ப னோ

எந்தாய் அன்பி லேன்நின் னடிக்கு முன்னை அன்ப னோ.

எனக்கும் உனக்கும்

11

4975

உன்னை மறக்கில் எந்தாய் உயிர்என் உடம்பில் வாழு மோ

உன்பால் அன்றிப் பிறர்பால் என்றன் உள்ளம் சூழு மோ

என்னைக் கொடுக்க வாங்கிக் கொண்ட தென்ன கருதி யோ

எந்தாய் நின்னைக் கொடுக்க என்பால் இன்று வருதி யோ.

எனக்கும் உனக்கும்

12

4976

நெடுநாள் முயன்றும் காண்டற் கரிய நிலையைக் காட்டி யே

நிறைந்தென் அகத்தும் புறத்தும் சூழ்ந்தாய் ஒளியை நாட்டி யே

நடுநா டியநின் அருளுக் கென்மேல் என்ன நாட்ட மோ

நாய்க்குத் தவிசிட் டனைநின் தனக்கிங் கிதுவோர் ஆட்ட மோ.

எனக்கும் உனக்கும்

13

4977

நாகா திபனும் அயனும் மாலும் நறுமு றென்ன வே

ஞான அமுதம் அளித்தாய் நானும் உண்டு துன்ன வே

சாகாக்கலையை எனக்குப் பயிற்றித் தந்த தயவை யே

சாற்றற் கரிது நினக்கென் கொடுப்ப தேதும் வியவை யே.

எனக்கும் உனக்கும்

14

4978

யாது கருதி என்னை ஆண்ட தைய ஐய வோ

யானுன் அடிப்பொற் றுணைகட் குவந்து தொழும்பு செய்ய வோ

ஓது கடவுட் கூட்டம் அனைத்தும் அடிமை அல்ல வோ

உடையாய் அவர்க்குள் எனையும் ஒருவன் என்று சொல்ல வோ.

எனக்கும் உனக்கும்

15

4979

தலையும் காலும் திரித்து நோக்கித் தருக்கி னேனை யே

தாங்கித் தெரித்த தயவை நினைக்கில் உருக்கு தூனை யே

புலையும் கொலையும் தவிர்ந்த நெறியில் புனிதர் மதிக்க வே

புகுவித் தாயை என்வாய் துடிப்ப தேத்தித் துதிக்க வே.

எனக்கும் உனக்கும்

16

4980

தாயே எனக்குத் தயவு புரிந்த தருணத் தந்தை யே

தனியே நின்னை நினைக்கக் கிளர்வ தெனது சிந்தை யே

நாயேன் எண்ணம் அனைத்தும் முடித்துக் கொடுத்த பண்ப னே

நான்செய் தவத்தால் எனக்குக் கிடைத்த நல்ல நண்ப னே.

எனக்கும் உனக்கும்

17

4981

ஏறா நிலையில் விரைந்து விரைந்திங் கென்னை ஏற்றி யே

இறங்கா திறங்கும் படிகள் முழுதும் எடுத்தாய் போற்றி யே

மாறாக் கருணை என்மேல் வைக்க வந்த தென்னை யோ

மதியி லேன்நின் அருட்குச் செய்த தவந்தான் முன்னை யோ.

எனக்கும் உனக்கும்

18

4982

இடமும் வலமும் இதுவென் றறியா திருந்த என்னை யே

எல்லாம் அறிவித் தருள்செய் கருணை என்னை என்னை யே
நடமும் நடஞ்செய் இடமும் எனக்கு நன்று காட்டி யே
நாயி னேனை வளர்க்கின் றாய்நல் லமுதம் ஊட்டி யே.
எனக்கும் உனக்கும்

19

4983

விதுவும் கதிரும் இதுவென் றறியும் விளக்கம் இன்றி யே
விழித்து மயங்கி னேன்பால் பெரிய கருணை ஒன்றி யே
அதுவும் அதுவும் இதுவென் றெனக்குள் அறியக் காட்டி யே
அடிய னேனை வளர்க்கின் றாய்நல் லமுதம் ஊட்டி யே.
எனக்கும் உனக்கும்

20

4984

இருளும் ஒளியும் வந்த வகையை எண்ணி எண்ணி யே
இரவும் பகலும் மயங்கி னேனை இனிது நண்ணி யே
அருளும் பொருளும் கொடுத்து மயக்கம் நீக்கிக் காட்டி யே
அன்பால் என்னை வளர்க்கின் றாய்நல் லமுதம் ஊட்டி யே.
எனக்கும் உனக்கும்

21

4985

அண்டத் தகத்தும் புறத்தும் உன்றன் ஆணை செல்லு தே

அவனே எல்லாம் வல்லான் என்று மறைகள் சொல்லு தே

பிண்டத் தகத்தும் புறத்தும் நிறைந்த பெரிய சோதி யே

பேயேன் அளவில் விளங்கு கின்ற தென்ன நீதி யே.

எனக்கும் உனக்கும்

22

4986

கருணா நிதிநின் தன்னைக் காணக் கண்கள் துடிக்கு தே

காண்போம் என்று நினைக்குந் தோறும் உடம்பு பொடிக்கு தே

அருள்நா டகஞ்செய் பதங்கள் பாடி ஆட விரைவ தே

ஆடும் பொதுவை நினைக்க நினைக்க நெஞ்சம் கரைவ தே.

எனக்கும் உனக்கும்

23

4987

அருளார் சோதி என்னுள் விளங்க அளித்த காலத் தே

அடியேன் குறைகள் யாவும் தவிர்ந்த திந்த ஞாலத் தே

பொருளாய் எனையும் நினைக்க வந்த புதுமை என்னை யோ

பொன்னென் றைய மதிப்ப துதவாத் துரும்பு தன்னை யோ.

எனக்கும் உனக்கும்

24

4988

எனக்குள் நீயும் உனக்குள் நானும்இருக்கும் தன்மை யே

இன்று காட்டிக் கலக்கம் தவிர்த்துக் கொடுத்தாய் நன்மை யே
தனக்குள் ளதுதன் தலைவர்க் குளதென் றறிஞர் சொல்வ தே
சரியென் றெண்ணி எனது மனது களித்து வெல்வ தே.

எனக்கும் உனக்கும்

25

4989

கருணைப் பொதுவில் பெரிய சோதித் தருவில் கனித்த தே
கனித்த பெரிய தனித்த கனிஎன் கருத்துள் இனித்த தே
தருணத் துண்டு மகிழ்வுற் றேன்அம் மகிழ்ச்சி சொல்ல வே
தனித்துக் கரைந்த எனது கருத்தின் தரத்த தல்ல வே.

எனக்கும் உனக்கும்

26

4990

என்னா ருயிர்க்குத் துணைவ நின்னை நான்து திக்க வே
என்ன தவஞ்செய் தேன்முன் உலகு ளோர்ம திக்க வே
பொன்னார் புயனும் அயனும் பிறரும் பொருந்தல் அரிய தே
புலைய னேனுக் களித்த கருணை மிகவும் பெரிய தே.

எனக்கும் உனக்கும்

27

4991

என்கண் மணியுள் இருக்கும் தலைவ நின்னைக் காண வே

என்ன தவஞ்செய் தேன்முன் அயனும் அரியும் நாண வே
புன்கண் ஒழித்துத் தெள்ளார் அமுதம் புகட்டி என்னை யே
பொருளாய் எண்ணி வளர்க்கின் றாய்நீ எனக்கோர் அன்னை யே.

எனக்கும் உனக்கும்

28

4992

அறிவி லேன்செய் குற்றம் அனைத்தும் பொறுத்த தன்றி யே
அமுதும் அளித்தாய் யார்செய் வார்கள் இந்த நன்றி யே
செறிவி லாத பொறியும் மனமும் செறிந்து நிற்க வே
செய்தாய் மேலும் தெரித்தாய் சாகாக் கல்வி கற்க வே.

எனக்கும் உனக்கும்

29

4993

ஒருநா ழிகையில் யோக நிலையை உணர்த்தி மாலை யே
யோகப் பயனை முழுதும் அளித்தாய் மறுநாள் காலை யே
திருநாள் நிலையும் தீர்த்த நிலையும் தெய்வ நிலையு மே
சிறியேன் அறியக் காட்டித் தெரித்தாய் வேதக் கலையு மே.

எனக்கும் உனக்கும்

30

4994

அண்டப் பரப்பின் திறங்கள் அனைத்தும்அறிய வேண்டி யே

ஆசைப் பட்ட தறிந்து தெரித்தாய் அறிவைத் தூண்டி யே
பிண்டத் துயிர்கள் பொருத்தும் வகையும்பிண்டம் தன்னை யே
பிரியும் வகையும் பிரியா வகையும்தெரித்தாய் பின்னை யே.
எனக்கும் உனக்கும்

31

4995

வேதா கமங்கள் புகன்ற விரிவை ஒன்றொன் றாக வே
விளங்க விரைந்து தெரித்தாய் பயிலும் ஆசை போக வே
பூதா திகளைப் பொருத்தும் பகுதிப் பொருத்தம் முற்று மே
பொய்மை நீக்கிக் காணக் காட்டித் தெரித்தாய் மற்று மே.
எனக்கும் உனக்கும்

32

4996

வள்ளால் உன்னைப் பாடப் பாட வாய்ம ணக்கு தே
வஞ்ச வினைகள் எனைவிட் டோ டித் தலைவ ணக்கு தே
எள்ளா துனது புகழைக் கேட்கச் செவிந யக்கு தே
எந்தாய் தயவை எண்ணுந் தோறும் உளம்வி யக்கு தே.
எனக்கும் உனக்கும்

33

4997

இறைவா நின்னைக் கனவி லேனும் யான்ம றப்ப னோ

எந்தாய் உலகத் தவர்கள் போல்நான் இனி இறப்ப னோ

மறைவா சகமும் பொருளும் பயனும் மதிக்கும் மதியி லே

வாய்க்கக் கருணை புரிந்து வைத்தாய் உயர்ந்த பதியி லே.

எனக்கும் உனக்கும்

34

4998

தலைவா எனக்குக் கருணை அமுதம் தரஇத் தலத்தி லே

தவம்செய் தேன்அத் தவமும் உன்றன் அருள்வ லத்தி லே

அலைவா ரிதியில் துரும்பு போல அயனும் மாலு மே

அலைய எனக்கே அளிக்கின் றாய்நீ மேலும் மேலு மே.

எனக்கும் உனக்கும்

35

4999

உடையாய் எனக்குப் புரிந்த தயவை உன்ன உன்ன வே

உடம்பு பூரிக் கின்ற தொளிர்பொன் மலைய தென்ன வே

தடையா தினிஉள் மூல மலத்தின் தடையும் போயிற் றே

சமய விகற்பம் எல்லாம் நீங்கிச் சமம தாயிற் றே.

எனக்கும் உனக்கும்

36

5000

மயங்குந் தோறும் உள்ளும் புறத்தும் மயக்கம் நீக்கி யே

மகிழ்விக் கின்றாய் ஒருகால் ஊன்றி ஒருகால் தூக்கி யே
உயங்கு மலங்கள் ஐந்தும் பசையற் றொழிந்து வெந்த தே
உன்பே ரருட்பொற் சோதி வாய்க்குந் தருணம் வந்த தே.

எனக்கும் உனக்கும்

37

5001

எனக்கும் நின்னைப் போல நுதற்கண் ஈந்துமதனை யே
எரிப்பித் தாய்பின் எழுப்பிக் கொடுத்தாய் அருவ மதனை யே
சினக்குங் கூற்றை உதைப்பித் தொழித்துச் சிதைவு மாற்றி யே
தேவர் கற்பம் பலவும் காணச் செய்தாய் போற்றி யே.

எனக்கும் உனக்கும்

38

5002

கள்ளம் அறியேன் நின்னால் கண்ட காட்சி ஒன்று மே
கருத்தில் உளது வேறோர் விடயம் காணேன் என்று மே
உள்ள துரைக்கின் றேன்நின் அடிமேல் ஆணை முன்னை யே
உள்ளே விளங்கிக் காண்கின் றாய்க்கிங் கொளிப்ப தென்னை யே.

எனக்கும் உனக்கும்

39

5003

என்னை அடிமை கொண்டாய் நானும் நினக்கு நல்ல னோ

எல்லாம் வல்ல தலைவ நினக்கு நல்லன் அல்ல னோ

முன்னை வினைகள் அனைத்தும் நீக்கி அமுதம் ஊட்டி யே

மூவர்க் கரிய நிலையில் வைத்தாய் என்னை நாட்டி யே.

எனக்கும் உனக்கும்

40

5004

சோதி மலையில் கண்டேன் நின்னைக் கண்க ளிக்க வே

துய்த்தேன் அமுதம் அகத்தும் புறத்தும் பரிம ளிக்க வே

ஓதி உணர்தற் கரிய பெரிய உணர்வை நண்ணி யே

ஓதா தனைத்தும்உணர்கின்றேன்நின் அருளை எண்ணி யே.

எனக்கும் உனக்கும்

41

5005

ஏழு நிலைகள் ஓங்கும் தெய்வ மாடம் ஒன்றி லே

ஏற்றிக் களிக்க வைத்தாய் அதன்மேல் இலங்கு குன்றி லே

வாழும் பரிசு கவிக்கும் குடையும் மதிக்கும் தூசு மே

மகிழ்ந்து கொடுத்துப் பின்னும் கொடுத்தாய் மணிப்பொற் காசு மே.

எனக்கும் உனக்கும்

42

5006

இந்த உலகில் உள்ளார் பலரும் மிகவும் நன்மை யே

என்பால் செய்ய வைத்தாய் இதுநின் அருளின் தன்மை யே
அந்த உலகில் உள்ளார் பலரும் என்னை நோக்கி யே
அப்பா வாழி எனவும் புரிந்தாய் அடிமை யாக்கி யே.
எனக்கும் உனக்கும்

43

5007

அழியாக் கருணை அமுத வடிவின் ஓங்கும் சோதி யே
அரசே எனக்குள் விளங்கும் ஆதி யாம்அ னாதி யே
ஒழியாத் துயரை ஒழித்த பெரிய கருணை யாள னே
ஒன்றாய் ஒன்றில் உபய மாகி ஒளிரும் தாள னே.
எனக்கும் உனக்கும்

44

5008

பாலும் தேனும் கலந்த தென்ன என்னுள் இனிக்க வே
பரம ஞான அமுதம் அளிக்கின் றாய்த னிக்க வே
ஏலும் உயிர்கள் எல்லாம் நினக்குப் பொது வதென்ப ரே
இன்று நோக்கி ஓர வாரன் என்பர் அன்ப ரே.
எனக்கும் உனக்கும்

45

5009

ஐயா நான்செய் பிழைகள் ஏழு கடலில் பெரிய தே

அனைத்தும் பொறுத்த தயவு பிறருக் கரிய தரிய தே
மெய்யா நீசெய் உதவி ஒருகைம் மாறு வேண்டு மே
வேண்டா தென்ன அறிந்தும் எனக்குள் ஆசை தூண்டு மே.

எனக்கும் உனக்கும்

46

5010

பூத வெளியின் நடமும் பகுதி வெளியின் ஆட்ட மும்
போக வெளியில் கூத்தும் யோக வெளியுள் ஆட்ட மும்
நாத வெளியில் குனிப்பும் பரம நாத நடமு மே
நன்று காட்டிக் கொடுத்தாய் என்றும் நலியாத் திடமு மே.

எனக்கும் உனக்கும்

47

5011

எட்டும் இரண்டும்இதுஎன் றெனக்குச் சுட்டிக் காட்டி யே
எட்டா நிலையில் இருக்கப் புரிந்தாய் இட்டுக் கூட்டி யே
துட்ட வினையைத் தீர்த்து ஞானச் சுடருள் ளேற்றி யே
தூண்டா தென்றும் விளங்க வைத்தாய் உண்மை சாற்றி யே.

எனக்கும் உனக்கும்

48

5012

அருளாம் பெரிய வெளிக்குள் சோதி வடிவ ணாகி யே

அரசு செலுத்தும் தனித்த தலைமைப் பரம யோகி யே
பொருளாய் எனையும் உளங்கொண் டளித்த புனித நாத னே
போற்று நாத முடிவில் நடஞ்செய் கமல பாத னே.

எனக்கும் உனக்கும்

49

5013

உருவும் அருவும் உபய நிலையும் உடைய நித்த னே
உயிருள் நிறைந்த தலைவ எல்லாம் வல்ல சித்த னே
மருவும் துரிய வரையுள் நிறைந்து வயங்கும் பரம மே
மன்றில் பரமா னந்த நடஞ்செய் கின்ற பிரம மே.

எனக்கும் உனக்கும்

50

5014

அன்னே என்னை ஆண்ட தலைவ அடியன் உள்ள மே
அமர்ந்த துணைவ எனக்குக் கிடைத்த அமுத வெள்ள மே
பொன்னே பொன்னில் பொலிந்து நிறைந்த புனித வான மே
புனித வானத் துள்ளே விளங்கும் புரண ஞான மே.

எனக்கும் உனக்கும்

51

5015

சமயத் தெய்வம் பலவும் சிறிய துரும்ப தென்ன வே

சாற்றப் புகினும் சாலார்அருளின் பெருமை உன்ன வே
அமையும் அண்டப் பகுதி பலவும் அணுவின் பொடியி லே
அனந்தத் தொன்றென் றுரைத்துஞ் சாலா நின்பொன் னடியி லே.
எனக்கும் உனக்கும்

52

5016

அப்பா நின்னை அடைந்த என்னை ஒப்பார் யாவ ரே
ஆறா றகன்ற நிலையை அடைந்தான் என்பர் தேவ ரே
இப்பா ராதி பூதம் அடங்குங் காலும் நின்னை யே
ஏத்திக் களித்து வாழ்வேன் இதற்கும் ஐய மென்னை யே.
எனக்கும் உனக்கும்

53

5017

என்னை மறைத்த மறைப்பை நீக்கி என்னைக் காட்டி யே
இறைவ நினையும் காட்டி வளர்த்தாய் அமுதம் ஊட்டி யே
முன்னை மறைக்கும் எட்டா நினது பெருமை தன்னை யே
முன்னி மகிழ்ந்து பாடப் புரிந்தாய் அடிமை என்னை யே.
எனக்கும் உனக்கும்

54

5018

எண்ணுந் தோறும் எண்ணுந் தோறும் என்னுள் இனிக்கு தே

இறைவ நின்னைப் பாட நாவில் அமுதம் சனிக்கு தே
கண்ணும் கருத்தும் நின்பால் அன்றிப் பிறர்பால் செல்லு மோ
கண்டேன் உன்னை இனிமேல் என்னை மாயை வெல்லு மோ.
எனக்கும் உனக்கும்

55

5019

விந்தோ நாத வெளியும் கடந்து மேலும் நீளு தே
மேலை வெளியும் கடந்துன் அடியர் ஆணை ஆளு தே
அந்தோ உனது பெருமை சிறிதும் அறிவார் இல்லை யே
அறிந்தால் உருகி இன்ப வடிவம் ஆவர் ஒல்லை யே.
எனக்கும் உனக்கும்

56

5020

இறுகப் பிடித்துக் கொண்டேன் பதத்தை இனிநான் விடுவ னோ
எந்தாய் பாதம் பிடித்த கையால் வேறு தொடுவ னோ
குறுகப் பயந்து கூற்றும் ஓடிக் குலைந்து போயிற் றே
கோவே உன்றன் அருட்சிற் சோதி என்ன தாயிற் றே.
எனக்கும் உனக்கும்

57

5021

காய்க்கும் பருவம் தன்னைப் பழுத்த பருவம் ஆக்கி யே

கனக சபையில் நடிக்கின் றாய்லூர் காலைத் தூக்கி யே

நாய்க்குத் தவிசிட் டொருபொன் முடியும் நன்று சூட்டி யே

நட்ட நடுவே வைத்தாய் கருணை அமுதம் ஊட்டி யே.

எனக்கும் உனக்கும்

58

5922

கல்லை நோக்கிக் கனிந்து பழுத்த கனிய தாக்கி யே

கனக சபையில் நடிக்கின் றாய்லூர் காலைத் தூக்கி யே

புல்லை முடிக்கும் அணிகின் றாய்என் புன்சொல் மாலை யே

புனைந்தென் உளத்தில் இருக்கப் புரிந்தாய் நின்பொற் காலை யே.

எனக்கும் உனக்கும்

59

5923

சாதல் பிறத்தல் என்னும் அவத்தைத் தவிர்த்துக் காலை யே

தனித்துன் அருளின் அமுதம் புகட்டிக் கொடுத்தாய் மேலை யே

ஓதல் உணர்தல் உவத்தல் எனக்கு நின்பொற் பாத மே

உலக விடயக் காட்டில் செல்லா தெனது போத மே.

எனக்கும் உனக்கும்

60

5924

அருளும் பொருளும் பெற்றேன் அடிய னாகி நானு மே
அஞ்சேன் மாயை வினைகட் கொருசிற் றளவ தேனு மே
இருளும் நிறத்துக் கூற்றைத் துரத்தி அருள்சிற் சோதி யே
என்றன் அகத்தும் புறத்தும் விளங்கு கின்ற தாதி யே.
எனக்கும் உனக்கும்

61

5925

காமக் கடலைக் கடந்து வெகுளிக் கடலை நீந்தி னேன்
கடிய மயக்கக் கடலைத் தாண்டி அடியை ஏந்தி னேன்
சேமப் பொதுவில் நடங்கண் டெனது சிறுமை நீங்கி னேன்
சிற்றம் பலத்து நடங்கண் டுவந்து மிகவும் ஓங்கி னேன்.
எனக்கும் உனக்கும்

62

5926

தாங்கல் விடுதல் இரண்டும் எனக்குச் சமம தாயிற் றே
சகத்தில் வழங்கும் மாயை வழக்குத் தவிர்ந்து போயிற் றே
ஏங்கல் சலித்தல் இரண்டும் இன்றி இளைப்பு நீங்கி னேன்
எந்தாய் கருணை அமுதுண் டின்பப் பொருப்பில் ஓங்கி னேன்.
எனக்கும் உனக்கும்

63

5927

உறவு பகைஎன் றிரண்டும் எனக்கிங் கொன்ற தாயிற் றே
ஒன்றென் றிரண்டென் றுளறும் பேதம் ஓடிப் போயிற் றே
மறவு நினைவென் றென்னை வலித்த வலிப்பு நீங்கி னேன்
மன்றில் பரமா னந்த நடங்கண் டின்பம் ஓங்கி னேன்.

எனக்கும் உனக்கும்

64

5928

உன்னைக்கண்டு கொண்டேன் கண்ட வுடன்இங் கென்னை யே
உலக மெல்லாம் கண்டு கொண்ட உவப்பி தென்னை யே
என்னைக் கண்டு கொண்ட காலத் திறைவ நின்னை யே
யாரும் கண்டு கொண்டார் இல்லை யாங்க தென்னை யே.

எனக்கும் உனக்கும்

65

5929

மலத்தில் புழுத்த புழுவும் நிகர மாட்டா நாயி னேன்
வள்ளல் கருணை அமுதுண் டின்ப நாட்டான் ஆயி னேன்
குலத்தில் குறியில் குணத்தில் பெருமை கொள்ளா நாயி னேன்
கோதில் அமுதுண் டெல்லா நலமும் உள்ளான் ஆயி னேன்.

எனக்கும் உனக்கும்

66

5930

கடைய நாயில் கடைய நாய்க்கும் கடையன் ஆயி னேன்
கருணை அமுதுண் டின்ப நாட்டுக் குடையன் ஆயி னேன்
விடயக் காட்டில் ஓடித் திரிந்த வெள்ளை நாயி னேன்
விடையாய் நினக்கு மிகவும் சொந்தப் பிள்ளை ஆயி னேன்.

எனக்கும் உனக்கும்

67

5031

அயனும் மாலும் தேடித் தேடி அலந்து போயி னார்
அந்தோ இவன்முன் செய்த தவம்யா தென்ப ராயி னார்
மயனும் கருத மாட்டாத் தவள மாடத் துச்சி யே
வயங்கும் அணைமேல் வைத்தாய் சிறிய நாயை மெச்சி யே.

எனக்கும் உனக்கும்

68

5032

வல்லாய் உனது கருணை அமுதென் வாய்க்கு வந்த தே
மலமும் மாயைக் குலமும் வினையும் முழுதும் வெந்த தே
எல்லா நலமும் ஆன அதனை உண்டு வந்த தே
இறவா தென்றும் ஓங்கும் வடிவம் எனக்கு வந்த தே.

எனக்கும் உனக்கும்

69

5033

சிற்றம் பலத்தில் நடங்கண் டவர்காற் பொடிகொள் புல்ல தே
சிருட்டி முதல்லூர் ஐந்து தொழிலும் செய்ய வல்ல தே
பற்றம் பலத்தில் வைத்தார் தம்மைப் பணியும் பத்த ரே
பரம பதத்தர் என்று பகர்வர் பரம முத்த ரே.

எனக்கும் உனக்கும்

70

5034

சிருட்டி முதல்லூர் ஐந்து தொழிலும் செய்யென் றென்னை யே
செல்வப் பிள்ளை யாக்கி வளர்க்கின் றாய்இ தென்னை யே
தெருட்டித் திருப்பொற் பதத்தைக் காட்டி அமுதம் ஊட்டி யே
திகழ நடுவைத் தாய்சன் மார்க்க சங்கம்கூட்டி யே.

எனக்கும் உனக்கும்

71

5035

அடியன்ஆக்கிப் பிள்ளைஆக்கி நேயன்ஆக்கி யே
அடிகள்ஆக்கிக் கொண்டாய் என்னை அவலம் நீக்கி யே
படியு ளோரும் வானு ளோரும் இதனை நோக்கி யே
பதியும் ஓர வாரன் என்பர் பரிவு தேக்கி யே.

எனக்கும் உனக்கும்

72

5036

அண்ணா எனையும் பொருளென் றெண்ணி இரவும் பகலு மே
அகத்தும் புறத்தும் திரிகின் றாய்இவ் வுலகென் புகலு மே
தண்ணா ரமுதம் மிகவும் எனக்குத் தந்த தன்றி யே
தனியே இன்னும் தருகின் றாய்என் னறிவின் ஒன்றி யே.

எனக்கும் உனக்கும்

73

5937

வேதா கமத்தின் அடியும் நடுவும் முடியு மற்று மே
வெட்ட வெளிய தாகி விளங்கக் கண்டேன் முற்று மே
நாதா சிறிய நாய்க்கும் கடையேன் முற்றும் கண்ட தே
நானோ கண்டேன் எந்தாய் கருணை நாட்டம் கண்ட தே.

எனக்கும் உனக்கும்

74

5938

புழுவில் புழுத்த புழுவும் நிகரப் போதா நாயி னேன்
பொதுவில் நடிக்கும் தலைவ நினக்கே அடிமை ஆயி னேன்
தழுவற் கரிய பெரிய துரியத் தம்பத் தேறி னேன்
தனித்தப் பாலோர் தவள மாடத் திருந்து தேறி னேன்.

எனக்கும் உனக்கும்

75

5939

கடையன் எனது கொடிய கடின நெஞ்சக் கல்லை யே
கனிய தாக்கித் தூக்கிக் கொண்டாய் துரியத் தெல்லை யே
உடையாய் துரியத் தலத்தின் மேல்நின் றோங்குந் தலத்தி லே
உன்பால் இருக்க வைத்தாய் என்னை உவந்து வலத்தி லே.

எனக்கும் உனக்கும்

76

5040

அறிந்த நாள்கள் தொடங்கி இற்றைப் பகலின் வரையு மே
அடியேன் பட்ட பாட்டை நினைக்கில் கல்லும் கரையு மே
எறிந்தப் பாடு முழுதும் பெரிய இன்ப மாயிற் றே
எந்தாய் கருணை எனக்கு மிகவும் சொந்த மாயிற் றே.

எனக்கும் உனக்கும்

77

5041

பனிரண் டாண்டு தொடங்கிஇற்றைப் பகலின் வரையு மே
படியில் பட்ட பாட்டை நினைக்கில் மலையும் கரையு மே
துனியா தந்தப் பாடு முழுதும் சுகம தாயிற் றே
துரையே நின்மெய் அருளிங் கெனக்குச் சொந்த மாயிற் றே.

எனக்கும் உனக்கும்

78

5042

ஈரா றாண்டு தொடங்கிஇற்றைப் பகலின் வரையு மே
எளியேன் பட்ட பாட்டை நினைக்கில் இரும்பும் கரையு மே
ஏராய் அந்தப் பாடு முழுதும் இன்ப மாயிற் றே
இறைவா நின்மெய் அருளிங் கெனக்குச் சொந்த மாயிற் றே.
எனக்கும் உனக்கும்

79

5843

பாட்டால் உனது பதத்தை நாடிப் பாடும் வாய ரே
பதியே இந்த உலகில் எனக்கு மிகவும் நேய ரே
நாட்டார் எனினும் நின்னை உளத்து நாட்டார் ஆயி லோ
நயவேன் சிறிதும் நயத்தல் கயக்கும் எட்டிக் காயி லோ.
எனக்கும் உனக்கும்

80

5844

சின்ன வயது தொடங்கி என்னைக் காக்கும் தெய்வ மே
சிறியேன் மயங்கும் தோறும் மயக்கம் தீர்க்கும் தெய்வ மே
என்னை அவத்தைக் கடல்நின் றிங்ஙன் எடுத்த தெய்வ மே
எல்லா நலமும் தரும்இன் னமுதம் கொடுத்த தெய்வ மே.
எனக்கும் உனக்கும்

81

5845

அச்சம் தீர்த்திங் கென்னை ஆட்கொண் டருளும் அமுத னே

அடியேன் பிழைகள் அனைத்தும் பொறுத்துள் அமர்ந்த அமுத னே

இச்சை யாவும் முடித்துக் கொடுத்துள் இலங்கும் குரவ னே

என்றும் இறவாக் கல்வி அடியேற் கீய்ந்த குரவ னே.

எனக்கும் உனக்கும்

82

5046

உள்ளும் புறத்தும் கருணை அமுதம் ஊட்டும் அன்னை யே

ஓதா துணர உணரும் உணர்வை உதவும் அன்னை யே

தெள்ளும் கருணைச் செங்கோல் செலுத்தச் செய்த அப்ப னே

செல்வப் பிள்ளை யாக்கி என்னுள் சேர்ந்த அப்ப னே.

எனக்கும் உனக்கும்

83

5047

இரவும் பகலும் என்னைக் காத்துள் இருக்கும் இறைவ னே

எல்லா உலகும் புகழ எனைமேல் ஏற்றும் இறைவ னே

கரவு நினையா தெனக்கு மெய்ம்மை காட்டும் துணைவ னே

களித்தென் தனையும் சன்மார்க் கத்தில் நாட்டும் துணைவ னே.

எனக்கும் உனக்கும்

84

5948

சற்றும் வருந்தப் பாரா தென்னைத் தாங்கும் நேய னே
தான்நான் என்று பிரித்தற் கரிய தரத்து நேய னே
முற்றும் தனதை எனக்குக் கொடுத்து முயங்கும் நேய னே
முன்னே நான்செய் தவத்தில் எனக்குள் முளைத்த நேய னே.

எனக்கும் உனக்கும்

85

5949

நேயா நின்னை நினைக்க நினைக்க நெஞ்சம் களிக்கு தே
நெடிய விழிகள் இரண்டும் இன்ப நீர்து ளிக்கு தே
ஓயா துனது பெருமை நினைக்க உவகை நீடு தே
உரைப்பார் எவர்என் றுலகில் பலரை ஓடித் தேடு தே.

எனக்கும் உனக்கும்

86

5950

பொன்னே நின்னை உன்ன உடம்பு புளகம் மூடு தே
பொதுவைக் காண உள்ளே ஆசை பொங்கி ஆடு தே
என்னே பிறர்தம் வரவு நோக்கக் கண்கள் வெதும்பு தே
எந்தாய் வரவை நினைக்கக் களிப்புப் பொங்கித் ததும்பு தே.

எனக்கும் உனக்கும்

87

5951

மணியே நின்னைப் பொதுவில் கண்ட மனிதர் தேவ ரே

மனிதர் கண்ணிற் பட்ட புல்லும் மரமும் தேவ ரே

அணியே நின்னைப் பாடும் அடியர் தாமோ மூவ ரே

அவரைக் கண்டார் அவரைக் கண்டார் அவர்கள் மூவ ரே.

எனக்கும் உனக்கும்

88

5952

வாழ்வே நினது நடங்கண் டவரைச் சுத்தர் என்ப னோ

மலங்கள் மூன்றும் தவிர்த்த சுத்த முத்தர் என்ப னோ

ஏழ்வே தனையும் நீக்கி வாழும் நித்தர் என்ப னோ

எல்லாம் செய்ய வல்ல ஞான சித்தர் என்ப னோ.

எனக்கும் உனக்கும்

89

5953

சிவமே நின்னைப் பொதுவில் கண்ட செல்வர் தம்மை யே

தேவர் கண்டு கொண்டு வணங்கு கின்றார் இம்மை யே

தவமே புரிந்து நின்னை உணர்ந்த சாந்த சித்த ரே

தகும்ஐந் தொழிலும் தாமே இயற்ற வாய்ந்த சித்த ரே.

எனக்கும் உனக்கும்

90

5954

ஐவ ராலும் நின்னை அறிதற் கருமை அருமை யே
ஆரே அறிவர் மறையும் அறியா நினது பெருமை யே
பொய்வ ராத வாய்கொண் டுன்னைப் போற்றும் அன்ப ரே
பொருளே நின்னை அறிவர் அவரே அழியா இன்ப ரே.

எனக்கும் உனக்கும்

91

5955

என்னைக் காட்டிஎன்னுள் இலங்கும் நின்னைக் காட்டியே
இறங்கா நிலையில் ஏற்றி ஞான அமுதம் ஊட்டி யே
பொன்னைக் காட்டிப் பொன்னே நினது புகழைப் பாடி யே
புந்தி களிக்க வைத்தாய் அழியா தென்னை நாடி யே.

எனக்கும் உனக்கும்

92

5956

அண்ட கோடி அனைத்தும் காணும் கண்கள் எய்தி யே
அறிந்தேன் அங்கைக் கனிபோல் அவற்றில் உள்ள செய்தி யே
பிண்ட கோடி முழுதும்காணப் பெற்று நின்னை யே
பேசிப் பேசி வியக்கின் றேன்இப் பிறவி தன்னை யே.

எனக்கும் உனக்கும்

93

5957

சிற்றம் பலத்தின் நடனம் காட்டிச் சிவத்தைக் காட்டி யே

சிறப்பாய் எல்லாம் வல்ல சித்தித் திறத்தைக் காட்டி யே

குற்றம் பலவும் தீர்த்தென் தனக்கோர் முடியும் சூட்டி யே

கோவே நீயும் என்னுள் கலந்து கொண்டாய் நாட்டி யே.

எனக்கும் உனக்கும்

94

5958

சுத்த நிலையின் நடுநின் றெங்கும் தோன்றும் சோதி யே

துரிய வெளியைக் கடந்தப் பாலும் துலங்கும் சோதி யே

சித்தர் உளத்தில் சுடர்செய் தோங்கும் தெய்வச் சோதி யே

சிற்றம் பலத்தில் நடஞ்செய் தெனக்குள் சிறந்த சோதி யே.

எனக்கும் உனக்கும்

95

5959

அன்றே என்னை அடியன்ஆக்கி ஆண்ட சோதி யே

அதன்பின் பிள்ளை ஆக்கிஅருள்இங் களித்த சோதி யே

நன்றே மீட்டும் நேயன் ஆக்கிநயந்த சோதி யே

நானும் நீயும் ஒன்றென் றுரைத்துநல்கு சோதி யே.

எனக்கும் உனக்கும்

96

5960

நீயே வலிந்திங் கென்னை ஆண்ட நீதிச் சோதி யே

நின்னைப் பாட என்னை வளர்க்கும் நிமலச் சோதி யே

தாயே எனவந் தென்னைக் காத்த தருமச் சோதி யே

தன்மை பிறரால் அறிதற் கரிய தலைமைச் சோதி யே.

எனக்கும் உனக்கும்

97

5961

சாகாக் கல்வி எனக்குப் பயிற்றித் தந்த சோதி யே

தன்னேர் முடிஒன் றெனது முடியில் தரித்த சோதி யே

ஏகாக் கரப்பொற் பீடத்தென்னை ஏற்று சோதி யே

எல்லாம் வல்ல சித்திஆட்சி ஈய்ந்த சோதி யே.

எனக்கும் உனக்கும்

98

5962

சோதி எவையும் விளங்க விளங்கும் சோதி வாழி யே

துரிய வெளியின் நடுநின் றோங்கும் சோதி வாழி யே

சூதி லாமெய்ச் சிற்றம் பலத்துச் சோதி வெல்க வே

துலங்கப் பொன்னம் பலத்தில் ஆடும் சோதி வெல்க வே.

எனக்கும் உனக்கும்

99

5963

சுத்த சிவசன் மார்க்க நீதிச் சோதி போற்றி யே

சுகவாழ் வளித்த சிற்றம் பலத்துச் சோதி போற்றி யே

சுத்த சுடர்ப்பொற் சபையில் ஆடும் சோதி போற்றி யே

சோதி முழுதும் விளங்க விளங்கும் சோதி போற்றி யே.

100

எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்த மோ

இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்த மோ.

5964.

சிவசிவ கஜமுக கணநா தா

சிவகண வந்தித குணநீ தா.

1

5965

சிவசிவ சிவசிவ தத்துவ போதா

சிவகுரு பரசிவ சண்முக நாதா.(374)

2

(374)ஆ பா. பதிப்பைத் தவிர மற்றைப் பதிப்புகள் அனைத்திலும்

"அம்பலத்தரசே" முதலாக நாமாவளி தொடங்குகிறது. ஆ. பா.பதிப்பில் மட்டும்

இவ்விரண்டு நாமாவளிகளும் முன்வைக்கப் பெற்று "அம்பலத்தரசே" மூன்றாவதாக

வைக்கப்பெற்றுள்ளது. இறுக்கம் இரத்தின முதலியார், வேட்டவலம் ஜமீன்தார்

அப்பாசாமி பண்டாரியார் இவ்விருவரின் படிகளில் மட்டுமே இவ்விரண்டு

நாமாவளிகள் காணப் பெறுவதாயும், கிடைத்த மற்றைப் படிகளில் இவை இல்லை என்றும்,

அவற்றில் "அம்பலத்தரசே" என்பதே தொடக்கம் என்றும் ஆ. பா. குறிக்கிறார்.

இப்பதிப்பில் இவ்விரு நாமாவளிகளும் தனியாக எண்ணிடப் பெற்றுத் தனிப்படுத்திக்

காட்டப் பெற்றுள்ளன.அம்பலத்தரசே எனத் தொடங்கும் நாமாவளிக்கு இவ்விரண்டையும்

காப்பாகக் கொள்ளலாம்.

5966

அம்பலத் தரசே அருமருந் தே

ஆனந்தத் தேனே அருள்விருந் தே.

1

5967

பொதுநடத் தரசே புண்ணிய னே

புலவரெ லாம்புகழ் கண்ணிய னே.

2

5968

மலைதரு மகளே மடமயி லே

மதிமுக அமுதே இளங்குயி லே.

3

5069

ஆனந்தக் கொடியே இளம்பிடி யே

அற்புதத் தேனே மலைமா னே.

4

5070

சிவசிவ சிவசிவ சின்மய தேஜா

சிவசுந் தரகுஞ் சிதநட ராஜா.

5

5071

படன விவேக பரம்பர வேதா

நடன சபேச சிதம்பர நாதா.

6

5072

அரிபிர மாதியர் தேடிய நாதா

அரகர சிவசிவ ஆடிய பாதா.

7

5073

அந்தண அங்கண அம்பர போகா

அம்பல நம்பர அம்பிகை பாகா.

8

5074

அம்பர விம்ப சிதம்பர நாதா
அஞ்சித ரஞ்சித குஞ்சித பாதா.

9

5075

தந்திர மந்திர யந்திர பாதா
சங்கர சங்கர சங்கர நாதா.

10

5076

கனக சிதம்பர கங்கர புரஹர
அனக பரம்பர சங்கர ஹரஹர.

11

5077

சகல கலாண்ட சராசர காரண
சகுண சிவாண்ட பராபர பூரண.

12

5078

இக்கரை கடந்திடில் அக்கரை யே
இருப்பது சிதம்பர சர்க்கரை யே.

13

5979

என்னுயிர் உடம்பொடு சித்தம தே

இனிப்பது நடராஜ புத்தமு தே.

14

5980

ஐயர் திருச்சபை ஆடக மே

ஆடுதல் ஆனந்த நாடக மே.

15

5981

உத்தர ஞான சிதம்பர மே

சித்திஎ லாந்தரும் அம்பரமே.

16

5982

அம்பல வாசிவ மாதே வா

வம்பல வாவிங்கு வாவா வா.

17

5983

நடராஜன் எல்லார்க்கும் நல்லவ னே

நல்லஎ லாம்செய வல்லவ னே.

18

5984

ஆனந்த நாடகம் கண்டோமே - பர
மானந்த போனகம் கொண்டோமே.

19

5985

சகள உபகள நிட்கள நாதா
உகள சததள மங்கள பாதா.

20

5986

சந்தத மும்சிவ சங்கர பஜனம்
சங்கிதம் என்பது சற்சன வசனம்.

21

5987

சங்கர சிவசிவ மாதே வா
எங்களை ஆட்கொள வாவா வா.

22

5988

அரகர சிவசிவ மாதே வா
அருளமு தம்தர வாவா வா.

23

5989

நடனசி காமணி நவமணி யே

திடனக மாமணி சிவமணி யே.

24

5990

நடமிடும் அம்பல நன்மணி யே

புடமிடு செம்பல பொன்மணி யே.

25

5991

உவட்டாது சித்திக்கும் உள்ளமு தே

தெவிட்டாது தித்திக்கும் தெள்ளமு தே.

26

5992

நடராஜ வள்ளலை நாடுத லே

நம்தொழி லாம்விளை யாடுத லே.

27

5993

அருட்பொது நடமிடு தாண்டவ னே

அருட்பெருஞ் சோதிஎன் ஆண்டவ னே.

28

5994

நடராஜ மாணிக்கம் ஒன்றது வே

நண்ணுதல் ஆணிப்பொன் மன்றது வே.

29

5995

நடராஜ பலமது நம்பல மே
நடமாடு வதுதிரு அம்பல மே.

30

5996

நடராஜர் பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு.

31

5997

சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு
ஜீவர்கள் பாட்டெல்லாம் தெருப்பாட்டு.

32

5998

அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டு.

33

5999

அம்பல வாணனை நாடின னே
அவனடி யாரொடும் கூடின னே.

34

5100

தம்பத மாம்புகழ் பாடின னே

தந்தன என்றுகூத் தாடின னே.

35

5101

நான்சொன்ன பாடலும் கேட்டா ரே

ஞான சிதம்பர நாட்டா ரே.

36

5102

இனித்துயர் படமாட்டேன் விட்டே னே

என்குரு மேல்ஆணை இட்டே னே.

37

5103

இனிப்பாடு படமாட்டேன் விட்டே னே

என்னப்பன் மேல்ஆணை இட்டே னே.

38

5104

சன்மார்க்கம் நன்மார்க்கம் நன்மார்க்கம்

சகமார்க்கம் துன்மார்க்கம் துன்மார்க்கம்.

39

5105

நாதாந்த நாட்டுக்கு நாயக ரே
நடராஜ ரேசபா நாயக ரே.

40

5106

நான்சொல்லும் இதுகேளீர் சத்திய மே
நடராஜ எனில்வரும் நித்திய மே.

41

5107

நல்லோர் எல்லார்க்கும் சபாபதி யே
நல்வரம் ஈயும் தயாநிதி யே.

42

5108

நடராஜர் தம்நடம் நன்னட மே
நடம்புரி கின்றதும் என்னிட மே.

43

5109

சிவகாம வல்லிக்கு மாப்பிள்ளை யே
திருவாளன் நான்அவன் சீர்ப்பிள்ளை யே.

44

5110

சிவகாம வல்லியைச் சேர்ந்தவ னே

சித்தெல்லாம் செய்திடத் தேர்ந்தவ னே.

45

5111

இறவா வரம்தரு நற்சபை யே

எனமறை புகழ்வது சிற்சபை யே.

46

5112

என்இரு கண்ணுள் இருந்தவ னே

இறவா தருளும் மருந்தவ னே.

47

5113

சிற்சபை அப்பனை உற்றே னே

சித்திஎ லாம்செயப் பெற்றே னே.

48

5114

அம்பல வாணர்தம் அடியவ ரே

அருளர சாள்மணி முடியவ ரே.

49

5115

அருட்பெருஞ்சோதியைக் கண்டே னே

ஆனந்தத் தெள்ளமு துண்டே னே.

50

5116

இருட்பெரு மாயையை விண்டே னே

எல்லாம்செய் சித்தியைக் கொண்டே னே.

51

5117

கருணா நிதியே குணநிதி யே

கதிமா நிதியே கலாநிதி யே.

52

5118

தருணா பதியே சிவபதி யே

தனிமா பதியே சபாபதி யே.

53

5119

கருணா நிதியே சபாபதி யே

கதிமா நிதியே பசுபதி யே.

54

5120

சபாபதி பாதம் தபோப்ர சாதம்

தயாநிதி போதம் சதோதய வேதம்.

55

5121

கருணாம் பரவர கரசிவ பவபவ

அருணாம் பரதர ஹரஹர சிவசிவ.



5122

கனகா கரபுர ஹரசிர கரதர

கருணா கரபர சுரவர ஹரஹர.



5123

கனக சபாபதி பசுபதி நவபதி

அனக உமாபதி அதிபதி சிவபதி.



5124

வேதாந்த பராம்பர ஜயஜய(375)

நாதாந்த நடாம்பர ஜயஜய.



(375). சவுதய - ஆ. பா. பதிப்பு.

5125

ஏகாந்த சர்வேச சமோதம

யோகாந்த நடேச நமோநம.

5126

ஆதாம்பர ஆடக அதிசய

பாதாம்புஜ நாடக ஜயஜய.

61

5127

போதாந்த புரேச சிவாகம

நாதாந்த நடேச நமோநம.

62

5128

ஜால கோலகன காம்பர சாயக

கால காலவன காம்பர நாயக.

63

5129

நாத பாலசு லோசன வர்த்தன

ஜாத ஜாலவி மோசன நிர்த்தன.

64

5130

சதபரி சதவுப சதமத விதபவ

சிதபரி கதபத சிவசிவ சிவசிவ.

65

5131

அரகர வரசுப கரகர பவபவ

சிரபுர சுரபர சிவசிவ சிவசிவ.

66

5132

உபல சிரதல சுபகண வங்கண

சுபல கரதல கணபண கங்கண.

67

5133

அபயவ ரதகர தலபுரி காரண

உபயப ரதபத பரபரி பூரண.

68

5134

அகரஉ கரசுப கரவர சினகர

தகரவ கரநவ புரசிர தினகர.

69

5135

வகரசி கரதின கரசசி கரபுர

மகரஅ கரவர புரஹர ஹரஹர.

70

5136

பரமமந் திரசக ளாகன கரணா

படனதந் திரநிக மாகம சரணா.

71

5137

அனந்தகோ டிகுண கரகர ஜொலிதா

அகண்டவே தசிர கரதர பலிதா.

72

5138

பரிபூரண ஞானசி தம்பர

பதிகாரண நாதப ரம்பர.

73

5139

சிவஞானப தாடக நாடக

சிவபோதப ரோகள கூடக.

74

5140

சகல லோகபர காரக வாரக

சபள யோகசர பூரக தாரக.

75

5141

சத்வ போதக தாரண தன்மய

சத்ய வேதக பூரண சின்மய.

76

5142

வரகே சாந்த மகோதய காரிய

பரபா சாந்த சுகோதய சூரிய.

77

5143

பளித தீபக சோபித பாதா

லளித ரூபக ஸ்தாபித நாதா.

78

5144

அனிர்த(376) கோபகரு ணாம்பக நா தா

அமிர்த ரூபதரு ணாம்புஜ பா தா.

79

(376). அனுர்த - ச. மு. க. பதிப்பு.

5145

அம்போ ருகபத அரகர கங்கர

சம்போ சிவசிவ சிவசிவ சங்கர.

80

5146

சிதம்பிர காசா பரம்பிர கா சா

சிதம்ப ரேசா சுயம்பிர கா சா.

81

5147

அருட்பிர காசம் பரப்பிர காசம்

அகப்பிர காசம் சிவப்பிர காசம்.

82

5148

நடப்பிர காசம் தவப்பிர காசம்

நவப்பிர காசம் சிவப்பிர காசம்.

83

5149

நாத பரம்பர னே பர - நாத சிதம்பர னே

நாத திகம்பர னே தச - நாத சுதந்தர னே.

84

5150

ஞான நடத்தவ னே பர - ஞானிஇ டத்தவ னே

ஞான வரத்தவ னே சிவ - ஞான புரத்தவ னே.

85

5151

ஞான சபாபதி யே மறை - நாடு சதாகதி யே

தீன தயாநிதி யே பர - தேவி உமாபதி யே.

86

5152

புத்தம்தரும் போதா வித்தம்தரும் தாதா

நித்தம்தரும் பாதா சித்தம்திரும் பாதா.

87

5153

நடுநாடி நடுநாடி நடமாடு பதியே

நடராஜ நடராஜ நடராஜ நிதியே.

88

5154

நடுநாடி யொடுகூடி நடமாடும் உருவே

நடராஜ நடராஜ நடராஜ குருவே.

89

5155

நடுநாடி இடைநாடி நடமாடும் நலமே

நடராஜ நடராஜ நடராஜ பலமே.

89

திருச்சிற்றம்பலம்

Back

114. சம்போ சங்கர

சிந்து

5156.

தம்குறுவம்பு மங்கநிரம்பு சங்கம்இயம்பும் நம்கொழுகொம்பு
சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு.

1

5157

சந்தம்இயன்று அந்தணர்நன்று சந்ததம்நின்று வந்தனம்என்று
சந்திசெய்மன்று மந்திரம்ஒன்று சங்கரசம்பு சங்கரசம்பு.

2

5158

நனம்தலைவீதி நடந்திடுசாதி நலம்கொளும்ஆதி நடம்புரிநீதி
தினம்கலைஓதி சிவம்தரும்ஓதி சிதம்பரஜோதி சிதம்பரஜோதி.

3

5159

நகப்பெருஞ்சோதி சுகப்பெருஞ்சோதி
நவப்பெருஞ்சோதி சிவப்பெருஞ்சோதி
அகப்பெருஞ்சோதி நடப்பெருஞ்சோதி
அருட்பெருஞ் சோதி அருட்பெருஞ் சோதி.

4

5160.

உமைக்கொருபாதி கொடுத்தருள்நீதி
உவப்புறுவேதி நவப்பெருவாதி
அமைத்திடுபூதி அகத்திடும்ஆதி

அருட்சிவஜோதி அருட்சிவஜோதி.

5

5161

ஓதஅடங் காதுமடங் காதுதொடங் காது

ஓகைஒடுங் காதுதடுங் காதுநடுங் காது

சூதமலங் காதுவிலங் காதுகலங் காது

ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ் ஜோதி.

6

5162

ஏதமுயங் காதுகயங் காதுமயங் காது

ஏறிஇறங் காதுஉறங் காதுகறங் காது

சூதமிணங் காதுபிணங் காதுவணங் காது

ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ் ஜோதி.

7

5163

அகரசபாபதி சிகரசபாபதி அனகசபாபதி கனகசபாபதி

மகரசபாபதி உகரசபாபதி வரதசபாபதி சரதசபாபதி.

8

5164

அமலசபாபதி அபயசபாபதி அமுதசபாபதி அகிலசபாபதி

நிமலசபாபதி நிபுணசபாபதி நிலயசபாபதி நிபிடசபாபதி.

9

5165

பரநடம்சிவ சிதம்பரநடமே பதிநடம்சிவ சபாபதிநடமே

திருநடனம்பர குருநடமே சிவநடம்அம்பர நவநடமே.

10

5166

அம்பலத்தொருநடம் உருநடமே அருநடம் ஒருநடம் திருநடமே

எம்பலத்தொருநடம் பெருநடமே இதன்பரத்திடுநடம் குருநடமே.

11

5167

அஞ்சோடஞ்சவை ஏலாதே அங்கோடிங்கெனல் ஆகாதே

அந்தோவெந்துயர் சேராதே அஞ்சோகஞ்சுகம் ஓவாதே

தஞ்சோபங்கொலை சாராதே சந்தோடம்சிவ மாமீதே

சம்போசங்கர மாதேவா சம்போசங்கர மாதேவா.

12

5168

எந்தாய் என்றிடில் இந்தா நம்பதம் என்றீ யும்பர மன்றா டும்பத

என்றோ டிந்தன நன்றா மங்கண வெங்கோ மங்கள வெஞ்சா
நெஞ்சக

சந்தே கங்கெட நந்தா மந்திர சந்தோ டம்பெற வந்தா ளந்தண

சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர.

13

5169

நஞ்சோ என்றிடு நங்கோ பங்கெட நன்றே தந்தனை நந்தா மந்தண

நம்பா நெஞ்சில் நிரம்பா நம்பர நம்பா நம்பதி யம்பா தம்பதி

தஞ்சோ வென்றவர் தஞ்சோ பந்தெறு தந்தா வந்தன நுந்தாள் தந்திடு

சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர.

14

5170

பொதுநிலை அருள்வது பொதுவினில் நிறைவது

பொதுநலம் உடையது பொதுநடம் இடுவது

அதுபரம் அதுபதி அதுபொருள் அதுசிவம்

அரஅர அரஅர அரஅர அரஅர.

15

5171

நவநிலை தருவது நவவடி வுறுவது

நவவெளி நடுவது நவநவ நவமது

சிவமெனும் அதுபதம் அதுகதி அதுபொருள்

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ.

16

5172

சந்திர தரசிர சுந்தர சுரவர
தந்திர நவபத மந்திர புரநட
சங்கர சிவசிவ சங்கர சிவசிவ
சங்கர சிவசிவ சங்கர சிவசிவ.

17

5173

வானசிற்கன மந்திரதந்திர வாதசிற்குண மந்தணவந்தண
வாரசற்சன வந்திதசிந்தித வாமஅற்புத மங்கலைமங்கல
ஞானசிற்சுக சங்கரகங்கர ஞாயசற்குண வங்கணஅங்கண
நாதசிற்பர வம்பரநம்பர நாததற்பர விம்பசிதம்பர.

18

5174

பாரதத்துவ பஞ்சகரஞ்சக பாதசத்துவ சங்கஜபங்கஜ
பாலநித்திய வம்பகநம்பக பாசபுத்தக பண்டிதகண்டித
நாரவித்தக சங்கிதவிங்கித நாடகத்தவ நம்பதிநங்கதி
நாதசிற்பர நம்பரஅம்பர நாததற்பர விம்பசிதம்பர.

19

5175

பதநம்புறு பவர்இங்குறு பவசங்கடம் அறநின்றிடு
பரமம்பொது நடம்என்தன துளம்நம்புற அருள்அம்பர
சிதகுஞ்சித பதரஞ்சித சிவசுந்தர சிவமந்திர

சிவசங்கர சிவசங்கர சிவசங்கர சிவசங்கர.

20

5176

கலகந்தரும் அவலம்பன கதிநம்பல நிதமும்

கனகந்தரு மணிமன்றுறு கதிதந்தருள் உடலஞ்

சலசந்திரன் எனநின்றவர் தழுவும்பத சரணம்

சரணம்பதி சரணம்சிவ சரணம்குரு சரணம்.

21

5177

எனதென்பதும் நினதென்பதும் இதுஎன்றுணர் தருணம்

இனம்ஒன்றது பிறிதன்றென இசைகின்றது பரமம்

தனதென்பது மனதென்பது ஜகமென்றனை சரணம்

சரணம்பதி சரணம்சிவ சரணம்குரு சரணம்.

22

திருச்சிற்றம்பலம்

Back

115. சிவபோகம்

சிந்து

5178.

போகம் சுகபோகம் சிவபோகம் அதுநித்தியம்

ஏகம் சிவம்ஏகம் சிவம்ஏகம் இதுசத்தியம்.

1

5179

நலமங்கலம் உறும்அம்பல நடனம்அது நடனம்

பலநன்கருள் சிவசங்கர படனம்அது படனம்.

2

5180

சூதுமன்னும் இந்தையே சூடல்என்ன விந்தையே

கோதுவிண்ட சிந்தையே கோயில்கொண்ட தந்தையே.

3

5181

அன்புமுந்து சிந்தையே அம்பலங்கொள் விந்தையே

இன்பமென்பன் எந்தையே எந்தைதந்தை தந்தையே.

4

5182

ஞானசித்தி புரத்தனே நாதசத்தி பரத்தனே

வானம்ஒத்த தரத்தனே வாதவித்தை வரத்தனே.

5

5183

நீஎன்னப்பன் அல்லவா நினக்கும்இன்னஞ் சொல்லவா

தாயின்மிக்க நல்லவா சர்வசித்தி வல்லவா.

6

5184

பலத்தில்தன்னம் பலத்தில்பொன்னம் பலத்தில்துன்னும்
நலத்தனே

பலத்தில்பன்னும் பரத்தில்துன்னும் பரத்தில்மன்னும் குலத்தனே.

7

5185

ஆயவாய நேயஞேய மாயஞாய வாதியே

தூயவாய காயதேய தோயமேய ஜோதியே.

8

5186

ஆதவாத வேதகீத வாதவாத வாதியே

சூதவாத பாதநாத சூதஜாத ஜோதியே.

9

5187

அங்கசங்க மங்கைபங்க ஆதிஆதி ஆதியே

துங்கபுங்க அங்கலிங்க ஜோதிஜோதி ஜோதியே.

10

5188

அத்தமுத்த அத்தமுத்த ஆதிஆதி ஆதியே

சுத்தசித்த சப்தநிர்த்த ஜோதிஜோதி ஜோதியே.

11

5189

அஞ்சல்அஞ்சல் என்றுவந்தென் நெஞ்சமர்ந்த குழகனே

வஞ்சநஞ்சம் உண்டகண்ட மன்றுள்நின்ற அழகனே.

12

5190

தொண்டர்கண்டு கண்டுமொண்டு கொண்டுள்உண்ட இன்பனே

அண்டர்அண்டம் உண்டவிண்டு தொண்டுமண்டும் அன்பனே.

13

5191

கந்ததொந்த பந்தசிந்து சிந்தவந்த காலமே

எந்தஎந்த சந்தமுந்து மந்தவந்த கோலமே.

14

5192

என்றும்என்றின் ஒன்றுமன்றுள் நன்றுநின்ற ஈசனே

ஒன்றும்ஒன்றும் ஒன்றும்ஒன்றும் ஒன்றதென்ற தேசனே.

15

5193

எட்டஎட்டி ஒட்டஒட்டும் இட்டதிட்ட கீர்த்தியே

அட்டவட்டம் நட்டமிட்ட சிட்டவட்ட மூர்த்தியே.

16

5194

சேர்இகார சாரவார சீர்அகார ஊரனே
ஓர்உகார தேரதீர வாரவார தூரனே.

17

5195

வெய்யநொய்ய நையநைய மெய்புகன்ற துய்யனே
ஐயர்ஐய நையும்வையம் உய்யநின்ற ஐயனே.

18

5196

பாசநாச பாபநாச பாததேச ஈசனே
வாசவாச தாசர்நேச வாசகாச பேசனே.

19

5197

உரியதுரிய பெரியவெளியில் ஒளியில்ஒளிசெய் நடனனே
பிரியஅரிய பிரியமுடைய பெரியர்இதய படனனே.

20

5198

அகிலபுவன உயிர்கள்தழைய அபயம்உதவும் அமலனே
அயனும்அரியும் அரனும்மகிழ அருளும்நடன விமலனே.

21

5199

அகரஉகர மகரவகர அமுதசிகர சரணமே

அபரசபர அமனசமன அமலநிமல சரணமே.

22

5200

தகரககன நடனகடன சகளவகள சரணமே

சகுணநிகுண சகமநிகம சகிதவிகித சரணமே.

23

5201

அனகவனஜ அமிதஅமிர்த அகலஅகில சரணமே

அதுலவனத அசுதவசல அநிலவனல சரணமே.

24

5202

தனககனக சபையஅபய சரதவரத சரணமே

சதுரசதர சகசசரித தருணசரண சரணமே.

25

5203

உளமும்உணர்வும் உயிரும்ஒளிர ஒளிரும்ஒருவ சரணமே

உருவின்உருவும் உருவுள்உருவும் உடையதலைவ சரணமே.

26

5204

இளகும்இதய கமலம்அதனை இறைகொள்இறைவ சரணமே

இருமைஒருமை நலமும்அருளும் இனியசமுக சரணமே.

27

5205

அடியும்நடுவும் முடியும்அறிய அரியபெரிய சரணமே

அடியர்இதய வெளியில்நடனம் அதுசெய்அதிப சரணமே.

28

5206

ஒழிவில்கருணை அமுதம்உதவும் உபலவடிவ சரணமே

உலகமுழுதும் உறையநிறையும் உபயசரண சரணமே.

29

5207

அறிவுள்அறியும் அறிவைஅறிய அருளும்நிமல சரணமே

அவசம்உறுமெய் யடியர்இதயம் அமரும்அமல சரணமே.

30

5208

எறிவில்உலகில்(377) உயிரைஉடலில் இணைசெய்இறைவ சரணமே

எனையும்ஒருவன் எனவுள்உணரும் எனதுதலைவ சரணமே.

31

(377). இருமைஉலகில் - முதற்பதிப்பு. பொ. சு. பதிப்பு.

5209

நினையும்நினைவு கனியஇனிய நிறைவுதருக சரணமே

நினையும்எனையும் ஒருமைபுரியும் நெறியில்நிறுவு சரணமே.

32

5210

வனையுமதுர அமுதஉணவு மலியஉதவு சரணமே

மருவுசபையில் நடனவரத வருகவருக சரணமே.

33

5211

நினைக்கில்நெஞ்சம் இனிக்கும்என்ற நிருத்தமன்றில் ஒருத்தனே

நினைக்கும்அன்பர் நிலைக்கநின்று பொருத்துகின்ற கருத்தனே.

34

5212

மயங்கிநெஞ்சு கலங்கிநின்று மலங்கினேனை ஆண்டவா

வயங்கிநின்று துலங்குமன்றில் இலங்குஞான தாண்டவா.

35

5213

களங்கவாத களங்கொள்சூதர் உளங்கொளாத பாதனே

களங்கிலாத உளங்கொள்வாருள் விளங்குஞான நாதனே.

36

5214

தடுத்தமலத்தைக் கெடுத்துநலத்தைக் கொடுத்தகருணைத் தந்தையே

தனித்தநிலத்தில் இனித்தகுலத்தில் குனித்தஅடிகொள் எந்தையே.

37

5215

எச்சநீட்டி விச்சைகாட்டி இச்சைஊட்டும் இன்பனே

அச்சம்ஓட்டி அச்சுநாட்டி வைச்சுள்ஆட்டும் அன்பனே.

38

5216

சபாசிவா மஹாசிவா சகாசிவா சிகாசிவா

சதாசிவா சதாசிவா சதாசிவா சதாசிவா.

39

5217

வாசிவா சதாசிவா மஹாசிவா தயாசிவா

வாசிவா சிவாசிவா சிவாசிவா சிவாசிவா.

40

திருச்சிற்றம்பலம்

Back

116. அம்பலத்தமுதே

கலிவிருத்தம்

5218.

நீடிய வேதம் தேடிய பாதம்

நேடிய கீதம் பாடிய பாதம்

ஆடிய போதம் கூடிய பாதம்

ஆடிய பாதம் ஆடிய பாதம்.

1

5219

சாக்கிய வேதம் தேக்கிய பாதம்

தாக்கிய ஏதம் போக்கிய பாதம்

சோக்கிய வாதம் ஆக்கிய பாதம்

தூக்கிய பாதம் தூக்கிய பாதம்.

2

5220

ஏன்றிய சூதம் தோன்றிய பாதம்

ஈன்றிய நாதம் ஆன்றிய பாதம்

ஓன்றிய பூதம் ஞான்றிய பாதம்

ஊன்றிய பாதம் ஊன்றிய பாதம்.

3

5221

சஞ்சிதம் வீடும் நெஞ்சித பாதம்

தஞ்சித மாகும் சஞ்சித பாதம்

கொஞ்சித மேவும் ரஞ்சித பாதம்

குஞ்சித பாதம் குஞ்சித பாதம்.

4

5222

எண்ணிய நானே திண்ணியன் ஆனேன்

எண்ணிய வாறே நண்ணிய பேறே

புண்ணியன் ஆனேன் அண்ணியன் ஆனேன்

புண்ணிய வானே புண்ணிய வானே.

5

5223

தொத்திய சீரே பொத்திய பேரே

துத்திய பாவே பத்திய நாவே

சத்தியம் நானே நித்தியன் ஆனேன்

சத்திய வானே சத்திய வானே.

6

5224

எம்புலப் பகையே எம்புலத் துறவே

எம்குலத் தவமே எம்குலச் சிவமே

அம்பினில் கனலே அந்தணர்க் கிறையே

அம்பலத் தரசே அம்பலத் தரசே.

7

5225

இன்புடைப் பொருளே இன்சுவைக் கனியே

எண்குணச் சுடரே இந்தகத் தொளியே

அன்புடைக் குருவே அம்புயற் கிறையே

அம்பலத் தமுதே அம்பலத் தமுதே.

1

திருச்சிற்றம்பலம்

Back

## 117. திருநட மணியே

தாழிசை

5226.

பசியாத அமுதே பகையாத பதியே

பகராத நிலையே பறையாத சுகமே

நசியாத பொருளே நலியாத உறவே

நடராஜ மணியே நடராஜ மணியே.

1

5227

புரையாத மணியே புகலாத நிலையே

புகையாத கனலே புதையாத பொருளே

நரையாத வரமே நழுயாத நடமே

நடராஜ நிதியே நடராஜ நிதியே.

2

5228

சிவஞான நிலையே சிவயோக நிறைவே

சிவபோக உருவே சிவமான உணர்வே

நவநீத மதியே நவநாத கதியே
நடராஜ பதியே நடராஜ பதியே.

3

5229

தவயோக பலமே சிவஞான நிலமே
தலையேறும் அணியே விலையேறு மணியே
நவவார நடமே சுவகார புடமே
நடராஜ பரமே நடராஜ பரமே.

4

5230

துதிவேத உறவே சுகபோத நறவே
துனிதீரும் இடமே தனிஞான நடமே
நதியார நிதியே அதிகார பதியே
நடராஜ குருவே நடராஜ குருவே.

5

5231

வயமான வரமே வியமான பரமே
மனமோன நிலையே கனஞான மலையே
நயமான உரையே நடுவான வரையே
நடராஜ துரையே நடராஜ துரையே.

6

5232

பதியுறு பொருளே பொருளுறு பயனே
பயனுறு நிறைவே நிறைவுறு வெளியே
மதியுறும் அமுதே அமுதுறு சுவையே
மறைமுடி மணியே மறைமுடி மணியே.

7

5233

அருளுறு வெளியே வெளியுறு பொருளே
அதுவுறு மதுவே மதுவுறு சுவையே
மருளறு தெருளே தெருளுறு மொளியே
மறைமுடி மணியே மறைமுடி மணியே.

8

5234

தருவளர் நிழலே நிழல்வளர் சுகமே
தடம்வளர் புனலே புனல்வளர் நலனே
திருவளர் உருவே உருவளர் உயிரே
திருநட மணியே திருநட மணியே.

9

5235

உயிருறும் உணர்வே உணர்வுறும் ஒளியே
ஒளியுறு வெளியே வெளியுறு வெளியே

செயிரறு பதியே சிவநிறை நிதியே
திருநட மணியே திருநட மணியே.

10

5236

கலைநிறை மதியே மதிநிறை அமுதே
கதிநிறை கதிரே கதிர்நிறை சுடரே
சிலைநிறை நிலையே நிலைநிறை சிவமே
திருநட மணியே திருநட மணியே.

11

5237

மிகவுயர் நெறியே நெறியுயர் விளைவே
விளைவுயர் சுகமே சுகமுயர் பதமே
திகழுயர் உயர்வே உயருயர் உயர்வே
திருநட மணியே திருநட மணியே.

12

5238

இயல்கிளர் மறையே மறைகிளர் இசையே
இசைகிளர் துதியே துதிகிளர் இறையே
செயல்கிளர் அடியே அடிகிளர் முடியே
திருநட மணியே திருநட மணியே.

13

5239

புரையறு புகழே புகழ்பெறு பொருளே

பொருளது முடிபே முடிவுறு புணர்வே

திரையறு கடலே கடலெழு சுதையே

திருநட மணியே திருநட மணியே.

14

5240

நிகழ்நவ நிலையே நிலையுயர் நிலையே

நிறையருள் நிதியே நிதிதரு பதியே

திகழ்சிவ பதமே சிவபத சுகமே

திருநட மணியே திருநட மணியே.

10

திருச்சிற்றம்பலம்

Back

118. ஞான சபாபதியே

தாழிசை

5241.

வேத சிகாமணியே போத சுகோதயமே

மேதகு மாபொருளே ஓதரும் ஓர்நிலையே

நாத பராபரமே சூத பராவமுதே

ஞான சபாபதியே ஞான சபாபதியே.

1

5242

ஏக சதாசிவமே யோக சுகாகரமே

ஏம பராநலமே காம விமோசனமே

நாக விகாசனமே நாத சுகோடணமே

ஞான சபாபதியே ஞான சபாபதியே.

2

5243

தூய சதாகதியே நேய சதாசிவமே

சோம சிகாமணியே வாம உமாபதியே

ஞாய பராகரமே காய புராதரமே

ஞான சபாபதியே ஞான சபாபதியே.

3

5244

ஆரண ஞாபகமே பூரண சோபனமே

ஆதிஅ னாதியனே வேதிய னாதியனே

நாரண னாதரமே காரண மேபரமே

ஞான சபாபதியே ஞான சபாபதியே.

4

5245

ஆகம போதகமே யாதர வேதகமே

ஆமய மோசனமே ஆரமு தாகரமே
நாக நடோ தயமே நாத புரோதயமே
ஞான சபாபதியே ஞான சபாபதியே.

5

5246

ஆடக நீடொளியே நேடக நாடளியே
ஆதி புராதனனே வேதி பராபரனே
நாடக நாயகனே நானவ ணானவனே
ஞான சபாபதியே ஞான சபாபதியே.

6

5247

ஆரிய னேசிவனே ஆரண னேபவனே
ஆலய னேஅரனே ஆதர னேசுரனே
நாரிய னேவரனே நாடிய னேபரனே
ஞான சபாபதியே ஞான சபாபதியே.

7

5248

ஆதர வேதியனே ஆடக ஜோதியனே
ஆரணி பாதியனே ஆதர வாதியனே
நாத விபூதியனே நாம வணாதியனே
ஞான சபாபதியே ஞான சபாபதியே.

8

5249

தேவ கலாநிதியே ஜீவ தயாநிதியே

தீன சகாநிதியே சேகர மாநிதியே

நாவல ரோர்பதியே நாரி உமாபதியே

ஞான சபாபதியே ஞான சபாபதியே.

9

5250

ஆடிய நாடகனே ஆலமர் ஆதியனே

ஆகம மேலவனே ஆரண நாலவனே

நாடிய காரணனே நீடிய பூரணனே

ஞான சபாபதியே ஞான சபாபதியே.

10

திருச்சிற்றம்பலம்

Back

119. விரைசேர் சடையாய்

சிந்து

5251.

விரைசேர் சடையாய் விடையாய் உடையாய்

விகிர்தா விபவா விமலா அமலா

வெஞ்சேர்(378) பஞ்சார் நஞ்சார் கண்டா விம்பசி தம்பர னே.

1

(378). வெஞ்சோ - ஆ. பா. பதிப்பு.

5252

அரைசே குருவே அமுதே சிவமே

அணியே மணியே அருளே பொருளே

அந்தோ வந்தாள் எந்தாய் எந்தாய் அம்பல நம்பதி யே.

2

5253

உருவே உயிரே உணர்வே உறவே

உரையே பொருளே ஒளியே வெளியே

ஒன்றே என்றே நன்றே தந்தாய் அம்பர(379) நம்பர னே.

3

(379). உம்பரி னம்பரனே - ஆ. பா. பதிப்பு.

5254

அருவே திருவே அறிவே செறிவே

அதுவே இதுவே அடியே முடியே

அந்தோ வந்தாள் எந்தாய் எந்தாய் அம்பல நம்பதி யே.

4

திருச்சிற்றம்பலம்

Back

120. ஜோதி ஜோதி

சிந்து

5255.

ஜோதி ஜோதி ஜோதி சுயஞ்

ஜோதி ஜோதி ஜோதி பரஞ்

ஜோதி ஜோதி ஜோதி யருட்

ஜோதி ஜோதி ஜோதி சிவம்.

1

5256

வாமஜோதி சோமஜோதி வானஜோதி ஞானஜோதி

மாகஜோதி யோகஜோதி வாதஜோதி நாதஜோதி

ஏமஜோதி வியோமஜோதி ஏறுஜோதி வீறுஜோதி

ஏகஜோதி ஏகஜோதி ஏகஜோதி ஏகஜோதி.

2

5257

ஆதிநீதி வேதனே ஆடல்நீடு பாதனே

வாதிஞான போதனே வாழ்கவாழ்க நாதனே.

3

திருச்சிற்றம்பலம்

Back

121. கண்புருவப் பூட்டு

தாழிசை

5258.

கையறவி லாதுநடுக் கண்புருவப் பூட்டு

கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு

ஐயர்மிக உய்யும்வகை அப்பர்விளை யாட்டு

ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு.

1

5259

சிற்சபையும் பொற்சபையும் சொந்தமென தாச்சு

தேவர்களும் மூவர்களும் பேசுவதென் பேச்சு

இற்சமய வாழ்வில்எனக் கென்னைஇனி ஏச்சு

என்பிறப்புத் துன்பமெலாம் இன்றோடே போச்சு.

2

5260

ஐயர்அருட் சோதியர சாட்சிஎன தாச்சு

ஆரணமும் ஆகமமும் பேசுவதென் பேச்சு

எய்யுலக வாழ்வில்எனக் கென்னைஇனி ஏச்சு

என்பிறவித் துன்பமெலாம் இன்றோடே போச்சு.

3

5261

ஈசன்அரு ளால்கடலில் ஏற்றதொரு ஓடம்

ஏறிக்கரை ஏறினேன் இருந்ததொரு மாடம்

தேசுறும்அம் மாடநடுத் தெய்வமணி பீடம்

தீபஒளி கண்டவுடன் சேர்ந்ததுசந் தோடம்.

4

5262

மேருமலை உச்சியில்வி ளங்குகம்ப நீட்சி

மேவும்அதன் மேல்உலகில் வீறுமர சாட்சி

சேரும்அதில் கண்டபல காட்சிகள்கண் காட்சி

செப்பல்அரி தாம்இதற்கென் அப்பன்அருள் சாட்சி.

5

5263

துரியமலைமேல்உளதோர் சோதிவள நாடு

தோன்றும்அதில் ஐயர்நடம் செய்யுமணி வீடு

தெரியும்அது கண்டவர்கள் காணில்உயி ரோடு

செத்தவர் எழுவார்என்று கைத்தாளம் போடு.

6

5264

சொல்லால் அளப்பரிய சோதிவரை மீது

தூயதுரி யப்பதியில் நேயமறை ஓது

எல்லாம்செய் வல்லசித்தர் தம்மைஉறும் போது

இறந்தார்எழுவாரென்றுபுறந்தாரைஊது.

7

5265

சிற்பொதுவும் பொற்பொதுவும் நான்அறிய லாச்சு

சித்தர்களும் முத்தர்களும் பேசுவதென் பேச்சு

இற்பகரும்(388) இவ்வுலகில் என்னைஇனி ஏச்சு

என்பிறவித் துன்பமெலாம் இன்றோடே போச்சு.

8

(388). இப்பெரிய விவ்வுலகில் - முதற்பதிப்பு., ச. மு. க. பதிப்பு.

5266

வலதுசொன்ன பேர்களுக்கு வந்ததுவாய்த் தாழ்வு

மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்ததலைத் தாழ்வு

வலதுபுஜம் ஆடநம்பால் வந்ததருள் வாழ்வு

மற்றுநமைச் சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல் வாழ்வு.

9

5267

அம்பலத்தில் எங்கள்ஐயர் ஆடியநல் லாட்டம்

அன்பொடுது தித்தவருக் கானதுசொல் லாட்டம்

வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்

வந்ததலை யாட்டமின்றி வந்ததுபல் லாட்டம்.

10

5268

நாத்திகம்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு
நாக்குருசி கொள்ளுவதும் நாறியபிண் ணாக்கு
சீர்த்திபெறும் அம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர்திரு வாக்கு.

11

Back

122. ஊதூது சங்கே

தாழிசை

5269.

கைவிட மாட்டான்என்று ஊதூது சங்கே
கனக சபையான்என்று ஊதூது சங்கே
பொய்விடச் செய்தான்என்று ஊதூது சங்கே
பூசைப லித்ததென்று ஊதூது சங்கே.

1

5270

தூக்கம் தொலைத்தான்என்று ஊதூது சங்கே
துன்பம் தவிர்த்தான்என்று ஊதூது சங்கே
ஏக்கம் கெடுத்தான்என்று ஊதூது சங்கே
ஏம சபையான்என்று ஊதூது சங்கே.

2

5271

பொன்னடி தந்தான்என்று ஊதூது சங்கே

பொன்னம் பலத்தான்என்று ஊதூது சங்கே

இன்னல் அறுத்தான்என்று ஊதூது சங்கே

என்னுள் அமர்ந்தான்என்று ஊதூது சங்கே.

3

5272

அச்சம் தவிர்த்தான்என்று ஊதூது சங்கே

அம்பல வாணன்என்று ஊதூது சங்கே

இச்சை அளித்தான்என்று ஊதூது சங்கே

இன்பம் கொடுத்தான்என்று ஊதூது சங்கே.

4

5273

என்உயிர் காத்தான்என்று ஊதூது சங்கே

இன்பம் பலித்ததென்று ஊதூது சங்கே

பொன்உருத் தந்தான்என்று ஊதூது சங்கே

பொற்சபை அப்பன்என்று ஊதூது சங்கே.

5

5274

சிவமாக்கிக்கொண்டான்என்று ஊதூது சங்கே

சிற்றம் பலத்தான்என்று ஊதூது சங்கே

நவநோக் களித்தான் என்று ஊதூது சங்கே

நான்அவன் ஆனேன்என்று ஊதூது சங்கே.

6

5275

நாத முடியான்என்று ஊதூது சங்கே

ஞானசபையான்என்று ஊதூது சங்கே

பாத மளித்தான்என்று ஊதூது சங்கே

பலித்தது பூசைஎன்று ஊதூது சங்கே.

7

5276

தெள்ளமு தானான்என்று ஊதூது சங்கே

சிற்சபை அப்பன்என்று ஊதூது சங்கே

உள்ளம் உவந்தான்என்று ஊதூது சங்கே

உள்ள துரைத்தான்என்று ஊதூது சங்கே.

8

5277

என்னறி வானான்என்று ஊதூது சங்கே

எல்லாம்செய் வல்லான்என்று ஊதூது சங்கே

செந்நிலை தந்தான்என்று ஊதூது சங்கே

சிற்சபை அப்பன்என்று ஊதூது சங்கே.

9

5278

இறவாமை ஈந்தான்என்று ஊதூது சங்கே

எண்ணம் பலித்ததென்று ஊதூது சங்கே

திறமே அளித்தான்என்று ஊதூது சங்கே

சிற்றம் பலத்தான்என்று ஊதூது சங்கே.

10

5279

கரவு தவிர்ந்ததென்று ஊதூது சங்கே

கருணை கிடைத்ததென்று ஊதூது சங்கே

இரவு விடிந்ததென்று ஊதூது சங்கே

எண்ணம் பலித்ததென்று ஊதூது சங்கே.

11

5280

எல்லாம்செய் வல்லான்என்று ஊதூது சங்கே

எல்லார்க்கும் நல்லான்என்று ஊதூது சங்கே

எல்லாம் உடையான்என்று ஊதூது சங்கே

எல்லாமும் ஆனான்என்று ஊதூது சங்கே.

12

5281

கருணா நிதியர்என்று ஊதூது சங்கே

கடவுள் அவனேஎன்று ஊதூது சங்கே

அருள்நா டகத்தான்என்று ஊதூது சங்கே

அம்பலச் சோதிஎன்று ஊதூது சங்கே.

13

5282

தன்னிகர் இல்லான்என்று ஊதூது சங்கே

தலைவன் அவனேஎன்று ஊதூது சங்கே

பொன்னியல் வண்ணன்என்று ஊதூது சங்கே

பொதுநடம் செய்வான்என்று ஊதூது சங்கே.

14

5283

ஆனந்த நாதன்என்று ஊதூது சங்கே

அருளுடை அப்பன்என்று ஊதூது சங்கே

தானந்தம் இல்லான்என்று ஊதூது சங்கே

தத்துவச் சோதிஎன்று ஊதூது சங்கே.

15

5284

பொய்விட் டகன்றேன்என்று ஊதூது சங்கே

புண்ணியன் ஆனேன்என்று ஊதூது சங்கே

மெய்தொட்டு நின்றேன்என்று ஊதூது சங்கே

மேல்வெளி கண்டேன்என்று ஊதூது சங்கே.

16

திருச்சிற்றம்பலம்

Back

123. சின்னம் பிடி

தாழிசை

5285.

அம்பலவர் வந்தார்என்று சின்னம் பிடி

அற்புதம்செய் கின்றார்என்று சின்னம் பிடி

செம்பலன் அளித்தார்என்று சின்னம் பிடி

சித்திநிலை பெற்றதென்று சின்னம் பிடி.

1

5286

சிற்சபையைக் கண்டோ ம்என்று சின்னம் பிடி

சித்திகள்செய் கின்றோம்என்று சின்னம் பிடி

பொற்சபை புகுந்தோம்என்று சின்னம் பிடி

புந்திமகிழ் கின்றோம்என்று சின்னம் பிடி.

2

5287

ஞானசித்திபுரம்என்று சின்னம் பிடி

நாடகம்செய் இடம்என்று சின்னம் பிடி

ஆனசித்தி செய்வோம்என்று சின்னம் பிடி

அருட்சோதி பெற்றோம்என்று சின்னம் பிடி.

3

5288

கொடிகட்டிக்கொண்டோ ம்என்று சின்னம் பிடி

கூத்தாடு கின்றோம்என்று சின்னம் பிடி

அடிமுடியைக் கண்டோ ம்என்று சின்னம் பிடி

அருளமுதம் உண்டோ ம்என்று சின்னம் பிடி.

4

5289

அப்பர்வரு கின்றார்என்று சின்னம் பிடி

அற்புதம்செய் வதற்கென்று சின்னம் பிடி

செப்பநிலை பெற்றதென்று சின்னம் பிடி

சித்திபுரம்இடமென்று சின்னம் பிடி.

5

5290

தானேநான் ஆனேன்என்று சின்னம் பிடி

சத்தியம்சத் தியம்என்று சின்னம் பிடி

ஊனே புகுந்ததென்று சின்னம் பிடி

ஒளிவண்ணம் ஆனதென்று சின்னம் பிடி.

6

5291

வேகாதகால்உணர்ந்து சின்னம் பிடி

வேகாத நடுத்தெரிந்து சின்னம் பிடி

சாகாததலைஅறிந்து சின்னம் பிடி
சாகாத கல்விகற்றுச் சின்னம் பிடி.

7

5292

மீதான நிலைஏறிச் சின்னம் பிடி
வெட்டவெளி நடுநின்று சின்னம் பிடி
வேதாக மம்கடந்து சின்னம் பிடி
வேதாந்தச் சித்தாந்த சின்னம் பிடி.

8

5293

பன்மார்க்க மும்கடந்து சின்னம் பிடி
பன்னிரண்டின் மீதுநின்று சின்னம் பிடி
சன்மார்க்கம் மார்க்கம்என்று சின்னம் பிடி
சத்தியம்செய் கின்றோம்என்று சின்னம் பிடி.

9

5294

சித்தாடு கின்றார்என்று சின்னம் பிடி
செத்தார் எழுவார்என்று சின்னம் பிடி
இத்தா ரணியில்என்று சின்னம் பிடி
இதுவே தருணம்என்று சின்னம் பிடி.

10

திருச்சிற்றம்பலம்

Back

## 124. முரசறைதல்

தாழிசை

5295.

அருட்சோதி ஆனேன்என்று அறையப்பா முரசு

அருளாட்சி பெற்றேன்என்று அறையப்பா முரசு

மருட்சார்பு தீர்ந்தேன்என்று அறையப்பா முரசு

மரணந்த விர்ந்தேன்என்று அறையப்பா முரசு.

1

திருச்சிற்றம்பலம்

Back

## 125. தனித் திருஅலங்கல் (381)

(381) இத்தலைப்பின் கீழ்த் தொகுக்கப்பெற்றுள்ள 161 பாக்களும் தனிப்பாடல்கள். ஆறாந்

திருமுறைக் காலத்தில் பல சமயங் களிற் பாடப் பெற்றவை. முன் பதிப்புகளில் இவை தனிப் பாடல்கள்

என்ற தலைப்பில் ஆறாந் திருமுறையின் பிற்பகுதியில் உள்ளன. ஆ. பா. இவற்றைத்

தனித்திருஅலங்கல்,< ா சூா சூ ா ந , ா சூா ூ ந ற

கூறாக்கி முறையே ஆறாந்திருமுறை முன், இடை, முடிந்த பகுதிகளின் ஈற்றில் வைத்துள்ளார்.

இப்பதிப்பில் இவை ஒருவாறு பொருள் வரிசையில் முன் பின்னாக அமைக்கப் பெற்று

இவண் வைக்கப்பட்டுள்ளன.

ஆன்மநேய ஒருமைப்பாடு (382)

(382). இஃதும் இதுபோன்று பின்வரும் சிறுதலைப்புகளும் யாம் இட்டவை.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

5296.

எவ்வுயிரும் பொதுஎனக்கண் டிரங்கிஉப

கரிக்கின்றார் யாவர் அந்தச்

செவ்வியர்தம் செயல்அனைத்தும் திருவருளின்

செயல்எனவே தெரிந்தேன் இங்கே

கவ்வைஇலாத் திருநெறிஅத் திருவாளர்

தமக்கேவல் களிப்பால் செய்ய

ஒவ்வியதென் கருத்தவர்சீர் ஓதிடஎன்

வாய்மிகவும் ஊர்வ தாலோ.

1

5297

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்

தம்உயிர்போல் எண்ணி உள்ளே

ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்

யாவர்அவர் உளந்தான் சுத்த

சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்

இடம்எனநான் தெரிந்தேன் அந்த

வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்

சிந்தைமிக விழைந்த தாலோ.

2

5298

கருணைஒன்றே வடிவாகி எவ்வுயிரும்

தம்உயிர்போல் கண்டு ஞானத்

தெருள்நெறியில் சுத்தசிவ சன்மார்க்கப்

பெருநீதி செலுத்தா நின்ற

பொருள்நெறிசற் குணசாந்தப் புண்ணியர்தம்

திருவாயால் புகன்ற வார்த்தை

அருள்நெறிவே தாகமத்தின் அடிமுடிசொல்

வார்த்தைகள்என் றறைவ ராலோ.

1

சாலையப்பனை வேண்டல்

கொச்சகக் கலிப்பா

5299

மன்னப்பா மன்றிடத்தே மாநடஞ்செய் அப்பாஎன்
தன்னப்பா சண்முகங்கொள் சாமியப்பா எவ்வுயிர்க்கும்
முன்னப்பா பின்னப்பா மூர்த்தியப்பா மூவாத
பொன்னப்பா ஞானப் பொருளப்பா தந்தருளே.

1

கட்டளைக் கலித்துறை

5300

ஆதிஅப் பாநம் அனாதியப் பாநங்கள் அம்மைஒரு
பாதிஅப் பாநிரு பாதிஅப் பாசிவ பத்தர்அனு
பூதிஅப் பாநல் விபூதிஅப் பாபொற் பொதுநடஞ்செய்
சோதிஅப் பாசுயஞ் சோதிஅப் பாஎனைச் சூழ்ந்தருளே.

5

5301

அண்டஅப் பாபகிர் அண்டஅப் பாநஞ் சணிந்தமணி
கண்டஅப் பாமுற்றும் கண்டஅப் பாசிவ காமிஎனும்
ஒண்தவப் பாவையைக் கொண்டஅப் பாசடை ஓங்குபிறைத்
துண்டஅப் பாமறை விண்டஅப் பாஎனைச் சூழ்ந்தருளே.

6

5302

வேலைஅப் பாபடை வேலைஅப் பாபவ வெய்யிலுக்கோர்
சோலைஅப் பாபரஞ் சோதிஅப் பாசடைத் துன்றுகொன்றை

மாலைஅப் பாநற் சமரச வேதசன் மார்க்கசங்கச்
சாலைஅப் பாஎனைத் தந்தஅப் பாவந்து தாங்கிக்கொள்ளே.

7

5303

மெச்சிஅப் பாவலர் போற்றப் பொதுவில் விளங்கியஎன்
உச்சிஅப் பாஎன் னுடையஅப் பாஎன்னை உற்றுப்பெற்ற
அச்சிஅப் பாமுக்கண் அப்பாஎன் ஆருயிர்க் கானஅப்பா
கச்சிஅப் பாதங்கக் கட்டிஅப் பாஎன்னைக் கண்டுகொள்ளே.

8

5304

எக்கரை யும்மின்றி ஓங்கும் அருட்கடல் என்றுரைக்கோ
செக்கரை வென்றபொன் என்கோ படிகத் திரளதென்கோ
திக்கரை அம்பரன் என்கோஎன் உள்ளத்தில் தித்திக்கின்ற
சக்கரைக் கட்டிஎன் கோநினைத் தான்மன்றில் தாண்டவனே.

9

5305

ஒட்டிஎன் கோதறுத் தாட்கொண் டனைநினை ஓங்கறிவாம்
திட்டிஎன் கோஉயர் சிற்றம் பலந்தனில் சேர்க்கும்நல்ல
வெட்டிஎன் கோஅருட் பெட்டியில் ஓங்கி விளங்குந்தங்கக்
கட்டிஎன் கோபொற் பொதுநடஞ் செய்யுமுக் கண்ணவனே.

1

மாயை நீக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5396

அருட்பெருங் கடலே என்னை ஆண்டசற் குருவே ஞானப்

பொருட்பெருஞ் சபையில் ஆடும் பூரண வாழ்வே நாயேன்

மருட்பெரு மாயை முற்றும் மடிந்தன வினைக ளோடே

இருட்பெருந் தடையை நீக்கி இரவியும் எழுந்த தன்றே.

11

5397

மாணவ நிலைக்கு மேலே வயங்கிய ஒளியே மன்றில்

தாணவ நடஞ்செய் கின்ற தனிப்பெருந் தலைவ னேஎன்

கோணவ மாயை எல்லாம் குலைந்தன வினைக ளோடே

ஆணவ இருளை நீக்கி அலரியும் எழுந்த தன்றே.

12

5398

தற்பரம் பொருளே வேதத் தலைநின்ற ஒளியே மோனச்

சிற்பர சுகமே மன்றில் திருநடம் புரியுந் தேவே

வற்புறு மாயை எல்லாம் மடிந்தன வினைக ளோடே

இற்படும் இருளை நீக்கி இரவியும் எழுந்த தன்றே.

13

சிதம்பரேசன் அருள்

கலி விருத்தம்

5309

சிற்றறி வுடையநான் செய்த தீமைகள்
முற்றவும் பொறுத்தருள் முனிந்திடேல் இன்றே
தெற்றென அருட்பெருஞ் சோதிச் செல்வமும்
மற்றவும் வழங்குக வரதனே என்றேன்.

14

5310

என்றசொல் செவிமடுத் திறையும் அஞ்சிடேல்
இன்றுனக் கருட்பெருஞ் சோதி ஈந்தனம்
நன்றுற மகிழ்களந் நாளுஞ் சாவுறா
வென்றியும் அளித்தனம் என்று மேவினான்.

15

5311

மேவிஎன் உள்ளகத் திருந்து மேலும்என்
ஆவியிற் கலந்திவன் அவன்என் றோதும்ஓர்
பூவியற் பேதமும் போக்கி ஒன்றதாய்த்
தேவியற் புரிந்தனன் சிதம்ப ரேசனே.

16

போற்றிச் சந்த விருத்தம்

சந்த விருத்தம்

5312

போற்றி நின்அருள் போற்றி நின்பொது
போற்றி நின்புகழ் போற்றி நின்உரு
போற்றி நின்இயல் போற்றி நின்நிலை
போற்றி நின்நெறி போற்றி நின்சுகம்
போற்றி நின்உளம் போற்றி நின்மொழி
போற்றி நின்செயல் போற்றி நின்குணம்
போற்றி நின்முடி போற்றி நின்நடு
போற்றி நின்அடி போற்றி போற்றியே.

17

5313

போற்றி நின்இடம் போற்றி நின்வலம்
போற்றி நின்நடம் போற்றி நின்நலம்
போற்றி நின்திறம் போற்றி நின்தரம்
போற்றி நின்வரம் போற்றி நின்கதி
போற்றி நின்கலை போற்றி நின்பொருள்
போற்றி நின்ஒளி போற்றி நின்வெளி
போற்றி நின்தயை போற்றி நின்கொடை
போற்றி நின்பதம் போற்றி போற்றியே.

18

5314

போற்று கின்றஎன் புன்மை யாவையும்

பொறுத்த நின்பெரும் பொறுமை போற்றிஎன்

ஆற்று வேன்உனக் கறிகி லேன்எனக்

கறிவு தந்தபே ரறிவ போற்றிவான்

காற்று நீடழல் ஆதி ஐந்துநான்

காணக் காட்டிய கருத்த போற்றிவன்

கூற்று தைத்துநீத் தழிவி லாஉருக்

கொள்ள வைத்தநின் கொள்கை போற்றியே.

19

பாடமும் படிப்பும்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5315

அம்பலம் சேர்ந்தேன் எம்பலம் ஆர்ந்தேன்

அப்பனைக் கண்டேன் செப்பமுட் கொண்டேன்

உம்பர் வியப்ப இம்பர் இருந்தேன்

ஓதா துணர்ந்தேன் மீதானம் உற்றேன்

நம்பிடில் அணைக்கும் எம்பெரு மானை

நாயகன் தன்னைத் தாயவன் தன்னைப்

பம்புறப் பாடிப் படிக்கின்றேன் மேலும்

படிப்பேன் எனக்குப் படிப்பித்த வாறே.

20

5316

கள்ளத்தை அற்ற உள்ளத்தைப் பெற்றேன்

கன்றிக் கனிந்தே மன்றில் புகுந்தேன்

தெள்ளத் தெளிந்த வெள்ளத்தை உண்டேன்

செய்வகை கற்றேன் உய்வகை உற்றேன்

அள்ளக் குறையா வள்ளற் பொருளை

அம்பலச் சோதியை எம்பெரு வாழ்வை

பள்ளிக்குட் பாடிப் படிக்கின்றேன் மேலும்

படிப்பேன் எனக்குப் படிப்பித்த வாறே.

21

5317

காட்டைக் கடந்தேன் நாட்டை அடைந்தேன்

கவலை தவிர்ந்தேன் உவகை மிகுந்தேன்

வீட்டைப் புகுந்தேன் தேட்டமு துண்டேன்

வேதாக மத்தின் விளைவெலாம் பெற்றேன்

ஆட்டைப் புரிந்தே அம்பலத் தோங்கும்

ஐயர் திருவடிக் கானந்த மாகப்

பாட்டைப் படித்தேன் படிக்கின்றேன் மேலும்

படிப்பேன் எனக்குப் படிப்பித்த வாறே.

22

பாட்டும் திருத்தமும்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5318

தேன்பாடல் அன்புடையார் செயப்பொதுவில் நடிக்கின்ற சிவமே ஞானக்

கான்பாடிச் சிவகாம வல்லிமகிழ் கின்றதிருக் கணவா நல்ல

வான்பாட மறைபாட என்னுளத்தே வயங்குகின்ற மன்னா நின்னை

யான்பாட நீதிருத்த என்னதவஞ் செய்தேனோ எந்தாய் எந்தாய்.

23

5319

ஆன்பாலும் நறுந்தேனும் சர்க்கரையும் கூட்டியதெள் ளமுதே என்றன்

ஊன்பாலும் உளப்பாலும் உயிர்ப்பாலும் ஒளிர்கின்ற ஒளியே வேதம்

பூம்பாடல் புனைந்தேத்த என்னுளத்தே ஆடுகின்ற பொன்னே நின்னை

யான்பாட நீதிருத்த என்னதவஞ் செய்தேனோ எந்தாய் எந்தாய்.

24

அம்பலத்தரசே அபயம்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5320

பொருட்பெருந் தனிமெய்ப் போகமே என்னைப்

புறத்தினும் அகத்தினும் புணர்ந்த

தெருட்பெருஞ் சிவமே சுத்தசன் மார்க்கச்

செல்வமே நான்பெற்ற சிறப்பே

மருட்பெருங் கடலைக் கடத்திஎன் தன்னை

வாழ்வித்த என்பெரு வாழ்வே

அருட்பெருஞ் சோதி அம்பலத் தரசே

அம்மையே அப்பனே அபயம்.

25

5321

பொருட்பெரு மறைகள் அனந்தம்ஆ கமங்கள்

புகலும்ஓர் அனந்தம்மேற் போந்த

தெருட்பெரு வெளிமட் டளவிலாக் காலம்

தேடியும் காண்கிலாச் சிவமே

மருட்பெரும் பகைதீர்த் தென்னைஆட் கொண்ட

வள்ளலே தெள்ளிய அமுதே

அருட்பெருஞ் சோதி அம்பலத் தரசே

அம்மையே அப்பனே அபயம்.

26

5322

பொருட்பெருஞ் சுடர்செய் கலாந்தயோ காந்தம்

புகன்றபோ தாந்த நாதாந்தம்

தெருட்பெரு வேதாந் தம்திகழ் சித்தாந்
தத்தினும் தித்திக்கும் தேனே
மருட்பெரு இருளைத் தீர்த்தெனை வளர்க்கும்
மாபெருங் கருணையா ரமுதே
அருட்பெருஞ் சோதி அம்பலத் தரசே
அம்மையே அப்பனே அபயம்.

27

அருட்பெருஞ்சோதி அபயம்

நேரிசை வெண்பா

5323

அருட்பெருஞ் சோதி அபயம் அபயம்
அருட்பெருஞ் சோதி அபயம் - அருட்பெருஞ்
சோதி அபயம்சிற் சோதி அபயம்பொற்
சோதி அபயம் துணை.

28

5324

துணைவா அபயம் துயர்அகல என்பால்
அணைவா அபயம் அபயம் - பணைவாய்
வடலா அபயம் வரதா அபயம்
நடநாய காஅபயம் நான்.

29

5325

நானாகித் தானாய் நடித்தருள்கின் றாய்அபயம்
தேனாய் இனிக்கும் சிவஅபயம் - வானாடு
மெய்யா அபயம் விமலா அபயமென்றன்
ஐயா அபயமப யம்.

30

5326

அபயம் பதியே அபயம் பரமே
அபயம் சிவமே அபயம் - உபய
பதத்திற் கபயம் பரிந்தென்உளத் தேநல்
விதத்தில் கருணை விளை.

31

5327

கருணா நிதியே அபயம் கனிந்த
அருணா டகனே அபயம் - மருணாடும்
உள்ளக் கவலை ஒழிப்பாய்என் வன்மனத்துப்
பொள்ளற் பிழைகள் பொறுத்து.

32

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5328

இணக்கறியீர் இதம்அறியீர் இருந்தநிலை அறியீர்

இடம்அறியீர் தடம்அறியீர் இவ்வுடம்பை எடுத்த
கணக்கறியீர் வழக்கறியீர் அம்பலத்தே மாயைக்
கலக்கம்அற நடிக்கின்ற துலக்கம்அறி வீரோ
பிணக்கறிவீர் புரட்டறிவீர்(383) பிழைசெயவே அறிவீர்
பேருணவைப் பெருவயிற்றுப் பிலத்தில்இட அறிவீர்
மணக்கறியே பிணக்கறியே வறுப்பேபேர்ப் பொரிப்பே
வடைக்குழம்பே சாறேஎன் றடைக்க அறிவீரே.

33

(383). பிரட்டறிவீர் - பொ. சு. பதிப்பு.

5329

உழக்கறியீர் அளப்பதற்கோர் உளவறியீர் உலகீர்
ஊர்அறியீர் பேர்அறியீர் உண்மைஒன்றும் அறியீர்
கிழக்கறியீர் மேற்கறியீர் அம்பலத்தே மாயைக்
கேதம்அற நடிக்கின்ற பாதம்அறி வீரோ
வழக்கறிவீர் சண்டையிட்டே வம்பளக்க அறிவீர்
வடிக்கும்முன்னே சோறெடுத்து வயிற்றடைக்க அறிவீர்
குழக்கறியே(384) பழக்கறியே கூட்டுவர்க்கக் கறியே
குழம்பேசா றேஎனவும் கூறஅறி வீரே.

34

(384). குழைக்கறியே - முதற்பதிப்பு., பொ. சு., பி. இரா., ச. மு. க.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5330

உணிக்கும் மூட்டுக்கும் கொதுகுக்கும்
பேனுக்கும் உவப்புறப் பசிக்கின்றீர்
துணிக்கும் காசுக்கும் சோற்றுக்கும்
ஊர்தொறும் சுற்றிப்போய் அலைகின்றீர்
பிணிக்கும் பீடைக்கும் உடலுளம்
கொடுக்கின்றீர் பேதையீர் நல்லோர்கள்
பணிக்கும் வேலைசெய் துண்டுடுத்
தம்பலம் பரவுதற் கிசையீரே.

35

5331

மழவுக்கும் ஒருபிடிசோ றளிப்பதன்றி
இருபிடிஊண் வழங்கில் இங்கே
உழவுக்கு முதல்குறையும் எனவளர்த்தங்
கவற்றைஎலாம் ஓகோ பேயின்
விழவுக்கும் புலால்உண்ணும் விருந்துக்கும்
மருந்துக்கும் மெலிந்து மாண்டார்
இழவுக்கும் இடர்க்கொடுங்கோல் இறைவரிக்கும்
கொடுத்திழப்பர் என்னே என்னே.

36

5332

கடுகாட்டுக் கறிக்கிடுக தாளிக்க

எனக்கழறிக் களிக்கா நின்ற

சுடுகாட்டுப் பிணங்காள்இச் சுகமனைத்தும்

கணச்சுகமே சொல்லக் கேண்மின்

முடுகாட்டுக் கூற்றுவரும் சாவீரால்

சாவதற்கு முன்னே நீவீர்

இடுகாட்டுப்பிணங்கண்டால் ஏத்துமினோ

எமையும்இவ்வா றிடுகஎன்றே.

37

5333

மதிப்பாலை அருட்பாலை ஆனந்தப்

பாலைஉண்ண மறந்தார் சில்லோர்

விதிப்பாலை அறியேம்தாய்ப் பாலைஉண்டு

கிடந்தழுது விளைவிற் கேற்பக்

கொதிப்பாலை உணர்வழிக்கும் குடிப்பாலை

மடிப்பாலைக் குடிப்பார்அந்தோ

துதிப்பாலை அருள்தருநம் தேவசிகா

மணித்தேவைத் துதியார் அன்றே.

38

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5334

சிரிப்பிலே பொழுது கழிக்கும்இவ் வாழ்க்கைச்

சிறியவர் சிந்தைமாத் திரமோ

பொருப்பிலே தவஞ்செய் பெரியர்தம் மனமும்

புளிப்பிலே துவர்ப்பிலே உவர்ப்புக்

கரிப்பிலே கொடிய கயப்பிலே கடிய

கார்ப்பிலே கார்ப்பொடு கலந்த

எரிப்பிலே புகுவ தன்றிஎள் அளவும்

இனிப்பிலே புகுகின்ற திலையே.

39

கலிநிலைத்துறை

5335

பூவார் கொன்றைச் செஞ்சடை யாளர் புகழாளர்

ஈவார் போல்வந் தென்மனை புக்கார் எழில்காட்டி

தேவார் தில்லைச் சிற்சபை மேவும் திருவாளர்

ஆவா என்றார் என்னடி அம்மா அவர்சூதே.

40

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5336

நல்வினை சிறிதும் நயந்திலேன் என்பாள்

நான்செயத் தக்கதே தென்பாள்

செல்வினை ஒன்றுந் தெரிந்திலன் ஐயோ

தெய்வமே தெய்வமே என்பாள்

வெல்வினை மன்றில் நடம்புரி கின்றார்

விருப்பிலர் என்மிசை என்பாள்

வல்வினை உடையேன் என்றுளம் பதைப்பாள்

வருந்துவாள் நான்பெற்ற மகளே.

41

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5337

நாதரருட் பெருஞ்சோதி நாயகர்என் தனையே

நயந்துகொண்ட தனித்தலைவர் ஞானசபா பதியார்

வாதநடம் புரிகருணை மாநிதியார் வரதர்

வள்ளல்எலாம் வல்லவர்மா நல்லவர்என் இடத்தே

காதலுடன் வருகின்றார் என்றுபர நாதம்

களிப்புறவே தொனிக்கின்ற தந்தரதுந் துபிதான்

ஏதமற முழங்குகின்ற தென்றுசொல்லிக் கொண்டே

எழுகின்றாள் தொழுகின்றாள் என்னுடைய மகளே.

42

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

33

5338.

அன்பாடு திருப்பொதுவில் ஆடுகின்ற
அரசேநின் அடிமேல் ஆணை
என்பாடென் றிலைஎன்னால் துரும்பும்அசைத்
திடமுடியா திதுகால் தொட்டுப்
பொன்பாடெவ் விதத்தானும் புரிந்துகொண்டு
நீதானே புரத்தல் வேண்டும்
உன்பாடு நான்உரைத்தேன் நீஇனிச்சும்
மாஇருக்க ஒண்ணா தண்ணா.

43

5339.

முன்பாடு பின்பயன்தந் திடும்எனவே
உரைக்கின்றோர் மொழிகள் எல்லாம்
இன்பாடும் இவ்வுலகில் என்னறிவில்
இலைஅதனால் எல்லாம் வல்லோய்
அன்பாடு திருப்பொதுவில் ஆடுகின்றோய்
அருட்சோதி அளித்துக் காத்தல்
உன்பாடு நான்உரைத்தேன் எனக்கொருபா
டுண்டோ நீ உரைப்பாய் அப்பா.

44

5340..

உன்ஆணை உன்னைவிட உற்றதுணை

வேறிலைஎன் உடையாய் அந்தோ

என்நாணைக் காத்தருளி இத்தினமே

அருட்சோதி ஈதல் வேண்டும்

அந்நாள்நை யாதபடி அருள்புரிந்த

பெருங்கருணை அரசே என்னை

முன்னாள்நின் அடியவன்என் றுலகறிந்த

இந்நாள்என் மொழிந்தி டாதே.

45

5341.

தூங்காதே விழித்திருக்கும் சூதறிவித்

தெனைஆண்ட துரையே என்னை

நீங்காதே என்னுயிரில் கலந்துகொண்ட

பதியேகால் நீட்டிப் பின்னே

வாங்காதே விரைந்திவண்நீ வரல்வேண்டும்

தாழ்த்திடில்என் மனந்தான் சற்றும்

தாங்காதே இதுநினது தனித்ததிரு

வுளமறிந்த சரிதம் தானே.

46

5342.

இயங்காளி புலிகரடி எனப்பெயர்கேட்

டுளம்நடுங்கி இருந்தேன் ஊரில்

சயங்காளிக் கோயிலைக்கண் டஞ்சிமனம்

தழுதழுத்துத் தளர்ந்தேன் இந்தப்

பயங்காளிப் பயல்போலப் பயந்தவர்கள்

எங்குளர்காண் பதியே என்னை

வயங்காளில் ஒருவன்என நினையேல்கைப்

பிள்ளைஎன மதித்தி டாயே.

47

5343.

சிறுசெயலைச் செயும்உலகச் சிறுநடையோர்

பலபுகலத் தினந்தோ றுந்தான்

உறுசெயலை அறியாஇச் சிறுபயலைப்

பிழைத்தலைத்தல் உவப்போ கண்டாய்

தெறுசெயலைத் தவிர்த்தெல்லாச் சித்தியும்பெற்

றிடஅழியாத் தேகன் ஆகப்

பெறுசெயலை எனக்களித்தே மறுசெயலைப்

புரிகஎனைப் பெற்ற தேவே.

48

கலிநிலைத்துறை

5344

அங்கே உன்றன் அன்பர்கள் எல்லாம் அமர்கின்றார்

இங்கே நீதான் என்னள வின்னும் இரங்காயேல்

எங்கே போகேன் யாரொடு நோகேன் எதுசெய்கேன்
செங்கேழ் வேணித் திங்கள் அணிந்தருள் சிவனேயோ.

49

5345

ஈயோ டுறழும் சிறியேன் அளவில் எந்தாய்நின்
சேயோ டுறழும் பேரருள் வண்ணத் திருவுள்ளம்
காயோ பழமோ யாதோ அறியேன் கவல்கின்றேன்
தீயோ டுறழும் திருவருள் வடிவச் சிவனேயோ.

50

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5346

உடைய நாயகன் பிள்ளைநான்
ஆகில்எவ் வுலகமும் ஒருங்கின்பம்
அடைய நான்அருட் சோதிபெற்
றழிவிலா யாக்கைகொண் டுலகெல்லாம்
மிடைய அற்புதப் பெருஞ்செயல்
நாடொறும் விளைத்தெங்கும் விளையாடத்
தடைய தற்றநல் தருணம்இத்
தருணமாத் தழைக்கஇத் தனியேற்கே.

51

5347

கோது கொடுத்த மனச்சிறியேன்
குற்றம் குணமாக் கொண்டேஇப்
போது கொடுத்த நின்அருளாம்
பொருளை நினைக்கும் போதெல்லாம்
தாது கொடுத்த பெருங்களிப்பும்
சாலா தென்றால் சாமிநினைக்
கேது கொடுப்பேன் கேட்பதன்முன்
எல்லாம் கொடுக்க வல்லாயே.

52

5348

கன்றுடைய பசுப்போலே கசிந்துருகும்
அன்பரெலாம் காணக் காட்டும்
என்றுடைய நாயகனே எல்லாஞ்செய்
வல்லவனே இலங்குஞ் சோதி
மன்றுடைய மணவாளா மன்னவனே
என்னிருகண் மணியே நின்னை
அன்றுடையேன் இன்றுவிடேன் ஆணைஉன்மேல்
ஆணைஉன்மேல் ஆணை ஐயா.

53

5349

திருநி லைத்துநல் அருளொடும்

அன்பொடும் சிறப்பொடும் செழித்தோங்க

உருநி லைத்திவண் மகிழ்வொடு

வாழ்வுற உவந்துநின் அருள்செய்வாய்

இருநி லத்தவர் இன்புறத்

திருவருள் இயல்வழி வொடுமன்றில்

குருநி லைத்தசற் குருஎனும்

இறைவநின் குரைகழற் பதம்போற்றி.

54

5350

குற்றம் புரிதல் எனக்கியல்பே

குணமாக் கொள்ளல் உனக்கியல்பே

சிற்றம் பலவா இனிச்சிறியேன்

செப்பும் முகமன் யாதுளது

தெற்றென் றடியேன் சிந்தைதனைத்

தெளிவித் தச்சந் துயர்தீர்த்தே

இற்றைப் பொழுதே அருட்சோதி

ஈக தருணம் இதுவாமே.

55

5351

அருளா ரமுதே என்னுடைய

அன்பே என்றன் அறிவேஎன்

பொருளாய் அகத்தும் புறத்தும்என்னைப்

புணர்ந்த கருணைப் பொருப்பேமெய்த்

தெருளாம் ஒளியே வெளியாகச்

சிற்றம் பலத்தே நடிக்கின்றோய்

இருளா யினஎல் லாம்தவிர்த்தென்

எண்ணம் முடிப்பாய் இப்போதே.

56

5352

மந்திரம் அறியேன் மற்றை

மணிமருந் தறியேன் வேறு

தந்திரம் அறியேன் எந்தத்

தகவுகொண் டடைவேன் எந்தாய்

இந்திரன் முதலாம் தேவர்

இறைஞ்சப்பொன் மன்றில் வேணிச்

சந்திரன் ஆட இன்பத்

தனிநடம் புரியும் தேவே.

57

5353.

கருணைக் கடலே அதில்எழுந்த

கருணை அமுதே கனியமுதில்

தருணச் சுவையே சுவைஅனைத்தும்

சார்ந்த பதமே தற்பதமே

பொருண்மெய்ப் பரமே சிதம்பரமாம்

பொதுவில் நடிக்கும் பரம்பரமே

தெருண்மெய்க் கருத்தில் கலந்தெனையும்

சித்தி நிலைகள் தெரித்தருளே.

58

5354.

கலக்கம் அற்றுநான் நின்றனைப்

பாடியே களிக்கின்ற நாள்எந்நாள்

இலக்கம் உற்றறிந் திடஅருள்

புரிகுவாய் எந்தைஇவ் விரவின்கண்

துலக்க முற்றசிற் றம்பலத்

தாடுமெய்ச் சோதியே சுகவாழ்வே

அலக்கண் அற்றிடத் திருவருள்

புரியும்என் அப்பனே அடியேற்கே.

59

கட்டளைக் கலிப்பா

5355

பண்டு நின்திருப் பாதம லரையே

பாடி யாடிய பத்திமை யோரைப்போல்

தொண்டு கொண்டெனை ஆண்டனை இன்றுதான்

துட்டன் என்றுது ரத்திடல் நன்றுகொல்

குண்டு நீர்க்கடல் சூழுல கத்துளோர்

குற்றம் ஆயிரங் கோடிசெய் தாலும்முன்

கொண்டு பின்குலம் பேசுவ ரோஎனைக்

குறிக்கொள் வாய்எண் குணந்திகழ் வள்ளலே.

60

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5356

கண்ணெலாம் நிரம்பப் பேரொளி காட்டிக்

கருணைமா மழைபொழி முகிலே

விண்ணெலாம் நிறைந்த விளக்கமே என்னுள்

மேவிய மெய்ம்மையே மன்றுள்

எண்ணெலாம் கடந்தே இலங்கிய பதியே

இன்றுநீ ஏழையேன் மனத்துப்

புண்ணெலாம் தவிர்த்துப் பொருளெலாம் கொடுத்துப்

புகுந்தென துளங்கலந் தருளே.

61

5357

அன்பிலேன் எனினும் அறிவிலேன் எனினும்

அன்றுவந் தாண்டனை அதனால்

துன்பிலேன் எனஇவ் வுலகெலாம் அறியச்

சொல்லினேன் சொல்லிய நானே

இன்பிலேன் எனஇன் றுரைத்திடல் அழகோ

எனைஉல கவமதித் திடில்என்

என்பிலே கலந்தாய் நினக்கும்வந் திடுமே

எய்துக விரைந்தென திடத்தே.

62

கட்டளைக் கலித்துறை

5358

வான்வேண்டு சிற்றம் பலத்தே வயங்கி வளரமுதத்

தேன்வேண்டி னேன்இத் தருணத் தருள்செய்க செய்திலையேல்

ஊன்வேண்டும் என்னுயிர் நீத்துநின் மேற்பழி யோவிளைப்பேன்

நான்வேண்டு மோபழி தான்வேண்டு மோசொல்க நாயகனே.

63

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5359

செவ்வணத் தவரும் மறையும்ஆ கமமும்

தேவரும் முனிவரும் பிறரும்

இவ்வணத் ததுஎன் றறிந்திடற் கரிதாம்

எந்தைநின் திருவருள் திறத்தை

எவ்வணத் தறிவேன் எங்ஙனம் புகல்வேன்

என்தரத் தியலுவ தேயோ

ஒவ்வணத் தரசே எனக்கென இங்கோர்

உணர்ச்சியும் உண்டுகொல் உணர்த்தே.

64

5360

உணர்ந்துணர்ந் தாங்கே உணர்ந்துணர்ந் துணரா

உணர்ந்தவர் உணர்ச்சியான் நுழைந்தே

திணர்ந்தனர் ஆகி வியந்திட விளங்கும்

சிவபதத் தலைவநின் இயலைப்

புணர்ந்தநின் அருளே அறியும்நான் அறிந்து

புகன்றிடும் தரஞ்சிறி துளனோ

கொணர்ந்தொரு பொருள்என் கரங்கொளக் கொடுத்த

குருஎனக் கூறல்என் குறிப்பே.

65

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5361

அயலறியேன் நினதுமலர் அடிஅன்றிச் சிறிதும்

அம்பலத்தே நிதம்புரியும் ஆனந்த நடங்கண்

டயலறியேன் எனினும்அது கண்டுகொளும் ஆசை

ஒருகடலோ எழுகடலோ உரைக்கவொணா துடையேன்

மயலறியா மனத்தமர்ந்த மாமணியே மருந்தே

மதிமுடிஎம் பெருமான்நின் வாழ்த்தன்றி மற்றோர்

செயலறியேன் எனக்கருளத் திருவுளஞ்செய் திடுவாய்
திருஎழுத்தைந் தாணைஒரு துணைசிறிதிங் கிலனே.

66

5362

கொழுந்தேனும் செழும்பாகும் குலவுபசும் பாலும்
கூட்டிஉண் டாற்போல்இனிக்குங் குணங்கொள்சடைக் கனியே
தொழுந்தேவ மடந்தையர்க்கு மங்கலநாண் கழுத்தில்
தோன்றவிடம் கழுத்தினுளே தோன்றநின்ற சுடரே
எழுந்தேறும் அன்பருளத் தேற்றுதிரு விளக்கே
என்உயிர்க்குத் துணையேஎன் இருகண்ணுள் மணியே
அழுந்தேற அறியாதென் அவலநெஞ்சம் அந்தோ
அபயம்உனக் கபயம்எனை ஆண்டருள்க விரைந்தே.

67

5363

என்னால்ஓர் துரும்பும்அசைத் தெடுக்கமுடி யாதே
எல்லாஞ்செய் வல்லவன்என் றெல்லாரும் புகலும்
நின்னால்இவ் வுலகிடைநான் வாழ்கின்றேன் அரசே
நின்அருள்பெற் றழியாத நிலையைஅடைந் திடஎன்
தன்னால்ஓர் சுதந்தரமும் இல்லைகண்டாய் நினது
சகலசுதந் தரத்தைஎன்பால் தயவுசெயல் வேண்டும்
பின்நாள்என் றிடில்சிறிதும் தரித்திருக்க மாட்டேன்

பேராணை உரைத்தேன்என் பேராசை இதுவே.

68

5364

இச்சைஎலாம் புகன்றேன்என் இலச்சைஎலாம் விடுத்தேன்

இனிச்சிறிதும் தரியேன்இங் கிதுதருணத் தடைந்தே

அச்சைஎலாம் வெளிப்படுத்தி அச்சம்எலாம் அகற்றி

அருட்சோதித் தனிஅரசே ஆங்காங்கும் ஓங்க

விச்சைஎலாம் எனக்களித்தே அவிச்சைஎலாம் தவிர்த்து

மெய்யுறஎன் னொடுகலந்து விளங்கிடுதல் வேண்டும்

பச்சைஎலாம் செம்மைஎலாம் பொன்மைஎலாம் படர்ந்த

படிகமணி விளக்கேஅம் பலம்விளங்கும் பதியே.

69

5365

தருவகைஇத் தருணம்நல்ல தருணம்இதில் எனக்கே

தனித்தஅருட் பெருஞ்சோதி தந்தருள்க இதுதான்

ஒருவகைஈ திலைஎனில்வே றொருவகைஎன் னுடைய

உடல்உயிரை ஒழித்திடுக உவப்பினொடே இந்த

இருவகையும் சம்மதமே திருவடிசாட் சியதாய்

இயம்பினன்என் இதயம்உன்றன் இதயம்அறிந் ததுவே

அருவகையோ உருவகையும் ஆகிஎன்னுள் அமர்ந்தாய்

அம்மேஎன் அப்பாஎன் அய்யாஎன் அரசே.

70

5366

வருமுன் வந்ததாக் கொள்ளுதல் எனக்கு

வழக்கம் வள்ளல்நீ மகிழ்ந்தருட் சோதி

தருமுன் தந்தனை என்றிருக் கின்றேன்

தந்தை நீதரல் சத்தியம் என்றே

குருமுன் பொய்யுரை கூறலேன் இனிஇக்

குவலை யத்திடைக் கவலையைத் தரியேன்

திருமுன் விண்ணப்பம் செய்தனன் கருணை

செய்க வாழ்கநின் திருவருட் புகழே. .

71

5367

வினைத்தடைதீர்த் தெனைஆண்ட மெய்யன்மணிப் பொதுவில்

மெய்ஞ்ஞான நடம்புரிந்து விளங்குகின்ற விமலன்

எனைத்தனிவைத் தருளொளிஈந் தென்னுள்இருக் கின்றான்

எல்லாஞ்செய் வல்லசித்தன் இச்சையருட் சோதி

தினைத்தனைபெற் றவரேனும் சாலுமுன்னே உலகில்

செத்தவர்கள் எல்லாரும் திரும்பவரு கென்று

நினைத்தவுடன் எதிர்வந்து நிற்பர்கண்டாய் எனது

நெஞ்சேநீ அஞ்சேல்உள் அஞ்சேல்அஞ் சேலே. .

72

குறட்டாழிசை.

5368

அணியே எனதுமெய் யறிவே பொதுவளர் அரசே திருவளர் அமுதே
இனிதருள் வாய்இது தருணம் அமுதரு ளாய்இது தருணம்
மணியே எனதுகண் மணியே பொதுவளர் மதியே திருவருண் மதியே
அருள்புரி வாய்இது தருணம் அருள்புரி வாய்இது தருணம். .

73

நேரிசை வெண்பா.

5369

இதுவே தருணம் எனைஅணைதற் கிங்கே
பொதுவே நடிக்கும் புனிதா - விதுவேய்ந்த
சென்னியனே சுத்த சிவனே உனக்கடியேன்
அன்னியனே அல்லேன் அறிந்து. .

74

கலித்துறை.

5370

ஆதி யேதிரு அம்பலத் தாடல்செய் அரசே
நீதி யேஎலாம் வல்லவா நல்லவா நினைந்தே
ஓதி யேஉணர் தற்கரி தாகிய ஒருவான்
சோதி யேஎனைச் சோதியேல் சோதியேல் இனியே. .

75

கட்டளைக் கலித்துறை.

5371

போதோ விடிந்த தருளரசே என் பொருட்டுவந்தென்
தாதோர் எழுமையும் நன்மையுற் றோங்கத் தருவதுதான்
மாதோட நீக்கும் கனிரச மோவந்த வான்கனியின்
கோதோ அறிந்திலன் யாதோ திருவுளம் கூறுகவே. .

76

5372

அப்பனை இப்பனை ஆக்கிச் சிவிகை அமர்ந்தவன்சொல்
அப்பனை என்னுயிர்க் கானசெந் தேனை அமுதைஅந்நாள்
அப்பனை ஆழி கடத்திக் கரைவிட் டளித்தசடை
அப்பனைச் சிற்றம் பலவனை நான்துதித் தாடுவனே. .

77

5373

மாதோர் புடைவைத்த மாமருந் தேமணி யேஎன் மட்டில்
யாதோ திருவுளம் யானறி யேன்இதற் கென்னசெய்வேன்
போதோ கழிகின்ற தந்தோநின் தன்னைப் பொருந்துகின்ற
சூதோர் அணுவும் தெரியேன்நின் பாதத் துணைதுணையே. .

78

தரவு கொச்சகக் கலிப்பா.

5374

ஆர்ந்தஅருட் பெருஞ்சோதி அப்பாநான் அடுத்தவர்தம்

சோர்ந்தமுகம் பார்க்கஇனித் துணியேன் நின்அருள்ஆணை

நேர்ந்தவர்கள் நேர்ந்தபடி நெகிழ்ந்துரைக்கும் வார்த்தைகளும்

ஓர்ந்துசெவி புகத்துணியேன் உன்ஆணை உன்ஆணை. .

79

5375

அழியா நிலையாதது மேவிநின் அன்பினோடும்

ஒழியா துனைப்பாடி நின்றாடி உலகினூடே

வழியாம் உயிர்க்கின்பம் புரிந்து வயங்கல்வேண்டும்

இழியா தருள்வாய் பொதுமேவிய எந்தைநீயே. .

80

5376

கரும்பசைக்கும் மொழிச்சிறியார் கல்மனத்தில் பயின்றுபயின்

றிரும்பசைக்கும் மனம்பெற்றேன் யானோஇவ் வேழைகள்தம்

அரும்பசிக்கு மருந்தளிப்பேன் அந்தோஇங் கென்னாலே

துரும்பசைக்க முடியாதே சோதிநடப் பெருமானே.

81

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5377.

மதிக்களவா மணிமன்றில் திருநடஞ்செய்

திருத்தாளை வழுத்தல் இன்று

பதிக்களவா நலந்தருவல் என்றுநினை

ஏத்துதற்குப் பணிக்கின் றேன்நீ

விதிக்களவாச் சித்திகள்முன் காட்டுகஇங்

கென்கின்றாய் விரைந்த நெஞ்சே

பொதிக்களவா முன்னர்இங்கே சத்தத்துக்

களவென்பார் போன்றாய் அன்றே.

82

5378.

ஆடியகால் மலர்களுக்கே அன்புடையார்

யாவரிங்கே அவர்க்கே இன்பம்

கூடியதென் றாரணமும் ஆகமமும்

ஆணையிட்டுக் கூறும்வார்த்தை

ஓடியதோ நெஞ்சேநீ உன்னுவதென்

பற்பலவாய் உன்னேல் இன்னே

பாடிஅவன் திருப்பாட்டைப் படிகண்டாய்

இன்புகலப் படிகண் டாயே.

83

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5379

ஒன்றுமுன் எண்பால் எண்ணிடக் கிடைத்த

வுவைக்குமேற் றனைஅருள் ஒளியால்

நன்றுகண் டாங்கே அருட்பெருஞ் சோதி

நாதனைக் கண்டவன் நடிக்கும்

மன்றுகண் டதனில் சித்தெலாம் வல்ல

மருந்துகண் டுற்றது வடிவாய்

நின்றுகொண் டாடுந் தருணம்இங் கிதுவே

நெஞ்சமே அஞ்சலை நீயே.

84

5380

கலைவளர் முடிய தென்னைஆட் கொண்ட

கருணையங் கண்ணது ஞான

நிலைவளர் பொருள துலகெலாம் போற்ற

நின்றது நிறைபெருஞ் சோதி

மலைவளர் கின்றது அருள்வெளி நடுவே

வயங்குவ தின்பமே மயமாய்த்

தலைவளர் திருச்சிற் றம்பலந் தனிலே

தனித்தெனக் கினித்ததோர் கனியே.

85

5381

மன்றுள்நின் றாடும் வள்ளலே எனது

வள்ளல்என் றெனக்குளே தெரிந்த

அன்றுதான் தொடங்கி அம்மையே அப்பா

ஐயனே அன்பனே அரசே

என்றுநின் றனையே நினைத்திருக் கின்றேன்

எட்டுணை எனினும்வே றிடத்தில்

சென்றுநின் றறியேன் தெய்வமே இதுநின்

திருவுளம் தெரிந்தது தானே.

86

5382

உள்ளலேன் உடையார் உண்ணவும் வறியார்

உறுபசி உழந்துவெந் துயரால்

வள்ளலே நெஞ்சம் வருந்தவும் படுமோ

மற்றிதை நினைத்திடுந் தோறும்

எள்ளலேன் உள்ளம் எரிகின்ற துடம்பும்

எரிகின்ற தென்செய்வேன் அந்தோ

கொள்ளலேன் உணவும் தரிக்கிலேன் இந்தக்

குறையெலாம் தவிர்த்தருள் எந்தாய்.

87

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5383.

ஐவகைத் தொழிலும் என்பால்

அளித்தனை அதுகொண் டிந்நாள்

செய்வகை தெரிவித் தென்னைச்

சேர்ந்தொன்றாய் இருத்தல் வேண்டும்

பொய்வகை அறியேன் வேறு

புகலிலேன் பொதுவே நின்று

மெய்வகை உரைத்தேன் இந்த

விண்ணப்பம் காண்க நீயே.

88

5384.

உருவ ராகியும் அருவின

ராகியும் உருஅரு வினராயும்

ஒருவ ரேஉளார் கடவுள்கண்

டறிமினோ உலகுளீர் உணர்வின்றி

இருவ ராம்என்றும் மூவரே

யாம்என்றும் இயலும்ஐ வர்கள்என்றும்

எருவ ராய்உரைத் துழல்வதென்

உடற்குயிர் இரண்டுமூன் றெனலாமே.

89

கட்டளைக் கலித்துறை

5385

சேய்போல் உலகத் துயிரைஎல் லாம்எண்ணிச் சேர்ந்துபெற்ற

தாய்போல் உரைப்பர்சன் மார்க்கசங் கத்தவர் சாற்றும்எட்டிக்

காய்போல் பிறர்தமைக் கண்டால் கசந்து கடுகடுத்தே
நாய்போல் குரைப்பர்துன் மார்க்கசங் கத்தவர் நானிலத்தே.

90

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5386

வண்டணிபூங் குழல்அம்மை எங்கள்சிவ காம
வல்லியொடு மணிமன்றில் வயங்கியநின் வடிவம்
கண்டவரைக் கண்டவர்தம் கால்மலர்முத் தேவர்
கனமுடிக்கே முடிக்கின்ற கழமலராம் என்றால்
பண்டகுநின் திருத்தொண்டர் அடிப்பெருமை எவரே
பகர்ந்திடுவர் மறைகளெலாம் பகர்ந்திடுவான் புகுந்தே
விண்டுலர்ந்து வெளுத்தஅவை வெளுத்தமட்டோ அவற்றை
வியந்தோதும் வேதியரும் வெளுத்தனர்உள் உடம்பே.

91

5387

கிழக்குவெளுத் ததுகருணை அருட்சோதி உதயம்
கிடைத்ததென துளக்கமலம் கிளர்ந்ததென தகத்தே
சழக்குவெளுத் ததுசாதி ஆச்சிரமா சாரம்
சமயமதா சாரம்எனச் சண்டையிட்ட கலக
வழக்குவெளுத் ததுபலவாம் பொய்ந்நூல்கற் றவர்தம்
மனம்வெளுத்து வாய்வெளுத்து வாயுறவா தித்த

முழக்குவெளுத் ததுசிவமே பொருள்எனும்சன் மார்க்க

முழுநெறியில் பரநாத முரசுமுழங் கியதே.

92

நிலைமண்டில ஆசிரியப்பா

5388

சிற்சபைக் கண்ணும் பொற்சபைக் கண்ணும்

திருநடம் புரியும் திருநட ராஜ

எனக்கருள் புரிந்த நினக்கடி யேன்கைம்

மாற்றை அறிந்திலன் போற்றிநின் அருளே.

93

5389

நாயினும் சிறியேன் ஆயினும் பெரியேன்

யாதிற் பெரியேன் தீதிற் பெரியேன்

என்னைஆண் டருளினை என்னைஆண் டவனே

அம்பலத் தாடல்செய் எம்பெரும் பொருளே. 94

94

நேரிசை வெண்பா

5390

உண்மைஉரைத் தருள்என் றோதினேன் எந்தைபிரான்

வண்மையுடன் என்அறிவில் வாய்ந்துரைத்தான் - திண்மையுறு

சித்திநிலை எல்லாம் தெரிவித் தருள்கின்றேம்

இத்தருணம் சத்தியமே என்று.

95

5391

உலகமெலாம் போற்ற ஒளிவடிவ னாகி

இலகஅருள் செய்தான் இசைந்தே - திலகன்என

நானேசன் மார்க்கம் நடத்துகின்றேன் நம்பெருமான்

தானே எனக்குத் தனித்து.

96

5392

தனித்துணையாய் என்றன்னைத் தாங்கிக்கொண் டென்றன்

மனித்த உடம்பழியா வாறே - கனித்துணையாம்

இன்னமுதம் தந்தெனக்கே எல்லாமும் வல்லசித்தி

தன்னையுந்தந் துட்கலந்தான் றான்.

97

5393

சர்க்கரைஒத் தான்எனக்கே தந்தான் அருளென்மனக்

கற்கரையச் செய்தே களிப்பித்தான் - கற்க

இனியான் அருட்சோதி எந்தைஎன்னுள் உற்றான்

இனியான் மயங்கேன் இருந்து.

98

5394

உன்னைவிட மாட்டேன்நான் உன்ஆணை எம்பெருமான்

என்னைவிட மாட்டாய் இருவருமாய் - மன்னிஎன்றும்

வண்மை எலாம்வல்ல வாய்மைஅரு ளால்உலகுக்

குண்மைஇன்பம் செய்தும் உவந்து.

99

கட்டளைக் கலித்துறை

5395

நஞ்சுண் டுயிர்களைக் காத்தவ னேநட நாயகனே

பஞ்சுண்ட சிற்றடிப் பாவைபங் காநம் பராபரனே

மஞ்சுண்ட செஞ்சடை மன்னாபொன் அம்பல வாவலவா

பிஞ்சுண்ட வாய்க்குப் பழம்அளித் தாண்ட பெரியவனே.

100

5396

அப்பூறு செஞ்சடை அப்பாசிற் றம்பலத் தாடுகின்றோய்

துப்பூறு வண்ணச் செழுஞ்சுட ரேதனிச் சோதியனே

வெப்பூறு நீக்கிய வெண்ணீறு பூத்தபொன் மேனியனே

உப்பூறு வாய்க்குத்தித் திப்பூறு காட்டிய உத்தமனே.

101

5397

நான்செய்த புண்ணியம் என்னுரைக் கேன்பொது நண்ணியதோர்

வான்செய்த மாமணி என்கையில் பெற்றுநல் வாழ்வடைந்தேன்

ஊன்செய்த தேகம் ஒளிவடி வாகநின் றோங்குகின்றேன்

கோன்செய்த விச்சை குணிக்கவல் லார்எவர் கூறுமினே.

102

5398

பண்ணிய பூசை நிறைந்தது சிற்றம் பலநடங்கண்

டெண்ணிய எண்ணம் பலித்தன மெய்இன்பம் எய்தியதோர்

தண்ணியல் ஆரமு துண்டனன் கண்டனன் சாமியைநான்

நண்ணிய புண்ணியம் என்னுரைக் கேன்இந்த நானிலத்தே.

103

5399

அருட்பெருஞ் சோதிஎன் அம்மையி னோடறி வானந்தமாம்

அருட்பெருஞ் சோதிஎன் அப்பன்என் உள்ளத் தமர்ந்தன்பினால்

அருட்பெருஞ் சோதித்தெள் ளாரமு தம்தந் தழிவற்றதோர்

அருட்பெருஞ் சோதிச்செங் கோலும் கொடுத்தனன் அற்புதமே.

104

கலிவிருத்தம்

5400

அருட்பெருஞ் சோதிஎன் அகத்தில் ஓங்கின

மருட்பெரும் திரைஎலாம் மடிந்து நீங்கின

இருட்பெரு மலமுதல் யாவும் தீர்ந்தன

தெருட்பெரும் சித்திகள் சேர்ந்த என்னையே.

105

5401

ஓவுறாத் துயர்செயும் உடம்புதான் என்றும்

சாவுறா தின்பமே சார்ந்து வாழலாம்

மாவுறாச் சுத்தசன் மார்க்க நன்னெறி

மேவுறார் தங்களை விடுக நெஞ்சமே.

106

5402

பொத்திய மலப்பிணிப் புழுக்கு ரம்பைதான்

சித்தியல் சுத்தசன் மார்க்கச் சேர்ப்பினால்

நித்திய மாகியே நிகழும் என்பது

சத்தியம் சத்தியம் சகத்து ளீர்களே.

107

கொச்சகக் கலிப்பா

5403

வானாகி வானடுவே மன்னும்ஒளி யாகிஅதில்

தானாடு வானாகிச் சன்மார்க்கர் உள்ளினிக்கும்

தேனாகித் தெள்ளமுதாய்த் தித்திக்கும் தேவேநீ

யானாகி என்னுள் இருக்கின்றாய் என்னேயோ.

108

5404

ஞானா கரச்சுடரே ஞான மணிவிளக்கே

ஆனா அருட்பெருஞ்சிற் றம்பலத்தே ஆனந்தத்

தேனார் அமுதாம் சிவமே சிவமேநீ

நானாகி என்னுள் நடிக்கின்றாய் என்னேயோ.

109

5405

என்தரத்துக் கேலாத எண்ணங்கள் எண்ணுகின்றேன்

முன்தரத்தின் எல்லாம் முடித்துக் கொடுக்கின்றாய்

நின்தரத்தை என்புகல்வேன் நின்இடப்பால்(385) மேவுபசும்

பொன்தரத்தை என்உரைக்கேன் பொற்பொதுவில் நடிக்கின்றோய்.

110

(385). வலப்பால் - முதற்பதிப்பு., பொ. சு. ச. மு. க.

5406

என்னுடைய விண்ணப்பம் இதுகேட்க எம்பெருமான்

நின்னுடைய பெருங்கருணை நிதிஉடையேன் ஆதலினால்

பொன்னுடையான் அயன்முதலாம் புங்கவரை வியவேன்என்

தன்னுடைய செயலெல்லாம் தம்பிரான் செயலன்றே.

111

5407

ஓங்கும்அன்பர் எல்லாரும் உள்ளே விழித்துநிற்கத்

தூங்கிய என்தன்னை எழுப்பிஅருள் தூயபொருள்

வாங்குகஎன் றென்பால் வலியக் கொடுத்தமுதும்

பாங்குறநின் றூட்டினையே எந்தாய்நின் பண்பிதுவே.

112

5408

நாட்பாரில் அன்பரெலாம் நல்குகஎன் றேத்திநிற்ப

ஆட்பாரில் அன்போர் அணுத்துணையும் இல்லேற்கே

நீட்பாய் அருளமுதம் நீகொடுத்தாய் நின்னை இங்கே

கேட்பார் இலைஎன்று கீழ்மேல தாக்கினையே.

113

5409

எல்லார்க்கும் கடையாகி இருந்தேனுக் கருள்புரிந்தே

எல்லார்க்கும் துணையாகி இருக்கவைத்தாய் எம்பெருமான்

எல்லார்க்கும் பொதுவில்நடம் இடுகின்றாய் இவ்வண்ணம்

எல்லார்க்கும் செய்யாமை யாதுகுறித் திசைஎனக்கே.

114

5410

நான்ஆனான் தான்ஆனான் நானும்தா னும்ஆனான்

தேன்ஆனான் தெள்ளமுதாய்த் தித்தித்து நிற்கின்றான்

வான்ஆனான் ஞான மணிமன்றில் ஆடுகின்றான்

கோன்ஆனான் என்னுட் குலாவுகின்ற கோமானே.

115

கட்டளைக் கலித்துறை

5411

எல்லாக் குறையும் தவிர்ந்தேன்உன் இன்னருள் எய்தினன்நான்

வல்லாரின் வல்லவன் ஆனேன் கருணை மருந்தருந்தி

நல்லார் எவர்க்கும் உபகரிப் பான்இங்கு நண்ணுகின்றேன்

கொல்லா விரதத்தில் என்னைக் குறிக்கொண்ட கோலத்தனே.

116

5412

முன்னாள்செய் புண்ணியம் யாதோ உலகம் முழுதும்என்பால்

இந்நாள் அடைந்தின்பம் எய்திட லோங்கினன் எண்ணியவா

றெந்நாளும் இவ்வுடம் பேஇற வாத இயற்கைபெற்றேன்

என்னாசை அப்பனைக் கண்டுகொண் டேன்என் இதயத்திலே.

117

5413

கண்டேன் சிற்றம்பலத் தானந்த நாடகம் கண்டுகளி

கொண்டேன் எல்லாம்வல்ல சித்தனைக் கூடிக் குலவிஅமு

துண்டேன் மெய்ஞ்ஞான உருஅடைந் தேன்பொய் உலகொழுக்கம்

விண்டேன் சமரச சன்மார்க்கம் பெற்ற வியப்பிதுவே.

118

5414

கண்கொண்ட பூதலம் எல்லாம்சன் மார்க்கம் கலந்துகொண்டே

பண்கொண்ட பாடலில் பாடிப் படித்துப் பரவுகின்றார்

விண்கொண்ட சிற்சபை ஒன்றே நிறைந்து விளங்குகின்ற

தெண்கொண்ட மற்றை மதமார்க்கம் யாவும் இறந்தனவே.

119

5415

தாழைப் பழம்பிழி(386) பாலொடு சர்க்கரைச் சாறளிந்த

வாழைப் பழம்பசு நெய்நறுந் தேனும் மருவச்செய்து

மாழைப் பலாச்சுளை மாம்பழம் ஆதி வழித்தளவி

ஏழைக் களித்தனை யேஅரு ளாரமு தென்றொன்றையே.

120

(386). தாழைப்பழம் - தேங்காய்.

5416

தென்பால் முகங்கொண்ட தேவேசெந் தேனில் சிறந்தபசு

வின்பால் கலந்தளி முக்கனிச் சாறும் எடுத்தளவி

அன்பால் மகிழ்ந்து மகனே வருகென் றழைத்தருளி

என்பால் அளித்தனை யேஅரு ளாரமு தென்றொன்றையே.

121

5417

செத்தார் எழுந்தனர் சுத்தசன் மார்க்கம் சிறந்ததுநான்

ஒத்தார் உயர்ந்தவர் இல்லா ஒருவனை உற்றடைந்தே

சித்தாடு கின்றனன் சாகா வரமும் சிறக்கப்பெற்றேன்

இத்தா ரணியில் எனக்கிணை யாரென் றியம்புவனே.

122

கலிநிலைத்துறை

5418

கருணை யாம்பெருங் கடல்அமு தளித்தனை எனக்கே
தருண வாரிச மலர்ப்பதம் தந்தனை நின்னை
அருண வண்ணஒண் சுடர்மணி மண்டபத் தடியேன்
பொருள்ந யப்புறக் கண்டுகண் டுளமகிழ் போதே.

123

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5419

முந்தைநாள் அயர்ந்தேன் அயர்ந்திடேல் எனஎன்
முன்னர்நீ தோன்றினை அந்தோ
அந்தநாள் தொடங்கி மகிழ்ந்திருக் கின்றேன்
அப்பனே அய்யனே அரசே
இந்தநாள் கவலை இடர்பயம் எல்லாம்
என்னைவிட் டொழிந்திடப் புரிந்தாய்
எந்தநாள் புரிந்தேன் இப்பெரும் பேறிங்
கெய்துதற் குரியமெய்த் தவமே.

124

5420

வாய்க்குறும் புரைத்துத் திரிந்துவீண் கழித்து
மலத்திலே கிடந்துழைத் திட்ட
நாய்க்குயர் தவிசிட் டொருமணி முடியும்
நன்றுறச் சூட்டினை அந்தோ
தூய்க்குணத் தவர்கள் புகழ்மணி மன்றில்
சோதியே நின்பெருந் தயவைத்
தாய்க்குறு தயவென் றெண்ணுகோ தாயின்
தயவும்உன் தனிப்பெருந் தயவே.

125

5421

பேரிடர் தவிர்த்துப் பேரருள் புரிந்த
பெருமநின் தன்னைஎன் றனக்கே
சாருறு தாயே என்றுரைப் பேனோ
தந்தையே என்றுரைப் பேனோ
சீருறு குருவே என்றுரைப் பேனோ
தெய்வமே என்றுரைப் பேனோ
யாரென உரைப்பேன் என்னெனப் புகழ்வேன்
யாதுமொன் றறிந்திலேன் அந்தோ.

126

5422

சிறுநெறிக் கெனைத்தான் இழுத்ததோர் கொடிய

தீமன மாயையைக் கணத்தே

வெறுவிய தாக்கித் தடுத்தெனை ஆண்ட

மெய்யநின் கருணைஎன் புகல்வேன்

உறுநறுந் தேனும் அமுதும்மென் கரும்பில்

உற்றசா றட்டசர்க் கரையும்

நறுநெயுங் கலந்த சுவைப்பெரும் பழமே

ஞானமன் றோங்கும்என் நட்பே.

127

5423

புல்லிய நெறிக்கே இழுத்தெனை அலைத்த

பொய்ம்மன மாயையைக் கணத்தே

மெல்லிய தாக்கித் தடுத்தெனை ஆண்ட

மெய்யநின் கருணைஎன் புகல்வேன்

வல்லிநின் அம்மை மகிழமன் றோங்கும்

வள்ளலே மறைகள்ஆ கமங்கள்

சொல்லிய பதியே மிகுதயா நிதியே

தொண்டனேன் உயிர்க்குமெய்த் துணையே.

128

5424

அருந்தவர் காண்டற் கரும்பெருங்கருணை

அருட்பெருஞ் சோதிஎன் உளத்தே

இருந்தனன் அம்மா நான்செய்த தவந்தான்

என்னையோ என்னையோ என்றாள்

திருந்துதெள் ளமுதுண் டழிவெலாந் தவிர்த்த

திருவுரு அடைந்தனன் ஞான

மருந்துமா மணியும் மந்திர நிறைவும்

வாய்த்தன வாய்ப்பின்என் றாளே.

129

5425

இன்பிலே வயங்கும் சிவபரம் பொருளே

என்உயிர்க் கமுதமே என்தன்

அன்பிலே பழுத்த தனிப்பெரும் பழமே

அருள்நடம் புரியும்என் அரசே

வன்பிலே விளைந்த மாயையும் வினையும்

மடிந்தன விடிந்ததால் இரவும்

துன்பிலேன் இனிநான் அருட்பெருஞ் சோதிச்

சூழலில் துலங்குகின் றேனே.

130

5426

உயிரெலாம் ஒருநீ திருநடம் புரியும்

ஒருதிருப் பொதுஎன அறிந்தேன்

செயிரெலாம் தவிர்ந்தேன் திருவெலாம் அடைந்தேன்

சித்தெலாம் வல்லதொன் றறிந்தேன்

மயிரெலாம் புளகித் துளமெலாம் கனிந்து

மலர்ந்தனன் சுத்தசன் மார்க்கப்

பயிரெலாம் தழைக்கப் பதியெலாம் களிக்கப்

பாடுகின் றேன்பொதுப் பாட்டே.

131

5427

படித்தஎன் படிப்பும் கேள்வியும் இவற்றின்

பயனதாம் உணர்ச்சியும் அடியேன்

பிடித்தநல் நிலையும் உயிரும்மெய் இன்பும்

பெருமையும் சிறப்பும்நான் உண்ணும்

வடித்ததெள் ளமுதும் வயங்குமெய் வாழ்வும்

வாழ்க்கைநன் முதலும்மன் றகத்தே

நடித்தபொன் னடியும் திருச்சிற்றம் பலத்தே

நண்ணிய பொருளும்என் றறிந்தேன்.

132

5428

கலையனே எல்லாம் வல்லவூர் தலைமைக்

கடவுளே என்இரு கண்ணே

நிலையனே ஞான நீதிமன் றிடத்தே

நிருத்தஞ்செய் கருணைமா நிதியே

புலையனேன் பொருட்டுன் திருவடி அவனி

பொருந்திய புதுமைஎன் புகல்வேன்

சிலையைநேர் மனத்தேன் செய்தவம் பெரிதோ

திருவருட் பெருந்திறல் பெரிதே.

133

5429

தரம்பிறர் அறியாத் தலைவலூர் முக்கண்

தனிமுதல் பேரருட் சோதிப்

பரம்பர ஞான சிதம்பர நடஞ்செய்

பராபர நிராமய நிமல

உரம்பெறும் அயன்மால் முதற்பெருந் தேவர்

உளத்ததி சயித்திட எனக்கே

வரந்தரு கின்றாய் வள்ளல்நின் கருணை

மாகடற் கெல்லைகண் டிலனே.

134

5430

யான்முனம் புரிந்த பெருந்தவம் யாதோ

என்சொல்வேன் என்சொல்வேன் அந்தோ

ஊன்மனம் உருக என்தனைத் தேற்றி

ஒளிஉருக் காட்டிய தலைவா

ஏன்மனம் இரங்காய் இன்றுநீ என்றேன்

என்றசொல் ஒலிஅடங் குதன்முன்

ஆன்மகிழ் கன்றின் அணைத்தெனை எடுத்தாய்

அருட்பெருஞ் சோதிஎன் அரசே.

135

5431

பனிப்பறுத் தெல்லாம் வல்லசித் தாக்கிப்

பரம்பரம் தருகின்ற தென்றோர்

தனிப்பழம் எனக்கே தந்தைதான் தந்தான்

தமியனேன் உண்டனன் அதன்தன்

இனிப்பைநான் என்என் றியம்புவேன் அந்தோ

என்னுயிர் இனித்ததென் கரணம்

சனிப்பற இனித்த தத்துவம் எல்லாம்

தனித்தனி இனித்தன தழைத்தே.

136

5432

விண்ணெலாம் கலந்த வெளியில்ஆ னந்தம்

விளைந்தது விளைந்தது மனனே

கண்ணெலாம் களிக்கக் காணலாம் பொதுவில்

கடவுளே என்றுநம் கருத்தில்

எண்ணலாம் எண்ணி எழுதலாம் எழுதி

ஏத்தலாம் எடுத்தெடுத் துவந்தே

உண்ணலாம் விழைந்தார்க் குதவலாம் உலகில்

ஓங்கலாம் ஓங்கலாம் இனியே.

137

5433

வள்ளலாம் கருணை மன்றிலே அமுத

வாரியைக் கண்டனம் மனமே

அள்ளலாம் எடுத்துக் கொள்ளலாம் பாடி

ஆடலாம் அடிக்கடி வியந்தே

உள்எலாம் நிரம்ப உண்ணலாம் உலகில்

ஓங்கலாம் உதவலாம் உறலாம்

கள்எலாம் உண்ட வண்டென இன்பம்

காணலாம் களிக்கலாம் இனியே.

138

5434.

சனிதொ லைந்தது தடைத விர்ந்தது

தயைமி குந்தது சலமொடே

துனிதொ லைந்தது சுமைத விர்ந்தது

சுபமி குந்தது சுகமொடே

களிஎ திர்ந்தது களைத விர்ந்தது

களிமி குந்தது கனிவொடே

புனித மன்றிறை நடம லிந்தது

புகழ்உ யர்ந்தது புவியிலே.

139

5435.

உரையும் உற்றது ஒளியும் உற்றது

உணர்வும் உற்றது உண்மையே

பரையும் உற்றது பதியும் உற்றது

பதமும் உற்றது பற்றியே

புரையும் அற்றது குறையும் அற்றது

புலையும் அற்றது புன்மைசேர்

திரையும் அற்றது நரையும் அற்றது

திரையும் அற்றுவி ழுந்ததே.

140

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5436

அம்பலத்தே ஆடுகின்ற ஆரமுதே அரசே

ஆனந்த மாகடலே அறிவேஎன் அன்பே

உம்பர்கட்கே அன்றிஇந்த உலகர்கட்கும் அருள்வான்

ஒளிர்கின்ற ஒளியேமெய் உணர்ந்தோர்தம் உறவே

எம்பலத்தே வாகிஎனக் கெழுமையும்நற் றுணையாய்

என்உளத்தே விளங்குகின்ற என்இறையே நினது

செம்பதத்தே மலர்விளங்கக் கண்டுகொண்டேன் எனது

சிறுமைஎலாம் தீர்ந்தேமெய்ச் செல்வமடைந் தேனே.

141

5437

அடிவிளங்கக் கனகசபைத் தனிநடனம் புரியும்

அருட்சுடரே என்உயிருக் கானபெருந் துணையே

துடிவிளங்கக் கரத்தேத்தும் சோதிமலை மருந்தே

சொற்பதம்எல் லாம்கடந்த சிற்சொருபப் பொருளே

பொடிவிளங்கத் திருமேனிப் புண்ணியனே ஞானப்

போனகரைச் சிவிகையின்மேல் பொருந்தவைத்த புனிதா

படிவிளங்கச் சிறியேன்நின் பதமலர்கண் டுவந்தேன்

பரிவொழிந்தேன் அருட்செல்வம் பரிசெனப்பெற் றேனே.

142

5438

அன்புடை யவரேஎல் லாம்உடை யவரே

அருட்பெருஞ் சோதிஎன் ஆண்டவ ரேஎன்

வன்புடை மனத்தைநன் மனமாக்கி எனது

வசஞ்செய்வித் தருளிய மணிமன்றத் தவரே

இன்புடை யவரேஎன் இறையவ ரேஎன்

இருகணுள் மணிகளுள் இசைந்திருந் தவரே

என்புடை எனைத்தூக்கி எடுத்தீர்இங் கிதனை

எண்ணுகின் றேன்அமு துண்ணுகின் றேனே.

143

5439

கலக்கம் நீங்கினேன் களிப்புறு கின்றேன்

கனக அம்பலம் கனிந்தசெங் கனியே

துலக்கம் உற்றசிற் றம்பலத் தமுதே

தூய சோதியே சுகப்பெரு வாழ்வே

விலக்கல் இல்லதோர் தனிமுதல் அரசே

வேத ஆகமம் விளம்புமெய்ப் பொருளே

அலக்கண் அற்றமெய் அன்பர்தம் உளத்தே

அமர்ந்த தோர்சச்சி தானந்த சிவமே.

144

5440

ஓங்கார அணைமீது நான்இருந்த தருணம்

உவந்தெனது மணவாளர் சிவந்தவடி வகன்றே

ஈங்காரப் பளிக்குவடி வெடுத்தெதிரே நின்றார்

இருந்தருள்க எனஎழுந்தேன் எழுந்திருப்ப தென்நீ

ஆங்காரம் ஒழிஎன்றார் ஒழிந்திருந்தேன் அப்போ

தவர்நானோ நான்அவரோ அறிந்திலன்முன் குறிப்பை

ஊங்கார இரண்டுருவும் ஒன்றானோம் அங்கே

உறைந்தஅனு பவம்தோழி நிறைந்தபெரு வெளியே.

145

5441

சொல்லுகின்றேன் பற்பலநான் சொல்லுகின்ற வெல்லாம்

துரிசலவே சூதலவே தூய்மையுடை யனவே

வெல்லுகின்ற வார்த்தைஅன்றி வெறும்வார்த்தை என்வாய்

விளம்பாதென் ஐயர்நின்று விளம்புகின்ற படியால்

செல்லுகின்ற படியேநீ காண்பாய்இத் தினத்தே

தேமொழிஅப் போதெனைநீ தெளிந்துகொள்வாய் கண்டாய்

ஒல்லுகின்ற வகைஎல்லாம் சொல்லுகின்றேன் அடிநான்

உண்மைஇது உண்மைஇது உண்மைஇது தானே.

146

5442

தந்தை தன்மையே தனையன்தன் தன்மை

என்று சாற்றுதல் சத்தியம் கண்டீர்

எந்தை எம்பிரான் ஐந்தொழில் புரியும்

இறைவன் மன்றுளே இயல்நடம் புரிவான்

மைந்தன் என்றெனை ஆண்டவன் எல்லாம்

வல்ல நாயகன் நல்லசீர் உடையான்

அந்த ணாளன்மெய் அறிவுடை யவன்என்

அப்பன் தன்மைஎன் தன்மைஎன் றறிமின்.

147

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5443

என்உடலும் என்உயிரும் என்பொருளும்
நின்னஎன இசைந்தஞ் ஞான்றே
உன்னிடைநான் கொடுத்தனன்மற் றென்னிடைவே
றொன்றும்இலை உடையாய் இங்கே
புன்னிகரேன் குற்றமெலாம் பொறுத்ததுவும்
போதாமல் புணர்ந்து கொண்டே
தன்னிகர்என் றெனவைத்தாய் இஞ்ஞான்றென்
கொடுப்பேன்நின் தன்மைக் கந்தோ.

148

5444

என்னுரைக்கேன் என்னுரைக்கேன் இந்தஅதி
சயந்தன்னை எம்ம னோர்காள்
பொன்னுரைக்கும் மணிமன்றில் திருநடனம்
புரிகின்ற புனிதன் என்னுள்
மின்உரைக்கும் படிகலந்தான் பிரியாமல்
விளங்குகின்றான் மெய்ம்மை யான
தன்னுரைக்கும் என்னுரைக்கும் சமரசம்செய்
தருள்கின்றான் சகத்தின் மீதே.

149

5445

ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன்

மாளாத ஆக்கை பெற்றேன்

கூடுகின்ற சன்மார்க்க சங்கத்தே

நடுவிருந்து குலாவு கின்றேன்

பாடுகின்றேன் எந்தைபிரான் பதப்புகழை

அன்பினொடும் பாடிப் பாடி

நீடுகின்றேன் இன்பக்கூத் தாடுகின்றேன்

எண்ணமெலாம் நிரம்பி னேனே.

150

5446

ஆணை ஆணைநீ அஞ்சலை அஞ்சலை

அருள்ஒளி தருகின்றாம்

கோணை மாநிலத் தவரெலாம் நின்னையே

குறிக்கொள்வர் நினக்கேஎம்

ஆணை அம்பலத் தரசையும் அளித்தனம்

வாழ்கநீ மகனேஎன்

றேணை பெற்றிட எனக்கருள் புரிந்தநின்

இணைமலர்ப் பதம்போற்றி.

151

கட்டளைக் கலிப்பா

5447

நாய்க்கும் ஓர்தவி சிட்டுப்பொன் மாமுடி

நன்று சூட்டினை என்றுநின் அன்பர்கள்

வாய்க்கு வந்த படிபல பேசவே

மதியி லேனையும் மன்னருட் சத்தியாம்

தாய்க்குக் காட்டிநல் தண்ணமு தூட்டிஓர்

தவள மாடப்பொன் மண்டபத் தேற்றியே

சேய்க்கு நேரஎன் கையில்பொற் கங்கணம்

திகழக் கட்டினை என்னைநின் செய்கையே.

152

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5448

தன்னைவிடத் தலைமைஒரு தகவினும்இங் கியலாத்

தனித்தலைமைப் பெரும்பதியே தருணதயா நிதியே

பொன்னடிஎன் சிரத்திருக்கப் புரிந்தபரம் பொருளே

புத்தமுதம் எனக்களித்த புண்ணியனே நீதான்

என்னைவிட மாட்டாய்நான் உன்னைவிட மாட்டேன்

இருவரும்ஒன் றாகிஇங்கே இருக்கின்றோம் இதுதான்

நின்னருளே அறிந்ததெனில் செயுஞ்செய்கை அனைத்தும்

நின்செயலோ என்செயலோ நிகழ்த்திடுக நீயே.

153

5449

கடல்கடந்தேன் கரையடைந்தேன் கண்டுகொண்டேன் கோயில்

கதவுதிறந் திடப்பெற்றேன் காட்சியெலாம் கண்டேன்

அடர்கடந்த திருஅமுதுண் டருள்ஒளியால் அனைத்தும்

அறிந்துதெளிந் தறிவுருவாய் அழியாமை அடைந்தேன்

உடல்குளிர்ந்தேன் உயிர்கிளர்ந்தேன் உள்ளமெலாம் தழைத்தேன்

உள்ளபடி உள்ளபொருள் உள்ளனவாய் நிறைந்தேன்

இடர்தவிர்க்கும் சித்திஎலாம் என்வசம்ஓங் கினவே

இத்தனையும் பொதுநடஞ்செய் இறைவன்அருட் செயலே.

154

5450

காற்றாலே புவியாலே ககனமத னாலே

கனலாலே புனலாலே கதிராதி யாலே

கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே

கோளாலே பிறஇயற்றும் கொடுஞ்செயல்க ளாலே

வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்

மெய்அளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தான் எனக்கே

ஏற்றாலே இழிவெனநீர் நினையாதீர் உலகீர்

எந்தைஅருட் பெருஞ்ஜோதி இறைவனைச்சார் வீரே.

155

5451

எல்லா உலகமும் என்வசம் ஆயின

எல்லா உயிர்களும் என்உயிர் ஆயின
எல்லா ஞானமும் என்ஞானம் ஆயின
எல்லா வித்தையும் என்வித்தை ஆயின
எல்லா போகமும் என்போகம் ஆயின
எல்லாஇன்பமும் என்இன்பம் ஆயின
எல்லாம் வல்லசிற் றம்பலத் தென்னப்பர்
எல்லாம் நல்கிஎன் உள்ளத்துள் ளாரே.

156

5452

சன்மார்க்க சங்கத்தீர் சிற்றடியேன் உமது
தாள்வணங்கிச் சாற்றுகின்றேன் தயவினொடும் கேட்பீர்
என்மார்க்கத் தெனைநுமக்குள் ஒருவனெனக் கொள்வீர்
எல்லாம்செய் வல்லநம திறைவனையே தொழுவீர்
புன்மார்க்கத் தவர்போலே வேறுசில புகன்றே
புந்திமயக் கடையாதீர் பூரணமெய்ச் சுகமாய்த்
தன்மார்க்க மாய்விளங்கும் சுத்தசிவம் ஒன்றே
தன்ஆணை என்ஆணை சார்ந்தறிமின் ஈண்டே.

157

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5453

ஆதியும் நடுவும் அந்தமும் இல்லா

அருட்பெருஞ் சோதிஎன் உளத்தே

நீதியில் கலந்து நிறைந்தது நானும்

நித்தியன் ஆயினேன் உலகீர்

சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தே

சத்தியச் சுத்தசன் மார்க்க

வீதியில் உமைத்தான் நிறுவுவல் உண்மை

விளம்பினேன் வம்மினோ விரைந்தே.

158

5454

வாது பேசிய மனிதர் காள்ஒரு

வார்த்தை கேண்மீன்கள் வந்துநும்

போது போவதன் முன்ன ரேஅருட்

பொதுவி லேநடம் போற்றுவீர்

தீது பேசினீர் என்றி டாதுமைத்

திருவு ளங்கொளும் காண்மினோ

சூது பேசிலன் நன்மை சொல்கின்றேன்

சுற்றம் என்பது பற்றியே.

159

5455

தூக்கமும் துயரும் அச்சமும் இடரும்

தொலைந்தன தொலைந்தன எனைவிட்

டேக்கமும் வினையும் மாயையும் இருளும்

இரிந்தன ஒழிந்தன முழுதும்

ஆக்கமும் அருளும் அறிவும்மெய் அன்பும்

அழிவுறா உடம்பும்மெய் இன்ப

ஊக்கமும் எனையே உற்றன உலகீர்

உண்மைஇவ் வாசகம் உணர்மின்.

160

கலிப்பா

5456

பிச்சுலகர் மெச்சப் பிதற்றிநின்ற பேதையனேன்

இச்சைஎலாம் எய்த இசைந்தருளிச் செய்தனையே

அச்சம்எலாம் தீர்ந்தேன் அருளமுதம் உண்கின்றேன்

நிச்சலும்பே ரானந்த நித்திரைசெய் கின்றேனே.

161

திருச்சிற்றம்பலம்

Back

126. சிற்சத்தி துதி

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5457.

சோதிக் கொடியே ஆனந்த

சொருபக் கொடியே சோதிஉருப்

பாதிக் கொடியே சோதிவலப்

பாகக் கொடியே(387) எனையீன்ற

ஆதிக் கொடியே உலகுகட்டி

ஆளுங் கொடியே சன்மார்க்க

நீதிக் கொடியே சிவகாம

நிமலக் கொடியே அருளுகவே.

1

(387). இடப்பாகக் கொடியே - பி. இரா. பதிப்பு.

5458.

பொருணற் கொடியே மாற்றுயர்ந்த

பொன்னங் கொடியே போதாந்த

வருணக் கொடியே எல்லாஞ்செய்

வல்லார் இடஞ்சேர் மணிக்கொடியே

தருணக் கொடியே என்தன்னைக்

தாங்கி ஓங்குந் தனிக்கொடியே

கருணைக் கொடியே ஞானசிவ

காமக் கொடியே அருளுகவே.

2

5459.

நீட்டுக் கொடியே சன்மார்க்க

நீதிக் கொடியே சிவகீதப்

பாட்டுக் கொடியே இறைவர்வலப்

பாகக் கொடியே(388) பரநாத

நாட்டுக் கொடியே எனைஈன்ற

ஞானக் கொடியே என்னுறவாம்

கூட்டுக் கொடியே சிவகாமக்

கொடியே அடியேற் கருளுகவே.

3

(388). இடப்பாகக் கொடியே - பி. இரா. பதிப்பு.

5460.

மாலக் கொடியேன் குற்றமெலாம்

மன்னித் தருளி மரணமெனும்

சாலக் கொடியை ஒழித்தெனக்குச்

சார்ந்து விளங்கும் தவக்கொடியே

காலக் கருவைக் கடந்தொளிர்வான்

கருவும் கடந்து வயங்குகின்ற

கோலக் கொடியே சிவஞானக்

கொடியே அடியேற் கருளுகவே.

4

5461.

நாடாக் கொடிய மனம்அடக்கி

நல்ல மனத்தைக் கனிவித்துப்

பாடாப் பிழையைப் பொறுத்தெனக்கும்

பதம்ஈந் தாண்ட பதிக்கொடியே

தேடாக் கரும சித்திஎலாம்

திகழத் தயவால் தெரிவித்த

கோடாக் கொடியே சிவதருமக்

கொடியே அடியேற் கருளுகவே.

5

5462.

மணங்கொள் கொடிப்பூ முதல்நான்கு

வகைப்பூ வடிவுள் வயங்குகின்ற

வணங்கொள் கொடியே ஐம்பூவும்

மலிய மலர்ந்த வான்கொடியே

கணங்கொள் யோக சித்திஎலாம்

காட்டுங் கொடியே கலங்காத

குணங்கொள் கொடியே சிவபோகக்

கொடியே அடியேற் கருளுகவே.

6

5463.

புலங்கொள் கொடிய மனம்போன

போக்கில் போகா தெனைமீட்டு

நலங்கொள் கருணைச் சன்மார்க்க

நாட்டில் விடுத்த நற்கொடியே

வலங்கொள் ஞான சித்திஎலாம்

வயங்க விளங்கு மணிமன்றில்

குலங்கொள் கொடியே மெய்ஞ்ஞானக்

கொடியே அடியேற் கருளுகவே.

7

5464.

வெறிக்கும் சமயக் குழியில்விழ

விரைந்தேன் தன்னை விழாதவகை

மறிக்கும் ஒருபே ரறிவளித்த

வள்ளற் கொடியே மனக்கொடியைச்

செறிக்கும் பெரியர் உளத்தோங்கும்

தெய்வக் கொடியே சிவஞானம்

குறிக்கும் கொடியே ஆனந்தக்

கொடியே அடியேற் கருளுகவே.

8

5465.

கடுத்த விடர்வன் பயம்கவலை

எல்லாம் தவிர்த்துக் கருத்துள்ளே

அடுத்த கொடியே அருளமுதம்

அளித்தென் தனைமெய் அருட்கரத்தால்

எடுத்த கொடியே சித்திஎலாம்

இந்தா மகனே என்றெனக்கே

கொடுத்த கொடியே ஆனந்தக்

கொடியே அடியேற் கருளுகவே.

9

5466.

ஏட்டைத் தவிர்த்தென் எண்ணமெலாம்

எய்த ஒளிதந் தியான்வனைந்த

பாட்டைப் புனைந்து பரிசளித்த

பரம ஞானப் பதிக்கொடியே

தேட்டைத் தனிப்பேர் அருட்செங்கோல்

செலுத்தும் சுத்த சன்மார்க்கக்

கோட்டைக் கொடியே ஆனந்தக்

கொடியே அடியேற் கருளுகவே.

10

திருச்சிற்றம்பலம்

Back

## 127. இன்பத் திறன்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5467.

உலகுபுகழ் திருவமுதம் திருச்சிற்றம் பலத்தே

உடையவர்இன் றுதவினர்நான் உண்டுகுறை தீர்ந்தேன்

இலகுசிவ போகவடி வாகிமகிழ் கின்றேன்

இளைப்பறியேன் தவிப்பறியேன் இடர்செய்பசி அறியேன்

விலகல்இலாத் திருவனையீர் நீவிர்எலாம் பொசித்தே

விரைந்துவம்மின் அம்பலத்தே விளங்குதிருக் கூத்தின்

அலகறியாத் திறம்பாடி ஆடுதும்நாம் இதுவே

அருள்அடையும் நெறிஎனவே தாகமம்ஆர்ப் பனவே.

1

5468

மாதவத்தால் நான்பெற்ற வானமுதே எனது

வாழ்வேஎன் கண்ணமர்ந்த மணியேஎன் மகிழ்வே

போதவத்தால் கழித்தேனை வலிந்துகலந் தாண்ட

பொன்னேபொன் னம்பலத்தே புனிதநடத் தரசே

தீதவத்தைப் பிறப்பிதுவே சிவமாகும் பிறப்பாச்

செய்வித்தென் அவத்தையெலாம் தீர்த்தபெரும் பொருளே

பூதலத்தே அடிச்சிறியேன் நினதுதிரு வடிக்கே

புகழ்மாலை சூட்டுகின்றேன் புனைந்துகலந் தருளே.

2

5469

அளந்திடுவே தாகமத்தின் அடியும்நடு முடியும்

அப்புறமும் அப்பாலும் அதன்மேலும் விளங்கி

வளர்ந்திடுசிற் றம்பலத்தே வயங்கியபே ரொளியே
மாற்றறியாப் பொன்னேஎன் மன்னேகண் மணியே
தளர்ந்தஎனை அக்கணத்தே தளர்வொழித்தா னந்தம்
தந்தபெருந் தகையேஎன் தனித்ததனித் துணைவா
உளந்தருசம் மதமான பணிஇட்டாய் எனக்கே
உன்பணியே பணியல்லால் என்பணிவே றிலையே.

3

5470

நாடுகலந் தாள்கின்றோர் எல்லாரும் வியப்ப
நண்ணிஎனை மாலைஇட்ட நாயகனே நாட்டில்
ஈடுகரைந் திடற்கரிதாம் திருச்சிற்றம் பலத்தே
இன்பநடம் புரிகின்ற இறையவனே எனைநீ
பாடுகஎன் னோடுகலந் தாடுகஎன் றெனக்கே
பணிஇட்டாய் நான்செய்பெரும் பாக்கியம்என் றுவந்தேன்
கோடுதவ றாதுனைநான் பாடுதற்கிங் கேற்ற
குணப்பொருளும் இலக்கியமும் கொடுத்துமகிழ்ந் தருளே.

4

5471

நண்புடையாய் என்னுடைய நாயகனே எனது
நல்உறவே சிற்சபையில் நடம்புரியும் தலைவா
எண்புடையா மறைமுடிக்கும் எட்டாநின் புகழை

யாதறிவேன் பாடுகஎன் றெனக்கேவல் இட்டாய்
பண்புடைநின் மெய்யன்பர் பாடியபே ரன்பில்
பழுத்தபழம் பாட்டில்ஒரு பாட்டும்அறி யேனே
தண்புடைநன் மொழித்திரளும்(389) சுவைப்பொருளும் அவைக்கே
தக்கஇயல் இலக்கியமும் தந்தருள்வாய் எனக்கே.

5

(389). மொழித்திறனும் - முதற்பதிப்பு., பொ. சு., ச. மு. க.

5472

பணிந்தடங்கும் மனத்தவர்பால் பரிந்தமரும் பதியே
பாடுகின்றோர் உள்ளகத்தே கூடுகின்ற குருவே
கணிந்தமறை பலகோடி ஆகமம்பல் கோடி
கடவுள்நின தருட்புகழைக் கணிப்பதற்குப் பலகால்
துணிந்துதுணிந் தெழுந்தெழுந்து தொடர்ந்துதொடர்ந் தடிகள்
சுமந்துசுமந் திளைத்திளைத்துச் சொல்லியவல் லனவென்
றணிந்தமொழி மாற்றிவலி தணிந்தஎன்றால் அந்தோ
அடியேன்நின் புகழ்உரைக்கல் ஆவதுவோ அறிந்தே.

6

5473

விதிப்பவர்கள் பலகோடி திதிப்பவர்பல் கோடி
மேலவர்கள் ஒருகோடி விரைந்துவிரைந் துனையே
மதிப்பவர்கள் ஆகிஅவர் மதியாலே பலகால்

மதித்துமதித் தவர்மதிபெண் மதியாகி அலந்தே

துதிப்பதுவே நலம்எனக்கொண் டிற்றைவரை ஏற்ற

சொற்பொருள்கள் காணாதே சுழல்கின்றார் என்றால்

குதிப்பொழியா மனச்சிறிய குரங்கொடுழல் கின்றேன்

குறித்துரைப்பேன் என்னஉளம் கூசுகின்ற தரசே.

7

5474

ஒளியாகி உள்ஒளியாய் உள்ஒளிக்குள் ஒளியாய்

ஒளிஒளியின் ஒளியாய்அவ் ஒளிக்குளும்ஓர் ஒளியாய்

வெளியாகி வெளிவெளியாய் வெளியிடைமேல் வெளியாய்

மேல்வெளிமேல் பெருவெளியாய்ப் பெருவெளிக்கோர் வெளியாய்

அளியாகி அதுஆகி அதுவும்அல்லா தாகி

அப்பாலாய் அப்பாலும் அல்லதுவாய் நிறைவாம்

தளியாகி எல்லாமாய் விளங்குகின்ற ஞான

சபைத்தலைவா நின்இயலைச் சாற்றுவதெவ் வணமே.

8

5475

வாக்கொழிந்து மனம்ஒழிந்து மதிஒழிந்து மதியின்

வாதனையும் ஒழிந்தறிவாய் வயங்கிநின்ற இடத்தும்

போக்கொழிந்தும் வரவொழிந்தும் பூரணமாய் அதுவும்

போனபொழு துள்ளபடி புகலுவதெப் படியோ

நீக்கொழிந்த நிறைவேமெய்ந் நிலையேஎன் னுடைய

நேயமே ஆனந்த நிருத்தமிடும் பதியே

ஏக்கொழிந்தார் உளத்திருக்கும் இறையேஎன் குருவே

எல்லாமாய் அல்லதுமாய் இலங்கியமெய்ப் பொருளே.

9

5476

என்இயலே யான்அறியேன் இவ்வுலகின் இயல்லூர்

எள்அளவும் தான்அறியேன் எல்லாமும் உடையோய்

நின்இயலை அறிவேனோ அறிந்தவனே போல

நிகழ்த்துகின்றேன் பிள்ளைஎன நிலைப்பெயர்பெற் றிருந்தேன்

தன்இயலாம் தனிஞான சபைத்தலைமைப் பதியே

சத்தியனே நித்தியனே தயாநிதியே உலகம்

பின்இயல்மா னிடப்பிள்ளை பேச்சினும்லூர் பறவைப்

பிறப்பின்உறும் கிளிப்பிள்ளைப் பேச்சுவக்கின் றதுவே.

10

திருச்சிற்றம்பலம்

Back

128. உற்ற துரைத்தல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5477.

துனிநாள் அனைத்தும் தொலைத்துவிட்டேன்

தூக்கம் தவிர்த்தேன் சுகம்பலிக்கும்

கனிநாள் இதுவே என்றறிந்தேன்

கருத்து மலர்ந்தேன் களிப்புற்றேன்

தனிநா யகனே கனகசபைத்

தலைவா ஞான சபாபதியே

இனிநான் இறையும் கலக்கமுறேன்

இளைக்க மாட்டேன் எனக்கருளே.

1

5478

அருளும் பொருளும் யான்பெறவே

அடுத்த தருணம் இதுஎன்றே

தெருளும் படிநின் அருள்உணர்த்தத்

தெரிந்தேன் துன்பத் திகைப்பொழிந்தேன்

மருளும் மனந்தான் என்னுடைய

வசத்தே நின்று வயங்கியதால்

இருளும் தொலைந்த தினிச்சிறிதும்

இளைக்க மாட்டேன் எனக்கருளே.

2

5479

அருளே உணர்த்த அறிந்துகொண்டேன்

அடுத்த தருணம் இதுஎன்றே

இருளே தொலைந்த திடர்அனைத்தும்

எனைவிட் டகன்றே ஒழிந்தனவால்

தெருளே சிற்றம் பலத்தாடும்

சிவமே எல்லாம் செய்யவல்ல

பொருளே இனிநான் வீண்போது

போக்க மாட்டேன் கண்டாயே.

3

5480

கண்டே களிக்கும் பின்பாட்டுக்

காலை இதுஎன் றருள்உணர்த்தக்

கொண்டே அறிந்து கொண்டேன்நல்

குறிகள் பலவுங் கூடுகின்ற

தொண்டே புரிவார்க் கருளும்அருட்

சோதிக் கருணைப் பெருமனே

உண்டேன் அமுதம் உண்கின்றேன்

உண்பேன் துன்பை ஒழித்தேனே.

4

5481

ஒழித்தேன் அவலம் அச்சம்எலாம்

ஓடத் துறந்தேன் உறுகண்எலாம்

கழித்தேன் மரணக் களைப்பற்றேன்

களித்தேன் பிறவிக் கடல்கடந்தேன்

பழித்தேன் சிற்றம் பலம்என்னாப்

பாட்டை மறந்தேன் பரம்பரத்தே

விழித்தேன் கருத்தின் படிஎல்லாம்

விளையா டுதற்கு விரைந்தேனே.

5

5482

விரைந்து விரைந்து படிகடந்தேன்

மேற்பால் அமுதம் வியந்துண்டேன்

கரைந்து கரைந்து மனம்உருகக்

கண்ணீர் பெருகக் கருத்தலர்ந்தே

வரைந்து ஞான மணம்பொங்க

மணிமன் றரசைக் கண்டுகொண்டேன்

திரைந்து நெகிழ்ந்த தோலுடம்பும்

செழும்பொன் உடம்பாய்த் திகழ்ந்தேனே.

6

5483

தேனே கன்னல் செழும்பாகே

என்ன மிகவும் தித்தித்தென்

ஊனே புகுந்தென் உளத்தில்அமர்ந்

துயிரில் கலந்த ஒருபொருளை

வானே நிறைந்த பெருங்கருணை

வாழ்வை மணிமன் றுடையானை

நானே பாடிக் களிக்கின்றேன்

நாட்டார் வாழ்த்த நானிலத்தே.

7

5484

நிலத்தே அடைந்த இடர்அனைத்தும்

நிமிடத் தொழித்தே நிலைபெற்றேன்

வலத்தே அழியா வரம்பெற்றேன்

மணிமன் றேத்தும் வாழ்வடைந்தேன்

குலத்தே சமயக் குழியிடத்தே

விழுந்திவ் வுலகம் குமையாதே

நலத்தே சுத்த சன்மார்க்கம்

நாட்டா நின்றேன் நாட்டகத்தே.

8

5485

அகத்தே கறுத்துப் புறத்துவெளுத்

திருந்த உலகர் அனைவரையும்

சகத்தே திருத்திச் சன்மார்க்க

சங்கத் தடைவித் திடஅவரும்

இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்

திடுதற் கென்றே எனைஇந்த

உகத்தே இறைவன் வருவிக்க

உற்றேன் அருளைப் பெற்றேனே.

9

5486

பெற்றேன் என்றும் இறவாமை

பேதம் தவிர்ந்தே இறைவன்எனை

உற்றே கலந்தான் நானவனை

உற்றே கலந்தேன் ஒன்றானேம்

எற்றே அடியேன் செய்ததவம்

யாரே புரிந்தார் இன்னமுதம்

துற்றே உலகீர் நீவிர்எலாம்

வாழ்க வாழ்க துனிஅற்றே.

10

திருச்சிற்றம்பலம்

Back

129. சுத்த சிவநிலை

நேரிசை வெண்பா

5487.

கண்ணிற் கலந்தான் கருத்திற் கலந்தான்என்

எண்ணிற் கலந்தே இருக்கின்றான் - பண்ணிற்

கலந்தான்என் பாட்டிற் கலந்தான் உயிரில்

கலந்தான் கருணை கலந்து.

1

5488

எல்லா நலமும் எனக்கே கொடுக்கின்றான்

எல்லாம் செயவல்லான் எம்பெருமான் - எல்லாமாய்

நின்றான் பொதுவில் நிருத்தம் புரிகின்றான்

ஒன்றாகி நின்றான் உவந்து.

2

5489

எண்ணுகின்றேன் எண்ணங்கள் எல்லாம் தருகின்றான்

பண்ணுகின்றேன் பண்ணுவித்துப் பாடுகின்றான் - உண்ணுகின்றேன்

தெள்ளமுதம் உள்ளந் தெளியத் தருகின்றான்

வள்ளல்நட ராயன் மகிழ்ந்து.

3

5490

சித்தியெலாந் தந்தே திருவம் பலத்தாடும்

நித்தியனென் உள்ளே நிறைகின்றான் - சத்தியம்ஈ

தந்தோ உலகீர் அறியீரோ நீவிரெலாம்

சந்தோட மாய்இருமின் சார்ந்து.

4

5491

அய்யாஎன் றோர்கால் அழைக்கின்றேன் அப்பொழுதே
எய்யேன் மகனேஎன் றெய்துகின்றான் - ஐயோஎன்
அப்பன் பெருங்கருணை யார்க்குண் டுலகத்தீர்
செப்பமுடன் போற்றுமினோ சேர்ந்து.

5

5492

அப்பாஎன் றோர்கால் அழைக்கின்றேன் அப்பொழுதே
அப்பா மகனேஎன் றார்கின்றான் - துப்பார்
சடையான்சிற் றம்பலத்தான் தானேதான் ஆனான்
உடையான் உளத்தே உவந்து.

6

5493

தானேவந் தென்உளத்தே சார்ந்து கலந்துகொண்டான்
தானே எனக்குத் தருகின்றான் - தானேநான்
ஆகப் புரிந்தானென் அப்பன் பெருங்கருணை
மேகத்திற் குண்டோ விளம்பு.

7

5494

பாலும் கொடுத்தான் பதிதிறக்கும் ஓர்திறவுக்

கோலும் கொடுத்தான் குணங்கொடுத்தான் - காலும்
தலையும் அறியும் தரமும் கொடுத்தான்
நிலையும் கொடுத்தான் நிறைந்து.

8

5495

வெவ்வினையும் மாயை விளைவும் தவிர்ந்தனவே
செவ்வைஅறி வின்பம் சிறந்தனவே - எவ்வயினும்
ஆனான்சிற் றம்பலத்தே ஆடுகின்றான் தண்அருளாம்
தேன்நான் உண் டோ ங்கியது தேர்ந்து.

9

5496

வஞ்சவினை எல்லாம் மடிந்தனவன் மாயைஇருள்
அஞ்சிஎனை விட்டே அகன்றனவால் - எஞ்சலிலா
இன்பமெலாம் என்றனையே எய்தி நிறைந்தனவால்
துன்பமெலாம் போன தொலைந்து.

10

5497

அம்மை திரோதை அகன்றாள் எனைவிரும்பி
அம்மையருட் சத்தி அடைந்தனளே - இம்மையிலே
மாமாயை நீங்கினள்பொன் வண்ணவடி வுற்றதென்றும்
சாமா றிலைஎனக்குத் தான்.

11

5498

நானே தவம்புரிந்தேன் நானிலத்தீர் அம்பலவன்

தானேவந் தென்னைத் தடுத்தாண்டான் - ஊனே

புகுந்தான்என் உள்ளம் புகுந்தான் உயிரில்

புகுந்தான் கருணை புரிந்து.

12

5499

ஒன்றே சிவம்என் றுணர்ந்தேன் உணர்ந்தாங்கு

நின்றேமெய்ஞ் ஞான நிலைபெற்றேன் - நன்றேமெய்ச்

சித்தியெலாம் பெற்றேன் திருஅம்ப லத்தாடு

பத்திஎலாம் பெற்ற பலன்.

13

5500

தூக்கங் கெடுத்தான் சுகங்கொடுத்தான் என்னுளத்தே

ஏக்கந் தவிர்த்தான் இருள்அறுத்தான் - ஆக்கமிகத்

தந்தான் எனைஈன்ற தந்தையே என்றழைக்க

வந்தான்என் அப்பன் மகிழ்ந்து.

14

5501

வாட்டமெலாம் தீர்த்தான் மகிழ்வளித்தான் மெய்ஞ்ஞான

நாட்டமெலாம் தந்தான் நலங்கொடுத்தான் - ஆட்டமெலாம்
ஆடுகநீ என்றான்தன் ஆனந்த வார்கழலைப்
பாடுகநீ என்றான் பரன்.

15

5582

தான்நான் எனும்பேதந் தன்னைத் தவிர்த்தான்நான்
ஆனான்சிற் றம்பலவன் அந்தோநான் - வானாடர்
செய்தற் கரியதவம் செய்தேன் மகிழ்கின்றேன்
எய்தற் கரியசுகம் ஏய்ந்து.

16

5583

சுத்த வடிவும் சுகவடிவாம் ஓங்கார
நித்த வடிவும் நிறைந்தோங்கு - சித்தெனும்ஓர்
ஞான வடிவுமிங்கே நான்பெற்றேன் எங்கெங்கும்
தானவிளை யாட்டியற்றத் தான்.

17

5584

நான்உரைக்கும் வார்த்தைஎலாம் நாயகன்சொல் வார்த்தைஅன்றி
நான்உரைக்கும் வார்த்தைஅன்று நாட்டீர்நான் - ஏன்உரைப்பேன்
நான்ஆர் எனக்கெனஓர் ஞானஉணர் வேதுசிவம்
ஊன்நாடி நில்லா உழி.

18

5585

ஆரணமும் ஆகமமும் ஆங்காங் குரைக்கின்ற

காரணமும் காரியமும் காட்டுவித்தான் - தாரணியில்

கண்டேன் களிக்கின்றேன் கங்குல்பகல் அற்றவிடத்

துண்டேன் அமுதம் உவந்து.

19

5586

துன்மார்க்கம் எல்லாம் தொலைத்துவிட்டேன் சுத்தசிவ

சன்மார்க்க சங்கம் தலைப்பட்டேன் - என்மார்க்கம்

நன்மார்க்கம் என்றேவான் நாட்டார் புகழ்கின்றார்

மன்மார்க்கத் தாலே மகிழ்ந்து.

20

5587

பன்மார்க்கம் எல்லாம் பசையற் றொழிந்தனவே

சன்மார்க்கம் ஒன்றே தழைத்ததுவே - சொன்மார்க்கத்

தெல்லா உலகும் இசைந்தனவே எம்பெருமான்

கொல்லா நெறிஅருளைக் கொண்டு.

21

5588

சாதிகுலம் என்றும் சமயமதம் என்றுமுப

நீதிஇயல் ஆச்சிரம நீட்டென்றும் - ஓதுகின்ற

பேயாட்ட மெல்லாம் பிதிர்ந்தொழிந்த வேபிறர்தம்

வாயாட்டம் தீர்ந்தனவே மற்று.

22

5509

சிந்தா குலந்தவிர்த்துச் சிற்றம் பலப்பெருமான்

வந்தான் எனைத்தான் வலிந்தழைத்தே - ஐந்தொழிலும்

நீயேசெய் என்றெனக்கே நேர்ந்தளித்தான் என்னுடைய

தாயே அனையான் தனித்து.

23

5510

கூகா எனஅடுத்தோர் கூழ் அழாதவண்ணம்

சாகா வரம்எனக்கே தந்திட்டான் - ஏகாஅன்

ஏகா எனமறைகள் ஏத்துஞ்சிற் றம்பலத்தான்

மாகா தலனா மகிழ்ந்து.

24

5511

நாடுகின்ற தெம்பெருமான் நாட்டமதே நான்உலகில்

ஆடுகின்ற தெந்தைஅருள் ஆட்டமதே - பாடுகின்ற

பாட்டெல்லாம் அம்பலவன் பாத மலர்ப்பாட்டே

நீட்டெல்லாம் ஆங்கவன்றன் நீட்டு.

25

5512

சத்தியஞ்செய் கின்றேன் சகத்தீர் அறிமின்கள்

சித்திஎலாம் வல்ல சிவம்ஒன்றே - நித்தியம்என்

றெண்ணுமெண்ணத் தாலேநம் எண்ணமெலாம் கைகூடும்

நண்ணுமின்பத் தேன்என்று நான்.

26

5513

நானே தவம்புரிந்தேன் நம்பெருமான் நல்அருளால்

நானே அருட்சித்தி நாடடைந்தேன் - நானே

அழியா வடிவம் அவைமூன்றும் பெற்றேன்

இழியாமல் ஆடுகின்றேன் இங்கு.

27

5514

எவ்வுலகும் அண்டங்கள் எத்தனையும் நான்காண

இவ்வுலகில் எந்தை எனக்களித்தான் - எவ்வுயிரும்

சன்மார்க்க சங்கம் தனைஅடையச் செய்வித்தே

என்மார்க்கம் காண்பேன் இனி.

28

5515

சாத்திரங்கள் எல்லாம் தடுமாற்றம் சொல்வதன்றி

நேத்திரங்கள் போற்காட்ட நேராவே - நேத்திரங்கள்

சிற்றம் பலவன் திருவருட்சீர் வண்ணமென்றே

உற்றிங் கறிந்தேன் உவந்து.

29

5516

வேதாக மங்களென்று வீண்வாதம் ஆடுகின்றீர்

வேதாக மத்தின் விளைவறியீர் - சூதாகச்

சொன்னவலால் உண்மைவெளி தோன்ற உரைக்கவிலை

என்ன பயனோ இவை.

30

5517

சாகாத கல்வித் தரம்அறிதல் வேண்டுமென்றும்

வேகாத கால்உணர்தல் வேண்டுமுடன் - சாகாத்

தலைஅறிதல் வேண்டும் தனிஅருளால் உண்மை

நிலைஅடைதல் வேண்டும் நிலத்து.

31

5518

பொய்உரைஎன் றெண்ணுதிரேல் போமின் புறக்கடையில்

மெய்யுரைஎன் றெண்ணுதிரேல் மேவுமினோ - ஐயனருள்

சித்திஎலாம் வல்ல திருக்கூத் துலவாமல்

இத்தினந்தொட் டாடுகிற்பான் இங்கு.

32

5519

வான்வந்த தேவர்களும் மால்அயனும் மற்றவரும்

தான்வந்து சூழ்ந்தார் தலைக்கடையில் - தேன்வந்த

மங்கை சிவகாம வல்லியொடும் எம்பெருமான்

இங்குநடஞ் செய்வான் இனி.

33

5520

சத்திஎலாம் கொண்டதனித் தந்தை நடராயன்

சித்திஎலாம் வல்லான் திருவாளன் - நித்தியன்தான்

ஊழிபல சென்றாலும் ஓவாமல் இவ்விடத்தே

வாழிநடஞ் செய்வான் மகிழ்ந்து.

34

5521

இன்று தொடங்கியிங்கே எம்பெருமான் எந்நாளும்

நன்று துலங்க நடம்புரிவான் - என்றுமென்சொல்

சத்தியம்என் றெண்ணிச் சகத்தீர் அடைமின்கள்

நித்தியம்பெற் றுய்யலாம் நீர்.

35

5522

என்உடலும் என்பொருளும் என்உயிரும் தான்கொண்டான்

தன்உடலும் தன்பொருளும் தன்உயிரும் - என்னிடத்தே
தந்தான் அருட்சிற் சபையப்பா என்றழைத்தேன்
வந்தான்வந் தான்உள் மகிழ்ந்து.

36

5523

செத்தாரை எல்லாம் திரும்ப எழுப்புதல்இங்
கெத்தால் முடியுமெனில் எம்மவரே - சித்தாம்
அருட்பெருஞ் சோதி அதனால் முடியும்
தெருட்பெருஞ் சத்தியம்ஈ தே.

37

5524

இவ்வுலகில் செத்தாரை எல்லாம் எழுகஎனில்
எவ்வுலகும் போற்ற எழுந்திருப்பார் - செவ்வுலகில்
சிற்றம் பலத்தான் திருவருள்பெற் றார்நோக்கம்
உற்றவரை உற்றவர்கள் உற்று.

38

5525

யான்புரிதல் வேண்டுங்கொல் இவ்வுலகில் செத்தாரை
ஊன்புரிந்து மீள உயிர்ப்பித்தல் - வான் புரிந்த
அம்பலத்தான் நல்லருளால் அந்தோநான் மேற்போர்த்த
கம்பலத்தால் ஆகும் களித்து.

39

5526

என்னே உலகில் இறந்தார் எழுதல்மிக
அன்னே அதிசயமென் றாடுகின்றார் - இன்னே
திருவம் பலத்தான் திருநோக்கம் பெற்றார்க்
குருவம் பலத்தேஎன் றுன்.

40

5527

ஆடாதீர் சற்றும் அசையாதீர் வேறொன்றை
நாடாதீர் பொய்உலகை நம்பாதீர் - வாடாதீர்
சன்மார்க்க சங்கத்தைச் சார்வீர் விரைந்தினிஇங்
கென்மார்க்க மும்ஒன்றா மே.

41

5528

மார்க்கமெலாம் ஒன்றாகும் மாநிலத்தீர் வாய்மைஇது
தூக்கமெலாம் நீக்கித் துணிந்துளத்தே - ஏக்கம்விட்டுச்
சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்திடுமின் சத்தியம்நீர்
நன்மார்க்கம் சேர்வீர்இந் நாள்.

42

5529

இந்நாளே கண்டீர் இறந்தார் எழுகின்ற

நன்னாள்என் வார்த்தைகளை நம்புமினோ - இந்நாள்
அருட்பெருஞ் சோதி அடைகின்ற நாள்மெய்
அருட்பெருஞ் சத்தியம்ஈ தாம்.

43

5530

ஏமாந் திருக்கும் எமரங்காள் இவ்வுலகில்
சாமாந்தர் ஆகாத் தரம்பெறவே - காமாந்த
காரத்தை விட்டுக் கருதுமினோ இத்தருணம்
நீரத்தைச் சேர்வீர் நிஜம்.

44

5531

வீணே பராக்கில் விடாதீர் உமதுளத்தை
நாணே உடைய நமரங்காள் - ஊணாகத்
தெள்ளமுதம் இன்றெனக்குச் சேர்த்தளித்தான் சித்தாட
உள்ளியநாள் ஈதறிமின் உற்று.

45

5532

போற்றி உரைக்கின்றேன் பொய்என் றிகழாதீர்
நாற்றிசைக்கண் வாழும் நமரங்காள் - ஆற்றலருள்
அப்பன்வரு கின்றான் அருள்விளையாட் டாடுதற்கென்
றிப்புவியில் இத்தருணம் இங்கு.

46

5533

ஆளுடையான் நம்முடைய அப்பன் வருகின்ற

நாள்எதுவோ என்று நலியாதீர் - நீள

நினையாதீர் சத்தியம்நான் நேர்ந்துரைத்தேன் இந்நாள்

அனையான் வருகின்றான் ஆய்ந்து.

47

திருச்சிற்றம்பலம்

Back

## 130. உலகப்பேறு

கலிவிருத்தம்

5534.

இன்பால் உலகங்கள் யாவும் விளங்கின

துன்பால் இறந்தவர் துன்பற்றுத் தோன்றினர்

அன்பால் அடியவர் ஆடினர் பாடினர்

என்பால் அருட்பெருஞ் சோதியார் எய்தவே.

1

5535

பாம்பெலாம் ஓடின பறவையுட் சார்ந்தன

தீம்பலா வாழைமாத் தென்னை சிறந்தன

ஆம்பலன் மென்மேலும் ஆயின என்னுளத்

தோம்பல்என் அருட்பெருஞ் சோதியார் ஓங்கவே.

2

5536

மலங்கழிந் துலகவர் வானவர் ஆயினர்

வலம்பெறு சுத்தசன் மார்க்கம் சிறந்தது

பலம்பெறு மனிதர்கள் பண்புளர் ஆயினர்

நலம்பெறும் அருட்பெருஞ் சோதியார் நண்ணவே.

3

5537

முன்னுள மார்க்கங்கள் யாவும் முடிந்தன

மன்னுள சுத்தசன் மார்க்கம் சிறந்தது

பன்னுளந் தெளிந்தன பதிநடம் ஓங்கின

என்னுளத் தருட்பெருஞ் சோதியார் எய்தவே.

4

5538

இடம்பெற்ற உயிர்எலாம் விடம்அற்று வாழ்ந்தன

மடம்பெற்ற மனிதர்கள் மதிபெற்று வாழ்கின்றார்

திடம்பெற்றே எழுகின்றார் செத்தவர் தினந்தினம்

நடம்பெற்ற அருட்பெருஞ் சோதியார் நண்ணவே.

5

5539

அண்டமும் அகிலமும் அருளர சாட்சியைக்

கொண்டன ஓங்கின குறைஎலாம் தீர்ந்தன

பண்டங்கள் பலித்தன பரிந்தென துள்ளத்தில்

எண்டகும் அருட்பெருஞ் சோதியார் எய்தவே.

6

5540

குணங்கள் சிறந்தன குற்றங்கள் அற்றன

மணங்கள் விளங்கின வாழ்வுகள் ஓங்கின

பிணங்கள் எலாம்உயிர் பெற்றெழுந் தோங்கின

இணங்க அருட்பெருஞ் சோதியார் எய்தவே.

7

5541

பத்தர்கள் பாடினர் பணிந்துநின் றாடினர்

முத்தர்கள் மெய்ப்பொருள் முன்னி மகிழ்ந்தனர்

சித்தர்கள் ஆனந்தத் தெள்ளமு துண்டனர்

சுத்த அருட்பெருஞ் சோதியார் தோன்றவே.

8

5542

ஏழுல கவத்தைவிட் டேறினன் மேனிலை

ஊழிதோ றூழியும் உயிர்தழைத் தோங்கினன்

ஆழியான் அயன்முதல் அதிசயித் திடஎனுள்

வாழிஅ ருட்பெருஞ் சோதியார் மன்னவே.

9

5543

இருட்பெரு மலமுழு துந்தவிர்ந் திற்றது

மருட்பெரும் கன்மமும் மாயையும் நீங்கின

தெருட்பெருஞ் சித்திகள் சேர்ந்தன என்னுளத்

தருட்பெருஞ் சோதிஎன் அன்பிற் கலந்ததே.

10

திருச்சிற்றம்பலம்

Back

131. அன்புருவமான சிவம் ஒன்றே உளதெனல்

கலிநிலைத் துறை

5544.

அருட்பெ ருந்தனிச் சோதிஅம் பலத்திலே நடிக்கும்

பொருட்பெ ருந்திரு நடமது போற்றுவீர் புலவீர்

மருட்பெ ரும்பகை நீக்கிமெய் வாழ்வுபெற் றிடலாம்

தெருட்பெ ரும்பதத் தாணைஈ தறிமினோ தெளிந்தே.

1

5545

வாரம் செய்தபொன் மன்றிலே நடிக்கும்பொன் அடிக்கே

ஆரம் செய்தணிந் தவர்க்குமுன் அரிஅயன் முதலோர்

வீரம் செல்கிலா தறிமினோ வேதமேல் ஆணை
ஓரம் சொல்கிலேன் நடுநின்று சொல்கின்றேன் உலகீர்.

2

5546

ஆதி அந்தமும் இல்லதோர் அம்பலத் தாடும்
சோதி தன்னையே நினைமின்கள் சுகம்பெற விழைவீர்
நீதி கொண்டுரைத் தேன்இது நீவிர்மேல் ஏறும்
வீதி மற்றைய வீதிகள் கீழ்ச்செலும் வீதி.

3

5547

நாதம் சொல்கின்ற திருச்சிற்றம் பலத்திலே நடிக்கும்
பாதம் சொல்கின்ற பத்தரே நித்தர்என் றறிமின்
வேதம் சொல்கின்ற பரிசிது மெய்ம்மையான் பக்க
வாதஞ் சொல்கிலேன் நடுநின்று சொல்கின்றேன் மதித்தே.

4

5548

துரிய மேல்பர வெளியிலே சுகநடம் புரியும்
பெரிய தோர்அருட் சோதியைப் பெறுதலே எவைக்கும்
அரிய பேறுமற் றவைஎலாம் எளியவே அறிமின்
உரிய இம்மொழி மறைமொழி சத்தியம் உலகீர்.

5

5549

ஆக மாந்தமும் வேதத்தின் அந்தமும் அறையும்

பாக மாம்பர வெளிநடம் பரவுவீர் உலகீர்

மோக மாந்தருக் குரைத்திலேன் இதுசுகம் உன்னும்

யோக மாந்தர்க்குக் காலமுண் டாகவே உரைத்தேன்.

6

5550

வான நாடரும் நாடரும் மன்றிலே வயங்கும்

ஞான நாடகக் காட்சியே நாம்பெறல் வேண்டும்

ஊன நாடகக் காட்சியால் காலத்தை ஒழிக்கும்

ஈன நாடகப் பெரியர்காள் வம்மினோ ஈண்டே.

7

5551

சமயம் ஓர்பல கோடியும் சமயங்கள் தோறும்

அமையும் தெய்வங்கள் அனந்தமும் ஞானசன் மார்க்கத்

தெமையும் உம்மையும் உடையதோர் அம்பலத் திறையும்

அமைய ஆங்கதில் நடம்புரி பதமும்என் றறிமின்.(390)

8

(390). அமைய அம்பலத்தாடும் பொற்பதமும் என்றறிமின் - முதற்பதிப்பு,

பொ. சு., பி. இரா.

5552

ஆறு கோடியாம் சமயங்கள் அகத்தினும் அவைமேல்

வீறு சேர்ந்தசித் தாந்தவே தாந்தநா தாந்தம்

தேறும் மற்றைய அந்தத்தும் சிவம்லுன்றே அன்றி

வேறு கண்டிலேன் கண்டிரேல் பெரியர்காள் விளம்பீர்.

9

5553

கலைஇ ருந்ததோர் திருச்சிற்றம் பலத்திலே கருணை

நிலைஇ ருந்தது நினைத்தவை யாவையும் பெறலாம்

மலைஇ ருந்தென இருப்பிரேல் வம்மினோ அன்றிக்

கொலைவி ரும்புவீர் எனிற்புறத் தேகுமின் குலைந்தே.

10

5554

கதிஇ ருக்கின்ற திருச்சிற்றம் பலத்திலே கருணை

நிதிஇ ருக்கின்ற தாதலால் நீவீர்கள் எல்லாம்

பதிய இங்ஙனே வம்மினோ கொலைபயில் வீரேல்

விதியை நோமினோ போமினோ சமயவெப் பகத்தே.

11

5555

அருள்வி ளங்கிய திருச்சிற்றம் பலத்திலே அழியாப்

பொருள்வி ளங்குதல் காண்மினோ காண்மினோ புவியீர்

மருள்உ ளங்கொளும் வாதனை தவிர்ந்தருள் வலத்தால்

தெருள்வி ளங்குவீர் ஞானசன் மார்க்கமே தெளிமின்.

12

திருச்சிற்றம்பலம்

Back

132. உலகர்க்கு உய்வகை கூறல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5556.

கட்டோ டே கனத்தோடே வாழ்கின்றோம் என்பீர்

கண்ணோடே கருத்தோடே கருத்தனைக் கருதீர்

பட்டோ டே பணியோடே திரிகின்றீர் தெருவில்

பசியோடே வந்தாரைப் பார்க்கவும் நேரீர்

கொட்டோ டே முழக்கோடே கோலங்காண் கின்றீர்

குணத்தோடே குறிப்போடே குறிப்பதைக் குறியீர்

எட்டோ டே இரண்டுசேர்த் தெண்ணவும் அறியீர்

எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

1

5557

ஆறாமல் அவியாமல் அடைந்தகோ பத்தீர்

அடர்வுற உலகிடை அஞ்சாது திரிவீர்

மாறாமல் மனஞ்சென்ற வழிசென்று திகைப்பீர்

வழிதுறை காண்கிலீர் பழிபடும் பழக்கே
நாறாத மலர்போலும் வாழ்கின்றீர் மூப்பு
நரைதிரை மரணத்துக் கென்செயக் கடவீர்
ஏறாமல் வீணிலே இறங்குகின் றீரே
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

உ

5558

ஆயாமை யாலேநீர் ஆதிஅ னாதி
ஆகிய சோதியை அறிந்துகொள் கில்லீர்
மாயாமை பிறவாமை வழியொன்றும் உணரீர்
மறவாமை நினையாமை வகைசிறி தறியீர்
காயாமை பழுக்கின்ற கருத்தையும் கருதீர்
கண்மூடித் திரிகின்றீர் கனிவொடும் இரப்போர்க்
கீயாமை ஒன்றையே இன்துணை என்பீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

3

5559

சாமாந்தர் ஆகாத் தரஞ்சிறி துணரீர்
தத்துவ ஞானத்தை இற்றெனத் தெரியீர்
மாமாந்த நோயுற்ற குழவியில் குழைந்தீர்
வாழ்க்கையி லேஅற்ப மகிழ்ச்சியும் பெற்றீர்

காமாந்த காரத்தில் கண்மூடித் திரிவீர்
கற்பன கற்கிலீர் கருத்தனைக் கருதா
தேமாந்து தூங்குகின் றீர்விழிக் கின்றீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

4

5560

அச்சையும் உடம்பையும் அறிவகை அறியீர்
அம்மையும் அப்பனும் ஆர்எனத் தெரியீர்
பச்சையும் செம்மையும் கருமையும் கூடிப்
பலித்தநும் வாழ்க்கையில் பண்பொன்றும் இல்லீர்
பிச்சையிட் டுண்ணவும் பின்படு கின்றீர்
பின்படு தீமையின் முன்படு கின்றீர்
இச்சையில் கண்மூடி எச்சகம் கண்டீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

5

5561

வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர்
வட்டியை வளர்க்கின்ற மார்க்கத்தை அறியீர்
பெட்டிமேல் பெட்டிவைத் தாள்கின்றீர் வயிற்றுப்
பெட்டியை நிரப்பிக்கொண் டொட்டியுள் இருந்தீர்
பட்டினி கிடப்பாரைப் பார்க்கவும் நேரீர்

பழங்கஞ்சி ஆயினும் வழங்கவும் நினையீர்
எட்டிபோல் வாழ்கின்றீர் கொட்டிபோல் கிளைத்தீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

6

5562

வன்சொல்லின் அல்லது வாய்திறப் பறியீர்
வாய்மையும் தூய்மையும் காய்மையில் வளர்ந்தீர்
முன்சொல்லும் ஆறொன்று பின்சொல்வ தொன்றாய்
மூட்டுகின் றீர்வினை மூட்டையைக் கட்டி
மன்சொல்லும் மார்க்கத்தை மறந்துதுன் மார்க்க
வழிநடக் கின்றீர்அம் மரணத்தீர்ப் புக்கே
என்சொல்ல இருக்கின்றீர் பின்சொல்வ தறியீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

7

5563

துன்மார்க்க நடையிடைத் தூங்குகின் றீரே
தூக்கத்தை விடுகின்ற துணைஒன்றும் கருதீர்
சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்திட விழையீர்
சாவையும் பிறப்பையும் தவிர்ந்திட விரும்பீர்
பன்மார்க்கம் செல்கின்ற பழிற்றுளம் அடக்கீர்
பசித்தவர் தம்முகம் பார்த்துண வளியீர்

என்மார்க்கம் எச்சுகம் யாதுநும் வாழ்க்கை

எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

8

5564

பொய்கட்டிக் கொண்டுநீர் வாழ்கின்றீர் இங்கே

புலைகட்டிக் கொண்டஇப் பொய்யுடல் வீழ்ந்தால்

செய்கட்டி வாழ்கின்ற செருக்கற்று நரகில்

சிறுபுழு ஆகித் திகைத்திடல் அறியீர்

கைகட்டி வாய்பொத்தி நிற்பாரைக் கண்டே

கைகொட்டிச் சிரிக்கின்றீர் கருணைஒன் றில்லீர்

எய்கட்டி இடைமொய்க்கும் ஈயினும் சிறியீர்

எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

9

5565

பண்ணாத தீமைகள் பண்ணுகின் றீரே

பகராத வன்மொழி பகருகின் றீரே

நண்ணாத தீயினம் நண்ணுகின் றீரே

நடவாத நடத்தைகள் நடக்கவந் தீரே

கண்ணாகக் காக்கின்ற கருத்தனை நினைந்தே

கண்ணார நீர்விட்டுக் கருதறி யீரே

எண்ணாத தெண்ணவும் நேரும்ஓர் காலம்

எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

10

திருச்சிற்றம்பலம்

Back

133. புனித குலம் பெறுமாறு புகலல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5566.

சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே

சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே

ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்

அலைந்தலைந்து வீணேநீர் அழிதல்அழ கலவே

நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே நிறுத்த

நிருத்தமிடும் தனித்தலைவர் ஒருத்தர்அவர் தாமே

வீதியிலே அருட்சோதி விளையாடல் புரிய

மேவுகின்ற தருணம்இது கூவுகின்றேன் உமையே.

1

5567

காடுவெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டுக்

கரும்பைவிட்டுக் கடுவிரைத்துக் களிக்கின்ற உலகீர்

கூடுவிட்டுப் போயினபின் எதுபுரிவீர் எங்கே

குடியிருப்பீர் ஐயோநீர் குறித்தறியீர் இங்கே

பாடுபட்டீர்(391) பயன்அறியீர் பாழ்க்கிறைத்துக் கழித்தீர்

பட்டதெலாம் போதும்இது பரமர்வரு தருணம்

ஈடுகட்டி வருவீரேல் இன்பம்மிகப் பெறுவீர்

எண்மைஉரைத் தேன்அலன்நான் உண்மையுரைத் தேனே.

2

(391). பாடுபட்டுப் - ச. மு. க. பதிப்பு.

5568

ஆற்றுவெள்ளம் வருவதன்முன் அணைபோட அறியீர்

அகங்காரப் பேய்பிடித்தீர் ஆடுதற்கே அறிவீர்

கூற்றுவருங் கால்அதனுக் கெதுபுரிவீர் ஐயோ

கூற்றுதைத்த சேவடியைப் போற்றவிரும் பீரே

வேற்றுரைத்து வினைபெருக்கி மெலிகின்ற உலகீர்

வீணுலகக் கொடுவழக்கை விட்டுவிட்டு வம்மின்

சாற்றுவக்க எனதுதனித் தந்தைவரு கின்ற

தருணம்இது சத்தியஞ்சிற் சத்தியைச்சார் வதற்கே.

3

5569

பொய்விளக்கப் புகுகின்றீர் போதுகழிக் கின்றீர்

புலைகொலைகள் புரிகின்றீர் கலகலஎன் கின்றீர்

கைவிளக்குப் பிடித்தொருபாழ்ங் கிணற்றில்விழு கின்ற

களியர்எனக் களிக்கின்றீர் கருத்திருந்தும் கருதீர்

ஐவிளக்கு மூப்புமர ணாதிகளை நினைத்தால்
அடிவயிற்றை முறுக்காதோ கொடியமுயற் றுலகீர்
மெய்விளக்க எனதுதந்தை வருகின்ற தருணம்
மேவியதீண் டடைவீரேல் ஆவிபெறு வீரே.

4

5570

எய்வகைசார்392 மதங்களிலே பொய்வகைச்சாத் திரங்கள்
எடுத்துரைத்தே எமதுதெய்வம் எமதுதெய்வம் என்று
கைவகையே கதறுகின்றீர் தெய்வம்ஒன்றென் றறியீர்
கரிபிடித்துக் கலகமிட்ட பெரியரினும் பெரியீர்
ஐவகைய பூதவுடம் பழிந்திடில்என் புரிவீர்
அழியுடம்பை அழியாமை ஆக்கும்வகை அறியீர்
உய்வகைஎன் தனித்தந்தை வருகின்ற தருணம்
உற்றதிவண் உற்றிடுவீர் பெற்றிடுவீர் உவப்பே.

5

(392). எவ்வகைசார் - முதற்பதிப்பு., பொ. சு. பதிப்பு.

5571

உடம்புவரு வகைஅறியீர் உயிர்வகையை அறியீர்
உடல்பருக்க உண்டுநிதம் உறங்குதற்கே அறிவீர்
மடம்புகுபேய் மனத்தாலே மயங்குகின்றீர் மனத்தை
வசப்படுத்தீர் வசப்படுத்தும் வழிதுறைகற் றறியீர்

இடம்பெறுபொய் வாழ்க்கையிலே இன்பதுன்பம் அடுத்தே
எண்ணிஎண்ணி இளைக்கின்றீர் ஏழைஉல கீரே
நடம்புரிஎன் தனித்தந்தை வருகின்ற தருணம்
நண்ணியது நண்ணுமினோ புண்ணியஞ்சார் வீரே.

6

5572

நரைமரண மூப்பறியா நல்லஉடம் பினரே
நற்குலத்தார் எனஅறியீர் நானிலத்தீர் நீவிர்
வரையில்உயர் குலம்என்றும் தாழ்ந்தகுலம் என்றும்
வகுக்கின்றீர் இருகுலமும் மாண்டிடக்காண் கின்றீர்
புரையுறுநும் குலங்கள்எலாம் புழுக்குலம்என் றறிந்தே
புத்தமுதம் உண்டோங்கும் புனிதகுலம் பெறவே
உரைபெறும்என் தனித்தந்தை வருகின்ற தருணம்
உற்றதிவண் உற்றிடுவீர் உண்மைஉரைத் தேனே.

7

5573

கனமுடையேம் கட்டுடையேம் என்றுநினைத் திங்கே
களித்திருமாந் திருக்கின்றீர் ஒளிப்பிடமும் அறியீர்
சினமுடைய கூற்றுவரும் செய்திஅறி யீரோ
செத்தநும தினத்தாரைச் சிறிதும்நினை யீரோ
தினகரன்போல் சாகாத தேகமுடை யவரே

திருவுடையார் எனஅறிந்தே சேர்ந்திடுமின் ஈண்டே

மனமகிழ்ந்து கேட்கின்ற வரமெல்லாம் எனக்கே

வழங்குதற்கென் தனித்தந்தை வருதருணம் இதுவே.393

8

(393). முதற்பதிப்பிலும், பொ. சு. பதிப்பிலும் 'கனமுடையேம்'

என்பது ஒன்பதாம் பாடலாகவும் 'வையகத்தீர்' என்பது

எட்டாம் பாடலாகவும் உள்ளன.

5574

வையகத்தீர் வானகத்தீர் மற்றகத்தீர் நுமது

வாழ்க்கைஎலாம் வாழ்க்கைஎன மதித்துமயங் காதீர்

மையகத்தே உறுமரண வாதனையைத் தவிர்த்த

வாழ்க்கையதே வாழ்க்கைஎன மதித்ததனைப் பெறவே

மெய்அகத்தே விரும்பிஇங்கே வந்திடுமின் எனது

மெய்ப்பொருளாம் தனித்தந்தை இத்தருணந் தனிலே

செய்அகத்தே வளர்ஞான சித்திபுரந் தனிலே

சித்தாடல் புரிகின்றார் திண்ணம்இது தானே.

9

5575

கரணம்மிகக் களிப்புறவே கடல்உலகும் வானும்

கதிபதிஎன் றாளுகின்றீர் அதிபதியீர் நீவிர்

மரணபயம் தவிராதே வாழ்வதில்என் பயனோ

மயங்காதீர் உயங்காதீர் வந்திடுமின் ஈண்டே

திரணமும்லூர் ஐந்தொழிலைச் செய்யஒளி வழங்கும்

சித்திபுரம் எனலுங்கும் உத்தரசிற் சபையில்

சரணம்எனக் களித்தெனையும் தானாக்க எனது

தனித்தந்தை வருகின்ற தருணம்இது தானே.

10

திருச்சிற்றம்பலம்

Back

134. மரணமிலாப் பெருவாழ்வு

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5576.

நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே

நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனால் உடம்பு

நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான

நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று

வனைந்துவனைந் தேத்துதும்நாம் வம்மின்உல கியலீர்

மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்

புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்

பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே.

1

5577

புகுந்தருணம் இதுகண்டீர் நம்மவரே நான்தான்

புகல்கின்றேன் என்மொழிஓர் பொய்மொழிஎன் னாதீர்

உகுந்தருணம் உற்றவரும் பெற்றவரும் பிறரும்

உடைமைகளும் உலகியலும் உற்றதுணை அன்றே

மிகுந்தசுவைக் கரும்பேசெங் கனியேகோற் றேனே

மெய்ப்பயனே கைப்பொருளே விலையறியா மணியே

தகுந்ததனிப் பெரும்பதியே தயாநிதியே கதியே

சத்தியமே என்றுரைமின் பத்தியொடு பணிந்தே.

2

5578

பணிந்துபணிந் தணிந்தணிந்து பாடுமினோ உலகீர்

பரம்பரமே சிதம்பரமே பராபரமே வரமே

துணிந்துவந்த வேதாந்த சுத்தஅனு பவமே

துரியமுடி அனுபவமே சுத்தசித்தாந் தமதாய்த்

தணிந்தநிலைப் பெருஞ்சுகமே சமரசசன் மார்க்க

சத்தியமே இயற்கையுண்மைத் தனிப்பதியே என்று

கனிந்துளத்தே கனிந்துநினைந் துரைத்திடில்அப் பொழுதே

காணாத காட்சிஎலாம் கண்டுகொளல் ஆமே.

3

5579

கண்டதெலாம் அனித்தியமே கேட்டதெலாம் பழுதே

கற்றதெலாம் பொய்யேநீர் களித்ததெலாம் வீணே
உண்டதெலாம் மலமேஉட் கொண்டதெலாம் குறையே
உலகியலீர் இதுவரையும் உண்மையறிந் திலிரே
விண்டதனால் என்இனிநீர் சமரசசன் மார்க்க
மெய்ந்நெறியைக் கடைப்பிடித்து மெய்ப்பொருள்நன் குணர்ந்தே
எண்டகுசிற் றம்பலத்தே எந்தைஅருள் அடைமின்
இறவாத வரம்பெறலாம் இன்பமுற லாமே.

4

5580

இன்புறலாம் எவ்வுலகும் ஏத்திடவாழ்ந் திடலாம்
எல்லாம்செய் வல்லசித்தி இறைமையும்பெற் றிடலாம்
அன்புடையீர் வம்மின்இங்கே சமரசசன் மார்க்கம்
அடைந்திடுமின் அகவழிவிங் கனகவழி வாகிப்
பொன்புடைநன் கொளிர்ஒளியே புத்தமுதே ஞான
பூரணமே ஆரணத்தின் பொருள்முடிமேல் பொருளே
வன்புடையார் பெறற்கரிதாம் மணியேசிற் சபையின்
மாமருந்தே என்றுரைமின் தீமையெலாம் தவிர்ந்தே.

5

5581

தீமைஎலாம் நன்மைஎன்றே திருஉளங்கொண் டருளிச்
சிறியேனுக் கருளமுதத் தெளிவளித்த திறத்தை

ஆமயந்தீர்த் தியற்கைஇன்ப அனுபவமே மயமாய்

அம்பலத்தே விளங்குகின்ற அருட்பெருஞ்சோ தியைஓர்

ஓமயவான் வடிவுடையார் உள்ளகத்தே நிறைந்த

ஒருபொருளைப் பெருங்கருணை உடையபெரும் பதியை

நாமருவி இறவாத நலம்பெறலாம் உலகீர்

நல்லஒரு தருணம்இது வல்லைவம்மின் நீரே.

6

5582

நீர்பிறரோ யான்உமக்கு நேயஉற வலனோ

நெடுமொழியே உரைப்பன்அன்றிக் கொடுமொழிசொல் வேனோ

சார்புறவே அருளமுதம் தந்தெனைமேல் ஏற்றித்

தனித்தபெரும் சுகம்அளித்த தனித்தபெரும் பதிதான்

சீர்பெறவே திருப்பொதுவில் திருமேனி தரித்துச்

சித்தாடல் புரிகின்ற திருநாள்கள் அடுத்த

ஓர்புறவே இதுநல்ல தருணம்இங்கே வம்மின்

உலகியலீர் உன்னியவா றுற்றிடுவீர் விரைந்தே.

7

5583

விரைந்துவிரைந் தடைந்திடுமின் மேதினியீர் இங்கே

மெய்ம்மைஉரைக் கின்றேன்நீர் வேறுநினை யாதீர்

திரைந்துதிரைந் துளுத்தவரும் இளமைஅடைந் திடவும்

செத்தவர்கள் எழுந்திடவும் சித்தாடல் புரிய

வரைந்துவரைந் தெல்லாஞ்செய் வல்லசித்தன் தானே

வருகின்ற தருணம்இது வரம்பெறலாம் நீவீர்

கரைந்துகரைந் துளம்உருகிக் கண்களின்நீர் பெருகிக்

கருணைநடக் கடவுளைஉட் கருதுமினோ களித்தே.

8

5584

களித்துலகில் அளவிகந்த காலம்உல கெல்லாம்

களிப்படைய அருட்சோதிக் கடவுள்வரு தருணம்

தெளித்திடும்எத் தருணம்அதோ என்னாதீர் இதுவே

செத்தவரை எழுப்புகின்ற திகழ்தருணம் உலகீர்

ஒளித்துரைக்கின் றேன்அலன்நான் வாய்ப்பறைஆர்க் கின்றேன்

ஒருசிறிதும் அச்சமுறேன் உள்ளபடி உணர்ந்தேன்

அளித்திடுசிற் றம்பலத்தென் அப்பன்அருள் பெறவே

ஆசைஉண்டேல் வம்மின்இங்கே நேசமுடை யீரே.

9

5585

ஆசைஉண்டேல் வம்மின் இங்கே அருட்சோதிப் பெருமான்

அம்மையுமாய் அப்பனுமாய் அருளும்அரு ளாளன்

ஏசறநீத் தெனைஆட்கொண் டெண்ணியவா றளித்தான்

எல்லாஞ்செய் வல்லசித்தன் என்னுயிரில் கலந்தான்

தேசுடைய பொதுவில்அருள் சித்திநடம் புரியத்

திருவுளங்கொண் டெழுந்தருளும் திருநாள்இங் கிதுவே

மோசஉரை எனநினைத்து மயங்காதீர் உலகீர்

முக்காலத் தினும்அழியா மூர்த்தம்அடைந் திடவே.

10

5586

அடைந்திடுமின் உலகீர்இங் கிதுதருணம் கண்டீர்

அருட்சோதிப் பெரும்பதிஎன் அப்பன்வரு தருணம்

கடைந்ததனித் திருவமுதம் களித்தருத்தி எனக்கே

காணாத காட்சிஎலாம் காட்டுகின்ற தருணம்

இடைந்தொருசார் அலையாதீர் சுகம்எனைப்போல் பெறுவீர்

யான்வேறு நீர்வேறென் றெண்ணுகிலேன் உரைத்தேன்

உடைந்தசம யக்குழிநின் றெழுந்துணர்மின் அழியா

ஒருநெறியாம் சன்மார்க்கத் திருநெறிபெற் றுவந்தே.

11

5587

திருநெறிஒன் றேஅதுதான் சமரசசன் மார்க்கச்

சிவநெறிஎன் றுணர்ந்துலகீர் சேர்ந்திடுமின் ஈண்டு

வருநெறியில் எனையாட்கொண் டருளமுதம் அளித்து

வல்லபசத் திகளெல்லாம் வழங்கியஓர் வள்ளல்

பெருநெறியில் சித்தாடத் திருவுளங்கொண் டருளிப்

பெருங்கருணை வடிவினொடு வருதருணம் இதுவே
கருநெறிவீழ்ந் துழலாதீர் கலக்கமடை யாதீர்
கண்மையினால் கருத்தொருமித் துண்மைஉரைத் தேனே.

12

5588

உண்மையுரைக் கின்றேன்இங் குவந்தடைமின் உலகீர்
உரைஇதனில் சந்தேகித் துளறிவழி யாதீர்
எண்மையினான் எனநினையீர் எல்லாஞ்செய் வல்லான்
என்னுள்அமர்ந் திசைக்கின்றான் இதுகேண்மின் நீவிர்
தண்மையொடு சுத்தசிவ சன்மார்க்க நெறியில்
சார்ந்துவிரைந் தேறுமினோ சத்தியவாழ் வளிக்கக்
கண்மைதரும் ஒருபெருஞ்சீர்க் கடவுள்எனப் புகலும்
கருணைநிதி வருகின்ற தருணம்இது தானே.

13

5589

தானேதான் ஆகிஎலாம் தானாகி அலனாய்த்
தனிப்பதியாய் விளங்கிடும்என் தந்தையைஎன் தாயை
வானேஅவ் வான்கருவே வான்கருவின் முதலே
வள்ளால்என் றன்பரெலாம் உள்ளாநின் றவனைத்
தேனேசெம் பாகேஎன் றினித்திடுந்தெள் ளமுதைச்
சிற்சபையில் பெருவாழ்வைச் சிந்தைசெய்மின் உலகீர்

ஊனேயும் உடலழியா தூழிதொறும் ஓங்கும்

உத்தமசித் தியைப்பெறுவீர் சத்தியம்சொன் னேனே.

14

5590

சத்தியவே தாந்தமெலாம் சித்தாந்தம் எல்லாம்

தனித்தனிமேல் உணர்ந்துணர்ந்தும் தனையுணர்தற் கரிதாய்

நித்தியசிற் சபைநடுவே நிறைந்துநடம் புரியும்

நித்தபரி பூரணனைச் சித்தசிகா மணியை

அத்தகையோர் பெரும்பதியை அருமருந்தை அடியேன்

ஆவியைஎன் ஆவியிலே அமர்ந்ததயா நிதியைச்

சித்தியெலாம் எனக்களித்த சிவகதியை உலகீர்

சிந்தைசெய்து வாழ்த்துமினோ நிந்தைஎலாம் தவிர்ந்தே.

15

5591

நிந்தையிலார் நெஞ்சகத்தே நிறைந்தபெருந் தகையை

நிலையனைத்தும் காட்டியருள் நிலைஅளித்த குருவை

எந்தையைஎன் தனித்தாயை என்னிருகண் மணியை

என்உயிரை என்உணர்வை என்அறிவுள் அறிவை

சிந்தையிலே தனித்தினிக்கும் தெள்ளமுதை அனைத்தும்

செய்யவல்ல தனித்தலைமைச் சிவபதியை உலகீர்

முந்தைமல இருட்டொழிய முன்னுமினோ கரண

முடுக்கொழித்துக் கடைமரண நடுக்கொழித்து முயன்றே.

16

5592

முயன்றுலகில் பயன்அடையா மூடமதம் அனைத்தும்

முடுகிஅழிந் திடவும்ஒரு மோசமும்இல் லாதே

இயன்றஒரு சன்மார்க்கம் எங்குநிலை பெறவும்

எம்மிறைவன் எழுந்தருளல் இதுதருணம் கண்டீர்

துயின்றுணர்ந்தே எழுந்தவர்போல் இறந்தவர்கள் எல்லாம்

தோன்றஎழு கின்றதிது தொடங்கிநிகழ்ந் திடும்நீர்

பயின்றறிய விரைந்துவம்மின் படியாத படிப்பைப்

படித்திடலாம் உணர்ந்திடலாம் பற்றிடலாம் சுகமே.

17

5593

சுகமறியீர் துன்பம்ஒன்றே துணிந்தறிந்தீர் உலகீர்

சூதறிந்தீர் வாதறிந்தீர் தூய்மையறிந் திலிரே

இகம்அறியீர் பரம்அறியீர் என்னேநுங் கருத்தீ

தென்புரிவீர் மரணம்வரில் எங்குறுவீர் அந்தோ

அகமறிந்தீர்(394) அனகமறிந் தழியாத ஞான

அமுதவடி வம்பெறலாம் அடைந்திடுமின் ஈண்டே

முகமறியார் போலிருந்தீர் என்னைஅறி யீரோ

முத்தரெலாம் போற்றும்அருட் சித்தர்மகன் நானே.

18

(394). அகமறியீர் - முதற்பதிப்பு, பொ. சு., ச. மு. க.

5594

நான்உரைக்கும் வார்த்தைஎலாம் நாயகன்றன் வார்த்தை

நம்புமினோ நமரங்காள் நற்றருணம் இதுவே

வான்உரைத்த மணிமன்றில் நடம்புரிஎம் பெருமான்

வரவெதிர்கொண் டவன்அருளால் வரங்களெலாம் பெறவே

தேன்உரைக்கும் உளம்இனிக்க எழுகின்றேன் நீவிர்

தெரிந்தடைந்தென் உடன்எழுமின் சித்திபெறல் ஆகும்

ஏனுரைத்தேன் இரக்கத்தால் எடுத்துரைத்தேன் கண்டீர்

யானடையும் சுகத்தினைநீர் தான்அடைதல் குறித்தே.

19

5595

குறித்துரைக்கின் றேன்இதனைக் கேண்மின் இங்கே வம்மின்

கோணும்மனக் குரங்காலே நாணுகின்ற உலகீர்

வெறித்தஉம்மால் ஒருபயனும் வேண்டுகிலேன் எனது

மெய்யுரையைப் பொய்யுரையாய் வேறுநினை யாதீர்

பொறித்தமதம் சமயம்எலாம் பொய்பொய்யே அவற்றில்

புகுதாதீர் சிவம்ஒன்றே பொருள்எனக்கண் டறிமின்

செறித்திடுசிற் சபைநடத்தைத் தெரிந்துதுதித் திடுமின்

சித்திஎலாம் இத்தினமே சத்தியம்சேர்ந் திடுமே.

20

5596

சேர்ந்திடவே ஒருப்படுமின் சமரசசன் மார்க்கத்
திருநெறியே பெருநெறியாம் சித்திஎலாம் பெறலாம்
ஓர்ந்திடுமின் உண்ணுதற்கும் உறங்குதற்கும் உணர்ந்தீர்
உலகமெலாம் கண்டிடும்ஓர் உளவைஅறிந் திலிரே
வார்ந்தகடல் உலகறிய மரணம்உண்டே அந்தோ
மரணம்என்றால் சடம்எனும்ஓர் திரணமும்சம் மதியா
சார்ந்திடும்அம் மரணமதைத் தடுத்திடலாம் கண்டீர்
தனித்திடுசிற் சபைநடத்தைத் தரிசனஞ்செய் வீரே.

21

5597

செய்தாலும் தீமைஎலாம் பொறுத்தருள்வான் பொதுவில்
திருநடஞ்செய் பெருங்கருணைத் திறத்தான்அங் கவனை
மெய்தாவ நினைத்திடுக சமரசசன் மார்க்கம்
மேவுகஎன் றுரைக்கின்றேன் மேதினியீர் எனைத்தான்
வைதாலும் வைதிடுமின் வாழ்த்தெனக்கொண் டிடுவேன்
மனங்கோணேன் மானம்எலாம் போனவழி விடுத்தேன்
பொய்தான்ஓர் சிறிதெனினும் புகலேன்சத் தியமே
புகல்கின்றேன் நீவிர்எலாம் புனிதமுறும் பொருட்டே.

22

5598

பொருட்டலநும் போகம்எலாம் பொய்யாம்இங் கிதுநான்

புகலுவதென் நாடொறுநும் புந்தியிற்கண் டதுவே

மருட்டுலகீர் இருட்டுலகில் மடிவதழ கலவே

மரணமிலாப் பெருவாழ்வில் வாழவம்மின் இங்கே

பொருட்டிறஞ்சேர் சுத்தசிவ சன்மார்க்க நிலையில்

பொருந்துமின்சிற் சபைஅமுதம் அருந்துமின்அன் புடனே

அருட்டிறஞ்சேர்ந் தெண்ணியவா றாடுமினோ நும்மை

அடுப்பவரே அன்றிநின்று தடுப்பவர்மற் றிலையே.

23

5599

மற்றறிவோம் எனச்சிறிது தாழ்த்திருப்பீர் ஆனால்

மரணமெனும் பெரும்பாவி வந்திடுமே அந்தோ

சற்றும்அதை நும்மாலே தடுக்கமுடி யாதே

சமரசசன் மார்க்கசங்கத் தவர்கள்அல்லால் அதனை

எற்றிநின்று தடுக்கவல்லார் எவ்வுலகில் எவரும்

இல்லைகண்டீர் சத்தியமீ தென்மொழிகொண் டுலகீர்

பற்றியபற் றனைத்தினையும் பற்றறவிட் டருளம்

பலப்பற்றே பற்றுமினோ எற்றும்இற வீரே.

24

5600

இறந்தவரை எடுத்திடும்போ தரற்றுகின்றீர் உலகீர்

இறவாத பெருவரம்நீர் ஏன்அடைய மாட்டீர்

மறந்திருந்தீர் பிணிமூப்பில் சம்மதமோ நுமக்கு

மறந்தும்இதை நினைக்கில்நல்லோர் மனம்நடுங்கும் கண்டீர்

சிறந்திடுசன் மார்க்கம்ஒன்றே பிணிமூப்பு மரணம்

சேராமல் தவிர்த்திடுங்காண் தெரிந்துவம்மின் இங்கே

பிறந்தபிறப் பிதிற்றானே நித்தியமெய் வாழ்வு

பெற்றிடலாம் பேரின்பம் உற்றிடலாம் விரைந்தே.

25

5601

உற்றமொழி உரைக்கின்றேன் ஒருமையினால் உமக்கே

உறவன்அன்றிப் பகைவன்என உன்னாதீர் உலகீர்

கற்றவரும் கல்லாரும் அழிந்திடக்காண் கின்றீர்

கரணம்எலாம் கலங்கவரும் மரணமும்சம் மதமோ

சற்றும்இதைச் சம்மதியா தென்மனந்தான் உமது

தன்மனந்தான் கன்மனமோ வன்மனமோ அறியேன்

இற்றிதனைத் தடுத்திடலாம் என்னொடும்சேர்ந் திடுமின்

என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கந் தானே.

26

5602

சன்மார்க்கப் பெருங்குணத்தார் தம்பதியை என்னைத்

தாங்குகின்ற பெரும்பதியைத் தனித்தசபா பதியை

நன்மார்க்கத் தெனைநடத்திச் சன்மார்க்க சங்க

நடுவிருக்க அருளமுதம் நல்கியநா யகனைப்

புன்மார்க்கர்க் கறிவரிதாம் புண்ணியனை ஞான

பூரணமெய்ப் பொருளாகிப் பொருந்தியமா மருந்தை

அன்மார்க்கம் தவிர்த்தருளி அம்பலத்தே நடஞ்செய்

அருட்பெருஞ்சோ தியைஉலகீர் தெருட்கொளச்சார் வீரே.

27

5693

சார்உலக வாதனையைத் தவிர்த்தவர்உள் ளகத்தே

சத்தியமாய் அமர்ந்தருளும் உத்தமசற் குருவை

நேர்உறவே எவராலும் கண்டுகொளற் கரிதாம்

நித்தியவான் பொருளைஎலா நிலைகளுந்தான் ஆகி

ஏர்உறவே விளங்குகின்ற இயற்கைஉண்மை தன்னை

எல்லாம்செய் வல்லபத்தை எனக்களித்த பதியை

ஓர்உறவென் றடைந்துலகீர் போற்றிமகிழ்ந் திடுமின்

உள்ளம்எலாம் கனிந்துருகி உள்ளபடி நினைந்தே.

28

திருச்சிற்றம்பலம்

Back

135. சமாதி வற்புறுத்தல்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5684.

ஆய்உரைத்த அருட்ஜோதி வருகின்ற

தருணம்இதே அறிமின் என்றே

வாய்உரைத்த வார்த்தைஎன்றன் வார்த்தைகள்என்

கின்றார்இம் மனிதர்அந்தோ

தாய்உரைத்த திருப்பொதுவில் நடம்புரிந்தென்

உளங்கலந்த தலைவா இங்கே

நீஉரைத்த திருவார்த்தை எனஅறியார்

இவர்அறிவின் நிகழ்ச்சி என்னே.

1

5685

இறந்தவர்கள் பலரும்இங்கே எழுகின்ற

தருணம்இதே என்று வாய்மை

அறந்தழைய உரைக்கின்ற வார்த்தைகள்என்

வார்த்தைகள்என் றறைகின் றாரால்

மறந்தசிறி யேன்உரைக்க வல்லேனோ

எல்லாஞ்செய் வல்லோய் உன்றன்

சிறந்ததிரு வார்த்தைஎனத் தெரிந்திலர்இம்

மனிதர்மதித் திறமை என்னே.

2

5686

சோற்றாசை யொடுகாமச் சேற்றாசைப்

படுவாரைத் துணிந்து கொல்லக்

கூற்றாசைப் படும்எனநான் கூறுகின்ற

துண்மையினில் கொண்டு நீவீர்

நேற்றாசைப் பட்டவருக் கின்றருள்வார்

போலும்அன்றி நினைத்த வாங்கே

பேற்றாசைக் கருள்புரியும் ஞானசபா

பதிப்புகழைப் பேசு வீரே.

3

5687

தொண்டாளப் பணந்தேடுந் துறையாள

உலகாளச் சூழ்ந்த காமப்

பெண்டாளத் திரிகின்ற பேய்மனத்தீர்

நும்முயிரைப் பிடிக்க நாளைச்

சண்டாளக் கூற்றுவரில் என்புகல்வீர்

ஞானசபைத் தலைவன் உம்மைக்

கொண்டாளக் கருதுமினோ ஆண்டபின்னர்

இவ்வுலகில் குலாவு வீரே.

4

5688

பிறந்தவரை நீராட்டிப் பெருகவளர்த்
திடுகின்றீர் பேய ரேநீர்
இறந்தவரைச் சுடுகின்றீர் எவ்வணஞ்சம்
மதித்தீரோ இரவில் தூங்கி
மறந்தவரைத் தீமூட்ட வல்லீரால்
நும்மனத்தை வயிரம் ஆன
சிறந்தவரை எனப்புகழச் செய்துகொண்டீர்
ஏன்பிறந்து திரிகின் றீரே.

5

5609

அணங்கெழுபே ரோசையொடும் பறையோசை
பொங்கக்கோ ரணிகொண் டந்தோ
பிணங்கழுவி எடுத்துப்போய்ச் சுடுகின்றீர்
இனிச்சாகும் பிணங்க ளேநீர்
கணங்கழுகுண் டாலும்ஒரு பயனுண்டே
என்னபயன் கண்டீர் சுட்டே
எணங்கெழுசாம் பலைக்கண்டீர் அதுபுன்செய்
எருவுக்கும் இயலா தன்றே.

6

5610

குணம்புதைக்க உயிரடக்கம் கொண்டதுசுட்

டால்அதுதான் கொலையாம் என்றே

வணம்புதைக்க வேண்டும்என வாய்தடிக்கச்

சொல்கின்றேன் வார்த்தை கேட்டும்

பிணம்புதைக்கச் சம்மதியீர் பணம்புதைக்கச்

சம்மதிக்கும் பேய ரேநீர்

எணம்புதைக்கத் துயில்வார்நும் பாற்றுயிலற்

கஞ்சுவரே இழுதை யீரே.

7

5611

கட்டாலும் கனத்தாலும் களிக்கின்ற

பேயுலகீர் கலைசோர்ந் தாரைப்

பொட்டாலும் துகிலாலும் புனைவித்துச்

சுடுகின்றீர் புதைக்க நேரீர்

சுட்டாலும் சுடுமதுகண் டுமதுடம்பு

துடியாதென் சொல்லீர் நும்மைத்

தொட்டாலும் தோஷமுறும் விட்டாலும்

கதியிலைமேல் சூழ்வீர் அன்றே.

8

5612

பரன்அளிக்கும் தேகம்இது சுடுவதப

ராதம்எனப் பகர்கின் றேன்நீர்

சிரம்நெளிக்கச் சுடுகின்றீர் செத்தவர்கள்

பற்பலரும் சித்த சாமி

உரனளிக்க எழுகின்ற திருநாள்வந்

தடுத்தனஈ துணர்ந்து நல்லோர்

வரனளிக்கப் புதைத்தநிலை காணீரோ

கண்கெட்ட மாட்டி னீரே.

9

5613

புலைத்தொழிலே புரிகின்றீர் புண்ணியத்தைக்

கருங்கடலில் போக விட்டீர்

கொலைத்தொழிலில் கொடியீர்நீர் செத்தாரைச்

சுடுகின்ற கொடுமை நோக்கிக்

கலைத்தொழிலில் பெரியர்உளம் கலங்கினர்அக்

கலக்கம்எலாம் கடவுள்நீக்கித்

தலைத்தொழில்செய் சன்மார்க்கம் தலைஎடுக்கப்

புரிகுவதித் தருணம் தானே.

10

திருச்சிற்றம்பலம்

Back

136. சன்மார்க்க உலகின் ஒருமைநிலை

நேரிசை வெண்பா

5614.

சித்திபுரத்தே தினந்தோறும் சீர்கொளருள்

சத்திவிழா நீடித் தழைத்தோங்க - எத்திசையில்

உள்ளவரும் வந்தே உவகை உறுகமதத்

துள்ளல் ஒழிக தொலைந்து.

1

5615

ஒன்றே சிவம்என் றுணர்ந்திவ் வுலகமெலாம்

நன்றே ஒருமையுற்று நண்ணியே - மன்றே

நடம்புரியும் பாத நளினமலர்க் குள்ளம்

இடம்புரிக வாழ்க இசைந்து.

2

5616

சிற்சபையும் பொற்சபையும் சித்தி விளக்கத்தால்

நற்சகமேல் நீடூழி நண்ணிடுக - சற்சபையோர்

போற்றிவரம் பெற்றுவகை பூரிக்க வாழ்ந்திடுக

நாற்றிசையும் வாழ்க நயந்து.

3

5617

அச்சந் தவிர்த்தே அருளிற் செலுத்துகின்ற

விச்சை அரசே விளங்கிடுக - நச்சரவம்

ஆதிக் கொடியஉயிர் அத்தனையும் போய்ஒழிக

நீதிக் கொடிவிளங்க நீண்டு.

4

5618

கருணைஇலா ஆட்சி கடுகி ஒழிக

அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க - தெருள்நயந்த

நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைத்

தெல்லோரும் வாழ்க இசைந்து.

5

5619

புல்லொழுக்கம் எல்லாம் புணரியிடைப் போய்ஒழிக

நல்லொழுக்கம் ஒன்றே நலம்பெறுக - இல்லொழுக்கில்

செத்தார்கள் எல்லாம் திரும்ப எழுந்துமனம்

ஒத்தாராய் வாழ்க உவந்து.

6

5620

செத்தார் எழுக சிவமே பொருள்என்றே

இத்தா ரணியில் இருந்தொளிர்க - சுத்தசிவ

சன்மார்க்கம் ஒன்றே தழைக்க தயவறியாத்

துன்மார்க்கம் போக தொலைந்து.

7

5621

செத்தவர்கள் எல்லாம் திரும்ப எழுந்துவரச்

சித்தம்வைத்துச் செய்கின்ற சித்தியனே - சுத்தசிவ

சன்மார்க்க சங்கத் தலைவனே நிற்போற்றும்

என்மார்க்கம் நின்மார்க்க மே.

8

5622

நல்லாரும் என்னை நயந்தாரும் நன்மைசொல

வல்லாரும் என்னை வளர்த்தாரும் - எல்லாரும்

நீஎன் றிருக்கின்றேன் நின்மலனே நீபெற்ற

சேய்என் றிருக்கின்றேன் சேர்ந்து.

9

5623

ஆடஎடுத் தான்என் றறைகின்றீர் என்தலைமேல்

சூடஎடுத் தான்என்று சொல்கின்றேன் - நாடறிய

இவ்வழக்கை யார்பால் இசைத்தறுத்துக் கொள்கிற்பாம்

கவ்வைஅற்ற அம்பலத்தான் கால்.

10

5624

நோவாது நோன்பெனைப்போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்

சாவா வரம்எனைப்போல் சார்ந்தவரும் - தேவாநின்

பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில்

யார்உளர்நீ சற்றே அறை.

11

திருச்சிற்றம்பலம்

Back

## 137. திருவடிப் பெருமை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5625.

திருவாளர் கனகசபைத் திருநடஞ்செய் தருள்வார்

தேவர்சிகா மணிஎனக்குத் திருமாலை கொடுத்தார்

உருவாளர் அருவாகி ஒளியாகி வெளியாய்

ஓங்குகின்றார் என்னுடைய உயிர்த்துணைவர் அவர்தம்

பெருவாய்மைத் திறம்சிறிதும் பேசமுடி யாதே

பேசுவதார் மறைகள்எலாம் கூசுகின்ற என்றால்

துருவாமல் இங்கெனக்குக் கிடைத்ததைஎன் சொல்வேன்

சொல்அளவல் லாதசுகம் தோன்றுவதென் தோழி.

1

5626

அருளாளர் பொற்பொதுவில் அற்புதநா டகஞ்செய்

ஆனந்த வண்ணர்எனை ஆளுடையார் சிறியேன்

தெருளாத பருவத்தே தெருட்டிமணம் புரிந்த

சீராளர் அவர்பெருமைத் திறத்தைஎவர் புகல்வார்
மருளாத ஆகமங்கள் மாமறைகள் எல்லாம்
மருண்டனவே என்னடிஎன் மனவாக்கின் அளவோ
இருளாமை என்றுறுமோ அன்றுசிறி துரைப்பேன்
என்னவும்நாண் ஈர்ப்பதிதற் கென்புரிவேன் தோழி.

2

5627

செம்பவளத் திருமலையோ மாணிக்க விளக்கோ
செழுஞ்சோதித் தனிப்பிழம்போ செவ்வண்ணத் திரளோ
அம்பதுமத் திருவிளங்கும் அகலத்தான் பிரமன்
அரன்முதலோர் ஐவர்களும் அப்பால்நின் றோரும்
எம்பரம்என் றெம்பெருமான் புறவண்ணம் எதுவோ
என்பாரேல் அகவண்ணம் யார்உரைக்க வல்லார்
தம்பரம்என் றென்னைஅன்று மணம்புரிந்தார் கனக
சபைநாதர் அவர்பெருமை சாற்றுவதென் தோழி.

3

5628

தேவர்களோ சித்தர்களோ சீவன்முத்தர் தாமோ
சிறந்தமுனித் தலைவர்களோ செம்பொருள்கண் டோரோ
மூவர்களோ அறுவர்களோ முதற்சத்தி அவளோ
முன்னியநம் பெருங்கணவர் தம்இயலை உணர்ந்தோர்

யாவர்களும் அல்லஎன்றால் யான்உணர்ந்து சொல்ல
அமையுமோ ஒருசிறிதும் அமையாது கண்டாய்
ஆவலொடும் அன்பர்தொழக் கனகசபை நடிப்பார்
அவர்பெருமை எவ்விதத்தும் அவர்அறிவார் தோழி.

4

5629

பதிஉடையார் கனகசபா பதிஎனும்பேர் உடையார்
பணம்பரித்த395 வரையர்என்னை மணம்புரிந்த கணவர்
விதியுடையார் ஏத்தநின்ற துதிஉடையார் ஞான
விளக்கனைய மெய்உடையார் வெய்யவினை அறுத்த
மதிஉடையார் தமக்கருளும் வண்கைபெரி துடையார்
மங்கைசிவ காமவல்லி மணவாளர் முடிமேல்
நதிஉடையார் அவர்பெருமை மறைக்குமெட்டா தென்றால்
நான்உரைக்க மாட்டுவனோ நவிலாய்என் தோழி.

5

(395). பணம்புரிந்த - பி. இரா. பதிப்பு.

5630

வெடித்தளிந்த முக்கனியின் வடித்தரசந் தனிலே
விரும்புறநின் றோங்கியசெங் கரும்பிரதம் கலந்து
தடித்தசெழும் பாற்பெய்து கோற்றேன்விட் டதனைத்
தனித்தபரா அமுதத்தில் தான்கலந்துண் டாற்போல்

இடித்திடித்தென் உளமுழுதும் தித்திக்கும் வார்த்தை

இனிதுரைத்து மணம்புரிந்த என்னுயிர்நா யகர்வான்

பொடித்திருமே னியர்நடனம் புரிகின்றார் அவர்தம்

புகழ்உரைக்க வல்லேனோ அல்லேன்காண் தோழி.

6

5631

திருச்சிற்றம் பலத்தின்பத் திருஉருக்கொண் டருளாம்

திருநடஞ்செய் தருளுகின்ற திருவடிகள் இரண்டும்

அருச்சிக்கும் பேரன்பர் அறிவின்கண் அறிவாய்

அவ்வறிவில் விளைந்தசிவா னந்தஅமு தாகி

உருச்சிக்கும் பரநாதத் தலங்கடந்தப் பாற்சித்

துருவுகடந் திருக்கும்என உணர்ந்தோர்சொல் வாரேல்

பெருச்சித்தெல் லாம்வல்ல நடராஜப் பெருமான்

பெருமையையாம் பேசுவதென் பேசாய்என் தோழி.

7

5632

நாதவரை சென்றுமறை ஓர்அனந்தம் கோடி

நாடிஇளைத் திருந்தனஆ கமங்கள் பரநாத

போதவரை போந்துபல முகங்கொண்டு தேடிப்

புணர்ப்பறியா திருந்தனஎன் றறிஞர்புகல் வாரேல்

பாதவரை வெண்ணீறு படிந்திலங்கச் சோதிப்

படிவம்எடுத் தம்பலத்தே பரதநடம் புரியும்

போதவரைக் காண்பதலால் அவர்பெருமை என்னால்

புகலவச மாமோநீ புகலாய்என் தோழி.

8

5633

பரைஇருந்த வெளிமுழுதும் பரவிஅப்பால் பரையின்

பரமாகி அப்பரத்தில் பரம்பரமாய் விளங்கித்

திரைகடந்த திருவெளியில் ஆனந்தா தீதத்

திருநடஞ்செய் யாதுசெயும் திருவடிகள் என்றே

புரைகடந்தோர் புகல்கின்றார் கேட்கின்றோம் என்றால்

புண்ணியர்என் தனித்தலைவர் புனிதநட ராஜர்

வரைகடந்த திருத்தோள்மேல் திருநீற்றர் அவர்தம்

வாய்மைசொல வல்லேனோ அல்லேன்காண் தோழி.

9

5634

ஏய்ப்பந்தி வண்ணர்என்றும் படிகவண்ணர் என்றும்

இணையில்ஒளி உருவர்என்றும் இயல்அருவர் என்றும்

வாய்ப்பந்தல் இடுதலன்றி உண்மைசொல வல்லார்

மண்ணிடத்தும் விண்ணிடத்தும் மற்றிடத்தும் இலையே

காய்ப்பந்த மரம்என்று கண்டுசொல்வ தன்றிக்

காய்த்தவண்ணம் பூத்தவண்ணம் கண்டுகொள மாட்டாத்

தாய்ப்பந்த உணர்வுடையேன் யானோசிற் சபையில்
தனிமுதல்வர் திருவண்ணம் சாற்றவல்லேன் தோழி.

10

5635

கலைக்கடலைக் கடந்தமுனிக் கணங்களும்மும் மலமாம்
கரிசகன்ற யோகிகளும் கண்டுகொள மாட்டா
தலைக்கடலில் துரும்பாகி அலைகின்றார் மன்றுள்
ஆடுகின்றார் என்பதலால் அவர்வண்ணம் அதுவும்
நிலைக்குரிய திருச்சபையின் வண்ணமும்அச் சபைக்கண்
நிருத்தத்தின் வண்ணமும்இந் நீர்மையன என்றே
மலைக்குநிறை கண்டாலும் காணவொணா தம்ம
வாய்ப்பதர்கள் தூற்றுவதில் வரும்பயன்என் தோழி.

11

5636

சிதமலரோ சுகமலரும் பரிமளிக்க ஓங்கும்
திருச்சிற்றம் பலநடுவே திருநடனம் புரியும்
பதமலரோ பதமலரில் பாதுகையோ அவையில்
படிந்ததிருப் பொடியோஅப் பொடிபடிந்த படியோ
இதமலரும் அப்படிமேல் இருந்தவரோ அவர்பேர்
இசைத்தவரும் கேட்டவரும் இலங்குமுத்தர் என்றால்
நிதமலரும் நடராஜப் பெருமான்என் கணவர்

நிலைஉரைக்க வல்லார்ஆர் நிகழ்த்தாய்என் தோழி.

12

5637

சுத்தமுற்ற ஐம்பூத வெளிகரண வெளிமேல்

துலங்குவெளி துரியவெளி சுகவெளியே முதலாம்

இத்தகைய வெளிகளுள்ளே எவ்வெளியோ நடனம்

இயற்றுவெளி என்கின்றார் என்றால்அவ் வெளியில்

நித்தபரி பூரணமாய் ஆனந்த மயமாய்

நிருத்தமிடும் எம்பெருமான் நிபுணநட ராயர்

சித்துருவாம் திருவடியின் உண்மைவண்ணம் அறிந்து

செப்புவதார் என்வசமோ செப்பாய்என் தோழி.

13

5638

காற்றுருவோ கனல்உருவோ கடவுள்உரு என்பார்

காற்றுருவும் கனல்உருவும் கண்டுரைப்பீர் என்றால்

வேற்றுருவே புகல்வர்அதை வேறொன்றால் மறுத்தால்

விழித்துவிழித் தெம்போல்வார் மிகவும்மருள் கின்றார்

தோற்றும்அந்தத் தத்துவமும் தோற்றாத்தத் துவமும்

துரிசாக அவைகடந்த சுகசொரூபம் ஆகி

மாற்றமனம் உணர்வுசெல்லாத் தலத்தாடும் பெருமான்

வடிவுரைக்க வல்லவர்ஆர் வழுத்தாய்என் தோழி.

14

5639

நாதமட்டும் சென்றனம்மேல் செல்லவழி அறியேம்

நவின்றபர விந்துமட்டும் நாடினம்மேல் அறியேம்

ஏதமிலாப் பரநாத எல்லைமட்டும் சென்றேம்

இனிச்செல்ல வழிகாணேம் இலங்குபெருவெளிக்கே

ஆதரவில் சென்றனம்மேல் செல்லவழி தெரியேம்

அம்மம்ம என்றுமறை ஆகமங்கள் எல்லாம்

ஓதநின்ற திருநடனப் பெருமானார் வடிவின்

உண்மைசொல வல்லவர்ஆர் உரையாய்என் தோழி.

15

5640

தோன்றுசத்தி பலகோடி அளவுசொல ஒண்ணாத்

தோற்றுசத்தி பலகோடித் தொகைஉரைக்க முடியா

சான்றுலகம் தோற்றுவிக்கும் சத்திபல கோடி

தனைவிளம்பல் ஆகாஅச் சத்திகளைக் கூட்டி

ஏன்றவகை விடுக்கின்ற சத்திபல கோடி

இத்தனைக்கும் அதிகாரி என்கணவர் என்றால்

ஆன்றமணி மன்றில்இன்ப வடிவாகி நடிக்கும்

அவர்பெருமை எவர்உரைப்பார் அறியாய்என் தோழி.

16

5641

தோற்றம்ஒன்றே வடிவொன்று வண்ணம்ஒன்று விளங்கும்

சோதிஒன்று மற்றதனில் துலங்கும்இயல் ஒன்று

ஆற்றஅதில் பரமாய அணுஒன்று பகுதி

அதுஒன்று பகுதிக்குள் அமைந்தகரு ஒன்று

ஏற்றமிக்க அக்கருவுள் சத்திஒன்று சத்திக்

கிறைஒன்றாம் இத்தனைக்கும் என்கணவர் அல்லால்

ஆற்றமற்றோர் அதிகாரி இல்லையடி மன்றில்

ஆடும்அவர் பெருந்தகைமை யார்உரைப்பார் தோழி.

17

5642

ஒருமைபெறு தோற்றம்ஒன்று தத்துவம்பல் வேறு

ஒன்றின்இயல் ஒன்றிடத்தே உற்றிலஇங் கிவற்றை

இருமையினும் மும்மைமுதல் எழுமையினும் கூட்டி

இலங்கியசிற் சத்திநடு இரண்டொன்றென் னாத

பெருமைபெற்று விளங்கஅதின் நடுஅருள்நின் றிலங்கப்

பெரியஅருள் நடுநின்று துரியநடம் புரியும்

அருமைஎவர் கண்டுகொள்வர் அவர்பெருமை அவரே

அறியாரே என்னடிநீ அறைந்தவண்ணம் தோழி.

18

5643

படைத்தபடைப் பொன்றதிலே பரம்அதிற்கா ரணமாம்

பகுதிஅதில் பகுக்கின்ற பணிகள்பல பலவாம்

புடைத்தஅவை புகுந்துலவும் புரம்ஒன்றப் புரத்தில்

பூபதிஒன் றவர்க்குணர்த்தும் பூரணசித் தொன்று

மிடைத்தஇவை எல்லாஞ்சிற் றம்பலத்தே நடிக்கும்

மென்பதத்தோர் சிற்றிடத்து விளங்கிநிலை பெறவே

அடைத்துமற்றிங் கிவைக்கெல்லாம் அப்புறத்தே நிற்பார்

அவர்பெருமை எவர்அறிவார் அறியாய்நீ தோழி.

19

5644

சிருட்டிஒன்று சிற்றணுவில் சிறிததனில் சிறிது

சினைத்தகர ணக்கருஅச் சினைக்கருவில் சிறிது

வெருட்டியமான் அம்மானில் சிறிதுமதி மதியின்

மிகச்சிறிது காட்டுகின்ற வியன்சுடர்ஒன் றதனில்

தெருட்டுகின்ற சத்திமிகச் சிறிததனில் கோடித்

திறத்தினில்ஓர் சிறிதாகும் திருச்சிற்றம் பலத்தே

அருட்டிறத்தின் நடிக்கின்ற என்னுடைய தலைவர்

அருட்பெருமை எவர்உரைப்பார் அறியாய்என் தோழி.

20

5645

நான்முகர்கள் மிகப்பெரியர் ஆங்கவரில் பெரியர்

நாரணர்கள் மற்றவரின்396 நாடின்மிகப் பெரியர்

வான்முகத்த உருத்திரர்கள் மற்றவரில் பெரியர்

மயேச்சுரர்கள் சதாசிவர்கள் மற்றவரில் பெரியர்

மீன்முகத்த விந்ததனில் பெரிததனில் நாதம்

மிகப்பெரிது பரைஅதனில் மிகப்பெரியள் அவளின்

ஆன்முகத்தில் பரம்பரந்தான் பெரிததனில் பெரிதாய்

ஆடுகின்ற சேவடியார் அறிவார்காண் தோழி.

21

(396). மற்றவர்கள் - ச. மு. க. பதிப்பு.

5646

மண்அனந்தங் கோடிஅள வுடையதுநீர் அதனில்

வயங்கியநூற் றொருகோடி மேல்அதிகம் வன்னி

எண்ணியஆ யிரம்அயுதம் கோடியின்மேல் இலக்கம்

எண்பத்து நான்கதின்மேல் அதிகம்வளி யொடுவான்

விண்ணளவு மூலமுயிர் மாமாயை குடிலை

விந்தளவு சொலமுடியா திந்தவகை எல்லாம்

அண்ணல்அடிச் சிறுநகத்தில் சிற்றகத்தாம் என்றால்

அவர்பெருமை எவர்உரைப்பார் அறியாய்நீ தோழி.

22

5647

மண்ணாதி ஐம்பூத வகைஇரண்டின் ஒன்று

வடிவுவண்ணம் இயற்கைஒரு வாலணுச்சத் தியலாய்க்
கண்ணெண்ணும் உணர்ச்சிசொலாக் காட்சியவாய்க் நிற்பக்
கருதும்அவைக் குட்புறங்கீழ் மேற்பக்கம் நடுவில்
நண்ணிஒரு மூன்றைந்து நாலொடுமூன் றெட்டாய்
நவமாகி மூலத்தின் நவின்றசத்திக் கெல்லாம்
அண்ணுறும்ஓர் ஆதார சத்திகொடுத் தாடும்
அடிப்பெருமை யார்அறிவார் அவர்அறிவார் தோழி.

23

5648

மண்பூத முதற்சத்தி வால்அணுவில் அணுவாய்
மதித்தஅதன் உள்ஒளியாய் அவ்வொளிக்குள் ஒளியாய்
எண்பூதத் தவ்வொளிக்குள் இலங்குவெளி யாய்அவ்
வியல்வெளிக்குள் ஒருவெளியாய் இருந்தவெளி(397) நடுவே
பண்பூத நடம்புரியும் பதப்பெருமை எவரும்
பகுத்துணர முடியாதேல் பதமலர்என் தலைமேல்
நண்பூற வைத்தருளும் நடராஜப் பெருமான்
நல்லசெயல் வல்லபம்ஆர் சொல்லுவர்காண் தோழி.

24

(397). இந்தவெளி - பி. இரா. பதிப்பு.

5649

வண்கலப்பில் சந்திசெயும் சத்தியுளே ஒருமை

வயங்கொளிமா சத்திஅத னுள்ஒருகா ரணமாம்
விண்கரண சத்திஅத னுள்தலைமை யாக
விளங்குகுருச் சத்திஅதின் மெய்ம்மைவழி வான
எண்குணமா சத்தி இந்தச் சத்திதனக் குள்ளே
இறையாகி அதுஅதுவாய் இலங்கிநடம் புரியும்
தண்கருணைத் திருவடியின் பெருமைஅறி வரிதேல்
சாமிதிரு மேனியின்சீர் சாற்றுவதென் தோழி.

25

5650

பெரியஎனப் புகல்கின்ற பூதவகை எல்லாம்
பேசுகின்ற பகுதியிலே வீசுகின்ற சிறுமை
உரியபெரும் பகுதியும்அப் பகுதிமுதல் குடிலை
உளங்கொள்பரை முதல்சத்தி யோகமெலாம் பொதுவில்
துரியநடம் புரிகின்ற சோதிமலர்த் தாளில்
தோன்றியதோர் சிற்றசைவால் தோன்றுகின்ற என்றால்
அரியபெரும் பொருளாக நடிக்கின்ற தலைவர்
அருட்பெருமை என்அளவோ அறியாய் என்தோழி.

26

5651

பொன்வண்ணப் பூதமுதல் தன்மைஉண்மை அகத்தே
பொற்புறமாக் கருவிளக்கம் பொருந்தவெண்மை செம்மை

தன்வண்ணப் பசுமையொடு கருமைகலப் பாகும்

தன்மையினில் தன்மையதாய்த் தனித்ததற்கோர் முதலாய்

மன்வண்ணத் தொளிஉருவம் உயிர்ப்பினொடு தோன்ற

வால்அணுக்கூட் டங்களைஅவ் வகைநிறுவி நடத்தும்

மின்வண்ணத் திருச்சபையில் ஆடுகின்ற பதத்தின்

மெய்வண்ணம் புகலுவதார் விளம்பாய்என் தோழி.

27

5652

பொற்புடைய ஐங்கருவுக் காதார கரணம்

புகன்றஅறு கோடிஅவைக் காறிலக்கம் அவற்றுக்

கற்புறும்ஓர் அறுபதினா யிரம்அவற்றுக் கடையா

றாயிரமாங் கவற்றுக்கோர் அறுநூறிங் கிவைக்கே

விற்பொலியும் அறுபதுமற் றிவைக்காறிங் கிந்த

வியன்கரண சத்திகளை விரித்துவிளக் குவதாய்ச்

சிற்பரமாய் மணிமன்றில் திருநடனம் புரியும்

திருவடியின் பெருமைஎவர் செப்புவர்காண் தோழி.

28

5653

ஏற்றமுறும் ஐங்கருவுக் கியல்பகுதிக் கரணம்

எழுகோடி ஈங்கிவற்றுக் கேழ்இலக்கம் இவைக்கே

தோற்றமுறும் எழுபதினா யிரமிவற்றுக் கெழுமை

துன்னியநூ றிவற்றினுக்குச் சொல்லும் எழுபதுதான்
ஆற்றலுறும் இவைதமக்கோர் ஏழாம்இக் கரணம்
அனைத்தினையும் தனித்தனியே தோற்றிநிலை பொருத்திச்
சாற்றரிய வடிவுவண்ணம் சுவைப்பயன்உண் டாக்கும்
சாமிதிரு வடிப்பெருமை சாற்றுவதார் தோழி.

29

5654

விளங்கியஐங் கருச்சத்தி லோர்அனந்தங் கருவில்
விளைகின்ற சத்திகள்லோர் அனந்தம்விளை வெல்லாம்
வளம்பெறவே தருகின்ற சத்திகள்லோர் அனந்தம்
மாண்படையத் தருவிக்கும் சத்திகள்லோர் அனந்தம்
உளங்கொளநின் றதிட்டிக்கும் சத்திகள்லோர் அனந்தம்
ஓங்கியஇச் சத்திகளைத் தனித்தனியே இயக்கித்
தளங்கொளஈண் டவ்வவற்றிற் குட்புறம்நின் றொளிரும்
சாமிதிரு வடிப்பெருமை சாற்றுவதார் தோழி.

30

5655

காணுகின்ற ஐங்கருவின் வித்தின்இயல் பலவும்
கருதுறும்அங் குரத்தின்இயல் பற்பலவும் அடியின்
மாணுகின்ற இயல்கள்பல பலப்பலவும் நடுவில்
மன்னும்இயல் பலபலவும் பலப்பலவும் முடியின்

பூணும்இயல் அனந்தவகை புரிந்தபல பலவும்
பொருந்துவதாய் அவ்வவற்றின் புணர்க்கையுந்தான் ஆகி
ஏணுகின்ற அவைகளுக்குட் பற்றாமல் நடிக்கும்
எழிற்கருணைப் பதப்பெருமை இயம்புவதார் தோழி.

31

5656

மண்முதலாம் தத்துவத்தின் தன்மைபல கோடி
வயங்குசத்திக் கூட்டத்தால் வந்தனஓர் அனந்தம்
பண்ணுறும்அத் தன்மையுளே திண்மை(398) ஒருகோடி
பலித்தசத்திக் கூட்டத்தால் பணித்தனஓர் அனந்தம்
எண்ணுறும்இத் திண்மைகளும் இவற்றினது விகற்பம்
எல்லாமும் தனித்தனிநின் றிலங்கநிலை புரிந்தே
விண்ணென்னும் படிஅவற்றில் கலந்துகல வாது
விளையாடும் அடிப்பெருமை விளம்புவதார் தோழி.

32

(398). திண்மையுளே திண்மை - முதற்பதிப்பு, பொ. சு. பதிப்பு.

தண்மையுளே திண்மை - பி. இரா. பதிப்பு.

திண்மையுளே தண்மை - ச. மு. க. பதிப்பு

5657

விண்ணிடத்தே முதன்முப்பூ விரியஅதில் ஒருபூ
விரியஅதின் மற்றொருபூ விரிந்திடஇவ் வைம்பூக்

கண்ணிடத்தே பிறிதொருபூ கண்மலர அதிலே
கட்டவிழ வேறொருபூ விட்டஎழு பூவும்
பெண்ணிடத்தே நான்காகி ஆணிடத்தே மூன்றாய்ப்
பிரிவிலவாய்ப் பிரிவுளவாய்ப் பிறங்கியுடல் கரணம்
நண்ணிடத்தேர்ந் தியற்றிஅதின் நடுநின்று விளங்கும்
நல்லதிரு வடிப்பெருமை சொல்லுவதார் தோழி.

33

5658

வண்பூவில் வடிவுபல வண்ணங்கள் பலமேல்
மதிக்கும்இயல் பலஒளியின் வாய்மைபல ஒளிக்குள்
நண்பூறும் சத்திபல சத்திகளுள் வயங்கும்
நாதங்கள் பலநாத நடுவணைஓர் கலையில்
பண்பாய நடங்கள்பல பலபெயர்ப்பும் காட்டும்
பதிகள்பல இவைக்கெல்லாம் பதியாகிப் பொதுவில்
கண்பாய இவற்றினொடு கலந்துகல வாமல்
காணுகின்ற திருவடிச்சீர் கழறுவதார் தோழி.

34

5659

ஓங்கியஐம் பூஇவைக்குள் ஒன்றின்ஒன்று திண்மை
உற்றனமற் றதுஅதுவும் பற்றுவன பற்றத்
தாங்கியமா சத்திகளின் பெருங்கூட்டம் கலையாத்

தன்மைபுரிந் தாங்காங்குத் தனித்தனிநின் றிலங்கித்

தேங்கியபோ தவைகலையச் செய்கைபல புரிந்து

திகழ்ஒளியாய் அருள்வெளியாய்த் திறவில்ஒளி(399) வெளியில்

பாங்குறநேர் விளங்குகின்ற திருவடியின் பெருமை

பகுத்துரைக்க வல்லவர்ஆர் பகராய்என் தோழி.

35

(399). திருவில்ஒளி - பி. இரா. திருவிலொளி என்றும்

பாடம் - ச. மு. க. அடிக்குறிப்பு.

5660

விரிந்திடும்ஐங் கருவினிலே விடயசத்தி அனந்த

விதமுகங்கொண் டிலகஅவை விகிதவிகற் பாகிப்

பிரிந்திடுமான் இலக்கணங்கள் பலகோடி பிரியாப்

பெருஞ்சத்தி இலக்கணங்கள் பற்பலகோ டிகளாய்த்

தெரிந்திடுநா னிலைக்குள்ளே இருந்துவெளிப் படவும்

செய்கைபல புரிகின்ற திறல்உடைத்தா ரகமேல்

எரிந்திடுதீ நடுவெளிக்கண் இருந்ததிரு வடியின்

எல்லையையார் சொல்லவல்லார் இயம்பாய்என் தோழி.

36

5661

தோன்றியஐங் கருவினிலே சொல்லரும்ஓர் இயற்கைத்

துலங்கும்அதில் பலகோடிக் குலங்கொள்குருத் துவிகள்

ஆன்றுவிளங் கிடும்அவற்றின் அசலைபல கோடி
அமைந்திடும்மற் றவைகளுளே அமலைகள் ஓர்அனந்தம்
ஏன்றுநிறைந் திடும்அவற்றிற் கணிப்பதனுக் கரிதாய்
இலங்குபிர காசிகள்தாம் இருந்தனமற் றிவற்றில்
ஊன்றியதா ரகசத்தி ஓங்குமதின் நடுவே
உற்றதிரு வடிப்பெருமை உரைப்பவரார் தோழி.

37

5662

உறைந்திடும்ஐங் கருவினிலே உருவசத்தி விகற்பம்
உன்னுதற்கும் உணர்வதற்கும் ஒண்ணாஎண் ணிலவே
நிறைந்தஅவை தனித்தனியே நிகழ்ந்திலங்க அவைக்குள்
நேர்மைஒண்மை உறுவித்தந் நேர்மைஒண்மை அகத்தே
குறைந்திலவாம் பலவேறு குணங்கள்உறப் புரிந்து
குணங்களுளே குறிகள்பல கூட்டுவித்தாங் கமர்ந்தே
மறைந்தமணம் வெளிப்படுத்தும் மலரடியின் பெருமை
வகுத்துரைக்க வல்லவரார் வழுத்தாய்என் தோழி.

38

5663

சூழ்ந்திடும்ஐங் கருவினிலே சொருபசத்தி பேதம்
சொல்லினொடு மனங்கடந்த எல்லையிலா தனவே
தாழ்ந்திலவாய் அவைஅவையும் தனித்தனிநின் றிலங்கத்

தரும்அவைக்குள் நவவிளக்கம் தரித்தந்த விளக்கம்

வாழ்ந்திடஓர் சத்திநிலை வயங்கியுறப் புரிந்து

மதிக்கும்அந்தச் சத்திதனில் மன்னுசத்தர் ஆகி

ஆழ்ந்திடும்ஓர் பரம்பரத்தை அசைத்துநின்று நடிக்கும்

அடிப்பெருமை உரைப்பவரார் அறியாய்என் தோழி.

39

5664

பசுநிறத்த ஐங்கருவில் பகர்ந்தசுவைத் தன்மை

பற்பலகோ டிகளாம்அவ் வுற்பவசத் திகளில்

வசுநிறத்த விவிதநவ சத்திபல கோடி

வயங்கும்அவைக் குள்ஆதி வயங்குவள்அவ் வாதி

தசநிறத்த வாகஅதில் தனித்தனிஓங் காரி

சார்ந்திடுவள் அவள்அகத்தே தனிப்பரைசார்ந் திடுவள்

திசைநிறத்தப் பரைநடுவில் திருநடனம் புரியும்

திருவடியின் பெருவடியைச் செப்புவதார் தோழி.

40

5665

பூத்தசுடர்ப் பூஅகத்தே புறத்தேசூழ் இடத்தே

பூத்துமிகக் காய்த்துமதி அமுதொழுகப் பழுத்து

மாத்தகைய பெருஞ்ஜோதி மணிமன்றுள் விளங்கும்

வண்ணம்ஒரு சிறிதறிய மாட்டாமல் மறைகள்

ஏத்துவதும் ஏறுவதும் இறங்குவதும் ஆகி

இருக்கின்ற என்றுணர்ந்தோர் இயம்பிடில்இச் சிறியேன்

தோத்திரஞ்செய் தம்மைகண்டு மகிழ்ந்திடஅம் மன்றில்

துலங்கும்அடிப் பெருமையைஎன் சொல்லுவது தோழி.

41

5666

வளம்பெறுவிண் அணுக்குள்ஒரு மதிஇரவி அழலாய்

வயங்கியதா ரகையாய்இவ் வகைஅனைத்தும் தோற்றும்

தளம்பெறுசிற் சொலிதபரா சத்திமயம் ஆகித்

தனித்தசத்தி மான்ஆகித் தத்துவம்எல் லாம்போய்

உளம்புகுத மணிமன்றில் திருநடம்செய் தருளும்

ஒருதலைவன் சேவடிச்சிர் உரைப்பவர்எவ் வுலகில்

அளந்தறிதும் எனமறைகள் அரற்றும்எனில் சிறிய

அடிச்சியுரைத் திடப்படுமோ அறியாய்என் தோழி.

42

5667

பரவியஐங் கருவினிலே பருவசத்தி வயத்தே

பரைஅதிட்டித் திடநாத விந்துமயக் கத்தே

விரவியதத் துவஅணுக்கள் ஒன்றொடொன் றாய்ஒன்றி

விளங்கஅவற் றடிநடுவீ றிவற்றினில்மூ விதமாய்

உரவியலுற் றுயிர்இயக்கி அறிவைஅறி வித்தே

ஓங்குதிரு அம்பலத்தில் ஒளிநடனம் புரியும்

தரவியலிற் றிதுஎனயார் தெரிந்துரைப்பார் சிறிய

தமியள்உரைத் திடுந்தரமோ சாற்றாய்என் தோழி.

43

5668

சோதிமலை ஒருதலையில் சோதிவடி வாகிச்

சூழ்ந்தமற்றோர் தலைஞான சொரூபமய மாகி

ஓதியவே றொருதலையில் உபயவண்ணம் ஆகி

உரைத்திடும்ஐங் கருவகைக்கோர் முப்பொருளும் உதவி

ஆதிநடு அந்தம்இலா ஆனந்த உருவாய்

அம்பலத்தே ஆடுகின்ற அடிஇணையின் பெருமை

வேதியனும் திருமாலும் உருத்திரரும் அறியார்

விளைவறியேன் அறிவேனோ விளம்பாய்என் தோழி.

44

5669

பூஒன்றே முப்பூஐம் பூஎழுபூ நவமாம்

பூஇருபத் தைம்பூவாய்ப் பூத்துமலர்ந் திடவும்

நாஒன்று மணம்வேறு வணம்வேறு வேறா

நண்ணிவிளங் குறவும்அதின் நற்பயன்மாத் திரையில்

மேவொன்றா இருப்பஅதின் நடுநின்று ஞான

வியன்நடனம் புரிகின்ற விரைமலர்ச்சே வடியின்

பாஒன்று பெருந்தகைமை உரைப்பவர்ஆர் சிறியேன்
பகர்ந்திடவல் லுநள் அல்லேன் பாராய்என் தோழி.

45

திருச்சிற்றம்பலம்

Back

## 138. தலைவி தலைவன் செயலைத் தாய்க் குரைத்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5670.

அன்னப்பார்ப் பால்(490)அழ காம்நிலை யூடே
அம்பலம் செய்துநின் றாடும் அழகர்
துன்னப்பார்த் தென்னுயிர்த் தோழியும் நானும்
சூதாடு கின்றஅச் சூழலில் வந்தே
உன்னைப்பார்த் துன்னுள்ளே என்னைப்பா ராதே
ஊரைப்பார்த் தோடி உழல்கின்ற பெண்ணே
என்னைப்பார் என்கின்றார் என்னடி அம்மா
என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

1

(490). அன்னைப்பார்ப்பால் - ஆ. பா. பதிப்பு.

5671

அதுபா வகமுகத் தானந்த நாட்டில்
அம்பலம் செய்துநின் றாடும் அழகர்

விதுபா வகமுகத் தோழியும் நானும்

மெய்ப்பா வனைசெய்யும் வேளையில் வந்து

பொதுபா வனைசெய்யப் போகாதோ பெண்ணே

பொய்ப்பா வனைசெய்து கைப்பானேன் ஐயோ

இதுபாவம் என்கின்றார் என்னடிஅம்மா

என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

2

5672

அறங்காதல் செய்தேனை ஆண்டுகொண் டிங்கே

அருட்பெருஞ் சோதியாய் ஆடும் அழகர்

உறங்காத வண்ணஞ்சிற் றம்பலம பாடி

உதிக்கின்ற ஒண்மையில் துதிக்கின்ற போது

புறங்காதல் செய்வார்போல் செய்யாதே பெண்ணே

பொற்கம்பம் ஏறினை சொர்க்கம்அங் கப்பால்

இறங்காதே என்கின்றார் என்னடி அம்மா

என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

3

5673

அந்நாள்வந் தென்றனை ஆண்டருள் செய்த

அய்யர் அமுதர்என் அன்பர் அழகர்

நன்னாள் கழிக்கின்ற நங்கைய ரோடு

நான்அம் பலம்பாடி நண்ணுறும் போது
பின்னாள்என் றெண்ணிப் பிதற்றாதே பெண்ணே
பேரருட் சோதிப் பெருமணம் செய்நாள்
இந்நாளே என்கின்றார் என்னடி அம்மா
என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

௪

5674

தப்போது வார்உளம் சார்ந்திட உன்னார்
சத்தியர் உத்தமர் நித்தம ணாளர்
ஒப்போத ஒண்ணாத மெய்ப்போத மன்றின்
உண்மையைப் பாடிநான் அண்மையில் நின்றேன்
அப்போதென் றெண்ணி அயர்ந்திடேல் பெண்ணே
அன்புடை நின்னையாம் இன்புறக் கூடல்
இப்போதே என்கின்றார் என்னடி அம்மா
என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

5

5675

மெய்க்குலம் போற்ற விளங்கு மணாளர்
வித்தகர் அம்பலம் மேவும் அழகர்
இக்குல மாதரும் யானும்என் நாதர்
இன்னருள் ஆடல்கள் பன்னுறும் போது

பொய்க்குலம் பேசிப் புலம்பாதே பெண்ணே

பூரண நோக்கம் பொருந்தினை நீதான்

எக்குலம் என்கின்றார் என்னடி அம்மா

என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

6

5676

வெம்மத நெஞ்சிடை மேவுற உன்னார்

வெம்பல மாற்றும்என் அம்பல வாணர்

சம்மத மாமட வார்களும் நானும்

தத்துவம் பேசிக்கொண் டொத்துறும் போது

இம்மதம் பேசி இறங்காதே பெண்ணே

ஏகசி வோகத்தை எய்தினை நீதான்

எம்மதம் என்கின்றார் என்னடி அம்மா

என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

7

5677

பாரொடு விண்ணும் படைத்தபண் பாளர்

பற்றம் பலத்தார்சொல் சிற்றம் பலத்தார்

வாரிடு கொங்கையர் மங்கைய ரோடே

மன்றகம் பாடி மகிழ்கின்ற போது

ஏருடம் பொன்றென எண்ணேல்நீ பெண்னே

எம்முடம் புன்னை(481) இணைந்திங் கெமக்கே

ஈருடம் பென்கின்றார் என்னடி அம்மா

என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

8

(481). எம்முடம் பும்மை - ஆ. பா. பதிப்பு.,

5678

மறப்பற்ற நெஞ்சிடை வாழ்கின்ற வள்ளல்

மலப்பற் றறுத்தவர் வாழ்த்து மணாளர்

சிறப்புற்ற மங்கையர் தம்மொடு நான்தான்

சிற்றம் பலம்பாடிச் செல்கின்ற போது

புறப்பற் றகற்றத் தொடங்காதே பெண்ணே

புலைஅகப் பற்றை அறுத்தாய் நினக்கே

இறப்பற்ற தென்கின்றார் என்னடி அம்மா

என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

9

5679

ஆறெனும் அந்தங்கள் ஆகிஅன் றாகும்

அம்பலத் தாடல்செய் ஆனந்த சித்தர்

தேறறி வாகிச் சிவானு பவத்தே

சின்மய மாய்நான் திளைக்கின்ற போது

மாறகல் வாழ்வினில் வாழ்கின்ற பெண்ணே

வல்லவள் நீயேஇம் மாநிலை மேலே

ஏறினை என்கின்றார் என்னடி அம்மா

என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா.

10

திருச்சிற்றம்பலம்

Back

139. நற்றாய் செவிலிக்குக் கூறல்

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5680.

உணர்ந்தவர் தமக்கும் உணர்வரி யான்என்

உள்ளகத் தமர்ந்தனன் என்றாள்

அணிந்தனன் எனக்கே அருண்மண மாலை

அதிசயம் அதிசயம் என்றாள்

துணிந்துநான் தனித்த போதுவந் தென்கை

தொட்டனன் பிடித்தனன் என்றாள்

புணர்ந்தனன் கலந்தான் என்றுளே களித்துப்

பொங்கினாள் நான்பெற்ற பொன்னே.

1

5681

தனிப்பெரும் பதியே என்பதி ஆகத்

தவம்எது புரிந்ததோ என்றாள்

அனித்தநீத் தெனைத்தான் அன்பினால் அணைத்தான்

அதிசயம் அதிசயம் என்றாள்

இனித்துயர் சிறிதும் அடைந்திடேன் என்றாள்

எனக்கிணை யார்கொலோ என்றாள்

சனிப்பிறப் பறுத்தேன் என்றுளே களிப்புத்

ததும்பினாள் நான்பெற்ற தனியே.

2

5682

புண்ணிய பதியைப் புணர்ந்தனன் நான்செய்

புண்ணியம் புகல்அரி தென்றாள்

தண்ணிய மதியின் அமுதெனக் களித்த

தயவைநான் மறப்பனோ என்றாள்

எண்ணிய அனைத்தும் ஈந்தருள் கின்றான்

என்னையோ என்னையோ என்றாள்

அண்ணிய பேரா னந்தமே வடிவம்

ஆயினாள் நான்பெற்ற அணங்கே.

3

5683

சத்திய ஞான சபாபதி எனக்கே

தனிப்பதி ஆயினான் என்றாள்

நித்திய வாழ்வு பெற்றுநான் இன்ப

நிலைதனில் நிறைந்தனன் என்றாள்
பித்தியல் உலகீர் காண்மினோ சித்திப்
பேறெலாம் என்வசத் தென்றாள்
எத்திசை யீரும் ஒத்திவண் வருக
என்றனள் எனதுமெல் லியலே.

4

5684

திருமணிப் பொதுவில் ஒருபெரும் பதிஎன்
சிந்தையில் கலந்தனன் என்றாள்
பெருமையில் சிறந்தேன் என்பெருந் தவத்தைப்
பேசுதல் அரிதரி தென்றாள்
இருமையும் என்போல் ஒருமையில் பெற்றார்
யாண்டுளர் யாண்டுளர் என்றாள்
மருமலர் முகத்தே இளநகை துளும்ப
வயங்கினாள் நான்பெற்ற மகளே.

5

5685

வள்ளலைப் புணர்ந்தேன் அம்மவோ இதுதான்
மாலையோ காலையோ என்றாள்
எள்ளலைத் தவிர்ந்தேன் உலகெலாம் எனக்கே
ஏவல்செய் கின்றன என்றாள்

தெள்ளமு தருந்தி அழிவிலா உடம்பும்

சித்தியும் பெற்றனன் என்றாள்

துள்ளிய மடவீர் காண்மினோ என்றாள்

சோர்விலாள் நான்பெற்ற சுதையே.

6

5686

கனகமா மன்றில் நடம்புரி பதங்கள்

கண்டனன் கண்டனன் என்றாள்

அனகசிற் சபையில் ஒருபெரும் பதிஎன்

அன்பிலே கலந்தனன் என்றாள்

தினகர சோமாக் கினிஎலாம் எனக்கே

செயல்செயத் தந்தனன் என்றாள்

தனகரத் தெனைத்தான் தழுவினான் என்றாள்

தவத்தினால் பெற்றநம் தனியே.

7

5687

கொடிப்பெரு மணிப்பொற் கோயில்என் உளமாக்

கொண்டுவந் தமர்ந்தனன் என்றாள்

கடிப்புது மலர்ப்பூங் கண்ணிவேய்ந் தெனைத்தான்

கடிமணம் புரிந்தனன் என்றாள்

ஒடிப்பற எல்லாம் வல்லதோர் சித்தாம்

ஒளிஎனக் களித்தனன் என்றாள்

இடிப்பொடு நொடித்தீர் காண்மினோ என்றாள்

என்தவத் தியன்றமெல் லியலே.

8

5688

வாழிமா மணிமன் றிறைவனே எனக்கு

மாலைவந் தணிந்தனன் என்றாள்

ஊழிதோ றூழி உலவினும் அழியா

உடம்பெனக் களித்தனன் என்றாள்

ஆழிசூழ் உலகோ டண்டங்கள் அனைத்தும்

அளிக்கஎன் றருளினான் என்றாள்

ஏழியன் மாட மிசையுற வைத்தான்

என்றனள் எனதுமெல் லியலே.

9

5689

ஏலுநன் மணிமா மன்றருட் சோதி

என்னுளத் தமர்ந்தனன் என்றாள்

பாலும்இன் சுவையும் போன்றெனை தாவி

பற்றினன் கலந்தனன் என்றாள்

சாலும்எவ் வுலகும் தழைக்கஎன் தனக்கே

சத்தியை அளித்தனன் என்றாள்

மேலும்எக் காலும் அழிவிலேன் என்றாள்

மிகுகளிப் புற்றனள் வியந்தே.

10

திருச்சிற்றம்பலம்

Back

140. தோழிக் குரிமை கிளத்தல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5690.

நயந்தநட நாயகர்உன் நாயகரே எனினும்

நாடியமந் திரங்கள்சில கூடிஉரை யிடவே

வியந்துமற்றைத் தேவர்எலாம் வரவும்அவர் நேயம்

விரும்பாதே இருப்பதென்நீ என்கின்றாய் தோழி

வயந்தரும்இந் திரர்பிரமர் நாரணர்கா ரணர்கள்

மற்றையர்கள் மற்றையர்கள் மற்றையர்கள் எவர்க்கும்

பயந்தகுடி அல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே

பதிநடஞ்செய் அடிப்பணிக்கே பதித்தகுடி அறியே.

1

5691

நயந்தநட நாயகர்உன் நாயகரே எனினும்

நங்கைநினைக் கண்டிடவே நாடிமற்றைத் தலைவர்

வியந்துவரு கின்றதுகண் டுபசரியா திங்கே

மேல்நோக்கி இருப்பதென்நீ என்கின்றாய் தோழி
வயந்தருபார் முதல்நாத வரையுளநாட் டவர்க்கும்
மற்றவரை நடத்துகின்ற மாநாட்டார் தமக்கும்
பயந்தகுடி அல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
பதிநடஞ்செய் அடிப்பணிக்கே பதித்தகுடி அறியே.

௨

5692

நயந்தநட நாயகர்உன் நாயகரே எனினும்
நாடும்மற்றைத் தலைவர்தமைக் கண்டபொழு தெனினும்
வியந்தவர்க்கோர் நல்லுரையும் சொல்லாதே தருக்கி
வீதியிலே நடப்பதென்நீ என்கின்றாய் தோழி
வயந்தரும்இவ் வண்டபகி ரண்டமட்டோ நாத
வரையோஅப் பாலும்உள மாநாட்டார் தமக்கும்
பயந்தகுடி அல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
பதிநடஞ்செய் அடிப்பணிக்கே பதித்தகுடி அறியே.

3

5693

கடுங்குணத்தோர் பெறற்கரிய நடத்தரசே நினக்குக்
கணவர்எனி னும்பிறரைக் கண்டபொழு தெனினும்
நடுங்குணத்தால் நின்றுசில நல்வார்த்தை பகராய்
நங்காய்ஈ தென்எனநீ நவில்கின்றாய் தோழி

ஒடுங்குபல தத்துவர்க்கும் தத்துவரை நடத்தும்
உபயநிலைத் தலைவருக்கும் அவர்தலைவர் களுக்கும்
நடுங்குகுடி அல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
நடஞ்செய்அடிப் பணிக்கென்றே நாட்டியநற் குடியே.

4

5694

மடங்கலந்தார் பெறற்கரிய நடத்தரசே நினக்கு
மணவாளர் எனினும்உன்பால் வார்த்தைமகிழ்ந் துரைக்க
இடங்கலந்த மூர்த்திகள்தாம் வந்தால்அங் கவர்பால்
எண்ணம்இலா திருக்கின்றாய் என்கொல்என்றாய் தோழி
மடங்குசம யத்தலைவர் மதத்தலைவர் இவர்க்கும்
வயங்கும்இவர்க் குபகரிக்கும் மாத்தலைவர் களுக்கும்
அடங்குகுடி அல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
ஆடல்அடிப் பணிக்கென்றே அமைத்தகுடி அறியே.

5

5695

அறங்குலவு தோழிஇங்கே நீஉரைத்த வார்த்தை
அறிவறியார் வார்த்தைஎத னால்எனில்இம் மொழிகேள்
உறங்குவதும் விழிப்பதும்பின் உண்ணுவதும் இறத்தல்
உறுவதுடன் பிறத்தல்பல பெறுவதுமாய் உழலும்
மறங்குலவும் அணுக்கள்பலர் செய்தவிர தத்தால்

மதத்தலைமை பதத்தலைமை வாய்த்தனர்அங் கவர்பால்

இறங்கலிலேன் பேசுதலால் என்பயனோ நடஞ்செய்

இறைவர்அடிப் புகழ்பேசி இருக்கின்றேன் யானே.

6

5696

சிவமயமே வேறிலைஎல் லாம்எனநீ தானே

தேமொழியாய் பற்பலகால் செப்பியிடக் கேட்டேன்

தவமயத்தார் பலசமயத் தலைவர்மதத் தலைவர்

தத்துவர்தத் துவத்தலைவர் அவர்தலைவர் தலைவர்

இவர்அவர்என் றயல்வேறு பிரித்தவர்பால் வார்த்தை

இயம்புவதென் என்றாய்ஈ தென்கொல்என்றாய் தோழி

நவமயம்நீ உணர்ந்தறியாய் ஆதலில்இவ் வண்ணம்

நவின்றனைநின் ஐயமற நான்புகல்வேன் கேளே.

7

5697

ஒளிஒன்றே அண்டபகிர் அண்டம்எலாம் விளங்கி

ஓங்குகின்ற தன்றிஅண்ட பகிர்அண்டங் களிலும்

வெளிநின்ற சராசரத்தும் அகத்தினொடு புறத்தும்

விளம்பும்அகப் புறத்தினொடு புறப்புறத்தும் நிறைந்தே

உளிநின்ற இருள்நீக்கி இலங்குகின்ற தன்மை

உலகறியும் நீஅறியா தன்றுகண்டாய் தோழி

தளிநின்ற ஒளிமயமே வேறிலைஎல் லாமும்

தான்எனவே தாகமங்கள் சாற்றுதல்சத் தியமே.

8

5698

ஏற்றிடுவே தாகமங்கள் ஒளிமயமே எல்லாம்

என்றமொழி தனைநினைத்தே இரவில்இருட் டறையில்

சாற்றிடுமண் பாத்திரத்தை மரவட்டில் களைக்கல்

சட்டிகளை வேறுபல சார்ந்தகரு விகளைத்

தேற்றமிகு தண்ணீரைச் சீவர்கள்பற் பலரைச்

செப்பியஅவ் விருட்டறையில் தனித்தனிசேர்த் தாலும்

ஊற்றம்உறும் இருள்நீங்கி ஒளிகாண்ப துளதோ

உளதேல்நீ உரைத்தமொழி உளதாகும் தோழி.

9

5699

பரமதனோ டுலகுயிர்கள் கற்பனையே எல்லாம்

பகர்சிவமே எனஉணர்ந்தோம் ஆதலினால் நாமே

பிரமம்எனப் பிறர்க்குரைத்துப் பொங்கிவழிந் தாங்கே

பேசுகின்ற பெரியவர்தம் பெரியமதம் பிடியேல்

உரமிகுபேர் உலகுயிர்கள் பரமிவைகா ரியத்தால்

உள்ளனவே காரணத்தால் உள்ளனஇல் லனவே

தரமிகுபேர் அருள்ஒளியால் சிவமயமே எல்லாம்

தாம்எனவே உணர்வதுசன் மார்க்கநெறி பிடியே.

10

5780

பிரமம்என்றும் சிவம்என்றும் பேசுகின்ற நிலைதான்

பெருநிலையே இந்நிலையில் பேதமுண்டோ எனவே

தரம்அறிய வினவுகின்றாய் தோழிஇது கேள்நீ

சமரசசன் மார்க்கநிலை சார்திஎனில் அறிவாய்

திரமுறவா யினும்எல்லாம் ஆகிஅல்லா தாகும்

திருவருளாம் வெளிவிளங்க விளங்குதனிப் பொருளாம்

சிரமுறும்ஓர் பொதுஉண்மைச் சிவம்பிரம முடியே

திகழ்மறைஆ கமம்புகலும் திறன்இதுகண் டறியே.

11

5781

இலங்குகின்ற பொதுஉண்மை இருந்தநிலை புகல்என்

றியம்புகின்றாய் மடவாய்கேள் யான்அறியுந் தரமோ

துலங்கும்அதை உரைத்திடவும் கேட்டிடவும் படுமோ

சொல்அளவோ பொருள்அளவோ துன்னும்அறி வளவோ

விலங்குகின்ற தத்துவங்கள் அத்தனையும் கடந்த

மேனிலைஎன் றந்தமெலாம் விளம்புகின்ற தன்றி

வலங்கொளும்அம் மேனிலையின் உண்மைஎது என்றால்

மவுனஞ்சா திப்பதன்றி வாய்திறப்ப திலையே.

12

5792

வாய்திறவா மவுனமதே ஆகும்எனில் தோழி
மவுனசத்தி வெளிஏழும் பரத்தபரத் தொழியும்
தூயபரா பரம்அதுவே என்றால்அங் கதுதான்
துலங்குநடு வெளிதனிலே கலந்துகரை வதுகாண்
மேயநடு வெளிஎன்றால் தற்பரமாம் வெளியில்
விரவியிடும் தற்பரமாம் வெளிஎன்றால் அதுவும்
ஆயபெரு வெளிதனிலே அடங்கும்இது மட்டே
அளப்பதொரு வாறதன்மேல் அளப்பதரி தரிதே.

13

5793

கிளக்கின்ற மறைஅளவை ஆகமப்பே ரளவை
கிளந்திடுமெய்ச் சாதனமாம் அளவைஅறி வளவை
விளக்கும்இந்த அளவைகளைக் கொண்டுநெடுங் காலம்
மேலவர்கள் அளந்தளந்து மெலிகின்றார் ஆங்கே
அளக்கின்ற கருவிஎலாம் தேய்ந்திடக் கண்டாரே
அன்றிஒரு வாறேனும் அளவுகண்டார் இலையே
துளக்கம்உறு சிற்றறிவால் ஒருவாறென் றுரைத்தேன்
சொன்னவெளி வரையேனும் துணிந்தளக்கப் படுமோ.

14

திருச்சிற்றம்பலம்

Back

## 141. தலைவி கூறல்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5784.

தந்தேகம் எனக்களித்தார் தம்அருளும் பொருளும்
தம்மையும்இங் கெனக்களித்தார் எம்மையினும் பிரியார்
எந்தேகம் அதிற்புகுந்தார் என்உளத்தே இருந்தார்
என்உயிரில் கலந்தநடத் திறையவர்கா லையிலே
வந்தேஇங் கமர்ந்தருள்வர் ஆதலினால் விரைந்தே
மாளிகையை அலங்கரித்து வைத்திடுதி இதற்குச்
சந்தேகம் இல்லைஎன்றன் தனித்தலைவர் வார்த்தை
சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

1

5785

நன்பாட்டு மறைகளுக்கும் மால்அயர்க்கும் கிடையார்
நம்அளவில் கிடைப்பாரோ என்றுநினைத் தேங்கி
என்பாட்டுக் கிருந்தேனை வலிந்துகலந் தணைந்தே
இன்பமுறத் தனிமாலை இட்டநடத் திறைவர்
முன்பாட்டுக் காலையிலே வருகுவர்மா ளிகையை
முழுதும்அலங் கரித்திடுக ஐயுறவோ டொருநீ

தன்பாட்டுக் கிருந்துளறேல் ஐயர்திரு வார்த்தை

சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

2

5706

முன்பாட்டுக் காலையிலே வருகுவர்என் கணவர்

மோசம்இலை மோசம்என மொழிகின்றார் மொழிக

பின்பாட்டுக் காலையிலே நினைத்தஎலாம் முடியும்

பிசகிலைஇம் மொழிசிறிதும் பிசகிலைஇவ் வுலகில்

துன்பாட்டுச் சிற்றினத்தார் சிறுமொழிகேட் டுள்ளம்

துளங்கேல்நம் மாளிகையைச் சூழஅலங் கரிப்பாய்

தன்பாட்டுத் திருப்பொதுவில் நடத்திறைவர் ஆணை

சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

3

5707

உள்ளுண்ட உண்மைஎலாம் நான்அறிவேன் என்னை

உடையபெருந் தகைஅறிவார் உலகிடத்தே மாயைக்

கள்ளுண்ட சிற்றினத்தார் யாதறிவார் எனது

கணவர்திரு வரவிந்தக் காலையிலாம் கண்டாய்

நள்ளுண்ட மாளிகையை மங்கலங்கள் நிரம்ப

நன்குபுனைந் தலங்கரிப்பாய் நான்மொழிந்த மொழியைத்

தள்ளுண்டிங் கையமுறேல் நடத்திறைவர் ஆணை

சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

4

5788

என்னுடைய தனிக்கணவர் அருட்ஜோதி உண்மை

யான்அறிவேன் உலகவர்கள் எங்ஙனம்கண் டறிவார்

உன்னல்அற உண்ணுதற்கும் உறங்குதற்கும் அறிவார்

உலம்புதல்கேட் டையமுறேல் ஓங்கியமா ளிகையைத்

துன்னுறும்மங் கலம்விளங்க அலங்கரிப்பாய் இங்கே

தூங்குதலால் என்னபலன் சோர்வடையேல் பொதுவில்

தன்னுடைய நடம்புரியும் தலைவர்திரு ஆணை

சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

5

5789

என்னைமண மாலைஇட்டார் என்னுயிரில் கலந்தார்

எல்லாம்செய் வல்லசித்தர் எனக்கறிவித் ததனை

இன்னஉல கினர்அறியார் ஆதலினால் பலவே

இயம்புகின்றார் இயம்புகநம் தலைவர்வரு தருணம்

மன்னியகா லையில்ஆகும் மாளிகையை விரைந்து

மங்கலங்கள் புனைந்திடுக மயங்கிஐயம் அடையேல்

தன்நிகர்தான் ஆம்பொதுவில் நடம்புரிவார் ஆணை

சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

6

5710

கிளைஅனந்த மறையாலும் நிச்சயிக்கக் கூடாக்
கிளர்ஒளியார் என்அளவில் கிடைத்ததனித் தலைவர்
அளையஎனக் குணர்த்தியதை யான்அறிவேன் உலகர்
அறிவாரோ அவர்உரைகொண் டையம்உறேல் இங்கே
இளைவடையேன் மாளிகையை மங்கலங்கள் நிரம்ப
இனிதுபுனைந் தலங்கரிப்பாய் காலைஇது கண்டாய்
தளர்வறச்சிற் றம்பலத்தே நடம்புரிவார் ஆணை
சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

7

5711

ஆர்அறிவார் எல்லாம்செய் வல்லவர்என் உள்ளே
அறிவித்த உண்மையைமால் அயன்முதலோர் அறியார்
பார்அறியா தயல்வேறு பகர்வதுகேட் டொருநீ
பையுளொடும் ஐயமுறேல் காலைஇது கண்டாய்
நேர்உறநீ விரைந்துவிரைந் தணிபெறமா ளிகையை
நீடஅலங் கரிப்பாய்உள் நேயமொடு களித்தே
தாரகமிங் கெனக்கான நடத்திறைவர் ஆணை
சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

8

5712

ஐயர்எனக் குள்ளிருந்திங் கறிவித்த வரத்தை

யார்அறிவார் நான்அறிவேன் அவர்அறிவார் அல்லால்

பொய்உலகர் அறிவாரோ புல்லறிவால் பலவே

புகல்கின்றார் அதுகேட்டுப் புந்திமயக் கடையேல்

மெய்யர்எனை ஆளுடையார் வருகின்ற தருணம்

மேவியது மாளிகையை அலங்கரிப்பாய் விரைந்தே

தையல்ஒரு பாலுடைய நடத்திறைவர் ஆணை

சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

9

5713

உடையவர்என் உளத்திருந்தே உணர்வித்த வரத்தை

உலகவர்கள் அறியார்கள் ஆதலினால் பலவே

இடைபுகல்கின் றார்அதுகேட் டையமுறேல் இங்கே

இரவுவிடிந் ததுகாலை எய்தியதால் இனியே

அடைவுறநம் தனித்தலைவர் தடையறவந் தருள்வர்

அணிபெறமா ளிகையைவிரைந் தலங்கரித்து மகிழ்க

சடையசையப் பொதுநடஞ்செய் இறைவர்திரு வார்த்தை

சத்தியம்சத் தியம்மாதே சத்தியம்சத் தியமே.

10

திருச்சிற்றம்பலம்

Back

142. அனுபவ மாலை

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

5714.

அம்பலத்தே திருநடஞ்செய் அடிமலர்என் முடிமேல்

அணிந்துகொண்டேன் அன்பொடும்என் ஆருயிர்க்கும் அணிந்தேன்

எம்பரத்தே மணக்கும்அந்த மலர்மணத்தைத் தோழி

என்உரைப்பேன் உரைக்கஎன்றால் என்னளவன் றதுவே

வம்பிசைத்தேன் அன்றடிநீ என்அருகே இருந்துன்

மணிநாசி அடைப்பதனைத் திறந்துமுகந் தறிகாண்

நம்புறுபார் முதல்நாத வரையுளநாட் டவரும்

நன்குமுகந் தனர்வியந்தார் நன்மணம்ஈ தெனவே.

1

5715

கண்உறங்கேன் உறங்கினும்என் கணவரொடு கலக்கும்

கனவேகண் டுளமகிழ்வேன் கனவொன்றோ நனவும்

எண்அடங்காப் பெருஞ்ஜோதி என்இறைவர் எனையே

இணைந்திரவு பகல்காணா தின்புறச்செய் கின்றார்

மண்உறங்கும் மலைஉறங்கும் வளைகடலும் உறங்கும்

மற்றுளஎல் லாம்உறங்கும் மாநிலத்தே நமது

பெண்உறங்காள் எனத்தாயர் பேசிமகிழ் கின்றார்

பெண்கள்எலாம் கூசுகின்றார் பெருந்தவஞ்செய் கிலரே.

2

5716

எல்லாஞ்செய் வல்லதுரை என்னைமணம் புரிந்தார்

எவ்வுலகில் யார்எனக்கிங் கீடுரைநீ தோழீ

நல்லாய்மீக் கோளுடையார் இந்திரர்மா முனிவர்

நான்முகர்நா ரணர்எல்லாம் வான்முகராய் நின்றே

பல்லாரில் இவள்புரிந்த பெருந்தவத்தை நம்மால்

பகர்வரிதென் கின்றார்சிற் பதியில்நடம் புரியும்

வல்லானை மணந்திடவும் பெற்றனள்இங் கிவளே

வல்லாள்என் றுரைக்கின்றார் நல்லார்கள் பலரே.

3

5717

இச்சைஎலாம் வல்லதுரை என்னைமணம் புரிந்தார்

யான்செய்தவம் யார்செய்தார் இதுகேள்என் தோழி

எச்சமயத் தேவரையும் சிற்றுரும்பென் றேனும்

எண்ணுவனோ புண்ணியரை எண்ணுமனத் தாலே

பிச்சிஎன நினைத்தாலும் நினையடிநீ அவரைப்

பிரிவேனோ பிரிவென்று பேசுகினும் தரியேன்

விச்சைநடம் கண்டேன்நான் நடங்கண்டால் பேயும்

விடத்துணியா தென்பர்கள்என் விளைவுரைப்ப தென்னே.

4

5718

வஞ்சமிலாத் தலைவருக்கே மாலைமகிழ்ந் தணிந்தேன்

மறைகளுடன் ஆகமங்கள் வகுத்துவகுத் துரைக்கும்

எஞ்சலுறா வாழ்வனைத்தும் என்னுடைய வாழ்வே

எற்றோநான் புரிந்ததவம் சற்றேநீ உரையாய்

அஞ்சுமுகம் காட்டியஎன் தாயர்எலாம் எனக்கே

ஆறுமுகம் காட்டிமிக வீறுபடைக் கின்றார்

பஞ்சடிப்பா வையர்எல்லாம் விஞ்சடிப்பால் இருந்தே

பரவுகின்றார் தோழிஎன்றன் உறவுமிக விழைந்தே.

5

5719

அன்னம்உண அழைக்கின்றாய் தோழிஇங்கே நான்தான்

அம்பலத்தே ஆடுகின்ற அண்ணல்அடி மலர்த்தேன்

உன்னைநினைத் துண்டேன்என் உள்ளகத்தே வாழும்

ஒருதலைமைப் பெருந்தலைவ ருடையஅருட் புகழாம்

இன்னமுதில் என்னுடைஅன் பென்னும்நறுங் கனியின்

இரதமும்என் தனிக்கணவர் உருக்காட்சி எனும்ஓர்

கன்னல்உளே தனித்தெடுத்த தேம்பாகும் கலந்தே

களித்துண்டேன் பசிசிறிதும் கண்டிலன்உள் ளகத்தே.

6

5720

பொதுநடஞ்செய் துரைமுகத்தே தளதளஎன் றொளிரும்

புன்னகையே ஒருகோடிப் பொன்பெறும்என் றுரைப்பார்

இதுவரையோ பலகோடி என்னினும்ஓர் அளவோ

எண்இறந்த அண்டவகை எத்தனைகோ டிகளும்

சதுமறைசொல் அண்டவகை தனித்தனியே நடத்தும்

சத்தர்களும் சத்திகளும் சற்றேனும் பெறுமோ

துதிபெறும்அத் திருவாளர் புன்னகையை நினைக்குந்

தோறும்மனம் ஊறுகின்ற சுகஅமுதம் பெறுமே.

7

5721

கண்கலந்த கணவர்எனைக் கைகலந்த தருணம்

கண்டறியேன் என்னையும்என் கரணங்கள் தனையும்

எண்கலந்த போகம்எலாம் சிவபோகம் தனில்ஓர்

இறைஅளவென் றுரைக்கின்ற மறைஅளவின் றறிந்தேன்

விண்கலந்த திருவாளர் உயிர்கலந்த தருணம்

வினைத்துயர்தீர்ந் தடைந்தசுகம் நினைத்திடுந்தோ றெல்லாம்

உண்கலந்த ஆனந்தப் பெரும்போகம் அப்போ

துற்றதென எனைவிழுங்கக் கற்றதுகாண் தோழி.

8

5722

மாடமிசை ஓங்குநிலா மண்டபத்தே எனது
மணவாளர் கொடுத்ததிரு அருளமுதம் மகிழ்ந்தே
ஏடவிழ்பூங் குழலாய்நான் உண்டதொரு தருணம்
என்னைஅறிந் திலன்உலகம் தன்னையும்நான் அறியேன்
தேடறிய நறும்பாலும் தேம்பாகும் நெய்யும்
தேனும்ஒக்கக் கலந்ததெனச் செப்பினும்சா லாதே
ஈடறியாச் சுவைபுகல என்னாலே முடியா
தென்னடியோ அவ்வமுதம் பொன்னடிதான் நிகரே.

9

5723

கற்பூரம் மணக்கின்ற தென்னுடம்பு முழுதும்
கணவர்திரு மேனியிலே கலந்தமணம் அதுதான்
இற்பூத மணம்போலே மறைவதன்று கண்டாய்
இயற்கைமணம் துரியநிறை இறைவடிவத் துளதே
பொற்பூவும் நறுமணமும் கண்டறியார் உலகர்
புண்ணியனார் திருவடிவில் நண்ணியவா றதுவே
நற்பூதி அணிந்ததிரு வடிவுமுற்றும் தோழி
நான்கண்டேன் நான்புணர்ந்தேன் நான்அதுஆ னேனே.

10

5724

மன்னுதிருச் சபைநடுவே வயங்குநடம் புரியும்

மணவாளர் திருமேனி வண்ணங்கண் டுவந்தேன்

என்னடிஇத் திருமேனி இருந்தவண்ணம் தோழி

என்புகல்வேன் மதிஇரவி இலங்கும்அங்கி உடனே

மின்னும்ஒன்றாய்க் கூடியவை எண்கடந்த கோடி

விளங்கும்வண்ணம் என்றுரைக்கோ உரைக்கினும்சா லாதே

அன்னவண்ணம் மறைமுடியும் அறைவரிதே அந்த

அரும்பெருஞ்சோ தியின்வண்ணம் யார்உரைப்பர் அந்தோ.

11

5725

கள்ளுண்டாள் எனப்புகன்றார் கனகசபை நடுவே

கண்டதுண்டு சிற்சபையில் உண்டதும்உண் டடிநான்

எள்ளுண்ட பலவிடயத் திறங்குங்கள் அன்றே

என்றும்இற வாநிலையில் இருத்துங்கள் உலகர்

உள்ளுண்ட போதுமயக் குற்றிடுங்கள் அலவே

உள்ளமயக் கனைத்தினையும் ஒழித்திடுங்கள் மடவாய்

அள்ளுண்ட பிறரும்எனை அடுத்தடுத்துக் கண்டால்

அறிவுதரும் அவர்க்கும்இங்கே யான்உண்ட கள்ளே.

12

5726

காரிகைநீ என்னுடனே காணவரு வாயோ

கனகசபை நடுநின்ற கணவர்வடி வழகை

ஏரிகவாத் திருவடிவை எண்ணமுடி யாதேல்

இயம்பமுடிந் திடுமோநாம் எழுதமுடிந் திடுமோ

பேரிகவா மறைகளுடன் ஆகமங்கள் எல்லாம்

பின்னதுமுன் முன்னதுபின் பின்முன்னா மயங்கிப்

பாரிகவா தின்றளவும் மிகஎழுதி எழுதிப்

பார்க்கின்ற முடிவொன்றும் பார்த்ததிலை அம்மா.

13

5727

கண்ணாறு(482) படும்எனநான் அஞ்சுகின்றேன் பலகால்

கணவர்திரு வடிவழகைக் கண்டுகண்டு களிக்கில்

எண்ணாஎன் ஆசைவெள்ளம் என்சொல்வழி கேளா

தெனைஈர்த்துக் கொண்டுசபைக் கேகுகின்ற தந்தோ

பெண்ணாசை பெரிதென்பர் விண்ணாளும் அவர்க்கும்

பெண்ணாசை பெரிதலகாண் ஆணாசை பெரிதே

உண்ணாடிப் பற்பலகால் கண்ணாறு கழிக்கல்

உறுகின்றேன் தோழிநின்னால் பெறுகின்ற படியே.

14

(482). இப்பதிகத்தில் அடிகளார் எழுத்து 'கண்ணாறு' என்பதுபோல் காண்கிறது. ஓர் அன்பர் படியில் உள்ளதும் 'கண்ணாறு'. திருத்தணிகைப் பகுதி ஜீவசாட்சி மாலையில் அவர்கள் எழுதி உள்ளது

'கண்ணேறு' என்பது. முதல் அச்சும் 'கண்ணேறு'.- ஆ. பா.

5728

கற்பூரம் கொணர்ந்திடுக தனித்தோழி எனது
கணவர்வரு தருணம்இது கண்ணாறு கழிப்பாம்
எற்பூத நிலைஅவர்தம் திருவடித்தா மரைக்கீழ்
இருப்பதடி கீழிருப்ப தென்றுநினை யேல்காண்
பற்பூத நிலைகடந்து நாதநிலைக் கப்பால்
பரநாத நிலைஅதன்மேல் விளங்குகின்ற தறிநீ
இற்பூவை அவ்வடிக்குக் கண்ணாறு கழித்தால்
எவ்வுலகத் தெவ்வுயிர்க்கும் இனிதுநலந் தருமே.

15

5729

மனைஅணைந்து மலர்அணைமேல் எனைஅணைந்த போது
மணவாளர் வடிவென்றும் எனதுவடி வென்றும்
தனைநினைந்து பிரித்தறிந்த தில்லையடி எனைத்தான்
சற்றுமறி யேன்எனில்யான் மற்றறிவ தென்னே
தினைஅளவா யினும்விகற்ப உணர்ச்சிஎன்ப திலையே
திருவாளர் கலந்தபடி செப்புவதெப் படியோ
உனைஅணைந்தால் இவ்வாறு நான்கேட்பேன் அப்போ
துன்னறிவும் என்னறிவும் ஓரறிவாம் காணே.

16

5730

தாழ்குழலாய் எனைச்சற்றே தனிக்கவிட்டால் ஞான
சபைத்தலைவர் வருகின்ற தருணம்இது நான்தான்
வாழ்வடைபொன் மண்டபத்தே பளிக்கறையி னூடே
மலரணையை அலங்கரித்து வைத்திடுதல் வேண்டும்
சூழுறநான் அலங்கரிப்பேன் என்கின்றாய் தோழி
துரைக்குமனம் இல்லைஅது துணிந்தறிந்தேன் பலகால்
ஏழ்கடலில் பெரிதன்றோ நான்அடைந்த சுகம்இங்
கிதைவிடநான் செய்பணிவே றெப்பணிநீ இயம்பே.

17

5731

தனித்தலைவர் வருகின்ற தருணம்இது தோழி
தனிக்கஎனை விடுநீயும் தனித்தொருபால் இருத்தி
இனித்தசுவைத் திரள்கலந்த திருவார்த்தை நீயும்
இன்புறக்கேட் டுளங்களிப்பாய் இதுசாலும் நினக்கே
மனித்தர்களோ வானவரோ மலர்அயனோ மாலோ
மற்றையரோ என்புகல்வேன் மகேசுரர்ஆ தியரும்
தனித்தஒரு திருவார்த்தை கேட்பதற்கே கோடித்
தவஞ்செய்து நிற்கின்றார் நவஞ்செய்த நிலத்தே.

18

5732

மணவாளர் வருகின்ற தருணம்இது மடவாய்

மாளிகையின் வாயல்எலாம் வளம்பெறநீ புனைக

குணவாளர் அணையும்மலர் அணைஅகத்தை நானே

குலவுமணி விளக்கத்தால் அலங்கரிக்கப் புகுவேன்

தணவாத சுகந்தரும்என் தனிக்கணவர் வரிலோ

சற்றுமயல் வாதனைகள் உற்றிடுதல் ஆகா

அனவாத மனத்தவரைப் புறப்பணிக்கே விடுக

அன்புடையார் களுக்கிடுக அகப்பணிசெய் திடவே.

19

5733

அரும்பொன்அனை யார்எனது கணவர்வரு தருணம்

ஆயிழைஈ தாதலினால் வாயல்முகப் பெல்லாம்

விரும்புறுதோ ரணம்கொடிகள் பழுத்தகுலை வாழை

விரைக்கமுகு தெங்கிளநீர் எனைப்பலவும் புனைக

கரும்புநெல்லின் முளைநிறைநீர்க் குடம்இணைந்த கயலும்

கண்ணாடி கவரிமுதல் உண்ணாடி இடுக

இரும்பொடுகல் ஒத்தமனங் களும்கனிய உருக்கும்

இறைவர்திரு வரவெதிர்கொண் டேத்துவதற் கினிதே.

20

5734

பதிவரும்ஓர் தருணம்இது தருணம்இது தோழி(403)

பராக்கடையேல் மணிமாடப் பக்கமெலாம் புனைக
அதிகநலம் பெறுபளிக்கு மணிமேடை நடுவே
அணையைஅலங் கரித்திடநான் புகுகின்றேன் விரைந்தே
கதிதருவார் நல்வரவு சத்தியம்சத் தியம்நீ
களிப்பினொடு மணிவிளக்கால் கதிர்பரவ நிரைத்தே
புதியநவ மணிகுயின்ற ஆசனங்கள் இடுக
புண்ணியனார் நல்வரவை எண்ணிஎண்ணி இனிதே.

21

(483) இப்பதிகத்தில் சிற்சில இடங்களில் "தோழீ"
என்பதுபோல் காண்கிறது - ஆ. பா.

5735

மன்றாடும் கணவர்திரு வரவைநினைக் கின்றேன்
மகிழ்ந்துநினைத் திடுந்தோறும் மனங்கனிவுற் றுருகி
நன்றாவின் பால்திரளின் நறுநெய்யும் தேனும்
நற்கருப்பஞ் சாறெடுத்த சர்க்கரையும் கூட்டி
இன்றார உண்டதென இனித்தினித்துப் பொங்கி
எழுந்தெனையும் விழுங்குகின்ற தென்றால்என் தோழி
இன்றாவி அன்னவரைக் கண்டுகொளும் தருணம்
என்சரிதம் எப்படியோ என்புகல்வேன் அந்தோ.

22

5736

கூடியஎன் தனிக்கணவர் நல்வரத்தை நானே
குறிக்கின்ற தோறும்ஒளி எறிக்கின்ற மனந்தான்
நீடியபொன் மலைமுடிமேல் வாழ்வடைந்த தேவர்
நீள்முடிமேல் இருக்கின்ற தென்றுரைக்கோ அன்றி
ஆடியபொற் சபைநடுவே சிற்சபையின் நடுவே
ஆடுகின்ற அடிநிழற்கீழ் இருக்கின்ற தென்கோ
ஏடவிழ்பூங் குழலாய்என் இறைவரைக்கண் ணுற்றால்
என்மனத்தின் சரிதம்அதை யார்புகல்வார் அந்தோ.

23

5737

அருளாளர் வருகின்ற தருணம்இது தோழி
ஆயிரம்ஆ யிரங்கோடி அணிவிளக்கேற் றிடுக
தெருளாய பசுநெய்யே விடுகமற்றை நெய்யேல்
திருமேனிக் கொருமாசு செய்தாலும் செய்யும்
இருள்ஏது காலைவிளக் கேற்றிடவேண் டுவதோ
என்னாதே மங்கலமா ஏற்றுதலாங் கண்டாய்
மருளேல்அங் கவர்மேனி விளக்கமதெண் கடந்த
மதிகதிர்செங் கனல்கூடிற் றென்னினும்சா லாதே.

24

5738

என்னிருகண் மணிஅனையார் என்னுயிர்நா யகனார்

என்உயிருக் கமுதானார் எல்லாஞ்செய் வல்லார்

பொன்அணிபொற் சபையாளர் சிற்சபையார் என்னைப்

புறம்புணர்ந்தார் அகம்புணர்ந்தார் புறத்தகத்தும் புணர்ந்தார்

அன்னியர்அல் லடிஅவரே எனதுகுல தெய்வம்

அருந்தவத்தால் கிடைத்தகுரு வாகும்அது மட்டோ

மன்னுறும்என் தனித்தாயும் தந்தையும்அங் கவரே

மக்கள்பொருள் மிக்கதிரு ஒக்கலும்அங் கவரே.

25

5739

தந்தைஎன்றாய் மகன்என்றாய் மணவாளன் என்றாய்

தகுமோஇங் கிதுஎன்ன வினவுதியோ மடவாய்

சிந்தைசெய்து காணடிநீ சிற்சபையில் நடிக்கும்

திருவாளர் எனைப்புணர்ந்த திருக்கணவர் அவர்தம்

அந்தநடு முதலில்லா அரும்பெருஞ்சோ தியதே

அண்டசரா சரங்கள்எலாம் கண்டதுவே றிலையே

எந்தவகை பொய்புகல்வேன் மற்றையர்போல் அம்மா

வீறுமவர்(404) திருமேனி நானும்என அறியே.

26

(404). ஈங்கவர்தம் - முதற்பதிப்பு, பொ.சு., பி. இரா., ச. மு. க.

5740

எல்லாமுஞ் செயவல்ல தனித்தலைவர் பொதுவில்

இருந்துநடம் புரிகின்ற அரும்பெருஞ்சோ தியினார்
நல்லாய்நல் நாட்டார்கள் எல்லாரும் அறிய
நண்ணிஎனை மணம்புரிந்தார் புண்ணியனார் அதனால்
இல்லாமை எனக்கில்லை எல்லார்க்கும் தருவேன்
என்னுடைய பெருஞ்செல்வம் என்புகல்வேன் அம்மா
செல்லாத அண்டமட்டோ அப்புறத்தப் பாலும்
சிவஞானப் பெருஞ்செல்வம் சிறப்பதுகண் டறியே.

27

5741

வான்கண்ட பிரமர்களும் நாரணரும் பிறரும்
மாதவம்பன் னாட்புரிந்து வருந்துகின்றார் அந்தோ
நான்கண்ட காட்சியவர் கண்டிலரே உலகில்
நான்ஒருபெண் செய்ததவம் எத்தவமோ அறியேன்
கோன்கண்ட குடிக்கொன்றும் குறைவிலையேல் அண்ட
கோடிஎலாம் தனிப்பெருஞ்செங் கோல்நடத்தும் இறைவர்
தான்கண்ட குடியானேன் குறைகளெலாம் தவிர்ந்தேன்
தனித்தவள மாடமிசை இனித்திருக் கின்றேனே.

28

5742

என்கணவர் பெருந்தன்மை ஆறந்த நிலைக்கே
எட்டிநின்று பார்ப்பவர்க்கும் எட்டாதே தோழி

பொன்கணவர் கலைமடந்தை தன்கணவர் முதலோர்
புனைந்துரைக்கும் கதைபோல நினைந்துரைக்கப் படுமோ
புன்கணவர் அறியாதே புலம்புகின்றார் அவர்போல்
புகல்மறையும் ஆகமமும் புலம்புகின்ற தம்மா
உன்கணவர் திறம்புகல்என் றுரைக்கின்றாய் நீதான்
உத்தமனார் அருட்சோதி பெற்றிடமுன் விரும்பே.

29

5743

ஈங்குசிலர் உண்ணுகஎன் றென்னைஅழைக் கின்றார்
என்தோழி நான்இவர்கட் கென்புகல்வேன் அம்மா
ஓங்குநிலா மண்டபத்தே என்கணவ ருடனே
உவட்டாத தெள்ளமுதம் உண்டுபசி தீர்ந்தேன்
தேங்குழல்இங் கினிஎனக்குப் பசிவரில்அப் போது
செப்புகின்றேன் இப்போது சிலுகிழைத்தல் வேண்டா
ஏங்கல்அற நீஅவர்க்குத் தெளிவிப்பாய் மற்றை
இருந்தவரும் விருந்தவரும் இனிதுபுசித் திடற்கே.

30

5744

ஐயர்எனை ஆளுடையார் அரும்பெருஞ்சோ தியினார்
அம்பலத்தே நடம்புரியும் ஆனந்த வடிவர்
மெய்யர்எனை மணம்புரிந்த தனிக்கணவர் துரிய

வெளியில்நிலா மண்டபத்தே மேவிஅமு தளித்தென்

கையகத்தே ஒருபசும்பொற் கங்கணமும் புனைந்தார்

கங்கணத்தின் தரத்தைஎன்னால் கண்டுரைக்கப் படுமோ

வையகமும் வானகமும் கொடுத்தாலும் அதற்கு

மாறாக மாட்டாதேல் மதிப்பரிதாம் அதுவே.

31

5745

தன்வடிவம் தானாகும் திருச்சிற்றம் பலத்தே

தனிநடஞ்செய் பெருந்தலைவர் பொற்சபைஎங் கணவர்

பொன்வடிவம் இருந்தவண்ணம் நினைத்திடும்போ தெல்லாம்

புகலரும்பே ரானந்த போகவெள்ளம் ததும்பி

என்வடிவில் பொங்குகின்ற தம்மாஎன் உள்ளம்

இருந்தபடி என்புகல்வேன் என்அளவன் றதுதான்

முன்வடிவம் கரைந்தினிய சர்க்கரையும் தேனும்

முக்கனியும் கூட்டிஉண்ட பக்கமும்சா லாதே.

32

5746

இவ்வுலகில் எனைப்போல்வார் ஓர்அனந்தம் கோடி

என்னில்உயர்ந் திருக்கின்றார் எத்தனையோ கோடி

அவ்வுலகில் சிறந்துநின்றார் அளவிறந்த கோடி

அத்தனைபேர் களும்அந்தோ நித்தம்வருந் திடவும்

எவ்வுலகும் உணர்வரிய திருச்சிற்றம் பலத்தே

இனிதமர்ந்த தலைவர்இங்கே என்னைமணம் புரிந்தார்

நவ்விவிழி மடமாதே கீழ்மேல்என் பதுதான்

நாதர்திரு அருட்சோதி நாடுவதொன் றிலையே.

33

5747

திருவாளர் பொற்சபையில் திருநடஞ்செய் தருள்வார்

சிற்சபையார் என்தனக்குத் திருமாலை கொடுத்தார்

உருவாளர் அருவாகி ஒளியாகி வெளியாய்

ஓங்குகின்றார் என்னுடைய உயிர்த்துணைவர் அவர்தம்

பெருவாய்மைத் திருவருளே பெருவாழ்வென் றுணர்ந்தோர்

பேசியமெய் வாசகத்தின் பெருமையைஇன் றுணர்ந்தேன்

துருவாத எனக்கிங்கே அருள்நினைக்கும் தோறும்

சொல்லளவல் லாதசுகம் தோன்றுவதென் தோழி.

34

5748

அருளாளர் பொற்பொதுவில் ஆனந்த நடஞ்செய்

ஆனந்த வண்ணர்எனை ஆளுடையார் நான்தான்

தெருளாத பருவத்தே தெருட்டிமணம் புரிந்த

திருவாளர் அவர்பெருமைத் திறத்தைஎவர் புகல்வார்

மருளாத ஆகமங்கள் மாமறைகள் எல்லாம்

மருண்டனவேல் என்னடிநம் மனவாக்கின் அளவோ
இருளாமை என்றுறுமோ அன்றுசிறி துரைப்பாம்
என்னவும்நாண் ஈர்ப்பதிதற் கென்புரிவேன் தோழி.

35

5749

செம்பவளத் திருமலையோ மாணிக்க விளக்கோ
தெய்வமர கதத்திரளோ செழுநீலப் பொருப்போ
பம்புமணி ஒளியோநற் பசும்பொன்னின் சுடரோ
படிகவண்ணப் பெருங்காட்சி தானோஎன் றுணர்ந்தே
எம்பரமன் றெம்பெருமான் புறவண்ணம் யாதோ
என்பாரேல் அகவண்ணம் யார்உரைக்க வல்லார்
தம்பரமென் றென்னைஅன்று மணம்புரிந்தார் ஞான
சபைத்தலைவர் அவர்வண்ணம் சாற்றுவதென் தோழி.

36

5750

தேவர்களோ முனிவர்களோ சிறந்தமுத்தர் தாமோ
தேர்ந்தசிவ யோகிகளோ செம்பொருள் கண்டோ ரோ
மூவர்களோ ஐவர்களோ முதற்பரையோ பரமோ
முன்னியஎன் தனித்தலைவர் தம்இயலை உணர்ந்தார்
யாவர்களும் அல்லஎன்றால் யான்உணர்ந்து மொழிதற்
கமையுமோ ஒருசிறிதும் அமையாது கண்டாய்

ஆவலொடும் அன்பர்தொழச் சிற்சபையில் நடிப்பார்
அவர்பெருமை அவர்அறிவர் அவரும்அறிந் திலரே.

37

5751

திருச்சிற்றம் பலத்தின்பத் திருவுருக்கொண் டின்பத்
திருநடஞ்செய் தருள்கின்ற திருவடிக்கே தொழும்பாய்
அருச்சிக்கும் பேரன்பர் அறிவின்கண் அறிவாய்
அவ்வறிவில் விளைந்தசிவா னந்தஅமு தாகிப்
பரிச்சிக்கும்485 அவ்வமுதின் நிறைந்தசுவை ஆகிப்
பயனாகிப் பயத்தின்அனு பவமாகி நிறைந்தே
உருச்சிக்கும் எனமறைகள் ஆகமங்கள் எல்லாம்
ஓதுகின்ற எனில்அவர்தம் ஒளிஉரைப்ப தெவரே.

38

(485). பரிச்சிக்கும் - பரிசிக்கும் என்பதன் விகாரம்.

5752

வெடித்தளிந்த முக்கனியின் வடித்தரசந் தனிலே
விரும்புறஉட் பிழிந்தெடுத்த கரும்பிரதம் கலந்தே
தடித்தசெழும் பாற்பெய்து கோற்றேன்விட் டதனைத்
தனித்தபர அமுதத்தில் தான்கலந்துண் டாற்போல்
இடித்திடித்தென் உளமுழுதும் தித்திக்கும் வார்த்தை
இனிதுரைத்து மணம்புரிந்த என்னுயிர்நா யகர்வான்

பொழித்திருமே னியர்அவரைப் புணரவல்லேன் அவர்தம்
புகழ்உரைக்க வல்லேனோ அல்லேன்காண் தோழீ.

39

5753

கன்னிஎனை மணந்தபதி கனிதருசிற் சபைக்கே
கலந்ததனிப் பதிவயங்கு கனகசபா பதிவான்
பன்னியருக் கருள்புரிந்த பதிஉலக மெல்லாம்
படைத்தபதி காத்தருளும் பசுபதிஎவ் வுயிர்க்கும்
அன்னியம்அல் லாதகத்தும் புறத்தும்அகப் புறத்தும்
அருட்செங்கோல் செலுத்துகின்ற அதிபதியாம் அதனால்
என்னியல்போல் பிறர்இயலை எண்ணியிடேல் பிறரோ
என்பதிபால் அன்பதிலார் அன்புளரேல் எண்ணே.

40

5754

என்னியல்போல் பிறர்இயலை எண்ணேல்என் றுரைத்தேன்
இறுமாப்பால் உரைத்தனன்என் றெண்ணியிடேல் மடவாய்
பன்னியநான் என்பதியின் பற்றலது வேறோர்
பற்றறியேன் உற்றவரும் மற்றவரும் பொருளும்
உன்னியஎன் உயிரும்என துடலும்என துணர்வும்
உயிர்உணர்வால் அடைசுகமும் திருச்சிற்றம் பலத்தே
மன்னியதா தலில்நான்பெண் மகளும்அலேன் வரும்ஆண்

மகனும்அலேன் அலியும்அலேன் இதுகுறித்தென் றறியே.

41

5755

பார்முதலாப் பரநாதப் பதிகடந்தப் பாலும்

பாங்குடைய தனிச்செங்கோல் ஓங்கநடக் கின்ற

சீர்தெரிந்தார் ஏத்துதொறும் ஏத்துதற்கோ எனது

திருவாளர் அருள்கின்ற தன்றுமனங் கனிந்தே

ஆர்தருபே ரன்பொன்றே குறித்தருளு கின்றார்

ஆதலினால் அவரிடத்தே அன்புடையார் எல்லாம்

ஓர்தரும்என் உறவினராம் ஆணைஇது நீயும்

உறவான தவர்அன்பு மறவாமை குறித்தே.

42

5756

நாதாந்த வரையும்எங்கள் நாயகனார் செங்கோல்

நடக்கின்ற தென்கின்றார் நாதாந்த மட்டோ

போதாந்த நிலையும்உயர் யோகாந்த நிலையும்

புனிதகலாந் தப்பதியும் புகல்கின்றார் புகலும்

வேதாந்த வெளியும்மிகு சித்தாந்த வெளியும்

விளங்கும்இவற் றப்பாலும் அதன்மேல்அப் பாலும்

வாதாந்தத் ததன்மேலும் அதன்மேல்அப் பாலும்

மன்றாடி அருட்செங்கோல் சென்றாடல் அறியே.

43

5757

புண்ணியனார் என்உளத்தே புகுந்தமர்ந்த தலைவர்

பொதுவிளங்க நடிக்கின்ற திருக்கூத்தின் திறத்தை

எண்ணியநான் எண்ணுதொறும் உண்டுபசி தீர்ந்தே

இருக்கின்றேன் அடிக்கடிநீ என்னைஅழைக் கின்றாய்

பண்ணுறும்என் தனிக்கணவர் கூத்தாடுஞ் சபையைப்

பார்த்தாலும் பசிபோமே பார்த்திடல்அன் றியுமே

அண்ணுறும்அத் திருச்சபையை நினைக்கினும்வே சாறல்

ஆறுமடி ஊறுமடி ஆனந்த அமுதே.

44

5758

கூசுகின்ற தென்னடிநான் அம்பலத்தே நடிக்கும்

கூத்தாடிக் கணவருக்கே மாலையிட்டாய் எனவே

ஏசுகின்றார் ஆரடியோ அண்டபகிர் அண்டத்

திருக்கின்ற சத்தர்களும் சத்திகளும் பிறரும்

பேசுகின்ற வார்த்தைஎலாம் வள்ளல்அருட் கூத்தின்

பெருமையலால் வேறொன்றும் பேசுகின்ற திலையே

வீசுகின்ற பெருஞ்சோதித் திருக்கூத்தின் திறமே

வேதமுடன் ஆகமங்கள் விளம்புகின்ற தன்றே.

45

5759

குலமறியார் புலமறியார் அம்பலத்தே நடிக்கும்

கூத்தாடி ஐயருக்கே மாலையிட்டாய் எனவே

புலமறியார் போல்நீயும் புகலுதியோ தோழி

புலபுலஎன் றளப்பதெலாம் போகவிட்டிங் கிதுகேள்

அலகறியாத் திருக்கூத்தென் கணவர்புரி யாரேல்

அயன்அரியோ டரன்முதலாம் ஐவர்களும் பிறரும்

விலகறியா உயிர்பலவும் நீயும்இங்கே நின்று

மினுக்குவதும் குலுக்குவதும் வெளுத்துவிடும் காணே.

46

5760

கொடிஇடைப்பெண் பேதாய்நீ அம்பலத்தே நடிக்கும்

கூத்தாடி என்றெனது கொழுநர்தமைக் குறித்தாய்

படிஇடத்தே வான்இடத்தே பாதலத்தே அண்ட

பகிர்அண்ட கோடியிலே பதிவிளக்கம் எல்லாம்

அடிமலர்கொண் டையர்செய்யும் திருக்கூத்தின் விளக்கம்

ஆகும்இது சத்தியம்என் றருமறைஆ கமங்கள்

கெடியுறவே பறையடித்துத் திரிகின்ற அவற்றைக்

கேட்டறிந்து கொள்வாய்நின் வாட்டமெலாம் தவிர்ந்தே.

47

5761

இன்பவடி வந்தருதற் கிறைவர் வருகின்றார்
எல்லாஞ்செய் வல்லசித்தர் இங்குவரு கின்றார்
அன்பர்உளத் தேஇனிக்கும் அமுதர்வரு கின்றார்
அம்பலத்தே நடம்புரியும் ஐயர்வரு கின்றார்
என்புருப்பொன் உருவாக்க எண்ணிவரு கின்றார்
என்றுதிரு நாதஒலி இசைக்கின்ற தம்மா
துன்பமறத் திருச்சின்ன ஒலிஅதனை நீயும்
சுகம்பெறவே கேளடிஎன் தோழிஎனைச் சூழ்ந்தே.

48

5762

துரியபதம் கடந்தபெருஞ் சோதிவரு கின்றார்
சுகவடிவந் தரஉயிர்க்குத் துணைவர்வரு கின்றார்
பெரியபிர மாதியர்க்கும் அரியர் வருகின்றார்
பித்தர்என மறைபுகலும் சித்தர்வரு கின்றார்
இரிவகல்சிற் சபைநடஞ்செய் இறைவர்வரு கின்றார்
என்றுதிரு நாதஒலி இசைக்கின்ற தம்மா
உரிமைபெறும் என்தோழி நீயும்இங்கே சின்ன
ஒலிகேட்டுக் களித்திடுவாய் உளவாட்டம் அறவே.

49

5763

ஈசர்என துயிர்த்தலைவர் வருகின்றார் நீவிர்

எல்லீரும் புறத்திருமின் என்கின்றேன் நீதான்

ஏசறவே அகத்திருந்தால் என்எனக்கேட் கின்றாய்

என்கணவர் வரில்அவர்தாம் இருந்தருளும் முன்னே

ஆசைவெட்கம் அறியாது நான்அவரைத் தழுவி

அணைத்துமகிழ் வேன்அதுகண் டதிசயித்து நொடிப்பார்

கூசறியாள் இவள்என்றே பேசுவர்அங் கதனால்

கூறியதல் லதுவேறு குறித்ததிலை தோழீ.

50

5764

அரசுவரு கின்றதென்றே அறைகின்றேன் நீதான்

ஐயமுறேல் உற்றுக்கேள் அசையாது தோழி

முரசுசங்கு வீணைமுதல் நாதஒலி மிகவும்

முழங்குவது திருமேனி வழங்குதெய்வ மணந்தான்

விரசஎங்கும் வீசுவது நாசிஉயிர்த் தறிக

வீதிஎலாம் அருட்சோதி விளங்குவது காண்க

பரசிஎதிர் கொள்ளுதும்நாம் கற்பூர விளக்குப்

பரிந்தெடுத்தென் னுடன்வருக தெரிந்தடுத்து மகிழ்ந்தே.

51

5765

தாழ்குழல்நீ ஆண்மகன்போல் நாணம்அச்சம் விடுத்தே

சபைக்கேறு கின்றாய்என் றுரைக்கின்றாய் தோழி

வாழ்வகைஎன் கணவர்தமைப் புறத்தணைந்தாள் ஒருத்தி
மால்எனும்பேர் உடையாள்ஓர் வளைஆழிப் படையாள்
ஆழ்கடலில் துயில்கின்றாள் மாமணிமண் டபத்தே
ஆள்கின்றாள் ஆண்மகனாய் அறிந்திலையோ அவரைக்
கேழ்வகையில் அகம்புணர்ந்தேன் அவர்கருணை அமுதம்
கிடைத்ததுநான் ஆண்மகனா கின்றததி சயமோ.

52

5766

துடியேறும் இடைஉனக்கு வந்தஇறு மாப்பென்
சொல்என்றாய் அரிபிரமர் சுரர்முனிவர் முதலோர்
பொடிஏறு வடிவுடையார் என்கணவர் சபையின்
பொற்படிக்கீழ் நிற்பதுபெற் றப்பரிசு நினைந்தே
இடிஏறு போன்றிறுமாந் திருக்கின்றா ரடிநான்
எல்லாரும் அதிசயிக்க ஈண்டுதிருச் சபையின்
படிஏறித் தலைவர்திரு அடிஊறும் அமுதம்
பருகுகின்றேன் இறுமாக்கும் பரிசுரைப்ப தென்னே.

53

5767

ஈற்றறியேன் இருந்திருந்திங் கதிசயிப்ப தென்நீ
என்கின்றாய் நீஎனைவிட் டேகுதொறும் நான்தான்
காற்றறியாத் தீபம்போல் இருந்திடும்அத் தருணம்

கண்டபரி சென்புகல்வேன் அண்டபகிர் அண்டம்

தோற்றறியாப் பெருஞ்சோதி மலைபரநா தத்தே

தோன்றியதாங் கதன்நடுவே தோன்றியதொன் றதுதான்

மாற்றறியாப் பொன்ஒளியோ அவ்வொளிக்குள் ஆடும்

வள்ளல்அருள் ஒளியோஈ ததிசயிக்கும் வகையே.

54

5768

நடம்புரிவார் திருமேனி வண்ணம்அதை நான்போய்

நன்கறிந்து வந்துனக்கு நவில்வேன்என் கின்றாய்

இடம்வலம்இங் கறியாயே நீயோஎன் கணவர்

எழில்வண்ணம் தெரிந்துரைப்பாய் இசைமறையா கமங்கள்

திடம்படநாம் தெரிதும்எனச் சென்றுதனித் தனியே

திருவண்ணம் கண்டளவே சிவசிவஎன் றாங்கே

கடம்பெறுகள் உண்டவென மயங்குகின்ற வாறு

கண்டிலைநீ ஆனாலும் கேட்டிலையோ தோழீ.

55

5769

பொய்பிடித்தார் எல்லாரும் புறத்திருக்க நான்போய்ப்

பொதுநடங்கண் டுளங்களிக்கும் போதுமண வாளர்

மெய்பிடித்தாய் வாழியநீ சமரசசன் மார்க்கம்

விளங்கஉல கத்திடையே விளங்குகஎன் றெனது

கைபிடித்தார் நானும்அவர் கால்பிடித்துக் கொண்டேன்
களித்திடுக இனியுனைநாம் கைவிடோம் என்றும்
மைபிடித்த விழிஉலகர் எல்லாரும் காண
மாலையிட்டோம் என்றெனக்கு மாலையணிந் தாரே.

56

5770

பொருத்தமிலார் எல்லாரும் புறத்திருக்க நான்போய்ப்
பொதுநடங்கண் டுவந்துநிற்கும் போதுதனித் தலைவர்
திருத்தம்உற அருகணைந்து கைபிடித்தார் நானும்
தெய்வமலர் அடிபிடித்துக் கொண்டேன்சிக் கெனவே
வருத்தம்உறேல் இனிச்சிறிதும் மயங்கேல்காண் அழியா
வாழ்வுவந்த துன்தனக்கே ஏழுலகும் மதிக்கக்
கருத்தலர்ந்து வாழியஎன் றாழிஅளித் தெனது
கையினில்பொற் கங்கணமும் கட்டினர்காண் தோழி.

57

5771

தமைஅறியார் எல்லாரும் புறத்திருக்க நான்போய்ச்
சபைநடங்கண் டுளங்களிக்கும் தருணத்தே தலைவர்
இமைஅறியா விழிஉடையார் எல்லாரும் காண
இளநகைமங் களமுகத்தே தளதளஎன் றொளிர
எமைஅறிந்தாய் என்றெனது கைபிடித்தார் நானும்

என்னைமறந் தென்இறைவர் கால்பிடித்துக் கொண்டேன்
சுமைஅறியாப் பேரறிவே வடிவாகி அழியாச்
சுகம்பெற்று வாழ்கஎன்றார் கண்டாய்என் தோழி.

58

5772

ஐயமுற்றார் எல்லாரும் புறத்திருக்க நான்போய்
அம்பலத்தே திருநடங்கண் டகங்களிக்கும் போது
மைஅகத்தே பொருந்தாத வள்ளல்அரு கணைத்தென்
மடிபிடித்தார் நானும்அவர் அடிபிடித்துக் கொண்டேன்
மெய்அகத்தே நம்மைவைத்து விழித்திருக்கின் றாய்நீ
விளங்குகசன் மார்க்கநிலை விளக்குகஎன் றெனது
கைஅகத்தே ஒருபசும்பொற் கங்கணமும் புனைந்தார்
கருணையினில் தாய்அனையார் கண்டாய்என் தோழி.

59

5773

காமாலைக் கண்ணர்பலர் பூமாலை விழைந்தார்
கணங்கொண்ட கண்ணர்பலர் மணங்கொள்ளத் திரிந்தார்
கோமாலை மனச்செருக்கால் மயங்கிஉடம் பெல்லாம்
குறிகொண்ட கண்ணர்பலர் வெறிகொண்டிங் கலைந்தார்
ஆமாலை அவர்எல்லாம் கண்டுளம்நாண் உறவே
அரும்பெருஞ்சோ தியர்என்னை விரும்பிமணம் புரிந்தார்

தேமாலை அணிகுழலாய் நான்செய்த தவந்தான்

தேவர்களோ மூவர்களும் செய்திலர்கண் டறியே.

60

5774

காமாலைக் கண்ணர்என்றும் கணக்கண்ணர் என்றும்

கருதுபல குறிகொண்ட கண்ணர்என்றும் புகன்றேன்

ஆமாலும் அவ்வயனும் இந்திரனும் இவர்கள்

அன்றிமற்றைத் தேவர்களும் அசைஅணுக்கள் ஆன

தாமாலைச் சிறுமாயா சத்திகளாம் இவர்கள்

தாமோமா மாயைவரு சத்திகள்லுங் காரத்

தேமாலைச் சத்திகளும் விழித்திருக்க எனக்கே

திருமாலை அணிந்தார்சிற் சபையுடையார் தோழி.

61

5775

மாதேகேள் அம்பலத்தே திருநடஞ்செய் பாத

மலர்அணிந்த பாதுகையின் புறத்தெழுந்த அணுக்கள்

மாதேவர் உருத்திரர்கள் ஒருகோடி கோடி

வளைபிடித்த நாரணர்கள் ஒருகோடி கோடி

போதேயும் நான்முகர்கள் ஒருகோடி கோடி

புரந்தரர்கள் பலகோடி ஆகஉருப் புனைந்தே

ஆதேயர் ஆகிஇங்கே தொழில்புரிவார் என்றால்

ஐயர்திரு வடிப்பெருமை யார்உரைப்பார் தோழி.

62

5776

உருத்திரர்கள் ஒருகோடி நாரணர்பல் கோடி

உறுபிரமர் பலகோடி இந்திரர்பல் கோடி

பெருத்தமற்றைத் தேவர்களும் முனிவர்களும் பிறரும்

பேசில்அனந் தங்கோடி ஆங்காங்கே கூடித்

திருத்தமுறு திருச்சபையின் புறப்புறத்தே நின்று

தியங்குகின்றார் நடங்காணும் சிந்தையராய் அந்தோ

வருத்தமொன்றும் காணாதே நான்ஒருத்தி ஏறி

மாநடங்காண் கின்றேன்என் மாதவந்தான் பெரிதே.

63

5777

பார்உலகா திபர்புவனா திபர்அண்டா திபர்கள்

பகிரண்டா திபர்வியோமா திபர்முதலாம் அதிபர்

ஏர்உலவாத் திருப்படிக்கீழ் நின்றுவிழித் திருக்க

எனைமேலே ஏற்றினர்நான் போற்றிஅங்கு நின்றேன்

சீர்உலவா யோகாந்த நடம்திருக்க லாந்தத்

திருநடம்நா தாந்தத்தே செயும்நடம்போ தாந்தப்

பேர்உலவா நடங்கண்டேன் திருஅமுதம் உணவும்

பெற்றேன்நான் செய்ததவம் பேருலகில் பெரிதே.

64

5778

என்புகல்வேன் தோழிநான் பின்னர்கண்ட காட்சி

இசைப்பதற்கும் நினைப்பதற்கும் எட்டாது கண்டாய்

அன்புறுசித் தாந்தநடம் வேதாந்த நடமும்

ஆதிநடு அந்தமிலாச் சோதிமன்றில் கண்டேன்

இன்பமய மாய்ஒன்றாய் இரண்டாய்ஒன் றிரண்டும்

இல்லதுவாய் எல்லாஞ்செய் வல்லதுவாய் விளங்கித்

தன்பரமாம் பரங்கடந்த சமரசப்பேர் அந்தத்

தனிநடமும் கண்ணுற்றேன் தனித்தசுகப் பொதுவே.

65

5779

தூங்குகநீ என்கின்றாய் தூங்குவனோ எனது

துரைவரும்ஓர் தருணம்இதில் தூக்கமுந்தான் வருமோ

ஈங்கினிநான் தனித்திருக்க வேண்டுவதா தலினால்

என்னுடைய தூக்கம்எலாம் நின்னுடைய தாக்கி

ஏங்கலறப் புறத்தேபோய்த் தூங்குகநீ தோழி

என்னிருகண் மணிஅனையார் எனைஅணைந்த உடனே

ஓங்குறவே நான்அவரைக் கலந்தவரும் நானும்

ஒன்றான பின்னர்உனை எழுப்புகின்றேன் உவந்தே.

66

5780

ஐயமுறேல் காலையில்யாம் வருகின்றோம் இதுநம்

ஆணைஎன்றார் அவராணை அருளாணை கண்டாய்

வெய்யர்உளத் தேபுகுதப் போனதிருள் இரவு

விடிந்ததுநல் சுடர்உதயம் மேவுகின்ற தருணம்

தையல்இனி நான்தனிக்க வேண்டுவதா தலினால்

சற்றேஅப் புறத்திருநீ தலைவர்வந்த உடனே

உய்யஇங்கே நான்அவரைக் கலந்தவரும் நானும்

ஒன்றான பின்னர்உனை அழைக்கின்றேன் உவந்தே.

67

5781

மன்றுடையார் என்கணவர் என்உயிர்நா யகனார்

வாய்மலர்ந்த மணிவார்த்தை மலைஇலக்காம் தோழி

துன்றியபேர் இருள்எல்லாம் தொலைந்ததுபன் மாயைத்

துகள்ஒளிமா மாயைமதி ஒளியொடுபோ யினவால்

இன்றருளாம் பெருஞ்சோதி உதயமுற்ற ததனால்

இனிச்சிறிது புறத்திருநீ இறைவர்வந்த உடனே

ஒன்றுடையேன் நான்அவரைக் கலந்தவரும் நானும்

ஒன்றான பின்னர்உனை அழைக்கின்றேன் உவந்தே.

68

5782

வைகறைஈ தருளுதயம் தோன்றுகின்ற தெனது

வள்ளல்வரு தருணம்இனி வார்த்தைஒன்றா னாலும்

சைகரையேல் இங்ஙனம்நான் தனித்திருத்தல் வேண்டும்

தாழ்குழல்நீ ஆங்கேபோய்த் தத்துவப்பெண் குழுவில்

பொய்கரையா துள்ளபடி புகழ்பேசி இருநீ

புத்தமுதம் அளித்தஅருட் சித்தர்வந்த உடனே

உய்கரைவாய் நான்அவரைக் கலந்தவரும் நானும்

ஒன்றான பின்னர்உனை அழைக்கின்றேன் உவந்தே.

69

5783

காலையிலே வருகுவர்என் கணவர்என்றே நினக்குக்

கழறினன்நான் என்னல்அது காதில்உற்ற திலையோ

வேலைஇலா தவள்போலே வம்பளக்கின் றாய்நீ

விடிந்ததுநான் தனித்திருக்க வேண்டுவதா தலினால்

சோலையிலே மலர்கொய்து தொடுத்துவந்தே புறத்தில்

சூழ்ந்திருப்பாய் தோழிஎன்றன் துணைவர்வந்த உடனே

ஓலைஉறா தியானவரைக் கலந்தவரும் நானும்

ஒன்றான பின்னர்உனை அழைக்கின்றேன் உவந்தே.

70

5784

விடிந்ததுபேர் ஆணவமாம் கார்இருள்நீங் கியது

வெய்யவினைத் திரள்எல்லாம் வெந்ததுகாண் மாயை

ஒழிந்ததுமா மாயைஒழிந் ததுதிரைதீர்ந் ததுபேர்

ஒளிஉதயம் செய்ததினித் தலைவர்வரு தருணம்

திடம்பெறநான் தனித்திருக்க வேண்டுவதா தலினால்

தேமொழிநீ புறத்திருமா தேவர்வந்த உடனே

உடம்புறவே நான்அவரைக் கலந்தவரும் நானும்

ஒன்றான பின்னர்உனை அழைக்கின்றேன் உவந்தே.

71

5785

மாலையிலே உலகியலார் மகிழ்நரொடு கலத்தல்

வழக்கம்அது கண்டனம்நீ மணவாள ருடனே

காலையிலே கலப்பதற்கிங் கெனைப்புறம்போ என்றாய்

கண்டிலன்ஈ ததிசயம்என் றுரையேல்என் தோழி

ஓலையிலே பொறித்ததைநீ உன்னுளத்தே கருதி

உழல்கின்றாய் ஆதலில்இவ் வுளவறியாய் தருமச்

சாலையிலே சமரசசன் மார்க்கசங்கந் தனிலே

சற்றிருந்தாய் எனில்இதனை உற்றுணர்வாய் காணே.

72

5786

இரவகத்தே கணவரொடு கலக்கின்றார் உலகர்

இயல்அறியார் உயல்அறியார் மயல்ஒன்றே அறிவார்

கரவகத்தே கள்உண்டு மயங்கிநிற்கும் தருணம்

கனிகொடுத்தால் உண்டுசுவை கண்டுகளிப் பாரோ

துரவகத்தே விழுந்தார்போன் றிவர்கூடும் கலப்பில்

சுகம்ஒன்றும் இல்லையடி துன்பம்அதே கண்டார்

உரவகத்தே என்கணவர் காலையில்என் னுடனே

உறுகலப்பால் உறுசுகந்தான் உரைப்பரிதாம் தோழி.

73

5787

என்னுடைய தனித்தோழி இதுகேள்நீ மயங்கேல்

எல்லாஞ்செய் வல்லவர்என் இன்னுயிர்நா யகனார்

தன்னுடைய திருத்தோளை நான்தழுவும் தருணம்

தனித்தசிவ சாக்கிரம்என் றினித்தநிலை கண்டாய்

பன்னும்இந்த நிலைபரசாக் கிரமாக உணரேல்

பகர்பரசாக் கிரம்அடங்கும் பதியாகும் புணர்ந்து

மன்னுநிலை மற்றிரண்டும் கடந்தகுரு துரிய

மாநிலைஎன் றுணர்கஒளிர் மேனிலையில் இருந்தே.

74

5788

நான்புகலும் மொழிஇதுகேள் என்னுடைய தோழி

நாயகனார் தனிஉருவம் நான்தழுவும் தருணம்

வான்புகழும் சுத்தசிவ சாக்கிரம்என் றுணர்ந்தோர்

வழுத்துநிலை ஆகும்ஊருச் சுவைகலந்தே அதுவாய்த்

தேன்கலந்த சுவையொடுநன் மணிகலந்த ஒளியாய்த்

திரிபின்றி இயற்கைஇன்பச் சிவங்கலந்த நிலையே

தான்புகல்மற் றையமூன்றும் கடந்தப்பால் இருந்த

சாக்கிரா தீதம்எனத் தனித்துணர்ந்து கொள்ளே.

75

5789

இவ்வுலகோர் இரவகத்தே புணர்கின்றார் அதனை

எங்ஙனம்நான் இசைப்பதுவோ என்னினும்மற் றிதுகேள்

எவ்வமுறும் இருட்பொழுதில் இருட்டறையில் அறிவோர்

எள்ளளவும் காணாதே கள்ளளவின் றருந்திக்

கவ்வைபெறக் கண்களையும் கட்டிமறைத் தம்மா

கலக்கின்றார் கணச்சுகமும் கண்டறியார் கண்டாய்

செவ்வையுறக் காலையில்என் கணவரொடு நான்தான்

சேர்தருணச் சுகம்புகல யார்தருணத் தவரே.

76

5790

பொன்பறியாப் புகல்வார்போல் மறைப்பதென்னை மடவாய்

பூவையர்கா லையில்புணர நாணுவர்காண் என்றாய்

அன்பறியாப் பெண்களுக்கே நின்உரைசம் மதமாம்

ஆசைவெட்கம் அறியாதென் றறிந்திலையோ தோழி

இன்பறியாய் ஆதலினால் இங்ஙனம்நீ இசைத்தாய்

இறைவர்திரு வடிவதுகண் டிட்டதரு ணந்தான்

துன்பறியாக் காலைஎன்றும் மாலைஎன்றும் ஒன்றும்

தோன்றாது சுகம்ஒன்றே தோன்றுவதென் றறியே.

77

5791

அருளுடையார் எனையுடையார் அம்பலத்தே நடிக்கும்

அழகர்எலாம் வல்லவர்தாம் அணைந்தருளும் காலம்

இருளுடைய இரவகத்தே எய்தாது கண்டாய்

எதனால்என் றெண்ணுதியேல் இயம்புவன்கேள் மடவாய்

தெருளுடைஎன் தனித்தலைவர் திருமேனிச் சோதி

செப்புறுபார் முதல்நாத பரியந்தம் கடந்தே

அருளுறும்ஓர் பரநாத வெளிகடந்தப் பாலும்

அப்பாலும் விளங்குமடி அகம்புறத்தும் நிறைந்தே.

5792

அம்மாநான் சொன்மாலை தொடுக்கின்றேன் நீதான்

ஆர்க்கணிய என்கின்றாய் அறியாயோ தோழி

இம்மாலை அம்பலத்தே எம்மானுக் கன்றி

யார்க்கணிவேன் இதைஅணிவார் யாண்டைஉளார் புகல்நீ

செம்மாப்பில் உரைத்தனைஇச் சிறுமொழிஎன் செவிக்கே

தீநுழைந்தால் போன்றதுநின் சிந்தையும்நின் நாவும்

பன்மாலைத் தத்துவத்தால் அன்றிரும்பொன் றாலே
படைத்ததுனைப் பழக்கத்தால் பொறுத்தனன்என் றறியே.

5793

நாடுகின்ற பலகோடி அண்டபகிர் அண்ட
நாட்டார்கள் யாவரும்அந் நாட்டாண்மை வேண்டி
நீடுகின்ற தேவர்என்றும் மூர்த்திகள்தாம் என்றும்
நித்தியர்கள் என்றும்அங்கே நிலைத்ததெலாம் மன்றில்
ஆடுகின்ற திருவடிக்கே தங்கள்தங்கள் தரத்துக்
கானவகை சொல்மாலை அணிந்ததனால் அன்றோ
பாடுகின்ற என்னுடைய பாட்டெல்லாம் பொன்னம்
பலப்பாட்டே திருச்சிற்றம் பலப்பாட்டே தோழி.

5794

தொடுக்கின்றேன் மாலைஇது மணிமன்றில் நடிக்கும்
துரைஅவர்க்கே அவருடைய தூக்கியகால் மலர்க்கே
அடுக்கின்றோர்க் கருள்அளிக்கும் ஊன்றியசே வடிக்கே
அவ்வடிகள் அணிந்ததிரு அலங்காரக் கழற்கே
கொடுக்கின்றேன் மற்றவர்க்குக் கொடுப்பேனோ அவர்தாம்
குறித்திதனை வாங்குவரோ அணிதரம்தாம் உளரோ
எடுக்கின்றேன் கையில்மழுச் சிற்சபைபொற் சபைவாழ்
இறைவர்அலால் என்மாலைக் கிறைவர்இலை எனவே.

5795

நான்தொடுக்கும் மாலைஇது பூமாலை எனவே
நாட்டார்கள் முடிமேலே நாட்டார்கள் கண்டாய்
வான்தொடுக்கும் மறைதொடுக்கும் ஆகமங்கள் தொடுக்கும்
மற்றவையை அணிவார்கள் மதத்துரிமை யாலே
தான்தொடுத்த மாலைஎலாம் பரத்தையர்தோள் மாலை
தனித்திடும்என் மாலைஅருட் சபைநடுவே நடிக்கும்
ஊன்றெடுத்த மலர்கள்அன்றி வேறுகுறி யாதே
ஓங்குவதா தலில்அவைக்கே உரித்தாகும் தோழி.

5796

வான்கொடுத்த மணிமன்றில் திருநடனம் புரியும்
வள்ளல்எலாம் வல்லவர்நன் மலர்எடுத்தென் உளத்தே
தான்கொடுக்க நான்வாங்கித் தொடுக்கின்றேன் இதனைத்
தலைவர்பிறர் அணிகுவரோ அணிதரந்தாம் உளரோ
தேன்கொடுத்த சுவைபோலே தித்தித்தென் உளத்தே
திருக்கூத்துக் காட்டுகின்ற திருவடிக்கே உரித்தாம்
யான்கொடுக்கும் பரிசிந்த மாலைமட்டோ தோழி
என்ஆவி உடல்பொருளும் கொடுத்தனன்உள் இசைந்தே.

5797

என்மாலை மாத்திரமோ யார்மாலை எனினும்
இறைவரையே இலக்கியமாய் இசைப்பதெனில் அவைதாம்
நன்மாலை ஆகும்அந்தச் சொன்மாலை தனக்கே

நான்அடிமை தந்தனன்பல் வந்தனம்செய் கின்றேன்

புன்மாலை பலபலவாப் புகல்கின்றார் அம்மா

பொய்புகுந்தால் போல்செவியில் புகுந்தோறும் தனித்தே

வன்மாலை நோய்செயுமே கேட்டிடவும் படுமோ

மன்றாடி பதம்பாடி நின்றாடும் அவர்க்கே.

5798

உரியபெருந் தனித்தலைவர் ஓங்குசடாந் தத்தின்

உட்புறத்தும் அப்புறத்தும் ஒருசெங்கோல் செலுத்தும்

துரியர்துரி யங்கடந்த சுகசொருபர் பொதுவில்

சுத்தநடம் புரிகின்ற சித்தர்அடிக் கழலே

பெரியபதத் தலைவர்எலாம் நிற்குநிலை இதுஓர்

பெண்உரைஎன் றெள்ளுதியோ கொள்ளுதியோ தோழி

அரியபெரும் பொருள்மறைகள் ஆகமங்கள் உரைக்கும்

ஆணையும்இங் கீதிதற்கோர் ஐயம்இலை அறியே.

5799

மதம்எனும்பேய் பிடித்தாட்ட ஆடுகின்றோர் எல்லாம்

மன்றிடத்தே வள்ளல்செயும் மாநடம்காண் குவரோ

சதம்எனவே இருக்கின்றார் படுவதறிந் திலரே

சாகாத கல்விகற்கும் தரம்இவர்க்கும் உளதோ

பதம்அறியா இந்தமதவாதிகளோ சிற்றம்

பலநடங்கண் டுய்ந்தேனைச் சிலபுகன்றார் என்றாய்

சுதைமொழிநீ அன்றுசொன்ன வார்த்தைஅன்றோ இன்று

தோத்திரஞ்செய் தாங்காங்கே தொழுகின்றார் காணே.

5890

எவ்வுலகில் எவ்வெவர்க்கும் அரும்பெருஞ்சோ தியரே

இறைவர்என்ப தறியாதே இம்மதவா திகள்தாம்

கவ்வைபெறு குருடர்கரி கண்டகதை போலே

கதைக்கின்றார் சாகாத கல்விநிலை அறியார்

நவ்விவிழி யாய்இவரோ சிலபுகன்றார் என்றாய்

ஞானநடம் கண்டேன்மெய்த் தேன்அமுதம் உண்டேன்

செவ்வைபெறு சமரசசன் மார்க்கசங்கந் தனிலே

சேர்ந்தேன்அத் தீமொழியும் தேமொழிஆ யினவே.

87

5891

பெருகியபே ரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்

பெருந்தகைஎன் கணவர்திருப் பேர்புகல்என் கின்றாய்

அருகர்புத்த ராதிஎன்பேன் அயன்என்பேன் நாரா

யணன்என்பேன் அரன்என்பேன் ஆதிசிவன் என்பேன்

பருகுசதா சிவம்என்பேன் சத்திசிவம் என்பேன்

பரமம்என்பேன் பிரமம்என்பேன் பரப்பிரமம் என்பேன்

துருவுசுத்தப் பிரமம்என்பேன் துரியநிறை வென்பேன்

சுத்தசிவம் என்பன்இவை சித்துவிளை யாட்டே.

5892

சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்

சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ என்றாய்

பிற்சமயத் தார்பெயரும் அவர்பெயரே கண்டாய்

பித்தர்என்றே பெயர்படைத்தார்க் கெப்பெயர்ஒவ் வாதோ

அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயர்என் பெயரும்

அவர்பெயரே எவ்வுயிரின் பெயரும்அவர் பெயரே

சிற்சபையில் என்கணவர் செய்யும்ஒரு ஞானத்

திருக்கூத்துக் கண்டளவே தெளியும்இது தோழி.

5893

எப்பொருட்கும் எவ்வுயிர்க்கும் உள்ளகத்தும் புறத்தும்

இயல்உண்மை அறிவின்ப வடிவாகி நடிக்கும்

மெய்ப்பொருளாம் சிவம்ஒன்றே என்றறிந்தேன் உனக்கும்

விளம்புகின்றேன் மடவாய்நீ கிளம்புகின்றாய்406 மீட்டும்

இப்பொருள்அப் பொருள்என்றே இசைப்பதென்னே பொதுவில்

இறைவர்செயும் நிரதிசய இன்பநடந் தனைநீ

பைப்பறவே காணுதியேல் அத்தருணத் தெல்லாம்

பட்டநடுப் பகல்போல வெட்டவெளி யாமே.

5894

காணாத காட்சியெலாம் காண்கின்றேன் பொதுவில்

கருணைநடம் புரிகின்ற கணவரைஉட் கலந்தேன்

கோணாத மேல்நிலைமேல் இன்பஅனு பவத்தில்
குறையாத வாழ்வடைந்தேன் தாழ்வனைத்தும் தவிர்ந்தேன்
நாணாளும் திருப்பொதுவில் நடம்பாடிப் பாடி
நயக்கின்றேன் நற்றவரும் வியக்கின்ற படியே
மாணாகம் பொன்ஆகம் ஆகவரம் பெற்றேன்
வள்ளல்அருள் நோக்கடைந்தேன் கண்டாய்என் தோழி.

5895

சாதிசம யங்களிலே வீதிபல வகுத்த
சாத்திரக்குப் பைகள்எல்லாம் பாத்திரம்அன் றெனவே
ஆதியில்என் உளத்திருந்தே அறிவித்த படியே
அன்பால்இன் றுண்மைநிலை அறிவிக்க அறிந்தேன்
ஓதிஉணர்ந் தோர்புகழும் சமரசசன் மார்க்கம்
உற்றேன்சிற் சபைகாணப் பெற்றேன்மெய்ப் பொருளாம்
சோதிநடத் தரசைஎன்றன் உயிர்க்குயிராம் பதியைச்
சுத்தசிவ நிறைவைஉள்ளே பெற்றுமகிழ்ந் தேனே.

5896

சரியைநிலை நான்கும்ஒரு கிரியைநிலை நான்கும்
தனியோக நிலைநான்கும் தனித்தனிகண் டறிந்தேன்
உரியசிவ ஞானநிலை நான்கும்அருள் ஒளியால்
ஒன்றொன்றா அறிந்தேன்மேல் உண்மைநிலை பெற்றேன்
அரியசிவ சித்தாந்த வேதாந்த முதலாம்

ஆறந்த நிலைஅறிந்தேன் அப்பால்நின் றோங்கும்

பெரியசிவ அனுபவத்தால் சமரசசன் மார்க்கம்

பெற்றேன்இங் கிறவாமை உற்றேன்காண் தோழி.

5807

நான்பசித்த போதெல்லாம் தான்பசித்தார் ஆகி

நல்லதிரு அமுதளித்தே அல்லல்பசி தவிர்த்தே

ஊன்பதித்த என்னுடைய உளத்தேதம் முடைய

உபயபதம் பதித்தருளி அபயம்எனக் களித்தார்

வான்பதிக்கும் கிடைப்பரியார் சிற்சபையில் நடிக்கும்

மணவாளர் எனைப்புணர்ந்த புறப்புணர்ச்சித் தருணம்

தான்பதித்த பொன்வடிவம் தனைஅடைந்து களித்தேன்

சாற்றும்அகப் புணர்ச்சியின்ஆம் ஏற்றம்407 உரைப் பதுவே.

5808

துருவுபர சாக்கிரத்தைக் கண்டுகொண்டேன் பரம

சொப்பனங்கண் டேன்பரம சுழுத்தியுங்கண் டுணர்ந்தேன்

குருபிரம சாக்கிரத்தைக் கண்டேன்பின் பிரமம்

குலவியசொப் பனங்கண்டேன் சிவசுழுத்தி கண்டேன்

குருதுரியம் காண்கின்றேன் சமரசசன் மார்க்கம்

கூடினேன் பொதுவில்அருட் கூத்தாடும் கணவர்

மருவிடப்பெற் றவர்வடிவம் நான்ஆனேன் களித்து

வாழ்கின்றேன் எதிர்அற்ற வாழ்க்கையில்என் தோழி.

5809

தனிப்படும்லூர் சுத்தசிவ சாக்கிரநல் நிலையில்
தனித்திருந்தேன் சுத்தசிவ சொப்பனத்தே சார்ந்தேன்
கனிப்படுமெய்ச் சுத்தசிவ சுழுத்தியிலே களித்தேன்
கலந்துகொண்டேன் சுத்தசிவ துரியநிலை அதுவாய்ச்
செனிப்பிலதாய் எல்லாமாய் அல்லதுவாம் சுத்த
சிவதுரியா தீதத்தே சிவமயமாய் நிறைந்தேன்
இனிப்புறுசிற் சபைஇறையைப் பெற்றபரி சதனால்
இத்தனையும் பெற்றிங்கே இருக்கின்றேன் தோழி.

5810

அருட்சோதித் தலைவர்எனக் கன்புடைய கணவர்
அழகியபொன் மேனியைநான் தழுவிநின்ற தருணம்
இருட்சாதித் தத்துவங்கள் எல்லாம்போ யினவால்
எங்கணும்பே ரொளிமயமாய் இருந்தனஆங் கவர்தாம்
மருட்சாதி நீக்கிஎனைப் புணர்ந்தஒரு தருணம்
மன்னுசிவா னந்தமயம் ஆகிநிறை வுற்றேன்
தெருட்சார்பில் இருந்தோங்கு சமரசசன் மார்க்கத்
திருச்சபைக்கண் உற்றேன்என் திருக்கணவ ருடனே.

5811

புறப்புணர்ச்சி என்கணவர் புரிந்ததரு ணந்தான்
புத்தமுதம் நான்உண்டு பூரித்த தருணம்

சிறப்புணர்ச்சி மயமாகி அகப்புணர்ச்சி அவர்தாம்
செய்ததரு ணச்சுகத்தைச் செப்புவதெப் படியோ
பிறப்புணர்ச்சி விடயமிலை சுத்தசிவா னந்தப்
பெரும்போகப் பெருஞ்சுகந்தான் பெருகிஎங்கும் நிறைந்தே
மறப்புணர்ச்சி இல்லாதே நான்அதுவாய் அதுஎன்
மயமாய்ச்சின் மயமாய்த்தன் மயமான நிலையே.

5812

தாயினும்பே ரருளுடையார் என்னுயிரில் கலந்த
தனித்தலைவர் நான்செய்பெருந் தவத்தாலே கிடைத்தார்
வாயினும்ஓர் மனத்தினும்மா மதியினும்எத் திறத்தும்
மதித்தளத்தற் கருந்துரிய மன்றில்நடம் புரிவார்
ஆயினும்என் அளவின்மிக எளியர்என என்னை
அகம்புணர்ந்தார் புறம்புணர்ந்தார் புறப்புணர்ச்சித் தருணம்
தூயஒளி பெற்றழியா தோங்குவடி வானேன்
சுகமயமாம் அகப்புணர்ச்சி சொல்லுவதெப் படியோ.

5813

அறியாத பருவத்தே என்னைவலிந் தழைத்தே
ஆடல்செயும் திருவடிக்கே பாடல்செயப் பணித்தார்
செறியாத மனச்சிறியேன் செய்தபிழை எல்லாம்
திருவிளையாட் டெனக்கொண்டே திருமாலை அணிந்தார்
பிறியாமல் என்னுயிரில் கலந்துகலந் தினிக்கும்

பெருந்தலைவர் நடராயர் எனைப்புணர்ந்தார் அருளாம்

அறிவாளர் புறப்புணர்ச்சி எனைஅழியா தோங்க

அருளியதீண் டகப்புணர்ச்சி அளவுரைக்க லாமே.

5814.

சிவம்என னும்பெயர்க் கிலக்கியம் ஆகிஎச் செயலுந்தன் சமுகத்தே

நவநி றைந்தபேர் இறைவர்கள் இயற்றிட ஞானமா மணிமன்றில்

தவநி றைந்தவர் போற்றிட ஆனந்தத் தனிநடம் புரிகின்றான்

எவன்அ வன்திரு வாணைஈ திசைத்தனன் இனித்துய ரடையேனே.

5815.

ஐயன்அருள் வருகின்ற தருணம்இது கண்டீர்

ஐயமிலை ஐயமிலை ஐயன்அடி ஆணை

மெய்யன்எனை ஆட்கொண்ட வித்தகன்சிற் சபையில்

விளங்குகின்ற சித்தன்எலாம் வல்லஒரு விமலன்

துய்யன்அருட் பெருஞ்சோதி துரியநட நாதன்

சுகஅமுதன் என்னுடைய துரைஅமர்ந்திங் கிருக்க

வையமிசைத் திருக்கோயில் அலங்கரிமின் விரைந்தே

மணியாலும் பொன்னாலும் மலராலும் வியந்தே.

5816

தனித்தலைமைப் பெரும்பதிஎன் தந்தைவரு கின்ற

தருணம்இது சத்தியம்காண் சகதலத்தீர் கேண்மின்

இனித்தநறுங் கனிபோன்றே என்னுளம்தித் திக்க

இன்னமுதம் அளித்தென்னை ஏழுலகும் போற்ற

மனித்தஉடம் பிதைஅழியா வாய்மைஉடம் பாக்கி

மன்னியசித் தெல்லாம்செய் வல்லபமும் கொடுத்தே

கனித்தசிவா னந்தமெனும் பெரும்போகம் தனிலே

களித்திடவைத் திடுகின்ற காலையும்இங் கிதுவே

5817

சத்தியவான் வார்த்தைஇது தான்உரைத்தேன் கண்டாய்

சந்தேகம் இலைஇதனில் சந்தோடம் உறுவாய்

இத்தினமே அருட்சோதி எய்துகின்ற தினமாம்

இனிவரும்அத் தினங்கள்எலாம் இன்பம்உறு தினங்கள்

சுத்தசிவ சன்மார்க்கம் துலங்கும்எலா உலகும்

தூய்மைஉறும் நீஉரைத்த சொல்அனைத்தும் பலிக்கும்

செத்தவர்கள் எழுந்துலகில் திரிந்துமகிழ்ந் திருப்பார்

திருவருட்செங் கோல்எங்கும் செல்லுகின்ற தாமே.

5818

என்சாமி எனதுதுரை என்உயிர்நா யகனார்

இன்றுவந்து நான்இருக்கும் இடத்தில்அமர் கின்றார்

பின்சாரும் இரண்டரைநா ழிகைக்குள்ளே எனது

பேர்உடம்பில் கலந்துளத்தே பிரியாமல் இருப்பார்

தன்சாதி உடையபெருந் தவத்தாலே நான்தான்

சாற்றுகின்றேன் அறிந்திதுதான் சத்தியம்சத் தியமே

மின்சாரும் இடைமடவாய் என்மொழிநின் தனக்கே

வெளியாகும் இரண்டரைநா ழிகைகடந்த போதே.